

ஸ்ரீராமஜயம்

# முகவுரை

உலகின்கண் விளங்கும் பல்வகைப் பிறவிகளில் பெறுதற்கரிய
ஏடப்பிறவியையடைந்தவர்கள் அப்பிறவியையடைந்த பயனாக
னெறியினின்று முத்திதசையை யடையவேண்டுவது இன்றிய
மையாத மிக மேலானகருமமாம். அதற்குரிய சாதனங்களாயுள்ளன
கர்ம பக்தி ஞானங்களாம். அவையிற்றை இனிது விளங்கக் கூறு
பாகவத புராணமேயாம். இது " சுழித்துநல்லமுதொழுகியஞ்
கஞ்சேர்ந்து, • தழைத்தநான்மறைத்தடஞ்சினைக்கற்பகத்தருவி
பழுத்துதிர்ந்ததுபரமபாகவதமென்றிசைக்கும், விழுப்பெருங்க
கர்ச்சியே விருப்புவர் மேலோர்'' என்னும் பாகவத புராணச்
புப்பாயிரச் செய்யுளாலினிது விளங்காநிற்கும். ஆகவே கர்மம்,
, ஞானம் என்னு மூன்றனையும் கேட்போரது உள்ளத்து நன்
யும் வண்ணம் அடைவுபடத் தெள்ளிதிற் கூறும் இப்பாகவத
ணத்தில் பக்தியைப்பற்றிப் பரக்கக்கூறுஞ் சரிதைகளில் குசே
சரித்திரமு மொன்றாம்.

குசேலோபாக்கியானம் என்பதற்குக் குசேலரது சரித்திரத்
கூறும் நூல் என்பது பொருள். அது குசேல+உபாக்கியா
என்று பிரியும்; குசேலன் பொலிவில்லாத ஆடையையுடை
ர். இதனை இந்நூலின் குசேலர் மேற்கடலடைந்த அத்தியாயம்
வது செய்யுளானறிக. உபாக்கியானம் என்பதற்குக் கிளைக்
யென்று பொருள். எனவே இது கிளைக்கதையாகையால் இதன்
க்கதை பாகவதத்துக் கிருஷ்ணசரித்திர மென்றுணர்க.

இக்குசேலசரித்திரம் ஆரியப்பப்புலவராற் செந்தமிழ்க்காப்பிய
மொழி பெயர்க்கப்பட்டுள்ள பாகவதத்தின்கண் சுருங்கி நிலவு
தாக்கி, பக்தியின் தன்மையைப் பரக்கக் கூறுவான் வேண்டி,
ண்டைநாட்டிலே, வல்லூரென்னு மூரிலே, கருணீகர் குலத்திலே
ராமிப்பிள்ளை யென்பவரது புத்திரராய்த் தோன்றிய தேவ
பிள்ளை யென்னும் வித்வசிரோன்மணி ஆரியப்பப்புலவர்
தத்திலுள்ள குசேல சரிதத்தையும், தெலுங்கில் வரகவி
பார் இயற்றியுள்ள குசேலோபாக்கியானத்தையும் முதனூல்
க் கொண்டு, தமிழில் விரிவாகக் குணம் அலங்காரமென்னும்
சுவையும், நவரசமென்னும் பொருட்சுவையும் குறைவின்றி
, வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல்,
யன்றருத லென்றற்றொடக்கத்தவை நிறைய, ஓதுபவர்களுக்
பக்தியேயன்றிக் கல்வி யறிவொழுக்கங்களும் மிக்குப்

# உரைச்சிறப்புப்பாயிரம்.

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தலைமைத்தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீ. உ. வே.

## கா. ஸ்ரீ கோபாலாசாரியர் ஸ்வாமிகள்

உவந்தருளிய

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தருவளரு வல்லூர்வாழ் தேவ ராசன்
தமிழ்ப்பாவி னுரைத்தகுசே லோபாக் யானத்
திருவளரும் பொருளையிந்த வுலகின் மன்னு
முயிர்களினி துணர்ந்துதத்த மூழின் வந்த
கருவளருந் துன்பமொரீஇ யிருமைக் கண்ணுங்
கலங்காத வின்பநனி துய்ப்பா னெண்ணித்
திருவளருங் கடப்பாக்கந் திகழத் தோன்று
செல்வன்முரு கேசன்மனத் தெளிவி னுய்ந்தான். (க)

ஆய்ந்தபல கல்வியினாற் கேள்வி தன்னு
லறிவதனாற் பிறர்க்குரைக்கு மாற்ற றன்னு
லேய்ந்தபல நூல்களுக்கு முரைவ குத்திட்
டெங்குமிசை கொண்டவோ ரியைபாற் பின்னும்
வாய்ந்தபல நற்குணத்தாற் சிறந்தோன் காஞ்சி
மாநகரஞ் சிறக்கவந்த வைண வத்துத்
தோய்ந்தகுலத் திராமசா மிப்பேர் கொண்ட
தூயவனை யடுத்தொருரை தொகுக்க வென்றான். (உ)

அன்னவனு மன்னதொரு நூலிற் கேற்ப
வறிவினர்க ளுள்ளுவப்ப வறிவிற் காசை
துன்னுமவர் கற்றுணரப் பேதை யோடு
சொல்லுமிளம் பிள்ளைகட்கும் விளங்கும் வண்ணம்
நன்னயங்கொ ளுரையொன்று வகுத்துத் தந்தா
னனிலத்தி னருமதன் பயனைக் கொள்வான்
மன்னுமச்சு வாகனத்தி னதனை யேற்றி
வழங்கினனம் முருகேச வள்ள லுனே. (ங)

வேலுமயிலுந்துணை.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

---

திருமயிலை - வித்வான்

சண்முகம்பிள்ளையவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

நிலம்பூத்தபொறையொழிப்பவராவணையிற்றுயினீத்துநேமியங்கை
வலம்பூத்தமுட்கோல்கொண்டெழில்விசயன்றேரினிடைவயங்கிப்பாரிற்
குலம்பூத்தவரசர்தமைப்பாரதப்போரனைக்குமைத்தகொண்டல்வண்ணன்
நலம்பூத்தமெய்யடியார்க்கெளியனென்றுமொருவழக்கைநாட்டுமாலோ.

கார்கொண்டவிரத்தொருமால்பரமென்னவவன்வடிவாங்கடவுள்வியாதப்
பேர்கொண்டமுனிவர்பிரான்வகுத்தமாபாகவதப்பெரும்புராணத்
தேர்கொண்டவீரைந்தாங்கந்தஞ்சொல்குசேலன்சீர்நிகழ்த்தொன்று
நீர்கொண்டகடல்கொண்டநிலவைப்பினதற்கொருரைநிகழ்த்தவென்ன

நடத்தாளைத்தொழினடத்துநம்பனடித்தாமரையேநாடும்வேளாண்
குடித்தோன்றனல்வேங்கடசுப்பெனுங்காவலோன்பயந்தகுரிசில்சூழும்
கடப்பாக்கத்தொருதலைவன்முருகேசமாலன்பாற்பலகாலெய்திக்
கடப்பாடிங்குனக்கதுதானென்றுகனிவினிறுடிக்கழறலோடும்

அன்னமொழியிம்மைக்குமறுமைக்குமெடும்புமென்றறிந்தநாடி
மன்னுகருத்தேபதத்துட்பொருள்காட்டுவிறைவிறையைவயங்கக்காட்டும்
நன்னருரையொன்றியாருமொருபரிமேலழகனெனநாடிக்கூறத்
தன்னிகரிலுரைவரைந்துதந்திருஞ்சீர்பெற்றோங்கித்தழைத்தானம்மா.

இளையனியாரெனினறைதங்கோடிமாடம்விண்சுலாமெழிலார்காஞ்சி
வளைபுகழ்மாநகருடையான்றிருக்கோவையாருடன்வள்ளுவநூனாயேன்
றனையன்றகூவியழைத்தறிவித்தவாசிரியத்தலைமைபூண்டோன்
தனிமுதல்மாலெனப்புலங்கொளிராமசாமிப்பெயர்கொடமிழோரே.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

# குசேலோபாக்கியானம்

## மூலமும் உரையும்.

### பாயிரம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கடலுடைப் புவிவா ழுயிரெலாங் களிக்கக் காத்தருள் கண்ணனோ டருநூ, லடலுறப் பயின்று பின்னவ னருளா லருந்திருப் பெறுகுசே லன்றன், மிடலுடைக் காதை விளம்பிட வூறுவிரவி டா தளித்தருள் புரியு, மடலுடைக் கடுக்கைச் சடைமுடிக் கபோல மதக்கய மழவிளங் கன்றே.

(பதவுரை.) மடல்உடை - இதழ்களையுடைய, கடுக்கை - கொன்றை மலர்மாலையைத் தரித்த, சடைமுடி - சடாமகுடத்தையும், கபோலமதம் - கவுள்மதத்தையுமுடைய, மழஇளமை-மிக்கஇளமையுள்ள, கயம்கன்று - யானைக்கன்றனது (விநாயகமூர்த்தி), கடல்உடை-கடலைச்சுற்றிலுமுடைய, புவி-பூமியில், வாழ் - வாழ்கின்ற, உயிர் எல்லாம் களிக்க - சீவர்களெல்லாங் களிப்படைய, காத்தருள்-காப்பாற்றியருள்கின்ற, கண்ணனோடு-ஸ்ரீகிருஷ்ண பகவானுடன், அடல்உற - திடமாக, அருநூல்பயின்று - அருமையாகிய நூல்களைக்கற்று, பின் - பிறகு, அவன் அருளால் - அவனது கருணையால், அரு - (பெறுதற்கு) அரிய, திரு - செல்வத்தை, பெறு - பெற்ற, குசேலன் தன் - குசேலமுனிவனது, மிடல்உடை - பெருமையையுடைய, காதை - சரித்திரத்தை, விளம்பிட - (யாம்) சொல்ல, ஊறுவிரவிடாது - இடையூறு உண்டாகாமல், அருள்புரியும் - அருள்செய்யும். எ - று.

(பொழிப்புரை.) இதழ்களையுடையகொன்றைமலர்மாலையைத்தரித்த சடாமகுடத்தையும், கவுள்மதத்தையுமுடைய, மிக்கஇளமையுள்ள யானைக் கன்றனது (விநாயகமூர்த்தி), கடலைச்சுற்றிலுமுடைய பூமியில்வாழ்கின்ற சீவர்களெல்லாங் களிப்படையக் காப்பாற்றியருள்கின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவா னுடன் திடமாக அருமையாகிய நூல்களைக்கற்று, பிறகு அவனது கருணை

பாலியாகப்பெற்று கயம் என்றாயிற்று. மழ - உரிச்சொல். இளமை-பண்புப்பெயர். மழஇள - ஒருபொருட்பன்மொழி. (௬)

குடத்தியர் துகிலைக் கவர்ந்தவன் முனிவர் கோதையர் மூரல் பண்ணியங்க ளிடக்களித் துண்டோ னிந்திர னேவ வெழிலிகள் பொழிந்தகன் மழையைத், தடப்பெருங் கோவர்த் தனங்கரத் தேந்தித் தடுத்தவன் கமலைவாழ் மார்பன், வடப்பசுந் தளிரி னினி துறை கண்ணன் மலர்தலை யுலகெலாங் காக்க.

(ப - ரை.) குடத்தியர் - ஆய்ச்சியரது, துகிலை - ஆடைகளை, கவர்ந்தவன் - கவர்ந்துகொண்டவன், முனிவர் கோதையர் - முனிவர்பத்தினியார், மூரல் - சோற்றையும், பண்ணியங்கள் - பலகாரங்களையும், இட - கொடுக்க, களித்துஉண்டோன் - சந்தோஷித்துண்டவன், இந்திரன்ஏவ - இந்திரன் ஏவலால், எழிலிகள் - மேகங்கள், பொழிந்த - சொரிந்த, கல்மழையை - கன்மாரியை, தடம்பெரு - மிகப்பெரிய, கோவர்த்தனம் - கோவர்த்தனமலையை, கரத்துஏந்தி - கையிலேந்தி, தடுத்தவன் - காத்தவன், கமலைவாழ் மார்பன் - திருமகளுறைகின்ற திருமார்பையுடையவன், பசு - பசுமையாகிய, வடம் தளிரின் - ஆலந்தளிரின்மீது, இனிது உறை - இனிதாக அறிதுயில்செய்த, கண்ணன் - ஸ்ரீகண்ணபிரான், (அவ்விறைவன்) மலர்தலை - விரிந்த இடத்தையுடைய, உலகுஎல்லாம் - உலகமுழுதும், காக்க - காத்தருள்க. எ - று.

(பொ - ரை.) ஆய்ச்சியரது ஆடைகளைக் கவர்ந்துகொண்டவன், முனிவர்பத்தினிமார் சோற்றையும் பலகாரங்களையுங் கொடுக்கச் சந்தோஷித்துண்டவன், இந்திரனேவலால் மேகங்கள் சொரிந்த கன்மாரியை மிகப்பெரியகோவர்த்தனமலையைக் கையிலேந்திக் காத்தவன், திருமகளுறைகின்ற திருமார்பையுடையவன், பசுமையாகிய ஆலந்தளிரின் மீது இனிதாக அறிதுயில்செய்த கண்ணபிரான் (அவ்விறைவன்) விரிந்த இடத்தையுடைய உலகமுழுதுங் காத்தருள்க. எ - று.

(வி - ரை.) குடத்தியர்-முல்லைநிலப்பெண்கள் (இடைச்சியர்). முனிவர்கோதையரென்றது - பிருந்தாவனத்தை யடுத்த பத்தவிலோசனமென்னுமிடத்தில், ஆங்கிரசயாகஞ்செய்துகொண்டிருந்த முனிவர் பன்னியரை. இந்திரன் எழிலிகளைக் கன்மாரிபொழியும்படி யேவுதற்குக் காரணம் அவனுக்கு நந்தாதிகோபாலர்கள்செய்ய வுத்தேசித்துவந்த இந்திரயாகத்தை ஸ்ரீகிருஷ்ணபகவான், கோவர்த்தன பர்வதத்துக்குச் செய்யும்படி நியமிக்க, அவர்களவ்வாறேசெய்தது. கோவர்த்தனம் - பசுக்கள் விருத்தியடைவதற்குக் காரணமான பர்வதம். கமலை - தாமரைமலரை யாசனமாகவுடையவள். தளிரின் என்பதில் இன் ஏழனுருபு, இது புறனடையாற்கொள்க. உறைதல் - இவ்விடத்து அறிதுயிலமர்தல் என்னும் பொருளது. காக்க - வியங்கோள். (௨)

தொழிலாகுபெயர், பரவியிருப்பதென்பது பொருள். திரு, ஆயுள் என்பன இவ்விடத்துப் பெருஞ்செல்வத்தையும் பெருவாழ்வையுங் குறித்தன. (௩)

மலர்விழித் தேவ கிக்குநன் மகனாய் மகிதலத் தவதரித் ததன்பின், பலர்புகழ்ந் தேத்து நந்தகோ பாலன் பனிமதி யானன அசோதை, யலர்மனங் களிப்ப வாடுறா உம் பால னாகிய வைய னே நன்னா, வலர்பரா வுறப்பல் வளங்களு முயிர்க்கு வழங்கி யாண் டருள்செய்வ னன்றே.

(ப - ரை.) மலர்விழி - தாமரைமலர்போலுங் கண்களையுடைய, தேவகிக்கு - தேவகிப்பிராட்டிக்கு, நல்மகன் ஆய் - நற்புதல்வனாக, மகிதலத்து - பூதலத்தில், அவதரித்து - தோன்றி, அதன்பின் - அதன்பிறகு, பலர்புகழ்ந்து ஏத்தும் - பலரும்புகழ்ந்து துதிக்கின்ற, நந்தகோபாலன் - நந்தகோபனும், பனி - குளிர்ச்சியாகிய, மதி - பூர்ணசந்திரன்போன்ற, ஆனனம் - முகத்தையுடைய, அசோதை - யசோதைப்பிராட்டியும் ஆகியஇருவருடைய, அலர் மனம்களிப்ப - விகசித்தமனம் களிக்கும்படி, ஆடுறாஉம்பாலன் ஆகிய - விளையாடுகின்ற பாலகனான, ஐயனே - ஸ்ரீகண்ணபிரானே, நல்நாவலர்பரா வுற - நல்லநாவலர் தோத்திரம்பண்ணும்படி, பல்வளங்களும், பலவளங்களை யும், உயிர்க்கு - உயிர்களுக்கு, வழங்கி - கொடுத்து, ஆண்டு அருள்செய்வன் - ஆண்டருள்செய்யக்கடவன். எ - று.

(பொ - ரை.) தாமரை மலர்போலுங் கண்களையுடைய தேவகிப் பிராட்டிக்கு நற்புதல்வனாகப் பூதலத்தில் தோன்றி, அதன்பிறகு, பலரும் புகழ்ந்து துதிக்கின்ற நந்தகோபனும், குளிர்ச்சியாகிய பூர்ணசந்திரன்போன்ற முகத்தையுடைய யசோதைப்பிராட்டியுமாகிய இருவருடைய விகசித்தமனம் களிக்கும்படி விளையாடுகின்ற பாலகனாகிய ஸ்ரீகண்ணபிரானே நல்லநாவலர் தோத்திரம்பண்ணும்படி பலவளங்களையும் உயிர்களுக்குக் கொடுத்து ஆண்டருள்செய்யக்கடவன். எ - று.

(வி - ரை.) விழிக்குவமையாகப் புணர்க்கப்பட்டமையால், மலர் இவ்விடத்துத் தாமரைமலரைக் குறித்தது. மகிதலம் பூதலம் என்பதுபோல வொரு சொல்லாகக்கொள்ளப்பட்டது, இவ்வாறன்றி மகியாகிய தலம் என விருசொல்லாக்கி பூமியாகிய இடம் எனப்பொருள்கூறலு மொன்று. பலர் என்றது எல்லாரும் என்றபடி. ஐயன் என்பதற்கு அழகன் என்றுரைப்பினு மாம். ஐ-அழகு. பல்வளங்களையும் வருணிக்கவல்லார் வித்துவான்களாதலால், 'நன்னாவலர் பராவுறப்பல் வளங்களுமுயிர்க்கு வழங்கியாண்டருள் செய்வன்' என்றார். அன்று. ஏ - அசைகள். (௪)

குடம்புரை செருத்தற் கோவியர் தனாருங் குறைவறு சுபம்பெற வென்று, மிடங்கொள்பல் லுலகு மிதுசுக முறுக வென்று மா தியருமோ னியருந், திடம்பட வென்று மெண்புரந் திடுக

திரைக்கடல் கிழியமத் தெறிந்து, மடம்படு மவுணர்ச் சவட்டி யொள் ளமுதம் வானவர்க் கூட்டிய முதலே.

(ப - ரை.) திரைகடல்கிழிய - அலைகளையுடைய திருப்பாற்கடல் கலங்கும்படி, மத்து எறிந்து - மத்தினாற்கடைந்து, மடம்படும் - மடமைபொருந்திய, அவுணர்சவட்டி - அவுணரையழித்து, வானவர்க்கு - தேவர்களுக்கு, ஒள் அமுதம் ஊட்டிய - ஒள்ளிய அமிர்தத்தை யுண்பித்த, முதல் - முதல்வனாகிய திருமால், குடம்புரா - குடத்தைநிகர்த்த, செருத்தல் - மடியையுடைய, கோவும் - பசுக்களும், அந்தணரும் - பிராமணரும், குன்றுவுறுசுபம் பெற - குறைவற்ற சுபத்தையடையவும், என்றும் - எந்நாளும், இடங்கொள் பல் உலகும் - இடத்தையுடைய பலவுலகும், மிகுசுகம்பெற - மிக்கஇன்பமடையவும், என்றும் - எந்நாளும், ஆரியரும் மோனியரும் - ஆசாரியர்களும் மோனியர்களும், திடம்படஎண்ணும் - உறுதியாயெண்ணுகின்ற, எண் - எண்ணங்கள்யாவையும்(தந்து), புரந்திடுக - காத்தருள்க. எ - று.

(பொ - ரை.) அலைகளையுடைய திருப்பாற்கடல் கலங்கும்படி மத்தினாற்கடைந்து, மடமைபொருந்திய அவுணரையழித்து, தேவர்களுக்கு ஒள்ளிய அமிர்தத்தையுண்பித்த முதல்வனாகிய திருமால், குடத்தைநிகர்த்த மடியையுடைய பசுக்களும்பிராமணரும் குறைவற்ற சுபத்தையடையவும், எந்நாளும் இடத்தையுடையபலவுலகும் மிக்கஇன்பமடையவும், எந்நாளும் ஆசாரியர்களும் மோனியர்களும் உறுதியாயெண்ணுகின்ற எண்ணங்கள் யாவையுந் தந்து காத்தருள்க. எ - று.

(வி - ரை.) புரை செருத்தல் வினைத்தொகை நிலைத்தொடர். கோ-பசுவென்னும் பொருடரும் ஓரெழுத்தொருமொழி. அந்தணர் என்பதற்கு அழகிய தட்பத்தினை யுடையாரென்றும், அந்தத்தையணவுவோரென்றும் பொருளுரைப்பர். குறைவறுசுபம் என்றது நிறைந்த சுபமென்றபடி. இடங்கொள் என்றது விஸ்தாரமான வென்றபடி. எல்லாவுலகு மடங்குதற்குப் பல்லுலகும் என்றார். பல்லுலகுமென்றது முற்றும்மை. அவுணர்ச்சவட்டி யொள்ளமுதம் வானவர்க்கூட்டிய முதலேயென்ற குறிப்பால், திரைக்கடல் என்றது திருப்பாற்கடலையும், மத்துஎன்றது மந்தர மலையையும் குறித்தன. மடம் - அறியாமை. அமுதத்துக்கு ஒட்பமாவது நிரயாமைமையைத் தருதல். வானவர் - விண்ணுலகிலுள்ளவர். (௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விரும்பும் யாழ்வனங் கும்பத்தக் கடவுளை விளங்குமா வினை மிக்க, பெரும்புகழ்ச்சிசான் மறையவர் குமாரத்தினைப் பேறுக வெனவேத, மருப்பும் வாக்கிய முக்கொழி லாதியினை மறையுமா சிகளோங்கிப், பரம்ப ரையென்னுமாடம் பெரியவ ரென்னுறும் பாலிக்க நெடியானே.

(ப - ரை.) விரும்பும் - விரும்புகின்ற, யாம்வணங்கும் - யாம்வணங்குதற்குரிய, பதம் - திருவடியையுடைய, கடவுளே - இறைவனே, விளங்கும் - பிரகாசிக்கின்ற, ஆவினை - பசுவையும், மிக்க - மிகுந்த, பெரும்புகழ்ச்சிசால் - பெருங்கீர்த்திநிறைந்த, மறையவர் குழாத்தினை - வேதியர்கூட்டத்தையும், பேணுக என - காப்பாற்றுகவென்று, வேதம் அரும்பும்வாக்கியமும் - வேதஞ்சொல்லும்வாக்கியத்தையும், தொழில்ஆறினோர் - அறுதொழிலையுடைய அந்தணர், அறையும் - சொல்லுகின்ற, ஆசிகள்ஓங்கிபரம்ப-ஆசீர்வசனங்களோங்கிப் பரவும்படி, எண்ணுறூஉம்-நினைக்கின்ற, பெரியவர் எண்ணமும் - பெரியோரது எண்ணத்தையும், நெடுமாலே - நெடுமாலே, பாலிக்க - காப்பாற்றியருள்க. எ - று.

(பொ - ரை.) விரும்புகின்ற யாம் வணங்குதற்குரிய திருவடியையுடையஇறைவனே! பிரகாசிக்கின்ற பசுவையும் மிகுந்த பெருங்கீர்த்திநிறைந்த வேதியர் கூட்டத்தையும் காப்பாற்றுகவென்று வேதஞ்சொல்லும் வாக்கியத்தையும் அறுதொழிலையுடைய அந்தணர் சொல்லுகின்ற ஆசீர்வசனங்களோங்கிப்பரவும்படி நினைக்கின்ற பெரியோரது எண்ணத்தையும் நெடுமாலே! காப்பாற்றியருள்க. எ - று.

(வி - ரை.) கடவுளே! நெடுமாலே! பாலிக்க என இயைத்துக்கொள்க. பாதம் பதம்எனக்குறுகிநின்றது. கடவுள் எல்லாப்பொருள்களையுங் கடந்து நிற்பவன்; இது தொழிலாகுபெயர். ஆவினை, குழாத்தினை என்பவற்றின் இறுதியில் எண்ணும்மைகள் தொக்குநின்றன. அரும்புதல் - தோன்றுதல். தொழிலாறுவன, ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன. இவற்றை யஜநயாஜந அத்யயந அத்யாபநதாநப்ரதிக்ரஹம் என்றும், அறுதொழில் என்பதனை ஷட்கர்மமென்றுங்கூறுவர் வடநூலார். (சு)

மேற்படி - வேறு.

இளமழக் கன்றையூட்டி யெஞ்சிய தீப்பால் வெள்ளம்
வளமலி கானவைப்பு மருதவைப் பாகப் பெய்யுந்
தளர்வறு செருத்தலாக்க டங்குரச் செந்தூள் குஞ்சி
யளவற வடைந்து சேப்ப வவற்றினைப் புரந்தோன் வாழ்க.

(ப - ரை.) இளமழகன்றைஊட்டி - மிக்க இளங்கன்றுகளையுண்பித்து, எஞ்சிய - எஞ்சிநின்ற, தீ - மதுரமாகிய, பால்வெள்ளம் - பாற்பெருக்கை, வளம்மலி கானவைப்பு - வளமிகுந்த முல்லைநிலமானது, மருதவைப்புஆக - மருதநிலமாகும்படி, பெய்யும் - சொரிகின்ற, தளர்வு அறு - தளர்வற்ற, செருத்தல் - மடியையுடைய, ஆக்கள் - பசுக்களது, குரம் - குளம்புகளாலுண்டாகின்ற, செந்தூள் - செந்தூளானது, அளவுஅறஅடைந்து - அளவறப்படிந்து, (அதனால்) குஞ்சி சேப்ப - கேசம் செவக்க, (அவற்றின் பின்னே சென்று) அவற்றினை - அந்தப்பசுக்களை, புரந்தோன் - காத்தருளினவனாகிய கண்ணபிரான், வாழ்க - வாழ்ந்திடுக. எ - று.

டையவன், தேவகிப்பிராட்டிபெற்ற புதல்வன், போரில் எதிர்த்தவலிய மல்லரை அழித்தருளின ஸ்ரீகண்ணபிரான் (அவனது) பேசுதற்கரிய மேன்மையானது ஒலிக்கின்றகடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் வாழ்வதாக. எ - று.

(வி - ரை) இமைத்தலில் விண்ணோர் என்றமையால் விண்ணோர் இமையாநாட்டத்தோர் என்பது பெறப்படும். மடந்தையர் - மடப்பத்தையுடையவர். இளநலவெழிலார் அமை என்னும் உவமை தடமென்றோள் என்னும் பொருளேற்றத்தை விளக்குகின்றது. பூண் - தொழிலாகுபெயர். வல்மல் என்பதனைப் பண்புத்தொகைநிலைத்தொடரொன்றுவது, பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சத் தொடரென்றுவதுகொள்க - கண்ணன்சீர் எனவியையும். குரைகடல் - வினைத்தொகை நிலைத்தொடர். (அ)

கலிவிருத்தம்.

தாவகிச் சிரத்தினிற் சரண்வைத் தாடினோன்
பூவகிற் கரும்புகை போர்த்த பொற்குழன்
மாவகிர்க் கருங்கண்வேய் வாட்டுந் தோட்டுணைத்
தேவகி தநயனைச் சிந்தை செய்குவாம்.

(ப - ரை.) தாவு - தாவுகின்ற, அகி - பாம்பினது, சிரத்தினில் - சிரத்தின்மேல், சரண்வைத்து ஆடினோன் - திருவடியை வைத்து நடித்தவனும், பூ - மலரையணிந்த, அகில்கரும்புகைபோர்த்த - அகிலின் கரும்புகையினால் மூடப்பட்ட, பொற்குழல்-அழகியகூந்தலையும், மாவகிர்கருங்கண்-மாவடுவகிர் போன்ற கருங்கண்களையும், வேய்வாட்டும்தோள்துணை - வேயைவருத்துகின்ற இருதோள்களையுமுடைய, தேவகிதநயனை - தேவகி புத்திரனுமாகிய ஸ்ரீகண்ணபிரானை, சிந்தைசெய்குவாம் - சிந்திப்போம்யாம். எ - று.

(பொ - ரை.) தாவுகின்ற பாம்பினது சிரத்தின்மேல் திருவடியை வைத்துநடித்தவனும், மலரையணிந்த அகிலின்கரும்புகையினால் மூடப்பட்ட அழகியகூந்தலையும் மாவடுவகிர் போன்ற கருங்கண்களையும் வேயைவருத்துகின்ற இருதோள்களையுமுடைய தேவகிபுத்திரனுமாகிய ஸ்ரீகண்ணபிரானைச் சிந்திப்போம்யாம். எ - று.

(வி - ரை.) தாவுதல் - படமெடுத்தல். தாவகி என்றது இவ்விடத்துச் சிரத்தினிற் சரண்வைத்தாடினோன் என்றகுறிப்பால் காளியன் என்னும் பாம்பையுணர்த்திற்று. அகில் - அகிற்கட்டை, அகிற்கரும்புகைபோர்த்த பொற்குழல் என்றதனால் உயர்நிலையிலுள்ள மாதர் தமது கூந்தலுக்குச் செயற்கை மணமுண்டாகும் வண்ணம் அகிற்புகையூட்டல் இயல்பென்பது பெறப்பட்டது. மா - முதலாகுபெயர். இதனைப்பொருளாகுபெயரென்றுங்கூறுவர். வகிர் - பிளவு. வேய் - மூங்கில். துணை - இரண்டு. சிந்தைசெய்தல் ஒருசொல். செய்குவாமென்னும் வினைக்கு வினைமுதலாகிய யாம் என்பது வருவித்துரைக்கப்பட்டது. (௧)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏழிரண் டென்னும் புவனங்காத் தளிப்போ னெழில்வசு தேவன்றன் மைந்தன், வீழியங் கனிவாய்க் கொடியழன் மகட்கு மென்றுகி லளித்தபைங் கொண்டல், சூழிருங் கூந்தற் பூதனை யுயிரைச் சுவட்டினோன் றவாநல முண்டோன், பாழியம் புயத்துச் சேதிபற் றுணித்த பண்ணவன் மலரடி பணிவாம்.

(ப - ரை.) ஏழ்இரண்டு என்னும் - பதினான்கு என்று சொல்லப்பட்ட, புவனம் - புவனங்களை, காத்து அளிப்போன் - காத்துரக்ஷிப்பவன், எழில்வசுதேவன் மைந்தன் - அழகிய வசுதேவனுக்குப் புதல்வன், வீழிஅம்கனிவாய் - வீழியின் அழகியகனிபோலும் அதரத்தையுடைய, கொடி - கொடிபோன்ற, அழல்மகட்கு - துரௌபதிக்கு, மெல்துகில்அளித்த - மெல்லிய ஆடையளித்தருளின, பைகொண்டல் - பசுமையாகிய மேகவண்ணன், சூழ் - நீண்ட, இருகூந்தல் - பெரியகூந்தலையுடைய, பூதனை உயிரை - பூதனையின் உயிரை, சுவட்டினோன் - அழித்தவன், தவாநலம்உண்டோன் - தவாநலத்தையுண்டவன், பாழிஅம்புயத்து - பெருமையும் அழகுமுள்ளதோள்களையுடைய, சேதிபன் துணித்த பண்ணவன் - சேதிராஜனைக்கொன்ற ஸ்ரீகிருஷ்ணபகவான், (அவனது) மலர் அடி பணிவாம் - தாமரைமலர்போலும் திருவடியைப் பணிவோம் யாம். எ - று.

(பொ - ரை.) பதினான்கென்று சொல்லப்பட்ட புவனங்களைக்காத்து ரக்ஷிப்போன், அழகிய வசுதேவனுக்குப் புதல்வன், வீழியின் அழகிய கனி போலும் அதரத்தையுடையகொடிபோன்ற துரௌபதிக்கு மெல்லிய ஆடையை யளித்தருளின பசுமையாகிய மேகவண்ணன், நீண்ட பெரிய கூந்தலையுடைய பூதனையினுயிரை யழித்தவன், தவாநலத்தையுண்டவன், பெருமையும் அழகுமுள்ள தோள்களையுடைய சேதிராஜனைக்கொன்ற தேவன், அவனது தாமரைமலர்போன்ற திருவடியைப்பணிவோம் யாம். எ - று.

(வி - ரை.) பதினான்கு புவனங்களாவன: மேலுலகேழும் கீழுலகேழும். மேலுலகாவன: பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், தபோலோகம், ஜனலோகம், ஸத்யலோகம் என்பன. கீழுலகாவன: அதலம், விதலம், சுதலம், தராதலம், ரஸாதலம், மகாதலம், பாதாளம் என்பன. அழல் மகள் - துருபதராஜன் செய்த யாகாக்கினியிற் பிறந்தவள். இவளுக்கு இக்காரணத்தால் யஜ்ஞஸேனி என்றும், துருபதராஜகுமாரியாதலால் துரௌபதியென்றும், பாஞ்சாலன் மகளாதலால் பாஞ்சாலியென்றும் பெயர்கள் வழங்கும். இவள் பாண்டவரைவர்க்கும் மனைவி. இவள் பூர்வஜந்மத்தில் நாளாயனி என்னும் இருடி மகள். இந்திரசேனை என்னும் பெயருடையவளாய் மௌத்கல்ய மஹாமுனிக்கு மனைவியாயிருந்த பதிவிரதாசிரோமணி. கர்மவசத்தால் அவர் குஷ்டவியாதி பீடிதராயிருந்தும், இவள் அவரையிருந்த பக்தியோடு

ஆகரித்துக்கொண்டிருந்தாள். அதுநோக்கி அவர் மிகவுங் களிப்படைந்து உனக்கு வேண்டிய வரங்கேட்டுக்கொள்ளென்று நியமிக்க, இவள் தனக்குக் காமபோக விருப்பம் மிகவுமுளதென்றும், அவரைக் காமரூபந்தரித்து ஐந்துருவமாகத் தன்னோடுகூடி ரமிக்கவேண்டுமென்றும் பிரார்த்தித்தாள். அவர் அப்படியே இவளைக்கூடி நெடுங்காலம் வாழ்ந்திருந்து பிறகு தேகவியோகமடைந்தார். இவளும் காலவசத்தால் சரீரத்தைவிட்டும் காமபோகத்தில் திருப்தியடையாதவளாய், மறுபிறப்பில், காசிராஜனுக்கு மகளாகப்பிறந்து, நெடுநாள் விவாகமில்லாதிருந்து, உருத்திரமூர்த்தியை யுத்தேசித்து உக்கிரதவஞ்செய்ய, அவ்வுருத்திரமூர்த்தி இவளுக்குப் பிரத்தியக்ஷமாகி, உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்வாயாகவென்று நியமிக்க, இவள் தன் காமபோக விருப்பமிகுதியால் பதி பதி பதி பதி பதியென்று ஐந்துதரமுச்சரித்தாள். அதுகாரணமாக இவள் துரௌபதியாய்ப்பிறந்து பாண்டவரைவர்க்கும் மனைவியானாள். இவளுக்குத் தாய்தந்தையரிட்ட பெயர் கிருஷ்ணையென்பது. இவள் வயிற்றில் தருமருக்குப் பிரதிவிந்தியனும், வீமனுக்கு சுருதசோமனும், அர்ச்சுனனுக்கு சுருதகீர்த்தியும், நகுலனுக்கு சதாநீகனும், சகாதேவனுக்கு சுருதசேனனும் பிறந்தார்கள். இந்த ஐவரும் உபபாண்டவர் எனப்படுவர். இவள் இந்திராணியினமிசம்.

தாவாநலமெனற்பாலது தவாநலமென விகாரமாயிற்று. தாவாநலமுண்டோனென்றது. ஸ்ரீகண்ணபிரானவர் இளமைப்பருவத்தில்தாமும்கோபாலபாலகருமாகப் பசுமேய்த்திருந்த அரணியத்தில் உண்டான காட்டுத்தீயையுண்டு அப்பாலகரைக் காத்தருளின வரலாற்றைக்குறித்தது. சேதிபன் - சேதிதேசத்தரசனாகிய சிசுபாலன். இவன் தமகோஷனுக்கு வசுதேவன் றங்கையாகிய சுருதசிரவை வயிற்றிற்பிறந்த புதல்வன். இவன் நான்கு கைகளோடும் நெற்றிக்கண்ணோடும்பிறந்து அழுதுகொண்டிருக்கும்போது, இவனை நோக்கின தாய்தந்தையர் அச்சமும் ஆச்சரியமுமடைந்து ஒன்றுந் தோன்றாதிருந்தார்கள். அப்பொழுது, "எவன் எடுத்துக்கொண்டபோது இவனது நெற்றிக்கண்ணும் இரண்டு கைகளும் மறைந்துபோகுமோ அவன் இவனைக் கொல்லுவனாதலால் நீங்கள் விசனப்படாதிருங்களென்று" ஒரு அசரீரிவாக்குண்டாயிற்று. அவ்வாறே, தாய்தந்தையராகிய சுருதசிரவையும் தமகோஷனும் தம்மைப் பார்க்கவருவோரையெல்லாம் நோக்கி, இந்தச்சிசுவை யெடுத்துக்கொள்ளுங்களென்று கொடுத்துக்கொண்டேயிருந்து, ஒருநாள் பலராமரும் ஸ்ரீகிருஷ்ணரும் தம்மைப்பார்க்கவந்தபோது அவர்கள் கையிலும் இந்தச் சிசுவைக் கொடுத்தார்கள். ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் தம் திருக்கையினால் இவனைத் தீண்டினவுடன் இவனது நெற்றிக்கண்ணும் இரண்டு கைகளும் மறைந்துபோயின. அதுநோக்கி அத்தாய்தந்தையர் ஆச்சரியமடைந்து, இந்தக் கிருஷ்ணமூர்த்தியால் நம்புதல்வன் நாசமடைவானேயென்று துக்கித்து, கிருஷ்ணமூர்த்தியை நோக்கி, இந்தச்சிறுவன் நூறுபிழை செய்யுமளவும் மன்னித்து, அதன்மேலும் செய்வானாயின் இவனைக் கொல்லக்கடவாயென்று

தறியு மாகி, வார்ந்தகுழ லாய்ச்சியர்க்கோர் வேளாகி நின்றானை வழுத்தல் செய்வாம்.

(ப - ரை.) ஆர்ந்த-நிறைந்த, தழல் இறைக்கும்-நெருப்பை வீசுகின்ற, மதில் - மதில்சூழ்ந்த, புரத்து - பட்டணத்துக்கு, அரசு - அரசனாகிய பாணாசுரனுடைய, கரம் கொடிகட்கு-கைகளாகிய கொடிகளுக்கு, அரிவாள் ஆகி - அரிவாளாகியும், கூர்ந்த மதி இல்லா - நுட்பமாகிய அறிவில்லாத, கஞ்சன் - கஞ்சனது, தூசு கொடுவரும் - ஆடைகளைக் கொண்டுவருகிற, ஈரங்கொல்லி-வண்ணானது, வாழ்நாள் தீர்ந்திடச்செய் - ஆயுள் நீங்கச்செய்த, விதி ஆகி - ஊழாகியும், கன்று ஆக்கட்கு - கன்றையுடைய பசுக்களுக்கு, உரிஞ்சு செறி தறியும் ஆகி - உரிஞ்சுதற்குரிய வலிய தறியாகியும், வார்ந்த குழல் - நீண்ட கூந்தலையுடைய, ஆய்ச்சியர்க்கு - இடைச்சியருக்கு, ஓர் வேள் ஆகி-ஒப்பற்ற மன்மதனாகியும், நின்றானை - நின்றவனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானை, வழுத்தல் செய்வாம் - துதிப்போம் யாம். எ - று.

(பொ - ரை.) நிறைந்த நெருப்பை வீசுகின்ற மதில்சூழ்ந்த பட்டணத்துக்கரசனாகிய பாணாசுரனுடைய கைகளாகிய கொடிகளுக்கு அரிவாளாகியும், நுட்பமாகிய அறிவில்லாத கஞ்சனது ஆடைகொண்டுவருகிற வண்ணானுடைய ஆயுள் நீங்கச்செய்த ஊழாகியும், கன்றையுடைய பசுக்களுக்கு உரிஞ்சுதற்குரிய வலிய தறியாகியும், நீண்ட கூந்தலையுடைய இடைச்சியருக்கு ஒப்பற்ற மன்மதனாகியும் நின்றவனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைத் துதிப்போம் யாம். எ - று.

(வி - ரை.) பாணாசுரன் பட்டணத்துக் கோட்டைமதில் நெருப்புருவாதலால் 'ஆர்ந்தழலிறைக்குமதில்' என்றார். அரசு - பண்பாகுபெயர். கொடிகட்கு-கொடிகளைச் சேதிப்பதற்கு. கன்று ஆ-கற்றாவென வலித்தலாயிற்று. 'கற்றாக்கட்குரிஞ்சுசெறிதறி' என்றது ஆவுரிஞ்சுதறியை. செறி - நடப்பட்ட எனினுமாம். தறி - தூண். ஸ்ரீகண்ணபிரான், வாணனது கரக்கொடிகளை யறுத்ததனால் அவனை அரிவாளாக்கியும், ஈரங்கொல்லி வாழ்நாள் தீர்ந்திடச் செய்ததனால் விதியாக்கியும், பசுக்கள் தமதுடம்பின்கண் கண்டேதிதீர உராய்ந்துகொள்ள இசைந்திருந்ததனால் ஆவுரிஞ்சு தறியாக்கியும், ஆய்ச்சியர் காமபோகநுகர்ந் தின்புறச்செய்ததனால் வேளாக்கியும் கூறினார். (கஉ)

---

## வித்தியாகுருவணக்கம்.

சீராருந் திரிசிரா மலையின்வளர் தெக்கணூர்ஞ் சிறப்பினோங்கு, மேராருங் கலைக்கடன்முற் றுண்டாங்கு நின்றெழுசீ இ யென் வியிவேக, வாராருந் தடநிரம்ப மனப்பறம்பி னினியதமிழ் மாரி

பெய்த, பேராரு மீனாட்சி சுந்தரதேசிகமுகிலைப் பேணி வாழ்வாம்.

(ப - ரை.) சீர் ஆரும்-சிறப்புப்பொருந்திய, திரிசிராமலையில் வளர்ந்து-திரிசிராமலையில் வளர்ந்து, எக்காலும் - எப்பொழுதும், சிறப்பின் ஓங்கும் - சிறப்போடுயர்ந்த, ஏர் ஆரும்-அழகுமிகுந்த, கலைகடல் - கலைக்கடலை, முற்று உண்டு - முழுதுங்குடித்து, ஆங்கு நின்று எழீஇ - ஆங்கு நின்றெழுந்து, என் விவேகம் - என்னறிவாகிய, வார் ஆரும் - நீட்சிபொருந்திய, தடம் நிரம்ப - தடாகம் நிறையும்படி, மனம் பறம்பில் - மனமாகிய மலையின்மீது; இனிய - மதுரமுள்ள, தமிழ்மாரிபெய்த - தமிழ்மழையைப்பொழிந்த, பேர் ஆரும் - பெருமைமிகுந்த, மீனாட்சிசுந்தரம் தேசிகமுகிலை - மீனாக்ஷிசுந்தரதேசிகராகிய மேகத்தை, பேணி - விரும்பி, வாழ்வாம் - வாழ்வோம் யாம். எ - று.

(பொ - ரை.) சிறப்புப்பொருந்திய திரிசிராமலையில் வளர்ந்து, எப்பொழுதும் சிறப்போடுயர்ந்த அழகுமிகுந்த கலைக்கடலை முழுதமுண்டு, அங்குநின்றெழுந்து, என்னறிவாகிய நீட்சிபொருந்திய தடாகம் நிறையும்படி மனமாகிய மலையின்மீது மதுரமுள்ள தமிழ்மழையைப்பொழிந்த பெருமைமிகுந்த மீனாக்ஷிசுந்தரதேசிகராகிய மேகத்தை விரும்பி வாழ்வோம் யாம். எ - று.

(வி - ரை.) வளர்தல் - விருத்தியடைதல், கண்வளர்தல் எனினுமாம். கலைக்கடல் - நூற்கடல். எழீஇ - சொல்லிசையளபெடை. தமிழ் என்பதற்கு இனிமையென்றும் பொருள் கூறுதலுண்டு. வளர்ந்து உண்டு எழீஇ பெய்த முகில் என வினை முடித்துக்கொள்க. கடல் என்றதற்கேற்ப, உண்டு என்பதற்குங் குடித்து எனப் பொருளுரைக்கலாயிற்று. (கஅ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிவபரஞ் சுடரி னிணையடி மலரைத் திரிகர ணத்தினும் வழாது, பவமறத் தினமும் வழிபடு குணாளன் பகர்திரி சிரபுரத் தலைவன், சிவமுறு தென்சொ லைந்திலக் கணத்திற் றெளிவுறச் சிறியனேற் கருளு, நவமுறு புகழ்மீ னாட்சிசுந் தரமே வரனுண்மல ரடிமுடி புனைவாம்.

(ப - ரை.) சிவம்-சிவமாகிய, பரஞ்சுடரின் - பரஞ்சோதியின், இணை-இரண்டாகிய, அடி மலரை - பாததாமரை மலரை, திரிகரணத்தினும்-மூன்கரணங்களாலும், வழாது - தவறாமல், பவம் அற - பிறவியறும்படி, தினமும் - நாடோறும், வழிபடு - வழிபடுகின்ற, குணாளன் - குணவாளன், பகர் - (யாவராலும் புகழ்ந்து) சொல்லப்படுகின்ற, திரிசிரபுரத்தலைவன் - திரிசிரபுரத்துக்கு நிர்வாஹகன், சிவம் உறு - மங்கலமாகிய, தென்சொல் - தென் மொழியின், ஐந்து இலக்கணத்தில் - பஞ்சலக்ஷணங்களிலும், தெளிவு உற - தெளி

வடையும்படி, சிறியனேற்கு அருளும் - சிறியனேனுக்கு அருள்செய்த, நவம் உறு புகழ் - புதுமையாகிய புகழையுடைய, மீனாட்சிசுந்தரவேள் - மீனாக்ஷி சுந்தரவேள், (அவனது) நாள்மலர் அடி - புதிய தாமரைமலர்போன்ற திருவடியை, முடி - எமது சிரத்தில், புனைவாம் - அணிந்துகொள்வோம் யாம். எ - று.

(பொ - ரை.) சிவமாகிய பரஞ்சோதியின் இரண்டாகிய பாததாமரை மலரை முக்கரணங்களாலும் தவறாமல் பிறவியறும்படி நாடோறும் வழிபடுகின்ற குணவாளன், யாவராலும் புகழ்ந்துசொல்லப்படுகின்ற திரிசிரபுரத்துக்கு நிர்வாஹகன், மங்கலமாகிய தென்மொழியின் ஐந்திலக்கணங்களிலும் தெளிவடையும்படி சிறியனேனுக்கருள்செய்த புதுமையாகிய புகழையுடைய மீனாக்ஷிசுந்தரவேள், அவனது புதிய தாமரைமலர்போன்ற திருவடியை யெமது சிரத்தில் அணிந்துகொள்வோம் யாம். எ - று.

(வி - ரை.) சிவபரம் - வடநூன் முடிபு. திரிகரணம் - மனோவாக்காயங்கள். பவம் - பாவமெனினுமாம். மணவாளன் என்பது மணாளன் என வந்ததுபோலக் குணவாளன் என்பது குணாளன் என வந்தது. இதற்கு நற்குணமுடையவன் என்பது பொருள். ஐந்திலக்கணம் - எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், யாப்பிலக்கணம், அணியிலக்கணம். வேள் - உபகாரசீலன். (கச)

வியாசபுத்திரராகிய சுகமுனிவர் பரீக்ஷித்து வேந்தனுக்குச் சொல்லிய ஸ்ரீபாகவதபுராணத்தில் ஓர் கதையாகிய குசேலர் சரிதத்தைத் தமிழ்ப் பாடலாகப் பாடுகிறேனென்கிறார்.

மறைமுழு துணர்ந்த வியாதமா முனிவன் மைந்தனாஞ் சுகப்
பெயர் முனிவன், கறைதபு செங்கோற் பரிட்சித்து மன்னன்
களிப்பொடு கேட்டிடப் புகன்ற, நிறைபுகழ்ப் பாகவதத்திலோர்
கதையாய் நிலவிய குசேலன்மாக் கதையைத், துறைகெழு செஞ்
சொற் றீந்தமிழ்ப் பாவாற் சொற்றிட லுற்றனென் மன்னோ.

(ப - ரை.) மறைமுழுது உணர்ந்த - வேதங்களைமுற்றுமறிந்த, மா - பெருமை பொருந்திய, வியாதமுனிவன் - வேதவியாசமுனிவருக்கு, மைந்தன் ஆம் - புதல்வராகிய, சுகப்பெயர்முனிவன் - சுகர் என்னும் பெயரையுடைய முனிவர், கறைதபுசெங்கோல் - குற்றமற்ற செங்கோலைத்தாங்கிய, பரிட்சித்துமன்னன் - பரீக்ஷித்து என்னும் பெயரையுடைய வேந்தன், களிப்பொடு கேட்டிட - விருப்பத்தோடு கேட்க, புகன்ற - சொல்லியருளின, நிறைபுகழ் - நிறைந்தபுகழையுடைய, பாகவதத்தில் - ஸ்ரீபாகவதபுராணத்தில், ஓர் கதையாய் நிலவிய - ஒருகதையாக நிலைபெற்று விளங்குகின்ற, மா - பெருமைபொருந்திய, குசேலன்கதையை - குசேலமுனிவர் கதையை, துறைகெழு - பலதுறைகளோடு கூடிய, செஞ்சொல் - செஞ்சொற்களாலாகிய, தீ-

கனைகடன் முகிலைப் பார்த்தெனீ ருவரைக் கழிப்பிமன் னுயிர்க்கெலா மினிதாப், புனையெனக் கேளா தெனினுமம் முகிலே புரியுமென் செய்யுளின் புகரை, நினைவரு முழுநூ லுணர்ந்தவ ரகற்றி நீடுல கினுக்கினி தாக்க, வனையரை யான்கே ளாதிருந் திடினு மதுபுரிந் திடலவர்க் கியல்பே.

(ப - ரை.) கனை - ஒலிக்கின்ற, கடல் - கடலானது, முகிலைபார்த்து - மேகத்தைநோக்கி, என்நீர் - எனதுநீரின், உவரை - உவர்ச்சுவையை, கழிப்பி - நீக்கி, மன் - (உலகத்தில்) நிலைபெற்ற, உயிர்க்குஎல்லாம் - சீவர்களுக்கெல்லாம், இனிது ஆ - இனிதாம்படி, புனைஎன - செய்யென்று, கேளாது எனினும்-கேளாதாயினும், அ முகிலே - அந்தமேகந்தானே, புரியும் - (அவ்வாறு) செய்யும், (அதுபோல) நினைவு அரு-நினைத்தற்கரிய, முழுநூல் - முழுநூல்களின் பொருள்களை, உணர்ந்தவர் - (ஐயந்திரிபற) அறிந்தவர்களாகிய பெரியோர், என்செய்யுளின்-எனது நூலின்கண் உள்ள, புகரை - குற்றத்தை, அகற்றி - நீக்கி, நீடு உலகினுக்கு - பெரிய இவ்வுலகத்தார்க்கு, இனிது ஆக்க - இனிதாகச்செய்யும்படி, அனையரை - அவர்களை, யான்கேளாது இருந்திடினும் - நான்கேளாதிருப்பினும், அது - அதனை, புரிந்திடல் - செய்தல், அவர்க்கு - அந்தப் பெரியோர்க்கு, இயல்பே - இயற்கையேயாகும். எ - று.

(பொ - ரை.) ஒலிக்கின்ற கடலானது மேகத்தைநோக்கி, எனது நீரின் உவர்ச்சுவையை நீக்கி, உலகத்தில் நிலைபெற்ற சீவர்களுக்கெல்லாம் இனிதாகும்படி செய்யென்று கேளாதாயினும், அந்த மேகந்தானே அவ்வாறு செய்யும், அதுபோல, நினைத்தற்கரிய முழுநூல்களின் பொருள்களை ஐயந்திரிபற அறிந்தவர்களாகிய பெரியோர் எனது நூலின்கண் உள்ள குற்றத்தை நீக்கி,பெரிய இவ்வுலகத்தார்க்கு இனிதாகச்செய்யும்படி அவர்களை நான் கேளாதிருப்பினும் அதனைச்செய்தல் அந்தப்பெரியோர்க்கு இயற்கையேயாகும். எ - று.

(வி - ரை.) கனைகடல், நீடுலகு, வினைத்தொகை நிலைத்தொடர்கள். எனீர்என்பதில் னகரம் சந்தவின்பப்பொருட்டுத் தொகுத்தல். கழிப்பி - பிறவினையிறந்த காலவினையெச்சம், கழி-பகுதி, பு பிறவினை விகுதி, ப் சந்தி, கழிப்பு பிறவினைப்பகுதி, இ இறந்தகாலவினையெச்சவிகுதி, உகரக்கேடுசந்தி, தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாகிய கழியென்னும் இப்பகுதி பிறவினையில் தகரவொற்றுப் பெற்றுக்கழித்து எனவருதலே பெருவழக்கு. உயிர் நித்தியமாதலால் 'மன்னுயிர் என்றார். இனிதா - அகரவிகுதிகெட்டுவந்த செயவெனெச்சம். புனை ஏவலொருமை வினைமுற்று. எனின் என்னென்னு மிடைச்சொலடியாகப்பிறந்த எதிர்காலச்செயின் என்னும்வாய்பாட்டு வினையெச்சம், இதனீற்றிலுள்ள உம்மையுயர்வுசிறப்பு. முகிலேயென்பதி லேகாரம் பிரிநிலை. செய்யுள் தொழிற்பெயர். விகுதி-உள்.இது தொழிலாகுபெயராய்ப்பாட

லையும், கருவியாகுபெயராய் நூலையும் உணர்த்திற்றாதலால் இருமடியாகுபெயர். முழுநூல் - பெரியநூல். (கக)

---

# சிறப்புப்பாயிரம்.

அஃதாவது நூல்செய்தோன், நூல்வழி, நூற்பொருள், அதிகாரி, பயன் முதலியவற்றைக் கூறுவது.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

*மாமேவு மணிமார்பன் மலரடிகள் மருவுதிருமனத்தினேன் பொற், கோமேவு பொழிற்றிருவூரதிபதிசீர்க் கருணிகர் குலவி சேடன், பாமேவு பெருஞ்சீர்த்தி மிகுநாராயணவள்ளல் பயந்த மைந்தர், தேமேவு மலர்மாலைக் கோவிந்த முகில்சீநிவாசச் செம்மல்.*

(ப - ரை.) மாமேவும் - திருமகள்வாழ்கின்ற, அணி - அழகாகிய, மார்பன் - திருமார்பையுடையவனாகிய திருமாலின், மலர் - தாமரை மலர்போன்ற, அடிகள் - திருவடிகள், மருவு - பொருந்தியிருக்கின்ற, திருமனத்தினேன் - சிறந்தமனத்தையுடையவனும், பொன் - அழகாகிய, கோமேவு - ஆகாயத்தையளாவுகின்ற, பொழில் - சோலைசூழ்ந்த, திருவூரதிபதி - திருவூருக்கு அதிபதியும், சீர் - மேன்மையுள்ள, கருணிகர் - கருணிகரது, குலம் - குலத்திலவதரித்த, விசேடன்-மேலானவனும், பாமேவு-பாக்களிலமைந்த, பெருசீர்த்திமிகு - பெரும்புகழ்மிகுந்த, நாராயணவள்ளல் - நாராயணவள்ளலானவன், பயந்தமைந்தர் - ஈன்றமைந்தர்கள், தேமேவும் மலர்மாலை - தேன்பொருந்திய பூமாலையைத்தரித்த, கோவிந்தமுகில் - கோவிந்தமுகிலும், சீநிவாசச்செம்மல் - சீநிவாசச்செம்மலுமே. எ - டு.

(பொ - ரை.) திருமகள்வாழ்கின்ற அழகிய திருமார்பையுடையவனாகிய திருமாலின் தாமரைமலர்போன்ற திருவடிகள் தங்கியிருக்கின்ற சிறந்த மனத்தையுடையவனும், அழகிய ஆகாயத்தையளாவுகின்ற சோலைசூழ்ந்த திருவூருக்கதிபதியும், மேன்மையுள்ள கருணிகர் குலத்திலவதரித்த மேலானவனும், பாக்களிலமைந்த பெரும்புகழ் மிகுந்த நாராயணவள்ளலானவன் ஈன்றமைந்தர்கள் தேன்பொருந்திய பூமாலையைத்தரித்த கோவிந்தமுகிலும் ஸ்ரீநிவாசச்செம்மலுமே. எ - று.

(வி - ரை.) மா - திருமகள்; இது வடசொல். மாமேவுமணி என்பதற்குப் பெருமைபொருந்திய கௌஸ்துபமணியைத்தரித்த எனப்பொருள் கூறினுமாம். மா-அழகு மாம், திருமணியுமாம். கோமேவுபொழில் - தே

வலோகத்திற் செல்லுகின்ற சோலைஎனினுமாம். அதிபதி - அதிகாரி, பா - பாடல். வள்ளல் - கொடையிற்சிறந்தோன். தேம் - மணமெனினுமமையும். முகில் - மேகம், இது கைம்மாறுகருதாது கொடுப்போன் என்பது தோன்ற வந்த உவமையாகுபெயர். செம்மல் - பெருமையிற்சிறந்தோன். (௧எ)

இருவருநற் குசேலமுனி சரித்திரத்தை யுலகுள்ளோ ரின்ப மெய்த, வொருவருமின் சுவைத்தமிழிற் பாடியரு ளுகவெனவுள் ளுவந்து கேட்பப், பொருவருசெஞ் சொற்சுவையும் பொருட்சு வையு மணிநலமும் பொலிய வார்த்தி, மருவருகாப் பியவுறுப்பும் வயங்கவுறு மீரைந்து வழுவும் வீட்டி.

(ப - ரை.) இருவரும் - மேற்சொல்லப்பட்ட இருவரும், நல் குசேல முனிசரித்திரத்தை - நன்மையாகிய குசேலமுனிவரது சரித்திரத்தை, உலகுஉள்ளோர் - இவ்வுலகத்திலுள்ளவர், இன்பம்எய்த - ஆநந்தமடையும்படி, ஒருவுஅரும் இன்சுவை - நீங்குதலில்லாத இனியசுவையையுடைய, தமிழின் - தமிழ்ப்பாடலால், பாடி அருளுக என - பாடியருள்கவென்று, உள்உவந்து கேட்ப - மனமகிழ்ந்துகேட்டுக்கொள்ளுகையால், பொருவு அரு - ஒப்பில்லாத, செஞ்சொல்சுவையும் - செஞ்சொற்களின்சுவையும், பொருள்சுவையும் - (அச்சொற்களின்) பொருட்சுவையும், அணிநலமும் - அலங்காரத்தின்பெருமையும், பொலிய - விளங்கும்படி, ஆர்த்திமருவு - (யாவர்க்கும்) விருப்பத்தைத் தருதலையுடைய, அரு - அருமையாகிய, காப்பிய உறுப்பும் வயங்க - காவியவுறுப்புக்களும் விளங்க, உறும் - உண்டாகின்ற, ஈரைந்து வழுவும் வீட்டி - பத்துக் குற்றங்களையும் நீக்கி. எ - று.

(பொ-ரை) மேற்சொல்லப்பட்ட இருவரும், நன்மையாகிய குசேல முனிவரது சரித்திரத்தை இவ்வுலகத்திலுள்ளவர் ஆநந்தமடையும்படி, நீங்குதலில்லாத இனியசுவையையுடைய தமிழ்ப்பாடலால் பாடியருள்கவென்று மனமகிழ்ந்து கேட்டுக்கொள்ளுகையால், ஒப்பில்லாத செஞ்சொற்களின் சுவையும், அச்சொற்களின்பொருட்சுவையும், அலங்காரத்தின்பெருமையும் விளங்கும்படி, யாவர்க்கும் விருப்பந்தருதலையுடைய அருமையாகிய காவியவுறுப்புக்களும் விளங்க உண்டாகின்ற பத்துக்குற்றங்களையும் நீக்கி. எ - று.

(வி-ரை.) நல் என்னும் விசேடணத்தைக்குசேலமுனிக்காதல், சரித்திரத்துக்காதலியைத்துக்கொள்க. ஒருவரும்பொருவரும் என்பவற்றில் அருமை இன்மைப்பொருளது. செஞ்சொல் - செந்தமிழ்ச்சொல், செவ்வியசொல் எனினுமாம். சுவை - ரஸம். காப்பியவுறுப்பு - அத்தியாயமுதலியன. பத்துக் குற்றம் - குன்றக்கூறல், மிகைபடக்கூறல் முதலியன. (௧அ)

இனிதமிர்தச் சுவையினுமிக் கவிதையின் சுவையமைதென வியற் றினுற், றனிதநிகா தவ்ழ்மனைவல் லார்வீராச் சாமியன்னை றங்

தமைந்தன், கனிதரும நல்லொழுக்கங் குணமனைத்து மோரு ருக்கொள் காட்சி போல்வான், புனிதமிகு கலையுணர்ச்சித் தே வரா சக்குரிசிற் புலவ ரேறே.

(ப - ரை.) இதன்இன்சுவை - இதின் இனியசுவையானது, இனிது அமிர்தம் சுவையினும் - இனிதாகிய அமிர்தத்தின் சுவையினும், மிக்கதென - மேலானதென்னும்படி, இயற்றினன் - செய்தான், (அவன் யாவனெனின்) தனிதம் - முழக்கத்தையுடைய, நிரைதழ் - பசுக்கூட்டங்கள் நிறைந்த, மனை - மாளிகைகள் நெருங்கின, வல்லூர் - வல்லூரில் வாழ்கின்ற, வீராச் சாமி - வீராச்சாமியென்னும் இயற்பெயரையுடைய, அண்ணல்-பெரியோன், தந்த - ஈன்ற, மைந்தன் - புதல்வனும், கனி - மனக்கனிவுள்ள, தருமம்நல் ஒழுக்கம்குணம் - தருமமும் நல்லொழுக்கமும் நற்குணமும் ஆகிய, அனைத்தும் - எல்லாம், ஓர்உருகொள்காட்சிபோல்வான் - ஒருவடிவுகொண்டாற் போன்ற காட்சியையுடையவனும், புனிதம்மிகு - பரிசுத்தமிகுந்த, கலை உணர்ச்சி - நூலறிவையுடைய, தேவராசக்குரிசில் - தேவராஜன் என்னு மியற்பெயர்பூண்ட பெரியோனுமாகிய, புலவர்ஏறு-புலவர்பெருமான். எ-று.

(பொ - ரை) இதின்இனியசுவையானது இனிதாகிய அமிர்தத்தின் சுவையினும் மேலானதென்னும்படி செய்தான், அவன்யாவனெனின், முழக் கத்தையுடைய பசுக்கூட்டங்கள் நிறைந்த மாளிகைகள் நெருங்கின வல்லூ ரில் வாழ்கின்ற வீராச்சாமியென்னு மியற்பெயரையுடைய பெரியோனீன்ற புதல்வனும், மனக்கனிவுள்ள தருமமும் நல்லொழுக்கமும் நற்குணமுமாகிய எல்லாம் ஒருவடிவுகொண்டாற்போன்ற காட்சியையுடையவனும், பரிசுத்த மிகுந்த நூலறிவையுடைய தேவராஜன் என்னும் இயற்பெயர்பூண்ட பெரி யோனுமாகிய புலவர்பெருமான். எ - று.

(வி - ரை.) சுவையது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி அண்ணல்-பெருமையிற் சிறந்தோன், குரிசிலென்பதுமது. கனிவு-இரக்கம். நல்லொழுக்கம் - நன்னெறியிநடத்தல், இதனைச் சதாசாரம் என்பர் வட நூலார். காட்சி - தோற்றம். புலவரேறு என்பதில் ஏறு உயர்வைக் குறித்தது. உயர்வுகுறிக்குமிடத்தில் வடநூலாரும், நரபுங்கவ, புருஷவ்யாக்ர என்றுகூறுதல் காண்க. புலம் - அறிவு, புலவர் அறிவுடையார். (௧௧)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏராருஞ் சகாத்தமா யிரத்தெழு நூற் றெழுபத் திரண்டினி கழ் சௌமியநல் லாண்டிதனுத் திங்கள், ஊராரு மிருபத்துநான் காநாள் பரிதி வாரமொன்பான் றிதிசோதி யிங்கவிலக் கினத்திற், பேராருங் குசேலமுனி தனதுசரித் திரத்தைப் பெட்பினினி தாருந் தமிழி னியல்செறியப் பாடித், தாராரும் புயத்தேவ ராசவள்ள லான்றோர் தனையுந்துவகை பூப்பவரங் கேற்றினனுவ் மகிழ்ந்தே.

(ப - ரை.) தார்ஆரும் - பூமாலையணிந்த, புயம் - தோள்களையுடைய, தேவராசவள்ளல் - தேவராஜனென்னும் வள்ளலானவன், ஏர் ஆரும் - அழகு பொருந்திய, சகஅத்தம் - சகவருடம், ஆயிரத்து எழுநூற்று எழுபத்திரண்டில் - ஆயிரத்தெழுநூற்றெழுபத்திரண்டில், நிகழ் - நிகழ்கின்ற, நல்-நன்மையாகிய, சௌமிய ஆண்டு - சௌமியவருடம், தனுதிங்கள் - மார்கழிமாசம், வார்ஆரும் இருபத்துநான்காம்நாள் - பெரிதாகிய இருபத்துநான்காந்தெய்தி, பரிதிவாரம் - ஆதிவாரம், ஒன்பான்திதி - ஒன்பதாந்திதி, சோதி - சோதி நக்ஷத்திரம், சிங்க இலக்கினத்தில்-சிங்கலக்கினத்தில், பேர்ஆரும், பெருமை நிறைந்த, குசேலமுனிதனது சரித்திரத்தை - குசேலமுனிவனது சரித்திரத்தை, பெட்பின் - விருப்பத்தோடு, இனிது - இனிதாகிய, அருதமிழின் இயல்செறியபாடி - அரியதமிழிலக்கணமமையப்பாடி, ஆன்றோர்-பெரியோர், தழைந்து - உடல் பூரித்து, உவகை பூப்ப - மனத்துக்களிப்படைய, உள் மகிழ்ந்து - மனமகிழ்ந்து, அரங்கேற்றினன் - அரங்கேற்றினான். எ - று.

(பொ - ரை.) பூமாலையணிந்த தோள்களையுடைய தேவராஜனென்னும் வள்ளலானவன், அழகுபொருந்திய சகவருடம் ஆயிரத்தெழுநூற்றெழுபத்திரண்டில் நிகழ்கின்ற நன்மையாகிய சௌமியவருடம், மார்கழிமாசம், இருபத்துநான்காந்தெய்தி, ஆதிவாரம், ஒன்பதாந்திதி, சோதிநக்ஷத்திரம், சிங்கலக்கினத்தில், பெருமைநிறைந்த குசேலமுனிவனது சரித்திரத்தை விருப்பத்தோடு இனிதாகிய அரியதமிழிலக்கணமமையப்பாடி, பெரியோர் உடல்பூரித்து மனத்துக்களிப்படைய, மனமகிழ்ந்து அரங்கேற்றினான். எ-று.

(வி - ரை.) அப்தம் என்னும் வடசொல் அத்தம் எனத்திரிந்து வந்தது. தனு-வில், இது வில்லுருவாகிய இராசியையுணர்த்தினமையால் உவமையாகுபெயர். அது தான் சஞ்சரிக்கிறகாலத்தை யுணர்த்தலால் தானியாகுபெயர். ஆகவே தனு இருமடியாகுபெயர். பரிதி - சூரியன். சோதி - சுவாதி. இயல் - இலக்கணம். தழைத்தல் உவகைபூத்தல் இரண்டும் முறையே உடலுள்ளங்களின் தொழில்கள், எஞ்சிநின்றவாக்கின் தொழிலாகிய புகழ்ச்சியுங் கொள்க, மிகுதியாகிய இரண்டன்தொழில் கூறப்பட்டமையான். அரங்கு - சபை, அரங்கேற்றல் - சபையாருக்கேற்பித்தல். (உ0)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்வளர் குசேலோ பாக்கியா னத்தைச் செந்தமிழ்ப் பாவி
னிற் செய்கென், றூர்வளர் திருவூர்ச் சிறிவா சேந்திர ஞர்மிக்
கூர்தரப் புகலக், கார்வளர் வல்லூர்த் தேவரா சப்பேர்க் கவிச்சக்ர
வர்த்திசெய் தளித்தா, னோர்வள ரியன்முற் றுணர்ந்தநற் புலவ
ரின்புளங் கொண்டிட மாதோ.

(ப - ரை.) சீர் வளர் - சிறப்பு வளர்கின்ற, குசேலோபாக்கியானத்தை, குசேலோபாக்கியானத்தை, செந்தமிழ் பாவினில் செய்க என்ற-செந்தமிழ்ப்

பாடலாற் செய்யக்கடவையென்று, ஆர் ஒளி - ஒளி வளர்கின்ற, திருவூர் - திருவூரில் வாழ்கின்ற, சீனிவாச இந்திரன் - ஸ்ரீநிவாசேந்திரன், ஆர்வம் மிக்கு ஊர்தர புகல - விருப்பமிகுதியாற் சொல்ல, கார்வளர் - பெருமை வளர்கின்ற, வல்லூர் - வல்லூரில் வாழ்கின்ற, தேவராசப்பேர் - தேவராஜனென்னும் பெயரையுடைய, கவிச்சக்ரவர்த்தி - கவிச்சக்ரவர்த்தியானவன், ஏர் வளர் - அழகு வளர்கின்ற, இயல் நூல் உணர்ந்த - இயற்றமிழிலக்கண முழுது முணர்ந்த, நல் புலவர் - சிறந்த புலவர், உள்ளம் இன்பு கொண்டிட - மனங் களிக்கும்படி, செய்து அளித்தான் - செய்து தந்தான். எ - று.

மாது - ஏ - அசைகள்.

(பொ - ரை.) சிறப்பு வளர்கின்ற குசேலோபாக்கியானத்தைச் செந்தமிழ்ப்பாடலாற் செய்யக்கடவையென்று, ஒளிவளர்கின்ற திருவூரில் வாழ்கின்ற ஸ்ரீநிவாசேந்திரன் விருப்பமிகுதியாற் சொல்ல, பெருமைவளர்கின்ற வல்லூரில் வாழ்கின்ற தேவராஜனென்னும் பெயரையுடைய கவிச்சக்ரவர்த்தியானவன், அழகு வளர்கின்ற இலக்கணமுழுதுமுணர்ந்த சிறந்த புலவர் மனங்களிக்கும்படி செய்து தந்தான். எ - று.

(வி - ரை.) சீர் வளர் என்னும் விசேடணம் குசேலனை விசேடித்ததென்னவது உபாக்கியானத்தை விசேடித்ததென்னவது கொள்க. செந்தமிழ்ப்பாவினிற் செய்க என்றதனால் இதற்கு முன் இந்தக் குசேலன் சரித்திரம் தமிழில் இல்லையென்பதும் வடமொழி முதலியவற்றிலிருந்ததென்பதும் பெறப்பட்டன. கார் - அழகுமாம். உள்ளம் இன்புகொண்டிட என்பதற்கு மனத்தில் மகிழ்ச்சிகொண்டிட என்றுரைப்பினுமாம். கவிச்சக்ரவர்த்தி - கவிராஜர்களுக்குச் சக்ரவர்த்தி. அரசருள்ளே சக்ரவர்த்தி சிறந்தோனாதல்போலக் கவிராஜர்களுள்ளே இவன் சிறந்தோன் என்றபடி. (உக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தாமநறு முளரிதுயல் வருதடந்தோ ளெழில்வீராச் சாமி யீன்ற, காமருசீர்த் தேவராசப்பெரியோன் பலகலைதேர் கவிஞ ருள்ள, மேமமுறக் குசேலசரி தம்பகரு நற்றிறனை யெண்ணி யன்றே, வாமனன்பின் னோள்கருபத் தாவுடன் புரிந்தான் வைய யத் நீரே.

(ப - ரை.) நறு - மணம்பொருந்திய, முளரி தாமம் - தாமரைமலர் மாலையானது, துயல்வரு - அசையாநின்ற, தடம் தோள் - பெரிய தோள்களையும், எழில் - அழகையுமுடைய, வீராச்சாமி ஈன்ற - வீராச்சாமி பெற்ற, காமர் சீர் - அழகும் சிறப்புமவாய்ந்த, தேவராசப்பெரியோன் - தேவராஜனென்னும் மேலோன், பலகலைதேர் கவிஞர் உள்ளம் - பலநூல்களையுமாராய்ந்து தெரிந்த கவிஞர் மனம், ஏமம் உற - களிப்புமிகும்படி, குசேல சரிதம் - குசேல சரித்திரத்தை, பகரும் - சொல்லப்புகுகின்ற, நல் திறன் - நல்ல திறத்தை,

முன் எண்ணி அன்றே - முன்னமே ஆலோசித்தறிந்தல்லவா, வாமநன் - வாமநமூர்த்தியானவன், திண் தோள் ககுபம் தாவ - (தன்) திண்ணிய தோள்கள் திசைகளில் வியாபிக்கும்படி, உடல் பூரித்தான் - உடம்பு பூரித்தான், வையத்தீரே - உலகத்தாரே. எ - று.

(பொ - ரை.) மணம்பொருந்திய தாமரைமலர் மாலையானது அசையாநின்ற பெரியதோள்களையும் அழகையுமுடைய வீராச்சாமிபெற்ற, அழகும் சிறப்பும்வாய்ந்த தேவராஜனென்னும் மேலோன், பலநூல்களையு மாராய்ந்து தெளிந்த கவிஞர்மனம் களிப்புமிகும்படி குசேலசரித்திரத்தைச் சொல்லப் புகுகின்ற நல்லதிறத்தை முன்னமே ஆலோசித்தறிந்தல்லவா, வாமநமூர்த்தியானவன் தன் திண்ணிய தோள்கள் திசைகளில் வியாபிக்கும்படி உடம்பு பூரித்தான், உலகத்தோரே. எ - று.

(வி - ரை.) துயல்வரல் - அசைதல், இதுஒருசொல். தட்டம் - மலையெனினுமாம். தோளெழில் - தோளழகு என்றலுமொன்று. காமருஎன்பதில் உகரம்சாரியை. திறம் - திறன்எனப்போலியாயிற்று, திறன்சாமர்த்தியம் எனினுமாம். ககுபம் - திசை. பூரித்தல் - பருத்தல். வாமநன் - மகாபலியைச் சங்கரிக்கும்பொருட்டு அதிதிகர்ப்பத்திலவதரித்த விஷ்ணுமூர்த்தி. காசிபர் தமக்கு விஷ்ணுவானவர் புத்திரராயவதரிக்கவேண்டுமென்றெண்ணித் தவஞ்செய்ய அவதரித்தவர். மூன்றுலகங்களினும் வியாபித்தமையால் இவர்க்குத் திரிவிக்கிரமனென்றும், இந்திரனுக்குத் திருத்தம்பியாதலால் உபேந்திரனென்றும் பெயரிட்டு வழங்குவர் வடநூலார். இந்த வாமநாவதாரம் திருமாலவதாரம் பத்தில் ஐந்தாவதவதாரம். (உஉ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருமறை நான்கு மன்புட னேத்த வரவணை தனில்விழி வளர்வோன், றிருவருள் பெற்ற குசேலமா முனிதன் சீர்வளர் சரிதநன் குரைத்தான், பெருவள மோங்குந் தொண்டைநன் னாட்டிற் பிறங்கும்வல் லூரினில் வாழ்வோன், மருவளர் மாலைத் தேவராசேந்திரன் வயங்குபல் கலையுணர்ந் தவனே.

(ப - ரை.) பெருவளம்ஓங்கும் - பெருவளங்கள் பெருகுகின்ற, நல் - நல்ல, தொண்டைநாட்டில் - தொண்டைநாட்டின்கண், பிறங்கும் - விளங்குகின்ற, வல்லூரினில்வாழ்வோன் - வல்லூரில்வாழ்பவனும், வயங்கு பல்கலை உணர்ந்தவன் - விளங்குகின்ற பலகலைகளையு முணர்ந்தவனுமாகிய, மருவளர்மாலை - மணம்வளர்கின்ற மலர்மாலையைத்தரித்த, தேவராசேந்திரன் - தேவராஜேந்திரனானவன், அருமறைநான்கும் - அருமையாகிய வேதங்கள் நான்கும், அன்புடன் ஏத்த - அன்போடுதுதிக்க, அரவணை தன்னில் - சர்ப்பசயநத்தில், விழிவளர்வோன் - கண்வளர்வோனாகிய திருமாலின், திருவருள் பெற்ற - திருவருளடைந்த, குசேலமாமுனிதன் - குசேலனென்னும் பெரிய முனிவ

னது, சீர்வளர்சரிதம் - சிறப்புவளர்கின்ற சரித்திரத்தை, நன்குரைத்தான் - நன்றாகப்பாடினன். எ - று.

(பொ - ரை.) பெருவளங்கள் பெருகுகின்ற நல்லதொண்டை நாட்டின்கண் விளங்குகின்ற வல்லூரில் வாழ்பவனும், விளங்குகின்ற பலகலைகளையு முணர்ந்தவனுமாகிய, மணம்வளர்கின்ற மலர்மாலையைத்தரித்த தேவராஜேந்திரனைவன், அருமையாகிய வேதங்கள் நான்கும் அன்போடு துதிக்கச் சர்ப்பசயனத்தில் கண்வளர்வோனாகிய திருமாலின் திருவருளடைந்த குசேலர் என்னும் பெரிய முனிவனது சிறப்புவளர்கின்ற சரித்திரத்தை நன்றாகப்பாடினன். எ - று.

(வி - ரை,) சதுர்விதபுருஷார்த்தங்களையுந் தருதலாலும், நித்தியார்த்தோஷங்களாயிருத்தலாலும், அபௌருஷேயங்களாகையாலும், வேதங்களை 'அருமறை' என்றார். அராவென்றுங் குறியதன் கீழாக்குறில் அரவணைன்றாது. விழிவளர்தல் - கண்ணுறங்கல், இது மங்கலவழக்கு, [illegible] சார் [illegible]கள், வளம் - செல்வம், அன்றி நீர்வளம் நிலவளமு[illegible]மையும். மருவளர் என்ற அடையால், மாலை மலர்மாலையென்பது பெ[illegible]து. இலக்கிய விலக்கண லௌகிக வைதிகநூல்கள் யாவுமடங்கப் 'பல்கலை' என்றார். (உக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பார்புகழுங் குசேலமுனி சரிதமதைத் தமிழ்ப்பாவிற் பகர்ந்
தான் றூய, நீர்தவழு நெடுஞ்சடிலச் சிவபிரான் பதயுகள நிலவு
நெஞ்சன், கார்பொலியுஞ் சோலைபுடை யுடுத்தொளிர்வல் லூராளி
கவிஞர் போற்றுஞ், சீர்திகழுங் கருணிகர் குலத்துதித்த தேவரா
சேந்திரன் மன்னே.

(ப - ரை.) தூய - பரிசுத்தமாகிய, நீர் - கங்கைநீரானது, தவழும் - தவழப்பெற்ற, நெடுசடிலம் - நெடியசடாபாரத்தையுடைய, சிவபிரான் - சிவபெருமானது, பதயுகளம் - திருவடியிணை, நிலவும்நெஞ்சன் - நிலைபெற்ற நெஞ்சினையுடையவன், கார்பொலியுஞ்சோலை - மேகங்கள் மிகவுந்தங்குதற் கிடமாகிய சோலைகளை, புடை - தன்பக்கங்களில், உடுத்து - சூழப்பெற்று, ஒளிர் - விளங்குகின்ற, வல்லூராளி - வல்லூராளி, கவிஞர்போற்றும் - கவிஞர்கொண்டாடுகின்ற, சீர்திகழும் - மேன்மையோடு விளங்குகின்ற, கருணீசர்குலத்து உதித்த - கருணீகர்குலத்திற் றோன்றிய, தேவராசேந்திரன் - தேவராஜேந்திரன், (அவன்) பார்புகழும் - உலகத்தாரால் புகழப்படுகிற, குசேலமுனி சரிதமதை - குசேலமுனிவனது சரித்திரத்தை, தமிழ்ப்பாவிற் பகர்ந்தான் - தமிழ்ப்பாடலாகப்பாடினான். எ - று.

மன் ஏ இரண்டும் அசைகள்.

(பொ - ரை.) பரிசுத்தமான கங்கைநீரானது தவழ்ப்பெற்ற நெடிய சடாபாரத்தையுடைய சிவபெருமானது திருவடியிணை நிலைபெற்ற நெஞ்சினையுடையவன், மேகங்கள் மிகவும் தவழ்தற்கிடமாகிய சோலைகளைத் தன் பக்கங்களில் சூழப்பெற்று விளங்குகின்ற வல்லூராளி, கவிஞர்கொண்டாடுகின்ற மேன்மையோடு விளங்குகின்ற கருணீகர்குலத்தில் தோன்றிய தேவராஜேந்திரன், (அவன்) உலகத்தாரால் புகழப்படுகிற குசேலமுனிவனது சரித்திரத்தைத் தமிழ்ப்பாடலாகப்பாடினான். எ - று.

(வி - ரை.) பார் என்பதை யெழுவாயாக்கினுமமையும், பார் - பண்பாகுபெயர், பகுதிபருமை. நெடுஞ்சடிலச்சிவபிரான் எனமேல் வருதலால் தூயநீரென்றது கங்கைநீருக்காயிற்று. யுகளம் - இரண்டு. நிலவுதல் - விளங்குதல் எனினுமாம். வல்லூராளி - வல்லூராளாயாள்பவன். கவிஞர் என்பதில் ஞகாரம் பெயரிடைநிலை. (உச)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சந்தத முற்ற விருந்தினை யோம்புந் தக்கவேங் கடகிருட் டினப்பேர்க், கந்தவேள் பின்வந் துதித்தவன் றிருவூர்க் காவலன் முட்பொதி பசுந்தாட், கந்தநற் கமல மாலைசூழ் தோளான் கலையுணர் சீநிவா சப்பே, ரிந்திரன் வேண்ட வெழிற்றிரு மார்பனிணையடிப் பூசனை யியற்றி.

(ப - ரை.) சந்ததம் - எப்பொழுதும், உற்ற - தன்னைவந்தடைந்த, விருந்தினை - விருந்தினரை, ஓம்பும் - உபசரிக்கிற, தக்க - தகுதியையுடைய, வேங்கடகிருட்டினப்பேர் - வேங்கடகிருஷ்ணன் என்னும் பெயரையுடைய, கந்தவேள்பின்வந்து உதித்தவன் - கந்தவேளுக்குப்பின்னேவந்து தோன்றினவனும், திருவூர்காவலன் - திருவூருக்கதிபதியும், முள்பொதி பசுந்தாள்-முட்கள்பொருந்தியபசியதாளையுடைய, கந்தம்-நறுமணமுள்ள, நல்-அழகாகிய, கமலமாலைசூழ்தோளான்-தாமரைமலர்மாலையணிந்த தோள்களையுடையவனும், கலை - எல்லாக்கலைகளையும், உணர் - அறிந்த, சீனிவாசப்பேர் - ஸ்ரீநிவாசன் என்னும் பெயரினையும் உடைய, இந்திரன் வேண்ட-இந்திரன் பிரார்த்திக்க, எழில் - அழகில்மிக்க, திரு - திருமகளமர்ந்திருக்கின்ற, மார்பன் - திருமார்பையுடையவனாகிய திருமாலின், பூசனை இயற்றி - பூஜையைச்செய்து. எ - று.

(பொ - ரை.) எப்பொழுதும் தன்னை வந்தடைந்த விருந்தினரை உபசரிக்கிற தகுதியையுடையவேங்கடகிருஷ்ணன் என்னும்பெயரையுடைய கந்தவேளுக்குப்பின்னேவந்து தோன்றினவனும், திருவூருக்கதிபதியும், முட்கள்பொருந்திய பசியதாளையுடைய நறுமணமுள்ள அழகாகிய தாமரைமலர்மாலையணிந்த தோள்களையுடையவனும், எல்லாக்கலைகளையு மறிந்த சீனிவாசன் என்னும் பெயரினையுமுடைய இந்திரன் பிரார்த்திக்க, அழகில்மிக்க திருமகளமர்ந்திருக்கின்ற திருமார்பையுடையவனாகிய திருமாலின்பூஜையைச் செய்து. எ - று.

(வி - ரை.) சந்ததம் - எக்காலமும். விருந்து - பண்பாகுபெயர். இது இருவகைவிருந்தினரையுங் குறிக்கும். இருவகை விருந்தினராவார், பண்டறிவுண்மையிற் குறித்துவந்தாரும் அஃதின்மையிற் குறியாதுவந்தாரும். ஓம்புதல் - உபசரித்தல், இது விருந்தினரைக் கண்டபொழுது கண்டவழி இன்முகங்காட்டலும், அதுகண்டுணர்ந்தவழி இன்சொற்சொல்லலும், அதன்மேல் நல்கூர்ந்தநல்கல், ஆசனமளித்தல், குசலப்பிரச்நம் செய்தல், உணவளித்தல் முதலியவும் தன்னுள்ளடக்கநிற்பதோர் வடசொல். ஆழ்தல் - அமிழ்தல்.

இல்லறத் திருந்தும் புளிம்பழ மெய்ப்ப விணைத்தவுட் டுறவடை குசேல, னல்லினிய சரித நாவல ருள்ள நனிமகிழ்ந் திடத்தமிழ்ப் பாவாற், பல்லவச் சோலை சூழ்வல்லூ ராளி பகரருந் தேவரா சப்பேர், வல்லவன் புரிந்த திறத்தையிற் றென்ன வகுப்பவ ருலகினி லெவரே.

(ப - ரை.) இல்அறத்து இருந்தும் - இல்லறத்திலிருந்தும், புளிம்பழம் எய்ப்ப - புளியம்பழத்தைநிகர்க்க, இணைத்த - பொருந்திய, உள்துறவு அடை - அகத்துறவடைந்த, குசேலன், - குசேலமுனிவனது, நல் இனிய சரிதம் - நன்மையாகிய இனிமையைத்தருகிற சரித்திரத்தை, நாவலர் உள்ளம் - வித்துவான்களுடைய மனமானது, நனிமகிழ்ந்திட - மிகவும் மகிழும்படி, தமிழ்ப் பாவால் - தமிழ்ப்பாடலால், பல்லவம் - தளிர்களோடுகூடிய, சோலைசூழ் - சோலைகள்சூழ்ந்த, வல்லூராளி - வல்லூராளியாகிய, பகர் அரு - சொல்லுதற்கரிய, தேவராசப்பேர் - தேவராஜனென்னும் பெயரையுடைய, வல்லவன் - நிபுணன், புரிந்ததிறத்தை - செய்தவிதத்தை, இற்றென வகுப்பவர் - இத்தன்மைத்தென்று வகுத்துச்சொல்லவல்லவர், உலகினில் - இவ்வுலகத்தில், எவர் - யாவர். எ - று.

(பொ - ரை.) இல்லறத்திலிருந்தும் புளியம்பழத்தை நிகர்க்கப் பொருந்திய அகத்துறவடைந்த குசேலமுனிவனது நன்மையாகிய இனிமையைத்தருகிற சரித்திரத்தை, வித்துவான்களுடைய மனமானது மிகவுமகிழும்படி தமிழ்ப்பாடலால், தளிர்களோடுகூடிய சோலைகள் சூழ்ந்த வல்லூராளியாகிய, சொல்லுதற்கரிய தேவராஜனென்னும் பெயரையுடைய நிபுணன் செய்த விதத்தை இத்தன்மைத்தென்று வகுத்துச்சொல்லவல்லவர் இவ்வுலகத்தில்யாவர். எ - று.

(வி - ரை.) இல்லறம் - கற்புடைமனைவியோடு கூடியிருந்துசெய்யும் மனையறம், இல்லறத்திருந்தும் உட்துறவடைந்த ஞானியர் பிரபஞ்சப் பற்றற்று நிற்பராதலால், 'புளிம்பழமெய்ப்பவிணைத்தவுட்டுறவடைகுசேலன்' என்றார். மகிழ்தர - ஒருசொல், மகிழவென்றபடி. எவரென்னும் வினா ஒருவருமில்லையெனப்பொருடரலால் எதிர்மறைப்பொருளில் வந்தது. ஏகாரம் ஈற்றசை. (௨௧)

பாயிர முற்றிற்று.

குசேலமுனிவர் திருவடிகளே சரணம்.

No. 2.





சுகமுநிவர் பரீக்ஷித்துமன்னனுக்குக் குசேலசரித்திரஞ் சொல்லுதல்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

முதலாவது

# குசேலர் மேல்கடலடைந்த

# அத்தியாயம்.

அத்தியாயம் - நூனுறுப்பு.

சுகமுனிவர் பரீக்ஷித்துவுக்குக் குசேலசரித்திரத்தைக் கூறத்தொடங்கினரென்பது இச்செய்யுளாற் கூறப்படுகின்றது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உலகெலாம் புகழ நாளுமுயர் மதி குலத்திற் றோன்றி
யலகில் பல்லுயிரு மின்ப மடைய வொண்குடை நிழற்றி
யிலகுசெங் கோல்கைக் கொண்ட வெழிற் பரிட்சித்து வேந்தே
நலமுறிக் கதைகே ளென்றுநற் றவச்சுகன் சொல்வா னால்.

(ப - ரை.) நாளும் - நாள்தோறும், உலகு எல்லாம்புகழ - உலகத்தார் எல்லாரும்புகழும்படி, உயர்மதிகுலத்தில்தோன்றி - உயர்ந்தசந்திரகுலத்தில் அவதரித்து, அலகு இல்பல் உயிரும் - அளவில்லாத பலவுயிர்களும், இன்பம் அடைய - சுகமடையும்படி, ஒள்குடைநிழற்றி - ஒட்பமாகியமுத்துக் குடையினல் நிழலைச்செய்து, இலகுசெங்கோல் கைக்கொண்ட - விளங்குகின்ற செங்கோலைக் கையிலேந்திய, எழில் - அழகுள்ள, பரிட்சித்துவேந்தே - பரிக்ஷித்து என்னும் இயற்பெயருள்ள அரசனே, நலம்உறு - நன்மைமிகுந்த, இக்கதைகேள் என்று - இந்தக்கதையைக் கேட்கக்கடவையென்று, நல்தவம் - நல்லதவத்தையுடைய, சுகன்சொல்வான் - சுகமுனிவன் சொல்வானாயினன். எ - று. ஆல் - அசை.

(பொ - ரை.) நாள்தோறும் உலகத்தார் எல்லாரும் புகழும்படி உயர்ந்த சந்திரகுலத்தில் அவதரித்து, அளவில்லாத பலவுயிர்களும் சுகமடையும்படி ஒட்பமாகிய முத்துக்குடையினல் நிழலைச்செய்து விளங்குகின்ற செங்கோலைக்கையிலேந்திய அழகுள்ள பரிக்ஷித்து என்னும் இயற்பெயருள்ள அரசனே, நன்மைமிகுந்த இந்தக்கதையைக் கேட்கக்கடவையென்று நல்ல தவத்தையுடைய சுகமுனிவன் சொல்வானாயினன். எ - று.

(வி - ரை.) உலகு - மங்கலச்சொல். புகழ என்ற குறிப்பால் உலகு இடவாகுபெயராய் உலகிலுள்ளாரையுணர்த்திற்று. உலகு - பெரியோர் எனினுமாம். மதியென்பது - மது இ எனப்பிரிக்கப்பட்டு மதுவையுடையது எனப்பொருள்தருகின்றது. மது - தேன், அது இவ்விடத்துக்கேற்ப அமிழ் தென்னும் பொருள்குறித்தது. நிழற்றியென்றதனால் முத்துக்குடையெனப் பொருள்கூறலாயிற்று. பொற்குடை மணிக்குடை முத்துக்குடை என்னும் முக்குடைகளுட் சிறந்ததுமுத்துக்குடை யாதலானும், மதியின்றன்மை அவன் குலத்தரசர்க்கும் அவர் பரிகரங்களுக்கும் உரியதாதலானும் இங்குடை முத்துக்குடையையே குறித்தது. நற்றவம் - நன்மையைத்தருகின்ற தவம். செவ்வியகோல்போறலாற் செங்கோல் எனப்பட்டது. (௧)

இச்செய்யுளால் பூதேவிக்குத் திருமுகம்போல் விளங்குகின்ற உத்தர மதுரையென்றொரு நகருண்டென்பது கூறப்படுகின்றது.

குத்தரங் குடிகொண் டாங்குக் கொழும்பொன்மா ளிகைக ளோங்கிச்
சுத்தர்கள் அளவி லார்க டொகுப்புற வின்ப நல்கி [illegible]
பத்தரங் கஞ்சூழ் பூமிக் கெழின்முக மாகி யென்று
முத்தர மதுரை யென்னு மொருநகர் விளங்கா நிற்கும்.

(ப - ரை.) உத்தரமதுரை என்னும் ஒருநகர்-வடமதுரையென்று சொல்லப்படுகிற ஒருநகரமானது, குத்தரம் குடிகொண்டாங்கு - மலைகள் குடிகொண்டிருந்தாற்போல, கொழும்பொன் மாளிகைகள் ஓங்கி - செழுமையாகிய பொன்னினாற்செய்யப்பட்ட மாளிகைகள் உயர்ந்து, ஆங்கு அளவிலார்கள் சுத்தர் தொகுப்புஉற - அவ்விடத்து அளவில்லாதவர்களாகிய பரிசுத்தாத்மாக்கள் வந்துசேர, இன்பநல்கி - சுகத்தைக்கொடுத்து, [illegible]சூழ் - கடலாகிய ஆடையையுடுத்த, இ - இந்த, பூமிக்கு - பூமிதேவிக்கு, எழில் முகம்ஆகி - அழகியமுகமாகி, என்றும் - எப்பொழுதும், விளங்காநிற்கும்- பிரகாசியாநிற்கும் எ - று.

(பொ - ரை.) வடமதுரையென்று சொல்லப்படுகிறஒருநகரமானது மலைகள்குடிகொண்டிருந்தாற்போலச் செழுமையாகியபொன்னினாற்செய்யப் பட்ட மாளிகைகள் உயர்ந்து, அவ்விடத்து அளவில்லாதவர்களாகிய பரிசுத் தாத்மாக்கள் வந்துசேரச் சுகத்தைக்கொடுத்து, கடலாகிய ஆடையையுடுத்த பூமிதேவிக்கு அழகிய முகமாகிப் பிரகாசியாநிற்கும். எ - று.

(வி - ரை.) குத்தரம்-குதரம் என்னும் வடமொழிச்சிதைவு. கொண் டாங்கு என்பதை, கொண்டால்ஆங்கு, கொண்டது ஆங்கு என்றிருவகை யாய்ப் பிரிக்கலாம். முன்னதில் [illegible] எதிர்காலவினையெச்சம், பின்ன தில் தொழிற்பெயர். ஆங்கு உவமவுருபிடைச்சொல். கொழுமை - பசுமை யென்பதன்பரியாய மொழி, இது பொன்னுக்கு விசேடணம். சுத்தர்-சுத்தம் என்னும் பண்படியாகப் பிறந்த [illegible] என்னும் உபசர்க்கை

பெற்றுப் பரிசுத்தர் எனவும்வரும். அனைவிலார்கள் ஒருசொல். இது எதிர்மறைக்குறிப்பு வினையாலணையும் பெயர். சரங்கம் - அலை, இது கடலுக்கானமையால் சினையாகுபெயர். என்றும் என்பதில் எகரவினா முற்றுமையையடுத்து வந்தமையால் எஞ்சாமைப்பொருளது. உத்தரமதுரை - வடமதுரை. இது சப்தபுரிகளுள் ஒன்று. உத்தரம - வடக்கு, உத்தரம் என்பது மதுரைக்குப் பிறிதினியைபு நீக்கியவிசேடணம். விளங்காநிற்கும்-நிகழ்காலச் செய்யுமென்வாய்பாட்டு வினைமுற்று, விளங்குபகுதி, ஆநில் - நிகழ்கால இடைநிலை, கு - சாரியை, உகரங்கெட்டதும் லகரம் றகரமாய்த் திரிந்ததும் சந்தி, உம் - விகுதி. (உ)

மேற்சொல்லிய வடமதுரையின் பக்கத்தில் அவந்திமாநகரமென்றொரு நகரமுண்டென்பது இச்செய்யுளாற் கூறப்படுகின்றது.

அந்நெடு நகரின் பாங்க ரந்நலா ரூடி நீத்த
தந்நெடு மணிக்க லங்க டடமறு குற்று முற்றத்
துன்னிய விருளை யோபத் துறக்கமென் றமரர் நாளு
மன்னிய விமைக்குஞ் சீர்த்தி மாநக ரவந்தி யுண்டால்.

(ப - ரை.) அ - அந்த, நெடுநகரின்பாங்கர் - பெரியபட்டணத்தின் பக்கத்தில், அந்நலார் - மாதர்கள், ஊடி - (தம் கொழுநரோடு) பிணங்கி, நீத்த - களைந்தெறிந்த, தம் - தமது, நெடுமணிகலங்கள் - பெரியரத்தினாபரணங்கள், தடமறுகுஉற்று - விசாலமான தெருக்களில் நிறைந்து, முற்ற - (அந்நகர்) முழுதும், துன்னிய - அடர்ந்த, இருளோப - அந்தகாரத்தை நீக்குதலால், அமரர் - தேவர்கள், நாளும் - எக்காலும், துறக்கம்என்று - சுவர்க்கலோகமென்றெண்ணி, மன்னிய - நிலைபெற்றுவாழும்படி, இமைக்கும் சீர்த்தி - விளங்குகின்ற கீர்த்தியையுடைய, அவந்திமாநகர்உண்டு - அவந்திமாநகரமென்றொரு நகரமுண்டு. ஏ - அ. ஆல் - அசை.

(பொ - ரை.) அந்தப் பெரியபட்டணத்தின் பக்கத்தில் மாதர்கள் தம் கொழுநரோடு பிணங்கிக் களைந்தெறிந்த தமது பெரியரத்தினாபரணங்கள் விசாலமான தெருக்களில் நிறைந்து (அந்நகர்) முழுதும் அடர்ந்த அந்தகாரத்தை நீக்குதலால் தேவர்கள் எக்காலும் சுவர்க்கலோகமென்றெண்ணி நிலைபெற்றுவாழும்படி விளங்குகின்ற கீர்த்தியையுடைய அவந்திமாநகரமென்றொரு நகரமுண்டு. எ - று.

(வி - ரை.) அந்நெடுநகரின் பாங்கர் துறக்கமென்றமரர்நாளும் மன்னிய இமைக்குஞ் சீர்த்திமாநகரவந்தியுண்டு எனவியையும். அந்நெடுநகர் என்றது அந்த உத்தர மதுரா வென்னும் நகரை. அந்நலாரென்பதனை - அம்நல்லார் எனப்பிரித்து அழகியமாதரென்றுரைப்பினுமாம். ஊடிநீத்தல் - கல்விக் காலத்து ஏதேனுமோர் குற்றத்தை வியாஜமாக்கிக்கொண்டு தம் கணவ

ரோடு பிணங்கிக்களைந்தெறிதல். மெய்தல் - உண்ணல், அது இவ்விடத்து ஒழித்தற்பொருளது. அமரர் - இறவாதவர், கற்பமுடிவிலிறக்குந் தன்மையுள்ள தேவரை அமரரென்றது மங்கலம். மன்னிய - செய்யிய வென்னும் வாய்பாட்டுவினையெச்சம். மாநகர் அவந்தி - பெரிய நகரமாகிய அவந்தியெனினுமாம். அவந்தி - சப்தபுரிகளுள் ஒன்று. (௩)

அந்த அவந்தியென்னும் நகரத்தின் சிறப்பைச் சொல்வேன்கேள் என்பது இச்செய்யுளால் கூறப்படுகின்றது.

செந்தமிழ் பழுத்த நாவிற் றீஞ்சுவைப் புலவ ராலு
மந்தமில் சேட னாலு மறைதர முடியாச் சீர்ச்
சுந்தர நகர் வளப்பஞ் சொலவெனக் கடங்கா தேனுஞ்
சிந்தையிற் களிப்புத் தூண்டச் சிறிதணிந் துரைப்பல் கேண்மோ.

(ப - ரை.) செந்தமிழ்பழுத்த - செந்தமிழ்ப்பாடல்கள்கனிந்த, நாவின்- நாவின்கண், தீசுவை - இனியசுவையமையப்பெற்ற, புலவராலும் - வித்வான்களாலும், அந்தம் இல்சேடனாலும் - முடிவில்லாத ஆதிசேஷனாலும், அறைதரமுடியா - சொல்லமுடியாத, சீர் - சிறப்பமைந்த, அ - அந்த, சுந்தரம் - அழகாகிய, நகர் - நகரத்தின், வளப்பம் - வளமைகள், சொல - சொல்லுதற்கு, எனக்கு அடங்காதேனும் - எனக்கு அடங்காதன ஆயினும், சிந்தையில் களிப்புதூண்ட - என்மனத்திலுள்ள மகிழ்ச்சியானது தூண்டுதலால், சிறிது அணிந்து உரைப்பல் - சிறிது அலங்கரித்துச் சொல்லாநின்றேன், கேள் - நீ கேட்பாயாக எ - று.

(பொ - ரை.) செந்தமிழ்ப்பாடல்கள் கனிந்த நாவின்கண் இனிய சுவையமையப்பெற்ற வித்வான்களாலும், முடிவில்லாத ஆதிசேஷனாலும், சொல்லமுடியாத சிறப்பமைந்த அந்த அழகாகிய நகரத்தின் வளமைகள் சொல்லுதற்கு எனக்கு அடங்காதன ஆயினும் என் மனத்திலுள்ள மகிழ்ச்சியானது தூண்டுதலால் சிறிது அலங்கரித்துச் சொல்லாநின்றேன் நீ கேட்பாயாக. எ - று.

(வி - ரை) செந்தமிழ் - செவ்வியதமிழ். இது வையையாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின்மேற்கும் ஆகிய இந்நிலங்களில் வழங்குவது. செந்தமிழ் நிலத்தைச்சேர்ந்ததென்பாண்டி, குட்டம், குடம், கற்கா முதலிய பன்னிரண்டு நிலங்களிலும் வழங்குகின்ற கொடுந்தமிழை நீக்குதற்குச் 'செந்தமிழ்' என்றார். தமிழ் - இனிமை. (கற்போருக்கு இனிமையைத்தருவது) செந்தமிழ்பழுத்தநா - செந்தமிழ்மொழிகளைப்பலகால் பயின்று முதிர்ந்த நாவென்றும் பலபொருளொரு சொல்லுக்கு இனிமை, தீமை முதலிய பொருள்களுளவாயினும் இங்கு இனிமையாகிய சுவை யென்னும் பொருள் கொண்டது. தீச்சுவைபெற்றவரின் தீஞ்சுவை மென்பதிற்போலக் கொ [illegible] பொருள் [illegible] என்னும்

பண்படியாகப் பிறந்த பலர்பாற்படர்க்கைப்பெயர். புலவர் - அறிவுடையார். புலம் - அறிவு. அறைதர என்னும் செயவெனச்சத்திற்குப்பகுதி அறைதா. முடியா ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். என் எனின் என்னும் எதிர் காலவினையெச்சத்தின் மரூஉ. உம்மைகள் உயர்வு சிறப்பு. கேண்மோ என் னும் ஏவலொருமை வினைமுற்றில் மோ முன்னிலை யொருமை யசை யிடைச்சொல். (௪)

இதுவும் மேல்வருஞ்செய்யுளும் வயல்வளங்கூறுகின்றன.

துறைதுறை தோறுஞ் சங்கஞ் சூன்முதிர்ந் தியிர்த்த முத்த
மறைபுனல் வாரி யெக்க ராக்கிட வரப்பி லேற்றித்
தறைசமஞ் செய்து வித்தித் தண்புனன் மள்ளர் பாய்ச்சக்
கறையடி மாய்க்குஞ் செந்நெற் கதிர்க்குலைச் செறுக்கள் சூழும்.

(ப - ரை.) துறைதுறைதோறும் - துறைகள் தோறும் துறைகள்தோ றும், சங்கம் - சங்குகள், சூல்முதிர்ந்து - கருப்பம்முதிர்ந்து, உயிர்த்த - ஈன்ற, முத்தம் - முத்துக்களை, அறை - ஒலிக்கின்ற, புனல் - நீரில்நின்றும். வாரி-வா ரி, எக்கர் ஆக்கிட - மேடாக்கும்படி, வரப்பில் ஏற்றி - வரம்புகளில்ஏற்றி, தறை-நிலத்தை, சமம்செய்து - சமப்படுத்தி, வித்தி - விதைத்து, தண்புனல்- குளிர்ந்தநீரை, மள்ளர்பாய்ச்ச - உழவர் பாய்ச்சுதலால், கறையடிமாய்க்கும்- யானையை மறைக்கின்ற, செந்நெல்கதிர்க்குலை - செந்நெற்கதிர்க் குலையை யுடைய, செறுக்கள் சூழும் - வயல்கள் சூழாநிற்கும். எ - று.

(பொ - ரை.) துறைகள்தோறும் துறைகள்தோறும் சங்குகள் கரு ப்பம்முதிர்ந்து ஈன்ற முத்துக்களை ஒலிக்கின்ற நீரில் நின்றும் வாரி மேடாக் கும்படி வரம்பில் ஏற்றி, நிலத்தைச் சமப்படுத்தி, விதைத்து, குளிர்ந்தநீரை உழ வர்பாய்ச்சுதலால், யானையை மறைக்கின்ற செந்நெற்கதிர்க் குலையையுடைய வயல்கள் சூழாநிற்கும். எ - று.

(வி - ரை.) துறை - நீர்த்துறை. தோறும் - என்னுமிடைச்சொல் எஞ்சாமைப்பொருளது. சங்கம் - வடசொல். முக்தம் - என்னும்வடசொல் முத்தம் எனவந்தது. வரம்பு என்பது வரப்பு என வலித்தலாயிற்று. தரா என்னும் வடசொல் தரையென்றாகி எதுகைநோக்கித் தறையெனவந்தது. "அறையுமாடரங்கும் மடப்பிள்ளைகள் தறையிற்கீறிடிற்றச் சருங்காய்வரோ" என்றார் மஹாகவியாகிய கம்பநாட்டாழ்வாரும். கறையடிமாய்க்குஞ் செந்நெற் கதிர்க்குலைச்செறுக்கள்'என்றமையாற்செந்நெல்வயல்வளந்தோன்றுகின்றது. கறை - உரல், அடி - கால், உரல்போன்ற அடியையுடைத்தாதல் பற்றி யானைக்குக் கறையடியெனப்பெயர்வழங்கும். மாய்த்தல் இவ்விடத்துமறைத் தல் என்னும்பொருளது. குலை - கொத்து. (௫)

கலிநிலைத்துறை.

*வாவி மல்கிய வனசமா மலர்பொழி தேனுங்*
*காவின் மல்கிய கரிசறு மலர்கொழி மதுவும்*
*பூவின் மல்கிய நதியெனப் புரண்டுமா லென்னத்*
*தாவி வானளாஞ் சாற்றரு நெல்வயல் வளர்க்கும்.*

(ப - ரை.) வாவி - தடாகத்தில், மல்கிய - நிறைந்த, மா - பெருமையுள்ள, வனசமலர் - தாமரைமலர்கள், பொழிதேனும் - பொழிகின்றதேனும், காவின் - சோலையில், மல்கிய - நிறைவுற்ற, நதி எனப்புரண்டு - யாறுபோலப் புரண்டு, மால் என்னதாவி - திருமால்போலத்தாவி, வான் அளாம் - ஆகாயத்தை யளாவுகின்ற, சாற்று அரு - சொல்லுதற்கருமையாகிய, நெல்வயல் - நெல்வயல்களை, வளர்க்கும் - வளரச்செய்யும். எ - று.

(பொ-ரை.) தடாகத்தில் நிறைந்த பெருமையுள்ள தாமரைமலர்கள் பொழிகின்றதேனும், சோலையில் நிறைவுற்ற குற்றமற்ற மலர்கள் கொழிக்குந் தேனும்பூமியில் நிரம்பியாறுபோலப் புரண்டு, திருமால்போலத்தாவி ஆகாயத்தையளாவுகின்ற சொல்லுதற்கருமையாகிய நெல்வயல்களை வளரச்செய்யும். எ - று.

(வி - ரை.) வாபி - என்னும் வடசொல் வாவியெனவந்தது, இது தத்பவம். மல்கல் - நிறைதல். வனசம் - (வனம் சம்) நீரில் பிறப்பது. கா - சோலை. கொழித்தல் இங்கு பொழிதலென்னும் பொருளது. பூ - பூமி. என - உவமவுருபு. மால் எனத்தாவி யெனவானளாவுதலும் கண்டைக்கேற்ப வாமனனாய்வந்து பின்வளர்ந்தோங்கிய திரிவிக்கிரமன்போலத் தாவி எனப் பொருள்கொள்க. வாமனன் - மகாபலியை யடக்குதற்கு அதிதிகர்ப்பத்தில் அவதரித்த விஷ்ணு. இந்த விஷ்ணுதனக்குப் பிறக்கவேண்டுமென்று கசியப ப்ரஜாபதி அநேகமாயிரவருஷங்கள் தவஞ்செய்தனர், இவர் மூன்று லோகங் களையும் வியாபித்தமையால் திரிவிக்கிரமனென்றும்,இந்திரனுக்குத் தம்பியா னமையால் உபேந்திரன் என்றும் சொல்லப்படுவர், இது விஷ்ணுவின்தசாவ தாரங்களில் ஐந்தாவது அவதாரம். (௯)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

*செம்பொனால் வெண்பொ னால்விற் செறிபல வளிக ளாற்செய்*
*தம்பொன்மா நகரத்துள் ளால யைத்தகார்மீ வெண்டா ரற்று*
*னம்புகாம் புறத்தே நிற்ற னன்றெனக் கொண்டாற் போலும்*
*பம்புவார் கதலி கந்தி பைங்கழை பொலியுங் காட்சி.*

இது அந்நகரத்திலுள்ள வாழைமுதலிய மரங்களின் சிறப்புக்கூறுகின்றது.

(ப-ரை.) பம்பு - நெருங்கிய, வார் - நீண்ட, கதலி - வாழை, கந்தி - கமுகு, பைங்கழை - பசுமையாகிய கரும்பு, (இவைகள்) பொலியும் - விளங்கு

கின்ற, காட்சி - தோற்றமானது, செம்பொன்னால் - செம்பொன்னினாலும், வெண்பொன்னால் - வெள்ளியினாலும், விலைசெறி - ஒளிமிகுந்த, பல மணிகளால் - பலவகையாகிய ரத்நங்களாலும், செய்து - செய்து, அம் - அழகிய, பொன் - பொன்மயமாகிய, மா - பெரிய, நகரத்து உள்ளார் - நகரத்திலுள்ளவர்கள், அமைத்தனர் - (அலங்காரம்) அமைத்துக்கொண்டார்கள், அதனால்- அதனால், வேண்டார் - (நம்மை) விரும்பார்கள், நம்பும் - விரும்புகிற, நாம் - யாம், புறத்தேநிற்றல் - வெளியில் நிற்பது, நன்று - நன்மையாகும், என - என்று, கொண்டாற்போலும் - உட்கொண்டதை நிகர்க்கும். எ - று.

(பொ - ரை.) நெருங்கிய நீண்டவாழை, கமுகு, பசுமையாகிய கரும்பு, (இவைகள்) விளங்குகின்ற தோற்றமானது, செம்பொன்னினாலும், வெள்ளியினாலும் ஒளிமிகுந்த பலவகையாகிய ரத்நங்களாலும் செய்து அழகியபொன்மயமாகிய பெரியநகரத்திலுள்ளவர்கள் (அலங்காரம்) அமைத்துக்கொண்டார்கள். (அதனால்) நம்மைவிரும்பார்கள். விரும்புகிற யாம் வெளியில் நிற்பது நன்மையாகுமென்று உட்கொண்டதை நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) வாழைமுதலியவை புறத்துக் கட்டப்பட்டு நிற்குங் காட்சியானது, இந்நகரத்தார் பொன்மணி முதலியவற்றால் உள்ளிட மலங்கரித்துக் கொண்டார்கள் ; இனி நம்மை விரும்பாராதலால், யாம்புறத்து நிற்றலேயழகாமென்று நினைத்து நிற்றலை நிகர்க்கும் என்பது கருத்து. செம்பொனால் வெண்பொனால் மணிகளால் என்னும் மூன்றனுருபுகள் செய்து என்னும் வினைகொண்டன. செய்து - செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது. கதலியும் கந்தியும் கழையும் புறத்தே நிற்றலுக்கு ஓர் வகையாகஉவமைகூறினமையால் கொண்டாற்போலும் என்றார். பம்புவார் என்னும் வினைத்தொகை வினைச்சொற்கள் இரண்டடுக்கித் தனித்தனியே கதலி கந்தி கழை என்னும் செய்பவனாகிய பெயர்கொண்டன. காட்சி - தொழிற்பெயர். (எ)

நெய்க்கருங் கூந்தன் மின்னார் நீர்குடைந் தகற்று நான
மெய்க்கவின் மறைத்த சாந்தம் விண்ணுலா நதியு நாறச்
செய்க்கருங் குவளை மேய்ந்த திண்மருப் பெருமை பாய
வைக்கழுக் கடையே போன்மேல் வாளைபாய் வாவி மல்கும்.

(ப-ரை.) நெய் - நெய்பூசப்பெற்ற, கருகூந்தல்-கரியகூந்தலையுடைய, மின்னார்-மாதர்கள், நீர்குடைந்து-நீரில்மூழ்கி, அகற்றும்நானம்-நீக்குகின்ற கஸ்தூரியும், மெய்கவின்மறைத்த சாந்தம் - உடலழகை மறைத்த சந்தனமும், விண்உலாம்நதியும் நாற - சுவர்க்கலோகத்திலுள்ள ஆகாயகங்கையிலும் பரிமளிக்கும்படி, செய் - வயலிலுள்ள, கருகுவளைமேய்ந்த - கருங்குவளைமலர்களைமேய்ந்த, திண்மருப்பு எருமை பாய - உறுதியாகிய கொம்புகளையுடைய எருமைகள்பாய்தலால், வை - கூர்மையாகிய, கழுக்கடையேபோல் - கழுப்போல, வாளை - வாளைமீன்கள், மேல்பாய் - மேலேபாய்தற்கிடமாகிய, வாவி - தடாகங்கள், மல்கும் - நிறைந்திருக்கும். எ - று.

(பொ - ரை.) செய்பூசப்பெற்ற சரிய கூந்தலையுடைய மாதர்கள் நீரில் மூழ்கி நீக்குகின்ற கஸ்தூரியும் உடம்பழகை மறைத்த சந்தனமும் சுவர்க்க லோகத்திலுள்ள ஆகாயகங்கையினும் பரிமளிக்கும்படி வெளிறுள்ள கருங் குவளை மலர்களை மேய்ந்த உறுதியாகிய கொம்புகளையுடைய எருமைகள்பாய் தலால், கூர்மையாகிய ஈட்டிபோல வாளைமீன்கள் மேலே பாய்தற்கிட மாகிய தடாகங்கள் நிறைந்திருக்கும். எ - று.

(வி - ரை.) மின்னார் - மின்கொடிபோல்வார். இது மாதர்க்கு உவமை யாகுபெயர். அகற்றல் - கழுவிவிடல். விண்ணுலாநதி என்றமையால் ஆகா யகங்கையெனப் பொருள்கூறப்பட்டது. கருங்குவளை - நீலோற்பலம். கழுக் கடை-சூலம் என்றும் பொருள் படுமாயினும், வாளைக்குவமையாகப் புணர்க் கப்பட்டமையால் ஈட்டியென்றலே பொருந்துமுடைத்து. கழுக்கடை-வாள் எனினுமாம். (அ)

கலிநிலைத்துறை.

புள்ள வாமலர்க் கணையினா னன்ன பொருநரு
மெள்ள ரும்புக ழிரதியை யெய்க்கு மாதர்களு
முள்ள மிக்குவந் துடங்குகை கோத்தனர் சென்று
வெள்ள நீர்துளைந் தாடுறா வெழில்வள மேவும்.

(ப - ரை.) புள் அவாம் - வண்டுகள் விரும்புகின்ற, மலர்க்கணையினான் அன்ன - புஷ்பபாணத்தையுடைய மன்மதனை நிகர்த்த, பொருநரும் - அழகுள்ள ஆடவரும், எள் அருபுகழ் - பழிப்பில்லாத புகழ்பெற்ற, இரதியை எய்க்கும் - ரதிதேவியை நிகர்த்த, மாதர்களும் - பெண்களும், உள்ளம் மிக்கு உவந்து - மனம் மிகவுங்களித்து, உடங்கு கைகோத்தனர் சென்று - அசை யாநின்ற கைகளைக்கோத்துச்சென்று, வெள்ளம் நீர் - நீர்ப்பெருக்கில், துளை ந்து ஆடுறாஉம் - மூழ்கிவிளையாடுகின்ற, எழில்வளம் - அழகின் மிகுதி, மேவும் - (அம்மருதநிலத்திற்) பொருந்தியிருக்கும். எ - று.

(பொ - ரை.) வண்டுகள் விரும்புகின்ற புஷ்ப பாணத்தையுடைய மன்மதனை நிகர்த்த அழகுள்ள ஆடவரும், பழிப்பில்லாத புகழ்பெற்ற ரதி தேவியை நிகர்த்தபெண்களும், மனம் மிகவுங்களித்து அசையாநின்ற கைகளைக்கோத்துச் சென்று நீர்ப்பெருக்கில் மூழ்கி விளையாடுகின்ற அழகின் மிகுதி, (அம்மருதநிலத்திற்) பொருந்தியிருக்கும். எ - று.

(வி - ரை.) மலர் என்ற குறிப்பால் புள் என்றது வண்டினையுணர்த் திற்று. இவ்வாறே "புள்ளவாங்கணைமதனனை" என்றார் பிறரும். இது அறு கால் என்றும் அடையேற்று வருதலே பெருவழக்கு. பொருநர் என்ற பொதுச்சொல் - புள்ளவாம் மலர்க்கணையினான் அன்ன என்ற உவமையால் ஆடவரை யுணர்த்திற்று. இரதிக்குப் புகழாவது அழகின் மேம்பட்டிருத்தல். கோத்தனர் என்றும் முற்றுவினை எச்சவினையாகி, சென்று என்றும் வினை கொண்டது. (௯)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மேதினி முளைத்த வாற்றால் விண்ணவர்த் தெறுபாக் குற்றுங்
கோதுவிற் பத்திரங்கொண் டுறுதளி ராற்சி வந்து
தாதிவர் தண்பூங் கற்பத் தருக்குலம் விதிர்வி திர்ப்பத்
தீதறு சுவர்க்க நாட்டைத் தினமுஞ்சென் றுரிஞ்சுஞ் சோலை.

(ப - ரை.) சோலை - அந்நகரத்திலுள்ள சோலைகள், மேதினி முளைத்த ஆற்றால் - நிலவுலகத்தில் முளைத்ததன்மையால், விண்ணவர் - தேவர்களை, தெறுபாக்கு உற்று - வெல்லும்பொருட்டுச்சென்று, ஆங்கு - அவ்விடத்தில், ஓது - சொல்லப்பட்ட, வில்பத்திரம் கொண்டு - வில்லையும் பத்திரத்தையுங் கொண்டு, உறுதளிரால் சிவந்து - மிக்கதளிராற் சிவந்து, தாது இவர்-மகரந் தம்பொருந்திய, தண்பூ - குளிர்ந்தமலர்களையுடைய, கற்பத்தருக்குலம்-கற்ப கமரச்சோலை, விதிர்விதிர்ப்ப - நடுநடுங்கும்படி, தீது அறுசுவர்க்க நாட்டை- குற்றமற்ற சுவர்க்கலோகத்தை, தினமும் - நாள்தோறும், சென்று உரிஞ்சும் - போய் உரிஞ்சும். எ - று.

(பொ - ரை.) அந்நகரத்திலுள்ள சோலைகள் நிலவுலகத்தில் முளைத்த தன்மையால் தேவர்களை வெல்லும் பொருட்டுச்சென்று, அவ்விடத்தில் சொல்லப்பட்ட வில்லையும் பத்திரத்தையுங்கொண்டு, மிக்க தளிராற் சிவந்து, மகரந்தம் பொருந்திய குளிர்ந்த மலர்களையுடைய கற்பகமரச்சோலை நடுநடுங்கும்படி குற்றமற்ற சுவர்க்கலோகத்தை நாள்தோறும் போய் உரிஞ்சும். எ - று.

(வி - ரை.) சோலைகள் விண்ணுலகிலுள்ள கற்பகச்சோலையை வெல்லும்பொருட்டு மேலோங்கிவளராநிற்கும் என்பது இதன்கருத்து. கற்பகச் சோலையை வெல்லுதல் விண்ணவரை வென்றபடியாமாதலால் 'விண்ணவர்த் தெறுபாக் குற்று' என்றார். விற்பத்திரம் கொண்டு - ஒளியுள்ள இலைகளைக் கொண்டு. உறுதளிராற் சிவந்து - மிகுதியாகிய தளிர்களாற்சிவந்து. கற்பகத் தருக்குலம் விதிர்விதிர்ப்ப - கற்பகமரச்சோலை மிகுதியாயசைய என்றும், வில்பத்திரங்கொண்டு - வில்லையும் வாளையுங்கொண்டு, சிவந்து - கோபித்து, விதிர்விதிர்ப்ப - நடுநடுங்க என்றும் இருவகையாய்ப் பொருள்கொள்க. மேதினி - மதுகைடபர்களது மேதை சிந்தினதினால் நிலத்துக்கு உண்டான பெயர். தெறுபாக்கு - என்பதில் - பாக்கு எதிர்காலவினையெச்சம். கற்பகம் என்பது - கற்பம் - எனத்தொகுத்தலாயிற்று. விதிர் விதிர்ப்ப என்னுமடுக்கு மிகவும் நடுங்க என்னும் பொருளது. இன்பந்தருதலிற் சிறந்ததாதலால் விண்ணுலகை. 'தீதறுசுவர்க்கநாடு' என்றார். இது "சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு மிம்மையு மின்பந்தரும்" என்ற திருக்குறளானும் இதனுரையானும் இனிது விளங்கும். (௧௭)

பொங்கு பல்லவப் பூஞ்சோலை புதுமதுக் கனிகள் காய்க
டெங்கிள நீர்கள் மற்றுந் தேவரு மரம்பை மாரு
மங்கிருந் தயில நாளு மளித்திடு நல்லூ ழுற்றோ
ரெங்கிருப் பினுந்தாம் வேட்ட யாவையுந் துய்ப்ப ரன்றே.

(ப - ரை.) பொங்கு - விளங்குகின்ற, பல்லவம் - தளிர்களையுடைய, பூஞ்சோலை - பூஞ்சோலைகள், புதுமது - நூதனமாகிய தேனையும், கனிகள் - கனிகளையும், காய்கள் - காய்களையும், தெங்கு இளநீர்கள் - தெங்கிள நீர்களையும், மற்றும் - வேறுபதார்த்தங்களையும், தேவரும் - தேவர்களும், அரம்பைமாரும் - தேவமாதர்களும், அங்கு இருந்து அயில - அவ்விண்ணுலகத்திலிருந்தே உண்ணும்படி, நாளும் அளித்திடும் - நாள்தோறுந் தராநிற்கும், (ஆதலால்) நல் ஊழ் உற்றோர் - நல்லூழைப்பெற்றவர்கள், எங்கு இருப்பினும் - எவ்விடத்திருப்பினும், தாம் வேட்டயாவும் - தாம் விரும்பின எல்லாவற்றையும், துய்ப்பர் - அநுபவிப்பார்கள். எ - று. அன்று, ஏ - அசைகள்.

(பொ - ரை.) விளங்குகின்ற தளிர்களையுடைய பூஞ்சோலைகள் நூதனமாகிய தேனையும் கனிகளையும் காய்களையும் தெங்கிளநீர்களையும் வேறுபதார்த்தங்களையும் தேவர்களும் தேவமாதர்களும் அவ்விண்ணுலகத்திலிருந்தே உண்ணும்படி, நாள்தோறுந் தராநிற்கும். (ஆதலால்) நல்லூழைப்பெற்றவர்கள் எவ்விடத்திருப்பினும் தாம் விரும்பின எல்லாவற்றையும் அநுபவிப்பார்கள். எ - று.

(வி - ரை.) 'பொங்குபல்லவப் பூஞ்சோலை புதுமது கனிகள் காய்கள் தெங்கிளநீர்கள் மற்றுந் தேவருமரம்பைமாரும் அங்கிருந்தயில நாளு மளித்திடும்' என்றதனால் சோலைகள் விண்ணுலகத்தளவும் ஓங்கி வளர்ந்திருக்கின்றன என்றதாயிற்று. அயிலல் - உண்டல். நல்லூழ் - நல்விதி. வேட்ட - என்பதில் வேள்பகுதி. துய்த்தல் - அநுபவித்தல். இளநீர் என்பதில் இளமை குளிர்ச்சியைக் குறித்தது. மதுக்கனிகள் என்பதற்கு தேன்போன்ற கனிகள் எனினுமாம். (கக)

கலிநிலைத்துறை.

வண்டர் பாண்செய மதுமல ரசும்புபூம் பொழிலில்
வண்ட லாட்டயர் மகளிர்தம் வளம்பொதி கிளவி
வண்ட ளிர்ச்சினை மாங்குயில் பயிலுறு மயிலவ்
வண்ட லர்ந்தகை யாருருச் சாயலை வௌவும்.

இதுமுதலிய மூன்றுசெய்யுள்களும் அந்நகரத்துப் பொழிலில் விளையாடும் மாதர் சிறப்புக்கூறுகின்றன.

(ப - ரை.) வண்டர் - வண்டுகள், பாண்செய - இராகத்தைப்பாட, மது - தேன், மலர் - மலர்களினின்றும், அசும்பு - துளிக்கின்ற, பூபொழி

வில் - பூஞ்சோலையில், வண்டல் ஆட்டு - வண்டலென்னும் விளையாட்டை, அயர் - செய்கிற, மகளிர்தம் - மாதரது, வளம்பொதிகிளவி - வளம்பொருந்தியசொல்லை, வள்தளிர்சினை - வளமாகிய தளிரோடு கூடிய கிளைகளையுடைய, மா - மாமரங்களின்மீதுள்ள, குயில் - குயில்கள், பயிலுறும் - பழகாநிற்கும், அ - அந்த, வண்டு அலர்ந்த - வளையலணிந்த, கையார் - கைகளையுடைய அம்மாதரது, உருசாயலை - வடிவத்தின் சாயலை, மயில் - மயில்கள், வௌவும் - கவராநிற்கும். எ - று.

(பொ - ரை.) வண்டுகள் இராகத்தைப்பாட, தேன் மலர்களினின்றுந் துளிக்கின்ற பூஞ்சோலையில் வண்டலென்னும் விளையாட்டைச்செய்கிற மாதரது வளம்பொருந்திய சொல்லை வளமாகிய தளிரோடுகூடிய கிளைகளையுடைய மாமரங்களின்மீதுள்ள, குயில்கள் பழகாநிற்கும். அந்தவளைய லணிந்த கைகளையுடைய அம்மாதரது வடிவத்தின் சாயலை மயில்கள் கவராநிற்கும். எ - று.

(வி - ரை.) சோலையில் விளையாடுகின்ற மாதரது சொற்களைக் குயில்கள் பழகாநிற்கும், அவரது சாயலை மயில்கள் கவராநிற்கும் என்பது கருத்து. இவ்வாறு கூறினமையால் மாதரது சொற்கள் குயிலோசையினும் இனியவென்பதும், அவரது சாயல் மயிற்சாயலினும் இனியதென்பதும் பெறப்பட்டன. வண்டு என்னும் மென்றொடர்க் குற்றியலுகரம் சுரும்பர் என்பது போல அர் என்னும்போலிபெற்று வண்டரெனவந்தது. வண்டல் - மகளிர் விளையாடும் ஓர்வகை விளையாட்டு. வண்டலாட்டு - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மாங்குயில் - ஏழாம் வேற்றுமையுருபும் பயனு முடன்றொக்க தொகைநிலைத்தொடர். பயிலுறும் என்பதற்கு பயிலுறு பகுதி. இவ்வாறன்றி பயில் உறு எனப்பிரித்து பயிலுதலைத்தொடங்கும் என்றுரைப்பினுமாம். கையார் - சினையடியாகப்பிறந்த பலர்பாற்படர்க்கைப் பெயர். (கஉ)

கலிவிருத்தம்.

மஞ்சின மெனமட மாத ரோதிகண்
டஞ்சிறை மயிலகங் களிகொண் டாடுவ
விஞ்சிருட் பூம்பொழின் மேவு கோகில
மஞ்சிவாய் திறந்திடா தழுங்கிச் சாம்புமால்.

(ப - ரை.) மடம் - மடப்பத்தையுடைய, மாதர் - மகளிரது, ஓதி - கூந்தலை, கண்டு - பார்த்து, மஞ்சு இனம் என - மேகக்கூட்டமென்று நினைத்து, அம் - அழகாகிய, சிறை - சிறகுகளையுடைய, மயில் - மயில்கள், அகம் - தம்மனத்தில், களிகொண்டு - களிப்பைக்கொண்டு, ஆடுவ - ஆடுவன, விஞ்சு - மிகுந்த, இருள் - இருளுள்ள, பூபொழில் - மலர்ச்சோலைகளில், மேவு - பொருந்திய, கோகிலம் - குயில்கள், அஞ்சி - பயந்து, வாய்திறந்திடாது - வாயைத் திறவாமல், அழுங்கிசாம்பும் - வருந்தியொடுங்கும். எ - று.

(பொ - ரை.) மடப்பத்தையுடைய மகளிரது கூந்தலைப்பார்த்து மேகக்கூட்டமென்று நினைத்து அழகிய சிறகுகளையுடைய மயில்கள் தம்மனத்திற் களிப்பைக்கொண்டு ஆடுவன. மிகுந்த இருளுள்ள மலர்ச்சோலைகளிற் பொருந்திய குயில்கள் பயந்து வாயைத்திறவாமல் வருந்தியொடுங்கும்.எ-று.

(வி - ரை.) மயில்கள் மாதர்கூந்தலைக்கண்டு அதனை மேகமென்று நினைத்து மனங்களித்து நடிக்கும்;குயில்கள் மனம்வாடிவாய்திறவாதிருக்கும் என்பது கருத்து. மேகத்தைக்கண்டு களித்தலும் வாடுதலும் மயிலுக்கும் குயிலுக்கும் இயற்கையாதலால் இவ்வாறு கூறப்பட்டது. மஞ்சு எனவாளா கூறினும் இவ்விடத்திற்கேற்பக் கரிய மேகம் எனப் பொருளுரைத்துக்கொள்க. அஞ்சிறைமயிலென்றதனால் இளமையாகிய மயிலென்பது பெறப்பட்டது. இது 'அஞ்சிறைய மடநாராய்' என்பதனானும் இனிது விளங்கும். பூம்பொழில் - நிழற்செறிவால் மிகவும் இருண்டிருத்தலால் விஞ்சிருட்பூம் பொழில் என்றார். (௧௬)

ஏவுலா மிருவிழி யிபத்தின் மென்னடைப்
பூவலர் கருங்குழற் பொன்ன னார்பயில்
பாவுளர் வண்டினம் பருகத் தேன்பொழி
காவுசூழ் வனப்பினைக் கணிக்க லாகுமோ.

(ப - ரை.) ஏ - பாணம்போல, உலாவும் - பிறழ்கின்ற, இருவிழி - இரண்டு கண்களையும், இபத்தின் - யானையின், மெல்நடை - மெல்லியநடையையும், பூ அலர் - புஷ்பங்கள் மலர்கின்ற, கருகுழல், கரிய கூந்தலையுமுடைய, பொன் அன்னார் - திருமகளைநிகர்த்தவராகிய மாதர், பயில் - சஞ்சரிக்கிற, பாஉளர் - பாடலோடுவருகின்ற, வண்டுஇனம் - வண்டின்கூட்டம், பருக - உண்ணும்படி, தேன்பொழி - (மலர்கள்) தேனைச் சொரிகிற, காவு - சோலைகள், சூழ் - வளைந்திருக்கிற, வனப்பினை - அழகை, கணிக்கல் - அளவிடல், ஆகுமோ - (ஒருவர்க்குக்) கூடுமோ. எ - று.

(பொ - ரை.) பாணம்போலப் பிறழ்கின்ற இரண்டுகண்களையும் யானையின் மெல்லிய நடையையும் புஷ்பங்கள் மலர்கின்ற கரியகூந்தலையுமுடைய திருமகளை நிகர்த்தவராகிய மாதர் சஞ்சரிக்கிற பாடலோடு வருகின்ற வண்டின் கூட்டம் உண்ணும்படி மலர்கள் தேனைச்சொரிகிற சோலைகள் வளைந்திருக்கிற அழகை யளவிடல் (ஒருவர்க்குக்) கூடுமோ. எ - று.

(வி - ரை.) பூவலர்கருங்குழல் என்றமையால் குழலில் அணிந்தபோது அவை பேரரும்பாயிருந்தன வென்பது பெறப்படும். இருவிழியென்பதனிற் றில் முற்றும்மை தொகுத்தல். இபத்தின்நடை தொழிற்பண்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். நடை-தொழிற்பெயர். பொன்னனார் - ஒப்புப்பொருளதாகிய இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர். அன்னார் என்னுமிடைச்சொலடியாகப் பிறந்த பலர்

பாற்படர்க்கை வினையாலணையும் பெயரில் னகரந்தொக்கதல். பாவுதல் - பரவுதல். இதுசொற்கள்பாவி நடத்தலாகிய செய்யுளுக்கு ஆதலால்முதனிலைத் தொழிலாகுபெயரென்க. கா என்னும் ஓரெழுத்தொருமொழி உகரச்சாரியையையும் வகரச்சந்தியும்பெற்று, காவு எனவந்தது. ஆகுமோ என்பதில் ஓகாரம் எதிர்மறை. (௧௬)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வெண்மணி கொழிக்குங் கடனெடு நகர்மேல் வெகுண்டுமுற் றியதென வொளிருந், தண்மதுப் பிலிற்றுந் தாமரை யாதி ததைந்ததாழ் கிடங்குமற் றதனை, யண்மையி னகர்கண் டஞ்சியுட் செல்லா தாற்றிய பெருந்தடை கடுக்க, வொண்மயி லாதியவனர் செய்பொறிக ளுறுபெரு மதிலுஞ்சூழ்ந் தனவால்.

இது அகழிமதில்களின் சிறப்புக் கூறுகின்றது.

(ப - ரை.) வெண்மணி - முத்துகளை, கொழிக்கும் - கொழிக்கின்ற, கடல் - கடலானது, நெடு - நெடிய, நகர்மேல் - நகரின்மீது, வெகுண்டு - கோபித்து, முற்றியதென - வளைந்தாற்போல, ஒளிரும்-விளங்குகின்ற, தண் மது - குளிர்ந்ததேனை, பிலிற்றும் - துளிக்கின்ற, தாமரை ஆதி - தாமரை முதலானவை, ததைந்த - நெருங்கின, தாழ்-ஆழ்ந்த, கிடங்கும் - அகழியும், அதனை - அதை, அண்மைஇல் - பொருத்தமில்லாத, நகர் - நகரத்தார், கண்டு - நோக்கி, அஞ்சி - பயந்து, உள்செல்லாது - (அக்கடல்) உள்ளே போகாவகை, ஆற்றிய - செய்த, பெருதடைகடுக்க - பெரியதடையைநிகர்க்க, ஒள்-அழகிய, மயில் ஆதி-மயில் முதலிய வுருவங்களாக, யவனர்-யவனதேசத்தார், செய் - செய்த, பொறிகள்-யந்திரங்கள், உறு - பொருந்திய, பெருமதிலும் - பெரியமதிலும், சூழ்ந்தன - வளைந்துள்ளன. எ - று.

(பொ - ரை.) முத்துகளைக் கொழிக்கின்ற கடலானது நெடிய நகரின் மீது கோபித்து வளைந்தாற்போல விளங்குகின்ற குளிர்ந்ததேனைத் துளிக்கின்ற தாமரைமுதலானவை நெருங்கின ஆழ்ந்த அகழிம், அதைப்பொருத்தமில்லாத நகரத்தார் நோக்கி பயந்து (அக்கடல்) உள்ளேபோகாவகை செய்த பெரிய தடையை நிகர்க்க அழகிய மயில்முதலிய வுருவங்களாக யவனதேசத்தார்செய்த யந்திரங்கள் பொருந்திய பெரியமதிலும் வளைந்துள்ளன. எ - று.

(வி - ரை.) நகரைச்சூழ்ந்த அகழியானது நகரின்மீது பகைகொண்டு வந்து வளைந்த கடல்போன்றது, மதிலானது கடலாகிய பகைவன் உள்ளே பிரவேசியாமல் தடைப்படுத்த ஏற்படுத்திய காவல்போன்றது என்பது கருத்து. வெண்மையென்னு மடையாலல் மணியென்பது முத்துக்காயிற்று. தாழ்கிடங்கு, செய்பொறிகள்-வினைத்தொகை நிலைத்தொடர்கள். இவற்றுள் முன்னது கிடங்கு என்னும் செய்பவனாகிய பெயரையும், பின்னது பொறிகளென்னும் செயப்படுபொருளையுங் கொண்டன. யவனர் என்பதை எழுவா

யாகக்கொள்ளுதலேயன்றி மூன்றும் வேற்றுமை யுருபும் பயனு முடன் றொக்க தொகையாகக் கோடலுமாம். இவ்வாறு கொள்ளுங்கால் இதன்பய னிலையாகிய செய் என்பது செயப்பாட்டு வினையென்க. யவனம் - ஓர்தேசம். பொறிகள் - சூத்திரப் பிரதிமைகள். (கரு)

கலிநிலைத்துறை.

மாதர் பண்பயின் றாடுறூஉ மணியரங் கவணா
காத ளாவிய குழையினர் கண்வலை கடந்த
மாத வத்தினர் மன்னுறு மடங்களு மவண
வோத நீருல கோதுறு சாலையு மவண.

இது அந்நகரத்தில் நடனசாலை மடம் கல்விச் சாலைகள்பலவுண்டெனக் கூறுகின்றது.

(ப - ரை.) மாதர் - மாதர்கள், பண்பயின்று - பண்களோடு பழகி, ஆடுறும் - ஆடுகின்ற, மணி - அழகாகிய, அரங்கு - ஆடிடங்கள், அவண - அவ்விடத்தன, காது அளாவிய - செவியிற்பொருந்துகின்ற, குழையினர்-காதணியையுடைய மாதரது, கண்வலை - கண்ணாகிய வலையை, கடந்த-தாண்டின, மா - பெரிய, தவத்தினர் - தவத்தையுடையவர், மன்னுறு-நிலைத்திருக்கின்ற, மடங்களும் - மடாலயங்களும், அவண - அவ்விடத்தன, ஓதநீர் - கடல்நீர் சூழ்ந்த, உலகு - உலகத்தார், ஓதுறு சாலையும் - படிக்கின்ற கல்விச்சாலைகளும், அவண - அவ்விடத்தன. எ - று.

(பொ - ரை.) மாதர்கள் பண்களோடு பழகி ஆடுகின்ற அழகாகிய ஆடிடங்கள் அவ்விடத்தன. செவியிற்பொருந்துகின்ற காதணியையுடைய மாதரது கண்ணாகிய வலையைத்தாண்டின பெரிய தவத்தையுடையவர் நிலைத்திருக்கின்ற மடாலயங்களும் அவ்விடத்தன. கடல்நீர்சூழ்ந்த உலகத்தார் படிக்கின்ற கல்விச்சாலைகளும் அவ்விடத்தன. எ - று.

(வி - ரை). மாதராடிடங்களும், தவத்தினர் வசிக்கின்ற மடங்களும், கல்விச்சாலைகளும் அந்நகரத்தில் பலவுள்ளன என்பது கருத்து. ஆடவரை மயக்கிக் காமத்தை விளைக்கும் உறுப்புகள் பலவற்றிலும் சிறந்தது கண்ணாகலின் அதை வலையென உருவகஞ்செய்தார் "இருநோக்கிவளுண்கணுள்ள தொருநோக்கு-நோய்நோக்கொன் றந்நோய் மருந்து" என்னுந் திருக்குறளானும் "காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து வீசினபோது துள்ளமீ னிழந்தார்" என்பதனானும் "மாதரார் கயற்கணென்னும் வலையுட்பட்டுழந்துவேனை" என்பதனானும், அக்கண்ணின் திறம் அறிக. கண்வலை உருவகமாகையால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மடங்கள் துறவிகளைச் சேர்த்து உண்டி முதலிய கொடுத்து ஆதரிக்கும் இடங்கள். (கசு)

கலிவிருத்தம்.

வண்டிமிர் குழலினார் வதனப் பேரெழிற்
கெண்டகு முழுமதி யெதிரற் றேகுதல்
கண்டுமை நீட்டறி குறியைக் காசினி
மண்டிய களங்கென மயங்கி யோதுமால்.

(ப - ரை.) வண்டுஇமிர் - வண்டுகள் முழங்குதற்கிடமாகிய, குழலினார் - கூந்தலையுடைய மாதரது, வதனம் - முகங்களின், பெருஎழிற்கு - பெரிதாகிய அழகுக்கு, எண்தகும் - மதித்தற்குரிய, முழுமதி - பூர்ணசந்திரன், எதிர் அற்றுஏகுதல் - நிகரற்று விலகிப்போதலை, கண்டு - பார்த்து, மைநீட்டு - மை நீட்டிய, அறிகுறியை - அறிகுறியை, காசினி - உலகமானது, மண்டிய - மிகுதியாகிய, களங்கம் என - களங்க மென்று, மயங்கி ஓதும் - மயங்கிச் சொல்லாநிற்கும். எ - று.

(பொ - ரை) வண்டுகள் முழங்குதற் கிடமாகிய கூந்தலையுடைய மாதரது முகங்களின் பெரிதாகிய அழகுக்கு மதித்தற்குரிய பூர்ணசந்திரன் நிகரற்று விலகிப்போதலைப்பார்த்து மைநீட்டிய அறிகுறியை உலகமானது மிகுதியாகிய களங்கமென்று மயங்கிச் சொல்லாநிற்கும். எ - று.

(வி - ரை.) இமிர்தல் - ஒலித்தல். அறிகுறி - அடையாளம். மை - அஞ்சனம். நீட்டுதல் - எழுதுதல். களங்கம் களங்கு என ஈறு தொகுத்தலாயிற்று. இமிர்குழல் வினைத்தொகை நிலைத்தொடர். (௧௭)

ஒழுங்குறு சுடர்களை யுற்று விக்குற
விழுங்குறு பாப்பினம் விட்டொ ளித்திடல்
செழுங்கதிர் மாடமேற் சென்று லாமயி
லழுங்கிய சாயலார்க் கஞ்சிப் போலுமால்.

(ப - ரை.) ஒழுங்குஉறு சுடர்களை உற்று - ஒழுங்காகப் பொருந்திய சுடர்களைநெருங்கி, விக்குற விழுங்கிய பாப்பு இனம் - விக்கும்படி விழுங்கிய பாம்புக்கூட்டம், விட்டு ஒளித்திடல் - (அவற்றை) விட்டு மறைந்துபோவது, செழுகதிர் மாடமேல்சென்று உலாவும் - செழுமையாகிய ஒளியையுடைய மாடங்களின் மேற்சென்றுலாவுகின்ற, மயில் அழுங்கிய சாயலார்க்கு - மயில்கள் வருந்துதற்கேதுவாகிய சாயலையுடைய மாதருக்கு, அஞ்சிபோலும் - அஞ்சியேபோலும். எ - று.

(பொ - ரை.) ஒழுங்காகப் பொருந்திய சுடர்களை நெருங்கிவிக்கும்படி விழுங்கிய பாம்புக்கூட்டம் அவற்றை விட்டு மறைந்து போவது, செழுமையாகிய ஒளியையுடைய மாடங்களின் மேற்சென் றுலாவுகின்ற மயில்கள் வருந்துதற்கேதுவாகிய சாயலையுடைய மாதருக்கு அஞ்சியேபோலும். எ-று.

(வி - ரை.) ஒருங்கு - ஒன்றன் பின்னொன்றாக. சுடர்கள் - சூரியசந்திரர்கள். பாம்பினம் - இராகுகேதுக்கள். இனம் என்றார் இரண்டாதல் பற்றி. செழுங்கதிர் - பொன்மணிகளின் ஒளி. அழுங்குதல் - வருந்துதல். வருந்துதற்குக்காரணம் மயிற்சாயலினும் இம்மாதரது சாயலழகு மேம்பட்டிருத்தல். உலாவும் உலாம்எனத் தொகுத்தலாயிற்று. பாம்பினம் பாப்பினம்எனவலித்தலாயிற்று. போலும் - ஒப்பில்போலி. (கஉ)

கிஞ்சுக மந்நலார் கிளக்குந் தேமொழிக்
கஞ்சிடா தெதிர்த்தலி னவற்றை நாடொறும்
வெஞ்சிறை யிட்டென விளங்கு பன்மணிப்
பஞ்சரத் திருவினர் பாவை யன்னவர்.

இது முதலிய மூன்று செய்யுட்களும் அந்நகரமாதர்கள் கிளிவளர்க்குஞ் சிறப்புக் கூறுகின்றன.

(ப - ரை.) கிஞ்சுகம் - கிளிகள், அம் - அழகிய, நல்லார் - மாதர்கள், கிளக்கும் - பேசுகின்ற, தேம்மொழிக்கு - தேன்போலும் சொல்லுக்கு, அஞ்சிடாது - அஞ்சாமல், எதிர்த்தலின் - எதிர்த்தலால், அவற்றை - அவைகளை, பாவை அன்னவர் - (உருவத்தால்) பிரதிமையை நிகர்ப்பவர்களாகிய மாதர்கள், நாள்தோறும் - தினந்தோறும், வெம் - கொடிதாகிய, சிறை - சிறையில், இட்டென - வைத்தாற்போல, விளங்கு - பிரகாசிக்கின்ற, பல்மணி - பலவகை யிரத்தினங்களாற் செய்யப்பட்ட, பஞ்சரத்து - கூடுகளில், இருவினார் - இருத்திவைத்தார்கள். எ - று,

(பொ - ரை.) கிளிகள் அழகியமாதர்கள் பேசுகின்ற தேன்போலுஞ் சொல்லுக்கு அஞ்சாமல் எதிர்த்தலால் அவைகளை (உருவத்தாற்) பிரதிமையை நிகர்ப்பவர்களாகிய மாதர்கள் தினந்தோறும் கொடிய சிறையில் வைத்தாற்போலப் பிரகாசிக்கின்ற பலவகை யிரத்தினங்களாற்செய்யப்பட்ட கூடுகளில் இருத்தி வைத்தார்கள். எ - று.

(வி - ரை.) மாதர்கள் தமதுசொல்லுக்கஞ்சாமல் எதிர்மொழி கொடுத்தலால் சிறையிட்டு வைத்தாற்போலக் கிளிகளைக் கூடுகளில் அடைத்து வைத்தார்கள் என்பது கருத்து. தொறும்என்பது ஏழாம் வேற்றுமை யிடப்பொருளில்வரும் இடைச்சொல். இட்டென என்பதை இட்டாலன்ன இட்டதன்ன என்றிருவகையாய்ப் பிரிக்கலாம். பன்மணி - பலவாகியமணி. (நவரத்நங்கள்) மணிப்பஞ்சரம் - மூன்றாம் வேற்றுமையுருபும்பயனுமுடன் றொக்கதொகை, மணிகளாற் செய்யப்பட்ட பஞ்சரம் எனவிரியும், மணியென்பது அழகெனவும் பொருள்படுமாதலால், மணிப்பஞ்சரம் - அழகாகிய பஞ்சரம் எனினுமாம். கிஞ்சுகம் - கேகயப்புள், அது இவ்விடத்துப் பொருந்தாது; என்னை; அடுத்தசெய்யுளில் அச்சுவாகதங்கள், எனச்சுட்டலாலும், மாதர் மொழிக்குவமையாகப் புணர்க்கப்படுவதிதுவே யாதலாலும் என்க (கக)

வெஞ்சிறைப் பட்டவர் தமக்கு வேண்டிய
வஞ்சுவை யுணுவற வரச ளித்தல்போல்
வஞ்சிய ரச்சுவா கதங்கள் வாய்மடுத்
துஞ்சிடக் கனிமுத லுணுக்க ணல்குவார்.

(ப - ரை.) வெம் - கொடிய, சிறைப்பட்டவர் தமக்கு - காவலிற்பட்டவர்களுக்கு, வேண்டிய - விரும்பப்பட்டனவாகிய, அம்சுவை - மிகுந்தசுவையுள்ள, உணு - உணவுகளை, அறம் - தர்மசிந்தையுள்ள, அரசு - அரசன், அளித்தல்போல் - கொடுத்தல்போல, வஞ்சியர் - மாதர்கள், அ - அந்த, சுவாகதங்கள் - கிளிகள், வாய்மடுத்து - வாயாலுண்டு, உஞ்சிட - பிழைக்கும்படி, கனிமுதல் - பழ முதலாகிய, உணுக்கள் - உணவுகளை, நல்குவார் - கொடுப்பார்கள். எ - று.

(பொ - ரை.) கொடிய காவலிற் பட்டவர்களுக்கு விரும்பப்பட்டனவாகிய மிகுந்த சுவையுள்ள உணவுகளைத் தர்மசிந்தையுள்ள அரசன் கொடுத்தல் போல மாதர்கள், அந்தக்கிளிகள் வாயாலுண்டு பிழைக்கும்படி பழமுதலாகிய வுணவுகளைக் கொடுப்பார்கள். எ - று.

(வி - ரை.) தர்மகுணமுள்ள அரசர்கள், சிறைப்பட்டவர்களுக்கு நல்லுணவளித்துக் காப்பதுபோல மாதர்கள் தாம்வளர்க்குங் கிளிகளுக்குக் கனிமுதலிய நல்லுணவளித்துக் காப்பார்கள் என்பது கருத்து. சிறைப்பட்டவர் - செயப்பாட்டு இறந்தகாலவினையாலணையும் பெயர், தமக்கு என்பதில் தம் சாரியை. அகரமுமது. குவ்வுருபு கொடைப் பொருளது. வேண்டிய செயப்பாட்டு இறந்தகாலப்பலவின் பால்வினையாலணையும் பெயர். இதனோடு உணு என்பது இருபெயரொட்டுப்பண்புத்தொகையாக இயையும். அஞ்சுவை யுணுஎன்றது அறுசுவையுண்டியை. அறுசுவையாவன - கைப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்பன. உணு - பெயர்ச்சொல். வஞ்சியர்-பூங்கொடிபோலுமாதர்; இது உவமையாகு பெயர். வாய்மடுத்து என்பதை வாயால்மடுத்து எனக்கருவிப் பொருளதாகிய மூன்றும் வேற்றுமையுருபும் பயனுமுடன்றொக்க தொகையெனக் கோடலேயன்றி, ஒருசொல்லாகக் கொண்டு இறந்தகாலவினையெச்சம் எனினுமாம். பகுதி வாய்மடு. உய்ந்திட என்பது உஞ்சிட என்றனது மொழியிடைப்போலி. கனி-முதனிலைத் தொழிலாகுபெயர். கனிதல் - பழுத்தல், அரசு - பண்பாகுபெயர். தர்மமாவது கிரமமானகுடியிறை வாங்குதல், நடுவுநிலைமை முதலாயின. (௨௦)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிறைபடு தம்மை நீத்தல் செய்தனல் லறனு மென்னுக்
கறைதபு மொழியின் வேண்டல் கிடப்பப்பைஞ் சிறைய கிள்ளை
நிறைமலர்க் குழலா ருள்ள நெகிழ்தர வினிய தீஞ்சொ
லறைதரு மவரு நீக்கி யங்கையி னேந்து வாரே.

(ப - ரை.) பை - பசுமையாகிய, சிறைய - சிறைகளையுடைய, கிள்ளை-கிளிகள், சிறைபட்டு - சிறைப்பட்டிருக்கிற, தம்மை - தங்களை, நீத்தல்செய்தல் - சிறைநீக்குதல், நல் அறன் ஆம் என்று - மேன்மையாகிய தருமமாகுமென்று, கறைதபு - குற்றமற்ற, மொழியின் வேண்டல் கடுப்ப - சொற்களால் பிரார்த்தித்தலைநிகர்க்க, நிறை - நிறைந்த, மலர் - மலரையணிந்த, குழலார் - கூந்தலையுடையமாதரது, உள்ளம் - மனம், நெகிழ்தர - உருகும்படி, இனிய - இனிமையாகிய, தீசொல் - மதுரமொழிகளை, அறைதரும்-பேசும், அவரும் - அந்தமாதரும், நீக்கி - சிறைநீக்கி, அம்கையின் - அழகாகிய கையினால், ஏந்துவார் - (அவைகளை) தாங்குவார்கள். எ - று.

(பொ - ரை.) பசுமையாகிய சிறைகளையுடைய கிளிகள், சிறைப்பட்டிருக்கிற தங்களைச் சிறைநீக்குதல் மேன்மையாகிய தருமமாகுமென்று, குற்றமற்ற சொற்களால் பிரார்த்தித்தலை நிகர்க்க, நிறைந்த மலரையணிந்த கூந்தலையுடைய மாதரது, மனமுருகும்படி இனிமையாகிய மதுரமொழிகளைப்பேசும், அந்த மாதரும் சிறைநீக்கி அழகாகிய கையினால் அவைகளைத் தாங்குவார்கள். எ - று.

(வி - ரை.) கிளிகள் தம்மைச் சிறையினின்று நீக்குதல் பெரிய தருமமென்று பிரார்த்தித்தல்போலப்பேச, அவ்வாறே மாதர்கள் அவைகளைக் கூட்டினின்று நீக்கித் தம் கையிலேந்துவார்களென்பது கருத்து. என்று - என் என்னும் இடைச்சொலடியாகப்பிறந்த செய்யாவென்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம். விகுதி ஆ. இவ்விகுதியே காலங்காட்டிற்று. அறைதரும் என்பது ஒருசொல். இதற்குப்பகுதி அறைதா. மொழி-மொழியப்படுதலாகிய மொழியை யுணர்த்தலால் செயப்படுபொருளுணர்த்தும் ஐகாரவிகுதி புணர்ந்து கெட்ட தொழிலடியாகப்பிறந்த பெயர். கடுப்ப உவமவுருபிடைச்சொலடியாகப்பிறந்த செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். சிறைய - சினையடியாகப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். அறம் அறன் எனப் போலியாயிற்று. நெகிழ்தர என்பதற்குப் பகுதி நெகிழ்தா. இனிய தீஞ்சொல் - மிக்க இனிமையுள்ள சொல். (உக)

கலிநிலைத்துறை.

விண்டேவ ரிமைத்திலர் நோக்க விளங்கு பொற்பிற்
பண்டங்க ணிவந்துயர்பற்பல வாவ ணத்தின்
றண்டாத பெரும்புக ழிற்றெனச் சாற்ற வல்லோ
ரொண்டா ரணியி லிலையென்னி னுரைப்ப தென்னே.

இது கடைவீதியின் சிறப்புக் கூறுகின்றது.

(ப - ரை.) விண் - விண்ணுலகத்திலுள்ள, தேவர்-தேவர்கள், இமைத்திலர் - கண்களிமையாதவராகி, நோக்க - பார்க்கும்படி, விளங்கு - விளங்குகின்ற, பொற்பின் - அழகினையுடைய, பண்டங்கள் - (பலவகைப்) பண்டங்க

ளும், நிவந்து உயர் - மிகவும் அதிகப்பட்டிருக்கிற, பற்பல - மிகப்பலவாகிய, ஆவணத்தின் - கடைகளின், தண்டாத - கெடாத, பெரு புகழ்-பெருங்கீர்த்தி, இற்று என - இத்தன்மைத்தென்று, சாற்ற வல்லோர் - சொல்ல வல்லவர், ஒள் - அழகிய, தாரணியில் - பூமியில், இல்லை என்னில்-இல்லையென்றால், உரைப்பது என் - அதைப்பற்றிப் பேசுவதென்ன. எ - று.

(பொ - ரை.) விண்ணுலகத்திலுள்ள தேவர்கள் கண்களிமையாதவராகிப் பார்க்கும்படி விளங்குகின்ற அழகினையுடைய (பலவகைப்) பண்டங்களும் மிகவும் அதிகப்பட்டிருக்கிற மிகப்பலவாகிய கடைகளின் கெடாத பெருங்கீர்த்தி இத்தன்மைத்தென்று சொல்ல வல்லவர் அழகிய பூமியில் இல்லையென்றால் அதைப்பற்றிப் பேசுவதென்ன. எ - று.

(வி - ரை.) தேவரும் இமையாமல் நோக்குதற்குரிய பல பண்டங்கள் நிறைந்தகடைவீதிகளின் பெரும்புகழை யெடுத்துரைக்கவல்லவர் பூமியிலொருவருமில்லையாதலால், அதைக்குறித்து நாம் பேசுவதனால் பயனென்னை யென்பது கருத்து. இமைத்திலர் முற்றெச்சம். இவ்வெச்சம் நோக்க என்னும் வினைகொண்டது. நிவந்துயர் - குழிந்தாழ்ந்த என்பதுபோன்ற ஒருபொருட் பன்மொழி. இற்று - இன் என்னும் இடைச்சொலடியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று. இதற்குப் பன்மை இன்ன. சாற்ற என்னும் செயவெனெச்சம் தொழிற்பெயர்ப் பொருளில் வந்தது. வல்லோர்-வன்மையென்னும் பண்படியாகப்பிறந்த பலவின்பாற் படர்க்கைக் குறிப்புவினையாலணையும்பெயர். செய்யுளாகையால் ஈற்றயலாகாரம் ஓகாரமாயிற்று. தாரணி - எல்லாவற்றையுந் தாங்குவது, (பூமி) இது வடசொல். (உஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

துறவறத் தடைந்தோ ரில்லந் துறந்தமைக் கிரங்க வில்லத்
துறவிருக் கின்ற மாந்த ருள்ளன வெல்லா மீந்து
பிறர்நகை பொருமலந்தப் பெருந்துற வடையப் போகந்
திறமுற விற்கு மின்னார் செறிதருந் தெருக்கள் பல்ல.

இது பொதுமாதர் தெருச்சிறப்புக் கூறுகின்றது.

(ப - ரை.) துறவு அறத்து அடைந்தோர் - துறவறத்தையடைந்தவர்கள், இல்லம் துறந்தமைக்கு - (தாம்) இல்வாழ்க்கையைத் துறந்ததற்கு, இரங்க - இரங்கவும், இல்லத்துஉற இருக்கின்றமாந்தர் - இல் வாழ்க்கையிற்பொருந்தவிருக்கின்ற மாந்தர், உள்ளனஎல்லாம்ஈந்து - தம்கையிலுள்ள பொருள்முழுதுங்கொடுத்து, பிறர்நகை பொருமல் - (தம்மைநோக்கி) பிறர் சிரிக்குஞ் சிரிப்பைப்பொறுக்காமல், அந்த பெருதுறவு அடைய - அந்தப் பெருந்துறவையடையவும், போகம் - (தமது) போகசுகத்தை, திறம் உறவிற்கும் - உறுதியாய் விற்கின்ற, மின்னார் - பொதுமாதர்,செறிதரும்-மிகுதியாய் வாழ்கின்ற, தெருக்கள்பல்ல - தெருக்கள் பலவுள. (அந்நகரத்தில்) எ - று

(பொ - ரை.) துறவறத்தை யடைந்தவர்கள் தாம் இல்வாழ்க்கையைத் துறந்ததற்கு இரங்கவும் இல்வாழ்க்கையிற் பொருந்தவிருக்கின்ற மாந்தர் தம் கையிலுள்ள பொருள்முழுதுங் கொடுத்து (தம்மைநோக்கி) பிறர் சிரிக்குஞ் சிரிப்பைப் பொறுக்காமல் அந்தப் பெருந்துறவையடையவும், தமது போக சுகத்தை உறுதியாய் விற்கின்ற பொதுமாதர் மிகுதியாய் வாழ்கின்ற தெருக்கள் பலவுள (அந்நகரத்தில்) எ - று.

(வி - ரை.) துறவறம்-துறவாகிய அறம் என இருபெயரொட்டுப்பண்புத்தொகையாக்குக. துறவு - துறத்தல் எனப்பொருள்படும். துறத்தலாவது யான் என்னும் அகப்பற்றையும் எனது என்னும் புறப்பற்றையும் முற்றும்விடுதல். அன்றி, துறவாகிய ஆச்சிரமத்தில் நின்று செய்யும் அறம்எனினுமாம். இவ்வாறு பொருள்கொள்ளுங்கால் ஏழாம் வேற்றுமையுருபும் பயனுமுடன்றொக்க தொகையாகக்கொள்க. இல்லம் - க்ருஹஸ்தாசிரமம். கைப்பொருளேயன்றி உடல்வலி முதலியயாவும் கொடுத்து என்றற்கு உள்ளனவெல்லாமீந்து என்றார். பிறர் நகைக்குக்காரணம் இவனதறியாமை யென்க. திறமுற என்பதற்கு மிகுதியாக எனினுமாம். மின்னார் - உவமையாகுபெயர். இது தொழிற்பெயர். மின்கொடிபோல்வார் என்பது பொருள். (௨௬)

வருவிருந் தெதிர்கொண் டேற்று மலர்முக மினிது காட்டி
யருமைசான் முகமன் கூறி யறுசுவை யுணநன் கூட்டித்
திருமலி கவிமு னோர்க்குச் செம்பொன்முன் னன நல்கிப்
பெருமைசான் றொழுகும் பின்னோர் பெருகிவாழ் தெருக்கள் பல். [ல.

இது சூத்திரரது சிறப்புக்கூறுகின்றது.

(ப - ரை.) வருவிருந்து - வரும் விருந்தினரை, எதிர்கொண்டு ஏற்று - எதிர்சென்று ஏற்று, மலர்முகம் - மலர்ந்தமுகத்தை,இனிதுகாட்டி - இனிமையாய்க்காட்டி, அருமைசால்-அருமைமிகுந்த, முகமன்கூறி - இன்சொற்களைச் சொல்லி, அறுசுவை - அறுவகைச்சுவைகளோடு கூடிய,உண - உணவுகளை, நன்கு ஊட்டி - நன்றாக வுண்பித்து, திருமலி - அழகுநிறைந்த, கவிமுன்னோர்க்கு - புலவர் முதலானோர்க்கு, செம்பொன்முன் ஆன - செம்பொன் முதலானவைகளை, நல்கி - கொடுத்து, பெருமைசான்று-பெருமைநிறைந்து, ஒழுகும் - நடக்கின்ற, பின்னோர் - சூத்திரர், பெருகிவாழ் - விருத்தியடைந்து வாழ்கின்ற, தெருக்கள் - வீதிகள், பல்ல - பலவுள. எ - று.

(பொ - ரை.) வரும் விருந்தினரை யெதிர்சென்று ஏற்று மலர்ந்தமுகத்தையினிமையாய்க் காட்டி, அருமை மிகுந்த இன்சொற்களைச்சொல்லி, அறுவகைச்சுவைகளோடுகூடிய வுணவுகளை நன்றாக வுண்பித்து, அழகுநிறைந்த புலவர் முதலானோர்க்குச் செம்பொன்முதலானவைகளைக் கொடுத்துப் பெருமைநிறைந்து நடக்கின்ற சூத்திரர், விருத்தியடைந்து வாழ்கின்ற வீதிகள் பலவுள. எ - று.

(வி - ரை.) விருந்தினரை இன்முகத்தோ டெதிர்கொண்டேற்று இன்சொல்லோடுபசரித்து அறுசுவையுணவை யுண்பித்து, புலவர் முதலானோர்க்குப் பொன்முதலியவற்றைக் கொடுத்து நல்லொழுக்கத்திலமைந்து நடக்கின்ற சூத்திரர் தெருக்கள் பலவுளவென்பது கருத்து. 'வருவிருந்து எதிர்கொண்டேற்று, என்றமையால், முன்சென்ற விருந்தினரையும் ஓம்புவர் என்பது பெறப்பட்டது. "செல்விருந்தோம்பிவருவிருந்துபார்த்திருப்பான் - நல்விருந்து வானத்தவர்க்கு" என்பது திருக்குறள். விருந்தினரைத் தூரத்திற் கண்டபோதே இன்முகமுடைத்தாதலும், அதனுல் உண்ணவுடன் பட்டபோது உபசரித்தலும் நன்றாற்றலும் என விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனையும் முறையே 'மலர்முகமினிதுகாட்டி, அருமைசால் முகமன்கூறி, அறுசுவையுணு நன்கூட்டி' என்றார். கலைமகள் அருள்பெற்றோராகையால் கவிஞரைத் 'திருமலிகவி' என்றார். கவி - செய்யுள். அதனைச்செய்யவல்லோரைக் கவியென்றது வடநூல் வழக்கு. முதலானோர் என்பது முன்னோர் எனவும், முதலான என்பது முன்னன எனவும் மருவின. சான்று என்பதற்குப் பகுதி சால்.(உரிச்சொல்) பிராமணர் முதலிய மூன்று வருணத்தார்க்கும் பிற்பட்டவராதலால், சூத்திரரைப் 'பின்னோர்' என்றார். (உச)

அன்னியர் பொருளுந் தத்த மரும்பொரு ளென்ன வுள்ளத்
துன்னியொன் றனந்த மாக வுஞற்றும்வல் லபத்தாற் கண்ட
வென்னரு மிறும்பூ தெய்து மெழில்மிகும் வணிக ரென்று
மன்னிவாழ் வெய்து மிக்க மறுகுகள் பலவ யங்கும்.

இது வணிகர்சிறப்புக்கூறுகின்றது.

(ப - ரை.) அன்னியர்பொருளும் - பிறருடையபொருளும், தத்தம் - தத்தமது, அருபொருள்என்ன - அருமையாகிய பொருள்போல, உள்ளத்து - மனத்தில், உன்னி - நினைத்து, ஒன்று - ஒன்றே, அனந்தம்ஆக - முடிவற்றனவாக, உஞற்றும் - முயற்சிசெய்கிற, வல்லபத்தால் - சாமர்த்தியத்தால், கண்ட - பார்த்த, என்னரும் - எத்தன்மையரும்,இறும்பூது - ஆச்சரியத்தை, எய்தும் - அடைதற்குரிய, எழில்மிகும் - அழகுமிகுந்த, வணிகர் - வணிகர்கள், என்றும் - எந்நாளும், மன்னி - நிலைபெற்று, வாழ்வு எய்தும் - வாழ்தலைப்பொருந்திய, மிக்க மறுகுகள் - மிகுதியாகிய தெருக்கள், பல - அநேகங்கள், வயங்கும் - பிரகாசிக்கும். எ - று.

(பொ - ரை.) பிறருடைய பொருளும் தத்தமது அருமையாகியபொருள்போல மனத்தில் நினைத்து ஒன்றே முடிவற்றனவாக முயற்சி செய்கிற சாமர்த்தியத்தாற் பார்த்த எத்தன்மையரும் ஆச்சரியத்தை யடைதற்குரிய அழகுமிகுந்த வணிகர்கள் எந்நாளும் நிலைபெற்று வாழ்தலைப்பொருந்திய மிகுதியாகிய தெருக்கள் அநேகங்கள் பிரகாசிக்கும். எ - று.

(வி - ரை.) பிறர் பொருளையுந் தம் பொருள்போலெண்ணி ஒன்று அநேகமாகப் பெருக்கி வாழ்கின்ற வணிகர் வீதிகள் பலவுளவென்பது கருத்து. பிறர்பொருளையுந் தம்பொருள்போலெண்ணி நடத்தல் எவர்க்குஞ் சிறந்த வொழுக்கமாயினும் வணிகர்க்கு அது வேறாகச் சிறந்ததென்பதனை, "வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப் - பிறவுந் தமபோற் செயின்" என்னுந் திருக்குறளானுமறிக. "வைசியர்க்கழகு வளர்பொருளீட்டல்" என்றபடி 'ஒன்றனந்தமாக வுஞற்றும் வணிகர்' என்றார். தாம் வருந்தித்தேடிய பொருளையே மிகவும் அருமையுடையதாக நினைத்தல் உலகவியற்கையாதலால், 'தத்தமரும் பொருளென்ன' என்றார். ஒன்று அனந்தம் என்பவைகள் பொருள்களை யுணர்த்தலால் எண்ணலளவையாகுபெயர்கள். பல மறுகுகள் எனற்பாலது மறுகுகள் பல என முன்பின்னாக மாறிவந்ததனால் பல என்பது பலவின்பாற்படர்க்கைக் குறிப்புவினையாலணையும் பெயர். செல்வம் மிக்குடையார்க்கு உள்ளக்களிப்பால் அழகு மிகுதலியல்பாதலால் 'எழின் மிகும் வணிகர்' என்றும், இவர்கள் இன்றிருந்து நாளை யொழிந்துபோவோரல்லர் என்பதை வற்புறுத்தற்கு, 'மன்னி வாழ்வெய்தும்' என்றும் கூறினர். அன்னியர் - தொழில் ஒற்றுமையுடைய பிறர். என்னர் - தொழில் வேற்றுமையுடைய ஏனையர். (உரு)

தேசினிற் சிறந்தோர் செல்வத் திறத்தினி னுயர்ந்தோ ராற்றும்
பூசலில் வென்றி கொள்ளும் போர்ப்புலி யன்னார் தூய
வாசமார் மாலை மார்பர் மழையென விரவ லாளர்க்
காசறு தான மீயு மரசர்வாழ் மறுகு மோர்பால்.

இது அரசர் வீதிச் சிறப்புக்கூறுகின்றது.

(ப - ரை.) தேசினில் சிறந்தோர் - புகழிற் சிறந்தோரும், செல்வத்திறத்தினில் உயர்ந்தோர் - செல்வவகையில் உயர்ந்தோரும், சாற்றும் - சொல்லப்பட்ட, பூசலில் - போரில், வென்றி கொள்ளும்-வெற்றியையடைகின்ற, போர் புலி அன்னார்-போரில்வல்ல புலியை நிகர்ப்பவரும், தூய-பரிசுத்தமாகிய, வாசம் ஆர்-வாசனைபொருந்திய, மாலை-பூமாலையைத்தரித்த, மார்பர்-மார்பையுடையவரும் ஆகிய, மழை என - மேகம்போல, இரவலாளர்க்கு - யாசகருக்கு, ஆசு அறு - குற்றமற்ற, தானம் ஈயும் - தானங்கொடுக்கிற, அரசர் வாழ் - வேந்தர்கள் வாழ்கின்ற, மறுகும் - வீதிகளும், ஓர்பால் - ஒருபக்கத்திலுள்ளன. எ - று.

(பொ - ரை.) புகழிற் சிறந்தோரும், செல்வவகையில் உயர்ந்தோரும், சொல்லப்பட்ட போரில் வெற்றியையடைகின்ற போரில் வல்ல புலியை நிகர்ப்பவரும் பரிசுத்தமாகிய வாசனைபொருந்திய பூமாலையைத்தரித்த மார்பையுடையவருமாகிய, மேகம்போல யாசகருக்குக் குற்றமற்ற தானங்கொடுக்கிற வேந்தர்கள் வாழ்கின்ற வீதிகளும் ஒருபக்கத்திலுள்ளன. எ - று.

(வி - ரை.) புகழ், பொருள், போர், கொடை முதலியவற்றுற் சிறந்த அரசர் வீதிகள் பலவுளவென்பது கருத்து. தேசு என்னும் பலபொருளொரு சொல்லுக்கு ஒளி பொன் என்பன பொருள். பின்னே 'செல்வத்திறத்தினில்' என்றமையால், தேசு என்பதற்கு ஒளியைச்செய்வதாகிய புகழ் எனப் பொருள் கூறப்பட்டது. தேசினில் திறத்தினில் பூசலில் என்பவற்றிலுள்ள ஐந்தனுருபுகள் மூன்றும் ஏதுப்பொருளன. பூசல் என்பது சண்டை, கூத்து என்பனபோல முதனிலைபெருத தொழிற்பெயர். வென்றி-தொழிற்பெயர். இது வெற்றி எனவும் வரும். வெல் பகுதி. போர்ப்புலி-போரில்வல்ல புலி. போரைச்செய்கின்ற புலி என ஏழாம்வேற்றுமையுருபும் பயனுமுடன் றொக்க தொகையென்ருவது இரண்டாம்வேற்றுமையுருபும் பயனுமுடன் றொக்க தொகையென்ருவது கொள்க. மழையை யுவமித்தமையால் கைம்மாறு வேண்டாதீவோர் என்பது பெறப்பட்டது. இவ்வாறீதலே சிறந்ததென்பதனை "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட் - டென்னாற்றுங் கொல்லோ வுலகு" என்னுந் திருக்குறளானுமுணர்க. இரவலாளர் - இரத்தற்றொழிலை யாள்வோர். ஆசறுதானமாவது - நல்வழியிற்றேடிய பொருளைத் தக்கார்க்கு வகையோடு கொடுத்தல். இந்தத் தானமே சிறந்ததென்பதனை "அறப்பயனுந் தான்சிறிதாயினுந் தக்கார்கைப் பட்டக்கால் வான்சிறிதாப் போர்த்துவிடும்" என்பதனானுமறிக. இது உத்தமதானமெனவும் படும். இது 'கள்ளங்கொலை கட்புலை காமமென்றைந்து மற்றூர்க் - குள்ளந் தெளிந்தோர் தருமுத்தம தானமென்ன' என்பதனலினிது விளங்கும்" "ஞானமுன்னிய நான்மறை யாளர்கைத் தானமென்னத் தழைத்தது நீத்தமே" என்றூர் மஹாகவியும். மறுகும் என்ற வும்மை மேலைச் செய்யுளிலுள்ள வணிகர் மறுகைத் தழுவலால் இறந்ததுதழீஇய வெச்சவும்மை ஓர்பால் என்பதனீற்றில் உள்ளன என்னுஞ் சொல் எஞ்சிநின்றது. செல்வம் - தொழிலாகுபெயர். இதற்குப் பொருள் ஓரிடத்தில் நில்லாது செல்வது என்பதாம். (௨௬)

மறுவறு முத்தீ யென்றும் வளர்ப்பவ ரைந்தென் றோதுந்
தெறுபுல னவித்த மேலோர் செய்ய மாறனது செங்கேழ்
நறுமல ருந்தி பூத்த நாதனே யனைய தூய
ரறுதொழி லாளர் வீதி யவண்பல வயங்கு மன்னோ.

இது அந்தணர்வீதிச் சிறப்புக்கூறுகின்றது.

(ப - ரை.) மறுஅறு - களங்கமற்ற; முத்தீ - முத்தீயையும், என்றும்- எந்நாளும், வளர்ப்பவர் - விருத்திசெய்பவரும், ஐந்துஎன்றுஓதும் - ஐந்தென்றுசொல்லப்பட்ட, தெறு-(உயிர்களை) வருத்துகின்ற, புலன் - புலன்களை, அவித்த - அடக்கின, மேலோர் - மேலோரும், செய்ய - நல்லோனுகிய, மால்தனது - திருமாலினது, செங்கேழ் - செந்நிறம்பொருந்திய, நறு - மணமுள்ள, உந்திமலர் - திருநாபீகமலமானது, பூத்த - ஈன்ற, நாதனே - (உலகத்துக்குத்) தலைவனுகிய பிரமனையே, அனைய - ஒத்த, தூயர் - பரிசுத்தருமாகிய,

அறுதொழிலாளர் - அறுதொழிலாளராகிய வேதியர்களுடைய, வீதி - தெருக்கள், அவண் - அவ்விடத்தில், பலவயங்கும் - அனேகமாகவிளங்கும். எ-று.

(பொ - ரை.) களங்கமற்ற முத்தீயையும் எந்நாளும் விருத்திசெய்பவரும், ஐந்தென்றுசொல்லப்பட்ட (உயிர்களை) வருத்துகின்ற புலன்களை யடக்கின மேலோரும்,நல்லோனாகிய திருமாலினது செந்நிறம்பொருந்திய மணமுள்ள திருநாபிகமலமானது ஈன்ற (உலகத்துக்குத்) தலைவனாகிய பிரமனையே ஒத்த பரிசுத்தருமாகிய அறுதொழிலாளராகிய வேதியர்களுடைய தெருக்கள் அவ்விடத்தில் அனேகமாக விளங்கும். எ - று.

(வி - ரை.) யாகம்செய்தல், ஐம்புலனடக்கல் முதலிய நற்செயல்களை மேற்கொண்டொழுகுகின்ற அந்தணர் வீதிகள் பலவுளவென்பது கருத்து. முத்தீ-ஆகவனீயம், தக்ஷிணாக்நி, காருகபத்தியம் என்பன. இவை யாகாக்நியெனப்படும், இவற்றை வடநூலார் த்ரேதாக்நி என்பர். ஐம்புலன்களாவன— சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. இவைமனத்தைத் தம்வயப்படுத்தித் தீநெறியிலொழுகச்செய்து பலபிறவித் துன்பத்தை யுண்டாக்கலால், 'தெறுபுலன்' என்றார். இந்த ஐம்புலனவித்தாரே முனிவராவாரென்பதனை, ''ஐந்தவித்தானாற்றல்'' ''விடல்வேண்டுமைந்தன்புலத்தை'' என்பவற்றானுமறிக. செய்ய - செம்மையென்னும் பண்படியாகப்பிறந்த குறிப்புப் பெயரெச்சம், இது இங்கு நிறத்தை யுணர்த்தாது நற்குணங்களையுணர்த்திற்று. மால் என்பது தன் என்னும் சாரியையும் ஆதுஎன்னும் ஆறனுருமையுருபும் பெற்று மாறனாது எனவந்தது. உலகத்தைப்படைத்தானாதலால் பிரமனை'நாதன்' என்றார். ஏகாரம் தேற்றம். தூயர் - தூய்மையென்னும் பண்படியாகப்பிறந்த உயர்திணைப்பலர்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர். அந்தணர்க்குரிய அறுதொழில்களாவன.—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன. அறுதொழிலாளர் வீதி இடப்பிறிதின் கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். மன், ஓ, அசைகள். அறுதொழில் ஏனையர்க்கும் உண்டேனும் முத்தீமுதலிய குறிப்பினானும், ஏனைச் சாதிச்சிறப்புக்கூறி முடிந்தமையானும் இங்கு அறுதொழிலாளர் என்றது அந்தணரையே குறித்தது. மால் - ஆஸ்ரிதவ்யாமோஹன். உந்திபூத்த என மேல்வருதலால், மலர் என்பது தாமரை மலரை யுணர்த்திற்று. (உஎ)

தேரொலி புழைக்கை மாக்கள் சீறிசை பரிமா வோதை
வாரியை கழற்கால் வீரர் மணிப்புயந் தட்டு மார்ப்பு
நாரியர் சிலம்பின் சும்மை நரப்பியா ழரவ மின்ன
சேரவொன் றாகி யேழு திரைகள்வா யடக்கு மன்றே.

இது தேரோசை முதலியவற்றின் சிறப்புக்கூறுகின்றது.

(ப - ரை.) தேர்ஒலி - தேரினோசையும், புழை - துளையோடு கூடிய, கை - துதிக்கையையுடைய, மாக்கள் - யானைகள், சீறுஇசை - சீறுகின்றஓ

சையும், பரிமாஓதை - குதிரைகள் கனைக்குமோசையும், வார் இயை - வாரி ஞற்கட்டப்பட்ட, கழல் - வீரகண்டையணிந்த, கால் - கால்களையுடைய, வீரர் - வீரர்கள், மணிபுயம் - அழகியதோள்களை, தட்டும் ஆர்ப்பு - தட்டுதலா லுண்டாகிற ஓசையும், நாரியர் - மாதர்களணிந்த, சிலம்பின்சும்மை - காற்சி லம்பின் ஓசையும், நரம்பு - நரம்புகள்கட்டின, யாழ்அரவம் - வீணையின்ஓ சையும் ஆகிய, இன்ன - இவைபோல்வனவாகிய எல்லாவோசைகளும், சேர ஒன்றுஆகி - சேரஒன்றுபட்டு, ஏழுதிரைகள்-ஏழுகடல்களின், வாய்-வாயை, அடக்கும் - அடக்கிவிடும். எ - று.

(பொ - ரை.) தேரினோசையும், துளையோடுகூடிய துதிக்கையையுடை ய யானைகள் சீறுகின்றஓசையும், குதிரைகள் கனைக்குமோசையும், வாரினாற் கட்டப்பட்ட வீரகண்டையணிந்த கால்களையுடைய வீரர்கள் அழகியதோள் களைத்தட்டுதலாலுண்டாகிற ஓசையும், மாதர்களணிந்த காற்சிலம்பினோசை யும், நரம்புகள்கட்டின வீணையின் ஓசையும் ஆகிய இவைபோல்வனவாகிய எல்லாவோசைகளும் சேர ஒன்றுபட்டு ஏழு கடல்களின் வாயை யடக்கி விடும். எ - று.

(வி - ரை.) தேரொலி முதலியன கடலொலியையடக்கிவிடும் என்ப துகருத்து. தேரொலி, பரிமாவோதை, சிலம்பின்சும்மை, யாழரவம் என்பன தொழிற்பண்புத்தற் கிழமைப்பொருளவாகிய ஆறும்வேற்றுமைத் தொகை நிலைத்தொடர்கள். சீறிசை-வினைத்தொகை, இது, சீறுதலாலுண்டாகியஇசை யெனக் காரணப்பொருள்பட விரிதல்காண்க. புழைகை என்பவற்றீற்றில்இர ண்டனுருபும் பயனிலையும் தொகையாய்வந்தன. அவை புழையை யுடைய கையையுடைய வெனவிரியும். பரிமா-இருபெயரொட்டுப் பண்புத்தொகை, பரி - சிறப்புப்பெயர், மா-பொதுப்பெயர். கால்-எண்ணலளவையாகுபெயர். நரம்புயாழ் - மூன்றனுருபும் பயனுமுடன்தொக்கதொகைநிலைத்தொடர். நர ம்பினால் கட்டிய யாழ் எனவிரியும். நரம்பு நரப்பு எனவலித்தலாயிற்று. திரை சினையாகுபெயர். ஏழுகடல்களாவன—உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் என்பவைகளையுடைய கடல்களாம். இவற்றை ஸப்தஸ முத்ரம் என்பர் வடநூலார். புயந்தட்டியார்த்தல்-வீரர்தத்தம் உடல்வலி மன வலி பகைவர்களுக்கஞ்சாமை முதலியவற்றைக் குறிப்பிக்கத் தோள்கொட்டி யாரவாரித்தல். நாரி வடமொழி. தமிழ்மொழியாகக்கொண்டு நார் இ எனப்பி ரித்துக் கணவனிடத்தன்புள்ளவள் என்றுரைப்பினும் பொருந்தும். திரைகள் வாய் என்பதில் வாய்கருவியாகுபெயராய் ஓசையைக்குறித்தது. ஒலி, இசை, ஓதை, ஆர்ப்பு, சும்மை, அரவம் என்பன ஒருபொருட்சொற்கள். வாயடக்கும் என்றது மிக்கொலிக்கும் என்றபடி. புழைக்கைமா - யானையாகிய விலங்கு எனப்பொருளுரைத்து இருபெயரொட்டுப்பண்புத்தொகை யென்றலும் பொ ருந்தும். ஒலிமுதலியவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன. அ,ஆ என அசைகள்.

(௩௨)

கலிநிலைத்துறை.

அளகை வேந்தனை யனந்தனை மதனனை யரிய
பளகில் செல்வத்தாற் குறைவறு கல்வியாற் பகர
வளவின் மேனியின் வனப்பினுல் வென்றமற் றவர்தந்
தளர்வில் சீர்த்தியைச் சாற்றிட வல்லனல் லேனே.

இது அந்நாட்டார் செல்வமுதலியவற்றின் சிறப்புக்கூறுகின்றது.

(ப - ரை.) அளகைவேந்தனை - அளகாபுரிக்கு அரசனுகிய குபேரனை யும், அனந்தனை - ஆதிசேடனையும், மதனனை - மன்மதனையும், (முறையே) அரிய - அருமையாகிய, பளகுஇல் - குற்றமில்லாத. செல்வத்தால் - செல்வத்திறைலும், குறைவு அறு - குறைவற்ற, கல்வியால் - கல்வியினுலும், பகர - சொல்லுதற்கு, அளவுஇல் - ஓரளவில்லாத, மேனியின்வனப்பினுல், வடிவழகினுலும், வென்ற - ஜெயித்த, அவர்தம் - அவர்களுடைய, தளர்வுஇல்-கெடுதலில்லாத, சீர்த்தியை - புகழை, சாற்றிட - சொல்ல, வல்லன் அல்லேன் - சமர்த்தனல்லேன். எ - று.

(பொ - ரை.) அளகாபுரிக்கு அரசனுகிய குபேரனையும், ஆதிசேடனை யும், மன்மதனையும், (முறையே) அருமையாகிய குற்றமில்லாத செல்வத்தி னுலும் குறைவற்ற கல்வியினுலும் சொல்லுதற்கு ஓரளவில்லாத வடிவழகினு லும் ஜெயித்த அவர்களுடைய கெடுதலில்லாத புகழைச்சொல்லச் சமர்த்த னல்லேன். எ - று.

(வி - ரை.) குபேரன் முதலியோரைச் செல்வமுதலியவற்றுல் வென்ற அந்த நகரத்தாரது புகழை யெடுத்துச்சொல்ல நான் சமர்த்தனல்லேன் என் பது கருத்து. செல்வத்தால் அளகைவேந்தனையும்,கல்வியால் அனந்தனையும், வனப்பால் மன்மதனையும் என இயைதலால் முறைநிர னிறைப்பொருள் கோள். நல்வழியானீட்டிய பொருள் என்றற்கு 'பளகில் செல்வம்' என்றுர். மூன்றனுருபுகள் ஐந்தாவதனேதுப்பொருளன. இல்செல்வம் இல்வனப்பு என்பன பண்புத்தொகை நிலைத்தொடர்கள், இன்மையாகிய செல்வம் இன் மையாகிய வனப்பு என விரியும். மேனியின் வனப்பு பண்புத்தற் கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். வல்லன்-வன்மை யென்னும் பண்படியாகப் பிறந்த தன்மை யொருமை உடன்பாட்டுக்குறிப்பு வினைமுற்று, இதனேடு அல்லேன் என்னும் எதிர்மறைக்குறிப்புத் தன்மை யொருமை வினைமுற்றுச்சேர்ந்து ஒரு சொல்லின் தன்மைப்பட்டு இதனை யெதிர்மறையாக்கிற்று. மற்று ஏ அசையிடைச்சொற்கள். பகர அளவில் வனப்பு எனக் கூட்டுக. அளகைவேந்தன் முதலியோரைச் செல்வ முதலிய வற்றுல் வென்றவர் என்றமையால், செல்வம், கல்வி, அழகு என்பவற்றுற் சிறந்தவர் இந்நகரத்தார் என்பது பெறப்பட்டது. "உருவின்மைந்தரில்வே ளில் வேட்குடைகுநரில்லை, பொருளிலார்களிற்றனதனைப் பொருவிலாரில்

லை, தெருளின்மாக்களிற் சேடனிற் றூழ்சூநரில்லை, அருளிலார்களிலெந்தரு நிகர்க்கிலாரில்லை" என்றார் பிறரும். தளர்வில் சீர்த்தி-பெரும்புகழ். ஏ-அசை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வெள்ளிய கோட்டு வேழ வென்றிவன் றிருகு கோட்டுத்
துள்ளிய தகரின் வென்றி துணர்க்கவிர்ச் சூட்டு முட்காற்
புள்ளிய சேவல் வென்றி புகரிலாக் குறும்பூழ் வென்றி
யுள்ளிய பிறவு நாளு முலப்பறு வீரர் கொள்வார்.

இது யானைப்போர் முதலியவற்றின் சிறப்புக்கூறுகின்றது.

(ப - ரை.) வெள்ளிய - வெண்மையாகிய, கோடு - கொம்பினையுடைய, வேழம் வென்றி - யானைப்போர் வெற்றியையும், வல் - வலிய, திருகு - முறுக்கின, கோடு - கொம்பினையுடைய, துள்ளிய - குதிக்கின்ற, தகரின்வென்றி - ஆட்டுப்போர் வெற்றியையும், துணர் - கொத்தாகிய, கவிர் - முருக்கமலர்போன்ற, சூட்டு - உச்சிக் கொண்டையையும், முள் - முள்ளுள்ள, கால் - காலையும், புள்ளிய - புள்ளிகளையுமுடைய, சேவல்வென்றி - சேவற்போர் வெற்றியையும், புகர் இல்லா - குற்றமில்லாத, குறும்பூழ் வென்றி-காடைப்போர் வெற்றியையும், உள்ளிய - மதித்தற்குரிய, பிறவும் - பிறவெற்றிகளையும், நாளும் - நாள்தோறும், உலப்பு அறு - அளவற்ற, வீரர்கொள்வார்-வீரர்களடைவார்கள். எ - று.

(பொ - ரை.) வெண்மையாகிய கொம்பினையுடைய யானைப்போர்வெற்றியையும், வலியமுறுக்கின கொம்பினையுடைய குதிக்கின்ற ஆட்டுப்போர் வெற்றியையும், கொத்தாகிய முருக்கமலர்போன்ற உச்சிக்கொண்டையையும் முள்ளுள்ள காலையும் புள்ளிகளையுமுடைய சேவற்போர்வெற்றியையும், குற்றமில்லாத காடைப்போர் வெற்றியையும், மதித்தற்குரிய பிறவெற்றிகளையும் நாள்தோறும் அளவற்ற வீரர்களடைவார்கள். எ - று.

(வி - ரை.) அளவற்ற வீரர்கள் யானை முதலியவற்றைப் போர்க்குவிடுத்துப் பந்தயங்கெலிப்பார்கள் என்பது கருத்து. வெள்ளிய - வெண்மையின் விகாரமாகிய வெண் பகுதி, அ பெயரெச்சவிகுதி, இ சாரியை, மை கெட்டதும் யகரம் தோன்றியதும் சந்தி, இது குறிப்புப்பெயரெச்சம். கவிர்ச்சூட்டு உவமைத்தொகை. கோடு நெடிற் றொடர்க்குற்று கரமாதலாலும் இரண்டனுருபும் பயனுமுடன்றொக்க தொகையாதலாலும் டகரம் இரட்டித்தது. வெற்றி வென்றியென மெலிந்தது. சேவல் - ஆண்கோழி. உலப்பறுவீரர்-அழிதலில்லாத வீரத்தன்மையுள்ளவர். உலப்பு - தொழிற்பெயர். கோடு - முதனிலைத் தொழிலாகுபெயர், வளைதலையுடையது என்பதுபொருள். தகர்-ஆட்டுக்கடா. கொள்வார் என்றது இதுவே தொழிலாயிருப்பர் என்றபடி. புகர் இலா குறும்பூழ் - தோல்வியென்னுங் குற்றமில்லாத காடை. வேழவென்றி முத

விய நான்கனுள், முன்னையமூன்றும் யவ்வனவீரர்க்கும், பின்னையதொன்றும் இளஞ்சிறார்க்கும் உரியவெனக்காண்க. "கறுவொடு மொன்றோடொன்று காரணமின்றிச் சீறிப்-பொறியுடைக்குறும்பூழ் தம்மிற் போர்செயப் பொருத்து மோதை, செறிமயிர்த்தகர்க டம்மிற்றீயெழத் தாக்கனேக்கி, அறைகழல் வீரரார்க்கு மமலையை யவிக்குமன்றே" என்றார் பிறரும். (௬0)

கோச்சகக்கலிப்பா.

தோடலர்நந் தனவனங்க டுறைமலர்பன் மலர்வாவி
நீடொளிய கோபுரங்க ணெடுமதிற்பொன் மாளிகைக
ணாடவர்க டிதிமுழக்க நாடொறுமின் னியமுழக்க
மாடலொடு பாடலறு வாலயங்கள் பலவாங்கண்.

இது நந்தவனம் முதலியவற்றின் சிறப்புக்கூறுகின்றது.

(ப - ரை.) தோடு - பூவிதழ்கள், அலர்-விரிகின்ற, நந்தனவனங்கள்-பூந்தோட்டங்களும், துறைமலர் - துறைகள் பரந்துள்ள, பல்மலர்வாவி - பலபூம்பொய்கைகளும், நீடு ஒளிய - மிக்க ஒளியுள்ளனவாகிய, கோபுரங்கள் - கோபுரங்களும், நெடுமதில் - பெரியமதில்சூழ்ந்த, பொன்மாளிகைகள்-பொன்மாளிகைகளும், நாடவர்கள் - நாட்டிலுள்ளவர்கள், துதிமுழக்கம் - தோத்திரமுழக்கமும், நாள்தோறும் - தினந்தோறும், இன் இயம் முழக்கம்-இனிய வாத்தியமுழக்கமும், ஆடலொடுபாடல் அறு-ஆடலுடன் பாடலும் நீங்காத, பல ஆலயங்கள் - பலகோயில்களும், ஆங்கண் - அவ்விடத்துள்ளன. எ-று.

(பொ - ரை.) பூவிதழ்கள் விரிகின்ற பூந்தோட்டங்களும், துறைகள் பரந்துள்ள பலபூம் பொய்கைகளும், மிக்க ஒளியுள்ளனவாகிய கோபுரங்களும், பெரியமதில்சூழ்ந்த பொன்மாளிகைகளும், நாட்டிலுள்ளவர்கள் தோத்திரமுழக்கமும், தினந்தோறும் இனிய வாத்தியமுழக்கமும், ஆடலுடன் பாடலும் நீங்காத பலகோயில்களும் அவ்விடத்துள்ளன. எ - று.

(வி - ரை.) நந்தனவனங்கள், பூம்பொய்கைகள்,கோபுரங்கள்,மாளிகைகள், ஆடல்பாடல்களிடையறாத ஆலயங்கள், இவை பலவுளவென்பது கருத்து. தோடு - கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ, என்னும் நால்வகைமலர்களினிதழ்கள். கோட்டுப்பூ-சண்பகம் பாதிரி முதலாயின. கொடிப்பூ-மல்லிகை முதலாயின. நீர்ப்பூ-தாமரை முதலாயின; நிலப்பூ - தும்பை முதலாயின.மாளிகைகள்-கோயில் திருத்தொண்டுசெய்வாருடைய மாளிகைகள். ஆடலொடுபாடல் என்றதனால் நடனத்திற்கியைந்த பாடல் என்பது பெறப்பட்டது. ஆலயம் வடமொழி, இது கோயிலென்னும் பொருளது. இயம் - வாத்தியம். இது எல்லா வாத்தியங்களுக்கும் பொது. இன்னியம் எனவொரு சொல்லாக்கிவாத்தியம் எனப் பொருள்கோடலுமாம். மலர் இரண்டில்முன்னது வினைத்தொகை வினைச்சொல்லாய் வாவியென்னும் இடப்பெயர்கொ

ண்டது, பின்னதுதொழிலாகுபெயர், இவ்விரண்டனுருபும் பயனிலையும் தொகநின்றது, மலர்களேயுடைய வாவியெனவிரியும். வேற்றுமையாதலால் நாட்டவர்கள் எனற்பாலது நாடவர்கள் என டகரவொற்றிரட்டியாது வந்தது. இதனை "நாடவர்நந்தம்மையார்ப்ப வார்ப்ப," என்றற்றொடக்கத்துச் சான்றோர் செய்யுட்களானமைத்துக்கொள்க. இதில்கள் விகுதிமேல்விகுதி. ஆங்குகண் என்பது ஆங்கண்ணென மருவியது. அங்கு என்னுஞ்சுட்டுப்பெயர் ஆங்கு எனமுதனீண்டது. நந்தவநம் எனவும் வரும். துறை-நீராடுதுறை. (௬௧)

கலிநிலைத்துறை.

தரங்க வாரிதி துயில்பரந் தாமனை மாந்த
ரிரங்கும் வெண்டிரை வாவியின் மூழ்கிநந் தனத்திற்
குரங்க வார்சினை மல்கிய கொழுமலர் நாளுங்
கரங்கொ டன்புட னருச்சிப்பர் காலங்க டோறும்.

இது தெய்வபத்தியின் சிறப்புக்கூறுகின்றது.

(ப - ரை.) மாந்தர் - (இந்நகரத்து) மனிதர்கள், இரங்கும்-ஒலிக்கின்ற, வெண்திரை-வெள்ளிய அலைகளேயுடைய, வாவியில்-தடாகத்தில், மூழ்கி-குளித்து, நந்தனத்தில்- நந்தனவனத்திலுள்ள, குரங்கு - வளைந்த, வார் - நீண்ட, சினை-கிளைகளில், மல்கிய-நிறைந்த, கொழுமலர்-செழித்தமலர்களை,நாளும்-நாள்தோறும், கரம்கொடு - கைக்கொண்டு, தரங்கம் - அலைகளேயுடைய, வாரிதி - திருப்பாற்கடலில், துயில்-யோகநித்திரைசெய்கிற, பரந்தாமனை-க்ஷீராப்திநாதனை, அன்புடன் - அன்போடு, காலங்கள்தோறும் - காலங்களில் எல்லாம், அருச்சிப்பர் - ஆராதிப்பார்கள். எ - று.

(பொ - ரை.) இந்நகரத்து மனிதர்கள், ஒலிக்கின்ற வெள்ளிய அலைகளேயுடைய, தடாகத்திற்குளித்து, நந்தனவனத்திலுள்ள வளைந்த நீண்ட கிளைகளில் நிறைந்த செழித்தமலர்களை நாள்தோறுங் கைக்கொண்டு அலைகளேயுடைய திருப்பாற்கடலில் யோகநித்திரை செய்கிற க்ஷீராப்திநாதனை அன்போடு காலங்களிலெல்லாம் ஆராதிப்பார்கள். எ - று.

(வி - ரை.) இந்நகரமாந்தர் காலந்தோறும் நீராடி மலர்பறித்துத்திருப்பாற்கடலுளானை யருச்சித்து வாழ்வார்கள் என்பது கருத்து. வாரிதி - நீர்தங்குமிடம். இதுவடசொல். துயில் பரந்தாமன் என்றமையால் தரங்கவாரிதி பாற்கடலுக்காயிற்று. துயில் - அறிதுயிலுக்காயிற்று. அறிதுயில் எல்லாவற்றையுமறியா நின்றேதுயிலல். இதில் அறிதலும் துயிறலும் ஒருங்கு நிகழ்தலான் இது துணைவினை யெனப்படும். இதனை யோகநித்ரையென்பர் வடநூலார். மாந்தர்-பன்மைக்கே யுரியபெயர். இதனை நித்யபஹுவசநம் என்பர் வடநூலார். நந்தநம் இந்திரன் பூந்தோட்டத்திற் கோர்சிறப்புப் பெயராயும் வரும். கொண்டு என்னும் மூன்றன் சொல்லுருபு கொடுஎன இடை தொகுத்தலாயிற்று. கரங்கொடு என்பதை ஏழாம்வேற்றுமைத் தொகையாகவைத்து கொடு

என்பதை யிறந்தகால வினையெச்சமெனினும் பொருந்தும். அன்புடன் என்பதில் மூன்றன்சொல்லுருபாகியவுடன் விசேடணப்பொருட்டு. காலங்கள்தோறும் என்றது காலைமாலைபகல் என்னும் முக்காலங்களையு முணர்த்திநின்றது. இறைவனது பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமித்துவம், அர்ச்சை என்னும் ஐந்துநிலைகளில் திருப்பாற்கடலில் அறிதுயி லமர்ந்திருக்கும் நிலைவியூகம் எனப்படும். பரமபதத்தில் வீற்றிருக்குமிருப்பு பரத்துவம் எனவும், ஸங்கர்ஷணப்ரத்யும்ந அநிருத்தவாசுதேவர்களாகிய பகுப்பையுடைய நிலைவியூகம் எனவும், ராமக்ருஷ்ணாத் யவதாரங்கள் விபவம் எனவும், எங்கும் வியாபித்திருக்கும் நிலை அந்தர்யாமித்வம் எனவும், விக்ரஹ ரூபமாயிருக்கும் நிலை அர்ச்சை எனவும் கூறப்படும். நிர்த்தோஷமானமலர்கள் என்பார் 'கொழுமலர்' என்றார். பரந்தாமன் - மேலான விடத்தில் வீற்றிருப்பவன். பரம் - மேன்மை, தாமம் - இடம், ஒளியெனினுமாம். (௯௨)

கோச்சகக்கலிப்பா.

இன்னவளம் படைத்தெவரு மிறும்பூது கொண்டடையப்
பன்னரிய வுத்தமத்திற் பயிலுநால் வகைக்குடியுந்
துன்னுபுறக் குடிமூன்றுந் தொக்குறைய விளங்கிடுமப்
பொன்னகருக் கணித்தாகப் பொலிபெருங்கா டொன்றுளதால்.

இது மேற்கூறிய சிறப்புள்ள நகரத்துக்கருகில் ஒரு பெருங்காடு உண்டெனக் கூறுகின்றது.

(ப - ரை.) இன்னவளம்படைத்து - இத்தன்மையவாகிய வளங்களைப் பெற்று, எவரும் - யாவரும், இறும்பூதுகொண்டு அடைய-அதிசயங்கொண்டுசேரும்படி, பன்அரிய - சொல்லுதலருமையாகிய, உத்தமத்தின் பயிலும்- உத்தமகுணங்களோடு பழகுகின்ற, நால்வகைகுடியும் - நான்கு வகையாகிய குடிகளும், துன்னுபுறக்குடி மூன்றும் - நெருங்கிய புறக்குடிகள் மூன்றும், தொக்கு உறைய - கூடிவாழும்படி, விளங்கிடும் - பிரகாசிக்கிற, அ - அந்த, பொன் நகருக்கு - அழகிய நகரத்துக்கு, அணித்து ஆக - சமீபமாக, பொலி- விளங்குகின்ற, பெருங்காடு ஒன்று உளது - பெரியவன மொன்றுண்டு. எ-று.

(பொ - ரை.) இத்தன்மையவாகிய வளங்களைப்பெற்றுயாவரும் அதிசயங்கொண்டு சேரும்படி சொல்லுதலருமையாகிய உத்தமகுணங்களோடுபழகுகின்ற நான்குவகையாகிய குடிகளும், நெருங்கிய புறக்குடிகள் மூன்றும், கூடிவாழும்படி பிரகாசிக்கிற அந்த அழகிய நகரத்துக்குச் சமீபமாக விளங்கும் பெரியவன மொன்றுண்டு. எ-று.

(வி - ரை.) இப்படிப்பட்ட வளம்படைத்து நால்வகை உத்தமக்குடிகளும், மூவகைப்புறக்குடிகளும் வசித்தற்குரியதாகி விளங்குகிற இந்தநகரத்துக்கருகே பெருங்காடொன்றுளது என்பது கருத்து. உத்தமத்திற்பயிலும்என்

றது தத்தமக்கு வேதாகமாதிகளாற் சொல்லப்பட்ட வருணச்சிரமதர்மங்களை யநுட்டித்து நடத்தலை. நால்வகை உத்தமக்குடிகளாவன. பிராமண, க்ஷத்ரிய, வைசிய, சூத்திரக்குடிகள். மூவகைப் புறக்குடிகளாவன.—உயர்ந்தன, இழிந்தன, மயங்கவைத்தன என்பன. இவற்றுள் உயர்ந்தன—அநுலோமர், பிரதிலோமர் என்றிருவகையின. அவற்றுள் உயர்குலத்தாணும் இழிகுலப்பெண்ணும் கூடிப்பெற்றவர் அநுலோமர். இழிகுலத்தாணும் உயர்குலப்பெண்ணும் கூடிப்பெற்றவர் பிரதிலோமர். இந்த அநுலோமப்பிரதிலோமர் தமக்குள்ளே யொவ்வொருவரும் அறுவகையராயிருப்பர். இழிந்தன - அந்தராளர், விராத்தியர் என்றிருவகையின். அவற்றுள், அநுலோமத்தாணும் பிரதிலோமப்பெண்ணுங்கூடிப்பெற்றவர் அந்தராளர். பிரதிலோமத்தாணும் அநுலோமப்பெண்ணுங் கூடிப்பெற்றவர் விராத்தியர். இவை, "உத்தமகுலத்து நாற்பெருங்குடியு முயர்ந்தவுமிழிந்தவுமயங்க, வைத்தவுமானபுறக்குடி மூன்றும்," "உயர்ந்தவாணினுமிழிந்தபெண்ணினும்-வியந்தகூட்டத்தவரனுலோமர் - இழிந்தவாணினுமுயர்ந்த பெண்ணினும்-வியந்தகூட்டத்தவர் பிரதிலோமர்" "அநுலோம கூட்டத்தாணினுமவ்வழி-பிரதிலோமகுலப் பெண்ணினுமிக்க-வியந்தகூட்டத்தவரந்தராளர்" "பிரதிலோமகுலத்தாணினும் பின்னர்-அநுலோமகுலப்பெண்ணினு மவ்வழி - வியந்தகூட்டத்தவர் விராத்தியராவர்" என்பனவற்றான்விசதம். மயங்கவைத்தன - மேற்கூறப்பட்ட உயர்ந்தன, இழிந்தன என்னும் இருவகைக்குடிகளின் கூட்டத்திலுண்டாயின. இவ்வாறன்றி, கைம்பெண் வயிற்றிற் பிறந்தவராகிய கோளகரையும், வேற்றோரிடத்துப் பிறந்தவராகிய குண்டகரையும், கந்நிகைவயிற்றிற் பிறந்தவராகிய கானீநரையும் புறக்குடிகள் என்பாருமுளர். இவற்றின் விரிவஞ்சி யிவ்வளவினிறுத்தப்பட்டது. தொக்கு - பகுதியிரட்டித்துக் காலங்காட்டிய இறந்தகால வினையெச்சம். அணித்து - பண்படியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினைமுற்று. இதற்குப்பகுதி அண்மையென்பதன் விகாரமாகிய அணி. உளது-உண்மையென்னும் பண்படியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினைமுற்று. இதற்குப் பன்மை உள, உள்ளன எனவரும். இப்பகுதியடியாக உண்டு என இருதிணையைம்பான் மூவிடங்கட்குப்பொதுவான வினைமுற்று வருதலேயன்றி, உளேன்-உளேம்-உளாய்-உளீர் எனத்தன்மை முன்னிலைகளுக்குரிய விகுதிகளைப்பெற்றுத் திணைபாலிடங்கட்குரிய சிறப்பு வினையாய்வருதலுமுண்டு. பன் - முதனிலைத்தொழிற்பெயர். (௬௬)

மந்தாரங் கச்சோலம் வாகைசே வெட்பாலை
சந்தார்பி டாவகுளஞ் சண்பகங்கூ விளநாக
நந்தாத வேங்கைஞெமை நமைவருக்கை முருக்ககில்யா
சிந்தாத வழைபுன்னை சிந்துவா ரஞ்செருந்தி.

இதுமுதல் நான்குசெய்யுட்கள் அக்காட்டு மரங்களின் சிறப்புக் கூறுகின்றன.

(ப - ரை.) மந்தாரம் - செம்பரத்தைமரம், கச்சோலம் - ஏலமரம், வாகை - வாகைமரம், சே - அழிஞ்சில்மரம், வெட்பாலை - வெண்பாலைமரம், சந்து - சந்தனமரம், ஆர்பிடா - அருமையாகிய பிடாமரம், வகுளம் - மகிழமரம், சண்பகம் - சண்பகமரம், கூவிளம் - வில்வமரம், நாகம் - நாவல்மரம், நந்தாத - கெடாத, வேங்கை - வேங்கைமரம், ஞெமை-ஞெமைமரம், நமை - நமைமரம், வருக்கை - பலாமரம், முருக்கு - முருக்கமரம், அகில் - அகில்மரம், யா - ஆச்சாமரம், சிந்தாத - உதிராத, வழை-சுரபுன்னைமரம், புன்னை - புன்னைமரம், சிந்துவாரம் - வெண்ணொச்சிமரம், செருந்தி - செருந்திமரம். எ - று.

(பொ - ரை.) செம்பரத்தைமரம், ஏலமரம், வாகைமரம், அழிஞ்சில்மரம், வெண்பாலைமரம், சந்தனமரம், அருமையாகிய பிடாமரம், மகிழமரம், சண்பகமரம், வில்வமரம், நாவல்மரம், கெடாத வேங்கைமரம், ஞெமைமரம், நமைமரம், பலாமரம், முருக்கமரம், அகில்மரம், ஆச்சாமரம், உதிராத சுரபுன்னைமரம், புன்னைமரம், வெண்ணொச்சிமரம், செருந்திமரம். எ - று.

(வி - ரை.) மந்தாரம் - பஞ்சதருக்களிலொன்றெனினுமாம். வேங்கையை 'நந்தாத வேங்கை' என்றார். அது நெடுங்காலம் படாதிருத்தல்பற்றி.

சிந்தூரமா மராவரசு செங்கடம்பே ழிலைம்பாலை
குந்தமா தளைஞாழல் குங்குமமுந் திரிகையார்
கந்திகளா விளாதென்னை கடுக்கைதேக் கோமைமுத
லந்தில்பல செழுந்தருக்க ளடர்ந்தொளிரு மவ்வனமே.

(ப - ரை.) சிந்தூரம் - புளியமரம், மா - பெரிய, மரா-வெண்கடம்புமரம், அரசு - அரசமரம், செங்கடம்பு - செங்கடம்புமரம், ஏழிலைம்பாலை - ஏழிலைப்பாலைமரம், குந்தம் - குருந்தமரம், மாதளை - மாதளைமரம், ஞாழல் - கோங்குமரம், குங்குமம் - குங்குமமரம், முந்திரிகை - முந்திரிகைமரம், ஆர்-ஆத்திமரம், கந்தி - கமுகமரம், களா - களாமரம், விளா - விளாமரம், தென்னை - தென்னமரம், கடுக்கை - கொன்றைமரம், தேக்கு - தேக்குமரம், ஓமை - மாமரம், முதல் - முதலாகிய, பல-பலவகைப்பட்ட, செழுதருக்கள்-செழுமையாகியமரங்கள், அடர்ந்துஒளிரும் - நெருங்கிவிளங்கும், அவ்வனம்-அவ்வனத்தின்கண். எ - று.

(பொ - ரை.) புளியமரம்-பெரியவெண்கடம்புமரம், அரசமரம், செங்கடம்புமரம், ஏழிலைப்பாலைமரம், குருந்தமரம், மாதளைமரம், கோங்குமரம், குங்குமமரம், முந்திரிகைமரம், ஆத்திமரம், கமுகமரம், களாமரம், விளாமரம், தென்னமரம், கொன்றைமரம், தேக்குமரம், மாமரம் முதலாகிய பலவகைப்பட்ட செழுமையாகிய மரங்கள் நெருங்கிவிளங்கும் அவ்வனத்தின்கண். எ-று.

(வி - ரை.) அவ்வனம் ஒளிரும் எனவியையும். அந்தில் ஏ - அசைகள். மராமரத்தை ஸாலம் எனவும், ஏழிலைப்பாலையை ஸப்தபர்ணி என

வும் கூறுவர் வடநூலார். ஏழிலைப்பாலையென்பது ஏழிலம்பாலையென மெலிந்துநின்றது. மேலைச்செய்யுளில், மந்தாரம் என்பது முதல் இச் செய்யுளில் ஓமையென்பதிறுதியாயுள்ள எல்லாவற்றினீற்றில் எண்ணும்மைகள் தொக்குநின்றன. ஈற்றிலுள்ள ஓமையென்பது மாமரமாதலால் மாமரா என்பதற்குப் பெரியயாமரம் என்றுரையுரைக்கப்பட்டது. அவ்வனம் என்ற சுட்டு, பொலிபெருங்காடொன்றுளது என மேலைச்செய்யுட்கு மேலைச் செய்யுளிற் கூறப்பட்டதைக்குறித்தது. மேற்செய்யுளும் இச்செய்யுளும் ஒருதொடராய் ஒருவினைகொண்டு முடிதலால் குளகம் எனப்படும். என்னை, "குளகம்பலபாட்டொருவினைகொள்ளும்" என்பது விதியாதலின். (கூ௬)

மலரினிழி கொழுந்தேனும் வைத்தவிறாற் செழுந்தேனு
மலகில்பல கனித்தேனு மறைகலுழிப் பெரும்புனலு
முலவைவிரண் டுடையகளிற் றூறியமும் மதப்புனலுஞ்
சலசலவென் றோட்டெடுத்துத் தடங்கடலே ழெனப்பெருகும்.

(ப - ரை.) மலரின்இழி - மலர்களினின்று மொழுகாநின்ற, கொழு தேனும் - கொழுமையாகியதேனும், வைத்த - (தேனீக்களால்) சேர்த்து வைக்கப்பட்ட, இறால் - தேன்கூட்டினின்று மொழுகாநின்ற, செழுதேனும் - கொழுந்தேனும், அலகுஇல் - அளவற்ற, பலகனிதேனும் - பலவகையாகிய கனிகளினின்று மொழுகாநின்றதேனும், அறை - ஒலிக்கின்ற, கலுழி பெரும்புனலும் - கான்யாறுகளின்பெருநீர்ப்பெருக்கும், உலவை இரண்டு உடைய - இரண்டுகொம்புகளையுடைய, களிற்று-யானைகளினிடத்தில், ஊறிய - சுரந்த, மும்மதப்புனலும் - மும்மதநீர்ப்பெருக்கும், சலசலஎன்று ஓட்டெடுத்து - சலசலவென்றோடி, தடம்கடல்ஏழ்எனபெருகும் - விசாலமாகிய ஏழ்கடல்களென்று சொல்லும்படி பெருகாநிற்கும். எ - று.

(பொ - ரை.) மலர்களினின்று மொழுகாநின்ற செழுமையாகிய தேனும், தேனீக்களால் சேர்த்துவைக்கப்பட்ட தேன்கூட்டினின்று மொழுகாநின்ற கொழுந்தேனும், அளவற்ற பலவகையாகிய கனிகளினின்று மொழுகாநின்றதேனும், ஒலிக்கின்ற கான்யாறுகளின் பெருநீர்ப்பெருக்கும், இரண்டு கொம்புகளையுடைய யானைகளினிடத்தில் சுரந்தமும்மதநீர்ப்பெருக்கும் சலசலவென்றோடி, விசாலமாகிய ஏழ்கடல்களென்று சொல்லும்படி பெருகாநிற்கும். எ - று.

(வி - ரை.) கனிவகைகள் கணிக்கலாகாவென்றற்கு 'அலகில்பலகனி' என்றார். மும்மதமாவன. கன்னமதம், கபோலமதம், கோசமதம் என்பன. சலசல - ஈரடுக்கொலிக்குறிப்பு. ஓட்டமெடுத்து எனற்பாலது ஓட்டெடுத்து எனவிகாரமாயிற்று.இது தொகுத்தலின்பாற்படும். இதற்கு ஓடலைச்செய்து என்பதுபொருள், இவ்வாறன்றி ஒருசொல்லாக்கி ஓடியென வினையெச்சமாக்கினுமாம், இதற்குப்பகுதி ஓட்டெடு. 'தடங்கடலேழெனப்பெருகும்'

என்றமையால், மலர்த்தேன் முதலியவற்றின் பெருக்குக்குக் கடலேழும் நிக ராகாவென்பது பெறப்பட்டது. தடம்-கடலுக்குச் சாதியடை யெனினுமாம்.

விளங்கனியு மாங்கனியு மிளிர்பாகற் செழுங்கனியுங்
களங்கனியும் விளங்கருணைக் கனியுநரந் தக்கனியும்
வளங்கனியு மிவைமுதல வானோரும் வாயூறி
யுளங்கனியும் வகைபழுத்த வொண்சினைய தருக்களெல்லாம்.

(ப - ரை.) ஒள்சினைய - அழகியகிளைகளையுடைய, தருக்கள் எல்லாம்- மரங்களிலெல்லாம், விளங்கனியும்-விளாம்பழங்களும், மாங்கனியும் - மாம் பழங்களும், மிளிர் - விளங்குகின்ற, பாகல்செழுங்கனியும் - பலவினது செழு மையாகிய பழங்களும், களங்கனியும் - களாப்பழங்களும், விளங்கு - பிரகா சிக்கிற, அருணக்கனியும் - எலுமிச்சம்பழங்களும், நரந்தக்கனியும் - நாரத் தைப்பழங்களும், (ஆகிய) வளம்கனியும் - வளமிகுந்த, இவைமுதல - இவை முதலியகனிகள், வானோரும் - தேவரும், வாய்ஊறி - வாயில்நீர்சுரக்கப் பெற்று, உளம்கனியும்வகை - மனங்கனியும்வண்ணம், பழுத்த - பழுத்தன. எ - று.

(பொ - ரை.) அழகியகிளைகளையுடைய மரங்களிலெல்லாம் விளாம் பழங்களும், மாம்பழங்களும், விளங்குகின்ற பலவினது செழுமையாகியபழங் களும், களாப்பழங்களும், பிரகாசிக்கிற எலுமிச்சம் பழங்களும், நாரத்தைப் பழங்களும் (ஆகிய) வளமிகுந்த இவைமுதலியகனிகள் தேவரும் வாயில்நீர் சுரக்கப்பெற்று மனங்கனியும் வண்ணம் பழுத்தன. எ - று.

(வி - ரை.) அருணம் - எலுமிச்சை - அருணக்கனியை அருணப லம் என்பர் வடநூலார். வளங்கனியும், உளங்கனியும் என்பவற்றில் உள்ள உம்மைகள் நிகழ்காலச்செய்யுமென்வாய்பாட்டுப் பெயரெச்சங்கள். கனிதல்- முதிர்தல். வானோரும் என்பதில் உம்மையுயர்வுசிறப்பு.ஊறிஊறவென்பதன் றிரிபென்றலுமாம். மற்றையும்மைகள் எண்ணுப்பொருளன. வாயூறல்-வாயி ல்நீரூறல். முதல - முதன்மையென்னும் பண்படியாகப்பிறந்த பலவின்பாற் குறிப்புவினையாலணையும் பெயர். உளங்கனியும் என்பதில் கனிதல் விரும்பு தல் என்னும் பொருள்குறித்தது. ஒண்சினையதருக்களெல்லாம், விளங்கனி முதல,வானோரும் வாயூறி யுளங்கனியும்வகைபழுத்த எனமுடித்துக்கொள்க. விளங்கனிமுதலிய ஆறும் சினைத்தற்கிழமைப் பொருளவாகிய ஆறும்வேற் றுமைத்தொகை நிலைத்தொடர்கள். பழுத்த - பலவின்பாற்படர்க்கை யிறந்த காலவினைமுற்று. இது அன்சாரியைபெறாமல் வந்தது. இதற்கு வினைமுதல் விளங்கனிமுதலியன. பழுத்த என்பதைப் பெயரெச்சமாகவும், சினைய என் பதைக் குறிப்பு வினைமுற்றாகவுங்கொண்டு, தருக்களெல்லாம் பழுத்தகிளை களையுடையன எனப்பொருள் கூறினும் பொருந்தும். (கஎ)

சந்தநறு மலர்ச்சேக்கைச் சதுமுகனு ருகுநாளு
மிந்தவனக் கழிவின்றென் றியாவருநன் கெடுத்துரைப்பக்
கந்தமலர் தளிர்துறுமிக் காய்கனிபிஞ் சுகடூங்க
மந்திகளு மறியாத மரங்கள்பல வோங்கியதால்.

(ப - ரை.) சந்தம் - அழகாகிய, நறுமலர் - மணமுள்ள தாமரைமலரா கிய, சேக்கை - ஆசநத்தையுடைய, சதுமுகனுர் - நான்குமுகங்களையுடைய பிரமதேவர், உகும்நாளும் - அழியும் நாளினும், இந்தவனக்கு - இந்தவனத் துக்கு, அழிவு இன்று என்று - அழிவில்லையென்று, யாவரும் - எல்லாரும், நன்குஎடுத்துஉரைப்ப - மிகுதியாகப் புகழ்ந்துசொல்ல, கந்தம் - வாசனை யுள்ள, மலர் - மலர்களும், தளிர் - தளிர்களும், துறுமி - நெருங்கி, காய் கனிபிஞ்சுகள் - காயும் கனியும் பிஞ்சும், தூங்க - (பலித்துத்) தொங்க, மந்திகளும் அறியாத - குரங்குகளும் ஏறிமுடிவறியாத, மரங்கள்பல - பல வகைமரங்களும், ஓங்கிய - (அந்தவனத்தில்) உயர்ந்திருந்தன. எ - று.

(பொ - ரை.) அழகாகிய மணமுள்ள தாமரைமலராகிய ஆசநத்தை யுடைய நான்குமுகங்களையுடைய பிரமதேவர் அழியும் நாளினும் இந்த வன த்துக்கு அழிவில்லையென்று யாவரும் மிகுதியாகப் புகழ்ந்துசொல்ல, வாசனை யுள்ள மலர்களும் தளிர்களும் நெருங்கி, காயுங்கனியும் பிஞ்சும் (பலித்துத்) தொங்க, குரங்குகளும் ஏறிமுடிவறியாத பலவகை மரங்களும் (அந்தவனத் தில்) உயர்ந்திருந்தன. எ - று.

(வி - ரை.) பிரமகற்பத்திலும் இந்தவனத்துக் கழிவில்லை யென்று யாவருஞ்சொல்லும்படி, மலர்களையும் காய்கனிகளையுமுடையனவும், மந்தி களுமேறவொண்ணுதுயர்ந்திருப்பனவுமாகிய பலமரங்கள் இவ்வனத்திலுண் டென்பது கருத்து. பிரமன் தாமரைமலரில்வாழ்பவனுதலால் 'சந்தமலர்ச் சேக்கைச் சதுமுகனுர்' என்றூர். சதுமுகனுர் என்றகுறிப்பால் மலர் தாமரை மலருக்காயிற்று. மலர்ச்சேக்கை இருபெயரொட்டுப் பண்புத்தொகை. சேக் கை இவ்விடத்து ஆசநம் என்னும்பொருள் குறித்துவந்தது. வனம் மகரங் கெட்டு அத்துச்சாரியைபெறுமல் உருபேற்றுவனக்கு எனவந்தது. மரக்கிளை களில்வாழ்தலாகிய காரணத்தால் சாகாமிருகம் எனப்பெயர்பெற்ற குரங்கு களும் ஏறமுடியாத என்றமையால் மரங்களின் உயர்ச்சிக்கெல்லை யின்மை பெறப்பட்டது. "மந்தியுமறியாமரன்பயிலடுக்கத்து" என்றூர் நக்கீரதேவ நாயனுரும். 'மந்திகளுமறியாத என்னும் உம்மை "குறவருமருளுங்குன்றம்" என்பதிற்போல உயர்வுசிறப்புப்பொருளது. மந்தி பெண்குரங்குக்குச்சிறப்பு ப்பெயராயினும் இவ்விடத்துக் குரங்கென்னும் பொதுப்பெயராய் நின்றது. ஓங்கிய அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைவினைமுற்று. கந்தம் வடமொழி. துறுமியென்பதற்குத் துறுமு பகுதி. காய்கனி பிஞ்சுகள் என்பவற்றில் எண் ணும்மைகள் தொக்கன. ஓங்கியது என்றும்பாடம். இப்பாடங்கொண்டால் 'வனம்' ஓங்கியதென முடித்துக்கொள்க. சதுமுகனுருக்கு நாள் என்றது

பிரமகற்பத்தை, மாநுடருக்குக் கலிமுதலிய நான்குங்கூடி ஒரு சதுர்யுகமெனப்படும், இந்தச் சதுர்யுகங்களிரண்டாயிரங் கூடினால் பிரமனுக்கு ஒரு நாள், இப்படிப்பட்டநாள் முந்நூற்றறுபத்தைந்து கொண்ட வருடங்கள் நூறு கழியுமாயின் பிரமனுக்கு இறுதிக்காலமென்பர். இதுவே பிரம கற்பம்.

கலிவிருத்தம்.

இறவு பாய்கட லேறுவர் நீங்குற
நறவு பாயு நறுமலர்க் கொம்பர்விண்
ணுறவு கொண்டிட வுற்றவக் கானிடைக்
குறவ ரும்மருள் குன்றமொன் றுண்டரோ.

இது அக்காட்டிற் குறவருமருளுமோர் மலையுண்டெனக் கூறுகின்றது.

(ப - ரை.) இறவுபாய்கடல் - இறால் மீன்கள் துள்ளுதற்கிடமாகிய கடலில், ஏறு - மிகுந்திருக்கிற, உவர் - உவர்த்தன்மை, நீங்குற-மாறும்படி, நறவுபாயும் - தேன், (பெருகிப்) பாய்கின்ற, நறு - மணம்பொருந்திய, மலர்க் கொம்பர் - பூங்கொம்புகள், விண்உறவுகொண்டிட - சுவர்க்கலோகத்தை நட்புக்கொள்ள, உற்ற - பொருந்திய, அ - அந்த, கான்இடை - காட்டின் நடுவில், குறவரும் மருள் - குறவரும் அஞ்சுதற்குரிய, குன்றம் ஒன்று உண்டு-மலையொன்றுளது. எ - று.

(பொ - ரை.) இறால் மீன்கள் துள்ளுதற்கிடமாகிய கடலில் மிகுந்திருக்கிற உவர்த்தன்மைமாறும்படி, தேன்பெருகிப்பாய்கின்ற மணம்பொருந்திய பூங்கொம்புகள் சுவர்க்கலோகத்தை நட்புக்கொள்ள, பொருந்திய அந்தக் காட்டின் நடுவில் குறவரும் அஞ்சுதற்குரிய மலையொன்றுளது. எ - று.

(வி - ரை.) கடனீர் உவர்ச்சுவை நீங்கி இனிய சுவையையடையும்படி தேன் பெருகிப்பாய்கின்ற பூங்கொம்புகள் ஆகாயத்தை யளாவப்பெற்ற அந்தக்காட்டில் மிகவுமுயர்ந்த ஒருமலையுண்டென்பது கருத்து. இறால் என்பது கடைக்குறையாய் இறுஎன்றாகி, இது குறியதன் கீழாகாரமாதலால் இற எனக்குறுகி, உகரச்சாரியை பெற்று, அது வகரவுடம்படுமெய்பெற்று இறவு என்றாயிற்று. நறா என்பது நறவுஎன்றாயிற்று. நறவுபாய்தல் உவர்நீங்குதற்குக்காரணமாகையால் நீங்குறகாரியப்பொருட்டாகிய எதிர்காலச்செயவெனெச்சம். கொம்பர் - அர் போலிபெற்றுவந்த கொம்பு என்னும் மென்றொடர்க்குற்றுகரம். உறவு - தொழிற்பெயர். கொண்டிட என்னும் செயவெனெச்சமுங்காரியப்பொருட்டாகையால் எதிர்காலத்தது. குறவரும் என்றவும்மை உயர்வு சிறப்பு. பாய்கடல், ஏறுவர், மருள்குன்றம் என்பனவினைத்தொகைநிலைத்தொடர்கள். குன்றுஎன்பது அம் சாரியை பெற்றுக்குன்றம் எனவந்தது. கா என்பதுனகரச்சாரியைபெற்றுக்கான் எனவந்தது. இடை இடப்பெயர். ஏழனுருபாகக்கொண்டு கானில் என்றுரைத்தலுமாம். குறவர் - குறிஞ்சிநிலமாக்கள். குன்றவர் என்பது மரூஉவாய்க்குறவர் என்றாயிற்று எனினும் பொருந்

தும். குறத்தியர் பெண்பால். குன்றம் ஒன்று - இருபெயரொட்டுப்பண்புத் தொகை. ஒன்று எண்ணலளவையாகுபெயர். இது குன்றம் என்பதற்கு விசேடணமாய் வரின் ஒரு என விகாரப்பட்டு ஒரு குன்றம் எனவரும். அரோ அசை. நீங்குற ஒருசொல், நீங்கவெனக்கொள்க. விண்உறவுகொண்டிட என்பதற்கு விண்ணுலகத்தில் பொருந்துதலைச்செய்ய எனப்பொருள் கூறலுமாம். (௯௯)

மஞ்சு லாவுமம் மாமலைச் சாரலில்
விஞ்சு விற்றொழின் மேவிய வேட்டுவர்
தஞ்சி றாருந் தரக்கின் பறழ்களுங்
குஞ்ச ரக்குழக் கன்றுங் குழுமுமால்.

இது முதல்மூன்று செய்யுட்கள் அம்மலையின் சிறப்புக்கூறுகின்றன.

(ப - ரை.) மஞ்சுஉலாவும் - மேகங்கள் சஞ்சரிக்கிற, அ - அந்த, மா - பெரிய, மலைச்சாரலில் - மலைப்பக்கத்தில், விஞ்சு - மிகுந்த, வில்தொழில் மேவிய - வில்வித்தையைப்பொருந்திய, வேட்டுவர்தம் - வேடருடைய, சிறாரும் - சிறுவரும், தரக்கின் - புலியின், பறழ்களும் - குட்டிகளும், குழவு - இளமையாகிய, குஞ்சரக்கன்றும் - யானைக்கன்றுகளும், குழுமும் - (ஒரிடத்தில்) கூடும். எ - று.

(பொ - ரை.) மேகங்கள் சஞ்சரிக்கின்ற அந்தப்பெரிய மலைப்பக்கத்தில், மிகுந்தவில் வித்தையைப்பொருந்திய வேடருடைய சிறுவரும் புலியின் குட்டிகளும் இளமையாகிய யானைக்கன்றுகளும் ஒரிடத்தில் கூடும். எ - று.

(வி - ரை.) அந்த மலைச்சாரலில் வேடச்சிறுவரும் புலிக்குட்டிகளும் யானைக்கன்றுகளும் விரோதமில்லாமல் கூடிவிளையாடும் என்பது கருத்து. பறழ்களும் கன்றும் ஆகிய இரண்டஃறிணைப்பெயர்களோடு சிறாரும் என்னும் உயர்திணைப்பெயர் விரவிவந்ததாயினும், "திணைபால் பொருள் பலவிரவின சிறப்பினும் மிகவினு மிழிபினுமொரு முடிபினவே" என்பதில் மிகவினும் என்பதனால் குழுமும் என அஃறிணைமுடிபேற்றன. மஞ்சுலாவுதற்குரிமைதோன்ற 'மாமலை' என்றார். வேடு - வேட்டை. (மிருகங்களைக்கொல்லுதல்.) இக்கொலைத்தொழிலிற் சிறந்தோராதலால் வேட்டுவர் எனப்படுவர். இது வேடர், வேடுவர் எனவருதலுமுண்டு. சிறார் - மைகெட நின்றசிறு என்னும் பகுதியீற்றுகரங்கெட்டு ஆர் என்னும் பலர்பால் விகுதிபுணர்ந்து நின்றது. இது சிறுவர் எனவருதலே பெருவழக்கு. பறழ், கன்று என்பன மரபுப்பெயர்கள். வேட்டுவர்தம் என்பதில் தம் சாரியை. மாமலை என்பதற்கு அழகிய மலையெனவும், விலங்குகள் சஞ்சரித்தற்கிடமாகிய மலையெனவும் பொருளுரைத்துக்கோடலுமாம். சாரல்தொழிலாகுபெயர். விற்றொழில்-வேட்டை. தரக்ஷு என்னும் வடசொல்தரக்கு எனத்திரிந்துவந்தது. இது தற்பவம் எனப்படும். சிறாரும், பறழ்களும், கன்றும் குழுமும் என்றமையால் விரோதமின்றிக்கூடி விளையாடும் எனப்பொருள்கொள்க. ஆல் - அசை. (௩௦)

உன்னு நற்கனி கந்தவு ணுவுண்டும்
பன்னு தோலுடுத் தும்பட ருங்குழ
றுன்னு மாறு தொடர்தரக் கட்டியு
மன்னு வேடரு மாதவர் போல்வரால்.

(ப - ரை.) உன்னும் - விரும்புதற்குரிய, நல்கனி - சிறந்தகனிகளும், கந்தம் - கிழங்குகளும் ஆகிய, உணுஉண்டும் - உணவையுண்டும், பன்னுதோல் உடுத்தும் - சொல்லப்பட்டதோலையுடுத்தும், படரும்குழல்-விரிந்தசிகை, துன்னும் ஆறு - நெருங்கும் வண்ணம், தொடர்தரக்கட்டியும் - சேரக்கட்டியும், மன்னுவேடரும் - நிலைபெற்றவேடர்களும், மாதவர்போல்வர் - பெரிய தவசிகளை நிகர்ப்பார்கள். எ - று.

(பொ - ரை.) விருப்புதற்குரிய சிறந்தகனிகளும், கிழங்குகளும் ஆகிய உணவையுண்டும், சொல்லப்பட்ட தோலையுடுத்தும், விரிந்தசிகை நெருங் கும் வண்ணம் சேரக்கட்டியும் நிலைபெற்றவேடர்களும் பெரியதவசிகளை நிகர்ப்பார்கள். எ - று.

(வி - ரை.) வேடரும், மாதவரும் கனிமுதலிய வுண்ணலாலும் தோலுடுத்தலாலும் சிகை கட்டுதலாலும் சமமாவர் என்பதுகருத்து. உன்னல்-நினைத்தல், அது இங்கு விரும்புதலுக்காயிற்று. கந்தம் உணு - இருபெயரொட்டுப்பண்புத்தொகை. உணு என்னும் பெயர்ச்சொல் உணவுஎனவும்வரும். வேடர்களும் என்றவும்மையிழிவு சிறப்பு. மாதவர் உரிச்சொற்றொடராதலால்வல்லினமாகியதகரமிரட்டாதாயிற்று. தவர்-தவம் என்னும் பண்படியாகப் பிறந்த பலர்பாற்பெயர். போல்வர் - போல் என்னும் உவம இடைச்சொலடியாகப்பிறந்த எதிர்காலப்பலர்பால் வினைமுற்று. உன்னுநல்என்பதனைக் கந்தத்திற்கும் அடையாக்குக. உண்ணலாகாதகனிகந்தங்களை நீக்குதற்கு உன்னு நற்கனிகந்தம் என்றார். தோல்-புலி, மான்முதலியவற்றின்தோல். படருங்குழல் - விரிந்தமயிர் (சிகை). கட்டுதல்-உச்சியிற்சேர்த்து முடிதல். மன்னுதல் அக்குன்றில் நிலைபெற்றுவாழ்தல். மா மஹா என்னும் வடசொற்றிரிபு. ஆல் அசையிடைச்சொல், வியப்பிடைச்சொல்லாகக் கோடலுமாம், இழிந்தவேடரும் உயர்ந்த தவத்தோரை நிகர்த்தலால். (௩௪)

சிங்கம் யானைவெஞ் சீற்றப் புலியுழை
மங்க ருந்திறன் மன்னு குடாவடி
துங்க யாளி துறுமி யெழுப்புறும்
பொங்கு மோதை புவனம் பொதியுமால்.

(ப - ரை.) சிங்கம் - சிங்கம், யானை - யானை, வெம் சீற்றம்-கொடிய கோபத்தையுடைய, புலி - புலி, உழை - மான், மங்கு அரு - கெடுதலில்லாத, திறல்மன்னு - வலிமிகுந்த, குடாவடி - கரடி, துங்கம் - உயர்வாகிய, யாளி - யாளி, (இவைகள்,) துறுமி - நெருங்கி, எழுப்புறும் - எழுப்புகின்ற,

பொங்கும் ஓதை - மிகுந்த முழக்கமானது, புவனம் பொதியும் - உலகமுழு தும் வியாபிக்கும். எ - று.

(பொ - ரை.) சிங்கம், யானை, கொடிய கோபத்தையுடைய புலி, மான், கெடுதலில்லாத வலிமிகுந்த கரடி, உயர்வாகிய யாளி, இவைகள் நெருங்கி எழுப்புகின்ற மிகுந்த முழக்கமானது, உலகமுழுதும் வியாபிக்கும். எ - று.

(வி - ரை.) சிங்கமுதலியவைகளின் முழக்கம் உலகமுழுதும் வியாபிக்கும் என்பதுகருத்து. சிங்கமுதலிய-பால்பகா அஃறிணைப் பெயர்களின்றில் எண்ணும்மைகள் தொக்கன. யானையாளி என்பன மருஉவாய் ஆனை ஆளி எனவும் வழங்கும். சீற்றப்புலி-இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும் உடன் தொக்கதொகை நிலைத்தொடர். மங்குமுதனிலைத்தொழிற்பெயர். உள்வாகிய பாதமுடையதாதலால் கரடி குடாவடி யெனப்பட்டது. துங்கம்-உயர்வு. யாளி - யாளி யானை. இது சிங்கத்திலும் வலியமிருகம். சிங்கம் எனவாளா கூறி துங்கயாளியென அடைமொழிதந்துரைத்ததும் இதுபற்றியே. (௩௨)

வார ணத்தின் மருப்புகு முத்தமுங்
காரு லாவுங் கழையுகு முத்தமுஞ்
சீர ளாவித் திகழ்கதிர் வார்கடற்
பாரெ லாமிரு ளோப்பிப் பரக்குமே.

(ப-ரை.) வாரணத்தின்மருப்புஉகும் முத்தமும்-யானையின்கொம்புகளினின்றும் சிந்துகின்ற முத்துக்களும், கார்உலாவும்கழை உகும்முத்தமும்-மேகங்கள் தவழ்தற்கிடமாகிய மூங்கிலினின்றும் சிந்துகின்ற முத்துக்களும் ஆகிய இவற்றின், சீர் அளாவிதிகழ்கதிர் - மேன்மையடைந்து விளங்குகின்ற ஒளியானது, வார்கடல் - நெடிய கடலாற்சூழப்பட்ட, பார் எல்லாம் - பூமிமுழுதும் நிறைந்திருக்கிற, இருள் - இருட்டை, ஒப்பி - ஓட்டி, பரக்கும்-எங்கும் வியாபிக்கும். எ - று.

(பொ ரை.) யானையின் கொம்புகளினின்றும் சிந்துகின்ற முத்துக்களும், மேகங்கள் தவழ்தற்கிடமாகிய மூங்கிலினின்றும் சிந்துகின்ற முத்துகளும் ஆகிய இவற்றின்மேலாகிய வொளியானது நெடியகடலாற் சூழப்பட்ட பூமிமுழுதும் நிறைந்திருக்கிற இருட்டையோட்டி எங்கும் வியாபிக்கும். எ - று.

(வி - ரை.) உகுதல் - உதிர்தல் எனினுமாம். முக்தம்-வடசொல். அது திரிந்து முத்தம் என வந்தது. ஈறு தொகுத்தலாய்முத்தெனவருதலுமுண்டு. கார் உலாவும் கழைஎன்பதற்கு மேகமண்டலத்தளவு முயர்ந்த மூங்கில் என்றுரைப்பினும் பொருந்தும். சீரளாவி - மிகுந்து. ஒப்புதல் - நீக்குதல், விலக்குதல் எனினுமாம். "விலக்கிவீங்கிருளோட்டிமே லோர் இலக்குமுத்தினினம்" என்பதூஉமிக்கருத்துப்பற்றியே. இருளுள்ளளவும் பரந்தாரப்பலாமை

யால், 'இருளோப்பிப்பரக்கும்' என்றார். யானைக்கொம்புமுதலியவற்றில் முத்துப்பிறக்குமென்பது,

"தந்திவராகமருப்பிப்பி பூகந்தனிக்கதலி
நந்துசலஞ்சலமீன்றலைகொக்குநளினமின்னார்
கந்தரஞ்சாலிகழை கன்னலாவின்பல் கட்செவிகார்
இந்து வுடும்புகராமுத்தமீனு மிருபதுமே"

"கயல்கொக்குடும் பின் சிரசுகளுங் கரிக்கோடேனமுடக்கோடும்
கழையுங்கரும்புங் கமுகினமூங் கதலிசாலி கடிக்கமலம்
புயனத்தாதி தருமுத்தம் புனலிற் கனலிற் புடவியினில் [வேண்டேம்
பொன்றும் பொதியிற் கேழொளிபோம் பொருந்தும் விலையுண்டவை
இயல்புற்றென்றுனழிவிலதாய் என்றும் புதுமைதருமொளியாய்
எவர்க்கு மதிக்கவரிதாகி யிருந்து மிகுந்த மதுரமெலாம்
முயல்வுற்றளிக்கு நின்கனிவாய் முத்தந்தருக முத்தமே
முகுந்தன் மருகா சமரபுரி முருகா முத்தந் தருகவே"

"கொழுதிமதர் வண்டுழக்கு குழற்கோதைக் குடைந்தகொண்டலுநின்
குதலைக்கிளிமென் மொழிக்குடைந்த குறுங்கட்கரும்புங்கூன்பிறைக்கோ
டுழுத பொலன்சீறடிக்குடைந்த செந்தாமரையும் பசுங்கழுத்துக்
குடைந்தகமஞ்சூற் சங்குமொழுகொளிய கமுகு மழகு தொய்யில்
எழுதுதடந்தோட் குடைந்த தடம்பணையும் பணைமென் முலைக்குடைந்த
இணைமாமருப்புந் தருமுத்துன்றிரு முத்தொவ்வாவிகபரங்கள்
முழுதுந்தருவாய் நின்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முக்கட்சுடர்க்கு விருந்திடுமும் முலையாய் முத்தந்தருகவே"

"சேயனணியன் சிறியன் பெரியனென்பதுஞ் சிலர்பேசக்கேட்டிருந்
தேயென்னெஞ்சமென்பாயெனக்கொன்றுசொல்லாதே
வேய்கள் நின்றுவெண்முத்தமே சொரிவேங்கடமலை கோயின்மேவிய
ஆயனுயகர்க்கின்றடிமைத் தொழில் பூண்டாயே"

"கலையிரங்குமகலல்குலரக்கர் குலக்கொடியைக்
காதொருமூக்குடனரியக் கதறியவளோடித்
தலையிலங்கைவைத்து மலையிலங்கைபுகச்செய்த
தடந்தோளன்மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
சிலையிலங்குமணிமாடத்துச்சிமிசைச்சூலஞ்
செழுங்கொண்டலகடிரியச் சொரிந்தசெழுமுத்தம்
மலையிலங்கு மாளிகைமேன் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்குமட நெஞ்சே"

"சேயனென்று மிகப்பெரியனுண்ணேர்மையனுயவிம்
மாயையாருமறியாவகையானிட மென்பரால்

வேயின் முத்துமணியுங் கொணர்ந்தார் புனற்காவிரி
ஆயபொன்மாமதில்சூழ்ந்தழகாய தென்னரங்கமே"

"வருமதபொருப்பு நடுவளைமருப்பு வயிறு தருமுத்த
மொளிகளைத்தபழுப்புறும்
வரைமுளியமுற்று மனலெழுவனத்துவளரும் வெதிர்முத்த
முடல் கொதிப்ப வெதுப்பெழும்
வரியளியிசைக்குமனமுருகிமொட்டு மலர்வனசமுத்த
நிலவு செக்கர் முகத்தெழும்
மகிணர்கரமுற்ற கலவியிலிறுக்குமகளிர் களமுத்த
முருளுமுச்சியதுக் குணும்
உருகெழவெளுத்தபிறை புரையெயிற்ற வுரகமணிமுத்தம்
விடவழற்பொடி பட்டிடும்
உலகுடலிருட்டு முகிலுளிதுவற்ற வுடனெழுகு முத்த
மொழுகிருட்டொளி யுட்படும்
உடைதிரையுடைப்பவுவரிவிளையிப்பியுமிழுமணிமுத்த
நெடிய வெக்கர் மணற்படும்
ஒழுகமடை பட்டமதுமடலுடைக்கு முயர்கமுகமுத்த
மரகதத்த பசுப்பெழும்
வெருவிவலைகட்டவணவியலைத்திவிழுசுறவமுத்த
மயினுதித்தலை முட்படும்
மிடறுலியெடுப்ப வெழும்வளியுலர்த்த வெளியவளை முத்த
மறவெறித்தெழு நெய்ப்பறும்
விளைகழனி நெற்கண்விரவு பருமுத்தமுலவிய வெருத்த
கவையடிப்பட விட்புணும்
விரிகதிர்பரப்பவிலை தழையுமிக்கு விளையுமுழுமுத்த
முரலரைப்பவிழைப்புணும்
இருநிலமடுத்து முகமுழுகளிற்றினெயிறு சொரிமுத்த
முறுபரற்கணறுப்புறும்
இவைதவிர முத்தமணி சிலவிரட்டை படுமொளிமறக்கு
மெனவனைத்து முவக்கிலெம்
எறிபுனலுடுத்த தலையருவிசுற்று மிடபநெடு வெற்ப
விதழின்முத்தமளிக்கவே
இளமதியொழுக் குமமுதருவிசுற்று மிடபநெடுவெற்ப
விதழின் முத்தமளிக்கவே"

என்றற்றொடக்கத் தனவற்றுலினிது விளங்கும்.

முதலிரண்டடிகளி னீற்றிலுள்ளவும்மைகள் எண்ணுப்பொருளன. (௯௫)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பருமணிச் சுடிகைப் பஃறலை யரவம் படரொளி மேருவைப் பொதிந்தாங், கிருளற விமைக்குங் கதிரொளி சமழ்ப்ப வெறிகதிர் மணிபல வேந்தி, மருவுவெள் ளருவி பொதிதர வான்றோய் மால்வரை செறியமிக் குயர்ந்த, பெருவரை முடியி லுள்ளதொன் றளவாப் பெருந்தவ முனிவர்தஞ் சேரி.

இது அம்மலையுச்சியில் ஓர் பிராமணச் சேரியுண்டு எனக்கூறுகின்றது.

(ப - ரை.) பருமணி - பெருத்தமாணிக்கமுள்ள, சுடிகை - உச்சிக்கொண்டையோடு கூடிய, பல்தலை - ஆயிரந்தலைகளையுடைய, அரவம்-(ஆதிசேஷனாகிய) பாம்பு,படர்ஒளி மேருவை-விரிந்த ஒளியையுடைய மேருமலையை, பொதிந்தாங்கு - வளைந்தாற்போல, இருள்அற இமைக்கும் - அந்தகாரங்கெடும்படி விளங்குகின்ற, கதிர் ஒளிசமழ்ப்ப - சூரியனது ஒளியும் நாணும்படி, எறிகதிர் - வீசுகின்ற ஒளியையுடைய, பலமணி - பலரத்நங்களை, ஏந்தி - தாங்கி, மருவுவெள் அருவிபொதிதர - பொருந்திய வெண்மையாகிய அருவிகள்சூழ, வான்தோய் - ஆகாயத்தைத்தொடுகின்ற, மால்வரை செறிய - பெரியமூங்கில்கள் நெருங்காநிற்க, மிக்குஉயர்ந்த - மிகவுமுயர்ந்த, பெருவரைமுடியில் - (அந்தப்) பெரியமலையின் சிகரத்தில், அளவா பெருதவம் - அளவிடப்படாத பெரிய தவத்தினையுடைய, முனிவர்தம்சேரி-முனிவரதுசேரி, ஒன்றுஉளது - ஒன்று உண்டு. எ - று.

(பொ-ரை.) பெருத்தமாணிக்கமுள்ள உச்சிக்கொண்டையோடு கூடிய ஆயிரந்தலைகளையுடைய (ஆதிசேஷனாகிய) பாம்பு, விரிந்த ஒளியையுடைய மேருமலையை வளைந்தாற்போல அந்தகாரங்கெடும்படி விளங்குகின்ற சூரியனது ஒளியும் நாணும்படி வீசுகின்ற ஒளியையுடைய பலரத்நங்களைத்தாங்கி பொருந்திய வெண்மையாகிய அருவிகள்சூழ, ஆகாயத்தைத் தொடுகின்ற பெரிய மூங்கில்கள் நெருங்காநிற்க,மிகவுமுயர்ந்த அந்தப்பெரிய மலையின் சிகரத்தில் அளவிடப்படாத பெரியதவத்தினையுடைய முனிவரது சேரி யொன்றுண்டு. எ - று.

(வி - ரை.) அம்மலையின்மேல் முனிவர் சேரியொன் றுண்டென்பது கருத்து. 'சுடிகைப்பஃறலையரவம்' என மேல்வருதலால் பருமணியென்பது மாணிக்கத்தைக்குறித்தது. பருமணி, பல்தலை, வெள்ளருவி, பெருவரை, பெருந்தவம் என்பன பண்புத்தொகை நிலைத்தொடர்கள். பல்தலை பஃறலையெனத்தனிக்குறிலின் பின்னின்ற லகரம் ஆய்தமாகத்திரிந்துவந்தது. அரா என்பது ஆகாரம்குறுகி உகரச்சாரியையுடன் அம் சாரியையும்பெற்று அரவம் எனவந்தது. ஆங்கு உவமவிடைச்சொல். அற, சமழ்ப்ப, பொதிதர, என்பன காரியப்பொருளவாகிய செயவெனெச்சங்கள், தோய் - வினைத்தொகை வினைச்சொல். மால் - பண்புப்பெயர், வரை - கணு. அது சினையாகுபெயராய்



நாடுநகரம்.

மூங்கிலையுணர்த்திற்று. செறிய - நிகழ்காலச்செயவெனெச்சம். மிக்கு - பகுதியொற்றிரட்டி யிறந்தகாலங்காட்டியவினையெச்சம். வரை - மூங்கில், அது தானிருத்தற்கிடமாகியமலையை யுணர்த்தலால் தானியாகுபெயர். முடி - முதனிலைத்தொழிலாகுபெயர். அளவா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், இவ்வெச்சங்களின் முன்வரும் வல்லினமிகுந்தேவரும். முநிவர் - கடவுளை மநநஞ்செய்வோர், இது வடசொல்லென்றறியாத சிலர் இதற்கு உலகப்பற்றுக்களை வெறுத்தவர் எனப்பொருளுரைப்பர். சேரி - சேர்ந்திருக்குமிடம். முநிவர்தஞ்சேரி - இடப்பிறிதின்கிழமைப் பொருட்டாகிய ஆறும் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். தம்-சாரியை. "படரொளிமேரு" என்றூர் பொன்மலையாதலான், எறிகதிர் மணிபல என்றது மாணிக்கமுதலிய பல வகைரத்நங்களை. பொதிதர ஒரு சொல். இதற்குப்பகுதி பொதிதா. (சுச)

அருமறை முழக்கும் வினைதபும் யாக வழற்கணன் மந்திர முழக்கும், பெருமைசால் சுரரைக் கூயவி யளிக்கும் பெருமுழக் கமுமவ ரேற்குஞ், செருமலி முழக்கு முண்டபி னாசி செப்பிடு முழக்கமு மொன்றிக், கருநிறங் கரைகொன் றிரங்கெறி தரங்கக் கடன்முழக் கெழாவகை யடக்கும்.

இதுமுதல் மூன்று செய்யுட்கள் அச்சேரியின் சிறப்புக் கூறுகின்றன.

(ப-ரை) அருமறை முழக்கும் - அருமையாகிய வேதமுழக்கமும், வினை தபும்-வினைகளையழித்தற்குரிய, யாக அழற்கண் - யாகாக்கினியின்கண் ஓதப்படுகிற, நல்மந்திர முழக்கும் - சிறந்தமந்திரமுழக்கமும், பெருமைசால் - பெருமை நிறைந்த, சுரரை - தேவரை, கூய் - கூவி, அவி அளிக்கும் - அவிர்ப்பாகங்கொடுக்கிற, பெருமுழக்கமும் - பெரியமுழக்கமும், அவர் ஏற்கும் - அவர்கள் ஏற்றுக்கோடலினுண்டாகிற, செருமலிமுழக்கும் - போர்மிகுமுழக்கமும், உண்டபின் - (அவிசை) உண்டபிறகு, ஆசி செப்பிடும் முழக்கமும் - (யாககர்த்தாவுக்கு) ஆசிகள் கூறுகின்றமுழக்கமும், ஒன்றி - ஒன்றுபட்டு, கருநிறம் - கருநிறத்தையும், கரைகொன்று - கரையைக்கரைத்து, இரங்கு - ஒலிக்கின்ற, எறி - வீசுகின்ற, தரங்கம் - அலைகளையுமுடைய, கடல்முழக்கு - கடலினது முழக்கம், எழாவகை - மேலிடாவண்ணம், அடக்கும் - அடக்கிவிடும். எ - று.

(பொ - ரை) அருமையாகிய வேதமுழக்கமும், வினைகளையழித்தற்குரிய யாகாக்கினியின்கண் ஓதப்படுகிற சிறந்தமந்திரமுழக்கமும், பெருமை நிறைந்த தேவரைக்கூவி அவிர்ப்பாகங்கொடுக்கிற பெரியமுழக்கமும், அவர்கள் ஏற்றுக்கோடலினுண்டாகிற போர்மிகுமுழக்கமும், (அவிசை) யுண்டபிறகு, யாககர்த்தாவுக்கு ஆசிகள் கூறுகின்றமுழக்கமும் ஒன்றுபட்டு, கருநிறத்தையும் கரையைக்கரைத்து ஒலிக்கின்ற வீசுகின்ற அலைகளையுமுடைய கடலினது முழக்கம் மேலிடாவண்ணம் அடக்கிவிடும். எ - று.

(வி - ரை.) வேதமுழக்கம்முதலியன ஒன்றாய்க்கூடிக் கடல்முழக்கத்தை யடக்கிவிடும் என்பது கருத்து. மறை - செயப்படுபொருளுணர்த்தும் ஐகார வீற்றுத் தொழிலடியாகப் பிறந்தபெயர். அந்தணரல்லார்க்கு மறைக்கப்பட்டது என்பது பொருள். இவ்வாறன்றி, அறமுதலியநாற் பொருள்களுமறைந்திருத்தற் கிடமாகிய முதனூல் என்றுரைத்தலுமாம். முழக்கு முழங்கு என்னு முதனிலைதிரிந்த தொழிற்பெயர். மறைமுழக்குமுதலிய ஆறாம்வேற்றுமைத் தொகைகள் தொழிற் பண்புத்தற்கிழமைப் பொருளன. சுரர் - பாற்கடலினுண்டாகிய மதுவையுண்டவர். அதனையுண்ணாமையால் தானவர் அசுரர் எனப்பட்டார். செப்பிடும் - திசைச்சொல். கருநிறக்கடல் என்றியைத்து இரண்டாம்வேற்றுமை யுருபும் பயனுமுடன் றொக்கதொகையாகக் கொள்க. அமி - தேவருணவு. ஆசி - வாழ்த்து. (சரு)

தருப்பைகொய் குநருஞ் சமிதைதே டுநருந் தழைந்தமா விலைபறிக் குநரும், விருப்பொடு நல்லா னைந்துகூட் டுநரும் வியன் பவித் திரமுடி குநரு, மருப்புமென் மலர்நந் தனவனந்தன்னை யடைந்தெடுக் குநருநூ லாய்ந்த, திருப்பொலி பெரியோர்க் குபசரிக் குநருஞ் செறிதர விளங்குமச் சேரி.

(ப - ரை.) தருப்பை கொய்குநரும் - தருப்பையை யறுப்பவரும், சமிதை தேடுநரும் - சமிதை தேடுவோரும், தழைந்த - செழித்த, மாவிலைபறிக்குநரும் - மாவிலையைப் பறிப்போரும், விருப்பொடு - விருப்பத்தோடு, நல் ஆன் - சிறந்தபசுக்களின், ஐந்து - பஞ்சதிரவியங்களையும், கூட்டுநரும்-சேர்ப்போரும், வியன் - பெருமையுள்ள, பவித்திரம் முடிகுநரும் - பவித்திரத்தை முடிவோரும், அரும்பு - அரும்புகளையும், மெல்மலர் - மெல்லிய மலர்களையும், நந்தனவனந் தன்னையடைந்து - நந்தனவனத்தையடைந்து, எடுக்குநரும் - எடுப்போரும், நூல் ஆய்ந்த-சாஸ்திரங்களையாராய்ந்த, திருபொலி - அழகுமிகுந்த, பெரியோர்க்கு - மேலோருக்கு, உபசரிக்குநரும் - உபசாரஞ் செய்வோரும், செறிதர - நெருங்க, அச்சேரிவிளங்கும்- அந்தச்சேரியானது பிரகாசிக்கும், எ - று.

(பொ - ரை.) தருப்பையை யறுப்பவரும், சமிதைதேடுவோரும், செழித்தமாவிலையைப்பறிப்போரும், விருப்பத்தோடு சிறந்த பசுக்களின் பஞ்சதிரவியங்களையும் சேர்ப்போரும், பெருமையுள்ள பவித்திரத்தை முடிவோரும், அரும்புகளையும் மெல்லியமலர்களையும் நந்தனவனத்தையடைந்து எடுப்போரும், சாஸ்திரங்களை யாராய்ந்த அழகுமிகுந்த மேலோருக்கு உபசாரஞ் செய்வோரும் நெருங்க அந்தச்சேரியானது பிரகாசிக்கும். எ - று.

(வி - ரை.) அந்தச்சேரியானது தருப்பை கொய்வோர் முதலியோர் நெருங்கி விளங்கப்பெற்றது என்பதுகருத்து. கொய்குநர் முதலியவை நிகழ்காலப்பலர் பால்வினையாலணையும் பெயர்கள். இவற்றில்நகரமெய் நிகழ்காலங்

No. 4. PAGE. No. 70.



அந்தணர் தொழில்கள்.

காட்டும். இவைகட்குப்பகுதிகள் முறையேகோய், தேடு, பறி, கூட்டு, முடி, எடு, உபசரி என்பன. இவற்றிலுள்ள கு-சாரியை. ஐந்து எண்ணலளவையாகு பெயர். ஆனைந்து சினைத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகையென்றுவது ஏழாம்வேற்றுமை யுருபும் பயனுமுடன் றொக்க தொகையென்றுவது கொள்க. ஆனைந்தாவன - பால், தயிர், நெய், கோமயம், கோமூத்திரம் என்பன இவற்றில் கோமயம்-ஆப்பி (சாணம்); இவை பஞ்சகவ்விய மெனப்படும். அரும்பு அருப்பு எனவலித்தலாயிற்று, இது முதனிலைத் தொழிலாகுபெயர். அரும்புதல் - மொக்குவிடுதல். சமிதை - ஓமவிறகு. அது - அத்தி, அரசு, ஆல், இத்தி, கருங்காலி, நாயுருவி, பலாசு, மா, வன்னி, என்னும் ஒன்பதுவகையாகிய விறகு சேர்ந்தது. இதனை சமித் என்பர் வடநூலார். நூலாய்ந்த என்ற விசேடணத்தால் திரு -கல்விச்செல்வம் என்றுரைப்பினும் பொருந்தும். (சக)

சரியைய ரொருபாற் கிரியைய ரொருபாற் சார்ந்தயோ கத்தின ரொருபாற், பெரியஞா னத்தி னிற்பவ ரொருபாற் பெட்பொடு போதிப்பா ரொருபால், விரிதரு மோத்துக் கற்பவரொருபான் மெய்ப்பொருள் பொய்ப்பொரு ளிரண்டுந்,தெரிதரவிசாரஞ் செய்பவ ரொருபாற் றிகழ்தரப் பொலியுமச்சேரி.

(ப - ரை.) சரியையர் - சரியை செய்பவர், ஒருபால்-ஒருபக்கத்திலும், கிரியையர் - கிரியை செய்பவர், ஒருபால் - ஒருபக்கத்திலும், சார்ந்தயோகத்தினர் - யோகத்தை யநுஷ்டிப்பவர், ஒருபால் - ஒரு பக்கத்திலும், பெரிய ஞானத்தில் - பெரிதாகிய ஞானநிலையில், நிற்பவர் - நிற்பவர்கள், ஒருபால் - ஒருபக்கத்திலும், பெட்பொடு - அன்போடு, போதிப்பார் - போதிப்பவர்கள், ஒருபால் - ஒருபக்கத்திலும், விரிதரும் - விரிவாகிய, ஓத்து - வேதங்களை, கற்பவர் - கற்போர்கள், ஒருபால் - ஒருபக்கத்திலும், மெய்ப்பொருள் பொய்ப்பொருள் இரண்டும் - மெய்ப்பொருள்களும் பொய்ப்பொருள்களுமாகிய இரண்டையும், தெரிதர - அறிய, விசாரம் செய்பவர் - விசாரிப்பவர்கள், ஒருபால் - ஒருபக்கத்திலும். திகழ்தர - விளங்க, அச்சேரி - அந்தச்சேரியானது, பொலியும் - பிரகாசிக்கும். எ - று.

(பொ - ரை.) சரியை செய்பவர் ஒரு பக்கத்திலும் ,கிரியை செய்பவர் ஒருபக்கத்திலும், யோகத்தை யநுஷ்டிப்பவர் ஒருபக்கத்திலும், பெரிதாகிய ஞானநிலையில் நிற்பவர்கள் ஒருபக்கத்திலும், அன்போடு போதிப்பவர்கள் ஒருபக்கத்திலும், விரிவாகிய வேதங்களைக் கற்போர்கள் ஒருபக்கத்திலும், மெய்ப்பொருள்களும் பொய்ப்பொருள்களுமாகிய இரண்டையும் அறிய விசாரிப்பவர்கள் ஒருபக்கத்திலும் விளங்க அந்தச் சேரியானது பிரகாசிக்கும். எ - று.

(வி - ரை.) சரியை முதலாயின செய்வோர் பலரும் நெருங்கிவாழ அந்தச் சேரியானது விளங்குமென்பது கருத்து. சரியையாவது - கோயிலுக்

குச் சென்று திருவலகிடல், திருமெழுக்கிடல், திருவிளக்கிடல் முதலியன. கிரியையாவது மலர், தூபம், திருமஞ்சநம் முதலியவை செய்தல். யோகமாவது - ஐம்புலனவித்து, இடைபிங்கலைகளினியக்கமடக்கி, சுழுமுனைநாடி வழியே சென்று புருவநடுவில் ஒளியுருவாகிய கடவுளைக்கண்டின்புற்றிருத்தல். ஞானமாவது - அறிவுருவாய்த் திரிபுடிநீங்கி நிஸ்தரங்க ஸமுத்ரம் போலிருக்கும் நிலை. திரிபுடி - காண்பான், காட்சி, காட்சிப்பொருள் என மூவகைப்படும். இவற்றை ஜ்ஞாத்ரு, ஜ்ஞாநம், ஜ்ஞேயம், என்பர் வடநூலார். ஓது என்னும் முதனிலை ஒத்து எனத்திரிந்து ஓதப்படுவதாகிய வேதத்தை யுணர்த்தலால் முதனிலைத் தொழிலாகுபெயர். விசாரம்-தொழிற்பெயர். இது வடசொல் (சஎ)

ஆங்கதிற்குசேலப் பெயரினோன் முனிவ ரருங்குலத் தினிய பாற்கடலிற், பாங்குறு மதிபோற் றோன்றினோன் வண்டர் பாண் செய மணநறுக் கொழிக்கும், பூங்கம லத்தில் வாழ்பொறியிலகும் பொருப்பன நிறத்துமால் பதத்தைத், தாங்குறு முளத்தன் பொறிகடீச் செயலிற் சார்வுறா தடக்குறு மேலோன்.

இது முதல் ஒன்பது செய்யுட்கள் அச்சேரியில்வாழும் குசேலர் சிறப்புக் கூறுகின்றன.

(ப - ரை.) ஆங்கு அதில் - அச்சிகரத்திலுள்ள அந்தச் சேரியில், குசேலப்பெயரினோன் - குசேலன் என்னும் பெயரினையுடையவன், முனிவர் அருகுலத்து - முனிவரது அருமையுள்ள குலமாகிய, இனிய பாற்கடலின் - இனிய பாற்கடலின்கண், பாங்கு உறும்மதிபோல் - அழகு மிகுந்த சந்திரன்போல, தோன்றினோன் - அவதரித்தவன், வண்டர்பாண்செய - வண்டுகள் இசைபாட, மணம்நறுகொழிக்கும் - மணமுள்ளதேனைச் சொரிகின்ற, பூகமலத்தில் - பொலிவாகிய தாமரைமலரில், வாழ் - வாழ்கின்ற, பொறி இலகும் - திருமகள் விளங்காநின்ற, பொருப்பு அன்னநிறத்து - மலையைநிகர்த்த மார்பையுடைய, மால்பதத்தை - திருமாலின் திருவடியை, தாங்குறும் உளத்தன் - தரிக்கின்ற மனத்தையுடையவன், பொறிகள் - பஞ்சேந்திரியங்களும், தீசெயலில் - கொடுந்தொழிலில், சார்வு உறாது - சென்று பொருந்தாமல், அடக்குறும் - (அவற்றை) அடக்கியாளுகின்ற, மேலோன் - மேன்மையுள்ளவன். எ - று.

(பொ - ரை.) அச்சிகரத்திலுள்ள அந்தச் சேரியில் குசேலன் என்னும் பெயரினையுடையவன், முனிவரது அருமையுள்ள குலமாகிய இனிய பாற்கடலின்கண் அழகுமிகுந்த சந்திரன்போல அவதரித்தவன், வண்டுகள் இசைபாட மணமுள்ளதேனைச் சொரிகின்றபொலிவாகிய தாமரைமலரில் வாழ்கின்ற திருமகள் விளங்காநின்ற மலையை நிகர்த்த மார்பையுடைய திருமாலின் திருவடியைத் தரிக்கின்ற மனத்தையுடையவன், பஞ்சேந்திரி

யங்களும் கொடுந்தொழிலிற் சென்று பொருந்தாமல் (அவற்றை) யடக்கி யாளுகின்ற மேன்மையுள்ளவன். எ - று.

(வி - ரை.) பரமசாந்தராதலால் குசேலரை 'முனிவரருங் குலத்தினிய பாற்கடலிற் பாங்குறுமதிபோற் றோன்றினோன்' என்றார். 'மால்பதத்தைத் தாங்குறுமுளத்தன்' என்றமையால் வேறு தெய்வங்களை மனத்தாலும் நினையாதவர் என்றதாயிற்று. அந்தச் சேரியில் முனிகுலசிரேஷ்டராயும் பரமசாந்தராயும் திருமால் பதமன்றி வேறொன்றைமனத்திலும் நினையாதவராயும் உள்ள குசேலரென்றொரு முனிவரிருந்தார் என்பது கருத்து. குசேலன் - சிதைந்த ஆடையையணிந்தவன். இது காரண இடுகுறிப்பெயர். இது காரண இடுகுறியாவது எவ்வாறெனின், காரணங் கருதியவழி சிதைந்த ஆடையையணிந்தவர் பலர்க்குஞ் செல்லுதலாலும் காரணங்கருதாதவழி இடுகுறிமாத்திரையாய் இவர்க்கே செல்லுதலாலும் என்க. இவர்க்கு சுதாமா என்பது இயற்பெயர். முக்கணன், அந்தணன், மறவன், முள்ளி என்பனவும் இவ்வாறே காரண இடுகுறிப்பெயர்களாதலை யாராய்ந்தறிக. கிழிந்த ஆடையையணிந்த காரணத்தால் இவருக்கு இப்பெயர்வந்தது என்பதனை மேல்வரும் ௫௬ - ம் செய்யுளாலுமறிக. பெயரினோன்-பெயர்ப்பகுபதம். பெயர் - பகுதி. இன் - சாரியை. ஆன் - ஆண்பால் விகுதி. செய்யுளாகையால் விகுதி ஆகாரம் ஓகாரமாயிற்று. தோன்றினோன் என்பதும் இதுபோன்றது. வண்டு என்னும் மென்றொடர்க்குற்றுகரம் போலிபெற்று வண்டரெனவந்தது. பூங்கமலம் - பண்புத்தொகை நிலைத்தொடர். கமலம் - வடமொழிப்பெயர். இதற்குப் பொருள் நீரையலங்கரிப்பது என்பது. வாழ்பொறி - வினைத்தொகை நிலைத்தொடர். பொருப்பு - மார்புக்குமெய்யுவமை. மால் - விசித்திரசக்தியையுடையவன்; பெரியோன் எனினுமாம். இது பண்பாகுபெயர். பொறிகள்:மெய் வாய் கண்மூக்குச் செவியென்பன. திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் அதில் நின்றும் சந்திரன் தோன்றினமையால் 'பாற்கடலிற் பாங்குறுமதி போல்' என்றார். (௪அ)

தன்னுயிர் போல மன்னுயிர் புரத்தல் சான்றவர்க் குறுதி யென் றென்று, மன்னிய மறைநூன் மொழிந்திடு மதுமன் வாய் மையே யென்றுணர்ந் தவனுய்த், துன்னிய வுலகி லிருதிணை யுயி ருந் துங்கிய மகிழ்ச்சிமீக் கூர, நன்மையே புரிவான் றன்னமு முளத்தி னுடிடான் றீமைசெய் தலையே.

(ப - ரை.) தன் உயிர்போல - தன்னுயிரைப்போல, மன்உயிர் - நிலைபெற்ற உயிர்களை, புரத்தல் - காத்தல், சான்றவர்க்கு - மேலோர்க்கு, உறுதி என்று-உறுதியாம் என்று, என்றும் மன்னிய - எக்காலத்திலும் நிலைபெற்ற, மறைநூல் - வேதசாஸ்திரங்கள், மொழிந்திடுமது - சொல்லுவது, மன்-மிருதியும், வாய்மையே என்று - உண்மையே என்று, உணர்ந்தவன் ஆய் - அறிந்தவனாய், துன்னிய - (சீவர்கள்) நெருங்கிய, உலகில் - உலகத்தில், இரு

திணை உயிரும் - இருதிணையவாகிய உயிர்களும், தூங்கிய மகிழ்ச்சிமீக்கூர - தங்கிய களிப்பு அதிகப்பட, நன்மையே புரிவான் - நன்மையே செய்வோனும், தன்னமும் - அற்பமும், உளத்தில் - மனத்தில், தீமைசெய்தலை - தீங்குசெய்வதை, நாடிடான் - விரும்பாதவனும். எ - று.

(பொ - ரை.) தன்னுயிரைப்போல நிலைபெற்ற உயிர்களைக் காத்தல் மேலோர்க்கு உறுதியாமென்று எக்காலத்திலும் நிலைபெற்ற வேதசாஸ்திரங்கள் சொல்லுவது மிருதியும் உண்மையேயென்று அறிந்தவனும் (சீவர்கள்) நெருங்கிய உலகத்தில் இருதிணையவாகிய உயிர்களும் தங்கிய களிப்பு அதிகப்பட நன்மையே செய்வோனும் அற்பமும் மனத்தில் தீங்குசெய்வதை விரும்பாதவனும், எ - று.

(வி - ரை.) வேதத்தை "என்றும் மன்னியமறை" என்றது அநாதியாயும் நித்தியமாயும் இருத்தல் பற்றியென்க. உயிர் அழியாததாகையால் மன்னுயிர் என்றார். சான்றவர் - சால் என்னும் உரிச்சொலடியாகப் பிறந்த இறந்தகால வினையாலணையும்பெயர். உறுதியென்று என்பதில் என்று பெயரையடுத்துவந்த இடைச்சொல். பின்னுள்ள என்று காலப்பொருளுணர்த்தும் பெயர்ச்சொல். மறைநூல் - உம்மைத்தொகை நிலைத்தொடர். மறைநூலென்பதனை மறையாகிய நூலெனப் பண்புத்தொகை நிலைத்தொடராக்கி வேதமாகிய முதனூலெனப் பொருளுரைப்பினுமாம். மன் - நிலைபேற்றுப் பொருளதாகிய இடைச்சொல். இருதிணை உயிர்-உயர்திணையுயிர், அஃறிணையுயிர், உயர்திணையுயிர்களாவன: மக்கள், தேவர், நரகர்என்பன. அஃறிணையுயிர்களாவன: அவற்றை யொழிந்த வினைய உயிர்கள். திணை - சாதி. மீக்கூர என்பது ஒருசொல். இது உரியடியாகப்பிறந்த செயவெனெச்சம். இதற்கு அதிகரிக்க என்பது பொருள். ஏகாரம் - பிரிநிலை. தன்னமும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. புரத்தல் என்பதில் புர - பகுதி. நன்மை-சற்கிரியை. தீமை - துஷ்கிரியை. இவற்றை சற்கருமம், துஷ்கருமம் எனவும் கூறுப. ஒன்றைச்செய்ய விரும்புதலும் செய்ததனோடொக்குமாதலால் 'தன்னமுமுளத்தினாடிடான் றீமைசெய்தலை' யென்றார். நாடுதல் - நினைத்தல் எனினுமாம்.

(சுக)

அடக்கமும் பொறையுங் கருணையு நண்பு மழுக்கறுத் திலாமையு மென்றும், விடற்கருந் தவத்தோ டொருங்குற வளர்ப்போன் வெகுளியுங் காமமு மயக்குங், கடக்கருந் தீமை நாடொறும் விளைக்குங் கயவர்க டொடர்ச்சியுந் தன்னைத், தொடற்கரிதாக வடியறக் காய்ந்தோன் றூயர்க்குந் தூயவன் மாதோ.

(ப - ரை.) அடக்கமும் - அடக்கத்தையும், பொறையும் - பொறுமையையும், கருணையும் - கிருபையையும், நண்பும் - சிநேகத்தையும், அழுக்கறுத்திலாமையும் - பொறாமைப்படாமையையும், என்றும் - எந்நாளும், விட

ற்கு அரு - விடுதற்கு அரிய, தவத்தோடு - தவத்துடன், ஒருங்குற - ஒருமி க்க, வளர்ப்போன் - வளர்ப்பவனும், வெகுளியும் - கோபமும், காமமும் - காமமும், மயக்கும்-மயக்கமும், அடக்கஅரு - வெல்லுதற்கரிய, தீமை-பொல் லாங்கை, நாள்தொறும்-நாள்தோறும், விளைக்கும் - உண்டாக்குகின்ற, கயவர் கள் தொடர்ச்சியும் - கீழ்மக்களுடைய சம்பந்தமும், தன்னைதொடற்குஅரிது ஆக - தன்னைப்பற்றுதற்கரிதாக, அடிஅற - வேரற, காய்ந்தோன் - (அதனை) விட்டவனும், தூயர்க்கும் தூயவன் - பரிசுத்தர்க்குள்ளும் பரிசுத்தனும். எ-று.

(பொ - ரை.) அடக்கத்தையும் பொறுமையையுங்கிருபையையுஞ்சிநே கத்தையும் பொறாமைப்படாமையையும் எந்நாளும் விடுதற்கரிய தவத்துடன் ஒருமிக்கவளர்ப்பவனும், கோபமும், காமமும், மயக்கமும், வெல்லுதற்கரிய பொல்லாங்கை நாள்தோறும் உண்டாக்குகின்ற கீழ்மக்களுடைய சம்பந்த மும் தன்னைப்பற்றுதற்கரிதாக வேரற (அதனை) விட்டவனும் பரிசுத்தர்க்குள் ளும் பரிசுத்தனும். எ - று.

(வி - ரை.) "அடக்க மமரருளுய்க்கும்" என மேலோர் கூறியபடியே தவத்தோர்க்குரிய குணங்கள் பலவற்றுள்ளும் அடக்கம் சிறந்தமையின் அத னைமுன்வைத்தார். அடக்கம் முதலிய குணங்கள் தவத்தினர்க்கு இன்றியமை யாதன என்றற்கு, 'அடக்கமும் பொறையுங் கருணையுநண்பு மழுக்கறுத்திலா மையும்' என்றும், அது இடையில் விடத்தகுந்ததன்றென்றற்கு, 'என்றும் விடற்கருந்தவம்' என்றும் கூறினர். அடக்கம் பொறையென்பனஉடன்பாட் டுத்தொழிற்பெயர்கள், இவற்றிற்குப் பகுதிகள் முறையே அடங்கு, பொறு என்பன. நண்பு-தொழிற்பெயர். பகுதி-நள். காமம் வெகுளி மயக்கம்என்பன செய்யுளாதலால் 'வெகுளியுங்காமமுமயக்கும்' எனமாறிவந்தன. இவற்றை முக்குற்றம் என்பர். இக்குற்றங்களும் கயவர் தொடர்ச்சியும் பிறவித் துன்பத் தைமேன்மேலுமுண்டாக்குமென்றறிந்து அவற்றைப் பற்றறவிடுத்தவனாதலா ல்,'தன்னைத்தொடற்கரிதாகவடியறக் காய்ந்தோன்'என்றார். "காமம் வெகுளி மயக்கமிவை மூன்றின் - நாமங்கெடக்கெடுநோய்" "மருவுகமாசற்றார் கேண் மையொன்றீத்தும் - ஒருவுகவொப்பிலார் நட்பு" என்பன திருக்குறள். கய வர் - கயம் என்னும் பண்படியாகப் பிறந்தபெயர்ப்பகுபதம். கயம்-பெருமை, அது மங்கலவழக்காய்ப் பெருமைக்குணமில்லாத கீழோருக்காயிற்று. கயம் இழிவெனக்கொண்டு கயவர் கீழ்மக்கள் என்றலுமாம். அடக்கமாவது - மன மொழிமெய்கள் தீவழியிற் செல்லாதிருத்தல். பொறையாவது ஒருவன் அறி யாமையாலேனும் ஒருகாரணத்தாலேனும் தீமைசெய்தால் அதனைத் தாமும் செய்யாது பொறுத்திருத்தல். கருணையாவது எல்லா வுயிர்களிடத்துமுள்ள இரக்கம். நண்பாவது - சிநேககுணம். இதனை, மைத்திரி என்பர் வடநூலார். அழுக்கறுத்தலாவது - பிறர்செல்வங்கண்டவிடத்துப் பொறாமை. தவமாவது- மனம் பொறிகளின் வழியிற்செல்லாது நிற்கும்பொருட்டு விரதங்களால் உண வு குறைத்தலும், கோடைகாலத்தில் வெயிலிலிருத்தலும், மாரிபனிக்காலங் களில் நீரில் நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தமக்

கு வருந்துன்பங்களைப் பொறுத்துப் பிறவுயிர்களைக் காத்தல். மயக்காவது - நிலையில்லாதனவற்றை நிலையுள்ளனவாக மதித்திருத்தல். தூயர்க்குந்தூயன் - தூயரினுந்தூயன் எனவுருபு மயக்கமாகக்கொள்க. தொடர்கரிதாக என்பதில் அருமை இன்மைப்பொருள் குறித்துவந்தது. மாது, ஓ அசைகள். (௩௦)

படியிலா மறைநூன் முற்றுணர்ந் தடுத்தோர் பக்குவத் திறன்மதித் தறியா, வொடிவறு சரியை யாதியா நான்கு முற்றுறப் பயிற்றுசாந் தீப, னடிமல ரடையா விருக்குமுன் மூன்று மையமுன் மூன்றும்விட் டோடக், கடிகெழு காயாம் பூங்கதிர் மேனிக் கண்ணனோ டமர்ந்துகற் றனனே.

(ப - ரை.) படி இலா - ஒப்பில்லாத, மறைநூல்-வேதசாஸ்திரங்களை, முற்றும் உணர்ந்து - முழுதுமுணர்ந்து, அடுத்தோர் - ஆசிரயித்தவர்களுடைய, பக்குவத்திறன் - பக்குவவகையை, மதித்து அறியா-மதித்துணர்ந்து, ஒடிவு அறு - கெடுதலில்லாத, சரியை ஆதி ஆம் - சரியை முதலாகிய, நான்கும் - நான்கினையும், உற - மிகுதியும், பொருந்தி - உற்று, பயிற்று - கற்பிக்கின்ற, சாந்திபன் - சாந்திபனது, அடி மலர்-பாததாமரைமலரை, அடையா-ஆசிரயித்து, இருக்கு-வேதங்களில், முன் மூன்றும் - முதல் மூன்றினையும், ஐயமுன் மூன்றும் - சந்தேகமுதலாகிய மூன்றும், விட்டு ஓட - விட்டோடும்படி, கடிகெழு - மணம்பொருந்திய, காயாம்பூ - காயாமலரை நிகர்த்த, கதிர் - ஒளியுள்ள, மேனி - திருமேனியையுடைய, கண்ணனொடு - கிருஷ்ணபகவானோடு, கூடி - அமர்ந்து, கற்றனன் - விருப்பிக் கற்றனன். எ - று.

(பொ - ரை.) ஒப்பில்லாத வேதசாஸ்திரங்களை முழுதுமுணர்ந்து, ஆசிரயித்தவர்களுடைய பக்குவவகையை மதித்துணர்ந்து, கெடுதலில்லாத சரியை முதலாகிய நான்கினையும் மிகுதியுமுற்று, கற்பிக்கின்ற சாந்திபனது பாததாமரை மலரை ஆசிரயித்து, வேதங்களில் முதல் மூன்றினையும் சந்தேக முதலாகிய மூன்றும் விட்டோடும்படி மணம்பொருந்திய காயாமலரை நிகர்த்த ஒளியுள்ள திருமேனியையுடைய கிருஷ்ணபகவானோடு அமர்ந்து விரும்பிக் கற்றவன். எ - று.

(வி - ரை.) பக்குவம் நான்காதலால் "பக்குவத்திறன்" என்றார். அவை நான்காவன - மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என்பன. இவற்றுள் மெழுகானது வெயிலுக்கு உருகுதல்போல்வது மந்தம். அரக்கானது வெயிலுக்குருகுதல்போல்வது மந்ததரம், நெய்யானது நெருப்புக்கு உருகுதல் போல்வது தீவிரம், தைலதாரையானது இடையறுதொழுகுதல்போல்வது தீவிரதரம். "இருக்குமுன் மூன்றும்" என்றது - இருக்குவேதம், யஜுர்வேதம், சாமவேதம் என்பவற்றை. "ஐயமுன் மூன்றும்" என்றது - அஞ்ஞானம் சந்தேகம் விபரீதம் என்பவற்றை. இவற்றுள் அஞ்ஞானமாவது - அறியாமை. சந்தேகமாவது - இதுவோ அதுவோவென்றும் ஐயம். விபரீதமாவது - ஒன்



குசேலரும் கிருஷ்ணரும் சாந்திபிமுனிவரிடம் வித்தியாப்பியாசஞ்செய்வது.

றை வேறொன்றாக அறிதல். இருக்குமுன் ஐயமுன் என்பவைகளில், முன் என்பது முதல் என்பதன் மரூஉ. படியிலா என்பதற்கு எழுதிப்படித்தலில் லாத என்றுரைப்பினுமாம். இப்பொருளில் படி முதனிலைத்தொழிற்பெயர். வேதத்திற்கு எழுதாக்கிளவி என்னும் பொருண்மையால் இவ்வாறு பொருள் கூறலாயிற்று. திறன் என்பதில் மகரத்துக்கு னகரம் போலி. அடிமலர் இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. வேதங்கள் நான்காயினும், பெரும்பாலார் கற்றற்குரியன முதன் மூன்றுமேயாதலாலும், அதர்வணம் மந்திரங்களையே கூறுதலாலும், "இருக்குமுன் மூன்றும்" என்றார். அடையா இருக்குமுன் மூன்றுங் கற்றனன் என முடித்துக்கொள்க. (௩௪)

கொழுந்துவிட் டெரியும் பசித்தழ லவித்துக் கோதில்வை ராக்கிய மிக்குற், றழுந்துபட் டிடாத சாந்திரா யணமு னளப்ப ருஞ் செயற்கரு விரத, மெழுந்துவிட் டொளிரப் பற்பக லாற்றி யென்பொடு நரம்புக டோன்றிச், செழுந்தசை வற்றி யிளைத்தயா க்கையனாய்த் திகழ்ந்தனன் சீர்த்தியந் தணனே.

(ப - ரை.) கொழுந்து விட்டு எரியும் - கொழுந்தோடி யெரிகின்ற, பசி தழல் - பசியாகிய நெருப்பை, அவித்து - தணித்து, கோது இல்-குற்ற மில்லாத, வைராக்கியம் மிக்குற்று-வைராக்கியமிகுந்து, அழுந்துபட்டிடாத-கெடுதலுண்டாகாத, சாந்திராயணம் முன் - சாந்திராயணமுதலாகிய, அள ப்பு அரு - அளவிடற்கரிய, செயற்கு அரு - செய்தற்கருமையாகிய, விரதம் - விரதங்கள், எழுந்து - ஓங்கி, விட்டு ஒளிர - மிகவும் பிரகாசிக்க, பல் பகல் ஆற்றி - (அவற்றை) பலநாளுஞ்செய்து, என்பொடு நரம்புகள் தோன்றி - எலும்போடு நரம்புகள் காணப்பட்டு, செழு தசை வற்றி - செழுமையாகிய மாமிசம் வற்றி, இளைத்த - மெலிந்த, யாக்கையன் ஆய் - உடம்பையுடையவ னாகி, திகழ்ந்தனன் - விளங்கினன், (யாவனெனின்) சீர்த்தி அந்தணன்-கீர்த் தியையுடைய குசேலனென்னும் வேதியன். எ - று.

(பொ - ரை.) கொழுந்தோடி யெரிகின்ற பசியாகிய நெருப்பைத் தணித்து குற்றமில்லாத வைராக்கியமிகுந்து கெடுதலுண்டாகாத சாந்திரா யணமுதலாகிய அளவிடற்கரிய செய்தற்கருமையாகிய விரதங்கள் ஓங்கி மிக வும் பிரகாசிக்க (அவற்றைப்) பலநாளுஞ் செய்து, எலும்போடு நரம்புகள் காணப்பட்டு செழுமையாகிய மாமிசம் வற்றி மெலிந்த உடம்பையுடையவ னாகி விளங்கினன். (யாவனெனின்) கீர்த்தியையுடைய குசேலனென்னும் வேதியன், எ - று.

(வி - ரை.) வைராக்கியம் - வெறுப்பு. அதாவது இம்மைமறுமை யின் பங்களில் நிராசை. சாந்திராயணம் - பௌரணைதொடங்கி அமாவாசைவரை க்கும் ஒவ்வொரு பிடியன்னம் குறைத்தும், அமாவாசைதொடங்கிப் பௌர ணைவரைக்கும் ஒவ்வொரு பிடியன்னம் மிகுத்தும் உண்டு அநுஷ்டிக்கும்

ஓர்விரதம். இதுசெய்தல் அரிதாதலால், "செயற்கருவிரதம்" என்றார். "ஊன் கெடுமோர்பின் என்பெழுந்திலங்கு மியாக்கையர் நன்பகல் பலவுடன் கழிந்த வுண்டியர்" என்றார் நக்கீரதேவரும். மிக்குற்று, அழுந்துபட்டிடாத என்ப வற்றிற்கு முறையேபகுதிகள் மிக்குறு அழுந்துபட்டிடு என்பன. இளைத்த என்னும் பெயரெச்சம் யாக்கையென்னும் செய்பவனுகியபெயரைக் கொண் டது. யாக்கை தொழிற்பெயர். இது தொழிலாகுபெயராய்ச் சப்த தாதுக் களாற் கட்டப்பட்ட சரீரத்தை யுணர்த்திற்று. யாக்கை - கட்டுகை. யாக் கையன்-பொருளடியாகப் பிறந்த பெயர்ப்பகுபதம். முத்திக்கேதுவாதல்பற்றி வைராக்கியத்தை, "கோதில் வைராக்கியம்" என்றார். அந்தணன் - அழகிய தட்பத்தினையுடையோன் (தட்பம் - அருள்.) வேதாந்தத்தை நோக்குவோன் எனக்காரணங் குறித்தும், பார்ப்பான் எனக்காரணங்குறியாதும் வருதலால் இது காரணவிடுகுறிப்பெயர். "அந்தணரென்போரறவோர் மற்றெவ்வுயிர்க் கும் - செந்தண்மைபூண்டொழுகலான்" என்பது திருக்குறள். சதையெனற் பாலது எழுத்துநிலைமாறித் தசையெனவந்தது. (கூஉ)

கதிரவ னுதய கிரிமிசை வருமுன் கன்னலைந் தெனத்துயி லொழிந்து, விதிவழி மலநீர் விடுத்தொளிர் கரக மென்புன லாற் சுத்தி யமைத்து, மதிசெய்பற் கறைநீர்த் தறலினு ஞானம் வயங் குறச் செய்துநற் சந்தி, யதிகமாஞ் செபம்வந் தனைமுத னியதி யருதிபற் றிடுந்தொழி லமைந்தோன்.

(ப - ரை.) கதிரவன் - சூரியன், உதயகிரிமிசை - உதயகிரிமீது, வரு முன் - தோன்றுமுன்னே, கன்னல்ஐந்துஎன - ஐந்துநாழிகையிருக்கின்றதெ ன்னும்பொழுதில், துயில்ஒழிந்து - நித்திரைவிட்டெழுந்து, விதிவழி - சாத் திரவிதிவழியாக, மலம்நீர்விடுத்து - மலஜலவிஸர்ஜநஞ்செய்து, கரகம்-கரகத் திலுள்ள, மென்புனலால் - மெல்லிய நீரினல், சுத்திஅமைத்து - கால்கை முதலியவற்றைச் சுத்திசெய்துகொண்டு, மதிசெய்பல்கறை நீர்த்து-மதித்தற் குரிய பல்லின் அழுக்கையொழித்து, அறலினுள் - நீரினுள்ளே, நானம்வயங் குறசெய்து - ஸ்நாநத்தை விளங்கும்படி செய்து, நல்சந்தி - நல்லசந்தியா வந்தனமும், அதிகம் ஆம்செபம் - மேலான ஜெபமும், வந்தனை - தெய்வவ ணக்கமும், முதல் - முதலானவற்றை, நியதிஅருது - நியமந்தவருமல், இயற் றிடும்தொழில் அமைந்தோன் - செய்யுந்தொழில் அமையப்பெற்றவனும். எ - று.

(பொ - ரை.) சூரியன் உதயகிரிமீது தோன்றுமுன்னே ஐந்துநாழிகை யிருக்கின்றதென்னும் பொழுதில் நித்திரைவிட்டெழுந்து, சாத்திரவிதிவழி யாக மலஜல விஸர்ஜநம் செய்து, கரகத்திலுள்ள மெல்லிய நீரினல் கால் கைமுதலியவற்றைச் சுத்திசெய்துகொண்டு, மதித்தற்குரிய பல்லின் அழுக் கையொழித்து, நீரினுள்ளே ஸ்நாநத்தை விளங்கும்படிசெய்து, நல்ல சந்தி

யாவந்தனமும், மேலான ஜபமும், தெய்வவணக்கமும் முதலானவற்றை நியமந்தவறாமல்செய்யுந் தொழிலமையப்பெற்றவனும். எ - று.

(வி - ரை.) "உதயகிரிமிசைவருமுன்" என்ற குறிப்பால், கதிரவன் என்பது சூரியனுக்காயிற்று. கன்னல் - கடிகை(நாழிகை.) "கதிரவனுதயகிரிமிசைவரு முன்கன்னலேந்தெனத் துயிலொழிந்து" என்றது, "வைகறைத் துயிலெழு" என்னு மூதறிவாட்டியின் வாக்கியக் கருத்துள்ளதே. கரகம் - சிறு புதுமட்கலம். பற்கறை - ஊத்தை. மலநீர் - மலமும்நீரும். இது உம்மைத்தொகை. இவ்வும்மையெண்ணும்மை. அறல் - அறுதல், இது தன்னிடத்து மூழ்குவோரது பாவமறுகைக்கேதுவா யிருப்பதென்னும் பொருளதாதலால் காரணவாகுபெயர். நற்சந்தி-நன்மையாகிய சந்தி, நன்மையைத்தருகிற சந்தியெனினுமாம். இந்தச்சந்தியாவந்தனக் கிரியையானது சூரியன்தேர் செல்லவொட்டாது தடைசெய்கிற மாந்தேயர் என்னும் அசுரரை யழிக்கும் பொருட்டு வேதியராற் செய்யப்படுவதென்றும், இந்தக் கிரியையின் முடிவிலிறைக்கப்படுகிற நீரே வாளாகிச்சென்று அவ்வசுரரை யழிக்கின்றதென்றும் கூறுவர் நூலோர். (ருகூ)

ஒன்றுமெய் வாய்கண் ணாசிகா தென்ன வுரைத்திடும் பொறிவழி யூறு,துன்றிய சுவையொள் ளொளிமணஞ் சத்தஞ் சொல்லுமிவ் வைம்புல னென்று,மொன்றுபட் டுள்ளக் குறிப்பறிந் தொழுக வொருக்கிய தவவலி யினனாய், நின்றுளா னிவனைப் புகழ்தராரெவரே நீடிய பவத்தொடக் கறுப்பார்.

(ப - ரை.) ஒன்று - பொருந்திய, மெய் வாய் கண் நாசி காது என்ன உரைத்திடும் - உடம்புவாய்கண் மூக்குசெவியென்று சொல்லப்படுகிற,பொறிவழி - ஐம்பொறிகளின் வழியே, ஊறு - பரிசம், துன்றியசுவை - பொருந்திய இரசம், ஒள்ஒளி - அழகிய ஒளி, மணம் - வாசனை, சத்தம் - ஓசை, சொல்லும் - என்று சொல்லப்படும், இ - இந்த, ஐம்புலன் - ஐம்புலன்களும், என்றும் ஒன்றுபட்டு - எக்காலமும் ஒருமைப்பட்டு, உள்ளக்குறிப்பு அறிந்து ஒழுக - மனக்கருத்தை யறிந்து நடக்கும்படி, ஒருக்கிய - அடக்கிய, தவவலியினன் ஆய்நின்று உள்ளான் - தபோசக்தியையுடையவனாகி நிலைபெற்றுள்ளவன், இவனை - இத்தன்மையாகிய பெருமையுடையவனை, நீடிய பவத்தொடக்கு அறுப்பார்-பெரிதாகிய பிறவித்தளையைச் சேதிக்க முயல்வோருள், புகழ்தரார் - புகழாதவர், எவர் - யாவர், (ஒருவருமில்லை.)

(பொ - ரை.) பொருந்திய உடம்பு, வாய், கண், மூக்கு, செவியென்று சொல்லப்படுகிற ஐம்பொறிகளின்வழியே பரிசம், பொருந்திய இரசம், அழகியஒளி, வாசனை, ஓசையென்று சொல்லப்படும் இந்த ஐம்புலன்களும் எக்காலமும் ஒருமைப்பட்டு மனக்கருத்தை யறிந்து நடக்கும்படி அடக்கிய தபோசக்தியையுடையவனாகி நிலைபெற்றுள்ளவன், இத்தன்மையாகிய பெருமை

யுடையவனை பெரிதாகிய பிறவித்தீனையைச் சேதிக்க முயல்வோருள் புகழா தவர் யாவர். எ - று.

(வி - ரை.) பொறி - இந்திரியங்கள், புலன் - விடயங்கள். இந்தப்பொறி புலன்களை யடக்கினலன்றித் தவம் கைகூடாதாதலால், "உள்ளக்குறிப்பறிந்தொழுக வொருக்கிய தவவலியினன்" என்றும், ஐம்பொறி யடக்கலாகிய செய்தற்கரிய செயலைச் செய்பவனாதலால், இவனைப்புகழாதவர் ஒருவருமில்லையென்றற்கு, "இவனைப்புகழ்தராரெவரே" என்றும் கூறினர். மெய்முதலிய ஐம்பொறிகளை, த்வக்,ஜிஹ்வா, சக்ஷு, க்ராணம், ஶ்ரோத்ரம் என்றும், சுவைமுதலிய ஐம்புலன்களை, ஸ்பர்ஶம், ரஸம், ரூபம், கந்தம், ஶப்தம் என்றும் கூறுவர் வடநூலார். ஐம்புலன் என்பதனீற்றில் முற்றும்மை தொகுத்தல். ஐம்புலன் என்றும் ஒன்றுபட்டு உள்ளக்குறிப்பறிந்தொழுக வொழுகுதலாவது - மனத்தைத் தம்வசப்படுத்திக்கொண்டு புலன்களிற் செல்கின்ற அவ்வைந்தினையுமடக்கி அம்மனத்தின்வழியே அவை யொழுகச்செய்தல். "நீடியபவத்தொடக்கறுப்பார்" என்பது "நிலங்கடந்தநெடுமால்"என்பதுபோல ஒருசொற்றன்மைப்பட்டு வந்ததொடர்மொழி. இதனீற்றில் எழனுருபு தொக்குப் "புகழ்தரார்" என்னும் வினையாலணையும்பெயர் கொண்டது. ()

ஔவிய மவித்த பெருந்தவத் தினர்க ளகம்புற மெனும் பகுப் பிறந்து, மூவ்வுல கமுந்தம் மிடமதா வசிப்ப ரெனமறை மொழிவதற் கிசையச், செவ்விய மனத்தன் வீடுகா டென்னத் தெரிந்துறை பகுப்பிலான் சினந்த, தெவ்வுடல் பனிப்ப வெள்ளொளி நெடுவேல் செறிதட றகற்றுபு விதிர்ப்போய்.

(ப - ரை.) சினந்த - கோபித்த, தெவ் - பகைவரது, உடல் - உடம்புகள், பனிப்ப - நடுங்க, வெள்ஒளி - வெண்மையாகிய ஒளியையுடைய, நெடுவேல் - நெடிய வேலாயுதத்தை, செறிதடறு-பொருந்திய உறையினின்றும், அகற்றுபு - வாங்கி, விதிர்ப்போய் - அசைப்பவனே, ஔவியம் - பொறாமையை, அவித்த-தணித்த, பெரு - பெரிதாகிய,தவத்தினர்கள் - தவத்தையுடையவர்கள், அகம்புறம் என்னும் பகுப்பு - உள்வெளியென்கிற பகுதியை, இறந்து - கடந்து, மூவ்வுலகமும் - மூன்றுலகங்களும், தம் இடமது ஆ - தமதிடமாகக்கொண்டு, வசிப்பர் என - வாழ்வார்களென்று, மறைமொழிவதற்கு - வேதம் சொல்வதற்கு, இசைய - இணங்க, செவ்விய - செவ்வையாகிய, மனத்தன் - மனத்தையுடையவனாகி, வீடுகாடென்ன - வீடென்றுங்காடென்றும், தெரிந்துஉறை - அறிந்துவாழ்கின்ற, பகுப்புஇலான் - பகுதியற்றவனாயிருந்தான். எ - று.

(பொ - ரை.) கோபித்த பகைவரது உடம்புகள் நடுங்க வெண்மையாகிய ஒளியையுடைய நெடிய வேலாயுதத்தைப் பொருந்திய உறையினின்றும் வாங்கி யசைப்பவனே! பொறாமையைத் தணித்த,பெரிதாகிய தவத்தை

யுடையவர்கள், உள், வெளியென்கிற பகுதியைக்கடந்து மூன்றுலகங்களும் தமதிடமாகக்கொண்டு வாழ்வார்களென்று வேதம் சொல்வதற்கிணங்க, செவ்வையாகிய மனத்தையுடையவனுகி, வீடென்றும் காடென்றும் அறிந்து வாழ்கின்ற பகுதியற்றவனுயிருந்தான். எ - று.

(வி - ரை.) "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்-தீயுழி யுய்த்துவிடும்" எனமேலோர் கூறுதலாலும், தவத்தோர்க்கு இதுபோன்ற பெரும் பகை யொன்றின்மையாலும், "ஔவியமவித்த பெருந்தவத்தினர்கள்" என்றூர். "அகம்புறமென்னும் பகுப்பிறந்து" என்றது, மனமுஞ்செயலுங்கடந்து நின்ற மெய்ஞ்ஞானநிலையை. பெரியோர் உலகதத்துவங்களை உள்ளபடி யறிந்தவராகையால் "மூவ்வுலகமும் தம்மிடமதாவசிப்பர்" என்றூர். இதனை, "சுவையொளியூறோசைநாற்றமென்றைந்தின் - வகைதெரிவான்கட்டேயுலகு" என்னுந்திருக்குறளானு மறிக. "வீடுகாடென்னத்தெரிந்துறைபகுப்பிலான்" என்றதனுல் சுகதுக்கங்களைச் சமமாகப்பாவிப்பவன் என்பது விளங்கிற்று. அகம் - நானென்னும் அகப்பற்று, புறம் - எனது என்னும்புறப்பற்று எனினுமாம். சினந்த - சினம்என்னும் பெயரடியாகப் பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம். தெவ் - பகைமை. இது பண்பாகுபெயராய்ப் பகைமையுடையானை யுணர்த்திற்று. அகற்றுபு-செய்பு என்னும் வாய்பாட்டுப் பிறவினை யிறந்தகாலவினையெச்சம். (ருரு)

மெத்திய பற்பல் கிழிதுணி யியைத்து மெல்லிழைச் சரட்டிறைற் பொல்லம், பொத்திய சிதரே நல்லுடை யாகப் புனைந்தகாரணத்தினுற் கடல்சூ, ழெத்திசை யவருங் குசேலனென் றொருபேரிட்டழைப் பர்கண்மதக் கலுழி, தத்திய கரடத் தறுகண்மால் யானைத் தரியலர் கூற்றெனப் பொலிவோய்.

(ப - ரை.) மதக்கலுழிதத்திய கரடம் - மதநதிபாய்கின்றசுவட்டையும், தறுகண்-அஞ்சாமையையும், மால்-மதமயக்கத்தையுமுடைய, யானை-யானைப் படைகளோடு கூடிய, தரியலர் - பகைவருக்கு, கூற்றுஎன - யமன்போல, பொலிவோய் - விளங்குவோனே, மெத்திய - மென்மையாகிய, பற்பல்கிழிதுணிஇயைத்து - மிகப்பலவாகிய கிழிந்ததுண்டுகளை (ஒன்றோடொன்றுகப்) பொருத்தி, மெல்இழை சரட்டினுல் - மெல்லியநூற்சரட்டினுல், பொல்லம் - தொளையை, பொத்திய (தைத்து) மூடிய, சிதரே - சீலையையே, நல் உடைஆக - நல்லவஸ்திரமாக, புனைந்த - தரித்த, காரணத்தினுல் - ஏதுவினுல், கடல்சூழ் எத்திசையவரும் - கடல்வளைந்த எவ்வுலகத்தாரும், குசேலன் என்று ஒருபேரிட்டழைப்பர்கள் = குசேலனென்ற ஒருபேரிட்டழைப்பார்கள். எ - று.

(பொ-ரை.) மதநதிபாய்கின்ற சுவட்டையும், அஞ்சாமையையும், மதமயக்கத்தையுமுடைய யானைப்படைகளோடு கூடிய பகைவருக்கு யமன்போல

விளங்குவோனே! மென்மையாகிய மிகப்பலவாகிய கிழிந்ததுண்டுகளை (ஒன்றோடொன்றாகப்) பொருத்தி, மெல்லியநூற்சரட்டினால் தொளையைத் தைத்து மூடிய சீலையையே நல்லவஸ்திரமாகத் தரித்த ஏதுவினால், கடல்வளைந்த எவ்வுலகத்தாரும் குசேலனென்ற ஒரு பேரிட்டழைப்பார்கள். எ - று.

(வி - ரை.) பொல்லம் - தொழிற்பெயர். பொல் - பகுதி. அம் - தொழிற்பெயர் விகுதி. ல்-சந்தி. இது அல்விகுதியும் ளகரப்போலியும்பெற்று பொள்ளல் எனவும் வரும். "சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து" என்றார் பிறரும். இழைச்சரடு. ஒருபொருட்பன்மொழி. இழை, துணி,முதனிலைத்தொழிலாகு பெயர்கள். உடை - தொழிலடியாகப் பிறந்தபெயர். உடுக்கப்படுவதுஎன்பது பொருள். பேர் - பெயர் என்பதன்மரூஉ. மதக்கலுழி - உருவகமாகையால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கலுழி. கலங்கல்நீர் (முல்லைநிலக்கான் யாறு.) தரியலர் - என்பதற்கு மனப்பொருத்தமில்லாதவரென்பதுபொருள். கூற்று - சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையுமாகிய பெயர். இதற்கு உடலையும் உயிரையும் பிரிப்போன் என்பது பொருளாதலால் இது காரணப்பெயர். (சுகூ)

மாற்கடல் கடந்த மனத்தனாய் வேத வரம்புகண் டிலங்கு மிக் குசேலன்,பாற்கடன் மிசையோர் கார்க்கடல் போலப் பையர வணைமிசைத் துயில்வோன், சேற்கரு நெடுங்கட் டிருமகள் வருடச் சிவந்துகாட் டிடுமரை மலர்த்தா, ளேற்குமென் றுள்ளத் திருவியெந் நாளு மியற்றரும் பூசனை யியற்றும்.

(ப - ரை.) மால்கடல்கடந்த - ஆசையாகிய கடலைத்தாண்டின, மனத்தன்ஆய் - மனத்தையுடையவனாகி, வேதவரம்புகண்டு - வேதத்தின் எல்லையைக்கண்டு, இலங்கும்-விளங்குகிற, இக்குசேலன் - இந்தக்குசேலன், பால்கடல்மிசை - ஒருவெண்கடலின் மீது, ஓர்கார்கடல்போல - ஒருகருங்கடல் போல, பை - படத்தையுடைய, அரவுஅணைமிசை - ஆதிசேடனாகிய பாம்பணையின்மீது, துயில்வோன் - யோகநித்திரை செய்பவனாகிய திருமாலின், சேல் - சேல் மீன்போன்ற, கரு - கரிய, நெடு - நெடிய, கண் - கண்களையுடைய, திருமகள்வருட - திருமகள்வருடுதலால், சிவந்துகாட்டிடும்-சிவந்து காட்டுகின்ற, மரைமலர் - தாமரைமலர்போன்ற, தாள் - திருவடிகளை, ஏற்கும்என்று - பொருந்துமென்று, உள்ளத்துஇருவி - மனத்திலிருத்தி, எந்நாளும் - எக்காலத்திலும், இயற்றுஅரு - செய்தற்கரிய, பூசனை - (மானத) பூசையை, இயற்றும் - செய்வான். எ - று.

(பொ - ரை.) ஆசையாகிய கடலைத்தாண்டின மனத்தையுடையவனாகி, வேதத்தின் எல்லையைக்கண்டு விளங்குகின்ற இந்தக்குசேலன் ஒருவெண் கடலின்மீது ஒருகருங்கடல்போல படத்தையுடைய ஆதிசேடனாகிய பாம்பணையின்மீது யோகநித்திரைசெய்பவனாகிய திருமாலின் சேல்மீன்போன்ற



குசேலர்திருக்கலியாணம்.

கரிய நெடிய கண்களையுடைய திருமகள் வீருடிசலால் சிவந்து காட்டுகின்ற தாமரைமலர்போன்ற திருவடிகளைப் பொருந்துமென்று மனத்திலிருத்தி எக்காலத்திலும் செய்தற்கரிய (மானத) பூசையைச் செய்வான். எ - று.

(வி - ரை.) உள்ளத்திருவி பூசனையியற்றும் என்றதனால் மானதபூசை யெனப்பட்டது. இதுசெய்தலரிதாதலால் இயற்றரும் பூசனை யென்றார். வேதவரம்பு-வேதாந்தம். ஆசைக்கடலைத் தாண்டினமனத்தையுடையவனைத் திருமாலின் பாததாமரையை எந்நாளும் பூசனைசெய்வான் என்பது கருத்து. அவா ஆனது துன்பத்துட்டுன்பமாகையால் அதைக்கடலாக உருவகஞ்செய்தும், அதைக்கடந்தவனாதலால் வேதவரம்புகண்டு இலங்குமிக் குசேலன் என்றும் கூறினார். அரவணை இருபெயரொட்டுப் பண்புத்தொகை, அன்றி மூன்றும் வேற்றுமை யுருபும் பயனுமுடன்றொக்கதொகையுமாம். மரை தா என்னும் முதலெழுத்துக் குறைந்துவந்தமையால் முதற்குறை விகாரச்சொல். பாற்கடல் மிசை ஓர்கார்க்கடல் என்பதில் பாற்கடலை திருவநந்தாழ்வானுக்கும் கார்க்கடலை க்ஷீராப்திநாதனுக்கும் உவமையாகக்கொள்க. பாற்கடல் என்பதற்குப் பாலினாலாகிய கடல் என்றுரைப்பினுமாம். பாற்கடலைக்ஷீராப்தி யென்பர் வடநூலார். (கூஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திறலியை தவத்தி னிவ் வாறு திகழ்ந்திடுங் குசேல னென்பா
னுறலியை யத்த வத்திற் குதவிசெய் பாக்கு நாளு
மறலியை கதுப்பி னாளோ ரணங்கினை வதுவை செய்தான்
மறலிய மன்னர் சென்னி மணிமுடி யிடறுந் தாளோய்.

இது குசேலர் இல்லறநடத்த மணம்புரிந்தனர் எனக்கூறுகின்றது.

(ப - ரை.) மறல்இயை - பகைகொண்ட, மன்னர்சென்னி - அரசரது சிரசில் அணிந்த, மணிமுடி - ரத்நகிரீடத்தை, இடறும் - இடறுகின்ற, தாளோய் - பாதத்தையுடையவனே, திறல்இயைதவத்து - ஆற்றலமைந்த தவவொழுக்கால், இவ்வாறு திகழ்ந்திடும் - இந்தப்பிரகாரம் விளங்குகிற, குசேலன் என்பான் - குசேலனென்று சொல்லப்படுவோன், உறல்இயை - (தனக்குப்) பொருத்தமமைந்த, அத்தவத்திற்கு - அந்தத்தவநெறிக்கு, நாளும்உதவி செய்பாக்கு - நாடோறும் துணைசெய்யும்பொருட்டு, அறல்இயைகதுப்பினாள் - கருமணலைநிகர்த்த கூந்தலையுடையவளாகிய, ஓர் அணங்கினை - ஒருபெண்ணை, வதுவைசெய்தான் - மணஞ்செய்துகொண்டான். எ - று.

(பொ - ரை.) பகைகொண்ட அரசரது சிரசிலணிந்த ரத்நகிரீடத்தை யிடறுகின்ற பாதத்தையுடையவனே! ஆற்றலமைந்த தவவொழுக்கால் இந்தப்பிரகாரம் விளங்குகிற குசேலனென்று சொல்லப்படுவோன், தனக்குப் பொருத்தமமைந்த அந்தத்தவநெறிக்கு நாடோறுந்துணைசெய்யும்பொருட்டு, கருமணலை நிகர்த்த கூந்தலையுடையவளாகிய ஒருபெண்ணை மணஞ்செய்து கொண்டான். எ - று.

(வி - ரை.) "வேண்டிய வேண்டியாங் கெய்தலிற் செய்தவ - மீண்டு முயலப்படும்" எனமேலோர் கூறியபடியே தவம் எவ்வகைப்பேராற்றலையும் தரவல்லதாதலால் 'திறலியைதவத்து' என்றார். குசேலமுனிவர் தமது தவவொழுக்கத்திற் குதவிசெய்யும்பொருட்டு ஓர்கன்னியை மணந்தனர் என்பது கருத்து. அணங்கு - அழகு. இது பண்பாகுபெயராய் அழகுள்ள பெண்ணை யுணர்த்திற்று. அணங்கு - தெய்வப்பெண் எனக்கொண்டு உவமையாகுபெயரெனினுமாம். மன்னர் மணிமுடியிடறுந்தாளோய் என்றதனால் இவன் மன்னர் மன்னன் என்றும், ஏனைய மன்னர் இவனுக்குத்திறைசெலுத்தி வணங்குகின்றவர் என்றும் விளங்குகின்றது. தாளோய் - விளி. செய்பாக்கு என்பதில் பாக்கு எதிர்காலவினையெச்ச விகுதி. என்பானென்னுமெழுவாய் வேற்றுமைச்சொல்லுருபு. இவை மூன்றும் வினைத்தொகை வினைச்சொற்கள். கதுப்பினாள்.சினையடியாகப்பிறந்த பெயர்ப்பகுதம். (௫௨)

மணமக னுடம்பு போற்ற வல்லவண் மனைவி யேயென்
றுணர்வினர் மொழியு மாற்ற முவள்செய லோக்கிப் போலுந்
தணவறு மன்புஞ் சாந்தத் தன்மையு நன்மை யான
குணமுமோ ருருவங் கொண்டோர் குடிப்பிறந் தனைய நீராள்.

இச்செய்யுளும் வருஞ்செய்யுளும் குசேலர் மனைவியின் சிறப்புக்கூறுகின்றன.

(ப - ரை.) மணமகன் உடம்புபோற்றவல்லவள்-கணவனது உடம்பைக் காப்பாற்றவல்லவள், மனைவி என்று - மனையாளென்று, உணர்வினர் மொழியும் மாற்றம் - அறிவுடையார் சொல்லுஞ்சொல்,உவள்செயல் நோக்கிப்போலும் - இவள்செய்கைகளை நோக்கிச்சொல்லுஞ் சொல்லே போலும், தணவு அறும் - நீங்குதலில்லாத, அன்பும் - ஆசையும், சாந்தத்தன்மையும் - சாந்தகுணமும், நன்மை ஆனகுணமும் - நன்மையான குணங்கள் பிறவும், ஓர் உருவம்கொண்டு - ஒருவடிவங்கொண்டு, ஓர் குடி பிறந்தனைய நீராள் - ஓர் குடியில் வந்து பிறந்தாற்போன்ற தன்மையையுடையவள். எ - று.

(பொ - ரை.) கணவனது உடம்பைக் காப்பாற்றவல்லவள் மனையாளென்று அறிவுடையார் சொல்லுஞ்சொல் இவள் செய்கைகளை நோக்கிச் சொல்லுஞ் சொல்லே போலும், நீங்குதலில்லாத ஆசையும், சாந்தகுணமும், நன்மையான குணங்கள் பிறவும், ஒருவடிவங்கொண்டு ஒருகுடியில் வந்துபிறந்தாற்போன்ற தன்மையையுடையவள். எ - று.

(வி - ரை.) அன்புமுதலிய பிறநற்குணங்களுளவாயினும் கணவனுடம்பின் பாதுகாப்பில் கருத்திலளாயின் அக்குணங்கள் பயனிலவாதலால் 'மணமகனுடம்பு போற்றவல்லவள் மனைவி' என்றார். அந்த மனைவியானவள் தன்கணவனுடம்பைப் பாதுகாத்தல் முதலிய நற்குணங்களே ஒருருவாகி வந்து ஒருகுடும்பத்திற் பிறந்தாற்போன்றிருந்தாள் என்பது கருத்து. 'மணமக

னுடம்புபோற்ற வல்லவள்மனைவியே' என்பதனைத் திருவள்ளுவர் "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற - சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என மனையாளிலக்கணங்கூறிய வாற்றானுமுணர்க. மணமகன். ஒருசொல்லின்றன்மையது. மகன் முறைப்பெயர் அன்று, மக்களுள் ஆண்பகுப் புணர்த்தும்பெயர்ச்சொல். மணந்தமகன் எனவினைத்தொகையாக வாவது மணத்தைச்செய்த மகன் என இரண்டாம் வேற்றுமையுருபும் பயனுமுடன் றொக்க தொகையாகவாவது கொள்க. உவள் உ என்னும் சுட்டடியாகப்பிறந்த பெண்பாற்பெயர்ப் பகுபதம். உவள்செயல் உயர்திணைப்பெயராகையால் வேற்றுமையிலும் நிலைமொழியீற்றுளகரம் இயல்பாயிற்று. போலும் உவமையிடைச்சொலடியாகப் பிறந்த செய்யுமென்முற்று. இது ஒப்பில் போலி. இல்வாழ்க்கையின் பண்பு. அன்பு ஆகையால் அதனைமுன்வைத்தார். இல்வாழ்க்கைக்குப் பண்பு அன்பு என்பதனால் "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை - பண்பும் பயனும் அது" என்றார் திருவள்ளுவரும். மனைவிக்கும் மணமகனுக்கும் நெஞ்சு ஒன்றாகாதவழி, இல்லறம் செவ்வையாக நடவாமையால் அன்புடைமை அவ்வில்வாழ்க்கைக்குப் பண்பாயிற்று. "மனைத்தக்காண் மாண்பிலளாயின் மணமகனல்லறம் பூண்ட புலப்படா" என்றார் பிறரும். நீராள் நீர்மை என்னும் பண்படியாகப் பிறந்த பெண்பாற்பெயர். அனைய குறிப்புப் பெயரெச்சம். தணவு தொழிற்பெயர். ஏகாரம்-பிரிநிலை. (ருக)

மாசிலாக் குலத்து வந்தாள் வருவிருந் துவப்ப வூட்டு
நேசமிக் குடையாள் கொண்க னினைப்பறிந் தொழுகு நீரா
டேசுறு வாய்மை யுள்ளாள் சினந்திட லென்று மில்லாள்
பேசுதிண் கற்பு வாய்த்தாள் பெற்றதே கொண் டுவப்பாள்.

(ப - ரை.) மாசுஇல்லா - களங்கமில்லாத, குலத்துவந்தாள்-குலத்தில் தோன்றினவள், வருவிருந்து - வருகிறவிருந்தினரை, உவப்ப - (அவர்மனம்) களிக்க, ஊட்டும் - உண்பிக்கின்ற, நேசம் - விருப்பத்தை, மிக்குஉடையாள் - மிகவுமுடையவள், கொண்கன் - கணவனது, நினைப்புஅறிந்து - கருத்தையுணர்ந்து, ஒழுகும் - நடக்கிற, நீராள் - குணத்தையுடையவள், தேசுஉறு - புகழ்மிகுதற்கேதுவாகிய, வாய்மைஉள்ளாள் - உண்மையையுடையவள், என்றும் - எந்நாளும், சினந்திடல் இல்லாள் - கோபங்கொள்ளுதலில்லாதவள், பேசு - (யாவரும் புகழ்ந்து) பேசுதற்குரிய, திண்கற்பு - வலியகற்பு நிலைமையை, வாய்த்தாள் - பெற்றவள், பெற்றதேகொண்டு - கிடைத்ததையே கொண்டு, உவப்பாள் - மனமகிழ்பவள். எ - று.

(பொ - ரை.) களங்கமில்லாத குலத்தில் தோன்றினவள், வருகிற விருந்தினரை (அவர் மனங்) களிக்க உண்பிக்கின்ற விருப்பத்தை மிகவுமுடையவள், கணவனது கருத்தையுணர்ந்து நடக்கிற குணத்தையுடையவள், புகழ்மிகுதற்கேதுவாகிய உண்மையையுடையவள், எந்நாளுங் கோபங்கொள்ளுத

லில்லாதவள், (யாவரும் புகழ்ந்து)'பேசுதற்குரிய வலிய கற்புநிலைமையைப் பெற்றவள், கிடைத்ததையே கொண்டு மனமகிழ்பவள். எ - று.

(வி - ரை.) குலத்துக்குமாசாவது. மலட்டுத்தன்மை,பெண்ணே பெறுதல், பெருவியாதி முதலியவுடைமை என்பனவும் இவைபோல்வன பிறவுமாம். இவையின்மையும், மேன்மை நல்லொழுக்கங்களுடைமையும் நற்குலத்திலக்கணம் ஆதலால் 'மாசிலாக்குலம்' என்றார். "கொண்டான்குறிப்பறிவாள் பெண்டாட்டி" என்றும் "மேவுகாதலருள்ளம் விழைந்தன ஏவுமுன்னர்க் குறிப்பினியற்றுவார்''என்றுங்கூறுமிலக்கணமுடையளாதலால் 'கொண்கனினைப்பறிந்தொழுகுநீராள்' என்றார். வாய்மைக்குத் தேசாவது சிறப்பு. மாதர்க்குக் கற்பினுஞ்சிறந்த உறுதிப்பொருளில்லையாதலால் 'பேசுதிண்கற்பு வாய்த்தாள்' என்றார். பெண்ணிற்பெருந்தக்கயாவுள கற்பென்னுந் திண்மையுண்டாகப்பெறின்''என்றும்,"தாயிற் சிறந்தன்று நாண்டைய லாருக்கந்நாண் டகைசால் - வேயிற்சிறந்தமென் றோளிதிண்கற்பின் விழுமிதன்று" என்றும் மேலோர் கூறுதலாலும் காண்க. கற்புக்குத் திண்மையாவது "பத்துவராகனுக்கு மிஞ்சின பதிவிரதையில்லை'' என்பதுபோலன்றி எதற்கும் மனமயக்கங்கொள்ளாத உறுதி. "சொற்காத்துச் சோர்விலாள்பெண்'' "தற்கொண்டான் வளத்தக்காள் வாழ்க்கைத்துணை" என்றுமேலோர் கூறியவாறே தான் வாழுமூரார் கற்பால் தன்னைப் புகழப்பெற்றவளும், தன்னைக்கொண்ட கணவனுடைய வருவாய்க்குத் தக்க வாழ்க்கையுடையவளுமாகையால் 'பேசுதிண் கற்புவாய்த்தாள் பெற்றதேகொண்டுவப்பாள்' என்றார். பெற்றது இறந்தகால ஒன்றன்பால் வினையாலணையும்பெயர். ஏகாரம் பிரிநிலை. (௬0)

அருண்மகப் பெறுகி லாருக் கணைகதி நாத்தி யென்று
தெருண்மறை செப்ப லானுஞ் சிறந்ததன் குலநீ டித்துப்
பொருண்முயங் கிடுமா றெண்ணும் புந்திய னாத லானு
மிருண்மருள் குழலன் னாளோ டிருந்தவக் குசேலன் சேர்ந்தான்.

(ப - ரை.) அருள் மக பெறுகிலாருக்கு-அருளையுடைய பிள்ளைகளைப் பெறாதவர்களுக்கு,அணை-பெறுதற்குரிய, கதி-நற்கதி, நாத்தி என்று-இல்லையென்று, தெருள் மறை செப்பலானும் - தெளிவாகிய வேதங்கள் சொல்லுதலாலும், சிறந்த தன் குலம் - மேன்மையாகிய தன் வமிசமானது, நீடித்து - கெடுகி, பொருள் முயங்கிடும் ஆறு - சதுர்வித புருஷார்த்தங்களையும் அடையும்படி, எண்ணும் - விரும்புகின்ற, புந்தியன் ஆதலானும் - மனமுடையோனதலாலும், இரு தவம் குசேலன் - பெருந்தவத்தினையுடைய குசேலனென்பவன், இருள் - இருளும், மருள் - மருளுதற்கேதுவாகிய, குழல் - கூந்தலையுடைய; அன்னாளோடு - அந்தப் பெண்ணினோடு, சேர்ந்தான் - கூடினன். எ - று.

(பொ - ரை.) அருளையுடைய பிள்ளைகளைப் பெறாதவர்களுக்குத் தாம் பெறுதற்குரிய நற்கதி இல்லையென்று தெளிவாகிய வேதங்கள் சொல்லுத

லாலும், மேன்மையாகிய தன் வமிசமானது நெடுகி சதுர்வித புருஷார்த்தங்களையும் அடையும்படி விரும்புகிற மனமுடையோனுதலாலும், பெருந்தவத்தினையுடைய குசேலனுனவன், இருளும் மருளுதற்கேதுவாகிய கூந்தலையுடைய அந்தப் பெண்ணினேடு கூடினுன். எ - று.

(வி - ரை.) அருள் - எல்லாவுயிர்களின்மீதும் செய்யப்படுவதாகிய அன்பு. கதி - சுவர்க்காதிபதவிகள். நாஸ்தி - வடசொல், அது நாத்தியெனத் திரிந்துவந்தது. தெருள்மறை - தெளிவாகிய மறை, தான் - தெளிவாயிருந்தாலன்றிப் பிறரைத் தெளிவித்தல் கூடாதாதலால், உயிர்களைத்தெளிவிக்கு மியல்புள்ள வேதத்தை, "தெருண்மறை" என்ருர். நீடித்தல்-நெடுங்காலம் அழியாதிருத்தல். பொருள் என்றது சதுர்வித புருஷார்த்தங்களை, அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன, இவற்றை வடநூலார் தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்பர். புந்தி - புத்தி, அது இங்கு மனத்துக்காயிற்று. இருள் என்பதனீற்றில் உயர்வு சிறப்பும்மை தொகுத்தல். கூந்தலின் கருநிறத்துக்கு இருளுந் தோற்கும் என்றற்கு "இருள் மருள் குழல்" என்ருர். "நத்தங் கும்பிட்ட குழலீர்" என்ருர் பிறரும். நத்தம் - இருள், இது நக்தம் என்னும் வடசொற்றிரிபு. (௬௧)

சேர்தலு நரம்பு பைத்துச் சேல்விழி குழிந்து காட்ட
வார்முகங் கிழிக்குங் கொங்கை மருவுபால் சுரந்து காட்டச்
சார்தரு வயாவு நீடித் தணப்பில்பல் சுவைநாக் காட்ட
நேரிழை கருப்பம் வாய்ந்து நிரம்புநாண் மைந்த னீன்ருள்.

(ப - ரை.) சேர்தலும் - கூடுதலும், நேரிழை - அந்தப் பெண்ணுனவள், நரம்பு பைத்து - நரம்புகள் பச்சென்ற நிறமுடையனவாய், சேல் விழி குழிந்து காட்ட - சேல்போலுங் கண்கள் குழிந்துகாட்டவும், வார்-வாரை, முகம் கிழிக்கும் - நுனியினுற் கிழிக்கின்ற, கொங்கை - தனங்கள், மருவு பால் சுரந்து காட்ட - பொருந்திய பாலைச்சுரந்து காட்டவும், சார்தருவயாவு நீடி - வரக்கடவதாகிய கர்ப்பவேதனை அதிகரித்து, தணப்பு இல் பல் சுவை நா காட்ட - நீங்குதலில்லாத பலசுவை விருப்பத்தையும் நாவானது காட்டவும், கருப்பம் வாய்ந்து - கருப்பமடைந்து, நிரம்பும் நாள் - நிறைந்த காலத்தில், மைந்தன் ஈன்ருள் - ஒரு புதல்வனைப் பெற்ருள், எ - று.

(பொ - ரை.) கூடுதலும், அந்தப்பெண்ணுனவள், நரம்புகள் பச்சென்ற நிறமுடையனவாய்ச் சேல்போலுங் கண்கள் குழிந்து காட்டவும், வாரை நுனியினுற் கிழிக்கின்ற தனங்கள் பொருந்திய பாலைச்சுரந்து காட்டவும், வரக்கடவதாகிய கர்ப்பவேதனை அதிகரித்து நீங்குதலில்லாத பல சுவை விருப்பத்தையும் நாவானது காட்டவும், கருப்பமடைந்து நிறைந்தகாலத்தில் ஒரு புதல்வனைப்பெற்ருள். எ - று.

(வி - ரை.) கருப்பம் வாய்த்தவர்களுக்கு, நரம்புபைத்தல், விழி குழிந்துகாட்டல், கொங்கை பால்சுரத்தல், வயாவுநீடல், பல்சுவை நாக்காட்டல்

முதலிய குறிகள் உண்டாமென்பது இதனாற் பெறப்பட்டது. பைத்தல் - பசைநிறமுடைத்தாதல், இதற்குப் பகுதி பசுமை. குழிதல் - ஆழ்தல். வார் கச்சு, இதனைக் கஞ்சுகம் என்றும் குபுஸம் என்றும் கூறுவர் வடநூலார் பாற்சுரப்பால் கொங்கைகள் விம்முத லியல்பாதலால், "வார்முகங் கிழிக்கும் கொங்கை மருவுபால் சுரந்து காட்ட". என்றார். சுவையென்றது - சுவை விருப்பத்தை. நிரம்புநாள் - ஈனும்பருவம் நிரம்பினகாலம், நேரிழை-பண்புத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. மைந்தன் - இருமைக்கும் உறுதியைத்தருவோன். மைந்து - உறுதி. (௬௨)

பின்புசின் னாள்கள் செல்லப் பெய்வளை மக்கட் பேற்றி
னன்புறு மார்வ மீட்டு மடரத்தன் முயற்சி யாலே
கொன்பெறு கணவற் கூடிக் கூடிநன் குயிர்த்து யிர்த்திட்
டின்புறப் பெற்று நின்று ளிருபத்தேழ் மைந்தர் சேர.

(ப - ரை.) பின்பு - அதன்பிறகு, சிலநாள்கள்செல்ல - சிலநாட்கள் கழிய, பெய்வளை - அந்தப்பெண்ணானவள், மக்கட்பேற்றின் அன்பு உறும் ஆர்வம் - மக்களைப்பெறுதலில் அன்பும் மிக்க ஆசையும், மீட்டும் அடர - மறுபடியுமிகுதலால், தன்முயற்சியாலே - தனது பிரயத்தினத்தால், கொன்பெறு கணவன்கூடிகூடி-பெருமைபெற்ற கணவனைச்சேர்ந்து சேர்ந்து, சேர - ஒருமிக்க, இருபத்தேழ்மைந்தர் - இருபத்தேழு புதல்வர்களை, நன்கு உயிர்த்து உயிர்த்திட்டு - நன்றாக ஈன்றுஈன்று, உற இன்புபெற்றுநின்றுள்-மிகுதியாக இன்பமடைந்திருந்தாள், எ - று.

(பொ - ரை.) அதன்பிறகு சிலநாட்கள்கழிய, அந்தப் பெண்ணானவள் மக்களைப்பெறுதலில் அன்பும் மிக்க ஆசையும் மறுபடியும் மிகுதலால் தனது பிரயத்தினத்தால், பெருமைபெற்ற கணவனைச்சேர்ந்துசேர்ந்து, ஒருமிக்க இருபத்தேழு புதல்வர்களை நன்றாகஈன்றுஈன்று மிகுதியாக இன்பமடைந்திருந்தாள், எ - று.

(வி - ரை.) பெய்வளை - வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. மக்கட்பேறு - மக்களைப்பெறுதல், அடர்தல் - நெருங்குதல், அது இங்குமிகுதலுக்காயிற்று. இன்பு - (எமக்கு இருபத்தேழ் மைந்தரிருக்கின்றார் என்னும்) இறுமாப்பு, (களிப்பு) (௬௩)

மலையிட்ட செல்வத் தார்கண் மகிழவோர் மகவுந் தாரா
னலையிட்ட முட்டாட் செய்ய வம்புயத் துறைவோ னேழ்
தலையிட்ட விருபான் மைந்தர்த் தந்தனன் பெருமை யன்றே
சிலையிட்ட தழும்பு வாய்ந்த தெரியலந் தடந்தோள் வேந்தே.

(ப - ரை.) அலைஇட்ட-நீரில்உண்டாகிய, முள்தாள் - முட்களையுடைய நாளத்தோடு கூடிய, செய்யஅம்புயத்து - செந்தாமரை மலரில், உறை

No. 8. PAGE, No. 88.



குசேலருக்கு 27 பிள்ளைகளுதித்தது.

வோன் - வாழ்வோனாகிய பிரமன், மலைஇட்டசெல்வத்தார்கள்-மலைபோலுஞ் செல்வத்தையுடையவர்கள், மகிழ - மகிழும்படி, ஓர்மகவுந்தாரான்-ஒருபுதல் வனையுங்கொடான், ஓர் எழ்தலையிட்ட - ஒரேழைமுன்னேயிட்ட, இருபான் மைந்தர் தந்தனன் - இருபதுபுதல்வனைக்கொடுத்தான், பெருமையன்றே - (இதனால்) அப்பிரமனுக்குப் பெருமையுண்டாகுமல்லவா, சிலையிட்டதழும் புவாய்ந்த - வில்லைத்தாங்கின தழும்புள்ள, தெரியல்அம்தடம்தோள்-பூமாலை யைத்தரித்த அழகிய பெருந்தோள்களையுடைய, வேந்தே - அரசனே. எ-று.

(பொ - ரை.) நீரிலுண்டாகிய முட்களையுடைய காளத்தோடு கூடிய செந்தாமரை மலரில் வாழ்வோனாகிய பிரமன், மலைபோலுஞ் செல்வத்தை யுடையவர்கள் மகிழும்படி ஒரு புதல்வனையுங்கொடான், ஒரேழைமுன்னே யிட்ட இருபதுபுதல்வனைக் கொடுத்தான், (இதனால் அப்பிரமனுக்குப்) பெரு மையுண்டாகுமல்லவா, வில்லைத்தாங்கின தழும்புள்ள, பூமாலையைத் தரித்த அழகிய பெருந்தோள்களை யுடைய அரசனே. எ - று.

(வி - ரை.) மலையிட்ட என்பதில் இடு உவமவுருபு. அலை - சினையாகு பெயர். ஓரேழ்தலையிட்ட விருபான் - இருபத்தேழு. தழும்பு - வடு. வாய்ந்த தோள், தெரியல்தோள், அம்தோள், தடம்தோள் என்றியைத் துரைத்துக் கொள்க. வேந்து - பண்பாகுபெயர். (கூச)

தன்குல விருத்திக் காகத் தன்மனை யெண்ணம் வாய்ப்ப
நன்குல மறையோன் கூடி நலங்கொளிம் மைந்தர்ப் பெற்றான்
புன்புலத் தவர்கள் காம விச்சையாற் புணர்ந்து பெற்றா
னென்பரா னிற்க வன்றற் கியைமிடி வெளிக்கொண் டன்றே.

(ப - ரை.) நன்குலம் மறையோன் - நல்லவமிசத்தனாகிய வேதியன், (குசேலன்), தன் குலவிருத்திக்காக - தன்குலப்பெருக்கத்தின் பொருட்டு, தன் மனை எண்ணம் வாய்ப்ப-தன் மனையாளது எண்ணத்துக்கிணங்க, கூடி- (மனைவியோடு) சேர்ந்து, நலம்கொள் - நன்மையைக்கொண்ட, இ மைந்தர் பெற்றான் - இந்தப்புதல்வனைப்பெற்றான், புன்புலத்தவர்கள் - அற்ப அறி வுடையவர், காமஇச்சையால் புணர்ந்து பெற்றான் என்பர் - காமவிருப்பத் தால் மனைவியைச்சேர்ந்து பெற்றான் என்று சொல்லுவர், நிற்க - அது நிற்க, அன்றற்கு - அந்தக் குசேலனுக்கு, இயை மிடி வெளிக்கொண்டன்று - பொருந்திய வறுமையானது வெளிப்பட்டது. எ - று.

(பொ - ரை) நல்லவமிசத்தனாகிய வேதியன் (குசேலன்) தன் குலப் பெருக்கத்தின் பொருட்டுத் தன்மனையாளது எண்ணத்துக்கிணங்க (மனைவி யோடு)சேர்ந்து, நன்மையைக்கொண்ட இந்தப்புதல்வனைப் பெற்றான், அற்ப அறிவுடையவர் காமவிருப்பத்தால் மனைவியைச்சேர்ந்து பெற்றான் என்று சொல்லுவர், அது நிற்க, அந்தக்குசேலனுக்குப் பொருந்திய வறுமையானது வெளிப்பட்டது. எ - று.

(வி - ரை.) விருத்தி - பெருக்கம். மனை இடவாகுபெயர். புலம் - அறிவு. நன்மை தீமைகளின் பயன்களாகிய பெருக்கமும் கேடும் தம் காலம் வருமளவும் செய்தவுயிரைப்பற்றி நின்று, வந்துழி வெளிப்படு மாதலால் இக் குசேலனுயிரைப்பற்றி மறைந்து நின்ற தீமைப்பயனாகிய மிடி வெளிப்பட்டது என்றற்கு, "அன்னாற் கியைமிடி வெளிக்கொண் டன்றே" என்றார். இயைதல் - உயிரோடு பொருந்தியிருத்தல். (கூ௫)

இது முதல் நான்கு செய்யுட்களும் வறுமை வந்தும் ஒருவரிடஞ்சென்று யாசியாமல் இல்லறம் நடத்தி வந்தனர் எனக்கூறுகின்றன.

பல்லெலாந் தெரியக் காட்டிப் பருவரன் முகத்திற் கூட்டிச்
சொல்லெலாஞ் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி
மல்லெலா மகல வோட்டி மானமென் பதனை வீட்டி
யில்லெலா மிரத்த லந்தோ விழிவிழி வெந்த ஞான்றும்.

(ப - ரை.) பல் எலாம் - பற்களெல்லாம், தெரிய - வெளிகாண, காட்டி - காட்டி, பருவரல் (மனத்திலுள்ள) துன்பத்தை, முகத்தில் கூட்டி - முகத்திற்சேர்த்து, சொல் எலாம் சொல்லி நாட்டி - (வணக்கமாகிய) சொற்களையெல்லாம் சொல்லி நிறுத்தி, துணைக்கரம் விரித்து நீட்டி - இருகைகளையும் விரித்து நீட்டி, மல் எலாம் - பெருமை முழுதும், அகல ஓட்டி - தூரத்தே போக்கி, மானம் என்பதனை வீட்டி - மானமென்பதைக் கொன்று, இல் எலாம் - வீடுகள் தோறும் (சென்று), இரத்தல் - ஏற்றல், அந்தோ - ஐயோ, எந்த ஞான்றும் - எந்நாளும், இழிவு இழிவு - தாழ்வு தாழ்வு. எ - று.

(பொ - ரை.) பற்களெல்லாம் வெளிகாணக்காட்டி, (மனத்திலுள்ள) துன்பத்தை முகத்திற் சேர்த்து, (வணக்கமாகிய) சொற்களை யெல்லாம் சொல்லி நிறுத்தி, இருகைகளையும் விரித்து நீட்டி, பெருமை முழுதும் தூரத்தேபோக்கி, மானமென்பதைக்கொன்று, வீடுகள் தோறுஞ்சென்று ஏற்றல், ஐயோ, எந்நாளும் தாழ்வு தாழ்வு. எ - று.

(வி - ரை.) "கொடிது கொடிது வறுமை கொடிது" என்கிறபடியே வறுமை மிகக் கொடிதென்பதற்கு இவ்வாறு கூறினார். மானமிழத்தல் தாழ்விலுந்தாழ்வு என்றறிவிக்க அதனை 'மானமென்பதனை வீட்டி' என்றார். இரப்போர்தாம் வேண்டிய ஒரு பொருளைக்கேட்கப்புகுகையில் அப்பொருளுடையார்க்குத் தம்மிடத்து இரக்கமுண்டாகப்பற்கள் தோன்றும்படி வாயைத் திறந்து துக்கத்தோடு கூடிய முகமுடையவர்களாய்ப் பணிவாக அவன் மனமிசைதற்கேதுவாகிய பல சொற்களையும் சொல்லித் தான் யாசிக்கும் பொருள் தனக்கு இன்றியமையாதது என்றுஸ்தாபித்து இரண்டு கைகளையும் நீட்டி ஏற்கும் வழக்கத்தை இயற்கையணி என்னும் அலங்காரந்தோன்றக் கூறினர் - தான் விரும்பியபொருள் ஒருவரிடத்திலேயே கிடைப்பதரிதாகையால் 'இல்லெலாம் இரத்தல்' என்றார். நாட்டி கூட்டி முதலிய பிறவினை



குசேலர் வயலில் உதிர்ந்த தானியங்களைச் சேகரிக்கல்.

வினையெச்சங்கள் இரத்தல் என்னும் தொழிற்பெயர் கொண்டன. எந்த ஞான்றும் என்றது உயிரிழக்க வருங்காலத்தினு மென்றபடி. இரத்தல் இழிவு, என்பதனை "ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற் - கிரவி னிளிவந்த தில்" என்னுந்திருக்குறளானுமுணர்க - இழிவு இழிவு என்னும் அடுக்கு மிகுதிப் பொருளது - அன்றி அவலப்பொருளது எனினுமாம். (௬௬)

இருநிலத் தியாவர் கண்ணு மேற்பதை யிகழ்ச்சி யென்னா
வொருவிய வுளத்தான் காட்டி லுதிர்ந்துகொள் வாரு மின்றி
யருகிய நீவா ரப்புற் றானிய மாராய்ந் தாராய்ந்
துருவவொண் ணகத்தாற் கிள்ளி யெடுத்துடன் சேரக் கொண்டு.

(ப - ரை.) இருநிலத்து - பெரியவுலகத்தில், யாவர்கண்ணும் - யாவரிடத்தாயினும், ஏற்பது இகழ்ச்சி என்ன-ஏற்பது இகழ்வாமென்று, ஒருவிய உளத்தான் - (அந்த யாசகத்தொழிலை) நீங்கின மனத்தினராகிய குசேலர், காட்டில் உதிர்ந்து-காட்டில் தானே உதிர்ந்து, கொள்வாரும் இல்லா - கைக்கொள்வாருமில்லாத, அருகிய - அற்பமாகிய, நீவாரம் புல்தானியம் - குளநெல்லின் சிறிதான தானியத்தை, ஆராய்ந்து ஆராய்ந்து - தேடித்தேடி, உருவம் ஒள்நகத்தால் கிள்ளி எடுத்து, அழகாகிய ஒள்ளிய நகத்தினாற் கிள்ளியெடுத்து, உடன்சேரக்கொண்டு - ஒருமிக்கச்சேர்த்துக்கொண்டு. எ - று.

(பொ - ரை.) பெரியவுலகத்தில் யாவரிடத்தாயினும் ஏற்பது இகழ்வாமென்று (அந்தயாசகத்தொழிலை) நீங்கின மனத்தினராகிய குசேலர், காட்டில் தானே உதிர்ந்து கைக்கொள்வாருமில்லாத அற்பமாகிய குளநெல்லின் சிறிதான தானியத்தைத் தேடித்தேடி, அழகாகிய ஒள்ளிய நகத்தினாற்கிள்ளியெடுத்து, ஒருமிக்கச்சேர்த்துக்கொண்டு. எ - று.

(வி - ரை.) நீவாரப்புல் தானியம் என்பதற்கு நீவாரப்புல்லினது தானியம் என்றுரைத்தலுமாம், இத்தானியம் அதிநுட்பமாதலால் 'நகத்தாற் கிள்ளி யெடுத்து' என்றார். இத்தானியம், தானே ஒவ்வொரிடங்களில் முளைப்பதாகையால் 'ஆராய்ந்து ஆராய்ந்து' என்றார். யாவர்கண்ணும் என்பதில் உம்மை முற்றும்மை, அன்றி உயர்வு சிறப்பெனினுமாம். குறிப்பறிந்து ஈவோரிடத்தும் ஏற்கலாகாது என்றபடி. ஏற்பது, இகழ்ச்சி - என்னுந்தொழிற் பெயர்களில் முன்னது இடைநிலை பெற்றும், பின்னது இடைநிலை பெறாதும் வந்தன. ஏற்பது என்பதற்குப்பகுதி - ஏல். கொள்வாருமென்பதில் உம்மை விதைப்பாருமில்லை, விதையாமல் விளைந்தபின் அதனைக்கொள்வாருமில்லை எனப்பொருள் படலால் இறந்தது தழீஇய எச்சவும்மையோடு இழிவு சிறப்புமாம். அருகுதல் - குறைதல். அது இங்குச் சிறுமையையுணர்த்திற்று. (௬௭)

வந்துதன் மனையைக் நீட்ட வாங்கிமற் றவற்றைக் குற்றி
யந்தமெல் லியல்பா கஞ்செய் ததிலோர் பாகம் வைத்துத்

தந்ததன் பங்க யின்று தவலரு முவகை பூத்து
மந்திர மறைகட் கெட்டா மாலடி நினைந்தி ருப்பாள்.

(ப - ரை.) ஏந்து தன் மனைகை நீட்ட, வந்து தன் மனைவியினது கை யிற்கொடுக்க, வாங்கி - ஏற்று, அவற்றைக்குற்றி - அவைகளைக்குற்றி, அந்த மெல் இயல் - அந்தப்பெண்ணனவள், பாகம் செய்து - சமைத்து, அதிதிக்கு ஓர் பாகம் வைத்து - விருந்தினர்களின் பொருட்டு ஒரு பங்கை வைத்து, தந்த - கொடுக்கப்பட்ட, தன் பங்கு - தன் பாகத்தை, அயின்று - உண்டு, தவல் அரும் உவகை பூத்து - கெடுதலில்லாத சந்தோஷத்தையடைந்து, மந்திரம் மறைகட்கு எட்டா - மந்திரங்களுக்கும் வேதங்களுக்கு மெட்ட வொண்ணாத, மால் அடி - திருமாலினது பாதங்களை, நினைந்து இருப்பாள் - தியானம் செய்து கொண்டிருப்பாள். எ - று.

(பொ - ரை.) வந்துதன் மனைவியினது கையிற்கொடுக்க ஏற்று அவை களைக்குற்றி அந்தப்பெண்ணனவள் சமைத்து விருந்தினர்களின் பொருட்டு ஒரு பங்கை வைத்து, கொடுக்கப்பட்ட தன்பாகத்தையுண்டு, கெடுதலில்லாத சந்தோஷத்தையடைந்து, மந்திரங்களுக்கும் வேதங்களுக்கு மெட்டவொண் ணாத திருமாலினது பாதங்களைத் தியானஞ்செய்துகொண்டிருப்பாள். எ-று.

(வி - ரை.) அதிதியர்-உணவின் பொருட்டுப் பண்டு அறிவுடைமையின் குறித்து வருவோரும் அறிவின்மையின் குறியாது வருவோருமென இருவ கையினர். மனை இடவாகுபெயர். மெல்லியல் மென்மையாகிய இயலினையு டையாளெனவிரிதலால் பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொ கைக்காரணப்பெயர். ஒருவர் மனைவியோடு வனத்திற் செல்லாது இல்லின் கணிருத்தல் விருந்தினைப்பேணி அவரை உபசரித்தற்பொருட்டே யா தலால் வறுமைக்காலத்தும் இவ்வாறுயினர். பிரமயாகம், தேவயாகம், மாநுட யாகம், பிதிர்யாகம், பூதயாகம் என்னும் ஐவகையாகங்களில் பிரமயாகம் வேதமோதல். தேவயாகம் - ஓமஞ்செய்தல். மாநுடயாகம் - விருந்தோம்பல். பிதிர்யாகம் - நீர்க்கடன் செய்தல். பூதயாகம் - பலியீதல். இவற்றுள் சிறந் தது மாநுடயாகமாகையால் இவர் அதனை மேற்கொண்டொழுகுவாராயினர். பாகம்-பாகித்தபொருளையுணர்த்தலால் பண்பாகுபெயர். அயின்று என்னும் வினையெச்சத்திற்குப் பகுதி - அயில். தவலரும் என்பதில் அருமை இன்மை குறித்து நின்றது - பூத்து - என்னும் இறந்தகால வினையெச்சத்திற்குப்பகுதி பூ. எட்டா - ஈறு கெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். மால் - யாவரினும் பெரியோன். இது பண்பாகுபெயர். (கூஅ)

இற்றிவன் வாழ்க்கைத் தன்மை யிருபத்தேழ் மைந்த ருக்கு
மற்றவப் பாகக் கஞ்சி மட்குழி சியைப்பால் வைத்துப்
பற்றுகோ ரிகையான் மொண்டு வாக்கிப்பற் றுமை கண்டு
வெற்றுடம் பாகி நிற்பண் மெலிவள்பின் னென்செய் வாளால்.

(ப - ரை.) இவன் - இந்தக்குசேலரது, வாழ்க்கைத்தன்மை - வாழ்க்கையின் தன்மையானது, இற்று - இத்தன்மையது. (இவர்மனைவியானவள்) இருபத்துஎழ்மைந்தருக்கும் - இருபத்தேழுபுதல்வருக்கும், அ பாகக்கஞ்சி - அந்தப்பாகஞ்செய்த கஞ்சியுள்ள, மண்குழிசியையால் வைத்து - மட்பானையைப் பக்கத்தில்வைத்து, பற்று - கையிற்பிடித்த, சோரிகையால் - அகப்பையினால், மொண்டுவார்த்து - முகந்துவார்த்து, பற்றாமைகண்டு - போதாமையைநோக்கி, வெறுவுடம்பு ஆகிநிற்பள் - வெற்றுடலாகி நிற்பாள், மெலிவள் - இளைப்பாள், பின்னஞ்செய்வாள் - மற்றென் செய்யக்கடவாள். எ - று.

(பொ - ரை.) இந்தக்குசேலரது வாழ்க்கையின் தன்மையானது இத்தன்மையது. (இவர் மனைவியானவள்) இருபத்தேழு புதல்வருக்கும் அந்தப்பாகஞ்செய்த கஞ்சியுள்ள மட்பானையைப்பக்கத்தில் வைத்து, கையிற்பிடித்த அகப்பையினால் முகந்துவார்த்து, போதாமையைநோக்கி வெற்றுடலாகி நிற்பாள்; இளைப்பாள்; மற்றென் செய்யக்கடவாள். எ - று.

(வி - ரை.) புதல்வருக்குப் பசிதீரவுண்பித்தற்கியலாமல் அவர்கள் படும் பசிவருத்தத்தைநோக்கி வருந்தி, அவளாய் மனமெலிவாள் என்பது கருத்து. இற்று ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று, இன் பகுதி, (இத்தன்மை என்பதன் மரூஉ) ஒன்றன்பாற்குறிப்பு வினை முற்று விகுதி, னகரம் றகரமானது சந்தி. மைந்தர் - மைந்து என்னும் பண்படியாகப்பிறந்த பலர்பாற்படர்க்கைப்பெயர். மைந்து - பலம், தாய்தந்தையர்க்குப் பலமாயிருத்தலால் புதல்வர் மைந்தர் எனப்பெயர் பெற்றனர். பாகக்கஞ்சி என்பது ஆக்கிய சோறு என்பதுபோல் வந்தது, வாக்கி என்னும் இறந்தகால வினையெச்சத்திற்குப் பகுதி வாக்கு. மெலிவள் - மென்மையென்னும் பண்படியாகப்பிறந்த குறிப்பு வினைமுற்று.

(௫௧)

மேற்படி - வேறு.

ஒருமகவுக் களித்திடும்போ தொருமகவு கைநீட்டு முந்திமேல்வீழ்ந், திருமகவுங் கைநீட்டு மும்மகவுங் கைநீட்டு மென்செய்வாளால், பொருமியொரு மகவழுங்கண் பிசைந்தழுமற் றொருமகவு புரண்டு வீழாப், பெருநிலத்திற் கிடந்தழுமற் றொருமகவென் னைநசிப்பாள் பெரிதும் பாவம்.

இதுமுதல்-௧௦-ம் செய்யுள்வரையில் வறுமையால் குழந்தைகள்படுந் துயரங் கூறப்படுகிறது.

(ப - ரை.) ஒருமகவுக்கு - ஒருபிள்ளைக்கு, அளித்திடும்போது - கொடுக்கும்போது, ஒருமகவுகைநீட்டும் - ஒருபிள்ளை கையைநீட்டும், உந்திமேல்வீழ்ந்து - வயிற்றின்மீது விழுந்து, இருமகவும்கைநீட்டும் - இரண்டுகுழந்தைகளும் கையைநீட்டும், மும்மகவும் கைநீட்டும் - மூன்று குழந்தைகளும் கையைநீட்டும், என்செய்வாள் - என்னசெய்வாள், ஒருமகவுபொருமிஅழும்.

ஒருகுழந்தை விம்மியழும், மற்றொருமகவுகண்பிசைந்து அழும் - வேறொரு குழந்தை கண்பிசைந்து அழாநிற்கும், மற்றொருமகவு - வேறொருகுழந்தை, புரண்டுவீழா - புரண்டுவிழுந்து, பெருநிலத்தில் கிடந்து அழும் - பெரிய பூமியின் மேற்கிடந்து அழாநிற்கும், எங்ஙனம் சகிப்பாள் - (இந்தக்குழந்தைகளுடைய துன்பத்தைநோக்கி) எவ்வாறு ஆற்றுவாள், பெரிதும்பாவம்-பெரும்பாவம். எ - று.

(பொ - ரை.) ஒருபிள்ளைக்குக் கொடுக்கும்போது, ஒருபிள்ளை கையை நீட்டும்; வயிற்றின் (தள்ளிக்கொண்டு) மீதுவிழுந்து இரண்டுகுழந்தைகளும் கையைநீட்டும்; மூன்று குழந்தைகளும் கையைநீட்டும்; என்னசெய்வாள்;ஒருகுழந்தை விம்மியழும், வேறொருகுழந்தை கண்பிசைந்து அழாநிற்கும்; வேறொருகுழந்தை புரண்டுவிழுந்து பெரியபூமியின்மேற் கிடந்து அழாநிற்கும்; இந்தக்குழந்தைகளுடைய துன்பத்தை நோக்கி எவ்வாறு ஆற்றுவாள், பெரும் பாவம். எ - று.

(வி - ரை.) மகவு - குழந்தை. இது இருதிணைக்கும்பொதுவானபெயர். மகவென்பது உகரச்சாரியையும் அதுபற்றிவந்த வகர உடம்படு மெய்யும்பெற்றுவந்தது. இன்னும் இது ன் - ள் - ர் - என்னும் உயர்திணை முப்பால்விகுதிகளைப்பெற்று மகன், மகள், மார், எனத் திணைபால்களுக்குச் சிறப்புப்பெயராயும் வழங்கும். போது - பொழுது என்பதன் மரூஉ, இது முதனீண்டு ழகரத்தையூர்ந்துநின்ற உகரநீங்கிப் போழ்துஎனவும் வரும். பசியின் மிகுதியாலும் தாமதித்தால் ஆய்விடும் என்னும் எண்ணத்தாலும் விரைந்துமேல் விழுதலால் மூந்தியெனவும் பிரிக்கலாம். உந்தியென்பதற்கு முன்னின்ற பிள்ளைகளைத் தள்ளியென்றுரைப்பினும் பொருந்தும். (எ0)

அந்தோவென் வயிற்றெழுந்த பசியடங்கிற் றில்லையென வழுமா லோர்சேய், சிந்தாத கஞ்சிவாக் கிலையெனக்கன் னையெனப் பொய் செப்பு மோர்சேய், முந்தார்வத் தொருசேய்மி சையப்புகும்போ தினிலொருசேய் முடுகி யீர்ப்ப, நந்தாமற் றச்சேயு மெதிரீர்ப்பச் சிந்துதற்கு நயக்கு மோர்சேய்.

(ப - ரை.) ஓர்சேய் - ஒருகுழந்தை, அந்தோ - ஐயோ, என்வயிறு-என் வயிற்றில், எழுந்த - உண்டாகிய, பசி-பசியானது, அடங்கிற்றில்லையென - அடங்கவில்லையென்று, அழும் - அழாநிற்கும்; ஓர்சேய் - ஒருகுழந்தை,சிந்தாதகஞ்சி - சிந்தாதகஞ்சியை, எனக்குவாக்கில - எனக்குவார்த்தாயில்லை, அன்னையென - தாயேஎன்று, பொய்செப்பும் - பொய்சொல்லும்,முந்து ஆர்வத்து-முற்பட்ட ஆசையோடு, ஒருசேய்மிசைய புகும் போதினில் - ஒருகுழந்தை உண்ணப்போம்போது, ஒருசேய்முடுகியீர்ப்ப - ஒருகுழந்தை விரைந்து இழுக்க, நந்தா - பின்னிடாமல், அச்சேயும் - அந்தக்குழந்தையும், எதிர்ஈர்ப்ப-எதிரேபற்றியிழுக்க, சிந்துதற்கு - சிந்துகிற கஞ்சிக்கு, ஓர்சேய் நயக்கும் - ஒருகுழந்தைவிரும்பும். எ - று.



குசேலர் மக்கள் உணவுக்கு ஒருவரோடொருவர் சச்சரவிட்டுத் துன்புறுதல்.

(பொ - ரை) ஒருகுழந்தை ஐயோ என்வயிற்றில் உண்டாகிய பசியா னது அடங்கவில்லையென்று அழாநிற்கும்; ஒருகுழந்தை சிந்தாதகஞ்சிஎனக்கு வார்த்தாயில்லை தாயேயென்று பொய்சொல்லும், மூர்பட்ட ஆசையோடு ஒருகுழந்தை உண்ணப்போம்போது ஒருகுழந்தை விரைந்து இழுக்கப் பண் ணிடாமல் அந்தக்குழந்தையும் எதிரேபற்றியிழுக்கச் சிந்துகிற கஞ்சிக்கு ஒரு குழந்தை விரும்பும். எ - று.

(வி-ரை.) பசுமை-ஈரம். இது இல்லாமையால் உண்டாவதான பசுமை யுடையதெனப் பொருள்படப் பசிஎன்று வழங்குவது மங்கலவழக்கு. சிந்தாத என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் கஞ்சி என்னும் செயப்படுபொருள் கொண்டது. செப்பு - திசைச்சொல். சேய் - விகுதிபெறாதஉயர்திணையாண் பாற் படர்க்கைப்பெயர். நந்தா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். சிந்து தல் - சிந்தியகஞ்சியை யுணர்த்தலால் தொழிலாகுபெயர். (எக)

இவ்வண்ணங் கலாம்விளைக்கு மைந்தர்களை நனிநோக்கி யிரங்கி யேங்கிச், செவ்வண்ணக் கரதலத்தா லணைத்துமடித் தலத்திருத்திச் சிறப்புச் செய்து, மைவ்வண்ணக் கண்ணீரைத் துடைத்து முதுகம் வெரிந்புறந்தை வந்து மாம்ப, லவ்வண்ண வாய்முத்தங் கொண்டுநயத் தோர்விதத்தி லாற்றல் செய்வாள்.

(ப - ரை.) இவ்வண்ணம் - இவ்வாறு, கலாம்விளைக்கும் - கலகத்தை யுண்டாக்குகிற, மைந்தர்களை - புதல்வர்களை, நனிநோக்கி - மிகுதியும் பார்த்து, இரங்கி - இரக்கங்கொண்டு, எங்கி - அழுது, செவ்வண்ணம் - செந்நிறம் பொருந்திய, கரதலத்தால், கைகளால், அணைத்து - தழுவி, மடித்தலத்து இருத்தி - மடியிலிருத்தி, சிறப்புசெய்து - சீராட்டி, முகம் - முகத்திலுள்ள, மைவண்ணம் - கருநிறத்தையுடைய, கண் - கண்களிலிருந்தொழுகுகிற, நீர் துடைத்து-நீரைத்துடைத்து, வெரிந்புறம் - முதுகின்புறத்தை, தைவந்து - தடவி, அவ்வண்ணம் - அந்த அழகாகிய, வாய்முத்தம்கொண்டு - வாய்முத்த மிட்டு, நயத்து - விருப்பங்காட்டி, ஓர்விதத்தில்-ஒருவகையில், மாம்பல் (அவர்கள்)வருத்தத்தை, ஆற்றல்செய்வாள் - தணிப்பாள். எ - று.

(பொ - ரை.) இவ்வாறு கலகத்தை யுண்டாக்குகிற புதல்வர்களை மிகுதியும்பார்த்து, இரக்கங்கொண்டு அழுது, செந்நிறம்பொருந்திய கைகளால் தழுவி மடியிலிருத்திச் சீராட்டி,முகத்திலுள்ள கருநிறத்தையுடைய கண்களி லிருந்தொழுகுகிற நீரைத்துடைத்து முதுகின்புறத்தைத் தடவி அந்த அழகாகிய வாய் முத்தமிட்டு விருப்பங்காட்டி, ஒருவகையில் (அவர்கள) வருத்தத்தைத் தணிப்பாள். எ - று.

(வி - ரை.) நனி-உரிச்சொல். கரதலம், மடித்தலம்என்பன ஒற்றுமைப்பொருளனவாகிய ஆறும்வேற்றுமைத்தொகை யென்றாவது இருபெயரொட்டுப்பண்புத்தொகையென்றாவது கொள்க. கரதலம் வடமொழிச் சந்தியாத

லால் இயல்பாயிற்று. தலம் ஸ்தலம் என்னும் வடமொழித்திரிபு. தைவந்து என்பதற்குப் பகுதி தைவா. நயந்து என்பது நயத்து என வலித்தலாயிற்று. ஆற்றல்செய்வாள்ஒருசொல். எல்லாரையும் ஒருமிக்க ஆற்றுவித்தல் முடியாதாகையால் "ஓர்வித்திலாற்றல்செய்வாள்" என்றார். (எஉ)

அடுத்தமனைச் சிறுவனொருவ னின்றுநும தகங்கறியென் னட்டா ரென்று, தொடுத்துவினை யினனலச் சொற்பொருள்யா ததுதானெச் சுவைத்தன் னாய்நீ, யெடுத்துரையென் றிடுமழவுக் குரைக்கிலது செய்ஙெனிலென் செய்வா மென்று, மடுத்தவஃ தறிந்திலே னெனமற்றொன் றுரைத்ததனை மறக்கச் செய்வாள்.

(ப - ரை.) அடுத்தமனை - அடுத்தவீட்டிலுள்ள, சிறுவன்ஒருவன் - சிறுவனொருவன், இன்று - இத்தினம், நுமதுஅகம் - உமதுவீட்டில், கறிஎன்அட்டார் என்று - கறியென்னசமைத்தார்களென்று, தொடுத்துவினயினன்-தொடர்ந்துவினவினன், அச்சொல்பொருள்யாது - அந்தச்சொல்லின் பொருள் யாது, அது எச்சுவைத்து-அது எந்தச்சுவையையுடையது, அன்னாய்-தாயே, நீஎடுத்துஉரை - நீயெடுத்துச்சொல், என்றிடும் மழவுக்கு - என்கிற குழந்தைக்கு, உரைக்கில் - சொன்னால், அதுசெய்எனில் - அதைச்சமையென்று சொன்னால், என்செய்வாம் என்று - யாதுசெய்வோமென்று, மடுத்த அஃது அறிந்திலேன் என - (அவர்கள்) சமைத்த அதனை அறிந்திலேனென்று, மற்றொன்று உரைத்து -வேறொன்றைச் சொல்லி, அதனை மறக்கச்செய்வாள் - அதை மறக்கப்பண்ணுவாள். எ - று.

(பொ - ரை.) அடுத்தவீட்டிலுள்ள சிறுவனொருவன் இத்தினம் நுமது வீட்டில் கறியென்னசமைத்தார்களென்று தொடர்ந்து வினவினன்; அந்தச் சொல்லின் பொருள்யாது, அது எந்தச்சுவையையுடையது, தாயே நீயெடுத்துச்சொல் என்கிற குழந்தைக்கு, சொன்னால் அதைச் சமையென்று சொன்னால் யாது செய்வோமென்று (அவர்கள்) சமைத்தஅதனையறிந்திலேனென்று வேறொன்றைச் சொல்லி அதைமறக்கப்பண்ணுவாள். எ - று.

(வி - ரை.) பிள்ளைகள் கறியென்னட்டார் என்றசொல்லுக்குப்பொருள்வினவியபடியால் கறியுண்டறியார் என்பது விளங்குகின்றது. அட்டார் என்பதற்குப் பகுதிஅடு. மழவு பண்பாகுபெயர். ஒருவர்தம்மில்கருதிப் பன்மையாய்வைத்துக் கூறுதல் மரபாதலால் செய்வாம் என்பது பால்வழுவமைதியன்று வழாநிலையேயாம். சொற்பொருள் - சொல்லுக்குப்பொருள், சொல்லாலறியப்படும்பொருள், சொல்லினது பொருள், சொல்லின்கட் பொருள் எனவிரிக்கப்படும். (எ௩)

வேறுமனைச் சிறானயின்ற பக்கணங்கள் மோடிவந்து விழிநீர் வாரச், சீறுதலி லாதவனை முகம்பார்த்தின் றவின்னா இம்மு

னென்வா, யூறுதலா லிப்பொழுதே செய்தளித்தி யெனவுடுத்த வுடைதொட் டொர்க்குந், தேறுதலில் சிறுமகவை யெடுத்துமார் பிடையணைத்துச் சிந்தை நோவாள்.

(ப - ரை.) வேறுமனை - அயல்வீட்டின், சிறுன் - சிறுவன், அயின்ற - உண்ட, பக்கணம்கண்டு - பக்ஷணத்தைப்பார்த்து, ஓடிவந்து———, விழிநீர் வார - கண்ணீரொழுக, சீறுதல்இலாத - கோபமில்லாத, அன்னைமுகம்பார்த்து - தாயின் முகத்தைப்பார்த்து, இன்னுன் - இன்னவன், இன்னதின்றுன் - இன்னபட்சணத்தையுண்டான், என்வாய் ஊறுதலால் - என்வாயில் நீர்சுரத்தலால், இப்பொழுதே——, செய்துஅளித்தி - அதைச்செய்து கொடு, என- என்று, உடுத்த உடை* - உடுத்த ஆடையை, தொட்டிரக்கும் - தொட்டிழுக்கின்ற, தேறுதல் இல் - தெளிவில்லாத - சிறுமகவை - சிறுகுழந்தையை, எடுத்து மார்பிடை அணைத்து - எடுத்து மார்பிலணைத்துக்கொண்டு, சிந்தை நோவாள் - மனம்வருந்துவாள். எ - று.

(பொ - ரை.) அயல்வீட்டின்சிறுவன் உண்டபக்ஷணத்தைப் பார்த்து ஓடிவந்து, கண்ணீரொழுக, கோபமில்லாத தாயின் முகத்தைப்பார்த்து,இன்னவன் இன்னபக்ஷணத்தையுண்டான் என்வாயில்நீர்சுரத்தலால் இப்பொழுதே அதைச்செய்துகொடு என்று உடுத்த ஆடையைத் தொட்டிழுக்கின்ற தெளிவில்லாத சிறுகுழந்தையை யெடுத்து மார்பிலணைத்துக் கொண்டுமனம் வருந்துவாள். எ - று.

(வி - ரை.) ஒருவர் நல்ல பக்ஷணத்தையுண்ணப்பார்த்தவர்க்கு வாயில் நீர் சுரத்தலியல்பாதலால் "இன்னுனின்ன தின்றுனென் வாயூறுதலாலிப் பொழுதே செய்தளித்தி" என்றொரு சிறுமகவுரைத்தது. பக்கணம் பக்ஷணம் என்னும் வடமொழித்திரிபு. இதுபட்சணம் எனவுந்திரியும். தேறுதல் - தன் வினைத்தொழிற்பெயர். சிந்தை நோவாள் என்பதை எழுவாய்த்தொகா நிலைத்தொடராகக்கொண்டால் திணைவழுவமைதியாம், ஏழாம்வேற்றுமைத்தொகை நிலைத்தொடராகக்கொண்டால் வழாநிலையாம். உடை தொழிலடியாகப் பிறந்த பெயர்ப்பகுபதம். உடு பகுதி, ஐ செயப்படுபொருள் விகுதி, உகரக் கேடு சந்தி. (௭௪)

குண்டலமோ திரங்கடகஞ் சுட்டியயன் மனையார்தங் குழவிக் கிட்டார், புண்டரீ கக்கணன்று மெனக்குநீ யிடாதிருக்கும்பொரு ளைம யென்னே, கண்டெடுத்திப் போதிடெனக் கரைமதலைக் கில்லாதான் கடன்றக் தானுக், கெண்டபச்சொல் வார்த்தையென நாளைக்கு நாளைக்கென் றியம்பிச் சோர்வாள்.

(ப - ரை.) குண்டலம்———, மோதிரம்———, கடகம்———, சுட்டி———, (ஆகிய இவற்றை) அயல்மனையார் - அயல்வீட்டார் - தம் குழவிக்கு இட்டார் - தமது குழந்தைக்கு இட்டார்கள், புண்டரிகம் - தாமரை

மலர்போன்ற, கண் - கண்களையுடைய, அன்னாய் - தாயே, நீஎனக்கு——, இடாதிருக்கும் - அணியாதிருக்கிற, பொருமை என்னே - பொருமைக்குக் காரணம் யாதோ, கண்டு எடுத்து - பார்த்தெடுத்து, இப்போதுஇடுஎன-இப்பொழுதே அணிவாயென்று, கரை - அழுகின்ற, மதலைக்கு - சிறுவனுக்கு, இல்லாதான் - பொருளில்லாதவறிஞன், கடன்தந்தானுக்கு - கடன்கொடுத்தவனுக்கு, எண் தப - அளவுகெட, சொல் - சொல்லுகிற, வார்த்தைஎன - சொல்லைப்போல, நாளைக்குநாளைக்குஎன்றுஇயம்பி - நாளைக்கு நாளைக்கு என்றுசொல்லி, சோர்வாள் - அயர்வாள். எ - று.

(பொ - ரை.) குண்டலம், மோதிரம், கடகம், சுட்டி (ஆகியஇவற்றை) அயல்வீட்டார் தமது குழந்தைக்கு இட்டார்கள்; தாமரை மலர்போன்ற கண்களையுடைய தாயே! நீ எனக்கு அணியாதிருக்கிற பொருமைக்குக் காரணம் யாதோ? பார்த்தெடுத்து இப்பொழுதே அணிவாயென்று அழுகின்ற சிறுவனுக்கு, பொருளில்லாதவறிஞன், கடன் கொடுத்தவனுக்கு அளவுகெடச் சொல்லுகிற சொல்லைப்போல நாளைக்கு நாளைக்கு என்று சொல்லி அயர்வாள். எ - று.

(வி - ரை.) கடன்வாங்கின பணத்தைக்கொடுக்க வழியில்லாத வறியன் கடன்காரன் கேட்குந்தோறும் நாளைக்கு நாளைக்கென்று சொல்வதுபோல, அயல்வீட்டுச் சிறுவரணிந்திருக்கிற ஆபரணத்தைப்பார்த்து எனக்கும் அப்படி யணியவேண்டுமென்று அழுகிற சிறுவனுக்கு நாளைக்குநாளைக்கு என்று சொல்லிச் சமாதானப்படுத்துவாள் என்பது கருத்து. புண்டரீகம்-வெண்டாமரை, அது இங்கு கண்ணுக்கு உவமித்தமையால் செந்தாமரைக்காயிற்று. புண்டரிகக் கண்ணன்னாய் என விளித்தது, இத்தனை அழகான கண்ணையுடையையாயிருந்தும் இவ்வணியெல்லாம் இட்டு அந்தக்கண்ணால் பார்க்காமல் இருக்கின்றாயே என்றபடியாம். இல்லாதான்......வார்த்தையென. இது எடுத்துக்காட்டுவமை. (எகு)

பருப்போடு குளமளித்தி யெனக்கென்று மெனக்கினிய பால்வெண் ணெய்யும், விருப்போடு தருதியென்று மக்களழும் போதெல்லாம் விள்ளா ளொன்று, நெருப்போடு புகையுயிர்க்கு நிரியாணக் கரடமத நெடுங்கை யானைப், பொருப்போடு செறுநர்படை முழுதுழக்கிச் சவட்டிவரும் புகர்வேல் வேந்தே.

(ப - ரை.) நெருப்போடு புகைஉயிர்க்கும் - நெருப்புடன் புகையைக் கக்குகிற, நிரியாணம் - கடைக்கண்ணையும், கரடமதம் - மதம்பாய் சுவட்டையும், நெடு கை - நெடியதுதிக்கையையும் உடைய, யானை பொருப்போடு - மலைபோன்ற யானைகளுடன், செறுநர் படை முழுது-பகைவரது சேனைமுழுமையும், உழக்கி - கலக்கி, சவட்டிவரும் - அழித்துவருகிற, புகர்-நிறமுள்ள, வேல் - வேலாயுதத்தைத்தாங்கிய, வேந்தே - அரசனே, எனக்கு - எனக்கு,

பருப்போடு-பருப்புடன், குளம் அளித்தி என்றும், வெல்லம் கொடுப்பாயெ ன்றும், எனக்கு - எனக்கு, இனிய - இனிமையாகிய, பால்வெண்ணெய்யும்-பால்வெண்ணெய்களையும், விருப்போடு - விருப்பத்துடன், தருதி என்றும் - கொடுப்பாயென்றும், மக்கள் - சிறுவர், அழும்போது எல்லாம் - அழும்போ தெல்லாம், ஒன்றும்விள்ளாள் - ஒன்றும்பேசாதிருப்பாள். எ - று.

(பொ - ரை.) நெருப்புடன் புகையைக்கக்குகிற கடைக்கண்ணையும் மதம்பாய்சுவட்டையும் நெடிய துதிக்கையையுமுடைய மலைபோன்ற யானை களுடன் பகைவரது சேனைமுழுமையும் கலக்கி அழித்துவருகின்ற, திறமுள் ள வேலாயுதத்தைத்தாங்கிய அரசனே! எனக்குப் பருப்புடன் வெல்லம் கொடுப்பாயென்றும், எனக்கு இனிமையாகிய பால்வெண்ணெய்களையும்விரு ப்பத்துடன் கொடுப்பாயென்றும் சிறுவர் அழும்போதெல்லாம் ஒன்றும்பேசா திருப்பாள். எ - று.

(வி - ரை.) நிரியாணம் - யானையின் கடைக்கண்ணுக்கோர் சிறப்புப் பெயர். இது வடசொல். அளித்தி, தருதி என்பன ஏவலொருமை வினை முற்றுக்கள். இனிய - குறிப்புப் பெயரெச்சம். பால்வெண்ணெய். உம்மைத் தொகை. மக்கள் பன்மைக்கேயுரிய பெயர். இதனை நித்யபஹுவசநமென் பர் வடநூலார். விள்ளாள் எதிர்மறைப்பெண்பால் வினைமுற்று. முழுது என் பதன்பின் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. செறுநர் - செறு பகுதி, ந் - பெயரிடைநிலை, அர் - பலர்பால்விகுதி. கருடன், சூடாமணி என்பன. கரு ளன், சூளாமணி எனத்திரிந்துவருவதுபோல குடம் என்னும் வடமொழி குளம் எனத்திரிந்து வந்தது. ஒன்றும் - என்றது சிறிதும் என்றபடி. நெருப் போடு புகை யுயிர்க்கும் என்றது, கண்களிற்றோன்றும் வீர ரசத்தின் குறிப் பை. யானைப்பொருப்பு. யானையாகிய பொருப்பு எனப் பண்புத்தொகையா கக் கோடலுமாம். (எகூ)

சிறியசித மணிப்பூணே யன்றிவே றொருபூணச் சேய்கட் கில் லை, வறியமர நாருரியே யுடையன்றி மற்றுடைகண் மருவ லில்லை, வெறியபொழிற் றழைத்தவிலை யுண்கலமல் லாதுகலம் வேறொன் றில்லை, குறியமனை வயிற்புகுமோ ரெறும்பினுக்கு மாங்குணவு கொடுத்தற் கில்லை.

(ப - ரை.) சிறிய - சிறிதாகிய, சிதமணி - பாலைமணியாகிய. பூணே அன்றி - ஆபரணமேயன்றி, வேறு ஒரு பூண்-மற்றோராபரணம், அச்சேய்கட் கு இல்லை - அந்தச்சிறுவருக்கில்லை, வறிய - வெறுமையாகிய,மரநார்உரியே, மரவுரியே, உடை அன்றி - ஆடையாவதன்றி, மற்று உடைகள் - வேறாகிய உடைகள், மருவல்இல்லை - கிடைப்பதில்லை, வெறிய - வாசனையுள்ள, பொ ழில் - சோலையில், தழைத்த - செழித்த, இலை - இலையாகிய, உண்கலம் அல் லாது - உண்கலமேயன்றி, கலம் வேறொன்று இல்லை-உண்கலம் மற்றொன் றில்லை, குறியமனைவயின் - சிறிதாகிய வீட்டில், புகும் - வருகிற, ஓர் எறும்

பினுக்கும் - ஒரு எறும்புக்கும், உணவுகொடுத்தற்கு இல்லை - இரைகொடுத்தற்கு ஆதாரமில்லை. எ - று.

(பொ ரை.) சிறிதாகிய பாலமணியாகிய ஆபரணமேயன்றி மற்றோராபரணம் அந்தச்சிறுவருக்கில்லை. வெறுமையாகிய மரவுரியே ஆடையாவதன்றி வேறாகிய உடைகள் கிடைப்பதில்லை. வாசனையுள்ள சோலையில் செழித்த இலையாகிய உண்கலமேயன்றி உண்கலம் மற்றொன்றில்லை. சிறிதாகிய வீட்டில் வருகிற ஒருஎறும்புக்கும் இரைகொடுத்தற்கு ஆதாரமில்லை. எ - று.

(வி - ரை.) சிறிய, வறிய, வெறிய, குறிய, என்பன பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சங்கள். இவற்றிற்குப் பகுதிகள் முறையே சிறுமை, வறுமை, வெறுமை,குறுமை என்பன. ஏகாரங்கள் பிரிநிலைகள். அன்றி, எதிர்மறைக்குறிப்பு வினையெச்சங்கள். நார்உரி-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. உண்கலம் - என்பதில் உண் என்னும் வினைத்தொகையாகிய காலங்கரந்த பெயரெச்சம் கலம் என்னும் கருவிப்பெயர் கொண்டது. மனைவயின் என்பதில் வயின் ஏழனுருபு. எறும்பினுக்கும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. உணவு - தொழிலாகுபெயர். ஆங்கு - அசைநிலையிடைச் சொல்.

நண்புகூர் தருமன்னப் பால்சிறிதல் லாமன்மற்றோர் நற்பாலில்லை, பண்புகூர் தருதநயர்க் கெஞ்ஞான்றும் பசிதீர்ந்த பாடுமில்லை, கண்புகா விவ்வறுமை கண்டுமறை யவனுமுளங் கவற்சியில்லை, யெண்புகாப் புகழுவன்றன் செயல்கண்டு மனைவிவிருப் பிகத்த லில்லை.

(ப - ரை.) நண்புகூர்தரு - அன்புமிகுந்த,அன்னப்பால் சிறிது அல்லாமல் - அன்னப்பால் சிறிதேயன்றி, மற்றுஓர்நல்பால்இல்லை-வேறொருநல்லபாலில்லை, பண்புகூர்தரு - நற்குணமிகுந்த, தநயர்க்கு - சிறுவருக்கு, எஞ்ஞான்றும் - எந்நாளும், பசிதீர்ந்த பாடும் இல்லை - பசிநீங்கினபாடுமில்லை, கண்புகா - கண்ணால்நோக்குதற்கரிய, இவ்வறுமை - இந்தவறுமையை, கண்டு - நோக்கி, மறையவனும் - வேதியனும், உள்ளம் கவற்சிஇல்லை - மனம்வருந்துதலில்லை, எண்புகா - அளவிடப்படாத, புகழ் - கீர்த்தியையுடைய, அவன் செயல்கண்டும் - அவனது செய்கையைப்பார்த்தும், மனைவி - அவன்மனைவி, விருப்பு இகத்தல் இல்லை - (அவரிடத்து) அன்புநீங்குதல் இல்லை. எ - று.

(பொ - ரை.) அன்புமிகுந்த அன்னப்பால் சிறிதேயன்றி வேறொரு நல்லபாலில்லை. நற்குணமிகுந்த சிறுவருக்கு எந்நாளும் பசிநீங்கின பாடுமில்லை. கண்ணால் நோக்குதற்கரிய இந்தவறுமையை நோக்கி வேதியனும் மனம் வருந்துதலில்லை. அளவிடப்படாத கீர்த்தியையுடைய அவனது செய்கையைப் பார்த்தும் அவன்மனைவி அவனிடத்து அன்புநீங்குதல் இல்லை. எ - று.

(வி - ரை.) நண்பு - தொழிற்பெயர். நள் - பகுதி. பு - பண்புப்பெயர் விகுதி. ளகரம் ணகரமானது சந்தி. கூர்தரும் - உரியடியாகப் பிறந்த பெய

ரெச்சம். அன்னப்பாலென்பதற்கு வடித்தகஞ்சித்தண்ணீர் எனப்பொருளு ரைத்துக்கொள்க, நீராகார மெனினுமாம். மறையவன் - பொருளடியாகப் பிறந்த பெயர்ப்பகுபதம். கவற்சி - தொழிற்பெயர். கவல்-பகுதி. சி-தொழிற் பெயர் விகுதி. லகரம் றகரமானது சந்தி. இகத்தல் - தொழிற்பெயர். இக - பகுதி. த்-சந்தி. தல்-தொழிற்பெயர் விகுதி. அன்னப்பால்-ஐந்தாம்வேற்றுமை நீங்கற் பொருளென்றுவது ஆறும்வேற்றுமை ஒற்றுமைத்தற்கிழமைப்பொரு ளென்றுவது கொள்க. தநயர் வடமொழி. இவ்வறுமை என்றது, இதுவரை யிற் சொல்லிவந்த இத்தன்மைத்தாகிய வறுமையென்றபடி. இதுகண்டு சகித் தற்கரிதென்பது தோன்ற, கண்புகா வறுமையென்றார். (எஅ)

வருவாய்மிக் குடையரா யளவிறந்த செல்வத்தின் வளமுள் ளார்க்கு, மொருவாவன் பொருமதலை யெண்ணியவா றளித்தோ ம்ப லொல்லா தாகும், பொருவாவெங் கடுங்கூற்றாய்க் கொடுவிட மாய் வடவையாய்ப் புகுந்து வாட்டத், திருவாநின் றிடுமிடியிற் பன்மகவுள் ளாள்செய்கை யெற்றே யெற்றே.

(ப - ரை.) வருவாய் - வருமானம், மிக்குஉடையராய்-மிகவுமுடைய வராகி, அளவு இறந்த - அளவுகடந்த, செல்வத்தின் வளம் உள்ளார்க்கும்- செல்வப்பெருக்கமுள்ளவர்க்கும், ஒருவாஅன்பு - நீங்காத அன்பையுடைய, ஒருமதலை - ஒருபுதல்வன், எண்ணியவாறு - நினைத்தவண்ணம், அளித்து - கொடுத்து, ஓம்பல் - காப்பாற்றுதல், ஒல்லாதுஆகும் - கூடாததாகும், (அப் படி யிருக்க) பொருவா - நிகரில்லாத, வெம்கடும்கூற்றுஆய் - மிகக்கொடிய யமனாகி, கொடுவிடம்ஆய் - கொடியநஞ்சாகி, வடவைஆய் - வடவைத் தீயா கி, புகுந்து - வந்து, வாட்டத்து - துன்பத்தில், இருவாநின்றிடும் - இருத்து கிற, மிடியில் - வறுமைக்காலத்தில், பல்மகஉள்ளாள்செய்கை - பலபுதல்வ ரை யுடையவளது செய்கை, எற்றுஎற்று - எத்தன்மைத்து எத்தன்மைத்து. எ - று.

(பொ - ரை.) வருமானம் மிகவுமுடையவராகி, அளவுகடந்த செல் வப்பெருக்கமுள்ளவர்க்கும் நீங்காத அன்பையுடைய ஒருபுதல்வன் நினைத்த வண்ணம் கொடுத்துக்காப்பாற்றுதல் கூடாததாகும். (அப்படியிருக்க) நிகரில் லாத மிகக்கொடியயமனாகி, கொடியநஞ்சாகி,வடவைத்தீயாகி, வந்துதுன்பத் திலிருத்துகிற வறுமைக்காலத்தில் பலபுதல்வரையுடையவளது செய்கை எத்தன்மைத்து எத்தன்மைத்து. எ - று.

(வி - ரை.) பெருஞ்செல்வர்க்கும் ஒருசிறுவன் மனத்தின்படி திருப்தி செய்வதருமையாயிருக்க, வறியளாகிய இவள் இத்தனைப்புதல்வரை யெவ்வா று திருப்திசெய்வாள் என்பது கருத்து. வருவாய் - வரும்வழியையுடையபொ ருள். இதுவினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக்காரணப் பெயர். உள்ளார்க்கும் என்னும் குறிப்புவினையாலணையும் பெயரினீற்றிலுள் ள வும்மை உயர்வு சிறப்பு.மிக்கு - பகுதிமெய்யிரட்டித்து இறந்தகாலங்காட்

டிய வினையெச்சம், இது உடையர் என்னும் குறிப்பு வினையாலணையும்பெயர் கொண்டது ஆதலால் மிக்குடையர் என்பது ஒருசொற்றன்மைத்து. ஒருவாத என்னும் எதிர்மறைப்பெயரெச்சம் ஈறுகெட்டு ஒருவா எனவந்தது, பகுதி ஒருவு. ஒல்லாது - எதிர்மறை ஒன்றன்பால் வினைமுற்று. கூற்று - ஒருவராலும் தடுக்கமுடியாத மரணத்துன்பத்தைச் செய்யும் கொடுமைதோன்ற "பொருவாவெங்கடுங்கூற்று" எனப்பல விசேடணங்கள் கொடுத்தோதப்பட்டது, கூற்று சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையு மாகிய பெயர்ச்சொல், உடலினின்றும் உயிரைப்பிரிப்பவன் என்பது பொருள். இது அன் விகுதிபெற்றுக் கூற்றன் எனவும் கூற்றுவன் எனவும்வரும். வடவை ஊழித்தீ, இது கடல்தன்னெல்லை கடவாதிருக்கும்படி படைப்புக் காலத்திற்றானே கடவுளால் படைத்துக் கடலின்நடுவில் அமைக்கப்பட்டுள்ளது. இது பெண் குதிரைவடிவமாயிருப்பது. செல்வத்தின் வளம் இடம்பொருளேவல் முதலியன. மதலை - தூண், இது உவமையாகுபெயராய்த்தாய்தந்தையர்க்குத்தூண் போலச் சார்பாயிருப்பவன் எனப் பொருள்படுமாறறிக. (எக)

இவ்வாறு மிடியென்னும் பெருங்கடலுள் ளழுந்தியுந்தற் கினிமை சான்ற, செவ்வாய்மை யந்தணனை வெறுத்துரையா ளலர் மொழிகள் சிறிதுஞ் செப்பா, டுவ்வாமை மைந்தர்கள்பான் மறந் துமியற் றுளவடன் சுகுண மென்னே, யெவ்வாறித் துயர்க்கடனீ ந் துவமெனுமோ ரெண்ணமுளத் தென்று முண்டால்.

இது குசேலர் மனைவி இத்தன்மையாகிய வறுமையைநீக்கவேண்டுமென்னும் எண்ணங்கொண்டாள் எனக்கூறுகின்றது.

(ப - ரை.) இவ்வாறு - இந்தப்பிரகாரம், மிடிஎன்னும் - தரித்திரம்என்கிற, பெருகடலுள் - பெரியசமுத்திரத்தில், அழுந்தியும் - மூழ்கியும், தற்கு - தனக்கு, இனிமைசான்ற - அன்புநிறைந்த, செவ்வாய்மை - செவ்விய உண்மையையுடைய, அந்தணனை (அந்தக்குசேலரென்னும்) பிராமணனை, வெறுத்து உரையாள் - வெறுத்துப்பேசாள்; அலர்மொழிகள் - பழிச்சொற்களை, சிறிதும் செப்பாள் - சிறிதாயினும் சொல்லாள், மைந்தர்கள்பால் - புதல்வரிடத்து, துவ்வாமை - வெறுப்பை, மறந்தும்இயற்றுள் - மறந்தாயினுஞ் செய்யாள், அவள்தன் சுகுணம் என் - அவளுடைய நற்குணமிருந்தவாறென்னே, (ஆயினும்) இ - இந்த, துயர்கடல் - துன்பமாகிய கடலை, எவ்வாறு - எப்படி, நீந்துவம் என்னும் - கடப்பேமென்கிற, ஓர் எண்ணம் - ஒருஎண்ணமானது, என்றும் - எந்நாளும், உள்ளத்து - மனத்தில், உண்டு - (அவளுக்கு) உண்டு. எ - று.

(பொ - ரை.) இந்தப்பிரகாரம் தரித்திரம் என்கிற பெரிய சமுத்திரத்தில்மூழ்கியும் தனக்கு அன்புநிறைந்த செவ்விய உண்மையையுடைய (அந்தக்குசேலரென்னும்) பிராமணனை வெறுத்துப் பேசாள்; பழிச்சொற்களைச் சிறிதாயினுஞ் சொல்லாள்; புதல்வரிடத்து வெறுப்பைமறந்தாயினுஞ் செய்

யாள்; அவளுடைய நற்குணமிருந்தவாறென்னே? (ஆயினும்) இந்தத் துன்பமாகிய கடலை எப்படிக் கடப்போமென்கிற ஒருஎண்ணமானது எந்நாளும் மனத்தில் அவளுக்கு உண்டு. எ - று.

(வி-ரை.) "நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்-யாதொன்றுங் கண்பா டரிது" எனமேலோர் கூறியபடியே சகல சுகுணங்களையு முடையவளாகிய அவளுக்கும், இந்த மிடித்துன்பமாகிய கடலை எவ்வாறு நீந்திக்கரையேறுவோமென்கிற எண்ணமுண்டாயிற்றென்பது கருத்து. தான் என்னும் இருதிணைக்கும் பொதுவாகிய படர்க்கைப்பெயர் முதல் குறுகி அகரச்சாரியை பெறாமல் தற்கு என நேர்ச்சிப்பொருளதாகிய நான்கனுருபேற்றது. அலர் - பழிச்சொல், அலர்மொழிகள் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை, அலர்-சிறப்புப்பெயர், மொழி-செயப்படுபொருளுணர்த்தும் ஐகாரவிகுதி புணர்ந்து கெட்ட தொழிலடியாகப் பிறந்த பொதுப்பெயர். செய்யாள் - திசைச்சொல்லாகிய எதிர்மறைப்பெண்பால்வினைமுற்று. சுகுணம் வடசொல், சு-நன்மை. துயரைக்கடலாகவுருவகஞ் செய்தமையால் அதற்கேற்க நீந்துவம் என்னும் வினைகொடுத்தோதினர். மிடியின்பெருமை கொடுமைகள் தோன்ற, "மிடியென்னும் பெருங்கடல்"என்றார்.பெருங்கடலாயினுந்துன்பமின்றுயிற் கடக்கலாகும், துன்பவுருவாயிருத்தலால் இம்மிடிக்கடல் கடத்தலரிதென்பது தோன்ற, "மிடியென்னும்பெருங்கடல்" என்றதமையாது, மீட்டும், "இத்துயர்க்கடல்" என்றார். (அ0)

கற்புடைய வருந்ததியே முதன்மடவார் புகழவருங் கற்பின்
மிக்காள், பொற்பமையா மிடியென்னுஞ் சாகரத்து ளழுந்தி
மனம் புண்ணே யாகிப், பற்பலநாள் செலவொருநா ளமைய
மறிந் துளந்துணிந்து பண்பிற் போற்றிச், சொற்பெறுநற் புகழ்
க்கணவன் முகநோக்கி யெண்ணியவை சொல்ல லுற்றாள்.

இது முதல் - கரு-ம், செய்யுள் வரையில் குசேலர் மனைவி தான் கொண்ட எண்ணத்தைத் தன் கணவனுக்குக்கூறும் விதம் சொல்லப்படுகிறது.

(ப-ரை.) கற்பு உடைய - கற்புள்ள, அருந்ததி முதல் மடவார்-அருந்ததிமுதலாகியமாதர், புகழ - புகழும்படி, அரு - அருமையாகிய, கற்பில் மிக்காள் - கற்பிற் சிறந்தவளாகிய குசேலர் மனைவி, பொற்பு அமையா - நன்மையற்ற, மிடி என்னும் - வறுமையென்கிற, சாகரத்துள் அழுந்தி - கடலில் முழுகி, மனம்புண் ஆகி - மனம்புண்பட்டு, பற்பல நாள் செல்ல - அனேக நாள்கழிய, ஒருநாள் - ஒரு தினம், அமையம் அறிந்து - சமயமறிந்து, உள்ளம் துணிந்து - மனம் துணிந்து, பண்பிற்போற்றி - அன்பாகிய குணத்தோடு வணங்கி, சொல்பெறு - சொல்லுதலைப் பெற்ற, நல்புகழ் - நன்மையாகிய கீர்த்தியையுடைய, கணவன் முகம் நோக்கி - கொழுநனுடைய முகத்தைப்பார்த்து, எண்ணியவை - (தன்மனத்தில்) எண்ணிய எண்ணங்களை, சொல்லல் உற்றாள் - சொல்லத்தொடங்கினாள். எ - று.

(பொ - ரை.) கற்புள்ள அருந்ததி முதலாகிய மாதர் புகழும்படி அருமையாகிய கற்பிற் சிறந்தவளாகிய குசேலர் மனைவி, நன்மையற்ற வறுமையென்கின்ற கடலில் முழுகி, மனம்புண்பட்டு, அனேகநாள் கழிய, ஒருதினம் சமயமறிந்து மனந்துணிந்து அன்பாகிய குணத்தோடு வணங்கி, சொல்லுதலைப்பெற்ற நன்மையாகிய கீர்த்தியையுடைய கொழுநனுடைய முகத்தைப் பார்த்து (தன்மனதில்) எண்ணிய எண்ணங்களைச் சொல்லத்தொடங்கினாள். எ - று.

(வி - ரை.) கற்பிற் சிறந்தார் பலருள்ளும் சிறந்தவள் அருந்ததியாதலால், "கற்புடைய வருந்ததியே முதன் மடவார்" என்றார். இவ்வருந்ததி, கர்த்தமன் புதல்வி, வசிட்டமுனிவர்க்கு மனைவி, இவள் கற்பிற் சிறந்தவளென்பதனை, இப்பொழுதும் உலகத்தார் கலியாண நாளினிரவில் ஔபாஸநத்திற்குப் பிறகு, நக்ஷத்திர ரூபமாயிருக்கிற இவளை பாதிவ்ரத்யநிஷ்டையின் பொருட்டுக் கலியாணப்பெண்ணுக்குக் காட்டும் வழக்கத்தாலும் அறிந்துகொள்ளலாம், "அருந்ததிக்கற்பினார் தோளும்" என்றார் பிறரும், "அருந்ததியே முதன் மடவார், என்றது அகலிகை, துரோபதை, சீதை, தாரை, மந்தோதரி என்பவர்களை, மந்தோதரியை மண்டோதரி யென்றும் வழங்குவர், மடவார்-மடப்பத்தையுடையார், இது மடம் என்னும் பண்படியாகப்பிறந்த பலர்பாற்பெயர். மடம் - பெண்மைக்குணம் நான்கனுள் ஒன்று, பெண்மைக்குணம் நான்காவன, நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன. இவற்றுள், கணவனை யன்றிவேறோராடவனைக்கண்டு நாணுதல் நாணம் எனவும், கணவனையன்றிவேறொருவனையும் அறியாதிருத்தல் மடம் எனவும், கணவனையன்றிவேறோராடவனைக்கண்டஞ்சுதல் அச்சம் எனவும், கணவனையன்றிவேறோராடவனைக்கண்டு அருவருத்தல் பயிர்ப்பு எனவும் கூறப்படும். முதன் மடவார் என்றது அகலிகை முதலானோரேயன்றி, சுநீதி, சாவித்திரி, அநசூயை என்பவர்களையும், பிற்பட்ட சந்திரமதி, தமயந்தி முதலானவர்களையும் தழுவிக்கொள்ளக்கிடந்தது. இது, "விளங்கருந்ததிமேனை சுநீதியுட்ளெங்குசாவித்திரியன சூயை" என்னும் காசிகாண்டச்செய்யுளாலும் விளங்கும். முற்காலத்தில், பாஹுகன் என்பவனுக்கு மகனாகிய சகரன் என்றொரு சக்ரவர்த்தியிருந்தான், அவனுக்கு மனைவியர் இருவர், அவ்விருவருள் மூத்தவள் விதர்ப்பராஜ குமாரியாகிய கேசினி, இளையவள் அரிஷ்டநேமியென்பவன் மகளாகிய சுமதி, ஒருகாலத்தில் இவன் அசுவமேதயாகஞ் செய்யும்போது, தேவேந்திரன் இவனது யாகக்குதிரையைத்திருடிக்கொண்டுபோக, இளைய மனைவியாகிய சுமதியின் புதல்வராகிய அறுபதினாயிரவரும், அந்தக்குதிரையை உலகமுழுதுந்தேடிக்காணாமல், நிலத்தைத்தோண்டிச்சென்று பாதாளலோகத்தில் கபில முனிவரது ஆச்சிரமத்தில் அந்தக்குதிரை கட்டப்பட்டிருப்பதைக்கண்டு, அம்முனிவர்திருடினதாக நினைத்து அவர் மனம் வருந்தும்படி பேசி அவரது கோபாக்கினியினால் நீறானார்கள், அவர்களுக்குப் புண்ணிய லோகம் கிடைக்கும் பொருட்டு, அவன் சந்ததியில் தோன்றினவனாகிய

பகீரதன் கங்கையைக்கொண்டுவந்து,அவர்கள் தோண்டின வழியாய்ப் பாதாளத்திற் பிரவகிக்கும்படி செய்ய, அது அப்பொழுது சமுத்திரமாயிற்று,இந்தக்காரணத்தால் சமுத்திரத்துக்குச் சாகரமென்னும் பெயரும்,கங்கைக்குப்பாகீரதி என்னும் பெயரும் உண்டாயின.மிடிக்கடலுள்அழுந்திக்கிடக்கிறஇவள் ஒருநாள் சமயம் பார்த்துக்கணவனிடத்தில் தன் எண்ணத்தைத்தெரிவிக்கத் துணிந்து, அவன் முகம் நோக்கிச் சொல்லத்தொடங்கினுள் என்பது கருத்து. (அக)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காமம்வெங் குரோத முலோபந்தீ மோகங் கரைமத மாற்சரி யமெனுந், தீமைசே ராறு பகையினைச் செற்றோய் செம்மணி கொழிக்கும்வெண் டரங்கப், பாமமா கடலுங் காமுறு மேனிப் பண்ணவன் மலரடித் துணையைத், தோமற வுள்ளத் துள்கியேத் தெடுப்போய் துரிசறு மறைமுழு துணர்ந்தோய்.

(ப - ரை.) காமம் - காமமும், வெம்குரோதம் - கொடிதாகிய குரோதமும், உலோபம் - உலோபமும், தீ மோகம்-கெட்டமோகமும், கரை-சொல்லப்பட்ட, மதம் - மதமும், மாற்சரியம்-மாற்சரியமும், என்னும் - என்றுசொல்லப்பட்ட, தீமை சேர் - தீமைபொருந்திய, ஆறுபகையினை-அறுபகையை, செற்றோய் - வென்றவரே, செம் மணி கொழிக்கும் - செவந்த ரத்நங்களைக் கொழிக்கிற, வெள் தரங்கம் - வெள்ளிய அலைகளையும், பாமம் - பரப்பையும், மா-பெருமையையுமுடைய, கடலும் காமுறும்-கடலும் விரும்புகிற, மேனி, திருமேனியையுடைய, பண்ணவன் - திருமாலினது, மலர்-தாமரைமலர்போன்ற, அடித்துணையை - இரண்டு திருவடிகளையும், தோம் அற - குற்றம் நீங்க, உள்ளத்து-மனதில், உள்கி-நினைத்து, ஏத்தெடுப்போய் - துதிப்பவரே, துரிசு அறு - களங்கமற்ற, மறைமுழுதும் - வேதமுழுதும், உணர்ந்தோய் - அறிந்தவரே. எ - று.

(பொ - ரை.) காமமும்,கொடிதாகிய குரோதமும்,உலோபமும்,கெட்டமோகமும்,சொல்லப்பட்ட மதமும், மாற்சரியமும் என்று சொல்லப்பட்ட தீமை பொருந்திய ஆறுபகையை வென்றவரே! செவந்தரத்நங்களைக் கொழிக்கிற வெள்ளிய அலைகளையும் பரப்பையும் பெருமையையுமுடைய கடலும் விரும்புகிற திருமேனியையுடைய திருமாலினது தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளையும் குற்றம் நீங்க, மனத்தில் நினைத்துத் துதிப்பவரே! களங்கமற்ற வேதமுழுதும் அறிந்தவரே. எ - று.

(வி-ரை.) காமம்-ஒருபொருளின்மீது செல்லும்விருப்பம், குரோதம்-அப்பொருள் கிடையாத போதுண்டாகும் கோபம், உலோபம் - தானும் அநுபவிக்காமல் பிறர்க்கும் கொடாமலிருக்கும் குணம், மோகம்-மாதர் மீதுண்டாகு மிச்சை, மதம் - செருக்கு, மாற்சரியம்-பொறாமை. இவ்வாறும் பிறவிக்கேது

வாய் ஆன்மாக்களுக்குத்துன்பம் விளைத்தலால் இவற்றை, "ஆறுபகை" என்றார். இவற்றை வடநூலார் "அரிஷட்வர்க்கம்" என்பர், முன்னமேயறிந்து காத்துக்கோடற்குரிய புறப்பகையினும், தோன்றுதுள்ளே மறைந்திருந்து துன்பம் விளைக்கிற இவ்வகப்பகை மிகக் கொடிது என்பது தோன்ற "தீமைசேராறுபகை" என்றார். "கடலுங்காமுறுமேனி" என்றமையால் திருமேனியின் நீலவண்ணப்பொலிவு விளங்குகின்றது. செற்றோய்,எடுப்போய், உணர்ந்தோய், என்பன விளிப்பெயர்கள். இவற்றிற்கு எழுவாய் வேற்றுமை செற்றான், எடுப்பான், உணர்ந்தான் என்பன, செய்யுளாதலால் ஈற்றயலாகாரம் ஓகாரமாய், ஈற்றுனகரம் யகரமாய் விளியேற்றன, காமுறும் ஒரு சொல். (அஉ)

உரைக்கருஞ் சிங்கஞ் சரபம்வெம் புலிக ளுலவையோ ரிரண்டுடை வேழ, நிரைப்படச் சரிக்குங் கானத்தி லணுகி நிகழ்சருகறல்வளி யருந்தித், திரைக்கடல் வினைக்கோ ராகர மாகுந் தேகத்தை வாட்டுமெய்த் தவத்தோய், நரைத்தவோ திமத்தை யுயர்த்தருள் கமல நான்முக னனையதூ யவனே.

(ப - ரை.) உரைக்க அரு - சொல்லுதற்கரிய, சிங்கம்-சிங்கங்களும், சரபம்-சரபங்களும், வெம்புலிகள்-கொடியபுலிகளும், உலவை ஓர் இரண்டு உடை - கொம்புகள் ஓரிரண்டையுடைய, வேழம்-யானைகளும், நிரைபட - வரிசையாக, சரிக்கும் - சஞ்சரிக்கிற, கானத்தில்-காட்டில், அணுகி-சேர்ந்து, நிகழ்சருகு-உதிர்ந்த சருகையும், அறல்-நீரையும், வளி-காற்றையும், அருந்தி-புசித்து, திரைகடல் - அலைகளையுடைய கடல்போன்ற, வினைக்கு-வினைகளுக்கு, ஓர் ஆகரம் ஆகும் - ஒப்பற்ற உறைவிடமாகிய, தேகத்தை - சரீரத்தை, வாட்டும் - வருத்துகின்ற, மெய்தவத்தோய்-உண்மையாகிய தவத்தையுடையவரே, நரைத்த - வெளுத்த, ஓதிமத்தை - அன்னத்தை, உயர்த்து அருள் - கொடியாகக்கொண்டருளிய, கமலம் - தாமரை மலரில் வாழ்கின்ற, நான்முகன் அனைய - பிரமதேவனை நிகர்த்த, தூயவனே - பரிசுத்தரே. எ - று.

(பொ - ரை.) சொல்லுதற்கரிய சிங்கங்களும் சரபங்களும் கொடிய புலிகளும், கொம்புகள் ஓரிரண்டையுடைய யானைகளும் வரிசையாகச்சஞ்சரிக்கிற காட்டில் சேர்ந்து, உதிர்ந்த சருகையும் நீரையும் காற்றையும் புசித்து, அலைகளையுடைய கடல்போன்ற வினைகளுக்குஒப்பற்ற உறைவிடமாகிய சரீரத்தை வருத்துகின்ற உண்மையாகிய தவத்தையுடையவரே, வெளுத்த அன்னத்தைக்கொடியாகக் கொண்டருளிய தாமரை மலரில் வாழ்கின்ற பிரமதேவனை நிகர்த்த பரிசுத்தரே. எ - று.

(வி - ரை.) சிங்கம் மிருகங்களுட் சிறந்தமை பற்றி, "உரைக்கருஞ் சிங்கம்" என்றார். உரைக்கரு என்பதில் நிலைமொழியீற்றகரம் தொகுத்தல், வீரகுணம் எடுத்துச் சொல்லுதற்கருமையாகிய நிலை, வடநூலார் மிருக

பதி, மிருகேந்திரன் என்பதும் இக்கருத்துப்பற்றியே. சரபம் எட்டுக்கால்களையுடைய ஓர் பறவை, இது பனியடர்ந்து குளிர்ச்சியாயிருக்கிற மலைகளின் மீது சஞ்சரிக்கும், இது சிங்கத்தை வெல்லும் ஆற்றலுள்ளது, "சிங்கத்தையொத் தெனைப்பாய வருவினையினைச்சேதிக்க வருசிம் புளே" என்றார் மேலோரும். சிம்புள், வாருண்டகம், சம்பரம், துரோணம், என்பன இதன் பரியாய நாமங்களாம். தவத்தொழிலை மேற்கொண்டோர் சருகு முதலியவற்றை அருந்தலியல்பாதலால் "சருகறல் வளியருந்தி" என்றார். "சருகு சலபக்ஷணிகளொருகோடி" என்றும், "சருகுவாயில் வந்தால் வன்பசி தவிர்த்தும்" என்றும், "புனல்காலேயுண்டியாய்"என்றும் இவ்வாறு பிறருங்கூறுதல் காண்க. சஞ்சரிக்கும் என்னும் வடமொழியாகிய பெயரெச்சம் உபஸர்க்கையின்றி சரிக்கும் என வந்தது. நிகழ்தல் நடத்தல், அது இங்கு உதிர்தலுக்காயிற்று. நிகழ் சருகு வினைத்தொகை நிலைத்தொடராதலால் வல்லினம் மிகாதாயிற்று. சருகு அறல் வளி என்பனவற்றைத் தின்றல் பருகல் உட்கொள்ளல் என்னுஞ் சிறப்பு வினை கொடுத்து முடிக்காமல், மூன்றனையும் ஒருங்கெண்ணி அருந்தி யென்னும் பொது வினையான் முடித்தார். (அரு)

துணிபடு கந்தை சூழ்ந்தமெய் யினரிற் றுணையிலா நற்றவ முனிவ, வணிபடு மனையாண் மக்களி லருத்தி யமைக்கிலா யென்றுமன் னியர்பா, னணியிரந் தேற்றலொழித்தனை யடிகே ளானஃது ணர்ந்துளே னெனினும், பிணிபடு முளத்திற் புகலுமென் மொழியைப் பெட்பொடு கேட்டியென் றியம்பும்.

(ப - ரை.) துணிபடு - அறுபட்ட, கந்தை சூழ்ந்த - கந்தையையுடுத்த, மெய்யினரில் - உடம்பையுடையவர்க்குள்ளே, துணையிலா - ஒப்பில்லாத, நல்தவம் முனிவ - நல்லதவத்தையுடைய முனிவனே, அணிபடு - அழகு பொருந்திய, மனையாள் மக்களில் - மனைவிமக்களிடத்தில், என்றும் - எந்நாளும், அருத்தி அமைக்கிலாய் - அன்புவைத்திலை, அன்னியர்பால் நண்ணி - பிறரிடத்திற் சென்று, இரந்து ஏற்றல் - யாசித்து வாங்குதலை, ஒழித்தனை - நீக்கிவிட்டனை, அடிகேள்-சுவாமீ; நான் அஃது உணர்ந்துளேன் எனினும் - நான் அதனை அறிந்திருக்கிறேனாயினும், பிணிபடும் உளத்தின் - துன்பமுள்ள மனத்தினால், புகலும் - சொல்லுகின்ற, என்மொழியை - என்சொல்லை, பெட்போடு - விருப்பத்துடன், கேட்டி என்று - கேட்பாயென்று, இயம்பும்- சொல்லுவாள். எ - று.

(பொ - ரை) அறுபட்ட கந்தையை யுடுத்த உடம்பையுடையவர்க்குள்ளே, ஒப்பில்லாத நல்ல தவத்தையுடைய முனிவனே! அழகுபொருந்திய மனைவிமக்களிடத்தில், எந்நாளும் அன்புவைத்திலை; பிறரிடத்திற்சென்று யாசித்து வாங்குதலை நீக்கிவிட்டனை; சுவாமீ! நான் அதனை அறிந்திருக்கிறேனாயினும், துன்பமுள்ள மனத்தினால் சொல்லுகின்ற என் சொல்லை விருப்பத்துடன் கேட்பாயென்று சொல்லுவாள். எ - று.

(வி - ரை.) படுகந்தை வினைத்தொகை நிலைத்தொடராதலால் வல்லின மியல்பாயிற்று. மெய்யினர் பொருளடியாகப்பிறந்த பெயர்ப்பகுபதம். நண்ணியென்பது நணியெனத் தொகுத்தலாயிற்று எதுகையின்பம் நோக்கி. அடிகள் என்னும் எழுவாய் வேற்றுமை ஈற்றயலகரம் ஏகாரமாய் விளியேற்று அடிகேள் எனவந்தது. நான் எழுவாயொழிந்த மற்ற வேற்றுமைகளில் வராததன்மை யொருமைப்பெயர். பெட்பு பண்புப்பெயர், அதனீற்றிலுள்ள ஒடு விசேடணப்பொருளது. என்று வினையையடுத்து வந்த இடைச்சொல், ஓயம்பும்-பெண்பாற் செய்யுமென்வாய்பாட்டு வினைமுற்று நல்தவம்-நன்மையைத்தருகிறதவம். அருத்தி - ஆர்த்தியென்னும் வடமொழித்திரிபு. சூழ்ந்த என்பதற்குப் போர்த்த என்றுரைப்பினுமாம். பிணிபடும் உளத்தின் என்பதற்கு மக்களிடத்தன்பாகிய பாசத்தாற்கட்டுப்பட்ட மனத்தோடு என்றுரைப்பினுமாம். (அச)

கொழுந்துவிட் டெரியு முத்தழல் வளர்க்குங் கோதிலா மு
னிவநஞ் சிறார்க, ளழுந்துபட் டேங்க வெழும்பசி யொழிக்க வன
மிலா துயங்கின ரந்தோ, முழங்குமீ ரொன்பான் புராணநன் கோ
ர்ந்தோர் மூரலா லுயிர்நிற்கு மென்று, வழங்குவ ரச்சொன் மறிதி
ரைக் கடல்சூழ் மண்ணிடத் துண்மையே யாமே.

(ப - ரை.) கொழுந்துவிட்டு எரியும் - சிகை பரப்பி யெரிகிற, முத்தழல் - மூன்று தீயையும், வளர்க்கும் - வளர்க்கிற, கோது இல்லா - குற்றமில்லாத, முனிவ - முனிவனே! நம் சிறார்கள் - நமது சிறுவர்கள், அழுந்துபட்டு ஏங்க - துன்பத்திலழுந்தி யழும்படி, எழும் - மிகுகின்ற, பசி - பசியை, ஒழிக்க - நீக்கும்பொருட்டு, அன்னம் இல்லாது - சோறு இல்லாமல், உயங்கினர் - வருந்தினார்கள், அந்தோ - ஐயோ, முழங்கும் - சத்திக்கிற, ஈரொன்பான் புராணம்-பதினெட்டுப்புராணங்களையும், நன்கு ஓர்ந்தோர் - நன்றாக ஆராய்ந்து அறிந்தவர், மூரலால் - அன்னத்தினால், உயிர் நிற்கும் என்று - உயிர்நிலைபெறும் என்று, வழங்குவர் - சொல்லுவர், அச்சொல் - அந்தச் சொல்லானது, மறி திரை-காற்றினால் சுருள்கின்ற அலைகளையுடைய, கடல் சூழ் - கடல் சூழ்ந்த, மண் இடத்து - பூமியின்கண், உண்மையே ஆம்-மெய்யேயாகும். எ - று.

(பொ - ரை.) சிகையைப்பரப்பி யெரிகிற மூன்று தீயையும் வளர்க்கிற குற்றமில்லாத முனிவனே! நமது சிறுவர்கள் துன்பத்திலழுந்தியழும்படி மிகுகின்ற பசியை நீக்கும்பொருட்டுச் சோறு இல்லாமல் வருந்தினார்கள். ஐயோ! சத்திக்கிற பதினெட்டுப் புராணங்களையும் நன்றாக ஆராய்ந்து அறிந்தவர் அன்னத்தினால் உயிர் நிலைபெறும் என்று சொல்லுவர். அந்தச்சொல்லானது, காற்றினாற் சுருள்கின்ற அலைகளையுடைய கடல்சூழ்ந்த பூமியின்கண் மெய்யேயாகும். எ - று.

(வி - ரை.) முத்தீ - ஆகவநீயம், தக்ஷிணாக்நி, காருகபத்தியம் என்பன, இவையே யாகாக்நி யென்னப்படும். புராணம் - பதினெட்டாவன-மச்சியம், கூர்மம், வராகம், வாமனம், பிரமம், வைணவம், பாகவதம் முதலியன. அழுந்துபட்டு என்னும் இறந்தகாலவினையெச்சத்தில் பகுதி - அழுந்துபடு; இதில்படுஎன்பது அழுந்துஎன்னும் முதனிலைத் தொழிற்பெயரை வினைப்படுத்தியது. அன்னம் என்னும் வடமொழிப்பெயர் அனம் எனத் தொகுத்தல் பெற்றது. சோறலால் உயிர் நிற்கும் என்பதற்கேற்ப வடமொழியில் தேகம் அன்னமயகோசம் என்பர். தேகம் சோற்றின்மயமாய்ப் போஷிக்கப்படும்மை என்பது பொருள். உண்மையே என்பதில் ஏ-தேற்றம். சொல் - முதனிலைத் தொழிலாகுபெயர். (அரு)

நான்மறை யுவரிக் கடல்புடை யுடுத்த நானிலத் துயிரெலா மின்பத், தான்மன மகிழூஉ வாழ்கநன் கென்றுஞ் சாற்றிடு மதற்குமா றின்றிக், கான்வழிந் தொழுகுங் கற்பக மாலைக் கடவுளர் பராவுநற் புகழோய், தேன்வழிந் தன்ன மழலைவாய் மைந்தர் சிறப்புற வருளுதல் கடனே.

(ப - ரை.) உவரிக்கடல் - உப்புக்கடலை, புடைஉடுத்த - பக்கங்களிலுடுத்த, நால் நிலத்து - உலகத்திலுள்ள, உயிர்எல்லாம்-உயிர்களெல்லாம், இன்பத்தினால்-சுகத்தினால், மனம்மகிழூஉ-மனமகிழ்ந்து, நன்குவாழ்கஎன்று-நன்குவாழ்கவென்று, நான்மறை-நான்குவேதங்களும், சாற்றிடும்-சொல்லாநிற்கும், அதற்குமாறுஇன்றி - அதற்குவிரோதமில்லாமல், கான்வழிந்து ஒழுகும் - வாசனைவழிந்தொழுகாநின்ற, கற்பகமாலை - கற்பகமலர்மாலையையணிந்த, கடவுளர் - தேவர்களும், பராவும், துதிக்கின்ற, நல்புகழோய் - மேலாகியபுகழையுடையவரே, தேன்வழிந்தால் அன்ன - தேன்வழிந்தாற்போன்ற, மழலைவாய் - மழலைமொழியுள்ளவாயையுடைய, மைந்தர் - புதல்வர்கள், சிறப்புஉற - மேன்மையடைய, அருளுதல் - அருள்செய்தல், கடன்-(உமக்குக்) கடன்மையாம் எ - று.

(பொ - ரை.) உப்புக்கடலைப் பக்கங்களிலுடுத்த உலகத்திலுள்ள உயிர்களெல்லாம், சுகத்தினால் மனமகிழ்ந்து நன்குவாழ்கவென்று, நான்குவேதங்களுஞ்சொல்லாநிற்கும். அதற்குவிரோதமில்லாமல் வாசனைவழிந்தொழுகாநின்ற, கற்பகமலர்மாலையையணிந்த தேவர்களும் துதிக்கின்ற, மேலாகிய புகழையுடையவரே: தேன்வழிந்தாற்போன்ற மழலைமொழியுள்ள வாயையுடைய புதல்வர்கள் மேன்மையடைய அருள்செய்தல் (உமக்குக்) கடன்மையாம். எ - று.

(வி - ரை.) நான் மறையாவன - இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என்பன. நானிலமாவன - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பன. இவை முறையே மலையும் மலைப்பக்கமும், காடும் காட்டின் பக்கமும், வயலும்

வயற்பக்கமும், கடலும் கடற் சார்பும் ஆம். புல்பூண்டுகளற்று வறண்ட பூமியாகிய பாலையைக்கூட்டி நிலம் ஐந்தென்று கூறுதலுமுண்டு. நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் ஆகிய இவைகளையுடைய கடல்களை நீக்குதற்கு உவரியென்றார், உவரி - உப்புள்ளது. இகர விகுதி ஒன்றன்பால் உணர்த்துகின்றது. மகிழுஉ-இன்புறாஉ என்பதிற் போல அளபெடுத்து இறந்தகாலங்காட்டியது. இன்றி என்னும் எதிர் மறைக்குறிப்பு வினையெச்சம் அருளுதல் என்னும் தொழிற்பெயர் கொண்டது. கற்பகம் - தெய்வலோகத்துள்ள பஞ்சதருக்களிலொன்று. அது இங்கு அதன் மலருக்காதலால் முதலாகுபெயர். பஞ்சதருக்களாவன—அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன. இவை தம்மையடைந்தவர்கள் விரும்பிக்கேட்ட பொருளை அவர் கேட்டபடி கொடுக்கும் என்பதும், அவற்றினருகே சென்றவர் தாம் கேட்கக்கருதிச் சென்ற பொருளை மறந்து ஊழ்வினையின் படி மற்றொன்றைக்கேட்பரென்றும் கூறுவர். இதனை "கற்பகத்தைச்சேர்ந்தோர்க்கும் காஞ்சிரங்காயீந்ததேன் - முற்பவத்திற் செய்தவினை" என்பதனாலறிக. கடவுள்-(கடத்தல்) தத்துவங்களைக் கடந்தவன்(இறைவன்.) இது தொழிலாகுபெயர். இது தேவர்களுக்கும் உபசாரப்பெயராய் வழங்கும். வழிந்தன்ன என்பதை வழிந்தால் அன்ன எனப்பிரிப்பதேயன்றி வழிந்தது அன்ன எனப்பிரிப்பினுமாம். மழலைவாய்-நிரம்பாச்சொல். இச்சொல்,கேட்போர் செவிக்கு யாழ்முதலியவற்றின் ஓசையினும் இன்பந்தரலால் 'மழலைவாய்மைந்தர்' என்றார். "குழலினிதியாழினி தென்பதம் மக்கள் - மழலைச்சொற்கேளாதவர்" என்பது திருக்குறள். கடன் - மை யீறு கெட்டுவந்த பண்புப்பெயர். (அசு)

நித்திலங் கோட்டிற் கொழிக்கும்வெண் டரங்க நெடுங்கடல் புடையுடுத் தகன்ற, தத்தொளி மணிச்சூட் டுச்சியி லரவந் தாங்குமிந் நிலவல யத்தி, லெத்தகை யினரும் வெருவரு நிரப்பே யிசைந்தவர் பாவியர் செல்வ, மொத்துற வியைந்தோர் புண்ணிய ரன்றோ வும்பருந் தொழத்தகு மேலோய்.

(ப - ரை.) உம்பரும் - தேவரும், தொழத்தகும் - வணங்குதற்குரிய, மேலோய் - மேலோரே, நித்திலம் - முத்துகளை, கோட்டில் - கரையில், கொழிக்கும் - கொழிக்கிற, வெள்தரங்கம் - வெள்ளிய அலைகளையுடைய, நெடுங்கடல் - நெடியகடலை, புடை உடுத்து - சுற்றிலுமுடுத்து, அகன்ற - விசாலித்த, தத்து ஒளி - பாய்கின்ற ஒளியையுடைய, மணி - மாணிக்கம் பொருந்திய, சூட்டு உச்சியில் - உச்சிக்கொண்டையில்,அரவம் - ஆதிசேடன், தாங்கும் - சுமக்கிற, இ - இந்த, நிலவலயத்தில் - பூமண்டலத்தில், எத்தகையினரும் - எவ்வகைப்பெருமையுடையாரும், வெருவரும் - அஞ்சுதற்குரிய, நிரப்பே - வறுமையே, இசைந்தவர் - பொருந்தினவர், பாவியர் - பாவிகள், செல்வம் - பாக்கியம், ஒத்து உற - மிகுதியாக, இயைந்தோர் - பொருந்தினவர்கள், புண்ணியர் - புண்ணியவான்கள், அன்றோ - அல்லவோ. எ - று.

(பொ - ரை.) தேவரும் வணங்குதற்குரிய மேலோரே, முத்துகளைக் கரையில் சொழிக்கிற வெள்ளிய அலைகளையுடைய நெடிய கடலைச்சுற்றிலு மூடுத்து விசாலித்த, பாய்கின்ற ஒளியையுடைய மாணிக்கம் பொருந்திய உச்சிக்கொண்டையில் ஆதிசேடன் சுமக்கிற இந்தப்பூமண்டலத்தில், எவ்வகைப் பெருமையுடையாரும் அஞ்சுதற்குரிய வறுமையே பொருந்தினவர் பாவிகள். பாக்கியம் மிகுதியாகப்பொருந்தினவர்கள் புண்ணியவான்களல்லவோ. எ-று.

(வி-ரை.) "இன்மையி னின்னாத தியாதெனி னின்மையின்-இன்மையே யின்னாதது" என்றும், "இன்மை யெனவொரு பாவி மறுமையும்-இம்மையுமின்றி வரும்" என்றும், "இன்றும்வருவதுகொல்லோநெருநலும்-கொன்றதுபோலு நிரப்பு" என்றும், மேலோர்கூறியபடியே பலவகைத் துன்பத்துக்கேதுவாதலால் மிடியை 'வெருவருநிரப்பு' என்றார். ஆதிசேஷன்தலையில் மாணிக்கமுண்டென்பதுண்மையாதலால் "தத்தொளிமணிச்சூட்டு உச்சியிலநந்தாங்குமிந்நிலவலயத்தில்" என்றார். "மணிகொண்டநெடுநேமிவலயஞ் சுமந்தாற்று மாசுணச்சூட்டு" என்றார் பிறரும். பூமிவட்டவடிவாயிருத்தலால் 'நிலவலயம்' எனப்படும். வலயம் - வட்டம். ஒருவனுக்கு வறுமைபோல் துன்பம் தருவது வேறொன்று மில்லாமையாதலும் அத்துன்பம் ஒன்றினால் பலதுன்பங் களும்வந்து விளையுமாகையாலும் 'எத்தகையினரும் வெருவரு நிரப்பு' என்றார். முன்செய்த பாவத்தால் வறுமையும் புண்ணியத்தாற் செல்வமும் வரும். என்பதை "செய்தீவினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால் எய்தவருமோ விருநிதியம்-வையத், தறம் பாவமென்ன வறிந்தன்றிடார்க்கின்று, வெறும்பானைபொங்குமோ மேல்" என்பதனாலுமுணர்க. தகையினர், பாவியர் என்பன பண்படியாகப்பிறந்த பெயர்கள். முன்னை யதில் இன் - சாரியை. பின்னை யதில் இ - ஆண்பால் பெண்பால்களுக்குப் பொதுவாகிய உயர்திணை யொருமைப்பால் விகுதி, இது அர் என்னும் பன்மை விகுதிபுணர்ந்து பலர்பாலாயிற்று. (அஎ)

தரித்திர மிக்க வனப்பினை யொடுக்கிச் சரீரத்தை யுலர்தர வாட்டுந், தரித்திர மளவாச் சோம்பலை யெழுப்புஞ் சாற்றரு முலோபத்தை மிகுக்குந், தரித்திரந் தலைவன் றலைவியர்க் கிடையே தடுப்பருங் கலாம்பல விளைக்குந், தரித்திர மவமா னம்பொய்பே ராசை தருமிதிற் கொடியதொன் றிலையே.

(ப - ரை.) தரித்திரம் - வறுமையானது, மிக்க - மிகுந்த, வனப்பினை - அழகை, ஒடுக்கி - கெடுத்து, சரீரத்தை - உடம்பை, உலர்தர வாட்டும் - உலரும்படி வாடப்பண்ணும், தரித்திரம்——, அளவா-அளவிடப்படாத, சோம்பலை எழுப்பும் - சோம்பலையுண்டாக்கும், சாற்று அரும் - சொல்லுதற்கரிய, உலோபத்தை - லோபகுணத்தை, மிகுக்கும் - அதிகப்படச்செய்யும், தரித்திரம்————, தலைவன் தலைவியர்க்கு - நாயக நாயகிகளுக்கு, இடையே - இடையில், தடுப்பு அரு - தடுத்தற்கரிய, பலகலாம் - பலகலகங்களை, விளைக்

கும் - உண்டாக்கும், தரித்திரம்———, அவமானம் - அவமானத்தையும், பொய் - பொய் பேசுதலையும், பேராசை - பேராசையையும், தரும் - உண் டாக்கும். (ஆதலால்) இதின் - இந்த வறுமையினும், கொடியது - கொடுமை யானது, ஒன்று இல்லை - ஒன்றுமில்லை - எ - று.

(பொ - ரை.) வறுமையானது மிகுந்த அழகைக்கெடுத்து, உடம்பை உலரும்படி வாடப்பண்ணும்; வறுமை அளவிடப்படாத சோம்பலையுண்டா க்கும்; சொல்லுதற்கரிய லோபகுணத்தை அதிகப்படச்செய்யும்: வறுமை நா யக நாயகிகளுக்கு இடையில் தடுத்தற்கரிய பல கலகங்களையுண்டாக்கும்; வறுமை அவமானத்தையும் பொய் பேசுதலையும் பேராசையையும் உண்டாக் கும்,(ஆதலால்) இந்த வறுமையினும் கொடுமையானது ஒன்றுமில்லை, எ-று.

(வி - ரை.) வறுமையானது அழகு முதலிய எல்லாவற்றையுமழிக்கு மாதலால் இதனினுங்கொடிய தொன்றில்லை யென்பது கருத்து. "மானங்கு லங்கல்வி வண்மையறிவுடைமை - தானந்தவ முயற்சி தாளாண்மை - தே னின் - கசிவந்த சொல்லியர் மேற்கா முறுதல் பத்தும் - பசிவந்திடப்பறந்து போம்" என்றும் "நெருப்பினுட்டுஞ்சலுமாகும் நிரப்பினுள் - யாதொன்றுங் கண்பாடரிது" என்றும், மேலோர் பலரும் பலவாறு இதன் கொடுமையை விரித்துரைத்திருத்தல்போல, இவளும் வனப்பு முதலியவற்றைக் கெடுக்கும் என்றனள். ஒடுக்கி என்னும் வினையெச்சமும் வாட்டும் முதலிய வினை முற் றுக்களும் பகுதி விகாரப்பட்டு வந்தன. பேராசை யென்பதில் நிலைமொழி யாகிய பெருமை யென்னும் பண்புப்பெயரில் மை விகுதி கெட்டு ஆதி நீண் டது. இதிலுள்ள ஐந்தனுருபை எல்லைப்பொருளாகக் கொள்ளுதலேயன்றி இதைப்போல என ஒப்புப்பொருளாகவுங் கொள்ளலாம். கலஹம் என்னும் வடமொழியின் திரிபாகிய கலகம் என்பது - கலாம் எனத்திரிந்து வந்தது. கலாம் என்பதே வடமொழியென்றும் சிலர் கூறுவர். தரித்திரம் என்று ஒரு கால்கூறி அதனைச்சுட்டுதலொழிந்து பல கால் அச்சொல்லையே எடுத்துக் கூறியது அதன் கொடுமை மிகுதியை வற்புறுத்தற்கென்க. (அஅ)

தரித்திரங் களிப்பாங் கடலுக்கோர் வடவை சாற்றுமெண் ணங்கள்வா ழிடமாந், தரித்திரம் பற்ப றுக்கமுந் தோன்றத் தக்க பேராகர மென்ப, தரித்திர நன்மை சாலொழுங் கென்னுந் தழை வனந் தனக்கழ றழலாந், தரித்திரங் கொடிய வெவற்றினுங் கொ டிதத் தகையதை யொழித்தனன் றமே.

(ப - ரை.) தரித்திரம் - வறுமையானது, களிப்பு ஆம்கடலுக்கு - சந் தோஷமாகிய சமுத்திரத்துக்கு, ஓர்வடவை - ஒப்பற்ற வடவைத்தீயாகும், சாற்றும் - சொல்லப்படுகிற, எண்ணங்கள் - (பல) எண்ணங்களுக்கு, வாழ் இடம் ஆம் - உறைஇடமாகும், தரித்திரம்——, பற்பல் துக்கமும் - பலபல துன்பங்களும், தோன்றத்தக்க - உண்டாதற்குரிய, பேர்ஆகரம் - பெரியபிறப்

பிடமாகும், தரித்திரம்——, நன்மைசால் - நன்மை மிகுந்த, ஒழுங்கு என்னும் - ஆசாரமென்கிற, தழைவனம் தனக்கு - செழித்த வனத்துக்கு, அழல் தழல்ஆம் - சுடுகின்றநெருப்பாகும், தரித்திரம்——, கொடிய எவற்றினும் - கொடியனவாகிய எல்லாவற்றினும், கொடிது - கொடியதாகும், என்ப - என்பார்கள், (ஆதலால்) அத்தகையதை ஒழித்தல் - அத்தன்மையுள்ள வறுமையை நீக்குதல், நன்றுஆம் - நன்மையாகும். எ - று.

(பொ - ரை.) வறுமையானது சந்தோஷமாகிய சமுத்திரத்துக்கு ஒப்பற்றவடவைத்தியாகும்; சொல்லப்படுகிற (பல) எண்ணங்களுக்கு உறைஇடமாகும்; வறுமையானது பற்பல துன்பங்களும் உண்டாதற்குரிய பெரிய பிறப்பிடமாகும்; வறுமையானது நன்மைமிகுந்த ஆசாரமென்கிற செழித்த வனத்துக்குச் சுடுகின்ற நெருப்பாகும்; வறுமையானது கொடியனவாகிய எல்லாவற்றினும் கொடியதாகும் என்பார்கள்; (ஆதலால்) அத்தன்மையுள்ள வறுமையை நீக்குதல் நன்மையாகும். எ - று.

(வி - ரை.) தரித்திரமானது சந்தோஷத்தைக்கெடுத்து உயிர்களைவருத்துதலால் இவ்வாறு கூறினார். களிப்பு எண்ணங்கள் - தொழிற்பெயர்கள். வாழ்இடம், சால்ஒழுங்கு, தழைவனம் வினைத்தொகை நிலைத்தொடர்கள். தழையென்பதை முதனிலைத் தொழிலாகு பெயராகக்கொண்டு இரண்டாம் வேற்றுமை யுருபும்பயனுமுடன்றொக்க தொகையெனினுமாம். என்ப - என் என்னும் இடைச்சொலடியாகப் பிறந்த எதிர்காலப்பலர்பால் வினைமுற்று. கொடிது ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று. கொடிய - குறிப்புப்பெயரெச்சம் என்றாவது குறிப்புப்பலவின்பால் வினையாலணையும் பெயர் என்றாவது கொள்க. வினையாலணையும் பெயராகக்கொள்ளின் கொடிய எவையென்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகையென்க. எவற்றின் என்பதில் ஐந்தனுருபு எல்லைப்பொருளது. இது எல்லைப்பொருள் ஆனது எவ்வாறெனின் "மதுரையின் வடக்குச் சிதம்பரம்" என்றபோது மதுரைக்குச் சிதம்பரம் வடக்கெல்லையா யிருப்பதுபோல, கொடிய எவற்றிற்கும் தரித்திரம் எல்லையாயிருத்தலால் என்க. இதனை உறழ் பொருள் என்றுங்கூறுவர். தகையது தகைமையென்னும் பண்படியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். (அக)

யாதவர் குலத்திற் றோன்றிய வரசர் யாவர்க்கு மதிபனு மினையின், மாதவ னுடனீ பலகலைக் கடலை வாய்மடுத் தனையென வகுப்பா, ராதலி னப்பீ தாம்பரன் மருங்கி லணைந்தவன் பாற்பெருஞ் செல்வந், தீதறக் கொண்டு கொடுத்துநஞ்சிறுவர்செல்லலை யுறைத் தவிர்க்குதல் வேண்டும்.

(ப - ரை.) யாதவர் குலத்தில் - யாதவர் வமிசத்தில், தோன்றிய - பிறந்த, அரசர் யாவர்க்கும் - அரசரெல்லாருக்கும், அதிபன் ஆம் - அரசனாகிய,

இணை இல் - உவமையில்லாத, மாதவனுடன் - கிருஷ்ணனோடு, நீ - நீ, பல கலைக்கடலை - பலநூல்களாகிய சமுத்திரத்தை, வாய் மடுத்தனை என-குடித்தாயென்று, வகுப்பார் - (உலகத்தார்) சொல்வார்கள், ஆதலின் - ஆதலால், அ - அந்த, பீதம் அம்பரன் மருங்கில் அணைந்து - பொன்னுடையை யுடையவனாகிய கிருஷ்ணனிடத்திற் சேர்ந்து, அவன்பால் - அவனிடத்து, பெருஞ் செல்வம் - பெரும் பொருளை, தீது அற கொண்டு - (நமது தரித்திரமாகிய) தீமை நீங்கும்படி பெற்று, கொடுத்து - தந்து, நம்சிறுவர் - நமது குழந்தைகளுடைய, செல்லல் நோய் - துன்பமாகிய பிணியை, தவிர்த்திடல் - நீக்குதலே, வேண்டும் - தகுதியாகும். எ - று.

(பொ - ரை.) யாதவர் வமிசத்திற் பிறந்த அரசரெல்லாருக்கும் அரசனாகிய உவமையில்லாத கிருஷ்ணனோடு நீ பல நூல்களாகிய சமுத்திரத்தைக் குடித்தாயென்று (உலகத்தார்) சொல்வார்கள். ஆதலின் அந்தப் பொன்னுடையையுடையவனாகிய கிருஷ்ணனிடத்திற் சேர்ந்து, அவனிடத்துப்பெரும் பொருளை (நமது தரித்திரமாகிய) தீமை நீங்கும்படி பெற்றுத்தந்து, நமது குழந்தைகளுடைய துன்பமாகிய பிணியை நீக்குதலே தகுதியாகும். எ - று.

(வி - ரை.) யாதவர் - சந்திர வமிசத்தைச் சேர்ந்த யதுகுலத்தில் பிறந்தவர். யது - யயாதிக்குப்புத்திரன். யாதவம் - பசுக்கூட்டம், அதனையுடையவராதலால் இடையர் யாதவர் எனப்படுவர் எனினும் பொருந்தும். மாதவன் - லக்ஷ்மீ நாதன். மாதவம் - இனிமை, அதனைச் செய்பவனாதலால் மாதவன் எனினுமாம். பீதம் - பொன், அம்பரம்-ஆடை. நீர் கண்ணனுடன் கூடிக் கல்விக் கடலைக் குடித்தீரென்று உலகத்தார் சொல்லுகின்றனராதலால் உமக்குப் பாலிய சினேகராகிய அவரிடத்திற் போய் - நமது தரித்திர மொழியும்படி பெரும் பொருளைப் பெற்று வந்து நம் சிறுவருடைய துன்பநோயை நிவர்த்தி செய்வதே தகுதியாம் என்பது கருத்து. வாய்மடுத்தல் - வாயால் உண்டல். அது இங்கு இலக்கணையால் கற்றலுக்காயிற்று. இலக்கணையாவது: ஒன்றன் இலக்கணத்தை மற்றொன்றின்மேல் ஏற்றிக்கூறுவது. மடுத்தனை முன்னிலையொருமை இறந்தகாலவினை முற்று. பீதாம்பரம் - மூன்றாம் வேற்றுமை யுருபும் பயனு முடன்றொக்க தொகை நிலைத்தொடர், பீதத்தினால் செய்த அம்பரம் என விரியும். இது தீர்க்க சந்தி. பீதாம்பரன் பொருளடியாகப்பிறந்த ஆண்பாற் படர்க்கைப் பெயர். சிறுவர் - பண்படியாகப் பிறந்த பலர்பாற் படர்க்கைப் பெயர். இதற்குப் பெண்பால் சிறுமி. செல்லல் நோய்- இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். செல்லல் - துன்பம். அது இங்கு தரித்திரத்துக்காயிற்று. வேண்டும் - தேற்றப்பொருள் தருவதாகிய தொழிற் பெயர். தகும் - படும் என்பனவும் இது போன்ற தொழிற் பெயர்கள். (௬0)

இளமையி னின்னோ டிருங்கலை கற்ற வெழிலிபோல் வண்ணனிற் கண்ட, வளவையே யெல்லாய் பேசரும் வளமு மளிக்குவ

ளையம தின்றாற், பளகறு நேச னொருவனைப் படைத்தல் பருந்த னப் பொதிபெற்றாற் போன்மென், றுளமிகத் தெளிந்தோர் புகலு நன் மாற்ற முண்மையாம் பொய்ம்மையா காதே.

(ப - ரை.) இளமையில் - இளமைப்பருவத்தில், நின்னோடு - உன்னோடு கூடி, இருகலைகற்ற - பெரியநூல்களைக்கற்ற, எழிலிபோல்வண்ணன் - (நீல) மேகம் போன்ற நிறத்தையுடைய கிருஷ்ணன், நின்கண்டஅளவையே - உன்னைக்கண்ட அளவிற்றானே, பேசஅரு - சொல்லுதற்கரிய, எல்லாவளமும் - எல்லாச்செல்வங்களையும், அளிக்குவன் - தந்தருளுவன், ஐயமது இன்று - சந்தேகமில்லை, பளகு அறு - குற்றமற்ற, நேசன்ஒருவனை - ஒருசிநேகிதனை, படைத்தல் - பெற்றிருத்தல், பருதனம்பொதி - பெரியதிரவியக்குவியலை, பெற்றாற்போலும் என்று - பெற்றதே நிகர்க்குமென்று, உள்ளம் மிக தெளிந்தோர் - மனம்மிகவுந் தெளிந்தவராகியமேலோர், புகலும் - சொல்லுகின்ற, நல்மாற்றம் - நல்ல சொல்லானது, உண்மை ஆம் - மெய்யாகும், பொய்மை ஆகாது - பொய்யாகாது, எ - று.

(பொ - ரை.) இளமைப்பருவத்தில் உன்னோடு கூடிப்பெரியநூல்களைக்கற்ற (நீல) மேகம் போன்ற நிறத்தையுடைய கிருஷ்ணன் உன்னைக்கண்ட அளவிற்றானே சொல்லுதற்கரிய எல்லாச்செல்வங்களையும் தந்தருளுவன்; சந்தேகமில்லை. குற்றமற்ற ஒருசிநேகிதனைப் பெற்றிருத்தல் பெரிய திரவியக்குவியலைப் பெற்றதை நிகர்க்குமென்று மனம் மிகவுந் தெளிந்தவராகிய மேலோர் சொல்லுகின்ற நல்ல சொல்லானது மெய்யாகும், பொய்யாகாது. எ - று.

(வி - ரை.) ஸ்ரீகிருஷ்ணபகவான் உன்னைக்கண்ட அளவில் உமக்கு எல்லாச்செல்வங்களையும் தந்தருள்வன், நல்ல சிநேகனைப்பெற்றிருப்பது ஒருபெரிய நிதிக்குவியலைப் பெற்றிருந்தலை நிகர்க்குமென்று பெரியோர் சொல்லுவர். அச்சொல் பொய்யாகாது என்பது கருத்து. எழிலி என்றது நீருண்டமேகத்தை. சஞ்சரித்தலுடையது என்பது பொருள். பேசரும் என்பதில் நிலைமொழி - பேசு எனக்கொள்ளின் முதனிலைத்தொழிற்பெயராகவும் பேசஎனக்கொள்ளின் அகரவிகுதி தொகுத்தல் பெற்றுவந்த செயவெனெச்சமாகவுங்கொள்க. வளத்துக்குக்காரணமாகிய செல்வத்தைவளம் என்றது காரியவாகுபெயர். ஐயமது - அகரச்சாரியையும் து-என்னும் பகுதிப்பொருள் விகுதியும் பெற்றுவந்த எழுவாய் வேற்றுமை. இது இன்றுஎன்னும் இருதிணை ஐம்பால்-மூவிடங்களுக்கும் பொதுவாகிய குறிப்பு வினைமுற்றைக் கொண்டது. போன்ம் - மகரக்குறுக்கம். இதுபோல் என்னும் இடைச்சொலடியாகப்பிறந்த செய்யுமென்வாய்பாட்டு வினைமுற்று விகுதியின் உகரம் கெட்டுவந்தது; இம்மகரக்குறுக்கத்துக்குமாத்திரைகால். இளமை - பண்புப்பெயர், காலப்பெயர் எனினுமாம். அளவிடுதலருமையாவதேயன்றிப் பேசுதலும் அருமையென்பதுதோன்ற, "பேசரும்வளம்" என்றார். (கூக)

உலகமோர் மூன்றும் வெருவரக் கொடியவுஞற்றிய கஞ்சனு தியர்க்கொன், றலகினன் னெறியோ ரின்புற வளிப்போ னுதலி னுங்கவன் பாற்சென், றிலகுறுஞ் செல்வம் வேண்டி னினக்கு மீகுவன் மற்றவன் மறுக்கிற், குலவவன் பாதங் காண்டலே யமை யுங் கோதறு வீடுமெய் தலினே.

(ப ரை.) உலகம் ஓர் மூன்றும் - மூன்றுலகத்தாரும், வெருவர - அஞ்ச, கொடிய - கொடுமைகளை, உஞற்றிய - செய்த, கஞ்சன் ஆதியர்கொன்று-கஞ் சன் முதலானவர்களைக்கொன்று, அலகு இல் - அளவற்ற, நல்நெறியோர்-நன் மார்க்கத்தையுடையோர், இன்பு உற - மகிழ்ச்சியையடைய, அளிப்போன் ஆதலின் - (அவர்வேண்டியவையாவும்) தந்தருள்வோனுதலால், ஆங்கவன் பால் சென்று - அவனிடத்திற்போய், இலகுறும் - பிரகாசிக்கிற, செல்வம் வேண்டிடின் - செல்வத்தைப் பிரார்த்தித்தால், நினக்கும் ஈகுவன்-உனக்கும் கொடுப்பன், மற்று அவன் மறுக்கின் - அல்லவென்று அவன் மறுத்தால், கோதுஅறு - குற்றமற்ற, வீடும்எய்தலின் - மோக்ஷத்தையும் அடைதற்கே துவாதலால், குலவு-விளங்குகின்ற, அவன்பாதம்-அவன் திருவடியை, காண் டலே - தரிசித்தலே, அமையும் - போதும். எ - று.

(பொ - ரை.) மூன்றுலகத்தாரும் அஞ்சக்கொடுமைகளைச் செய்த கஞ் சன் முதலானவர்களைக் கொன்று, அளவற்ற நன்மார்க்கத்தை யுடையோர் மகிழ்ச்சியடைய (அவர்வேண்டியவையாவும்) தந்தருள்வோனுதலால் அவனி டத்திற்போய் பிரகாசிக்கிற செல்வத்தைப்பிரார்த்தித்தால், உனக்கும் கொ டுப்பன்; அல்லவென்று அவன் மறுத்தால் குற்றமற்றமோக்ஷத்தையும் அடை தற்கேதுவாதலால், விளங்குகின்ற அவன் திருவடியைத் தரிசித்தலேபோ தும். எ - று.

(வி - ரை.) கண்ணன் தீயோரை யழித்து நல்லோர்க்கு வேண்டுவன தந்துகாத்தருள்வோனுதலால் உனக்கும் வேண்டுவன தந்தருளுவான்; அல்ல வென்று மறுத்தாலும் மோக்ஷத்துக் கேதுவாகிய அவனது திருவடிதரிசனமே யமையும் என்பது கருத்து. உலகமோர் மூன்று என்றது சுவர்க்கமத்யபாதாள லோகங்களை. தன்னிடத்தடைந்தோர்க்கு மீண்டும் பிறவித்துன்பமுண்டாகா மல் நிரதிசயமாகிய இன்பத்தைத் தருதலால், மோக்ஷத்தை "கோதறுவீடு" என்றார். "கஞ்சனுதியர்" என்றது சிசுபாலன், பூதனை, சகடாசுரன் முதலி யோரை. கஞ்சனைக்கொன்ற செய்தியாவது—மதுராபுரிக் கரசனுகிய உக்கிர சேநன், தன்மகளாகிய தேவகிதேவியைச் சூரனுக்கு மகனுகிய வசுதேவ னுக்கு மணம்புரிவித்தான், அவன்தன் மனைவியோடு தேரிலேறிவருகையில் அவர்களை வழிவிடும்பொருட்டு அத்தேவகியின் தமையனுகிய கஞ்சன் அத் தேரைச்செலுத்திவந்தான், அப்பொழுது அசரீரி, கஞ்சனைநோக்கி, நீயாருக் குச் சாரதியாகிச் சந்தோஷத்துட னிருக்கிருயோ, அந்தப்பெண்மணியின் எட்டாவது கரு உன்னையழிக்கும் என்று சொல்லிற்று, அதைக்கேட்டு, அக்

தக்கஞ்சன் அவ்விருவரையுங் காவலிட்டு, அவர்களுக்குப் பிறந்த எழுகுழந்தைகளையும் வதைசெய்துவந்தான்; எட்டாவது குழந்தையாகிய கிருஷ்ணன் நந்தகோபன்வீட்டில் வளர்ந்துவந்தனன், இவனைக்கொல்லஎவ்வளவு முயற்சிசெய்தும் அவையாவும் சூரியனுக்கெதிரே பனிபோலப் பயன்படா தொழிந்தன. பிறகு கஞ்சன் தநுர்யாகஞ்செய்தபோது, ஸ்ரீகிருஷ்ணபகவான் வடமதுரைக்கெழுந்தருளி, சாணூரன் முஷ்டிகன் என்னும் இரண்டு மல்லரையும் குவலயாபீடம் என்னும் யானையையும் இன்னும் ஆவன ஏவினவற்றையும் கொன்று அவனையுங்கொன்றான் என்பது. பூதனையைக்கொன்றசெய்தியாவது—பூதனையென்னும் ஒருராக்ஷஸியானவள் கஞ்சனேவலால்திருவாய்ப்பாடிக்குப்போய், குழந்தையாயிருக்கிற ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியை யெடுத்து மார்போடணைத்துக்கொண்டு, மிகவும் அன்புள்ளவள்போல நடித்து நஞ்சுபூசப்பட்ட தன்முலையுண்பித்துக்கொல்ல யத்தனித்தாள்; அவளது கெட்ட எண்ணத்தை ஸ்ரீகண்ணபிரான் அறிந்து, முலையுண்பவன் போலத் தனங்களில் தன் திருவாய்வைத்து முலைப்பாலோடு அவளது உயிரையும் உண்டருளினமையால் அவள் மலைபோல வீழ்ந்திறந்தாள் என்பது. சகடாசுரனைக் கொன்றசெய்தியாவது—கஞ்சனது பரிவாரங்களில் ஒருவனாகிய சகடாசுரன் என்பவன், கஞ்சனேவலால் ஸ்ரீ கண்ணபிரானைக் கொல்லநினைத்துத் திருவாய்ப் பாடிக்குச்சென்று ஒருவண்டியுருவாகி, ஸ்ரீகண்ணபிரான் தவழ்ந்துகொண்டு தனக்கருகே வருஞ்சமயம் பார்த்திருந்தான், இவ்வெண்ணத்தை பகவானாகிய ஸ்ரீகண்ணபிரான் அறிந்துகொண்டு, தவழ்ந்துவந்து வண்டியுருவாய்நிற்கிற அசுரனைத் தன் திருவடியாலுதைத்தலும் வண்டிமுறிபட்டுப் பொடியாய்விழ, அவன் உயிர்நீங்கினான் என்பது. (கூ௨)

கண்ணனைத் துளப மாலிகை நிறத்திற் கமலைவாழ் தரவருள் புரிந்த, மண்ணிய மணியைத் தினந்தினம் போற்று மாசறு தவத்தினருள்ளத், தெண்ணிய வெண்ணி யாங்களிப் பவனை யெய்திநஞ் சிறாருயச் செல்வ, நண்ணிவா வென்று நங்கைசொற் றிடலு நற்றவக் குசேலனீ துணைக்கும்.

(ப - ரை.) கண்ணனை - கிருஷ்ணனை, துளபமாலிகை - துளசிமாலையைத் தரித்த, நிறத்தில் - திருமார்பில், கமலை - திருமகள், வாழ்தர - வாழும்படி, அருள் புரிந்த - அருள் செய்த, மண்ணிய மணியை - கழுவப்பட்ட நீல மணி போன்றவனை, தினம் தினம் - நாள்தோறும், போற்றும் - வணங்குகின்ற, மாசு அறு - குற்ற மற்ற, தவத்தினர் - தவத்தையுடையவர், உள்ளத்து எண்ணிய-மனத்தில் நினைத்தவற்றை, எண்ணியாங்கு-நினைத்தவாறே, அளிப்பவனை - கொடுத்தருள்பவனை, எய்தி - அடைந்து, நம் சிறார் உய்ய-நமது சிறுவர் பிழைக்கும்படி, செல்வம் நண்ணி - செல்வத்தைப் பெற்று, வா என்று-வாவென்று, நங்கை - மனைவியானவள், சொற்றிடலும் - சொன்ன

அளவில், நல் தவம் - நல்ல தவத்தையுடைய, குசேலன் - குசேலனானவன், ஈது உரைக்கும் - இதனைச் சொல்வான். எ - று.

(பொ - ரை.) கிருஷ்ணனை, துளபமாலையைத் தரித்த திருமார்பில் திருமகள் வாழும்படி அருள் செய்த கழுவப்பட்ட நீலமணிபோன்றவனை ; நாள்தோறும் வணங்குகின்ற குற்றமற்ற தவத்தையுடையவர் மனத்தில் நினைத்தவற்றை நினைத்தவாறே கொடுத்தருள்பவனை அடைந்து, நமது சிறுவர் பிழைக்கும்படி செல்வத்தைப்பெற்று வாவென்று மனைவியானவள் சொன்ன அளவில், நல்ல தவத்தையுடைய குசேலனானவன் இதனைச் சொல்வான். எ - று.

(வி - ரை.) மணி யெனப் பொதுப்படக் கூறினாரேனும் ஸ்ரீகண்ண பிரானுக்குள்ளது நீல நிறமாதலால், அதற்கேற்க நீலமணி யெனப்பொருள் கூறப்பட்டது. ஒருவர் தாம் விரும்பின பொருள்களெல்லாவற்றையும் இறைவன் கொடுக்கப் பெறுகைக்குக்காரணம் நற்றவமாதலால், "மாசறுதவத்தினருள்ளத் தெண்ணிய வெண்ணியாங் களிப்பவனை" என்றார். "வேண்டிய வேண்டி யாங் கெய்தலாற் செய்தவ - மீண்டு முயலப்படும்" என்பது திருக்குறள். சீதா, மாலா, கலா, என்பன சீதை, மாலை, கலை எனத்திரிந்து வந்தன போல, மாலிகா என்னும் வடமொழி மாலிகை யெனத்திரிந்து வந்தது. கமலை-தாமரை மலரில் வாழ்பவள். மண்ணிய என்னும் இறந்த காலத்தெரி நிலைப் பெயரெச்சத்துக்குப் பகுதிமண் ண்-சந்தி, இன் - இறந்தகால இடை நிலை, இடை நிலையின் னகரக்கேடு கடைக்குறை, ய்-சந்தி, அ-பெயரெச்ச விகுதி. மண்ணுதல் - கழுவுதல். இவ்வாறு பொருள் படுதலை "மண்ணியறிய மணி நலம்" மண்ணீருமாகாது" என்பவற்றானறிக. சொற்றிடலும் என்னும் இறந்தகால வினையெச்சத்துக்குப் பகுதி சொற்றிடு, அல் - சாரியை, உகரக்கேடு சந்தி, உம் இறந்த காலவினை யெச்ச விகுதி, சொல் என்னும் பகுதி இடு என்னும் பகுதிப்பொருள் விகுதி பெறுமல், சொற்றான், சொற்ற - சொற்றல் என வினைவிகற்பங்களாய் வருதல் காண்க. ஈது என்றது அடியில் வருவது என்றபடி. கண்ணனை, மணியை, அளிப்பவனை எய்திச்செல்வம் நண்ணிவா என்று சொற்றிடலும் குசேலன் உரைக்கும் எனமுடிக்க. (கரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மக்களுக் கிரங்கி வாடு மடத்தகை யணங்கு கேட்டி
தக்கமுற் பவத்தி லான்ற தருமநன் கியற்றி னோர்க
ளொக்கவிப் பவத்தி லின்ப மொருங்கனு பவிப்ப ரின்றேன்
மிக்கவெந் துயரத் தாழ்வ ரிதற்குள மெலித லென்னே.

இது முதல் கசஉ-ஆம் செய்யுள் வரையிலும் குசேலர் தமது மனைவிக்குக் கூறுவன.

(ப - ரை.) மக்களுக்கு இரங்கி - சிறுவர் பொருட்டிரங்கி, வாடும் - வாட்ட மடைகின்ற, மடத்தகை-அறியாமைக் குணத்தையுடைய, அணங்கு -

பெண்ணே, கேட்டி - கேட்பாயாக, தக்க - தகுதியாகிய, முன்பவத்தில் - முற்பிறப்பில், ஆன்றதருமம் - மிகுந்த தருமத்தை, நன்கு இயற்றினோர்கள்-நன்றாகச் செய்தவர்கள், ஒக்க-அதற்கேற்க, இப்பவத்தில்-இந்தப் பிறப்பில், இன்பம் - சுகத்தை, ஒருங்கு அனுபவிட்பர் - ஒரு மிக்க அனுபவிப்பார்கள், இன்றேல் - இல்லையாயின், மிக்க-மிகுந்த, வெம் - கொடிய, துயரத்து-துன்பக் கடலில், ஆழ்வர்-அழுந்துவார்கள், இதற்கு-இதைப்பற்றி, உள்ளம் மெலிதல்-மனமிளைத்தற்குக் காரணம், என் - யாது. எ - று.

(பொ - ரை.) சிறுவர் பொருட்டிரங்கி வாட்டமடைகின்ற அறியாமைக்குணத்தையுடைய பெண்ணே! கேட்பாயாக. தகுதியாகிய முற்பிறப்பில், மிகுந்த தருமத்தை நன்றாகச் செய்தவர்கள் அதற்கேற்க இந்தப்பிறப்பில், சுகத்தை ஒருமிக்க அனுபவிப்பார்கள். இல்லையாயின் மிகுந்த கொடிய துன்பக்கடலில் அழுந்துவார்கள். இதைப்பற்றி மனமிளைத்தற்குக் காரணம் யாது. எ - று.

(வி - ரை.) நமது துன்பத்துக்குக் காரணம் நாம் முற்பிறப்பிற் செய்த தீவினையென்றுணர்ந்து அமைந்திராமல் வருந்துதலால், "மடத்தகையணங்கு" என்றார். அன்றி மாதர்க்குரிய நால்வகைக் குணங்களுள் ஒன்றாகிய மடம் எனக்கொண்டு மடப்பாகிய அழகுடையாள் எனினுமாம், அணங்கு - தெய்வப்பெண், இது உவமையாகு பெயர். தெய்வப்பெண் போல்வாளையுணர்த்திற்று, ஆழ்வர் என்றதற் கேற்பத் துயரத்தைக் கடலாக்கி யுரைக்கலாயிற்று. ஆன்ற இறந்த காலப்பெயரெச்சம், அகல் என்பதன் மரூஉவாகிய ஆல் பகுதி,லகரம் னகரமானது சந்தி, ற்-இறந்தகால விடைநிலை, அ விகுதி இன்றேல் என்பதில் ஏல் எனின் என்னும் செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தின் மரூஉ. என் எவன் என்னும் அஃறிணையிருபாற்கும் பொதுவாகிய குறிப்பு வினை முற்றின் மரூஉ. அணங்கு அண்மை விளி. பவம் வடமொழி. இன்றேல் என்றது தருமஞ் செய்த தில்லையாயின் என்றபடி. (கசு)

துப்பிதழ் மடந்தை நல்லாய் தோன்றிய சீவ ரெல்லா
மிப்புவி யிடத்துச் சால வெண்ணுவ ரெண்ணி யாங்கே
யெப்படி முற்று முற்றா தெம்பிரா னொருவற் கன்றி
யப்படி முற்றிற் கீழ்மே லாம்பகுப் பிரண்டுண் டாமே.

(ப - ரை.) துப்பு - பவளம்போன்ற, இதழ் - அதரத்தையுடைய, மடந்தைநல்லாய் - பெண்ணே! தோன்றிய சீவர் எல்லாம் - பிறந்த உயிர்களெல்லாம், இப்புவி இடத்து - இந்தப் பூமியில், சால எண்ணுவர் - மிகவும் எண்ணங்கொள்வார்கள், எண்ணினால் ஆங்கே - எண்ணியபடியே,எப்படிமுற்றும் எவ்வாறுமுடியும், எம்பிரான் ஒருவற்குஅன்றி - எம்பெருமான் ஒருவனுக்கேயன்றி, முற்றுறாது (மற்றையர்க்கு) முடியாது, அப்படி முற்றின் - அவ்வாறு

முடியினும், கீழ்மேல்ஆம் - கீழோர் மேலோராகிய, பகுப்புஇரண்டு - இரண் டுபெகுதிகள், உண்டாமோ - உண்டாகுமோ. எ - று.

(பொ - ை.) பவளம்போன்ற அதரத்தையுடைய பெண்ணே! பிறந்த உயிர்களெல்லாம் இந்தப் பூமியில் மிகவும் எண்ணங்கொள்வார்கள். எண் ணியபடியே எவ்வாறு முடியும். எம்பெருமான் ஒருவனுக்கேயன்றி (மற் றையர்க்கு)முடியாது, அவ்வாறு முடியினும் கீழோர் மேலோராகிய இரண்டு பகுதிகள் உண்டாகுமோ. எ - று.

(வி-ை.) பெண்ணே! இவ்வுலகத்தின்கண் உள்ள ஆன்மாக்கள் பலவற் றையு மெண்ணுவார்களாயினும் அவ்வெண்ணங்கள் எவ்வாறு முடியும். இ றைவனொருவனே தானெண்ணிய எண்ணத்தை முற்றுவிக்கு மாற்றலுடை யவன். இவ்வான்மாக்களெல்லாம் எண்ணியபடியே அடையப் பெறுமாயின் கீழ்மேல் என்னும் வரம்புளவாகா என்பது கருத்து. துப்புஇதழ் - உவமத் தொகை. வினை, பயன், மெய், உரு என்னும் நால்வகையுவமைகளில் இது உருவுவமத்தொகை. மடந்தைநல்லாய் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். சீவரெல்லாம் சாலவெண்ணுவர் என்பதனை "ஒருபொழுதும் வாழ்வதறியார் கருதுப - கோடியு மல்லபல" என்னும் திருக்குறளானுமறிக. எண்ணியாங்கு என்பதை எண்ணிய ஆங்கு, எண்ணினால் ஆங்கு. எனப்பிரிக் கலாம். முற்றும் செய்யுமென்வாய்பாட்டு வினைமுற்று. ஒருவற்கு என்பதில் பிரிநிலையேகாரம் தொகுத்தல். மடந்தை - மடந்தைப்பருவப்பெண் எனினு மாம். நல்லாள் என்பது விளியுருபேற்றமையால் நல்லாய் என ஈறு திரிந் தது. சால என்பது உரிச்சொலடியாகப் பிறந்த பலவின்பாற் குறிப்பு வினையாலணையும் பெயராகக்கொண்டு அநேகமான எண்ணங்களையெனப் பொருளுரைத்தலுமாம். எம்பிரான் என்றது ஈடுமெடுப்புமில்சனை. பிரான் என்பதற்கு உபகாரசீலன் என்பது பொருள். (கஅடு)

தேற்றமுற் பவத்திற் செய்த தீங்குநன் கெனுமி ரண்டு
மாற்றல்சால் கரும மென்ப ரக்கரு மத்தை நோக்கிச்
சாற்றுமிப் பிறப்பிற் றக்க தரித்திரஞ் செல்வ நல்கிப்
போற்றுவ னுயிரை யெல்லாம் பொலிசுடர்த் திகிரி வள்ளல்.

(ப - ை.) தேற்ற - தெளிய, முன்பவத்தில் செய்த - முற்பிறப்பில் செய்த, தீங்குநன்கு என்னும் - தீமைநன்மை யென்கிற, இரண்டும் - இரண் டையும், ஆற்றல்சால் - வலிமிகுந்த, கருமம் என்பர் - வினைகளென்று சொல் லுவர், (மேலோர்) அக்கருமத்தை - அந்தவினைகளை, பொலிசுடர் - மிக்கஒளி யுள்ள, திகிரிவள்ளல்-சக்கராயுதத்தையுடையவனாகிய திருமால், நோக்கி பார் த்து, சாற்றும்-புகழ்ந்து சொல்லப்பட்ட, இப்பிறப்பில்-இந்தச்சந்மத்தில், தக்க- (மேற்கூறிய இருவினைகளுக்குத்) தகுதியாகிய, தரித்திரம் செல்வம் - வறு மையையும் பாக்கியத்தையும், நல்கி - கிருபைசெய்து, உயிரை எல்லாம் - சீவர்களையெல்லாம், போற்றுவன் - காப்பாற்றுவன். எ - று.

(பொ - ரை.) தெளிய முற்பிறப்பில் செய்த தீமை நன்மையென்கிற இரண்டையும், வலி மிகுந்த வினையென்று சொல்லுவர் (மேலோர்). அந்த வினைகளை மிக்க ஒளியுள்ள சக்கராயுதத்தையுடையவனாகிய திருமால் பார்த்து, புகழ்ந்து சொல்லப்பட்ட இந்தச் சமயத்தில் மேற்கூறிய இருவினைகளுக்குத் தகுதியாகிய வறுமையையும் பாக்கியத்தையும் கிருபை செய்து சீவர்களையெல்லாம் காப்பாற்றுவன். எ - று.

(வி - ரை.) வீடு பேற்றுக்கு இம்மானிடதேகம் நேரே காரணமாதல் பற்றி, சாற்றும் என்பதற்கு, புகழ்ந்து சொல்லப்பட்ட என்று பொருளுரைக்கப்பட்டது. இந்த மானிடப்பிறவி எல்லாப்பிறவிகளினுஞ் சிறந்ததென்பது "எண்ணரிய பிறவிதனின் மானிடப்பிறவி தான் யாதினும் மரிதரிது காண்" என்பது முதலியவற்றால் இனிது விளங்கும். இதனை "மக்கடேவர் நரகருயர்திணை" என்னும் நன்னூற் சூத்திரவுரையினுங்காண்க. இருவினைகளுக்குத் தகுதியாகப் பயன்றரு தற்குரியவனாதலால் "பொலி சுடர்த்திகிரிவள்ளல்" என்றார். உயிர்களுக்கு அவரவர் வினைக்கேற்ற பயனூட்டி வளர்ப்பவன் திருமாலே யென்பது கருத்து. இதனை, "சிறுகா பெருகா முறை பிறழ்ந்துவாரா" "அவரவர் விதிவழியடைய நின்றனரே." என்ற பெரியோர் வாக்கியங்களாலுமுணர்க. தேற்ற - என்னும் செயவெனச்சம் செய்த என்னும் வினைகொண்டது. இதற்குப்பகுதி - தேற்று. இப்பகுதி தன் வினை பிறவினைகளுக்குப் பொதுவாயினும் இங்குத் தன் வினையாய் வந்தது. தீங்கு, நன்கு என்னும் பண்புப் பெயர்களில் விகுதி - கு. கர்மம் என்னும் வடசொல் கருமம் என்றாயிற்று. (கூ௬)

மைந்தர்க டம்மைப் போற்ற வளநிதி வேண்டு மென்றாய்
நந்திய பறவை கான நயந்துறை விலங்கு முன்னா
வந்தபல் லுயிர்க்குச் சேம வைப்புண்டோ வருவா யுண்டோ
வெந்திடத் தேனும் போயொன் றிரப்பது தானு முண்டோ.

(ப - ரை.) மைந்தர்கள் தம்மை - புதல்வரை, போற்ற - காப்பாற்ற, வளம்நிதிவேண்டும் - வளமாகிய செல்வம்வேண்டும், என்றாய்-என்றுசொன்னாய், நந்திய - பெருகிய, பறவை - பக்ஷிகளும், கானம் - காட்டை, நயந்து - விரும்பி, உறை - (அதில்) வாழ்கின்ற, விலங்கு - மிருகங்களும், முன் ஆ - முதலாக, வந்த - தோற்றிய, பல்உயிர்க்கு - பலசீவர்களுக்கு, சேமம் - (தம்முயிர்க்குக்) காவலாகிய, வைப்புஉண்டோ - புதையல்உண்டோ, வருவாய் உண்டோ - (அன்றிவேறு) வருமானமுண்டோ, எந்திடத்தேனும் - எவ்விடத்திலாயினும், போய் - சென்று, ஒன்று - ஒருபொருளை, இரப்பதுதானும் உண்டோ - யாசிப்பதுதானுமுண்டோ. எ - று.

(பொ - ரை.) புதல்வரைக்காப்பாற்ற வளமாகிய செல்வம்வேண்டும் என்றுசொன்னாய்; பெருகிய பக்ஷிகளும்,காட்டைவிரும்பி (அதில்)வாழ்கின்ற

மிருகங்களும் முதலாகத்தோற்றிய பலசீவர்களுக்கு (தம்முயிர்க்குக்) காவலாகிய புதையல்உண்டோ, (அன்றிவேறு) வருமானமுண்டோ, எவ்விடத்திலாயினும் சென்று ஒருபொருளை யாசிப்பது தானுமுண்டோ. எ - று.

(வி - ரை.) பறவை, மிருகம் முதலாகிய சீவர்களுக்கு ஒருபொருள் முதலியனவுளவோ, அவைகள் வாழவில்லையோ என்பது கருத்து. நந்திய - இறந்தகாலப்பெயரெச்சம். இன் இடைநிலையின், னகரம் கெட்டுவந்தது. கெடாதுவரின் நந்தின எனவரும். பகுதி - நந்து. பறவை - ஐகாரவீற்றுத்தொழிலடியாகப் பிறந்தபெயர். தொழிலாகுபெயர் எனினுமாம். பறவை, விலங்கு, முதலியன வருமானமில்லாதிருந்தும் ஒன்றையடுத்து யாசியாமலிருக்க, நீ, என்னைப்போ யாசிக்கச்சொல்லுவது தகுதியா என்றற்கு "எந்திடத்தேனும் போய் ஒன்றிரப்பது தானுமுண்டோ" என்றார். வைப்பை நிக்ஷேபம் என்பர் வடநூலிர். கா என்பது னகரச்சாரியையும் அம்முச்சாரியையும் பெற்று கானம் என்றாயிற்று. விலங்குகளுக்குக் காட்டில்வாழ்வதற்கே விருப்பமாதலால் "கானநயந்துறைவிலங்கு" என்றார். எந்த இடம் என்பது நிலைமொழியீறு தொகுத்தலாய் எந்திடம் என்றாயிற்று. (கூஎ)

அல்லது நாளைக் கென்செய் வாமெனுங் கவலை யுண்டோ
வெல்லையி லொன்றி னொன் றிடிப்புண்டு வாழ்த லுண்டோ
வொல்லுமவ் வுயிர்க டம்மு ளுணவிலா திறந்த துண்டோ
சொல்லரி பரந்த வுண்கட் டுடியிடைப் பேதை மாதே.

(ப - ரை.) அல்லது - அன்றி, நாளைக்குஎன்செய்வாம் என்னும்-நாளைக்கென்னசெய்வோமென்கிற, கவலைஉண்டோ-விசனமுண்டோ, எல்லைஇல் - அளவில்லாத, ஒன்றினால்ஒன்று இடிப்புஉண்டு-ஒன்றினாலொன்று அடிக்கப்பட்டு, வாழ்தல்உண்டோ-உயிர்பிழைத்தலுண்டோ, ஒல்லும் - பொருந்திய, அவ்வுயிர்கள்தம்முள் - அந்தஉயிர்களுக்குள்ளே, உணவுஇல்லாது-ஆகாரமில்லாமல், இறந்ததுஉண்டோ - உயிர்நீங்கியதாகிய பிராணியுண்டோ, சொல்-சொல்லாய், அரிபரந்த - இரேகைகள் படர்ந்த, உண்கண் - மையுண்ட கண்களையும், துடிஇடை - உடுக்கைபோலும் இடையையும், பேதை - பேதைமையையும் உடைய, மாதே - பெண்ணே. எ - று.

(பொ - ரை) அன்றி நாளைக்கென்னசெய்வோமென்கிற விசனமுண்டோ, அளவில்லாத ஒன்றினாலொன்று அடிக்கப்பட்டு உயிர்பிழைத்தலுண்டோ, பொருந்திய அந்தஉயிர்களுக்குள்ளே ஆகாரமில்லாமல் உயிர்நீங்கியதாகிய பிராணியுண்டோ, சொல்லாய். இரேகைகள்படர்ந்தமையுண்ட கண்களையும் உடுக்கைபோலும் இடையையும் பேதைமையையுமுடைய பெண்ணே. எ - று.

(வி - ரை.) அல்லது - அன்மையென்னும் பண்படியாகப் பிறந்த எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம். சொல்-முன்னிலையேவலொருமை வினைமுற்

று. உண்கண் - வினைத்தொகை. துடியிடை - உவமைத்தொகை. பறவை - மிருகம் முதலிய வுயிர்கள் கவலையற்றுவாழ, நீயிவ்வாறு வருந்துதல் பேதைமையின் காரியம் என்றற்கு, "பேதைமாதே" என்றான். சொல் - புகழ்ந்து சொல்லப்பட்ட எனினுமாம். கண்ணழகும் இடையழகுமுள்ளநீ அறிவழகு பெற்றாயில்லையே யென்றற்கு, "அரிபரந்தவுண்கட்டுடியிடைப்பேதைமாதே" என்றான். சொல்என்றது, கவலையுண்டோ, வாழ்தலுண்டோ, வைப்புண்டோ, வருவாயுண்டோ, இவையாவும் ஆராய்ந்து சொல்வாயாக என்றபடி.

கல்லினுட் சிறுதே ரைக்குங் கருப்பையண் டத்து யிர்க்கும்
புல்லுண வளித்துக் காக்கும் புனத்துழாய்க் கண்ணி யண்ண
லொல்லுநின் மைந்தர்க் காவா தொழிவனோ வொழியா னுண்மை
மெல்லியல் கொண்ட துன்பம் விடுவிடு மறந்து மெண்ணல்.

(ப - ரை.) கல்லினுள் - கல்லுக்குள்ளேயிருக்கிற, சிறுதேரைக்கும் - சிறியதேரைக்கும், கருப்பை - கருப்பையினும், அண்டத்து - முட்டையினும் உள்ள, உயிர்க்கும் - உயிர்களுக்கும், புல்உணவு அளித்து - புல்லியஆகாரத்தையும் (மறவாது) தந்து, காக்கும் - காப்பாற்றுகின்ற, புனம்துழாய்கண்ணி- கொல்லையிலுண்டாகின்ற திருத்துழாய்மாலையைத் தரித்த, அண்ணல் - பெரியோனாகிய கிருஷ்ணன், ஒல்லும் - பொருந்திய, நின்மைந்தர் - உன்புதல்வரை, காவாதுஒழிவனோ - காப்பாற்றாமல்விடுவனோ, ஒழியான் - விடான், உண்மை - இதுசத்தியம், மெல்லியல் - பெண்ணே, கொண்டதுன்பம் - நீ கொண்ட துயரத்தை, விடுவிடு - ஒழிஒழி, மறந்தும் எண்ணல் - மறந்தும் நினையாதே. எ - று.

(பொ - ரை.) கல்லுக்குள்ளே யிருக்கிற சிறியதேரைக்கும், கருப்பையினும் முட்டையினும் உள்ள உயிர்களுக்கும், புல்லிய ஆகாரத்தையும் (மறவாது) தந்து காப்பாற்றுகின்ற, கொல்லையிலுண்டாகின்ற திருத்துழாய்மாலையைத் தரித்த பெரியோனாகிய கிருஷ்ணன், பொருந்திய நின்புதல்வரைக்காப்பாற்றாமல் விடுவனோ, விடான். இதுசத்தியம். பெண்ணே, நீகொண்ட துயரத்தை ஒழிஒழி. மறந்தும் நினையாதே எ - று.

(வி - ரை.) கல்லுக்குள்ளிருக்கிற தேரைக்கும் முட்டைக்குள்ளிருக்கிற வுயிர்களுக்கும் உணவளித்துக்காக்கு மிறைவன் உன்மைந்தரைக் காத்தருளாதொழியான், உன் துன்பத்தை யொழிப்பாயாகவென்பது கருத்து. "கருப்பைக்கு முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும், விருப்புற்ற முதளிக்கு மெய்யன்,உருப்பெற்றால், ஊட்டிவளர்க்கானோவோகெடுவாயன்னையிவ், வாட்டமுனக்கேன்மகிழ்" என மூதறிவாட்டியுங் கூறினள். தேரை கருங்கல்லுக்குள்ளே யிருப்பதாகிய ஓர்தவளைச்சாதி. கருப்பைஉயிர் - கருப்பையிற்கட்டுப்பட்டுப்பிறக்கிற மக்கள் முதலியவுயிர்கள். அண்டத்துயிர் - முட்டையிற்பிறக்கிற பறவை முதலிய வுயிர்கள். காக்கும் அண்ணல் என வியையும்.

எல்லா வுயிர்களையும் காக்குமிறைவன் நம்மக்களையும் காப்பான் என்னும் ஞானமின்றி அவர்களைக் காக்குங்கடன் தன்னதெனச் சுதந்தரித்தமைபற்றி, "நின்மைந்தர்" என்றான். மெல்லியல் - மென்மையாகிய தன்மையையுடைய வள் என விரிதலால் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக்காரணப் பெயர். மறந்தும் எண்ணல் என்றது எவ்வகையாலும் சிறிதும் எண்ணுதிரு என்றபடி. "மறந்தும்பிறன்கேடு சூழற்க" "மறந்து மற்றப் பொய்வானவரிற்புகாது" "மறந்தும்புறந்தொழாமாந்தர்" என்றிவ்வாறு பிறருங் கூறுதல்காண்க. எண்ணல் - எதிர்மறையொருமையேவல். விடுவிடுஎன்ற அடுக்கேயமைவதாயிருக்க, மறந்துமெண்ணல் என்று மேலுங்கூறியது பற்றறவிடக்கடவை யென்றற்கு. மெல்லியல் - அண்மைவிளி. (கக)

உரைத்தகன் முதலி டப்பல் லுயிர்க்கெலா முணவே யின்று
வரைத்தவவ் வுயிரவ் வாறு வழங்குத லியல்பே யென்னிற்
றரைத்தலை வந்த ஞான்றே சலமலம் விடுத்த லுண்டே
விரைத்தபூங் குழலாய் துய்க்கு முணவின்றி மேவு மேகொல்.

(ப - ரை.) உரைத்த - சொல்லப்பட்ட, கல்முதல் இடம் - கல்முதலிய இடங்களிலுள்ள, பல் உயிர்க்கு எல்லாம் - பலஉயிர்களுக்கெல்லாம், உணவேயின்று - உணவேயில்லை, வரைத்த - வரையறை செய்யப்பட்ட, அவ்வுயிர் - அந்த உயிர்கள், அவ்வாறு வழங்குதல் - அப்படி வழங்குதல், இயல்பே என்னின் - இயற்கையேயாமெனின், (அவை) தரைத்தலை - பூமியின்கண், வந்தஞான்றே - பிறந்த அன்றே, சலம்மலம் விடுத்தல் உண்டே - சலமலங்களை விடுவதுண்டே, (அப்படிவிடுதல்) விரைத்த பூகுழலாய் - பரிமளிக்கிற மலர்மாலையை யணிந்த கூந்தலையுடையாளே, துய்க்கும் உணவு இன்றி-உண்ணுமுணவில்லாமல், மேவுமே - பொருந்துமோ. எ - று.

(பொ - ரை.) சொல்லப்பட்ட கல்முதலிய இடங்களிலுள்ள பலஉயிர்களுக்கெல்லாம் உணவேயில்லை; வரையற்ற செய்யப்பட்ட அந்த உயிர்கள் அப்படி வழங்குதல் இயற்கையேயாமெனின், (அவை) பூமியின்கண் பிறந்து அன்றே சலமலங்களை விடுவதுண்டே, (அப்படி விடுதல்) பரிமளிக்கிற மலர் மாலையையணிந்த கூந்தலையுடையாளே, உண்ணுமுணவில்லாமல் பொருந்துமோ. எ - று.

(வி - ரை.) கல்முதல் இடம் என்றது கல், கருப்பை, அண்டம் என்பவற்றை. அவற்றினுள்ள தேரை முதலியன உணவின்றி யுயிர்வாழும் சீவர்களெனின், அவைகல்முதலிய இடங்களினின்றும் வெளிப்பட்டவுடன் சலமலங்களை விடுகின்றனவே, அப்படிவிடுதல் உணவின்றி யெவ்வாறுண்டாகும் என்பது கருத்து. வரைத்த விரைத்த என்பன முறையே வரைவிரை என்னும்பண்படியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சங்கள். தரைத்தலை யென்பதில் தலைஏழனுருபு. குழலாள் என்னுஞ் சினையடியாகப் பிறந்த பெண்பாற்

படர்க்கைப்பெயர் இறுதிளகரம் யகரமாய்விளியேற்றது. சலமலம் உம்மைத்தொகை. (௧00)

அலரவன் றீட்டி வைத்த வாயுளி னளவை காறும்
விலகிலா வினைக்குத் தக்க விருப்புணா வெறுப்பு ணாவு
மிலகவுண் டின்றே லின்று மின்னுயி ருடம்பின் வாழ்தன்
மலர்தலை யுலகத் தென்று வகுப்பர்நூ லுணர்ந்த வல்லோர்.

(ப - ரை.) நூல் உணர்ந்த - சாஸ்திரார்த் தங்களையறிந்த, வல்லோர் - வல்லவர்கள், மலர்தலை உலகத்து - விரிந்த இடத்தையுடைய உலகத்தில், அலரவன் - தாமரை மலரிலிருப்பவனாகிய பிரமன், தீட்டி வைத்த - எழுதி வைத்த, ஆயுளின் அளவை காறும்-ஆயுளின் எல்லைவரையும், விலகிலா - நீங்குதலில்லாத, வினைக்குத்தக்க-கருமத்துக்குத் தகுதியாகிய, விருப்பு உணா - (உம்) விரும்புதற்குரிய உணவும், வெறுப்பு உணாவும்-வெறுத்தற்குரிய உணவும், இலக-வழங்குதலால், இன் உயிர்-இனிய வுயிர்கள், உடம்பின் வாழ்தல் - உடம்பின் கண் வாழ்தல், உண்டு - உள்ளது, இன்றேல் - இல்லையாயின், இன்று ஆம் - இல்லையாகும், என்று வகுப்பர் - என்று வகுத்துச் சொல்லுவர். எ - று.

(பொ - ரை.) சாஸ்திரார்த் தங்களையறிந்த வல்லவர்கள், விரிந்த இடத்தையுடைய உலகத்தில் தாமரை மலரிலிருப்பவனாகிய பிரமன் எழுதி வைத்த ஆயுளின் எல்லைவரையும் நீங்குதலில்லாத கருமத்துக்குத் தகுதியாகிய விரும்புதற்குரிய உணவும், வெறுத்தற்குரிய உணவும் வழங்குதலால் இனியவுயிர்கள் உடம்பின் கண் வாழ்தல் உள்ளது, இல்லையாயின் இல்லையாகும் என்று வகுத்துச் சொல்லுவர். எ - று.

(வி-ரை.) இந்தத் தேகமெடுத்தது இருவினைப்பயன்களை யநுபவித்தற்கேயாம் என்பது கருத்து, விருப்புணா - நல்வினைப்பயன், வெறுப்புணா - தீவினைப்பயன். அவை இன்பதுன்பங்கள். இவற்றை சுகம் துக்கம் என்பர் வடநூலார். நல்வினைப்பயனாகிய இன்பத்தை விருப்போடும் தீவினைப்பயனாகிய துன்பத்தை வெறுப்போடும் அநுபவித்தலால், அவற்றை, "விருப்புணா வெறுப்புணா" என்றார், அலரவன் - இடமடியாகப் பிறந்த பெயர்ப்பகு பதம், காறும் - காலவரையறை குறிக்கும் இடைச்சொல், இது வினைகொண்டு முடியும். ஒருவன் செய்த நல்வினை தீவினைகள் தம்மைச் செய்தவனை விட்டுப் பிரியாமல் தம்பயன்களை நுகர்வித்தலால், "விலகிலாவினை" என்றார். "பல்லாவுளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்லதாந்தாய் நாடிக்கோடலைத், தொல்லைப், பழவினையுமன்ன தகைத்தேதற்செய்த, கிழவனை நாடிக் கொளற்கு" என்றார் பிறரும். யாவரும் தத்தம் உயிரிற் சிறந்ததொன்றில்லையெனக்கருதலால். "இன் உயிர்" என்றார். "இன்றேலின்றாம்" என்பதனால் இருவினைகள் அறவே பிறப்பும் அறும் என்பதும், அவையுள்ளளவும் பிறப்

பும் உண்டென்பதும் பெறப்பட்டன. மலர்தலை - வினைத்தொகை நிலைத் தொடர். (சு0க)

ஆதலி னினது மைந்தர்க் காயுளுள் ளளவை காறு
மோதிரு வினைக்குத் தக்க வுணவுண்டு புந்தி மாழ்கே
லேதுவந் தாலு மூழா லெனநினைந் திருத்தல் வேண்டு
மாதர்வாண் முத்த மூரன் மயின்மரு ணடைப்பூங் கொம்பே.

(ப - ரை.) ஆதலின் - ஆதலால், நினது மைந்தர்க்கு - உன் புதல்வருக்கு, ஆயுள் உள்ள அளவைகாறும்-ஆயுளுள்ளவளவு வரையும், ஓது - சொல்லப்பட்ட, இருவினைக்குத்தக்க-இருவினைக்குத் தகுதியாகிய, உணவு உண்டு - உணவு உளது, புந்திமாழ்கேல் - மதிமயங்காதை, ஏது வந்தாலும் - எது நேரிட்டாலும், ஊழால் என - ஊழினால் (நேரிட்டது) என்று, நினைந்து இருத்தல்வேண்டும் - நினைத்திருத்தலே தகுதியாகும், மாதர் - அழகாகிய, வாள் - ஒளியுள்ள, முத்தம் - முத்தை நிகர்த்த, மூரல் - பற்களையும், மயில்மருள் நடை-மயிலும் மருளுதற்கேதுவாகிய நடையையும்உடைய, பூங்கொம்பே - பூங்கொம்பு போல்வாளே. எ - று.

(பொ - ரை.) ஆதலால் உன் புதல்வருக்கு ஆயுளுள்ள வளவு வரையும் சொல்லப்பட்ட இருவினைக்குத் தகுதியாகிய உணவு உளது, மதி மயங்காதை, எது நேரிட்டாலும் ஊழினால் (நேரிட்டது) என்று நினைத்திருத்தலே தகுதியாகும், அழகாகிய ஒளியுள்ள முத்தை நிகர்த்த பற்களையும் மயிலும் மருளுதற்கேதுவாகிய நடையையும் உடைய பூங்கொம்பு போலவாளே. எ - று.

(வி - ரை.) மாதர் நடைக்கு அன்னத்தையுவமிப்பது பெருவழக்காயிருத்தலால், "மயின் மருணடை" என்றதற்கு, மயில் நடக்கும் போதுள்ள சாயல் போல இவள் நடக்கும் போதுள்ள சாயலையுவமித்ததா கப்பொருள் கொள்க. இவ்வாறன்றி மயின் மருணடைப்பூங் கொம்பே என்பதற்கு, சாயலைக்கண்டு மயிலுமருளும்படியான நடைப் பூங்கொம்பே எனப்பொருளுரைப்பினுமாம். நடைப் பூங்கொம்பு - நடத்தலையுடைய பூங்கொம்பு, இது உவமைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக்காரணப்பெயர். நடைப்பூங்கொம்பின்மையால் இது இல்பொருளுவமை, இதனை அபூதோபமம் என்பர் வடநூலார். உன் புதல்வருக்கு ஆயுளுள்ளளவும் இறைவன் அவர்கள் ஊழ்வினைக்கேற்க உணவளிப்பன் ஆதலால் நன்மையேயன்றித் தீமைவந்தாலும் வரட்டும் என்று மனவுறுதி கொண்டிருத்தல் வேண்டுமென்பது கருத்து. "வகுத்தான் வகுத்தவகையல்லாற் கோடி - தொகுத்தார்க்குந் துய்த்தலரிது" எனவும், "நன்றாங்கானல்ல வாக்காண் பவரன்றாங்கால் - அல்லற் படுவ தெவன்" எனவும் கூறினார் பெருநாவலரும். வேண்டும் - தகும் படும் என்பனபோலத் தேற்றப்பொருடருந் தொழிற்பெயர். மாழ்கேல் - எதிர்மறையொருமை யேவல், மாழ்கு பகுதி, மாதர் - பண்புப்பெயர். மயில் என்பதனீற்றில் உயர்வு சிறப்பும்மை தொகுத்தல். (சு0உ)

வளநிதி படைத்தோ மென்றும் வடிவமில் லுடையோ மென்று
மளவில்சே யீன்றோ மென்று மனுபவத் தமைந்தோ மென்று
மிளமையிற் சிறந்தோ மென்று மெழினல முடையோ மென்று
முளமகிழ் கூர்வர் சற்று முண்மைநூ லுணர்ச்சி யில்லார்.

(ப - ரை.) சற்றும் - சிறிதும், உண்மைநூல் - மெய்நூற் பொருள்களின், உணர்ச்சியில்லார்-உணர்ச்சி யில்லாதவர்கள், வளம் நிதி படைத்தோ மென்றும் - வளமாகிய செல்வத்தைப் படைத்தோம் என்றும், வடிவம் இல் உடையோம் என்றும் - அழகுள்ள மனைவியையுடையோ மென்றும், அளவு இல் சேய் ஈன்றோம் என்றும்-அளவற்ற புதல்வரைப் பெற்றோம் என்றும், அனுபவத்து அமைந்தோம் என்றும் - சுகானுபவத்தில் அமைந்திருக்கிறோ மென்றும், இளமையில் சிறந்தோம் என்றும் - இளமைப்பருவத்தால் சிறந்திருக்கிறோம் என்றும், எழில் நலம் உடையோம் என்றும் - எழுச்சியும் அழகும் உடையோ மென்றும், உள்ளம் மகிழ் கூர்வர் - மனமகிழ்ச்சி மிகுவார்கள். எ - று.

(பொ - ரை.) சிறிதும் மெய்நூற் பொருள்களின் உணர்ச்சியில்லாதவர்கள், வளமாகிய செல்வத்தைப் படைத்சோம் என்றும், அழகுள்ள மனைவியையுடையோமென்றும், அளவற்ற புதல்வரைப் பெற்றோமென்றும், சுகானுபவத்தில் அமைந்திருக்கிறோமென்றும், இளமைப்பருவத்தால் சிறந்திருக்கிறோமென்றும், எழுச்சியும் அழகும் உடையோமென்றும், மனமகிழ்ச்சி மிகுவார்கள். எ - று.

(வி - ரை.) வள நிதிபடைத்தல்போல அழகுவாய்ந்த இல்லாளைப் படைத்தலும் நன்மக்களைப் பெறுதலும் பெரும் பாக்கியமாதலால் வள நிதியோடு இவற்றையும் சேர்த்துக் கூறினர் செல்வம் முதலியயாவும் அழியுமியற்கைய வாதலால் "உண்மை நூலுணர்ச்சியில்லாருள மகிழ் கூர்வர்" என்றார். மகிழ், முதனிலைத்தொழிற்பெயர். உண்மைநூ லுணர்ச்சியுள்ளார் செல்வம் முதலியவற்றைப் பெறினும் அவற்றின் நிலையாமை முதலியவற்றை யுணர்ந்தவராதலால் அவற்றில் விருப்பம் வையார் என்பது கருத்து. இல்- இடவாகுபெயர். உடையோம் செயப்படு பொருள் குன்றாத பண்படியாகப் பிறந்த தன்மைப் பன்மைக் குறிப்பு வினைமுற்று, இல்லார் - எதிர் மறைக் குறிப்பு வினையாலணையும் பெயர். மகிழ் கூர்வர் என்பதனை ஒரு சொல்லாக்கி மகிழ்வார் எனப்பொருள் கூறலுமாம். இதற்குப் பகுதி மகிழ்கூர். (கOரு)

உயிர்க்கொலை புரித லுண்ணு முணவுமா றுட்டஞ் செய்த
லயிர்ப்பிலா நண்பர் மாட்டு மமைதாக் குய்யஞ் செய்தல்
பயிர்ப்புமிக் குறநல் லோரைப் பழித்தல்பொய்க் கரியு ரைத்தல்
செயிர்ப்பிலா லயத்தி டத்துஞ் சென்றுபட் டிமையி யற்றல்.

(ப - ரை.) உயிர்க்கொலை புரிதல் - உயிர்வதை செய்தலும், உண்ணும உணவு மாறுட்டம் செய்தல் - உண்ணுகின்ற உணவை மாறுபடுத்தலும், அயிர்ப்பு இலா நண்பர் மாட்டும் - (தம்மிடத்து) சந்தேகமில்லாத சிநேக ரிடத்திலும், அமைதர - நிரம்ப, குய்யம் செய்தல் - வஞ்சனை செய்தலும், பயிர்ப்பு மிக்குற - அருவருப்பு மிகும்படி, நல்லோரைப் பழித்தல் - நல் லோரை இகழ்தலும், பொய்க்கரி உரைத்தல் - பொய்ச் சாட்சி சொல்லுதலும, செயிர்ப்பு இல் - குற்றமில்லாத, ஆலயத்து இடத்தும் சென்று - ஆலயங்க ளினிடங்களிலும் போய், பட்டிமை இயற்றல் - களவு செய்தலும். எ - று.

(பொ - ரை.) உயிர்வதை செய்தலும், உண்ணுகின்ற உணவை மாறு படுத்தலும், (தம்மிடத்துச்) சந்தேகமில்லாத சிநேகரிடத்திலும் நிரம்ப வஞ் சனை செய்தலும், அருவருப்பு மிகும்படி நல்லோரை யிகழ்தலும், பொய்ச்சாட்சி சொல்லுதலும், குற்றமில்லாத ஆலயங்களினிடங்களிலும் போய்க்களவு செய் தலும். எ - று.

(வி - ரை.) உண்ணு முணவுமாறுட்டஞ் செய்தலாவது நஞ்சிடுதல் முதலியன. கொலை புரிதல், நஞ்சிடுதல், சிநேகரை வஞ்சித்தல், நல்லோரை யிகழ்தல், பொய்ச் சாக்ஷி சொல்லல், ஆலயத்திற் களவு செய்தல் என்பன, வரும்பாட்டில் "இவை முதற்பலவும்" மனிதர் பொருளினிமித்தமாகச்செய் கின்றனர் என இயையும். உணவு மாறுட்டஞ் செய்தல் என்பதற்கு ஒருவ னது சீவநத்தைக்கெடுத்தல் எனினுமாம்: மாறுட்டம் என்னுந் தொழிற் பெயரில் பகுதி மாறு. பெரியோரைப் பழித்தால், அவர் தம்மைப்பழித்த வரைத்தாமும் பழிக்காமல், இவர் எம்மைப்பழித்தமையால் நரகத்துக்காளா வரோ யெனத்தாம் வருந்துதலே யன்றித்தாமும் அவரையிகழ மாட்டாராத லால், "பயிர்ப்புமிக் குறப்பழித்தல்" என்றார். இது, "தம்மையிகழ்ந்தமை தாம் பொறுப்பதன்றிமற், றெம்மையிகழ்ந்த வினைப்பயத்தால், உம்மை, எரி வாய் நிரயத்து வீழ்வர்கொலென்று, பரிவதூஉஞ்சான்றோர் கடன்" என்ப தனுனும் இனிது விளங்கும். ஆலயத்திடத்தும் என்பதனை ஒற்றுமைப்பொ ருளதாகிய ஆறும்வேற்றுமைத்தொகை யென்றாவது இருபெயரொட்டுப் பண்புத்தொகையென்றாவது கொள்க, இதில் உம்மை யுயர்வு சிறப்பு.(கoச)

இவைமுதற் பலவு மாந்த ரியற்றிநாள் கழியா நிற்ப
ரவையெலாம் பொருணி மித்த மாகுமப் பொருளைப் பெற்றாற்
குவையுறப் புதைத்து வைத்துக் குதுகுதுப் படைந்து காத்து
நவையுறு பணப்பே யென்னு நாமமும் பெறுவர் மாதோ.

(ப - ரை.) இவைமுதல்பலவும் - இவைமுதலாகிய பலதீமைகளையும், மாந்தர் - மனிதர், இயற்றி - செய்து, நாள்கழியாநிற்பர் - ஆயுளைக்கழியா நிற்பர், அவைஎல்லாம் - அவையாவும், பொருள்நிமித்தம்ஆகும் - பொருளின் பொருட்டேயாகும், அப்பொருளைப்பெற்றால் - அப்பொருளை யடைந்தால்,

குவையுற - குவியலாக, புதைத்துவைத்து - (பூமியில்) புதைத்துவைத்து, குதுகுதுப்பு அடைந்து - மிகுமகிழ்ச்சியடைந்து, காத்து-காப்பாற்றி, நவை உறு - குற்றமிகுந்த, பணப்பேய்என்னும் - பணப்பேய் என்கிற, நாமமும் பெறுவர் - பெயரையும் பெறுவர். எ - று.

(பொ - ரை.) இவை முதலாகிய பல தீமைகளேயும் மனிதர் செய்து ஆயுளேக்கழியா நிற்பர்; அவையாவும் பொருளின் பொருட்டேயாகும். அப்பொருளே யடைந்தால் குவியலாகப் (பூமியிற்) புதைத்து வைத்து மிகுமகிழ்ச்சியடைந்து, காப்பாற்றி, குற்றமிகுந்த பணப்பேய் என்கிற பெயரையும் பெறுவர். எ - று. மாது, ஓ - அசைகள்.

(வி - ரை.) எல்லாத் துன்பங்களுக்கும் பொருள் காரணமாதலால், 'நவை உறு பணப்பேய் என்றார். "இன்னறரும் பொருளே யீட்டுதலுந்துன்பமே, பின்னதனேப் பேணுதலுந்துன்பமே" என்றார் பிறரும். கழியா நிற்பர்-நிகழ்காலத்தெரி நிலேப்பலர் பால்வினே முற்று. ஆநில்-நிகழ்கால விடைநிலே. உயிர்க்கொலே முதலிய செய்தலால், மறுமையில் நரகமடைதலேயன்றி இம்மையில் பணப்பேய் என்று இகழவும் படுவர் எனப்பொருள் படுதலால் நாமமும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழீஇயதனேடு இழிவு சிறப்புமாம். குது குதுப்பு - இரட்டைக்கிளவி. இதனேப் பிரித்தால் பொருள்படாது.

ஒருசிறு தருமமேனு முஞற்றிடா ரிரப்போர் வந்து
தருநிகர் கரத்தா யென்று சாற்றினுங் கொள்ளா ராகிக்
கருணைசற் றின்றி யெல்லே கடந்திடத் துரந்து மீள்வர்
மருவுபல் கிளேயு மோம்பார் வளம்படைத் தென்பெற் றூரால்.

(ப - ரை.) ஒரு சிறு தருமம் எனும் - ஒரு சிறிய புண்ணியத்தையாயினும், உஞற்றிடார் - செய்யார், இரப்போர் வந்து - யாசிப்போர் வந்து, தருநிகர் - கற்பக விருக்ஷத்தை நிகர்த்த, கரத்தாய் என்று - கையையுடையவனே யென்று, சாற்றினும் - (புகழ்ந்து) கூறினும், கொள்ளார் ஆகி - ஏற்றுக்கொள்ளாதவராகி, கருணை சற்று இன்றி - கிருபை சிறிதுமில்லாமல், எல்லே கடந்திட - (தமது) எல்லேயைக் கடக்கும்படி, துரந்து - துரத்தி, மீள்வர் - மீள்வார், மருவு - பொருந்திய, பல்கிளேயும் - பல உறவினரையும், ஓம்பார் - காப்பாற்றமாட்டார், (இத்தன்மையர்) வளம்படைத்து - செல்வம் படைத்து, என் பெற்றூர் - என்ன பேறுபெற்றூர். எ - று. ஆல் - அசை.

(பொ - ரை.) ஒரு சிறிய புண்ணியத்தையாயினும் செய்யார்; யாசிப்போர் வந்து கற்பக விருக்ஷத்தை நிகர்த்த கையையுடையவனே யென்று (புகழ்ந்து) கூறினும் ஏற்றுக்கொள்ளாதவராகி, கிருபை சிறிது மில்லாமல், (தமது) எல்லேயைக் கடக்கும்படி துரத்தி மீள்வார். பொருந்திய பல உறவினரையும் காப்பாற்ற மாட்டார். (இத்தன்மையர்) செல்வம் படைத்து என்ன பேறு பெற்றூர். எ - று.

(வி - ரை.) செல்வம் படைத்தவர் சிறு புண்ணியத்தையுஞ் செய்யா ராயின் அவர்க்கு அச்செல்வத்தால் ஒரு பயனுமில்லை யென்பது கருத்து "உண்ணான் ஒளி நிறான் ஓங்கு புகழ் செய்யான் - துன் அருங் கேளிர் துயர்களை யான் - கொன்னே - வழங்கான் பொருள் காத்திருப்பானேல் அ ஆ - இழந்தானென் றெண்ணப்படும்" என்பது நாலடியார். கரத்தார் கரம் என்னும் சினையடியாகப் பிறந்த வினையுருபேற்ற ஆண்பாற் படர்க்கைப் பெயர். தரு - வினையுவமை. சற்று - என்பதனீற்றில் இழிவு சிறப்பும்மை தொகுத்தல். உலோபர்களுடைய இழிவுதோன்ற, தாமிருக்கும் எல்லையில் தங்கச் செய்தால் மீண்டும் இரக்கவருவார் என்றஞ்சி எல்லையை விட்டுப் போகும்படித் துரத்தித் திரும்புவார் என்றார். வளம்பட வாழ்வதற்கேதுவாகிய செல்வத்தை வளம் என்றது காரியவாகு பெயர். கிளை - (மரக்கிளையைப் போலுதலால்)உவமையாகு பெயர். தொழிலாகு பெயருமாம். "ஏதிலாரார்த் தமர் பசிப்பர் பேதை - பெருஞ் செல்வமுற்றக்கடை" என்பது திருக்குறள்.

முறைதவிர் கொடுங்கோன் மன்னர் முனிவிற்கு நனியு மச்சங்
கறைசெழு களவு செய்வார் கரத்திற்கு மழற்கு மச்ச
மறைவறு தாய மாக்கள் வெளவுவ ரென்று மச்ச
மறைபொருள் பெற்றா ரல்ல ரச்சமே பெற்றார் போலும்.

(ப - ரை.) முறைதவிர் - (செங்கோல்) முறைமை நீங்கிய, கொடுங்கோல்மன்னர் - கொடுங்கோன்மையுள்ள அரசரது, முனிவிற்கு - கோபத்துக்கு, நனியும் அச்சம் - மிகவும் அச்சமே, கறைசெழு - குற்றம்பொருந்திய, களவு செய்வார் - களவு செய்வாரது, கரத்திற்கும் - கைக்கும், அழற்கும்-நெருப்புக்கும், அச்சம் - அச்சமே, மறைவு அறு - மறைவற்ற, தாயமாக்கள் - தாயத்தார், வெளவுவர் என்றும் - கவர்வாரென்றும், அச்சம் - அச்சமே, (ஆதலால் இவர்) அறை - சொல்லப்பட்ட, பொருள்பெற்றார் அல்லர் - செல்வத்தைப்பெற்றாரல்லர், அச்சமேபெற்றார் போலும் - அச்சத்தையேபெற்றார் போலும். எ - று.

(பொ - ரை.) (செங்கோல்) முறைமை நீங்கிய கொடுங்கோன்மையுள்ள அரசரது கோபத்துக்கு மிகவும் அச்சமே. குற்றம் பொருந்திய களவு செய்வாரது கைக்கும் நெருப்புக்கும் அச்சமே; மறைவற்ற தாயத்தார் கவர்வாரென்றும் அச்சமே; (ஆதலால் இவர்) சொல்லப்பட்ட செல்வத்தைப்பெற்றாரல்லர் அச்சத்தையேபெற்றார் போலும். எ - று.

(வி - ரை.) அரசர் கொள்ளும் முனிவு முதலிய எல்லாவற்றுக்கும் அஞ்சவேண்டுதலால் பொருள் பெற்றவர் பெற்றது அச்சத்தையேயன்றிப் பொருளையன்று போலும் என்பது கருத்து. கொடுங்கோல் - வளைவாகிய கோல். இது நீதிதப்பின ஆளுகைக்கு உவமையாகு பெயர்-தாயமாக்கள் - பங்காளிகள்; தாதை, மூதாதைகளின் வழியில் தோன்றினவர். இவர்கள் தம்மில் கலாம் விளைத்து ஒருவன் பொருளுக்கு மற்றொருவன் வழக்குத்தொடுத்து

நியாயத்தலத்துக்குப்போதல் முதலியவற்றைப் பிரத்தியக்ஷமாகக்காணலாம் நனி - உரிச்சொல். இதிலுள்ள உம்மை இழிவுசிறப்பு. உரிச்சொல்லுக்கும் பண்புச்சொல்லுக்கும் வேற்றுமையாதோவெனின், உரிச்சொல்லாலுணர்த் தப்படும் குணம் மனத்தினாலறியப்படும், பண்புப்பெயராலுணர்த்தப்படுங் குணம் புலன்களாலறியப்படும். நனி முதலியன செய்யுட்கே உரியவாதலால் உரிச்சொல் எனப்பட்டன. மக்கள் - என்பது மாக்கள் என நீட்டல் பெற்றது. (௧0எ

ஒல்லொ ழுக்கினைத் தீய வொழுக்க ரென்றுரைக்கச் செய்யும்
புல்லொ ழுக்கினைத் தூய புலத்தரென் றுரைக்கச் செய்யு
நல்லகற் புடைய மாதர் நலத்தை யஞ்சாமை செய்யும்
பல்வகைத் துயருஞ் செய்யும் பாழ்ம்பொருள் பற்று ளார்க்கே.

(ப - ரை.) பாழ்பொருள் - பாழாகிய பொருளானது, பற்று உள்ளார்க்கு - தன்னிடத்துப்பற்றுள்ளாரை, ஒல் ஒழுக்கினை - இயன்ற நல்லொழுக்கமுடையவரை, தீய ஒழுக்கர் என்று - தீயொழுக்கமுடையவரென்று, உரைக்கச்செய்யும்-சொல்லச்செய்யும், புல் ஒழுக்கினை-தீயொழுக்கமுடையாரை, தூயபுலத்தர் என்று - பரிசுத்தமாகிய அறிவையுடையாரென்று, உரைக்கச்செய்யும் - சொல்லச்செய்யும், நல்ல-சிறந்த, கற்பு உடையமாதர் - கற்புள்ளமாதரது, நலத்தை - கற்புக்கு, அஞ்சாமைசெய்யும் - அஞ்சாமையையுண்டாக்கும், பல்வகை-(இன்னும்) பலவகையாகிய, துயரும் செய்யும் - துன்பத்துக்கேதுவாகிய காரியங்களையுமுண்டாக்கும். எ - று.

(பொ - ரை.) பாழாகிய பொருளானது தன்னிடத்துப்பற்றுள்ளாரை, இயன்றநல்லொழுக்கமுடையவரைத் தீயொழுக்கமுடையவரென்றுசொல்லச் செய்யும்; தீயொழுக்கமுடையாரைப் பரிசுத்தமாகிய அறிவையுடையாரென்று சொல்லச்செய்யும்; சிறந்த கற்புள்ளமாதரது கற்புக்கு அஞ்சாமையையுண்டாக்கும்; இன்னும் பலவகையாகிய துன்பத்துக்கேதுவாகிய காரியங்களையுமுண்டாக்கும். எ - று.

(வி - ரை.) ஒருவர் பொருளுடையராயின் அப்பொருள் நல்லொழுக்கமுடையவரைத் தீயொழுக்கமுடையவரென்றும், தீயொழுக்கமுடையவரை நல்லொழுக்கமுடையவரென்றும் சொல்லச்செய்வதுமன்றி, கற்புடைமாதர்களது நலத்தைக்கண்டு அஞ்சாமை முதலிய பலதீமைகளையும் செய்விக்கும் என்பது கருத்து. இவ்வகைத் தீமைகளைச் செய்வதால் பாழ்ம்பொருளென்றார். நலம் - அழகெனினுமாம். ஒல்லொழுக்கினர் - வினைத்தொகை நிலைத்தொடர். ஒல்லுதல் - இயலுதல். இயன்ற நல்லொழுக்கமாவது. இல்லறம் பொருளளவிற்கேற்கவும் துறவறம்யாக்கை நிலைக்கேற்கவும் செய்தல். ஒழுக்கினர் - முதனிலை திரிந்த தொழிற்பெயரடியாகப்பிறந்த பலர்பாற்பெயர். தூய, நல்ல என்பன குறிப்புப்பெயரெச்சங்கள். புலத்தர் - புலம் என்னும் பண்படியாகப்பிறந்த பெயர்ப்பகுபதம். பாழ்ம்பொருள் - பண்புத்தொகை.

பாழாகிய பொருளென விரியும் 'நல்ல கற்புடையமாதர் நலத்தையஞ்சாமை செய்யும் என்றது அவரது கற்பையழிக்கத்துணிதல். (கoஅ)

கோடிபொன் னளிப்ப னின்றே கோடிரோர் மாத்தி ரைக்கு
ளூடிய கிளைக்கோர் வார்த்தை யுரைத்தடை குவனென் றூனுந்
தேடிய காலதூதர் சிமிழ்த்தல் விட் டொழிவ ரேகொல்
வாடிய மருங்கு னங்காய் மாண்பொருட் பயன்கண் டாயோ.

(ப - ரை.) கோடிபொன் அளிப்பன் - கோடி பொன்கொடுப்பேன், இன்றேகோடிர் - இப்பொழுதே கொள்ளீர், ஓர் மாத்திரைக்குள் - ஒரு நொடிக்குள்ளே, ஊடியகிளைக்கு - பிணங்கிய உறவினருக்கு, ஓர் வார்த்தை உரைத்து - ஒரு (சமாதான) வார்த்தைசொல்லி, அடைகுவன் என்றூலும் - வருவேனென்று சொன்னாலும், தேடிய - தேடிவந்த, காலதூதர் - யமதூதர், சிமிழ்த்தல்விட்டு - (தமது பாசத்தால்) கட்டுதலையொழிந்து,ஒழிவரே - நீங்குவரோ, வாடிய - துவண்ட, மருங்குல் - இடையையுடைய, நங்காய் - பெண்ணே, மாண் - பெருமையுள்ள, பொருள்பயன் - செல்வப்பயனை, கண்டாயோ - பார்த்தாயோ. எ - று.

(பொ - ரை.) கோடிபொன் கொடுப்பேன்; இப்பொழுதே கொள்ளீர்; ஒரு நொடிக்குள்ளே பிணங்கிய உறவினருக்கு ஒரு (சமாதான) வார்த்தை சொல்லி வருவேனென்று சொன்னாலும், தேடிவந்த யமதூதர் (தமது பாசத்தால்) கட்டுதலை யொழிந்து நீங்குவரோ? துவண்ட இடையையுடைய பெண்ணே! பெருமையுள்ள செல்வப்பயனைப் பார்த்தாயோ. எ - று.

(வி - ரை.) எவ்வளவு பெருஞ்செல்வராயினும் தமது ஆயுளளவுக்கு மேல் ஒரு மாத்திரைப்பொழுதைக்கோடி பொன் கொடுத்துங்கொள்ளவல்லரோ வல்லரல்லர் ஆதலால் பொருளாற் பயனென்னை யென்பது கருத்து. கோடி - வடசொல். இது அடுக்கிவந்தால் - கோடாகோடி, கோடானுகோடி எனவரும். இச்சொற்கு நூறுலக்ஷம் கொண்டதொகை யென்பது பொருள். கோடிர் - ஏவற்பன்மை வினைமுற்று. இதன் ஒருமை கோடி. கொள் - பகுதி. முதனீண்டது நீட்டல் விகாரம். த் - எழுத்துப்பேறு. தகரம் டகரமானதும் ளகரம்கெட்டதும் சந்தி. இர் - முன்னிலைப்பன்மை விகுதி. மாத்திரை-இமைக்கும் பொழுது எனினுமாம். நங்கை - பெண்பாற்பெயர். குணபூர்த்தியுள்ளவள் என்பது இதற்குப்பொருள். இதற்கு ஆண்பால் - நம்பி. (கoகூ)

பொருவறு பந்த மெல்லாம் புணர்த்திடுந் தெய்வ சிந்தை
யொருவமே லிட்டு நிற்கு முறக்கமு மிறக்கச் செய்யுங்
கருவினுட்புகுத்துமின்னகசிகண்டதனாலன்றோ
விருநிலத்திடைவெறுக்கையென்மனார்புலமைசான்றோர்.

(ப - ரை.) பொருவு அறு - ஒப்பற்ற, பந்தம் எல்லாம் - தளைமுழுதும், புணர்த்திடும் - பொருத்தியிடும், தெய்வசிந்தை ஒருவ - தெய்வசிந்தனை நீங்

கும்படி, மேலிட்டு நிற்கும் - மேற்பட்டு நிற்கும், உறக்கமும் - நித்திரையும், இறக்கச்செய்யும் - நீங்கச்செய்யும், கருவின் உள்புகுத்தும் - தாயின் கர்ப்பத்தினுள்ளும் புகச்செய்யும், இன்னகரிசு - இத்தன்மையாகிய குற்றங்கள், கண்டதனால் அன்றே - (இந்தப்பொருளிடத்துக்) காணப்பட்டதனாலல்லவா, புலமை சான்றோர் - அறிவு நிரம்பின பெரியோர், இருநிலத்திடை - பெரிய நிலவுலகத்தில், வெறுக்கை என்மனார் - (இதனை) வெறுக்கையென்பர். எ-று.

(பொ - ரை.) ஒப்பற்ற தனைமுழுதும் பொருத்திவிடும். தெய்வசிந்தனை நீங்கும்படி மேற்பட்டு நிற்கும், நித்திரையும் நீங்கச்செய்யும்; தாயின் கர்ப்பத்தினுள்ளும் புகச்செய்யும்: இத்தன்மையாகிய குற்றங்கள் (இந்தப் பொருளினிடத்துக்) காணப்பட்டதனாலல்லவா அறிவு நிரம்பின பெரியோர் பெரிய நிலவுலகத்தில் (இதனை) வெறுக்கை யென்பர். எ - று.

(வி - ரை.) கருவினுட்புகுத்தும் என்றது பிறவியிற்செலுத்தும் என்றபடி. வெறுக்கை - செல்வம். (வெறுத்தற்குரியது.) பிறவித்தளை பூட்டி தெய்வசிந்தையை யொழித்து எல்லா அனர்த்தங்களையுமுண்டாக்குதலால் செல்வத்தை வெறுக்கையென்று பெயரிட்டு வழங்குவர் பெரியோர் என்பது கருத்து. பொருளுள்ளவனே இவ்வுலகில் எல்லாப்போகங்களையும் அடைய முயல்வான், முயலவே அது காரணமாக பந்தங்களும், அதுகாரணமாக பலவகைத்துன்பங்களும் உண்டாகும். ஆதலால் இத்தன்மையான பந்தத்தை ஒழிக்கவேண்டும் என்றற்கு, "யாதனின் யாதனினீங்கியானோதல் - லதனின தனினிலன்,, என்றார் பெருநாவலர். பொருளை மேன்மேலுந்தேடமுயலுதல், காத்தல், முதலியவற்றால் உறக்கமுமில்லாதவராவார் என்றற்கு, "பெண்டிரால் சுகங்கடெய்ப்பான் பெரியதோரிடும்பைபூண்டு,உண்டிராக்கிடக்கும்போது முடலுக்கேகரைந்து நைவீர்" என்றார் பெரியாரும். கடியத்தக்கது (நீக்கத் தக்கது) என்னுங்கருத்தையுட்கொண்டு, கலியாணத்தைக்கடி என்றாற்போல வெறுக்கத்தக்கது என்னும் பொருளையுட்கொண்டு, செல்வத்தை, "வெறுக்கை யென்மனார் புலமை சான்றோர்" என்றார். தெய்வசிந்தை வடமொழிப் புணர்ச்சியாதலால் வல்லினமியல்பாயிற்று. பந்தம் - வடமொழி. கட்டு என்பதுபொருள். கரு - கருப்பை. உறக்கம் சிறிது முண்டாகாதென்றற்கு, "உறக்கமுமிறக்கச்செய்யும்" என்றார். (கக0)

சிறியரே மதிக்குமிந்தச்செல்வம்வந்துற்றஞான்றே
வறியபுன்செருக்குமூடி வாயுள்ளார்மூகராவர்
பறியணிசெவியுளாரும்பயிறருசெவிடராவர்
குறிபெறுகண்ணுளாருங்குருடராய்முடிவரன்றே.

(ப - ரை.) சிறியரேமதிக்கும் - கீழ்மக்களே மதித்தற்குரிய, இந்தச செல்வம் - இந்தப்பாக்கியம், வந்து உற்றகாலை-வந்து பொருந்தினகாலத்தில், வறிய - பயனற்ற, புல் - அற்பமாகிய, செருக்குமூடி - செருக்கினால் மூடப்

பட்டு, வாய் உளார் - வாயுள்ளவர்கள், மூகர் ஆவர் - மூங்கையராவார், பறி அணி - பொன்னணியணிந்த, செவி உளாரும் - காதுள்ளவரும், பயில்தரு-மிகுந்த, செவிடர் ஆவர் - செவிடர்களாவார், குறிபெறு - குறிக்கும் பொருளை யடைதற்குரிய, கண் உளாரும் - கண்ணுள்ளவரும், குருடர் ஆய் முடிவர் - குருடர்களாய் முடிவார். எ - று.

(பொ - ரை.) கீழ்மக்களே மதித்தற்குரிய இந்தப்பாக்கியம் வந்து பொருந்தினகாலத்தில்,பயனற்ற அற்பமாகிய செருக்கினால் மூடப்பட்டு வாயுள்ளவர்கள் மூங்கையராவார்; பொன்னணியணிந்த காதுள்ளவரும் மிகுந்த செவிடர்களாவார். குறிக்கும் பொருளையடைதற்குரிய கண்ணுள்ளவரும் குருடர்களாய் முடிவார். எ - று.

(வி - ரை.) சிறியரே மதிக்கும் என்றமையால் பெரியர் மதியார் என்பது தானேயமையும். செல்வம் பெற்றார் ஊமையரும் செவிடரும் குருடருமாவார் என்பது கருத்து. செல்வச்செருக்கினால் வாய்திறந்து பேசாமல் தலையையும் கையையும் அசைத்து ஒருவாறு உள்ளக்குறிப்பை வெளிப்படுத்துவர் என்பார், "செருக்குமூடி வாயுளார் மூகராவர்" என்றும், பிறர் சொல்வதை உற்றுக்கேளாமல் வேறு கருத்துக்கொண்டிருப்பர் என்பார், "பறியணிசெவியுளாரும் பயிறரு செவிடராவர்"என்றும், இன்னார் இனையர் எனப்பிறரை உற்றுநோக்கார் என்பார், "குறிபெறு கண்ணுளாருங் குருடராய் முடிவர்" என்றும் கூறினார். சிறியரே என்பதில் ஏகாரம் பிரிநிலை. ஒன்றே என்பதில் ஏகாரம் தேற்றம்.பறி - பொன், இது குழூஉக்குறி, இது தன்னாலாகிய ஆபரணத்தையுணர்த்தலால் காரணவாகுபெயர். பொன்னணியணிந்தும் பயனில்லையென்பார், "பறியணிசெவியுளாரும்"என்றார். அன்று ஏ அசைகள்.(கககக)

பல்கதிர்விரித்துத்தோன்றிப்பாடுசெய்கதிரேபோல
மல்லனீருலகிற்றோன்றிமறைந்திடுநும்மைவிட்டுச்
செல்வமென்றுறுவதற்குஞ்செல்வமென்றுரைக்கும்பேர்நன்
றல்லலைவிளைப்பதாகாதரும்பெறற்செல்வம்பாவாய்.

(ப - ரை.) பல்கதிர் - பலகிரணங்களை, விரித்து தோன்றி - பரப்பி உதயஞ்செய்து, பாடுசெய் - அஸ்தமித்தலைச் செய்கிற, கதிரே போல் - சூரியனைப்போலவே, மல்லல் நீர் - வளமாகிய கடல்சூழ்ந்த, உலகில் - உலகத்தில், தோன்றிமறைந்திடும் - பிறந்து இறக்கின்ற, நும்மைவிட்டு - உம்மைவிட்டு, செல்வம் என்று உறுவதற்கு - போவோமென்று பொருந்துவதற்கு, செல்வம் என்று உரைக்கும்பேர் - செல்வமென்று சொல்லுகிறபேரானது, நன்று - அழகிது, அல்லலை விளைப்பது - துன்பத்தையுண்டாக்குவது, அரும் பெறல் - பெறவொண்ணாத, செல்வம் - பாக்கியமானது, ஆகாது - பொல்லாதது. எ - று.

(பொ-ரை.) பலகிரணங்களைப் பரப்பி உதயஞ்செய்து அஸ்தமித்தலைச் செய்கிற சூரியனைப் போலவே வளமாகிய கடல் சூழ்ந்த உலகத்தில் பிறந்து

இறக்கின்ற உம்மைவிட்டுப்போவோமென்று பொருந்துவதற்குச் செல்வமென்று சொல்லுகிறபேரானது அழகிது; துன்பத்தையுண்டாக்குவது; பெறவொண்ணாத பாக்கியமானது பொல்லாது எ - று.

(வி - ரை.) எல்லாவளங்களுக்கும் கடல் காரணமாதலால் மல்லனீர் என்பதற்கு கடல் எனப்பொருள் கூறப்பட்டது. செல்வம் - செல்லுவோம். உயிர்களைநோக்கி, தோன்றிமறையும் உம்மைவிட்டு யாம் செல்லுவோம் என்கையால் பாக்கியத்துக்குச் செல்வம் என்னும் பெயருண்டாயிற்றென்பது கருத்து. பெறலருஞ்செல்வம் எனற்பாலது அரும்பெறற் செல்வம் எனவந்தது. இது பெறலரும் யாக்கை எனற்பாலது அரும்பெறல் யாக்கை என்றாற்போல்வது. "பல்கதிர் விரித்துத்தோன்றிப்பாடுசெய் கதிரேபோல" என்றது எடுத்துக்காட்டுவமை. சூரியன் உதிப்பதும் அஸ்தமிப்பதுமாகவுழல்வதுபோல உயிர்களும் பிறப்பதும் இறப்பதுமாகவுழல்வதனால், உவமான வுவமேயங்கள் பொருந்துமாறறிக. செல்வம் இரண்டில் முன்னது எதிர்காலத்தன்மைப்பன்மைவினைமுற்று, பின்னது காரணவிடு குறிப்பெயர். அரும்பெறற்செல்வத்தை வரும்பாட்டில் எடுத்துக்கூறுகின்றனர். (கக௨)

மதுமடையுடைத்துப்பாயும்வனத்துழாய்க்கண்ணிவேய்ந்து
விதுமுகப்பதுமைசெங்கைமெல்லெனவருடச்சேந்து
கதுமெனக்கருதுமன்பர்கருத்தினுட்புகுந்துவாழு
முதுமறைப்பெருமான்பாதம்பெறுதலேமூரிச்செல்வம்.

(ப - ரை.) மது - தேனானது, மடைஉடைத்து - மடையையுடைத்து, பாயும் - பாய்கின்ற, வனம் - அழகாகிய, துழாய்க்கண்ணி வேய்ந்து - திருத்துழாய் மாலையையணிந்து, விது முகம் - பூர்ணசந்திரன் போன்ற முகத்தையுடைய, பதுமை - திருமகள், செங்கை - தனது சிவந்தகையினால், மெல்லெனவருட - மெத்தென்றுவருடுதலால், சேந்து - சிவந்து, கதுமென - விரைவாக, கருதும் அன்பர் - (தன்னை) நினைக்கின்ற அன்பரது, கருத்தினில் புகுந்து - மனத்தினுள்ளே புகுந்து, வாழும் - நித்தியவாசம் பண்ணுகிற, முதுமறை - பழமையாகிய வேதப்பிரதி பாத்தியனாகிய, பெருமான் - எம்பெருமானது, பாதம் - திருவடியை, பெறுதலே - அடைவதே, மூரிச்செல்வம் - பெருஞ்செல்வமாம். எ - று.

(பொ ரை.) தேனானது மடையையுடைத்துப்பாய்கின்ற அழகாகிய திருத்துழாய் மாலையையணிந்து பூர்ணசந்திரன் போன்ற முகத்தையுடைய திருமகள் தனது சிவந்தகையினால் மெத்தென்று வருடலால், சிவந்து விரைவாகத்தன்னை நினைக்கின்ற அன்பரது மனத்தினுள்ளே புகுந்து நித்தியவாசம் பண்ணுகின்ற பழமையாகிய வேதப்பிரதிபாத்தியனாகிய எம்பெருமானது திருவடியையடைவதே பெருஞ்செல்வமாகும். எ - று.

(வி - ரை.) வேதம் இறைவன்போல அநாதியாதலால் "முதுமறை" என்றார். துளவமாலையையணிந்து தன்னை நினைக்கின்ற அன்பரது மனத்தில் விரைந்து சென்றுவாழ்பவனாகிய வேதமுதல்வனது திருவடியைப்பெறுதலே பெருஞ்செல்வம் என்பது கருத்து. விதுமுகம் - உவமத்தொகை, பதுமை - இடமடியாகப்பிறந்த பெண்பாற் படர்க்கைப்பெயர். பத்மம் தாமரை, இது வடமொழி, சேர்ந்து - பண்படியாகப்பிறந்த இறந்த காலத்தெரி நிலைவினையெச்சம்,இதற்குச்செம்மையின் விகாரமாகிய சே பகுதி. கதுமென-விரைவுக்குறிப்புணர்த்தும் இடைச்சொல், கருத்து என்னும் முதனிலை தல்விகுதி புணர்ந்து கெட கருத்து எனத்திரிந்து மனத்தையுணர்த்தலால் முதனிலை திரிந்ததொழிலாகுபெயர். மூரி - பண்புப்பெயர். பெருமான் - ஆண்பாற் படர்க்கைப்பெயர். விகுதிமான். "மதுமடையுடைத்துப்பாயும்" என்றதனால், துழாயின் வளமைவிளங்குகின்றது. "கணிகொண்டபைந்துழாய்க்காடலைத் தோடு தேங்கலுழிபாய்ந்தளறுசெய்ய" என்றார் பிறரும். "விதுமுகப்பதுமை செங்கை மெல்லெனவருடச்சேந்து"என்றதனால் திருவடியின்மென்மை விளங்குகின்றது. "கதுமெனப்புகுந்துவாழும்" என்றதனால் இறைவனது அன்பின் பெருமை விளங்குகின்றது. (கசகூ)

கைப்பொருள்பெற்றஞான்றேகடவுளாலயத்திற்கீந்து
மெய்ப்படுபுராணநூல்கள்விருப்பொடுகேட்டுவந்தும்
வைப்பெனவிரப்போர்க்கீந்தும்வருபவருளரேற்கூற்ற
மொய்ப்புயத்தண்டந்தப்பிமுன்னவனின்பத்தாழ்வார்.

(ப - ரை.) கைப்பொருள் பெற்ற ஞான்றே - கையிற்பொருள் படைத்தபொழுதே, கடவுள் ஆலயத்துக்கு ஈந்தும்-தேவாலயத்துக்குக்கொடுத்தும், மெய்படு - உண்மை பொருந்திய, புராண நூல்கள் - புராணசாத்திரங்களை, விருப்பொடு கேட்டு - அன்போடு கேட்டு, உவந்தும் - மகிழ்ந்தும், வைப்பு என - நிக்ஷேபமென்று, இரப்போர்க்கு ஈந்தும் - யாசிப்பவர்க்குக்கொடுத்தும், வருபவர் உளரேல் - வருவோர் உளராயின், (அவர்) கூற்றம் - யமனது, மொய்-வலிமையாகிய, புயம் - தோளில் தாங்கிய, தண்டம் தப்பி - கதைக்குத்தப்பி, முன்னவன் - முதல்வனது, இன்பத்து - ஆனந்த சாகரத்தில், ஆழ்வார் - அமிழ்வார். எ - று.

(பொ - ரை.) கையிற்பொருள் படைத்தபொழுதே. தேவாலயத்துக்குக்கொடுத்தும், உண்மை பொருந்தியபுராண சாத்திரங்களை அன்போடு கேட்டு மகிழ்ந்தும், நிக்ஷேபமென்று யாசிப்பவர்க்குக் கொடுத்தும் வருவோர் உளராயின், (அவர்) யமனது வலிமையாகிய தோளில் தாங்கிய கதைக்குத் தப்பி முதல்வனது ஆனந்த சாகரத்தில் அமிழ்வார். எ - று.

(வி - ரை.) விருப்பொடு கேட்டுவந்தும் என்றது படித்துப்பொருள் சொல்வோர்க்கு அன்போடு பொருள் கொடுத்துக்கேட்டு மகிழ்ந்தும் என்றபடி. "அற்றாரழிபசி தீர்த்தலஃதொருவன் - பெற்றான் பொருள் வைப்புழி"

எனமேலோர் கூறுதலால் "வைப்பென விரந்தோர்க்கீந்தும்" என்றார். ஒருவன் தன்கையில் பொருளுள்ளபோதே அதனைத்தேவாலயமுதலியவற்றிற்கு பியோகித்து வருவனாயின் அவன் யமதண்டனைக்குத்தப்பலாமென்பது கருத்து. கடவுள் - கடத்தல் என்னுந்தொழிற்பெயர் தத்துவங்களெல்லாவற்றையுங்கடந்த இறைவனையுணர்த்தலால் தொழிலாகுபெயர். விக்குள் என்பதிற்போல இதில் உள்தொழிற்பெயர் விகுதி. புராணம் - பழமை, இது பழமையாகிய புண்ணியகதைகளையுணர்த்தலால் பண்பாகுபெயர். நூல்கள் - உவமையாகுபெயர். புராணநூல்கள் புராணத்தையுணர்த்தும் நூல்கள் என இரண்டாம் வேற்றுமைத்தொகையாகக் கொள்ளுதலேயன்றி, புராணமும் நூல்களும் எனப்பொருள் படலால் உம்மைத்தொகையாகவுங் கொள்ளலாம், அவ்வாறு கொள்ளும்போது நூல்கள் என்பதற்கு அறங்கூறும் நூல்கள் என்றுரைத்துக்கொள்க. கேட்டு உவந்தும் எனப்பிரித்தலேயன்றி, கேட்டு வந்தும் எனப்பிரித்து, கேட்டலை இடையறுமற்கொண்டு என்றுரைப்பினுமாம். வைப்பு-வைத்தல், இது சேர்த்துவைக்கும் திரவியம் எனப்பொருள்படுதலால் தொழிலாகுபெயர். தண்டம் தப்பி என்பது தண்டத்தைத்தப்பி, தண்டத்துக்குத்தப்பி, தண்டத்தினின்றும் தப்பி என மூன்றுவகையாய் விரிக்கலாம். ஆதிமூலப்பொருளாதலால், முன்னவன் என்றார். "ஆழ்வார்" என்றதனுல் இன்பம் கடலாக்கப்பட்டது. இறைவனது பேரின்பத்திலீடுபட்டவர் வேறொன்றையும் நாடாராதலால் "ஆழ்வார்" என்றார்.

இப்பிறப்பிற் கொடுப்பது மறுபிறப்பில் வாங்கிக்கொள்ள ஏதுவாதலால், "வைப்பென" என்றார். "உரவுநீர்க்கருங்கடலுடுத்தமாநிலத் - தருளுடனிம்மையிலளித்தவான் பொருள் - மருவியமறுமையில் வழங்குபான்மையால்-இரவலர் தமரினு மினியராவரே" என்றார் பிறரும். "கைத்துண்டாம் போழ்தேகரவாதறஞ் செய்ம்மின்" என மேலோர் கூறியபடியே "கைப்பொருள் பெற்றநான்றே கடவுளாலயத்திற்கீந்தும்———உளரேல்" என்றார். (கககூ)

குடருநெய்த் தோரு மென்புங் கொழுவும்வார் வழும்புந் தோலுந்
தொடருநா டிகளும் வைத்துச் சுமத்திய தடியுங் கொண்டு
படர்தரச் செய்த பவ்வீப் பாண்டமா மடந்தை நல்லா
ரிடருடை வடிவ மந்தோ விதற்குமுண் மயங்கா நிற்பர்.

(ப - ரை.) மடந்தைநல்லார் - மாதரது, இடருடைவடிவம் - பலதுன்பங்களையுடைய வுருவமானது, குடரும் - குடலும், நெய்த்தோரும் - உதிரமும், என்பும் - எலும்பும், கொழுவும் - கொழுப்பும், வார்வழும்பும் - ஒழுகாநின்ற நிணமும், தோலும் - சர்மமும், தொடரும் நாடிகளும் - தொடர்ந்த நரம்புகளும், வைத்து - அமைத்து, சுமத்திய-சுமத்தப்பட்ட, தடியுங்கொண்டு - மாமிசத்தையுங்கொண்டு, படர்தரச்செய்த - நடக்கும்படிசெய்த, பவ்வீப்பாண்டம்ஆம் - மலபாண்டமாகும், இதற்கும் - இப்படிப்பட்ட மலபாண்

டத்தின்பொருட்டும், உள்மயங்காநிற்பர் - மனமயங்காநிற்பர் (இவ்வுலகத்தார்), அந்தோ - இதென்னபாவம். எ - று.

(பொ - ரை.) மாதரது பலதுன்பங்களையுடைய வுருவமானது, குடலும், உதிரமும், எலும்பும், கொழுப்பும், ஒழுகாநின்ற நிணமும், சர்மமும், தொடர்ந்த நரம்புகளும், அமைத்துச் சுமத்தப்பட்ட மாமிசத்தையுங்கொண்டு, நடக்கும்படிசெய்த மலபாண்டமாகும். இப்படிப்பட்ட ~~மலபாண்டத்~~ தின்பொருட்டும் மனமயங்காநிற்பர் (இவ்வுலகத்தார்)இதென்னபாவம். எ-று.

(வி - ரை.) குடரும் என்பது முதல்தடியும் என்னுமளவும் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். கொண்டு மூன்றுவதன்சொல்லுருபு. பவ்வீ - பகரத்தையூர்ந்த ஈகாரம். அதாவது பீ-என்பது, இது இடக்கரடக்கல். (பீ-மலம்) பாண்டம் - பாத்திரம், செய்தபாண்டம் என இயையும். படர்தரச்செய்த பவ்வீப்பாண்டம்-நடக்கின்ற மலபாத்திரம் என்றபடி. இது இல்பொருளுவமை. மடந்தைநல்லார் - மடப்பத்தையுடைய மாதர். இடன்உடை என்றும் பாடம். இதற்கு குடர்முதலானவற்றுக்கு இடமாயுள்ள எனப்பொருளுரைத்துக்கொள்க. இதற்கும் என்ற உம்மை இழிவு சிறப்பு. அந்தோ - இரக்கக் குறிப்பின்கண் வந்த இடைச்சொல். மயங்காநிற்பர் என்பதில் ஆநில் இடைநிலை. (ககரு)

கோதுற வமைந்த பவ்வீக் குழம்புபஃ றுவாரந் தோறு
மோதுற வழியுங் கும்ப மூத்திர பாத்தி ரங்கை
யாதுபல் கிருமிக் குப்பை யடர்ந்ததீ நாற்றக் கூடும்
மாதர்மெய் வடிவங் கண்டு மாழ்குவார் மாழ்கி நிற்க.

(ப - ரை.) கோதுஉறஅமைந்த - குற்றங்கள் மிகுதியாக அமைக்கப்பட்ட, பவ்வீக்குழம்பு பல்துவாரம்தோறும் மோதுறவழியும் - மலக்குழம்பானது பலதுளைகள்தோறும் மோதவழிகின்ற, கும்பம் - குடமும், மூத்திர பாத்திரம் - மூத்திரபாத்திரமும், கையாதுபல்கிருமிக்குப்பை அடர்ந்ததீநாற்றக்கூடு - வெறுக்காமல் பலவாகிய புழுக்கூட்டங்கள் நெருங்கிய துர்க்கந்தத்தையுடைய கூடும் ஆகிய, இம்மாதர்மெய்வடிவம்கண்டு - இம்மாதரது சரீர சௌந்தரியத்தைநோக்கி, மாழ்குவார் மாழ்கிநிற்க - மயங்குவோர் மயங்கிநிற்கக்கடவர். எ - று.

(பொ - ரை.) குற்றங்கள் மிகுதியாக அமைக்கப்பட்ட மலக்குழம்பானது பலதுளைகள் தோறும் மோதவழிகின்ற குடமும், மூத்திரபாத்திரமும், வெறுக்காமல் பலவாகிய புழுக்கூட்டங்கள் நெருங்கிய துர்க்கந்தத்தையுடைய கூடும் ஆகிய இம்மாதரது சரீரசௌந்தரியத்தை நோக்கி மயங்குவோர் மயங்கிநிற்கக் கடவர். எ - று.

(வி - ரை.) இந்தச்சரீரம் வாதபித்த சிலேஷ்மங்களின் ஏற்றத்தாழ்வுகளாலுண்டாகிற பிணிகளாகிய குற்றங்களுக்கு இடமாயும் மலக்குழம்பு பல

துளைகளிலும் வழிந்தோடுவதாயும் உள்ளதாதலால் 'கோதுற அமைத்த பல்வீக்குழம்பு பல்துவாரம்தோறும் மோதுறவழியும் கும்பம்' என்றும், மூத்திரம் நிறைந்திருத்தற்கு ஓர்பாத்திரம்போன்றிருத்தலால் 'மூத்திர பாத்திரம்' என்றும், புழுக்கூட்டங்கள் நெளிந்து வாழ்தற்கிடமாயிருத்தலாலும் துர்க்கந்தமுடைத்தாயிருத்தலாலும் 'கையாதுபல்கிருமிக்குப்பை அடர்ந்த நாற்றக்கூடு' என்றும் கூறினர். "குடருங்கொழுவுங்குருதியுமென்பும் - தொடரு நரம்பொடுதோலும்-இடையிடையே - வைத்ததடியும் வழும்புமாம் மற்றிவற்றுள் - எத்திறத்தாள் ஈர்ங்கோதையாள்"—"என்னைகண்டுநீ மாதரார் வடிவமீதிச்சைவைத்துழல்கின்றாய் - பொன்னையுந்துகிலையும்பிரித்திடின் வெறும் புழுமலக்கூடலலாற் - பின்னையுண்டுகொல்" என்றிவ்வாறு பல இடங்களினுங் கூறப்படுதல்காண்க. கணத்தில் தோன்றி யழிவதாகிய பொய்யுடம்பை மெய்யென்றது மங்கலவழக்கு. வடிவம் என்றது இவ்விடத்து அழகையுணர்த்திற்று. கையாது என்ற எதிர்மறைவினையெச்சம் விரும்பி என்னும் பொருள் தந்து நின்றது.　　　　(கககூ)

முன்னமெத் தனைபேர் மைந்தர் முறைமைபா ராட்டி னாரோ
வின்னமெத் தனைபேர் மைந்தர் முறைகொள விருக்கின் றாரோ
வன்னமைந் தனைத்தம் மைந்த ரெனலறி யாமை யாகு
மென்னடைக் கரிய வாட்கண் விரைக்கருந் தாழ்கு ழாலே.

(ப - ரை.) முன்னம் - முற்சனனங்களில், மைந்தர் எத்தனைபேர் - புதல்வர் எத்தனைபேர், முறைமைபாராட்டினாரோ - முறைகொண்டாடினார்களோ, இன்னம் - இனிமேலும், மைந்தர் எத்தனைபேர் - புதல்வர் எத்தனைபேர், முறைகொள இருக்கின்றாரோ-முறைகொண்டாட இருக்கிறார்களோ, அன்ன - அப்படிப்பட்ட, மைந்தனை - புதல்வனை, தம்மைந்தர்எனல்-தமது புதல்வரென்று சொல்லுதல், அறியாமை ஆகும் - அவிவேகமாகும், மெல் நடை - மிருதுவாகிய நடையையும், கரிய - கருமையாகிய, வாள்-வாள்போன்ற, கண் - கண்களையும், விரை - வாசனைபொருந்திய, கரு - கரிய, தாழ் - நீண்ட, குழாலே - கூந்தலையுமுடையவளே. எ - று.

(பொ - ரை.) முற்சனனங்களில் புதல்வர்எத்தனைபேர் முறைகொண்டாடினார்களோ, இனிமேலும் புதல்வர் எத்தனைபேர் முறைகொண்டாட இருக்கிறார்களோ, அப்படிப்பட்ட புதல்வனைத் தமது புதல்வரென்று சொல்லுதல் அவிவேகமாகும். மிருதுவாகிய நடையையும், கருமையாகிய வாள்போன்ற கண்களையும், வாசனைபொருந்திய கரிய நீண்டகூந்தலையுமுடையவளே. எ - று.

(வி - ரை.) "அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ - வப்பனெத்தனை யெத்தனை யப்பனோ - பின்னை யெத்தனையெத்தனை பெண்டிரோ - பிள்ளையெத்தனை யெத்தனை பிள்ளையோ - முன்னமெத்தனையெத்தனை சன்ம

மோ - மூடனுயடியேனுமறிந்திலேன், இன்னமெத்தனை யெத்தனை சென்மமோ - என்செய்வேன் கச்சியேகம்பநாதனே.'' என்றூர் பிறரும். முன் - என்னும் காலத்தை யுணர்த்துமிடைச்சொல் முன்னம்,முன்னர்,முன்பு, முன்னே, எனவும்வரும். அறியாமை - எதிர்மறைத்தொழிற்பெயர். வாள் - கண்ணுக்கு ஒளியுருவங்களால் உவமை. குழால் - வினைத்தொகைப்புறத்துப் பிறந்தஅன்மொழித்தொகைக் காரணப்பெயர். ஈற்றயல் அகரம் ஆகாரமாய்த் திரிந்து விளியடைந்தது. (ககஎ)

மதலையைப் பெறுநாட் டுன்பம் வளர்த்திடு நாளுந் துன்பம்
விதலைநோ யடையிற் றுன்பம் வியன்பரு வத்துந் துன்பங்
கதமுறு காலர் வந்து கைப்பற்றிற் கணக்கி றுன்ப
மிதமுற லெந்நாள் சேயா லெற்றைக்குந் துன்ப மானல்.

(ப - ரை) மதலையை - குழந்தையை,பெறும்நாள் - பெறுங்காலத்தில், துன்பம் - துக்கமே, வளர்த்திடும்நாளும் - வளர்க்கிறநாளிலும், துன்பம்-துக்கமே, விதலைநோய் அடையின் - (கண்டோரும்) நடுங்குதற்குரிய நோய் வந்தடைந்தால், துன்பம் - துக்கமே, வியன் - பெருமையாகிய, பருவத்தும்- பருவகாலத்தும், துன்பம் - துக்கமே, கதம்உறு - கோபமிகுந்த,காலர்வந்து- யமதூதர்வந்து, கைப்பற்றின் - கவர்ந்தால், கணக்குஇல் - அளவற்ற, துன்பம் - துக்கமே, எற்றைக்கும் - எந்நாளிலும், துன்பம் ஆனல் - துக்கமேயானல், சேயால் - புதல்வனல், இதம்உறல் - சுகமடைதல், எந்நாள்-எக்காலம் எ - று.

(பொ - ரை.) குழந்தையைப் பெறுங்காலத்தில் துக்கமே; வளர்க்கிற நாளிலும் துக்கமே; (கண்டோரும்) நடுங்குதற்குரிய நோய்வந்தடைந்தால் துக்கமே; பெருமையாகிய பருவகாலத்தும் துக்கமே; கோபமிகுந்த யமதூதர் வந்து கவர்ந்தால் அளவற்ற துக்கமே; எந்நாளிலும் துக்கமேயானல் புதல்வனல் சுகமடைதல் எக்காலம். எ - று.

(வி - ரை.) காலர் அருளில்லாதவராதலால் ''கதமுறுகாலர்'' என்றூர். புதல்வனைப் பெறுதல் முதலிய எல்லாக்காலங்களிலும் அவர்களால் துன்பமே யுண்டாயின் அவர்களால் சுகமடைவது எக்காலம் என்பது கருத்து. 'மதலையைப்பெறுநாட்டுன்பம்' என்பதனை ''வந்திபரிவாய் மகவைப்பெறுந்துயரம் - நொந்தறிகுவாளோ நுவல்'' என்பதனுலுமறிக. பின் மதலையைப் பசியறிந்து ஊட்டி வளர்த்தலிலும் நோய்வந்தபோது மருந்துமுதலிய கொடுத்தலிலும் பாலியத்தில் தீயவழியில் செல்லவிடாது பாதுகாத்தலிலும் துன்பமுறுவதனோடு மரணகாலத்தும் கணக்கில்லாத துன்பம் அனுபவித்தலால் 'எற்றைக்குந்துன்பம்' என்றூர். விதலை - பண்புப்பெயர். வியன் - உரிச்சொல். என்று என்னும் மென்றொடர்க்குற்றியலுகரமாகிய காலப்பெயர் வன்றொடராய் ஐகாரச் சாரியை பெற்றது. (ககஅ)

இளமையி லியற்றுந் தண்ட மேற்றுமெவ் வெறுப்புய்த் தாலு
முளநடு நடுங்கிப் பின்னி யுற்றுறப் பற்றி நிற்பார்
தளர்வறு பருவஞ் சார்ந்தாற் றந்தைதாய் நடுங்கச் சீறி
யளமறு தம்ம னஞ்செலவ் வாறே யொழுகி நிற்பார்.

(ப - ரை.) இளமையில் - இளமைப்பருவத்தில், இயற்றும் - செய்கிற, தண்டம் ஏற்றும் - தண்டனையை யேற்றுக்கொண்டும், எவ்வெறுப்பு உய்த்தாலும் - எந்தவெறுத்தற்குரிய காரியத்திற் செலுத்தினாலும், உளம்நடு நடுங்கி - மனம் நடுநடுங்கி, பின்னி உற்று - பின்னிப்பொருந்தி, உறபற்றிநிற்பார் - மிகுதியும் பற்றிநிற்பார், தளர்வு அறு - தளர்வற்ற, பருவம் சார்ந்தால் - (காளைப்) பருவத்தையடைந்தால், தந்தைதாய்நடுங்க - தந்தைதாயர் நடுங்கும்படி, சீறி - கோபித்து, அளமரு - சுழலாநின்ற, தம்மனம் செல்-தமது மனம் போகின்ற, அவ்வாறே - அவ்வழியிற்றானே, ஒழுகிநிற்பார் - நடந்து நிற்பார். எ - று.

(பொ - ரை.) இளமைப்பருவத்தில் செய்கிற தண்டனையை யேற்றுக்கொண்டும், எந்த வெறுத்தற்குரிய காரியத்திற் செலுத்தினாலும் மனம் நடுநடுங்கி, பின்னிப்பொருந்தி மிகுதியும் பற்றிநிற்பார். தளர்வற்ற (காளைப்) பருவத்தையடைந்தால் தந்தைதாயர் நடுங்கும்படி கோபித்து, சுழலாநின்ற தமது மனம் போகின்ற அவ்வழியிற்றானே நடந்துநிற்பார். எ - று.

(வி - ரை.) இளமை முதுமைப்பருவங்களினும், யவ்வன பருவத்தில் மாதர்பொருட்டுப் பொருள் சேகரித்தல் முதலிய பலவழிகளிலும் மனம் மிகுதியுஞ் சுழலா நிற்குமாதலால், "அளமருதம்மனம்" என்றார். இளமைப் பருவத்தில் தந்தைதாயரது தண்டனைக்குட்பட்டிருப்பவர் யவ்வனபருவத்தில் அவரைச்சீறித் தம்மனம்போனவழியே ஒழுகுவர் என்பது கருத்து. "பிள்ளை தான் வயதின் மூத்தாற் பிதாவின்சொற்புத்திகேளான்" என்றார் பிறரும். சாமபேததானதண்டம் என்னும் நால்வகை யுபாயங்களுள் தண்டம் கடைப்பட்டது. இளமைப்பருவத்தில் சிறுவர்களைத் தாய்தந்தையர்கள் தண்டித்து மனம் நடுங்கச்செய்தாலும் தம்மைவிட்டுப் பிரியார் என்பது தோன்ற, "பின்னியுற்றுப்பற்றி நிற்பார்" என்றார். தந்தைதாய் உம்மைத்தொகை. இத்தொடரில் நிலைவருமொழிகள் பொதுப்பெயர்க ளாகையால் பன்மை யீறுபெறாமல் வந்தது. (கசக)

சாருறு தந்தை யாருந் தாயரு மனந்தஞ் சன்ம
ஆருமோ ரனந்தம் வாய்த்த வுறவுமோ ரனந்தம் பெற்ற
பேருமோ ரனந்தங் கன்மப் பெருக்கமு மனந்தங் கொண்ட
சீருமோ ரனந்த மின்னுஞ் சேர்வது மனந்த மாமால்.

(ப - ரை.) சார்வுறு - (பிறவிகள்தோறும்) வந்து பொருந்துகின்ற, தந்தையாரும் - தகப்பன்மாரும், தாயரும் - தாய்மாரும், அனந்தம் - அனே

கம், சன்மம்ஊரும் - பிறக்கிற ஊர்களும், ஓர் அனந்தம் - அனேகம், வாய்த்த உறவும் - கிடைத்த உறவினரும், அனந்தம் - அனேகம், பெற்றபேரும் - பெற்றபேர்களும், ஓர் அனந்தம் - அனேகம், கன்மப்பெருக்கமும் - கர்மமிகுதியும், அனந்தம்-அனேகம், கொண்ட சீரும் - கொண்டசிறப்பும், ஓர் அனந்தம் - அனேகம், இன்னும் சேர்வன - இனிமேலும் அடைதற்குரியன, அனந்தம்ஆம் - அனேகமாகும். எ - று.

(பொ - ரை.) (பிறவிகள்தோறும்) வந்து பொருந்துகின்ற தகப்பன்மாரும் தாய்மாரும் அனேகம்; பிறக்கிற ஊர்களும் அனேகம்; கிடைத்த உறவினரும் அனேகம்; பெற்றபேர்களும் அனேகம் ; கர்மமிகுதியும் அனேகம்; கொண்டசிறப்பும் அனேகம்; இனிமேலும் அடைதற்குரியன அனேகமாகும். எ - று.

"ஊரனந்தம்பெற்றபேரனந்தம்" எனமேலோர் கூறுதலால் 'சாருறுதந்தையாரும்——சேர்வது மனந்தம்'' என்றார்.பிறவிதோறும் வந்துபொருந்துகின்றதந்தைதாயர் முதலியபாவும் அனேகம் என்பது கருத்து. அந்தம்(முடிவு) இதில் அ என்னும் எழுத்து வந்து அநந்தம் என அதன் எதிர்மறையாகிய முடிவில்லாமையை யுணர்த்தியது. ஒன்றுஎனப்பொருள்படும் ஏகம்என்பதும் இவ்வாறே அகரம் வரப்பெற்று அநேகம் எனவரும். அநேகம் ஒன்றல்லாதது. கன்மப்பெருக்கம் - தொழிற்பண்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். சேர்வன - பலவின்பாற் படர்க்கை வினையாலணையும் பெயர். (கஉ0)

அத்தகு மைந்த ரார்நீ யாரிஃ துரைக்கு நானு
ரித்தரை யிடைக்காப் பாற்றற் கியான்றிரு நெடுமா லல்லன்
கொத்துறு மைந்த ராசைக் கோட்பட்டு வருந்து கின்றாய்
பித்துளார் செய்கை யீது பெரியரிம் மயக்கம் பூணார்.

(ப - ரை.) அத்தகுமைந்தர் ஆர் - அத்தன்மையாகிய புதல்வர் யார், நீஆர் - நீயார், இஃது உரைக்கும் - இதனைச்சொல்லுகிற, நான்ஆர் - நான்யார், இத்தரையிடை - இந்தநிலவுலகத்தில், காப்பாற்றற்கு-காப்பாற்றுதற்கு, யான்-நான், திரு - லக்ஷ்மீநாதனான, நெடுமால்அல்லன்-பெரியதிருமால் அல்லேன், கொத்துஉறும் - கூட்டமாகப் பொருந்திய, மைந்தர்ஆசை - புதல்வராசையால், கோட்பட்டு - கவரப்பட்டு, வருந்துகின்றாய் - வருத்தப்படுகின்றாய், ஈது - இது, பித்துஉள்ளார்செய்கை - பித்துடையவரது செய்கையாகும், பெரியர் - பெரியோர், இம்மயக்கம்பூணார் - இந்தமயக்கத்தைக் கொள்ளார். எ - று.

(பொ - ரை.) அத்தன்மையாகிய புதல்வர்யார், நீயார், இதனைச்சொல்லுகிற நான்யார், இந்த நிலவுலகத்தில் காப்பாற்றுதற்கு நான் லக்ஷ்மீநாதனான பெரியதிருமால் அல்லேன்; கூட்டமாகப் பொருந்திய புதல்வராசையால்

கவரப்பட்டு வருத்தப்படுகின்றாய், இது பித்துடையவரது செய்கையாகும். பெரியோர் இந்தமயக்கத்தைக்கொள்ளார். எ - று.

(வி - ரை.) கணவன், மனைவி, மைந்தர் ஆகிய நம்மில் ஒருவருக்கொருவர் சம்பந்தமில்லையென்பதும், இப்பூமியிலுள்ள எவரையும் காப்பவன் திருமால் என்பதும், அவ்வாறு நினையாமை மூடத்தனம் என்பதும் கருத்து. யார் என்னும் வினாவடியாகப் பிறந்த உயர்திணை முப்பாலுக்கும் பொதுவாகிய குறிப்பு வினைமுற்று ஆர் என மருவி 'மைந்தர் ஆர், நீயார், நான்ஆர்' என மூன்றிடத்தும் வந்தது. நீயார் என்னுந்தொடரை யார் எனப்பிரித்து மரூஉ ஆகாமல் வந்ததெனினுமமையும். இவ்வாறு வருதலை "நானாரென் னுள்ளமார் ஞானங்களார்" எனத்திருவாதவூரடிகளும் "நீயாரையென்னை யிகணின்றநிலை" எனக் கம்பநாடருங்கூறலானு முணர்க. அல்லன் அன்மையென்னும் பண்படியாகப்பிறந்த தன்மையொருமைக் குறிப்பு வினைமுற்று. 'காப்பாற்றற்கியான்' என்பதில் இகரம் குற்றியலிகரமாம். ஆசைக்கோட்பட்டு மூன்றும் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். கோட்பட்டு செயப்பாட்டு வினையாகிய இறந்தகால வினையெச்சம். 'ஆசைக்கோட்பட்டு' ஆசையாகிய குற்றத்தில் அகப்பட்டு எனப்பொருளுரைத்தலுமாம். (கோள்-குற்றம், பட்டு-பொருந்தி.)

நல்வினை யடைந்த காலை நனிநலந் திளைப்பர் நன்மை
யல்வினை யடைந்த காலை யல்லலிற் றுளைவ ரெல்லாந்
தொல்வினை வழிய வாகுந் தோன்றனு பவங்க டாந்தம்
புல்வினை யாலென் றெண்ணல் புலமையோ ரிடத்தின் றுமால்.

(ப - ரை.) நல்வினை அடைந்தகாலை - புண்ணியத்தின்பயன் நேர்ந்த காலத்தில், நனி - மிகுதியாகிய, நலம்திளைப்பர் - சுகத்தையனுபவிப்பார்கள், நன்மை அல்வினை அடைந்தகாலை - நன்மையல்லாத தீவினைப்பயன் நேர்ந்த காலத்தில், அல்லலில் - துன்பக்கடலில், துளைவர் - மூழ்குவர்; (ஆதலால்) எல்லாம் - யாவும், தொல்வினைவழிய ஆகும் - பழவினையின் பயன்கள்ஆகும், தோன்று - உண்டாகின்ற, அனுபவங்கள்தாம்-அனுபவங்களும், தம்புல்வினையால் என்று எண்ணல்-தமது அற்பமுயற்சியால்வருவனவென்றெண்ணுதல், புலமையோர் இடத்து - அறிவினரிடத்து, இல்லைஆம் - இல்லையாகும். எ-று.

(பொ - ரை.) புண்ணியத்தின் பயன்நேர்ந்த காலத்தில் மிகுதியாகிய சுகத்தை யனுபவிப்பார்கள், நன்மையல்லாத தீவினைப்பயன் நேர்ந்த காலத்தில், துன்பக்கடலில் மூழ்குவார்கள். (ஆதலால்) யாவும் பழவினையின் பயன்கள் ஆகும். உண்டாகின்ற அனுபவங்களும் தமது அற்பமுயற்சியால் வருவனவென்றெண்ணுதல் அறிவினரிடத்து இல்லையாகும், எ - று.

(வி - ரை.) முன்செய்த நல்வினையால் இன்பமும் தீவினையால் துன்பமும் வருதலால் நாம் அனுபவிக்கும் அனுபவங்கள் ஊழ்வினையின் வழியாய் வரும். இஃது இவ்வாறிருக்கப் புல்லர் செல்வப்பொருள் தமது முயற்சியால்

வரும் என்று நினைப்பர். "தாம்தாம்முன்செய்த வினைதாமே யனுபவிப்பார்" என்றார் ஔவையாரும். அல்வினை, தொல்வினை. பண்புத்தொகை நிலைத்தொடர்கள். அன்மையாகிய வினை, தொன்மையாகிய வினைஎன விரியும். வழிய - வழிஎன்னும் இடமடியாகப் பிறந்த பலவின்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். நினைப்பர், துனைவர் என்னும் பலர்பால் வினைமுற்றுகளில் பகுதி முறையே நினை, துனை. நல்வினையடைந்த காலை நலந்நினைப்பதும் அல்வினையடைந்த காலை அல்லலெய்துவது மியற்கை. இதனை நோக்கியே "நன்றாங்கால் நல்லவாக்காண்பவரன்றாங்கால்-அல்லற்படுவதெவன்" என்றார் திருவள்ளுவரும். (கஉஉ)

இம்மையிற் றரும தான மெழில்பெற வியற்றி னோர்க
ளம்மையிற் றேவ ராகி யமிர்தமுன் னான போகஞ்
செம்மையிற் றுய்ப்பர் துய்த்துத் தீர்ந்தபின் புவியின் மீட்டுந்
தம்மையர் தாய ரென்றே திலர்த்தழீஇப் பிறப்ப ரன்றே.

(ப - ரை.) இம்மையில் - இப்பிறப்பில், தருமதானம் - தருமதானங்களை, எழில்பெற இயற்றினோர்கள் - அழகுபெறச்செய்தவர்கள், அம்மையில்-மறுமையில், தேவர்ஆகி - தேவராய்ப்பிறந்து, அமிர்தம்முன்ஆன - அமிர்தம் முதலாகிய, போகம் - போகங்களை, செம்மையின் துய்ப்பர் - நன்றாக அனுபவிப்பார்கள், துய்த்து - அனுபவித்து, தீர்ந்தபின் - தீர்ந்தபிறகு, புவியில் - பூமியில், மீட்டும்-மறுபடியும், தம்ஐயர்தாயர்என்று-தமது தந்தையர் தாயர்என்று, ஏதிலர் - அயலாரை, தழீஇ - தழுவி, பிறப்பர் - பிறப்பார்கள். எ - று.

(பொ - ரை.) இப்பிறப்பில் தருமதானங்களை அழகுபெறச் செய்தவர்கள் மறுமையில் தேவராய்ப் பிறந்து அமிர்தம் முதலாகிய போகங்களை நன்றாக அனுபவிப்பார்கள், அனுபவித்துத் தீர்ந்தபிறகு பூமியில் மறுபடியும் தமது தந்தையர் தாயர் என்று அயலாரைத் தழுவிப் பிறப்பார்கள். எ - று.

(வி - ரை.) தருமம் - வறியராய் இரப்பவர்க்குக் கொடுத்தலும் மடம் சத்திரம் குளம் சோலை முதலியவற்றைப் பலர்க்கும் பயன்பட உண்டாக்குதலுமாம் தானம் - பொன்பசு முதலியவற்றை பிராமணர்க்குநீரோடுகொடுத்தல். தருமதானங்களை எழில்பெறச் செய்தலாவது பயன்கருதாமல் செய்தல். அதனை நிஷ்காமியம் என்பர். இதனை 125-ம் செய்யுளிற் கூறியிருத்தலாலும றிக. அமிர்தமுதலிய போகம் என்றது ரம்பாஸ்திரீகளோடு கூடிக்களித்தல் முதலியவற்றை. ஆன-இன் இடைநிலையின் இகரம் கெட்டுப்புணர்ந்த இறந்தகாலப்பெயரெச்சம். இகரம் கெடாதாயின் ஆயினஎனவரும். தானதருமங்களைச் செய்தவர் தேவராய்ப் பிறப்பர் என்பதனை "மக்களாகப்பிறந்து புண்ணியபாவம் இயற்றி, புண்ணியமிகுதியால் தேவராயும் பாவமிகுதியால் நரகராயும் பிறத்தலின் மக்கள், தேவர், நரகர் எனச்சாதன சாத்திய முறையே வைத்தார்" என்னும் நன்னூல்விருத்தியுரையானு மறிக. தாம்செய்த புண

ணியம் கழிந்தவாறே பூமியில் மறுபடிவந்து பிறந்து அயலாரைத் தாய்தந்தையர் என்று உறவுபிடித்தலால் இவர் மாத்திரம் உன்மக்களென்று நினையாதே என்பது கருத்து. என்று - என்றுசொல்லி எனப்பொருள்படலால் சொல்லெச்சமாகிய இறந்தகாலவினையெச்சம். ஏதிலர் - யாது சம்பந்தமும் இல்லாதவர். இது எதிர்மறைப்பலர்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். இதில், ஏது - பகுதி, இல் - எதிர் மறைவிகுதி. அர் - பலர்பால் விகுதி. தழீஇ - அளபெடுத்து வந்த இறந்தகாலவினையெச்சம். தழு - பகுதி, இ - இறந்தகாலவினையெச்ச விகுதி. உகரக்கேடு சந்தி. இகரம் ஈகாரமாய் அளபெடுத்தது நீட்டல்விகாரம். இவ்வளபெடை சொல்லிசையளபெடை. மீட்டு - வினைமாற்றுப்பொருள் தருவதோரிடைச்சொல். இதனை, "இரதமுடைய" என்னுந்திருக்கோவையார் 57 - ம் செய்யுளுரையில் பேராசிரியர் கூறியிருத்தலாலுமறிக. புவி - பிருதிவி என்னும் வடமொழித்திரிவு, புடவி என்பதும் அது. (கஉ௬)

தழைவிரி கற்ப நாடு சார்தலும் புவியில் யாரும்
விழைதரு போகந் துய்த்து மேவலு நல்லூ ழாமாற்
பிழைபட நிரயத் தாழ்ந்து பெருந்துய ருறலு மண்மேற்
குழைமிடி யாதித் துன்பு கூர்தலுந் தீயூ ழன்றே.

(ப - ரை.) தழைவிரி - தழைகள்விரிந்த, கற்பம் - கற்பகமரமுள்ள, நாடு - சொர்க்கலோகத்தை, சார்தலும் - அடைதலும், புவியில்யாரும் - பூமியிலுள்ளார் யாவரும், விழைதரு - விரும்பத்தகுந்த, போகம் - போகங்களை, துய்த்து - அநுபவித்து, மேவலும் - பொருந்தியிருத்தலும், நல்ஊழ் ஆம் - நல்ல வினைப்பயனாகும், பிழைபட - குற்றமுண்டாக, நிரயத்து ஆழ்ந்து - நரகத்தில் அழுந்தி, பெருந்துயர் உறலும்-பெருந்துன்பத்தைப் பொருந்துதலும், மண்மேல் - பூமியின்மீது, குழை - வாடுதற்கேதுவாகிய, மிடி ஆதி - வறுமை முதலிய, துன்பு கூர்தலும் - துன்பம் அனுபவித்தலும், தீஊழ் - தீவினைப் பயனாகும். எ - று.

(பொ - ரை.) தழைகள் விரிந்த கற்பகமரமுள்ள சொர்க்கலோகத்தையடைதலும், பூமியிலுள்ளார் யாவரும், விரும்பத்தகுந்த போகங்களை அநுபவித்துப்பொருந்தியிருத்தலும் நல்ல வினைப்பயனாகும், குற்றமுண்டாக நரகத்தில் அழுந்திப்பெருந்துன்பத்தைப் பொருந்துதலும் பூமியின் மீது வாடுதற்கேதுவாகிய வறுமை முதலிய துன்பம் அனுபவித்தலும் தீவினைப்பயனாகும்.

(வி - ரை.) நல்வினை செய்தவர் சுவர்க்கபோகங்களை அநுபவித்தலாலும் தீவினை செய்தவர் வறுமைமுதலிய துன்பங்களை இம்மையில் அடைந்து மறுமையில் நிரயத்துன்பமெய்துதலாலும் திருவள்ளுவர். "அறத்தினூஉங் காக்கமுமில்லையதனை - மறத்தலினூஉங்கில்லைகேடு" என்றார். தழைகள் விரிந்த எனப்பொருள் கொள்ளுதலேயன்றி, தழைந்த, விரிந்த எனப்பொருள்கொண்டு வினைத்தொகை வினைச்சொற்கள் இரண்டடுக்கி கற்பகம் என்

னும்பெயரைக் கொண்டதென்றுவது, தழைத்து விரிந்த எனப் பொருள் கொண்டு தழை என்பது வினையெச்சப்பொருளதாய் விரி என்னும் வினையைக்கொண்டு முடிகின்றதென்றுவது கொள்ளுதல் அமையும். கற்பகம் என்பது கற்பம் எனச்சிதைந்து ஈற்றுமகரங்கெட்டுவந்தது. நாடுசார்தல் இரண்டாம் வேற்றுமைத்தொகை விகாரத்தியல்பாயிற்று. நல்லூழ் என்பதனை ஆகூழ் என்றும் தீயூழ் என்பதனைப்போகூழ் என்றும் கூறுவர். ஆகூழ் - பொருள் உண்டாவதற்குக்காரணமாகிய ஊழ். போகூழ் - பொருள் ஒழிதற்குக் காரணமாகிய ஊழ். இதனை. "ஆகூழாற்றோன்றும் அசைவின்மைகைப்பொருள் - போகூழாற்றோன்றுமடி" என்னுந்திருக்குறளானும் உணர்க - மிடியாதித்துன்புஎன்றதுபிணிமூப்பு முதலியவற்றை. "பிணிபசிமூப்புத்துன்பம் ஆதலாற் பிறவிவேண்டேன் அரங்கமா நகருளானே" என்றார் பெரியாரும். கூர்தல் - உரிச்சொலடியாகப்பிறந்த தொழிற்பெயர். துன்பு கூர்தல்-எழுவாய்த்தொகா நிலைத்தொடர். ஆல் - அன்று - ஏ - அசைநிலை. மண் - கருவியாகு பெயராய்ப் பூமியையுணர்த்திற்று. (கஉச)

இத்தகு துன்ப மின்ப மெய்திடா ரறிவு சான்றோர்
பத்தியின் வழாது நின்று பகரருச் சனையி யற்றிக்
கைத்துமுற் செயலெல் லாநிட் காமிய மாக்கி யென்றும்
பைத்தகார் வண்ணத் தெம்மான் பதமடைந் தின்பத் தாழ்வார்.

(ப - ரை.) அறிவுசான்றோர் - ஞானம் நிரம்பப்பெற்றவர்கள், இத்தகு - இத்தன்மையவாகிய, துன்பம் இன்பம் - துக்கசுகங்களை, எய்திடார் - அடையார், பத்தியின் வழாது நின்று - பத்தி நெறியில் வழுவாமல் நின்று, பகர் - சொல்லப்பட்ட, அருச்சனை இயற்றி - அர்ச்சனைசெய்து, முன்செயல் எல்லாம் - முன்னைய தொழில்களையெல்லாம், கைத்து - வெறுத்து, நிட்காமியம் ஆக்கி - நிஷ்காமியங்களாகச்செய்து, என்றும் - எந்நாளும், பைத்த - பசுமையாகிய, கார்வண்ணத்து - மேகநிறத்தையுடைய, எம்மான் - எம்பெருமானது, பதம் அடைந்து - திருநாட்டையடைந்து, இன்பத்து ஆழ்வார் - இன்பக்கடலில் மூழ்குவார்கள். எ - று.

(பொ - ரை.) ஞானம் நிரம்பப்பெற்றவர்கள், இத்தன்மையவாகிய துக்கசுகங்களை அடையார். பத்தி நெறியில் வழுவாமல் நின்று சொல்லப்பட்ட அர்ச்சனைசெய்து, முன்னைய தொழில்களையெல்லாம் வெறுத்து, நிஷ்காமியங்களாகச்செய்து எந்நாளும் பசுமையாகிய மேகநிறத்தையுடைய, எம்பெருமானது திருநாட்டையடைந்து இன்பக்கடலில் மூழ்குவார்கள். எ - று.

(வி - ரை.) பற்றற்றவரே பரமபதமெய்து வராதலால் "முற்செயலெல்லாங்கைத்து நிட்காமியமாக்கி" என்றும் "பைத்தகார் வண்ணத்தெம்மான் பதமடைந்தின் பத்தாழ்வார்' என்றுங்கூறினர். இதனை நோக்கியன்றே "அற்றது பற்றெனில் உற்றதுவீடு" என்றார் பெரியாரும். தகு - என்னும் பண்படி தகை, தகைமை எனவும் வரும். தகுதுன்பம் - பண்புத்தொகை

நிலைத்தொடர். தகைமையாகிய எனவிரியும். அறிவு சான்றோர் - அறிவினால் சான்றோர் என மூன்றும் வேற்றுமைத்தொகையாகக்கொள்ளின் வாழாநிலையும், அறிவானது சான்றோர் என எழுவாய்த்தொடராகக் கொள்ளின் திணைவழுவமைதியுமாமெனக்கொள்க. சான்றோர் - சால் என்னும்உரிச்சொலடியாகப்பிறந்த இறந்தகால வினையாலணையும் பெயர். பக்தி - என்னும் வடமொழி பத்தியெனத்திரிந்தது. அர்த்தம் - என்பது அருத்தம் எனவருதல்போல அர்ச்சனை என்னும் வடமொழி அருச்சனையெனவந்தது. இவ்வாறு திரிந்து வரும் வடமொழிகள் தற்பவம் எனப்படும். அர்ச்சனையைக்கைத்தலாவது - பயன் கருதாமற் செய்தல், நிஷ்காமியமாகச் செய்தலென்றபடி. கருமையென்னும் பண்புப்பெயரின்விகாரமாகியகார் - பண்பாகுபெயர். இறைவனது திருநாமங்களைச் சொல்லியே அருச்சிக்க வேண்டுதலின் 'பகரருச்சனையயற்றி' என்றார் எனினுமாம்.

(கஉரு)

சளசள வெனவா யூற றடையின்றி யொழுகப் பற்போய்த்
தளர்வொடு மெலிந்து கூனித் தசையற வற்றி முற்றிக்
கிளர்நடை யொழிந்து பாயல் கிடைகொளுங் கிழவுத்தன்மை
யளவுகண் டிலர்கொ லுற்ற விளமையேர்க் ககங்க ளிப்பார்.

(ப - ரை.) உற்ற - மிகுந்த, இளமை - இளமைப்பருவத்தின், ஏர்க்கு - அழகுக்கு, அகம் களிப்பார் - மனங்களிப்பவர், சளசள என-சளசளவென்று, வாய் ஊறல் - வாய் நீரானது, இடையின்றிஒழுக - தடையில்லாமல் ஒழுகா நிற்க, பல்போய் - பற்கள் கழன்று, தளர்வொடு மெலிந்து - மனத்தளர்ச்சியுடன் உடம்பிளைத்து, கூனி - முதுகு வளைந்து, தசை அறவற்றி - மாமிசமில்லாமல் உலர்ந்து, முற்றி - முதிர்ச்சியடைந்து, கிளர்நடை ஒழிந்து - உற்சாகமாகிய நடையொழிந்து, பாயல் - பாயலில், கிடைகொள்ளும் - கிடத்தலையே ஆதரவாகக்கொள்ளுதற் கேதுவாகிய, கிழவுத்தன்மை - கிழத்தனத்தின், அளவுகண்டிலர் கொல் - அளவினை நோக்கிலரோ. எ - று.

(பொ - ரை.) மிகுந்த இளமைப்பருவத்தின் அழகுக்கு மனங்களிப்பவர் சளசளவென்று வாய்நீரானது தடையில்லாமல் ஒழுகாநிற்கப்பற்கள் கழன்று மனத்தளர்ச்சியுடன் உடம்பிளைத்து முதுகுவளைந்து மாமிசமில்லாமல் உலர்ந்து முதிர்ச்சியடைந்து உற்சாகமாகிய நடையொழிந்து, பாயலில் கிடத்தலையே ஆதரவாகக்கொள்ளுதற் கேதுவாகிய கிழத்தனத்தின் அளவினை நோக்கிலரோ. எ - று.

(வி - ரை.) சளசள - இரட்டைக்கிளவி. ஊறல் - தொழிலாகுபெயராய் வாயிற்சுரக்கும் நீரையுணர்த்திற்று. ஒழுக - காரியகாரணமில்லாமையால் நிகழ்காலச்செயவெனெச்சம். பற்போய் என்னும் எழுவாய்த்தொடரின் லகரம் இயல்பாய் - பல்போய் எனவும் வரும். கூனி - இறந்தகாலவினையெச்சம். நடை, கிடை என்பன ஐகாரவீற்றுத்தொழிற்பெயர்கள். மேற்கூறிய வாயூறல்நடையின்றியொழுகல் முதலிய முதுமைக்குணங்களைக் கருதாமல்

இளமையைக்கண்டு மகிழ்ந்து நற்கருமஞ்செய்யாது காலத்தை வீணேகழிப் பார்க்கிரங்கி 'கிழவுத்தன்மையளவு கண்டிலர்கொல்' என்றார். கண்டார் இலர் என்பது - கண்டிலர் எனவந்தது. காணுதலாகிய தொழிலை இலர் என்னும் எதிர்மறைக்குறிப்பு வினைமுற்று மறுத்து நின்றது. அகம் என்னும் உள்ளி டப்பெயர் அங்குள்ள மனத்துக்காயினமையால் இடவாகுபெயர். (கஉ௬)

மேற்படி - வேறு.

பாவ மிகையாற் பூதத்துற் பவிப்பர் நரகர் புண்ணியங்கண்
மேவு மிகையாற் பூதசா ரத்தின் விண்ணோ ருதித்திடுவர்
பூவி னிடத்தவ் வினையிரண்டாற் பூத பரிணா மத்துயிர்க
ளாவ வியன்மா னிடம்விருக மனைத்தும் பையு ளாவனவே.

(பி - ரை.) பாவம் மிகையால் - பாவத்தின் மிகுதியால், நரகர் - நரகர், பூதத்து - பூததேகத்தில், உற்பவிப்பர் - பிறப்பார், மேவும் - பொருந்திய, புண்ணியங்கள் மிகையால் - புண்ணியங்களின் மிகுதியால், விண்ணோர் - தேவர்கள், பூதசாரத்தின் - பூதசாரதேகத்தில், உதித்திடுவர் - பிறப்பார், பூவினிடத்து - பூமியினிடத்து, அவ்வினை இரண்டால்-அந்தப்பாவபுண்ணிய மென்னும் இருவினைகளால், பூதபரிணாமத்து - பூதபரிணாம தேகத்தில், ஆவ உயிர்கள் - உண்டாகிற உயிர்களாகிய, வியன்-பெருமையுள்ள, மானிடம்விரு கம் அனைத்தும் - மானிடம் மிருகம் ஆகிய எல்லாம்,பையுள் ஆவன-பையிற் கட்டுப்பட்டுப்பிறப்பன. எ - று.

(பொ - ரை.) பாவத்தின் மிகுதியால் நரகர் பூததேகத்தில் பிறப்பார். பொருந்திய புண்ணியங்களின் மிகுதியால் தேவர்கள் பூதசாரதேகத்திற் பிறப்பார். பூமியினிடத்து அந்தப்பாவ புண்ணியமென்னும் இருவினைக ளால் பூதபரிணாம தேகத்தில் உண்டாகிற உயிர்களாகிய மானிடம் மிருகம் ஆகிய எல்லாம் பையிற்கட்டுப்பட்டுப்பிறப்பன. எ - று.

(வி - ரை.) பூததேகம் - பஞ்சபூதத்தாலாகிய சரீரம். இது தூலசரீர மெனப்படும். பூதசாரதேகம் - பூதசாரத்தாலாகிய சரீரம். இது சூக்குமசரீர மெனப்படும். பூதபரிணாமதேகம்-பூதங்களின் திரிபினாலாகிய சரீரம். நரகர் - அதோலோக வாசிகள். விண்ணோர் - விண்ணுலக வாசிகள். மானிடர் - பூலோகவாசிகள். இம்மூன்றுலகும் ஸ்வர்க்கமத்யபாதாளமெனப்படும். பூ - பூமி. பரிணாமம் - திரிபு. வியன் - விரிவு.பையுள் ஆவன என்றது கருப்பை யுட்கட்டுப்பட்டுப்பிறப்பனவற்றை, இவற்றை ஜராயுஜமென்பர் வடநூலார். உதித்திடுவர் - என்பதற்குப்பகுதி - உதித்திடு. அனைத்தும் என்பதில் உம்மை முற்றும்மை. பாவமிகையால், புண்ணியங்கள் மிகையால், அவ்வினையிரண் டால் என்பவற்றில் மூன்றனுருபுகள் - கருவிப்பொருளில் வந்தன. (கஉஎ)

பறவை யுரக முதலாய பலவு மண்டத் துதித்திடுமா
லுறவுற் றுதிக்கும் கசிவினிற்கி டாதி யுருவம் வித்திடமண்

ணறல்கால் வெயிலுற் றிடவுதிக்கு மறுகாற் பொறியஞ் சிறைவண்
நறவுண் டிசைபா டிடமலரு நறிய தருக்கண் முதற்பலவும். [டர்

(ப - ரை.) பறவை உரகம் முதல் ஆயபலவும் - பறவை பாம்பு முதலாகியபல உயிர்களும், அண்டத்து உதித்திடும் - முட்டையிற் பிறக்கும், கீடாதி உருவம் - புழு முதலிய உயிர்கள், கசிவினில் - வேர்வையில், உற உற்று உதிக்கும் - மிகுதியாகப்பிறக்கும், அறுகால் - ஆறு கால்களையும், பொறி - புள்ளிகளையும், அம்சிறை - அழகிய சிறகுகளையுமுடைய, வண்டர் - வண்டுகள், நறவுண்டு - தேனைப்பருகி, இசைபாடிட - இராகங்களைப்பாட, மலரும் - மலர்கின்ற, நறிய தருக்கள் முதல் பலவும் - மணமுள்ள மரங்கள் முதலிய பலவும், மண்வித்திட - மண்ணில் விதையை விதைக்க, அறல்கால் வெயில் உற்றிட - நீர் காற்று வெய்யில் என்பவைகள் பொருந்துதலால், உதிக்கும் - பிறக்கும். எ - று.

(பொ - ரை.) பறவை பாம்பு முதலாகிய பலவுயிர்களும் முட்டையிற் பிறக்கும், புழு முதலியவுயிர்கள் வேர்வையில் மிகுதியாகப்பிறக்கும். ஆறு கால்களையும் புள்ளிகளையும் அழகிய சிறகுகளையுமுடைய வண்டுகள் தேனைப்பருகி இராகங்களைப்பாட மலர்கின்ற மணமுள்ள மரங்கள் முதலிய பலவும் மண்ணில் விதையை விதைக்க, நீர் காற்று வெய்யில் என்பவைகள் பொருந்துதலால் பிறக்கும். எ - று.

(வி - ரை.) பறவை - தொழிற்பெயர். இது - தொழிலாகு பெயராய்ப் பறத்தலையுடையவுயிர்களை யுணர்த்திற்று. உரகம் - வடமொழி (உரம்+கம்) இது மார்பினால் நகர்வது என்னும் பொருளது. முதலாயபலவும் என்றது - பல்லி, மீன் முதலியவற்றை. கசிவினாலுண்டாகும் வேர்வையை - கசிவு என்றார். இது காரணவாகுபெயர். கீடாதி உருவம் என்றது புழு - பேன் முதலியவற்றை. உருவம் என்றது உருவத்தையுடைய உயிர்களை. அறல்கால் வெயில் உற்றிட என்றது - நீர் பாய்தலாலும், காற்று வீசுதலாலும், வெயில் காய்தலாலும் என்றபடி. வண்டு - வண்டர் எனப்போலியாய் வந்தது. அறு கால்வண்டென இயையும். கால் பொறி சிறை என்பவற்றீற்றில் இரண்டனுருபும் பயனும் எண்ணும்மைகளோடு தொக்குநின்றன. வண்டுக்கு - ஆறு கால்கள் உளவாதல் நோக்கி இதனை ஷட்பதம் என்பர் வடநூலார். நறிய - பண்படியாகப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். நறுமை - பகுதி. தருக்கள் முதற்பலவும் என்றதில் பலவும் என்பது செடி கொடிமுதலியவற்றை. அண்டத்துதிக்கின்ற பறவை உரகம் முதலானவற்றை அண்டஜம் என்றும், கசிவில் உதிக்கின்ற கீடாதி உருவங்களை சுவேதஜம் என்றும், வித்திடமண் அறல்கால் வெயில் உற்றிட உதிக்கின்ற தருக்கள் முதலியவற்றை உத்பிஜ்ஜம் என்றும் கூறுவர் வடநூலார். (கஉஅ)

அவ்வித் துயிர்ப்ப வவற்றரிய யவைமுன் செந்நெ லீறுன
செவ்விப் பலத்தி னசித்திடுமச் சிறந்த பலமா னிடர்க்குணவா

யெவ்வக் தகற்றி வளர்க்குமகத் திட்ட வுணவு நீரிவற்றை
யொவ்வப் பருவ மடுப்பவறல் கீழா வுணவு மேலாக.

இதுவும் வருஞ் செய்யுளும் ஒரு தொடர்.

(ப - ரை.) அவ்வித்து உயிர்ப்ப - அந்த விதைமுளைக்க, அவற்று - அவற்றில், அரிய - அரிதாகிய, யவைமுன் - யவை யென்னுந்தானிய முன்னாக, செங்நெல் ஈறு ஆன - செங்நெல் ஈருனவைகள், செவ்வி - செவ்வையான, பலத்தில் நசித்திடும் - பலகாத்தில் (பலந்தந்து) கெடும், அ சிறந்த பலம் - அந்தச்சிறந்த பலமானது, மானிடர்க்கு உணவாய் - மானிடருக்கு உணவாகி, எவ்வத்து அகற்றி - குற்றத்தினின்று நீக்கி, வளர்க்கும் - வளரச் செய்யும், அகத்து இட்ட - உள்ளே செலுத்தின, உணவு நீர் இவற்றை - உணவும் நீரும் ஆகிய இவைகளை, ஒவ்வபருவம் அடுப்ப - சமானமாகப்பருவம் வர், அறல் கீழ் - நீர் கீழாகவும், உணவுமேலாக - உணவு மேலாகவும்.

(பொ - ரை.) அந்த விதை முளைக்க அவற்றில் அரிதாகிய யவை யென்னுந்தானிய முன்னுகச்செந்நெல் ஈருனவைகள் செவ்வையான பலகாலத்தில் (பலந்தந்து) கெடும். அந்தச்சிறந்த பலமானது மானிடருக்கு உணவாகி குற்றத்தினின்று நீக்கி வளரச்செய்யும், உள்ளே செலுத்தின உணவு நீர் ஆகிய இவைகளை சமானமாகப்பருவம் வர நீர் கீழாகவும், உணவு மேலாகவும். எ - று.

(வி - ரை.) உயிர்த்தல் - பிழைத்தல், அது இங்கு முளைத்தலென்னும் பொருளது. யவை - தானிய விசேடம், வாற்கோதுமை யெனினுமாம். பலம் - பயன். மானிடர் - மனுவின் சந்ததியார். உணவு - உண்ணப்படுவது (ஆஹாரம்). எவ்வம் - குற்றம்,அது இங்குப்பசி பிணி முதலியவற்றைக் குறித்தது. ஒவ்வப்பருவமடுப்ப என்றது - ஏற்றத் தாழ்வுகளின்றிச்சமானப்பட்டு ஜீர்ணிக்குஞ்சமயம் வர என்றபடி. அரிய - பண்படியாகப்பிறந்த குறிப்புப் பெயரெச்சம், அருமை பகுதி. செந்நெல்லை சாலி யென்பர் வடநூலார். செவ்விப்பலத்தில் என்பதனை பலச்செவ்வியில் எனமாற்றி, பலகாலத்தில் என்றுரைப்பினுமாம். அகத்திட்ட என்றது வயிற்றிற் செலுத்தின என்றபடி. உணவு நீர் என்பவற்றீற்றில் எண்ணும் மைகள்தொக்கன. (கஉக)

பகுக்கும் பிராணன் பின்வளிபின் பகுக்குஞ் சாரந் துராலெண்டா
வகுக்கு மழலி தயஞ்சாரம் வதிந்து சமான னற்பயிலுந் [கொள்ளு
தொகுக்கு நாடி யெலாமற்றைத் துரால்பன் னிரண்டாய் வெளிக்
மிகுக்குஞ் சார மென்பதுமத் துணைத்தாம்விரைப்பூங்குழன்மாதே.

(ப - ரை.) பிராணன் பகுக்கும் - பிராணவாயுவானது பிரிக்கும், பின்வளி - அதற்குப் பின்னதாகிய அபானவாயுவானது, பின் - பிறகு, சாரம் பகுக்கும் - (அவற்றின் சாரங்களை வெவ்வேருக) பிரிக்கும், துரால் - செற்றையை, அழல் - உதாரக்கினியானது, இரண்டாவகுக்கும் - இரண்டாகப்

பிரிக்கும், சாரம் - சாரமானது, இதயம் வதிந்து - இதயத்தில் தங்கி, சமாந னால் பயிலும் - சமானவாயுவினால் இயங்கும், தொகுக்கும் நாடி எல்லாம் - தொகுக்கப்பட்ட நாடிகளெல்லாம், மற்றைதுரால் பன்னிரண்டாய் வெளிக் கொள்ளும் - மற்றைச்செற்றைகளைப் பன்னிரண்டுவகையாய் வெளிப்படுத் தும், மிருக்கும் சாரம் என்பதும் - மிகுதியாகிய சாரமென்று சொல்லப்படு வதும், அத்துணைத்து ஆம் - அவ்வளவினையுடையதாகும், விரை பூ - வாசனை பொருந்திய மலர்களையணிந்த, குழல் - கூந்தலையுடைய, மாதே - பெண்ணே.

(பொ - ரை.) பிராணவாயுவானது பிரிக்கும், அதற்குப்பின்னதாகிய அபானவாயுவானது பிறகு அவற்றின் சாரங்களை வெவ்வேறாகப்பிரிக்கும், செற்றையை உதராக்கினியானது இரண்டாகப்பிரிக்கும், சாரமானது இதயத் தில் தங்கிச் சமானவாயுவினால் இயங்கும், தொகுக்கப்பட்ட நாடிகளெல் லாம் மற்றைச்செற்றைகளைப் பன்னிரண்டு வகையாய் வெளிப்படுத்தும், மிகுதியாகிய சாரம் என்று சொல்லப்படுவதும் அவ்வளவினையுடையதாகும், வாசனை பொருந்திய மலர்களையணிந்த கூந்தலையுடைய பெண்ணே. எ-று.

(வி - ரை.) பின்வளியென்றது அபானவாயுவை. சாரம் - ரசம். அழ லுந்தொழிலுடையதை அழல் என்றார், இது தொழிலாகுபெயர். துணை - அளவு. பிராணவாயு இயங்குமிடம் இதயம், அபானவாயு இயங்குமிடம் குதம், சமானவாயு இயங்குமிடம் கந்தரக்குழியின் சந்து. நாடி யெலாம் என்றது இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புரு டன், குகு, சங்கினி, என்னும் தசநாடிகளை. (கரு௦)

இயக்க மிரண்டாய் மிடற்றுவழுக் காய்மூக் கிளகு சளிநீராய்
நயக்கட் பீளை யாய்ச்செவிநா நகம்பல் குய்யங் குதமழுக்காய்க்
கயக்கு ரோமத் துளைதோறுங் கசியும் வேராய்த் துரால்கழியும்
வியக்கு மருங்கற் புடையாரும் விரும்பு மேன்மை மெல்லியலே.

(ப - ரை.) இயக்கம் இரண்டு ஆய் - இயக்கம் இரண்டு வகையாய், மிடற்று வழுக்கு ஆய் - கழுத்தில்வழுக்காயும், மூக்கு இளகு சளிநீராய் - நாசியில் இளகிய சளி நீராகியும், நயக்கண் பீளை ஆய் - அழகிய கண்ணில் பீளையாகியும், செவி நாநகம் பல்குய்யம் குதம் அழுக்கு ஆய் - காது நாக்கு பல் குய்யம் குதம் என்னுமிடங்களில் அழுக்காகியும், கயக்கு - கசங்குகிற, உரோமத்துளை தோறும் - ரோமத்வாரங்கள் தோறும், கசியும் வேர் ஆய் - கசியாநின்ற வெயர்வையாகியும், துரால்கழியும்-கல்மஷங்கள்கழிந்துபோகும், வியக்கும் - வியக்கத்தகுந்த, அருகற்புஉடையாரும் - அருமையாகிய கற்பு டையவரும், விரும்பும் - விரும்புதற்குரிய, மேன்மை - மேம்பாட்டினை யுடைய, மெல்லியலே - பெண்ணே. எ - று.

(பொ - ரை) இயக்கம் இரண்டுவகையாய், கழுத்தில் வழுக்காகியும், நாசியில் இளகிய சளிநீராகியும், அழகிய கண்ணில் பீளையாகியும், காது நாக்கு

பல் குய்யம் குதம் என்னும் இடங்களில் அழுக்காகியும், கசங்குகிறரோமத்வாரங்கள் தோறும் கசியாநின்ற வெயர்வையாகியும் கல்மஷங்கள் கழியாநிற்கும், வியக்கத்தகுந்த அருமையாகிய கற்புடையவரும் விரும்புதற்குரிய மேம்பாட்டினையுடைய பெண்ணே. எ - று.

(வி - ரை.) இயக்கம் - இயங்குதல், மிடறு - கழுத்து, வழுக்கு - நிணம், குய்யம் - மர்மஸ்த்தானம், வேர் - வெயர்வை, மெல்லியல் - மென்மையாகிய தன்மையையுடையவள், இது பண்புத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். இதில் ஏகாரம் விளியுருபு. (கருக)

சார மதனிற் றுவக்கதனி லுதிர மதனிற் றசைநிணமூன்
சேருந் தசையி னரம்புமயிர் செறியு நரம்பி னிடைநாடி
யோரு மதிலென் பதின்மூளை யுகிர்மூ ளையிற்சுக் கிலமதனிற்
சாருங் கருவிங் ஙனமீரா றாகிப் பயிலுந் தன்மைத்தே.

(ப - ரை.) சாரமதனில் - சாரத்திலும், துவக்கதனில் - தோலிலும், உதிரமதனில் - உதிரத்திலும், தசை நிணம் ஊன் சேரும் தசையில் - நெருங்கிய நிணமும் ஊனும் சேரும் தசையிலும், நரம்பு மயிர் செறியும் நரம்பினிடை நாடி ஒருமதில் - நரம்பு மயிர் நெருங்கின நரம்பினிடையேயுள்ள நாடியென் றாராயப்படு மவைகளிலும், என்பதில் - எலும்பிலும், மூளை உகிர் மூளையில் - மூளை நகம் மூளை யென்பவற்றிலும், சுக்கிலமதனில் - சுக்கிலத்திலும், சாரும்கரு - பொருந்திய கருவானது, இங்ஙனம் - இவ்விதமாய், ஈராறு ஆகபயிலும் தன்மைத்து - பன்னிரண்டுவகையாயுளதாந்தன்மைத்து. எ - று.

(பொ - ரை.) சாரத்திலும், தோலிலும், உதிரத்திலும், நெருங்கிய நிணமும் ஊனும் சேரும் தசையிலும், நரம்பு மயிர் நெருங்கின நரம்பினிடையேயுள்ள நாடி யென்றாராயப்படுமவைளிலும், எலும்பிலும், மூளை நகம் மூளை என்பவற்றிலும், சுக்கிலத்திலும் பொருந்திய கருவானது, இவ்விதமாய்ப்பன்னிரண்டு வகையாய் உளதாந்தன்மைத்து. எ - று.

(வி - ரை.) சாரம்-அன்னசாரம், துவக்கு-த்வக் என்னும் வடமொழித் திரிபு, தசை - மாமிசம், மூளையிரண்டனுள் முன்னது தலை மூளையெனவும் பின்னது என்பினிடையேயுள்ள மூளை யெனவும் உரைத்துக்கொள்க. சுக்கிலம் - வீரியம், கரு - கருப்பம். (கருஉ)

கலிநிலைத்துறை.

பாயும் வெண்புனல் செம்புன லினுமிகப் பரவி
னேயு மாண்சுரோ ணிதமிகிற் பெண்ணிகர்த் திரண்டுந்
தோயு மேலலி யாம்பிதா நுகர்சுவை பற்றிப்
போயுள் வெண்புனற் பட்டுயி ரணைகருப் புகுதும்.

(ப - ரை.) பாயும் வெண்புனல் - பாய்கின்ற வெண்புனலானது, செம்புனலினும் - செம்புனலைப் பார்க்கினும், மிகப்பரவின் - மிகுதியாகப்பரவினால், ஆண் ஏயும் - ஆணுருவாகும், சுரோணிதம்மிகின் - சுரோணிதம்மிகுந்தால், பெண் - பெண்ணுருவாகும், இரண்டும் நிகர்த்து தோயுமேல் - இரண்டும் சமானமாய்ப்பரவினால், அலி ஆம் - அலியுருவாகும், உயிர் - உயிரானது, பிதாநுகர் சுவை பற்றி - தந்தையுண்ணுஞ் சுவையைப்பற்றிக்கொண்டு, உள்போய் - உள்ளே பிரவேசித்து, வெண் புனல்பட்டு-சுக்கிலமாகி, அன்னை கருபுகுதும் - தாயின் கருப்பத்தில் விழும். எ - று.

(பொ - ரை.) பாய்கின்ற வெண்புனலானது செம்புனலைப்பார்க்கினும் மிகுதியாகப்பரவினால் ஆணுருவாகும். சுரோணிதம்மிகுந்தால் பெண்ணுருவாகும், இரண்டும் சமானமாகப்பரவினால் அலியுருவாகும். உயிரானது தந்தையுண்ணுஞ் சுவையைப்பற்றிக்கொண்டு உள்ளே பிரவேசித்துச்சுக்கிலமாகித் தாயின் கருப்பத்தில் விழும். எ - று.

(வி - ரை.) வெண்புனல் - வெண்ணீர், (சுக்கிலம்). செம்புனல் - செந்நீர், (சுரோணிதம்). அலி-பேடு,இது ஆணுருவும் பெண்ணுருவு மல்லாதவுரு, இவ்வுருவில் பெண்ணிலக்கணமதிகரித்திருந்தால் பெண்பேடு எனவும், ஆணிலக்கண மதிகரித்திருந்தால் ஆண்பேடு எனவும் கூறுவர். சுவை-உணவின் இரதம். கரு என்றது - கருப்பாசயப்பை. (கருரு)

உயிர்படுங் கருவற் றைநாட் குன்றியை யொக்கு
மியலுமைந்திற் புற்புத மொக்கு மேழின்மெல் லூனும்
பயிறரும் பதினன் கிற்செந் நீர்பர வூனுஞ்
செயிரிலை யைந்திற் பீசமுற் றிடுஞ்சிறி தாக.

(ப - ரை.) உயிர்படும்கரு - உயிர்பொருந்துங் கருவானது, அற்றைநாள் - அன்றையதினத்தில், குன்றியை ஒக்கும் - குன்றிமணியை நிகர்க்கும், இயலும் ஐந்தில் - பொருந்திய ஐந்தாநாளில், புற்புதம் ஒக்கும் - நீர்க்குமிழியை நிகர்க்கும், ஏழில்-ஏழாநாளில், மெல்ஊன் ஆம் - மெல்லியமாமிசமாகும், பயில் தரும்பதினன்கில் - வழங்குகின்ற பதினாலாநாளில், செந்நீர்பரவு ஊன் ஆம்- உதிரம்பரவிய மாமிசமாகும், செயிர் இல் ஐயைந்தில் - குற்றமில்லாத இருபத்தைந்தாநாளில், சிறிதாகபீசம் உற்றிடும் - அற்பமாக பீசமுண்டாகும். எ - று.

(பொ - ரை.) உயிர்பொருந்துங் கருவானது அன்றையதினத்தில்குன்றிமணியை நிகர்க்கும், பொருந்திய ஐந்தாநாளில் நீர்க்குமிழியை நிகர்க்கும், ஏழாநாளில் மெல்லியமாமிசமாகும், வழங்குகின்ற பதினாலாநாளில் உதிரம் பரவிய மாமிசமாகும், குற்றமில்லாத இருபத்தைந்தாநாளில் அற்பமாக பீசமுண்டாகும். எ - று.

(வி - ரை.) உயிர்படுங்கரு என்றது சுக்கிலத்தை. புத்புதம்-புற்புதம் எனத்திரிந்து வந்தது. பீசம் - விதை. (கஙச)

சிரங்க ளம்புற மென்புநாண் முப்பதிற் செறியுங்
கரங்க டாளடி மருங்குமு னிருமதி காணுந்
தரங்கொள் சந்திகள் வடிவின்மும் மதியிடைச் சாரும்
வரங்கொண் மாதராய் விரல்களுன் மதியிடை மருவும்.

(ப - ரை.) வரம்கொள்மாதராய்-மேன்மையைக் கொண்டபெண்ணே, நாள் முப்பதில் - முப்பதாநாளில், சிரம்களம்புறம் என்புசெறியும் - தலை கழுத்து முதுகு எலும்பு என்பவைகள் உண்டாகும், இருமதி - இரண்டாமாதத்தில், கரங்கள் தாள் அடி மருங்கு முன் காணும் - கைகள் பாதம்புறவடி இடை முற்புறம் என்பவைகள் தோன்றும், மும்மதியிடை - மூன்றுமாதத்தில், தரம்கொள் சந்திகள்வடி வில்சாரும் - உறுதியைக்கொண்ட சந்திகள் உடலிற் பொருந்தும், நால்மதியிடை - நான்காமாதத்தில், விரல்கள் மருவும்-விரல்களுண்டாகும். எ - று.

(பொ - ரை.) முப்பதாநாளில் தலைகழுத்து முதுகு எலும்பு என்பவைகள் உண்டாகும், இரண்டாமாதத்தில் கைகள் பாதம் புறவடி இடை முற்புறம் என்பவைகள் தோன்றும், மூன்றுமாதத்தில் உறுதியைக்கொண்ட சந்திகள் உடலிற்பொருந்தும், நான்காமாதத்தில் விரல்கள் உண்டாகும், மேன்மையைக் கொண்டபெண்ணே. எ - று.

(வி - ரை.) சிரம், களம், சந்தி, வரம் என்பனவடசொற்கள். தாள் - பாதம். அடி-புறவடி. சந்தி - பொருத்து. (கஙரு)

நாசியா னனநகங் கன்னங் குய்யநன் னகையூன்
பேசுமைந் திலாறினிற் கன்னத் துளைபெறு மேழி
லாசி லாதபல் குறிகளும் விளங்கிட வமையு
நேச மாய்க்குத முந்திமற் றங்கமு நிரம்பி.

(ப - ரை.) பேசும் ஐந்தில் - சொல்லப்பட்ட ஐந்தாமாசத்தில், நாசி - மூக்கும், ஆநநம் - முகமும், நகம் - நகங்களும், கன்னம் - காதுகளும், குய்யம் - குய்யமும், நல்நகை - அழகியபற்களும், ஊன்-ஊனும், (உண்டாகும்,) ஆறினில் - ஆறுமாசத்தில், கன்னத்துளைபெறும் - செவித்தொளை யுண்டாகும், ஏழில் - ஏழாமாசத்தில், நேசமாய்-பொருத்தமாக, குதம் - குதமும், உந்தி - நாபியும், மற்ற அங்கமும் - மற்ற அவயவங்களும், நிரம்பி - நிரம்பப்பெற்று, ஆசு இல்லாத - குற்றமில்லாத, பல்குறிகளும் - பலகுறிகளும், விளங்கிட அமையும் - விளங்கும்படி நிறையும். எ - று.

(பொ - ரை.) சொல்லப்பட்ட ஐந்தாமாசத்தில், மூக்கும், முகமும், நகங்களும், காதுகளும், குய்யமும், அழகியபற்களும், ஊனும் உண்டாகும்.

ஆறுமாசத்தில் செவித்தொளேயுண்டாகும், ஏழாமாசத்தில், பொருத்தமாக, குதமும் நாபியும் மற்ற அவயவங்களும் நிரம்பப்பெற்று குற்றமில்லாத பல குறிகளும் விளங்கும்படி நிறையும். எ - று.

(வி - ரை.) நாசிகா, கர்ணம், குஹ்யம், என்னும் வடசொற்கள், முறையே நாசி கன்னம் குய்யம் எனத்திரிந்துவந்தன. ஆநநம் நகம் என்பனவும் வடசொற்களே. குய்யம் - ஆண்குறி பெண்குறிகள். பல் என்றதுபற்பீடத்தை. ஊன் - ஊனீர். அங்கம் - உறுப்பு. மற்ற அங்கம் என்பது மற்றங்கம் என நிலைமொழியீற்றகரம் தொகுத்தல் பெற்றுவந்தது. உந்தி-கொப்பூழ். (சகூசு)

ஓங்கி டும்பிரா ணன்முதல் வளிகளு முற்றுத்
தேங்கி டும்மதி யெட்டினற் றாய்நுகர் செறியூண்
பாங்கு றுஞ்சுவை யுந்திவா யகட்டுறும் பற்றி
வாங்கு மின்பதுன் பங்களு மனுதியா னுகரும்.

(ப - ரை.) மதி எட்டில் - எட்டாமாசத்தில், ஓங்கிடும் - மிகுந்த, பிராணன் முதல்வளிகளும் உற்று தேங்கிடும்-பிராணன் முதலாகிய வாயுக்களும் பொருந்தி நிரம்பும்,(அதற்குமேல்) நல்தாய் நுகர் செறி ஊண்பாங்கு உறும்-நல்ல தாயானவள் உண்ணுகின்ற மிகுந்தவுணவுகளினிடத்துப்பொருந்திய, சுவை - சுவையை, அகட்டு உறும் உந்திவாய் - தாய்வயிற்றில் கொப்பூழ்வாயிலாக, பற்றிவாங்கும் - பற்றியுட்கொள்ளும், இன்பதுன்பங்களும் - இன்பதுன்பங்களையும், மனுதியால் நுகரும் - மனமுதலியவற்றால் அநுபவிக்கும்.

(பொ - ரை.) எட்டாமாசத்தில் மிகுந்த பிராணன் முதலாகிய வாயுக்களும் பொருந்தி நிரம்பும், அதற்குமேல், நல்லதாயானவள் உண்ணுகின்ற மிகுந்தவுணவுகளிற் பொருந்திய சுவையை தாய்வயிற்றில் கொப்பூழ்வாயிலாகப்பற்றி உட்கொள்ளும், இன்பதுன்பங்களையும் மனமுதலியவற்றால் அநுபவிக்கும். எ - று.

(வி - ரை.) பாங்கு ஏழனுருபின் பொருளில் வந்தது, வாய் - வாயில் (வழி). அகடு - வயிறு, பிராணன் முதல் வளிகள் பிராணன் முதலிய தசவாயுக்கள், அவையாவன - பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தநஞ்சயன் என்பன, இவற்றுள் - இதயத்தியங்குவது பிராணன் என்றும், உச்சார்க்கத்தில் நிற்பது அபானன் என்றும், கந்தரசக்குழியிற் சந்திடை நிற்பது சமானன் என்றும், நாபியில் நிற்பது உதானன் என்றும், சரீரமுழுதும் வியாபித்திருப்பது வியானன் என்றும், நீட்டலும் முடக்கலும் பேசலும் செய்வது நாகன் என்றும், உரோமம் புளகித்தலும் இமைத்தலும் செய்வது கூர்மன் என்றும், முகத்திடை நின்று தும்மலும் சினமும் வெம்மையும் விளைப்பது கிருகரன் என்றும், ஓட்டமும் இளைப்பும் வெயர்த்தலும் விளைப்பது தேவதத்தன் என்றும், உயிர் நீங்கி

னும் தான் நீங்காமல் உடலை வீங்கச்செய்து தலைகிழித்துச்செல்வது தநஞ்சயன் என்றும் சொல்லப்படும். இன்பதுன்பங்கள் - சுகதுக்கங்கள். (கூஎ)

உற்றிடுங் கருப்பா சயப்பை யுறுத்து தன்முற்
சொற்றி டுந்துய ரழுந்திமுன் னிகழ்ச்சியுந் தோன்றப்
பற்றி டும்புவிப் பிறந்துநன் னெறிநின்று பவநீர்
வற்றிடச் செய்வா மென்றுள்ளிப் பிறக்கும்பின் மறக்கும்.

(ப - ரை.) உற்றிடும்-தான் அடைந்திருக்கிற, கருப்பாசயப்பை - கருப்பாசயப்பையானது, உறுத்துதல் முன் சொற்றிடும் துயர் அழுந்தி - உறுத்துதல் முதலாகச் சொல்லப்பட்ட துக்கசாகரத்தில் முழுகி, முன் நிகழ்ச்சியும் தோன்ற - பூர்வஜந்மவிருத்தாந்தமும் தோன்றுதலால், பற்றிடும்புவி பிறந்து - (பாசபந்தங்கள்) தொடர்தற்குரிய பூமியிற்பிறந்து, நல்நெறிநின்று - நல்வழியில் நின்று, பவநீர் - பவசாகரத்தை, வற்றிடச்செய்வாம் என்று - வற்றச்செய்வோமென்று, உள்ளி பிறக்கும் - நினைத்துக்கொண்டே பிறக்கும், பின்மறக்கும் - பிறந்தபின்னே மறந்துவிடும். எ - று.

(பொ - ரை.) தான் அடைந்திருக்கிற கருப்பாசயப்பையானது உறுத்துதல் முதலாகச்சொல்லப்பட்டதுக்க சாகரத்தில் முழுகி, பூர்வஜந்மவிருத்தாந்தமும் தோன்றுதலால், பாசபந்தங்கள் தொடர்தற்குரிய பூமியிற்பிறந்து நல்வழியில் நின்றுபவசாகரத்தை வற்றச்செய்வோமென்று நினைத்துக்கொண்டேபிறக்கும், பிறந்த பின்னே மறந்துவிடும். எ - று.

(வி - ரை.) கருப்பாசயப்பையுறுத்துதல் முதலாயின யாவையெனின், கருப்பாசயப்பையுறுத்துதல், அதில் சலம்பூரித்தல், உதராக்கினியால் வேதல், பிரசூதவாயு முறித்துத்தள்ளுதல், யோனித்துவாரத்தில் நெருக்குண்டல் என்பனவாம். அழுந்தி என்றதற்கேற்ப, துயர்சாகரமாக்கியுரைக்கப்பட்டது. முன்னிகழ்ச்சி - முற்சநநங்களில் இவ்வாறிருந்தோமென்னு முணர்வு. பவநீர் என்பதில் நீர் சினையாகு பெயராய்ச் சாகரத்தையுணர்த்திற்று. பாசபந்தங்களுக்காகரமாதலால், பூமியை, "பற்றிடும் புவி" என்றார். நன்னெறியென்றது ஞானமார்க்கம், பவநீர்வற்றிடச்செய்வது அதுவேயாதலான். (கூஅ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இவ்வித மின்ப முத்தி யெய்திடுங் கார மாறு
தெவ்வநோ யுறும்பி றக்கு மிறக்குமித் துயர மோர்ந்த
செவ்விய மனத்தர் மாயன் றிருவடிப் புணையாற் சென்மப்
பெளவ மேழையுங் கடப்பர் பரிந்துசோ காப்பர் மற்றோர்.

(ப - ரை.) இவ்விதம் - இவ்விதமாக, இன்பம் - இன்பத்தைத்தருகிற, முத்தி எய்திடும் காரம் - முத்தியையடைகிற வழைக்கும், மாறுது - இடையறுமல், எவ்வம் நோய் உறும் - தாழ்வாகிய துன்பங்களையடையும், பிறக்கும்

இறக்கும் - பிறத்தல் இறத்தல்களைச்செய்யும், இத்துயரம் ஓர்ந்த-இந்தத்துன்பங்களையாராய்ந்தறிந்த, செவ்விய மனத்தர் - செவ்வையாகிய மனத்தை யுடையாராகிய ஞானவான்கள், மாயன் - திருமாலின், திருவடி புணையால்- திருவடியாகிய புணையைக்கொண்டு, சென்மம் - பிறவிகளாகிய, பௌவம் எழையும் கடப்பர் - எழுகடல்களையுங்கடப்பார்கள், மற்றோர் - மற்றவர்கள், பரிந்து சோகாப்பர் - வருந்திச்சோகாப்பார்கள். எ - று.

(பொ - ரை.) இவ்விதமாக இன்பத்தைத்தருகிற முத்திநிலையயடை கிற வரைக்கும் இடையறாமல் தாழ்வாகிய துன்பங்களையடையும், பிறத்தல் இறத்தல்களைச்செய்யும், இந்தத்துன்பங்களை யாராய்ந்தறிந்த செவ்வையா கிய மனத்தையுடையவராகிய ஞானவான்கள் திருமாலின் திருவடியாகிய புணையைக்கொண்டு, பிறவிகளாகிய எழுகடல்களையும் கடப்பார்கள், மற் றவர்கள் வருந்திச்சோகாப்பார்கள். எ - று.

(வி - ரை.) இன்பமுத்தியென்பதில் இன்பம் இயற்கையடை, முத்தி - மோக்ஷம், காறும் - வினையெச்சப் பொருடருவதோரிடைச்சொல். பரிசுத்த மனத்தர்க்கன்றி இப்பிறவித்துன்பவாராய்ச்சி யேனையர்க் குண்டாகாதன்மை யின், "இத்துயரமோர்ந்த செவ்வியமனத்தர்" என்றார். மாயன் - ஆச்சரிய மானகுணசேஷ்டிதங்களையுடையவன். புணை இவ்விடத்து மரக்கலத்தை யுணர்த்தும். பிறவி யேழாகலாற் கடல்களேழுக்குமுவமையாயிற்று. சோகாப் பர் என்பதற்குப்பகுதி சோகா. இதற்குப்பொருள் துக்கித்தல். (கசுக)

நாடிக ளுரோமந் தந்த நகங்கள்வீ ரியமே பித்த
நீடிய கபநிணந் தோனெய்த் தோரூன் மூளை யின்ன
கூடிய விரண்டைந் நூறு தொடியெனக் கூறு நூல்க
ளோடிய விரண்டி யக்கக் குறுத்திய வளவை யின்றே.

(ப - ரை.) நாடிகள் - நாடிகள், உரோமம் - மயிர், தந்தம் - பற்கள், நகங்கள் - நகங்கள், வீரியம் - வீரியம், பித்தம் - பித்தம், நீடியகபம் - பெரி தாகியகபம், நிணம் - நிணம், தோல் - தோல், நெய்த்தோர் - உதிரம், ஊன்- மாமிசம், மூளை - மூளை, இன்ன - இவைபோல்வனபிறவும், கூடிய இரண்டு ஐந்நூறுதொடியென - சேர்ந்தஆயிரம்பலமாமென்று, நூல்கள்கூறும்-நூல் கள் சொல்லாநின்றன, ஓடிய இரண்டு இயக்கக்கு - ஓடிய இரண்டியக்கங் களுக்கும், உறுத்திய அளவைஇன்று - சொல்லப்பட்ட அளவையில்லை. எ-று.

(பொ - ரை.) நாடிகள், மயிர், பற்கள், நகங்கள், வீரியம், பித்தம், பெரி தாகிய கபம், நிணம் - தோல், உதிரம் - மாமிசம், மூளை, இவைபோல்வன பிறவும், சேர்ந்த ஆயிரம்பலமாமென்று நூல்கள் சொல்லாநின்றன, ஓடிய இரண்டு இயக்கங்களுக்கும் சொல்லப்பட்ட அளவையில்லை. எ - று.

(வி - ரை.) நாடிகள் - நரம்புகள், வீரியம் - விந்து (சுக்கிலம்.) கபத் திக்கு நீளுங்குணமுண்மையால், "நீடியகபம்" என்றார். மூளையென வாளா

கூறினாராயினும் சிரமூளை என்புமூளை யென்னு மிரண்டுங்கொள்க. இரண்டு ஐந்நூறு - ஆயிரம். தொடி பலமென்னும் ஓரெடுத்தலளவை. இயக்கம் - சஞ்சாரம், (இடைபிங்கலைகளின் ஓட்டம்). உறுத்துதல் - வற்புறுத்தல். அளவை-பிரமாணம். இயக்கம் என்பதற்கு இயங்குபகுதி. (கசுo)

புலைத்தொழில் பயின்ற விந்தப் புன்புலாற் சுமையை நாளு
நிலைத்ததென் றெண்ணி யெண்ணி நேயம்வைத் துறுகாப் பாற்றி
மலைத்தலைந் துழல்வ தெல்லா மடமையோர் செய்கை யாகுஞ்
சிலைத்தொழில் விளக்கி யாங்குச் செறிகரும் புருவப் பாவாய்.

(ப-ரை.) சிலைத்தொழில்-வில்லின் செய்கையை, விளக்கியாங்கு-விளங்கக் காட்டினாற்போல, செறி-நெருங்கிய, கருபுருவம்-கருமையாகிய புருவத்தை யுடைய, பாவாய்-பாவைபோலும் உருவமுடைய பெண்ணே ! புலைத்தொழில்பயின்ற - நீசத்தன்மைமிகுந்த, இந்த - இந்த, புல் - அற்பமாகிய, புலால் சுமையை - மாமிசச்சுமையை, நாளும் - நாள்தோறும், நிலைத்தது என்று - நிலைபெற்றதென்று, எண்ணி யெண்ணி-நினைத்துநினைத்து, நேயம்வைத்து - (இதனிடத்து) அன்புவைத்து, உறுகாப்பு ஆற்றி - மிகுந்தகாத்தலைச் செய்து, மலைத்து - பிரமித்து, அலைந்து உழல்வது எல்லாம்-அலைந்துதிரிவதெல்லாம், மடமையோர் - அறிவீனரது, செய்கை ஆகும் - தொழிலாகும். எ - று.

(பொ - ரை.) வில்லின் செய்கையை விளங்கக்காட்டினாற்போல நெருங்கிய கருமையாகிய புருவத்தையுடையபாவைபோலும் உருவமுடையபெண்ணே! நீசத்தன்மை மிகுந்த இந்த அற்பமாகிய மாமிசச்சுமையை நாள்தோறும் நிலைபெற்றதென்று நினைத்து நினைத்து இதனிடத்துஅன்புவைத்து மிகுந்த காத்தலைச்செய்து பிரமித்து அலைந்து திரிவதெல்லாம் அறிவீனரது தொழிலாகும். எ - று.

(வி - ரை.) புலை - ஐகாரவிகுதிபெற்ற பண்புப்பெயர். இவ்வுடம்பு புழுமலிநோய்க்கு இடமாயிருத்தலால் 'புன்புலால்' என்றார். நிலையில்லாத உடம்பை நிலையுள்ளது என்று நினைத்தலால் 'மலைத்து' என்றார். நிலைத்தது ஒன்றன்பாற்படர்க் கைவினையாலணையும்பெயர். உறு-உரிச்சொல். மலைத்து இறந்தகால வினையெச்சம். எண்ணியெண்ணி என்னும் அடுக்கு மிகுதிப் பொருளது. உழல்வது என்னும் தொழிற்பெயர் ஆகுபெயராய் அவர் செய்யும் கருமங்களையுணர்த்தி நின்றது. மடமையோர் மடமையென்னும் பண்படியாகப் பிறந்தபலர் பாற்படர்க்கைப் பெயர். சிலைத்தொழில் என்றது வில்லைப்போலவளைந்த என்றபடி. மரங்கள் அடர்ந்தகாட்டை அடர்ந்தகாடு என்பதுபோல மயிர் செறிந்துள்ள புருவத்தைச் செறிபுருவம் என்றார். செறி என்னும் வினைத்தொகை வினைச்சொல் புருவம்என்னும் நிலப்பெயர்கொண்டது. உடலைப்பாதுகாத்தல் மடமையோர் செய்கையென்பதை. "புழுநெளிந்து புண்ணழுகி யோசனைநாறுங் - கழிமுடை நாற்றத்தவேனும் - விழ

லர் - விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்-சுளியார் சுமை போடுதற்கு" என்பதனுலுமறிக. (கசாக)

தரித்திர மென்று பல்காற் சாற்றி னையெதிர் மறுத்தல்
பரித்திடு மச்சொ றன்மைப் பன்மைமுற் ருக வல்லோர்
விரித்துரை பொருணீ சற்றும் விளங்கிட வுணர்ந்தா யல்லை
யரித்தடங் கருங்கண் மாதே யாதலி னிலைத்த தன்றால்.

(ப-ரை.) தரித்திரம்என்று———, பல்கால் சாற்றினை-பலதரஞ்சொல்லினை, எதிர்மறுத்தல் பரித்திடும் - எதிர்மறுத்தற்பொருளைக் கொண்டிருக்கிற, அச்சொல் - அந்தச்சொல்லை, தன்மைப்பன்மை முற்றாக-தன்மைப்பன்மைவினை முற்றாக, வல்லோர்-(புலமையில்) வல்லவர், விரித்து உரை-விரித்துச் சொல்லுகிற, பொருள் - பொருளை, நீ - நீ, சற்றும் - சிறிதும், விளங்கிட - விளக்கமாக, உணர்ந்தாய் அல்லை - அறிந்தாயல்லை, அரி - செவ்வரி பரந்த, தடம் - பெருமையும், கருமை - கருமையுமுள்ள, கண் - கண்களையுடைய, மாதே - பெண்ணே! ஆதலின் - ஆதலால், நிலைத்தது அன்று - அப்பொருள் நிலைத்திருப்பது அல்ல. எ - று.

(பொ - ரை.) தரித்திரம் என்றுபலதரஞ் சொல்லினை; எதிர்மறுத்தற் பொருளைக் கொண்டிருக்கிற அந்தச்சொல்லைத் தன்மைப்பன்மை வினைமுற்றாக (புலமையில்) வல்லவர் விரித்துச்சொல்லுகிற பொருளை நீ சிறிதும்விளக்கமாக அறிந்தாயல்லை. செவ்வரிபரந்த பெருமையுங் கருமையுமுள்ள கண்களையுடைய பெண்ணே! ஆதலால் அப்பொருள் நிலைத்திருப்பது அல்ல.

(வி - ரை.) மனத்திருத்தி யுடையோனுக்குத் தரித்திரம் இல்லையென்பது கருத்து. மேலோர் இதுபற்றியே வறுமையைத் தரித்திரோம்என்னும் எதிர்மறைத் தன்மைப்பன்மை வினைமுற்றாக்கிக் கூறுவர் என்பது கருத்து. தரித்திரம் என்னும் வடமொழியைத் தமிழ்மொழி போலப்பிரித்துப்பொருள் கொள்ள அமைத்தது சொன்னயங்கருதியென்க. விளங்கு என்னும் முதனிலைத்தனிவினை இடு என்னும் பகுதிப்பொருள் விகுதிபெற்று விளங்கிடு என முதனிலையாகி செயவெனெச்ச விகுதியாகிய அகரவிகுதிபுணர்ந்து விளங்கிடஎன நின்றது. சற்றும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. உரைபொருள்-வினைத்தொகை நிலைத்தொடர். யாக்கை நிலையாமை, செல்வநிலையாமை, இளமை நிலையாமை என்பவற்றுள் செல்வமுமொன்றாகலின் செல்வத்தை விதந்து கூறினர். சாற்றினை - இறந்தகால முன்னிலையொருமை வினைமுற்று. அல்லை - அன்மை என்னும் பண்படியாகப்பிறந்த எதிர்மறை முன்னிலைக்குறிப்பு வினைமுற்று. தடம் - உரிச்சொல். இதனைத் தடவு எனப் பிரித்தலுமுண்டு. அன்று, ஆல் - அசைநிலைகள். (கசாஉ)

பாற்கட லடுத்த மீனப் பால்விரும் பாது மற்ற
வேற்குமா விரும்பி னற்போ லெம்பிரான் றிருமுன் சார்ந்து

நாற்கதி கடக்கு மின்பச் செல்வத்தை நண்ணி டாமற்
சேற்கருங் கண்ணாய் துன்பச் செல்வமோ நண்ணு வேன்யான்.

(ப - ரை.) சேல் - சேல்மீன்போன்ற, கருகண்ணாய் - கருமையாகிய கண்களையுடையாளே, பால்கடல் - திருப்பாற்கடலை, அடுத்த - அடைந்திருக்கிற, மீன் - மீன்கள், அப்பால் விரும்பாது - அந்தப்பாலை விரும்பாமல், மற்று - வேறு சிலவற்றை, எற்குமாறு - எற்றபடி, விரும்பினாற்போல் - விரும்பினாற்போல, எம்பிரான் - எமபெருமானாகிய கண்ணனது, திருமுன் சார்ந்து - சந்நிதியையடைந்து, நால்கதி கடக்கும் - நாற்கதிகளையுங் கடத்தற்குரிய, இன்பச் செல்வத்தை - சுகரூபமாகிய செல்வத்தை, நண்ணிடாமல் - அடையாமல், யான் - நான், துன்பச்செல்வமோ - துக்கரூபமாகிய செல்வத்தையோ, நண்ணுவேன் - அடைவேன். எ - று.

(பொ - ரை.) சேல்மீன்போன்ற கருமையாகிய கண்களையுடையாளே! திருப்பாற்கடலை யடைந்திருக்கிற மீன்கள், அந்தப்பாலை விரும்பாமல், வேறு சிலவற்றை விரும்பினாற்போல, எம்பெருமானாகிய கண்ணனது சந்நிதியை யடைந்து நாற்கதிகளையுங் கடத்தற்குரிய சுகரூபமாகிய செல்வத்தை அடையாமல், நான் துக்கரூபமாகிய செல்வத்தையோ அடைவேன். எ - று.

(வி - ரை.) பாற்கடல் - எழுகடல்களில் ஒன்று. பாற்கடலில் அறிதுயில் செய்கின்ற இறைவனுக்கு க்ஷீராப்திநாதன் என்று திருநாமம். பாற்கடல் கிருஷ்ணபகவானுக்கும், மீன்குசேலருக்கும் உவமை. நாற்கதியாவன தேவகதி, மக்கட்கதி, விலங்குகதி, நரககதி என்பன. இந்த நாற்கதிகளைக்கடந்து நிற்கும் நிலையே முத்தியாகையால் 'நாற்கதிகடக்கும் இன்பச்செல்வம்' என்றார். இவ்வுலகத்தில் இன்பமும் செல்வமும் உண்டு என்பவர்களை மறுப்பதற்கு முத்தியை 'இன்பச்செல்வம்' என்றார். சேல்மீன் கண்ணுக்குத்தொழில் உருவங்களால் உவமை. இவ்வுலகத்தில் எல்லாப்பொருள்களும் துன்பத்திற்கே ஏதுவாயிருத்தலால் அவற்றைத் 'துன்பச்செல்வம்' என்றார். இக்கருத்தை. "யாதனின் யாதனின் நீங்கியான் நோதல் - அதனின் அதனின் இலன்'' என்னுந்திருக்குறளானும் அறிக. (கசுரு)

மானமற் றிழிவு பூண்டு வளமனைக் கடைதோ றெய்தி
ஈனமுற் றிரந்திரந் திவ்வுடல் பருத்தி டச்செய் தாலுந்
தூநகைக் கரிய வாட்கட் சுடர்த்தொடீ நிலைப்ப தன்று
ஊனமார் வெள்ள நீரிற் பிறந்திடுங் குமிழி போலும்.

(பதை - ரை.) தூநகை - வெண்மையாகிய பற்களையும், கரிய - கருமையாகிய, வாள் - வாள்போன்ற, கண் - கண்களையும், சுடர்தொடீஇ - ஒளியுள்ள வளையலையுமுடையாளே! மானம் அற்று - மானமழிந்து, இழிவுபூண்டு - தாழ்வுபூண்டு, வளம் - வளமாகிய, மனை - வீடுகளின், கடைதோறு எய்தி - கடைவாயில்கள்தோறும்சென்று, ஈனம் உற்று - இழிவடைந்து, இரந்து இரந்து -

யாசித்துயாசித்து, இ உடல் - இந்தவுடம்பை, பருத்திடச்செய்தாலும் - பெருக்கப்பண்ணினாலும், நிலைப்பது அன்று - (இந்தவுடம்பு) நிலைத்திருப்பதல்ல, (மற்றென்னெனின்) பேனம் ஆர் - நுரைநிரம்பிய, வெள்ளநீரில்-நீர்ப்பெருக்கில், பிறந்திடும் - தோன்றுகின்ற, குமிழிபோலும் - குமிழிகளை நிகர்த்து அழியும். எ - று.

(பொ - ரை.) வெண்மையாகிய பற்களையும் கருமையாகிய வாள்போன்ற கண்களையும் ஒளியுள்ளவளையலையு முடையாளே! மானமழிந்து தாழ்வு பூண்டுவெளமாகியவீடுகளின் கடைவாயில்கள்தோறும் சென்றுஇழிவடைந்து யாசித்துயாசித்து, இந்தஉடம்பைப் பெருக்கப்பண்ணினாலும் (இந்தஉடம்பு) நிலைத்திருப்பதல்ல. (மற்றென்னெனின்) நுரைநிரம்பிய நீர்ப்பெருக்கில் தோன்றுகின்ற குமிழிகளை நிகர்த்து அழியும். எ - று.

(வி - ரை.) மனைக்கடை-உருப்புத்தற் கிழமைப்பொருளதாகிய ஆறாம் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். கடை - இடம். இது வீட்டின்முன்னிடத்துக் காயிற்று. தோறும்-பன்மைப்பொருளில்வரும் ஏழாம்வேற்றுமை உருபிடைச்சொல். தூ - பண்புச்சொல். நகை - தொழிற்பெயர். நகு-பகுதி ஐ - விகுதி, உகரக்கேடுசந்தி. விளங்குதல் என்பதுபொருள். இது தொழிலாகுபெயராய்ப் பல்லையுணர்த்தியது. வாட்கண் உவமைத்தொகை. சுடர்த்தொடீஇ - இரண்டாம் வேற்றுமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். சுடரையுடைய தொடியையணிந்தவளே என விரியும், இது அளபெடுத்து விளியேற்றது. இது இன்னிசையளபெடை. பேநம் - வடமொழி. வெள்ளநீர் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வெள்ளம் (நீர்ப்பெருக்கு) சிறப்புப்பெயர். வெள்ளநீர் என்பதை கடல் என்னும் பொருளதாகிய ஒருமொழியாகக்கொண்டு பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர் எனினுமாம், வெள்ளமாகிய நீரையுடையது எனவிரியும். நேரம்தோன்றி அழியும் இழிவுதோன்ற "வெள்ளநீரிற் பிறந்திடுங் குமிழிபோலும்" என்றார். "படுமழைமொக்குளிற் பல்காலுந்தோன்றிக் - கெடுமிதோர் யாக்கையென்றெண்ணி" என்றார் பிறரும்.

நன்றியி லுடலைப் போற்ற னன்றுளார் செய்கை யன்று
வன்றி கழ்மலத் தழுந்தி மாசுக மென்றாற் போல
வொன்று மிக்குடும்பச் சேற்றி லுழன்றிடே னுழன்றி டேன்யா
னென்றுரைத் திறுந்தான் பற்றி லிருந்தவ ரேறு போல்வான்.

(ப - ரை.) நன்றிஇல் - நன்மையில்லாத, உடலை - உடம்பை, போற்றல்-காப்பாற்றுதல், நன்று உள்ளார்-நன்மையுடையோரது, செய்கை அன்று-தொழிலல்ல, வல்திகழ்மலத்து - வலிமைவிளங்குகின்ற மலத்தில், அழுந்தி - ஆழ்ந்து, மாசுகம் என்றாற்போல - பெரிய இன்பமென்று சொல்வதுபோல, ஒன்றும் - பொருந்திய, இ - இந்த, குடும்பச்சேற்றில் - சமுசாரமாகிய சேற்றில், யான் உழன்றிடேன் உழன்றிடேன் - யான் சுழலேன் சுழலேன், என்று

உரைத்து - என்றுசொல்லி, இறுத்தான் - முடித்தான், (யாரெனின்) பற்று இல்-பற்றற்ற, இருதவர் - பெரியதவத்தினை யுடையோர்களுள், ஏறுபோல்வான் - ஆண்சிங்கம் போல்பவனாகிய குசேலன். எ - று.

(பொ - ரை.) நன்மையில்லாத உடம்பைக்காப்பாற்றுதல் நன்மையுடையோரது தொழிலல்ல. வலிமைவிளங்குகின்ற மலத்தில், ஆழ்ந்து, பெரிய இன்பமென்று சொல்வதுபோலப் பொருந்திய இந்தச்சமுசாரமாகிய சேற்றில், யான் சுழலேன், சுழலேன், என்றுசொல்லி முடித்தான் (யாரெனின்) பற்றற்ற பெரியதவத்தினை யுடையோர்களுள் ஆண்சிங்கம் போல்பவனாகிய குசேலன். எ - று.

(வி - ரை.) உடல் தொழிற்பெயர். உடு - பகுதி. உகரக்கேடுசந்தி. அல் - விகுதி - இது உயிருக்குச் சட்டைபோல்வதாகிய தேகத்துக்குத் தொழிலாகுபெயர். தன்னைப்போற்றி வளர்க்கும் உயிருக்குமாறாய் மும்மலங்களின் வழிப்பட்டுத் தீயகருமங்களைச் செய்தலால் 'நன்றியில் உடல்' என்றார். 'உடலைப்போற்றல் நன்றுளார் செய்கையன்று' என்றமையால் உயிர்முத்தியடைவதற்கேற்ற சற்கருமங்களைச்செய்தல் அவர் செய்கையென்பதாயிற்று. மலம் என்றது காமம், வெகுளி, மயக்கங்களாகிய முக்குற்றங்களை. இவையே மேலுமேலும் பலபிறவிகளை யுண்டாக்கிப் பலதீமைகளைச் செய்தலால் 'வன்றிகண்மலம்' என்றார். அம்மலம் அநாதியே இறைவனை யுணர்த்தாது உயிரைமறைத்தலின் அவ்வாறு கூறினாரெனினுமாம். திகழ் என்பது திகள் எனமருவிளகரம் மெல்லினத்தின்முன்ணகரமாகத் திரிந்துவந்தது. குடும்பம் மிகுந்தசுகம் விளைப்பதுபோற்காட்டி, பலதுன்பங்களை உண்டாக்கலால் 'மாசுகமென்றாற்போல வொன்றுமிக்குடும்பச்சேறு'என்றார் 'குடும்பச்சேறு', உருவகமாகையால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. உழன்றிடேன். எதிர்மறைத்தன்மை யொருமைவினைமுற்று. உழன்றிடேன் உழன்றிடேன் என்னும் அடுக்கு அவலம். உரைத்திறுத்தான் ஒருசொல்லின் தன்மையது. இறுத்தான் என்பதற்கு விடைகூறினான் எனினும் அமையும். இறுத்தல் - விடைகூறல். இன்மை என்னும் பண்புப்பெயரின் விகாரமாகிய இல் என்பது தவரேறு என்பதனோடு பண்புத்தொகையாய்ப் புணர்ந்தது. (கசரு)

அந்தண னுரைத்த மாற்ற மனைத்துமஞ் செவியி லேற்று
நந்தலி லாண்மை யீதென் றுணர்ந்துந்தா னயந்து பெற்ற
மைந்தர்பால் வைத்த வாசை மயக்கறா ளாகிப் பின்னும்
புந்தியின் விரும்பிப் பாதம் போற்றிநின் றிதனைக் கூறும்.

இதுமுதல் கருகூ - ஆம் செய்யுள்வரையும் குசேலருக்கு அவர்மனைவி பொருளுக்காக முயற்சிசெய்தல் வேண்டும் எனக்கூறுகின்றாள் என்பது.

(ப - ரை.) அந்தணன் உரைத்த - (குசேலன் என்னும்) வேதியன்சொன்ன, மாற்றம் அனைத்தும் - சொற்களெல்லாவற்றையும், அம் - அழகிய,

குசேலரிடம், அவர் மனைவி தமக்குற்ற வறுமையைச் சொல்லிக் கொள்வது.

செவியில் ஏற்று-காதினாற்கேட்டு, ஈது - இது, நந்தல்இல் - கெடுதலில்லாத, உண்மை என்று - சத்தியமென்று, உணர்ந்தும் - அறிந்தும், தான் நயந்து பெற்ற - தான்விரும்பிப்பெற்ற, மைந்தர்பால் - புதல்வரிடத்து, வைத்த - வைத்த, ஆசைமயக்கு - ஆசையும் மயக்கமும், அருள்ஆகி - நீங்காதவளாகி, பின்னும் - மேலும், புந்தியின் விரும்பி - மனத்தால்விரும்பி, பாதம்போற்றி நின்று-(அவரது) அடிவணங்கிநின்று, இதனைகூறும் - இதனைச்சொல்வாள்.

(பொ-ரை.) (குசேலன் என்னும்) வேதியன்சொன்ன சொற்களெல்லாவற்றையும், அழகியகாதினாற்கேட்டு, இது கெடுதலில்லாதசத்தியமென்று அறிந்தும், தான்விரும்பிப்பெற்ற புதல்வரிடத்து வைத்த ஆசையும் மயக்கமும் நீங்காதவளாகி, மேலும் மனத்தால்விரும்பி (அவரது) அடிகளைவணங்கி நின்று இதனைச் சொல்வாள். எ - று.

(வி-ரை.) மாற்றம் என்னும் பால்பகாவஃறிணைப்பெயர் அனைத்தஎன்பதைச்சார்ந்து நின்றமையால் பலவின்பால் என்றறிக. "தொடர்ந்து மும்மலமுருக்கிவெம்பவக்கட ஞெலையக் - கடந்துளோர்களுங் கடப்பரோமக்கண் மேற்காதல்" என்றிருத்தலால் குசேலர்சொல்லியவை உண்மையென்றறிந்தும் மயக்குருளாயினள். மைந்தர்பால் என்பதில் பால் ஏழனுருபு. மயக்கு-அவிச்சை. (அஞ்ஞானம்) அதுகாரணமாகவுண்டாவது ஆசை. அருள் - எதிர்மறைப் பெண்பால் வினையாலணையும் பெயர். புந்தி - புத்தியெனும் வடமொழியின் சிதைவு. செய்யுளாகையால் இதனை யெனச்சுட்டுப்பெயர் முன்வந்தது. கூறும் செய்யுமென் வாய்பாட்டு வினைமுற்று. (கசசு)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கலைமுழு தோர்ந்து கரிசெலா மறுத்த காந்தனே பருமணி யரவத், தலைகிடந் திமைக்குந் தாத்திரி யதனிற் சாற்றருந் தக்க நன் முயற்சி, யுலைவறப் புரியா வொருவனுக் கெங்ங னுற்றிடுஞ் செல்வநன் னிலத்தை, நிலைபெற வுழுது வித்திலான் றனக்கு நீள் பய னுற்றிடுங் கொல்லோ.

(ப-ரை.)கலைமுழுது ஓர்ந்து-நூல்கள்முழுதும் ஆராய்ந்து,கரிசுஎலாம் அறுத்த-குற்றங்களை யெல்லாம் சேதித்த, காந்தனே-நாயகனே, பருமணி-பெரிய மாணிக்கத்தையுடைய, அரவம் - (ஆதிசேடனென்னும்) பாம்பின், தலைகிடந்து - தலையின்மீதுகிடந்து, இமைக்கும் - பிரகாசிக்கிற, தாத்திரியதனில் - பூமியில், சாற்று அரு - சொல்லுதற்கரிய, தக்க - தகுதியாகிய, நல்முயற்சி-நல்ல முயற்சியை, உலைவு அறபுரியா ஒருவனுக்கு - கெடுதலில்லாமற் செய்யாத ஒருவனுக்கு, செல்வம் - பாக்கியம், எங்ஙன்உற்றிடும்-எவ்வாறுகிடைக்கும், நல்நிலத்தை - நல்லபூமியை, நிலைபெற உழுது - நிலையாக உழுதலைச் செய்து, வித்திலான்தனக்கு - விதைவிதையாதவனுக்கு, நீள்பயன்-பெரும்பயன், உற்றிடும் கொல்லோ - கிடைக்குமோ. எ - று.

(பொ - ரை.) நூல்கள் முழுதும் ஆராய்ந்து குற்றங்களை யெல்லாம் சேதித்த, நாயகனே, பெரியமாணிக்கத்தையுடைய (ஆதிசேடனென்னும்) பாம்பின் தலையின்மீது கிடந்து பிரகாசிக்கிற பூமியில், சொல்லுதற்கரிய தகுதியாகிய நல்ல முயற்சியைக் கெடுதலில்லாமற் செய்யாத ஒருவனுக்கு பாக்கியம் எவ்வாறு கிடைக்கும், நல்லபூமியை நிலையாக உழுதலைச்செய்து விதை விதையாதவனுக்குப் பெரும்பயன் கிடைக்குமோ. எ - று.

(வி-ரை.) ஊழின்படியாவும் முடியும் என்றகணவனை நோக்கி,முயற்சிசெய்யாதவர்க்குச் செல்வமும் உழுது பயிரிடாதவர்க்குத் தானியமும் எவ்வாறுவரும்என்று கூறினள் என்பது கருத்து."முயற்சி திருவினை ஆக்கும்" இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின் - நிலமென்னு நல்லா ணகும் என்னும் திருக்குறளுக்கு ஏற்க இவள் இவ்வாறு கூறினள். முழுது என்பதனீற்றில் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. எல்லாம் மூன்றிடத்துக்கும் பொதுவான விளியேலாதபெயர்,அது இங்குகரிசுஎன்னும் பால்பகா அஃறிணைப்பெயரை அடுத்துவந்தமையால் படர்க்கை. சாற்றமுதனிலைத் தொழிற்பெயர். சாற்ற எனப்பிரித்து அகரவிகுதி தொகுத்தலாய்வந்தசெயவெனெச்சம் எனினுமாம்,அந்தச்செயவெனெச்சமும் தொழிற்பெயர்ப் பொருளில்வந்ததாகவே கொள்க. தக்கநன்முயற்சி என்றமையால் தீயமுயற்சி செய்யலாகாதென்பது தோன்றுகின்றது. உலைவறப்புரிதலாவது முடிவுபெறுமளவும்முயலுதல். "உறுதிபயப்பகடை போகாவேனும் இறுவரைகாறு முயல்ப"என்றார் பிறரும். நிலைபெற உழுதலாவது நன்முய் உழுதல். கொல்-அசைநிலை. ஓகாரம்-வினா.

மானிட னொருவன் றனக்கருஞ் செல்வம் வாய்க்கவென் றநுதின முயற்சி தானுஞற் றுவனேற் கடவுளு மதனைத் தந்தருளு மதா லன்றோ, வானமே னறிஞர் திருவினை முயற்சி யாக்குமம் முயற்சியில் லாமை, யினமா ரின்மை புகுத்திடு மென்பர் யாரு நன் குணர்தர நவில்வார்.

(ப - ரை.) மானிடன்ஒருவன் - ஒருமனிதன், தனக்கு - தனக்கு, அரு செல்வம் வாய்க்க என்று - அருமையாகிய செல்வம் வாய்க்கவேண்டுமென்று, அநுதினம் - நாள்தோறும், முயற்சி உஞற்றுவனேல் - முயற்சிசெய்வானாயின், கடவுளும் - தெய்வமும், அதனை - அந்தச்செல்வத்தை, தந்தருளும் - தந்தருளும், அதால் அன்றோ - அதனாலன்றோ, மேனறிஞர் - (உலகத்துக்கு நன்மைசெய்வோர்) ஆகிய பெரியோருடையார், முயற்சி திருவினை ஆக்கும் - முயற்சியானது செல்வத்தையுண்டாக்கும், அம்முயற்சி இல்லாமை - அந்தமுயற்சி யில்லாமையானது, இனமார் - பொருந்திய, இன்மைபுகுத்திடும் - வறுமையில் புகுத்திவிடும், என்று - என்று, யாரும்-எல்லாரும்,நன்கு உணர்தர-நன்றாயறியும்படி, நவில்வார்-சொல்லுவார்.

(பொ - ரை.) ஒருமனிதன் தனக்கு அருமையாகியசெல்வம் வாய்க்கவேண்டுமென்று, நாள்தோறும் முயற்சிசெய்வானாயின், தெய்வமும் அந்தச்

செல்வத்தைத்தந்தருளும், அதனாலல்லவா (உலகத்துக்கு நன்மைசெய்வோர்) ஆகிய பேரறிவினையுடையோர், முயற்சியானது செல்வத்தையுண்டாக்கும், அந்த முயற்சியில்லாமையானது இழிவுபொருந்திய வறுமையில் புகுத்திவிடும் என்று எல்லாரும் நன்முயறியும்படி சொல்லுவார். எ - று. ஆல்-அசை.

(வி - ரை.) வாய்க்க - காரியப்பொருளதாகிய எதிர்காலச் செயவெனெச்சம், எல் - எனின் என்னும் எதிர்காலவினை யெச்சத்தின்மரூஉ. கடவுளும் என்றதில் உம்மை இறந்ததுதழீஇயதனுடன் உயர்வுசிறப்பு. அதால் அது என்னும் சுட்டுப்பெயர் அன்சாரியை பெறாதுவந்தது. சாரியைபெறின் அதனால் எனவரும். ஆக்கும், புகுத்திடும் - பிறவினைச்செய்யுமென் வாய்பாட்டு வினைமுற்றுகள். பொருளில்லாரை இல்லார் என்னும் உலகவழக்குப்பற்றித் தரித்திரத்தை இன்மை என்றார். 'ஆனபேரறிஞர்' என்பது "முயற்சி திருவினையாக்கு முயற்றின்மை - இன்மைபுகுத்திவிடும்" என்றதிருவள்ளுவர் முதலியோரை. (கசஅ)

மக்களே தேவர் நரகரென் றறிஞர் வகுக்குறு முயர்திணையாதி, தக்கபல் லுயிர்க்குஞ் சக்கர முதலாச் சாற்றுமைம் படைகரத் தேந்து, மைக்கடன் மேனி வள்ளலீ வேண் டியவீ வானெனவாய்மலர்ந் தனையான்,மிக்கபன் முயற்சி புரிகிலார் தமக்கவ் விண்ணவன் யாங்ஙன மருளும்.

(ப - ரை.) மக்கள் தேவர் நரகர் என்று———, அறிஞர் - அறிவுடையோர், வகுக்குறும் - வகுத்துச்சொல்லுகிற, உயர்திணை ஆதி - உயர்திணை முதலாக, தக்க - பொருந்திய, பல் உயிர்க்கும் - எல்லாவுயிர்களுக்கும், சக்கரம் முதல் ஆ - சக்கரம் முதலாக, சாற்றும் - சொல்லப்படுகிற, ஐம்படை - பஞ்சாயுதங்களையும், கரத்து ஏந்தும் - கையில்தாங்குகின்ற, மைகடல் - கருங்கடல் போன்ற, மேனி - திருமேனியையுடைய, வள்ளல் - பரமோதாரனை பகவான், வேண்டிய - வேண்டியவற்றை, ஈவான் என - கொடுத்தருள்வானென்று, வாய் மலர்ந்தனை - திருவாய் மலர்ந்தருளினை, மிக்க - மிகுந்த, பல் முயற்சி - பலவகை முயற்சிகளை, புரிகிலார்தமக்கு - செய்யாதவர்க்கு, அ விண்ணவன் - அந்தப்பகவான், யாங்ஙனம் அருளும் - எப்படி கிருபை செய்வான். எ - று.

(பொ - ரை.) மக்கள் தேவர் நரகர் என்று அறிவுடையோர் வகுத்துச் சொல்லுகிற உயர்திணை முதலாகப்பொருந்திய எல்லாவுயிர்களுக்கும், சக்கரம் முதலாகச்சொல்லப்படுகிற பஞ்சாயுதங்களையும் கையில் தாங்குகின்ற கருங்கடல்போன்ற திருமேனியையுடைய பரமோதாரனை பகவான் வேண்டியவற்றைக்கொடுத்தருள்வானென்று திருவாய் மலர்ந்தருளினை, மிகுந்த பலவகை முயற்சிகளைச்செய்யாதவர்க்கு அந்தப்பகவான் எப்படி கிருபை செய்வான். எ - று.

(வி - ரை.) திருமால் மக்கள் முதலிய உயர்திணையும் விலங்குமுதலிய அஃறிணையும் ஆகிய எல்லாவுயிர்களுக்கும் வேண்டியவைகளைக்கொடுப்பான் என்றாலும் முயற்சி செய்யாதவர்களுக்கு அவன் எவ்வாறு கொடுப்பான் என்பது கருத்து. மக்கள் பன்மைக்கேயுரிய உயர்திணைப்பெயர். சக்கரமுதலாகிய ஐம்படைகள்:—சக்கரம், தனுசு, வாள், தண்டு, சங்கம். இவற்றிற்கு முறையே சுதரிசனம், சாரங்கம், நாந்தகம், கௌமோதகி, பாஞ்சசன்னியம் என்பன திருநாமங்கள். கடல்மேனி - உவமைத்தொகை - வள்ளல் - வரையாது ஈவோன், இது விகுதிபெறாத உயர்திணை ஆண்பாற் படர்க்கைப்பெயர். வேண்டிய - இரண்டாம் வேற்றுமைத்தொகையாய் வந்த பலவின்பாற் படர்க்கை வினையாலணையும் பெயர், வேண்டியவற்றை எனவிரியும். வாய்மலர்ந்தனை - ஒரு சொல்லின் தன்மையதாகிய முன்னிலை யொருமை இறந்தகாலவினை முற்று. விகுதி - ஐ. புரிகிலார்தமக்கு - எதிர்மறைப் பலர்பாற்படர்க்கை வினையாலணையும்பெயர் - இதில்-தம், அ - சாரியைகள். யாங்ஙனம் தன்மையும் இடத்தையும் உணர்த்தும் பெயர். இதில் - ஙகரமெய், மூன்று சுட்டும் யாவினாவும் எகரவினாவும் ஆகிய இடைச்சொற்களின்பின் அகரத்தை ஒட்டி மொழிக்குமுதலாகும். (கசாக)

செயத்தகு முயற்சி செய்திடிற் செயிர்தீர் செய்யவண் மணாளனு மிரங்கி, வியத்தக வேண்டு மியாவையு மளிப்பன் விளம்புறு முயற்சிசெய் யானே, னயத்தகு போக மளித்திடா னென்று நானிலத் தறிஞர்நன் குரைப்ப, ருயத்தகு நெறிமா லடியுன லென்றே யோர்ந்தமா தவப்பெருங் கடலே.

(ப - ரை.) மால் - திருமாவின், அடி - திருவடியை, உன்னலே - தியானித்தலே, உய்யத்தகும் - உஜ்ஜீவிக்கத்தகுந்த, நெறி என்று - வழியென்று, ஓர்ந்த - ஆராய்ந்தறிந்த, மாதவம் - பெரியதவத்தினால், பெருகடலே - பெரிய கடல் போல்பவரே, செய்யத்தகும் முயற்சி - செய்யத்தகுந்த முயற்சிகளை, செய்திடின் - ஒருவன் செய்தால், செயிர்தீர் - குற்றமற்ற, செய்யவள் மணாளனும் - லக்ஷ்மீநாதனாகிய பகவானும், இரங்கி - திருவுளமிரங்கி, வியத்தக - வியக்கத்தக்கதாக, வேண்டும் யாவையும் - அவன் விரும்புகிற எல்லாவற்றையும், அளிப்பன் - தந்தருளுவன், விளம்புறும் - சொல்லப்படுகின்ற, முயற்சி செய்யானேல் - முயற்சியைச் செய்யானாயின், நயத்தகு - விரும்பத்தகுந்த, போகம் - போகங்களை, அளித்திடான் - தந்தருளான், என்று - என்று, நானிலத்து - உலகத்திலுள்ள, அறிஞர் - அறிவுடையோர், நன்கு உரைப்பார் - மிகுதியாகச்சொல்லுவார். எ - று.

(பொ - ரை.) திருமாலின் திருவடியைத்தியானித்தலே உஜ்ஜீவிக்கத் தகுந்த வழியென்று ஆராய்ந்தறிந்த பெரிய தவத்தினால் பெரியகடல் போல்பவரே, செய்யத்தகுந்த முயற்சிகளை ஒருவன்செய்தால் குற்றமற்ற லக்ஷ்மீநாதனாகிய பகவானும் திருவுளமிரங்கி, வியக்கத்தக்கதாக அவன் விரும்புகிற

எல்லாவற்றையும் தந்தருளுவன்; சொல்லப்படுகின்ற முயற்சியைச் செய்யாளுயின், விரும்பத்தகுந்த போகங்களைத் தந்தருளான் என்று உலகத்திலுள்ள அறிவுடையோர் மிகுதியாகச் சொல்லுவார். எ - று.

(வி - ரை.) செய்யவள் - செம்மையென்னும் பண்படியாகப் பிறந்த பெண்பாற் படர்க்கைப்பெயர். மணாளன் - மணவாளன் என்பதன்மரூஉ. வியக்க நயக்க என்னும் செயவெனெச்சங்கள் ஈறுகெட்டு வந்தன. உணல்-தொழிற்பெயர், பகுதிஉண். மால் - பெருமை, இதுபண்பாகு பெயராய்மா வரினும் பெரியனாகிய இறைவனை யுணர்த்தியது. மாதவம் உரிச்சொற்றொடர். 'மாலடியுனலே உயத்தகு நெறியென்று' என்பது அந்வயமாகையால் இதுகொண்டு கூட்டுப்பொருள்கோள். பெருந்தவமுடையவ ராகையால், "தவப்பெருங்கடலே" என்றான். (கருo)

முன்புநல் வினைசெய் தவர்முயற் றின்றி முன்னிய வெலா முண்ப ரென்னி, லின்பவா லரிசி முதலுப கரண மெலாமினி துடையவ ரேனும், வன்புறு மடுதன் முயற்சியில் லாமை வயிற் றெழு பசித்தழ லவிய, நன்பத மாமோ மறைமுழு துணர்ந்த நற்றவக் குணப்பெருங் குன்றே.

(ப - ரை.) மறைமுழுது உணர்ந்த - வேதார்த்தங்களை முழுதுமறிந்த, நல்தவம் - நன்மையாகியதவத்தையுடைய, பெரு - பெரிதாகிய, குணக்குன்றே - குணமலையே, முன்பு - முற்பிறப்பில், நல்வினைசெய்தவர் - புண்ணிய கருமஞ்செய்தவர், முயற்று இன்றி - முயற்சியில்லாமலே, முன்னிய எல்லாம் - நினைத்தவையாவையும், உண்பர் என்னில் - அனுபவிப்பரென்றால், இன்பம் - சரீரசுகத்தைத்தருகிற, வால் அரிமுதல் - வெள்ளிய அரிசிமுதலாகிய, உபகரணம் எல்லாம் - கருவிகளெல்லாவற்றையும், இனிது உடையவர் எனும் - நன்றாகவுடையவராயினும், வன்பு உறும் - வலிமிகுந்த, அடுதல் - சமைத்தலாகிய, முயற்சியில்லாமை - முயற்சியில்லாமல், வயிறு எழு - வயிற்றிலுண்டாகிற, பசிதழல் அவிய - பசியாகிய நெருப்புத்தணியும்படி, நல்பதம் ஆமோ - நல்லசோறாகுமோ. எ - று.

(பொ-ரை.) வேதார்த்தங்களை முழுதுமறிந்த நன்மையாகிய தவத்தையுடைய பெரிதாகிய குணமலையே, முற்பிறப்பில் புண்ணியகருமஞ் செய்தவர் முயற்சி யில்லாமலே நினைத்தவையாவையும் அனுபவிப்பரென்றால், சரீர சுகத்தைத்தருகிற வெள்ளிய அரிசிமுதலாகிய கருவிகளெல்லா வற்றையும் நன்றாகவுடையவராயினும் வலிமிகுந்த சமைத்தலாகிய முயற்சியில்லாமல் வயிற்றிலுண்டாகிற பசியாகிய நெருப்புத்தணியும்படி நல்ல சோறாகுமோ.

(வி - ரை.) முயற்று - தொழிற்பெயர். முயல் - பகுதி, து - தொழிற்பெயர் விகுதி, லகர தகரங்கள் றகரமானது சந்தி. வால் - பண்புப்பெயர். அரியே என்பதில் ஏகாரம் எண்ணுப்பொருளது. அரியே முதல் உபகரணம்

என்றது நெருப்பு விறகுநீர் முதலியவற்றை. பசியைத்தழல் என உருவகஞ் செய்ததற்கு ஏற்ப அவியென்னும் வினைகொடுத்தோதப்பட்டது. நற்றவம் என்றது மனத்துறவு, மெய்யுணர்வு, அவாவின்மைமுதலிய நற்குணங்களை. சலியாமையும் பெருமையும்பற்றிக் குணங்களைப் பெருங்குன்றாகவுருவகஞ் செய்தார். (கருக)

கடவுளீ குவனென் றெண்ணிநித் தியமுங் கருதுறு முயற்சி
செய் யானே, லடலுறு செல்வ மடைகுவ னேனெகா லருங்கலத்
திட்டபா லடிசின், மிடலுடைக் கரத்தா லெடுத்துணா தெங்ஙன்
வீங்கும்வெம் பசிப்பிணி யொழிப்ப, னுடல்பவந் தனக்கோ ரா
கர மாகு முடனனி வாட்டுமெய்த் தவத்தோய்.

(பி - ரை.) கடவுள் ஈகுவன் என்று-பகவான் கொடுத்தருளுவனென்று, எண்ணி - நினைத்து, நித்தியமும் - நாள்தோறும், கருதுறும் - நினைத்தற்குரிய, முயற்சிசெய்யானேல் - ஒருவன் முயற்சி செய்யானாயின், அடல் உறு செல்வம் - வெற்றி மிகுந்த செல்வத்தை, அடைகுவனே - அவன் அடைவானோ, அரு - அருமையாகிய, கலத்து இட்ட - உண்கலத்திலிட்ட, பால் அடிசில் - பாற்சோற்றை, மிடல்உடை - வலிமையுடைய, கரத்தால் எடுத்து உண்ணாது - கையாலெடுத்துண்ணாமல், எங்ஙன்-எப்படி, வீங்கு - பெருத்த, வெம் - கொடிய, பசிப்பிணி - பசியாகிய நோயை, ஒழிப்பன் - நீக்குவன், உடல் - வருத்துகிற, பவம்தனக்கு - பிறவிக்கு, ஓர் ஆகரம் ஆகும் - ஒருபிறப்பிடமாகிய, உடல் - உடம்பை, நனிவாட்டும் - மிகவும் வருத்துகின்ற, மெய்தவத்தோய் - உண்மையாகிய தவத்தையுடையோனே. எ - று.

(பொ - ரை.) பகவான் கொடுத்தருளுவனென்று நினைத்து நாள்தோறும் நினைத்தற்குரிய ஒருவன் முயற்சி செய்யானாயின், வெற்றிமிகுந்த செல்வத்தை அவன் அடைவானோ, அருமையாகிய உண்கலத்திலிட்ட பாற்சோற்றை வலிமையுடைய கையாலெடுத்துண்ணாமல் எப்படி பெருத்த கொடிய பசியாகிய நோயை நீக்குவன். வருத்துகிற பிறவிக்கு ஒரு பிறப்பிடமாகிய உடம்பை மிகவும் வருத்துகின்ற உண்மையாகிய தவத்தையுடையோனே.

(வி - ரை.) ஈகுவன் அடைகுவன் என்பவைகளில் - கு - சாரியை. பாலடிசில் மூன்றும் வேற்றுமையுருபும் பயனுமுடன் றொக்கதொகை. உண்ணாது-எதிர்மறை வினையெச்சம். உடல்பவம்-வினைத்தொகை நிலைத்தொடர். உடல் என்னும் தன்வினை இங்குப்பிறவினைப்பொருள் தந்து நின்றது. வினைத்தொகையாதலால் லகரம் திரியாதாயிற்று. தவத்தாய் என்னும் விளிப்பெயரின் ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாயிற்று. உண்டி சுருக்கல் முதலியவற்றால் தம் உயிர்க்குவருந் துன்பத்தைப் பொறுத்தல் தவத்திற்கு வடிவமாகையால் 'உடல்நனிவாட்டுமெய்த்தவத்தோய்'என்றார். "உற்றநோய் நோன்றல்உயிர்க்குறுகண்செய்யாமை - அற்றேதவத்திற்குரு" என்பது திருக்குறள். (கருஉ)

முன்பொரு கராவான் மொய்வலி சிந்து மும்மதக் கறைய டிக் கயமும், வன்புடைப் பொன்னன் புரிகொடு மையினுன் மன மெலி பிரகலா தநனும், மன்பினே டேத்தி யழைத்தலா னன்றே யலைகடல் வண்ணன்வந் தாண்டா, னென்பரா தலினுன் முயற்சி செய் பவருக் கெய்தரும் பொருளுமொன் றுளதே.

(ப - ரை.) முன்பு - முற்காலத்தில், ஒருகராவால் - ஒருமுதலையால், மொய்வலிசிந்தும் - மிக்கவலியையிழந்த, மும்மதம் - மூன்றுமதங்களையும், கறைஅடி - உரல்போன்ற காலையுமுடைய, கயமும் - யானையாகிய கஜேந் திரனும், வன்புஉடை - வலிமையையுடைய, பொன்னன் - இரணியன், புரி-செய்த, கொடுமையினுல்-தீமையால், மனம்மெலி-மனமிளைத்த, பிரகலாதந னும்———, அன்பினேடுஏத்தி-அன்புடன்துதித்து, அழைத்தலான்அன்றே-அழைத்தலாலல்லவா, அலை - அசையாநின்ற, கடல்வண்ணன் - கடனிறத் தையுடையவனுகிய திருமால், வந்து ஆண்டான்என்பர் - வந்து ஆண்டரு ளினன் என்று கூறுவர் (பெரியோர்), ஆதலினுல் - ஆதலால், முயற்சிசெய் பவருக்கு - முயற்சிசெய்கின்றவர்களுக்கு, எய்து அருபொருளும், அடைதற் கரியபொருளும், ஒன்றுஉளதே - ஒன்றுளதோ. எ - று.

(பொ - ரை.) முற்காலத்தில் ஒருமுதலையால் மிக்க வலியையிழந்த, மூன்று மதங்களையும் உரல்போன்ற காலையுமுடைய யானையாகிய கஜேந்திர னும், வலிமையுடைய இரணியன்செய்த தீமையால் மனமிளைத்த பிரகலாதந னும் அன்புடன் துதித்து அழைத்தலாலல்லவா, அசையாநின்ற கடனிறத்தை யுடையவனுகிய திருமால்வந்து ஆண்டருளினன் என்று கூறுவர்(பெரியோர்) ஆதலால் முயற்சிசெய்கின்றவர்களுக்கு அடைதற்கரிய பொருளும் ஒன்று ளதோ. எ - று.

(வி - ரை.) கசேந்திரன் என்னும் யானையும், பிரகலாதநனும் திரு மாலை அன்போடு ஏத்தியழைத்தலாகிய முயற்சியைச்செய்தே அருள்பெற்ற னர் ஆகையால் நாமும் வறுமை தீரும்பொருட்டு முயற்சிசெய்தலே தக்கது என்பது கருத்து. மும்மதமாவன: கன்னமதம், கபோலமதம், பீஜமதம். கறையடி - உவமைத்தொகை. இந்தக்கறையடி என்னும் தொடரே அன் மொழித்தொகையாய் யானைக்கு வழங்குதலுமுண்டு. "மூலமேயென்ற கரி முன்வந்திடர் தொலைத்து நீலமேகம்போல நின்றானே" என்றார் பிறரும். பிர கலாதநனுடைய பிதாவாகிய அசுரவேந்தன் பொன்னிறமுடையவனுகையா ல் தமிழில் பொன்னன் என்றும் வடமொழியில் இரணியன் என்றும் பெயர் பெற்றனன். இரணியம் - பொன். அன்பினேடு என்னும் மூன்றனுருபு கரு விப்பொருளது. அன்று என்னும் அசையிடைச்சொல்லில் ஏகாரம் வினு. எய்து அடைதல் எனப்பொருள் படலால் முதனிலைத்தொழிற்பெயர். உளது என்னும் ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்றில் ஏகாரம் எதிர்மறை. யானைய ருள் பெற்ற செய்தி:—இந்திர துய்மனென்கிற அரசன் அகத்திய முனிவரு

டைய சாபத்தால் யானையுருவம் பெற்றுக்கஜேந்திரனென்னும் பெயரைத் தாங்கி, ஒருநாள் சிலயானைகளோடு புறப்பட்டுப்போய் ஒருமடுவில் நீரருந்துகையில், ஊஊ என்னும் கந்தருவனொருவன் தேவலமுனிவருடைய சாபத்தினால் ஆண் முதலையாய்ப்பிறந்து அம்மடுவில் சஞ்சரித்துக்கொண்டிருந்து,நீரருந்தவந்த கஜேந்திரனுடைய காலைப்பற்றி வருத்தியபோது, அந்தயானை "ஆதி மூலமே என்னைரக்ஷியும்" என்றுபொதுவாக அபயசத்தமிட, திருமால் பிரசன்னமாகிவந்து தமது சுதரிசநமென்னும் சக்கரத்தை விடுத்து முதலையைச்சங்கரித்து யானையைக்காப்பாற்றினார் என்பது. இரணியனைக்கொன்று பிரகலாதனைக்காத்த செய்தி—திருமால் தன் தமையனைக்கொன்ற காரணம் பற்றிப்பழிவாங்குதலாக இரணியன் தன்னையே முதற்கடவுளென யாவரும் வணங்கவேண்டுமென்று கட்டளை பிறப்பித்து அவ்வாறு வணங்காத சாதுக்களை உபத்திரவப்படுத்தி வந்தனன். அவ்வாறு உபத்திரவப்படுத்திவருகையில் அவ்விரணியன் புதல்வனாகிய பிரகலாதநன் மற்றவர்களைப்போல அவனைக்கடவுளாக எண்ணி வணங்காமல் அரிபக்தியுடையவனாய் அரிநமோ என்று சொல்லவும், கோபங்கொண்டு பிரகலாதனைப்பலவாறாக வருத்திக்கொல்ல முயன்றும் இறவாமையால், நீ சொல்லும் அரி என்பவன் எங்கேயிருக்கின்றானென்று தன்னெதிரில் உள்ளதூணை அறைய, அதனிடமாக அவ்விறைவன் நரசிங்கமாகத்தோன்றி அவ்விரணியனைக் கொலைசெய்து பிரகலாதனைக் காத்தருளினனென்பது. (கரு௩)

கமலமே லவனைத் தோற்றிய வுந்திக் கமலன்வெந் தொடரெனப் பகரு, மும்மலவே ரறுத்த முனிவர்வேண் டாம லெங்ஙன முயறிரு வளிப்பன், விமலவே தியநீ யுளத்தின்வேண் டுவையேல் வேண்டிய வேண்டியாங் களிக்கு, மமலநால் வேத மாறுசாத் திரநன் காய்ந்தவர் தமிற்சிறந் தவனே.

(ப - ரை.) அமலம் - பரிசுத்தமாகிய, நால்வேதம் - சதுர் வேதங்களையும், ஆறுசாத்திரம் - ஆறுசாஸ்திரங்களையும், நன்கு ஆய்ந்தவர் தம்மில் - நன்றாக ஆராய்ந்தவர்களுள், சிறந்தவனே - உயர்ந்தவனே, கமலம்மேலவனை - தாமரை மலர் மீதிருப்பவனாகிய பிரமனை, தோற்றிய - உண்டாக்கிய, உந்திக் கமலன் - திருநாபிகமலத்தையுடையவனாகிய திருமால், வெம்தொடர் என - கொடிய பற்று என்று, பகரும் - சொல்லப்படுகின்ற, மும்மலவேர் அறுத்த - முக்குற்றங்களின் மூலத்தைச்சேதித்த, முனிவர் வேண்டாமல் - முனிவர் விரும்பாமல், எங்ஙனம் - எப்படி, முயல் - பெறமுயல்கின்ற, திரு அளிப்பன் - முத்தியைத்தந்தருளுவன், விமலவேதிய - மலரஹிதனாகிய வேதியனே, நீ உள்ளத்தின் வேண்டுவையேல் - நீ மனத்தினால் விரும்புவையாயின், வேண்டிய - (உன்னால்) விரும்பப்பட்டவற்றை, வேண்டியாங்கு அளிக்கும் - விரும்பியவாறே தந்தருளுவன். எ - று.

(பொ - ரை.) பரிசுத்தமாகிய சதுர்வேதங்களையும் ஆறு சாஸ்திரங்களையும் நன்ருக ஆராய்ந்தவர்களுள் உயர்ந்தவனே, தாமரை மலர் மீதிருப்பவனுகிய பிரமனையுண்டாக்கிய திருநாபீகமலத்யையுடையவனுகிய திருமால், கொடிய பற்று என்று சொல்லப்படுகின்ற முக்குற்றங்களின் மூலத்தைச் சேதித்த முனிவர் விரும்பாமல் எப்படி பெறமுயல்கின்ற முத்தியைத்தந்தருளுவன்; மலாஹிதனுகிய வேதியனே, நீ மனத்தினுல் விரும்புவையாயின் (உன்னுல்) விரும்பப்பட்டவற்றை விரும்பியவாறே தந்தருளுவன். எ - று.

(வி - ரை.) தானல்லாத உடம்பையான் என்றும் தன்னேடு இயைபில்லாதபொருளை எனதென்றும் கருதும் இருவகைப்பற்றுக்கும் காமம் வெகுளி மயக்கங்கள் காரணமாதையால் 'வெந்தொடரெனப்பகருமும்மலம்' என்ருர். முனிவர்கள் இடையருத ஞானயோகங்களைச்செய்து முக்குற்றங்களையும் காட்டுத்தீ முன்னர் பஞ்சாடைபோல் கெடுத்தவராகையால் அம்மிகுதிதோன்ற 'மும்மலவேர் அறுத்தமுனிவர்' என்ருர். "காமம் வெகுளிமயக்கமிவை மூன்றின் - நாமங்கெடக்கெடு நோய்" என்னுந்திருக்குறளானுமுணர்க. மும்மலம் எனமிகவேண்டியமகரம் மிகாமல் தொகுத்தல் பெற்றது. இங்கே முயல் திரு என்றது முத்திச்செல்வத்தை. விமலன்-நீங்கிய மலமுடையவன், மலமற்றவன் என்பது கருத்து. விமலவேதியன் - இருபெயரொட்டுப்பண்புத்தொகை. வேண்டுவை - முன்னிலை யொருமை வினைமுற்று. முன்னிலையொருமை விகுதி ஐ, இவ்வினை முற்றை எனில் என்பதின் மருஉவாகிய எல் என்பது வினையெச்சமாக்கியது. வேண்டிய வேண்டியாங்கு என்பதற்கு இலக்கணம் முன்னே கூறப்பட்டது. அமலன் - மும்மலமில்லாதவன். நால்வேதம் - இருக்கு, எசுர், சாமம், அதர்வணம். ஆறுசாத்திரம் - வேதாந்தம், வைசேடிகம், பாட்டம், பிரபாகரம், பூருவமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை. வேதம் சாத்திரம் என்பவைகளினீற்றில் முற்றும்மை தொகுத்தல். ஆய்ந்தவர், சிறந்தவன் - வினையாலணையும் பெயர்கள். தமில் - தம்மில். (கருச)

முன்னரும் பற்பன் முனிவரர் பன்னுண் முயலரு மருந்தவ முயன்று, பன்னரும் பேறு மாதவ னளிப்பப் படைத்தனர் பவள வாய்ச் செங்கா, லன்னமே வுயர்த்த நான்மறை முனிவ னனைய நற் பெருந்தவ ரேறே, யுன்னருஞ் செல்வ மன்னமா லீய வுறிற் புக ழன்றிமே விலையே.

(ப-ரை.) பவளவாய் - பவளம்போன்ற வாயையும், செங்கால்-செவந்த கால்களையுமுடைய, அன்ன ஏறு - ஆணன்னத்தை, உயர்த்த - கொடியாயெடுத்த, நான்மறை - நான்குவேதங்களையுடைய, முனிவன் அனைய - பிரமனை நிகர்த்த, நல் - நன்மையாகிய, பெருதவர் - பெரியதவத்தோருள், ஏறே-சிறந்தவனே, முன்னரும் - முற்காலத்திலும், பற்பல் முனிவரர் - பற்பல முனிசிரேஷ்டர், பல்நாள் - அநேகநாள்கள், முயல் அரும் - முயன்று செய்தலருமையாகிய, அருதவம் முயன்று-அரியதவத்தை முயன்று செய்து, பன் அரு -

சொல்லுதற்கரிய, பேறு - பயனை, மாதவன் அளிப்ப-லக்ஷ்மீநாதன் தந்தருள, படைத்தனர் - பெற்றார்கள், உன் அரு - நினைத்தற்கரிய, செல்வம் - செல்வத்தை, அன்ன - அத்தன்மையனாகிய, மால்ஈய - திருமால்தர, உறின்-பெற்றால், புகழ்அன்றி-புகழேயல்லது, வேறுஇல்லை-வேறொன்றுதல்இல்லை. எ-று

(பொ - ரை.) பவளம்போன்ற வாயையும் செவந்தகால்களையு முடைய அன்னத்தைக் கொடியாயெடுத்த நான்குவேதங்களையுடைய பிரமனை நிகர்த்த நன்மையாகிய பெரியதவத்தோருள் சிறந்தவனே, முற்காலத்திலும் பல பல முனிசிரேஷ்டர் அநேகநாள்கள் முயன்று செய்தலருமையாகிய அரியதவத்தை முயன்று செய்து, சொல்லுதற்கரிய பயனை லக்ஷ்மீநாதன் தந்தருளப் பெற்றார்கள். நினைத்தற்கரிய செல்வத்தை அத்தன்மையனாகியதிருமால்தரப் பெற்றால் புகழேயல்லது வேறொன்றுதல் இல்லை.

(வி - ரை.) முன் - காலப்பெயர். முனி - இறைவனை மநநம் செய்பவர். வரர் வரம் என்னும் பண்படியாகப் பிறந்த பலர் பாற்படர்க்கைப்பெயர். வரம் - மேன்மை. முயல் அரு, பன் அரு, உன் அரு என்பவைகளில் நிலைமொழிகளாகிய முயல், பன், உன் என்பன முதனிலைத் தொழிற்பெயர்கள். பேறு முதனிலைதிரிந்த தொழிலாகுபெயர். மாதவன் - இலக்குமிநாயகன். கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், சீதரன், இருடிகேசன், பத்மநாபன், தாமோதரன் என்பன திருமாலின் பன்னிரண்டு நாமங்கள். "நாமமிரண்டொடு பத்துடை நாயகன்" என்பதனாலும் அறிக. பவளம் அதன் நிறத்துக்காதலால் பொருளாகுபெயர். பவளவாய் - உவமைத்தொகை. ஏறு - விலங்கின் ஆணுக்குப் பொதுப்பெயராயினும் இங்குபறவையின் ஆணுக்காயிற்று. அன்ன ஏறு - தன்னுருவை யுணர்த்தும்போது முதலாகுபெயர், அவ்வுருவமெழுதியகொடிச்சீலையை யுணர்த்தும்போது தானியாகுபெயர். உயர்த்த பிறவினை இறந்தகாலவினையெச்சம். அனைய-அன்ன பண்படியாகப்பிறந்த குறிப்புப்பெயரெச்சங்கள். இவற்றிற்குப்பகுதி முறையே, அனை, அன். இவை அத்தன்மை என்பதன்மரூஉ. தவர் ஏறு - ஏழாம்வேற்றுமைத்தொகை, கூட்டிப்பிரித்தல் என்னும் பொருளது. "நல்லாறெனினுங்கொளல்தீது" எனப் பெரியோர் கூறியிருப்பினும் இறைவனே கொடுக்கப்பெறுதலால் 'புகழன்றி வேறில்லை' என்றனள். வேறு என்றது மானக்கேட்டை. (கஙிரு)

அப்பரந் தாம னிணையடி யன்றி யாதர விலையென வறிந்தாய்,
செப்பரு மாசை பொய்கொடுஞ் சீற்றஞ் செற்றுளா யெனினும்
விண் ணுளு, நப்புரந் தாளு தியர்தொழு மன்ன னண்ணுறுந்
துவாரகை யணுகி, யொப்பில்பல் வளனுந் தருகியென் றிரக்கி
லுறுங்கொலோ தாழ்வதி னுணர்ந்தோய்.

(ப - ரை.) அ-அந்த, பரந்தாமன்-பரமபதநாதனது, இணை அடி அன்றி - இரண்டு திருவடிகளே யல்லது, ஆதரவு இலை என - வேறு ஆதரவில்லை

யென்று, அறிந்தாய் - உணர்ந்தாய், செப்பு அரும் - சொல்லுதற்கரிய, ஆசை- ஆசையையும், பொய் - பொய்யையும், கொடுசீற்றம் - கொடிய கோபத்தை யும், செற்றுளாய் - வென்றிருக்கிறாய், எனினும் - ஆயினும், விண் ஆளும் - விண்ணுலகத்தை யாளுகின்ற, நப்புரந்தரன் ஆதியர் - நல்ல தேவேந்திரன் முதலியோர், தொழும் - வணங்குகின்ற, அன்னான் - அந்தபகவான், நண்ணுறும் - எழுந்தருளியிருக்கிற, துவாரகைஅணுகி - துவாரகையையடைந்து, ஒப்பு இல் - ஒப்பற்ற, பல்வளனும் - பலவகையாகியசெல்வங்களையும், தருதி யென்று இரக்கின் - அருள்வாயென்றுயாசித்தால், அதின்-அதனால், தாழ்வு உறுங்கொல் - இழிவுண்டாகுமோ, உணர்ந்தோய் - அறிஞனே. எ - று.

(பொ - ரை.) அந்தப் பரமபதநாதனது இரண்டுதிருவடிகளே யல்லது வேறு ஆதரவில்லையென்று உணர்ந்தாய், சொல்லுதற்கரிய ஆசையையும் பொய்யையும் கொடியகோபத்தையும் வென்றிருக்கிறாய், ஆயினும் விண்ணுலகத்தை யாளுகின்ற நல்ல தேவேந்திரன் முதலியோர் வணங்குகின்ற அந்த பகவான் எழுந்தருளியிருக்கிற துவாரகையையடைந்து ஒப்பற்ற பலவகையாகிய செல்வங்களையும் அருள்வாயென்று யாசித்தால் அதனால் இழிவுண்டாகுமோ; அறிஞனே. எ - று.

செப்பரு என்னும் தொடரில் நிலமொழியாகிய திசைச்சொல்லைசெப்பு எனப்பிரித்தலேயன்றி, செப்ப எனவும் பிரிக்கலாம். முன்னது முதனிலைத் தொழிற்பெயர். பின்னது செயவெனெச்சம். "அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃதுஉண்டேல் - தவா அது மேன்மேல்வரும்" என்றதிருக்குறளின்படி அவாவே பலதுன்பங்களுக்குங் காரணமாதலால் 'செப்பருமாசை' என்றார். பலதுன்பங்களுக்கும் ஏதுவாகிய ஆசையையும் இல்லறம்துறவறங்களின் பயன்களைக் கெடுக்கவல்ல பொய்யையும் தீச்சிந்தைகள் எல்லாவற்றையும் பிறப்பிக்கும் கொடுஞ்சீற்றத்தையும் செறுதல் அருமை நோக்கி, 'செப்பருமாசை பொய்கொடுஞ்சீற்றம் செற்றுளாய்' என்றும், கண்ணன் விண்ணாளும்புரந்தரன் ஆதியோரால் தொழப்படுவோனாதலால் அவனையாசிக்கச் சொல்லுதல் இழிவன்று என்பதற்கு 'செற்றுளாயெனினும்'என்றும்கூறினான். நப்புரந்தரன் என்பதில் நகரம் நப்பின்னைப்பிராட்டி, நக்கீரதேவர் என்பவற்றிற்போலச் சிறப்புப்பொருளதாய் வந்தது. உளாய் உண்மை என்னும் பண்படியாகப்பிறந்த முன்னிலை யொருமைக் குறிப்பு வினை முற்று. விண் என்னும் ஆகாயத்தின்பெயர் அங்குள்ள உலகத்துக்காதலால் இடவாகு பெயர். புரந்தரன் - பகைவருடலைச் சேதிப்பவன். ஆதியர் - ஆதிஎன்னும் பண்படியாகப் பிறந்தபலர் பாற்படர்க்கைப்பெயர். ஆதியர் என்பதை எழுவாய்த் தொடராகக்கொள்ளாது மூன்றாம்வேற்றுமைத் தொகையாகக்கொள்ளின் தொழும் என்பதனைப் படுவிகுதி தொக்குத்தலாய்வந்த செயப்பாட்டுவினைப் பெயரெச்சமென்க. துவாரகா என்னும் வடமொழிப்பெயர் துவாரகை எனத்திரிந்து வந்தது. வளம் - செழுமை. இதுதான் உண்டாதற்குக் காரண

மாகிய செல்வத்தையுணர்த்தலால் காரிய வாகுபெயர். தருதி-ஏவலொருமை வினை முற்று. அது என்னும் சுட்டு இரத்தலைச் சுட்டியது. உணர்ந்தோய் என்னும் விளியேற்ற ஆண்பாற் படர்க்கை வினையாலணையும் பெயர் உறுங் கொலோ என்னும் செய்யு மென்வாய்பாட்டு வினைமுற்றைக்கொண்டது. வினைமுற்றின் ஈற்றினுள்ளகொல் - அசை. ஓ - எதிர்மறை. பரந்தாமன் - மேலான இடத்தையுடையவன். (கஙிசு)

மாசறு கற்பின் மடவர றனக்கு வகுக்கருங் கொழுநனே யுலக, மாசறத் துதிக்குங் கடவுளா மென்று வரியநான் மறை சொலு மதனாற், பாசமுற் றிரியப் பலகலை யொருங்கு பளகறத் தேர்ந்தநீ யெனக்குப், பேசருங் கடவு ளாமெளி யேனைப் பெட் பொடு புரத்தனின் கடனே.

(ப - ரை.) மாசு அறு - குற்றமற்ற, கற்பின்-கற்பையுடைய, மடவரல் தனக்கு - பெண்ணுக்கு, வகுக்க அரு - சொல்லுதற்கரிய, கொழுநனே-நாயகனே, உலகம் - உலகமானது, ஆசு அற - குற்றம் நீங்கும்படி, துதிக்கும் - தோத்திரம் பண்ணுகிற, கடவுள் ஆம் என்று - தெய்வமாகுமென்று, அரிய- அருமையாகிய, நான்மறைசொல்லும் - நான்குவேதங்களுஞ் சொல்லா நின்றன, அதனால் - ஆதலால், பாசம்முற்று இரிய - ஆசைமுழுதுமோட, பல கலை - பல நூல்களையும், ஒருங்கு - ஒருங்கே, பளகு அற-குற்றமற, தேர்ந்த- ஆராய்ந்து தெளிந்த, நீ - நீ, எனக்கு - அடியேனுக்கு, பேசு அரு - சொல் லுதற்கரிய, கடவுள் ஆம் - தெய்வமாவை, எளியேனை - எளியேனாகிய என்னை, பெட்பொடு - அன்போடு, புரத்தல் - காப்பாற்றுதல், நின்கடனே- உன் கடன்மையேயாகும். எ - று.

(பொ - ரை.) குற்றமற்றகற்பையுடைய பெண்ணுக்குச், சொல்லுதற் கரிய நாயகனே உலகமானது குற்றம் நீங்கும்படி தோத்திரம் பண்ணுகிற தெய்வமாகுமென்று,அருமையாகிய நான்கு வேதங்களுஞ்சொல்லா நின்றன. ஆதலால் ஆசைமுழுதுமோடப்பல நூல்களையும் ஒருங்கே குற்றமற ஆராய்ந்து தெளிந்த நீ, அடியேனுக்குச்சொல்லுதற்கரிய தெய்வமாவை, எளியேனாகிய என்னை, அன்போடு காப்பாற்றுதல் உன் கடன்மையேயாகும். எ - று.

(வி - ரை.) கற்புடையாளுக்குக் கொழுநனே தெய்வம் என்பதனை "தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுது எழுவாள் - பெய்யெனப்பெய்யு மழை" என்னுந்திருக்குறளாலும், "குலமகட்குத் தெய்வங் கொழுநனே" என்னும் நீதி நெறிவிளக்கச் செய்யுளாலுமறிக. மடவரல்-மடப்பமாகிய வரலாற்றையுடையாள் எனவிரிதலால் பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக்காரணப்பெயர். மடம் - பெண்களுக்குரிய நால்வகைக் குணங்களில் ஒன்று. அந்நால்வகைக்குணங்களாவன:—அச்சம்,மடம், நாணம், பயிர்ப்பு. கொழுநன் - பண்படியாகப்பிறந்த பெயர். கொழு - பகுதி, ந் - பெயரிடைநிலை, அன் - விகுதி. கொழு - பற்றுக்கோடு. அது இலக்கணையாக

ஆதரவையுணர்த்தி நின்றதாதலால் பண்படியாகப்பிறந்தது எனப்பட்டது. இதனீற்றிலுள்ள ஏகாரம் தேற்றம். உலகம் - இடவாகுபெயர். கடவுள் - உள் விகுதி பெற்றுவந்த தொழிலாகு பெயர், மூலப்பகுதியையும் அதன் காரியமாகிய உலகையும் கடந்து நிற்பவன் என்பது பொருள். இறை - என்பதற்கும் இலக்கணமும் பொருளும் இதுவேயாம். என்று - ஆகாரவிகுதி பெற்று வந்த செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். பாசத்தின் இலக்கணம் மேற்செய்யுளில் கூறப்பட்டது. முற்று என்னும் பண்புப் பெயரில் முற்றும்மை தொகுத்தல். இரிய காரியப்பொருளதாகையால் எதிர்காலத்தது. எளியேன் - எளிமையென்னும் பண்படியாகப்பிறந்ததன்மை யொருமைப்பெயர். பெட்பு - பண்புப்பெயர். (கருஎ)

மடமையேன் றனக்குக் கடவுளு நீயே வருக்கரு மிறைவனு நீயே, யடலுறு தானந் தவமுதல் யாவு மாற்றுநின் பணிவிடை யன்றோ, மடலவிழ் துளப மாலிகை புனைந்த வாசுதே வன்பத மலரைத், திடமுற நெஞ்சத் துன்னிவல் வினையைச் சிதர்தரச் செகுத்தமா மறையோய்.

(ப - ரை.) மடல் அவிழ் - இதழ்விரிந்த, துளபமாலிகை புனைந்த - துளசிமாலையைத்தரித்த, வாசுதேவன் - கண்ணனது, பதமலரை - திருவடித்தாமரைமலரை, திடம்உற - திடம்பொருந்த, நெஞ்சத்து உன்னி - மனத்தில் நினைத்து, வல்வினையை - வலியவினைகளை, சிதர்தர - சிதறுண்ணும்படி, செகுத்த - வென்ற, மாமறையோய் - பெருமையுள்ள வேதியனே, மடமையேன் தனக்கு - அறியாமையையுடையேனுக்கு, கடவுளும் நீயே - தெய்வமும் நீயே, வருக்க அரும் - சொல்லுதற்கரிய, இறைவனும் நீயே - தலைவனும் நீயே, அடல் உறு - வலிமிகுந்த, தானம் தவம்முதல்யாவும் - தானம் தவமுதலிய எல்லாம், ஆற்றும் - செய்தற்குரிய, நின்பணிவிடை அன்றோ - உன் கைங்கரியமேயல்லவா. எ - று.

(பொ - ரை.) இதழ்விரிந்த துளசிமாலையைத்தரித்த கண்ணனது திருவடித்தாமரை மலரைத்திடம் பொருந்த மனத்தில் நினைத்து வலியவினைகளைச் சிதறுண்ணும்படிவென்ற பெருமையுள்ள வேதியனே! அறியாமையையுடையேனுக்குத்தெய்வமும் நீயே, சொல்லுதற்கரிய தலைவனும் நீயே வலிமிகுந்ததானம் தவமுதலிய எல்லாமும் செய்தற்குரிய உன் கைங்கரியமே யல்லவா. எ - று.

(வி - ரை.) தானம் தவமுதல்யாவும் தன் நாயகனுக்குச் செய்யும் பணிவிடையேயென்று கருதி வேறொன்றுஞ்செய்ய அறியாதவள் ஆகையால் மடமையேன் என்னும் சொல்லாற் கூறியதாகக் கூறினர். அவிழ்துளபம் வினைத்தொகை நிலைத்தொடர். துளபமாலிகை - மூன்றும் வேற்றுமையுருபும் பயனு முடன்றொக்க தொகை நிலைத்தொடர். மாலிகா என்னும் வட

மொழி மாலிகை யெனத்திரிந்தது. தசரதன் புத்திரன் தாசரதி; ஜனகன் புத்திரி ஜானகி; என்றாற்போல வசுதேவன் புத்திரன் வாசுதேவன் என வந்தது. இவ்வாறுவரும் வடமொழிகளைத்தத்திதாந்தம் என்பர். கிருஷ்ண பகவானுக்குத் தந்தைதாயராவார் வசுதேவனும் தேவகிதேவியும், வளர்த்த தந்தைதாயராவார் நந்தகோபனும் யசோதைப்பிராட்டியும். (கருஅ)

வெண்டிரை வீசுங் கருங்கடற் புடவி விண்ணகம் பாதல மிவ ற்றுண், மண்டிய வுயிர்க ளெவற்றையுங் கமலை மார்பினன் புரப் பனே யெனினு,மண்டர்கள் புகழு மையநீ யுயிர்த்த வரியமக்களை யுமென் றனையும், பண்டைநூற் கியையப் பாதுகாத் தளித்தல் பக ருநின் கடனெனப் பகர்ந்தாள்.

(ப - ரை.) வெண்திரை வீசும் - வெண்மையாகிய அலைகளை யெறி கின்ற, கருகடல் - கரியகடல் சூழ்ந்த, புடவி - மண்ணுலகம், விண்ணகம் - விண்ணுலகம், பாதலம் - பாதாளலோகம் ஆகிய, இவற்றுள் - இவைகளுக் குள்ளே, மண்டிய - நெருங்கிய, உயிர்கள் எவற்றையும், சீவர்கள் எல்லாவற் றையும், கமலைமார்பினன் - திருமகளைமார்பிலுடையவனுகியதிருமால், புரப் பன் எனினும் - காப்பாற்றுவானுயினும், அண்டர்கள் புகழும் - தேவர்களும் புகழ்தற்குரிய, ஐய - ஐயனே, நீ உயிர்த்த - நீ பெற்ற, அரியமக்களையும் - அருமையாகிய புதல்வர்களையும், என்றனையும் - என்னையும், பண்டை நூற்கு இயைய-பழையநூலாகிய வேதமார்க்கத்துக்குப்பொருந்த, பாதுகாத்து அளி த்தல் - காப்பாற்றியருளுதல், பகரும் நின்கடன் என - சொல்லப்பட்ட உன் கடனுகுமென்று, பகர்ந்தாள் - சொல்லினுள். எ - று.

(பொ - ரை.) வெண்மையாகிய அலைகளையெறிகின்ற கரியகடல் சூழ் ந்த மண்ணுலகம், விண்ணுலகம், பாதாளலோகம் ஆகிய இவைகளுக்குள்ளே நெருங்கிய சீவர்கள் எல்லாவற்றையும் திருமகளைமார்பிலுடையவனுகிய திரு மால் காப்பாற்றுவானுயினும், தேவர்களும் புகழ்தற்குரிய ஐயனே,நீ பெற்ற அருமையாகிய புதல்வர்களையும், என்னையும் பழைய நூலாகிய வேதமார்க் கத்துக்குப்பொருந்தக்காப்பாற்றியருளுதல் சொல்லப்பட்ட உன் கடனுகுமெ ன்று சொல்லினுள், எ - று.

(வி - ரை.) திருமால் - இலக்குமியை மார்பில் உடையவன், இதனை "வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்பத னுலுமறிக - கமலை - கமலத்தில் வசிப்பவள். கமலம் தாமரை. ஐயன் என் னும் எழுவாய் வேற்றுமைப்பெயர் ஈறு கெட்டு ஐய எனவிளிப்பெயராயிற்று. உயிர்த்த - இறந்தகாலப்பெயரெச்சம். பண்டு - என்னும் பண்புப்பெயர் ஐகா ரச்சாரியை பெற்றுப் பண்டை என வந்தது. நூற்கு என்னும் உவமையாகு பெயர் உகரச்சாரியை பெற்று நூலுக்கு எனவரும். கடன்மை என்னும் பண் புப்பெயர் ஈறு கெட்டுவந்தது. (கருக)

## கலிநிலைத்துறை.

இடம்பா டிலாமை முகன்சாம்பி யிரங்கிக் கூறுந்
திடம்பாடு கொண்ட பெருங்கற் பினடே மொழிக்கு
மடம்பா டறுத்துக் கலைமுற் றுணர் வாய்மை சான்றோ
னுடம்பா டிலாமை யுடையானல னாயி னானே.

(ப - ரை.) இடம்பாடு இலாமை - செல்வமில்லாமையால், முகன் சாம்பி - முகம்வாடி, இரங்கிக்கூறும் - இரங்கிச்சொல்லுகின்ற, திடம்பாடு கொண்ட - உறுதியைக்கொண்ட, பெருகற்பினள் - பெரிதாகிய கற்பை யுடையவளது, தேமொழிக்கு - தேன்போலும் இனிய சொற்களுக்கு, மடம் பாடு அறுத்து - அறியாமையையறுத்து, கலைமுற்று உணர் - கலைமுழுது முணர்ந்த, வாய்மைசான்றோன் - உண்மை நிரம்பினவனாகிய குசேலன், உடம்பாடு இலாமை உடையான் அல்லன் ஆயினான் - உடம்பட்டவனானான்.

(பொ - ரை.) செல்வமில்லாமையால் முகம்வாடி இரங்கிச்சொல்லுகின்ற உறுதியைக்கொண்ட பெரிதாகிய கற்பையுடையவளது தேன்போலும் இனியசொற்களுக்கு, அறியாமையையறுத்துக் கலைமுழுதுமுணர்ந்த உண்மை நிரம்பினவனாகிய குசேலன் உடம்பட்டவனானான். எ - று.

(வி - ரை.) இடம் - (செல்வம்) இதனோடு படு என்னும் முதனிலை சேர்ந்து ஒரு சொல்லின் தன்மைப்பட்டு நின்ற இடம்படு என்பது முதனிலை திரிந்ததொழிற்பெயராய் இடம்பாடு என வந்தது - செல்வம் உண்டாதல் என்பது பொருள். இதனோடு இலாமை என்னும் எதிர்மறைக்குறிப்புத்தொழிற்பெயர் புணர்ந்து தரித்திரம் என்றாயிற்று. முகன் - மகரத்துக்குனகரம் போலி. திடம்பாடு, மடம்பாடு, உடம்பாடு என்பவைகளும் முதனிலைதிரிந்த தொழிற்பெயர்கள். கற்பினள் தேமொழிக்கு என்பதனை ஆறாம்வேற்றுமைத் தொகையாகக்கொள்ளுதலேயன்றி,இருபெயரொட்டுப்பண்புத்தொகையாகக் கொள்ளினுமாம். அவ்வாறு கொள்ளும்போது தேமொழி என்பதனை உவமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக்காரணப் பெயரெனவும் அது பொருளாகு பெயராய் சொல்லையுணர்த்தியதெனவும் கொள்க. தேன் மொழி என்பது னகரம் கெட்டுத்தேமொழி எனப்புணர்ந்தது. வாய்மை - வாயின் தன்மை என்னும் பண்புப்பெயர் உண்மைமொழியையுணர்த்தலால் பண்பாகுபெயர். உடம்பாடிலாமை உடையானலன் என இரண்டு எதிர் மறை வந்தமையால் உடன்பாட்டுப்பொருள் தந்தது.　　　(கசுo)

கண்ணன் றனைக் கண்ணுறிற் கண்ணுங் கதியுநன்கு
நண்ணுஞ் சிறுமைந் தர்களா லுளதையு மின்றா
ளெண்ணு நிரம்பு மெனச்சில் பொழுதுள்ளத் தெண்ணி
யொண்ணு மனையாள் முகநோக்கி யுரைக்க லுற்றான்.

(ப - ரை.) கண்ணன் தனை - கிருஷ்ணனை, கண்ணுறின் - கண்டால், கண்ணும் - பெருமையும், கதியும் - மோக்ஷமும், நன்கு நண்ணும் - நன்ருகக்கிடைக்கும், சிறுமைந்தர்களால் - சிறுபுதல்வர்களால், உள்ளம்நையும் - மனம் வருந்துகின்ற, இன்னாள் எண்ணும் - இவளுடைய எண்ணமும், நிரம்பும் - நிறைவேறும், என - என்று, சில்பொழுது - சிறிதுநேரம், உள்ளத்து எண்ணி - மனத்தில் நினைத்து, ஒண்ணும் - தனக்கியைந்த, மனையாள்முகம் நோக்கி - மனையவளது முகத்தைப்பார்த்து, உரைக்கல் உற்ருன்-சொல்லத் தொடங்கினுன். எ - று.

(பொ - ரை.) கிருஷ்ணனைக்கண்டால் பெருமையும் மோக்ஷமும் நன்ருகக்கிடைக்கும்; சிறுபுதல்வர்களால் மனம்வருந்துகின்ற இவளுடைய எண்ணமும் நிறைவேறும், என்று சிறிதுநேரம்மனத்தில் நினைத்து, தனக்கியைந்த மனையவளது முகத்தைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினுன். எ - று.

(வி - ரை.) கண்ணன் - கிருஷ்ணன் என்னும் வடமொழிச்சிதைவு. நன்கு - வினையையடுத்துவந்த வுரிச்சொல், எண் - முதனிலைத்தொழிலாகு பெயர். சிறிதுபொழுது என்பதைச் சில்பொழுது என்றது "சின்னீரால் வாய்பூசி" என்றது போன்றமரபு வழுமைதி. ஒன்றும் என்னும் பெயரெச்சம் ஒண்ணும் என மரூஉவாய்வந்தது. "காதன் மனையாளுங்காதலனுமாறின் றித்தீதி லொருகருமஞ் செய்பவே" என்றபடி கணவன் கருத்துக்கியைந்தவள்என்பது தோன்ற 'ஒண்ணு மனையாள்' என்ருர். முகம் - வடமொழி. ()

தெய்வங் குரவன ரசன்றிரு முன்னர்ச் செல்வோர்
மெய்வந்த வன்ன ரருள்வேண்டி விரும்பெ தேனுங்
கைவந்தபெற் றுச்செலீஇக் காண்குவர் கண்ணன் முன்பு
மைவந்தகண் ணுயினி தென்கொடு வல்லை செல்வல்.

(ப - ரை.) தெய்வம் - தெய்வமும், குரவன் - ஆசாரியனும், அரசன் - வேந்தனும் ஆகிய இவர்களது, திருமுன்னர் செல்வோர் - சந்நிதிக்கெதிரே போவோர், மெய்வந்த - உண்மையாகிய, அன்னர் - அவர்களுடைய, அருள் வேண்டி - கிருபையைப்பெறவேண்டி, விரும்பு-விரும்பப்பட்ட, எதுவெனும்-யாதொருபண்டமாயினும், கைவந்தபெற்று - கையில் கிடைத்தவற்றைப் பெற்று, செலீஇ - சென்று, காண்குவர் - காண்பார்கள், மைவந்தகண்ணுய்-அஞ்சனமெழுதிய கண்களையுடையவளே, இனிது-இனிதாகிய, என்கொடு - என்ன பொருளைக்கொண்டு, கண்ணன் முன்பு - கிருஷ்ணனுக்கெதிரே, வல்லைசெல்வல் - விரைவாகப் போவேன். எ - று.

(பொ - ரை.) தெய்வமும் ஆசாரியனும் வேந்தனும் ஆகிய இவர்களது சந்நிதிக்கெதிரே போவோர், உண்மையாகிய அவர்களுடைய கிருபையைப் பெறவேண்டி, விரும்பப்பட்ட யாதொருபண்டமாயினும் கையில்கிடைத்தவற்றைப் பெற்றுச்சென்று காண்பார்கள், அஞ்சனமெழுதிய கண்களையுடை

யவளே, இனிதாகிய என்ன பொருளைக்கொண்டு கிருஷ்ணனுக் கெதிரே விரைவாகப் போவேன். எ - று.

(வி - ரை.) முன் என்னும் காலத்தையும் இடத்தையும் உணர்த்தும் இடைச்சொல் முன்னர், முன்பு, முன்னம் எனவும் வரும். செல்வோர்-பலர்பால் வினையாலணையும் பெயர். வந்தபலவின்பாற் படர்க்கை வினையாலணையும் பெயர். செலீஇ - இறந்தகாலவினையெச்சம், செல்பகுதி, இ இறந்தகால வினையெச்ச விகுதி, இகரம் ஈகாரமாய் நீண்டு சொல்லிசை நிறைத்துவந்த உயிரளபெடை. காண்குவர். என்னும் வினைமுற்றில் கு - சாரியை. என் - வினைப்பெயர், இரண்டாம் வேற்றுமைத்தொகை. வல்லை - விரைவுக்குறிப்புணர்த்து மிடைச்சொல். செல்வல் - தன்மையொருமை எதிர்கால வினைமுற்று. விகுதி - அல், இவ்விகுதி - எதிர்காலம் ஒழிந்த மற்றக்காலங்களில் வராது. (கசூஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தெறுநி ரப்புளோர் வாழ்ந்திடு செல்வர்பாற் செல்வரேல் மதியார்கண், மறுவு றுத்தவ மானமு மியற்றுவர் மானமுள்ளவ ராயிற், குறுகு மவ்வவ மானத்தா லுயிர்விடு கொள்கையிற் றலை நிற்பார், நறும லர்க்குழா லாதலா லவரிடை நண்ணனன் றென வெண்ணல்.

(ப - ரை.) தெறும் - வருத்துகின்ற - நிரப்பு உள்ளோர் - வறுமையுள்ளோர், வாழ்ந்திடு செல்வர்பால் - (இன்புற்று) வாழ்கின்ற செல்வரிடத்து, செல்வரேல் - போவராயின், மதியார்கள்-மதிக்கமாட்டார்கள், மறுஉறுத்து - குற்றமேறிட்டு, அவமானமும் இயற்றுவர் - அவமானத்தையும் செய்வார்கள், மானம் உள்ளவர் ஆயின்-மானமுடையோராளுல், குறுகும் - அடைந்த, அ- அந்த, அவமானத்தால் - மானக்கேட்டினால், உயிர்விடு கொள்கையில் - உயிரைவிடுகின்ற கோட்பாட்டில், தலைநிற்பார் - முந்திநிற்பார்கள், ஆதலால் - ஆகையால், நறுமலர்குழால் - மணமுள்ள மலரையணிந்த கூந்தலையுடையாளே, அவரிடைநண்ணல் - அவரிடத்திற்சேர்தல், நன்று என எண்ணல்-நன்மையென்று எண்ணவேண்டாம். எ - று.

(பொ - ரை.) வருத்துகின்றவறுமையுள்ளோர் (இன்புற்று) வாழ்கின்ற செல்வரிடத்துப் போவராயின் மதிக்கமாட்டார்கள்; குற்றமேறிட்டு அவமானத்தையும்செய்வார்கள், மானமுடையோராளுல்அடைந்த அந்தமானக்கேட்டினால், உயிரைவிடுகின்ற கோட்பாட்டில் முந்திநிற்பார்கள்; ஆகையால் மணமுள்ள மலரையணிந்த கூந்தலையுடையாளே! அவரிடத்திற்சேர்தல் நன்மையென்றெண்ண வேண்டாம். எ - று.

(வி - ரை.) நிரப்புதல் இல்லாதவறுமையை நிரப்பு என்றது மங்கலம். தெறுநிரப்பு-வினைத்தொகை; செல்வர்பால் என்பதில், பால் ஏழனுருபு. மதி

யார்கள், அவமானமும் செய்வர் என்றது உலகவியற்கையைக் கூறியபடி. அந்த அவமானத்தால் மானிகள் உயிர் இழப்பார் என்பதை "மயிர்நீப்பின் வாழாக்கவரிமாவன்னார், உயிர் நீப்பர் மானம்வரின்" என்னும் திருக்குறளாலு மறிக. அ—அவமானம் - என்பது "எகரவினா முச்சுட்டின் முன்னர், உயிரும்யகரமும் எய்தின்வவ்வும்" என்றவிதிப்படி, அவ்வவமானம் எனப்புணர்ந்தது. தலை என்பதைப்பண்புப்பெயராகக் கொள்ளுதலேயன்றி,கொள்கையின் தலை - கொள்கையில், நிற்பர் - நிற்பார் எனினுமாம். அவ்வாறு கொள்ளும் போது, தலை, ஏழனுருபு என்க. நறுமலர்க்குழல் - இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப்பிறந்த அன் மொழித்தொகைக் காரணப்பெயர்; இது இயல்பினால் வந்தவிளிப்பெயர். எண்ணல் - எதிர்மறை ஒருமை ஏவல்; விகுதி அல். (கசுரு)

இருங்க டற்புவி யிடத்தினில் லாரையெல் லாருமெள் ளுவ ரென்று, வொருங் குணர்ந்தமுன் னோருரைத் திட்டவஃ துண்மை யென் றுளங்கொண்ணீ, நெருங்கு பற்றுறு தாய்தந்தை யருநிரப் புறுநரை வெறுப்பாரேற், சுருங்கு மன்பின்மற் றெவர்வெறுத் திடாதவர் தூநகை மலர்க்கொம்பே.

(ப - ரை) இரு - பெரிய, கடல் - கடல்சூழ்ந்த, புவியிடத்தின் - பூமியினிடத்தில், இல்லாரை எல்லாரும் எள்ளுவர் என்று - பொருளில்லாதாரை யாவரும் இகழ்வாரென்று, ஒருங்கு உணர்ந்த - முழுதுமறிந்த, முன்னோர் - மேலோர்கள், உரைத்திட்ட - சொல்லிய, அஃது - அந்தச்சொல், உண்மை என்று - சத்தியமென்று, நீ உள்ளம் கொள் - நீமனத்திற் கொள்வாயாக, நெருங்குபற்று உறு - நெருங்கிய விருப்பமிகுந்த, தாய்தந்தையரும் - தாய்தந்தைகளும், நிரப்பு உறுநரை - வறுமையடைந்தோரை, வெறுப்பரேல் - வெறுப்பாரானால், சுருங்கும் - குறைந்த, அன்பின்-அன்பையுடைய, மற்று எவர்- வேறுயாவர், வெறுத்திடாதவர் - வெறுக்காதவர்கள், தூநகை - பரிசுத்தமாகிய பற்களையுடைய, மலர்க்கொம்பே - பூங்கொம்பு போல்வாளே. எ - று.

(பொ - ரை.) பெரிய கடல்சூழ்ந்த பூமியினிடத்தில் பொருளில்லாதாரை யாவரும் இகழ்வாரென்று முழுதுமறிந்த மேலோர்கள்சொல்லிய அந்தச்சொல் சத்தியமென்று நீமனத்திற் கொள்வாயாக. நெருங்கியவிருப்பமிகுந்த தாய்தந்தைகளும், வறுமையடைந்தோரை வெறுப்பாரானால் குறைந்த அன்பையுடைய வேறுயாவர் வெறுக்காதவர்கள்; பரிசுத்தமாகிய பற்களையுடைய பூங்கொம்பு போல்வாளே. எ - று.

(வி - ரை) "இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை, எல்லாருஞ் செய்வர் சிறப்பு" என்பது திருக்குறளாகையால், "ஒருங்குணர்ந்த முன்னோர்" என்றது, திருவள்ளுவர்முதலியோரை. இதனை "கல்லானேயாயினுங் கைப்பொரு ளொன்றுண்டாயின், எல்லாருஞ் சென்றங்கெதிர் கொள்வர், இல்லானை, இல்லாளும் வேண்டாளீன்றெடுத்த தாய்வேண்டாள், செல்லாத

வன் வாயிற்சொல்'' என்னும் ஔவையார் செய்யுளாலறிக. நெருங்கு, பற்றுறு என்னும் வினைத்தொகைகள் இரண்டடுக்கி, தாய்தந்தை என்னும் பெயர் கொண்டன. உம்மை - உயர்வுசிறப்பு. நிரப்புறுநர் என்னும் தொழிலடியாகப்பிறந்த பெயர்ப்பகுபதத்தில், ந் இடைநிலை நிகழ்காலங்குறித்துநின்றது. தூநகைமலர்க் கொம்பு, உருவகம், நகை, சிரிப்புக்குத் தொழிலாகுபெயர்; நகு - பகுதி, ஐ - தொழிற்பெயர் விகுதி. (கஅச)

ஒன்றும் வேண்டல ராயினுஞ் செல்வர்பா லுறுமிடி யவர் சார்ந்தா, லின்று வந்தமை யாதினைக் கருதிமற் றிவரென வுளத் தெண்ணிக்,கன்று மாறுபல் குறிப்புரை நவிற்றுவர் காதலி னவர் பாற்போய், மன்ற வந்தது சிறுமையே யிவர்க்கன்றி மற்றிலை யறிபாவாய்.

(ப - ரை.) ஒன்றும் - ஒருபொருளையும், வேண்டலர் ஆயினும் - விரும்பாதவராயினும், செல்வர்பால் - செல்வரிடத்து, உறு - மிகுந்த, மிடியவர் சார்ந்தால்-வறுமையையுடையவர் அடைந்தால், இவர்-இந்தவறியவர், இன்று வந்தமை - இன்று வந்தது, யாதினைகருதி என - எதனைநினைத்தோவென்று, உள்ளத்து எண்ணி - மனத்தில் நினைத்து, கன்றுமாறு - அவ்வறியவர் மனம் வருந்தும்வண்ணம், பல்குறிப்பு உரைநவிற்றுவர் - பலகுறிப்பு மொழிகளைச் சொல்லுவர், (ஆதலால்) காதலின் - ஆசையோடு, அவர்பால்போய் - அவரிடத்திற்சென்று, இவர்க்கு - இந்தவறிஞருக்கு, மன்றவந்தது - மிகுதியுமுண்டானது, சிறுமையே அன்றி - தாழ்வேயல்லது, மற்றுஇல்லை - வேறொன்றுமில்லை, பாவாய் - பிரதிமைபோலும் அழகியபெண்ணே, அறி - நீ அறிவாய்,

(பொ - ரை.) ஒருபொருளையும் விரும்பாதவராயினும் செல்வரிடத்து மிகுந்த வறுமையையுடையவர் அடைந்தால், இந்தவறியவர் இன்றுவந்தது எதனை நினைத்தோவென்று மனத்தில்நினைத்து அவ்வறியவர் மனம்வருந்தும் வண்ணம்பலகுறிப்புமொழிகளைச்சொல்லுவர், (ஆதலால்) ஆசையோடு அவரிடத்திற்சென்று இந்த வறிஞருக்கு மிகுதியுமுண்டானது தாழ்வேயல்லது வேறொன்றுமில்லை, பிரதிமைபோலும் அழகியபெண்ணே! நீ அறிவாய். எ-று.

(வி - ரை.) ஒன்றும் என்பதில், உம்மை இழிவு சிறப்பு. வேண்டலர் - எதிர்மறைப்பலர்பால் வினையாலணையும்பெயர். ஆயினும் என்னும் எதிர்கால வினையெச்சத்தின் ஈற்றிலுள்ள உம்மை இழிவுசிறப்பு. உறு-பெயரையடுத்து வந்த உரிச்சொல். மிடியவர்-பண்படியாகப்பிறந்த பெயர்ப்பகுபதம், பகுதி. 'மிடி. வந்தமை இறந்தகாலத்தொழிற்பெயர். இந்தமை விகுதி,வருகின்றமை என நிகழ்காலத்திலும் வரும், எதிர்காலத்தில் வராது. மன்றவந்தது சிறுமையே என்பதனை ஏற்பதிகழ்ச்சி என்பதனூலும், இரவாமைநன்று என்பதனை 'கரவாதுவந்தீயும் கண்ணன்னார்கண்ணும், இரவாமைகோடியுறும்'' என்பதனூலுமறிக. கன்றுமாறு பல்குறிப்புரை நவிற்றலாவது முகமலர்ந்து இன் சொல்கூறாமல், கடுகடுத்து, நீ இப்போது இங்குவந்தகாரண மென்னை

வினைவிற்சொல் என்பது முதலாகியசொற்களை. மன்ற தேற்றப்பொருள் தரும் இடைச்சொல். தொல் - சூத்திரம், "மன்றவென்கிளவிதேற்றம்செய் யும்" பாவாய்-விளியுருபேற்றுநின்ற உவமையாகுபெயர். முதல்வேற்றுமை பாவை = (பிரதிமை.) அறி - ஏவலொருமை. (கரு௫)

இந்த வாறிவ னுரைத்தலென் னெனவுளத் தெண்ணிடே லெக்காலும், பந்த மானிடர் தன்மையிற் றெனப்பகர்ந் தேன்பரம் பொருளாய, சந்த மாமறைத் தலைவன்பா லுறுவது தகாதென் றேனலன்கண்டாய், யெந்த வாறுகை யுறையிலா தையன்முன் யான்படர் குவன்மாதே.

(ப - ரை.) இந்தஆறு - இந்தப்பிரகாரம், இவன்உரைத்தல் - இவன் சொல்லுதற்குக் காரணம், என்என - யாதென்று, உள்ளத்து - மனத்தில், எண்ணிடேல் - நினைக்கவேண்டாம், எக்காலும் - எக்காலத்திலும், பந்தம் - பிறவித்தளையையுடைய, மானிடர்தன்மை - மனிதரது தன்மை, இற்றுஎன - இன்னதென்று, பகர்ந்தேன் - சொன்னேன், பரம்பொருள்ஆய - மேன்மையுள்ள பொருளாகிய, சந்தம்ஆம் - அழகமைந்த, மறைத்தலைவன்பால் - வேத முதல்வனிடத்தில், உறுவது - செல்வது, தகாது என்றேன் அல்லன் - தகாதென்று சொன்னேனல்லன், மாதே - பெண்ணே, கையுறைஇலாது - காணிக்கையில்லாமல், ஐயன்முன் - கிருஷ்ணனுக்கெதிரில், யான் எந்த ஆறுபடர் குவன் - நானெவ்வாறுபோவேன். எ - று.

(பொ - ரை.) இந்தப்பிரகாரம் இவன் சொல்லுதற்குக் காரணம் யாதென்று மனத்தில் நினைக்கவேண்டாம்; எக்காலத்திலும் பிறவித்தளையையுடைய மனிதரது தன்மை இன்னதென்றுசொன்னேன்; மேன்மையுள்ள பொருளாகிய அழகமைந்த வேதமுதல்வனிடத்தில் செல்வது தகாதென்று சொன்னேனல்லேன். பெண்ணே! காணிக்கையில்லாமல் கிருஷ்ணனுக்கெதிரில் நானெவ்வாறுபோவேன். எ - று.

(வி - ரை.) யான்மனிதர் இயற்கையைக்கருதி, இரக்கச்செல்லலாகாது எனக்கூறியதேயன்றி, வேதநாயகனாகிய கண்ணபிரானிடம் செல்வது தகுதி யன்றெனக் கூறியதாக நினையாதேயென்றுசொல்லி, யான்கையுறையின்றி எவ்வாறு அக்கண்ணபிரான் சந்நிதியிற்போவேன் என்றான் என்பது கருத்து. "இந்தவாறிவனுரைத்தல்" தன்மையில் படர்க்கைவந்த இடவழுவமைதி. "பந்தமானிடர்தன்மையிற்றென" என்றமையால் பந்தமற்ற பெரியோர் தத்தமக்கு இயலுமளவையால் அறமாகிய நல்வினையை ஒழியாமலே மனோவாக் குக்காயங்களால் செய்வார் என்பதுபெற்றாம். பந்தம் - பற்று. இற்று - இன் என்னும் இடைச்சொலடியாகப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்பு வினைமுற்று. கிருஷ்ணன் திருமாலின் அவதாரமாகையால், "பரம்பொருளாய சந்தமாம றைத்தலைவன்" என்றார். அலன் - அன்மைஎன்னும் பண்படியாகப் பிறந்த தன்மை யொருமைக்குறிப்பு வினைமுற்று, தகாது என்றேனலன் என இரண்

டு எதிர்மறைவந்தமையால், தகுதியுடையது என்னும் உடன்பாட்டுப்பொருள்தந்துநின்றது. என்றேன் - இதில்சொல் என்னும்மொழி மறைந்திருத்தலால், சொல்லெச்சம். கண்டாய் - முன்னிலையசையிடைச்சொல். இலாது-எதிர்மறைவினையெச்சம். படர்குவன் என்னும் தன்மை யொருமைவினைமுற்றில், கு - சாரியை. திருமாலின் அவதாரங்கள்:—திருமால் வேதத்தைத் திருடிக் கடலில் ஒளித்த சோமுகாசுரனைக்கொல்ல மச்சாவதாரமும், திருப்பாற்கடலைக் கடையும்போது மந்தரமலையைத் தாங்கக் கூர்மாவதாரமும், பூமியைப் பாய்போலச்சுருட்டிக்கொண்டு பாதாளத்திற்சென்ற இரணியாக்ஷனைக்கொல்ல வராகாவதாரமும், தன்தமையனைக்கொன்ற காரணம்பற்றிப் பழிவாங்குதலாகத் தன்னையே முதற்கடவுளென யாவரும் வணங்கவேண்டுமென்று கட்டளை பிறப்பித்து அவ்வாறுவணங்காத சாதுக்களை உபத்திரவப்படுத்திவந்த இரணியனைக் கொலைபுரிய நரசிங்காவதாரமும், திரிலோகங்களையும் தனதாணைக்குட்படுத்தி இந்திரபதம்பெற முயன்ற மகாபலியை வலியடக்க வாமனாவதாரமும், அரசரால் தாழ்த்தப்பட்ட அந்தணர் நிமித்தம் அவ்வரசரைக் கொல்லப் பரசுராமாவதாரமும், பிரலம்பன்முதற் பல இராக்கதரைக் கொல்லப் பலராமாவதாரமும், துரியோதனன் முதலிய தீயோரைக்கொன்று பூபாரம் தீர்க்கக் கிருஷ்ணாவதாரமும் செய்தனரென்பது. (கசுசு)

எழுகடற்கொரு புன்னுனிப் பனித்துளியென் னுவகை யைச்
செய்யுங், கொழுமலைத்துணைத் தேவுக்கம் மலைத்துணை கொண்டு
போற் றிடலுண்டோ, செழுமதிக்குச்சின் னூலிழை பறித்திட்
டுச் சிந்தித்த துறல்போல, முழுமுதற்குமே தாவது கையுறை
கொண்டுமுன் னுறல்வேண்டும்.

(ப - ரை.) எழுகடற்கு - சப்தசமுத்திரங்களுக்கு, ஒருபுல்நுனி - ஒருபுல்லினது நுனியில்தங்கிய, பனித்துளி - பனித்துளியானது, என்உவகையை செய்யும் - என்னசந்தோஷத்தையுண்டாக்கும், கொழு - செழுமையாகிய, மலைத்துணைதேவுக்கு - மலையளவாகிய தெய்வத்துக்கு, அ - அந்த, மலைத்துணைகொண்டு - மலையளவாகிய பொருளைக்கொண்டு, போற்றிடல் உண்டோ-தொழுதலுண்டோ, செழுமதிக்கு-செழுமையாகிய சந்திரனுக்கு, சில்நூலிழைபறித்திட்டு - சிலநூலிழையைப்பறித்து அருச்சித்து-சிந்தித்தது, எண்ணினபொருளை, உறல்போல - அடைதல்போல, முழுமுதற்கும் - முழுமுதற்கடவுளாகிய கிருஷ்ணனுக்கும், கையுறை - காணிக்கையாக, ஏதாவது கொண்டு-யாதாயினுமொரு பண்டத்தைக்கொண்டு, முன் உறல்வேண்டும்-அவனுக்கெதிரே செல்லவேண்டும். எ - று.

(பொ - ரை.) சப்தசமுத்திரங்களுக்கு ஒருபுல்லினது நுனியில் தங்கிய பனித்துளியானது என்னசந்தோஷத்தையுண்டாக்கும். செழுமையாகிய மலையளவாகிய தெய்வத்துக்கு அந்தமலையளவாகிய பொருளைக்கொண்டு தொழுதலுண்டோ. செழுமையாகிய சந்திரனுக்கு சிலநூலிழையைப்பறித்து அரு

ச்சித்து எண்ணினபொருளையடைதல்போல முழுமுதற்கடவுளாகிய கிருஷ்ணனுக்கும் காணிக்கையாக யாதாயினுமொரு பண்டத்தைக்கொண்டு அவனுக்கெதிரே செல்லவேண்டும்.

(வி - ரை.) சப்தசாகரங்களுக்கு ஒரு புல்லின் நுனியிற்றங்கிய பனித்துளிசேர்வதினால் ஒருகளிப்பையும் தராததுபோல, நாம்கொண்டு செல்லும் காணிக்கை அகிலாண்டகோடி பிரமாண்டநாயகனாகிய கிருஷ்ணனுக்கு உவகையையுண்டாக்காதெனினும், உலகத்தார் மலையளவுதெய்வத்தை ஆராதிக்கச் சிறிது கற்பூரம்கொண்டு செல்வதுபோலும், கன்னியர் சந்திரனுக்குத் தாம்விரும்பிய பெரும்பொருளைப் பெறுதற்கு நூலிழையைப்பறித்திடல் போலும் ஏதேனும் சிறிது காணிக்கைகொண்டுபோக வேண்டுமென்பது கருத்து. "மலையளவுதெய்வத்துக்குக் கடுகளவுகற்பூரம்" என்பது பழமொழி. கன்னிப்பருவமுள்ள பெண்கள் தமக்கு - விரைவில் நல்லகணவன் வாய்க்க வேண்டு மென்னும் எண்ணங்கொண்டு அதின்பொருட்டு, தமது முன்றானையில் சிறிதுநூலிழையைப் பறித்திட்டுப் பிறைச்சந்திரனைத் தொழுது, தாம் கருதின பொருளையடைதல் மரபாதலால், "செழுமதிக்குச் சின்னூலிழை பறித்திட்டுச் சிந்தித்ததுறல்போல" என்றார். நுனி - பண்படியாகப்பிறந்த பெயர்ப்பகுபதம். நுண் - பகுதி. மை, விகுதிகெட்டநுண் என்பதுநுன் என மருவியது. இ - ஒன்றன்பால் விகுதி, நுண்மையையுடையது என்பது பொருள். பனித்துளி - நெற்குவை என்பதுபோல ஒன்றன் கூட்டத்தற்கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். கொழுமலை - பண்புத்தொகை நிலைத்தொடர். தே என்னும் ஓரெழுத்தொருமொழி உகரச் சாரியையும், அதுபற்றி வந்தவகரவுடம்படுமெய்யுடன், க். சந்தியும்பெற்று நான்கனுருபேற்றது. சிந்தித்தது - இறந்தகால ஒன்றன்பால் வினையாலணையும் பெயர். முழுமுதல் - அடையடுத்தபண்பாகுபெயர். இதனீற்றிலுள்ள உம்மை இறந்ததுதழீஇயதனோடு உயர்வு சிறப்புப்பொருளது. கையுறை - தொழிற்பெயர். கையுறு - பகுதி, ஐ-தொழிற்பெயர் விகுதி, உகரக்கேடுசந்தி, இது, கையிற்கொண்டு கொடுக்கும் பொருளை யுணர்த்தலால், தொழிலாகு பெயர். (கசுஎ)

மேற்படி - வேறு.

என்றுரைத்த கொழுநனுரை கேட்டுமகிழ்ந் திதற்கென்னோ செயலென் றெண்ணி, யன்றுமுத லுபவாசந் தானிருந்து மாமுனிவ னறிதிற் றேடி, நன்றளிக்கு நெல்லினிற்றன் னொருபாகம் வேறெடுத்து நலக்கச் சேர்த்துத், துன்றியவந் நெல்லையொரு தினத்தறலி னனைத்துவறுத் தெடுத்துத் தூய்தா.

இச்செய்யுளும் வருஞ்செய்யுளும் குசேலர்மனைவி கிருஷ்ணபகவானுக்குக் கையுறைசேகரித்துக் கொடுத்தனள் என்பது.

(ப - ரை.) என்று உரைத்த-என்று சொன்ன, கொழுநன் உரைகேட்டு-தன்கணவனது சொல்லைக்கேட்டு, மகிழ்ந்து-சந்தோஷித்து, இதற்குசெயல்-



ஸ்ரீ கிருஷ்ணனிடஞ்செல்லத்துணிந்த குசேலருக்கு அவர் மனைவி கையுறையாக அவலிடித்துக்கொடு

இதற்குநம்மால் செய்ய அடுப்பது, என்னே என்று எண்ணி-யாதோவென்று நினைத்து, அன்றுமுதல் - அன்றுதொடங்கி, தான் உபவாசம் இருந்து - தான் விரதமாயிருந்து, மாமுனிவன் - பெரிய முனிவனுகிய குசேலன், அரிதின் தேடி - அருமையாகத்தேடி, நன்று அளிக்கும் - நன்ருகக் கொடுக்கிற, நெல்லினில் - தானியத்தில், தன் - தனது, ஒருபாகம்-ஒருபங்கை, வேறுஎடுத்து - வேரூயெடுத்து, நலக்கச்சேர்த்து - நன்மையுண்டாகச்சேர்த்து, துன்றிய - மிகுந்த, அ நெல்லே - அந்ததானியத்தை, ஒருதினத்து-ஒருநாளில், அறலில் நனைத்து - நீரில் நனைத்து, தூய்து ஆ-பரிசுத்தமுடையதாக,வறுத்துஎடுத்து-வறுத்தெடுத்துக்கொண்டு. எ - று.

(பொ - ரை.) என்றுசொன்ன தன்கணவனது சொல்லேக்கேட்டுச் சந்தோஷித்து, இதற்கு நம்மால்செய்ய அடுப்பது யாதோவென்று நினைத்து, அன்றுதொடங்கித்தான் விரதமாயிருந்து,பெரியமுனிவனுகிய குசேலன் அருமையாகத்தேடி நன்ருகக்கொடுக்கிற தானியத்தில் தனது ஒருபங்கை வேருயெடுத்து நன்மையுண்டாகச்சேர்த்து, மிகுந்த அந்ததானியத்தை ஒருநாளில் நீரில்நனைத்துப் பரிசுத்தமுடையதாக வறுத்தெடுத்துக்கொண்டு. எ - று.

(வி - ரை.) தான் - விளியேலாத திணைப்பொதுவாகிய படர்க்கைப்பெயர். இதனேடுநுமன்முதலிய பெயர்களும்விளியேலா என்பதை "நுவ்வொடு வினச்சுட்டுற் றனஎர-வைதுத்தாந்தானின்ன னவிளியா" என்னும் நன்னூற் சூத்திரத்தாலுமறிக. அரிது-அருமை என்னும் பண்படியாகப் பிறந்தகுறிப்பு வினையெச்சம். அதன் ஈற்றிலுள்ள இன்-சாரியை.பாகம்-பண்புப்பெயர், இது தேடி என்னும் வினையெச்சங்கொண்டது. இதுநெல்லேயுணர்த்தலால் பண்பாகுபெயர். நலக்க, நலம் என்னும் பண்படி யாகப்பிறந்த குறிப்புவினையெச்சம், நலம் - பகுதி,மகரக்கேடும் ககரத்தோற்றமும் சந்தி. கு-சாரியை, உகரக்கேடு சந்தி, அ - வினையெச்சவிகுதி. நனைத்து என்னும் இறந்தகாலவினையெச்சத்தில், பகுதியாகிய நனை தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாயினும் வல்லினமெய்யாகிய சந்திபெற்றமையால், பிறவினையென்க. தூய்து - பண்புப்பெயர், பண்புப்பெயர் விகுதி - து. ஆக என்னும் செயவெனெச்சம் ஈறுகெட்டுநின்றது. (கசுஅ)

கறையிட்டு நனிகாண வுலக்கைகொடு மிக்கிடித்துக் கரிசு
போக்கி,நிறையிட்ட வவலாக்கிக் குசேலமுனி கந்தையினி னேடி
யோர்பான், மறையிட்ட வொழுங்குடையாண் முடிந்துகொடுத்
தினிதுபோய் வருக வென்ருள், சிறையிட்ட பவநீங்கும் வழிகண்
டோன் வழிதேடிச் செல்ல லுற்ருன்.

(ப - ரை.) கறை இட்டு - உரலிலிட்டு,நனிகாண-மிகவுங்காணும்படி, உலக்கைகொடு - உலக்கையைக் கொண்டு, மிக்கு இடித்து-மிகவும்இடித்து, கரிசுபோக்கி - உமியைப் போக்கி, நிறை இட்ட அவல் ஆக்கி - நிறைவாகிய அவலாகச்செய்து, குசேலமுனி - குசேல முனிவனது, கந்தையினில் - கந்

தைத்துணியில், நேடி - ஆராய்ந்து, ஓர்பால் - ஒருபக்கத்தில், மறை இட்ட ஒழுங்கு உடையாள் - வேதத்திற்சொல்லிய நல்லொழுக்கத்தை யுடையவள், முடிந்து கொடுத்து-முடிந்து தந்து, இனிது-இனிமையாக, போய்வருக என்றாள்-போய்வரக்கடவையென்றுசொல்லினாள், (சொல்லுதலும்) சிறைஇட்ட-சிறைப்படுத்திய, பவம் நீங்கும்வழி-பிறவியொழியும் நெறியை, கண்டோன் - கண்டவனாகிய குசேலமுனிவன், வழிதேடி-போகும்வழியைத் தேடி, செல்லல் உற்றான் - போகத்தொடங்கினான். எ - று.

(பொ - ரை.) உரலிலிட்டு மிகவுங்காணும்படி உலக்கையைக்கொண்டு மிகவும் இடித்து உமியைப்போக்கி, நிறைவாகிய அவலாகச்செய்து, குசேல முனிவனது கந்தைத்துணியில் ஆராய்ந்து ஒருபக்கத்தில் வேதத்திற் சொல்லிய நல்லொழுக்கத்தையுடையவள், முடிந்து தந்து, இனிமையாகப்போய் வரக்கடவையென்று சொல்லினாள், (சொல்லுதலும்) சிறைப்படுத்திய பிறவியொழியும் நெறியைக்கண்டவனாகிய குசேலமுனிவன் போகும்வழியைத்தேடிப்போகத் தொடங்கினான். எ - று.

(வி - ரை.) நெல்லை அழுந்த இடித்தால் அதிகபண்டங்காணுமாகையால் "நனிகாண உலக்கைகொடு மிக்கிடித்து" என்றார் "கரிசு" என்றது நெல்லினிடத்துள்ள உமிநூக்குமுதலியவற்றை. அவருடுத்த ஆடை இவ்வவலை முடிவதற்கு உதவாமல் கிழிந்திருத்தலால், அக்கந்தையில் கிழியாத பாகத்தைநேடி என்றார். நேடி - வினையெச்சம், பகுதி - நேடு. கணவனையேதெய்வமாகப் பாவிக்குங் குணமுடையவளாகையால் "மறையிட்ட ஒழுங்குடையாள்" என்றார். ஒழுகு என்னும் முதனிலை ஒழுங்கு எனத் திரிந்து வந்தது. இது நன்னடக்கையை யுணர்த்தலால் முதனிலைதிரிந்த தொழிலாகு பெயர். உடையாள் - குறிப்பு வினையாலணையும்பெயர். போ என்னுமல் போய்வருக என்றது, மங்கலம் கருதியென்க. ஆன்மா இறைவனைவிட்டுத் துன்பத்துக்கேதுவாகிய பிறவியைப்பெற்றமையால், சிறையிட்டபவம்" என்றார். கண்டோன் - வினையாலணையும்பெயர். முத்தியடைதற்குரிய நன்னெறியுடையவராகையால், தெளிவுபற்றி இறந்தகாலத்தால்" பவநீங்கும் வழிகண்டோன் என்றார். (கசுக)

முன்னுநெடுந் தூரவழி நடந்தறியான் றோட்கோப்பு முதலாதாரந், தன்னமுறி லான்பதிகர் தமைவினவி வழிதேர்ந்து தடையிலாது, பன்னெடுங்கா வதம்போகிக் கவர்வழிகண் டுளமயங்கிப் பரிந்து நின்றக், துன்னிமதிப் பாலிதுசெல் வழியெனத்தேர்ந் தவணின்று முற்றுச் செல்வான்.

இதுமுதல் கசுஎ - ம் செய்யுள்வரையில் குசேலர் வழிநடந்தமை கூறுகின்றது.

(ப - ரை.) முன்னும் - முன்னமும், நெடுந்தூரவழிநடந்து அறியான்-நெடுந்தூர வழியை நடந்தறியாதவனும், தோள் கோப்பு முதல்-கட்டமுது

முதலாகிய, ஆதாரம் - ஆதரவுகள், தன்னமும் இல்லான் - சிறிதுமில்லாதவனுமாகிய குசேலன், பதிகர் தமை வினவி - வழிச்செல்வோரை வினவி, வழிதேர்ந்து - வழியையாராய்ந்து, தடைஇல்லாது - தடையில்லாமல், பல் நெடுகாவதம் போகி - அனேககாதவழி சென்று, கவர்வழிகண்டு-கிளைவழியை நோக்கி, உள்ளம் மயங்கி - மனந்திகைத்து, பரிந்துநின்று - வருந்திநின்று, அங்கு - அவ்விடத்தில், மதியால் உன்னி - அறிவினால்யூகித்து, செல்வழி - போகும்வழி, இதுஎனதேர்ந்து - இது என்று தெளிந்து, அவண்நின்றும் - அவ்விடத்தில்நின்றும், உற்றுசெல்வான் - பொருந்திச்செல்லாநின்றான். எ - று.

(பொ - ரை.) முன்னமும் நெடுந்தூரவழியை நடந்தறியாதவனும் கட்டமுதுமுதலாகிய ஆதரவுகள் சிறிதுமில்லாதவனுமாகிய குசேலன், வழிச்செல்வோரை வினவிவழியை யாராய்ந்து, தடையில்லாமல் அநேககாதவழி சென்று, கிளைவழியை நோக்கி மனந்திகைத்து வருந்திநின்று, அவ்விடத்தில் அறிவினால் யூகித்துப் போகும்வழி இது என்று தெளிந்து, அவ்விடத்தில்நின்றும் பொருந்திச் செல்லா நின்றான். எ - று.

(வி - ரை.) தோட்கோப்பு - ஏழாம் வேற்றுமைத் தொகைப்புறத்துந் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். இதுதோளில் கோக்கப்படும் உணவின் கட்டு எனவிரியும். முதல்என்றது, வழிச்செல வுக்குவேண்டிய வற்றை. தடையிலாது என்றது' இளைப்புப் பாராட்டாது என்றபடி. காவதம் - ஏழரைநாழிகை வழித்தூரம்; இதுகாதம் எனவும்வரும். போஎன்னும்பகுதி குசாரியையும், இ என்னும் இறந்த கால வினையெச்ச விகுதியும்பெற்று, போகிஎனவந்தது. துவாரகைக்குச் செல்லும்வழி அறியாதவராகையால், கிளைவழிகண்டபோதுமயங்குவாராயினர். ''மதிப்பால் இது செல்வழி எனத்தேர்ந்து'' என்றமையால், அவ்வழி மனிதர்கள்போக்கு வரவு இல்லாதது எனத்தோன்றுகிறது. செல்வழிஎன்பது, நடவாதஅஃறிணையை உயர்திணையைப் போலவைத்துக் கூறும் மரபு. நன் - சூ. "கேட்குநபோலவும், கிளக்குநபோலவும், இயங்குநபோலவும், இயற்றுநபோலவும், அஃறிணைமருங்கினு மறையப்படுமே" அவண் நின்று - ஐந்தாம் வேற்றுமைத் தொகாநிலைத் தொடர்; நின்று - சொல்லுருபு - உம் - சாரியை. (கஎ0)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வாங்குவிற் கருங்கார் மருங்குறமருண்டு மையலம் பிடியென வணைத்த, தேங்குமும் மதம்பெய் களிற்றினைக் கண்டுசிறுபிடி யூடவக் களிறு, பாங்குறப் போகி யடிக்கடி வணங்கிப் பரிந்துபைங் கற்பகந் தளிர்த்த, பூங்குழை யூட்டிப் புலவிதீர்த்தணைக்கும் பொருப்புகள் பற்பல கடந்தான்.

(ப - ரை.) வாங்கு - வளைந்த, வில் - வானவில்லையுடைய, கருங்கார் - கரியமேகமானது, மருங்குஉற - பக்கத்தில் பொருந்த, மருண்டு - மயங்கி,

மையல் அம்பிடி என - ஆசையுள்ள அழகிய பெண்யானையென்று நினைத்து, அணைத்த - தழுவின, தேங்கும் - நிறைந்த, மும்மதம்பெய் - மும்மதங்களையும் சொரிகிற, களிற்றினைகண்டு - ஆண்யானையைப்பார்த்து, சிறுபிடிஊட - சிறியபெண்யானைபிணங்க, அக்களிறு-அந்த ஆண்யானை, பாங்கு உறபோகி- பக்கத்திற் பொருந்தச்சென்று, அடிக்கடிவணங்கி - அடிக்கடிபணிந்து, பரிந்து-விரும்பி, பை - பசுமையாகிய, கற்பகம்தளிர்த்த-கற்பகமரத்தில் துளிர்த்திருக்கிற, பூகுழை - அழகாகியதழையை, ஊட்டி-உண்பித்து, புலவிதீர்த்து- பிணக்கத்தைநீக்கி, அணைக்கும் - தழுவுகின்ற, பற்பலபொருப்புகள் - பற்பல மலைகளையும், கடந்தான் - கடந்து சென்றான். எ - று.

(பொ - ரை) வளைந்தவானவில்லையுடைய கரியமேகமானது பக்கத்தில் பொருந்த, மயங்கி ஆசையுள்ள அழகிய பெண்யானையென்று நினைத்துத்தழுவின நிறைந்த மும்மதங்களையும் சொரிகிற ஆண்யானையைப்பார்த்து, சிறிய பெண்யானைபிணங்க, அந்த ஆண்யானை பக்கத்திற் பொருந்தச்சென்று அடிக்கடி பணிந்து விரும்பி பசுமையாகிய கற்பகமரத்தில் துளிர்த்திருக்கிற அழகாகியதழையை உண்பித்துப் பிணக்கத்தைநீக்கித் தழுவுகின்ற பற்பலமலைகளையும் கடந்துசென்றான். எ - று.

(வி - ரை.) அக்காட்டிலுள்ள மலைகளில் தவழ்கின்ற மேகங்களை அங்கு வசிக்கும் ஆண்யானை பெண்யானைஎன்று நினைத்து அதைத்தழுவும் என்றதனாலும், பிணங்கியபெண்யானையின் ஊடலைத் தீர்க்கும்பொருட்டு கற்பகவிருக்ஷத்தின்தளிரை அதற்கு உண்பித்து ஊடலைத்தீர்க்கும் என்றமையாலும், வான் அளாவ உயர்ந்தமலைகள் பலஉண்டு என்றதாயிற்று. வாங்குவில் - வினைத்தொகை. மய்யல் - மையல் எனப்போலியாய் வந்தது. நன் - சூ: "அ, ஐ முதலிடை ஒக்குஞ்ச ஞ யமுன்" மும்மதம் - கன்னமதம், கபோலமதம், பீஜமதம். குழைதல் - தவளுதல்; இது முதனிலைத்தொழிலாகு பெயராய்த் துவளுந் தன்மையுள்ள தளிரையுணர்த்திற்று. (கஎக)

மிக்கசெந் தழலின் சிகைக்கொழுந் தெழுந்து மெய்வெதுப்
புறுமென வஞ்சித்,தக்கபொன் னுலகத் துறைகுநர் முகிலைத்தடை
யென நவின்றுகீழ்த் தாழ்த்தி,யொக்கலோ டொளிர்கற் பகநிழன்
மருந்துண் டுயிரையோம் புறக்கடுங் கொடுமை, தொக்கநீள் பரப்பு நிரப்புறு முரப்புச் சூழல்கள் பற்பல கடந்தான்.

(ப - ரை.) தக்க - தகுதியாகிய, பொன்னுலகத்து உறைகுநர் - பொன்னுலகில் வசிப்போர், மிக்கசெந்தழலின் - மிகுந்த செந்நெருப்பின், சிகைக்கொழுந்து எழுந்து-மேற்புறத்துள்ள சுவாலையெழுந்து, மெய்-தமது உடம்புகளை, வெதுப்புறும் எனஅஞ்சி -சுடுமென்றுபயந்து, முகிலை - மேகத்தை, தடையென - தடையாகக்கட்வையென்று, நவின்று - சொல்லி, கீழ்தாழ்த்தி- கீழேதாழச்செய்து, ஒக்கலோடு - உறவினரோடு, ஒளிர் - விளங்குகின்ற, கற்பகம்நிழல் - கற்பகமரநிழலில், மருந்தஉண்டு - அமிர்தத்தையுண்டு, உயிரை

ஓம்புற-உயிரைக்காப்பாற்றும்படி, கடுகொடுமைதொக்க, கடுமையாகிய உஷ்ணம் பொருந்திய, நீள்பரப்பு நிரப்புறு - நீண்டபரப்புகள் நிரம்பின, முரப்பு சூழல்கள்பற்பல - முரம்பிடங்கள் பற்பலவற்றையும், கடந்தான் - கடந்து சென்றான். எ - று.

(பொ - ரை.) தகுதியாகிய பொன்னுலகில் வசிப்போர், மிகுந்தசெந்நெருப்பின்மேற் புறத்துள்ள சுவாலையெழுந்து, தமது உடம்புகளைச் சுடுமென்று பயந்து மேகத்தைத் தடையாகக் கடவையென்றுசொல்லி, கீழேதாழச்செய்து உறவினரோடு விளங்குகின்ற கற்பகமரநிழலில் அமிர்தத்தையுண்டு உயிரைக் காப்பாற்றும்படி கடுமையாகிய உஷ்ணம்பொருந்திய நீண்டபரப்புகள் நிரம்பின முரம்பிடங்கள் பற்பலவற்றையும் கடந்துசென்றான். எ - று.

(வி - ரை.) பாலைநிலத்தில் கொழுந்து விட்டெரியும் தீச்சுடர்தம்மைச் சுட்டுவருத்துமென்று பயந்துதேவர்கள் தம்முறவினரோடு அச்சுடரைத்தடுக்க மேகத்தைக்கீழே நிறுத்தி அமுதத்தைக் கற்பகநிழலிலுண்டு உயிரைக் காப்பர்களெனச் சொல்லும்கொடுமை மிகுந்தபாலை நிலத்தைக் கடந்தார் என்பது கருத்து. சிகைக்கொழுந்து என்பது மரபுவழுவமைதி. உறைகுநர்-நிகழ்காலப் பலர்பால் வினையாலணையும் பெயர்,இதில் ந் நிகழ்கால இடைநிலை. ஒக்கல் - தொழிற்பெயர்; ஒ, பகுதி, க் - சந்தி, கு - சாரியை, உகரக்கேடு - சந்தி, அல் விகுதி: ஒத்திருத்தல் என்பதுபொருள், இது ஆகு பெயராய் உறவினரை யுணர்த்திற்று. நீள்பரப்பு, வினைத்தொகை யாதலால், வல்லினம் இயல்பாயிற்று. பரப்பு, பரம்பு என்னும் முதனிலைதிரிந்த தொழிற்பெயர், இது ஆகுபெயராய்ப் பரந்தவிடத்தை யுணர்த்திற்று. முரம்பு - பருக்கைக் கற்கள் நிரம்பிய மேட்டுநிலம். இது முரப்பு எனவலித்தல் பெற்றது. முரப்புச் சூழல்கள்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர்சூழல் என்னும் தொழிற்பெயர் சூழ்ந்துள்ள விடத்தையுணர்த்தலால், ஆகுபெயர்.(கஎஉ)

ஆறலைத் துயிருண் டுடல்கவர்ந் தொளிக்கு மவர்க்குமவ் வுடல்கரு தாது, கோறலைக் குறித்த குடாவடி சீயங் கொடுவரி வேங்கையெய் யாமான், மாறலைத் தெழும்போ தகமுத லாம்பன் மாக்கட்கு மிடமதாய்க் கொடுமை, காறலைச் செய்யா தடர்ந்துயர்ந் திருண்ட காடுகள் பற்பல கடந்தான்.

(ப - ரை.) ஆறு அலைத்து - வழிபறித்து, உயிர் உண்டு - உயிரையுண்டு, உடல் கவர்ந்து - பொன்னைக்கவர்ந்து, ஒளிக்குமவர்க்கும் - ஒளித்துக் கொள்வோராகிய கள்வர்க்கும், அவ்வுடல் கருதாது - அந்தப்பொன்னை நினையாமல், கோறலைக்குறித்த - கொல்லுதலையே நினைத்த, குடாவடி - கரடி, சீயம் - சிங்கம், கொடுவரிவேங்கை - வளைவாகிய கோடுகளையுடைய புலி, எய் - முட்பன்றி, ஆமான் - காட்டுப்பசு, மாறு அலைத்து எழும் - மாறுபட்டு எழுகின்ற, போதகம் - யானை, முதல் ஆம் - முதலாகிய, பல்மாக்கட்கும் -

பல மிருகங்களுக்கும், இடமது ஆய் - இடமாகி, கொடுமை - கொடிதாகி, கால் தலை செய்யாது - கால் தலை தெரியாது, அடர்ந்து - நெருங்கி, உயர்ந்து - ஓங்கி, இருண்ட - இருண்டிருக்கிற, காடுகள் பற்பல - காடுகள் அனேகங்களையும், கடந்தான் - கடந்து சென்றான். எ - று.

(பொ - ரை.) வழிபறித்து உயிரையுண்டு பொன்னைக்கவர்ந்து ஒளித்துக்கொள்வோராகிய கள்வர்க்கும், அந்தப்பொன்னை நினையாமல் கொல்லுதலையே நினைத்த கரடி, சிங்கம், வளைவாகிய கோடுகளையுடைய புலி, முட்பன்றி, காட்டுப்பசு, மாறுபட்டு எழுகின்ற யானை முதலாகிய பல மிருகங்களுக்கும் இடமாகிக் கொடிதாகிக் கால் தலை தெரியாது நெருங்கி ஓங்கி இருண்டிருக்கிற காடுகள் அனேகங்களையும் கடந்து சென்றான். எ - று.

(வி - ரை.) வழிப்போக்கரை வருத்தி யொளிப்பவர்கட்கும் கரடி முதலிய மிருகங்களுக்கு மிருப்பிடமாகிக் கால் தலை தெரியாது அடர்ந் துயர்ந்திருண்ட காடுகள் பலவற்றையுங்கடந்தார் என்பது கருத்து. ஆறலைத்து - ஏழாம் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர் ஆதலால், வல்லினம் இயல்பாயிற்று. உடல் - பொன்; மறவர் - பொன்னைக்கருதியே வழிப்போக்கரையுயிர் வாங்குதலாலும், அப்பொன்னைக்கருதாது கரடி முதலிய மிருகங்கள்-கொல்லுந்தொழிலையே மேற்கொண்டு கொல்லுதலாலும் உடல் கவர்ந்தென்றும் கருதாதென்றுங்கூறினர். ஒளிக்குமவர் - நிகழ்கால வினையாலணையும் பெயர்; இதில் உம், நிகழ்காலங்காட்டிற்று. கோறல் - தொழிற்பெயர்; பகுதி. கொல். குடாவடி வளைவாகிய அடியையுடையது எனப்பொருள் தரலால், பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஆ மா - காட்டுப்பசு, இது னகரச்சாரியை பெற்று வந்தது "ஆமாகோனவ்வணையவும் பெறுமே" என்பது சூத்திரம். இடமது என்பதில், து - பகுதிப்பொருள் விகுதி, அ - சாரியை. இது, முதல் வேற்றுமை. காறலை என்பதைக்கால் தலை எனப்பிரிக்க: "குறில் செறியாலளவல்வழிவந்த தகரந்திரிந்தபிற்கேடும்"என்னும்விதியால் வருமொழித் தகரம் றகரமாய்த்திரிந்தவழி நிலைமொழியீற்று லகரங்கெட்டது."காறலை செய்யாதடர்ந்து "என்றமையால், காட்டின் முதல் இது வென்றும் கடையிது வென்றுந்தெரியா தடர்ந்திருந்ததென்றபடி.

மாங்கனி யுதிரப் புலியடிப் பைங்காய் வாழைக்கூன் குலைபல முறியத், தேங்கனிந் தொழுகும் வருக்கைகள் கிழியச் செறிகமுகம்பழஞ் சிதறத், தாங்குமுப் புடைக்கா யுடைதரப் பகட்டுத் தகட்டகட் டிளவரால் பாயும், வீங்குநீர்ப் பழன முடுத்ததே யங்கண் மென்மெலப் பற்பல கடந்தான்.

(ப - ரை.) மாங்கனி உதிர - மாங்கனிகள் உதிரவும், புலி அடிபை காய் - புலியினது பாதம் போலும் பசியகாயையுடைய, வாழை - வாழையின், கூன் - வளைவாகிய, குலைபல - பலகுலைகள், முறிய - முறியவும், கனிந்து தேம் ஒழுகும் - கனிந்து தேனொழுகுகின்ற, வருக்கைகள் - பலாக்கனி

கள், கிழிய - கிழியவும், செறி - நெருங்கிய, கமுகம்பழம் சிதற - கமுகம்பழங்கள் சிதறவும், தாங்கும் - தாங்கப்பட்ட. முப்புடைக்காய் - தென்னங்காய்கள், உடைதர - உடையவும், பகடு - பெருமையுள்ள, தகட்டு அகட்டு - தகட்டு வடிவாகிய வயிற்றையுடைய, இளவரால் பாயும் - இளமையாகிய வரால் மீன்கள் பாய்கின்ற, வீங்கு நீர்-மிகுந்த நீரையுடைய, பழனம் உடுத்த- வயல் சூழ்ந்த, பற்பல தேயங்கள் - பற்பல நாடுகளை, மெல்மெல - மெல்ல மெல்ல, கடந்தான் - கடந்து சென்றான். எ - று.

(பொ - ரை.) மாங்கனிகள் உதிரவும், புலியினது பாதம்போலும் பசியகாயையுடைய வாழையின் வளைவாகிய பலகுலைகள் முறியவும், கனிந்து தேனொழுகுகின்ற பலாக்கனிகள் கிழியவும்,நெருங்கிய கமுகம் பழங்கள் சிதறவும், தாங்கப்பட்ட தென்னங்காய்கள் உடையவும், பெருமையுள்ள தகட்டு வடிவாகிய வயிற்றையுடைய இளமையாகிய வரால் மீன்கள்பாய்கின்ற மிகுந்த நீரையுடைய வயல் சூழ்ந்த பற்பல நாடுகளை மெல்ல மெல்லக்கடந்து சென்றான். எ - று.

(வி - ரை.) மாங்கனியுதிரவும், வாழைக்குலைமுறியவும், பலாக்கனிகிழியவும், கமுகின்கனி சிதறவும், தேங்காயுடையவும் வரால்மீன்பாயும் கழனிகள் சூழ்ந்ததேசங்கள்பல கடந்தார் என்பதுகருத்து. புலியடிப்பைங்காய் - உவமைத்தொகை, புலியடிபோன்ற பைங்காய் எனவிரியும். பைங்காய் என்றது, பசியகாய்களையுடைய வாழைக்குலையின் சீப்பை. வாழைக்குலையின் சீப்பு, புலியடிபோலிருத்தலால், அதுவாழைச்சீப்பிற் குவமையாயிற்று. புலியடி - சினைத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத் தொடர். பை, பசுமையென்னுமொழியின் விகாரமொழி. கூன்குலை, வினைத் தொகைக்குறிப்பு. கமுகம்பழம் என்பதில், அம்-சாரியை. மூன்றுகண்களாகிய இடமுடையதாகையால், தேங்காய் முப்புடையெனப்பட்டது. மேற்கூறிய வளப்பங்களைப் பார்த்துக்கொண்டே சென்றனனென்பதற்கு 'மென்மெலக்கடந்தான்' என்றார்; இவ்வடுக்கு,இடைவிடாமைப்பொருளது,மெல்ல-குறிப்பு வினையெச்சம். (கஎ௪)

காமனும் பெண்மை யவாவுறப் பொலிந்த காளையர் மார்பிடை வயிரத்,தோமறு பூணிற் றந்நிழல் வேற்றுத் தோகைய ரென நினைத் தூடிக், கோமள மடவார் மறுகிடை யெறிந்த குரூஉமணிப் பூணவட் குறுகு, நாமநீ ளிருளை நக்கிவா ளெறிக்கு நகரங்கள் பற்பல கடந்தான்.

(ப - ரை.) காமனும் - மன்மதனும், பெண்மை அவாவுற - பெண்டன்மையை விரும்பும்படி, பொலிந்த - விளங்குகின்ற, காளையர் - யவ்வநபுருடரது, மார்பிடை - மார்பினிடத்து விளங்குகின்ற, தோம்அறு - குற்றமற்ற, வயிரப்பூணில் - வயிரப்பூணினிடத்துத் தோன்றுகின்ற, தம்நிழல் - தமதுசாயையை, வேற்றுத்தோகையர் எனநினைத்து - வேறுமாதரென்று நினைந்து,

ஊடி - பிணங்கி, கோமளமடவார் - மெல்லியலையுடைய இளம்பெண்கள், மறுகிடை எறிந்த - தெருக்களில் எறிந்துவிட்ட, குரு - ஒளியுள்ள, மணி பூண் - இரத்தினுபரணங்கள், அவண்குறுகும் - அவ்விடத்துப் பொருந்திய, நாமம் - அச்சத்தைத்தருகிற, நீள் இருளைநக்கி - பெரியஇருட்டையுண்டு, வாள் எறிக்கும் - ஒளியைவீசுகின்ற, பற்பலநகரங்கள் கடந்தான் - பற்பல நக ரங்களைக் கடந்துசென்றான். எ - று.

(பொ ழி.) மன்மதனும் பெண்டன்மையை விரும்பும்படி விளங்கு கின்றயவ்வநபுருடரது மார்பினிடத்து விளங்குகின்றகுற்றமற்றவயிரப்பூணி னிடத்துத் தோன்றுகின்ற தமதுசாயையை வேறுமாதரென்று நினைத்துப் பிணங்கி மெல்லியலையுடைய இளம் பெண்கள் தெருக்களில் எறிந்துவிட்ட ஒளியுள்ள இரத்தினுபரணங்கள் அவ்விடத்துப் பொருந்திய அச்சத்தைத்தரு கிற பெரிய இருட்டையுண்டு ஒளியைவீசுகின்ற பற்பலநகரங்களைக் கடந்து சென்றான். எ - று.

(வி - ரை.) காமனும் என்பதில் உம்மை உயர்வுசிறப்பு. பெண்மை - பெண்ணுந்தன்மை. அவாவுற என்பது ஒருசொல், இதற்குப்பகுதி அவாவுறு- காளையர் - உவமையாகுபெயர். வயிரப்பூண் எனவியையும், பூணிற்றங்கிழல்- பூணிற்பிரதி பலிக்கிற தமதுசாயை. தோகையர் உவமையாகுபெயர். கோம ளம் - மென்மை. நீளிருள் - பேரிருள், இது யாவர்க்கும் அச்சத்தையுண் டாக்குதலால் இதனை "நாமநீளிருள்" என்றார். நக்கிஎறிக்கும்எனவியையும், நக்கியென்றது முற்றுமுண்டென்றபடி. (௭௫)

துன்னிய வஞ்ச மழுக்கறல் வெகுளி தோன்றிடா வகையு ளத்தொடுக்கி, நன்னய முடையார் போல்வெளிக்காட்டி நாட்டிய திறையுநன் குய்த்துச், சென்னிமே லிருகை குவித்து நன்கொழு கிச் செயிருறு சமயமுற் றறிந்து, மன்னனை யலைக்குங் கொலைத் தொழிற் குறும்பர் வாழ்நகர் பற்பல கடந்தான்.

(ப - ரை.) துன்னியவஞ்சம் - மிக்கவஞ்சனையும், அழுக்கறல் - பொ றாமையும், வெகுளி - கோபமும், தோன் றிடாவகை - வெளிப் படாதபடி, உள்ளத்து ஒடுக்கி - மனத்தின் கண்ணேயடக் கிக்கொண்டு, நல்நயம் உடை யார் போல் - நல்ல அன்புடையார் போல, வெளிகாட்டி - புறத்தே காட்டி, நாட்டிய - ஏற்படுத்திய, திறையும் - குடியிறையையும், நன்குஉய்த்து - நன் றாகச்செலுத்தி, சென்னிமேல் - சிரசின்மீது, இருகைகுவித்து - இரண்டு கைகளையுங் கூப்பி, நன்குஒழுகி - நன்மையாய் நடந்து, செயிர்உறு - கெடுதி நேரிடுதற்குரிய, சமயம் - தருணத்தை, உற்று அறிந்து - ஆராய்ந்தறிந்து, மன்னனை - வேந்தனை, அலைக்கும் - வருத்துகின்ற, கொலைத்தொழில் - கொ லைத்தொழிலையுடைய, குறும்பர் - சிற்றரசர், வாழ் - வாழ்கின்ற, பற்பலநகர்- பற்பல நகரங்களையும், கடந்தான் - கடந்து சென்றான். எ - று.

(பொ - ரை.) மிக்க வஞ்சனையும் பொறாமையும் கோபமும் வெளிப் படாதபடி மனத்தின்கண்ணே யடக்கிக்கொண்டு, நல்ல அன்புடையார்போ லப் புறத்தே காட்டி, ஏற்படுத்திய குடியிறையையும் நன்றாகச்செலுத்தி, சிர சின்மீது இரண்டு கைகளையுங் கூப்பி நன்மையாய் நடந்து, கெடுதிநேரிடுதற் குரிய தருணத்தை ஆராய்ந்தறிந்து, வேந்தனை வருத்துகின்ற கொலைத்தொ ழிலையுடைய சிற்றரசர் வாழ்கின்ற பற்பல நகரங்களையும் கடந்து சென்றான்.

(வி - ரை.) வஞ்ச முதலிய தீயகுணங்களை யுள்ளத்தில் மறைத்துக் கொண்டு வெளிக்குச் சிநேகர்போல அபிநயித்துத் தங்களுக்கு விதித்த பகு திப்பணத்தையுங் கட்டி அடங்கினவரைப்போல வணங்கியிருந்து சமயம்பார் த்துப் பேரரசரைக்கொல்லும் தீச்செயலையுடைய குறுநிலமன்னர் வாழும் பலநகரங்களையுங் கடந்தார் என்பது கருத்து. அழுக்கறல் - தொழிற்பெயர்; இதில்பகுதி—அழுக்கறு, இது அழுக்காறு எனமுதனிலை திரிந்ததொழிற்பெ யராகவும் வரும். வெகுளி என்பதில், இ - தொழிற்பெயர் விகுதி. நன்கு - வினையடுத்துவந்த உரிச்சொல். உற்றறிதல் - அரசன் சோர்வை யாராய்ந்தறிதல். (௬௭௬)

கந்தமென் மலரும் வயிரமும் பொன்னுங் கரிப்பெரு மருப் பும்வெண் முத்துஞ், சந்தனக் குறடுங் காழகிற் றுணியுந் ததை மயிற் பீலியு மெடுத்துச், சிந்துவெண் டரங்கக் கரங்களா லிருபாற் செறிகுலை யுடைத்துவார் பரவை, நந்தலில் வயிறு கிழிதரப் பாயு நன்னதி பற்பல கடந்தான்.

(ப - ரை.) கந்தம் - வாசனையுள்ள, மென்மலரும் - மெல்லியமலர்களை யும், வயிரமும் - வயிரக்கற்களையும், பொன்னும் - பொற்பொடிகளையும், கரி பெருமருப்பும் - யானையின் பெரிய கொம்புகளையும், வெண்முத்தும் - வெள் ளியமுத்துகளையும், சந்தனக்குறடும் - சந்தனக்கட்டைகளையும், காழ் - வயிர முள்ள, அகில் துணியும் - அகிலினது துண்டங்களையும், ததை - நெருங்கிய, மயில்பீலியும் - மயிலின் தோகைகளையும், எடுத்து சிந்து - வாரிச்சிதறுகிற, வெள்தரங்கம் - வெள்ளிய அலைகளாகிய,கரங்களால் - கைகளால், இருபால் செறி - இருபக்கங்களிலும் நெருங்கிய, குலை உடைத்து - செய்கரைகளை யுடைத்து, வார் - நீண்ட, பரவை - கடலின், நந்தல்இல் - அழிவில்லாத, வயிறு-நடுவிடமானது, கிழிதர-கிழியும்படி, பாயும் - பாய்கின்ற, பற்பல நல் நதி-பற்பலவாகிய சிறந்தநதிகளையும்,கடந்தான் - கடந்துசென்றான். எ - று.

(பொ - ரை.) வாசனையுள்ள மெல்லிய மலர்களையும் வயிரக்கற்களை யும் பொற்பொடிகளையும் யானையின் பெரிய கொம்புகளையும் வெள்ளிய முத்துகளையும் சந்தனக்கட்டைகளையும் வயிரமுள்ள அகிலினது துண்டங் களையும் நெருங்கிய மயிலின் தோகைகளையும் வாரிச்சிதறுகிற வெள்ளிய அலைகளாகிய கைகளால் இருபக்கங்களிலும் நெருங்கிய செய்கரைகளையுடை

த்து நீண்டகடலின் அழிவில்லாத நடுவிடமானது கிழியும்படி பாய்கின்ற பற் பலவாகிய சிறந்த நதிகளையும் கடந்து சென்றான். எ - று.

(வி - ரை.) மலர்முதல் பீலியீறுகச்சொல்லப்பட்ட பலபொருள்களை யும் அலையாகிய கையாலேந்தி இருபக்கங்களிலுமுள்ள செய்கரைகளையுடை த்துக்கொண்டு, பெரிய சமுத்திரத்தின் வயிறுகிழியும்படி பாய்கின்ற பல நதிகளையுங்கடந்தார் என்பது கருத்து. செறிகுலை - வினைத்தொகை. குலை - செய்கரை; இது வேண்டாதபோது குலைக்கப்படுதலால் (அழிக்கப்படுதலால்) இதற்கு இப்பெயருண்டாயிற்று. இது, முதனிலைத்தொழிற்பெயர். வயிரம், வச்சிரமென்னும் வடமொழிச்சிதைவு. கரி - கரமுடையது. (யானை.) இது போலப்பக்ஷமுடையதைப் பக்ஷியெனக்கூறுதலும் காண்க. பக்ஷம் - இறகு. பரவை - தொழிலடியாகப்பிறந்த பெயர். இதில் ஐ, வினைமுதற்பொருள் விகுதி. பரத்தலையுடையதென்பதுபொருள். (கஎஎ)

கோச்சகக்கலிப்பா.

மெய்த்தசையி லாதொடுங்கி மேலாய தவத்தொடுங்கா
னெய்த்தினிநா மற்றைவழி யெவ்வாறு கடப்பதென
வுய்த்துணர்ந்து மென்மெலச்செ லுறுபொழுது மறுகும்வகை
மொய்த்தெழுதீ வெப்புடற்று முதிர்வேனில் வந்ததுவால்.

(ப - ரை.) மெய் - உடம்பில், தசைஇல்லாது - மாமிசமில்லாமல், ஒடு ங்கி - அடங்கி, மேல் ஆயதவத்தோடும் - மிகுதியாகிய வெப்பத்துடன், கான் - காட்டில், எய்த்து - இளைத்து, இனி - இனி, நாம் - யாம், மற்றைவழி - இன்னமுள்ளவழியை, எவ்வாறு - எப்படி, கடப்பதுஎன - கடப்பதென்று, உய்த்து உணர்ந்து - ஆராய்ந்தறிந்து, மென்மெல - பையப்பைய, செல்லுறு பொழுது - போகும்போது, மறுகும்வகை - மனமயங்கும்வண்ணம், மொய் த்துஎழு - நெருங்கியெழுகின்ற, தீ - நெருப்பினது, வெப்பு உடற்றும் - வெப்பத்தினால் வருத்துகின்ற, முதிர்வேனில் - முதிர்வேனிற்பருவமானது, வந்தது - தோன்றிற்று. எ - று.

(பொ - ரை.) உடம்பில் மாமிசமில்லாமல் அடங்கி மிகுதியாகிய வெப் பத்துடன் காட்டில் இளைத்து இனியாம் இன்னமுள்ளவழியை எப்படி கடப் பதென்று ஆராய்ந்தறிந்து பையப்பையப்போகும்போது, மனமயங்கும் வண் ணம் நெருங்கியெழுகின்ற நெருப்பினது வெப்பத்தினால் வருத்துகின்ற முதிர் வேனிற்பருவமானது தோன்றிற்று. எ - று.

(வி - ரை.) தவத்தால் உடலிளைத்தகுசேலர்வழி நடந்து வருந்திமற்றை வழியையும் எப்படி கடப்போமென்றெண்ணிக்கொண்டே மெல்லமெல்லப் போகையில் அவர் மனங்கலங்கும் விதமாகவெப்பமிகுந்த வசந்தகாலம் வந் தது என்பது கருத்து. இலாது - எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம், தசை என்பது எழுத்து நிலைமாறிச்சதை எனவும் வரும். தவம் - தாபம் என்னும்

வடமொழிச்சிதைவு. மற்றை என்பது இடைச்சொல், சுட்டெற்கினமாய் வந்தது. இவ்வாறு வருதலை "மற்றைக்கண்டான்றுராதொழிந்தால் வாழ்ந்து போறீரே" என்பதனுலுமறிக. "மற்றையதென்பது சுட்டியதற்கினம்" என்பது சூத்திரம். வெப்பு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். இதன் பகுதி - வெம்பு. உடற்றும் பிறவினையாகிய செய்யுமென்வாய் பாட்டுப்பெயரெச்சம், உடல் - பகுதி, று - பிறவினை விகுதி. உடற்று - பிறவினைப்பகுதி. தன்வினையில் உடலும் எனவரும். முதுவேனில், அறுபருவத்தொன்று. பருவமாவன:—கார், கூதிர், முன்பனி, பின்பனி,இளவேனில், முதுவேனில் என்பன-முதுவேனில் என்பது ஆனி ஆடிமாதங்களே. (கஎஅ)

மண்கொதிப்ப வறல்கொதிப்ப வளிகொதிப்ப வெண்ணுவா
ரெண்கொதிப்ப நறுநீழ லியைமனைவிட் டகலார்க்குங்
கண்கொதிப்பக் கரங்கொதிப்பக் கால்கொதிப்பக் கற்பகஞ்சார் -
விண்கொதிப்ப வவ்வேனில் வெம்பருவ மேவியதால்.

(ப - ரை.) மண்கொதிப்ப - மண்கொதிக்கவும், அறல்கொதிப்ப - நீர் கொதிக்கவும், வளிகொதிப்ப - காற்றுக்கொதிக்கவும், எண்ணுவார் - நினைப்போரது, எண்கொதிப்ப - மனம் கொதிக்கவும், நறுநீழல் இயை - நல்ல நிழலமைந்த, மனைவிட்டு - வீட்டைவிட்டு, அகலார்க்கும் - நீங்காதவர்க்கும், கண்கொதிப்ப - கண்கள் கொதிக்கவும், கரம்கொதிப்ப - கைகள் கொதிக்கவும், கால்கொதிப்ப - கால்கள்கொதிக்கவும்,கற்பகம்சார் - கற்பகமரம் பொருந்திய, விண்கொதிப்ப - விண்ணுலகம் கொதிக்கவும், அ - அந்த, வெம் - வெம்மையாகிய, வேனில்பருவம் - வேனிற்பருவமானது, மேவியது - வந்து பொருந்தியது. எ - து.

(பொ - ரை.) மண்கொதிக்கவும் நீர்கொதிக்கவும் காற்றுக்கொதிக்கவும் நினைப்போரதுமனம் கொதிக்கவும் நல்ல நிழலமைந்த வீட்டைவிட்டுநீங்காதவர்க்கும், கண்கள் கொதிக்கவும் கைகள் கொதிக்கவும் கால்கள் கொதிக்கவும் கற்பகமரம்பொருந்திய விண்ணுலகம் கொதிக்கவும் அந்த வெம்மையாகிய வேனிற்பருவமானது வந்து பொருந்தியது. எ - று.

(வி - ரை.) மண்ணும் நீரும் காற்றும் நினைப்பார் மனமும் வீட்டினுள்ளேயிருப்பவர் கண்ணும் கையும் காலும் கற்பகக்காடடர்ந்த விண்ணுலகமும் கொதிக்கும்படி வேனிற்காலந்தோன்றியது என்பது கருத்து. இவ்வாறு கொதிக்குமென்பதைப்பால காண்டத்தில் கம்பநாடரும் பாலை நிலவருணனையில் "பரிதிவானவனிலம் பசையறப்பருகுவான், விருதுமேற்கொண்டெலாம் வேனிலேயல்லதோர், இருதுவேறின்மையாலெரி சுடர்க்கடவுளும், கருதின் வேமுள்ளமுங்காணில்வே நயனமும்" எனக்கூறலானுமுணர்க. கொதிப்ப - காரியப்பொருளதாகிய செயவெனெச்சம். கொதி - பகுதி, ப் - சந்தி, ப் - விரித்தல் விகாரம், அ - விகுதி. எண் - முதனிலைத்தொழிற்பெயர், அது எண்ணும் மனத்தையுணர்த்தலால், ஆகுபெயர். கால்-எண்ணலளவையாகுபெயர்.

குலவுதன்னை விழுங்குவகை கொண்டகோட் கினமாகி
யிலகரவ நாடனைத்து மிதுசமய மெனப்பரிதி
பலகதிரும் புகுத்துடற்றப் பண்ணியசெவ் வழிபோலு
நிலமகட னுடல்வெடிப்ப நேர்தோன்றும் பெருங்கமர்கள்.

(ப - ரை.) நிலமகள்தன் - பூமிதேவியின், உடல் வெடிப்ப - உடம்பு வெடிக்க, நேர்தோன்றும் - நேரேதோன்றுகின்ற, பெருகமர்கள் - பெரிய நிலப்பிளப்புகள், பரிதி - சூரியன், குலவு - பிரகாசிக்கின்ற, தன்னை விழுங்கு - தன்னை விழுங்க வருகின்ற, உவகைகொண்ட - களிப்புள்ள, கோட்கு - (கேதுவென்னும்) கிரகத்திற்கு, இனம் ஆகி இலகு - உறவாகிவிளங்குகிற, அரவம் - பாம்புகளுக்கிடமாகிய, நாடு அனைத்தும் - நாகலோக முழுதையும், இது சமயம் என - இதுதான் சமயமென்று, பலகதிரும் - தனது பலகிரணங்களையும், புகுத்து - பிரவேசிக்கச்செய்து, உடற்ற - (அந்த நாகலோகத்தாரை.) வருத்தும்பொருட்டு, பண்ணிய - உண்டாக்கிய, செவ்வழிபோலும் - செவ்வையாகிய வழியையொத்திருக்கும். எ - று.

(பொ - ரை.) பூமிதேவியின் உடம்புவெடிக்க நேரேதோன்றுகின்ற பெரிய நிலப்பிளப்புகள், சூரியன் பிரகாசிக்கின்ற தன்னை விழுங்க வருகின்ற களிப்புள்ள (கேதுவென்னும்) கிரகத்திற்கு உறவாகி விளங்குகின்ற பாம்புகளுக்கிடமாகிய நாகலோக முழுதையும் இதுதான் சமயமென்று தனது பலகிரணங்களையும் பிரவேசிக்கச்செய்து (அந்த நாகலோகத்தாரை) வருத்தும் பொருட்டு உண்டாக்கிய செவ்வையாகிய வழியையொத்திருக்கும். எ - று.

(வி - ரை.) சூரியவெப்பத்திலுண்டானநிலத்தின்வெடிப்புகள் தன்னை விழுங்கவரும் கேதுவாகிய கிரகமென்னும் பாம்புக் குறவானவர் வசிக்கும் நாகலோக முழுதையும் இதுவே சமயமென்று தன் கிரணங்களைப் பரப்பி வருத்துதற்கமைத்த நல்ல மார்க்கத்தையொத்திருக்கும் என்பது கருத்து. "நிலமகடனுடல் வெடிப்பநேர் தோன்றும் பெருங்கமர்கள்" என்பதை "மண் மகளுடற்புண் கிழித்திட" எனக்கம்ப நாடருங்கூறுதலானுமறிக. கோள் என்பது கேது என்னும் செம்பாம்பினை. அராவென்னும் குறினெடிலிணைந்த மொழியீற்று ஆகாரம் குறுகி அம்முச்சாரியை பெற்றது. புகுத்து - பிற வினை இறந்தகாலவினையெச்சம் கு-து என்பது போலத்துச்சாரியை பெற்று புகுது என நின்று பகுதியொற்றிரட்டி இறந்தகாலங்காட்டி நின்றது. நிலமகள் - இருபெயரொட்டுப்பண்புத்தொகை. கேது சூரியனுக்குப் பகையான செய்தி:—இறைவன், தேவர் அசுரர் இவர்களைக்கொண்டு பாற்கடலைக்கடைவிக்க, அதில் தான் தன் வந்திரியாய் ஏந்தி வந்த அமிர்தத்தைப் பங்கிடும்படி ஜகந்மோகினியாய் நிற்க, அவ்வுருவத்தைக்கண்டதே வாசுரர் எனக்கு உனக்கென்று போர்புரியக்கண்ட இறைவன், உங்களில் வலியவன் என்னைக்கொள்ளலாமென்னலும், நான் வலியவன் நான் வலியவனெனத்தம்மில் போர்செய்து நிற்கையில், அவர்களில் ஒருவன் தேவவுருக்கொண்டு தேவர் பந்தியில்

வந்து சேர்ந்தனன். சந்திரனும் சூரியனும் இறைவனுக்குக்காட்ட, அமிர்த மொண்டு பங்கிட்ட அகப்பையால் தலையை வாங்கலும், தலை இராகுவும், உடல் கேதுவுமாகி, சந்திர சூரியர்களை ஒரோவொருகாலங்களில், மறைத்த வென்பது. சந்திர சூரியர்கள் காட்டினரென்பது, உலகமே திருவுருவாகிய இறைவனுக்குச் சந்திரசூரியர்கள் இரண்டு கண்கள் ஆதலால், தானே கண்டனனென்பதை. (கஅ0)

நலக்கதிர்செய் நம்பகையை நான்மறையோ ரிதுகொண்டே
விலக்குவர்நாங் கொண்டிருப்பின் மேவாதெப் பகையுமெனப்
புலத்தமைத்துக் கவர்ந்தான்போற் பொய்கைகுளங் கானதிமுன்
னிலத்தமைத்த நீரெல்லா நெடும்பரிதி கவர்ந்தனனால்.

(ப - ரை.) நெடும்பரிதி - பெரிய சூரியன், நலம் - நன்மையாக, கதிர் செய் - பிரகாசிக்கிற, நம் - நமது, பகையை - பகைவராகிய மாந்தேயரை, நால்மறையோர் - நான்கு வேதங்களையுமுடையோராகிய வேதியர், இதுகொண்டே விலக்குவர் - இந்நீரைக்கொண்டே விலகச்செய்வார்கள், (இதனை) நாம் கொண்டிருப்பின் - நாம் கொண்டிருந்தால், எப்பகையும் மேவாதுஎன- (இதுமுதலாக) எந்தப்பகையும் அடையாதென்று, புலத்து அமைத்து-கருத்தில் அமைத்து, கவர்ந்தான்போல் - கவர்ந்தவன்போல, பொய்கை-தடாகம், குளம் - குளம், கால் - வாய்க்கால், நதி - யாறு, முன் - முதலாக, நிலத்து அமைத்த - பூமியில் அமைக்கப்பட்ட, நீர் எல்லாம் - நீரையெல்லாம், கவர்ந்தனன் - கிரகித்தான். எ - று.

(பொ - ரை.) பெரிய சூரியன் நன்மையாகப் பிரகாசிக்கிற நமது பகைவராகிய மாந்தேயரை நான்கு வேதங்களையுமுடையோராகிய வேதியர் இந்நீரைக்கொண்டே விலகச்செய்வார்கள்; இதனை நாம் கொண்டிருந்தால் (இது முதலாக) எந்தப்பகையும் அடையாதென்று கருத்திலமைத்துக் கவர்ந்தவன் போலத் தடாகம் குளம் வாய்க்கால் யாறு முதலாகப் பூமியில் அமைக்கப்பட்ட நீரையெல்லாம் கிரகித்தான். எ - று.

(வி - ரை.) நமது பகைவராகிய மாந்தேயரை வேதியர் நாடோறும் சந்தியாவந்தன காலங்களில் இறைக்கிற சிறிது நீரைக்கொண்டன்றோ வெல்லுகின்றனர். அந்த நீர் முழுதும் நம்மிடத்தே யமைத்துக்கொண்டோமாயின் நம்மிடத்து இது முதலிய எப்பகையும் எக்காலத்தும் அணுகா எனக் கருதிச் சூரியன் ஏரி குள முதலியவற்றிலுள்ள நீரைக்கவர்ந்துகொண்டான் என்பது கருத்து. நம் பகை என்றது சூரியனை மறைக்கவரும் மாந்தேயரென்னு மசுரரை, இவர்கள் சூரியனைத் தகையாதிருப்பதற்காகவே அந்தணர் சந்தியாவந்தனஞ் செய்துவருகின்றனர். செய்யுளாகையால் சுட்டுப்பெயர் முன்வந்தது. எப்பகையும் என்பதில் உம்மை முற்று. எகரவினா எஞ்சாமைப்பொருளது. அமைத்த என்பது எதுகைநோக்கி வந்த வலித்தல்விகாரம். நீரெல்லாம்-பால் வழுவமைதி. (கஅக)

தெள்ளுபுன னசைமிக்குத் திரிமருப்பி னிரலையெலா
நன்னரிய பேய்த்தேரின் பின்றொடர்ந்து நலிந்திடுமால்
வள்ளலென வெளிக்காட்டி வஞ்சிக்கு முலோபர்கள்பி [போல்
னெள்ளுவறு மைப்பிணியோர் தொடர்ந்துதொடர்ந் திளைப்பது

(ப - ரை.) வள்ளல் என-உதாரகுணமுடையனென்று, வெளிகாட்டி - புறத்தே காட்டி, வஞ்சிக்கும் - வஞ்சிக்கின்ற, உலோபர்கள் பின் - உலோபி களுக்குப்பின்னே, எள்ளு - பழிக்கப்படுகிற, வறுமைப்பிணியோர் - வறுமை நோயாளிகள், தொடர்ந்து தொடர்ந்து இளைப்பதுபோல் - தொடர்ந்து தொடர்ந்து மெலிவதுபோல, திரி மருப்பின் - திருகு கொம்புகளையுடைய, இரலையெல்லாம் - மான்களெல்லாம், தெள்ளு - தெளிவாகிய, புனல் நசைமிக்கு- நீர்வேட்கை மிகுந்து, நன் அரிய - பொருந்துதலில்லாத, பேய்த்தேரின்பின் தொடர்ந்து - கானனீரின்பின் தொடர்ந்து, நலிந்திடும் - வருந்தும். எ - று.

(பொ - ரை.) உதாரகுணமுடையனென்று புறத்தே காட்டி வஞ்சிக்கின்ற உலோபிகளுக்குப்பின்னே பழிக்கப்படுகிற வறுமை நோயாளிகள் தொடர்ந்து தொடர்ந்து மெலிவதுபோலத் திருகு கொம்புகளையுடைய மான்களெல்லாம் தெளிவாகிய நீர்வேட்கை மிகுந்து பொருந்துதலில்லாத கானனீரின் பின்தொடர்ந்து வருந்தும். எ - று.

(வி - ரை.) உதாரகுணமுடையாரைப்போல நடிக்கும் உலோபிகளைத் தொடர்ந்து ஒன்றும் பெறுது வருந்தும் தரித்திரர்போல மான்கள் நீர்வேட்கையால் பேய்த்தேரைக்கண்டோடி தாகந்தணியாது வருந்துமென்பது கருத்து. பேய்த்தேர்-கானனீர். இது பேய்களுக்குத் தேராதலால் பேய்த்தேர் எனப்பட்டது. "பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப் - பேய்த்தேர்முகக்குறும் பேதை குணமாகாமே" எனத்திருவாசவூரடிகளும், "அலகைத்தேரினலமருகாலின்" எனப் பட்டணத்தடிகளும் கூறுதல் காண்க. இதனை வடநூலார் பசாசரதம் என்பர். இது சூரிய வெப்பத்தால் நீர்போற்றோன்றுமனலின்றிரள். நீர்வேட்கை - நீரில் விருப்பம், (தாகம்.) இல்பொருளாதலால் நன்னரிய எனப் பேய்த்தேருக் கடைகொடுத்தார். வள்ளல் - பண்பாகுபெயர்; இவர் தம் பயன் எண்ணுது வேண்டியவர்களுக்கவர்கள் வேண்டியவாறே கொடுப்போர். வறுமைப்பிணி-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. தொடர்ந்து தொடர்ந்து என்னு மடுக்கு மிகுதிப்பொருளது. (கஅஉ)

புறங்கொடாத் திறல்வீரர் பூம்போர்வை நெகிழ்த்தகற்றிப்
பிறங்குசாந் தாற்றிவிடு வளிக்களித்துப் பெரிதுவப்பா
ரறங்கொண்மா தருங்கணவ ரங்கையன்றித் தடவுதலின்
மறங்கொள்குயஞ் சிவிறிவிடு வளிதடவ வம்பவிழ்ப்பார்.

(ப - ரை.) புறம் கொடா - (பகைவர்க்கு) முதுகுகாட்டாத, திறல் வீரர் - வெற்றியையுடைய வீரர்கள், பூ - மெல்லிய, போர்வை-மேற்போர்

வையை, நெகிழ்த்து அகற்றி - தளர்த்தி நீக்கி, பிறங்கு சாந்தாற்றி விடுவளிக்கு அளித்து - விளங்குகின்ற சாந்தாற்றி தருகிற காற்றுக்கு (தமதுடம்பை) தந்து, பெரிது உவப்பார் - மிகவும் களிப்பார்கள், அறம்கொள் மாதரும் - தருமத்தை மேற்கொண்ட மாதரும், கணவர் அங்கை அன்றி தடவுதலின் - தம் கொழுநர் அகங்கையன்றிப் பரிசித்தலால், மறம் கொள் குயம்-கொலைத் தொழிலைக் கொண்ட குயத்தை, சிவிறிவிடு வளி தடவ - சிவிறியினால் தரப்பட்ட காற்றுப்பரிசிக்கும்படி, வம்பு அவிழ்ப்பார்-(தமது) கச்சினை யவிழ்த்து விடுவார்கள். எ - று.

(பொ - ரை.) பகைவர்க்கு முதுகுகாட்டாத வெற்றியையுடைய வீரர்கள் மெல்லிய மேற்போர்வையைத் தளர்த்தி நீக்கி விளங்குகின்ற சாந்தாற்றி தருகிற காற்றுக்குத் தமதுடம்பைத்தந்து மிகவும் களிப்பார்கள், தருமத்தை மேற்கொண்ட மாதரும் தம் கொழுநர் அகங்கையன்றிப் பரிசித்தலால் கொலைத்தொழிலைக்கொண்ட குயத்தைச் சிவிறியினால் தரப்பட்ட காற்றுப் பரிசிக்கும்படி தமது கச்சினை யவிழ்த்துவிடுவார்கள். எ - று.

(வி - ரை.) புறங்கொடாத்திறல்-புறங்கொடாமைக்கேதுவாகிய திறல். வீரர் - வீரத்தன்மையுடையவர். இத்தன்மையரும், "பூம்போர்வை நெகிழ்த்தகற்றிப் பிறங்குசாந்தாற்றி விடுவளிக்களித்துப் பெரிதுவப்பார்" என்றமையானும்,அறங்கொள் மாதருங் கணவரங்கையன்றித் தடவுதலின் மறங்கொள் குயஞ்சிவிறிவிடுவளி தடவவம்பவிழ்ப்பார்" என்றமையானும், வெப்பமிகுதி விளங்குகின்றது. பகைவர்க்குப் புறங்கொடாத் திறல்வீரரும் வளிக்குப் புறங்கொடுக்கின்றனரென்பதும், அறங்கொள் மாதரும் கணவர் கைக்கன்றிப் பிறர்க்குப் பரிசிக்கவொண்ணாத தம் குயத்தை வளிதடவ வம்பவிழ்க்கின்றன ரென்பதும் இதனாற்போந்த பொருள். பூம்போர்வை - அழகிய போர்வை யெனினுமாம். சாந்தாற்றி - வட்ட விசிறி, அறம் - பதிவிரதாதர்மம். குயம்-குசம் என்னும் வடமொழித்திரிபு. குசம் - தனம். "மறங்கொள் குயம்" என்றது ஆடவரைக் கொலைசெய்யும் குயம் என்றபடி. மாதரும் என்பதில் உம்மை இறந்ததுதழீஇயது. விசிறியென்பது சிவிறியென எழுத்து நிலை மாறிவந்தது. விடுதல் - தருதல் என்னும் பொருளில் வந்தது. (கஅரு)

காலோடை வாவிகுள முதலாய கணக்கிலவன்
மேலோடும் புனல்வறப்ப வவற்றுறைமென் பறவைகணற்
பாலான வொருவனிடம் பற்றியினி துண்டகிளை
யேலாத்துன் பவனுறுங்கா லிரிவதென விரிந்தனவால்.

(ப - ரை.) கால் ஓடைவாவிகுளம் - வாய்க்கால்ஓடைதடாகம் குளம், முதலாய-முதலாகிய, கணக்குஇல் - கணக்கில்லாத, அவல்மேல்ஓடும் - பள்ளங்களில்பாய்கின்ற, புனல்வறப்ப - நீர்வற்றிப்போக, அவற்றுஉறை-அவற்றில்வாழ்ந்த, மெல்பறவைகள் - மெல்லியபக்ஷிகள், நல்பால் ஆன - நல்ல ஊழையுடைய, ஒருவன்இடம் - ஒருவனிடத்தில், பற்றி - அடைந்து, இனிது

உண்ட - இனிதாகவுண்ட, கிளை - உறவினர், அவன் - அவன், ஏலா-பொருந் தாத, துன்பு - துக்கத்தை, உறுங்கால் - அடையும்போது, இரிவதுஎன-விட் டோடுதல்போல, இரிந்தன - விட்டோடின. எ - று.

(பொ - ரை.) வாய்க்கால் ஓடை தடாகம் குளம் முதலாகிய கணக்கில் லாத பள்ளங்களில் பாய்கின்ற நீர்வறண்டுபோக அவற்றில்வாழ்ந்த மெல்லிய பக்ஷிகள், நல்லவூழையுடைய ஒருவனிடத்தில் அடைந்து இனிதாகவுண்ட வுறவினர், அவன்பொருந்தாத துக்கத்தை யடையும்போது விட்டோடுதல் போல விட்டோடின. எ - று.

(வி - ரை.) துன்பம்வந்தகாலத்தில் நீங்கும் உறவினர்போல் வாய்க் கால்முதலியவற்றின் நீர்வற்றிப்போக, அவற்றில் வாழும்பறவைகள் நீங்கின என்பது கருத்து. கால், ஓடை, வாவி, குளம் எனச் சிறப்புவகையாற்கூறி, ஏரிமுதலிய மற்றநீர்நிலைகளும் அடங்குதற்கு அவல் எனப்பொதுவகையாற் கூறினர். அவல் - பள்ளம். வறப்ப - நிகழ்காலச்செயவெனெச்சம். அவ் என் னும் பலவின்பாற் சுட்டுப்பெயர் அற்றுச்சாரியைபெற்றுவந்தது. அ - பகுதி. வ் - பலவின்படர்க்கைவிகுதி. "வவ்விறுசுட்டிற்கற்றுறல்வழியே" என்பது நன்னூற்சூத்திரம். வாபி யென்னும் வடமொழிவாவியெனத் திரிந்துவந்தது. செல்வமுடையவன் என்பதற்கு அச்செல்வத்துக்குக்காரணமாகிய "நல்பால் ஆனஒருவன்"என்றார். நல்பால்-நல்லஊழ். நல்லஊழை ஆகூழ் என்பர். ஊழ், பால்,முறை,உண்மை,தெய்வம், நியதி, விதி என்பன ஒருபொருட்சொற்கள். கிளை-உவமையாகுபெயர்.உறுங்கால்-எதிர்கால வினையெச்சம், விகுதி-கால், உறு என்பது துன்பத்தை உணர்த்தும் முதனிலை, இதனை "உற்றவிடத்தி லுயிர்வழங்குந் தன்மையோர்" என்பதனாலுமறிக. (கஅச)

வாவிகாள் குளங்காணீர் வற்றினீர் முன்னளித்த
மேவியவின் சுவைப்புனலால் வீங்கினே மிதுபொழுது
பாவியவப் புனலளிப்பேம் பற்றுமெனக் கால்வதுபோற்
பூவியன்மக் களுடம்பு பொங்குவெயர் நீர்காலும்.

(ப - ரை.) வாவிகாள் - தடாகங்களே, குளங்காள - குளங்களே, நீர் வற்றினீர் - நீர்வற்றிப்போனீர்கள், முன்அளித்த - முன்னே நீங்கள்கொடுத்த, மேவியஇன்சுவை - பொருந்திய இன்சுவையையுடைய, புனலால்-நீரினால், வீங்கினேம் - பருத்தோம், இதுபொழுது - இப்பொழுது, பாவிய - பரவிய, அப்புனல் அளிப்போம், அந்தநீரைக்கொடுப்போம், பற்றும்என - பிடியுமெ ன்று, கால்வதுபோல் - கக்குதல்போல, பூஇயல் - பூமியில் பொருந்திய, மக்கள்உடம்பு - மனிதருடம்புகள், பொங்கு - மிகுந்த, வெயர்நீர்காலும்-வேர் வையாகிய நீரைக்கக்கும். எ - று.

(பொ - ரை.) தடாகங்களே, குளங்களே, நீர்வற்றிப்போனீர்கள், முன் னேநீங்கள்கொடுத்த பொருந்திய இன்சுவையையுடைய நீரினால்பருத்தோம், இப்பொழுது பரவிய அந்தநீரைக்கொடுப்போம் பிடியுமென்று கக்குதல்போல பூமியில்பொருந்திய மனிதருடம்புகள் மிகுந்த வேர்வையாகிய நீரைக்கக்கும்.

(வி - ரை.) தடாகமுதலியவற்றைநோக்கி, நீங்கள் இப்போது நீர்வற்றி வறியராதலால், நீர் முன்கொடுத்த நீரைக்கொடுப்போம், கொள்ளுங்களென்று மக்களுடம்புவேர்வைநீரைக் கக்கினது என்பது கருத்து. வாவிகாள் குளங்காள்-ஈற்றயல் அகரம் ஆகாரமாகி விளியேற்ற படர்க்கைப்பெயர்கள். வாவிகாள், குளங்காள், எனவிளித்தது, கேளாதனவற்றைக் கேட்குநபோலக் கூறிய மரபுவழுவமைதி. நன் - பொது-சூ-நிஅ. வீங்கினேம் - தன்மைப்பன்மை வினைமுற்று. பாவிய - இறந்தகாலப்பெயரெச்சம். பகுதி - பா (பரவு) பற்றும் - எவற்பன்மை. பூ - வடமொழி. வெயர்நீர் - வினைத்தொகை நிலைத்தொடர்; காலும், கால் - பகுதி. உ-ம். செய்யுமென்வாய்பாட்டு வினைமுற்று விகுதி. (௧௮௫)

நண்ணருமிக் கொடும்பருவ நகைதருவெள் ளொளிகாட்டி
யெண்ணுமனங் கரைந்துருக விந்தியமு முடனுருகத்
துண்ணெனும்வெந் தீவெப்பந் தொகுமைந்தர்க் குறுத்துதலால்
வண்ணமணி நகைத்துவர்வாய் மடநலார் தமைப்பொருவும்.

(ப - ரை.) நண்அரும் - அடைதற்கரிய, இ - இந்த, கொடும்பருவம் - கொடிய வேனிற்பருவமானது, நகைதருவெள் ஒளிகாட்டி - விளக்கத்தைத் தருகிற வெள்ளொளியை விரித்து, எண்ணும் மனம் கரைந்துஉருக - நினைக்கின்ற மனமும் கரைந்துருகவும், இந்தியமும் உடன்உருக - இந்திரியமும் கூடவே யுருகவும், துண்ணெனும் - அஞ்சுதற்கேதுவாகிய, வெந்தீவெப்பம்- கொடிய நெருப்பின் வெப்பத்தை, தொகும்மைந்தர்க்கு உறுத்துதலால்-கூட்டமாகிய ஆடவருக்கு உண்டாக்குதலால், வண்ணம் - அழகாகிய, மணிநகை-முத்தைநிகர்த்தபல்லினையும், துவர்வாய் - பவளம்போலும் அதரத்தினையும், மடம்-இளமைப்பருவத்தினையும் உடைய, நல்லார்தமைப்பொருவும்-மாதரை நிகர்க்கும். எ - று.

(பொ - ரை.) அடைதற்கரிய இந்தக்கொடிய வேனிற் பருவமானது விளக்கத்தைத் தருகிற வெள்ளொளியை விரித்து, நினைக்கின்ற மனமும் கரைந்துருகவும், இந்திரியமும்கூடவே யுருகவும், அஞ்சுதற் கேதுவாகிய நெருப்பின் வெப்பத்தைக் கூட்டமாகிய ஆடவருக்கு உண்டாக்குதலால், அழகாகிய முத்தை நிகர்த்தபல்லினையும், பவளம்போலும் அதரத்தினையும், இளமைப்பருவத்தினையும் உடையமாதரை நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) நண்ணருமிக்கொடும் பருவம்மடநலார்தமைப் பொருவும் எனமுடித்துக்கொள்க. "நண்ணரும் - சகித்தற்கரிய என்றபடி. மடநலார்க்குப் பொருள்படுங்கால் நகை - பல்எனக்கொள்க. மணியெனவாளாகூறினராயினும் நகையென மேல்வருதலால் முத்தினையுணர்த்திற்று. நலார்தமையென்பதில் தம் சாரியை. இதில் வேனிற்பருவமானது மாதரை நிகர்த்திருக்கின்றதெனக் கூறியிருத்தலால், வேனிற்பருவத்துக்கும் மாதர்க்கும்சிலேடைவகையாற் பொருள்கொள்க. (௧௮௬)

வாங்குகட லகம்புகுந்து வடவைவதி வதையறிந்தா
மோங்குகடல் சுவற்றவென வுலகுரைத்த லதுபொய்யே
தேங்கியவிப் பருவத்தாற் செறிவெப்பிற் காற்றுமை
யாங்குகுளி ரிடந்தேடி யஞ்சியொளித் ததுபோலும்.

(ப - ரை.) வடவை - வடவைத்தீயானது, ஓங்குகடல் சுவற்ற-உயர்ந்த கடலைவறளச்செய்யும்பொருட்டு, வாங்கு-வளைந்த, கடல்அகம்புகுந்து-கடலினுள்ளே பிரவேசித்து, வதிவதை அறிந்தாம்என - தங்குவதை யறிந்தோமென்று, உலகுஉரைத்தல் - உலகத்தார் சொல்லுதலாகிய, அது-அந்தச்சொல், பொய்யே - பொய்யேயாகும், (மற்றென்னெனின்) தேங்கிய - நிரம்பிய, இப்பருவத்தால் - இந்தப்பருவத்தால், செறி - மிகுந்த, வெப்புக்கு - வெம்மைக்கு, ஆற்றுமை - சகியாமையால், ஆங்கு - அவ்விடத்தில், குளிர்இடம் தேடி - குளிர்ந்த இடத்தைத்தேடி, அஞ்சி ஒளித்ததுபோலும் - பயந்து ஒளித்ததுபோலும். எ - று.

(பொ - ரை.) வடவைத்தீயானது உயர்ந்தகடலை வறளச்செய்யும்பொருட்டு வளைந்த கடலினுள்ளே பிரவேசித்துத் தங்குவதை யறிந்தோமென்று உலகம்சொல்லுதலாகிய அந்தச்சொல், பொய்யேயாகும்.(மற்றென்னெனின்) நிரம்பிய இந்தப்பருவத்தால் மிகுந்த வெம்மைக்குச்சகியாமையால் அவ்விடத்தில் குளிர்ந்த இடத்தைத்தேடிப் பயந்து ஒளித்ததுபோலும். எ - று.

(வி - ரை.) வடவைத்தீ வேனிலின் வெப்பத்துக்குச்சகியாது குளிர்ந்தவிடம் தேடியஞ்சி ஒளித்திருக்கின்றதுபோலும் என்பதேயன்றி, கடலின் வலியடக்கும்பொருட்டு, அங்குச்சென்றிருக்கின்றது என்பதுபொய் என்பது கருத்து. வாங்குகடல். ஓங்குகடல். வினைத்தொகைகள். அறிந்தாம் தன்மைப் பன்மை வினைமுற்று. வடவை - ஊழித்தீ. வடவைத்தீயானது கடலை வறளச்செய்யும்பொருட்டே யமைந்திருக்க, இவர் இப்பருவத்தின் வெம்மைக் கஞ்சி யொளித்ததாகக் கூறியதனால் இது தற்குறிப்பேற்றவணி. உலகு-இடவாகுபெயர். வெம்பு என்னும் முதனிலைத்தொழிலாகுபெயர் வெப்பு என வலித்தல்பெற்றது. ஆற்றுமை - எதிர்மறைவினையெச்சம். ஒளித்தது-இறந்த காலத்தொழிற்பெயர். போலும் - ஒப்பில் போலியாகவந்த செய்யுமென் வாய்பாட்டு உவமை இடைச்சொலடியாகப்பிறந்த வினைமுற்று. (கஅ௭)

இத்தகைய வேனிலிடை யிரும்பசியா லறமெலிந்தும்
பைத்ததரு நிழலிருந்தும் பள்ளமெலா மாராய்ந்துந்
தத்துபுனல் கிடையாமைத் தாகத்தால் வாய்புலர்ந்துஞ்
சுத்தவிர தத்தவநற் றுறைநின்றோன் சொல்லுமால்.

(ப - ரை.) இத்தகைய - இத்தன்மையையுடைய, வேனில் இடை - வேனிற்பருவத்தில், இரு பசியால் - மிகுந்த பசியினால், அறமெலிந்தும்-மிகவும் இளைத்தும், பைத்த - பசுமையாகிய, தரு நிழல் இருந்தும் - மரநிழலில்



குசேலர் காட்டுவழியைக் கடந்துசெல்கையில் இடையில்கண்ட கோயிலில் இரவைக்கழித்துச் செல்வது

தங்கியும், பள்ளம் எல்லாம் ஆராய்ந்தும் - குளங்களிலெல்லாம் ஆராய்ந்து பார்த்தும், தத்து புனல் கிடையாமை - பாயுமியற்கையுள்ள நீர் கிடையாமையால், இத்தகைய - இத்தன்மையான, தாகத்தால் வாய் புலர்ந்தும் - தாகத்தினால் வாய் வறண்டும், சுத்தம் - பரிசுத்தமாகிய, விரதம் தவம் - விரதமும் தவமுமாகிய இவற்றின், நல் துறை - நல்வழியில், நின்றோன் - நின்றவனாகிய குசேலமுனிவன், சொல்லும் - சொல்லாநின்றான். எ - று.

(பொ - ரை.) இத்தன்மையையுடைய வேனிற்பருவத்தில் மிகுந்த பசியினால் மிகவும் இளைத்தும் பசுமையாகிய மரநிழலில் தங்கியும் குளங்களிலெல்லாம் ஆராய்ந்து பார்த்தும் பாயுமியற்கையுள்ள நீர் கிடையாமையால் இத்தன்மையான தாகத்தினால் வாய் வறண்டும் பரிசுத்தமாகிய விரதமும் தவமுமாகிய இவற்றின் நல்வழியில் நின்றவனாகிய குசேலமுனிவன் சொல்லாநின்றான். எ - று.

(வி - ரை.) குசேலர் இத்தன்மையாகிய வேனில், பசி, தாகம், வழி நடந்த இளைப்பு இவற்றால் வருந்தி, நிழல்கண்ட இடங்களிலெல்லாம் உட்கார்ந்து சென்றனர் என்பது. தகைய, வைத்த, பண்படியாகப்பிறந்த குறிப்புப்பெயரெச்சங்கள். பைத்த - பசுமையின் விகாரமாகிய பை - பகுதி, த் - சந்தி, த் - விரித்தல்விகாரம், அ - விகுதி. மெலிந்து, இருந்து, ஆராய்ந்து, புலர்ந்து என்னும் இறந்தகாலவினையெச்சங்கள் சொல்லும் என்னும் ஆண்பாற் படர்க்கைச்செய்யுமென் வாய்பாட்டு வினைமுற்றைக்கொண்டு முடிந்தன. தத்து புனல் - வினைத்தொகை நிலைத்தொடர். கிடையாமை மூன்றும் வேற்றுமையுருபு தொக்குநின்ற எதிர்மறைத்தொழிற்பெயராகக் கொள்ளுதலேயன்றி, கிடையாமல் எனக்கொண்டு, எதிர்மறைவினையெச்சம் எனினும் ஆம். கிடை - பகுதி, ஆ - எதிர்மறைவிகுதி, ய் - சந்தி, மை - வினையெச்ச விகுதி, இந்த விகுதி உடன்பாட்டு வினையெச்சத்திற்கு வராது. சுத்த விரதம் என்றது ௪0-ஆம் செய்யுளிற்கூறிய சாந்திராயண முதலிய விரதங்கள். தவமாவது - மனம் பொறிவழிபோகாது நிற்றற்பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கல் முதலாயின. நின்றோன் - வினையாலணையும்பெயர். தத்து புனல் என்றது - பாய்தலை யியற்கையாகவுடையதென்றற்கு. இது, "இயற்கைப்பொருளை யிற்றெனக்கிளத்தல்" என்பதனாலமையும். (௧அ௮)

சுடர்மறைய வூரகத்துத் துயில்வதற்கா ரிடங்கொடுப்பார்
படர்வழிச்செ னமக்கிவ்வூர்ப் பழக்கமுடை யாரிலரென்
றிடருடைய மனத்தினனா யெதிர்கோயின் முன்னுறங்கி
யடர்கதிரோ னெழுமுனெழுந் தாறுணர்ந்து நடந்திடுமால்.

(ப - ரை.) சுடர் மறைய - சூரியன் மறைய, ஊர் அகத்து-ஊரிலுள்ள வீட்டில், துயில்வதற்கு - தூங்குவதற்கு, ஆர் இடம் கொடுப்பார் - யாவர் இடங்கொடுப்பார்கள்; படர் - துன்பத்துக்கேதுவாகிய, வழிசெல் - வழியே போகிற, நமக்கு - எமக்கு, இவ்வூர் - இந்தவூரில், பழக்கம் உடையார்-பழக்க

முன்னவரும், இலர் என்று - இல்லையென்று, இடர் உடைய - துன்பத்தையுடைய, மனத்தினன் ஆய் - மனத்தையுடையவனாகி, எதிர் - எதிரிலுள்ள. கோயில்-கோயிலின், முன்-முற்புறத்தில், உறங்கி-தூங்கி, அடர்கதிரோன்-நெருங்கிய கிரணங்களையுடையவனாகிய சூரியன், எழுமுன் எழுந்து - உதிக்கும்முன்னே எழுந்து, ஆறு உணர்ந்து - வழியை யறிந்து, நடந்திடும் - நடப்பான். எ - று.

(பொ - ரை.) சூரியன் மறைய ஊரிலுள்ள வீட்டில் தூங்குவதற்கு யார் இடங்கொடுப்பார்கள்; துன்பத்துக்கேதுவாகிய வழியே போகிற எமக்கு இந்தவூரில் பழக்கமுள்ளவரும் இல்லையென்று துன்பத்தையுடைய மனத்தையுடையவனாகி எதிரிலுள்ள கோயிலின் முற்புறத்தில் தூங்கி நெருங்கிய கிரணங்களையுடையவனாகிய சூரியன் உதிக்குமுன்னே யெழுந்து வழியை யறிந்து நடப்பான். எ - று.

(வி - ரை.) சுடர் - ஒளி; ஒளியைச்செய்தலினால், சூரியன் சுடரெனப்பட்டான். ஊர்பழக்கம் - ஏழாம்வேற்றுமை உருபும் பயனுமுடன் தொக்கதொகை. தற்கிழமை, இடம் இடமாயிற்று. துயில்வது - எதிர்காலத்தொழிற்பெயர். கல்லும்முள்ளும் அடர்ந்து குடிக்கத் தண்ணீருமில்லாதவழி யாகையாலும்,நெடுந்தூரம் நடந்து இளைத்தமையாலும் "படர்வழி" என்றார். மனத்தினன் - பெயர்ப்பகுபதம்; பகுதி - மனம். கோவில் என்பது, இலக்கணப்போலியாய்க்கோயில் எனவந்தது. கோ - கடவுள், இல் - வீடு; கோயில் பலருக்கும் பொதுவாகையால், அங்குத்துயில்வார் ஆயினார். சூரியனை நிகண்டில் "ஆயிரஞ்சோதியுள்ளோன்" என்பதற்கு ஏற்க, "அடர்கதிரோன்" என்றார். வேனிற்காலமாகையால், இளைப்புத்தோன்றாதவண்ணம் சூரியோதயத்தின் முன் நடக்கத்தொடங்கினார். இதற்கு முன்சென்றறியாதவழி என்பதுதோன்ற" ஆறுணர்ந்து நடந்திடும்" என்றார். (கஅக)

கானவேன் முட்டைத்துக் காலூன்ற முடியாம
லீனமார் முள்வாங்குங் கருவியுமங் கில்லாமன்
மானமார் பெருந்தவத்தோன் மனமெலிந்து முகம்புலர்ந்தோர்
தானமே வுறவிருந்துட் டதையவிவை யெண்ணுவான்.

(ப - ரை.) கானம் - காட்டிலுள்ள, வேல்முள்தைத்து, வேலமுள்ளானது தைத்ததனால், கால் ஊன்ற முடியாமல் - காலை நிலத்திலூன்ற முடியாமலும், ஈனம் ஆர் - அற்பமாகிய, முள்வாங்கும் கருவியும் - முள்வாங்குதற்குரிய ஆயுதமும், அங்கு இல்லாமல் - அவ்விடத்தில் இல்லாமலும், மானம் ஆர் - மேன்மைபொருந்திய, பெருதவத்தோன் - பெரியதவத்தையுடையவனாகிய குசேலமுனிவன், மனம்மெலிந்து - மனமிளைத்து, முகம்புலர்ந்து - முகம்வாடி, ஓர்தானம் - ஓரிடத்தில், மேவுற இருந்து - பொருந்த இருந்துகொண்டு, உள்ததைய - மனத்தில்மிகுதியாக, இவை எண்ணுவான் - இவைகளை நினைவான். எ - று.

(பொ - ரை.) காட்டிலுள்ள வேலமுள்ளானது தைத்ததனால் காலை நிலத்திலூன்ற முடியாமலும் அற்பமாகிய முள்வாங்குதற்குரிய ஆயுதமும் அவ்விடத்தில் இல்லாமலும் மேன்மைபொருந்திய பெரியதவத்தையுடைய வருகிய குசேலமுனிவன் மனமிளைத்து முகம்வாடி ஓரிடத்தில் பொருந்த இருந்துகொண்டு மனத்தில் மிகுதியாக இவைகளை நினைவான். எ - று.

(வி - ரை.) தைக்க என்னும் செயவெனெச்சம் தைத்து எனச்செய்தெனெச்சமாகத்திரிந்து ஊன்ற என்னும் பிறகர்த்தாவின் பயனிலைகொண்டு முடிந்தது. மனம், முகம், உள் என்பவைகளின் வினையாகிய மெலிந்து, புலர்ந்து, ததைய என்பன "சினைவினை சினையொடு முதலொடுஞ்செறியும்" என்னும் விதிப்படி எண்ணுவான் என்னும் முதல்வினைகொண்டு முடிந்தன, ஸ்தானம் என்னும் வடமொழி தானம் எனத்திரிந்தது. ததைய என்பதில் பகுதி - ததை. இதனடியாக, ததைந்தான், ததைகிறான், ததைவான், ததைந்த, ததைந்து, ததையான் எனவினை விகற்பங்களும், ததைதல், ததையாமை எனத்தொழிற்பெயரும், உடன் பாட்டிலும் எதிர் மறையிலும் வருதல் காண்க. செய்யுளாகையால், இவையெனச்சுட்டுப்பெயர் முன் வந்தது. இவ்வாறு வருமென்றற்கு நன் - சூத்திரம்:—"படர்க்கை முப்பெயரோடணையிற் சுட்டுப், பெயர் பின் வரும் வினையெனிற்பெயர்க்கெங்கும், மருவும் வழக்கிடைச்செய்யுட் கேற்புழி." (கக௦)

செறிதருதன் மனப்படியே செய்தலொரு வற்கினிதா
மறிவுறுக்குங் குருமொழிகேட் டாக்கலதி னுஞ்சிறப்பா
முறிதருமே திலர்சொற்கேட் டுஞற்றன்முனி துயர்மனையாள்
வறியவுரை கேட்டுஞற்றன் மண்ணிறநேர் கெடுதியுறும்.

(ப - ரை.) செறிதரு - பொருந்திய, தன்மனப்படியே செய்தல் - தன் கருத்தின்படியே செய்தல், ஒருவற்கு இனிது ஆம் - ஒருவனுக்குச்சுகத்தைத் தருவதாகும், அறிவுறுக்கும் - ஞானத்தையுபதேசிக்கிற, குருமொழிகேட்டு - ஆசாரியன் வசனத்தைக்கேட்டு, ஆக்கல் - செய்தல், அதினும் சிறப்பு ஆம் - அதினுஞ்சிறந்ததாகும், முறிதரும் - கேட்டைத்தருகிற, ஏதிலர்சொல்கேட்டு - அயலார் சொல்லைக்கேட்டு, உஞற்றல் - செய்தல், முனிதுயர் - வெறுத்தற்குரியதுன்பத்தைத்தருவதாகும், மனையாள் - மனைவியின், வறிய உரை கேட்டு - பயனற்றசொல்லைக்கேட்டு, உஞற்றல் - செய்தல், மண் இறல்நேர் - உலகமுடிவை நிகர்த்த, கெடுதி உறும் - கேட்டையுண்டாக்கும், எ - று.

(பொ - ரை.) பொருந்திய தன் கருத்தின்படியே செய்தல் ஒருவனுக்குச்சுகத்தைத்தருவதாகும்; ஞானத்தையுபதேசிக்கிற ஆசாரியன் வசனத்தைக் கேட்டுச்செய்தல் அதினுஞ்சிறந்ததாகும்; கேட்டைத்தருகிற அயலார் சொல்லைக்கேட்டுச்செய்தல் வெறுத்தற்குரிய துன்பத்தைத் தருவதாகும்; மனைவியின் பயனற்ற சொல்லைக்கேட்டுச்செய்தல் உலகமுடிவை நிகர்த்த கேட்டையுண்டாக்கும். எ - று.

(வி - ரை.) ஒருவர் ஒருகருமத்தைத்தாம் கருதியபடியே செய்தல் நன்மையையும், குருவின் சொற்படி செய்தல் அதனினும் மேலாகிய நன்மையையும், அயலார் சொற்படி செய்தல் கேட்டையும், மனைவியின் பயனற்ற சொற்படி செய்தல் பிரளயகாலத்துன்பத்துக்கொப்பாகிய துன்பத்தையும் விளைக்கும் என்பது கருத்து. அறிவுறுக்கும் - பிறவினைச்செய்யுமென்வாய் பாட்டுப் பெயரெச்சம், குரு - அஞ்ஞானத்தை நீக்குவோன். அதனினும் என்பதில், இன் - எல்லைப்பொருளது. உம் - சாரியை. ஏதிலர் - யாதொரு சம்பந்தமும் இல்லாதவர்; எனவே, அந்நியர் என்றதாயிற்று. வறிய - குறிப்புப்பெயரெச்சம். இறல் - தொழிற்பெயர். இறு - பகுதி, அல் - விகுதி, உகரக்கேடு, சந்தி, நேர் - வினைத்தொகை வினைச்சொல். (௧௧௧)

இதுதெரிந்து மனையாட்டி யியம்பியசொற் குடம்பட்டு
முதுவெயிலா லுடல்வருந்தி மூர்ச்சித்து மெலிகின்றேன்
கதுமெனப்பல் காவதங்கள் கடந்தேன்வண் டுவரைநக
ரெதுவெனக்கேட் டிடிலெவரு மின்னுநெடுந் தூரமென்பார்.

(ப - ரை.) இதுதெரிந்தும் - இதையறிந்திருந்தும், மனையாள் - மனைவியானவள், இயம்பியசொற்கு - சொன்ன சொல்லுக்கு, உடம்பட்டு - இசைந்து, முதுவெயிலால் - முதிர்ந்த வெயிலினால், உடல் வருந்தி-உடம்பு வாடி, மூர்ச்சித்து - மூர்ச்சையடைந்து, மெலிகின்றேன் - இளைக்கின்றேன், கதுமென - விரைவாக, பல்காவதங்கள் கடந்தேன் - அநேககாதவழியையுங்கடந்தேன்; (இன்னமும்) வளதுவரை நகர் எது என கேட்டிடின்-வளமாகிய துவாரகா நகரம் யாதென்று வினவினால், எவரும் - யாவரும், இன்னும் - இன்னமும், நெடுந்தூரமென்பார் - நெடுந்தூரத்திலிருக்கிறதென்கிறார்கள். எ - று.

(பொ - ரை.) இதையறிந்திருந்தும் மனைவியானவள் சொன்ன சொல்லுக்கு இசைந்து முதிர்ந்த வெயிலினால் உடம்புவாடி மூர்ச்சையடைந்து இளைக்கின்றேன்; விரைவாக அனேககாதவழியையுங் கடந்தேன்; (இன்னமும்) வளமாகிய துவாரகா நகரம் யாதென்று வினவினால் யாவரும் இன்னமும் நெடுந்தூரத்திலிருக்கிறதென்கின்றார்கள். எ - று.

(வி - ரை.) இது - தொகுதியொருமை, மனையாட்டி - மனைக்குரிய காரியங்களையாளுதலுடையாள். கதுமென - விரைவுக்குறிப்பிடைச்சொலடியாகப்பிறந்த செயவெனெச்சம. காவதங்கள் என்னும் நீட்டலளவைப்பெயர் வழியை உணர்த்தலால் ஆகுபெயர். அது என்னும் தோன்று எழுவாய்க்கு தூரம் என்பது பெயர்ப்பயனிலையாய் நின்றது. (௧௧௨)

மற்றைவழி யுங்கடக்க வலியின்றோர் விதத்தினு
லுற்றிடினுங் கருங்கடல்யா ருதவிகொடு கடந்திடுவேன்
பொற்றவது கடப்பினுமப் புரத்திலெனை யார்மதிப்பார்
சற்றுமுணரா துவழித் தலைப்பட்டே னென்செய்தேன்.

(ப - ரை.) மற்றைவழியும் கடக்க - இன்னமுமுள்ள வழியைத்தாண்டிச்செல்ல, வலி இன்று - சக்தியில்லை, ஓர் விதத்தினுல் உற்றிடினும் - ஒருவகையினுல் கடந்தாலும், கருகடல் - கரிய கடலை, யார் உதவிகொடு - எவரது உதவியைக்கொண்டு, கடந்திடுவேன் - தாண்டுவேன், பொற்ற அது கடப்பினும் - பைய அதைக்கடந்தாலும், அ புரத்தில்-அந்தப்பட்டணத்தில், என்னையார் மதிப்பார் - என்னை எவர்மதிப்பார், சற்றும் உணராது - சற்றும் ஆலோசியாமல், வழிதலைப்பட்டேன் - வழி நடக்கத்தொடங்கினேன், என் செய்தேன் - என்ன காரியஞ்செய்தேன். எ - று.

(பொ - ரை.) இன்னமும்முள்ள வழியைத்தாண்டிச்செல்லச் சக்தியில்லை; ஒருவகையினுல் கடந்தாலும் கரியகடலை எவரது உதவியைக்கொண்டு தாண்டுவேன், பைய அதைக்கடந்தாலும் அந்தப்பட்டணத்தில் என்னை எவர் மதிப்பவர், சற்றும் ஆலோசியாமல் வழிநடக்கத்தொடங்கினேன், என்ன காரியஞ்செய்தேன். எ - று.

(வி - ரை.) மற்றவழியையும் கடந்துசெல்ல தேகத்தில் சக்தியில்லை, மிகவும் வருத்தத்துடன் கடந்துசென்ருலும் கடலை எவ்வாறு கடத்தல் கூடும், அக்கடலை எவ்வகையாலாவது கடந்தாலும் அந்தப்பெரிய பட்டணத்தில் ஏழையாகிய என்னையார் மதிப்பார்கள், சிறிதும் ஆலோசியாமல் என்ன காரியம் செய்ய ஆரம்பித்து விட்டேனென்று வருந்தினர் என்பது கருத்து. வழியும் என்பதில், உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. ஓர் விதத்தினுல் உற்றிடினும் என்றது, வருத்தத்துடன் நடந்து கழித்தாலும் என்றபடி. அப்புரம் என்றதில், அகரச்சுட்டு உயர்வு குறித்து நின்றது. சற்றும் என்னும் பண்புப்பெயரின் ஈற்றிலுள்ள உம்மை இழிவு சிறப்பு. உணராது - எதிர் மறைவினையெச்சம். வழி என்பதன் பின் நடக்க என்னும் சொல் எஞ்சி நின்றது. தலைப்பட்டேன் - ஒருசொல். தலைப்படுதல் - ஆரம்பித்தல். (கக௯)

மாமகுட முடிமன்னர் நனிவந்து காத்திருக்குங்
கோமகன்றன் றலைவாயி லெவ்வாறு குறுகுவல்யான்
பூமலியு மவ்வாயில் புகினுமவன் றிருச்சேவை
யேமமுற வேழையேற் கெளிதாகிடைத் திடுங்கொல்லோ.

(ப - ரை.) மா - அழகாகிய, மகுடம் - உறுப்புக்களமைந்த, முடி - கிரீடத்தையணிந்த, மன்னர் - அரசர், நனிவந்து - மிகவும்வந்து, காத்து இருக்கும் - காத்திருக்கின்ற, கோமகன் - இறைவனுகிய கண்ணனது, தலைவாயில் - தலைவாயிலை, எவ்வாறு-எப்படி, யான் குறுகுவல் - யான்கிட்டுவேன், பூமலியும்-அழகுமிகுந்த, அவ்வாயிலில் புகினும்-அவ்வாயிலில் நுழைந்தாலும், அவன் - அவனது, திருச்சேவை - அழகிய தரிசனமானது, ஏமம் உற - இன்பம் மிக, ஏழையேற்கு - ஏழையாகிய எனக்கு, எளிது - எளிதில், கிடைத்திடுங்கொல் - கிடைக்குமோ. எ - று.

(பொ - ரை) அழகாகிய உறுப்புக்களமைந்த கிரீடத்தையணிந்த அரசர் மிகவும்வந்து காத்திருக்கின்ற இறைவனாகிய கண்ணனது தலைவாயிலை எப்படியான் கிட்டுவேன் ; அழகுமிகுந்த அவ்வாயிலில் நுழைந்தாலும் அவனது அழகிய தரிசநமானது இன்பம்மிக ஏழையாகி எனக்கு எளிதில் கிடைக்குமோ. எ - று.

(வி - ரை.) முடிமன்னர் - பாரம்பரியமாக முடியணியப்பெற்ற அரசர்கள். மூன்றுலக்ஷம் வரையும் கப்பங்கட்டும் சிற்றரசர் சாமந்தர் எனவும் இருபது யோசனை விஸ்தீர்ணமான தேசத்தையாளுவோர் மண்டலீகர் எனவும், இவர்கள் எல்லோரையும் அடக்கி ஆள்வோர் மன்னர் மன்னர் (சக்ரவர்த்திகள்) எனவும்பெயர் பெறுவர். கோமகன் - இருபெயரொட்டுப்பண்புத்தொகை. கோ - கடவுள். இது அரசன் முதலியபொருளுணாததும் பல பொருளொருபெயர்த்திரிசொல். குறுகுவல் - எதிர் காலத்தன்மை யொருமை வினைமுற்று. கொல் - ஐயப்பொருளதாகிய இடைச்சொல். ஓ - அசை.(கக௯)

கற்பகத்தைச் சார்ந்தும்வறுங் காய்கேட்கத் துணிவார்போற்
பொற்புடைய வெம்பிரான் றிருமுனரி திற்புகுந்து
மற்பமுறு திருவேட்ட லறிவேகொ லெனவுளத்துப்
பற்பலவு மெண்ணியயர் வுயிர்த்தானப் பனவனே.

(ப - ரை.) அ - அந்த, பனவன்-வேதியனாகியகுசேலன், கற்பகத்தை சார்ந்தும் - கற்பகமரத்தையடைந்தும், வறுகாய் - பயனற்றகாயை, கேட்க துணிவார்போல் - கேட்க முயல்பவர்போல, பொற்பு உடைய - அழகையுடைய, எம்பிரான் - எம்பெருமானது, திருமுன் - சந்நிதியில், அரிதின் புகுந்தும் - அருமையாக அடைந்தும், அற்பம் உறு - சிறுமைபொருந்திய, திரு - செல்வத்தை, வேட்டல் - விரும்புதல், அறிவே - அறிவாகுமோ, என. என்று, உள்ளத்து - மனத்தில், பற்பலவும் எண்ணி - பலபல எண்ணங்களை யெண்ணி, அயர்வுயிர்த்தான் - பெருமூச்செறிந்தான். எ - று.

(பொ - ரை.) அந்த வேதியனாகிய குசேலன், கற்பகமரத்தையடைந்தும் பயனற்ற காயைக்கேட்க முயல்பவர்போல அழகையுடைய எம்பெருமானது சந்நிதியில் அருமையாக அடைந்தும் சிறுமைபொருந்திய செல்வத்தை விரும்புதல் அறிவாகுமோ என்று மனத்தில் பலபல எண்ணங்களை யெண்ணிப்பெருமூச்செறிந்தான். எ - று.

(வி - ரை.) கற்பகம் - கிருஷ்ணபகவானுக்கும், வறுங்காய் - குசேலர் கேட்கச்செல்லும் அநித்தியமாகிய செல்வப்பொருளுக்கும் உவமை. கற்பகத்தைச்சேர்ந்தவர் வறுங்காயைக் கேட்கக்கருதார் என்பது தோன்ற "வறுங்காய் கேட்கத்துணிவார்போல்" என்றார். பேரின்பமாகிய மோக்ஷசெல்வத்தைத்தரவல்ல கிருஷ்ணபகவானைச் சிற்றின்பத்துக்கேதுவாகிய செல்வப்பொருளைக்கேட்டல் மதியீனம் என்பதுதோன்ற "அற்பமுறு திருவேட்டல்

அறிவேகொல்" என்று தன்னுள் எண்ணுவார் ஆயினர். அயர்வு உயிர்த்தான்-சோர்வடையும்படி உயிர்த்தான்.

என்னதுய ரினியுறினு மிதுகாறும் வந்தமையான்
முன்னமனைக் குரைத்தபடி முற்றும்போய் வருவலெனத்
தன்னுளத்தி லெண்ணியெழீஇத் தனிநடந்து சின்னாளின்
மின்னுமிழ்கார் முகில்பயிலு மேல்கடலின் கரையிறுத்தான்.

(ப - ரை.) இனி - இனி, என்னதுயர் உறினும் - என்னதுன்பம் வந்தாலும், இது காறும்வந்தமையால் - இதுவரைக்கும் வந்ததினால், முன் - முன்னே, நம்மனைக்கு - நமது மனையாளுக்கு, உரைத்தபடி - சொன்னபடி, முற்றும்-முழுதும், போய்வருவல் என - போய்வருவேனென்று, தன் உள்ளத்தில் எண்ணி - தன் மனத்தில் நினைத்து, எழீஇ - எழுந்து, தனி நடந்து - தனியே நடந்து, சிலநாளில் - சிலநாளில், மின் உமிழ் - மின்னலை வீசுகின்ற, கார்முகில் பயிலும் - கரியமேகங்கள் சஞ்சரிக்கின்ற, மேல்கடலின் கரை - மேற்றிசைக்கடலின் கரையில், இறுத்தான் - தங்கினன். எ - று.

(பொ - ரை.) இனி என்ன துன்பம் வந்தாலும் இதுவரைக்கும் வந்ததினால் முன்னே நமது மனையாளுக்குச்சொன்னபடி முழுதும் போய்வருவேனென்று தன் மனத்தில் நினைத்து எழுந்து தனியேநடந்து சிலநாளில் மின்னலை வீசுகின்ற கரியமேகங்கள் சஞ்சரிக்கின்ற மேற்றிசைக்கடலின் கரையில் தங்கினன். எ - று

(வி - ரை.) மனை - இடவாகுபெயர். உளத்தில் என்னும் ஐந்தனுருபு, கருவிப்பொருளது. எழீஇ - இறந்தகால வினையெச்சம். எழு - பகுதி, இ - இறந்தகாலவினையெச்ச விகுதி, உகரக்கேடு சந்தி, இகரம் ஈகாரமாய் நீண்டது, நீட்டல் விகாரம். இது, சொல்லிசை நிறைக்கவந்த உயிரளபெடை, உயிரளபெடைக்கு மாத்திரை மூன்று. கடலின்கரை - சினைத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். (கககூ)

என்னவெடுத் துரைத்தசுக முனிவனிணை யடிவணங்கி
மன்னர்மணி முடியிடறும் வார்கழற்கால் வயவேந்து
நன்னர்கொண் மற் றைக்கதையு நடத்துகென நனியிரப்ப
இன்னலிலா துயர்ந்தமுனி யின்புறவாய் மலர்கின்றான்.

(ப - ரை.) என்ன - என்று, எடுத்துஉரைத்த - எடுத்துச்சொன்ன, சுக முனிவன் - சுகமுனிவனது, இணை அடிவணங்கி - இரண்டு திருவடிகளையும் தொழுது, மன்னர் - அரசரது, மணிமுடி - ரத்நகிரீடங்களில், இடறும் - இடறுகின்ற, வார் - நீண்ட, கழல் - வீரக்கழலையணிந்த, கால் - காலையும், வயம் - வெற்றியையுமுடைய, வேந்தன் - பரீக்ஷித்துராஜன், நன்னர்கொள் - நன்மையைக்கொண்ட, மற்றைக்கதையும்-மற்ற சரித்திரத்தையும், நடத்துக என - நடத்தக்கடவையென்று, நனி இரப்ப - மிகவும் பிரார்த்திக்க, இன்னல்

இல்லாது - துன்பமில்லாமல், உயர்ந்தமுனி - சிறந்த முனிவன், இன்பு உற - சந்தோஷமுண்டாகும்படி, வாய் மலர்கின்றான் - திருவாய் மலர்ந்தருளுகின்றான். எ - று.

(பொ - ரை.) என்று எடுத்துச்சொன்ன சுகமுனிவனது இரண்டு திருவடிகளையுந்தொழுது அரசரது ரத்நகிரீடங்களில் இடறுகின்ற நீண்ட வீரக்கழலையணிந்த காலேயும் வெற்றியையுமுடைய பரீக்ஷித்துராஜன் நன்மையைக்கொண்ட மற்ற சரித்திரத்தையும் நடத்தக்கடவையென்று மிகவும் பிரார்த்திக்க, துன்பமில்லாமற் சிறந்த முனிவன் சந்தோஷமுண்டாகும்படி திருவாய் மலர்ந்தருளுகின்றான். எ - று.

(வி - ரை.) சுகமுனிவன், பரீக்ஷித்து இவர்கள் இன்னார் என்பது முதற்செய்யுளுரையிற் கூறப்பட்டது. "மன்னர் மணிமுடியிடறும்வார் கழற்கால் வயவேந்து" என்றமையால், முடியணிந்த மன்னர்கள் பலரும் வந்து வணங்கும் சிறப்புவாய்ந்தவன் என்பது பெற்றாம். முனி, மணி, தற்சமமாகிய வடமொழிப்பெயர்கள். முனி - இறைவனை மனனம் செய்பவன். மணி - மாணிக்கம் முதலிய நவமணிகள். முடி - தலை. இது, தன்னிடத்து அணியப்படும் கிரீடத்தையுணர்த்தலால், இடவாகுபெயர். கிரீடம் தங்குதற்கு இடமாகையால் முடி இடம் என்னப்பட்டது. கழல் - ஆடவர்கொடைவீரங்களால் அணிவது. நன்னர் - பண்புப்பெயர். நடத்துக என்னும் வியங்கோள் வினையில், அகரவீறுதொகுத்தல். சுகப்பிரமரிஷி எனச்சிறப்புப்பெயர் பெற்றவர் ஆகையால் "இன்னல் இலாது உயர்ந்த முனி" என்றார். இக் குசேலமுனிவர் சரித்திரம் பகவானுடைய திவ்ய சரித்திரத்தோடு சம்பந்தப்பட்டுச்சொல்வோருக்கும், கேட்போருக்கும் பிரமானந்தத்தை விளைப்பதாகையால், 'இன்புறவாய் மலர்கின்றான்" என்றார். வாய்மலர்கின்றான் - ஒரு சொல்லின் தன்மையது.

முதலாவது

குசேலர் மேல்கடலடைந்தவத்தியாயம் முற்றிற்று.

---

குசேலமுனிவர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ

# பாட்டு முதற்குறிப்பகராதி.

## முதல் அத்தியாயம்.

# அட்டவணை.



குசேலர் மேல்கடலடைந்தவத்தியாயம் முற்றிற்று.

ஶ்ரீ

ஶ்ரீராமஜயம்.

இரண்டாவது

# குசேலர் துவாரகைகண்டு

## தந்நகர்ப்புறமடைந்தவத்தியாயம்.

அதாவது குசேலமுனிவர் துவாரகாபுரிசென்று கண்ணபிரானைத்தரிசித்து அப்பெருமானருள்பெற்று மீண்டு தமது ஊரின்வெளியை யடைந்த சரித்திரத்தைச் சொல்லும்பாகம். த்வாரகா - என்னும் வடசொல் - துவாரகையென ஆவீறு ஐயாயிற்று. துவாரகைகண்டு என்றது இலக்கணையாற் கண்ணபிரானைக்கண்டதையுணர்த்தும். குசேலர் வசித்திருந்ததொரு சிற்றூர் தானே பின்பு கண்ணனருளால் பெருநகரமாக மாறினமையால் அதன் வெளியிடம் நகர்ப்புறம் எனப்பட்டது - இதனைமேல் வைகுந்தமடைந்தவத்தியாயத்தில் "உந்திய புகழ்க்குசேல னூர்ப்புறஞ் சார்ந்தகாலை,நன்றிமிக்குறு மச்சிறூர் நலப்பெருநகராயிற்றே" என்பதனுல், தந்நகர்ப்புறம் ஆறும்வேற்றுமைத்தொகைநிலைப்பன் மொழித்தொடர்.

இந்நூலாசிரியர் சைவசமயத்தவராதலால் இந்நூற்பாயிரத்தின் முதலில் தமது வழிபடுகடவுளாகிய விநாயகரை ஒரு செய்யுளாற்றுதித்துப்பின்பு நூலுக்கு ஏற்புடைக்கடவுளாகிய ஶ்ரீகண்ணபிரானைப் பதினொருசெய்யுளாற்றுதித்தனர். இவ்வத்தியாயத்தின் முதலிலும் ஶ்ரீ கண்ணபிரானை ஆறு செய்யுளாற்றுதிக்கின்றனர்.

பஃறொடைவெண்பா.

பூமேவு நான்முகத்தோன் போற்றித் துதிப்பதுவுந்
தேமேவு பைந்துளவஞ் சேரக் கமழ்வதுவு
மாமேவு மாமறைகள் வாழ்த்தப் பொலிவதுவுந்
தாமேவு வஞ்சச் சகட முதைத்ததுவுந்
தீமேவு மாரணியஞ் சென்று திரிந்ததுவுந்
தூமேவு மன்பருளந் தோன்றப் பயில்வதுவும்
பாமேக வண்ணன் பதம்.

(ப-ரை.) பூ-(திருமாலின்நாபித்)தாமரைமலரில், மேவு-பொருந்தியிருக்கிற, நால்முகத்தோன்-நான்கு முகங்களையுடைய பிரமன், போற்றி-வணங்கி, துதிப்

பதவும் - துதிக்கப்பெறுவதும், தேமேவு - தேன்பொருந்திய, பைந்துளவம்- பசியதிருத்துழாய், சேர - பொருந்த, கமழ்வதுவும் - வாசனை வீசுவதும், மாமேவு - சிறப்புப்பொருந்திய, மாமறைகள் - பெரியவேதங்கள், வாழ்த்த - துதிக்க, பொலிவதுவும் - விளங்குவதும், தாமேவு - வலிமைபொருந்திய, வஞ்சம் சகடம் - வஞ்சனையையுடைய சகடாசுரனை, உதைத்ததுவும் - உதைத்து அழித்ததும், தீமேவும் - தீப்பொருந்திய, ஆரணியம் - காட்டில், சென்று திரிந்ததுவும் - போய்ச்சஞ்சரித்ததும், தூமேவும் - பரிசுத்திபொருந்தின, அன்பர் - பக்தியுடைய அடியார்களது, உளம் - மனத்தில், தோன்ற - சென்று பொருந்த, பயில்வதுவும் - பழகியுள்ளதும், பாமேகவண்ணன் - பரவுதலையுடைய மேகம்போன்ற திருநிறத்தையுடைய கண்ணனது, பதம் - திருவடியேயாம். எ - று.

(பொ - ரை.) திருமாலின் நாபித்தாமரைமலரில் பொருந்தியிருக்கிற நான்கு முகங்களையுடைய பிரமன் வணங்கித்துதிக்கப்பெறுவதும், தேன் பொருந்திய பசியதிருத்துழாய் பொருந்த வாசனை வீசுவதும், சிறப்புப்பொருந்திய பெரியவேதங்கள் துதிக்க விளங்குவதும், வலிமைபொருந்திய வஞ்சனையையுடைய சகடாசுரனை உதைத்து அழித்ததும், தீப்பொருந்திய காட்டில் போய்ச்சஞ்சரித்ததும், பரிசுத்திபொருந்தின பக்தியுடைய அடியார்களது மனத்தில் சென்று பொருந்தப்பழகியுள்ளதும், பரவுதலையுடைய மேகம் போன்ற திருநிறத்தையுடைய கண்ணனது திருவடியேயாம். எ - று.

(வி - ரை.) இது இறைவனது திருவடியின் தன்மையைக்கூறியதனால் சீர்ப்பாத வகுப்பு எனப்படும். இச்செய்யுளின் நான்காமடியால் இது கண்ணனைக்குறித்ததென்று விளங்குகின்றது. ஸ்ரீ கண்ணபிரானும் ஸ்ரீ ராமபிரானும் திருமாலின் அவதாரமேயாதலால் அவ்வொற்றுமைகருதி, "தீமேவுமாரணியஞ்சென்று திரிந்ததுவும்" என இராமாவதாரகதையையும் உடன்கூறினார். பாரதவெண்பாவிலும், "வானரத்தாலன்றங்கரணிலங்கை செற்றாய்" என்றும், திருச்சந்த விருத்தத்தில், "கடுங்கவந்தன் வக்கரன் கரன்முரன் சிரமவை - இடந்து கூறுசெய்தபல் படைத்தடக்கைமாயனே - கிடந்திருந்து நின்றியங்குபோது நின்னபொற்கழல்-தொடர்ந்து மீள்விலாததோர் தொடர்ச்சி நல்கவேண்டுமே" என்றும், "மண்ணையுண்டுமிழ்ந்து பின்னிரந்துகொண்டளந்தாண் - கண்ணுளல்ல தில்லையென்று வென்றகாலமாயினும் - பண்ணைவென்றவின் சொன்மங்கை கொங்கை தங்குபங்கயக் - கண்ண நின்ன வண்ணமல்ல தில்லையெண்ணும் வண்ணமே" என்றும். "காய்சினத்தகாசி மன்னன் வக்கரன் பவுண்டிரன் - மாசினத்தமாலிமான் சுமாலிகேசிதேனுகன் - நாசமுற்று வீழநாள்கவர்ந்த நின் கழற்கலால் - நேசபாசமெத்திறத்தும் வைத்திடேனெம்மீசனே" என்றும், பெரியதிருமொழியில், "பாராயதுண்டுமிழ்ந்த பவளத்தூணைப் - படுகடலி லமுதத்தைப்பரிவாய் கீண்ட - சீரானையெம்மானைத்தொண்டர் தங்கள் சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங்கரும்பினைப் - போரானைக்கொம்பொசித்த போரேற்றினைப் - புணர் மருதமிற

நடந்த பொற்குன்றினைக் - காரானையிடர்கடிந்த கற்பகத்தைக்கண்டது நான் கடன்மல்லைத்தலசயனத்தே" என்றும், "பெருமாள் திருமொழியில்" "ஏற டர்த்ததுமேனமாய் நிலங்கீண்டதும் முன்னிராமனாய் - மாறடர்த்ததும் மண் ணளந்ததுஞ்சொல்லிப்பாடி வண்பொன்னிப்பேர் - ஆறுபோல் வருங்கண்ண நீர் கொண்டரங்கன் கோயிற்றிருமுற்றம் - சேறுசெய்தொண்டர் சேவடிச் செழுஞ்சேறென் சென்னிக்கணிவனே" என்றும், அமலனாதிப்பிரானில் "உவந்தவுள்ளத்தனாயுலகமளந்தண்டமுற - நிவந்த நீண்முடிய னன்று நேர் ந்த நிசாசரரைக் - கவர்ந்த வெங்கணைக்காகுத்தன் கடியார் பொழிலரங்கத் தம்மானரைச் - சிவந்த வாடையின்மேற் சென்றதாமென் சிந்தனையே" என்றும், "பெரியதிருமொழியில்" "ஆங்குமாவலி வேள்வியிலிரந்து சென்ற கலிடமளந்தாயர் - பூங்கொடிக்கின விடைபொரு தவனிடம் பொன்மலர் திகழ் வேங்கை - கோங்கு சண்பகக்கொம்பினிற்குதிகொடு குரக்கினமிறைத் தோடித் - தேங்கலந்ததண் பலங்கனி நுகர் தருதிரு வயிந்திரபுரமே" என் றும், திருநெடுந்தாண்டகத்தில், "வற்புடையவரை நெடுந்தோண் மன்னர் மாளவடிவாயமழுவேந்தியுலகமாண்டு - வெற்புடைய நெடுங்கடலுட்டனி வேலுய்த்தவேண் முதலாவென்றானூர் விந்தைமேய - கற்புடைய மடக்க ன்னி காவல்பூண்டகடிபொழில் சூழ்நெடுமறுகிற் கமலவேலிப் - பொற்புடைய மலையரையன் பணிய நின்றபூங்கோவலூர் தொழுதும்போது நெஞ்சே" என் றும் "தேராளன் வாளரக்கன் செல்வமாளத்தென்னிலங்கை முன்மலங்கச் செந்தீயொல்கிப் - போராளனாயிரந்தோள் வாணன்மாளப்பொருகடலை ரண்கடந்து புக்கு மிக்க - பாராளன்பாரிடந்து பாரையுண்டு பாருமிழ் ந்து பாரளந்து பாரையாண்ட - பேராளன்பேரோதும் பெண்ணை மண்மேற் பெருந்தவத்தளென்றல்லாற் பேசலாமே"என்றும், மூன்றாந்திருவந்தாதியில், "தாளாற்சகடமுதைத்துப்பகடுந்திக் - கீளாமருதிடைபோய்க்கேழலாய், மீளா து, மண்ணகலங் கீண்டங்கோர் மாதுகந்த மார்பற்குப்-பெண்ணகலங்காதல் பெரிது" என்றும், திருவாய்மொழியில், "பாம்பணைமேற் பாற்கடலுட் பள்ளியமர்ந்ததுவும் - காம்பினைதோட் பின்னைக்காயேறுட னேழ்செற்றது வும் - தேம்பணைய சோலைமராமரமே ழெய்ததுவும் - பூம்பிணைய தண்டுழா ய்ப்பொன் முடியெம்போரேறே" என்றும், இவ்வாறு பலவிடங்களிலும் கூறப்படுதல் காண்க. இங்ஙனம் ஒற்றுமைபற்றிக் கூறப்படுவதை, தர்மை க்யம் என்பர் வடநூலார். "மலர்மிசை யேகினான்மாணடி" என்கிறபடியே இறைவன், அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தில் அவர்நினைந்தவடிவோடு விரைந்துசென்று சேர்தலால், 'அன்பருளந்தோன் றப்பயில்வது' என்றார். பாமேகம் - பாவுகிறமேகம்; அதாவது நீர்மொண்டு மழைபொழிய வெழுந்த மேகம். நான்முகத்தோன் எனமேல்வருதலால் பூ என்றது இவ்விடத்துத் திருமாலின் திருநாபி கமலத்தைக்குறித்தது. கமலம் - தாமரைமலர். "பூவிற் குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புநதம்-ஆவிற் கருமுனியா யானைக் கம ரரும்பல்-தேவிற்றிருமாலெனச் சிறந்தவென்பவே-பாவிற்கு வள்ளுவர் முப்

பால்'' ''பூவெனப்படுவதுபொறிவாழ்பூவே'' என்றற்றொடக்கத்தான்றோர்திரு வாக்குக்களாலும்,நான்முகத்தோன்மேவும் என்றதனாலும்-பூஎன்றதுதாமரை மலரையே குறித்தது. நான்முகத்தோன்-நாற்றிசையையும் நோக்கின நான்கு முகமுடையவன். ஸ்துதி யென்னும் வடசொல் சிதைந்து துதியெனவந்தது. துதிப்பது,கமழ்வது,பொலிவது,பயில்வது என்பவற்றுள்காலவிடைநிலை கால முணர்த்தாது தன்மை மாத்திரையே யுணர்த்திற்று.துதிப்பதுவும்முதலியவற் றில்குற்றுகரம்சிறப்புவிதியாற்கெடாது பொதுவிதியால்வகரவுடம்படுமெய் பெற்றது. பசுமை துளவம்=பைந்துளவம். துளவம் துளவீ என்னும் வட சொற்சிதைவு. வாழ்த்த என்றது பல்லாண்டுபாட என்றபடி. தா - வலிமை யுணர்த்தும் உரிச்சொல், தாமேவு என்பதற்குக் கண்ணன்மேல் தாவிப்பாய விரும்பின என்றும், குற்றமிருந்த என்றும் பொருளுரைத்தலுமாம். சகடம், ஆரண்யம், மேகம், பதம், என்பன வடசொற்கள். தீமேவும் என்பதற்கு அரக்கர் முதலானோர் செய்யுந் தீமைபொருந்திய எனினுமாம். ஆரணியம் என்றது இவ்விடத்துத் தண்டகாரணியத்தை யுணர்த்திற்று. இதில் ஸ்ரீராம பிரான் கைகேசியின் சொற்படி பதினன்குவருடகாலஞ்சென்று திரிந்தது பிரசித்தம். தூ - தூய்மையென்னும் பண்பின் விகாரம். இது திரிகரணசுத் திக்காயிற்று. திரிகரணம் - மனம் மொழி மெய் என்பன. இவற்றிற்குத் தூய்மையாவது - முறையே இறைவனையே நினைத்தலும் துதித்தலும் வணங் குதலும். இந்தத் திரிகரணத்தை கரணத்ரயம் என்றும், மனமொழிமெய் களை மநோவாக்காயம் என்றும் கூறுவர் வடநூலார். அன்பு - வெளிவேடங் காட்டுவதல்லாத மனப்பூர்வகமான மெய்யன்பாதலால், இதற்கு பக்தியென் றுரையுரைக்கப்பட்டது. பதம் - சாதியொருமை. இச்செய்யுளின் ஐந்தா மடிக்குக் கண்ணன் விஷயமாகவே பொருளுரைத்தலும் ஒருவாற்றானமை யும், எவ்வாறெனின், ''குடையுஞ் செருப்புங் கொடாதே தாமோதரனை நான் - உடையுங் கடியன வூன்றுவெம் பரற்களுடைக் - கடிய வெங்கானி டைக் காலடிநோவக் கன்றின்பின் - கொடியேனென் பிள்ளையைப் போக்கி னேனெல்லே பாவமே'' என்று தாயார் இரங்கும்படி கண்ணன் இளமை யில் கன்று காலிகளின்பின் வனங்களில் திரிந்தனன் என்பது பிரசித்தமாத லானென்க. அவ்வாறு அவன் சஞ்சரித்த அரணியத்தை 'தீமேவு மாரணியம்' என்றடைகொடுத் தோதினமையால், அவ்வடைமொழி—பிருந்தாவனத்து முஞ்சாரணியத்தில் சஞ்சரிக்கும்போது, தைவிகமாய்த்தோன்றித் தங்களைச் சூழ்ந்த பெருங்காட்டுத்தீயிலகப்பட்ட கோக்களும் கோபாலர்களும் முறை யிடக்கேட்ட ஸ்ரீகண்ணபிரான், நீங்கள் பயப்படாமல் கண்மூடிக்கொண்டி ருங்கள் என்று நியமித்தருளி, தனது விராட்சொரூபத்தை வகித்து அத்தீ யைச் சுவாலையோடும்பானஞ்செய்து அந்தக் கோ கோபாலர்களைப் பாண்டீரம் என்று சொல்லப்படுகிற ஆலமரத்தினடியில் தன் மாயையினுற் கொண்டு வந்து சேர்த்துக் காத்தருளினன் என்னும் சரித்திரத்தையுட்கொண்டு விளங் குகின்றது. இந்தத் தீயை தாவாநலம் என்பர் வடநூலார். விரிவஞ்சி இத் தலைச்செய்யுட் கிம்மட்டி லுரை வரைந்து நிறுத்தலாயிற்று. (க)

ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவந்த
ஆசிரியத்தாழிசை.

நீரார்பைங் கொண்ட னிகர்திருமே னிப்பெருமான்
பாரார நின்றசெழும் பங்கயச்செம் போதடிக
டேர்வார் வினையிருட்குச் செங்கதிரோ னென்பரால்.

காயாம்பூ வொத்த கதிர்த்திருமே னிப்பெருமான்
பாயா ரணமணக்கும் பங்கயச்செம் போதடிக
ளாய்வார் வினைவாரிக் கார்வடவை யென்பரால்.

வற்றாக் கடனேர் வருதிருமே னிப்பெருமான்
பற்றார் கழலொலிக்கும் பங்கயச்செம் போதடிக
ளுற்றார் வினையரவுக் கோருவண மென்பரால்.

(ப - ரை.) நீர்ஆர் - நீர்நிறைந்த, பைகொண்டல் நிகர் - பசுமையாகிய மேகத்தை நிகர்த்த, திருமேனி - திருமேனியையுடைய, பெருமான் - எம்பெருமானாகிய ஸ்ரீ கண்ணபிரானது, பார் ஆர நின்ற - பூமியிற்பொருந்தும்படி நின்ற, செழு - செழுமையாய், செ - செம்மையாயிருக்கிற, பங்கயப் போது - தாமரை மலரைநிகர்த்த, அடிகள் - சீர்பாதங்கள், தேர்வார் - (தமது பிரபாவத்தை) ஆராய்ந்தறியும் அன்பரது, வினை இருள் கு - வினையாகிய இருட்டுக்கு, செங்கதிரோன் என்பர்-சூரியனாமென்று சொல்லுவர் (அறிஞர்,)

காயாபூ ஒத்த - காயாமலரை நிகர்த்த, கதிர் - ஒளியுள்ள, திருமேனி - திருமேனியையுடைய, பெருமான் - எம்பெருமானாகிய ஸ்ரீகண்ணபிரானது, ஆரணம்பாய்மணக்கும் - வேதத்திற் பரவிக்கமழ்கின்ற, செ பங்கயம்போது- செந்தாமரைமலரை நிகர்த்த, அடிகள் - சீர்பாதங்கள், ஆய்வார் - (தமது) பிரபாவத்தை) ஆராய்ந்தறியும் அன்பரது, வினைவாரிக்கு - வினையாகிய கடலுக்கு, ஆர்வடவை என்பர் - பெரிய வடவைத்தீயாமென்று சொல்லுவர் (அறிஞர்.)

வற்றா - வடியாத, கடல்நேர்வரு - கடலை நிகர்த்த, திருமேனி - திருமேனியையுடைய, பெருமான் - எம்பெருமானாகிய ஸ்ரீ கண்ணபிரானது, பற்று ஆர் கழல் ஒலிக்கும் - பொருத்தமுள்ள வீரக்கழல்கள் சத்தித்தற்கிடமாகிய, செ பங்கயம்போது - செந்தாமரைமலரை நிகர்த்த, அடிகள்-சீர்பாதங்கள், உற்றார் - (தம்மை) அடைந்தவரது, வினை-வினையாகிய, அரவுக்கு-பாம்புக்கு, ஓர் உவணம் என்பர்-ஒப்பற்றகருடனாமென்று சொல்லுவர் (அறிஞர்.)

(பொ - ரை.) நீர் நிறைந்த பசுமையாகிய மேகத்தை நிகர்த்த திருமேனியையுடைய எம்பெருமானாகிய ஸ்ரீ கண்ணபிரானது, பூமியிற்பொருந்தும்படி நின்ற, செழுமையாய்ச்செம்மையாயிருக்கிற தாமரைமலரை நிகர்த்த சீர்

பாதங்கள், (தமது பிரபாவத்தை ஆராய்ந்தறியும் அன்பரது வினையாகிய இருட்டுக்குச் சூரியனுமென்று சொல்லுவர் (அறிஞர்.)

காயாமலரை நிகர்த்த ஒளியுள்ள திருமேனியையுடைய எம்பெருமானாகிய ஸ்ரீ கண்ணபிரானது வேதத்திற் பரவிக்கழ்கின்ற செந்தாமரைமலரை நிகர்த்த சீர்பாதங்கள் (தமது பிரபாவத்தை) ஆராய்ந்தறியும் அன்பரது வினையாகிய கடலுக்குப்பெரியவடவைத்தீயாமென்று சொல்லுவர் (அறிஞர்.)

வடியாத கடலைநிகர்த்த திருமேனியையுடைய எம்பெருமானாகிய ஸ்ரீ கண்ணபிரானது பொருத்தமுள்ள வீரக்கழல் சத்தித்தற்கிடமாகிய செந்தாமரைமலரை நிகர்த்த சீர்பாதங்கள் (தம்மை) அடைந்தவரது வினையாகிய பாம்புக்கு ஒப்பற்ற கருடனுமென்று சொல்லுவர் (அறிஞர்.)

(வி - ரை.) ஸ்ரீ கண்ணபிரானது திருவடியொன்றே செங்கதிரோனும் வடவையாகியும் உவணமாகியும் தோன்றுதலாகிய ஓர் வியப்பிருந்தவாறென்னென்னும் பொருள் பயந்து நிற்றலால், ஆல்மூன்றும் வியப்பிடைச் சொற்கள். இவ்வாறு வருவதனை ஆஸ்சர்யஸூசகம் என்பர் வடநூலார். திருமேனிக்குவமையாதல் வேண்டுமாதலால் "நீரார் பைங்கொண்டல்" என்றார். இங்ஙனங்கூறியது க்ருஷ்ணசப்தார்த்தம் வெளியாதற்பொருட்டென்க. க்ருஷ்ணசப்தார்த்தமாவது கருநிறம். இந்த க்ருஷ்ணசப்தத்துக்கு,"ஸர்வம்கரோதிதிக்ருஷ்ண:" என்கிறபடியே, எல்லாஞ்செய்ய வல்லவன் என்னும் பொருளுண்டாயினும் திருமேனிக்குவமிக்கையால் கருநிறம் என்றேபொருள் கொள்ளப்பட்டது. எல்லாஞ் செய்யவல்லவனை ஸர்வஶக்தன் என்பர் வடநூலார். க்ருஷ்ணம் - கருநிறம். பெருமான் - பெருமையையுடையவன், இச்சொல் லைப்பெருமாள் எனவுந்திரித்து வழங்குதலுமுண்டு, யரூஉ வெனினுமாம். "பாராரநின்ற" என்றதனால், திருவடிகள் இவ்வாறு நிற்றற்கு முன்பு வேதமுடியில் நின்றனவென்பது விளங்கும். பாராரநின்ற அடிகளென இயையும். பாரார நின்ற அடிகள், செழும்பங்கயச் செம்போதடிகள் என்றியைத்துரைப்பினுமிழுக்காது. 'பாரார நின்ற, என்றமையால், அங்ஙனம் நிற்றற்குரியனவல்லவென்பதும் வேதமுடியினிற்றற்குரியன வென்பதும் சொல்லாமேயமையும். வேதமுடியினிற்றற்குரிய திருவடிகள் பாரார நிற்றற்குக்காரணமென்னெனின், துஷ்ட நிக்ரஹசிஷ்டபரிபாலநமென்க. துஷ்டராவார் யாரெனின், கம்ஸசிசுபாலதந்தவக்ர துர்யோத நாதியர் என்க. சிஷ்டராவார் யாரெனின், தர்மாதியர் என்க. இவ்வாறே ஸ்ரீராமாவதார முதலியவற்றினும் துஷ்டராகிய ராவண கும்பகர்ணாதியரையும் சிஷ்டராகிய ஸ்ரீ விபீஷணாழ்வான் முதலானாரையும் ஆராய்ந்தறிந்துகொள்க, ஸ்ரீராமாவதார முதலியவையாவன மச்சாதியவதாரங்கள். இந்த மச்சாதியவதாரங்களிலும் ஆசிரிதரும் விரோதிகளுமுண்டென்பது பிரசித்தம். இந்தஅவதாரங்கள் விபவம் எனப்படும். இவையெல்லாம் விரிப்பிற் பெருகும். வெண்டாமரை மலர் திருவடிக்குவமிக்கப்படுபொருளன்றென்றலை விளக்கற்கு 'செம்பங்கயப் போதடிகள்" என்றார். சூரியனுக்கெதிரேஇருள் நில்லாததுபோல இறை

வன் திருவடிக்கெதிரே வினை நில்லாவென்பது "பெருமானடிகள் வினையிருட்குச்செங்கதிரோன்" என்பதனாற் பெறப்படும். தேர்வார் - இறைவனது ஸ்வரூபரூபகுண விபூதிகளையுள்ளவாறு ஆராய்வோர். செங்கதிர்களையுடையோனாதலால் சூரியனைச்செங்கதிரோன் என்றார். இவ்வாறே வெண்கதிர்களையுடைய சந்திரனை வெண்கதிரோன் எனவழங்குதலுங்காண்க. வினையென்றது நல்வினை தீவினையென்னுமிரண்டனையும். இவற்றை 'ஸத்கர்மம் துஷ்கர்மம், என்பர் வடநூலார். அடிகளைச்செங்கதிரோனாகவும் வினையையிருளாகவும் உருவகித்தமையால் இது முற்றுருவகம். இவ்வாறன்றி ஒன்றையுருவகித்து மற்றொன்றையுருவகியா தொழிதலை ஏகதேசவுருவகம் என்பர். அது, "பிறவிப்பெருங்கடனீந்துவர் நீந்தார் - இறைவனடி சேராதார்" என்னுந்திருக்குறளில், பிறவியைக்கடலாகவுருவகித்து இறைவனடியை மரக்கலமாகவுருவகியாமையும் இவைபோல்வனவுமாம். என்பர் என்னும் பயனிலைக்கு எழுவாயாகிய அறிஞர் என்பது வருவித்துரைக்கப்பட்டது. தீவினையேயன்றிநல்வினையும்இருளென்றல்பொருந்தாதெனின், இவ்விருவினையும் இரும்பு விலங்கும் பொன்விலங்கும்போல வீடடையுநெறியின் கண் தடையாயிருத்தலால் வினையெனவாளா கூறினர். நீரார்பைங்கொண்டல் என்பதற்கு நீர்மைபொருந்திய பசியமேகம் என்றுரைப்பினுமாம், நீர்மை - குணம். அது மைவிகுதி குறைந்து வந்தது. மேகத்துக்கு நீர்மையாவதுகைம்மாறு கருதாது உலகுக்கு உபகரிக்குங்குணம், "கைம்மாறு வேண்டாகடப்பாடு மாரிமாட் - டென்னாற்றுங்கொல்லோவுலகு" என்றார் பெருநாவலரும். உபகரித்தலாவது பருவமழைபெய்து அதன் வாயிலாக உலகிலுள்ள மக்கள் முதலிய எல்லாவுயிர்களுக்கும் தாபத்தைத்தணித்து, உணவு முதலியவற்றை விளைவித்து ஊட்டி வளர்த்தல். "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் - துப்பாயதூஉ மழை" என்றார் மாதாநுபங்கியாரும். இவ்வாறே இறைவனது திருமேனியும் கருநிறத்தானேயன்றித் தன்னைத்தரிசித்தாரெல்லார்க்கும் முத்தாபக்கோடையைத் தணித்து இம்மைமறுமையின்பங்களை யெல்லாந்தந்தருளுதலால் மேகத்துக்கு உவமையாயிற்று. காயாம் பூவைக்காசாம் பூவெனவும் வழங்குவர். "பாயாரணமணக்கும் பங்கயச்செம்போதடிகள்"என்றதனால் திருவடிகள் வேதப்பிரதிபாத்தியமென்பதும் வேதமுழுதும் திருவடிப்பிரபாவமே கூறுகின்றதென்பதும் இனிதுவிளங்கும். "மணக்கும் என்றதனால் ஆரணத்தளவிலடங்காது ஆகமபுராணேதிஹாஸாதிகளிலும் வியாபித்துவிளங்குமென்பதும் போதரும். வாரி - நீரையுடையது, வார் - நீர். இது வடசொல். வடவைத்தீயை படபாநலம் என்பர் வடநூலார். பற்று - ஆசிரிதர்க்குப் புகலிடமா யிருப்பது. உற்றார் - அடைந்தவர். இருட்குவாரிக்கு அரவுக்கு என்பவற்றில் குவ்வுருபுகள் பகைப்பொருளனவாய், இருட்டையொழிக்குஞ் சூரியன் போலவும் வாரியைவறளச்செய்யும் வடவைத்தீயைப்போலவும் அரவை விழுங்குகின்ற கருடன்போலவும் இறைவன் திருவடிகள் வினையை நீக்கிக் காக்கும் என்பதை விளக்கியவாறு காண்க. பங்கயம் - சேற்றில் முளைப்பது,

பங்கம் - சேறு, சம் - முளைத்தல், ஆயின் சேற்றில் முளைப்பன வெல்லாவற்றுக்கும் பொருள்படுமாலோ வெனின், படாது, என்னை, இறைவன்திருவடிக்குவமிக்கப்பட்டமையா னென்க. அன்றியும் இந்தப்பங்கயம் என்னுஞ்சொல் சேற்றில் முளைப்பனவெல்லாவற்றையு முணர்த்திப்பொதுவாயும்தாமரையொன்றனையே யுணர்த்திச் சிறப்பாயும் வருதலால் காரணவிடு குறியெனப்படும். இடுகுறியைரூடியென்றும்,காரணத்தை யோகமென்றும், காரணவிடுகுறியை யோக ரூடியென்றும் வழங்குவர் வடநூலார். பங்கஜம் என்னும் வடசொல் பங்கசம் எனத்திரிந்து, சகரம் யகரமாதலைப் போலியெனவும் வழங்குவர், "நேயத்ததாய் நென்னலென்னைப் புணர்ந்து நெஞ்சந் நெகப்போய் - ஆயத்த தாயணங் காயமிழ் தாயரனம் பலம்போல் - தேயத்ததா யென்றன் சிந்தையதாய்த் தெரியிற்பெரிதும் - மாயத்ததாகி யிதோவந்துநின்ற தென்மன்னுயிரே" என்னுந் திருக்கோவையார் செய்யுளில், தேயம் என்பது தேஜம் என்னும் வடசொற்றிரிபாகிய தேசம் என்பதன் திரிபாமாறு முய்த்துணர்க. அரா அர எனக்குறுகி உகரமேற்று வகரவுடம்படு மெய்பெற்றது. (உ)

வெள்ளொத்தாழிசை.

திண்ண மென்று தீய தீர
வெண்ண மொன்றி யென்று முள்வர்
கண்ணன் கமலக் கழல்.

(ப - ரை.) தீயதீரஎண்ணம் ஒன்றி - தீமைகள் யாவுமொழியும்படி ஆலோசித்து, கண்ணன் - ஸ்ரீகண்ணபிரானது, கமலம்கழல் - தாமரை மலர் போலுந் திருவடிகளை, திண்ணம்என்று - உறுதிப் பொருளென்று, என்றும் - எக்காலத்தும், உள்வர் - கருதுவர் (அத்திருவடியின் பிரபாவத்தை யறிந்த அறிஞர்) எ - று.

(பொ - ரை.) தீமைகள் யாவுமொழியும்படி யாலோசித்து ஸ்ரீ கண்ணபிரானது தாமரைமலர்போலுந் திருவடிகளை உறுதிப்பொருளென்று எக்காலத்தும் கருதுவர் (அத்திருவடியின் பிரபாவத்தையறிந்த அறிஞர்.) எ - று.

(வி - ரை.) உள்வர் என்னும் பயனிலைக்கு எழுவாயாகிய அறிஞர் என்பது வருவித்துரைக்கப்பட்டது. 'கண்ணன் கமலக்கழல் திண்ணமென்று எண்ணமொன்றியென்று முள்வர்' என்றியைத்துரைத்துக் கோடலுமாம். உள்வர் என்னுஞ்சொல் பெரும்பாலும் உள்ளுவர் என உகரச்சாரியை பெற்றே வரும், "எழுமையெழுபிறப்பு முள்ளுவர் தங்கண் - விழுமந்துடைத்தவர் நட்பு" என்பது திருக்குறள். தீய - பண்புப்பெயரடியாகப்பிறந்த அஃறிணைப்பலவின்பாற் படர்க்கைப்பெயர், பகுதி - தீமை, தீமைகளாவன - வினைகாரணமாகப்பலவுடம்புகளிலுஞ்சென்றுபிறந்திறந்துழல்வதனாலுண்டாகுந் துன்பங்கள். அவையாவன - தாய்வயிற்றுக்கருப்பையிற்கட்டுண்டிருத்தல், அதிற்சலம் பூரித்தல், உதராக்கினியாற் சுடப்படுதல், பிறக்கும்போது பிரசூதவாயு முறித்துத்தள்ளல், யோனித்துவாரத்தில் நெருக்குண்டல் முதலிய பிற

ப்புத்துன்பங்களும், பாலியத்தில் அஞ்ஞானத்தாலும், யவ்வனத்தில் மாதராலும், முதுமையில் குடும்பப்பெருக்கத்தாலும் உண்டாகிற திதிகாலத்துன்பங்களும், சிலேட்டுமம் மேலிடுதல், விழிசெருகுதல், நாவறளல், அறிவழிதல் முதலிய இறப்புத்துன்பங்களுமாம். இவற்றின் விரிவெல்லாம்,

"கருப்பா சயமே கட்டமதா மதனி லதிகங் கடுங்காலு
முரிக்க மிகவு மோகமுற முன்னை யுணர்வு மந்நிலையே
மரிக்க வாலைக் கரும்பெனவே யோனி வழியின் வலிதொலைய
நெருக்கப் பட்டு நிலமிசையே தோன்று முயிரு னிலையுடனே."

"என்றென் றெண்ணி யிருக்குமுயி ரிடர்ப்பட் டழியு மெழில்வரைக்கீ
ழொன்று மொருவன் றனைப்போலக் கருப்பா சயப்பை யுறுத்துதலான்
மன்ற வுததி மறிந்தாழ்வான் வருத்த மென்ன வருந்தியிடு
கின்ற கருப்பா சயவுதக வெள்ளங் கொள்ள நிறையழிந்தே."

"அங்கி யதனிற் றங்கியிடு மயோம யத்த கும்பத்திற்
றங்கு மொருவன் றபனம்போற் றயனை மெய்துந் தாயுதரத்
தங்கி சுடவே யழலனைய குசி யதனு லாகத்தைப்
பங்கித் திடவே படுமிடரி னிருநாற் குணிதம் பட்டழுங்கும்"

"கருவிடை யழுங்துந் துன்பமு நிலத்தின் கண்ணுறிற் கொடியவெந்நோயான்
மருவுவெந் துயரு நணாதினா யெய்தி வருந்திடுந் துன்பமுங் கூற்று
லுருவினை யொருவுந் துன்பமு மீட்டுங் கருக்குழி யொன்றுறு துயரும்
வெருவர வெண்ணி யின்பவீ டதனை மேவநன் குணர்தலே வேண்டும்"

"பாலகனுயஞ்ஞானத் தழுந்துவனற் காளையாய்ப் பாவைமாரால் - சால வருந்துவன் விருத்தன்ருனுகிக் குடும்பத்தாற்றளர்ந்து சாவன் - மேலவிவ னெக்காலத்தென் செய்வான் மாயக்கூத்திருந்தவாறே - ஞாலமெலாமாடரங்காய்ப்பொறிமேளமாய் மனப்பேய் நடிக்குமன்றே" "கருப்பமென்னு மக்காரிருட்சிறையினிற்கதுவும் - நெருப்பின் வெந்துளநிலை கெடத்தலை தகர்ந்திடவே - பொருப்பினின்று வீழ்பவரெனப்போந்தமை நினையா - இருப்புநெஞ்சினர்க்கென்னை யாமினியியம்புவதே" "குழவியிலறியாத் துன்பங்குரவராற் குமாரந்துன்பம் - கழிதருகாம நோயாற்காளையாம் பருவந்துன்பம் - விழைவுறுபோகஞ்சுட்டி வெறுக்கையை விரும்பிமேவும் - தொழிலினுற் றுன்பமந்தத்தொழிலிடையுருததுன்பம்" "கோடையில் வெப்பாற்றுன்பங் குளிரினுற்றுன்பங்கூதிர் - வாடையிலேற்றுற்றுன்பம் வார்பனி நோயாற்றுன்பம் - நீடியதாகமோக நித்திரைமலாதி தன்னுல் - நாடொறுந்துன்பமானு னலமொருநாளுமின்றே" "அல்லலாற் செல்வந்துன்பமதினு நல்குரவுந்துன்பம்-கல்வியாங்காரந் துன்பங்கற்றிலனுயிற்றுன்பம்-மல்லன் மாஞாலந்தன்னில் வலிமிகின் மதத்தாற்றுன்பம் - இல்லையே வலியோர்தம்மாலீடழிவுறலாற்றுன்பம்" "சிறப்புறு நோயாற்றுன்பஞ்செடிகொண் மூப்பதனுற்றுன்பம் - மறப்

புறத்தியக்கஞ்செய்யு மரணவேதனையாற்றுன்பம் - பிறப்பவரெக்காலத்தும் பெறுவது துன்பமாஞல் - துறப்பதே கருமந்துன்பப் பிறவியாந்துயரநீங்க" "நாச்செற்று விக்குண்மேல்வாரா முனல்வினை - மேற்சென்று செய்யப்ப டும்" "ஐயுந்தொடர்ந்து விழியுஞ்செருகியறிவழிந்து - மெய்யும் பொய்யாகி விடுகின்ற போதொன்றுவேண்டுவேன் யான் - செய்யுந்திருவொற்றியூருடை யீர் திருநீறுமிட்டுக் - கையுந்தொழப் பண்ணியைந்தெழுத் தோதவுங் கற்பி யுமே" "வந்திடு மரணத்துன்பமறிந்துமை செய்யப்போமோ - உந்திமேலே யும் பித்துமுணர்வொடு பொறிகலங்கி - நந்திடாவிருளே மூடி நாவுலர்ந்தல மந்தென்னே - இந்தமாவிறப்பிற்றுன்பம் பவத்துன்பத்தெண்மடங்கே" "பர ணமாகிய பெண்டிருஞ்சுற்றமும் பண்டுதங்கையிற்றந்த - விரணமானவை கொண்டிட விவரைவிட்டியம்பிடாதிவனேகும் - மரணவேதனையாவராலறிய லாழ்வுங்கியைம்புலனந்தக் - கரணம் யாவையுங்கலங்கிட வருந்துயர் கட வுளே யறிகிற்பான்" "வேதநூற்பிராய நூறுமனிசர் தாம்புகுவரேலும் - பாதியுமுறங்கிப்போகு நின்றதிற் பதினையாண்டு - பேதைபாலகனதாகும் பிணிபசி மூப்புத்துன்பம்- ஆதலாற்பிறவி வேண்டேனரங்கமாநகருளானே" சோர்விஞற்பொருள் வைத்ததுண்டாகிற் சொல்லு சொல்லென்று சுற்று மிருந்து-ஆர்வின வினும் வாய்திறவாதேயந்த காலமடைவதன் முன்னம்-மார் வமென்பதோர் கோயிலமைத்து மாதவனென்னுந் தெய்வத்தை நாட்டி - ஆர் வமென்பதோர் பூவிடவல்லார்க் காவதண்டத்தி லுய்யலுமாமே" "வாயொ ருபக்கம் வாங்கி வலிப்பவார்ந்த நீர்க்குழிகண்கள் மிழற்றத் - தாயொருபக்கந் தந்தையொருபக்கந் தாரமுமொருபக்கமலற்றத் - தீயொருபக்கஞ்சேர்வதன் முன்னஞ்செங்கண்மாவொடுஞ்சிக் கெனச்சுற்ற - மாயொருபக்க நிற்கவல் லார்கட்காவதண்டத்திலுய்யலுமாமே"

"முற்ற மூத்துக்கோறுணையா முன்னடிநோக்கி வளைந்
திற்றகால் போற்றள்ளி மெள்ள விருந்தங்கிளையாமுன்
பெற்றதாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலையூடுயிரை
வற்றவாங்கி யுண்ட வாயான் வதரி வணங்குதுமே"

"உறிக்ள்போல் மெய்நரம் பெழுந்தூன் றளர்ந்துள்ள மெழுகி
நெறியை நோக்கிக் கண்சுழன்று நின்று நடுங்காமுன்
அறுதியாகி னெஞ்ச மன்பா யாயிர நாமஞ் சொல்லி
வெறிகொள் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே"

"பப்ப வப்பர் மூத்தவாறு பாழ்ப்பதுசீத்திரளை
ஒப்பவைக்கள் போதவுந்த வுன்றமர் காண்மி னென்று
செப்பு நேர்மென் கொங்கை நல்லார் தாஞ்சிரியாத முன்னம்
வைப்பு நங்கள் வாழ்வு மாஞன் வதரி வணங்குதுமே" என்றற் றொ டக்கத்தான் றோர் திருவாக்குக்களாலும், பிரத்தியக்ஷாநுபவத்தாலுங் கண்டு கொள்க.

(௬)

ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவந்த
வெள்ளொத்தாழிசை.

பற்றிற் பழுதியற்றும் பந்தத் துழனெஞ்சே
செற்றச் சகடுதைத்தான் றாள்குறியா தென்கொலோ
முற்ற வொழிந்து விடல்.

துன்று பவம்விளைக்கும் பந்தத் துழனெஞ்சே
கன்று குணில்கொண்டான் றாள்குறியா தென்கொலோ
வென்று மொழிந்து விடல்.

நந்தும் வினைக்கிடனும் பந்தத் துழனெஞ்சே
யுந்தி மருதிடந்தான் றாள்குறியா தென்கொலோ
வந்தோ வொழிந்து விடல்.

(ப - ரை.) பற்றின் - பற்றினால், பழுது இயற்றும் - குற்றத்தைச்செய்கின்ற, பந்தத்து - பிறவிப்பிணிப்பிற்பட்டு, உழல் - திரியாநின்ற, நெஞ்சமே-மனமே, செற்றம்சகடு உதைத்தான் - வஞ்சகமுள்ள சகடாசுரனையுதைத்தவனாகிய ஸ்ரீகண்ணபிரானது, தாள் - திருவடியை, குறியாது - நினையாமல், முற்ற ஒழிந்துவிடல் - முழுதும் மறந்துவிடுதல், என்னோ - யாதுகாரணத்தாலோ. எ - று.

துன்றுபவம் விளைக்கும் - மிகுதியாகிய பாவத்தை யுண்டாக்குகின்ற, பந்தத்து - பிறவிப்பிணிப் பிற்பட்டு, உழல் - திரியாநின்ற, நெஞ்சே-மனமே, கன்றுகுணில் கொண்டான் - கன்றைக்குறுந்தடி யாகக்கொண்ட ஸ்ரீகண்ணபிரானது, தாள் - திருவடியை, குறியாது - நினையாமல், என்றும் ஒழிந்துவிடல்-எக்காலத்தும் மறந்துவிடுதல், என்னோ-யாதுகாரணத்தாலோ. எ-று.

நந்தும் - பெருகுகின்ற, வினைக்கு - இருவினைகளுக்கு, இடன் ஆம் - இடமாகிய, பந்தத்து-பிறவிப்பிணிப்பிற்பட்டு, உழல்-திரியாநின்ற, நெஞ்சே-மனமே, மருது உந்தி இடந்தான்-மருதமரத்தைத் தள்ளிப் பிளவுபடுத்தினவனாகிய ஸ்ரீகண்ணபிரானது, தாள் - திருவடியை, குறியாது - நினையாமல், ஒழிந்துவிடல் - மறந்துவிடுதல், என்னோ - யாதுகாரணத்தாலோ. எ - று.

(பொ - ரை.) பற்றினால் குற்றத்தைச்செய்கின்ற பிறவிப்பிணிப்பிற்பட்டுத் திரியாநின்றமனமே, வஞ்சகமுள்ள சகடாசுரனை யுதைத்தவனாகிய ஸ்ரீகண்ணபிரானது திருவடியை நினையாமல் முழுதும் மறந்துவிடுதல் யாதுகாரணத்தாலோ. எ - று.

மிகுதியாகிய பாவத்தையுண்டாக்குகின்ற பிறவிப்பிணிப்பிற் பட்டுத் திரியாநின்றமனமே, கன்றைக் குறுந்தடியாகக்கொண்ட ஸ்ரீகண்ணபிரானது திருவடியை நினையாமல் எக்காலத்தும் மறந்துவிடுதல் யாதுகாரணத்தாலோ, எ - று.

பெருகுகின்ற இருவினைகளுக் கிடமாகிய பிறவிப்பிணிப்பிற்பட்டுத் திரியாநின்ற மனமே, மருதமரத்தைத்தள்ளிப் பிளவுபடுத்தினவனாகிய ஸ்ரீகண்ணபிரானது திருவடியைநினையாமல் மறந்துவிடுதல்யாது காரணத்தாலோ. எ-று.

(வி - ரை.) என்கொலோ என்பதில் கொல் அசை. என்னே என்பதனிறுதியில் யானறியேன் என்பதையாயினும் நீ சொல்லுவாய் என்பதையாயினும் கூட்டி யுரைத்துக்கொள்க. என் என்பதையே வினாவாகக்கொண்டு கொல் ஓ இரண்டும் அசையெனினுமாம். அந்தோ-ஐயோ என்னும் இரக்கப்பொருள் தருவதாகிய இடைச்சொல், இது, நான் செய்யக்கிடந்த தொன்றில்லை யென்னும் பொருளில்வந்தது. 'பற்றிற் பழுதியற்றும்' என்றதனால் பற்றுவிடின் பழுதியற்றாது என்பது போதரும், "யாதனின் யாதனினீங்கி யானோதல் - அதனினதனினிலன்" என்பது திருக்குறள். பந்தம் பிறவித்தளை. சகடு - சகடம் என்னும் வடமொழிச்சிதைவு. இதுவண்டில் என்னும் பொருளது. சகடு என்றது வண்டிலுருவாய் வந்தவோரசுரனை. இவன் கஞ்சன் படைவீரருள் ஒருவன். இவன் கஞ்சனேவலால் வண்டிலுருவாய் வந்து ஸ்ரீகண்ணபிரான் பாலகனாய் விளையாடுமிடத்தி லிருந்தான், இவனது கபடவேஷத்தையும் தன்னைக்கொல்ல நினைத்துவந்திருக்கிற கொடுஞ்செயலையுமறிந்த இறைவன் தவழ்ந்துகொண்டேபோய் திருவடியாலுதைத்தலும்வண்டிலுருவழிந்து இவன்தன் அசுரவுருவோடு வீழ்ந்திறந்தான். இந்தச்சரித்திரத்தை, ஸ்ரீபாகவதம் தசமஸ்கந்தம் பூர்வபாகத்தில் விரிவாய்க்காணலாம். செற்றம் - சினம், அது இங்குவஞ்சத்துக்காயிற்று. குறித்தல் - நினைத்தல், குறியாது என்றமையால் ஒழிந்துவிடல் மறத்தற் பொருளதாயிற்று. பவம் - பாவம். 'கன்றுகுணில் கொண்டான்' என்றது ஸ்ரீபலராமக்ருஷ்ணர்கள் பசுமேய்த்துக் கொண்டிருக்கையில் ஓரசுரன் இவர்களைக் கொல்ல நினைத்து இவர்கள்மேய்க்கும் பசுக்களினிடையே ஒருகன்றுருவாகிவந்து சமயம் பார்த்திருப்பதை ஸ்ரீக்ருஷ்ணபகவானறிந்து பலராமருக்கறிவிக்க, அவர் அந்தக் கன்றின் நாலுகால்களையும் ஒரு சேரப்பிடித்து அங்கிருந்த வோர்விளாமரத்தின்மேலெறிதலும் அம்மரத்தின் கனியோடு அவ்வசுரனும் வீழ்ந்திறந்தான் என்னும் ஸ்ரீபாகவதகதையை யுணர்த்திற்று, 'உந்திமருதிடந்தான்' என்றது, குபேரன் புதல்வர்களாகிய நளகூபரன் மணிக்ரீவன் என்னுமிருவரும் முன்னொருகாலத்தில் கைலாசபர்வதத்தில் மதிராபானமத்தர்களாகிநிர்வாணிகளாய் விளையாடிக்கொண்டிருந்தார்கள். அங்கேநாரதமுனிவர்வந்தார், அவரைக்கண்டு இவர்கள் மரியாதை செய்யாமல் உபேக்ஷைசெய்ததனால் அவர் கோபங்கொண்டு, இவர்களைநோக்கி, நீங்களிருவம் இரண்டு மருதமரங்களாகக் கடவீர்கள் என்றுசபித்தார், அவ்வாறே திருவாய்ப்பாடியினருகே இரண்டுமருதமரங்களாயிருந்தார்கள், நெடுங்காலஞ்சென்றபிறகு ஸ்ரீகண்ணபிரான் திருவாய்ப்பாடியில் நவநீதசோரத்வம் முதலிய திருவிளையாடல்கள் செய்துகொண்டிருக்குங்காலத்தில், யசோதைப்பிராட்டியார், வெண்ணெய் திருடினதைக்குறித்து இவரைப்பிடித்து உரலோடுவரிந்து கட்டினள், இவர் அந்தவுரலை யிழுத்துக்

கொண்டேபோய் இந்த இரண்டு மருதமரங்களின் நடுவே சென்றார். இவரிழுக்கும்வலியினுல் உரல் மருதமரங்களின் நடுவேமாட்டிக்கொண்டு இரண்டும் வேரோடு பெயர்ந்து நிலத்தில் விழுதலும், அம்மரவுருவாயிருந்த நளகூபரமணிக்ரீவர்கள் தமது சாபவிமோசநராய் ஸ்ரீகண்ணபிரானை வணங்கிச் சென்றனர் என்னும் ஸ்ரீபாகவத கதையை யினிது விளக்கிற்று. (ச)

## வெளிவிருத்தம்.

வேதந் தெரித்தானும் வேதத்திற் குள்ளானுங் கண்ணன்போலும்
போதந்தருவானும்போந்தொளியாய்நிற்பானுங் கண்ணன்போலு
மேதந் தவிர்ப்பானு மெவ்வுயிருங் காப்பானுங் கண்ணன்போலும்.

(ப - ரை.) வேதம்தெரித்தானும் - வேதத்தை யறிவுறுத்தினவனும், வேதத்திற்கு உள்ளானும் - வேதத்திலடங்கி யிருப்பவனும், கண்ணன், ஸ்ரீகண்ணபிரானேயாவன், போதம்தருவானும் - ஞானத்தை யருள்செய்பவனும், போந்து ஒளியாய் நிற்பானும் - வந்து தேஜோரூபமாய் நிற்பவனும், கண்ணன்-ஸ்ரீகண்ணபிரானேயாவன், ஏதம் தவிர்ப்பானும் - குற்றங்களையொழிப்பவனும், எவ்வுயிரும் காப்பானும் - எல்லாவுயிர்களையுங் காப்பவனும், கண்ணன் - ஸ்ரீகண்ணபிரானேயாவன். எ - று.

(பொ - ரை.) வேதத்தை யறிவுறுத்தினவனும், வேதத்திலடங்கி யிருப்பவனும் ஸ்ரீகண்ணபிரானேயாவன். ஞானத்தை யருள்செய்பவனும் வந்து தேஜோரூபமாய் நிற்பவனும் ஸ்ரீகண்ணபிரானேயாவன்; குற்றங்களை யொழிப்பவனும் எல்லாவுயிர்களையுங் காப்பவனும் ஸ்ரீகண்ணபிரானே யாவன்.

(வி - ரை.) போலும் மூன்றும் அநுமாநசந்தேஹப் பொருளுணர்த்தும் இசை நிறையசைச்சொல். ஒப்பில்போலியெனக் கூறுதலுமுண்டு. இறைவன் தன் திருநாபிகமலத்திற் றோன்றின சதுர்முகனுக்கு வேதத்தைச் சாங்கோபாங்கமா யருள்செய்து அவன் வாயிலாக உலகத்திற் குபகரித்தலாலும், அவ்வேதத்தாற் பிரதிபாதிக்கப்படும் பொருளுந்தானே யிருத்தலாலும் 'வேதந் தெரித்தானும் வேதத்திற்குள்ளானுங் கண்ணன்போலும்' என்றும், 'ஞானத்தை யருள்செய்வோனும் அந்த ஞானத்தைக் கருவியாகக்கொண்டு தன்னை யுள்ளவா றுணர்வார்க்கு மாசறுசோதியாய் நிற்போனும் இறைவனே யாதலால் 'போதந்தருவானும் போந்தொளியாய் நிற்பானுங் கண்ணன்போலும்' என்றும், 'அவ்வாறு தன்தரிசனத்தால் உயிர்களின் அஞ்ஞானதுக்கங்களை நீக்குவோனும் எல்லாவுயிர்களையுங் காத்தருள்வோனும் இறைவனேயாதலால் 'ஏதந்தவிர்ப்பானு மெவ்வுயிருங் காப்பானுங் கண்ணன்போலும்' என்றுங்கூறினர். போதம் - அறிவு (ஞானம்). ஏதம் என்றது அஞ்ஞானத்தையும் அதனாலுண்டாகிற பிறவித்துன்பங்களையும். வேதம் - வடசொல், இதற்கு சதுர்வித புருஷார்த்தங்களையும் அறிதற்குக்கருவியாயுள்ளது என்பதுபொருள்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முற்று விளமென் றளிர்க்கரத்தான் முனிவி லாது மெல்லெ னச்செம், பொற்று மரையிற் குடியிருக்கும் பூவை வருடுந் தொ றுஞ்சேக்கும், விற்று ரணிநற் பதமிரண்டும் வியன்மா நிலந்தீண் டிடநடந்து, கற்று மேய்த்த சிற்றுயன் காமர் சீர்த்தி வாழியவே.

(ப - ரை.) பொன் - அழகாகிய, செந்தாமரையில் - செந்தாமரை மல ரில், குடியிருக்கும்-நித்தியவாசம்பண்ணுகிற, பூவை - பூவைபோல்வாளாகிய திருமகள், முற்று - முதிராத, மெல் - மெல்லிய, இளந்தளிர் - இளந்தளிர் போன்ற, கரத்தால் - தன் கைகளால், முனிவு இலாது - வெறுப்பின்றி,மெல் லென - மிருதுவாக, வருடும் தொறும் - வருடுந்தோறும், சேக்கும் - சிவக் கின்ற, வில் - ஒளியையுடைய, தார் அணி-பூமாலையணிந்த, நல்பதம் இரண் டும் - நன்மையைத்தருகிற தன் இரண்டு திருவடிகளும், வியல் - சிறப்புள்ள மாநிலம் தீண்டிட நடந்து - பெரிதாகிய பூமியைத் தீண்டும்படி நடந்து, கன்று ஆ மேய்த்த - கன்றுகளையுடைய பசுக்களை மேய்த்தருளின, சிறு ஆயன் - சிற்றுயனுகிய ஸ்ரீ கண்ணபிரானது, காமர் சீர்த்தி - பெரும் புகழா னது, வாழிய - வாழ்வதாக. எ - று.

(பொ - ரை.) அழகாகிய செந்தாமரை மலரில் நித்தியவாசம்பண்ணு கிற பூவைபோல்வாளாகிய திருமகள், முதிராத மெல்லிய இளந்தளிர்போ ன்ற தன் கைகளால் வெறுப்பின்றி மிருதுவாக வருடுந்தோறும் செவக்கின்ற ஒளியையுடைய பூமாலையணிந்த நன்மையைத்தருகிற தன் இரண்டு திருவடி களும் சிறப்புள்ள பெரிதாகிய பூமியைத் தீண்டும்படி நடந்து கன்றுகளை யுடைய பசுக்களை மேய்த்தருளின சிற்றுயனுகிய ஸ்ரீ கண்ணபிரானது பெ ரும்புகழானது வாழ்வதாக. எ - று.

(வி - ரை.) முற்றுமை இளமை மென்மை என்னும் விசேடணங்கள் தளிரை விசேடித்து நின்றன. இவ்வுவமையால் கரத்தின் மார்த்தவம் இனிது விளங்குகின்றது. தளிர்க்கரம் - உவமைத்தொகை நிலைத்தொடர். முனிவு- இறைவன் இறைவி என்னு மிருவர்க்குங்கொள்க. தாமரையில் அன்னம் குடியிருத்தலியற்கையாயிருக்க, 'செம்பொற்றுமரையிற் குடியிருக்கும்பூவை' என்றது பூவைபோலும் இன்மொழியையுடையாள் என்றற்கேயாதலால் வழக்கோடு முரணுமாறில்லையென்க. வருடுதல் - தைவருதல். சேக்கும் பண்படியாகப்பிறந்த பெயரெச்சம். பகுதி செம்மை. சேக்கும் பதம் என வியையும். "முற்று விளமென் றளிர்க்கரத்தான் முனிவிலாது மெல்லெனச் செம், பொற்றுமரையிற் குடியிருக்கும் பூவை வருடுந்தொறுஞ் சேக்கும்ப தம்' என்றதனுல் இறைவியது திருக்கரத்தினும் இறைவனது திருவடி மிக மெல்லிதென்பது சொல்லாமேயமையும். கன்று என்பது கற்றுவென வலி த்தலாயிற்று. சிறுமை ஆயன் சிற்றுயன் என்றுயிற்று. சிறிய இடையன் என்பது பொருள். 'பதமிரண்டும் நிலந்தீண்டிட நடந்து' என்றமையால்

அவை நிலந்தோய்வன வல்லவென்றதாயிற்று. "கானிலந்தோயாக் கடவுளை" என்றார் பிறரும். பிறவிப்பெருங்கடலை நீந்துதற்குப் புணையாகவும், பிறவிப்பிணிக்கு மருந்தாகவு மிருத்தலால் இறைவன் திருவடியை 'நற்பதம்' என்றார். "பிறவிப்பெருங்கட னீந்துவர் நீந்தார் - இறைவனடி சேராதார்" "கற்றதனாலாய பயனென் கொல்வாலறிவன் - நற்றாடொழா அரெனின்" என்னுந் திருக்குறள்களின் உரையில் இக்கருத் தினிது விளங்கும். (க)

மேற்படி - வேறு.

பலதலை யனந்த னோடெண் பகடுமெய்ப் பாறி நிற்ப
மலர்தலை யுலகந் தாங்கு மாலையந் தடந்தோள் வேந்தே
குலமறை யுணர்ச்சி மிக்க குசேலன்சென் றிறுக்கப் பட்ட
நலமலி நெய்தல் சார்ந்த நளிர்கடல் வளமிக் கன்றே.

(ப - ரை.) பலதலை - அநேகம் தலைகளையுடைய, அனந்தனோடு - ஆதிசேஷனுடனே, எண்பகடும் - எட்டுத்திக்குயானைகளும், எய்ப்பு ஆறிநிற்ப - (உலகத்தைத்தாங்குகிற) இளைப்புத்தணிந்து நிற்கும்படி, மலர்தலை உலகம் தாங்கும் - பரந்த இடத்தையுடைய உலகத்தைத்தாங்குகிற, மாலை அம்தடம் தோள் - பூமாலையைத்தரித்த அழகிய பெரியதோள்களையுடைய, வேந்தே - பரீக்ஷித்துமகாராசனே, குலம்மறை உணர்ச்சிமிக்க - சிறந்தவேதங்களின் அறிவுமிகுந்த, குசேலன் - குசேலமுனிவனால், சென்று இறுக்கப்பட்ட - போய்ச்சேரப்பட்ட, நலம்மலிநெய்தல் சார்ந்த - சிறப்புமிக்க நெய்தல் நிலத்திற்சேர்ந்த, நளிர்கடல் - பெரியமேல்கடலானது, வளம்மிக்கன்று - எல்லா வளங்களும் மிகுந்தது. எ - று.

(பொ - ரை.) அநேகம் தலைகளையுடைய ஆதிசேஷனுடனே எட்டுத் திக்குயானைகளும், (உலகத்தைத்தாங்குகிற) இளைப்புத்தணிந்து நிற்கும்படி பரந்த இடத்தையுடைய உலகத்தைத்தாங்குகிற பூமாலையைத்தரித்த அழகிய பெரிய தோள்களையுடைய பரீக்ஷித்துமகாராசனே! சிறந்தவேதங்களின் அறிவுமிகுந்த குசேலமுனிவனால் போய்ச்சேரப்பட்ட சிறப்புமிக்க நெய்தல் நிலத்திற்சேர்ந்த பெரிய மேல்கடலானது எல்லாவளங்களும் மிகுந்தது. எ - று.

(வி - ரை.) முதலிரண்டடி, கதை கூறுகின்ற சுகமுனிவர் அரசனை விளித்ததாகப்பாடியது. கீழிருந்து ஆயிரந்தலைகளாலும் பூமியைத்தாங்குகிற ஆதிசேஷனும் அஷ்டதிக்கஜங்களும் இளைப்புத்தணியும்படி இவன்தன்னிரு தோள்களால் அந்தப்பூமியைத் தாங்குகிறான் என்றதற்குத் தன்தோள்வலியால் பகைவரைவென்று உலகமுழுதும் அரசாளுகிறானென்பது கருத்து. தீயோர்வசிப்பதனால் பூமிக்குப்பாரமுண்டாகுமென்பது நூற்றுணிபாதலால் எங்கும் தீமைநிகழவொட்டாதபடி இவன் தீயோரைத்தண்டித்து ஆளுதல் பற்றி உலகந்தாங்கும்சேடன் முதலியவற்றிற்கு இளைப்பாறுமென்க. தாங்குதல்-சுமத்தல். (காத்தல்). "அவனி சுமந்தபுயமும்" "பன்னகஞ் சுமந்த

வைப்போர் தோளினிற் பரிக்குமன்னர் மன்னன்" என்றிவ்வாறு கூறுதல் கவிகளினியல்பு. அநந்தன் - பிரளயகாலத்திலும் அழிவற்றவன். இதுவடசொல். அநந்தனுக்கு ஆயிரந்தலைகளுண்மையால் "பலதலை என்றதற்கு ஆயிரந்தலைகளென்றே பொருள்கொள்க. பகடெனவாளாகூறினராயினும் எண்பகடும்" எனவும் 'உலகந்தாங்கும்' எனவும் கூறுதலால் அஷ்டதிக்கஜங்களை யுணர்த்திற்று. அஷ்டதிக்கஜங்களாவன. ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்ரதீகம் என்பன, இவை முறையே கிழக்குமுதலிய திக்குக்களிலிருப்பன. இவற்றின் பெண்யானைகள் முறையே அப்ரமு, கபிலை, பிங்கலை, அநுபமை, தாம்ரவர்ணி, சுப்ரதந்தி, அங்கனை, அஞ்சநாவதி என்பன. மலர்தலை வினைத்தொகை நிலைத்தொடர். எய்ப்புதொழிற்பெயர். பகுதிஎய். மாலையென்றது அடையாளப் பூமாலையோடு வெற்றிமாலையையுங்குறிக்கும். குலகிரி என்பதிற்போல குலமறை என்பதில் குலம் சிறப்புப்பொருளது.மறையுணர்ச்சிஎன்பதை இரண்டாம்வேற்றுமைத் தொகையாகக் கோடலுமாம். இன்னும் குலமறையுணர்ச்சி மிக்க குசேலன் என்றதொடரை உம்மைத்தொகை நிலைத்தொடராகக்கொண்டு, தான்பிறந்த குலமும், அக்குலத்திற்கேற்ற வேதாத்தியயநமும், அதனாலுண்டாகிய ஞானமும் என்பவற்றாற் சிறந்தகுசேலன் என்றுரைத்தலுமொன்று. நெய்தல்-கடலும் கடல்சார்ந்த நிலமும். இதுமலரால் வந்தபெயர். நளிர்கடல் என்பதற்கு குளிர்ந்தகடல் என்றுரைப்பினு மிழுக்காது. மிக்கன்று-ஒன்றன்பால் இறந்தகாலவுடன்பாட்டுவினைமுற்று. மிகு என்னும் பகுதி ஒற்றிரட்டிக்காலங்காட்டிற்று. அன் - சாரியை, று - விகுதி. இது, மிக்கதன்று என எதிர்மறையாங்காலத்து அல் எதிர்மறையிடைநிலையாம். அனந்தனோடு என்பதில் ஒடு மூன்றனுருபு, இது உடனிகழ்ச்சிப்பொருளது, பகடும் என்றதில் உம்மை இறந்தது தழீஇயது. (எ)

சீருறு சங்கம் வாய்ந்து செழுங்குவ லயமுண் டாக்கி
யோருறு கமட மீன வுருவங்கொண் டுயிர்க ளோம்பி
யேருறு பவளச் செவ்வா யியைந்துபொன் புணர்ந்து தண்ணென்
காருறு நிறமுங் காட்டிக் கண்ணனைத் துணையும் வாரி.

(ப - ரை.) வாரி - கடலானது, சீர்உறுசங்கம் வாய்ந்து - சிறப்புப் பொருந்திய சங்கத்தைப்பெற்று, செழுகுவலயம் உண்டாக்கி - செழுமையாகிய குவலயத்தைத் தோன்றுவித்து, ஓர் உறுகமடம்மீனம் உருவம்கொண்டு- ஆராய்தற்குரிய கமடமீனவுருவங்களைத் தாங்கி, உயிர்கள் ஓம்பி - உயிர்களைக் காப்பாற்றி, ஏர்உறுபவளம் செவ்வாய்இயைந்து - அழகுமிகுந்த பவளச்செவ்வாய்பொருந்தி, பொன்புணர்ந்து - பொன்னைச் சேர்ந்து, தண் என்கார் உறு நிறமும்காட்டி - தண்ணென்ற காரினதுமிக்க நிறத்தையுங்காட்டி, கண்ணனை துணையும் - ஸ்ரீகண்ணபிரானை நிகர்க்கும். எ - று.

(பொ - ரை.) கடலானது சிறப்புப்பொருந்திய சங்கத்தைப்பெற்று, செழுமையாகிய குவலயத்தைத் தோன்றுவித்து, ஆராய்தற்குரிய கமடமீன

வுருவங்களைத்தாங்கி, உயிர்களைக்காப்பாற்றி, அழகுமிகுந்த பவளச்செவ்வாய் பொருந்தி, பொன்னைச்சேர்ந்து, தண்ணென்றகாரினது மிக்கநிறத்தையுங்காட்டி ஸ்ரீகண்ணபிரானை நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) இச்செய்யுள் சிலேடைப்பொருள தாதலால், கண்ணனுக்குப்பொருள் கொள்ளுங்கால், சங்காயுதத்தைப்பெற்று, பூமண்டலத்தையுண்டாக்கி, கூர்மமச்சாவதாரங்களைக்கொண்டு, எல்லாவுயிர்களையுங் காப்பாற்றி, பவளம்போன்ற திருவதரத்தைப் பொருந்தி, திருமகளைச்சேர்ந்து, குளிர்ந்த நீலமேக நிறத்தைக்காட்டி, எனவும், கடலுக்குப் பொருள்கொள்ளுங்கால், சங்குகளைக்கொண்டு, நீலமலர்களைத் தோன்றுவித்து, ஆமைமீன் என்பவற்றினுடம்புகளைத்தாங்கி, மீன்முதலிய ஜீவர்களைத்தாங்கி, பவளமாகிய செவ்வாயையுடையதாகி, கருநிறத்தைக்காட்டி, எனவும் உரைத்துக்கொள்க. கண்ணனது சங்கத்தைப் பாஞ்சஜந்யம் என்பர் வடநூலார். பஞ்சஜநன் என்னும் இராக்கதன், ஸ்ரீகண்ணபிரான் தனக்கு வித்யாகுருவாகிய சாந்தீபன் புத்திரனைப்பிரபாச தீர்த்தத்தினுள்ளே கொண்டுபோன செய்தியையறிந்துசென்று அவனைக்கொன்று அவன் கழுத்தெலும்பைக் கைக்கொண்டார். அதுவேபாஞ்சஜந்யமென்று சொல்லப்படுகிறசங்கம். கண்ணன் மச்சாவதாரமெடுத்துத் திருப்பாற்கடல் கடையுங்காலத்தில் தன்முதுகினல் மந்தரகிரியைத் தாங்கினதும், மச்சாவதாரமெடுத்துச் சோமுகாசுரனைக்கொன்று அவன் கவர்ந்துகொண்டுபோன வேதங்களைக் கொண்டுவந்ததும் லோகப்ரசித்தமான கதைகளாதலால், அவற்றை மிகவிரித்திலம். பவளச்செவ்வாய் என்பதற்குப்பவளமுண்டாதற்குரிய இடத்தையுடையதாகி யெனக்கடலுக் குரைப்பினுமாம். கடல் பொன்புணர்தலாவது சம்புநதி முதலிய நதிகளாற் கொணர்ந்து சேர்க்கப்பட்ட சாம்புநதம் முதலிய பொற்பொடியை யுடைத்தாதல். சங்கம் குவலயம் கமடம் மீநம்வாரி என்பனவடசொற்கள், குவலயம் - கு+வலயம், குவலயம்-பூவட்டம். பவளம் - ப்ரவாளம் என்னும் வடசொற்றிரிபு. கண்பெருமையாதலால் பெருமையுடையோன் என்றும், கண் இடமாதலால் எல்லாப்பொருள்கட்கும் தோற்றக்கேடுகட்கிடமாயிருப்பவன் என்றும், கண்ணன் என்பதற்குப் பொருளுரைத்தலுமாம். இவ்வாறன்றி யாவர்க்கும் கண்போல்பவன் எனினுமமையும். (அ)

வாங்குதெண் கடலின் மீன முதலுயிர் மருவ லாலே
வீங்கிய புலவு மாற்றி மிளிர்தரப் பூத்த நெய்த
ரோங்கிய மணங்கான் றுன்ற சிறப்பினைச் செய்யுந் தம்மைத்
தாங்குறு களைக ணானோர் தம்பழி மறைப்பார் போல.

(ப - ரை.) தம்மைதாங்குஉறு - தம்மைதாங்குதலையுடைய, களைகண் ஆனோர் - ஆதாரமானவர்களது, பழி - பழியை, மறைப்பார்போல - மறைப்பவராகிய பெரியோர்போல, மிளிர்தர - விளங்கும்படி, பூத்த - புஷ்பித்த, நெய்தல் - நெய்தல் மலர்கள், மீனம் முதல் உயிர்மருவலாலே - மீன்முதலிய

வுயிர்கள் பொருந்தியிருக்கையால், வீங்கிய - அதிகரித்த, புலவு-புலால் நாற்றத்தை, வாங்கு - வளைந்த, தெண்கடலின் மாற்றி - தெளிவாகியகடலினின்றும் நீக்கி, தேங்கிய மணம்கான்று - நிறைந்தமணத்தைவீசி, ஆன்றசிறப்பினைசெய்யும் - மிக்கசிறப்பை (அக்கடலுக்கு) உண்டாக்கும். எ - று.

(பொ - ரை.) தம்மைத் தாங்குதலையுடைய ஆதாரமானவர்களது பழியை மறைப்பவராகிய பெரியோர்போல, விளங்கும்படி புஷ்பித்த நெய்தல் மலர்கள் மீன்முதலிய வுயிர்கள் பொருந்தியிருக்கையால் அதிகரித்த புலால் நாற்றத்தைவளைந்த தெளிவாகிய கடலினின்றும் நீக்கி, நிறைந்த மணத்தை வீசி மிக்கசிறப்பை (அக்கடலுக்கு) உண்டாக்கும். எ - று.

(வி - ரை.) வாங்கு என்பதற்குத் தான்வளைந்திருக்கிற என்றும், உலகத்தை வளைந்திருக்கிற என்றும் இருவகையாய்ப் பொருளுரைத்துக்கொள்க. தெண்கடல் - தெளிவாகிய நீரையுடையகடல், இதுபண்புத்தொகை நிலைத்தொடர். மீனமுதலுயிர் என்றதனால் ஆமைமுதலை ஞெண்டு முதலியவுங் கொள்ளப்படும். வீங்குதல் இவ்விடத்து மிகுதிப்பொருளது. மீன்முதலியவற்றின் புலால்நாற்றத்தை நீக்கி நன்மணங்கமழ்விக்கின்ற நெய்தல்மலர்கள், தமக்காதாரமா யிருக்கிறவர்களுடைய பழியைமறைக்கும் பெரியோர்போலிருக்கின்றன வென்பதுகருத்து, கான்று என்னும் இறந்தகாலவினை யெச்சத்திற்குப்பகுதி கால். ஆன்ற - அகன்ற என்பதன்விகாரம். இதுமரூஉ வெனப்படும். இச்செய்யுள் "அற்றமறைக்கும் பெருமை சிறுமைதான் - குற்றமே கூறிவிடும்" என்னுந் திருக்குறளைப் பின்தொடர்ந்தது. (கூ)

அலையெறி மணியு முத்து மலகும்பன் மீனு மற்றுந்
தலைமயக் குற்று முன்றிற் சார்தரு குப்பை யாகக்
குலைமருங் கியற்றும் பெண்ணை மடற்புனை குரம்பை தோறும்
வலைவளத் தொழின்மேற் கொண்டு வாழ்வன பரதச் சாதி.

(ப - ரை.) அலை எறிமணியும் முத்தும் அலகும் பல்மீனும் மற்றும் - அலையெடுத்து வீசுகிற ரத்நமும் முத்தும் பலகறையும் பலவகை மீனும் மற்றுமுள்ள பொருள்களும், தலைமயக்குற்று - (ஒன்றோடொன்று) கலந்து, முன்றில் - தமது முற்றத்தில், சார்தருகுப்பையாக - பொருந்திய குப்பையாகவும், பரதச்சாதி - பரதச்சாதிக் குடிகள், வளம் - வளமாகிய, வலைதொழில் மேற்கொண்டு - வலைவீசுந்தொழிலையே மேற்கொண்டு, மருங்குகுலை இயற்றும் - பக்கங்களில் குலைதள்ளுகிற, பெண்ணை மடல்புனை - பனைமடலால் வேய்ந்த,குரம்பைதோறும்-குடில்கள்தோறும், வாழ்வன-வாழ்வனவாம். எ-று.

(பொ - ரை.) அலையெடுத்து வீசுகிற ரத்நமும் முத்தும் பலகறையும் பலவகைமீனும் மற்றுமுள்ள பொருள்களும் ஒன்றோடொன்று கலந்துதமது முற்றத்தில் பொருந்திய குப்பையாகவும் பரதச்சாதிக்குடிகள் வளமாகிய வலைவீசுந்தொழிலையே மேற்கொண்டு பக்கங்களில் குலைதள்ளுகிற பனைமடலால்வேய்ந்த குடில்கள்தோறும் வாழ்வனவாம். எ - று.

(வி - ரை.) முத்தும் எனமேல்வருதலால் மணியென்றது அஃதொழிந்த எண்வகைமணிகளை, அவை - கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், வைடூரியம், வைரம், என்பன, அலகு - எண், எண்ணுதற்குக் கருவியாயிருத்தலால் பலகறை அலகு எனப்பெயர் பெற்றது, தலைமயக்குறல் - ஒருசொன்னீர்த்தாய்க்கலத்தல் என்னும் பொருளில் வந்தது. குரம்பை - சிறுகுடில். பரதச்சாதி-பரதச்சாதியார். (கo)

அயில்விழிப் பகையா மென்ப தறிந்துயிர் செகுப்பார் போலக்
குயின்மொழிப் பரவ மாதர் குரைகடன் மீன்கள் போழ்ந்து
வெயிலிடை யுணக்கிப் பின்னும் விற்றுள மகிழ்வார் யாரே
செயிருறு சீற்றத் தெவ்வைச் சிதைத்துளத் துவகை செய்யார்.

(ப - ரை.) செயிர்உறு சீற்றம்தெவ்வை - வயிரம்பொருந்திய கோவத்தையுடைய பகைவரை, சிதைத்து - அழித்து, உள்ளத்து - தமது மனத்தில், உவகைசெய்யார்-மகிழாதவர், யார்-யாவர், (ஒருவருமில்லை ஆதலால்) குயில்மொழி-குயில்மொழிபோலும் மொழியினையுடைய, பரவமாதர்-வலைப்பெண்கள், அயில்விழி பகைஆம் என்பது அறிந்து-வேல்போலும் தம்கண்களுக்குப் பகையாகுமென்பதையறிந்து, உயிர் செகுப்பார்போல-உயிர்கவர்வார்போல, குரைகடல் மீன்கள் போழ்ந்து-ஒலிக்கின்ற கடலிலுள்ள மீன்களைவகிர்ந்து, வெயிலிடை உணக்கி - வெயிலில் உலர்த்தி, பின்னும்விற்று - அதன்மேலும் விற்பனைசெய்து, உள்ளம் மகிழ்வார் - மனமகிழ்வார்கள். எ - று.

(பொ - ரை.) வயிரம் பொருந்திய கோவத்தையுடைய பகைவரை அழித்து, தமது மனத்தில் மகிழாதவர்யாவர்? (ஒருவருமில்லை ஆதலால்) குயில்மொழிபோலும் மொழியினையுடையவலைப் பெண்கள் வேல்போலும் தம்கண்களுக்குப் பகையாகுமென்பதையறிந்து உயிர்கவர்வார்போல ஒலிக்கின்ற கடலிலுள்ள மீன்களை வகிர்ந்து வெயிலில் உலர்த்தி, அதன் மேலும் விற்பனைசெய்து மனமகிழ்வார்கள். எ - று.

(வி - ரை.) அயில்விழி என்பதற்கு அழகினையுடையகண் என்றும்கூரியகண் என்றும், பொருள்கூறலுமாம். அன்றியும், அயில்விழி - ஆடவருயிரையுண்ணும் விழியென்றலுமொன்று. "கிளைத்துப்புறப்பட்ட சூர்மார்பொடு கிரவுஞ்சவெற்பைத் - தொளைத்துப்புறப்பட்ட வேன்முருகாதுறவோருளத்தை - வளைத்துப்பிடித்துப் பதைக்கப்பதைக்க வதைக்குங்கண்ணார்க் - கிளைத்துத் தவிக்கின்றவென்னை யென்நாள் வந்திரக்ஷிப்பையே" என்றார்பிறரும். செகுத்தல் - கொல்லுதல். குரைத்தல் - ஒலித்தல். போழ்தல் - வகிர்தல். உணக்கியென்னும் இறந்தகாலவினை யெச்சத்திற்குப்பகுதி உணங்கு. உலகத்தில் பகைவரைவென்று மனமகிழாதவர் ஒருவருமில்லை யென்பதிச்செய்யுளாற் போந்தபொருள். (கக)

இணங்குகைத் தோணி யேறி யெறிவலை வீசு மார்ப்பு
மணங்குறப் பட்ட பன்மீ னருங்கரை யுய்க்கு மார்ப்பு

முணங்கன்மீன் கவர்புள் ளோப்பு மார்ப்புமிக் கோசை போக்கி
வணங்குநுண் ணிடையா ரம்மீன் மாறிடு மார்ப்பு மல்கும்.

(ப - ரை.) இணங்கு (பலமரங்கள் ஒன்றோடொன்று) இணையப்பெற்ற, கைதோணி - சிறியபடகுகளில், ஏறி - ஏறிக்கொண்டு, (அந்நிலத்து மனிதர்) எறிவலைவீசும் - (மீன்களைப்) பிடிப்பதற்குரிய வலைகளைக் (கடலில்) விசையோடெறிவதனாலாகிற, ஆர்ப்பும் - ஆரவாரமும், அணங்கு உறப்பட்ட - (அவ்வலைகளிலகப்பட்டு) வருத்தமடையப்பெற்ற, பல்மீன் - பலமீன்களை, அருகரை உய்க்கும் - அருமையான கடற்கரையிலே கொண்டுசேர்த்தலாலாகிற, ஆர்ப்பும் - ஆரவாரமும், உணங்கல் - (கரைகளிலே) உலர்தலையுடைய, மீன் - மீன்களை, கவர் - எடுத்துக்கொண்டு போகவருகிற, புள்-பறவைகளை, ஓப்பும் - அதட்டி யோட்டுதலாலாகிற, ஆர்ப்பும்-ஆரவாரமும்,மிக்க-மிகுந்த, ஓசை - குரலோசையை, போக்கி - வெளிவிட்டு, வணங்கும்நுண்இடையார் அ மீன்மாறிடும்-(கூந்தல் முதலிய பாரத்தால்) வளைகிற நுட்பமான இடையையுடைய (நெய்தல் நிலத்து) மகளிர் அந்தமீன்களை விலைகூறிவிற்றலாலாகிற, ஆர்ப்பும் - ஆரவாரமும், மல்கும் - நிறையும். எ - று.

(பொ - ரை.) (பலமரங்கள் ஒன்றோடொன்று) இணையப்பெற்றசிறிய படகுகளில் ஏறிக்கொண்டு (அந்நிலத்து மனிதர்) (மீன்களைப்) பிடிப்பதற்குரியவலைகளைக் (கடலில்) விசையோடெறிவதனாலாகிற ஆரவாரமும் (அவ்வலைகளிலகப்பட்டு) வருத்தமடையப்பெற்றபலமீன்களை அருமையானகடற்கரையிலேகொண்டு சேர்த்தலாலாகிற ஆரவாரமும் (கரைகளிலே) உலர்தலையுடைய மீன்களை எடுத்துக்கொண்டுபோக வருகிறபறவைகளை அதட்டியோட்டுதலாலாகிற ஆரவாரமும், மிகுந்தகுரலோசையை வெளியிட்டுக் (கூந்தல் முதலியபாரத்தால்) வளைகிற நுட்பமான இடையையுடைய (நெய்தல் நிலத்து) மகளிர் அந்தமீன்களை விலைகூறி விற்றலாலாகிற ஆரவாரமும் நிறையும். எ - று.

(வி - ரை.) இச்செய்யுளில் ஆர்ப்பு, எனவந்தசொல்லும் பொருளுமே மீண்டும் வந்ததனால் இதுசொற்பொருட் பின்வருநிலையணி. ஒவ்வோரிடத்தையும் வருணிக்கும்போது அவ்வவ்விடங்களிற் பலவகையோசைகள் பொருந்தி யிருக்குமென்று கூறுவது புலவரியல்பு. "ஆறுபாயரவ மள்ளராலைபாயமலையாலைச் - சாறுபாயோசை வேலைச்சங்குவாய் பொங்குமோதை - ஏறுபாய்தமர நீரிலெருமைபாய் துழனியின்ன, மாறுமாறுகித்தம் மின்மயங்குமா மருதவேலி" என்றார் மஹாகவியும். எல்லாவோசைகளினும் மகளிர் மீன் விற்கும் ஓசைமிக்குளதென்பது கருத்து. தோணி - த்ரோணி என்னும் வடசொற்றிரிபு. வீசும் ஆர்ப்பு முதலியவற்றில் பெயரெச்சம் காரணப்பொருளது. மீநம் என்னும்வடமொழி மீன்எனவிகாரப்பட்டது. மிக்கோசையென்பதில்நிலைமொழி யீற்றகரந்தொகுத்தலாயிற்று,புக்ககம், வேட்டகம், வந்துழி, புரிந்தில் என்பவற்றிற்போல. நெய்தனிலத் தாடவர்க்கு நுளையர், பரதர்,

வலையர் என்றும், மகளிர்க்கு நுளைச்சியர், பாத்தியர், வலைச்சியர் என்றும்பெயர்கள் வழங்கும். வணங்குநுண்ணிடையார் என்றதனால் அந்நெய்தனிலமகளிரின் இடைச்சிறுமைகூறி, அதனால் அவரது உத்தமலக்ஷணம் விளக்கினாராயிற்று, மாறிடுதல் - பண்டமாற்று, அதாவது ஒருபொருள்கொடுத்து அதற்கீடாகவே மற்றொருபொருள் வாங்குதல், அது முத்துக்கொடுத்துக்கள் வாங்குவதும், அரிசி கொடுத்துக் கீரைவாங்குவதும் முதலியவைபோல்வது. (கஉ)

மீன்விலைக் கொளவச் சேரி விருப்பொடு புகுந்த மைந்தர்
வானவிற் போலு நெற்றி வலைச்சியர் கண்மீன் பாய
மானமால் கொண்டன் னார்சொல் வரம்பினைக் கடவா ராகி
யீனமிக் குறப்பொன் னெல்லா மீந்தளித் தவையே கொள்வார்.

(ப - ரை.) மீன் - மீனை, விலைக்கொள - விலைக்குவாங்கும் பொருட்டு, அசேரி - அந்தவலைச்சேரியில், விருப்பொடுபுகுந் தமைந்தர் - ஆசையோடு பிரவேசித்த ஆடவர்கள், வானவில்போலும் நெற்றி - வானவில்லை நிகர்த்த நெற்றியையுடைய, வலைச்சியர்கண் மீன்பாய - வலைப்பெண்களுடைய கண்களாகிய மீன்கள் பாய்தலால், மானம்மால்கொண்டு - பெரிதாகிய ஆசைகொண்டு, அன்னார் - அந்தவலைப்பெண்கள், சொல்வரம் பினை கடவார் ஆகி - சொல்லுகின்ற எல்லையைக் கடவாதவராகி, ஈனம் மிக்குஉற - தம்மிடத்து இழிவுமிகவு முண்டாம்படி, பொன் எல்லாம் ஈந்து - பொன்முழுதுங் கொடுத்து, அளித்தவையே கொள்வார் - அவர்தந்தவற்றையே வாங்குவார்கள். எ-று.

(பொ - ரை.) மீனை விலைக்குவாங்கும் பொருட்டு அந்தவலைச்சேரியில் ஆசையோடு பிரவேசித்த ஆடவர்கள் வானவில்லைநிகர்த்த நெற்றியையுடைய வலைப்பெண்களுடைய கண்களாகிய மீன்கள் பாய்தலால் பெரிதாகிய ஆசைகொண்டு, அந்தவலைப்பெண்கள் சொல்லுகின்ற எல்லையைக் கடவாதவராகித் தம்மிடத்து இழிவு மிகவு முண்டாம்படி பொன்முழுதுங் கொடுத்து. அவர் தந்தவற்றையே வாங்குவார்கள். எ - று.

(வி - ரை.) மீன்விலைக்கொள - இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர், விரிந்தால் மீனைவிலைக்கொள என விரியும். அச்சேரி யெனச்சுட்டி யொழிந்தார் மேற்கூறிப் போந்தமையான். மைந்தர் என்றதுயவ்வநபுருடரை, அது 'வானவிற்போலு நெற்றிவலைச்சியர் கண்மீன்பாய, மானமால் கொண்டன்னார் சொல்வரம்பினைக் கடவாராகி, ஈனமிக்குறப்பொன்னெல்லா மீந்தளித்தவையே கொள்வார், என்றதனாற் பெறப்பட்டது. ஈனம்-கண்டோர்யாவரும் இவர் என்ன விவேகரூங்யர், மீனின்பொருட்டுப் பொன்னெல்லாங்கொடுத்து அவ்வலைமாதர் கொடுத்தவற்றையே வாங்குகின்றனர் என்று இகழ்ந்துரைத்தலா லுண்டாகுந்தாழ்வு. ஈனம் ஹீநம் என்னும் வடமொழித்திரிபு. வானவில் நெற்றிக்குவளைவினனுவமையாயிற்று, பாய்தல் இவ்விடத்து பட்டுருவ என்னும் பொருளது. (கங)

கொழுஞ்சுறுக் கொழுமீ னோடு கூட்டிநன் கருந்த வாங்காங்
கெழுங்கரும் பெண்ணை தோறு மிறக்குகள் மாறப் புக்கார்
செழுங்கதிர்த் தரளக் குப்பை செவ்வொளிப் பவளஞ் சால
வழுங்கலில் பரத மாக்க ளிடைக்கிடை யளிப்பக் கொள்வார்.

(ப - ரை.) கொழுசுறு - கொழுமையாகியசுறுமீனை, கொழுமீனோடு கூட்டி - கொழுமீன்களோடு சேர்த்து, நன்குஉண்ண - நன்றாயுண்ணும்படி, ஆங்கு ஆங்கு - அவ்வவ்விடங்களில், எழும் - உண்டாகிய, கருபெண்ணைதோறும் - கரியபனைமரங்கள் தோறும், இறக்கு - இறக்குகின்ற, கள்-கள்ளினை, மாறப்புக்கார் - மாறப்போனவர்கள், செழுகதிர் - செழுமையாகிய ஒளியை யுடைய, தரளக்குப்பை - முத்துக்குவியல்களும், செம்மை ஒளிபவளம்-செவ்வொளியையுடைய பவளமும், அழுங்கல் இல் - துன்பமில்லாத, பரதமாக்கள் - பரதச்சாதியார், சால - மிகுதியாக, இடைக்கிடை அளிப்ப - எடைக்கெடைகொடுக்க, கொள்வார் - பெற்றுக்கொள்வார்கள். எ - று.

(பொ - ரை.) கொழுமையாகிய சுறுமீனைக் கொழுமீன்களோடு சேர்த்து, நன்றாயுண்ணும்படி அவ்வவ்விடங்களில் உண்டாகியகரியபனை மரங்கள் தோறும் இறக்குகின்ற கள்ளினை மாறப்போனவர்கள், செழுமையாகிய ஒளியையுடைய முத்துக்குவியல்களும் செவ்வொளியை யுடையபவளமும் துன்பமில்லாத பரதச்சாதியார் மிகுதியாக எடைக்கெடை கொடுக்கப் பெற்றுக் கொள்வார்கள். எ - று.

(வி - ரை.) கொழுமீன் - ஓர்சாதிமீன், இதனை, திருக்கோவையார், 188-வது செய்யுளாகிய, "பகலோன் கரந்தனன் காப்பவர் சேயர்பற்றற்றவர்க்குப் - புகலோன் புகுநர்க்குப்போக்கரியோ னெவரும்புகலத், தகலோன் பயிற்லைப் பைம்பொழிற்சேக்கைகளேக்கினவா - லகலோங்கிருங்கழி வாய்க் கொழுமீனுண்டவன்னங்களே" என்பதனுரையானுமுணர்க. பெண்ணை-பனைமரம், இதுநெய்தனிலத்துப் பொருள்களிலொன்று,இது "வல்லைத் தரந்த முலைநுனைமாதர் வளையெறியப் - பல்லைத்திறந்துறுமிக்க விதாலப்பழமுகுக்கும் - தொல்லைத்திருத்திகழ்போரூர்க்குகன்பதஞ்சூடுஞ் சென்னிக் - கில்லைப்பிரமன்றுயருறக் கீறெழுத்துக்களே" என்பதனுலினிது விளங்கும். எடை - எடுத்தலளவைப்பொருள், எடு - பகுதி. எடைக்கெடை யளிப்பக் கொள்வார், என்றது முத்தினெடையுள்ள கள்வாங்கிக் கொள்வார் என்றபடி.

பெருகிய செல்வ ருள்ளும் பயனிலா ருளராற் பேணி
யருகிய செல்வ ருள்ளும் பயனுளா ருளரென் றுய்ந்து
பெரியவர் சொலுஞ்சொற் றேற்றும் பெரியநீர்க் கடலு மாங்காங்
குரியவெண் மணற்சிற் றாறற் கேணியு முரிய நீரால்.

(ப - ரை.) பெரிய நீர் கடலும் - பெரிய நீர்நிறைந்த சமுத்திரமும், ஆங்கு ஆங்கு - (கரையில்) அவ்வவ்விடங்களில், உரிய-(அந்நிலத்துக்கு) உரி

யனவாயுள்ள, வெள் மணல் - வெண்மையான மணல்களையுடைய, சிறு ஊறல்கேணியும்-சிறிய நீர்ச்சுரப்பையுடையநீர்நிலைகளும்,உரியநீரால்-(தத்தமக்கு) உரியதன்மைகளால், பெருகிய செல்வர் உள்ளும் - மிகுந்த செல்வத்தையுடையவர்களுள்ளும், பயன் இலார் உளர்-(பிறர்க்குப்) பயன்படாதவர்கள் இருக்கின்றார்கள், அருகியசெல்வர் உள்ளும் - குறைந்தசெல்வமுடையவர்களுள்ளும், பேணிபயன் உளார் உளர் - மிகுவிருப்பங்கொண்டு (பிறர்க்குப்) பயன்படுவோர்கள் இருக்கின்றார்கள், என்று ஆய்ந்துபெரியவர் சொல்லும் - என்று ஆராய்ந்து பெரியோர்கள் சொல்லுகிற, சொல் - சொல்லை, தேற்றும் - மெய்யென்று தெளிவிக்கும். எ - று.

(பொ - ரை.) பெரிய நீர் நிறைந்த சமுத்திரமும் (கரையில்) அவ்வவ்விடங்களில் (அந்நிலத்துக்கு) உரியனவாயுள்ள வெண்மையான மணல்களையுடைய சிறிய நீர்ச்சுரப்பையுடைய நீர் நிலைகளும் (தத்தமக்கு) உரியதன்மைகளால் மிகுந்த செல்வத்தையுடையவர்களுள்ளும் (பிறர்க்குப்) பயன்படாதவர்கள் இருக்கின்றார்கள்; குறைந்த செல்வமுடையவர்களுள்ளும், மிகுவிருப்பங்கொண்டு (பிறர்க்குப்) பயன்படுவோர்கள் இருக்கின்றார்கள் என்று ஆராய்ந்து பெரியோர்கள் சொல்லுகிற சொல்லைமெய்யென்று தெளிவிக்கும்.எ-று.

(வி - ரை.) கடல், மிக்கநீருடைத்தாயிருந்தும் உப்புச்சுவையுடைமையால் பிறர்க்குத்தாக சாந்திக்குச்சிறிதும் பயன்படுவதில்லை, அதன்கரையிலுள்ள சிறுமணலூற்று, குறைந்த நீருடைத்தாயிருந்தும் எல்லார்க்கும்பயன்படுகின்றது, இவ்விரண்டும் முறைமே உலோபகுணத்தால் பிறர்க்குச் சிறிதும் பயன்படாத பெருஞ்செல்வரையும், உதாரகுணத்தால் பலர்க்கும் பயன்படுகிற சிறுசெல்வரையும் நிகர்க்கும் என்பது கருத்து, "மல்குதிரையகடற் கோட்டிருப்பினும், வல்லூற்றுவரில் கிணற்றின்கண் சென்றுண்பர், செல்வம் பெரிதுடையராயினுஞ் சேண்சென்று, நல்குவார் கட்டேநசை" "எறி நீர்ப் பெருங்கடலெய்தியிருந்தும், அறுநீர்ச்சிறுகிணற்றூறல் பார்த்துண்பர், மறுமையறியாதாராக்கத்திற் சான்றோர், கழிநல் குரவேதலை" என்ற நாலடியார் பாடல்களினும் பெருங்கடலோடு உலோபருக்கும் சிற்றூறலோடு உதாரருக்கும் ஒப்புமை கூறியிருத்தல் காண்க. மூதறிவாட்டியாகிய ஔவையாரும், "கடல்பெரிது, மண்ணீருமாகாத தனருகேசிற்றூற, லுண்ணீருமாகி விடும்" என்றுரைத்தருளினர். முதலடியிலும் இரண்டாமடியிலு முள்ளவும்மைகள் இரண்டும் முறையே உயர்வு சிறப்பும் இழிவு சிறப்புமாம். மற்றையடிகளிலுள்ளவும்மைகள் எண்ணும்மைகள். தேற்றும் பிறவினைப்பொருளது, தேற்றுவொழுக்கம்" "தேற்றகிலேம்" தேற்றுப்புன் சொனேற்றிசின்" என்பவற்றிற்போல. ஊறல் - தொழிற்பெயர், சிறுநீர் நிலையைக்கேணியென்பது அருவாநாட்டு வழக்கு, இது திசைச்சொல், 'உரிய நீரால்' என்பதற்குத்தம்மிடத்துள்ள நீரினால் என்றுரைப்பினுமிழுக்காது, அருகல் - சுருங்கல், (குறைதல்)

சிற்றிடை வலைச்சி மார்க டெருத்தொறுங் கூறி விற்கும்
வற்றன்மீ னாற்றம் போக்கு மவர்மணிக் குழற்று ழம்பூ

பற்றுபு பரதர் கோட்டிற் பரப்புமீ னாற்றம் போக்கு
மற்றவர் திணிதோள் வேய்ந்த நெய்தலங் கண்ணி மாதோ.

(ப - ரை.) சிறு இடை - நுண்ணிய இடையையுடைய, வலைச்சிமார்கள் - வலைச்சிப்பெண்கள், தெருதொறும் கூறிவிற்கும் - தெருக்கடோறுங் கூறிவிற்கிற, வற்றல் மீன்நாற்றம் - வற்றல் மீனினது நாற்றத்தை, அவர் - அவரது, மணி - அழகாகிய, குழல் - கூந்தலிலணிந்த, தாழம்பூ - தாழம்பூவின்மணம், போக்கும் - ஒழித்துவிடும், பரதர் - அந்த நுளையர், பற்றுபு - பிடித்து, கோட்டில் பரப்பும் - கடற்கரையிற் பரப்புகிற, மீன் நாற்றம் - மீனினது நாற்றத்தை, அவர் - அம்மாதரது, திணிதோள் வேய்ந்த - திண்ணியதோளிலணிந்த, நெய்தல் கண்ணி - நெய்தற்பூமாலையின் மணம், போக்கும் - ஒழித்துவிடும். எ - று.

(பொ - ரை.) நுண்ணிய இடையையுடைய வலைச்சிப்பெண்கள் தெருக்கடோறுங் கூறிவிற்கிற வற்றல் மீனினது நாற்றத்தை அவரது அழகாகிய கூந்தலிலணிந்த தாழம்பூவின் மணம் ஒழித்துவிடும். அந்தநுளையர் பிடித்து கடற்கரையிற்பரப்புகிற மீனினது நாற்றத்தை அம்மாதரது திண்ணியதோளிலணிந்த நெய்தற்பூமாலையின் மணம் ஒழித்துவிடும். எ - று.

(வி - ரை.) சிற்றிடையென்றது மிகநுண்ணிதாய்க் கண்ணுக்குப்புலப்படாத இடையென்றபடி. "அறந்திகழ்தவமுமகில முமிதனாலழியுமென்றயன் படைத்திலனோ, சிறந்த வேல்விழியை முன்படைத்தயர்ந்துசெங்கரஞ்சோர்ந்ததோதிகைத்து, மறந்ததோகரந்து வைத்ததோகளபவன முலைப்பொறை சுமந்துருகி, இறந்ததோவுள தோவில்லையோவினிமேலெய்து மோவறியொணாதிடையே" என்று இடைச்சிறுமையைப்பிறர் வருணித்தலுங்காண்க. உடம்பிற்கிடையே யிருத்தலால் இடையெனப்பட்டது, இதுபற்றியேயிதனை நடுவென்றுங்கூறுவர், வற்றல்மீன் - உலர்ந்தமீன், பற்றுபு - இறந்தகாலச் செய்பு என்னும்வாய் பாட்டுவினையெச்சம், இது பரப்பும் என்னும் வினைகொண்டது, கோடு - கரை, நெய்தனில மாதலால் கடற்கரையென்றுரைக்கலாயிற்று, மணிக்குழல் என்பதற்கு நீலமணிபோலக்கறுத்த கூந்தல் என்றுரைப்பினுமாம், மணி நீலமணிக்காதலை, "பைந்நாண ரவன்படுகடல் வாய்ப்படு நஞ்சமுதா, மைந்நாண் மணிகண்டன் மன்னும் புலியூர் மணந்தபொன்னிம், மொய்ந்நாண் முதுதிரைவாயானழுந்தினு மென்னின் முன்னு, மிந்நாளிது மதுவார் குழலாட்கென் கணின்னருளே" என்னுந்திருக்கோவையார், அகவது செய்யுளுரையிற்காண்க. நெய்தலங்கண்ணி என்பதில் அம்சாரியை, அழகெனினுமாம், மாதர்தோளைமென்றோளென்றல் பெருவழக்காயிருக்க, இவர் திணிதோள் என்றது வற்றன் மீன்கூடையை யெடுத்தலிறக்கல் முதலியதொழில்கள் நிகழ்தற்குத்திணிமைவேண்டப்படுதலானென்க. (௧௧)

மருங்கிலாப் பரத்தி மார்கண் மடநடை கற்பான் வேண்டி
யொருங்குவங் தடைந்தாற் போல வுயர்கரும் புன்னைச் சேக்கை

யருங்குலப் பார்ப்பி னோடும் பெடையொடு மன்னந் துஞ்சும்
கருங்கொடி யடம்பு சூழ்ந்த கைதையங் கானல் வேலி.

(ப - ரை.) மருங்குஇலா - இடையில்லாத, (இடைமிகவும் நுண்ணிதான) பரத்திமார்கள் - நெய்தல் நிலத்து மகளிரது, மடநடை - இளமையான (மென்மையாகிய) நடையை, கற்பான் - (தாம்) கற்றுக்கொள்ள, வேண்டி - விரும்பி, ஒருங்குவந்து அடைந்தால்போல - ஒருசேர (கும்பத்தோடு) வந்துசேர்ந்தாற்போல, கருகொடி அடம்பு சூழ்ந்த - பெரிய அடப்பங்கொடிகள் சூழ்ந்துள்ள, கைதை - தாழைகளையுடைய, அம் - அழகிய, கானல்வேலி - கடற்கரைச்சோலைகளிலே, உயர்கருபுன்னை சேக்கை - உயர்ந்து வளர்ந்த பெரியபுன்னைமரத்தின் மலர்களாகிய படுக்கையிலே, அன்னம் - அன்னப்பறவைகள், அரு குலம்பார்ப்பினோடும் - பெறுதற்கரிய சிறந்த தம்குஞ்சுகளுடனும், பெடையொடும் - தம்பேடைகளோடும், துஞ்சும் - வந்து தங்கும், (வந்துபடுத்திருக்கும்.) எ - று.

(பொ - ரை.) இடையில்லாத (இடைமிகவும் நுண்ணிதான) நெய்தல் நிலத்து மகளிரது இளமையான (மென்மையாகிய) நடையைத் (தாம்) கற்றுக் கொள்ள விரும்பி ஒருசேர (கும்பத்தோடு) வந்து சேர்ந்தாற்போல, பெரிய அடப்பங்கொடிகள் சூழ்ந்துள்ள தாழைகளையுடைய அழகிய கடற்கரைச் சோலைகளிலே உயர்ந்துவளர்ந்த பெரிய புன்னைமரத்தின் மலர்களாகிய படுக்கையிலே அன்னப்பறவைகள் பெறுதற்கரிய சிறந்ததம் குஞ்சுகளுடனும் தம் பேடைகளோடும் வந்துதங்கும் (வந்து படுத்திருக்கும்.) எ - று.

(வி - ரை.) அன்ன நடைபோலுள்ளது மகளிர்நடை எனவழக்கமாகக் கூறும் உபமாநஉபமேயங்களுக்குமாறாக, மகளிரது நடையைக்கற்கும் பொருட்டு அன்னங்கள் வந்தனபோலும் எனக்கற்பித்துக்கூறி, அந்நிலத்துப் பெண்களின் நடையழகைச்சிறப்பித்தார். நெய்தனிலத்துக்குரிய அன்னப் பறவைகள் அந்நிலத்தில் இயல்பாகத்தங்குதற்கு மகளிர் நடைகற்க விரும்பி வந்ததாகிய காரணத்தைக்கவி கற்பித்துக்கூறினமையால் இது தற்குறிப் பேற்றவணியெனப்படும், இதனை, உத்ப்ரேக்ஷாலங்காரம்என்பர் வடநூலார். "கற்றில கண்டன்ன மென்னடைகண் மலர்நோக்கருளப் - பெற்றிலமென் பிணைபேச்சுப் பெருகிள்ளை பிள்ளையின்றேன்-றுற்றிலனுற்றதறிந்திலளாகத் தொளிமிளிரும் - புற்றிலவாளரவன் புலியூரன்ன பூங்கொடியே" என்னுந் திருக்கோவையார். கஎ-வது செய்யுளில், "கற்றிலகண்டன்ன மென்னடை" என்பதும், "பைந்தொடியாள்பாத - நடைகற்பான்வந்தடைந்தேம்நாம்" கொடியன்னவர்பால் நடக்கக் - கற்றுடரம்பைபயில்வானடை காட்டுகிற்பேன்" என்பதும் இக்கருத்தினவாதல்காண்க. 'புன்னைச்சேக்கை, என்ற சொற் போக்கால், ஒன்றை வரமாகப்பெற விரும்புவோர் ப்ராயோபவேசமாகத் தர்ப்பசயநத்தில் படுகொடுகிடக்குந் தன்மை மகளிர்நடை கற்கவிரும்பின் அன்னங்களினிடத்து ஏற்றிச்சொல்லப்பட்டது என்னலுமாம். புன்னை தாழை மரங்களும், அடப்பங்கொடியும் அன்னப்பறவையும் நெய்தனிலத்துக்கருப்

பொருள்களாம், பார்ப்பு - பறவையினிளமைப்பெயர், பெடை பறவையின் பெண்மைப்பெயர், அடம்பங்கொடியும் அன்னமும்நெய்தனிலத்தவென்பது, "அடம்பம்பூ - அன்னங்கிழிக்கு மலைகடற்றண்சேர்ப்ப" என்னும் நாலடியார் செய்யுளானும் விசதம். இலாஎன்பதில் ஆசாரியை, பரத்தி - பரதன் என்பதன் பெண்பால்; அதன்மேல் மார்பலர்பாற்பெயர் விகுதி, கற்பான் என்பதில் பான்விகுதி காலங்காட்டும் எதிர்காலவினையெச்சம், ஒருங்கு - முற்றுப்பொருள தோரிடைச்சொல், புன்னை என்பது அதன் மலருக்காயினமையால் முதலாகுபெயர். கருமை - பெருமை, திறம் எனினுமாம், அன்னம் ஹம்ஸம் என்னும் வடசொற்சிதைவு, கைதையங்கானல் என்பதில் அம் சாரியையுமாம். (கஎ)

தினைமுதல் வரகு முன்செஞ் சாலிமுன் விளைக்கு மூன்று
வனைபுகழ் நிலத்தார் நன்கு மழைவளம் வேண்டி நிற்பார்
பனைசெறி யிந்நி லத்துப் படுமுப்பு விளைப்போ ரென்றும்
வினைதவா துஞற்ற மிக்க வெயில்வளம் வேண்டி நிற்பார்.

(ப - ரை.) தினைமுதல் - தினைமுதலியவற்றையும், வரகுமுன் - வரகுமுதலியவற்றையும், செஞ்சாலி முன் - செந்நெல் முதலியவற்றையும், விளைக்கும் - விளைவிக்கிற, வனைபுகழ் - அலங்கரிக்கப்பட்ட புகழையுடைய, மூன்று நிலத்தார் - மூன்று நிலத்தாரும், நன்கு - மிகுதியாக, மழைவளம் வேண்டி நிற்பார் - மழைவளத்தை விரும்பி நிற்பார், பனைசெறி இ நிலத்து படும் - பனைமரங்கள் நெருங்கிய இந்த நெய்தனிலத்துண்டாகிற, உப்பு விளைப்போர் - உப்பை விளைவிப்பவர், என்றும் - எப்பொழுதும், தவாது - நீங்காமல், வினைஉஞற்ற - தமது தொழில் செய்யும் பொருட்டு, வெயில் வளம் வேண்டி நிற்பார் - வெயில்வளத்தை விரும்பி நிற்பார் எ - று.

(பொ - ரை.) தினைமுதலியவற்றையும், வரகுமுதலியவற்றையும், செந்நெல்முதலியவற்றையும் விளைவிக்கிற, அலங்கரிக்கப்பட்ட புகழையுடைய மூன்று நிலத்தாரும், மிகுதியாக மழைவளத்தை விரும்பி நிற்பார், பனைமரங்கள் நெருங்கின இந்தநெய்தனிலத்துண்டாகிற உப்பை விளைவிப்பவர் எப்பொழுதும் நீங்காமல் தமது தொழில் செய்யும்பொருட்டு வெயில்வளத்தை விரும்பி நிற்பார். எ - று.

(வி - ரை.) தினைமுதல் விளைக்கும் நிலத்தார் குறிஞ்சி நிலத்தார், வரகு முன்விளைக்கு நிலத்தார் முல்லைநிலத்தார், செஞ்சாலி முன்விளைக்கு நிலத்தார் - மருதநிலத்தார், நன்கு இவ்விடத்து மிகுதிப்பொருளது. வளம் - பெருக்கம், மழைவளம் - மழையாகிய செல்வம் எனினுமாம், உப்புவிளைப்போர் - அளவர். தவாது - இடையறாமல் எனினுமமையும், உஞற்றல் - செய்தல். வேண்டல் - விரும்பல், தினைமுதலிய பயிர்களுக்கு மழையினால் விருத்தியும் வெயிலினால் அழிவும், உப்புவிளைவுக்கு மழையினால் அழிவும் வெயிலினால் விருத்தியும் உண்டாமாதலால் மூன்று நிலத்தார் மழை

வளம் வேண்டி நிற்பார் என்றும், உப்புவிளைப்போர் வெயில்வளம் வேண்டி நிற்பார், என்றும் கூறினர். இந்நிலத்துப்படு பொருள்கள் பிறவுளவாயினும் மிகுதிபற்றி இந்நிலத்துப்படுமுப்பு, என்றார், படுதல் - உண்டாதல், தவாது என்னும் வினையெச்சத்திற்குப் பகுதிதவு. (கஅ)

இவ்வகை வளங்க ளெல்லா மினிதுகண் விட்டு நோக்கிச்
செவ்விய விறும்பூ தெய்திச் சீகரந் துளிப்பத் தன்மெய்
யொவ்வமெல் வளிதண் ணென்ன வருடவோர் புன்னை நீழ
லௌவிய மவித்த மேலோன் சற்றிருந் தயர்வு யிர்த்தான்.

(ப - ரை.) இவ்வகை - இவ்வாறாகவுள்ள, வளங்கள்எல்லாம்-அந்நில வளங்களெல்லாவற்றையும், இனிது கண்விட்டுநோக்கி - இனிமையாகக்கண்ணைத்திறந்து செலுத்திப்பார்த்து, செவ்விய இறும்பூது எய்தி - மிக்க ஆச்சரியத்தையடைந்து, ஔவியம் அவித்தமேலோன் - பொறாமையையொழித்த மேன்மைக்குண முடையோனான குசேலன், சீகரம் துளிப்ப - கடல்நீர்ச்சிறு திவலைகள் (தன்உடம்பில்) தெறிக்கவும், தன்மெய் ஒவ்வ - தனது உடம்பின் வலிமையின்மைக்கு ஏற்றபடி, மெல்வளி - மெதுவான இளங்காற்று, தண் என்ன - குளிர்ச்சியாக, வருட - (தன் உடம்பிற்) படவும், ஓர்புன்னை நீழல் - ஒரு புன்னை மரத்தின் நிழலிலே, சற்று இருந்து - சிறிதுபொழுது இருந்து (உட்கார்ந்து), அயர்வுயிர்த்தான் - இளைப்பாறினான். எ - று.

(பொ - ரை.) இவ்வாறாகவுள்ள அந்நிலவளங்க ளெல்லாவற்றையும் இனிமையாகக் கண்ணைத்திறந்து செலுத்திப்பார்த்து மிக்க ஆச்சரியத்தையடைந்து, பொறாமையையொழித்த மேன்மைக்குண முடையோனான குசேலன் கடல்நீர்ச்சிறுதிவலைகள் (தன் உடம்பில்) தெறிக்கவும் தன் உடம்பின் வலிமையின்மைக்கு ஏற்றபடி மெதுவான இளங்காற்று குளிர்ச்சியாக (தன் உடம்பிற்) படவும் ஒருபுன்னை மரத்தின் நிழலிலே சிறிதுபொழுது இருந்து (உட்கார்ந்து) இளைப்பாறினான். எ - று.

(வி - ரை.) இனிது - மகிழ்ச்சியுண்டாக. செவ்விய - குறிப்புப்பெயரெச்சம், செவ்வி - பகுதி இவ்விகுதிபெற்ற பண்புப்பெயர், செம்மைபகுதி நன்மையென்பது பொருள். சீகரம் வடசொல். காற்றுமிக வீசினும் பொறாதபடி குசேலன்மேனி உணவின்சுருக்கத்தால் மெலிந்துளதென்பதுதோன்ற 'தன்மெய் ஒவ்வமெல்வளிதண் ணென்னவருட' என்றார். மெல்வளி - தென்றற்காற்று, இதனை மந்தமாருதம் என்றும் மந்தாநிலம் என்றும் கூறுவர் வடநூலார். வருடல் - தடவல், வருடுபகுதி. நிழல் நீழல்என நீட்டல்பெற்றது. ஔவியம் - பிறர்செல்வங்கண்டு பொறாமை. இக்குணம் தீக்குணங்களெல்லாவற்றுள்ளுங் கொடியதாதலால் இதனையே கூறினார், கூறினாரேனும் உபலக்ஷணத்தால் ஏனையதீக்குணங்களு மில்லாதவர் என்பது இனிதுவிளங்கும். இதுபற்றியே, "அழுக்காறவா வெகுளியின்னாச்சொனான்குமிழுக்காவியன்றதறம்" "அவ்வித்தழுக் காறுடையானைச் செய்யவள் - தவ்வையைக்காட்டி

விடும்'' "அழுக்காறென வொருபாவிதிருச்செற்றுத் - தீயுழியுய்த்துவிடும்' இத்யாதிகளால் இதின் பிரபாவத்தை விளக்கியருளினர் பெருநாவலரும். ஏனைத்தீக்குணங்கள் உடையானையே கெடுக்கும்,இத்தீக்குணம் உடையானை யேயன்றி அவன் சுற்றத்தாரையுங் கெடுக்குமென்பது "கொடுப்பதழுக் கறுப்பான் சுற்றமுடுப்பதூஉம் - உண்பதூஉ மின்றிக்கெடும்'' என்னுங்குற ளாற் பெறப்படுதலாலும்,இதனையவித்தால் ஏனையவற்றையுமவித்ததாகுமாத லாலும், இதனையவித்தான்மேலோ னாதலாலும், ஔவியமவித்தமேலோன்' என்றார். கண்விடல் - கண்திறத்தல். (கக)

இக்கல முகைப்பாற் குப்பொன் னிம்மியு மீதற் கில்லேம்
மிக்கவன் கேளா துய்ப்ப விரும்புறு சிறப்பு மில்லேம்
நக்கசெங் கமலக் கண்ணன் சேவைக்கு நடக்கி றேமென்
றொக்கமெய்யுரைத்திட்டாலுமுண்மையென் றுள்ளங்கொள்ளான்.

(ப - ரை.) இ கலம் உகைப்பாற்கு - இந்தமரக்கலஞ் செலுத்துவோ னுக்கு, ஈதற்கு - கொடுப்பதற்கு, இம்மியும்பொன் இல்லேம் - இம்மியளவா யினும் (மிகச்சிறிதாயினும்) பொருளுடையோமல்லோம், மிக்கவன் - சிறந் தவனான அம்மீகாமன், கேளாது - பொருள் கேளாமலே, உய்ப்ப - கலஞ்செ லுத்தும்படி, விரும்புறு சிறப்பும் இல்லேம் - விரும்பத்தக்க பெருமையொன் றையு முடையோமல்லோம், நக்க - மலர்ந்த, செம்கமலம்-செந்தாமரைமலர் போன்ற, கண்ணன் - திருக்கண்களையுடைய கண்ணபிரானது, சேவைக்கு - தரிசனத்தின் பொருட்டு, நடக்கிறேம் - நாம்செல்லுகிறோம், என்று-என்று, ஒக்க - தகுந்தபடி, மெய் உரைத்திட்டாலும் - உண்மையையே (யாம்) கூறி னாலும், உண்மையென்று உள்ளம்கொள்ளான் - (இவன்) மெய்யென்றுமனத் திற் கொள்ளமாட்டான். எ - று.

(பொ - ரை.) இந்தமரக்கலஞ் செலுத்துவோனுக்குக் கொடுப்பதற்கு இம்மியளவாயினும் (மிகச்சிறிதாயினும்) பொருளுடையோமல்லோம். சிறந் தவனான அம்மீகாமன் பொருள்கேளாமலே கலஞ்செலுத்தும்படி விரும்பத் தக்க பெருமையொன்றையு முடையோமல்லோம்; மலர்ந்த செந்தாமரைமலர் போன்ற திருக்கண்களையுடைய கண்ணபிரானது தரிசனத்தின் பொருட்டு நாம் செல்லுகிறோம் என்று தகுந்தபடி உண்மையையே (யாம்) கூறினாலும் மெய்யென்று மனத்திற் கொள்ளமாட்டான். எ - று.

(வி - ரை.) இம்மி - (தினையென்பதுபோல) ஒருசிறுதானியத்துக்கும், ஒருசிற்றளவுக்கும் பெயர். அவ்வளவு தொள்ளாயிரத்தறுபதில் ஒருபாகம். "இம்மியரிசித் துணையானும் வைகலும் - நும்மிலியைவ கொடுத்துண்மின்'' என்றும், "இம்மியநுண் பொருள்கள்'' என்றும் பிறருமிவ்வாறு ஒருசிற்றள வைக்குறித்துக் கூறுதல்காண்க. இம்மி - மத்தங்காய்ப் புல்லரிசி என்று சிந்தாமணி யுரையில் நச்சினார்க்கினியருங் கூறியிருக்கின்றனர். "தினைத் துணை நன்றிசெயினும்'' என்பதில் தினைபோல, இதுவும் சிறுமைக்கெடுத்துக்



குசேலர் புன்வணநிழலில் இளப்புத்தீர்த்துக்கொண்டு மரக்கலமேறிச்செல்லுதல்.

காட்டுவதோரளவை. உம் - இழிவு சிறப்பு. இழிகுலத்தானாகிய மீகாமனை மிக்கவன் என்றது, தான்குறித்த இடத்துக்குச் செல்லத்தடையாகிற நீரைக் கடத்தற்குதவியா யிருக்கும் உயர்குணத்தாலென்க. "தோணியியக்குவான் றொல்லை வருணத்துக் - காணிற்கடைப்பட்டா னென்றிகழார் - காணாய் - அவன்றுணையாயாறு போயற்றே நூல்கற்ற - மகன்றுணையாநல்லகொளல்" என்பது நாலடியார், மரக்கலத்தின் மேலிடத்துள்ளா னென்பதுபற்றி மிக்க வன் என்றாரெனினுமாம். அதுபற்றியே அவனுக்கு மீயான் என்றொருபெய ரும் வழங்குதலுண்டு. கமலக்கண்ணன்-புண்டரீகாக்ஷன் என்னும் வடசொற் பொருளது, ஸேவா என்னும்வடசொல் சேவையெனத்திரிந்தது. உள்ளங் கொள்ளுதல் - எண்ணுதல். அவன் நமது உரையை யுண்மையென்றுகொண் டால், பொருள்கேளாமற் கலம்செலுத்துவானென்பதுட் கோள். (உ0)

என்செய்வா நன்சொற் கூறி யிரப்பதே துணிவென் றெண்ணிப்
பொன்செய்த மலர்ப்பூம் புன்னை நிழலினின் றெழுந்து போந்து
வன்செயன் மீகாற் சார்ந்து மனமிரங் குரைபல் கூறி
நன்செய லேறி நின்றா னடைக்கல மேறி னானே.

(ப - ரை.) என்செய்வாம் - (இதற்கு) யாது செய்வோம், நன்சொல்கூறி இரப்பதே - இனியசொற்களைச்சொல்லி (மீகாமனை) யாசிப்பதே, துணிவு என்று எண்ணி - (இனி) நிச்சயிக்குஞ் செயலென்று நினைத்து, நன்செயல் ஏறிநின்றான் - நல்லொழுக்கங்களில் மேம்பட்டு நின்றவனான குசேலன், பொன்செய்தமலர் - (தாதுக்களால்) பொன்னைக்கொண்டு செய்தாற்போலத் தோன்றுகிற மலர்களையுடைய, பூபுன்னை நிழலில் நின்று - அழகிய புன்னை மரத்தின் நிழலில் நின்று, எழுந்து போந்து - எழுந்து சென்று, வன்செயல் மீகான்சார்ந்து-வலியதொழிலையுடைய மீகாமனையடுத்து, மனம் இரங்குபல் உரைகூறி - (அவனது) மனமிரங்கும்படியான பலவுபசாரவார்த்தைகளைச் சொல்லி, நடைகலம் ஏறினான் - (விரைந்து) செல்லுந்தன்மையுள்ள மரக்க லத்தின் மேலேறினான். எ - று.

(பொ - ரை.) (இதற்கு) யாதுசெய்வோம்;இனியசொற்களைச்சொல்லி (மீகாமனை) யாசிப்பதே இனி நிச்சயிக்குஞ்செயலென்று நினைத்து, நல்லொ ழுக்கங்களில் மேம்பட்டு நின்றவனான குசேலன் (தாதுக்களால்) பொன்னைக் கொண்டு செய்தாற்போலத் தோன்றுகிற மலர்களையுடைய அழகியபுன்னை மரத்தின் நிழலில் நின்று எழுந்துசென்று வலியதொழிலையுடைய மீகாமனை யடுத்து (அவனது) மனமிரங்கும்படியான பலவுபசாரவார்த்தைகளைச்சொல்லி (விரைந்து) செல்லுந்தன்மையுள்ள மரக்கலத்தின் மேலேறினான். எ - று.

(வி - ரை.) இரப்பது எதிர்காலத்தொழிற்பெயர், ஏ பிரிநிலை. துணிவு - உறுதி, தீர்மானம். செய்த என்பது ஒத்த வினைப்பொருள் பட்டு உவமவுருபு மாம். போந்து புகுந்து என்பதன்மரூஉ. மனவூக்கத்தோடு சிறிதும் தீங்குநே ரிடாதபடி கலஞ்செலுத்துந் தொழிலில்வல்லவன் என்பது தோன்ற, "வன்

செயல் மீகான், என்றார், மீகான்-கப்பலோட்டுகிறவன். இச்சொல், மேலிடத்திலுள்ளானெனப் பொருள்படும்,மீயான் என்பதன்மரூஉ வென்றாயினும், மீகாமன் என்பதன் விகாரமென்றாயினும், மீயான் என்றபெயர் பகுதி விகுதிகளினிடையே குச்சாரியை பெற்றதென்றாயினும் கொள்க. "குணமென்னுங் குன்றேறிநின்றார்" என்றாற்போல, 'நன்செயலேறிநின்றான், என்றார். நல்லொழுக்கத்தின் முடிவெல்லையில் நின்றவனென்பது கருத்து. நடத்தல் போலுதலால் 'நடைக்கலம்' என்றார். "துளிபடத்தூழாவு திண்கோல்துடுப்பிருகாலிற்றேன்ற, நளிர்புனற் கங்கையாற்றி னடங்தெனச் செல்லுநாவாய்" என்றார் மஹாகவியும், செயலேறினன் கலமேறினன் எனமுடித்துக்கொள்க. பல்லுமைகூறி என்றபாலது உமைபல்கூடி யெனச்சொற்கள் முன்பின்னாய் மாறிநின்றன. இரங்குமை - வினைத்தொகை நிலைத்தொடர். (உக)

கூம்புடைக் கலமீ கானாற் குமைகடல் கிழிய வோடித்
தேம்பலி றுவார கைக்குச் செல்றுறை யிறுத்த லோடும்
பாம்பணைக் கடவுள் பாத பங்கயு முள்ளத் துள்வோ
னோம்பலுற் றிறங்கு வாரோ டிறங்கினு னுவகை யெய்தி.

(ப - ரை.) கூம்பு உடைகலம்-பாய்மரத்தையுடைய மரக்கலமானது, மீகானல் - கப்பலோட்டுகிறவனுல், குமைகடல்கிழிய ஓடி - ஒலிக்கின்றகடல் நீர்பிளக்கவோடி, தேம்பல்இல் - துன்பமில்லாத, துவாரகைக்கு - துவாரகா நகரத்துக்கு, செல்துறை - செல்லும் துறையில், இறுத்தலோடும் - தங்குதலோடும், பாம்பு அணை - சர்ப்பசயநத்தையுடைய, கடவுள் - தெய்வமாகிய திருமாலின், பாதபங்கயம் - திருவடித்தாமரைமலரை, உள்ளத்து உள்வோன்-மனத்தில் நினைப்பவனுகிய குசேலன், உவகை எய்தி - மகிழ்ச்சியடைந்து, ஓம்பல்உற்று இறங்குவாரோடு இறங்கினன் - சுகமாயிறங்குவாரோடு கூடித்தானு மிறங்கினன். எ - று.

(பொ - ரை.) பாய்மரத்தையுடைய மரக்கலமானதுகப்பலோட்டுகிறவனுல் ஒலிக்கின்றகடல்நீர் பிளக்கவோடி, துன்பமில்லாத துவாரகாநகரத்துக்குச் செல்லுந்துறையில் தங்குதலோடும், சர்ப்பசயநத்தையுடைய தெய்வமாகிய திருமாலின் திருவடித்தாமரைமலரை மனத்தில் நினைப்பவனுகிய குசேலன், மகிழ்ச்சியடைந்து, சுகமாயிறங்குவாரோடு கூடித்தானு மிறங்கினன்.

(வி - ரை.) கடல் என்றது கடல்நீரை. ஓடுதல்-விரைந்துசெல்லுதல். ஸ்ரீகண்ணபிரான் எழுந்தருளியிருந் தரசுசெய்தலால் ஒருதுன்பமு மில்லையென்பதும் இன்பமேயுள்ள தென்பதும் தோன்ற, 'தேம்பலிறுவாரகை, என்றார். துவாரகா என்னும் வடசொல்லினீற்றாகாரம் ஐயாகித் துவாரகையென்றாயிற்று, இறுத்தல் - தங்குதல், பாம்பு என்றது ஆதிசேடனை. பாம்பணைக் கடவுள் என்றது சேஷசாயி என்றபடி. பாதபங்கயம் வடநூன்முடிபாதலால் இயல்பாய்ப் புணர்ந்தது, இது பண்புத்தொகை நிலைத்தொடர், பாதமாகிய பங்கயம் எனவிரியும். உள்ளல்-நினைத்தல். ஓம்பல்-பாதுகாத்தல்.

ஓம்பலுற்று என்றது மீகாஞற்பாது காக்கப்பட்டு என்றபடி. உவகை - தடை கடந்தேம் இனிக்கண்ணனைக் காணலாம் என்னும் மனக்களிப்பு. (௨௨)

கலிவிருத்தம்.

பானலந் துவரைப் பன்மினார் கண்வா
யானவந் துவரைப் பற்று றாதவன்
வானலந் துவரைப் படுப்போன் பின்வாழ்
கானலந் துவரைப் பதிகண் ணுற்றான்.

(ப - ரை.) பானல் - நீலோற்பலமலரையும், அம் - அழகிய, துவரை - பவழத்தையும், பன்-(முறையே உவமை)சொல்லப்பெற்ற, மினார்கண்வாயான்- மகளிரது கண்ணினாலும் வாயினாலும், அலந்து-(மனது) சபலித்து, உவரை- அவர்களை, பற்றுறாதவன் - விரும்புதல் செய்யாதவனான குசேலன், பின் - பின்பு, வான் நலம் துவரைபடுப்போன் வாழ்-தேவ லோகத்தார்க்கு (ஆகவேண்டிய) நன்மைகளை விரையச்செய்பவனான கண்ணபிரான் வாழ்ந்தருளுகிற, கானல் துவரைப்பதி-சோலைகளையுடைய துவாரகாபுரியை, கண்ணுற்றான் - பார்த்தான். எ - று.

(பொ - ரை.) நீலோற்பலமலரையும் அழகிய பவழத்தையும் (முறையே) உவமை சொல்லப்பெற்ற மகளிரதுகண்ணினாலும்வாயினாலும் (மனஞ்) சபலித்து அவர்களை விரும்புதல்செய்யாதவனான குசேலன் பின்பு தேவலோகத்தார்க்கு (ஆகவேண்டிய) நன்மைகளை விரையச்செய்பவனான கண்ணபிரான் வாழ்ந்தருளுகின்ற சோலைகளையுடைய துவாரகாபுரியைப் பார்த்தான்.

(வி - ரை.) இச்செய்யுளில் அடிதோறும்முதலெழுத்துமாத்திரம்வேறுபட்டிருக்க, இரண்டாவதுமுதலிய பலவெழுத்துக்கள் ஒற்றுமைப் பட்டுப் பொருள்வேற்றுமைப்படுதலால் இது திரிபு என்னுஞ்சொல்லணி. இதனை யமகத்திலடக்குவர் வடநூலார். இதில் ஓரடியிற்கூறியவாறு மற்றோரடியிலும் பொருளுரைத்தல் மரபன்றென்றும், அங்ஙனமுரைக்கின் கவி சாமர்த்தியங்கெடுமென்றும் அறிக. முன்னிரண்டடி கருங்குவளைமலர்போலக் கரிய மெல்லிய மாதர்கண்ணழகிலும், பவளம்போலச் செவந்த அவர் வாயழகிலும் ஈடுபட்டு, அவரிடத்து மனஞ்செலுத்திக் காமவசப்படாதவனென்று குசேலனது மனத்தூய்மையை விளக்கும். மினார் - மின்னற்கொடிபோல மென்மையாய் விளங்குவோர், பானல்துவர்என்ற உபமானங்களைவைத்த முறைக்கேற்பக் கண் வாய் என்ற உபமேயங்களையும் வைத்தது முறைநிரனிறை. அலத்தல்- அலைதல், அலந்து என்பதில் பகுதி அலு. உவர் - உகரச்சுட்டடியாகப் பிறந்த பலர்பாற்பெயர். இது அகரச்சுட்டின்பொருளில்வந்தது. இவ்வாறு இலக்கியங்களில் வருவதுண்டு. தன்னைச் சரணமடைந்த தேவர்களைக்காக்கும்பொருட்டும், அவர்க்குப் பகைவரான கொடிய அசுரர் முதலியோரை அழிக்கும்பொருட்டும் திருமால் கண்ணனாகத் திருவவதரித்து அவ்வவ்வவதாரகாரியங்

களை ஊக்கத்தோடு ஒவ்வொன்றாக விரைவில் முடித்துவருகிற தன்மைதோன்ற, "வானலந்துவரைப்படுப்போன், என்றார். வான் வானோர்க்கிடவாகுபெயர். துவரை - த்வாரா என்னும்வடசொற்றிரிபு. பின்கண்ணுற்றான் எனவியையும். பின்வாழ் என்றியைப்பினுமாம். கண்ணன்பின்புவாழ்ந்த துவாரகையென்க. கண்ணன் முன்பு வடமதுரையில்வாழ்ந்து பின்பு துவாரகையை ஏற்படுத்திக்கொண்டு, அங்கு அனைவரோடுஞ்சென்று வசித்தனன் என்பது வரலாறு. இனி மூன்றாமடிக்குவான் அலம் எனப்பிரித்து, பெரிய கலப்பையைக்கொண்டு விரைவில் தொழில்செய்பவனான பலராமனுக்குப்பின்பிறந்தவனான கண்ணன் எழுந்தருளியிருக்கின்ற என்றும் உரைக்கலாம். அலம் - ஹலம் என்னும் வடசொற்றிரிபு. அலம் - கலப்பை, இதையுடையனாதலால் பலராமனுக்கு அலாயுதன் என்று பெயர். பின் - காலவாகுபெயராய்த் தம்பியைக்குறித்தது. அன்றியும், வான்-தேவலோகம், நலந்து (நலக்க) நன்மைபெற, வரைபடுப்போன்பின் வாழ் - மலைகளை யிறகறுத்த இந்திரனுக்குத் தம்பியாகிய உபேந்திரன் (கண்ணன்) வாழ்கின்ற என்றுமாம், துவரைபதி - த்வாரவதி என்னும் வடசொற்றிரிபு. த்வாராபதி என்றும் வழங்கும், துவரை. பதி என்றிருமொழியாயெடுப்பினும் பொருந்தும். கண்உறுதல் - கண்பொருந்துதல் என்றிருசொல்லாய்ப் பிரிக்கப்படினும் பார்த்தல் என்னும் ஒருசொன்னீர்மேயாம். பானலந்துவர் உம்மைத்தொகை. (உ௩)

தருமந் தன்னகந் தங்கிப் பொலிவுறத்
தெருமந் தன்னகு பாவஞ் சிதைதர
வருமந் தன்னவன் வைகலி னாரஞர்க்
கருமந் தன்னமு மின்றக் கடிநகர்.

(ப - ரை.) (துவரைப்பதியென மேற்செய்யுளிற் சொல்லப்பட்ட)அ - அந்த, கடிநகர் - காவலையுடைய நகரத்தில், அருமைமருந்து அன்னவன்-அருமையாகிய தேவாமிர்தத்தை நிகர்ப்பவனாகிய ஸ்ரீகண்ணபிரான், தருமம் - தர்மமானது, தன் அகம்தங்கிபொலிவுஉற-தன் திருவுளத்தில் நிலைபெற்றுவிளங்கவும், அல்நகுபாவம் - இருளுருவாய் விளங்குகிற பாவமானது, தெருமந்து - சுழன்று, சிதைதர - அழியவும், வைகலின் - நித்தியவாசஞ்செய்தலால், ஆர் அஞர் - (சகித்தற்கு) அரியதுன்பத்துக்கேதுவாகிய,கருமம் - தீத்தொழில்கள், தன்னமும் இன்று - சிறிதும் நிகழ்வதில்லை. எ - று.

(பொ - ரை.) துவரைப்பதியென மேற்செய்யுளிற் சொல்லப்பட்ட அந்தக்காவலையுடைய நகரத்தில். அருமையாகிய தேவாமிர்தத்தை நிகர்ப்பவனாகிய ஸ்ரீகண்ணபிரான், தர்மமானது தன் திருவுளத்தில் நிலைபெற்று விளங்கவும், இருளுருவாய் விளங்குகிறபாவமானது சுழன்று அழியவும், நித்தியவாசம்செய்தலால், (சகித்தற்கு) அரியதுன்பத்துக்கேதுவாகிய தீத்தொழில்கள் சிறிதும் நிகழ்வதில்லை. எ - று.

(வி - ரை.) அருமந்தன்னவன்வைகலின், அக்கடிநகர் ஆரஞர்க்கருமந் தன்னமுமின்று, எனமுடித்துக்கொள்க. தருமம் என வாளா கூறினரேனும் ஸ்ரீகண்ணபிரான் அரசராதலால் இவ்விடத்து ராஜதர்மம் என்றுரைத்துக் கொள்க. இவர் தமது நகரத்தில் தீமைநிகழாது நன்மையே நிசழச்செய்த லால், தன்னகம் என்பதற்குத் தன்னிடமாகிய அத்துவரைப்பதி யெனினு மமையும். ராஜதர்மமாவது - மநுமுதலிய பெருநூல்களாலும், காமந்தகம் முதலிய சிறுநூல்களாலும் விதிக்கப்பட்டபடியே தாமுமொழுகித் தம்கோற் கீழமைந்துவாழுங் குடிகளையும் ஒழுகுவித்தல், அல்லதுபாவம் என்றமையா ல், தருமத்துக்கு ஒளிநகு என்பதனை விசேடணமாக்கிக் கோடலமைவுடைத் து. நெற்செய்யப்புற்றேயுமாபோல, தருமந்தங்கப் பாவந்தெருமந்து சிதைய லாயிற்று. பாவம் சிதைதர என்னது தெருமந்து சிதைதரஎன்றதனல், தரு மந்தங்கிப்பொலிவுறுதல் கண்ணுற்றும் விரைவினீங்காது சிறிதுபோழ்து உழன்றுதலையெடாதழிந்ததாயிற்று. பொலிவுற ஒருசொல்லாகக் கொண்டு பொலியவெனினுமாம். இதற்குப்பகுதிபொலிவுறு. தெருமந்து என்னும் இறந்தகாலவினையெச்சத்திற்குப் பகுதிதெருமா. சிதைதரஎன்பது ஒருசொல் இதற்குப்பகுதிசிதைதா. அருமந்தன்னவன் - அருமருந்தன்னவன் என்பதன் மரூஉ. வைகலின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப் பொருளில்வந்தது. (உச)

கொடிய விஞ்சிவட் காரைக் குனித்தடும்
கொடிய விஞ்சிவட் காரைக் குனித்தடும்
கடிய கற்சிக் கிடங்கராக் காலுறும்
கடிய கற்சிக் கிடங்கராக் காலுறும்.

(ப - ரை.) கொடிய இஞ்சி - கொடிகளையுடைய மதிலானது, வள் காரை - வளவியமேகத்தை, குனித்து - அசைத்து, அடும் - (மழைபொழியும் படி) சிக்ஷிக்கும், (அன்றியும் அம்மதிலுறுப்புக்கள்) கொடிய-கொடுந்தொழி லையுடையனவாகி, விஞ்சி - அதிகரித்து, வட்காரை - பகைவரை, குனித்து அடும் - வளைத்துக்கொல்லும், கடிஅகற்சிகிடங்கு - மலர் மணத்தையுடைய விசாலமாகிய அகழியானது, அராகால்உறும்-நாகரிடமாகிய பாதாளம்வரைக் கும் ஆழ்ந்திருக்கும், கடியகல்சிக்கு இடங்கர் - வன்மையாகியகற்பாறைகளிற் சிக்கிக்கிடக்கும்முதலைகள், ஆ - (அவ்வகழியில் நீருண்ணவருகிற) பசுக்களின், கால்உறும் - கால்களைப்பற்றுநிற்கும். எ - று.

(பொ - ரை.) கொடிகளையுடைய மதிலானது வளவிய மேகத்தை வளைத்து. (மழைபொழியும்படி) சிக்ஷிக்கும், (அன்றியும் அம்மதிலுறுப்புக் கள்) கொடுந்தொழிலையுடையனவாகி, அதிகரித்துப் பகைவரை வளைத்துக் கொல்லும், மலர்மணத்தையுடைய விசாலமாகிய அகழியானது நாகரிடமா கிய பாதாளம்வரைக்கும் ஆழ்ந்திருக்கும்,வன்மையாகியகற்பாறைகளிற் சிக்கிக் கிடக்கும் முதலைகள்(அவ்வகழியில்நீருண்ணவருகிற) பசுக்களின் கால்களைப் பற்றுநிற்கும். எ - று.

(வி - ரை.) முதலடியில் குனித்து அடும் என்பதற்கு அசைத்து மேற்படும் என்றும், இரண்டாமடியில் குனித்தடும் என்பதற்குத் தாழ்த்திவெல்லும் என்றும் பொருளுரைத்தலுமாம், முதலிலுள்ள கொடிய என்பதனைக் கோடியஎன்பதன் குறுக்கலாகக்கொண்டு வளைந்த எனப்பொருள்கூறினுமாம். கோடுதல் - வளைதல், செம்மையினின்றுங் கோடியகோலைக்கொடுங்கோல் என்றும், செம்மையினின்றுங் கோடியதமிழைக் கொடுந்தமிழ்என்றும் வழங்குதல்காண்க. வட்கார் - பகைவர், வட்கல் - வணங்கல், வணங்காதவர் பகைவராதலால் அவரை வட்கார்என்றார். "வரையன்மெருருகாலிருகால் வளையவளைத்துவட்கார், திரையன்றழலெழவெய்துநின்றோன்" என்றருளினர் மணிவாசகரும். கடி - மணம், இது நெய்தல் தாமரைமுதலியவற்றின்மலர் மணம், கால் - இடம், அராக்கால் என்றதனால் பாம்புகளுக்கிடமாகிய பாதாளலோகம் என்றுரைக்கப்பட்டது, அராக்காலுறுங்கடியகற்சிக் கிடங்கராக்காலுறும் என்பதற்குப் பாம்புகள் உமிழ்கின்ற ஒளியுள்ள மாணிக்கக்கற்கள் சிக்கிக் கிடக்கிற இடங்களில் முதலைகளின் கால்கள்பொருந்தும் என்றுரைத்தலுமொன்று. கரா - முதலை. "கண்ணகன்றபேரகழியிலுழக்கிய கரிகள், தண்ணந்தாமரைத்தாளெனத் தடக்கையாற் பிலத்தில், நண்ணுஞ்சேடனையெடுத்ததின் சுடிகையினூறி, யுண்ணிவந்தொளிர்மணியினாலுற்கையென்றெறியும்" என்றார் பிறரும். இதனால் மதில் மேகமண்டலத்தைக்கடந்துளதென்பதும் அகழி பாதாளம்வரைக்கும் ஆழ்ந்துளதென்பதும்பெறப்பட்டது. (உ௫)

குவலயங் கமலங் குலவாம் பன்மல்
குவலை யங்கமலங்கு குதிக்குமுன்
குவலை யங்க மலங்குறத் தோற்றிநன்
குவலை யங்க மலங்குயிற் றந்நகர்.

(ப - ரை.) குவலயம் - நீலோற்பலமும், கமலம் - தாமரையும், குலவு ஆம்பல் - நெருங்கிய ஆம்பலும், மல்குவலையம்கம் - மிகுந்தவட்டமாகிய (அகழி) நீரிலே, மலங்கு குதிக்குமுன் - மலங்குமீன்கள் குதிப்பதற்கு முன்னே, அ நகர் - அந்தநகரமானது, கம் அலங்குறதோற்றி - சுவர்க்கலோகம் விளக்கமடையத்தோற்றி, நன்கு - நன்றாக, வலையம் - வட்டமான, குவலையம் - பூமியின்கண், கமலம் - நீரில், குயிற்று - பதிக்கப்பட் டிருந்தாற்போலும். எ-று.

(பொ - ரை.) நீலோற்பலமும் தாமரையும் நெருங்கிய ஆம்பலும் மிகுந்த வட்டமாகிய அகழிநீரிலே மலங்குமீன்கள் குதிப்பதன்முன்னே, அந்நகரமானது சுவர்க்கலோகம் விளக்கமடையத்தோற்றி, நன்றாக வட்டமான பூமியின்கண் நீரில் பதிக்கப்பட்டிருந்தாற்போலும். எ - று.

(வி - ரை.) குவலயம் - கருங்குவளைமலர். குலவாம்பல் - கூட்டமாகிய ஆம்பல் எனினுமாம். ஆம்பல் - அல்லி, இது வெள்ளாம்பல் செவ்வாம்பல் என்னுமிரண்டையுங் குறிக்கும். மலங்கு - ஓர்வகைமீன், இதனை விலாங்

கு எனவும் வழங்குவர். அலங்குற - அசைய எனினுமாம். குயிற்றினாற்போல்வது என்பது குயிற்று எனவிகாரப்பட்டது. மல்குதல் - மிகுதல் எனினுமாம். கமலம் - நீர். குயிற்றல் - பதித்தல். அகழியாற் சூழப்பட்டிருக்கிற நகரமானது சுவர்க்கலோகமே இவ்வகழிநீரில் பதிக்கப்பட் டிருந்தாற்போலும் என்பது கருத்து. "குடவளைக்குலம்வயி றுளைந்தின மணிகொழிக்கும், மடிவில் வானகருருவுகாட்டுவதுபோன்மதில் சூழ், கடிகொண்மாநகரந்நிழல்கதுவிடாதகன்ற, புடைகொணீர் நகருடுத்தலை பொங்குபேரகழி" என்றார் பிறரும். கம் - ஆகாயம், அது இடவாகுபெயராய் அங்குள்ள சுவர்க்கலோகத்தைக்குறித்தது, அலையங்கமலங்கு எனப்பிரித்து அசையாநின்ற வுடம்பையுடைய மலங்கு எனினுமாம். (௨௬)

இன்ன மாநகர் காண்டலு மேர்முகி
லன்ன மேனியற் காண்ட லொப்பா மகிழ்ந்
தின்ன றீர்தர வெட்டி விசைகொளீஇ
நன்னர் நெஞ்ச னடக்கத் தொடங்கினான்.

(ப - ரை.) நன்னர் நெஞ்சன் - நல்லமனத்தையுடைய குசேலன், இன்னமாநகர் காண்டலும் - இத்தன்மையுடைய பெரியதுவாரகா நகரத்தைப்பார்த்தவளவிலே, ஏர்முகில் அன்னமேனியன் காண்டல் ஒப்பு ஆமகிழ்ந்து - அழகிய மேகத்தையொத்த திருமேனியையுடைய கண்ணனைப் பார்த்தற்குச் சமமாகமகிழ்ச்சியடைந்து, (அதனால்) இன்னல்தீர்தரவெட்டி, (தனது இளைப்பு முதலிய) துன்பங்களை நீங்கும்படி ஒழித்து, விசைகொளீஇ-வேகங்கொண்டு, நடக்கத்தொடங்கினான் - நடக்க ஆரம்பித்தான். எ - று.

(பொ - ரை.) நல்லமனத்தையுடைய குசேலன் இத்தன்மையுடைய பெரியதுவாரகா நகரத்தைப்பார்த்தவளவிலே அழகியமேகத்தையொத்த திருமேனியையுடைய கண்ணனைப்பார்த்தற்குச் சமமாகமகிழ்ச்சியடைந்து, (அதனால்) தனது இளைப்புமுதலிய துன்பங்களை நீங்கும்படி ஒழித்து வேகங்கொண்டு நடக்க ஆரம்பித்தான். எ - று.

(வி - ரை.) இன்ன-சுட்டடியாகப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். ஏர்-எழுச்சியுமாம். அன்ன - உவமவுருபு. ஆ - ஆகவென்பதன் விகாரம். தீர்தர என்பது ஒருசொல், பகுதி - தீர்தா, இவ்வாறன்றி, தாதுணைவினையெனினுமாம். எட்டியெனப் பிரித்து, தாவியெனப்பொருள் கோடலு மொன்று, கொளீஇ - கொண்டு என்னும் வினையெச்சம் விகாரப்பட்டு அளபெடுத்தமையால் சொல்லிசையளபெடை, இவ்வுயிரளபெடைக்கு மாத்திரைமூன்று, நன்னர் - பண்புப்பெயர். நல்பகுதி, நர்விகுதி, எட்டியென்றலை மோனைப்பொருத்தமுடைத்து, ஏர்முகில் என்பதற்கு எழுச்சியையுடைய மேகம் என்றுரைப்பினுமமையும். எழுச்சியாவது கடனீருண்டு மேலேயெழுதல், அப்பொழுது கருமையாயிருக்குமாதலால் இறைவன் திருமேனிக்குவமையாம். ஏர் எழுச்சியெனப்பொருள்படுதலை, "உலகமுவப்பவலனேர்பு திரிதரு பலர்புகழ்

ஞாயிறு" என்பதுமுதலிய வுயர்ந்தோர் வாக்குகளாலறிக. இன்னல் தீர்தர என்பதற்கு - வறுமைத்துன்பம் நீங்கும்பொருட்டு எனினுமாம். நன்னர் நெஞ்சன் - பகவச்சிந்தனையாகிய நன்மையையுடைய மனத்தினன் என்றலும் பொருந்தும் இதினுஞ் சிறந்த நன்மையொன்றின்மையால். (உஎ)

பரிக்கொ துங்கியும் பாய்தரு மும்மதக்
கரிக்குந் தேர்க்கு மொதுங்கியுங் கார்க்குழ
லரிக்கண் மாதர்க் கொதுங்கியு மாழ்வினை
பரிக்க லாதான் படருகின் றனரோ.

(ப - ரை.) ஆழ் - ஆழமான, வினை - கருமங்களை, பரிக்கலாதான் - சுமக்கமாட்டாதவனான குசேலன், (வழியில்) பரிக்கு - குதிரைகளுக்கு, ஒதுங்கியும் - விலகியும், பாய்தரும் - வழிகிற, மும்மதம் - மூன்றுவகை மதநீரையுடைய, கரிக்கும் - யானைகளுக்கும், தேர்க்கும் - தேர்களுக்கும்,ஒதுங்கியும் - விலகியும், கார்குழல் - மேகம்போன்ற (மிகக்கரிய) கூந்தலையும், அரிகண் - சிவந்தரேகைகளையுடைய கண்களையுமுடைய, மாதர்க்கு - மகளிர்க்கு,ஒதுங்கியும் - விலகியும், படருகின்றான் - செல்லுகிறான். எ - று.

(பொ - ரை.) ஆழமான கருமங்களைச்சுமக்கமாட்டாதவனானகுசேலன் (வழியில்) குதிரைகளுக்கு விலகியும் வழிகிற மூன்றுவகை மதநீரையுடைய யானைகளுக்கும் தேர்களுக்கும் விலகியும் மேகம்போன்ற (மிகக்கரிய) கூந்தலையும் சிவந்தரேகைகளையுடைய கண்களையுமுடைய மகளிர்க்கு விலகியும் செல்லுகிறான். எ - று.

(வி - ரை.) "கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்-வெம்பு கரிக்காயிரந்தான்வேண்டுமே—வம்புசெறி, தீங்கினர்தங் கண்ணிற்றெரியாத தூரத்தில் - நீங்குவதேநல்லநெறி" என்கிறபடியே அபாய முண்டாக்கவல்ல குதிரை யானைமுதலியவற்றிற்கொதுங்கிச்செல்லுதல்முறைமையாதலால், பரிகரிதேர்களுக்கும், "பார்ப்பார்தவரேசுமந்தார் பிணிப்பட்டார் - மூத்தாரிளையார் பசுப்பெண்டிரென்றிவர்கட்-காற்ற வழிவிலங்கினரே பிறப்பினுள்-போற்றியெனப்படுவார்" என்கிறபடியே மகளிர்க்கும் ஒதுங்கினான். காண்பவரதுகண்மனங்களைக் கவரும்படியான கட்டழகுடையவர் என்பதுதோன்ற, 'கார்க்குழலரிக்கண்மாதர்' என விசேடித்துரைத்தார். ஆழ்வினை மீளாநரகத்திலழுந்துதற்கேதுவாகிய தீவினை. 'பரிக்கலாதான்' என்றது மேலே தான் தீவினைசெய்தலை ஒழிந்திருத்தலேயன்றி முன்செய்த வினையையும் ஒழிக்க முயல்வோன் என்றபடி, பரித்தல் - சுமத்தல், பாரமாகிய பொருள்களைச் சுமப்பதனால் குதிரைக்குப் பரியெனப்பெயருண்டாயிற்று. இது காரணப் பெயர். மும்மதம் என்றது கன்னமிரண்டும் குறியொன்றும் ஆகியமூன்றிடத்தும் பெருகும் மதங்களை, இவ்வாறன்றி, கன்னமதம் கபோலமதம் பீஜமதம் என்பாருமுளர். கரம் - கை, அது இவ்விடத்துத் துதிக்கையெனப்பொருள்படும், அதனையுடையதாதலால் யானைக்குக் கரியென்னும் பெயருண்டாயிற்

று. இதன்பெண்பாற்பெயர் கரிணீ. இது வடமொழியாதலான் இதற்குக் கருநிறமுடையது எனப்பொருள் கூறலமையாது. கருமையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு இடையுகரங்கெட்டுக் கார் என்றாயிற்று. இந்நிறப்பெயர் அதனையுடைய மேகத்தையுணர்த்தலால் பண்பாகுபெயர். கார்க்குழல் - உவமைத்தொகை. அரிக்கண் - இரண்டாம் வேற்றுமைத்தொகை. அரிக்கண்ணுடைத்தாதல் உத்தமலக்ஷணம். அரிக்கண் என்பதை உவமைத்தொகையாகக் கொண்டால் வண்டுபோலுங் கரியகண் என்றுரைக்கலாம். விருப்பம் என்னும்பொருள் தருகிற மாதர் என்னும் உரிச்சொல் விரும்பப்படும் அழகையுடைய பெண்களுக்காயினமையால் இது பண்பாகுபெயர். (உஅ)

முன்னும் பார்க்கு முதிரொலி தோன்றலாற்
பின்னும் பார்க்கும் பெருநிலத் தூருயி
ருன்னும் பார்க்கு முறுவர் குழாமெலா
மின்னும் பார்க்க வெழுதிடுஞ் சீர்த்தியான்.

(ப - ரை.) இன்னும் - இன்னமும், (இப்பொழுதும் இனிமேலும்) பார்க்க - யாவரும் ஆராய்ந்துணரும்படி, உறுவர்குழாம்எல்லாம் - முனிவர் கூட்டங்களெல்லாம், எழுதிடும் - (நூல்களிற்புகழ்ந்து) எழுதிய, சீர்த்தியான் - பெரும்புகழையுடையவனாகிய குசேலன், முன்னும்பார்க்கும் - முன்னே பார்த்துக்கொண்டேசெல்லுவான், முதிர்ஒலிதோன்றலால் - (தேர்முதலியவற்றின்) பேரொலி செவிக்குப்புலப்படுதலால், பின்னும்பார்க்கும் - பின்னேயும் திரும்பிப்பார்ப்பான், பெருநிலத்து - பெரியநிலத்திலே, ஊர் - தவழ்ந்து செல்லுகிற, உயிர் - சிற்றுயிர்களை, உன்னும்பார்க்கும் - (காலிற்பட்டு, அழியாதபடி) கவனித்துப்பார்த்துக்கொண்டேசெல்வான். எ - று.

(பொ - ரை.) இன்னமும் (இப்பொழுதும் இனிமேலும்) யாவரும் ஆராய்ந்துணரும்படி முனிவர் கூட்டங்களெல்லாம் (நூல்களிற் புகழ்ந்து) எழுதிய பெரும்புகழையுடையவனாகிய குசேலன் முன்னே பார்த்துக்கொண்டேசெல்வான், (தேர்முதலியவற்றின்) பேரொலி செவிக்குப்புலப்படுதலால் பின்னேயும் திரும்பிப்பார்ப்பான், பெரியநிலத்திலே தவழ்ந்து செல்லுகிற சிற்றுயிர்களை (காலிற்பட்டு அழியாதபடி) கவனித்துப்பார்த்துக்கொண்டே செல்வான். எ - று.

(வி - ரை.) முன்னும்பின்னும் பார்த்துக்கொண்டே செல்லுதல் ஓரியல்பு. முதிரொலி - தேர்முதலியவற்றிலுண்டாவன. "தேரொலி புழைக்கைமாக்கள் சீறிசைபரிமாவோதை, வாரியைகழற்கால்வீரர் மணிப்புயந்தட்டு மார்ப்பு, நாரியர் சிலம்பின் சும்மைநரப்பியாழரவமின்ன,சேரவொன்றாகியே முதிரைகள் வாயடக்குமன்றே" என இவ்வோசைகளைநகரத்திலுள்ளனவாகக் கீழ்க் குசேலர்மேல்கடலடைந்த அத்தியாயத்தில் கூறினமைகாண்க. ஊருயிர் - எறும்புமுதலியன. எவ்வுயிர்க்கும் இன்னாதசெய்யாமை ஞானியர்க்கின்றியமையாதாதலால், ஊர்ந்துசெல்லும் சிற்றுயிர்களுக்கும் தன்னால் அழிவுண்

டாகாதபடி குறிக்கொண்டுநோக்கிச் செல்பவனானான். 'உறுவர் குழாமெலாம் இன்னும் பார்க்கவெழுதிடுஞ் சீர்த்தியான், என்பதற்கு, சுகர், வேதவியாசர், வைசம்பாயனர், அகஸ்தியர், ஹாரீதர், பராசரர், கௌதமர், நாரதர் முதலிய முனிவர்களால் எழுவகைப்பாகவதங்களிலும் மற்றும் பலநூல்களிலும் கூறப்பட்டும் பிற்காலத்தாரும் அறிய விளங்கும் சிறப்புடையவன் என்பதுகருத்து. உறு - பெருமை, அதனையுடையவர் உறுவர். எழுதிடு என்பதில் இடுதுணைவினை. "சீர்த்தி, மிகுபுகழ்" என்ற தொல்காப்பியத்து உரிச்சொல்லியற் சூத்திரத்தால், சீர்த்தியென்பது மிக்கபுகழை யுணர்த்துவதோர் தமிழுரிச்சொல்லென்றும், புகழ்மாத்திரத்தை யுணர்த்துங் கீர்த்தியென்னும் வடசொற்றிரிபன்றென்றும் இனிது விளங்கும். (உக)

சீத நீழற் செலிற்சிற் றுயிர்த் தொகை
போதச் சாம்புமென் றெண்ணிய புந்தியா
னாத வந்தவ ழாறு நடந்திடுங்
காத லங்கை விரித்துக் கவித்தரோ.

(ப - ரை.) சீதம் - குளிர்ச்சியையுடைய, நீழல் - (மரங்களின்) நிழலிலே, செலின்-நடந்துசென்றால், (கால்பட்டு) சிறுஉயிர்தொகை-(அங்குள்ள) சிறிய பிராணிகளின் தொகுதி, போதசாம்பும் என்று - மிகவும் வருந்துமென்று, எண்ணிய - நினைத்த, புந்தியான் - நல்லறிவையுடையனாகிய குசேலன், அம்கைவிரித்துகவித்து - (தனது) அகங்கையை விரித்துத் தலையை மூடிக்கொண்டு, ஆதவம் தவழ்ஆறு - வெயில்பொருந்தினவழியிலே, காதல்-(ஸ்ரீகண்ணபிரானைக்காணவேண்டுமென்கிற) ஆசையோடு, நடந்திடும் - நடந்துசெல்வான். எ - று.

(பொ - ரை.) குளிர்ச்சியையுடைய மரங்களின் நிழலிலேநடந்துசென்றால் (கால்பட்டு) (அங்குள்ள) சிறிய பிராணிகளின் தொகுதி, மிகவும்வருந்துமென்று நினைத்த நல்லறிவையுடையவனாகிய குசேலன் (தனது) அகங்கையைவிரித்துத் தலையைமூடிக்கொண்டுவெயில்பொருந்தினவழியிலே(ஸ்ரீகண்ணபிரானைக் காணவேண்டுமென்கிற) ஆசையோடுநடந்து செல்வான். எ - று.

(வி - ரை.) இச்செய்யுளாற் குசேலனது பேரருளுடைமை விளங்குதலோடு, செல்லும்வழியின் இருபுறத்திலுமுள்ள மரநிழலில் நடந்தால் அங்குக்குளிர்ச்சியின்பொருட்டுத் தங்கிய சிற்றுயிர்களுக்குத் தீங்குண்டாகக்கூடுமென்று வெயில்காய்கிற நடுவிடத்தே சென்றானென்பதும், அங்ஙனம்செல்லுகையில் வெயிலைத்தடுப்பதற்குரிய குடையில்லாமையால் தனது கவிகையையே கவிகையாகக்கொண்டானென்பதும் இனிது விளங்குகின்றது. அங்கை - அழகிய கையெனினுமமையும். தொகை ஐவிகுதிபெற்ற தொழிலாகுபெயர். புத்தி ஆதபம் என்னும் வடசொற்கள் முறையே புந்தியெனவும் ஆதவம் எனவுந் திரிந்தன. ஆதபம் என்பதற்கு நன்றாகத்தபிப்பதுஎன்பதுபொருளாதலால் இது காரணப்பெயர். (௩௦)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நாகுவண் டொலிப்பப் படுங்கடச் செருக்கா னாடொறு மின்பிடி யூட்டும், பாகுடல் குமைக்குங் கறையடிக் களிறு பாவிய கூடமுங் கடுங்கா, லேகுவாம் பரிமந் திரங்களும் வாட்போ ரில குகல் லூரியும் விண்ணிற், போகுய ரிரத நிலைகளு மிகுத்த புடைவளப் பெருநகர் கடந்தான்.

(ப - ரை.) நாகுவண்டு ஒலிப்ப - இளமையாகிய வண்டுகள் மொய்த்தொலிக்கும்படி, படும் - பெருகுகின்ற, கடம்செருக்கால் - மதக்களிப்பால், நாள்தொறும் - தினந்தோறும், இன்பிடி ஊட்டும் - இனிதாகியகவளத்தை யுண்பிக்கிற, பாகு - பாகனது, உடல் - உடம்பை, குமைக்கும் - ஊறுபடுத்துகிற, கறை அடி - உரல்போலும் கால்களையுடைய, களிறு - யானைகள், பாவிய - பரவிநிற்கிற, கூடமும் - பந்தியும், கடுகால் ஏகு - வேகமுள்ள வாயுவைப்போலச்செல்லுகிற, வாவும் - தாவுமியல்புள்ள, பரிமந்திரங்களும் - குதிரைப்பந்திகளும், வாள்போர் இலகு - வாட்சண்டை மிச்கிருக்கிற, கல்லூரியும் - கல்லூரியும், விண்ணில்போகு - சுவர்க்கலோகத்தை நோக்கிச்செல்லுகின்ற, உயர் - உயர்ந்த, இரதநிலைகளும் - தேர்நிலைகளும், மிகுத்த - அதிகரித்திருக்கிற, புடை - பக்கங்களிலுள்ள, வளம் - பலவளங்களையுடைய, பெருநகர் - பெரியநகரத்தை, கண்டான் - பார்த்தான். எ - று.

(பொ - ரை.) இளமையாகிய வண்டுகள் மொய்த்தொலிக்கும்படி பெருகுகின்ற மதக்களிப்பால் தினந்தோறும் இனிதாகிய கவளத்தையுண்பிக்கிற பாகனது உடம்பை ஊறுபடுத்துகிற உரல்போலுங் கால்களையுடைய யானைகள்பரவி நிற்கிறபந்தியும், வேகமுள்ள வாயுவைப்போலச் செல்லுகிற தாவுமியல்புள்ள குதிரைச்சாலைகளும், வாட்சண்டை மிக்கிருக்கிற கல்லூரியும், சுவர்க்கலோகத்தை நோக்கிச்செல்லுகின்ற உயர்ந்த தேர்நிலைகளும் அதிகரித்திருக்கிற பக்கங்களிலுள்ள பலவளங்களையுடைய பெரிய நகரத்தைப்பார்த்தான். எ - று.

(வி - ரை.) படுதல்-உண்டாதல், அது இங்குப்பெருகுதலுக்காயிற்று, கடம் - மதம். அது கன்னம், கபோலம், கோசம் என்னும் மூன்றிடங்களிலுண்டாகி கன்னமதம் கபோலமதம் கோசமதம் எனப்பெயர் பெறும். கன்னம்-செவியடி, கபோலம் - கொடிறு, கோசம் - ஆண்குறி, குமைத்தல் - ஊறுபடுத்தல், கூடம் - யானைப்பந்தி, (யானைகட்டுஞ்சாலை) மந்திரம் - குதிரைப்பந்திக்கோர் சிறப்புப்பெயர். வாட்போரிலகுகல்லூரி-வாட்போர்க்கல்வி பயிலிடம், அதாவது சிலம்பக்கூடம். (கல்லூரி - கல்விபயிலிடம்.) பாகு - பண்பாகுபெயர். (௩௧)

கூந்தலம் பிடியுங் கோணைமாக் களிறுங் கூடியாட் டயர்ந்தென மணிப்பூ, ணேந்தெழி லிளமங் கையருமைந் தரும்பொன்

னியைதரு சிவிறியும் பந்துஞ், சேந்தகைத் தலங்கொண் டொள்
ளற லிறைத்துச் செறிகளி யின்புவந் தாடும், பூந்தட மலிந்து பல
வள நிறைந்து பொலிதரு மிடைநகர் கடந்தான்.

(ப - ரை.) கூந்தல் - கூந்தலையுடைய, அம் - அழகிய, பிடியும்-பெண் யானைகளும், கோணை-கொடுமையும், மா - பெருமையும் அமைந்த, களிறும்- ஆண்யானைகளும், கூடி ஆட்டு அயர்ந்தால் என - கூடிவிளையாடினாற்போல, மணிபூண் ஏந்து - ரத்நாபரணங்களைத்தாங்கிய, எழில் இளமங்கையரும் - அழகும் இளமையும் வாய்ந்தமங்கைப் பருவப்பெண்களும், மைந்தரும்-இளை ஞரும், பொன் இயைதருசிவிறியும் - பொன்னினாற் செய்யப்பட்ட சிவிறி யையும், பந்தும் - பந்தையும், சேந்த - செவந்த, கைத்தலங்கொண்டு - கை யிற்கொண்டு, ஒள் அறல் இறைத்து - ஒட்பமாகிய நீரையிறைத்து, செறிகளி இன்பு உவந்தாடும் - மிகுந்தகளிப்போடும் இன்பத்தோடும் மகிழ்ந்தாடுகின்ற, பூதடம் மலிந்து - புஷ்பவாவிகள் மிகுந்து, பலவளம் நிறைந்து - பலவளங்க ளும் நிரம்பப்பெற்று, பொலிதரும் - விளங்குகின்ற, இடைநகர் - இடைநக ரத்தை, கண்டான் - பார்த்தான். எ - று.

(பொ - ரை.) கூந்தலையுடைய அழகிய பெண்யானைகளும், கொடுமை யும் பெருமையுமமைந்த ஆண்யானைகளும், கூடிவிளையாடினாற்போல, ரத்நா பரணங்களைத்தாங்கிய, அழகும் இளமையும்வாய்ந்த மங்கைப்பருவப் பெண் களும், இளைஞரும், பொன்னினாற்செய்யப்பட்ட சிவிறியையும் பந்தையும் செவந்தகையிற்கொண்டு, ஒட்பமாகிய நீரையிறைத்து, மிகுந்தகளிப்போடும் இன்பத்தோடும் மகிழ்ந்தாடுகின்ற புஷ்பவாவிகள் மிகுந்து பலவளங்களும் நிரம்பப்பெற்று விளங்குகின்ற இடைநகரத்தைப் பார்த்தான். எ - று.

(வி - ரை.) பிடி, களிறு என்பன முறையே பெண்யானைக்கும் ஆண் யானைக்கும் சிறப்புப்பெயர்கள். இவற்றிற்கு முறையே கூந்தலும் கோணை யும் இயற்கையடைகள். அயர்ந்தால் என என்பது அயர்ந்தென என நிலை மொழியீறு தொகுத்தலாயிற்று, மங்கையர்-மங்கைப்பருவப்பெண்கள், இவர் கள் பன்னிரண்டாண்டுள்ளவர்கள், மங்கைப்பருவம்-எழுபருவங்களில் மூன் றாவதுபருவம். எழுபருவமாவன பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண்என்பன. இவற்றிற்குவயது, முறையே ஏழும், ஒன்பதும், பன்னிரண்டும், பதினாறும், பதினெட்டும், இருபத்தொன் றும், முப்பத்திரண்டுமாம். இது, "வாரிமணிவெய்யோன் மதிபாரதம்வள்ளல், சீரியலறம் வளர்க்குஞ் செய்கைதான் - நேரிழாய், பேதைமுதலாகப்பேரிளம் பெண்ணீறாக, ஈதெழுவர் தம்பருவமெண்" என்னுஞ்செய்யுளாலினிது விளங் கும். சிவிறி பந்து என்பன நீர்வீசுந்துருத்திகளின் பெயர், இவற்றுள், சிவிறி பெருந்துருத்தி யென்றும், பந்துமட்டத்துருத்தி யென்றுங்கொள்க. கைத்த லம் கரதலம் என்பதுபோல ஒருசொல். கையாகிய தலம் எனவிரித்துரைப் பினுமாம், அறல் - நீர், தடம் - தடாகம்.

(௩௨)

செப்பரு மருநூன் மடந்தபு தேர்ச்சிச் செந்தமிழ்ப் புலவர் தந் தூக்கிற், றிப்பிய வணியும் பலபொருள் வாய்ப்புந் தெளிதரு நீர்மையுஞ் சீருந், தப்பிலா ழமுங்கொண் டலர்மண முடைத்தாய்ச் சாற்றுதோ றகலமுற் றெவரு, மொப்பருங் குரைத்தென் றுரைத்திடப் பொலியு முண்ணக ரகழியைக் கடந்தான்.

(ப - ரை.) செப்பு அரும் - சொல்லுதற்கரிய, அருநூல் - அருமை வாய்ந்த நூலுணர்ச்சியால், மடம்தபு-அறிவின்மையைக் கெடுக்கிற, தேர்ச்சி-தெளிவையுடைய, செந்தமிழ்ப்புலவர் தூக்கின் - செந்தமிழ்ப்புலவரது செய்யுள்போல, திப்பியம் அணியும் - திவ்வியமாகிய அணியும், பலபொருள்வாய்ப்பும் - பலபொருட் கிடக்கையும், தெளிதருநீர்மையும் - தெளிவைத்தருகிற நீர்மையும், சீரும் - சீரும், தப்பு இல் ஆழமும் - குற்றமில்லாத ஆழமும், கொண்டு-தன்னிடத்துக்கொண்டு, அலர்மணம் உடைத்தாய் - அலர்மணமுடைத்தாகி, சாற்றுதோறு அகலமுற்று - சொல்லுந்தோறும் விரிந்து, எவரும்-யாவரும், ஒப்பு அருங்குரைத்து என்று உரைத்திட - ஒப்புச்சொல்லுதலருமையென்று சொல்லும்படி, பொலியும் - விளங்குகிற, உள்நகர் அகழியை கடந்தான் - உள்நகரத்தின் அகழியைத் தாண்டினான். எ - று.

(பொ - ரை.) சொல்லுதற்கரிய அருமைவாய்ந்த நூலுணர்ச்சியால்அறிவின்மையைக்கெடுக்கிற தெளிவையுடைய செந்தமிழ்ப்புலவரது செய்யுள் போல, திவ்வியமாகிய அணியும்,பலபொருட்கிடக்கையும்,தெளிவைத்தருகிற நீர்மையும், சீரும், குற்றமில்லாத ஆழமும் தன்னிடத்துக்கொண்டு, அலர்மணமுடைத்தாகி, சொல்லுந்தோறும் விரிந்துயாவரும் ஒப்புச்சொல்லுத லருமையென்று சொல்லும்படிவிளங்குகிற உள்நகரத்தின் அகழியைத்தாண்டினான்.

(வி - ரை.) தூக்கின் என்பதில் இன் ஐந்தனுருபு ஒப்புப்பொருளது. செய்யுளுக்கும் அகழிக்கும் ஒப்புக்கூறினமையால், அணி - உவமைமுதலிய அலங்காரமென்றும் அழகென்றும், பலபொருள்வாய்ப்பு - அறமுதலிய பொருள்களென்றும் சங்குமுதலிய பொருள்களென்றும், தெளிதருநீர்மை-படித்தவர்க்கு மனத்தெளிவையுண்டாக்குங் குணமென்றும் தெளிவாகிய நீரையுடைத்தாதல் என்றும்,சீர்-ஆசிரியவுரிச்சீர் முதலியவையென்றும்சிறப்பென்றும், ஆழம்-உய்த்துணரவைப்பு என்றும்நீரினது ஆழமென்றும், அலர்மணம்-விரிந்தபுகழ் என்றும் மலர்மணமென்றும், சாற்றுதோறகலமுறல் - சொல்லுந்தோறும் பொருள்விரிதல் என்றும் அகலநீள முதலியவெடுத்துச் சொல்லுந்தோறும் அளவுபடாமையென்றும், செய்யுளுக்கும் அகழிக்கும் பொருந்தவுரைத்துக்கொள்க. (௫௩)

படங்கிள ரரவப் பாயுடைப் பகவன் பாரளந் திட்டநாள் வளர்ந்தாங், கிடங்கொள்விண் ணுலகம் போழ்ந்துமேல் வளரா வெதிர்தரி யலருயிர் மடங்க,முடங்குளை மடங்க லடங்கரு முழுவை

முதற்கொடும் பொறிபல வுடைத்தாய்த், தடங்கொளீஇ நின்ற
மதிற்பெரு வாயிற் றடையையுந் தடையறக் கடந்தான்.

(ப - ரை.) படம்கிளர் - படத்தோடுகூடி விளங்குகிற, அரவம் - பாம்பாகிய, பாய்உடை - சயநத்தையுடைய, பகவன் - திருமால், பார் அளந்திட்ட நாள் - உலகத்தையளந்தகாலத்தில், வளர்ந்தாங்கு - வளர்ந்தாற்போல, இடம்கொள் - இடத்தைக்கொண்ட, விண்உலகம்-சுவர்க்கலோகத்தை, போழ்ந்து - பிளந்துகொண்டு, மேல்வளரா-மேலும்வளர்ந்து, எதிர் - எதிர்ந்த, தரியலர் - பகைவரது, உயிர் - உயிரானது, மடங்க - அழிய, முடங்குஉளை மடங்கல் - வளைந்தபுறமயிரையுடைய சிங்கம், அடங்கு அரும் உழுவை - அடங்குதலில்லாதபுலி, முதல் - முதலாகிய, கொடு - கொடுமையாகிய, பலபொறி உடைத்தாய் - பலபொறிகளையுடையதாகி, தடம்கொளீஇ நின்ற - விசாலித்துநின்ற, மதில் - மதிலினது, பெருவாயில் தடையையும் - பெரியவாயிலாகிய தடையினையும், தடைஅற கடந்தான் - தடையில்லாமல் தாண்டினான். எ - று.

(பொ - ரை.) படத்தோடுகூடி விளங்குகிற பாம்பாகிய சயநத்தையுடைய திருமால் உலகத்தையளந்த காலத்தில் வளர்ந்தாற்போல இடத்தைக் கொண்ட சுவர்க்கலோகத்தைப் பிளந்துகொண்டு மேலும்வளர்ந்து, எதிர்ந்தபகைவரது உயிரானது அழிய, வளைந்தபுறமயிரையுடைய சிங்கம், அடங்குதலில்லாத புலிமுதலாகிய கொடுமையாகிய பலபொறிகளை யுடைத்தாகிவிசாலித்துநின்ற மதிலினது பெரியவாயிலாகிய தடையினையும் தடையில்லாமல் தாண்டினான். எ - று.

(வி - ரை.) படம்கிளர் என்பதற்குப்படமானது விளங்கப்பெற்ற எனினுமாம். படத்துக்குக்கிளர்ச்சியாவது மாணிக்கமுடைத்தாதலா னுண்டாகிய விளக்கம். உடையஎன்னும் குறிப்புப்பெயரெச்சத்தீறுதொகுத்தலாய் உடை என நின்றது. பகவன் என்பது சிவபெருமான் முதலியோரை யுணர்த்துவதோர் சொல்லாயினும் 'படங்கிளரரவப்பாயுடை' என்றவிசேடணத்தாலும் 'பாரளந்திட்ட' என்றகுறிப்பினாலும் திருமால் என்னும் பொருள்குறித்தது. பாரளந்திட்டது திரிவிக்கிரமாவதாரத்தில். வளரா - செய்யாவென்னும்வாய்பாட்டிறந்த காலவினையெச்சம், இதுநின்ற என்னும் வினைகொண்டது. பொறி - யந்திரம், தடையற - தாமதியாமல். (௩௪)

உட்புகு மரசை முன்புகுந் திருந்த வோரர செதிர்கொளுங்
காலை, விட்புலம் புகழு மற்றுமோ ரரசு விரைவினுட் புகுவது கா
ணூஉ, நட்புடை யிவ்வீ ரரசுநன் கெதிர நடப்பவிவ் வாறரு துற
லாற், கட்புலம் புகாதா நெருக்கிடை யொதுங்கிக் கரங்கண்மேற்
றாக்கியுட் புகுந்தான்.

(ப - ரை.) உள்புகும் அரசை - உள்ளேபிரவேசிக்கிற ஓரரசனை, முன்புகுந்திருந்த - முன்னே பிரவேசித்திருந்த, ஓர்அரசு - வேறோரரசன், எதிர்

கொளும் காலை - எதிர்கொள்ளுங்காலத்தில், விண்புலம்புகழும் - விண்ணுலகத்தாரால் புகழப்பட்ட, மற்றும் ஓர் அரசு - மற்றுமோரரசன், விரைவின் உள்புகுவது காணூஉ - விரைவாக உள்ளே புகுவதைக்கண்டு, நட்புஉடை - நண்பையுடைய, இவ்வீரரசு - இரண்டிரண்டரசர்கள், நன்கு எதிர் நடப்ப - நன்றாயெதிரநடக்க, இவ்வாறு - இந்தப்பிரகாரம், அறுதுஉறலால் - இடையறுது நிகழ்தலால், கண் புலம்புகாது ஆம் நெருக்கிடை - கட்பொறியும் புகவொண்ணாத நெருக்கத்தில், ஒதுங்கி - விலகி, கரங்கள் மேல்தூக்கி - கைகளைமேலே தூக்கிக்கொண்டு,உள்புகுந்தான்-உள்ளே நுழைந்தான்.எ-று

(பொ - ரை.) உள்ளே பிரவேசிக்கிற ஓரரசனை முன்னே பிரவேசித்திருந்த வேறோரரசன் எதிர்கொள்ளுங்காலத்தில், விண்ணுலகத்தாரால் புகழப்பட்ட மற்று மோரரசன் விரைவாகவுள்ளே புகுவதைக்கண்டு, நண்பையுடைய இரண்டிரண்டரசர்கள் நன்றாயெதிரநடக்க, இந்தப்பிரகாரம் இடையறுது நிகழ்தலால், கட்பொறியும் புகவொண்ணாத நெருக்கத்தில் விலகி, கைகளைமேலே தூக்கிக்கொண்டு உள்ளே நுழைந்தான். எ - று.

(வி - ரை.). அரசு - பண்பாகுபெயர், விட்புலம் - இடவாகுபெயர். காணூஉ - செய்யூவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம், இவ்வீரரசு - இரண்டிரண்டரசர்கள். விட்புலம் - விண்ணாகிய இடம், கட்புலம் - கண்ணாகியபொறி, நெருக்கிடை - நெருக்கத்தினடுவே யெனினுமாம். (௩௫)

விடம்படு வடிவாண் மள்ளருக் கொதுங்கின் விரைவினவ்
வொதுங்கிடம் வளிபோற், றிடம்படு பரிக டாவிட மதற்குந்
திரிந்தொதுங் கிடுமிடஞ் சீறிக், கடம்படு களிறு பாயிட மதற்
குங் கண்டொதுங் கிடுமிடங் கொடிஞ்சி, யிடம்படு மிரத முன்
பினு ரிடமற் றெவ்விட மிவனடந் திடுவான்.

(ப - ரை.) விடம்படு - விஷம்பொருந்திய, வடிவாள் - வடித்தவாளாயுதத்தை யேந்திய, மள்ளருக்கு - வீரருக்கு, ஒதுங்கின் - ஒதுங்கினுல், விரைவின் - விரைவாக, அ ஒதுங்கிடம் - அவ்வொதுங்கிடமானது, திடம்படு பரிகள் - உறுதியாகிய குதிரைகள், வளிபோல் தாவிடம் - காற்றுப்போலத் தாவுகிற இடமாயிருக்கின்றது, அதற்கும் திரிந்து ஒதுங்கிடம் - அதற்கும் விலகி ஒதுங்கிடமானது, கடம்படுகளிறு - மதம்பொருந்தியயானைகள், சீறி பாய் இடம் - கோபித்துப்பாய்கிற இடமாயிருக்கின்றது, கண்டு அதற்கும் ஒதுங்கிடம் - பார்த்து அதற்கும் ஒதுங்கிப்போகிற இடமானது, கொடிஞ்சி - மேன்மொட்டுக்களையுடைய, இடம்படும் - இடம்பொருந்திய, இரதம் - தேர்கள், முன்பின் - முன்னும்பின்னுமாக, ஊர் இடம் - தவழுமிடமாயிருக்கின்றது, (இங்ஙனமாக) இவன் - இந்தக்குசேலன், மற்று எவ்விடம் நடந்திடுவான் - வேறெவ்விடத்தில் நடப்பான். எ - று.

(பொ - ரை.) விஷம்பொருந்திய வடித்தவாளாயுதத்தை யேந்திய வீரருக்கு ஒதுங்கினுல் விரைவாக அவ்வொதுங்கிடமானது உறுதியாகிய குதிரைகள் காற்றுப்போலத்தாவுகிற இடமாயிருக்கின்றது, அதற்கும் விலகி ஒதுங்கிடமானது மதம்பொருந்தியயானைகள் கோவித்துப்பாய்கிற இடமாயிருக்கின்றது, பார்த்து அதற்கும் ஒதுங்கிப்போகிற இடமானது மேன்மொட்டுக்களையுடைய இடம்பொருந்திய தேர்கள் முன்னும் பின்னுமாகத்தவழிடமாயிருக்கின்றது, (இங்ஙனமாக) இந்தக்குசேலன் வேறெவ்விடத்தில் நடப்பான். எ - று.

(வி - ரை.) விடம்படு - விடம்பூசிய எனினும் பொருந்தும். திடம்-வலியுமாம். கடம்படுகளிறு-மதயானை, கொடிஞ்சி - தேர்மொட்டு, வடி - கூர்மையெனினுமாம். (௯௯)

போதரு மிடங்க டொறுநெருக் குறலாற் பொன்வரை யனையதோண் மைந்தர், மேதகு மார்பத் திலங்குமா லைகளும் விரைகெழு கலவையு மிளமை, மாதர்மெய்ப் பூசுங் குங்குமச் சேறு மான்மத மளாவியைந் நூற்றுக், காதநா றிடுசெஞ் சந்தமுங் குசேலன் கந்தையு நாறின மாதோ.

(ப - ரை.) போதரும் இடங்கள்தொறும் - இவன்போகிற இடங்களிலெல்லாம், நெருக்குறலால் - நெருக்கமடைதலால், பொன்வரை அனைய தோள்மைந்தர் - பொன்மலைபோன்ற தோள்களையுடைய மைந்தரது, மேதகு மார்பத்து - மேன்மைபொருந்திய மார்பின்கண், இலங்கும் மாலைகளும் - விளங்குகின்ற பூ மாலைகளும், விரைகெழுகலவையும் - வாசனை பொருந்திய கலவைச்சந்தனமும், இளமைமாதர் - இளம்பெண்கள், மெய்பூசும் - சரீரத்திற்பூசியிருக்கிற, குங்குமச்சேறும் - குங்குமக்குழம்பும்,மான்மதம் அளாவி - கஸ்தூரியோடு கலக்கப்பெற்று, ஐந்நூற்றுக்காதம் நாறிடு-ஐந்நூறுகாததூரம் மணக்கின்ற, செஞ்சந்தமும் - செஞ்சந்தனமும், குசேலன் - குசேலனது, கந்தையும்-கந்தைத்துணிகளிலும், நாறின - பரிமளித்தன. எ - று.

(பொ - ரை.) இவன்போகிற இடங்களிலெல்லாம் நெருக்கமடைதலால், பொன்மலைபோன்ற தோள்களையுடையமைந்தரது மேன்மை பொருந்திய மார்பின்கண் விளங்குகின்ற பூமாலைகளும், வாசனை பொருந்திய கலவைச்சந்தனமும், இளம்பெண்கள் சரீரத்திற்பூசியிருக்கிற குங்குமக்குழம்பும்,கஸ்தூரியோடு கலக்கப்பெற்று ஐந்நூறு காததூரம் மணக்கின்ற செஞ்சந்தனமும் குசேலனது கந்தைத்துணிகளிலும் பரிமளித்தன. எ - று.

(வி - ரை.) போதரும்-புகுதரும் என்பதன்மரூஉ. போதா என்னும் பகுதியடியாகப்பிறந்த பெயரெச்சம் எனினுமாம், பொன்வரை - மேரு. அழகியமலையெனினுமமையும், மாலைகளும்எனவாளாகூறினரேனும் நாறின என்றதனுல் பூமாலைகளும் என்றுரையுரைக்கப்பட்டது, குசேலன், மைந்த

ரோடும்மாதரோடும் நெருக்குற்றுச்செல்லும்போது அவர்கள் பூமாலை முதலியவை இவன் கந்தைகளிற்படுதலால் அவையும் பரிமளித்தன வென்பது கருத்து. (ருள)

வெளிவரு வாரு முட்புகு வாரும் வீதியிற் கலாம்விளைப் பாரு, மளிமலர் மாலை சாந்தமுன் கொடுபோ யலங்கரிப் பாரு முன் வாயி, லொளிபெறு கதவந் தட்டிநிற் பாரு முழலுகின் றாருமாய் மைந்தர், களிதரப் பயிலப் போகம்விற் றுண்ணுங் கணிகையர் சேரியைக் கடந்தான்.

(ப - ரை.) வெளிவருவாரும்-வெளியேவருவோரும், உள்புகுவாரும் - உள்ளே நுழைவோரும், வீதியில் - தெருவில், கலாம் விளைப்பாரும் - கலகம் விளைப்போரும், அளிமலர்மாலை - வண்டுகள் மொய்க்கப்பெற்ற பூமாலைகளையும், சாந்தமும் - சந்தநத்தையும், கொடுபோய் - கொண்டுபோய், அலங்கரிப்பாரும் - அலங்கரிப்போரும், முன்வாயில் - முன்வாயிலிலுள்ள, ஒளிபெறுகதவம் - ஒளியுள்ள கதவுகளை, தட்டி நிற்பாரும் - தட்டிக்கொண்டு நிற்போரும், உழலுகின்றாரும் ஆய் - அலைகிறவர்களுமாகி, மைந்தர் - விடபுருடர், களிதரப்பயில - களித்துத்திரியும்படி, போகம்விற்று - தமதுபோகசுகத்தைவிற்று, உண்ணும் - சீவனம்பண்ணுகிற, கணிகையர் சேரியை - பரத்தையர் சேரியை, கடந்தான் - தாண்டிச்சென்றான். எ - று.

(பொ - ரை.) வெளியேவருவோரும், உள்ளே நுழைவோரும், தெருவில் கலகம் விளைப்போரும், வண்டுகள் மொய்க்கப்பெற்ற பூ மாலைகளையும் சந்தநத்தையும் கொண்டுபோய் அலங்கரிப்போரும்,முன்வாயிலிலுள்ள ஒளியுள்ள கதவுகளைத்தட்டிக்கொண்டு நிற்போரும், அலைகிறவர்களுமாகிய விடபுருடர்களித்துத்திரியும்படி தமது போகசுகத்தைவிற்று சீவனம் பண்ணுகிற பரத்தையர் சேரியைத்தாண்டிச்சென்றான். எ - று.

(வி - ரை.) வெளிவருவார் - முன்னேயுட்புகுந்து போகநுகர்ந்தோர், உட்புகுவார் - இனிப்போக நுகரவிரும்புவோர், அலங்கரிப்பார் - பரத்தையையலங்கரிப்பவர், கதவந்தட்டி நிற்பார் - உட்புக்குப்போக நுகர்வோர் வெளிப்படுமளவும் பொறாதமிகுமோகக்காரர். உழலுகின்றார் - கைப்பொருளின்றிப்போக விருப்பொன்றையேயுடையராய்த் தம்மநோபீஷ்டம் நிறைவேறப்பெறாதவீணர். (ருஅ)

சங்கரிந் தெடுத்தாற் போன்றவா லரியாற் சமைத்திடப் படுபுழுக் கலுந்தீம், பொங்குபாற் குழம்பு மனையுமாச் சியமும் பொருவில்பல் சுவைக்கறி களுந்தேன், றங்குமுக் கனியு மமைத்துண்பார்க் குதவத் தக்கபொன் மூதலவுள் ளனவென், றெங்குமா ராய்வுற் றழைத்திடும் பின்னே ரிருந்தெரு நோக்கியுண் மகிழ்ந்தான்.

(ப - ரை.) சங்கு அரிந்து எடுத்தாற்போன்ற - சங்கினைச்சிறுக அரிந்தெடுத்தாற் போல்வதாகிய, வால் அரியால் - வெண்மையாகிய அரிசியால், சமைத்திடப்படு - சமைக்கப்பட்ட, புழுக்கலும் - சோறும் - தீம்பொங்குபால் குழம்பும் - இனிமைமிகுந்த பாற்குழம்பும், அளையும்-தயிரும், ஆச்சியமும் - நெய்யும், பொருவு இல்-ஒப்பில்லாத, பல் சுவைகறிகளும் - பல சுவையையுடையகறிகளும், தேன் தங்குமுக்கனியும் - தேன்பொருந்தியமுக்கனிகளும், அமைத்து - சேகரித்து, உண்பார்க்கு - உண்பவர்க்கு, உதவத்தக்க - கொடுக்கத்தகுந்த, பொன்முதல உள்ளனஎன்று - பொன்முதலியவும் இருக்கின்றனவென்று, எங்கும் - எவ்விடத்தும், ஆராய்வுற்று அழைத்திடும் - தேடியழைக்கின்ற, பின்னோர் - சூத்திரரது, இருதெருநோக்கி - பெருந்தெருவைப்பார்த்து, உள் மகிழ்ந்தான் - மனமகிழ்ந்தான். எ - று.

(பொ ரை) சங்கினைச்சிறுக அரிந்தெடுத்தாற்போலவதாகிய, வெண்மையாகிய அரிசியால் சமைக்கப்பட்ட சோறும், இனிமைமிகுந்தபாற் குழம்பும், தயிரும், நெய்யும், ஒப்பில்லாத பலசுவையையுடைய கறிகளும், தேன் பொருந்திய முக்கனிகளும் சேகரித்து, உண்பவர்க்குக் கொடுக்கத்தகுந்த பொன்முதலியவும் இருக்கின்றனவென்று எவ்விடத்தும் தேடியழைக்கின்ற சூத்திரரது பெருந்தெருவைப்பார்த்து மனமகிழ்ந்தான். எ - று.

(வி - ரை.) வால் - வெண்மை, அரி - அரிசி, சங்கரிந்தெடுத்தாற்போன்றவாலரி, என்றமையால் சங்கின் வெண்மைமிகுதி விளங்காநின்றது. பல்சுவையென்றாராயினும் அறுசுவையென்றேகொள்க. அறுசுவையாவன கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்பன, முக்கனி - வாழைக்கனி, பலாக்கனி, மாங்கனி. பொன்முதல என்றது-பொன்னுணயம் வெள்ளி நாணயம் குடைமுதலியவற்றை. ஆராய்வுற்று ஒருசொல், தேடியென்பது பொருள். இதற்குப்பகுதி ஆராய்வுறு. நான்குவருணத்தாருள் பிற்பட்டவராதலால் சூத்திரனைப்பின்னோர் என்றார். (௬௬)

குருமலர் வெண்பொற் கட்டிமூன் றமைத்த குமுதத்திற்
பொற்கலஞ் செறித்துப், பொருவறு பனிநீ ருலையின்முத் தரிசி
புகட்டியொண் மணித்தழ லிட்டுத், திருகில்வித் துரும விந்
தன மடுக்கித் திருமலி வணிகர்தந் தெருவி, னருமைசால் சிறிய
பிணாக்கள்பண் ணையினு மடுந்தொழில் கற்பது கண்டான்.

(ப - ரை.) குருமலர் - ஒளிவிரிந்த, மூன்றுவெண்பொன் கட்டி அமைத்த - மூன்று வெள்ளிக்கட்டிகளமைத்த, குமுதத்தில் - அடுப்பில், பொன் கலம் செறித்து - பொற்பாத்திரத்தைவைத்து, பொருவு அறுபனி நீர் உலையில் - ஒப்பற்ற பனிநீருலையில், முத்து அரிசிபுகட்டி - முத்தாகிய அரிசியைப்பெய்து, ஒள் மணிதழல் இட்டு - அழகியமாணிக்கமாகிய நெருப்பிட்டு, திருகு இல்வித்துருமம் இந்தனம் அடுக்கி - மாறுபாடில்லாத பவளமாகிய விறகையடுக்கி, திருமலிவணிகர் தெருவில் - செல்வமிகுந்த வணிகரது தெருவில்,

அருமைசால் சிறியபிணுக்கள் - அருமைமிகுந்த சிறுபெண்கள், பண்ணையி னும் - விளையாட்டினும், அடும்தொழில் கற்பது - சமைக்குந்தொழில் கற்பதை, கண்டான் - பார்த்தான். எ - று.

(பொ - ரை.) ஒளிவிரிந்த மூன்று வெள்ளிக்கட்டிகளமைத்த அடுப்பில் பொற்பாத்திரத்தை வைத்து, ஒப்பற்றபனி நீருலையில் முத்தாகிய அரிசியைப்பெய்து, அழகியமாணிக்கமாகிய நெருப்பிட்டு, மாறுபாடில்லாத பவளமாகிய விறகையடுக்கி, செல்வமிகுந்த வணிகரது தெருவில் அருமைமிகுந்த சிறு பெண்கள் விளையாட்டினும் சமைக்குந்தொழில் கற்பதைப்பார்த்தான்.

(வி - ரை) மலர்வெண்பொன்-வினைத்தொகை நிலைத்தொடர், வெண்பொன் - வெள்ளி, குமுதம் - அடுப்பு. வித்துருமம் - பவளம், இந்தனம் - விறகு, வெண்பொற்கட்டி முதலியவையுடைத்தாதல் பெருஞ்செல்வர்க்கல்லது கூடாமையால் 'திருமலிவணிகர்' என்றார். 'அருமைசால் சிறியபிணுக்கள் என்றது, விரதாதிகள் செய்து வருந்தி அருமையாய்ப்பெற்ற பெண்கள் என்றபடி, பண்ணை-மகளிர் விளையாட்டினென்று. அடுதல்-சமைத்தல். (சo)

ஆப்பியான் மெழுகி முத்தநுண் டுகளா னவிர்தரு கோலமு மியற்றிப், பூப்புனை கூந்தற் பார்ப்பன மகளிர் பொலிமற்றைப் பணிதலை நிற்பத், தூப்பயி லுபகர ணங்கொடு மறையோர் துணர்த்தழல் வளர்த்தவி யமரார்க், கூப்பிடு பளிக்கும் பன்மகச் சாலைக் கூட்டமாங் காங்கு கண் டுவந்தான்.

(ப - ரை.) பூ புனை கூந்தல் - மலர்களால் அலங்கரிக்கப்பெற்ற கூந்தலையுடைய, பார்ப்பனமகளிர் - பார்ப்பாரப்பெண்கள், ஆப்பியால்மெழுகி - ஆப்பியால் நிலத்தைமெழுகி, முத்தம் - முத்துக்களின், நுண்துகளால் - நுண்ணிய நீற்றால், அவிர்தரு - விளங்குகின்ற, கோலமும் இயற்றி - கோலமுமிட்டு, பொலி - மிகுதியாகிய, மற்றைபணிதலை நிற்ப - மற்றையதம் வீட்டுவேலைகளில் உடன்பட்டுச்செய்து நிற்க, மறையோர் - வேதியர், தூபயில் உபகரணம்கொடு - பரிசுத்தம் பொருந்திய உபகரணங்களைக்கொண்டு, துணர்தழல்வளர்த்து - சிகையையுடைய நெருப்பை வளர்த்து, அமரர் கூப்பிடு - தேவர்களையழைத்து, அவி அளிக்கும் - அவியைக்கொடுக்கிற, பல் - பலவாகிய, மகச்சாலைக்கூட்டம் - யாகசாலைக்கூட்டங்களை, ஆங்காங்கு - அவ்வவ்விடங்களில், கண்டு உவந்தான் - பார்த்துமனமகிழ்ந்தான். எ - று.

(பொ - ரை.) மலர்களால் அலங்கரிக்கப்பெற்ற கூந்தலையுடைய பார்ப்பாரப்பெண்கள் ஆப்பியால் நிலத்தைமெழுகி, முத்துக்களின் நுண்ணிய நீற்றால் விளங்குகின்ற கோலமுமிட்டு, மிகுதியாகிய மற்றையதம் வீட்டுவேலைகளில் உடன்பட்டுச்செய்து நிற்க, வேதியர் பரிசுத்தம் பொருந்திய உபகரணங்களைக்கொண்டு, சிகையையுடைய நெருப்பைவளர்த்து, தேவர்களையழைத்து, அவியைக்கொடுக்கிற பலவாகியயாகசாலைக்கூட்டங்களை அவ்வவ்விடங்களில் பார்த்து மனமகிழ்ந்தான், எ - று.

(வி - ரை.) ஆப்பி - பசுவின்சாணம் (கோமயம்), மற்றைபணி - அட்டிற்றொழில் முதலியன. தலைநிற்ப ஒருசொல். உபகரணம் - தருப்பை நவதானியம் முதலிய சாமக்ரிகள். நெருப்பெரியும்போது கொழுந்து விட்டெரிதலியல்பாதலால் 'தூணர்த்தழல்' என்றார், அவி - யாகபூர்த்தியில் தேவருக்குண்பிக்குமுணவு. கூப்பிடு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம், பகுதி கூப்பிடு. (சக)

கறைதபு கலைத்தோன் முடிந்தபூ ணூலர் கவின்றரு முஞ்சிநாணரையி, னிறைதரு தானைச் சொருக்குமுன் றூங்க நீளவிட் டவர்குழாங் கூடி, மறைபல கற்குங் கிடைகளு நடைதேர் மாண்புடை யாசிரியன்சொற், குறைவற வுணர்த்தும் பெருமையுங் கண்டுங் கேட்டுமுள்ளுவகைகூர்ந் தனனால்.

(ப - ரை.) கறைதபு - குற்றம் நீங்கிய, கலைதோல் - மானின்தோலை, முடிந்த - ஒரிடத்தில் முடியப்பெற்ற, பூண்நூலர் - பூணூலையுடையவர்களும், கவின் தரு - அழகைக்கொடுக்கிற, முஞ்சிநாண் - முஞ்சியென்னும் புல்லினாற்செய்யப்பட்ட பின்னற்கயிற்றைத் (தரித்த), அரையில் - இடையில், நிறைதருதானைசொருக்கு - நிறையவுடுக்கப்பட்டுள்ள வஸ்திரத்தின் சொருகிய பகுதியை, முன் தூங்க - முற்பக்கத்தில் தொங்கும்படி, நீளவிட்டவர் - நீளமாகவிட்டவர்களுமாகிய பிராமணப்பிரமசாரிகள், குழாம்கூடி - கூட்டமாகத்திரண்டு, பலமறைகற்கும் - அநேகமான வேதங்களை ஓதுகிற, கிடைகளும் - இடங்களையும், நடைதேர் - நல்லொழுக்கத்தில் தேர்ந்த, மாண்பு உடை - நற்குண அமைதியையுடைய, ஆசிரியன் - ஆசாரியன், சொல் குறைவு அற - சொல்லுந்திறத்தில் குறைவில்லாமல், உணர்த்தும் - (அவர்களுக்கு வேதங்களை) போதிக்கிற, பெருமையும் - சிறப்பையும், கண்டும் - பார்த்தும், கேட்டும்——, (குசேலன்) உள்உவகைகூர்ந்தனன் - மனமகிழ்ச்சிமிகுந்தவனானான். எ - று.

(பொ-ரை.) குற்றம் நீங்கியமானின் தோலை ஒரிடத்தில் முடியப்பெற்ற பூணூலையுடையவர்களும், அழகைக்கொடுக்கிற முஞ்சியென்னும் புல்லினாற்செய்யப்பட்ட பின்னற்கயிற்றைத் (தரித்த) இடையில் நிறையவுடுக்கப்பட்டுள்ள வஸ்திரத்தின் சொருகியபகுதியை, முற்பக்கத்தில் தொங்கும்படி நீளமாகவிட்டவர்களுமாகிய பிராமணப்பிரமசாரிகள் கூட்டமாகத்திரண்டு அநேகமான வேதங்களை ஓதுகிற இடங்களையும், நல்லொழுக்கத்தில் தேர்ந்த நற்குண அமைதியையுடைய ஆசாரியன் சொல்லுந்திறத்தில் குறைவில்லாமல் (அவர்களுக்கு வேதங்களை) போதிக்கிற சிறப்பையும் பார்த்தும் கேட்டும் (குசேலன்) மனமகிழ்ச்சி மிகுந்தவனானான். எ - று.

(வி - ரை.) இச்செய்யுளால் அத்தியயநசாலைகளைக்காண்டலையும் வேதமோதுதலைக்கேட்டலையுங்குறித்துச் சொல்லப்பட்டது, இதில் முதலிரண்டடி பிரமசரியாச்சிரமத்திலுள்ள அந்தணரது தன்மையைத்தெரிவித்தன,

ஒற்றைப்பூணூலின் ஒருபக்கத்தில் மான்றோலின் துண்டைமுடிந்திருத்த லும், முஞ்சிப்புல்லாற்செய்யப்பட்ட மூன்றுவடமாகிய அரைநாணை ஆடையின்மேல் தரித்தலும், கச்சமில்லாமல் தட்டுடையாகவுடுக்கும் ஆடையின் சொருக்கை, முன்னே வலப்பக்கத்தில் நீளமாகத்தொங்க விட்டிருத்தலும் அவர்க்குரிய இயல்புகள். மான்றோலையே பூணூலுருவாகச்செய்து தரித்தலுமுண்டு "முப்புரிநூலினன் முஞ்சியன்" எனமஹாகவியும், "ஓர் முனிமைந்தன் நன்னூலுடன் பூணசினத்தை" எனவில்லிபுத்தூராழ்வாரும் கூறுதல் காண்க. கலைத்தோலைக்ருஷ்ணாஜிநம் என்பர்வடநூலார், பூணூல் - தரிக்கும் நூல், இது முப்புரி நூலுக்குப்பெயராக வழங்கும். மறைபல - இருக்கு யசுர் சாமம் என்பனவும், சங்கிதை சாகைவர்க்கம் முதலிய அவற்றினுட்பகுதிகளும், "நடைதேர்மாண்புடையாசிரியனுவான் "குலனருடெய்வங்கொள்கை மேன்மை, கலைபயிறெளிவுகட்டுரைவன்மை, நிலமலை நிறைகோன்மலர் நிகர் மாட்சியும், உலகியலறிவோடுயர் குணமினையவும், அமையப்பெற்றவன். சொற்குறைவறவுணர்த்தும் என்றமையால் அவனது சொல்வன்மை விளங்குகின்றது, சொருக்கு-சொருகு என்னும் முதனிலை திரிந்ததொழிற்பெயர், கிடை - இடம், மாண்பு - பண்புப்பெயர், புவிகுதி, ஆசிரியன் - வடசொற்றிரிபு, உவகை - தொழிற்பெயர், உவபகுதி, கை விகுதி; கூர் - உரிச்சொற்பகுதி, ஆல்அசை, ஓதுமிடங்களையும் ஓதுவிக்கும் விதத்தையும் கண்டுகொண்டும். அவ்வேத முழக்கத்தைக்கேட்டுக்கொண்டும் சென்றனன் என்பது கருத்து.

சீதளப் பளிக்கு மாடமேன் மடவார் செறிதரு புலவியில் வெறுத்த, தீதறு மணிபொன் றரளமா லிகைகள் செல்பவர் காலுறப் பின்னி, மாதர்மேன் மைந்தர் மைந்தர்மேன் மாதர் மாறிவீழ் தரவடிக் கடிசெ, யேதமி லரச வீதியிற் புகுந்தா னிருந்தவக் குசேலமா முனிவன்.

(ப - ரை.) (இவ்வாறுசென்ற) இருதவம் - பெருந்தவத்தையுடைய, மா - பெருமையுள்ள, குசேலமுனிவன் - குசேலமுனிவனுனவன், சீதளம்- குளிர்ச்சியாகிய, பளிக்குமாடமேல்-பளிக்குமாடத்தின்மீது, மடவார் - மாதர்கள், செறிதருபுலவியில் வெறுத்த - தாம் தம்கணவர்மீது பிணக்கத்தால் வெறுத்தெறிந்த, தீதுஅறு - குற்றமற்ற, மணிபொன்தரளமாலிகைகள்-மணிமாலைகளும் பொன்மாலைகளும் முத்துமாலைகளும், செல்பவர் - (அவ்வீதியில் நடப்பவருடைய, கால் - கால்களை, உறபின்னி - மிகவுந்தளைத்து, மாதர்மேல் மைந்தர் - மாதர்மீது மைந்தரும், மைந்தர்மேல் மாதர் - மைந்தர்மீது மாதருமாக, மாறிவீழ்தர - மாறிமாறி விழும்படி, அடிக்கடிசெய் - அடிக்கடிசெய்கிற, ஏதம்இல - குற்றமில்லாத, அரசவீதியில் புகுந்தான் - ராஜவீதியில் புகுந்தான். எ - று.

(பொ - ரை.) (இவ்வாறுசென்ற) பெருந்தவத்தையுடைய பெருமையுள்ள குசேலமுனிவனுனவன், குளிர்ச்சியாகியபளிக்கு மாடத்தின் மீது மாதர்கள் தாம்தம்கணவர் மீது பிணக்கத்தால் வெறுத்தெறிந்த குற்றமற்ற

மணிமாலைகளும் பொன்மாலைகளும் முத்துமாலைகளும் (அவ்வீதியில்) நடப்ப வருடையகால்களை மிகவுந்தளைத்து மாதர்மீது மைந்தரும்மைந்தர் மீது மாதருமாக மாறிமாறி விழும்படி அடிக்கடிசெய்கிற குற்றமில்லாத ராஜவீதியிற் புகுந்தான். எ - று.

(வி-ரை.) சீதளப்பளிக்கு என்பதில் சீதளம் இயற்கையடை, புலவி - ஊடல்' (பிணக்கம்), இது கணவனிடத்து யாதானுமோர் குற்றத்தை யேறிட்டுமாதர் பிணங்குவது, இது உண்டாகித்தணிந்து கூடுவதே கூட்டமென்றும் இது நிகழாத கூட்டத்தில் இன்பமில்லை யென்றுங்கூறுவர் இன்பநூலார், இவ்வாறு மாதர் பிணங்குங்கால், 'கொழுநர் இன்சொற்கள் பல கூறி அவரது ஊடல் தணிவித்தல் முதலியவிவகாரங்கள் பலவுளவாதலால் விரிவஞ்சி விடப்பட்டது, "ஊடுதல் காமத்திற்கின்பமதற்கின்பம், கூடிமுயங்கப் பெறின்" என்பது திருக்குறள். பளிங்கு என்பதுபளிக்கு எனவலித்தல் பெற்றது, இதுவெள்ளைக்கல், இதனைஸ்ப்படிகம் என்பர் வடநூலார், பொன்மாலையைப்பொன்னரிமாலையென்றுங் கூறுவர், தீதறு என்னும் விசேடணத்தை மணிபொன்தரளமாலிகை யென்னு மூன்றற்குங்கூட்டித் தீதறுமணிதீதறு பொன்தீதறுதரளம் என்றுரைத்துக்கொள்க. (௬௩)

மணிகள்கால் யாத்த மாளிகை தோறு மருவிய புலவிதீர் பாக்குப், பணிதரு மைந்தர் சென்னியிற் புயத்திற் பதமெடுத் தோச்சிடு மாத, ரணிகிளர் சிலம்பி னொலியும்பின் னெழுபொன் னவிர்தரு காஞ்சியி னொலியுங், குணில்பொரு முரச முதலிய மடங்கக் குமுறுதல் கேட்டுள்ளே நகைத்தான்.

(ப - ரை.) மணிகள் - ரத்நங்கள், கால்யாத்த - அடிப்படையிற் கொட்டப்பட்டிருக்கிற, மாளிகைதோறும் - மாளிகைகளிலெல்லாம், மருவிய புலவி தீர்பாக்கு - பொருந்திய ஊடலைத்தணிக்கும் பொருட்டு, பணிதருமைந்தர் - வணங்குகின்ற ஆடவரது, சென்னியில் புயத்தில் - தலையிலும் தோளிலும், பதம் எடுத்து ஓச்சிடும் - காலெடுத்துதைக்கிற, மாதர் - மாதரது, அணிகிளர் சிலம்பின் ஒலியும்-அழகோடுகூடி விளங்குகிற சிலம்போசையும், பின் எழு - அதன்பின்னேயுண்டாகிற, பொன் அவிர்தருகாஞ்சியின் ஒலியும் - பொன்னினாற்செய்யப்பட்டுப் பிரகாசிக்கிறகாஞ்சியின் ஓசையும், குணில்பொரு - குறுந்தடியால் அடிக்கப்படுகிற, முரசம் முதலியமடங்க - முரசவாத்தியம் முதலானவை அடங்கும்படி, குமுறுதல் கேட்டு - சத்தித்தலைக்கேட்டு, உள்ளே நகைத்தான் - தனக்குள்ளே சிரித்துக்கொண்டான். எ - று,

(பொ - ரை.) ரத்நங்கள் அடிப்படையிற் கொட்டப்பட்டிருக்கிற மாளிகைகளிலெல்லாம் பொருந்திய ஊடலைத்தணிக்கும் பொருட்டு வணங்குகின்ற ஆடவரது தலையிலும் தோளிலும் காலெடுத்துதைக்கிற மாதரது அழகோடு கூடிவிளங்குகிற சிலம்போசையும், அதன்பின்னேயுண்டாகிற, பொன்னினாற்செய்யப்பட்டுப் பிரகாசிக்கிற காஞ்சியின் ஓசையும், குறுந்தடியாலடிக்

கப்படுகிற முரசவாத்தியம் முதலானவை அடங்கும்படி சத்தித்தலைக்கேட்டுத் தனக்குள்ளே சிரித்துக்கொண்டான். எ - று.

(வி - ரை.) பெரியமாளிகை கட்டத்தொடங்குவோர், அதன் அஸ்திவாரத்தில் நவரத்நங்களையுங்கலந்து கொட்டுவது வழக்கமாதலால், மணிகள் கால்யாத்தமாளிகை' என்றார். பாக்கு எதிர்காலவினையெச்ச விடைச்சொல், சென்னியில் புயத்தில் என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன, ஓச்சுதல் - எறிதல், அது இவ்விடத்துப்பதமெடுத்தென்ற குறிப்பால் உதைத்தலுக்காயிற்று, காஞ்சி - எண்கோவையையுடைய அரைநப்பட்டிகை, இது மாதரிடையணிகளுளொன்று, சிலம்போசையும் காஞ்சியோசையும் முரசமுதலிய வோசைகளினுமிக்கொலித்தலைக்கேட்டு வியந்து தனக்குள்ளே சிரித்துக்கொண்டானென்பது கருத்து. (சுச)

வரைமிசை முளைத்த கழைநுனிக் கழன்ற மாசுண வுரியசைந் தாற்போ, னிரைபடு மாடச் சிகைநடு பதாகை நெடுமரத் துகிலசை வதுவும், புரைதபச் செறித்துக் கட்டிய மணியாற் புனைந்ததோ ரணங் களின் மீது, திரைநரை மூப்பி லமரரூர் விமானஞ் சிக்குண்டு கிடப்ப தும் கண்டான்.

(ப - ரை.) வரைமிசைமுளைத்த-மலையின்மேல் முளைத்த, கழைநுனி - மூங்கிலின் நுனியில், கழன்ற - கழற்றப்பட்ட, மாசுணம்உரி - பாம்புத் தோலானது, அசைந்தாற்போல் - அசைந்தாற்போல, நிரைபடுமாடச்சிகை நடு - வரிசையாயிருக்கிற மாடங்களினுச்சியில் நடப்பட்ட, பதாகைநெடுமரத்துகில் அசைவதுவும் - துவசங்களினநெடிய கொடிச்சீலைகள் அசைவதையும், புரைதப - குற்றமற, செறித்துகட்டிய மணியால் நெருங்கக்கட்டிய மணிகளால், புனைந்த - அலங்கரித்த, தோரணங்களின்மீது - தோரணங்களின்மேல், திரை நரை மூப்பு இல் - திரைநரை மூப்புகளில்லாத, அமரர் - தேவர்கள், ஊர் - ஏறிநடத்துகிற, விமானம் - விமாநங்கள், சிக்குண்டு கிடப்பதும் - சிக்குப்பட்டுக்கிடப்பதையும், கண்டான் - பார்த்தான். எ - று.

(பொ - ரை.) மலையின்மேல் முளைத்த மூங்கிலின் நுனியில் கழற்றப்பட்ட பாம்புத்தோலானது அசைந்தாற்போல, வரிசையாயிருக்கிற மாடங்களினுச்சியில் நடப்பட்ட துவசங்களின் நெடிய கொடிச்சீலைகள் அசைவதையும், குற்றமற நெருங்கக்கட்டிய மணிகளால் அலங்கரித்த தோரணங்களின் மேல் திரைநரை மூப்புகளில்லாத தேவர்கள் ஏறி நடத்துகிற விமாநங்கள் சிக்குப்பட்டுக்கிடப்பதையும் பார்த்தான். எ - று.

(வி - ரை.) கழை - மூங்கில், மாசுணம் - பாம்பு, பாம்புத்தோலைப் பாம்புச்சட்டையென்றல் பெருவழக்கு, மாடம் - மாளிகை, மணியால் புனைந்ததோரணம் என்றமையால், மணிமரகதமணி யெனக்கொள்க, திரை - தோற்சுருக்கம், நரை - மயிர்வெளுப்பு, மூப்பு - முதுமைப்பருவம், இவை

யில்லாதவர் என்றதனுல் கற்பாந்தத்தளவும் இறவாதிருப்பவர் என்றதாயிற்று, இறப்பவரை அமரர் என்றது மங்கலவழக்கு, ஊர்விமானம் - வினைத்தொகை நிலைத்தொடர், சிக்குண்டு - தடைபட்டு, சிக்குண்டு ஒருசொல், பகுதிசிக்குண். பதாகை நெடுமரத்துகிலசைவதுவும் அமரரூர்விமானஞ் சிக்குண்டு கிடப்பதுங்கண்டான் எனமுடித்துக்கொள்க. தோரணங்களின் மீது அமரரூர்விமானம் சிக்குண்டு கிடப்பதும் என்றமையால் மாளிகையின் உயர்வு விளங்குகின்றது. (சரு)

பாற்றினஞ் சுழலும் வசிநுதி நெடுவேற் பார்த்திபர் முன்கடிப் போச்சு, மேற்றுரி முரச வேற்றிடி முழக்க மெழுதலும் வெளிறபுத் தெழுந்து, கூற்றமுண் ணடுங்க வெதிர்பரிக் காரர் குறுகிடா வகை செலுங் களிறு, காற்றுவெம் பரிவி லாழிநீர்ச் சேற்றிற் கால்பதிந் தெழாவகை கண்டான்.

(ப - ரை.) பாறுஇனம் சுழலும் - பருந்தின் கூட்டம் சுழலுகின்ற, வசிநுதிநெடுவேல் - கூர்மையாகிய முனையையுடைய நெடுவேலைத்தாங்கிய, பார்த்திபர்முன் - அரசருக்கெதிரில், கடிப்பு ஓச்சும் - குறுந்தடியால் அடிக்கப்படுகிற, ஏற்றுஉரி முரசம் - ஏற்றுத்தோலாற்செய்த முரசத்தின், வேறு இடிமுழக்கம் - வெவ்வேறுவகையாயொலிக்கின்ற இடிமுழக்கமானது, எழுதலும் - உண்டாதலும், வெளில்தபுத்து எழுந்து - கட்டுத்தறியை முறித்தெழுந்து, கூற்றும் உள்நடுங்க - யமனும்மனம் நடுங்கும்படியாயும், எதிர் - எதிரே, பரிக்காரர்குறுகிடாவகை - குதிரை வீரர்கள் வராதபடியாயும், செல்லும் - விரைந்துசெல்லுகிற, களிறு - யானைகள், காற்று - வாயுவேகமாகச் செல்லுகிற, வெம்பரி - வெவ்வியகுதிரைகளின், விலாழிநீர் சேற்றில் - விலாழி நீராலுண்டாகிய சேற்றின்கண், கால்பதிந்து எழாவகை - கால்கள் பதியப் பெற்றுமேலெழாதவிதத்தை, கண்டான் - பார்த்தான் எ - று.

(பொ - ரை.) பருந்தின் கூட்டம் சுழலுகின்ற கூர்மையாகிய முனையையுடைய நெடுவேலைத்தாங்கிய அரசருக்கெதிரில் குறுந்தடியாலடிக்கப்படுகிற ஏற்றுத்தோலாற்செய்த முரசத்தின் வெவ்வேறுவகையாயொலிக்கின்ற இடிமுழக்கமானது உண்டாதலும், கட்டுத்தறியை முறித்தெழுந்து யமனும் மனம் நடுங்கும்படியாயும், எதிரேகுதிரை வீரர்கள் வராதபடியாயும் விரைந்து செல்லுகிறயானைகள், வாயுவேகமாகச் செல்லுகிறவெவ்விய குதிரைகளின் விலாழி நீராலுண்டாகிய சேற்றின்கண் கால்கள் பதியப்பெற்று மேலெழாத விதத்தைப்பார்த்தான். எ - று.

(வி - ரை.) பகைவரைக்கொன்று தமக்கு விருந்திடுதலால் பருந்துகள் வேற்படையைச்சூழ்ந்துழலா நின்றனவென்றற்கு, 'பாற்றினஞ்சுழலும் வசிநுதிநெடுவேல், என்றார். கடிப்பு - குறுந்தடி, "கடிப்பிடுகண் முரசங்காதத்தோர் கேட்பர்" என்றார் பிறரும். ஏற்றுரி - எருத்துத்தோல், வெளில் - கட்டுத்தறி, கூற்று - உயிருடம்புகளைப்பிரிப்போன், இதுதொழிலாகுபெயர்,

விலாழி - குதிரைவாய்நுரை, வாயால் மொண்டுகொப்பளித்துமிழும் நீர் எனினுமாம், முரசம் - பேரிகை, முரசவொலி கேட்டஞ்சிக்கட்டுத்தறியை முறித்தெழுந்து வேகமாய்ச்செல்லும் யானைகள் குதிரைவாய் நீராலுண்டா கிற சேற்றிற்காலமுந்தி நின்றனவென்பது கருத்து. (சகூ)

தம்மிடை யேற்று ரவரிடைச் சிறந்த தரணிமன் னவரும்வந் தேற்பச், செம்மையிற் கொடுக்கும் பொருளுட ளொழுக்குஞ் செழுங் கர கப்புனல் பெருகி, மும்மைநல் லுலகும் வியப்பநீ ணதியாய் மூடு கிடக் கதிரவ னுறுத்தும், வெம்மைதீர் பாக்குச் சிறுவர்கைத் தோணி விட்டுலா யாடுதல் கண்டான்.

(ப - ரை.) தம்மிடை ஏற்றார் அவரிடை - தம்மிடத்து ஏற்றவராகிய அவரிடத்தில், சிறந்ததரணி மன்னவரும் வந்து ஏற்ப - மேலானபூபாலரும் வந்துயாசிக்க, செம்மையின் கொடுக்கும்பொருளுடன் - செவ்வையாகக் கொடுக்கிறபொருளோடு, ஒழுக்கும்-ஒழுகவிடுகிற,செழுகரகப்புனல் பெருகி- செழுமையாகிய கரகநீரானது பெருகி, மும்மைநல் உலகும்வியப்ப - மூன் றாகிய நல்லவுலகத்தாரும் வியக்கும்படி, நீள்நதியாய் மூடுகிட - நீண்டயாறு கிவிரைந்தோட, கதிரவன் உறுத்தும் வெம்மைதீர்பாக்கு-சூரியன் காய்கின்ற வெயில் நீங்கும்பொருட்டு, சிறுவர்கைத் தோணிவிட்டு-சிறுவர்கள் கைத்தோ ணிசெலுத்தி, உலாய் ஆடுதல் கண்டான் - உலாவி விளையாடுதலைப்பார்த்தான்.

(பொ - ரை.) தம்மிடத்தேற்றவராகிய அவரிடத்தில் மேலானபூபால ரும் வந்துயாசிக்கச் செவ்வையாகக்கொடுக்கிற பொருளோடு ஒழுகவிடுகிற செழுமையாகியகரகநீரானது பெருகி, மூன்றாகிய நல்லவுலகத்தாரும் வியக் கும்படி நீண்டயாறாகி விரைந்தோட, சூரியன் காய்கின்ற வெயில் நீங்கும் பொருட்டு, சிறுவர்கைத்தோணி செலுத்தி, உலாவி விளையாடுதலைப்பார்த் தான். எ - று.

(வி - ரை.) ஏற்றல் - யாசித்தல், செம்மை - மனச்செம்மை, அசா வது நடுவு நிலைமை, கரகம் - நீர்பெய்யுங்கலம், கொடுக்கும் பொருளுட னொழுக்குஞ்செழுங்கரகப்புனலை, தாரை நீர் என்பர், மும்மை - மூன்றாந் தன்மை. கைத்தோணி - சிறுதோணி, இவ்விடத்துக்கையென்பது, கையரி வாள், கைக்குடை யென்பவற்றிற்போலச் சிறுமைப்பொருளில் வந்தது, விய ப்ப என்றகுறிப்பால் உலகு இடவாகுபெயராய் அவ்வுலகிலுள்ளாரையுணர்த் திற்று, தரணி - பூமி. (சஎ)

தெள்ளிய தரள நீற்றிய சுண்ணந் தீற்றிய மாடவாய் தோறும்,
வெள்ளியாற் பொன்னாற் பதுமரா கத்தால் வித்துரு மத்தினன் மற்றை,
யொள்ளிய மணியா லமைத்தகந் திகண்மீ யுயர்கத லிகள்பசுங் கழைக,
ளுள்ளிய வானத் தமரரு நிறுத்தி யுறுத்தபல் லணிகளுங் கண்டான்.

(ப - ரை.) தெள்ளிய தரளம் நீற்றிய சுண்ணம் தீற்றிய - தெளிவாகிய முத்துகளை நீற்றிய சுண்ணச்சாந்தினால் தீற்றப்பெற்ற, மாடவாய்தோறும் - மாடங்களின் வாயில்கள் தோறும், வெள்ளியால் - வெள்ளியினாலும், பொன்னால் - பொன்னினாலும், பதுமராகத்தால் - பதுமராகத்தாலும், வித்துருமத்தினால் - பவளத்தினாலும், மற்றை ஒள்ளியமணியால் அமைத்த - மற்றஒப்பமாகிய மணிகளாலும் அமைக்கப்பட்ட, கந்திகள் - கமுகமரங்கள், மீ உயர்கதலிகள் - மேலேயுயர்ந்த கதலிமரங்கள், பசுங்கழைகள் - பசியகரும்புகள், (ஆகிய இவற்றை) உள்ளியவானத்து அமரரும்-நினைக்கப்பட்ட தேவலோகத்திலுள்ள தேவர்களும், நிறுத்தி உறுத்த-நிறுத்தியலங்கரிக்கப்பட்ட,பல் அணிகளும் கண்டான் - பல அழகுகளையுங்கண்டான். எ - று.

(பொ -.ரை.) தெளிவாகிய முத்துக்களை நீற்றிய சுண்ணச்சாந்தினால் தீற்றப்பெற்ற மாடங்களின் வாயில்கள்தோறும், வெள்ளியினாலும்,பொன்னினாலும், பதுமராகத்தாலும்,பவளத்தினாலும், மற்ற ஒப்பமாகிய மணிகளாலும் அமைக்கப்பட்ட கமுகமரங்கள், மேலேயுயர்ந்த கதலிமரங்கள், பசியகரும்புகள் ஆகிய இவற்றை நினைக்கப்பட்ட தேவலோகத்துள்ள தேவர்களும் நிறுத்தியலங்கரிக்கப்பட்ட பல அழகுகளையுங்கண்டான். எ - று.

(வி - ரை.) தெள்ளியதரளம் என்றது பழுப்புநிறமில்லாமல் மிகவுந் தூய்மையையுடைய முத்துக்களை, 'தரளம் நீற்றிய சுண்ணம் தீற்றிய, என்றதனால் அந்நகரத்தில் சங்குகிளிஞ்சில் முதலியவற்றை நீற்றியசுண்ணம் தீற்றும் வழக்கமில்லையென்பதும்,அந்நகரத்தின் செல்வப்பெருக்கும் விளங்குகின்றது, பதுமராகம்-செம்மணி, வித்துருமம், தரளம், பதுமராகம் என்பன வடசொற்கள், கதலி - வாழை, வானம் - ஆகாயம், அது இடவாகுபெயராய் அங்குள்ளவுலகத்தையுணர்த்திற்று, தீற்றுதல் - பூசுதல், மாடவாய்தோறும் என்பதற்கு மாடங்களினிடங்கள் தோறும் என்றுரைப்பினுமாம், இப்பொருளில் வாய்ஏழனுருபாகக்கொள்க. அமைத்த-செயப்பாட்டுவினைப்பொருட்டு,

தம்மையூ ரிறைவ னகர்வளங் கண்ட சலதரக் குலமவன் பின்னோன், செம்மையா ரரசு புரிநகர் வளத்தின் சிறப்புநோக் கிடல்குறித் தாங்குத், தும்முதீப் பொறிய வேலிள மைந்தர் துணைவிய ரோடுமின் பமரும், விம்முவான் செல்வ மாடமா ளிகையின் மேற்றவழ்ந் திடுவன கண்டான்.

(ப - ரை.) தம்மை ஊர் - தம்மையேறி நடத்துகிற, இறைவன் - தேவேந்திரனது, நகர்வளம்கண்ட - நகரத்தின் செல்வப்பெருக்கைக்கண்ட, சலதரம்குலம் - மேகக்கூட்டங்கள், அவன் பின்னோன் - அவன் தம்பியாகிய ஸ்ரீகண்ணபிரான், செம்மை ஆர் அரசுபுரி - செவ்வையாகிய அரசுசெய்கிற, நகர்வளத்தின் சிறப்பும் - நகரத்தின் செல்வச்சிறப்பையும், நோக்கிடல் குறித்தாங்கு - காணநினைத்தாற்போல, தும்முதீபொறிய வேல் - வீசுகின்ற நெருப்புப்பொறிகளையுடைய வேற்படையைத்தாங்கிய, இளமைந்தர் - யவ்வன

புருடர், துணைவியரோடும் - தம்மனைவியரோடும், இன்பு அமரும் - இன்பம் நுகர்கின்ற, விம்முவான்செல்வம்-மிகுதியாகிய பெருஞ்செல்வத்தையுடைய, மாடமாளிகையின்மேல் - மாடமாளிகையின்மீது, தவழ்ந்திடுவன கண்டான்- தவழ்வனவற்றைக்கண்டான். எ - று.

(பொ - ரை.) தம்மையேறி நடத்துகிற தேவேந்திரனது நகரத்தின் செல்வப்பெருக்கைக்கண்ட மேகக்கூட்டங்கள், அவன்தம்பியாகிய ஸ்ரீகண்ண பிரான் செவ்வையாகிய அரசு செய்கிற நகரத்தின் செல்வச்சிறப்பையும் காணநினைத்தாற்போல, வீசுகிற நெருப்புப்பொறிகளையுடைய வேற்படை யைத்தாங்கிய யவ்வநபுருடர் தம்மனைவியரோடும் இன்பம் நுகர்கின்ற மிகுதி யாகிய பெருஞ்செல்வத்தையுடைய மாடமாளிகையின் மீது தவழ்வனவற் றைக் கண்டான். எ - று.

(வி - ரை.) சலதரம் - நீரைக்கொண்டிருப்பது, இவ்வேதுவால் மேகத் துக்கு சலதரம் என்னும் பெயருண்டாயிற்று. இந்திரன் மேகவாகனனாதலால் அவனைத் 'தம்மையூரிறைவன்' என்றார். காசிபரும் அவர்மனைவியாகிய அதிதி யும் ஸ்ரீமஹாவிஷ்ணுவைத்தமக்குப் புதல்வராகப்பெற விரும்பி நெடுநாள் தவஞ்செய்ய, அத்தவத்துக்கிரங்கி அவர்களுக்குவாமனனாக அவதரித்தார். இத ற்கு முன்னேபடைப்புக்காலத்திற்றானே பிறந்திருக்கிற அதிதிபுத்திரனாகிய இந்திரனிலும் இந்தவாமனன் இளையவனாதலால், அவன் பின்னோன் என்றார். இதனானே திருமாலுக்கு உபேந்திரன் என்னும் பெயருண்டாயிற்று. "புரு கூதனுக்குத்திருத் தம்பியாகிப்புரக்கும்" என்றார் பிறரும். செம்மையாரசு - செங்கோல், குறித்தல் - நினைத்தல், தும்முதல்-வெளிப்படுத்தல் (வீசுதல்), சலதரக்குலம் தவழ்ந்திடுவன கண்டான் எனமுடித்துக்கொள்க. (சுக)

மன்னர்தம் பவளக் காற்குடை பிச்சம் வரைந்திடு கேதன மொ லிய,னன்னர்கொள் சிவிறி யாலவட் டங்க ணனிதுவன் றுவிருள் பரப் பப், பன்னக மணியும் வயிரமு முத்தும் பதித்தபொன் மகுடமுங் குழையு, மின்னல்செய் வாகு வலயமும் வாளும் வெயிலுறப் பரப் புதல் கண்டான்.

(ப - ரை.) மன்னர்தம் - (அந்நகரத்து ராஜவீதியிற்செல்லுகிற) அரச ரது, பவளம் கால்குடை - பவளக்காம்பையுடைய குடைகளும், பிச்சம் - மயிற்பீலிக்குஞ்சங்களும், வரைந்திடு கேதநம் - (இன்னார்க்கு இன்னது உரிய தென்று) வரையறுக்கப்பட்டுள்ள துவசங்களும், ஒலியல் - வஸ்திரத்தாற் செய்த ஒருவித அலங்காரத்தூக்கும், நன்னர்கொள் சிவிறி - நல்லழகைக் கொண்ட விசிறிகளும், ஆலவட்டங்கள் - ஒருவகைப்பெரு விசிறிகளும், நனிதுவன்று - மிகுதியாய் நெருங்கி, இருள்பரப்ப - இருளை நிறைக்க, பன் னகம் - சிறந்தசாதி நாகங்களின் முடியிலுள்ள, மணியும் - மாணிக்கங்களை யும், வயிரம் - வயிரக்கற்களையும், முத்தும் - முத்துக்களையும், பதித்த - அழுத்திச்செய்த, பொன் - பொன்னினாலாகிய, மகுடமும் - கிரீடங்களும்,

குழையும் - காதணிகளும், மின்னல் செய்வாகுவலயமும் - விளங்குதலைச் செய்கிற தோள்வளைகளும், வாளும் - வாளாயுதங்களும், வெயில் உறபரப்புதல் - (அவ்விருளொழியும்படி) வெயிலைமிகுதியாகப்பரப்புதலை, கண்டான் - (குசேலன்) பார்த்தான். எ - று.

(பொ - ரை.) அந்நகரத்து ராஜவீதியிற்செல்லுகிற அரசரது பவளக்காம்பையுடைய குடைகளும், மயிற்பீலிக்குஞ்சங்களும், இன்னார்க்கு இன்னது உரியதென்றுவரையறுக்கப்பட்டுள்ள துவசங்களும்,வஸ்திரத்தாற்செய்த ஒருவித அலங்காரத்தூக்கும், நல்லழகைக்கொண்ட விசிறிகளும், ஒருவகைப் பெருவிசிறிகளும் மிகுதியாய் நெருங்கி, இருளைநிறைக்க, சிறந்தசாதி நாகங்களின் முடியிலுள்ள மாணிக்கங்களையும் வயிரக்கற்களையும் முத்துக்களையும் அழுத்திச்செய்த பொன்னினாலாகிய கிரீடங்களும் காதணிகளும் விளங்குதலைச்செய்கிற தோள்வளைகளும் வாளாயுதங்களும் அவ்விருளொழியும்படி வெயிலைமிகுதியாகப்பரப்புதலைக் குசேலன் பார்த்தான். எ - று.

(வி - ரை.) இவ்வாறே, "படைவெயிலெறிக்கவணி முடியுடன் மணிப்பணிகள் பல வெயிலெறிக்கவுடனே, இடையிடையெடுத்த கொடி நிரையிருளெறிக்க'' எனவில்லிபுத்தூராரும் பாரதத்திற்கூறுதல் காண்க. பவளம், பிச்சம், வயிரம், வாகு என்பன முறையேப்ரவாளம்,பிஞ்சம், வஜ்ரம், பாஹு என்னும் வடசொற்றிரிபுகள். பிச்சம் - மயிற்றோகை, அது இங்கு அதனாலாகியதோர் ராஜசின்னத்துக்குக் கருவியாகுபெயராயிற்று. கேதநம், பந்நகம், மணி, மகுடம், வலயம் என்பன வடசொற்கள். ஒலியல் என்ற ஆடையின் பெயரும் அதனாலாகிய ராஜசின்னத்துக்காயினதும் கருவியாகுபெயரே, இதற்கு மாலை யென்றுரைத்தல் சிறப்பன்று. கேதனவொலியல் எனப்பாடங்கொண்டு கொடிச்சீலை யெனப்பொருளுரைத்தலுமாம். சிவிறி - எழுத்து நிலைமாறல், இது இலக்கணப்போலி எனப்படும். நனி-மிகுதிப்பொருட்டாம் உரிச்சொல். துவன்று - உடன்பாட்டிறந்த காலவினையெச்சம், துவன்று - பகுதி, பந்நகம் என்பது பத்நகம் எனப்பிரிந்து கால்களால் நடவாததென்றும், பந்நம்கம் எனப்பிரிந்து வளைந்து செல்வது என்றும் பொருள்படும், பன்னகமணி - நாகரத்நம், (மாணிக்கம்.) 'பன்னகமணியும் வயிரமுமுத்தும் பதித்த பொன், என்ற விசேடணத்தைக்குழை வலயங்களுக்கும்' 'மின்னல்செய்' என்றவிசேடணத்தை மகுடம் குழைகளுக்குங் கூட்டிக்கோடலுமாம். மின்னல் - தொழிற்பெயர். வாள் - வாளம் என்னும் வடசொல்லின் விகாரமென்றுவது, தனிமேய தமிழ்மொழியென்றுவது கொள்ளலாம். வெயில் - சூரியகாந்தியை நிகர்த்தவொளி, வெம்மையையுடையது, இதுகாரணப்பெயர், வெம்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் முன்னின்ற மகரமெய்யகரமாகத்திரிந்தது, இல் - பெயர் விகுதி, பரப்பு - பர அல்லது பரம்பு என்பதன் பிறவினை, மின்னல்செய் என்பதனை ஒரு சொல்லாகக்கொண்டு மின்னுகிற என்றுரைப்பினுமாம். (௩௦)

வெண்மையிற் றிகழ்ந்த மேனிலை மாட வியலுப ரிகையிடை யிரு ந்து, நுண்மையிற் புனையப் புகுந்தவோர் மைந்த னுவலருங் காமத் தான் மயங்கிப், பண்மையிற் பொலிந்தாள் வழக்கறுத் தமர்க்கும் பட ரரிக் கண்ணித னுதலென், றண்மையிற் செறிந்த சிறுபிறை யிடைப் பொட் டணிந்துவெள் கிடுவது கண்டான்.

(ப - ரை.) வெண்மையின் திகழ்ந்த-வெண்ணிறத்தோடு கூடிவிளங்கு கிற, மேல்நிலைமாடம் - மேனிலைமாடங்களின், வியல் - பெருமையுள்ள, உபரிகை இடை இருந்து - உபரிகையின் மீதிருந்துகொண்டு, நுண்மையின்-நுட்பமாக, புனைய புகுந்த - அலங்கரிக்கப்புகுந்த, ஓர்மைந்தன் - ஒருயவ்வன புருடன், நுவல் அருகாமத்தால் மயங்கி - சொல்லுதற்கரிய காமத்தினால் மயங்கினவனாகி, பண்மையின் பொலிந்தாள் - சிறப்போடு கூடி விளங்குகிற தன் காதலியின், வழக்கு அறுத்து - ஊடலைத்தணித்து, அமர்க்கும் - போர் செய்கிற, படர் அரிகண்ணி-பரந்தசெவ்வரிகளுள்ள கண்களையுடையாளது, நுதல் என்று - நெற்றியென்றெண்ணி, அண்மையில் செறிந்த - சமீபத்திலிருக்கிற, சிறுபிறை இடை - சிறிய பிறையின்கண், பொட்டு அணிந்து - பொட்டிட்டு, (பிறகு அப்பிறைதன் காதலியின் நெற்றியன்றென்றுதெளிந்து) வெள்கிடுவது - நாணுவதை, கண்டான் - பார்த்தான். எ - று.

(பொ - ரை.) வெண்ணிறத்தோடு கூடிவிளங்குகிற மேனிலைமாடங்களின் பெருமையுள்ள உபரிகையின் மீதிருந்துகொண்டு நுட்பமாக அலங்கரிக்கப்புகுந்த ஒருயவ்வனபுருடன் சொல்லுதற்கரிய காமத்தினால் மயங்கினவனாகி, சிறப்போடு கூடி விளங்குகின்ற தன் காதலியின் ஊடலைத்தணித்து, போர்செய்கிற பரந்த செவ்வரிகளுள்ள கண்ணையுடையாளது நெற்றியென்றெண்ணிச்சமீபத்திலிருக்கிற சிறிய பிறையின்கண், பொட்டிட்டு, பிறகு அப்பிறைதன் காதலியின் நெற்றியன்றென்று தெளிந்து, நாணுவதைப்பார்த்தான். எ - று.

(வி - ரை.) வெண்மையின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தது. புனைதல் - தலைப்பணி முதலியவற்றைத்திருத்தியலங்கரித்தல், பொட்டணிதல், பூமுடித்தல், முதலியன. புனையும் பருவத்தனுதல் பற்றிமைந்தன்யவ்வன புருடனுக்காயிற்று, நாயகி நாயகர்கள் இன்பநுகர் காலத்துளதாவது ஊடலேயன்றி வேறென்றன்மையான் 'வழக்கறுத்து' என்பதற்கு ஊடலைத்தணித்து எனப்பொருளுரைக்கலாயிற்று. பொட்டு - திலகம், 'அண்மையிற்செறிந்த சிறு பிறையிடைப் பொட்டணிந்து' என்றமையால் மேனிலைமாடவியலுபரிகைகள் சந்திரமண்டலத்தளவும் உயர்ந்திருக்கின்றன வென்றுயிற்று. வெள்குதற்குக்காரணம் தன் காமமயக்கம். (௩௧)

பொற்றைநன் பாடத் தும்பரோர் மடந்தை புரிகுழற் றரளவெண் பிறையு, மற்றொரு மாடத் தும்பரிற் றங்கு மங்குலிற் செறிந்தவெண்

பிறையுங், கற்றவர் புகழும் பெருந்தவ முனிவன் கண்டிரு பிறைக ளுள் ளனவோ, வுற்றவித் தன்மை யென்னென மயங்கி யுண்மைதேர்ந் துண்ணகை கொண்டான்.

(ப - ரை.) பொற்றை - மலைபோன்ற, நல் - அழகாகிய, மாடத்துஉம்பர் - மாடத்தின்மேல், ஓர் மடந்தை - ஒருமாதின், புரிகுழல் - கட்டப்பட்ட கூந்தலிலணிந்த, தரளவெண்பிறையும் - முத்தினாற்செய்யப்பட்ட வெண் பிறையையும், மற்றொருமாடத்து உம்பரில் தங்கும் - வேறொருமாடத்தின் மேல் தங்கின, மங்குலில் செறிந்த வெண்பிறையும் - மேகத்திற்பொருந்திய வெண்பிறையையும், கற்றவர் புகழும்- வித்வான்களால் புகழப்பெற்ற, பெரு தவம் முனிவன் - பெருந்தவத்தையுடைய குசேலமுனிவன், கண்டு - பார்த்து, இருபிறைகள் உள்ளனவோ - இரண்டு பிறைகளுண்டோ, உற்ற இத் தன்மை என்என - பொருந்திய இத்தன்மையாதென்று, மயங்கி - மயக்க மடைந்து, உண்மை தேர்ந்து-(பிறகு அவ்விருபிறைகளின்) யதார்த்தத்தைத் தெளிந்து, உள்நகைகொண்டான் - தனக்குள்ளேதானே சிரித்துக்கொண் டான். எ - று.

(பொ - ரை.) மலைபோன்ற அழகாகிய மாடத்தின்மேல் ஒருமாதின் கட் டப்பட்ட கூந்தலிலணிந்த முத்தினாற்செய்யப்பட்ட வெண்பிறையையும், வேறொருமாடத்தின்மேல் தங்கின மேகத்திற்பொருந்திய வெண்பிறையை யும் வித்வான்களால் புகழப்பெற்ற பெருந்தவத்தையுடைய குசேலமுனிவன் பார்த்து, இரண்டு பிறைகளுண்டோ, பொருந்திய இத்தன்மையாதென்று மயக்கமடைந்து (பிறகு அவ்விருபிறைகளின்) யதார்த்தத்தைத்தெளிந்து, தனக்குள்ளே தானே சிரித்துக்கொண்டான். எ - று.

(வி - ரை.) பொற்றைநன்மாடம் என்றது மலைபோல மிகப்பெரிதான மாடம் என்றபடி. தரளவெண்பிறை - முத்தினாற்செய்யப்பட்டவெண்பிறை, இது மாதர்தலையணிகளுள் ஒன்று, கற்றவர் - வீட்டு நூல்களைக்கற்றவராகிய அறிஞர். கற்றவர் புகழ்தற்குக்காரணம் பெருந்தவமாமென்க. முனிவன் - இறைவனை மனநஞ்செய்து கொண்டேயிருப்பவன், மயக்கத்திற்குக்காரணம் இருபிறைகளுளவாதல், குசேலமுனிவன் இரண்டு பிறைகளுளவாதல் கண் ணுற்று மயங்கிப்பிறகு சில குறிகளால் உண்மையாகிய பிறையிது வெனத் தெளிந்து தனக்குள்ளே சிரித்துக்கொண்டான் என்பது கருத்து. (ருஉ)

நவமணி மாட மீமிசை யிட்ட நறும்பரி யங்கத்தி னன்கு, துவ ளிடை மடவா ரொடுநல னுகர்ந்த தோள்வலி மைந்தர்க ளவர்பூ, விவர் குழல் சேர்த்துக் கட்டிடக் கதிர்நா ணெடுத்தனர் மயங்குபண் மையிற் று, மூவர்குடி குயினிற் கட்டின ரதனை யுறுமின்னே யென்னவுட் கொண்டான்.

(ப - ரை.) நவமணி - நவரத்நங்கள் பொதிந்த, மாடமீமிசை இட்ட - மாடத்தின் மீதிட்ட, நறுபரியங்கத்தில் -பரிமளமுள்ள சயநத்தில், நன்கு -

நன்றாக, துவள் இடைமடவாரோடு - துவள்கின்ற இடையையுடைய மாத ரோடு, நலன் நுகர்ந்த - போகசுகமநுபவித்த, தோள்வலிமைந்தர்கள் - புஜ பலமுள்ள ஆடவர், அவர் - அம்மாதரது, பூ இவர்குழல் சேர்த்துகட்டிட - மலரையணிந்த கூந்தலைச்சேர்த்துக்கட்ட, கதிர்நாண் எடுத்தனர் - ஒளியை யுடைய கயிற்றையெடுத்தவராகி, மயங்கு பண்மையின் - மயங்குதற்கேது வாகிய அலங்காரத்தால், தாழ்உவர்குடி குயினின் கட்டினர் - அவரது குடி யிருப்பாகிய மேகத்திற் கட்டினுர்கள், அதனை - அதை, உறும் - பொருந் திய, மின்னேயென்ன - மின்னலேயென்று, உட்கொண்டான் - மனத்திற் கொண்டான். எ - று.

(பொ - ரை.) நவரத்நங்கள் பொதிந்த மாடத்தின் மீதிட்ட பரிமள முள்ள சயநத்தில் நன்றாகத்துவள்கின்ற இடையையுடைய மாதரோடு போக சுகமநுபவித்த புஜபலமுள்ள ஆடவர் அம்மாதரது மலரையணிந்த கூந்தலைச் சேர்த்துக்கட்ட, ஒளியையுடைய கயிற்றையெடுத்தவராகி, மயங்குதற்கேது வாகிய அலங்காரத்தால் அவரது குடியிருப்பாகிய மேகத்திற் கட்டினுர் கள், அதைப்பொருந்திய மின்னலேயென்று மனத்திற்கொண்டான். எ-று.

(வி - ரை.) பரியங்கம் - சயநம், இதுவடசொல், துவளிடையென்ற மையால் இடையினது நுண்மைவிளங்காநின்றது, இதுதுவளற்குக்காரணம் முலைப்பொறை, மடவார் நலனுகர்தற்குரியார் மூதியரன்றென்பது தோன்றத் 'தோள்வலிமைந்தர்' என்றார், குயின் - மேகம். (ருக)

பாயொளி விரிக்கும் பொற்றக டிணங்கப் பதித்துநன் கியற்றிய மறுகின், மேயின வரசர் வில்லிடு மகுட மிடைதலி னொன்றொடொன் றுரிஞச், சேயபன் மணியும் வயிரமு மற்றுஞ் சிதர்தர வுதிர்ந்துதங் குவதாற், காயும்வெம் பரல்போற் செல்லுகின் றார்தங் காலிடை யுறு த்துதல் கண்டான்.

(ப - ரை.) பாய்ஒளிவிரிக்கும் - பரவுகிற ஒளியை விரிக்கின்ற, பொன் தகடு - பொற்றகடுகளை ; இணங்கபதித்து - (ஒன்றோடொன்று) பொருந்தப் பதித்து, நன்கு இயற்றிய - நன்றாகச்செய்யப்பட்ட, மறுகின் - ராஜவீதிக ளில், மேயின - பொருந்திய, அரசர் - வேந்தர்களுடைய, வில்இடு மகுடம்- ஒளியை வீசுகிறகிரீடங்கள், மிடைதலின் - நெருங்குதலால், ஒன்றோடு ஒன் றுஉறிஞ - ஒன்றோடொன்று உராய, (அப்பொழுது அவற்றினின்று,) சேய பல்மணியும் - செந்நிறமுள்ள பல இரத்திநங்களும், வயிரமும் - வயிரக்கற்க ளும், மற்றும் - வேறாகிய நீலரத்நம் முதலியவும், சிதர்தர உதிர்ந்து - துண்டு படச்சிந்தி, தங்குவதால் - தங்குதலால், (அவை) காயும்வெம்பரல்போல் - கொடிய பருக்கைக்கற்கள்போல, செல்லுகின்றார்தம் காலிடை உறுத்துதல் - நடக்கிறவர்களது கால்களில் உறுத்துதலை, கண்டான் - பார்த்தான். எ-று.

(பொ - ரை.) பரவுகிற ஒளியை விரிக்கின்ற பொற்றகடுகளை ஒன்றோ டொன்று பொருந்தப்பதித்து நன்றாகச்செய்யப்பட்ட ராஜவீதிகளில் பொரு

ந்திய வேந்தர்களுடைய ஒளியை வீசுகின்ற கிரீடங்கள் நெருங்குதலால் ஒன்றோடொன்று உராய, அப்பொழுது அவற்றினின்று செந்நிறமுள்ள பல ரத்நங்களும் வேறாகிய நீலரத்நம் முதலியவும் துண்டு படச்சிந்தித்தங்குத லால் அவை கொடியபருக்கைக்கற்கள் போல நடக்கிறவர்களது கால்களில் உறுத்துதலைப் பார்த்தான். எ - று.

(வி - ரை.) இதனால் அங்குக்கண்ணனைக்காண வந்துமீளும் அரசர் தொகுதி மிகுதியென்பதை விளக்கியபடி. இச்செய்யுள் செல்வமிகுதியை விளக்குதலால் வீறுகோளணி. இதனை உதாத்தாலங்காரம் என்பர் வடநூலார். மேயின என்ற இறந்தகாலப்பெயரெச்சத்தில் மேபகுதி, யி எழுத்துப்பேறு, இன் இடைநிலை, அ விகுதி, மிடைதலின் என்பதில் இன் ஐந்தாவதனேதுப் பொருளது. (ருச)

மாங்குயின் மருட்டு மழலையங் கிளவி மதர்த்தரி படர்ந்துமை தோய்கட்,பூங்குழன் மடமா தர்களொடுங் கண்ணன் பொன்னுல கோரழுக் கறுப்பப், பாங்குறப் புரியு மின்பநற் கலவிப் பகுப்பெலாங் கைவலாற் கொண்டு, தேங்குமந் நகரார் தங்கண்மா ளிகைமுன் சித்திரித் திருப்பன கண்டான்.

(ப - ரை.) மாகுயில் மருட்டும் - மாமரத்தில் வாழ்கின்ற குயில்களை மருட்டுகின்ற, மழலையங்கிளவி - மழலைச்சொற்களையும், மதர்த்து அரிபடர்ந்துமைதோய் - மதர்த்துச்செவ்வரி பரந்துமை தோய்ந்த, கண் - கண்களையும், பூ குழல் - மலர்களையணிந்த கூந்தலையுமுடைய, மடமாதர்களொடும் - இளம்பெண்களோடும், கண்ணன் - ஸ்ரீகண்ணபிரான், பொன்னுலகோர் அழுக்கறுப்ப - பொன்னுலகத்தாரும் பொறாமைப்படும்படி, பாங்கு உற புரியும் - அழகு மிகச் செய்கிற, இன்பம் - இன்பத்தைத்தருகிற, நல் கலவி பகுப்பு எல்லாம் - நல்ல கலவி வகையாவும், கைவல்லான் கொண்டு - கைதேர்ந்தவனைக்கொண்டு, தேங்கும் அ நகரார் - நிறைந்த அந்நகரத்தார், தங்கள் மாளிகை முன் - தமது மாளிகைகளில், சித்திரித்து இருப்பன கண்டான் - சித்திரித்திருப்பவற்றைப்பார்த்தான். எ - று.

(பொ - ரை.) மாமரத்தில் வாழ்கின்ற குயில்களை மருட்டுகின்ற மழலைச்சொற்களையும், மதர்த்துச் செவ்வரி பரந்துமைதோய்ந்த கண்களையும், மலர்களையணிந்த கூந்தலையுமுடைய இளம்பெண்களோடும் ஸ்ரீகண்ணபிரான் பொன்னுலகத்தாரும் பொறாமைப்படும்படி அழகுமிகச்செய்கிற இன்பத்தைத்தருகிற கலவிவகையாவும் கைதேர்ந்தவனைக்கொண்டு நிறைந்த அந்த நகரத்தார் தமது மாளிகைகளில் சித்திரித்திருப்பவற்றைப்பார்த்தான். எ-று.

(வி - ரை.) குயில்கள் பிறமரங்களிலுந்தங் குதலுண்டாயினும் பெரும்பாலும் மாமரங்களில் தங்குதலியல்பாதலால், 'மாங்குயில்' என்றார். குயில் மருட்டும் என்றது குயிலின் இன்னோசையைமருட்டும் என்றபடி. மதர்த்து படர்ந்து என்னும் வினையெச்சங்கள் தோய் என்னும் வினைகொண்டன. பூங்

குழன்மடமாதர்கள் என்றது ஸ்ரீகண்ணபிரானது அஷ்டமஹிஷிகளை. அவர் ஸ்ரீருக்மிணீ சத்தியபாமை முதலானோர். பொன்னுலகோர் அழுக்கறுத்தல் யாதுக்கெனின், இவ்வாறுயகலவியின்ப நுகர்ச்சி யெமக்கிலதேயென்னு மேக்கத்தாலென்க. கலவிப்பகுப்பு - கலவிவகை, அவை கொக்கோகம் முதலியமதநாகமங்களிற் கூறப்படுகிற ஐவகைப்புணர்ச்சி முதலியன, கைவலான் - சித்திரமெழுதவதில் கைதேர்ந்தவன், இவனுக்கு ஓவியன் என்று பெயர், மாளிகை முன் என்பதில் முன் ஏழனுருபு. (௫௫)

தரைமிசைக் கொடுங்கோ னடவிய கஞ்சன் சாளவ னேசிசு பாலன், வரைநிகர் தோட்கா லயவன னாதி மாற்றலர்ச் செகுத்தபோர்க் கண்ணன்,விரைகெழு வென்றிப் பெரும்புகழ் யாப்பின் மேவர வியைத்திடந் தோறுந், திரைசெறி கடல்சூ முலகினர் வியப்பத் தித்திக்கப் பாடுதல் கேட்டான்.

(ப - ரை.) தரைமிசை - பூலோகத்தில், கொடுங்கோல் நடவிய - கொடுங்கோல் செலுத்தின, கஞ்சன் - கஞ்சனும், சாளவன் - சாளவனும், சிசுபாலன் - சிசுபாலனும், வரைநிகர்தோள் - மலையைநிகர்த்ததோள்களையுடைய, காலயவநன் - காலய வநனும், ஆதி - முதலான, மாற்றலர் - பகைவரை, செகுத்த - கொன்ற, போர் - போரில் வல்ல, கண்ணன் - ஸ்ரீ கண்ணபிரானது, விரை கெழு வென்றி - வேக மிகுந்த வெற்றிகளினுலாகிய, பெரு புகழ் - மிகு கீர்த்தியை, யாப்பின் - செய்யுட்களிலே, மேவர - பொருந்தும்படி, இயைத்து - பாடியமைத்து, (அப்பாடல்களை) இடந்தோறும் - (அந்நகரத்தின்) இடங்களிலெல்லாம், திரை செறி - அலைகள் நெருங்கிய, கடல் சூழ் - கடல் வளைந்த, உலகினர் - உலகத்தார், வியப்ப - அதிசயிக்கும்படி, தித்திக்கப்பாடுதல் - இனிக்கப்பாடுதலை, கேட்டான் - கேட்டான். எ - று.

(பொ - ரை.) பூலோகத்தில் கொடுங்கோல் செலுத்தின கஞ்சனும், சால்வனும், சிசுபாலனும், மலையை நிகர்த்த தோள்களையுடைய காலயவநனும் முதலான பகைவரைக்கொன்ற போரில் வல்ல ஸ்ரீ கண்ணபிரானது வேகமிகுந்த வெற்றிகளினுலாகிய மிகு கீர்த்தியை செய்யுட்களிலே பொருந்தும்படி பாடி யமைத்து (அப்பாடல்களை) (அந்நகரத்தின்) இடங்களிலெல்லாம், அலைகள் நெருங்கிய கடல்வளைந்த உலகத்தார் அதிசயிக்கும்படி இனிக்கப்பாடுதலைக் கேட்டான். எ - று.

(வி - ரை) கஞ்சன் முதலிய கொடியோரை யழித்தருளின ஸ்ரீகண்ணபிரானது வெற்றிப் பெரும்புகழ்களைச் செய்யுட்களிலமைத்தும், அந்தச் சாஹித்தியங்களைச் சங்கீதத்திலமைத்தும் அவ்வூரிலுள்ளார் ஆங்காங்குக் கேட்போர் செவிக்கினிமையாகப் பாடிக்கொண்டிருப்பதைக் குசேலன் கர்ணாமிர்தமாகக் கேட்டுக்கொண்டே சென்றான் என்பது கருத்து. தரை - தரா என்னும் வடசொற்றிரிபு. எல்லாப்பொருள்களையுந் தாங்குவது என்பது பொருள். கொடுங்கோல் - கோணலுள்ள கொம்பின் பெயர். அது உவமை

யாகுபெயராய் நீதி தவறின அரசாட்சியைக்குறித்தது. இதன் எதிர்மொழி செங்கோல், செவ்விய கோல் போறலின்,இதுவும் உவமையாகு பெயர். நட விய என்பதற்குப் பகுதி நடவு, நடத்து என்பது பொருள். இதில் வு பிற வினை விகுதி, இருவு கொளுவு என்பவற்றிலும் இவ்வாறே. உ விகுதியெ னின் வ் உடன்படுமெய். சாளவன் - ஸால்வன் என்னும் வடசொற்றிரிபு; சாலுவன் என்றும் தமிழில் வழங்கும். சிசுபாலனுக்கு உயிர்த்தோழனும், அவன் மணஞ்செய்து கொள்வதாகவிருந்த ருக்மிணீதேவியைக் கண்ணபி ரான் தான் மணஞ்செய்யக் கவர்ந்துசென்றபொழுது அவனோடு போர்செ ய்து தோற்றவனும், அதுகாரணமாக யதுகுலத்தவர்மேல் வைரங்கொண்டவ னும், சிவபெருமானைக்குறித்துத் தவஞ்செய்து அவனருளால் மயன் நிருமித் துக்கொடுத்த இரும்பு விமானத்தைப்பெற்று அதிலேறிக்கொண்டு எங்குந் தடையின்றிச் செல்பவனுமாகிய சால்வன், கண்ணபிரானில்லாத சமயம் பார்த்துத் துவாரகையைச் சேனையோடு வளைந்துகொண்டு, பல மாயைகள் காட்டி இருபத்தேழுநாள் இடையறாமல் யாதவவீரரோடு பெரும்போர்செய் து நிற்கையில், பாண்டவர் வேள்வி காக்கச்சென்ற கண்ணன் மீண்டு வந்து, அவனோடு போர்செய்து, அவன் தான் வசுதேவனைப் பிடித்துக் கட்டித் தலை யறுத்ததாகத் தோன்றுவித்த மாயையைப் பொருள்செய்யாமல், சக்கராயுதத் தைப் பிரயோகித்து அதனால் அவன் தலையை யறுத்தான் என்பது கதை.

திருமாலின் துவாரபாலகர்களாகிய ஜயவிஜயர்கள் ஸநகஸநந்தநர்களு டைய சாபத்தினால், இரணிய இரணியாக்ஷர்களாகவும், ராவண கும்பகர்ணர்க ளாகவும், சிசுபால தந்தவக்த்ரர்களாகவும் பூலோகத்தில் மூன்று ஜந்மமெடுத் தார்கள். அவர்களுள் சிசுபாலன் சேதிதேசத்தரசன். ஸ்ரீ கண்ணபிரானுக்கு அத்தை மகன். இவன் தன் இளமைப்பருவந்தொடங்கி ஸ்ரீ கண்ணபிரானி டத்திற் பகைபாராட்டி வந்து, பிறகு இந்திரப்பிரஸ்த நகரத்தில் நடந்த ராஜ சூய யாகத்தில் தருமபுத்திரனால் ஸ்ரீகண்ணபிரானுக்கு முதற்பூசை செய்யப் பட்டதைக்கண்டு மிகவுங் கோவங்கொண்டு அளவிறந்த வசைச்சொற்களை அச்சபையிற் பிதற்றி, ஸ்ரீகண்ணபிரானது சக்ராயுதத்தால் தலை யறுப்புண்டு இறந்து தேஜோமயமான திவ்ய சரீரம் பெற்று எம்பெருமானது திரு வடியை யடைந்தானென்பது கதை.

யவநதேசாதிபனான காலயவநன் பல பராக்ரமங்களாற் செருக்கடைந்து, நாரதமுனிவனால் கிருஷ்ண பலராமர்களையே தான் எதிர்த்தற்கேற்ற சமர்த் தர்களாக அறிந்து, சேனையைச் சித்தஞ்செய்துகொண்டு போர்செய்யும்பொ ருட்டு மதுரைக்கு வந்த தருணத்தில், ஸ்ரீ கண்ணபிரான் யாதவசேனைக்கு நாசமுண்டாகக்கூடுமென்று நினைத்துக் கடலில் துவாரகையை நிருமித்து, மதுரைச் சனங்களை யெல்லாம் அதில் சேர்த்துவிட்டுத் தான் ஓர் ஆயுதமுமில் லாமல் வெளியே புறப்பட்டுப்போக,காலயவநன் முன்னே நாரதன் சொன்ன அடையாளத்தால் இவன் தான் கிருஷ்ணன் என்று நிச்சயித்து அவனைப் பிடிக் கும்பொருட்டுப் பின்தொடர்தலும்,கிருஷ்ணன் விரைந்தோடி ஒரு குகையில்

புகுந்தொளிக்க, காலயவனனும் பின்தொடர்ந்தோடி, அந்தக் குகையில் நெடுங்காலமாகப் படுத்து நித்திரை செய்துகொண்டிருந்தவனும்,முன்பு அசுரனை வென்று வெகுகாலம் தூக்கமில்லாமல் விண்ணுலகத்தைக் காவல்செய்து அலுத்து, பின்பு தடையில்லாமல் பெருந்தூக்கந் தூங்கவும், தான் அவ்வாறு தூங்கும்பொழுது எழுப்புகிறவன் உடம்பெரிபட்டுச் சாம்பலாய்ப்போகவும் தேவரிடத்தில் வரம்பெற்றவனுமாகிய முசுகுந்தனை நோக்கி, இவன் தான் கண்ணனென்று நினைத்துக் காலாலுதைத்தலும், அம்முசுகுந்தன் துயிலுணர்ந்து கண்விழித்துப்பார்க்க, அந்த மிலேச்சராஜன் உடம்பெரிபட்டு இறந்தான். கண்ணன் தந்திரமாக முசுகுந்தனைக்கொண்டு காலயவனனைக் கொல்லுவித்ததையே கொன்றதாகக் கூறியது. சாளவனையென்பதில் ஏகாரம் எண்ணுப்பொருளது, மாற்றலர் - (மனத்தை) மாற்றுதலுடையவர் எனவேபகைவர் என்றாயிற்று. விரை - விரைவு. இது முதனிலைத்தொழிற் பெயர். யாப்பு - பல சொற்களினால் யாக்கப்பட்டது எனச்செய்யுளுக்குத் தொழிலாகு பெயராகிய காரணப்பெயர். பு - தொழிற்பெயர் விகுதி, மேவர என்பதில் வா துணைவினை. (ருசு)

தன்வயிற் றுலக முழுவது மடக்கித் தந்துமீட் டளித்திடு பிரானை, மின்வயிற் பொலிய வுயர்ந்தமா ளிகையென் வியன்வயிற் றடக்கிமீட் டுமிழும், பொன்வயிற் பொலிந்த விந்நகர் வளப்பம் புகலுதல் சேடற்குமரிதான், முன்வயிற் காண லிந்திரன் றனக்கு முடிவரி தாலென மதித்தான்.

(ப - ரை.) தன்வயிறு - தன் திருவயிற்றினுள்ளே, உலகம் முழுவதும்- எல்லாவுலகங்களையும், அடக்கி-(பிரளயகாலத்திலே) மடக்கிவைத்து, மீட்டு- மறுபடி (பிரளயம்நீங்கினபொழுது), தந்து - கொடுத்து (வெளிப்படுத்தி), அளித்திடு - (அவற்றைப்) பாதுகாத்தருளுகிற, பிரானை - பிரபுவாகிய திருமாலை, (கண்ணபிரானை), மின்வயின்பொலிய - ஒளிதன்னிடத்திலே விளங்கும்படி, உயர்ந்தமாளிகைஎன் - ஓங்கியுள்ள திருமாளிகையென்கிற, வியன் வயிறு அடக்கி - பெரிய தனது வயிற்றினுள்ளேயடக்கி, மீட்டு உமிழும் - மறுபடி வெளிப்படுத்துகிற, பொன்வயின்பொலிந்த - பொன்மயமாகியஇடம் விளங்குகிற, இ நகர் - இந்தத்துவாரகாநகரத்தின், வளப்பம்-மாட்சிமைகளை, புகலுதல் - எடுத்துச்சொல்லுதல், சேடற்கும் - (ஆயிரம்வாயையுடைய)ஆதிசேஷனுக்கும், அரிது - அருமையானதாம், (இந்நகரத்து மாட்சிமைகளையெல்லாம்) முன்வயின்காணல் - முன்னே (எதிரிலே) பார்த்தல், இந்திரன் தனக்கும் - (ஆயிரங்கண்களையுடைய தேவேந்திரனுக்கும்), முடிவு அரிது - முடிதற்கருமையானதாம், (முடியாது) என - என்று, மதித்தான்-(குசேலன்) எண்ணினான். எ - று.

(பொ - ரை.) தன் திருவயிற்றுள்ளே எல்லாவுலகங்களையும் பிரளய காலத்திலே யடக்கிவைத்து, மறுபடி பிரளயம் நீங்கினபொழுது கொடுத்து

(வெளிப்படுத்தி) அவற்றைப்பாதுகாத்தருளுகிற பிரபுவாகிய திருமாலை (கண்ணபிரானை) ஒளிதன்னிடத்திலே விளங்கும்படி ஓங்கியுள்ள திருமாளிகையென்கிற பெரிய தனது வயிற்றினுள்ளே யடக்கி மறுபடி வெளிப்படுத்துகிற பொன்மயமாகிய இடம்விளங்குகிற இந்தத் துவாரகா நகரத்தின் மாட்சிமைகளை எடுத்துச்சொல்லுதல் (ஆயிரம்வாயையுடைய) ஆதிசேஷனுக்கும் அருமையானதாம், (இந்நகரத்து மாட்சிமைகளையெல்லாம்) முன்னே (நேரிலே) பார்த்தல் (ஆயிரங்கண்களையுடைய தேவேந்திரனுக்கும்முடிதற்கருமையானதாம், (முடியாது) என்று (குசேலன்) எண்ணினன். எ - று.

(வி - ரை.) உலகமுழுதும் தன் திருவயிற்றினுள்ளே யடக்கி வெளிப்படுத்துகிற சர்வசக்தனுகிய பெருமானைத் தன்னுள்ளே யடக்கி வெளிப்படுத்தும் பெருமையுள்ளதெனை, துவாரகையிலுள்ள ஸ்ரீகண்ணபிரானது அரண்மனைச்சிறப்பை வருணித்தாராயிற்று. பிரான் - பிரபு என்னும் வடமொழித்திரிபு. இவ்வாறன்றி உபகாரசீலன் எனினுமாம். இரண்டாமடியில் வயிறு உள்ளிடமெனக்கொள்க. இது "கள்ளிவயிற்றி னகில்பிறக்கும்" என்பதில் வயிறு உள்ளிடத்திற்காயினதுபோல்வது. சேடற்கும் இந்திரனுக்கும் என்பவற்றில் உம்மைகள் உயர்வுசிறப்பு. முன்வயின் - முன்னிடத்திலே, பிரத்தியக்ஷமாக என்றபடி. முடிவு என்பதை சேடற்கும் அரிது என்றவிடத்துங் கூட்டுக. முடிவரிது - நான்காம்வேற்றுமைத்தொகை. ஆல் - தேற்றம். நகர் வளப்பத்தை எவ்வளவுசொன்னாலும் எவ்வளவு கண்டாலும் அது ஒருபகுதியைச் சொன்னதும் கண்டதுமாகாதென்றற்கு'முடிவரிது'என்றூர்.சேடன்- சேஷன் என்னும் வடசொற்றிரிபு. பிரளயகாலத்திலும் அழியாமல் எஞ்சிநிற்பவன் என்பதுபொருள். சேஷித்தல்- மிகுதல். (மிச்சமாயிருத்தல்).உலகமுழுவதும் வயிற்றிலடக்கினவனைத் தன் வயிற்றிலடக்குவது, என்றதில் அதிகாலங்காரம் என்னும் பெருமையணி தொனிக்கின்றது, அதனிலக்கணம், ஆதார ஆதேயங்களின்பெருமை வகையைக்கூறுதல். உலகத்தை வயிற்றிற்கொண்டு ஆலிலையிற் பள்ளிகொண்ட சிறு குழந்தையாகிய திருமாலின்வயிறு போலச் சிறியதன்று, அப்பெருமானைத் தான் உட்கொண்டிருக்கும்மாளிகையென்னும் வயிறு என்பார், அதனை 'வியன்' எனவிசேடித்தார். ஸ்ரீகண்ணபிரானை மாளிகை அடக்கி மீட்டுமிழும் என்றது ஸ்ரீகண்ணபிரான் அதனுள் எழுந்தருளி யிருத்தலையும் அங்குநின்றும் வெளிப்படுதலையும் எனக்கொள்க.

மாந்தளிர் மேனி யிலக்குமி மணாளன் மலர்தலைப் புவிவகுக்
குறுங்காற்,றேந்தட மலராற் கணிநக ரிம்மா திரிகைசெய் யெனத்
தெரி விப்பச், சேந்ததன் னான்கு கரங்களாற் சிருட்டி செயப்படு
மாநகர் போலும், வேந்தர்க ணெருங்கு முரசுகண் படாவிவ் விய
னக ரெனவுமுட்கொண்டான்.

(ப - ரை.) வேந்தர்கள் நெருங்கும்-அரசர்கள் நெருங்கின, முரசுகண்படா - முரசம் நித்திரைசெய்யாத, இ - இந்த, வியன்நகர் - விஸ்தீர்ணமான

நகரம், மாந்தளிர்மேனி - மாந்தளிர்போலுந் திருமேனியையுடைய, இலக்குமி - திருமகளுக்கு, மணாளன் - மணவாளனாகிய திருமால், மலர்தலைபுவி - விரிந்த இடத்தையுடைய பூமியை, வகுக்குறுங்கால் - படைக்குங்காலத்தில், தேம் - தேனுள்ள, தடம் - பெரிய, மலராற்கு - தாமரை மலரில் வாழ்வோனாகிய பிரமனுக்கு, அணிநகர் - அழகிய நகரத்தை, இ மாதிரி-இந்தப்பிரகாரமாக, கைசெய்எனத்தெரிவிப்ப - ஒழுங்குபடச்செய்யக் கடவையென்றுதெரிவிக்க, சேந்த - செவந்த, தன்நான்கு கரங்களால் - தனது நான்குகைகளாலும், சிருட்டிசெய்யப்படும் - படைக்கப்பட்ட, மாநகர்போலும் எனவும் - பெரியநகரம்போலும் என்றும், உட்கொண்டான் - மனத்துட்கொண்டான்.

(பொ - ரை.) அரசர்கள்நெருங்கின, முரசம் நித்திரைசெய்யாத இந்த விஸ்தீர்ணமான நகரம், மாந்தளிர்போலுந் திருமேனியையுடைய திருமகளுக்கு மணவாளனாகிய திருமால், விரிந்த இடத்தையுடைய பூமியைப்படைக்குங்காலத்தில், தேனுள்ள பெரிய தாமரை மலரில் வாழ்வோனாகிய பிரமனுக்கு, அழகிய நகரத்தை இந்தப்பிரகாரமாக ஒழுங்குபடச்செய்யக் கடவையென்றுதெரிவிக்கச் செவந்த தனது நான்குகைகளாலும் படைக்கப்பட்ட பெரிய நகர்போலும்என்றும் மனத்துட்கொண்டான். எ - று.

(வி - ரை.) திருமகள் செய்யாளாதலால் 'மாந்தளிர்மேனி யிலச்குமி' என்றார். மணவாளன் - கணவன், அது மணாளன் என மரூஉவாயிற்று. மலர்தலை-வினைத்தொகை நிலைத்தொடர், வகுக்குறு - ஒருசொல்.பகுதியு மதுவே. கை - ஒழுங்கு. கைசெய்தல் ஒருசொல்லாகக்கொண்டு அலங்கரித்தல் எனினுமாம். சேந்த என்பதற்குப் பகுதிசெம்மை. போலும் - அநுமானசந்தேகப் பொருளுணர்த்தும் இசை நிறையசைச்சொல். முரசுகண்படா என்றது முரசங்கள் முழங்கிக்கொண்டேயிருக்கிற என்றபடி. கண்படுதல் - தூங்குதல், இது ஒருசொன்னீரது. வியல்நகர் எனப்பிரித்துப் பெருமைபொருந்திய நகர் எனினுமாம். (௫௮)

சிறந்தவந் நகர வளத்திலிவ் வாறு சிறிதறிந் தற்புத முறலால், விறந்தபல் காத வழிநடந் ததனுன் மேவியவருத்தமு மிளைப்பும், பறந்தன பசியு மொழிந்தது நாவிற் பைம்புன லூறிய துறவு, மறந்தழை மனத்தா னுடலமுஞ் சிலிர்த்து தளிர்த்ததா லதிசயம் பயப்ப.

(ப - ரை.) சிறந்த அந்நகரம்வளத்தில்-(எல்லாநகரங்களினுஞ்) சிறந்த அந்த துவாரகாநகரத்தின் (மிகுந்த) வளங்களில், சிறிது-சிறிதுபகுதியையே, இ ஆறு அறிந்து - இப்படியறிந்து, அற்புதம் உறலால்-ஆச்சரியமடைதலால், அறம்தழைமனத்தான் - தருமம் நிறைந்தமனத்தையுடையவனாகிய குசேலனது, விறந்த - மிகுந்த, பல்காதம்வழிநடந்ததனால் - அநேககாதவழி தூரம் நடந்துவந்ததனால், மேவிய - உண்டாகிய, வருத்தமும் இளைப்பும் - துன்பமும் மெலிவும், பறந்தன - (இருந்த இடமுந்தெரியாதபடி) விரைந்தொழிந்

தன, பசியும்ஒழிந்தது - பசியும் நீங்கிற்று, நாவில் - நாக்கிலே, பைபுனல் - குளிர்ந்தநீர், உறவும் ஊறியது - மிகவுஞ்சுரந்தது, உடலமும்-(அவனது) மிக மெலிந்த) உடம்பும், அதிசயம்பயப்ப - (காண்பார்க்கு) வியப்பையுண்டாக்கும்படி, சிறிதுதளிர்த்தது - கொஞ்சம் தழைத்தது (பூரித்தது). எ - று.

(பொ - ரை.) எல்லாநகரங்களினுஞ் சிறந்த அந்த துவாரகாநகரத்தின் மிகுந்த வளங்களில் சிறிது பகுதியையே இப்படியறிந்து ஆச்சரியமடைதலால், தருமம் நிறைந்த மனத்தையுடையவனாகிய குசேலனது மிகுந்த அநேக காதவழிதூரம் நடந்துவந்ததனாலுண்டாகிய துன்பமும் மெலிவும் இருந்த இடமுந்தெரியாதபடி விரைந்தொழிந்தன, பசியும் நீங்கிற்று, நாக்கிலேகுளிர்ந்தநீர் மிகவுஞ்சுரந்தது; அவனதுமிகமெலிந்த வுடம்பும் காண்பார்க்கு வியப்பையுண்டாக்கும்படி கொஞ்சம் தழைத்தது (பூரித்தது), எ - று.

(வி - ரை.) அந்நகர்வளத்திற் சிறிதறிந்ததனால் இவ்வளவு ஆநந்தம் உண்டாயிற்றென்றதனால் முழுது மறிந்தால் உளதாகும் ஆநந்தத்துக்கோரெல்லையில்லையென்பதினிது விளங்குகின்றது. இவ்வாறு - கீழ்ச்சொன்னபடி. அற்புதம் - அத்புதம் என்னும் வடசொற்றிரிபு. விறந்த - நெருங்கிய என்றும் அஞ்சத்தக்க என்றும் உரைப்பினுமாம். விற - பகுதி, விறப்பு - அச்சம், நெருக்கம், பெருக்கம். "விறப்புமுறப்பும் வெறிப்புஞ்செறிவே" அவற்றுள், "விறப்பேவெரூஉப் பொருட்டுமாகும்" என்பன தொல்காப்பியச் சூத்திரங்கள். காதம் - ஏழரைநாழிகைவழி, (பத்துமைல்), பைம்புனல் - தண்ணீர், இதில் பசுமை குளிர்ச்சிப்பொருளது. உடலம் என்பதில் அம் சாரியை. உடல் என்பதே பூர்வரூபம். இதிலுள்ளவும்மை இறந்ததுதழீஇயது, இழிவு சிறப்பு எனினுமாம். உடலம்தளிர்த்தது என்பதற்கு மெய்ம்மயிர் சிலிர்த்தது என்றுரைத்தலுமாம். உற - மிகுதியுணர்த்தும் உறு என்னும் உரிச்சொல்லடியாகவந்த செயவெனெச்சம், இது ஊறியதுஎன்னும் வினைகொண்டது, 'உறவு மறந்தழைமனத்தான்' என்றியைத்துரைப்பினுமாம். (௫௧)

ஐந்துதுந் துபியின் முழக்கமு மன்ன ரவிர்கழ லொலியும்
வாம்பரியி,னந்தலி லார்ப்புங் கந்தடுகளிற்றினரலனுந் தேரரவமுஞ்
சேர்ந்,தந்திநின் றெழுந்து விண்முகடுடைக்க வளவில்பல் வளத்த
வாய்ப்பொலியுஞ், சந்தமார் கண்ண பிரான்றிருக் கோயிற் றனித்
தலை வாயிலைச் சார்ந்தான்.

(ப - ரை.) ஐந்துதுந்துபியின் - ஐவகைவாத்தியங்களினுடைய, முழக்கமும் - பேரொலியும், மன்னர் - அரசரது. அவிர் - விளங்குகிற, கழல்ஒலியும் - வீரக்கழலின்ஓசையும், வாம் - தாவுகிற, பரியின் - குதிரையின், நந்தல் இல் - கெடுதலில்லாத, ஆர்ப்பும் - ஆரவாரமும்; கந்துஅடு - கட்டுத்தறியை முறிக்கிற, களிற்றின் - ஆண்யானைகளின், நரலலும் - ஒலியும், தேர்அரவமும் - தேர்களின் ஓசையும், சேர்ந்து - ஒருங்குசேர்ந்து, அந்திநின்றுஎழுந்

து-அவ்விடத்தினின்று மேலெழுந்து சென்று, விண்முகடு உடைக்க - தேவலோகத்தின் மேலிடத்தை (அதிர்ச்சியால்) உடைக்கும்படி, அளவு இல் - அளவற்ற, பல்வளத்தஆய்பொலியும் - பலவளங்களை யுடையனவாய் விளங்குகிற, சந்தம்ஆர் - அழகுநிறைந்த, கண்ணபிரான் திருக்கோயில்-ஸ்ரீகண்ணபிரானது சிறந்த அரண்மனையின், தனிதலைவாயிலை - ஒப்பற்ற முதல்வெளி வாசலை, சார்ந்தான் - அடைந்தான். எ - று.

(பொ - ரை.) ஐவகை வாத்தியங்களின் பேரொலியும், அரசரது விளங்குகிற வீரக்கழலி னோசையும், தாவுகிற குதிரையின் கெடுதலில்லாத ஆரவாரமும், கட்டுத்தறியை முறிக்கிற ஆண்யானைகளின் ஒலியும், தேர்களின்ஓசையும் ஒருங்குசேர்ந்து அவ்விடத்தினின்று மேலெழுந்து சென்றுதேவலோகத்தின்மேலிடத்தை அதிர்ச்சியால் உடைக்கும்படி அளவற்ற பலவளங்களை யுடையனவாய் விளங்குகிற அழகு நிறைந்த ஸ்ரீ[illegible] அரண்மனையின் ஒப்பற்ற முதல்வெளிவா[illegible]

(வி - ரை.) துந்துபி - [illegible] னும் ஒருவாத்தியத்தின் சிற[illegible]ப்பொதுப்பெயராய் நின்றது. ஐவகைவா[illegible]த்யம் - தோற்கருவி. தொளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்பன. கஞ்சம் - காம்ஸ்யம் என்னும் வடசொற்றிரிபு. வெண்கலம் என்பதுபொருள். மிடறு - கண்டம், சாரீரம். இவைபஞ்சவாத்யம் எனவும்படும். வாம் - வாவும், செய்யுமெனெச்சவிகாரம். நரிபூனைகாகம்பேய்நாய் பன்றி என்பனபோல ஒலித்தல் குதிரைக்குத்தீயிலக்கணமென்றும், கடல் மேகம் சங்கு இடபம் பேரிகை சிங்கம் சரபம்என்பன போல ஒலித்தல் நல்லிலக்கணமென்றும் கூறுகிற குதிரை நூன் முறைமையில் உத்தமமாக ஒலித்தலை 'நந்தலிலார்ப்பு"என்றார். "சங்கமுமேகமுஞ் சரபமுங்கொடுஞ் - சிங்கமும்போலொலிசெய்வதாம்பரி" என்று திருவிளையாடற் புராணத்தினும், "நரிவெருகு கருங்காகமலகையோரி ஞாளிசெழுங்கேழலெனுங்குரலின்றுகி, விரவுபெருந்திரை வேலைமங்குல் சங்கம் விடைமுழவம் போன்முழக்க மிகவுண்டாகி" என்று திருவாதவூரடிகள் புராணத்தினும் கூறப்படுதல்காண்க, இன்னும் இதன்விரிவெல்லாம் அதிகமாய்க் காணவிரும்பின், அஶ்வஹ்ருதயம், ஹயலீலாவதி, என்னும் வடநூல்களிற் பரக்கக்காணலாம். ஸ்கந்தம் என்னும் வடசொல் கந்துஎனத்திரிந்துவந்தது, இதற்கு மரக்கிளையென்பதுபொருள். அது அதனாலாகிய கட்டுத்தறிக்காயிற்று. இது கருவியாகுபெயர். ரவம் அரவம் என முதலில் அகரம்பெற்றுவந்தது "ரவ்விற்கம்முதலாமுக்குறிலும்" என்பது நன்னூல். ரவம் - ஓசை. அந்தில்-அவ்விடம்என்னும் பொருளதோரிடைச்சொல், அதுபெயர்ச்சொற்றன்மைப்பட, அதன்மேல் நின்றுஎன்னும் ஐந்தன்சொல்லுருபுவந்தது. இனி, அந்த இல் என்பதன்மரூஉஎன்றலுமொன்று, இல் - இடம். வளத்தவாய்ப்பொலியுஞ் சந்தம் என்றியையும். சந்தம் பால்பகா அஃறிணைப்பெயராதலால் வளத்த என்னும் பலவின்பால் வினையாலணையும்பெயர் அதனை விசேடித்தது, 'வளத்ததாய்ப்

பொலியும் எனப்பாடமோதுவது நன்மை. அப்பொழுதுபொலியுங் கோயில் என இயையும்.'சந்தமார்' என்பது ஶ்ரீகண்ணபிரானுக்குவிசேடணமாக்கலாம். வாயில் - இல்வாய் என்பதன் இலக்கணப்போலி. (சூ௦)

கண்டனன் றலைவா யிற்பெருஞ் சிறப்பைக் கழியவு முள்ளத் துத் திகைப்புக், கொண்டன னடங்கி லாவிறும் பூதுங் கொண்ட னெ னெண்ணிடு தற்கும், விண்டசிற் றிடமு மின்றொரு கற்ப மேவி நாங் காத்திருந் திடினுந், தண்டலி னெருக்கந் தவிர்ந்திடா துள் ளாற் சார்வதெவ் வாறென நினைந்து.

(ப - ரை.) தலைவாயில் - தலைவாசலின், பெருஞ்சிறப்பை கண்டனன்- பெருஞ்சிறப்பைக்கண்டு, உள்ளத்து - மனத்தில், கழியவும் - மிகவும், திகைப்புகொண்டனன் - திகைப்பையடைந்தான், (அன்றியும்) அடங்கிலா இறும்பூதும் கொண்டனன் - அடங்காத ஆச்சரியத்தையுமடைந்தான், (பிறகு) எண் இடுதற்கும் - எள்ளிடுதற்கும், விண்ட - வேறாகிய, சிறு இடமும் - அற்பமான இடமும், இன்று - இல்லை, நாம் ஒரு கற்பம் மேவிகாத்திருந்திடினும் - நாம் ஒரு கற்பகாலம் இவ்விடத்தே காத்துக்கொண்டிருந்தாலும், தண்டல் இல் நெருக்கம் - தடைபடாத நெருக்கமானது, தவிர்ந்திடாது - நீங்காது, (இப்படியிருக்க,) உள்ளால் சார்வது எவ்வாறு என நினைந்து - உள்ளே பிரவேசிப்பது எப்படியென்று எண்ணி. எ - று.

(பொ - ரை.) தலைவாசலின் பெருஞ்சிறப்பைக்கண்டு மனத்தில் மிகவும் திகைப்பையடைந்தான், அன்றியும் அடங்காத ஆச்சரியத்தையுமடைந்தான், பிறகு எள்ளிடுதற்கும் வேறாகிய அற்பமான இடமும் இல்லை, நாம் ஒரு கற்பகாலம் இவ்விடத்தே காத்துக்கொண்டிருந்தாலும் தடை படாத நெருக்கமானது நீங்காது, இப்படியிருக்க, உள்ளே பிரவேசிப்பது எப்படியென்றெண்ணி. எ - று.

(வி - ரை.) திகைப்பு - பிரமிப்பு, இது தொழிற்பெயர், கண்டனன் - முற்றெச்சம், இறும்பூது - ஆச்சரியம், எண் - என்னின்பரியாயம், எண் - பெயர்த்திரிசொல், எள் - பெயரியற்சொல், விண்ட - ஜன நெருக்கத்துக்கு வேறாகிய, கற்பம் - ஊழிகாலம், நெருக்கம் - தொழிற்பெயர், பகுதி நெருங்கு, உள்ளால் என்பதில் ஆல் ஏழனுருபாக வேனும் அசையாக வேனும் கொள்ளலாம், எண்ணிடுதற்கும், சிற்றிடமும், என்பவற்றுள் உம்மைகள் இழிவு சிறப்பு, இறந்ததுதழீ இயவுமாம். (சூக)

கன்னல்பல் கழிதல் கவ்பொ ணித்தல் காரிய மன்றினித் துணிந்திம், மன்னிய நெருக்கிற் புகுந்திடி னமக்கு வருவன வருகவென் றோர்ந்து, துன்னிறு ளங்கோ ரரசனைச் சூழ்ந்த சுடர்ந்த கஞ் சுகப்படி வுடையார், பின்னிய வாளார் பற்பலர் தூரப்ப வெரீஇ யினன் சேயிடை யகன்றான்.

(ப - ரை.) பல்கன்னல் கழிதல்கண்டு - அநேக நாழிகைகள் கழிவதைப்பார்த்து, இனி பாணித்தல் காரியம் அன்று - இனித்தாமதித்தல் காரியமல்ல, துணிந்து - துணிவுகொண்டு, இ - இந்த, மன்னிய நெருக்கில் புகுந்திடில் - மிகுதியாகிய நெருக்கத்தில் நுழைந்தால், நமக்கு வருவனவருகவென்று - நமக்கு வரக்கடவன வருகவென்று, ஓர்ந்து - ஆலோசித்து, அங்கு துன்னினன் - அவ்விடத்திருந்தான், (அங்கிருந்த) ஓர் அரசனை சூழ்ந்த-ஒரு அரசனைச்சூழ்ந்திருக்கிற, சுடர்ந்த - ஒளி வீசுகிற, கஞ்சுகம் - சட்டையணிந்த, படிவு உடையார் - உடம்பினையுடையவராகிய சேவகர்கள், மின்னிய - ஒளி விடுகின்ற, வாளால் - வாளாயுதத்தால், பற்பலர் துரப்ப - பற்பலரைத் துரத்துதலும், (கண்டகுசேலன்), வெரீஇயினன் - பயந்தவனாகி, சேயிடை அகன்றான் - நெடுந்தூரம் நீங்கினன். எ - று.

(பொ - ரை.) அநேக நாழிகைகள் கழிவதைப்பார்த்து இனித் தாமதித்தல் காரியமல்ல, துணிவுகொண்டு இந்த மிகுதியாகிய நெருக்கத்தில் நுழைந்தால், நமக்கு வரக்கடவன வருகவென்று ஆலோசித்து அவ்விடத்திருந்தான், அங்கிருந்த ஒரு அரசனைச் சூழ்ந்திருக்கிற ஒளி வீசுகிற சட்டையணிந்த உடம்பினையுடையவராகிய சேவகர்கள் ஒளி விடுகின்றவாளாயுதத்தால் பற்பலரைத்துரத்துதலும், கண்டகுசேலன் பயந்தவனாகி நெடுந்தூரம் நீங்கினன். எ - று.

(வி - ரை.) கன்னல் - ஒரு சிறு பொழுது,அதாவது நாழிகை, பாணித்தல் - கால நீட்டித்தல், பகுதி-பாணி, மன்மிகுதிப்பொருளதாகிய இடைச்சொல், வருவனவருக என்றது வரக்கடவனவாகிய துன்பங்கள் வருவனவாக என்றபடி. ஓர்தல் - ஆலோசித்தல். கஞ்சுகம்-உடம்பின் மீதணியுஞ்சட்டை. படிவம் என்பது படிவு எனவந்தது வடிவம் வடிவு எனவந்தாற்போல.வெரீஇயினன் என்னும் இறந்தகால வினையெச்சத்திற்குப் பகுதி வெருவு. சேய்மை - தூரம், இடை - இடம், அகன்றான் என்பதற்குப்பகுதி அகல், வெரீஇயினன் - முற்றெச்சம். (௬௨)

மீட்டுமுட் டுணியா வணிகொளாங் கொருசார் மென்மெல
மேவின னங்குத், தாட்டுணை பணிந்து கண்ணனுக் களக்குந் தய
ங்குசெம் பொற்பொதி குவித்த,மோட்டிட மதனாற் காவலர் பல
ரு முடுக்கினர் வாளுறை கழித்துத், தீட்டரும் புகமோ னென்செ
ய்வா னடுங்கித் தியங்கியோட் டம்பிடித் துய்ந்தான்.

(ப - ரை.) மீட்டும் - மறுபடியும், உள் துணியா - மனந்துணிந்து, அணிகொள் - அழகைக்கொண்ட, ஆங்கு ஒருசார் - அவ்விடத்தொரு பக்கத்தில், மெல்மெலமேவினன் - மெல்லமெல்ல வந்து சேர்ந்தான், ஆங்கு - அவ்விடமானது, துணைதாள் பணிந்து - இரண்டு திருவடிகளை வணங்கி, கண்ணனுக்கு - ஸ்ரீ கண்ணபிரானுக்கு, அளக்கும் - திறையாக அளக்கப்படுகிற, தயங்கு - விளங்குகிற, செம்பொன்பொதி குவித்த - செம்பொன்னின்

பொதிகளைக்குவித்து வைத்திருக்கிற, மோட்டிடம் - பெருமையுள்ள இடம், அதனால் - அந்த ஏதுவினால், காவலர்பலரும்-காவலாளர் பலரும், வாள்உறை கழித்து - வாளை உறையினின்றும் வெளியிலெடுத்து, முடுக்கினார் - (குசேலனை) முடுக்கினார்கள், (அப்பொழுது) தீட்டு அருபுகழோன் - எழுதுதற்கரிய புகழையுடையவனாகிய குசேலன், என்செய்வான்-என்ன செய்வான், நடுங்கி-உடல் நடுங்கி, தியங்கி - மனமயங்கி, ஓட்டம் பிடித்து உய்ந்தான் - ஓட்டம் பிடித்து உயிர் பிழைத்தான். எ - று.

(பொ - ரை.) மறுபடியும் மனந்துணிந்து அழகைக்கொண்ட அவ்விடத்தொரு பக்கத்தில் மெல்லமெல்ல வந்து சேர்ந்தான், அவ்விடமானது இரண்டு திருவடிகளை வணங்கி ஸ்ரீ கண்ணபிரானுக்குத் திறையாக அளக்கப்படுகிற, விளங்குகிற, செம்பொன்னின் பொதிகளைக்குவித்து வைத்திருக்கிற பெருமையுள்ள இடம், அந்த ஏதுவினால் காவலாளர் பலரும் வாளை உறையினின்றும் வெளியிலெடுத்து, குசேலனை முடுக்கினார்கள், அப்பொழுது, எழுதுதற்கரிய புகழையுடைய வனாகிய குசேலன் என்ன செய்வான், உடல் நடுங்கி மனமயங்கி ஓட்டம் பிடித்து உயிர் பிழைத்தான். எ - று.

(வி - ரை.) துணியா - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம், சார் - பக்கம், மெல்மெல - பையப்பைய, துணை - இரண்டு, பொன்பொதி - பொற்குவியல், மோடு - பெருமை, முடுக்குதல் - ஓட்டுதல், தீட்டரும்புகழோன் என்பதற்கு நூல்களில் எழுதப்பட்ட அருமையாகிய புகழையுடையவன் எனினுமாம், ஒட்டம் பிடித்தல் - விடாதோடுதல். (சுசு)

பின்னரெங் ஙனம்யாம் புகுவதென் றுளத்துப் பெரிதுமா ராய்ந்துநின் றிடுபோ, துன்னருங் கடவுட் கண்ணன தருள்போ லோவருந் தானைதற் சூழ, மன்னனுங் கொருவ னடைந்தனன் கண்டான் மற்றவன் சேனையுட் புகுந்தான், பன்னரும் வருத்தமுடங்குறல் யாவும் பரித்தனன் மென்மெல நடந்தான்.

(ப - ரை.) பின்னர் - பிறகு, யாம் எங்ஙனம்புகுவது என்று - யாம் எப்படி நுழைவதென்று, உள்ளத்து - தன் மனத்தில், பெரிதும் ஆராய்ந்து - மிகவும் ஆலோசித்து, நின்றிடுபோது - நிற்குங்காலத்தில், உன் அரு - நினைத்தற்கரிய, கடவுள் - தெய்வத்தன்மை நிறைந்த, கண்ணனது அருள்போல் - கண்ணபிரானது திருவருள்போல, ஒவு அரு - நீங்குதலில்லாத, தானை - சேனைகள், தற்சூழ - தன்னைச்சூழ்ந்துவர, ஆங்கு - அவ்விடத்தில், மன்னன் ஒருவன் அடைந்தனன் - அரசனொருவன் வந்தான், கண்டான் - அவனைக் கண்டு, அவன் சேனையுள் புகுந்தான் - அவன் சேனையினுள்ளே புகுந்தவனாய், பன் அரு - சொல்லுதற்கரிய, வருத்தம் - துன்பத்தோடு, உடங்குறல் யாவும் - நெருக்குண்டல் முழுதும், பரித்தனன் - சகித்து, மெல்மெல நடந்தான் - பையப்பைய நடந்தான். எ - று.

(பொ-ரை.) பிறகுயாம் எப்படி நுழைவதென்று தன் மனத்தில் மிகவும் ஆலோசித்து, நிற்குங்காலத்தில், நினைத்தற்கரிய தெய்வத்தன்மை நிறைந்த

கண்ணபிரானது திருவருள்போல, நீங்குதலில்லாத சேனைகள் தங்களைச் சூழ்ந்துவர அவ்விடத்தில் அரசனொருவன் வந்தான், அவனைக்கண்டு, அவன் சேனையினுள்ளே புகுந்தவனாய், சொல்லுதற்கரிய துன்பத்தோடு நெருக்குண்டல் முழுதும் சகித்துப் பையப்பைய நடந்தான். எ - று.

(வி - ரை.) 'கண்ணனதருள்போல்' என்றவுவமையால், கண்ணனதருள் பெற்றவர்கள் தமது துன்பம் யாவுமொழிதல்போல, மன்னனொருவன் சேனையைக்கண்டவுடனே குசேலனது மனத்துயரம் முழுதும் நீங்கிற்றென்றதாயிற்று. கண்டான் புகுந்தான் பரித்தனன் என்பன முற்றெச்சங்கள், இம் மூன்று வினையெச்சங்களில், கண்டான் என்பது புகுந்தான் என்னும் வினையையும், அது பரித்தனன் என்னும் வினையையும், அது நடந்தான் என்னும் வினையையும் கொண்டு முடிந்தன. உடங்குறல் - ஒருசொல், பகுதி உடங்குறு. பரித்தல் - சகித்தல், பகுதி - பரி. (௬௪)

நெருக்கினுட் படலா னுடலரை பட்டு நீளிடைக் காலிலத் துருமல், வெருக்கொளச் சென்றுங் கரங்கண் மேலெடுத்தும் விடா துகை யிடிப்புண்டும் வளைந்தும், பெருக்குறு வெயரின் மூழ்கியு மிரண்டாம் பிறப்பிது நமக்கென வுணர்ந்து, திருக்கிளர் துவார பாலர்நிற் கின்ற செவ்விய விடத்தினை யடைந்தான்.

(ப - ரை.) நெருக்கினுள்படலால் - (குசேலன்) நெருக்கத்திலே அகப்பட்டதனால், உடல் அரைபட்டும் - உடம்புநொருங்கியும், நீள் இடை - நெடுந்தூரம், கால்நிலத்து உறுமல் - தன் கால்கள் நிலத்திற்படாமலே, வெருக்கொள - அச்சமுண்டாக, சென்றும் - (சனநெருக்கத்தாற் செலுத்தப்பட்டு) போயும், கரங்கள்மேல் எடுத்தும் - தன் கைகளைத் (தொங்கவிடுதற்கிடமில்லாமையால்) அவற்றை மேலே தூக்கிக்கொண்டும், விடாது கை இடிப்புண்டும் - இடைவிடாமல் (அடுத்திருப்போருடைய) கைகளால் இடிபட்டும், வளைந்தும் - சில இடங்களில் உடம்பு வளைந்து கூட்டத்தினுள் நுழைந்து சென்றும், பெருக்கு உறுவெயரில் மூழ்கியும் - (உடம்பினின்று பெருகுதலை யடைந்த வேர்வை நீரில் முழுகியும், இது நமக்கு இரண்டாம் பிறப்பு என உணர்ந்து - இந்நெருக்கத்தில் தப்பிப்பிழைத்தது நமக்கு இரண்டாவது ஜன்மமென்றெண்ணி, திருகிளர் - சிறப்புமிகுந்த, துவாரபாலர் நிற்கின்ற - அக்கோயிலின் வாயிற் காவலாளர் நிற்கிற, - செவ்விய இடத்தினை அடைந்தான் - நல்ல இடத்தினை அடைந்தான். எ - று.

(பொ - ரை.) குசேலன் நெருக்கத்திலே அகப்பட்டதனால் உடம்பு நொருங்கியும், நெடுந்தூரம் தன் கால்கள் நிலத்திற்படாமலே அச்சமுண்டாக (சனநெருக்கத்தாற்செலுத்தப்பட்டுப்) போயும், தன் கைகளைத்தொங்க விடுதற்கிடமில்லாமையால் அவற்றை மேலே தூக்கிக்கொண்டும், இடைவிடாமல் அடுத்திருப்போருடைய கைகளால் இடிபட்டும், சில இடங்களில் உடம்பு வளைந்து கூட்டத்தினுள் நுழைந்து சென்றும், உடம்பினின்று பெருகுதலை

யடைந்த வேர்வை நீரில் முழுகியும், இந்நெருக்கத்தில் தப்பிப்பிழைத்தது நமக்கு இரண்டாவது சன்மமென்றெண்ணி, சிறப்புமிகுந்த அக்கோயிலின் வாயிற்காவலாளர் நிற்கிற நல்ல இடத்தினையடைந்தான். எ - று.

(வி - ரை.) நெருக்கினுட்படலால் என்றது - அவ்வாயிலில் கண்ணன் சேவைக்குக்காத்திருக்கிற சனங்களின் நெருக்கத்திலே அகப்பட்டதனால் என்றபடி, இப்பாட்டில் நெருக்கத்தாலுண்டாகிற துன்பத்தியற்கைகளையெடுத்துரைத்தலால் இது தன்மை நவிற்சியணியெனப்படும், இதனை ஸ்வபாவோக்தியலங்காரம் என்பர் வடநூலார், நெருக்கு பெருக்கு என்பன நெருங்கு பெருகு என்னும் முதனிலை திரிந்ததொழிற்பெயர்கள், வெரு - வெருவு என்னும் முதனிலைத்தொழிற்பெயரின் விகாரம், கரம் - வடசொல். வளைசல் - உடம்பு நெகிழ்தலுமாம். வெயர் - வேர்வை நீருக்கு முதனிலைத் தொழிலாகுபெயர். திருக்கிளர் என்பதனை துவாரத்துக்கும் துவாரபாலகர்க்கும் அடைமொழியாக்குக. த்வாரபாலர் - வடசொல், செவ்விய - அழகிய, இது குறிப்புப்பெயரெச்சம். (சுகு)

நெடியவ னடியா ரிவரென வெவரு நிகழ்த்திடத் தகுமடையாளம், படியறப் புனைந்து பொலிவுறுந் துவார பாலரைக் கண்டனன் மகிழ்ந்தான், மடிவில்வை ணவசிகா மணிக ளாகு மற்றிவர் வைகுந்தத் துறையுங், கடிதலில் சயவி சயர்களே யிவரைக்கடுப்பவ ரிலரென நினைந்தான்.

(ப - ரை.) நெடியவன் அடியார் இவர் என - திருமாலின் அடியார்கள் இவர்களென்று, எவரும் நிகழ்த்திட தகும் - (காண்போர்) எல்லோரும் சொல்லத்தகுந்த, அடையாளம் - அடையாளங்களை, படிஅறபுனைந்து - ஒப்பில்லாதபடிதரித்து, பொலிவுறு - விளங்குகிற, துவாரபாலரை - திருவாயிற்காவலாளரை, கண்டனன் - பார்த்து, மகிழ்ந்தான் - சந்தோஷித்து, மடிவுஇல் - கெடுதலில்லாத, வைணவசிகாமணிகள் ஆகும் - வைஷ்ணவசிகாமணிகளாகிய, இவர் - இவ்வாயிற்காவலர், வைகுந்தத்து உறையும் - ஸ்ரீ பரமபதத்தில் (துவாரபாலகர்களாய்) வாழ்கிற, கடிதல்இல் - வெறுத்தற்றன்மையில்லாத, சயவிசயர்களே - ஜயவிஜயர்களேயாவர், இவரை கடுப்பவர் இலர் - இவர்களை நிகர்ப்பவர் ஒருவருமில்லை, என - என்று, நினைத்தான் - எண்ணினான்.

(பொ - ரை.) திருமாலின் அடியார்கள் இவர்களென்று காண்போரெல்லோரும் சொல்லத்தகுந்த அடையாளங்களை ஒப்பில்லாதபடி தரித்து விளங்குகிற திருவாயிற்காவலாளரைப்பார்த்துச் சந்தோஷித்து, கெடுதலில்லாத வைஷ்ணவசிகாமணிகளாகிய இவ்வாயிற்காவலர் ஸ்ரீபரமபதத்தில் துவாரபாலகர்களாய் வாழ்கிற வெறுத்தற்றன்மையில்லாத ஜயவிஜயர்களேயாவர், இவர்களை நிகர்ப்பவர் ஒருவருமில்லையென்று எண்ணினான். எ - று.

NO. 16.

PAGE. No 73.



குசேலர் ஸ்ரீகண்ணபிரான் அரண்மனைத் திருவாயிலையடைந்தது.

(வி - ரை.) நெடியவன் - திரிவிக்கிரமனாய் நீண்டவன், அன்றி விசுவரூபங்கொண்டவன், அன்றி பெருமைக்குணமுடையவன். அடியார்-தொண்டர், அடிமையென்னும் பண்படியாகப்பிறந்தபெயர். அடையாளம் - ஸ்ரீ வைஷ்ணவசின்னங்கள், அவை - திருமண்காப்பு, தாமரைமணிமாலை, துளசிமணிமாலை, பஞ்சஸம்ஸ்காரம் முதலியன. படி - பிரதியென்னும் வடசொற்சிதைவு, கண்டனன், மகிழ்ந்தான், என்பன முற்றெச்சங்கள். வைணவசிகாமணியென்றது வைஷ்ணவர்கள் சிரோரத்நம் போலச்சிரசாவகிக்கத்தக்க பெருஞ்சிறப்புள்ளவர் என்றபடி, வைகுந்தம் - வைகுண்டம் என்னும் வடசொற்சிதைவு. கடிதல் - கோபித்தலுமாம், சயவிசயர் - வடமொழியும்மைத்தொகை. உயர்திணையாதலால் பலர்பாலாய் நின்றது, ஜயன் - வெற்றியுடையான். விஜயன் - மிகு வெற்றியுடையான். கடுத்தல் - நிகர்த்தல், இது உபமவாசகம், அந்தச் சய விசயர் ஒருகால் சநகாதியரைத்தடுத்து, அக்குற்றத்தால் பூமியிற்பிறந்தார்கள். இவர் அத்தன்மையரல்லர் என்பார், 'கடிதலில்' சயவிசயர்களை, என்றார். (கக)

முகத்திடை நீண்ட வுரோமமிக் கவனெள் முடிதற்கு மிடமற யாருநகத்தகு பற்ப றுளையுடைக் கந்தை நயந்துகொண்டவன்மதிப் பிலாமை,மிகத்தரும் யாக்கை யுடையவன் றுவார மேவுமப் பாலர்முன் குறுகி, யிகத்தலில் குணத்தீர் கேட்டருள் வீரென் றியம்புறத் தொடங்கின னன்றே.

(ப - ரை.) முகத்திடை நீண்ட உரோமமிக்கவன் - முகத்தில் நீண்டமயிருள்ளவனும், எள்முடிதற்கும் இடம்அற - எள்முடிவதற்கும் இடமில்லாமல், யாரும் நகதகு - யாவரும் நகைக்கத்தகுந்த, பற்பல் துளையுடைகந்தை- பற்பல துவாரங்களுள்ள கந்தைத்துணியை, நயந்துகொண்டவன் - விரும்பித்தரித்திருப்பவனும், மிகமதிப்பு இல்லாமைதரும் - மிகவும் மதியாமையையுண்டாக்குகிற, யாக்கையுடையவன் - சரீரமுள்ளவனும் ஆகிய குசேலன், துவாரம்மேவும் - திருவாயிலிலிருக்கிற, அ பாலர்முன் - அந்த துவாரபாலகருக்கெதிரில், குறுகி - சென்று, (அவர்களைநோக்கி)இகத்தல் இல்குணத்தீர் - வெறுப்பில்லாத நற்குணமுடையீர், கேட்டருள்வீர் என்று-(நான்சொல்வனவற்றை) கேட்டருளக்கடவீரென்று, இயம்புற தொடங்கினன் - சொல்லத்தொடங்கினான். எ - று.

(பொ - ரை.) முகத்தில் நீண்டமயிருள்ளவனும், எள்முடிவதற்கும் இடமில்லாமல் யாவரும் நகைக்கத்தகுந்த பற்பல துவாரங்களுள்ள கந்தைத்துணியை விரும்பித்தரித்திருப்பவனும், மிகவும் மதியாமையையுண்டாக்குகிற சரீரமுள்ளவனும் ஆகிய குசேலன்,திருவாயிலிலிருக்கிறஅந்த துவாரபாலகருக்கெதிரில் சென்று, (அவர்களைநோக்கி,) வெறுப்பில்லாத நற்குணமுடையீர், (நான் சொல்வனவற்றை) கேட்டருளக்கடவீரென்று சொல்லத்தொடங்கினான். எ - று.

(வி - ரை.) முகத்திடை நீண்டவுரோமம், நீண்டமுகரோமம், (தாடி மீசை முதலாயின). நீண்ட, என்றதனால், வபநமில்லாமை விளங்குகின்றது, வபநம் - மழித்தல் (க்ஷௌரம்)-எண் முடிதற்கும் எனக்கொண்டு, எண் என் பது எள் என்பதன் திரிசொல் எனினுமாம், மதிப்பிலாமைமிகத்தரும் யாக்கை யென்றது மிகவும் மெலிந்தயாக்கை யென்றபடி, குறுகி - கிட்டியெனினு மாம், இகத்தயில் என்ற விசேடணத்தால், குணத்தீர் என்பதற்கு நற்குண முடையீர் எனப்பொருளுரைக்கலாயிற்று. கேட்பீர் என்றது கேட்டருள்வீர் எனக்கௌரவவாசியையுபயோகித்தது அவர்களை வசப்படுத்தற்கென்க. மிக்க வன், கொண்டவன், உடையவன் என்பன குசேலன் என்னும் ஒருபொருள் குறித்த பல சொற்கள், குறுகி இயம்புறத்தொடங்கினன் என்றியையும், இயம்புற - ஒருசொல், இயம்புறு - பகுதி. (சுஎ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மக்களுள் மிக்கீர் நீல வண்ணனுக் கடியீர் தூய்தாத்
தொக்கபுண் ணியத்தீர் பாவந் தொலைத்தமா தவருஞ் செய்ய
நக்கபூங் கமலத் தோனு நண் ணரும்புகழ் பெற்றுள்ளீர்
எக்கலை களினும் வல்லீ ரியம்புமென் னாசி கொண்மின்.

(ப - ரை.) மக்களுள்மிக்கீர் - மனிதர்களுள்ளே சிறந்தவர்களே, நீல வண்ணனுக்கு அடியீர்-நீலநிறமுள்ள திருமாலுக்குத் தொண்டராயிருப்பவர் களே, தூய்து ஆ தொக்கபுண்ணியத்தீர் - பரிசுத்தமாகத்திரண்ட சற்கரும முள்ளவர்களே, பாவம் தொலைத்தமாதவரும்-தீவினையைப்போக்கின பெருந் தவமுடைய முனிவர்களும், செய்ய - செந்நிறமுள்ள, நக்க - மலர்ந்து விளங் குகிற, பூ கமலத்தோனும் - தாமரைமலரில் வாழ்கிற பிரமனும், நண்அரு- அடைதற்கரிய, புகழ் - கீர்த்தியை, பெற்றுள்ளீர் - அடைந்திருப்பவர்களே, எக்கலைகளினும் வல்லீர்-எல்லாநூல்களிலும் வல்லவர்களே, இயம்பும்-சொல் லுகிற, என் ஆசி - என் ஆசீர்வாதத்தை, கொள்மின் - பெற்றுக்கொள்ளுங்கள்.

(பொ - ரை.) மனிதர்களுள்ளே சிறந்தவர்களே, நீலநிறமுள்ள திரு மாலுக்குத்தொண்டரா யிருப்பவர்களே, பரிசுத்தமாகத் திரண்ட சற்கரும முள்ளவர்களே, தீவினையைப்போக்கின பெருந்தவமுடைய முனிவர்களும், செந்நிறமுள்ள மலர்ந்து விளங்குகிற தாமரை மலரில் வாழ்கிற பிரமனும் அடைதற்கரிய கீர்த்தியை அடைந்திருப்பவர்களே, எல்லா நூல்களிலும் வல்லவர்களே, சொல்லுகிற என் ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

(வி - ரை.) அந்தணனாதலால் வாழ்த்தினனென்க. மக்கள் - ஐம்பொறி யுணர்வோடு மனமென்பதோரறிவுமுடையார், (விவேகிகள்), மிக்கீர் என் றது அவர்களுள்ளும் மேம்பட்டவர் என்றபடி. மிக்கீர், அடியீர், புண்ணியத் தீர், பெற்றுள்ளீர், வல்லீர், என்பன ஈற்றயலாகாரம் ஈகாரமாகிய விளிகள், மிக்கார் முதலியன பெயர்கள். இனி இவற்றை முன்னிலைப்பன்மையிறந்த

கால முற்றாகவுங்கொள்ளலாம். நீர் தோன்றுவெழுவாய். தூய்து - தூய்மை யென்னும் பண்படியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். புண்ணியத்தீர் - புண்யரூபமாயிருப்பவரே யெனினுமாம், புண்யம் பாபம் என்பன வடசொற்கள். பூங்கமலத்தோன் என்பதே கமலப்பூவோன் என விகுதிபிரித்துக் கூட்டலுமாம், நண்ணரு என்பதில் நன்ன முதனிலைத் தொழிற்பெயராய் நான்காம் வேற்றுமைத்தொகை யென்றாயினும், நன்னா வருஎன வினையெச்ச விகாரமாகவாயினும் கொள்க, சலை - ஆவிறு ஐயான வடசொல், ஆசி - ஆசிஸ் என்னும் வடசொல்லின் விகாரம், வாழ்த்து என்பது பொருள், கொண்மின் - ஏவற்பன்மை, இயம்பும் என்ஆசி - யானியம்பும் ஆசியென்க. (௬அ)

உங்களை நோக்குந் தோறு முவரியும் வெஃகு மேனிச்
செங்கண்மா றனைக்கண் டாங்குச் செறிந்திடு முவகை யந்தக்
கொங்கவிழ் கமலச் சேக்கைக் கோமள வல்லி மார்பன்
றுங்கநற் சேவை யாற்றித் தூயரா தலினு லன்றே.

(ப - ரை.) உங்களை நோக்குந்தோறும் - உங்களைப்பார்க்கும்போதெல்லாம், உவரியும் வெஃகும்மேனி - கடலும் கருமையைவிரும்பத்தகுந்த திருமேனியையும், செம்கண்மால்தனை - செவந்த திருக்கண் களையுடைய திருமாலை, கண்டாங்கு-பார்த்தாற்போல, உவகைசெறிந்திடும் - (எனக்கு) சந்தோஷம் மிகாநின்றது, (அது ஏதனுலெனின்) அந்த - அந்த, கொங்கு அவிழ் - வாசனைவீசுகிற, கமலம் - செந்தாமரை மலராகிய, சேக்கை - ஆசனத்தையுடைய, கோமளம்வல்லி - அழகிய கொடிபோல்வாளாகிய திருமகளை, மார்பன் - திருமார்பிலுடைய திருமாலின், துங்கம் - உயர்ந்த, நல்சேவை - நல்ல அடிமைத்தொழிலை, ஆற்றி - செய்து, (நீங்கள்) தூயர் ஆதலினால் அன்றே - பரிசுத்தராகையாலேயாம். எ - று.

(பொ - ரை.) உங்களைப் பார்க்கும் போதெல்லாம் கடலும் கருமையை விரும்பத்தகுந்த திருமேனியையும் செவந்ததிருக்கண்களையு முடையதிருமாலைப்பார்த்தாற்போல, எனக்குச் சந்தோஷம் மிகாநின்றது, (அதுஎதனுலெனின்)அந்தவாசனைவீசுகிற செந்தாமரைமலராகிய ஆசனத்தையுடைய அழகியகொடி போல்வாளாகிய திருமகளைத் திருமார்பிலுடைய திருமாலின் உயர்ந்தநல்ல அடிமைத்தொழிலைச்செய்து (நீங்கள்) பரிசுத்தராகையாலேயாம்.எ-று.

(வி - ரை.) உவரி-உவர்ப்புச்சுவையுடையது எனக்காரணப்பெயர். உவர்- உப்பு. இ - பெயர்விகுதி.உம் அஃறிணைறிற மிகுதியைவிளக்குதலால் உயர்வு சிறப்பு. உவரியும் வெஃகும்மேனி - கடலின்கருமையினும் மிகக்கரிய திருநிறமுடையவடிவம். திருமாலுக்குக்கடல் கருமைக்கேயன்றித் தன்மைக்கும் உவமையாம். கண்டாங்கு கண்டாலாங்கு என்னும் எச்சத்திரிபாகவேனும், கண்டதாங்கு எனத்தொழிற் பெயரின்விகாரமாக வேனும்கொள்க. அந்த - அகரச்சுட்டின்மரூஉ. அந்தம் கமலம் - அழகியகமலம் எனினுமாம். அந்தக்

கமலம் என்றியையும். கோமளவல்லீ - வடசொற்றொடர். வல்லீயென்னும் வடசொல்லின் ஈற்றீகாரம் இகரமாகிவல்லியெனநின்றது, இது உவமவாகு பெயர். ஒல்கி ஒசியும் மெல்லியவடிவில் ஒப்புவமை. இங்கு, கோமளம் - மென்மை. (சுகூ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

எளியனேன் மறையோர் தங்குலத் துதித்தே னென்பெயர் குசேலன்மிக் கொலிக்கு,நளிகொள்வெண் டரங்கப் பாற்கட னூப்ப ணாகணைத் துயிலொழிந் தடியார்க், களிசெய்தல் லார்க்கீ றுறு ததிட வவதா ரஞ்செய்த கண்ண பிரானோ, டிளமையிற் பல்பல் கலைபயின் றுள்ளே னிசைக்குமுக் குற்றமு மகல.

(ப - ரை.) எளியனேன் - எளியவனாகியநான், மறையோர்தம் குலத்து உதித்தேன் - பிராமணகுலத்திற் பிறந்தவன், என்பெயர் குசேலன் - என் பெயர்குசேலன் என்பதாம், மிக்குஒலிக்கும் - மிகுதியா யொலிக்கிற, நளி கொள் - பெருமையைக்கொண்ட, வெள் - வெள்ளிய, தரங்கம் - அலைகளை யுடைய, பால்கடல் - திருப்பாற் கடலின், நாப்பண் - நடுவிடத்தில், நாகஅணை - சேஷசயநத்தில், துயில் - அறிதுயில்செய்தலை, ஒழிந்து - நீங்கி, அடியார்க்கு அளிசெய்து - (தன்) அடியவர்க்குக் கருணைசெய்து, அல்லார்க்கு ஈறு உறுத்திட - அடியரல்லாதவர்க்கு முடிவுண்டாக்கும்பொருட்டு, அவதாரம்செய்த-திருவவதரித்த, (திருமாலாகிய) கண்ண பிரானோடு - ஸ்ரீக்ருஷ்ணபகவானுடன் (யான்,) இளமையில் - இளம்பருவத்தில், பல் பல் கலை - அனேகமான சாஸ்திரங்களை, இசைக்கும் - சொல்லப்படுகிற, முக்குற்றமும் அகல - மூன்று குற்றங்களும் நீங்க, பயின்றுஉள்ளேன்-(சாந்தீபினிமுனிவரிடத்தில்)கற்றுப்பழகியிருக்கிறேன். எ - று.

(பொ - ரை.) எளியவனாகியநான் பிராமணகுலத்திற் பிறந்தவன், என் பெயர்குசேலன் என்பதாம், மிகுதியாயொலிக்கிற பெருமையைக்கொண்ட வெள்ளிய அலைகளையுடைய திருப்பாற்கடலின் நடுவிடத்தில், சேஷ சயநத்தில் அறிதுயில் செய்தலைநீங்கி, தன் அடியவர்க்குக் கருணைசெய்து அடியரல்லாதவர்க்கு முடிவுண்டாக்கும் பொருட்டுத் திருவவதரித்த (திருமாலாகிய) ஸ்ரீக்ருஷ்ணபகவானுடன் (யான்) இளம்பருவத்தில் அநேகமான சாஸ்திரங்களை, சொல்லப்படுகிற மூன்றுகுற்றங்களும் நீங்க (சாந்தீபினி முனிவரிடத்தில்) கற்றுப்பழகியிருக்கிறேன். எ - று.

(வி - ரை.) முக்குற்றம் - ஐயம் திரிபு அறியாமை என்பன, இவற்றை சந்தேஹம் விபரீதம் அஜ்ஞானம் என்பர் வடநூலார். இவையேகல் விக்குக் குற்றங்கள். ''கற்ககசடறக்கற்பவை''என்றதுவும் இக்கருத்தினதே, முக்குற்றம்என்பதற்குக் காமவெகுளிமயக்கங்கள் எனப்பொருள் கோடல் இவ்விடத்திற் சிறவாது, ''சாந்தீபன், அடிமலரடை யாவிருக்கு மூன்மூன்றுமையமுன் மூன்றும்விட்டோடக்,கடிகெழுகாயாம் பூங்கதிர்மேனிக்கண்ணனோடமர்ந்து

கற்றனனே,, எனக்கீழ் அத்தியாயத்திலும் கூறியிருத்தல் காண்க, இங்ஙனம் நீயார் என்றொருவரும் வினவாதிருக்கையில், அவ்வினாவைத் தானேவருவித்துக்கொண்டு யான் இன்னானெனவிடை கூறுதல், செல்வம் முதலியவற்றால் மேம்பட்டவரிடஞ் செல்வோரது இயற்கையாம். 'கங்கையாடிப் போந்தேன், ஒருபிடிசோறு தம்மின், எனவினாவின்றியும் உத்தரம்நிகழ்ந்ததாலெனின், கொடுப்போன்பால்ஏற்போன்சென்றுழி, அவன், யாண்டுவந்தாய், எனவினாவானாயினும் உத்தரம் நிகழ்தற்கிட முண்மையால், அதுவும்வினாவிய பொருளை அறிவுறுத்தலேயாம் என்க. அங்ஙனங் கொள்ளாக்கால், செப்பிலக்கணம் பொருந்தாமையறிக. 'எளியனேன் - எளிமையென்னும் பண்படியாகப் பிறந்த தன்மையொருமைக் குறிப்புவினையாலணையும் பெயர். இதில்அன்சாரியை. சாரியைபெறாவிடின் எளியேன் எனநிற்கும், இனி, எளியன்என்னும் படர்க்கைப் பெயரின்மேல் ஏன்என்னுந்தன்மை விகுதிவந்து அதனைத்தன் மையாக்கிற்று எனினுமாம், நளி-பெருமையை யுணர்த்தும்உரிச்சொல். "தடவுங்கயவு நளியும்பெருமை" என்பது தொல்காப்பியம், குளிர்ச்சியுமாம், தரங்கம்-வடசொல், நாகணை - நாகவணை யென்பதன்தொகுத்தல். ஒழிந்துஅவதாரஞ்செய்த என இயையும். அடியார்க்களிசெய்தலை, சிஷ்டபரிபாலநம், என்றும், அல்லார்க்கீறுறுத்திடலை, துஷ்டநிக்ரஹம் என்றும் கூறுவர் வடநூலார். ஈறு - இறுதி, இதுஇறுஎன்னும் முதனிலைதிரிந்த தொழிற்பெயர். அவதாரம் என்றது வடசொல். மேன்மையாகிய பிறப்பினை அவதாரம் என்றல் மரபு. இச்சொல், (மேலுலகத்தினின்றும்இறங்குதல்எனப்பொருள்படும். "பனிக்கடலுட்பள்ளிகோளைப்பழ கவிட்டோடி வந்தென் - மனக்கடலில் வாழவல்லமாயமணாளநம்பீ,, என்று ஆழ்வார் அருளிச்செய்தாற்போல, 'பாற்கடலும் பண்நாகணைத்துயிலொழிந்து அவதாரஞ்செய்த கண்ணபிரான், என்றார். இது உபசாரம், முக்குற்றமும் என்பதில் உம்மை முற்றும்மை. (எ0)

கத்துவெண் டரங்கக் கடலைமீ காறுற் கடந்துவண் கரைப்படரொருவற், செத்துமண் டியபன் னெருக்குடை வாயிற் செழுங்கடறன்னைநல் லருளே, பொத்துநெஞ் சகநும் மாற்கடந் தடியார் பொருள்பெறு முததியங் கரையென், றொத்துமா மறைகள் சொலப்படுங் கண்ண னிடையடை தரவுள நினைந்தேன்.

(ப-ரை.) கத்து-ஒலிக்கின்ற, வெள்-வெண்மையாகிய தரங்கம்-அலைகளையுடைய, கடலை-சமுத்திரத்தை, மீகாறுல் - மாலுமியால், கடந்து-தாண்டி, வண்கரைபடர் - அழகியகரையிலே சென்று சேருகிற, ஒருவன் செத்து-ஒருவனை நிகர்த்து, மண்டிய-அடர்ந்த, பல் நெருக்கு உடை - மிக்க ஜநநெருக்கத்தையுடைய, வாயில் - இவ்வரண்மனை வாயிலாகிய, செழுகடல் தன்னை-பெரியசமுத்திரத்தை, நல் அருளே பொத்தும்-சிறந்த கருணையே நிறைந்த, நெஞ்சகம் - மனத்தையுடைய, நும்மால் - உங்களால், கடந்து - தாண்டி, அடியார் - அடியவர்கள், பொருள்பெறும் - (வேண்டிய) பொருளைப்பெறு

தற்குரிய, உததி - கடலின், அம்கரை என்று - அழகியகரை என்று, மாமறைகள்-சிறந்தவேதங்களால், ஒத்து சொல்லப்படும் - (ஒன்றோடொன்று) கருத்து மாறுபாடின்றிச் சொல்லப்படுகிற, கண்ணன் இடை - ஸ்ரீ கண்ணபிரானிடத்தை, அடைதர - (சென்று) சேர, உள்ளம் நினைந்தேன் - மனத்தில் எண்ணினேன். எ - று.

(பொ - ரை.) ஒலிக்கின்ற வெண்மையாகிய அலைகளையுடைய சமுத்திரத்தை மாலுமியால் தாண்டி அழகியகரையிலே சென்றுசேருகிற ஒருவனை நிகர்த்து, அடர்ந்தமிக்க சனநெருக்கத்தையுடைய இவ்வரண்மனை வாயிலாகிய பெரிய சமுத்திரத்தை, சிறந்த கருணையே நிறைந்த மனத்தையுடைய உங்களால் தாண்டி, அடியவர்கள் வேண்டிய பொருளைப்பெறுதற்குரிய கடலின் அழகிய கரையென்று சிறந்த வேதங்களால் ஒன்றோடொன்று கருத்து மாறுபாடின்றிச் சொல்லப்படுகிற ஸ்ரீ கண்ணபிரானிடத்தைச் சென்று சேரமனத்தில் எண்ணினேன். எ - று.

(வி - ரை.) செத்து - உவமவுருபு, இது தொல்காப்பியவுரையிலும் சான்றோரிலக்கியங்களிலும் கண்டது, இலக்கண விளக்கத்திலும் "துணைப்பமலையத்தூக்கே செத்தொடு" எனக்கூறப்பட்டிருத்தல் காண்க. கடலை மீகாமனுதவியால் கடத்தல்போல,இவ்வாயிலை நுமதருளால் யான்கடந்து ஸ்ரீகண்ணபிரானையடையக் கருதினேன் என்பது கருத்து, கடத்தற்கருமையும் இடைவிடாத்தொகுதியும் பற்றி, வாயிலைக் கடல் என்றார். உததி என்றவடசொல்லுக்கு நீர் தங்குமிடம் என்பது பொருள், உதம் - உதகம், (நீர்), கடல், தன்னிடத்திற் குளித்தார்க்கு முத்து பவளம் சங்கு முதலிய பலபொருள்களைத்தருதல்போல, ஸ்ரீ கண்ணபிரான் தன்னையாசிரயித்தவர்க்கு இம்மை மறுமை வீட்டின்பங்களைத் தருதலால் 'அடியார் பொருள்பெறுமுததியங்கரையென் றொத்துமா மறைகள் சொலப்படுங்கண்ணன்' என்றார். கடவுளைக் கருணைக்கடல் என்பது பிரசித்தம். (எக)

வச்சிரத் தடக்கை வாசவ னேவ மஞ்சினம் பொழிந்தகன் மழையை, நச்சும்விண் ணுரிஞ்சும் போகுயர் குவட்டோர் நாகமேந்தித்தடுத் தருளு, மச்சுதன் பாற்சென் றேழையேன் வருகை யறிவித்தென் றனையவட் சேர்த்தன்,மெச்சுறுங் கடனென் றுரைத்தன னெவரும் விரும்புறு குசேலமா தவனே.

(ப - ரை.) வச்சிரம் - வச்சிராயுதத்தை யேந்திய, தடம்கை - பெரிய கையினையுடைய,வாசவன் ஏவ-இந்திரன் ஏவுதலால்,மஞ்சு இனம்பொழிந்த-மேகக்கூட்டம் பொழிந்த, கல் மழையை - கல்மழையை, நச்சும் - யாவராலும் விரும்பப்படுகிற, விண் உரிஞ்சும் - ஆகாயத்தையளாவிய, போகு உயர் குவடு - பழக்கத்தால் உயர்ந்த சிகரங்களையுடைய, ஓர் நாகம் ஏந்தி - ஒரு மலையைக் குடையாயேந்தி, தடுத்தருளும் - தடுத்தருளின, அச்சுதன் பால் சென்று - ஸ்ரீ கண்ணபிரானிடம்போய், ஏழையேன் வருகை அறிவித்து -

ஏழையாகிய என்வரவையறிவித்து, என்றனை - என்னையும், அவண்சேர்த்தல் - அவ்விடத்திற் சேர்த்தல், மெச்சும் - யாவராலும் மெச்சப்படுகிற, நும் கடன் என்று - உமது கடனென்று, எவரும் விரும்புறு - யாவரும் விரும்புகிற, குசேலன் மாதவன் - குசேலனாகிய பெரியதவத்தோன், உரைத்தனன்-சொல்லினன். எ - று.

(பொ - ரை.) வச்சிராயுதத்தை யேந்திய பெரியகையினையுடைய இந்திரன் ஏவுதலால் மேகக்கூட்டம் பொழிந்த கல்மழையை, யாவராலும் விரும்பப்படுகிற ஆகாயத்தையளாவிய பழக்கத்தாலுயர்ந்த சிகரங்களையுடைய ஒரு மலையைக்குடையா யேந்தித்தடுத்தருளின ஸ்ரீ கண்ணபிரானிடம் போய் ஏழையாகிய என்வரவையறிவித்து என்னையும் அவ்விடத்திற் சேர்த்தல் யாவராலும் மெச்சப்படுகிற உமது கடனென்று யாவரும் விரும்புகிற குசேலனாகிய பெரியதவத்தோன் சொல்லினன். எ - று.

(வி - ரை.) வச்சிரம் - வஜ்ரம் என்னும் வடசொற்றிரிபு, வஜ்ராயுதத்தைத்தாங்குதற்குரிமைதோன்ற, 'தடக்கை, என்றார், குவடு-சிகரம், நாகம்-மலை, அது இங்குக்கல்மழையைத் தடுத்தருளும் என்றகுறிப்பால் கோவர்த்தன மலையையுணர்த்திற்று, சுதம் - நழுவல் எனப்பொருள்படுவதோர் வடசொல்லாதலால் அச்சுதன் என்பதற்கு நழுவாதவன் என்பது பொருள். (அழிவற்றவன்), வருகை - தொழிற்பெயர். பெருந்தவத்தினரை யாவரும் விரும்புதலியற்கை யென்பதுதோன்ற. 'எவரும் விரும்புறு குசேலமாதவனே' என்றார்.

(எஉ)

இன்னணம் வாயில் காப்பவர் தம்மோ டீங்கிவன் புகன்மொழி கேளா, வன்னவர் பக்கலு றுஞ்சிலர் மடமை யாலட ரப்படு மனத்தா, ருன்னரு மறைநன் கோர்ந்தவிக் குசேல னொளிர்முகத் திணைவிழி பரப்பிப், பன்னரு மிழிசொற் புகலலுற் றாராற் பரவைசூ ழுலகெலாம் புரப்போய்.

(ப - ரை.) இன்னணம் - இவ்வாறு, ஈங்கு - இவ்விடத்தில், இவன் - இந்தக்குசேலன், வாயில்காப்பவர்தம்மோடு - துவாரபாலகர்களுடனே, புகல்-சொன்ன, மொழி-வார்த்தையை, கேளா-கேட்டு, மடமையால் அடரப்படும் மனத்தார் - அறியாமையால் நிறைக்கப்பட்ட மனத்தையுடையவர்களான, அன்னவர்பக்கல் உறும்சிலர் - அந்த துவாரபாலகர்கள் பக்கத்திலிருக்கிற சிலபேர், உன்அரு - நினைத்தற்கரிய, மறை - வேதங்களை, நன்கு - நன்றாக, ஓர்ந்த - ஆராய்ந்தறிந்த, இ - இந்த, குசேலன் - குசேலனது, ஒளிர்முகத்து - விளங்குகிற முகத்திலே, இணைவிழிபரப்பி - இரண்டு கண்களையும் பரவச்செய்து, பன்அரும் - சொல்லத்தகாத, இழிசொல் - இழிவானவார்த்தைகளை, புகலல் உற்றார் - சொல்லத்தொடங்கினார்கள், பரவைசூழ் - கடல்சூழ்ந்த, உலகு எல்லாம் - உலகமுழுதும், புரப்போய் - காக்கிறவனாகிய பரீக்ஷித்து மஹாராஜனே. எ - று.

(பொ - ரை) இவ்வாறு இவ்விடத்தில் இந்தக்குசேலன் துவாரபாலகர் களுடனே சொன்ன வார்த்தையைக்கேட்டு, அறியாமையால் நிறைக்கப் பட்ட மனத்தையுடையவர்களான அந்த துவாரபாலகர்கள் பக்கத்திலிருக்கிற சிலபேர், நினைத்தற்கரிய வேதங்களை நன்றாக ஆராய்ந்தறிந்த இந்தக்குசேல னது விளங்குகிற முகத்திலே இரண்டு கண்களையும் பரவச்செய்து, சொல் லத்தகாத இழிவானவார்த்தைகளைச் சொல்லத்தொடங்கினார்கள், கடல்சூழ் ந்த உலகமுழுதும் காக்கிறவனாகிய பரீக்ஷித்து மஹாராஜனே. எ - று.

(வி - ரை.) இன்னணம் - இன்னவண்ணம் என்பதன்மரூஉ, பக்கல் - பக்ஷம் என்றும்வடசொற்சிதைவு, பரவை - பரவியுள்ளது எனக்காரணப் பெயர், பர அல்லது பரவு பகுதி, ஐ கருத்தாப்பொருள் விகுதி. புரப்போய்- புரப்பான் என்பதன் விளியான புரப்பாய் என்பதன் விகாரம், ஆல் - அசை.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வருந்துபல் உலகும் போற்ற மாற்றலர் கூற்றூர் மேவச்
செருத்தர சாளுங் கண்ணச் செம்மலெங் கே நீயெங்கே
யிழுக்கபல் துவாரக் கந்தை யேழைப்பாப் பானே சற்றும் [ம்.
பகுத்தறிந் திடலற் றாய்கொல் பயனின்மூப் படைந்தாய் போலு

(ப - ரை.) இழுக்க - இழிவான, பல்துவாரம் - அநேகம் தொளைகளு ள்ள, கந்தை - கந்தைத்துணியையுடுத்த, ஏழைபார்ப்பானே - வறியனானபிரா மணனே, வருந்த - படைக்கப்பட்ட, பல்உலகும் - எல்லாவுலகங்களையும், போற்ற - காப்பாற்றும் பொருட்டு, மாற்றலர் - (அவ்வுலகங்களுக்குப் பகை வராயுள்ள) கொடியவர், கூற்றூர்மேவ-யமலோகத்திற் சேரும்படி, செரு த்து - (அவர்களை) அழித்து, அரசு ஆளும் - அரசாட்சிசெய்கிற, கண்ணன் செம்மல் - ஸ்ரீ கண்ணபிரானாகிய பெரியோன், எங்கே - எந்நிலையிலேயிருக் கிறான், நீ எங்கே - நீ எந்நிலையிலேயிருக்கிறாய், பகுத்து அறிந்திடல் அற் றாய்கொல் - (அவனது நிலைமைக்கும் உனது நிலைமைக்கும்உள்ள வித்தியா சத்தை) பிரித்து அறிந்திட்டாயில்லையோ, (தெளிவாகவுள்ள இதனை யறி யாத நீ), பயன்இல் மூப்பு அடைந்தாய் போலும் - பிரயோஜநமில்லாத கிழத் தனத்தை அடைந்தனைபோலும். எ - று.

(பொ - ரை.) இழிவான அநேகம் தொளைகளுள்ள கந்தைத்துணியை யுடுத்தவறியனான பிராமணனே, படைக்கப்பட்ட எல்லாவுலகங்களையும் காப்பாற்றும் பொருட்டு அவ்வுலகங்களுக்குப்பகைவராயுள்ள கொடியவர் யமலோகத்திற்சேரும்படி அவர்களையழித்து அரசாட்சி செய்கிற ஸ்ரீ கண்ண பிரானாகிய பெரியோன் எந்நிலையிலேயிருக்கிறான், நீ எந்நிலையிலேயிருக்கிறாய், சிறிதும் அவனது நிலைமைக்கும் உனது நிலைமைக்கும் உள்ள வித்தியாசத் தை பிரித்து அறிந்திட்டாயில்லையோ, தெளிவாகவுள்ள இதனை யறியாத நீ பிரயோஜநமில்லாத கிழத்தனத்தை அடைந்தனை போலும். எ - று.

(வி - ரை.) உலகத்திலுள்ள சாதுக்களைப்பாதுகாக்கவும், அவர்க்குத் தீங்குசெய்வாரை நாசப்படுத்தவும் திருவவதரித்ததன்மையைவிளக்க, 'வகுத்த பல்லுலகும்போற்ற மாற்றலர்கூற்றூர்மேவச்செகுத்தரசாளுங்கண்ணச் செம்மல்,' என்றார். இங்ஙனம் ஸ்ரீ கண்ணபிரானது மேன்மையை அடைமொழியால் விளக்கினவர், குசேலனது இழிவை அவ்வாறு விளக்காமைக்குக்காரணம் யாதெனின், 'இருத்தபஃறூ வாரக்கந்தை யேழைப்பார்ப்பானே சற்றும், பருத்தறிந்திடலற்றாய் கொல்பயனின் மூப்படைந்தாய்போலும்' என அவனது இழிவை விளியிலேயேயமைத்திருந்தலேயாமென்றறிக. உலகத்தில் வயது முதிர்ந்தவர்களுக்குக் கல்வியில்லையாயினும் அநுபவத்தால் பகுத்தறிவு முதிர்ந்திருக்கும், உனக்கு அதுவுமில்லையே யென்றற்கு, 'பயனின் மூப்படைந்தாய்போலும்,' என்றார். உலகும் என்பதில் உம்மை முற்று. செம்மல்-பெருமையிற்சிறந்தோன், இது ஆண்பாற்சிறப்புப்பெயர், போலும்-ஒப்பில்போலி, இது இகழ்ச்சியை விளக்கும், வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பானுதலால், அந்தணனை, 'பார்ப்பான்,' என்றார்' மூப்பு - தொழிற்பெயர். (௭௪)

மின்மைசெய் பகைஞர் மோலி மிதித்திடு கழற்காற் கண்ணன்
றன்மையு மேழை யாநின் றன்மையுந் தெரிந்து நோக்கில்
வன்மைசெய் புழைக்கை மாவு மசகமும் போலும் வாரிக்
கொன்மைசெய் நீரு மாவின் குளப்படி நீரும் போலும்.

(ப - ரை.) மின்மைசெய்-ஒளியைச்செய்கிற, பகைஞர்மோலி - பகைவரது கிரீடங்களை, மிதித்திடு - மிதிக்கிற, கழல் - வீரக்கழலையணிந்த, கால் - திருவடியையுடைய, கண்ணன் - ஸ்ரீ க்ருஷ்ணபகவானுடைய, தன்மையும் - நிலைமையையும், ஏழைஆம் நின் தன்மையும் - தரித்திரனான உனது நிலைமையையும், தெரிந்து நோக்கில் - ஆராய்ந்துபார்த்தால், (அவை), வன்மைசெய் புழைக்கைமாவும்-வலிமையையுடைய உட்டுளையுள்ள துதிக்கையையுடைய யானையையும், மசகமும் - கொசுகையும், போலும் - ஒக்கும்; (மற்றும்) வாரி-கடலின், கொன்மைசெய் நீரும் - மிகுதியைச்செய்கிற நீரையும், மாவின் - மிருகத்தின், குளப்பு அடிநீரும் - காற்குளம்புவைத்த இடத்தில் தங்குகிற நீரையும், போலும் - ஒக்கும். எ - று.

(பொ - ரை.) ஒளியைச்செய்கிற பகைவரது கிரீடங்களை மிதிக்கிற வீரக்கழலையணிந்த திருவடியையுடைய ஸ்ரீ க்ருஷ்ணபகவானுடைய நிலைமையையும் தரித்திரனான உனது நிலைமையையும் ஆராய்ந்துபார்த்தால் (அவை) வலிமையையுடைய உட்டுளையுள்ள துதிக்கையையுடைய யானையையும், கொசுகையும் ஒக்கும், (மற்றும்) கடலின் மிகுதியைச்செய்கிற நீரையும், மிருகத்தின் காற்குளம்புவைத்த இடத்தில் தங்குகிற நீரையும் ஒக்கும். எ-று.

(வி - ரை.) பின்னிரண்டடிகளில் வந்தவுவமைகளிரண்டும் ஏற்றத்தாழ்வுகளை நன்குவிளக்கும், அடுத்தபாடலில் வருகிற நான்கு உவமைகளும்.

இவ்வாறே. இப்பாட்டில், முன்னிரண்டடிகளில் ஸ்ரீ க்ருஷ்ணபகவானையும் குசேலனையும் வைத்தமுறைமைக்கேற்ப, பின்னிரண்டடிகளில் யானைசொசு குகளையும், கடல் நீர் குளப்படி நீர்களையும் வைத்தது முறை நிரனிறைப் பொருள்கோள், அடுத்தபாடலிலும் இது. வெல்பவர்தம் வெற்றிக்கு அறிகுறி யாகத்தோற்பவர் முடிமேல் அடிவைத்தல் இயல்பு. மின்மையென்பதில் மை பகுதிப்பொருள் விகுதி. மோலி-மௌளியென்னும் வடசொல்லின் விகாரம். மா என்றவிலங்கின் பொதுப்பெயர் புழைக்கையென்ற அடைமொழியால் யானையையுணர்த்திற்று, மசகம் வாரி வடசொற்கள். கொன்-பெருமையுணர் த்தும் இடைச்சொல், குளம்பு குளப்பு எனவலித்தல் பெற்றது. (எ௫)

கனகமால் வரையு மண்ணங் கட்டியும் போலுஞ் செங்கேழ்த்
தினகர வொளியு மோர்கத் தியோதத்தி னொளியும் போலு
மனகமார் தருவும் புன்சீழ் கம்புலும் போலுஞ் சேடப்
பனகமுஞ் சிறுநாங் கூழும் போலும்பாய் மிடிப்பார்ப் பானே.

(ப - ரை.) பாய் - பரவிய (மிகுந்த), மிடி - வறுமையையுடைய, பார்ப்பானே - பிராமணனே, (கண்ணன் தன்மையும் உன் தன்மையும்) கனகம் மால்வரையும்-பொன்மயமான பெரியமேருமலையையும், மண்ணங்கட்டியும்-(சிறிய) மண்ணங்கட்டியையும், போலும் - ஒக்கும், செம்கேழ் - சிவந்த நிறத்தையுடைய, தினகரன் ஒளியும் - சூரியப்பிரகாசத்தையும், ஓர் கத்தியோதத்தின் ஒளியும்-ஒருமின்மினிப்பூச்சியின் பளபளப்பையும், போலும் - ஒக்கும், அனகம்ஆர் - பரிசுத்தமுள்ள, தருவும் - கற்பகமரத்தையும், புல்-அற்பமான, சீழ்கம்புலும் - சீழ்கம்புல்லையும், போலும் - ஒக்கும், சேடன்பனகமும் - ஆதிசேஷனாகிய பாம்பையும், சிறு நாங்கூழும் - சிறிய நாங்கூழ்ப்பூச்சியையும், போலும் - ஒக்கும். எ - று.

(பொ - ரை.) பரவிய (மிகுந்த) வறுமையையுடைய பிராமணனே, (கண்ணன் தன்மையும் உன் தன்மையும்) பொன்மயமான பெரியமேருமலையையும் சிறியமண்ணங்கட்டியையும் ஒக்கும், சிவந்த நிறத்தையுடைய சூரியப்பிரகாசத்தையும் ஒருமின்மினிப் பூச்சியின் பளபளப்பையும் ஒக்கும், பரிசுத்தமுள்ள கற்பகமரத்தையும், அற்பமான சீழ்கம்புல்லையும் ஒக்கும், ஆதிசேஷனாகிய பாம்பையும் சிறிய நாங்கூழ்ப்பூச்சியையும் ஒக்கும். எ - று.

(வி - ரை.) பொன்மலை, சூரியப்பிரகாசம், கற்பகம், ஆதிசேஷன் என்பன கண்ணனுக்கும், மண்ணங்கட்டி, மின்மினியொளி, சீழ்கம்புல், நாங்கூழ்ப்பூச்சி என்பன குசேலனுக்கும் உவமைகளாம், கநகம், திநகரன், கத்யோதம், அநகம், தரு, சேஷன், பந்நகம் என்பன வடசொற்கள், மண்ணங்கட்டியென்பதில் அம்சாரியை, இச்சொல் ஆம் சாரியைபெற்று மண்ணாங்கட்டியெனவருதலே பெருவழக்கு, திநகரன் - (தனது சேர்க்கையால் பகலையும், நீக்கத்தால் இரவையும் உண்டாக்கி) நாளைச்செய்பவன், கத்யோதம் வடசொல், இதனை கம்த்யோதம் எனப்பிரித்து ஆகாசத்தில் விளங்குவது

எனப்பொருள் உரைத்துக்கொள்க, இது காரணப்பெயர், காரணப்பெயரை யோகம் என்பர் வடநூலார், போகஸ்த்தானமாகிய தேவலோகத்திலுள்ள ஓரறிவுயிருமுட்பட, எல்லாம் புண்ணியப்பயனையே யுடையனவாதலால், 'அனகமார்தரு, என்றார், அகம் - பாவம், அநகம் - பாவமின்மை. (௬௬)

பொருணனி யுளனென் றியாரும் புகலுமோர் வார்த்தைவேண்டு
மிருகையுங் கடகம் வேண்டு மிலங்குகுண் டலங்கள் வேண்டும்
வருவிர லாழி வேண்டு மார்பிடை மதாணி வேண்டு
முருவமுத் தாரம் வேண்டு முயர்ந்தபட் டாடை வேண்டும்.

(ப - ரை.) (இராஜசபையைச்சேரவருவார்க்கு), பொருள் நனி உளன் என்று - செல்வம் மிகுதியாகவுள்ளவனென்று, யாரும்புகலும் ஓர்வார்த்தை - எல்லாராலும் சொல்லப்படுகிற ஒரு சிறப்புமொழி, வேண்டும் - வேண்டும், இருகையும் - இரண்டுகைகளிலும், கடகம்வேண்டும் - கடகம் என்னும் ஆபரணம்வேண்டும், இலங்கு - விளங்குகிற, குண்டலங்கள் வேண்டும் - குண்டலங்கள் வேண்டும், வருவிரல் ஆழிவேண்டும் - (அடுக்காக) வருகிறவிரல்களில் மோதிரங்கள் வேண்டும், மார்பிடைமதாணிவேண்டும் - மார்பிலே பதக்கம்வேண்டும், உருவம் முத்துஆரம்வேண்டும் - அழகிய முத்துமாலைவேண்டும், உயர்ந்தபட்டு ஆடைவேண்டும்-சிறந்தபட்டு வஸ்திரம் வேண்டும். எ-று.

(பொ- ரை.) (இராஜசபையைச்சேரவருவோர்க்கு) செல்வமிகுதியாகவுள்ளவனென்று எல்லாராலும் சொல்லப்படுகிற ஒரு சிறப்புமொழி வேண்டும், இரண்டு கைகளிலும் கடகம் என்னும் ஆபரணம் வேண்டும், விளங்குகிற குண்டலங்கள் வேண்டும், அடுக்காகவருகிற விரல்களில் மோதிரங்கள் வேண்டும், மார்பிலேபதக்கம் வேண்டும், அழகிய முத்துமாலைவேண்டும், சிறந்தபட்டு வஸ்திரம் வேண்டும். எ - று.

(வி - ரை.) அடுத்தபாடலில் வருகிற, 'அரசவைகுறுகுவார்க்கு' என்பது இங்கும் எடுத்துக்கொள்ளப்பட்டது. வார்த்தா என்னும் வடமொழி ஈறு திரிந்து வார்த்தையென்றாயிற்று, வேண்டும் - வியங்கோள், வேண்டப்படும் எனச்செய்யுமென் முற்றுமாம், இது இவ்விடத்து இன்றியமையாதது என்னும் பொருளது, கடகம் - ஒருவகைக்கைவளை, குண்டலம் - ஒருவகைக் காதணி, ஒரு விரலின்றி எல்லாவிரல்களிலும் மோதிரம் வேண்டுமென்பார், 'வருவிரலாழிவேண்டும்' என்றார். ஹாரம் - வடசொல், இது ஆரம் எனத் திரிந்து வந்தது. (௬௭)

சிவிகைமுன் னூர்தி வேண்டுஞ் செழும்பொருட்செலவும்வேண்டுங்
குவிகையே வலரும்வேண்டுங் கோலமார்ந் திருக்க வேண்டுங்
கவிகைதாங் குநரும் வேண்டுங் கையுறை சிறப்பும்வேண்டு
மவிகையில் விளக்கம் வேண்டுமர சவை குறுகு வார்க்கே.

(ப - ரை.) அரசு அவைகுறுகுவார்க்கு - ராஜசபையையடைபவர்களுக்கு, சிவிகைமுன் ஊர்தி வேண்டும் - பல்லக்கு முதலியவாகனங்கள் வேண்

டும், செழும்பொருள் செலவுவேண்டும் - மிக்கசெல்வத்தைச்செலவு செய்யும் உரிமைவேண்டும், குவிகை ஏவலரும் வேண்டும் - கூப்பியகையையுடைய குற்றேவலாளரும் வேண்டும், கோலம் ஆர்ந்து இருக்கவேண்டும் - அழகமைந்திருத்தல் வேண்டும், கவிகை தாங்குநரும்வேண்டும் - குடைபிடிப்பவர்களும் வேண்டும், சிறப்ப - சிறக்கும்படி, கையுறைவேண்டும் - காணிக்கைப்பொருள் வேண்டும், அவிகை இல் - அழிதலில்லாத, விளக்கம்வேண்டும் - ஒளிவேண்டும். எ - று.

(பொ - ரை.) ராஜசபையையடைபவர்களுக்குப் பல்லக்கு முதலியவாகநங்கள்வேண்டும், மிக்கசெல்வத்தைச்செலவு செய்யும் உரிமை வேண்டும், கூப்பியகையையுடைய குற்றேவலாளரும் வேண்டும், அழகமைந்திருத்தல் வேண்டும், குடை பிடிப்பவர்களும் வேண்டும், சிறக்கும்படி காணிக்கைப் பொருள்வேண்டும், அழிதலில்லாத ஒளிவேண்டும். எ - று.

(வி - ரை.) சிவிகை - சிபிகா என்னும் வடமொழித்திரிபு, ஊர்தி - ஊரப்படுவது எனக்காரணப்பெயர், ஊர் - பகுதி, ஊர்தல் - ஏறி நடத்தல், இ - செயப்படுபொருள் விகுதி, த் - எழுத்துப்பேறு, குவிகை - வினைத்தொகை, கவிகை - கவிந்தவடிவாகவுள்ளது, இது தொழிலாகு பெயராகிய காரணக்குறி, தாங்குநர் என்பதில் ந் பெயரிடைநிலை, கையுறை - அரசனுக்குக்கொடுக்கும் பொருட்டுக்கொணர்வது, கையிற்பொருந்தியது எனக்காரணப்பெயர். அக்கையுறைகொணர்வானது நிலைமைக்கேற்றபடி உயர்வாயிருந்தாலன்றிப்பயன்படாதாதலால், 'கையுறை சிறப்பவேண்டும், என்றார். அவிகை - கைவிகுதிபெற்ற தொழிற்பெயர், விளக்கம் - ஒளி, அது இங்குப்புகழைக்குறித்தது, தீபமுமாம், (தீவட்டி), இது மங்கலப்பொருள்களுளொன்றாதலால் விளக்குக்கூறப்பட்டதென்க, மங்கலப்பொருள்களுள் தீபமொன்றாதலை, "சாற்றுங்கவரி நிறை குடந்தோட்டி முன்றர்ப்பணமாம், ஏற்றியதீபமுரசம்பதாகையிணைக்கயலே, நாற்றிசை சூழ்புவிமீதட்டமங்கல நன்குழையின், மேற்றிகழ்வேர்றடங்கட் செய்யவாய்ப்பசும்பொன் மெய்த்திருவே" என்னுஞ் செய்யுளாலறிக. (எஅ)

சிறப்புறச் செல்வ ராகிற் சிறப்புறு முகமன் செய்வர்
பெறப்படு மிடிய ராகிற் பிடர்பிடித் துந்து வார்கள்
வறப்பிலுன் முன்னை நட்பை மறந்திடா திருக்கின் றன்கொ
லிறப்பநேற் றுண்ட கூற்றை யின்றியா மறப்ப மாகில்.

(ப - ரை.) சிறப்புஉற - மேன்மைபொருந்த, செல்வர்ஆகில் - பொருளுடையராகில், சிறப்புஉறு - சிறப்புமிகுந்த, முகமன்செய்வர் - முகமன் செய்வார்கள், பெறப்படும் - பெறப்பட்ட, மிடியர்ஆகில் - வறியரானால், பிடர்பிடித்து உந்துவார்கள் - பிடர்பிடித்துத்தள்ளுவார்கள், இறப்ப - மிகுதியாக, நேற்றுஉண்ட கூற்றை - நேற்றுஉண்ட உணவின்பகுதியை, இன்று - இன்று, யாம் மறப்பம்ஆகில் - நாம் மறப்போமானால், உன் - உனது, வறப்பு

இல் - குறையாத, முன்னாள் நட்பை - முற்காலச்சிநேகத்தை, மறந்திடாது இருக்கின்றாய்கொல் - மறந்திடாதிருக்கிறாயோ, (கண்ணன்.) எ - று.

(பொ - ரை.) மேன்மைபொருந்தப் பொருளுடையராகில் சிறப்புமிகுந்த முகமன் செய்வார்கள், பெறப்பட்டவறியராயினால் பிடர்பிடித்துத் தள்ளுவார்கள், மிகுதியாக நேற்றுண்ட உணவின் பகுதியை இன்று நாம்மறப்போமானால், உனது குறையாத முற்காலச் சிநேகத்தை மறந்திடாதிருக்கிறாயோ (கண்ணன்.) எ - று.

(வி - ரை.) முகமன் - இன்சொற்சொல்லுதல் முதலியன, மிடி - வறுமை, உந்துதல் - தள்ளுதல், வறப்பு - குறைவு, நட்பு - தொழிற்பெயர், பகுதி-ஒள், ஆகில்-செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சத்திரிபு. கொல்-எதிர்மறைப்பொருளதோரிடைச்சொல், வினாப்பொருளதெனினுமாம்,கூறு-பகுதி, அது இங்கு நேற்றுண்டகூறு என்றமையால் உணவின் பகுதியையுணர்த்திற்று. (எக)

இலகுமோர் நகரச் செல்வ ரிடத்தினுஞ் செல்வர் நட்பே
நிலவுற நிற்கு மேழை நீர்மையர் நட்பு நில்லா
தலகில்செல் வத்த னாகி யரசர்யா வருந்தற் போற்ற
மலர்தலை யுலகங் காக்கு மன்னன்மாட் டுன்னட் பெற்றே.

(ப - ரை.) இலகும் - விளங்குகிற, ஓர் நகரச்செல்வர் இடத்தினும் - ஒரு நகரத்தையாளுஞ் செல்வரிடத்திலும், செல்வர் நட்பே - செல்வரது சிநேகமே, நிலவுற நிற்கும் - நிலைபெறநிற்கும், ஏழை நீர்மையர் நட்பு நில்லாது - ஏழைத்தன்மையுடையாரது சிநேகம் நிற்காது, (அவ்வாறாக) அலகு இல்செல்வத்தன்ஆகி - அளவற்ற செல்வத்தையுடையவனாகி, அரசர் யாவரும் - அரசரெல்லாரும், தன் போற்ற - தன்னை வணங்க, மலர்தலை உலகம் - விஸ்தாரமான இடத்தையுடைய உலகமுழுதும், காக்கும் - அரசாட்சி செலுத்திக்காக்கின்ற, மன்னன்மாட்டு - ஸ்ரீக்ருஷ்ண மஹாராஜனிடத்தில், உன் நட்பு எற்று - உன் சிநேகம் எத்தன்மைத்து. எ - று.

(பொ - ரை.) விளங்குகிற ஒரு நகரத்தையாளுகின்ற செல்வரிடத்திலும் செல்வரது சிநேகமே நிலைபெறநிற்கும், ஏழைத்தன்மையுடையாரது சிநேகம் நிற்காது, (அவ்வாறாக) அளவற்ற செல்வத்தையுடையவனாகி, அரசரெல்லாரும் தன்னைவணங்க,விஸ்தாரமான இடத்தையுடைய உலகமுழுதும் அரசாட்சி செலுத்திக்காக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணமஹாராஜனிடத்தில் உன் சிநேகம் எத்தன்மைத்து. எ - று.

(வி - ரை.) ஒரு நகரத்தை யாள்வோன் அவ்வாட்சியின் மமதையால் செல்வரை விரும்புவதல்லது ஏழைகளை விரும்புவதில்லையே, ஸ்ரீக்ருஷ்ண பகவான் எல்லாவுலகங்களையும் ஆள்வோனாயிருக்கையில் அவனுக்கெவ்வளவு மமதையிருக்கும், அவன், ஏழையாகிய உன் சிநேகத்தை விரும்பமாட்டான் என்பது கருத்து, நகரச்செல்வம் - நகரமாகிய செல்வம், நிலவுறு என்பதற்கு

ப்பகுதி நிலவுறு, நீர்மை - தன்மை, அலகு - அளவு (எல்லை), மலர்தலை - வினைத்தொகை நிலைத்தொடர், எற்றே என்பதில் ஏ இரக்கப்பொருளது, மன்னன் - நிலைபேறுடையவன், செல்வமுதலியவற்றின் மிகுதியையுடையவன் எனினுமாம். (அ0)

நிலத்திரு வேட்டு நாட்டு நெடும்புகழ்த் தும்பை சூடி
யுலப்பெருந் திணிதோண் மாற்றா ருயிர்தப வுடற்றுங் காலை
நலப்படுந் தந்தை மைந்தர் நந்து முன்னோர் பின்னோர்தன்
குலப்படு மற்றோ ரேனுங் கொல்பவர் நட்பென் னுமால்.

(ப - ரை.) நிலம்திருவேட்டு - பூமியாகிய ஐசுவரியத்தை விரும்பி, நாட்டு - நிலைநிறுத்தப்பட்ட, நெடும்புகழ் - பெரும்புகழ்க்கேதுவாகிய, தும்பைசூடி - தும்பைமலர்மாலையைத்தரித்து, உலம் திரள்கல்லை நிகர்த்த, பெருதிணிதோள் - பெரியவலிய தோள்களையுடைய, மாற்றார் - பகைவரது, உயிர்தப - உயிர்நீங்கும்படி, உடற்றுங்காலை - போர்செய்யுங்காலத்தில், நலப்படும் - நன்மைபொருந்திய, தந்தை - தகப்பன், மைந்தர் - புதல்வர், நந்தும் - விருத்தியடைகின்ற, முன்னோர் பின்னோர் - தமையன்மார் தம்பிமார், தன் குலப்படும் மற்றோர் ஏனும் - தன் குலத்திற்பிறந்த மற்றயாவராயிருப்பினும், (அவர்களை) கொல்பவர் - (கண்ணோட்டமின்றி) கொல்வோராகிய அரசரது, நட்பு - சிநேகம், என்னும் - என்னபயனைத்தருவதாகும். எ - று.

(பொ - ரை.) பூமியாகிய ஐசுவரியத்தை விரும்பி, நிலைநிறுத்தப்பட்ட பெரும்புகழ்க்கேதுவாகிய தும்பைமலர்மாலையைத்தரித்து, திரள் கல்லை நிகர்த்தபெரிய வலிய தோள்களையுடைய பகைவரது உயிர்நீங்கும்படி போர் செய்யுங்காலத்தில், நன்மைபொருந்திய தகப்பன், புதல்வர், விருத்தியடைகிற தமையன்மார் தம்பிமார், தன் குலத்திற்பிறந்த மற்றயாவராயிருப்பினும், அவர்களைக்கண்ணோட்டமின்றிக் கொல்வோராகிய அரசரது சிநேகம் என்ன பயனைத்தருவதாகும். எ - று.

(வி - ரை.) அரசர்க்குக் கண்ணோட்டமில்லையென்பது கருத்து, நிலத்திரு - பண்புத்தொகை நிலைத்தொடர், நிலமாகிய திருஎனவிரியும், மண், பொன், பெண் என்னுமுத்திருவினுள்ளே, மண் சிறந்ததென்பது தோன்ற 'நிலத்திரு' என்றார், வேட்டு - செய்தென்வாய் பாட்டிறந்த காலவினையெச்சம், இது சூடியென்னும் வினைகொண்டது, பகுதி - வேள், சூடியென்னும் வினையெச்சம் உடற்றும் என்னும் வினைகொண்டது, நாடு என்பதற்கு உலகமெனப்பொருள் கொண்டு, நாட்டு நெடும்புகழ் என்பதற்கு உலகத்தில் விளங்குகின்ற பெரும்புகழ் என்றுரைப்பினுமாம், நாட்டு புகழ் எனவியையும், தும்பை - தும்பைமலர்மாலை, இது போர்வெல்வார்க்குரியமாலை, உலப்பெருந்திணி என்பது தோளுக்கடையாதலால், உலத்தோள், பெருந்தோள், திணிதோள் என்றியைத்துரைத்துக்கொள்க, மாற்றார் - மனமாறுதலையுடையார், மாறு - முதனிலைத்தொழிற்பெயர், மாற்றாருயிர் - ஆறும் வேற்றுமைத்

தொகை நிலைத்தொடர், தப - செய்யென்வாய் பாட்டு வினையெச்சம், பகுதி தபு. "தந்தைமகற்காற்றுதவியவையத்து முந்தியிருப்பச்செயல்" என்ற படியே, சதுர்வித புருஷார்த்தங்களுக்கும் காரணமாகிய கல்வி கற்பிப்போனு தலால், தந்தையெனவாளாகூறுது 'நலப்படுந்தந்தைஎன, அடைகொடுத் துக்கூறினர், இனி; நலப்படும் என்பதை மைந்தர் முன்னோர் பின்னோர் தன் குலப்படுமற்றோர் என்பவர் எல்லாருக்கும் தனித்தனியே விசேடணமாக்கி னுமமையும். 'நலப்படுந்தந்தை மைந்தர் நந்து முன்னோர் பின்னோர் தன் குல ப்படு மற்றோரேனுங்கொல்பவர், என்றதனுல், கண்ணோட்டமின்றியென வரு வித்துரைக்கப்பட்டது. ஆல் - அசை. சேர்ந்தாரைக்கொல்லி, என்பதுபோல, 'தந்தைமைந்தராதியரைக் கொல்பவர் என்பதுங் காரணப்பெயர், என்னும் என்னும் வினு ஒருபயனுமின்றென்னும் பொருளில் வந்தது. (அக)

மாற்றலர்ச் செற்ற ஞான்றே மற்றவர் நகர முற்றும்
வேற்றுவண் கழுதை யேரின் விரைதர வுழுவித் துண்ணப்
போற்றலில் வரகு கொண்முற் பொலிதர விதைப்பித் துப்பிற்
சீற்றமாற் றிடுவார் நட்போ சிறந்தது மிடிக்கோட் பட்டாய்.

(ப - ரை.) மாற்றலர் - பகைவரை, செற்றஞான்றே - வென்ற அப் பொழுதே, அவர் நகரம்முற்றும் - அவர் நகரமுழுதும், வேறு - வேறுபாடா கிய, வள்கழுதை ஏரின் - வளவிய கழுதை பூட்டின ஏரினுல், 'விரைதர உழுவித்து - விரைவாகவுழுவித்து, உண்ண - உண்ணும்பொருட்டு, போற் றல் இல் வரகு கொள்முன் - (யாவராலும்) விரும்பப்படாத வரகு கொள் முதலானவைகளை, பொலிதரவிதைப்பித்து - அதிகமாக விதைப்பித்து, பின்- அதன் பின்னே, சீற்றம் - (தாம் கொண்ட) கோபத்தை, மாற்றிடுவார் - நீக்கு வோராகிய அரசரது, நட்போ - சிநேகமோ, சிறந்தது - மேலானது, மிடி கோட்பட்டாய் - வறுமையாற்பற்றப்பட்டவனே. எ - று.

(பொ - ரை.) பகைவரை வென்ற அப்பொழுதே அவர் நகரமுழுதும் வேறுபாடாகிய வளவிய கழுதை பூட்டின ஏரினுல் விரைவாகவுழுவித்து, உண்ணும்பொருட்டு, யாவராலும் விரும்பப்படாத வரகு கொள் முதலான வைகளை அதிகமாக விதைப்பித்து, அதன் பின்னே தாம் கொண்ட கோவத் தை நீக்குவோராகிய அரசரது சிநேகமோ மேலானது, வறுமையாற்பற்றப் பட்டவனே. எ - று.

(வி - ரை.) மாற்றலர் - (தம்மனத்தை சிநேகத்தினின்றும்) மாற்றுதலை யுடையவர் (பகைவர்). செற்ற என்னும் இறந்தகாலப் பெயரெச்சத்திற்குப் பகுதிசெறு. கழுதையேரின் உழுதல் உலக வழக்கிற்குமாறுதலால் 'வேற் றுவண்கழுதையேரின், என்றார். விரைதர என்பதில் தாதுணைவினை. விரை தர ஒரு சொல்லாக்கி விரைதா என்பதைப்பகுதியாகக் கோடலுமாம். உழு வித்து - பிறவினை யிறந்தகால வினையெச்சம், இது விதைப்பித்து என்னும் வினையையும், விதைப்பித்து என்னும் வினையெச்சம் மாற்றிடுவார் என்னும்

வினையையுங்கொண்டு முடிந்தன. சீற்றம் ஆற்றிடுவார் எனப்பிரித்துக்கோபத்தைத்தணிப்பவர் எனினுமாம். நட்போ - என்பதில் ஓகாரம் எதிர்மறை. பிடிக்கோள் - மூன்றும் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர், உண்ண - பகைவருண்ணும்பொருட்டு, போற்றல் - விரும்பல், கோட்படுதல் - கொள்ளப்படுதல் (பற்றப்படுதல்), சீற்றம் - தொழிற்பெயர், சீறுபகுதி. (அஉ)

ஆவுமா னியற்பார்ப் பீரு மாடமைத் தோளி னீரு
மேவுநோய்க் கோட்பட் டீரு மிளிர்பிதிர்க் கருமஞ் செய்யப்
பூவினன் மகப்பே றுள்ளும் புந்தியி னீரு மம்பு
தூவுமு னரணஞ் சேர்மி னென்பர்பின் றோன்ற வாயார்.

(ப - ரை.) ஆவுமான் இயல்பார்ப்பீரும் - பசுவை நிகர்த்த இயல்பையுடைய அந்தணீரும், ஆடு அமை தோளினீரும் - அசையாநின்ற மூங்கிலை நிகர்த்த தோள்களையுடைய மாதரீரும், மேவும் நோய் கோட்பட்டீரும் - பொருந்திய பிணியாற்கோட்பட்டீரும், மிளிர் பிதிர் கருமஞ்செய்ய - விளங்குகின்ற பிதிர் கருமஞ்செய்யும்பொருட்டு, பூவில் - உலகத்தில், நல்மகப்பேறு உள்ளும் புந்தியினீரும் - நன்மகப்பேற்றை விரும்புகிற புத்தியையுடையீரும், (ஆகிய நீவிரனைவரும்), அம்புதூவுமுன் - அம்புகளை யிறைப்பதற்கு முன்பே, அரணம் சேர்மின் என்பர் - காவலையடையுங்கள் என்பார்கள், பின் தோன்ற ஆயார் - பின்னே வருமவற்றை மிகுதியாக ஆராயமாட்டார்கள் (அரசர்கள்.) எ - று.

(பொ-ரை.) பசுவை நிகர்த்த இயல்பையுடைய அந்தணீரும், அசையாநின்ற மூங்கிலை நிகர்த்த தோள்களையுடைய மாதரீரும், பொருந்திய பிணியாற்கோட்பட்டீரும், விளங்குகின்ற பிதிர் கருமஞ்செய்யும்பொருட்டு உலகத்தில் நன்மகப்பேற்றை விரும்புகிற புத்தியையுடையீரும், (ஆகிய நீவிரனைவரும்) அம்புகளை யிறைப்பதற்குமுன்பே காவலையடையுங்கள் என்பார்கள், பின்னே வருமவற்றை மிகுதியாக ஆராயமாட்டார்கள். (அரசர்கள்)

(வி - ரை.) ஆவுமான் இயல்-கோஸ்வபாவம், (ஸாதுஸ்வபாவம்.) ஆடமை - வினைத்தொகை. ஆடுதல் - காற்றாலசைதல். "பேரமைதோள்" "வேயினதோளி" முதலியவாகச்சான்றோர் கூறுதலுங்காண்க. நன்மகப்பேறு - நற்புதல்வரைப்பெறுதல் 'நற்புதல்வராவார் "மகன்றந்தைக்காற்றுமுதவியிவன்றந்தை - யென்னோற்றான் கொல்லென்னுஞ்சொல்" என்னும் சான்றோர் திருவாக்குகளுக்கிலக்கியமாயிருக்கும் புதல்வர். மகப்பேறு - இரண்டாம் வேற்றுமைத்தொகை. பேறு - பெறு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர், உள்ளுதல் - நினைத்தல், அது இங்கு விரும்புதலுக்காயிற்று. அம்புதூவுதற்கெழுவாயாகிய யாம் என்பதை வருவித்துரைத்துக்கொள்க. அரண்-காவல், இதுஅம் சாரியைபெற்று அரணம் எனவந்தது. (அபாயமின்றி யிருத்தற்குரிய இடங்கள்) அவை கோட்டை மதில் முதலாயின. (அங)

கோதறு கல்வி சாலூர்க் குடியிருந் தறியா னேனு
மோதருஞ் செல்வ மிக்கோ னொருவனே சிறந்தோ னவன்

காதலின் வேத முன்னாங் கலைகள்கற் றுணர்ந்தோ னேனுந்
தீதமை மிடிய னாயிற் சிறந்திடான் வேத்த வைக்கே.

(ப - ரை.) கோது அறு - குற்றமற்ற, கல்விசால்ஊர் - கல்வி மிகுந்த வூரில், குடியிருந்து அறியான் எனும் - குடியிருந்தறியானாயினும், ஓது அரு - சொல்லுதற்கரிய, செல்வம் மிக்கோன் ஒருவனே - செல்வத்திற்சிறந்தவனாகிய வொருவனே, வேந்து அவைக்கு - ராஜசபைக்கு, சிறந்தோனவன் - சிறந்தவனாவன், வேதம் முன் ஆம் கலைகள் - வேதமுதலாகிய கலைகளை, காதலின் - விருப்பத்தோடு, கற்று உணர்ந்தோன் எனும் - கற்றறிந்தவனாயினும், தீது அமை மிடியன் ஆயின் - தீமை பொருந்தியவறிஞனானால், சிறந்திடான் - (அவன்) சிறக்கமாட்டான். எ - று.

(பொ - ரை.) குற்றமற்றகல்விமிகுந்தவூரில் குடியிருந்தறியானாயினும், சொல்லுதற்கரிய செல்வத்திற்சிறந்தவனாகிய வொருவனே ராஜசபைக்குச் சிறந்தவனாவன், வேதமுதலாகிய கல்விகளை விருப்பத்தோடு கற்றுணர்ந்தவனாயினும், தீமை பொருந்தியவறிஞனானால், அவன் சிறக்கமாட்டான். எ - று.

(வி - ரை.) கோதறுகல்வி (-குற்றங்களாகிய) அஞ்ஞான சந்தேக விபரீதங்களறுதற்கேதுவாகிய கல்வி, அஞ்ஞானம் - அறியாமை, சந்தேகம் - இதுவோ அதுவோவென்னும் ஐயம், விபரீதம் - குற்றியைமகனெனக்காண்டல் முதலியவைபோல ஒன்றையொன்றாக நினைத்தல். இவ்வாறன்றிக்காமவெகுளிமயக்கங்களாகிய முக்குற்றங்களு மற்றொழிதற்கேதுவாகிய கல்வியெனினுமாம், இங்ஙனமாகவே வீட்டுக்கேதுவாகிய கல்வி யென்றதற்கிடனாயிற்று, என்னை "காமம்வெகுளிமயக்கமிவை மூன்றன் - நாமங்கெடக்கெடுநோய்" என்று பெரு நாவலரும் கூறுதலாலென்க, இதனால், கல்வியானது வீட்டுக்கு நேரே யேதுவாகாவிடினும், சோபாநக்ரமமா யேதுவாமென்றதாயிற்று, இது, "எழுத்தறியத்தீருமிழிதகைமை தீர்ந்தான் - மொழித்திறத்தின் முட்டறுத்தோனாகும், மொழித்திறத்தின், முட்டறுத்தநல்லோன் முதனூற்பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடுபெறும்" என்பதனாலினிது விளங்கும். சாலூர் - வினைத்தொகை நிலைத்தொடர். கோதறுகல்வி சாலூர் குடியிருந்தறியான் என்றது கல்வி மணமேயில்லாதவன் என்றபடி, "அறக்கிழவன் மனிதன் விரகில்லாக்கொச்சையழகிருந்த வூரிலிருந்தறியானேனும்" என்றிவ்வாறு பிறரும் கூறுதல்காண்க. எனும் எனினும் என்பதன் மரூஉ, 'ஓதருஞ்செல்வம், அளவிட்டுச்சொல்லுதற்கரிய செல்வம். ஒருவனே யென்பதில் ஏகாரம் பிரிநிலை, தேற்றம் எனினுமாம். வேதமுதலியவைவிருப்பமின்றிக் கற்பிற்பயனில்லையென்பது தோன்ற, 'காதலின்வேதமுன்னாங்கலைகள் கற்றுணர்ந்தோனேனும், என்றார். எனும் அருமை குறித்துநின்றது, வறுமையொருவற்குண்டாயின் அதனோடு எல்லாத்தீமைகளுமுளவாதல் திண்ணமாதலால், 'தீதமை மிடியனாயின்' என்றார். வேந்தவை - வேத்தவையெனவலித்தலாயிற்று. "வேத்தவைகாவார்மிகன்மக்கள்": என்றார் பிறரும். 'தீதமை'

என்பதற்குத்திமை நிறைந்த எனினுமாம். கலைகள் என்றது ஆகமபுராணே திஹாஸாதிகளை. (அச)

காமமே வெகுளி யேயுட் கலந்திடு மயக்க மேயென்
றமைவை யமையப் பட்டோ ரவற்றொரோ வொன்று தோன்றின்
மாமறை முழங்கிக் கூறி வருவிதி விலக்க யர்ப்பர்
தோமறு மமைச்சி டித்துச் சொல்வதுங் கொள்ளா ரம்மா.

(ப - ரை.) காமமே - காமமும், வெகுளியே - வெகுளியும், உள்கலந்திடும் மயக்கமே - மனத்திற்பொருந்திய மயக்கமும், என்று ஆம் அவை அமையப்பட்டோர் - என்று சொல்லப்பட்டவையாகிய அவற்றால் நிறையப்பெற்றோர், அவற்று - அவைகளுள்ளே, ஒரோவொன்று தோன்றின் - ஒவ்வொன்றுண்டாயின், மாமறை - பெருமையுள்ள வேதங்கள், முழங்கி கூறி வரு - முழக்கமிட்டுச்சொல்லிவருகிற, விதிவிலக்கு - விதிவிலக்குக்களை, அயர்ப்பர் - மறந்துவிடுவர், தோம்அறும் அமைச்சு - குற்றமற்ற அமைச்சனானவன், இடித்துச்சொல்வதும் - இடித்துச்சொல்வதையும், கொள்ளார் - ஏற்றுக்கொள்ளார். எ - று.

(பொ - ரை.) காமமும் வெகுளியும் மனத்திற்பொருந்திய மயக்கமும் என்று சொல்லப்பட்டவையாகிய அவற்றால் நிறையப்பெற்றோர் அவைகளுள்ளே ஒவ்வொன்றுண்டாயின், பெருமையுள்ள வேதங்கள் முழக்கமிட்டுச்சொல்லி வருகிற விதிவிலக்குக்களை மறந்துவிடுவர், குற்றமற்ற அமைச்சனானவன் இடித்துச்சொல்வதையும் ஏற்றுக்கொள்ளார். எ - று.

(வி - ரை.) 'காமமே வெகுளியே மயக்கமே, என்பவற்றீற்றே காரங்கள், "நிலனே நீரே தீயேவளியே வெளியே" என் புழிப்போல எண்ணுப்பொருளில்வந்தன. காமம் வெகுளிமயக்கம் என்பவற்றை முக்குற்றம் என்பர். இவற்றுள் ஒன்றுண்டாயின், 'மாமறை முழங்கிக்கூறிவருவிதிவிலக்கயர்ப்பர் தோமறுமமைச்சிடித்துச் சொல்வதுங்களொர், என்றமையால், மூன்றும் ஒருவற்குண்டாயின் அவற்குளவாம நர்த்தங்களுக்கோரெல்லையின்றென்பது சொல்லாமேயமையும். அநாதி நித்யநிர்த்தோஷமாய் அபௌருஷேயமாயிருத்தலால், மறைக்கு மாவென்னும் அடை கொடுத்தார். முழங்கியென்பது பலவிடங்களிலும் என்பதையும், கூறிவரு என்பது தொன்றுதொட்டென்பதையும் குறிக்கவந்தன. விதிவிலக்கு என்பவற்றை விதிநிஷேதம் என்பர் வடநூலார். இடித்துச்சொல்லுதல் - வற்புறுத்திச்சொல்லுதல், அமைச்சு - அமைச்சன், இது பண்பாகுபெயர். அரசற்குறுதிபயத்தற்சிறப்புக்கருதி அமைச்சனை, 'தோமறுமமைச்சு என்றார். (அரு)

கலைபயி லுணட் பென்று கரைந்தனை யந்த நட்பிச்
சிலைவலாற் கிருக்கு மாயிற் சென்றபற் பலவாண் டிற்கு
ளிலைவறு முடங்க நீட்டி யொன்றிரண் டனுப்ப லாமே
மலைவறு தூதுய்த் துன்னை வருகவென் றழைக்க லாமே.

(ப - ரை.) கலைபயில்நாள்-கல்விகற்றகாலத்தின், நட்பு என்று - சிநேக மென்று, கரைந்தனை - சொல்லினை, அந்தநட்பு - அந்தசிநேகம், இ-இந்த, சிலைவலான்கு - வில்வித்தையில்வல்ல கண்ணபிரானுக்கு, இருக்கும் ஆயின்-இருக்குமானால், சென்ற - கழிந்த, பற்பல ஆண்டிற்குள் - மிகப்பலவருஷங்களுள், உலைவு அறு - அழிவற்ற, ஒன்று இரண்டு முடங்கல்நீட்டி - ஒன்றிரண்டு திருமுகங்களெழுதி, அனுப்பல் ஆமே - அனுப்பக்கூடுமே, (அன்றியும்) மலைவு அறு - மாறுபாடில்லாத, தூது உய்த்து - தூதனையனுப்பி, வருகஎன்று உன்னை அழைக்கலாமே-வருவாயாகவென்றுஉன்னையழைத்திருத்தல்கூடுமே.

(பொ - ரை.) கல்விகற்றகாலத்தின் சிநேகமென்று சொல்லினை, அந்த சிநேகம் இந்த வில்வித்தையில் வல்லகண்ணபிரானுக்கு, இருக்குமானால், கழிந்தமிகப்பல வருஷங்களுள், அழிவற்ற ஒன்றிரண்டு திருமுகங்களெழுதி அனுப்பக்கூடுமே, அன்றியும், மாறுபாடில்லாத தூதனையனுப்பி வருவாயாக வென்று உன்னை அழைத்திருத்தல் கூடுமே. எ - று.

(வி - ரை.) நட்பு - தொழிற்பெயர், நள் - பகுதி. ஸ்ரீ கண்ணபிரானனுப்புகிற திருமுகச்சிறப்புத்தோன்ற, 'உலைவருமுடங்கல்' என்றார், முடங்கல் - சுருளுந்தன்மைத்து என ஓலைக்குத்தொழிலாகு பெயராகிய காரணக்குறி, முடங்கல் - வளைதல் என்றுகொண்டு இதனையும் தொழிலாகு பெயரெனினுமமையும், ஒன்றிரண்டு - ஒன்று அல்லது இரண்டு, பிறரால் மாறுபடாமைதூதர்க்கு இன்றியமையாத இலக்கணமாதலால், 'மலைவறுதூது' என்றார். ஏகாரமிரண்டும் தேற்றம். உனக்கு, ஸ்ரீ கண்ணபிரானிடத்தன்பிருக்குமாயினும், அதுகொண்டு அவற்குன்னிடத்தன் புண்டெனக்கோடல் பொருந்தாது, அவற்குன்னிடத்தன் பிருந்தாலே பயன்படும் என்றற்கு, 'அந்த நட்பிச்சிலைவலாற் கிருக்குமாயின், என்றார். பயிலுள் - வினைத்தொகை, கரைதல் - சொல்லுதல், மச்சயந்திரமறுத்தல் முதலியவற்றாலும் அவைகாரணமாக, "வில்லுக்கு விஜயன்" என்னும்பழமொழி யுண்டாயிருக்கையாலும், இருகையாலும் பாணப்ரயோகம் பண்ணுவோன் என்னும் பொருளமைந்த, "ஸவ்யஸாசி" என்னும் வடமொழிப் பெயருண்மையாலும் வில்வல்லான் அருச்சுநன் என்பது பிரசித்தமாயிருக்க, ஸ்ரீ கண்ணபிரானை, சிலைவலான், என்றல் பொருந்தாதேயெனின், பொருந்தும், என்னை பொருந்துமாறெனின், அவ்வருச்சுநனது வில்வன்மையும் பாரதயுத்தத்திற் பயன்பட்டது இந்த ஸ்ரீ கண்ணபிரானுதவியினாலெனெனக. (அகூ)

அந்தநாட் டகுதிக் கேற்ப வாக்கினன் போலு நின்னட்
பிந்தநாட் டகுதி வானத் திறைவனு மனுகொ ளுதம்
முந்தைநா ணட்பை யெண்ணி முடுகினீ செலக்கூ டாதா
லெந்தநா ளினும்பூ பாலர் யாவர்க்கு நண்ப ரல்லர்.

(ப - ரை.) அந்தநாள் - அக்காலத்தில், தகுதிக்குஏற்ப - தன்தகுதிக்கேற்க, நின் நட்பு ஆக்கினன்போலும்-உன் சிநேகத்தையுண்டாக்கிக் கொண்

டான்போலும், இந்தநாள் தகுதி - இக்காலத்தில் (அவனது) தகுதியானது, வானத்து இறைவனும் அணுகொணாது - சுவர்க்கலோகத்திற் கிறைவனாகிய இந்திரனும் அணுகவொண்ணாத தாயிருக்கின்றது, (ஆதலால்) அ - அந்த, முந்தைநாள் நட்பை எண்ணி - முற்காலத்துச் சிநேகத்தையெண்ணி, நீ மூடுகி செல்லகூடாது - நீ விரைந்து போகக்கூடாது, பூபாலர் - பூபாலகர், எந்த நாளினும் - எக்காலத்திலும், யாவர்க்கும் - யாவர்க்காயினும், நண்பர் அல்லர் - சிநேகரல்லர். எ - று.

(பொ - ரை.) அக்காலத்தில் தன் தகுதிக்கேற்க உன் சிநேகத்தையுண்டாக்கிக்கொண்டான்போலும், இக்காலத்தில் அவனது தகுதியானது சுவர்க்கலோகத்திற் கிறைவனாகிய இந்திரனும் அணுகவொண்ணாததாயிருக்கின்றது, (ஆதலால்) அந்த முற்காலத்துச் சிநேகத்தையெண்ணி நீ விரைந்துபோகக் கூடாது, பூபாலகர் எக்காலத்திலும் யாவர்க்காயினும் சிநேகரல்லர். எ - று.

(வி - ரை.) அந்த நாட்டகுதி - அக்காலத்து நிலைமை, அதாவது சிற்றுயனாயிருத்தல், இந்த நாட்டகுதி - இக்காலத்து நிலைமை, அதாவது பூபாலகத்வம், அணுகவொண்ணாது எனற்பாலது அணுகொணாது எனநிலைமொழியீற்றகரந்தொகுத்தல் பெற்றது, அணுகுதல்- கிட்டுதல், பூபாலர்-வடசொல், இதற்குப் பூமியைப்பரிபாலிப்பவர் என்பதுபொருள், வானத்திறைவனும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு, இறந்ததுதழீஇயதுமாம், போலும் - ஒப்பில்போலி. (அஎ)

அல்லது மிகுநட் பேயென் றற்றநோக் காது செல்லி
னொல்லையி னினக்குண் டாயிற் றுறுமவ மான மெய்யே
நல்லதன் மனையின் வாக்கு நறுநெயுண் டொளிர்வ தேயென்
றெல்லடர் சுடரை முத்த மிடிற்சுடா தமைவ துண்டோ.

(ப - ரை.) அல்லது - அன்றி, மிகுநட்பு என்று - மிகுந்த சிநேகமென்று, அற்றம் நோக்காதுசெல்லின்-சமயம்பாராமற்போவாயாயின், நினக்கு - உனக்கு, ஒல்லையில் - விரைவில், உறும் அவமானம் - மிகுந்த அவமானம், உண்டாயிற்று - உண்டாய்விடும், மெய்யே - இது உண்மையேயாம், நல்ல தன்மனையின்வாக்கும் - நன்மையாகிய தன் வீட்டில் வார்க்கின்ற, நறுநெய் உண்டு - நறுமணமுள்ள நெய்யைப்பருகி, ஒளிர்வதேயென்று - விளங்குகின்றதேயென்று, எல் அடர்சுடரை - ஒளிமிகுந்த தீபத்தை, முத்தமிடின் - முத்தமிட்டால், சுடாது அமைவது உண்டோ - (அது) சுடாதிருத்தலுண்டோ. எ - று.

(பொ - ரை.) அன்றி, மிகுந்த சிநேகமென்று சமயம்பாராமற்போவாயாயின் உனக்கு விரைவில் மிகுந்த அவமானமுண்டாய்விடும், இது உண்மையேயாம், நன்மையாகிய தன் வீட்டில் வார்க்கின்ற நறுமணமுள்ள நெய்யைப் பருகி விளங்குகின்றதேயென்று ஒளிமிகுந்த தீபத்தை முத்தமிட்டால் (அது) சுடாதிருத்தலுண்டோ. எ - று.

(வி - ரை.) அற்றம் - சமயம், (நற்சமயம்) இதனைத்தருணம் என்று கூறுவர் வடநூலார், அற்றநோக்காது செல்வின் அவமானமுண்டாவது திண்ணமென்ற துணிவுபற்றி, ஒல்லையினினக்குண்டாயிற்றுறுமவமானம், என இறந்தகாலத்தாற்கூறினார் - நெய் என்றது ஆமணக்கு நெய்யை, இது, 'நல்ல தன்மனையின்வாக்கு நறுநெயுண்டொளிர்வதேயென் - றெல்லடர் சுடரை முத்தமிடிற் சுடாதமைவதுண்டோ, என்றதனுற்போந்த பொருள், சுடர் - இவ்விடத்துத் தீபத்தையுணர்த்திற்று, 'நறுநெய்' என்றார் விளக்கு நெய்க்கு நறுமணமுண்மையான், "விளக்கு நெய்தேய்விடத்துச்சென்றிருள் பாய்ந்தாங்கு" என்புழியும், நெய்யென்பது விளக்கென்றகுறிப்பால் ஆமண க்கு நெய்யைக்குறித்தல் காண்க, மானம் - பெருமை, அவமானம்-பெருமைக் கேடு, மானம் அவமானம் வடசொற்கள், இவற்றை, முறையேமதிப்பு அவ மதிப்பு என்பர் தமிழர், இச்செய்யுளில், "தன்வீட்டு விளக்கென்று முத்த மிட்டால் அது சுடாதுவிடுமோ" என்னும் பழமொழிப்பொருளமைந்திருத் தல் காண்க. (௮௮)

பழியிலுன் குலத்தோர் செய்யப் படுந்தொழி னன்கி யற்றி
யிழிவறவுண்டு டுத்த லின்றிமிக் கெண்ணங் கொண்டு
வழிநடந் திளைத்தாய் மெய்யும் வாடினு யந்தோ வானிற்
கழிமதி வருக வென்றுட் கசிந்தழு மழவு போன்றாய்.

(ப - ரை.) பழிஇல் - பழிப்பில்லாத, உன்குலத்தோர் - உன் சாதியா ரால், செய்யப்படும் - செய்யப்படுகிற, தொழில் - தொழில்களை, நன்கு இய ற்றி - நன்றாகச்செய்துகொண்டு, இழிவு அற - இகழ்ச்சியில்லாதபடி, உண்டு உடுத்தல் - உண்டுடுத்துக்காலங்கழித்தல், இன்றி - இல்லாமல், மிக்க எண் ணம்கொண்டு - பெரிதாகிய எண்ணத்தைக்கொண்டு, வழிநடந்து - (இவ்வ ளவுதூரம்) வழிநடந்து வந்து, இளைத்தாய் - மனமயர்ந்தாய், மெய்யும்வாடி னாய் - உடம்பும் வாட்டமடைந்தாய், அந்தோ - ஐயோ, (இந்த ஏதுவினுல் நீ,) வானில்கழிமதி-[illegible]மேலே செல்லுகின்ற சந்திரனே, வருக என்று - வருவாயாகவென்று, உள்கசிந்து அழும்மழவுபோன்றாய் - மனங்கரைந்து அழுகின்ற குழந்தையை நிகர்த்திருக்கிறாய். எ - று.

(பொ - ரை.) பழிப்பில்லாத உன் சாதியாரால் செய்யப்படுகிற தொ ழில்களை நன்றாகச்செய்துகொண்டு, இகழ்ச்சியில்லாதபடி உண்டுடுத்துக் காலங்கழித்தலில்லாமல், பெரிதாகிய எண்ணத்தைக்கொண்டு, இவ்வளவு தூரம் வழிநடந்துவந்து மனமயர்ந்தாய், உடம்பும் வாட்டமடைந்தாய், ஐயோ (இந்த ஏதுவினுல், நீ) ஆகாயத்தில் செல்லுகின்ற சந்திரனே, வருவாயாக வென்று மனங்கரைந்தழுகின்ற குழந்தையை நிகர்த்திருக்கிறாய். எ - று.

(வி - ரை.) 'பழியில்' என்பது வேதியர் சாதிச்சிறப்புணர்த்த வந்த அடைமொழி, அவர்க்குரிய தொழில்கள் - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன, இவற்றை அறுதொழில் என்பர்-இவ் வறு தொழிலுடையராதல் பற்றி இவரை அறுதொழிலாளர் என்பர், இவரை

ஷட்கர்ம நிரதர் எனவும், அறுதொழிலை ஷட்கர்மம் எனவும் கூறுவர் வடநூலார். உண்டுடுத்தலின்றி,என்றதனால்,நீ உண்ணவுடுக்கக்கதியற்றவன் என்பதும்விளங்கும்,மிக்கஎண்ணம் மிக்கெண்ணம் எனத்தொகுத்தலாயிற்று,இது பேராசையெனப்படும், அந்தோ - இரக்கச்சொல், இதுஹந்த என்னும் வடசொற்சிதைவு, இதனைச்சிங்களநாட்டில் வழங்குவதோர் திசைச்சொல் என்பர் ஒருசாரார், கழிமதி, அழுமழவு, வினைத்தொகைகள், மழ - இளமைகுறிக்கும் உரிச்சொல், இது இளமையையுடைய குழந்தைக்குப் பண்பாகுபெயர், மழவு என்புழி உகரம்சாரியை, பொய்யுடலைமெய்யென்றது மங்கலவழக்கு, 'வானிற்கழிமதிவருகவென்றுட்கசிந்தழுமழவுபோன்றாய்,என்றது,''அரியகொம்பிற்றேனை முடவனிச்சித்தபடியாகும்'' என்பதுபோல, சாத்தியப்படாதவொரு பொருளைவிரும்பினாய் என்றிழித்துக்கூறியபடி,''வானுந்து மாமதிவேண்டி யழுமழப்போலுமன்றே'' என்றும், ''பனிக்கதிரளக்கரக்கனைவானீட்டுமைந்தர் புந்திக்கொக்குமே'' என்றும்,''குதலைச்சொற்பாலர் திங்களைக்கையாற் பிடிக்கத்துணிந்தெழலே'' என்றும் இவ்வாறு பிறருங் கூறுதல் காண்க. (அக)

மாத்திருந் தளகை வேந்தும் வானர சளிக்கும் வேந்தும்
பாத்திருந் தியசீர் கேட்டுப் பரிவுறப் போகந் துய்க்கு
மேத்திருந் தியவில் வல்லான் சேவைக்கு வந்திவ் வாயில்
காத்திருக் கின்ற மன்னர்க் கண்டிலை போலு மாலோ.

(ப - ரை.) மா திருந்து-அழகினால் திருத்தமடைந்திருக்கிற, அளகை வேந்தும்-அளகாபுரிக்கு வேந்தனாகிய குபேரனும்,வான்அரசு அளிக்கும் வேந்தும் - சுவர்க்கலோகத்தை அரசாளுகிற வேந்தனாகிய இந்திரனும், பா திருந்திய - நூல்களால் திருத்தமாகச்சொல்லப்பட்ட, சீர்கேட்டு - தன் சிறப்பைக்கேட்டு, பரிவுற - துன்பமடைய, போகம்துய்க்கும்-செல்வத்தையநுபவிக்கிற, ஏதிருந்திய - அம்பு திருத்தமாகத்தொடுத்தற்குரிய, வில்வல்லான - வில்வித்தையில்வல்லவனாகிய ஸ்ரீ கண்ணபிரானது, சேவைக்கு - தரிசநத்துக்கு, வந்து - வந்து, இவ்வாயில் - இந்தவாயிலில், காத்திருக்கின்ற மன்னர் - காத்திருக்கிற வேந்தரை, கண்டிலைபோலும் - நீ கண்டாயில்லைபோலும். எ - று.

(பொ - ரை.) அழகினால் திருத்தமடைந்திருக்கிற அளகாபுரிக்குவேந்தனாகிய குபேரனும், சுவர்க்கலோகத்தை அரசாளுகிற வேந்தனாகிய இந்திரனும், நூல்களால் திருத்தமாகச்சொல்லப்பட்ட தன் சிறப்பைக்கேட்டுத் துன்பமடையச்செல்வத்தை யநுபவிக்கிற, அம்புதிருத்தமாகத் தொடுத்தற்குரிய வில்வித்தையில்வல்லவனாகிய ஸ்ரீ கண்ணபிரானது தரிசநத்துக்கு வந்து இநதவாயிலில் காத்திருக்கிற வேந்தரைநீகண்டாயில்லைபோலும்.எ-று.

(வி - ரை.) மாதிருந்து என்பதற்கு திருமகள் திருந்த வீற்றிருக்கிற என்றும், சிறப்புக்கள் யாவும் திருந்தியிருக்கிற என்றும் கூறினுமாம், அளகை - அளகாபுரி என்பதன்மரூஉ, வேந்து இரண்டும் பண்பாகுபெயர்கள், உம்மைகள் உயர்வுசிறப்பு, பரிவுறல் ஏற்றுக்கெனின், பெருஞ்செல்வராகிய

எமக்கும் இவ்வாறுயபெரும்போகாநுபவமில்லையென்றேக் கறுதலாமென்க. "எத்திருத்திய வில்வல்லான், என்பதற்கு, மேல் - அசு - வது செய்யுளில் சிலைவலான், என்றதற்குரைத்தாங்குரைத்துக்கொள்க, ஏ - அம்பு, எத்திருத்திய வில்வல்லான் சேவைக்குவந்திவ்வாயில் காத்திருக்கின்றமன்னர், என்றமையால், சேவையினருமை விளங்குகின்றது, சேவை - தரிசநம், (காட்சி)

இந்திர திருவ னென்ன வீங்குநிற் கின்ற வள்ளல்
பந்தியின் மடந லார்பொற் பந்தெறிந் தாட னோக்கி
நந்திய பொழிலிற் றேமா நறுங்கனி பறித்துக் கொண்டு
மந்தியு மாடல் செய்யு மகதநா டாளு மன்னன்.

(ப - ரை.) இந்திரதிருவன் என்ன - இந்திரன்போன்ற பெருஞ்செல்வனென்று கண்டோர் சொல்லும்படி, ஈங்கு நிற்கின்றவள்ளல் - இவ்விடத்தே நிற்கிற வள்ளலானவன், பந்தியின் - வரிசையாக, மடநல்லார் - இளம்பெண்கள், பொன்பந்து எறிந்து ஆடல்நோக்கி - பொற்பந்தினையெறிந்து விளையாடுதலைப்பார்த்து, மந்தியும் - பெண்குரங்குகளும், நந்தியபொழிலில் - செழித்த சோலைகளிலுள்ள, தேமா - தேமாமரங்களின், நறுகனி பறித்துக்கொண்டு - நறுவியகனிகளைப்பறித்துக்கொண்டு, ஆடல்செய்யும் - விளையாடுதற்கிடமாயுள்ள, மகதநாடு ஆளும் வேந்தன் - மகத தேசத்தையாளுகின்ற அரசனாவன். எ - று.

(பொ - ரை) இந்திரன் போன்ற பெருஞ்செல்வனென்று கண்டோர் சொல்லும்படி இவ்விடத்தே நிற்கிறவள்ளலானவன், வரிசையாக இளம்பெண்கள் பொற்பந்தினையெறிந்து விளையாடுதலைப்பார்த்து, பெண் குரங்குகளும் செழித்த சோலைகளிலுள்ள தேமா மரங்களின் நறுவிய கனிகளைப் பறித்துக்கொண்டு விளையாடுதற்கிடமாயுள்ள மகத தேசத்தையாளுகின்ற அரசனாவன். எ - று.

(வி - ரை.) இந்திர திருவனென்ன என்பதில், என்ன-உவமவுருபெனினுமாம், இங்கு என்னுஞ்சுட்டு நீண்டு ஈங்கு என்றாயிற்று, பந்தி-நிரை. மடம்-இளமை, நல்லார் - பெண்களுக்குப்பொதுப்பெயர், இது தம் கணவர்க்கு இம்மை மறுமையின் பங்களைத்தருதலால் நன்மை செய்பவர் என்றும், நன்மை அழகாதலால் அழகுள்ளவர் என்றும் பொருளபடுவதோர் தமிழ்ச்சொல், பொழிலில் பலவகைக்கனிகளிருக்க மந்தி தேமா நறுங்கனி பறித்தமைக்குக் கெனின், மடநல்லார் பொற்பந்தாடல் போலத் தாமுமாடல் வேண்டியென்க. மந்தியென்பது குரங்குக்குப்பொதுப்பெயராயினும், மடநல்லார் பொற்பந்தெறிந்தாடனோக்கி மந்தியுமாடல்செய்யும் என்றதனால் இவ்விடத்துப்பெண் குரங்கைக்குறித்தது, உம்மை இழிவு சிறப்பு, இறந்ததுதழீஇயதுமாம், மந்தி - பெண் குரங்கு என்பது "மந்தியூகமற்ற தன் பெண்பெயர்" என்பதனானுமினிது விளங்கும். பந்தி - பங்தியென்னும் வடசொற்றிரிபு, மகதம் - ஐம்பத்தாறு தேயங்களிலொன்று,இது, வங்கதேசத்துக்கு மேற்றிசையி

லுள்ளது. முன்னே இதிலிருந்த அரசர்கள் மஹாவீரர்களானஜராசந்தன் முத லானோர்,இது பாடலீபுத்ரத்தை ராஜதாநியாகவுடையது, இதில் கொஞ்ச காலம் பௌத்தமதம் நிலைபெற்றிருந்தது. பிறகு இதிலிருந்த அரசர்கள், ஆந்த்ரராஜ்யஸ்த்தாபகர்களானார்கள். (௬௧)

படுங்கடக் கரிபோன் றாங்கோர் பரிக்கரு காநிற் கின்றோ
னொடுங்கலில் வருக்கை நையா வொழுகுறு செழுந்தே னோடி
யடுங்கருப் பாலை வீழ்த்தி யடர்புலி யடிப்ப சுங்காய்க்
கொடுங்குலைக் கதலி சாய்க்குங் கொங்கண நாட்டு வேந்தன்.

(ப - ரை.) படும்-ஒழுகுகின்ற, கடம் - மதநீரையுடைய, கரிபோன்று- யானையை நிகர்த்து, ஆங்கு - அவ்விடத்தில், ஓர்பரிக்கு அருகாநிற்கின்றோன்- ஒரு குதிரைக்கருகே நிற்கிறவன், ஒடுங்கல் இல் - சிறுகுதலில்லாத, வருக் கை - பலாப்பழங்கள், நையா - நைந்து, ஒழு குறுசெழுதேன் ஓடி - ஒழுகா நின்ற செழுந்தேனானது ஓடி, அடும் - காய்ச்சுகிற, கருப்பு ஆலைவீழ்த்தி - கருப்பாலையைத்தள்ளி, அடர் - நெருங்கிய, புலி அடி - புலியடிபோன்ற, பசுகாய் - பசிய காய்களையுடைய, கொடுங்குலைகதலி - வளைந்த குலைகளோடு கூடிய வாழைமரங்களை, சாய்க்கும் - சாய்த்தற்கிடனாயிருக்கிற, கொங்கண நாட்டு வேந்தன் - கொங்கணதேயத்தரசனாவான். (எ - று.

பொ - ரை. ஒழுகுகின்ற மதநீரையுடைய யானையை நிகர்த்து அவ்வி டத்தில் ஒரு குதிரைக்கருகே நிற்கிறவன், சிறுகுதலில்லாத பலாப்பழங்கள் நைந்து ஒழுகாநின்ற செழுந்தேனானது ஓடி, காய்ச்சுகின்ற கரும்பாலையைத் தள்ளி, நெருங்கிய புலியடிபோன்ற பசிய காய்களையுடைய வளைந்த குலைக ளோடு கூடிய வாழைமரங்களைச் சாய்த்தற்கிடனாயிருக்கிற கொங்கணதேயத் தரசனாவான். எ - று.

(வி - ரை.) போன்று என்னும் இறந்தகால வினையெச்சம் நிற்கின்றோன் என்னும் வினைகொண்டது. படுதல் - ஒழுகுதல். பரி - முதனிலைத்தொழிலா குபெயர், தாங்குந்தொழிலையுடையது என்பது பொருள். நையா - செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம், இது ஒழுகு என்னும் வினை கொண்டது. ஒழுகுறு - ஒருசொல், ஓடுதல் - விரைந்து செல்லுதல். கரும் பாலை யெனற்பாலது கருப்பாலையென வலித்தலாயிற்று. கோடுங்குலையென் பது கொடுங்குலை யெனக்குறுகிற்று, கதலி - வடசொல். கொங்கணம் - ஐம் பத்தாறு தேயத்திலொன்று, இது மேலைக்கடற்கரையில் கேரளதேசத்துக்கு வடதிசையிலுள்ளது. (௬௨)

ஒளிர்நுதி வடிவா ளேந்தி யூங்கெழி றரநிற் கின்றோ
னளிசெறி மலர்நீர் வாவி யடர்மருப் பெருமை பாயக்
களிதரு செருக்கி னோடு கால்விசைத் தெழுந்து வாளை
குளிர்மதி கிழியப் பாயுங் கூர்ச்சர நாட்டு வேந்தன்.

(ப - ரை.) ஒளிர்நுதி - விளங்குகின்ற நுனியையுடைய, வடிவாள் ஏந்தி - வடித்தவாளாயுதத்தைத்தாங்கி, ஊங்கு - உவ்விடத்தில், எழில் தா

நிற்கின்றோன் - அழகாக நிற்கிறவன், அளிசெறி - வண்டுகள் மொய்க்கிற, மலர் நீர்வாவி - மலர்களோடு கூடிய நீரையுடைய தடாகங்களில், அடர் மருப்பு - நெருங்கின கொம்புகளையுடைய, எருமைபாய - எருமைகள் வீழ்தலால், வாளை - வாளைமீன்கள், களிதரு செருக்கின் ஓடி - களிப்பையுண்டாக்குகிற செருக்கினால் ஓடி, கால்விசைத்து எழுந்து - காற்றுப்போலவிசைகொண்டெழுந்து, குளிர் மதிகிழியபாயும் - குளிர்ந்த சந்திரன் பிளவுபடும்படி பாய் தற்கிடனாகிய, கூர்ச்சரநாட்டுவேந்தன் - கூர்ச்சரதேயத்தரசனுவான்.

(பொ - ரை.) விளங்குகின்ற நுனியையுடைய வடித்த வாளாயுதத்தைத்தாங்கி உவ்விடத்தில் அழகாக நிற்கிறவன், வண்டுகள் மொய்க்கிற மலர்களோடு கூடிய நீரையுடைய தடாகங்களில், நெருங்கின கொம்புகளையுடைய எருமைகள் வீழ்தலால், வாளைமீன்கள் களிப்பையுண்டாக்குகிற செருக்கினால் ஓடிக்காற்றுப்போல விசைகொண்டெழுந்து குளிர்ந்த சந்திரன் பிளவுபடும்படிபாய்தற்கிடமாகிய கூர்ச்சர தேயத்தரசனுவான். எ - று

(வி - ரை.) ஒளிர்நுதி - வினைத்தொகை. வடிவாளுமது, ஊங்கு - பொது மைச்சுட்டின் விகாரம். எழிறர - ஒருசொல். பாய - காரணப்பொருட்டாகிய செயவெனெச்சம். செருக்கு - மதர்ப்பு, விசைத்து - விசையென்னும் பெயரடியாகப் பிறந்த செய்தெனெச்சம்,இது எழுந்து என்னும் வினையையும், இது பாயும் என்னும் வினையையும் கொண்டன. கூர்ச்சரம் - தேயமைம்பத்தாறினென்று, இது மேலைக்கடற்கரையிலுள்ளது, வாளை விசைத்தெழுந்து பாய்தற்குக்காரணம் எருமைபாய் துழனியாலுண்டாகிய அச்சம். குளிர்மதி - அமிர்த கிரணமுடைத்தாதலாலுண்டாகிய குளிர்ந்த சந்திரன், இது, கிழிய என்னுங்குறிப்பால் பூர்ண சந்திரனைக்குறித்தது. (கூ௬)

மலையெடுத் தனைய திண்டோள் வலயம்வில் விடநிற் கின்றோன்
குலையெடுத் திருக்கும் வாழைக் கூன்குலை முறிந்து சாய
நிலையெடுத் துறையுங் கந்தி நெடுங்கழுத் திறப்பன் முத்த
மலையெடுத் தெறியும் வாவி யங்கநா டாளும் வேந்தன்.

(ப - ரை.) மலையெடுத்தனைய - மலைகளைத்தாங்கினாற்போன்ற, திண்டோள்வலயம் - திண்ணிய தோள்களிலணிந்த வாகுவலயங்கள், வில்விட - ஒளிசெய்ய,நிற்கின்றோன் - நிற்கிறவன்,குலை எடுத்திருக்கும்-அசையுந்தொழிலைக்கொண்டிருக்கிற, வாழை-வாழைமரத்தின், கூள்குலைமுறிந்துசாய - வளைவாகிய தாறுகள் முறிந்துசாயவும், நிலை எடுத்துறையும் - நிலைத்தற்றொழிலைக்கொண்டிருக்கிற, கந்தி - கமுகமரத்தின், நெடுகழுத்து இற - நெடியகழுத்தொடியவும், அலை - அலைகள், பல்முத்தம் எடுத்து எறியும் - பலவாகிய முத்துக்களை யெடுத்து வீசுதற்கிடனாகிய, வாவி - தடாகங்கள் சூழ்ந்த, அங்கநாடு - அங்கதேயத்தை, ஆளும்வேந்தன் - ஆளுகின்ற அரசனுவன். எ - று.

பொ - ரை. மலைகளைத்தாங்கினாற்போன்ற திண்ணிய தோள்களிலணிந்த வாகுவலயங்கள் ஒளி செய்ய நிற்கிறவன், அசையுந்தொழிலைக்கொண்

டிருக்கிற வாழைமரத்தின் லைாவாகிய தாறுகள் முறிந்துசாயவும், நிலைத்தற் றெழிலைக்கொண்டிருக்கிற கமுகமரத்தின் நெடிய கழுத்தொடியவும், அலைகள் பலவாகிய முத்துக்களையெடுத்து வீசுதற்கிடனாகிய தடாகங்கள் சூழ்ந்த அங்கதேயத்தையாளுகின்ற அரசனுமவன். எ - று.

(வி - ரை.) நின்றோன் என்ற குறிப்பால் வலயம்வாகு வலயத்தையுணர்த்தின, வாகு-தோள், இது பாஹு என்னும் வடசொற்றிரிபு. வில்லிட என்பது வில்லிட்டு என்பதன் திரிபாகி. வில்லைத்தாங்கி எனப்பொருள் கூறினுமாம். வில்-ஒளி, [illegible]. குலையிரண்டனுள் முன்னையது முதனிலைத்தொழிற்பெயர். சாய இறவென்னும் வினையெச்சங்கள் எறியும் என்னும் வினைகொண்டன. வாபீயென்னும் வடசொல்வாவியென்றாகியீறு குறுகிற்று, அலை-முதனிலைத்தொழிற்பெயர். அங்கம் - தேயமைம்பத்தாறினொன்று, இது கல்கத்தாவுக்குச் சங்கமத்தருகேயுள்ளது. இவ்விடத்தில உருத்திரன் தவஞ்செய்துகொண்டிருந்தகாலத்தில், அவனுக்கு, மன்மதன் காம விகாரமுண்டாக்கும்பொருட்டு முயலுதலும், உருத்திரன் சினங்கொண்டு தனது மூன்றாவதாகிய நெருப்புக்கண்ணைத்திறந்து நோக்குதலும் மன்மதன் வெந்து நீறாயினன், அதுமுதல் அங்கமில்லாதவனாதலால் வடமொழியில் அநங்கன் என்றும் தமிழில் உருவிலி என்றும் அவனுக்குப்பெயர் வழங்கிவருகின்றது. அவனது அங்கம் இவ்விடத்தில் மண்ணோடு கலந்துபோயினமையால் இதற்கு அங்கதேசம் என்னும் பெயருண்டாயிற்று. (கசு)

மேவரு மதந னென்ன வெண்குடை நிழனிற் கின்றோன்
றூவரு நகர்க ளெல்லாந் தயங்குபொன் மனைக டோறு
மாவகிர்க் கண்ணா ராக்கு மண்டுகுய்ப் புகையெண் ணூற்றுக்
காவதங் கமழுஞ் செல்வக் காம்போச நாட்டு மன்னன்.

(ப - ரை.) மேவருமதநன் என்ன - கிடைத்தற்கரிய மன்மதனென்னும்படி, வெண்குடை நிழல்நிற்கின்றோன் - வெள்ளிய முத்துக்குடையின் நிழலில் நிற்பவன், தாஅருநகர்கள் எல்லாம் - கெடுதலில்லாத நகரங்களெல்லாவற்றிலும், தயங்கு - விளங்குகிற, பொன்மனைகள்தோறும் - பொன்மயமான வீடுகள்தோறும், மாவகிர்கண்ணார் - மாவடுவகிர்போலுங் கண்களையுடைய பெண்கள், ஆக்கும் - சமைக்கின்ற, மண்டு - மிகுந்த, குய்புகை - தாளித்தகறியின் புகையானது, எண்ணூற்றுக்காவதம் - எண்ணூறுகாததூரம், கமழும் - பரிமளிக்கிற, செல்வம் - செல்வப்பெருக்குள்ள, காம்போச நாட்டுமன்னன் - காம்போஜதேசத்தரசனுமவன். எ - று.

(பொ - ரை.) கிடைத்தற்கரியமன் மதனென்னும்படி வெள்ளிய முத்துக்குடையின் நிழலில் நிற்பவன், கெடுதலில்லாத நகரங்களெல்லாவற்றிலும் விளங்குகிற பொன்மயமான வீடுகள்தோறும், மாவடுவகிர்போலுங் கண்களையுடைய பெண்கள் சமைக்கின்ற மிகுந்ததாளித்த கறியின் புகையானது எண்ணூறுகாததூரம் பரிமளிக்கிற செல்வப்பெருக்குள்ள காம்போஜதேசத்தரசனுமவன். எ - று.

(வி - ரை.) மேவருமதநனென்ன என்றது அழகிற் சிறந்த என்றபடி. மதநன் - செருக்கையுண்டாக்குவோன், அரசர்க்குரிய குடைகள் மூன்று, அவை பொன்மணிமுத்து என்பவற்றானியன்றன, அம்மூன்றனுள்ளும் வெண்குடையென்ற குறிப்பால் இது முத்துக்குடை யெனப்பட்டது, மா - மாம்பிஞ்சு, (வடு), வகிர் - பிளவு, குய் - தாளித்தகறி, இது ஒலிக்குறிப்பான் வந்தபெயர், என்ன - உவமவுருபு, இது வினையெச்சப் பொருட்டாகி நிற்கின் றோன் என்னும் வினைகொண்டது, கமழும்காம் போசநாடு எனவியையும், கமழும் - கமழ்தற்கிடமாயிருக்கிற. தயங்குதல் - விளங்குதல், காம்போசம் - தேயமைம்பத்தாறினொன்று, இது, பரதகண்டத்தின் வாயுதிசையிலுள்ளது, இதில்வாழ்வோர் காம்போஜர் எனப்படுவர். (௬௫)

வாகைவேல் வலத்தி னேந்தி மடங்கலே றெனநிற் கின்றோ
னோகையங் களிப்பு மீக்கொண் டொளிவள ரரங்கு தோறும்
பாகைநேர் மொழியா ராடப் பைந்தளிர்ச் சோலை தோறுந்
தோகைமா மயில்க ளாடுந் துளுவநா டாளு மன்னன்.

(ப - ரை.) வாகைவேல் - வெற்றிவேலை, வலத்தின் ஏந்தி - வலப்பக் கத்தில் தாங்கி, மடங்கல் ஏறுஎனநிற்கின்றோன் - ஆண்சிங்கம்போல நிற்ப வன், ஓகைஅம்களிப்பு மீக்கொண்டு - உவகைக்களிப்புமேற்கொண்டு, ஒளி வளர் - ஒளிபெருகுகின்ற, அரங்குதோறும் - ஆடிடங்களிலெல்லாம், பாகை நேர்மொழியார்ஆட - சர்க்கரைப்பாகினை நிகர்த்தமொழியினையுடையவராகிய மாதராட, (அதைக்கண்ட) தோகைமாமயில்கள் - கலாபத்தையுடைய அழகிய மயில்கள், பைதளிர் சோலைதோறும் - பசியதளிர்களையுடைய சோலைகளி லெல்லாம், ஆடும் - ஆடுதற்கிடமாயிருக்கிற, துளுவநாடு ஆளும் மன்னன் - துளுவதேசத்தையாளுகின்ற அரசனாவான். எ - று.

(பொ - ரை.) வெற்றிவேலை வலப்பக்கத்தில்தாங்கி ஆண்சிங்கம்போல நிற்பவன், உவகைக்களிப்பு மேற்கொண்டு ஒளிபெருகுகின்ற ஆடிடங்களி லெல்லாம் சர்க்கரைப்பாகினை நிகர்த்தமொழியினையுடையவராகிய மாதராட (அதைக்கண்ட) கலாபத்தையுடைய அழகிய மயில்கள் பசியதளிர்களையுடைய சோலைகளிலெல்லாம் ஆடுதற்கிடமாயிருக்கிற துளுவதேசத்தை யாளுகின்ற அரசனாவன். எ - று.

(வி - ரை.) வாகைவேல்- வாகைமாலையைச்சூடிய வேல் எனினுமாம், வெற்றியைத்தருகிறவேல் என்றலுமொன்று, வலத்தின் - வலக்கையில், வலி மையால். மடங்கல் ஏறு என்பதை ஏறுமடங்கல் எனமுன் பின்னாகமாற்றி ஆண்சிங்கம் எனப்பொருள் கூறலாயிற்று, இது சொன்னிலைமாற்று, ஓகை யங்களிப்பு என்பதில் அம்சாரியை, ஓகைக்களிப்பாவது - சந்தோடத்தா லுண்டாகிய மதர்ப்பு, மீக்கொண்டு - அதிகரித்து எனினுமாம், பாகைநேர் மொழியார் என்றது உண்ணுந்தோறும் பாகுநாவிற்கினிமை தருதல்போல க்கேட்குந்தோறும் மொழிசெவிக்கினிமை தருதலானென்க, பாகைநேர்மொ

ழியார் எனவாளாகூறினுரேனும் அரங்குதோறும் ஆடஎன்ற குறிப்பால்நாட்டியப்பெண்களெனக்கொள்க. (கசு)

காளையர் சூழ மோலி கதிரெறித் திடநிற் கின்றோன்
வாளைபாய் நீத்தம் வந்த வலம்புரி கமுகி லேறி
வேளைவாய்த் திடப்பன் முத்தம் விருப்பொடு காண்போர் கந்தி
பாளையீன் றதென வீனும் பல்லவ நாட்டு மன்னன்.

(ப - ரை.) காளையர்சூழ - யவ்வநபுருடர் சூழவும், மோலி - மணிமுடியானது, கதிர் எறித்திட - ஒளிவீசவும், நிற்கின்றோன் - நிற்பவன், வாளைபாய் நீத்தம்வந்த - வாளைமீன்கள் பாய்கின்ற வெள்ளத்தில்வந்த, வலம்புரி - வலம்புரிச்சங்குகள், கமுகில்ஏறி - கமுகமரத்திலேறி - வேளைவாய்த்திட - ஈனும்பருவம் வந்தவுடனே, விருப்பொடு - விருப்பத்தோடு, காண்போர் - பார்ப்பவர்கள், கந்தி - கமுகமரம், பாளை ஈன்றதென - பாளையையீன்றது என்னும்படி, பல்முத்தம் - பலமுத்துக்களை, ஈனும் - ஈனுதற்கிடமாயிருக்கிற, பல்லவநாட்டு மன்னன் - பல்லவதேசத்தரசனுவன். எ - று.

(பொ - ரை.) யவ்வநபுருடர் சூழவும், மணிமுடியானது ஒளிவீசவும் நிற்பவன், வாளைமீன்கள் பாய்கின்ற வெள்ளத்தில் வந்தவலம்புரிச்சங்குகள் கமுகமரத்திலேறி, ஈனும் பருவம்வந்தவுடனே, விருப்பத்தோடு பார்ப்பவர்கள் கமுகமரம்பாளையை யீன்றதென்னும்படி பலமுத்துக்களை யீனுதற்கிடமாயிருக்கிற பல்லவதேசத்தரசனுவன். எ - று.

(வி - ரை.) காளையர் - இடபம்போன்றவர், கதிரெறித்திட என்றகுறிப்பால் மோலிமணிமுடியை யுணர்த்திற்று, வலம்புரி - சங்குவிசேஷம், கமுகு க்ரமுகம் என்னும் வடசொற்றிரிபு, வேளை - பருவம், வாய்த்திட - ஒருசொல்லாய் வாய்க்க எனப்பொருள்பட்டது. பன்முத்தம் என்பதற்கு யாவரும் புகழ்தற்குரியமுத்தம் என்றுரைப்பினுமாம், முத்தம்ஈனும் எனவியையும். சூழ எறித்திடஎன்னும் வினையெச்சங்கள் நிற்கின்றோன் என்பதின் முதனிலையாகிய நில் என்னும்வினைகொண்டன. (கஎ)

வயிரவொண் குழைம தாணி வாளெறித் திடநிற் கின்றோன்
பயிருறு களைகட் டோம்பும் பான்மொழி யுழத்தி மார்தஞ்
செயிர றுவதனங் கண்டு திங்களென் றெண்ணி யெல்லுங்
கயிரவ மலரும் பண்ணைக் கலிங்கநா டாளு மன்னன்.

(ப - ரை.) வயிரம் - வச்சிரத்தாணியன்ற, ஒள் - ஒட்பமாகிய, குழை - குண்டலமும், மதாணி - பதக்கமும், வாள்எறித்திட - ஒளியைவீச, நிற்கின்றோன் - நிற்பவன, உறு - மிகுந்த, களைகட்டு - களைகடிந்து, பயிர் - பயிர்களை, ஓம்பும் - காப்பாற்றுகிற, பான்மொழி - பாற்சுவைபோலும் இன்சுவையுள்ள மொழியையுடைய, உழத்திமார் - உழத்தியரது, செயிர்அறு - குற்றமற்ற, வதநம்கண்டு - முகத்தைப்பார்த்து, திங்கள் என்று எண்ணி - பூர்ணசந்திரனென்று நினைத்து, எல்லும் - பகற்காலத்திலும், கயிரவம் மலரும் -

அல்லிமலர்கின்ற, பண்ணை - வயல்கள் சூழ்ந்த, கலிங்கநாடு - கலிங்கதேச த்தை, ஆளும் - ஆள்கின்ற, மன்னன் - அரசனுவன். எ - று.

(பொ - ரை.) வச்சிரத்தானியன்ற ஒட்பமாகிய குண்டலமும் பதக்க மும் ஒளியைவீச நிற்பவன், மிகுந்த களைகடிந்து பயிர்களைக்காப்பாற்றுகிற பாற்சுவைபோலும் இன்சுவையுள்ள மொழியையுடைய உழத்தியரது குற்ற மற்ற முகத்தைப்பார்த்து, பூர்ணசந்திரனென்று நினைத்து, பகற்காலத்திலும் அல்லிமலர்கின்ற வயல்கள் சூழ்ந்த கலிங்கதேசத்தை யாளுகின்றஅரசனுவன்.

(வி - ரை.) வயிரம் - நவமணியினென்று, மதாணி - மார்பிலணியும் பதக்கம், வாள் - ஒளி, களைகட்டு - களைபறித்து, பயிர் ஓம்பும் எனவியை யும், உழத்திமார் - கடைசியர், செயிர் - களங்கமெனினுமாம், உழத்திமார் தம் என்பதில் தம் சாரியை, எல் - பகற்காலம், கைரவம் என்னும் வடசொல் கயிரவம் எனவந்தது, கலிங்கம் - தேயமைம்பத்தாறினென்று, இது ஒட்ர தேசத்துக்குத்தெற்கிலும் கர்ணுடதேசத்துக்கு வடக்கிலும் உள்ளது. (கூஅ)

அளவில்பல் சேனை சூழ வமரணி கொடுநிற் கின்றோன்
வளமலி நறும்பூ மல்கும் வாவியிற் றூண்டில் வாய்நின்
றுளம்வலித் தெழுந்த வாளை யொய்யெனக் கற்ப கத்தின்
கிளர்கழுத் தொடியப் பாயுங் கேகய நாட்டு வேந்தன்.

(ப - ரை.) அளவுஇல் - அளவில்லாத, பல்சேனைசூழ - பலசேனைகள் தன்னைச்சூழும்படி, அமர்அணிகொடு-யுத்தவேஷங்கொண்டு, நிற்கின்றோன் - நிற்பவன், வளம்மலி - வளமிகுந்த, நறுபூமல்கும் - நறுமலர்கள் நிறைந்த, வாவியில் - தடாகங்களில், தூண்டில் வாய்நின்று - தூண்டிலினிடத்து நின்று, உளம்வலித்து எழுந்த - மனவுறுதிகொண்டெழுந்த, வாளை - வாளை மீன்கள், ஒய்யென - விரைவாக, கற்பகத்தின் - கற்பகமரத்தின், கிளர் - விளங்குகின்ற, கழுத்து - கழுத்தானது, ஒடிய - ஒடியும்படி, பாயும் - பாய் தற்கிடனுயிருக்கிற, கேகயநாட்டுவேந்தன் - கேகயதேசத்தரசனுவன். எ-று.

(பொ - ரை.) அளவில்லாத பலசேனைகள் தன்னைச்சூழும்படி யுத்த வேஷங்கொண்டு நிற்பவன், வளமிகுந்த நறுமலர்கள் நிறைந்ததடாகங்களில், தூண்டிலினிடத்து நின்றுமனவுறுதிகொண்டெழுந்த வாளைமீன்கள் விரை வாக, கற்பகமரத்தின் விளங்குகின்ற கழுத்தானது ஒடியும்படி பாய்தற்கிடனு யிருக்கிற கேகயதேசத்தரசனுவன். எ - று.

(வி - ரை.) அமர்அணி - யாவரும் விரும்புதற்குரிய அழகு எனினு மாம். "தூண்டில்-மீன்பிடிக்குங்கருவிகளிலொன்று "தூண்டிலெடுத்தவரா றெங்கொடெற்றப்பழன் விழுந்து, பாண்டிலெடுத்தபஃறுமனை கீளும்பழனங் களே" என்றார் மணிவாசகரும், ஒய்யென - விரைவுக்குறிப்புணர்த்துவதோ ரிடைச்சொல், அநுகரணவோசையெனினுமாம், கற்பகம் - ஐந்தருவினொ ன்று, கழுத்து என்றது உபரிபாகத்தை, அமர்தல் - விரும்புதல், கொடு - கொண்டு என்பதன்விகாரம், கேகயம் - தேயமைம்பத்தாறினென்று, இது,

சிபியின்புதல்வனுகிய கேகயனுலாளப்பட்டதனுல்இப்பெயருடைத்தாயிற்று. இது வியாசகூதியின் வாயுதிசையிலுள்ளது, இதற்கு ராஜதாநி கிரிவ்ரஜம், பரதன் பாட்டன் இந்தத்தேசாதிபதி. (கூகூ)

கொழுநிணந் தின்று சோரி குடிக்கும்வே லொடுநிற் கின்றோ
னெழுகதிர்ப் பரிவாய்க் கௌவ வெழுந்தசெஞ் சாலிச் செய்யிற்
குழுமுபல் கயன்மெய் கீளக் குதித்தென்றும் பாய்த லாலே
செழுமுகிற் பொழிவ றாத சிங்கள நாட்டு மன்னன்.

(ப - ரை.) கொழுநிணம் தின்று - (பகைவரது) கொழுவியநிணத்தைத்தின்று, சோரிகுடிக்கும் - உதிரத்தைக்குடிக்கின்ற, வேலொடுநிற்கின்றோன் - வேலாயுதத்தோடு கூடிநிற்கிறவன், எழுகதிர்பரி - (ஆகாயத்தில்) எழுகின்ற சூரியன் குதிரை, வாய்கௌவ - வாயினுல் கவ்வும்படி, எழுந்த - ஓங்கின, செஞ்சாலி - செந்நெல்லின், செய்யில் - வயலில், குழுமு - கூடின, பல்கயல் - பலகயல்மீன்கள், மெய்கீளகுதித்து - உடம்புகிழி படக்குதித்து, என்றும் பாய்தலாலே - எக்காலத்தும் பாய்தலால், செழுமுகில் - செழுமையாகிய மேகங்களின், பொழிவு - மழைபொழிதற்றொழில், அறாத-நீங்காத, சிங்களநாட்டுமன்னன் - சிங்களதேயத்தரசனுவன். எ - று.

(பொ - ரை.) பகைவரதுகொழுவிய நிணத்தைத்தின்று உதிரத்தைக் குடிக்கின்ற வேலாயுதத்தோடு கூடிநிற்கிறவன், (ஆகாயத்தில்) எழுகின்ற சூரியன் குதிரைவாயினுல் கவ்வும்படி ஓங்கினசெந்நெல்லின் வயலில்கூடின பலகயல்மீன்கள், உடம்புகிழிபடக்குதித்து எக்காலத்தும் பாய்தலால், செழுமையாகிய மேகங்களின் மழைபொழிதற்றொழில் நீங்காதசிங்களதேயத்தரசனுவன். எ - று.

(வி - ரை.) 'கொழுநிணந்தின்று சோரிகுடிக்கும் வேலொடுநிற்கின்றோன், என்றமையால், இவன்மஹாவீரனுதலால் தன் வேலேதுணையாகக் கொண்டு தனிமையாய் வந்தானென்பது விளங்குகின்றது, விளங்கவே, பிறரொடுகூடி நில்லாமையும் பெறப்படும், "வேலொடு நின்றானிடுவென்றது போலும், கோலொடு நின்றானிரவு" என்னுந்திருக்குறள் விசேடவுரையில் வேலொடு நின்றான், என்றமையால் பிறரொடு நில்லாமைபெற்றாம், எனப் பரிமேலழகர் வரைந்திருத்தலுங்காண்க, எழுகதிர்ப்பரிவாய் கௌவவெழுந்த செஞ்சாலி, என்றமையால், செஞ்சாலியின் உபகாரகுணமும் தொனிக்கின்றது,அஃறிணைப்பொருள்களுள் ஒன்றும் ஓரறிவுயிருமாகிய செஞ்சாலிக்கிவ்வாறாய வுபகாரகுணமுண்மையால் அந்நாட்டு மக்களுயர்வு சொல்லாமேயமையும். மெய் - மேகத்தினுடம்பு. பொழிவு - தொழிற்பெயர். அறாத - இடையறாத, சிங்களநாடு - ஈழதேயம், இது தேய மைம்பத்தாறினொன்று. ()

பாயசீர்ப் போர்வை போர்த்தீப் படர்கதி ரெனநிற் கின்றோன்
மேயபூம் பொய்கை வெண்டா மரையைமென் சேவ லன்ன
நேயமா டணைப்பக் கண்டு நெறிபிழைத் தாயென் றாடித்
தூயபே டொதுங்கி மாழ்குஞ் சோனக நாட்டு மன்னன்.

(ப - ரை.) பாயசீர் போர்வைபோர்த்து - (உலகமுழுதும்) பரவிய தன் புகழாகிய போர்வையைப் போர்த்துக்கொண்டு, படர்-(கிரணங்கள்) விரிந்த, கதிர் என-சூரியன்போல, நிற்கின்றான் - நிற்பவன், மேய - பொருந்திய, பூ- பொலிவையுடைய, பொய்கை - பொய்கையிலுள்ள, வெள்தாமரையை - வெண்டாமரைமலரை, மெல் - மென்மையாகிய, சேவல் அன்னம் - ஆண் அன்னமானது, நேயமோடு - அன்போடு, அணையக்கண்டு - தழுவக்கண்டு, தூய பேடு-பரிசுத்தமாகிய பெட்டையன்னம், நெறிபிழைத்தாய் என்று ஊடி-நன்னெறியினின்றும் தவறினாய் என்று (ஆணன்னத்தைநோக்கி) சொல்லிப்பிணங்கி, ஒதுங்கும் - விலகி மயங்குதற்கிடமாயிருக்கிற, சோனக நாட்டுமன்னன் - சோனக தேசத்தரசனாவான். எ - று.

(பொ - ரை.) (உலகமுழுதும்) பரவிய தன்புகழாகிய போர்வையைப் போர்த்துக்கொண்டு (கிரணங்கள்) விரிந்த சூரியன்போல நிற்பவன், பொருந்திய பொலிவையுடைய பொய்கையிலுள்ள வெண்டாமரைமலரை மென்மையாகிய ஆணன்னமானது அன்போடு தழுவக்கண்டு, பரிசுத்தமாகிய பெட்டையன்னம், நன்னெறியினின்றும் தவறினாய் என்று (ஆணன்னத்தை நோக்கி) சொல்லிப்பிணங்கி விலகி மயங்குதற் கிடமாயிருக்கிற சோனகதேசத்தரசனாவான். எ - று.

(வி - ரை) பாயசீர் போர்வையென்பதற்குச் சிறப்புமிகுந்த போர்வையென்றுரைப்பினுமாம். சிறப்புமிகுந்த போர்வையாவது பொன்னினாலும் மணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட பட்டு உத்தரீயம், கதிர் - கிரணம், இது கிரணங்களையுடைய சூரியனுக்கு ஆயினமையால் சினையாகுபெயர், நெறி-இல்லறநெறியெனினுமாம், பிழைத்தல்-தவறுதல், ஊடுதல் - பிணங்குதல், இது சயனகாலத்தில் நிகழ்வது, தூய - தூய்மையென்னும் பண்படியாகப்பிறந்த குறிப்புப் பெயரெச்சம், பேட்டுக்குத் தூய்மையாவது மறுவற்ற வெண்ணிறமுடைத்தாதலும் தன்சேவலன்னத்தையன்றி வேறொன்றை நோக்காமையுமாம். சேவலன்னம்வெண்டாமரையையணைத்துப் படுத்திருக்கக்கண்டபெட்டையன்னம், தன்கணவன் வேறு பேட்டைத் தழுவினதாக நினைத்து ஆணன்னத்தோடு ஊடின தென்பது கருத்து. சோனகம் - தேய மைம்பத்தாறினொன்று. (௧௦௧)

குஞ்சரக் குழாத்து நாப்பட் கோளரி போனிற் கின்றோன்
கஞ்சமட் டொழுகப் பூத்த கழனிகா லோடைக் கண்ணின்
றஞ்சிறை புகுத்த கூர்வாய்ப் பெருங்கிழ நாரை யாரல்
வஞ்சனைத் துயில்கொண் டுண்ணும் வங்கநா டாளு மன்னன்.

(ப - ரை.) குஞ்சரக்குழாத்து நாப்பண் - யானைக்கூட்டத்தின் நடுவே, கோளரிபோல் - ஆண்சிங்கம்போல, நிற்கின்றோன் - நிற்பவன், கஞ்சம் - தாமரைகள், மட்டு ஒழுக - தேனொழுக, பூத்த - புஷ்பித்த, கழனிகால் ஓடைக் கண்நின்று - கழனிகால் ஓடையென்பவற்றின் கண்ணேநின்று, அம்சிறைஉ-

குத்த - அழகிய சிறைகளையிழந்த, கூர்வாய் - கூரியவாயையுடைய, பெருகிழ நாரை - பெருங் கிழநாரைகள், வஞ்சனை துயில்கொண்டு - கபடத்தூக்கந் தூங்கி, ஆரல் உண்ணும் - ஆரல் மீன்களை விழுங்குதற்கிடமாயிருக்கிற, வங்கநாடு ஆளும் - வங்கதேசத்தை யாளுகின்ற, மன்னன்-அரசனுவான். எ - று.

(பொ - ரை.) யானைக் கூட்டத்தின் நடுவேஆண்சிங்கம் நிற்பதுபோல நிற்பவன், தாமரைகள் தேனொழுகப் புஷ்பித்த கழனி, கால், ஓடை யென்பவற்றின்கண்ணே நின்று அழகிய சிறைகளையிழந்த கூரிய வாயையுடைய பெருங் கிழநாரைகள் கபடத்தூக்கந் தூங்கி, ஆரல்மீன்களை விழுங்குதற்கிடமாயிருக்கிற, வங்கதேசத்தை யாளுகின்ற அரசனுவான். எ - று.

(வி - ரை.) கோளரி யென்பதை ஒருசொல்லாக்காது கோள் அரி யென்றிரண்டு சொல்லாகப் பிரித்து, துன்பஞ்செய்தற்குரிய சிங்கம் என்றுரைப்பினு மமையும், கோளரியோல் - கோளரி நிற்பதுபோல, கஞ்சம்-நீரில்பிறப்பது, (தாமரை). கழனி - வயல், கால் - வாய்க்கால், கூர்வாய் என்பதில் கூர்மை மூக்குக்குரியதாயினும் அதுவாயோடு கூடியேயிருக்கையால் 'கூர்வாய், என்றது கூரிய மூக்கை, பெருங் கிழநாரையாதலால் 'அஞ்சிறையுகுத்த, என விசேடிக்கப்பட்டது. "கொக்கொக்க கூம்பும்பருவத்துமற்றதன், குத்தொக்க சீர்த்தவிடத்து" "ஓடுமீனோடி யொருமீன்வருமளவும், வாடியிருக்குமாங் கொக்கு" இத்தியாதிகளின்படியே நாரை வஞ்சனை யுறக்கத்தால் மீன்களைக் கவர்கின்றனவென்பது தோன்ற, 'நாரை யாரல்வஞ்சனைத்துயில்கொண்டுண்ணும்' என்றார். வங்கம் - தேய மைம்பத்தாறினென்று, இது வங்காளதேயத்தின் கீட்டிசையி லுள்ளது. (கOஉ)

பொத்திய கவச மெய்யிற் பொலியநிற் கின்ற காளை
கத்திகைக் குழலா ராடுங் காமரு மஞ்ச ணீர்பாய்ந்
தெத்திசை யினும்வ ளர்ந்த கதலியின் குருத்தென் மாவை
மத்திகை யெனப்பு டைக்கு மராடநா டாளும் வேந்தன்.

(ப - ரை.) பொத்திய - மூடின, கவசம் - கவசமானது, மெய்யில் - சரீரத்தின்மேல், பொலிய-விளங்கும்படி, நிற்கின்ற - நிற்கிற, காளை - காளைப் பருவமுடையவன், கத்திகை - பூமாலையணிந்த, குழலார் - கூந்தலையுடைய மாதர், ஆடும் - ஆடுகின்ற, காமர் - அழகாகிய, மஞ்சள் நீர்பாய்ந்து - மஞ்சணீர்பாய்தலால், எத்திசையினும் வளர்ந்த - எந்தத் திக்கிலும்வளர்ந்த, கதலியின்குருத்து - வாழைக் குருத்தானது, எல்மாவை-சூரியன் குதிரையை, மத்திகை என - சம்மட்டிபோல, புடைக்கும் - அடித்தற்கிடமாயிருக்கிற, மராடநாடு ஆளும் - மராடதேசத்தை யாளுகின்ற, வேந்தன்-அரசனுவான். எ-று.

(பொ - ரை.) மூடின கவசமானது சரீரத்தின்மேல் விளங்கும்படி நிற்கிற காளைப்பருவமுடையவன், பூமாலையணிந்த கூந்தலையுடைய மாதர் ஆடுகின்ற அழகாகிய மஞ்சணீர்பாய்தலால், எந்தத்திக்கிலும் வளர்ந்த வாழைக்

குருத்தானது சூரியன் குதிரையை சம்மட்டிபோல அடித்தற் கிடமாயிருக்கிற மராட தேசத்தை யாளுகின்ற அரசனுவான். எ - று.

(வி - ரை.) பொத்துதல் - மூடுதல், கவசம் - சபாய், காளை - காளைபோல்வான், இது உவமையாகுபெயர், (யவ்வநபுருடன்,) ஆடுதல் - விளையாடுதல். காமர் - அழகு, இது உகரச்சாரியை பெற்றுக் காமரு என வந்தது. பாய்ந்து - செயவெனெச்சந்திரிபு, இது எதுப்பொருளில்வந்தது. எத்திசையினும் என்பதில் உம்மைமுற்று. மா-பலபொருளுணர்த்துவதோர் சொல்லாயினும் இங்கு எழ் என்றகுறிப்பால் குதிரையெனப் பொருளுரைக்கலாயிற்று. மத்திகை - குதிரைச்சம்மட்டி, (சவுக்கு). எழ்மாலை யெனவும் பாடம், சூரிய ரதத்திற்பூட்டப்பட் டுள்ளதொரு குதிரையேயன்றி எழன்மையானும், ஸப்தாஸ்வம் என்னும் அக்குதிரையின் பெயரைநோக்கி ஏழுகுதிரைகள் எனத் தமிழர் பொருள்கொண்டனராதலானும் அது பாடமன்மையறிக. என - உவமவுருபு, என்னும்படி யெனினுமாம். மராடம் - தேயமைம்பத்தாறிலொன்று, இது கூர்ச்சரதேசத்துக்குத் தெற்கிலும், கர்ணாடகதேசத்துக்கு வடக்கிலும் ஆந்த்ரதேசத்துக்கு மேற்கிலும் உள்ளது. (க0ரு)

அயலெலாஞ் சேனை சூழ வணிந்துநிற் கின்ற சிங்கங்
கயலெலாம் வெருவுங் கண்ணார் களையரிக் கழுநீ ரோடிச்
செயலெலாஞ் செயும்ப டப்பைச் செழுங்கரும் போங்கப் பாய்ந்
வயலெலாம் விளைக்குஞ் செல்வ மச்சநா டாளு மன்னன். [து

(ப - ரை.) அயல் எல்லாம் - பக்கங்களிலெல்லாம், சேனைசூழ - படைகள் சூழும்படி, அணிந்து நிற்கின்ற-அலங்கரிக்கப்பட்டுநிற்கிற, சிங்கம் - சிங்கம்போல்பவன், கயல் எல்லாம்-சேல்மீன்களெல்லாம், வெருவும் - அஞ்சுதற்குரிய, கண்ணார் - கண்களையுடையவராகிய மாதர், களை - களைகின்ற, அரிகழுநீர் ஓடி - அரிசிக்கழுநீரோடி, செயல் எல்லாம்செய்யும் - செய்யவேண்டியசெயல்கள்யாவும் செய்யப்படுகிற, படப்பை - கொல்லைகளிலுள்ள, செழுகரும்பு ஓங்க-செழிய கரும்புகள் வளர்ந்தோங்கும்படி, பாய்ந்து - பாய்ந்து, வயல் எல்லாம் - வயல்களிலுள்ள வெல்லாவற்றையும், விளைக்கும் - விளைவிப்பதற் கிடமாயுள்ள, மச்சநாடு - மச்சதேசத்தை, ஆளும் - ஆள்கின்ற, மன்னன் - அரசனுவான். எ - று.

(பொ - ரை.) பக்கங்களிலெல்லாம் படைகள் சூழும்படி அலங்கரிக்கப்பட்டுநிற்கிற சிங்கம்போல்பவன், சேல்மீன்களெல்லாம் அஞ்சுதற்குரிய கண்களையுடையவராகிய மாதர்களைகின்ற அரிசிக்கழுநீரோடி, செய்யவேண்டிய செயல்களெல்லாம் செய்யப்படுகிற கொல்லைகளிலுள்ள செழிய கரும்புகள் வளர்ந்தோங்கும்படி பாய்ந்து வயல்களிலுள்ள எல்லாவற்றையும் விளைவிப்பதற்கிடமாயுள்ள மச்சதேசத்தை ஆள்கின்ற அரசனுவான். எ - று.

(வி - ரை.) அயலெலாம் - நாற்புறத்தும், சேனை - ரதகஜ துரகபதாதிகள், சிங்கம் - உவமையாகுபெயர், கயலெலாம் வெருவுதல் கண்ணழகுக் கஞ்

சியென்க, செயலெலாம்-உழல் எருவிடல், நீர்பாய்ச்சல் முதலிய தொழில்களியாவும், வயலெலாம் - வயல்களிலுள்ளனவாகிய செந்நெல் முதலாயின யாவும், விளைக்கும் - பிறவினை, இதற்குத் தன்வினை விளையும். மச்சநாடு - தேயமைம்பத்தாறிலொன்று. (க0ச)

கருகிருண் மோலி மேயக் கடாக்களி றெனநிற் கின்றோன்
வருவிறன் மடங்கன் மன்னன் வருடைதே ளதிபன் முன்னும்
பெருவிடை துலாக்கோன் பின்னும் பிரிவின்றிச் செலச்செல் கா
குருமுகின் முழங்கிப் பெய்யுங் குடகநா டாளும் வேந்தன். [லுங்

(ப - ரை.) கருகுஇருள் - கருகிய இருட்டை, மோலிமேய - தன்கிரீடமானது மேயாநிற்க, கடாகளிறு என நிற்கின்றோன் - ஆண் யானைபோல நிற்பவன், வருவிறல் மடங்கல் மன்னன் - வளர்கின்ற வெற்றியுள்ள சிங்கராஜனும், வருடை - மேடமும், தேள் அதிபன் - தேட்கதிபனும், (ஆகிய இவர்கள்) முன்னும் - முன்னாகவும், பெருவிடை - பெரிய இடபமும், துலாக்கோன் - துலாராஜனும், (ஆகிய இவர்கள்) பின்னும் - பின்னாகவும், பிரிவு இன்றி செல்ல - நீங்குதலின்றிச் செல்லும்படி, செல்காலும் - நடக்குங்காலத்திலும், குரு - நிறம்பொருந்திய, முகில் - மேகங்கள், முழங்கி - கர்ஜித்து, பெய்யும் - மழை பொழிகின்ற, குடகநாடு - குடகதேயத்தை, ஆளும் - ஆளுகின்ற, வேந்தன் - அரசனாவான். எ - று.

(பொ - ரை.) கருகிய இருட்டைத் தன்கிரீடமானது மேயாநிற்க, ஆண் யானைபோல நிற்பவன், வளர்கின்ற வெற்றியுள்ள சிங்கராஜனும், மேடமும், தேட்கதிபனும் ஆகிய இவர்கள் முன்னாகவும், பெரிய இடபமும் துலாராஜனும் ஆகிய இவர்கள் பின்னாகவும் நீங்குதலின்றிச் செல்லும்படி நடக்குங்காலத்திலும், நிறம்பொருந்திய மேகங்கள் கர்ஜித்து மழைபொழிகின்ற குடகதேயத்தை யாளுகின்ற அரசனாவான். எ - று.

(வி - ரை.) சிங்கம் மேடம் விருச்சிகம் இம்மூன்றும் முன்னும், இடபம் துலா இவ்விரண்டும் பின்னும் நடக்கிறகாலத்தில் மழைபெய்யாதென்பது சோதிடநூற் றுணிபாதலால் 'வருவிறல் மடங்கன் மன்னன்வருடை தேளதிபன் முன்னும்பெருவிடை துலாக்கோன்பின்னும் பிரிவின்றிச்செலச்செல்காலும் குருமுகின் முழங்கிப்பெய்யும்' என்றார். 'கருகிருள்மேய என்றகுறிப்பால் மோலியென்றது மணிமுடி எனக்கொள்க. கடாக்களிறு - மதயானையெனினுமாம், "கடா அக்களிற்றின்மேற் கட்படாமாதர், படா அ முலைமேற் றுகில்" என்புழியும் இப்பொருட்டாதல்காண்க. மழைபெய்யாக்காலத்திலும் குடகநாட்டில் மழைபெய்யுமென்பது இச்செய்யுட் கருத்து. (க0ரு)

கையுறை யொடுநிற் கின்றோன் கவின்முழுச் சலரா சிக்க
ணையமா மதியின் றன்னூற் கைந்தேழோன் பானி லோர்கட்
செய்புக ரேனும் வெய்யோன் சேயேனு நிற்கு நாள்போற்
பெய்முகி லென்று மாறுப் பெருமைக்காந் தார வேந்தன்.

(ப - ரை.) கையுறையொடு நிற்கின்றோன் - காணிக்கையோடு நிற்பவன், கவின் - அழகாகிய, முழுசலராசிக்கண் - முழுக்கடலினிடத்து, ஐய - அழகினையுடைய, மா - பெரிய, மதிநின்று - சந்திரன் நின்று, அன்னாற்கு - அவனுக்கு, ஐந்துஏழ் ஒன்பானில் - ஐந்தாவது ஏழாவது ஒன்பதாவது இடங்களில், ஓர்கண் - ஒற்றைக்கண்ணையுடைய, செப்புகர் எனும் - செவந்த சுக்கிரனாயினும், வெய்யோன் சேய்எனும் - சூரியன்புதல்வனாகிய சனியாயினும், நிற்கும் - நிற்கிற, நாள்போல் - நாள்போல, பெய்முகில் - மழைபெய்யுமியல்பினையுடைய மேகங்கள், என்றும் - எந்நாளும், பாறு - நீங்காமற்பெய்கிற, பெருமை - பெருமையையுடைய, காந்தாரவேந்தன் - காந்தாரதேசத்தரசனாவான். எ - று.

(பொ - ரை.) காணிக்கையோடு நிற்பவன் அழகாகிய முழுக்கடலினிடத்து அழகினையுடைய பெரிய சந்திரன் நின்று, அவனுக்கு ஐந்தாவது ஏழாவது ஒன்பதாவது இடங்களில், ஒற்றைக்கண்ணையுடைய செவந்த சுக்கிரனாயினும் சூரியன் புதல்வனாகிய சனியாயினும் நிற்கிறநாள்போல, மழைபெய்யுமியல்பினையுடைய மேகங்கள் எந்நாளும் நீங்காமற் பெய்கிற பெருமையுடைய காந்தாரதேசத் தரசனாவான். எ - று.

(வி - ரை.) சந்திரன் கடலில்நின்று, அவனுக்கு ஐந்து ஏழு ஒன்பது என்னுமிடங்களில் சுக்கிரனாயினும் சனியாயினும் நிற்கும்நாளில் மழைபெய்யுமென்பது சோதிடநூற் றுணிபாதலால் 'சலராசிக்கண் ஐயமாமதிநின்றன்னாற் கைந்தேழொன்பானி லோர்கட்செய்புகரேனும் வெய்யோன்சேயேனுநிற்குநாள்போல் பெய்முகிலென்றுமாறு, என்றார். மாவலி திருமாலுக்கு மூன்றடி நிலங்கொடுத்து தாரைவார்க்கும்போது அருகிருந்த சுக்கிரன் அந்தநீர்க் கரகத்தின்தொளையில் வண்டுருவாய்ச்சென்று நீர்விழாமல் தடுத்ததையறிந்த திருமால் தருப்பைப்புல்லினால் அத்தொளையில் குத்துதலும் அதன் நுனி சுக்கிரனது ஒரு கண்ணிற்பட்டுப் பொட்டையாய்ப்போயிற்று என்பது புராணகதையாதலால்; 'ஓர்கட்செய்புகர், என்றார். "மாவலியை மாலுக்கு மண்ணுதவாமற்றடுத்த, காவலினாற் சுக்கிரனுங் கண்ணிழந்தான்" என்றார் பிறரும். (கOசு)

இத்தனை மன்னர் தம்முள் யாரைநீ யொப்பாய் கந்தை
பொத்திய மேனி யோயெண் ணிரட்டியா யிரம்பொ னன்னார்
மெத்திய மனத்த ராகி மேவுறப் பொலியுங் கண்ண
வித்தகன் சேவை வாய்த்த லெண்மையின் மேவுங் கொல்லோ.

(ப - ரை.) இத்தனைமன்னர் தம்முள் - இத்தனை யரசருக்குள், நீயாரை ஒப்பாய் - நீயாரை நிகர்த்திருக்கிறாய், கந்தைபொத்திய - கந்தையால்மூடப்பட்ட, மேனியோய் - சரீரத்தையுடையவனே, எண்ணிரட்டி ஆயிரம் - பதினாறாயிரவராகிய,பொன் அன்னார்-பொன்போலுமாதர்கள், மெத்தியமனத்தர் ஆகி-விரும்பின மனத்தையுடையவராகி, மேவுறபொலியும்-தன்னைச்சூழ

விளங்குகிற, கண்ணன் - ஸ்ரீ கண்ணபிரானாகிய, வித்தகன்சேவைவாய்த்தல் - ஞானமயனது சேவைகிடைத்தல், எண்மையில் - எளிதில், மேவுங்கொல் லே - பொருந்துமோ. எ - று.

(பொ - ரை.) இத்தனை யரசருக்குள் நீயாரை நிகர்த்திருக்கிறாய், கந்தையால் மூடப்பட்டசரீரத்தையுடையவனே, பதினாறாயிரவராகிய பொன்போலு மாதர்கள் விரும்பினமனத்தையுடையவராகித் தன்னைச் சூழவிளங்குகிற ஸ்ரீ கண்ணபிரானாகிய ஞானமயனது சேவைகிடைத்தல் எளிதில்பொருந்துமோ.

(வி-ரை.) கந்தை-கிழிந்ததுணி, எண்ணிரட்டியாயிரம்-பதினாறாயிரம், பொன் அன்னார் - பொன்போலும் அரியர், திருமகளை நிகர்ப்பவர் எனினுமாம், மெத்திய - மெச்சிய என்றலுமொன்று, வித்தகன் - ஞானரூபி, வித்தகம் - ஞானம், சேவை - தரிசனம் (காட்சி.) மேவுங்கொல்லோ என்றவினா மேவாதென எதிர்மறைப் பொருளைத்தந்தது, கொல்-அசை, யாரைநீயொப்பாய் என்றது ஒருவரையும் நிகர்க்கமாட்டாய் என்றபடி, (௧௦௭)

முடங்குகை காலோர் பேதை மூரிவா னணவுங் கோட்டி
னிடம்படு தேத்தி றாலுக் கிச்சைவைத் ததனைப் போலுந்
தொடங்கிய சிராத்த வில்லந் தோறுஞ்சென் றிரத்த னீத்து
விடங்கொள்வாண் மன்னற் காண விருப்புவைத் தது மாதோ.

(ப - ரை.) தொடங்கிய - தொடங்கிச்செய்கிற, சிராத்தம் இல்லம் தோறும் - சிராத்த வீடுகள்தோறும், சென்று - போய், இரத்தல் நீத்து - யாசித்தலைவிட்டு, விடம்கொள் - விஷத்தைக்கொண்ட, வாள் - வாட்படையையுடைய, மன்னன்காண - (ஸ்ரீ கண்ணபிரானாகிய) அரசனைப்பார்க்க, விருப்பு வைத்தது-ஆசைவைத்தது, முடங்கு-முடங்கின, கைகால்-கைகால்களையுடைய, ஓர் பேதை - ஒரு அறிவில்லாதவன், மூரி - பெரிதாகிய, வான் அணவும் - ஆகாயத்தை யளாவிய, கோட்டின் இடம் - மரக்கிளையினிடத்தில், படு-பொருந்திய, தேத்து இறாலுக்கு - தேன்கூண்டைக் கவர்வதற்கு, இச்சைவைத்ததனைப்போலும் - ஆசைவைத்ததனை நிகர்க்கும். எ - று.

(பொ - ரை.) தொடங்கிச்செய்கிற சிராத்தவீடுகள்தோறும் போய் யாசித்தலைவிட்டு, விஷத்தைக்கொண்ட வாட்படையையுடைய ஸ்ரீ கண்ணபிரானாகிய அரசனைப்பார்க்க ஆசைவைத்தது, முடங்கின கைகால்களையுடைய ஒரு அறிவில்லாதவன் பெரிதாகிய ஆகாயத்தையளாவிய மரக்கிளையினிடத்தில் பொருந்திய தேன்கூட்டைக்கவர்வதற்கு ஆசைவைத்ததனை நிகர்க்கும்.

(வி - ரை.) நீ கண்ணபிரானைக்காண விரும்பினது, கைகாலற்ற ஒரு அறிவில்லாதமுடவன் உயர்ந்தமரக்கிளையிலுள்ள தேனைக்கவரவிரும்பினதை நிகர்க்கும் என்பது கருத்து, தேனைப்பெறுவமை மாத்திரத்தானொழியாது இகழவும்படுவன் என்றதாயிற்று, முடங்குகைகால், தொடங்கிய சிராத்தம் என்பவற்றை, கைகால் முடங்கு, சிராத்தம் தொடங்கிய எனமொழிகளைமாற்றி, கைகால் முடங்கின, சிராத்தம் செய்யத்தொடங்கின எனப்பொருள் கூறலு

மாம், கோட்டினிடம் என்பதில் இடம் எழனுருபு, தேன் அத்து இருல் தேத்திருல் என்றாயிற்று, இச்சை - இச்சாஎன்னும் வடசொற்றிரிபு, சிராத்தம், இறந்தாரைக்குறித்துச் செய்யுஞ்சடங்கு, இது சிரத்தையோடு செய்யப்படுவதாகையால் இப்பெயர் வந்தது, இதனைக்காரணப்பெயர் என்பர், இல்லம் என்பதில் அம்சாரியை, விடம் - விஷம் என்னும் வடசொற்றிரிபு, விடங்கொள் என்பதற்கு விஷத்தைத் தன்னிடத்திற்கொண்டிருக்கிற என்றும், விஷம் நடவப்பெற்ற என்றும் பொருள்கூறுக, அன்றிக்கொள் என்பதை உவமவுருபாக்கி, பகைவர்க்கு விஷம்போன்ற என்றுரைப்பினுமாம், விருப்பு - விரும்பு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர், வைத்தஃது - வைத்தது என்பதன் விரித்தல் விகாரம், "தேர்ந்து செய்வஃதே முறை" எனத்திருக்குறளில் செய்வது என்பது செய்வஃது என வந்தமைகாண்க. (கOஅ)

இத்தலை வாய்நிற் கின்ற இவர்க்கெலா மிருப்பொ னுண்டு
மெத்திய வேவ லாளர் மிகவுமுண் டாத லாலே
யெத்தனை பற்ப னாள்காத் திருக்கினுங் குற்ற மில்லை
பொத்துநோய் மிடிக்கோட் பட்ட நினக்கிது பொருந்தா தாகும்.

(ப - ரை.) இ - இந்த, தலைவாய் நிற்கின்ற - தலைவாசலில் நிற்கின்ற, இவர்க்கு எல்லாம் - இவர்களுக்கெல்லாம், இருபொன் உண்டு - மிகுந்த பொன்னுளது, மெத்திய - விரும்புதற்குரிய, ஏவலாளர் - ஏவலாளர்கள், மிகவும் உண்டு - மிகுதியும் உளர், ஆதலாலே - ஆகையாலே, (இவர்கள்) எத்தனை பற்பல்நாள் - எவ்வளவு பலப்பலநாள்கள், காத்திருக்கினும் - காத்திருந்தாலும், குற்றம் இல்லை - (இவர்களுக்கு) ஒரு தீமையுமில்லை, பொத்து - மூடின, மிடிநோய் - வறுமையாகிய பிணியால், கோட்பட்ட - கவரப்பட்ட, நினக்கு - உனக்கு, இது - (காத்திருத்தலாகிய) இது, பொருந்தாது ஆகும் - பொருந்தாத செய்கையாகும். எ - று.

(பொ - ரை.) இந்தத் தலைவாசலில் நிற்கின்ற இவர்களுக்கெல்லாம் மிகுந்த பொன்னுளது, விரும்புதற்குரிய ஏவலாளர்கள் மிகுதியும் உளர் ஆகையாலே (இவர்கள்) எவ்வளவு பலப்பல நாள்கள் காத்திருந்தாலும் (இவர்களுக்கு) ஒரு தீமையுமில்லை, மூடினவறுமையாகிய பிணியால் கவரப்பட்டவுனக்குக் (காத்திருத்தலாகிய) இது பொருந்தாத செய்கையாகும். எ - று.

(வி - ரை.) உடம்புக்குவாய்போல வீட்டுக்கு வாயாயிருத்தலால் தலைவாயிலைவாய் என்றார், பொன் என்றது பொருளை, மெத்திய என்பதற்கு மெச்சப்பட்ட என்றுரைத்தலுமாம், எத்தனை பற்பனாள் என்றது நெடுங்காலம் என்றபடி, குற்றம் - குறைவெனினுமாம், பொத்துதல் - மூடிக்கொள்ளல், குசேலர் பொத்துநோய்மிடிக் கோட்பட்டமை வாயிற்காவலாளர்க்குப் புலப்பட்ட தெங்ஙனமெனின், இவரது கந்தைபொத்திய மேனியே புலப்படுத்திற்றென்க, தலைவாய் - முதல்வாசல், வாய்நிற்கின்ற ஏழாம்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர், நிற்கின்ற என்னும் நிகழ்காலத்தெரிநிலைப்பெயரெச்

சம் இவர் என்னும் பலர்பாற்பெயர் கொண்டது, இருமை - பெருமை, இரும் பொன்-பண்புத்தொகை நிலைத்தொடர். (க0க)

ஆதலின் வந்த வாற்றை யறிந்துநின் னூர்க்குப் போதன்
மேதகு கரும மென்றம் மடமையோர் விளம்ப லோடுந்
தீதறு குணத்தான் மாண்ட செழுந்தவக் குசேல மேலோ
னேதமிக் குறத்தன் னுள்ளத் திவையிவை யெண்ணு வானால்.

(ப - ரை.) ஆதலின் - ஆகலால், வந்த ஆற்றை அறிந்து - வந்தவழியை யறிந்து, நின் ஊர்க்குபோதல் - உன் ஊருக்குப்போதலே, மேதகுகருமம் என்று - (உனக்கு) மேன்மைபொருந்திய தொழிலென்று, அ - அந்த, மடமையோர்-அறிவில்லாதவர்கள். விளம்பலோடும் - சொல்லுதலோடும், (அது கேட்ட) தீதுஅறு குணத்தால் - குற்றமற்ற குணத்தினால், மாண்ட - மாட்சிமைப்பட்ட, செழுதவம் - பெருந்தவத்தினையுடைய, குசேலன்மேலோன்-குசேலன் என்று சொல்லப்பட்ட பெரியோன், ஏதம்மிக்குற - துன்பமிக, தன் உள்ளத்து - தன் மனத்தில், இவையிவை - இந்த இந்த விஷயங்களை, எண்ணுவான் - எண்ணுவானாயினன். எ - று.

(பொ - ரை.) ஆகலால் வந்த வழியையறிந்து உன் ஊருக்குப்போதலே உனக்குமேன்மை பொருந்திய தொழிலென்று அந்த அறிவில்லாதவர்கள் சொல்லுதலோடும், (அது கேட்ட) குற்றமற்ற குணத்தினால் மாட்சிமைப்பட்ட பெருந்தவத்தினையுடைய குசேலனென்று சொல்லப்பட்ட பெரியோன், துன்பமிகத்தன் மனத்தில் இந்த இந்த விஷயங்களை எண்ணுவானாயினன். எ - று.

(வி - ரை.) ஆல்-அசை, கர்மம்-தொழில், இது வடசொல், மடமை - அறியாமை, அதனை மிகுதியாயுடையோராதலால் அவ்வாயிற்காவலாளர் முதலியோரை மடமையோர் என்றேகூறினர், இவர்க்கு மடமையாவது குசேலரது மகிமையைஅறிந்துகொள்ளாமை.விளம்பலோடும் என்பதுசொன்னவுடனேயென வினையெச்சப்பொருளில் வந்தது,மாண்ட-மாண்என்னும் பண்படியாகப்பிறந்த இறந்தகாலத்தெரிநிலைப்பெயரெச்சம்,வந்தவாற்றையறிந்து என்றது, இவ்விடத்துவந்து பயனடையாமையா லுண்டாகிய துன்பமிகுதியால் வந்தவழியைமறந்து திகைக்காமல் என்றபடி. வந்தவழியைப் பார்த்துக்கொண்டு எனினுமாம். மே - மேன்மை, தகு - பொருந்திய, தீதறுகுணம் - நற்குணம், செழுந்தவம் என்பதில் செழுமை பெருமைப்பொருளது. இவை இவையென்றது அடியில் சொல்லப்படுகிற விஷயங்களை. (கக0)

மின்செய்த மதாணி யாழுந் தாரமாம் விளங்கு பட்டாம்
பொன்செய்த வூர்தி யாமிப் போதியாம் பெறுவ தெங்கே
நன்செய னம்மூ தாதை நாளினுங் கேட்ட தின்று
லென்செய்வா மென்று தொன்றை யியற்றுத லென்றுந் தீதே.

(ப - ரை) (ஸ்ரீ கண்ணபிரானைக் காணவருவார்க்கு) மின்செய்த - மின்னுகின்ற, மதாணி ஆம் - பதக்கமிருக்க வேண்டுமோம், முத்தஆரம்ஆம் - முத்துமாலையிருக்க வேண்டுமோம், விளங்குபட்டுஆம் - பிரகாசிக்கிற பட்டாடையிருக்கவேண்டுமோம், பொன்செய்த - பொன்னினாற் செய்யப்பட்ட, ஊர்தி ஆம் - வாகநமிருக்க வேண்டுமோம், யாம்இப்போது பெறுவதுஎங்கே-(இவற்றை) நாம் இப்பொழுது பெறுவதுஎப்படி, நல்செயல் - அழகிய இச்செய்கையை, நம் மூதாதை நாளிலும் - நமது பாட்டன் காலத்திலும், கேட்டதுஇன்று - கேட்டதில்லை, என்செய்வாம் - (இப்பொழுதுநாம்) யாதுசெய்வோம், எண்ணாது - (முன்னே) ஆலோசிக்காமல், ஒன்றை இயற்றுதல் - ஒருகாரியத்தைச்செய்தல், என்றும் - எப்பொழுதும், தீதே - கெட்டதே. எ-று.

(பொ - ரை.) (ஸ்ரீகண்ணபிரானைக்காண வருவார்க்கு) மின்னுகின்ற பதக்கம் வேண்டுமோம், முத்துமாலை யிருக்கவேண்டுமோம், பிரகாசிக்கிறபட்டாடையிருக்கவேண்டுமோம், பொன்னினாற் செய்யப்பட்டவாகநமிருக்க வேண்டுமோம், (இவற்றை) நாம் இப்பொழுது பெறுவது எப்படி, அழகிய இச்செய்கையைநமது பாட்டன்காலத்திலும்கேட்டதில்லை, (இப்பொழுது நாம்)யாதுசெய்வோம், முன்னே ஆலோசிக்காமல் ஒருகாரியத்தைச் செய்தல் எப்பொழுதும் கெட்டதே. எ - று.

(வி - ரை.) மின்செய்த என்பது ஒருசொல்லாய் மின்னுகிற எனப்பொருள்படும். பகுதிமின்செய், அன்றிமின்னுதலைச்செய்தஎனினுமாம். பொன்செய்தவூர்தி - பொற்சிவிகை, 'நன்செயல், என்பதனை நம்மூதாதை யென்பதற்கு விசேடணமாக்கினுமாம். ஆல் - ஆச்சரியவிடைச் சொல்லாகவேனும் அசையிடைச் சொல்லாகவேனுங்கொள்க. தீதேயென்பதினேகாரம் தேற்றம். நம்மூதாதை நாளினுங்கேட்டதின்று என்றது நான் என் தந்தை என்மூதாதையென்னும் மூவர்காலங்களிலுங்கேட்டதில்லை என்மூதாதைக்கு முற்பட்டோர் காலத்தில் கேட்டிருந்தாலிருக்கலாம் என்றபடி. (௧௧௧)

கந்தையிற் பொதிந்த நந்தங் கையுறை கண்டா ராகி
னந்தலி லிகழ்ச்சி பொங்க நகைப்பரே யெனவுட் சாம்பி
யந்தினின் றுயங்குங் காலவ் வடர்மட மையரை நோக்கிச்
சுந்தர வறிவின் மாண்ட துவாரபா லகர்சொல் வாரால்.

(ப - ரை.) கந்தையில்பொதிந்த - கந்தைத்துணியில் முடிந்துமறைத்துவைத்திருக்கிற, நந்தம்கையுறை - நமது காணிக்கைப்பொருளை, கண்டார்ஆகில் - (இவர்கள்) பார்த்தார்களாயின், நந்தல்இல் - கெடுதலில்லாத, இகழ்ச்சிபொங்க - நிந்தைமிக, நகைப்பரே - சிரிப்பார்களோ, என - என்று நினைத்து, உள்சாம்பி - மனம்வாடி, அந்தில் நின்று - அவ்விடத்திலே திகைத்து நின்று, உயங்குங்கால் - வருந்தும்பொழுது, சுந்தரம் - அழகாகிய, அறிவின்மாண்ட - அறிவினாற்சிறந்த, துவாரபாலகர் - திருவாயில் காவலாளர், அ-அந்த, அடர்மடமையரை நோக்கி-மிகுந்த அறிவிலிகளைப்பார்த்து, சொல்வார் - (சில சொற்களைச்) சொல்லுவாராயினர். எ - று.

(பொ - ரை.) கந்தைத்துணியில் முடிந்து மறைத்துவைத்திருக்கிற நமது காணிக்கைப்பொருளை (இவர்கள்) பார்த்தார்களாகில், கெடுதலில்லாத நிந்தைமிகச் சிரிப்பார்களே என்று நினைத்து, மனம்வாடி அவ்விடத்திலே திகைத்து நின்றுவருந்தும்பொழுது, அழகாகிய அறிவினாற் சிறந்த திருவாயிற் காவலாளர், அந்தமிகுந்த அறிவிலிகளைப்பார்த்துச் சில சொற்களைச் சொல்லுவாராயினர். எ - று.

(வி - ரை.) நந்தம் கையுறைஎன்பதில் தம்சாரியை, நம் கையுறையென்றது நாம் ஸ்ரீகண்ணபிரானுக்குக் கொண்டுபோகிற காணிக்கைப்பொருளாகிய அவல்என்றபடி. நந்தலில் - அழிவற்ற, பொங்க - அதிகரிக்க, நகைப்பரே என்பதில் ஏகாரம் இரங்கற்பொருளது' அந்தில் - அந்த இல் எனப்பிரிந்து அவ்விடம் எனப்பொருள்படும், அன்றி அசைநிலை யெனினுமாம். அடர்தல் - நெருங்குதல் எனினுமாம், சுந்தரவறிவு - நல்லறிவு. உயங்கல் - வருந்தல். (கசஉ)

யாரென நினைத்தி ரிந்த விருந்தவத் தலைவன் றன்னைச்
சேருறு பொய்மை யில்லன் செறிந்தநோன் புழந்த நல்லன்
வாருறு மறைகள் வல்லன் மற்றெங்குஞ் செல்வா னல்ல
னேருறு மினிய சொல்ல னென்னவே யாமுட் கோடும்.

(ப - ரை.) இந்த இருதவம் தலைவன்தன்னை - இந்தப் பெருந்தவத்தினாற் சிறந்தவனை, யார்என நினைத்திர் - யாரென்று நினைத்தீர்கள், சேருறு பொய்மை இல்லன் - பொருந்திய பொய்யில்லாதவன், செறிந்த நோன்பு - மிகுதியாகிய விரதங்களால், உழந்த - வருந்தின, நல்லன் - நல்லோன், வார் உறு - பெருமைமிகுந்த, மறைகள் - வேதங்களில், வல்லன் - வல்லவன், மற்றுஎங்கும் - வேறெவ்விடங்களிலும், செல்வான் அல்லன் - போகிறவனல்லன், ஏர்உறு - அழகுமிகுந்த, இனியசொல்லன் - இன்சொற்களையுடையவன், என்னவே - என்றே, யாம் - நாம், உள்கோடும் - மனத்திற் கொள்வோம். எ - று.

(பொ - ரை.) இந்தப் பெருந்தவத்தினாற் சிறந்தவனை யாரென்று நினைத்தீர்கள், பொருந்திய பொய்யில்லாதவன், மிகுதியாகிய விரதங்களால் வருந்தின நல்லோன், பெருமைமிகுந்த வேதங்களில் வல்லவன், வேறெவ்விடங்களிலும் போகிறவனல்லன், அழகு மிகுந்த இன்சொற்களை யுடையவன் என்றே நாம் மனத்திற் கொள்வோம். எ - று.

(வி - ரை.) 'யாரென நினைத்தீரிந்த விருந்தவத்தலைவன்தன்னை, என்றது அதட்டுதற்பொருளில் வந்தது. இந்தத்தலைவன் என வியையும். சேருறு என்பதில் உறு துணைவினை, நோன்பு - நோல் என்னும் வினைப்பகுதியடியாகப்பிறந்த தொழிலாகுபெயர். நோற்றல் - விரதமநுட்டித்தல், விரதங்களாவன - இன்னநல்வினை செய்வேன் இன்னதீவினை தவிர்வேன் என்று தம தாற்றலுக்கேற்க ஏற்படுத்திக்கொள்வன. அவை உபவாசம் முதலாயின.

'மற்றெங்குஞ் செல்வானல்லன், என்றது கண்டவிடங்களிற் சென்று யாசித்தல் முதலியவற்றைச் செய்கிற சாதாரண வேதியனல்லன் என்றபடி. ஏர் உறும் இன்சொல் - பொலிவுமிக்க இன்சொல், "இன்சொலாலீரமளைஇப் படிறிலவாம் - செம்பொருள் கண்டார்வாய்ச்சொல்" என்றபடியே, அன்போடுகூடியதும் வஞ்சனையில்லாததுமாகிய இன்சொல் எனினுமாம். இனிமை - கேட்டற்கினிமை. சோமும் - தெரிநிலைவினைமுற்று. சொள் பகுதி, வார் - நீட்சி, அது இங்குப்பெருமை குறித்தது, வல்லன் என்றது மிகத் தேர்ந்தவன் என்றபடி. (கக௫)

மேற்படி - வேறு.

உலகினின்மா னிடப்பிறப்பே யரியதிழி குலமொருவி யுயர்
ந்தபின்னோர், குலமுறுதலரியததனினும்வசியர் குலமரிது கொ
ற்றவேந்தர், நிலவுபெருங் குலமரிய ததனினுமற் றஃதினுமிக்
கரிய நீரால், பலர்புகழந் தணர்குலத்துத் தோன்றிடலென் றரு
மறைகள் பகரு மன்றே

(ப - ரை.) உலகினில் - உலகத்தில், மானிடப்பிறப்பே அரியது - மானுடஜன்மமே அருமையானது, (அதினும்) இழிகுலம் ஒருவி - இழிகுலப் பிறப்பொழிந்து, உயர்ந்த பின்னோர்குலம் உறுதல் அரியது - சிறந்த சூத்திர சாதியிற் பிறத்தல் அருமையானது, அதனினும் வசியர்குலம் அரிது-அதைப் பார்க்கினும் வைசியர்குலத்திற் பிறத்தல் அருமையானது, அதனினும் - அதைப்பார்க்கினும், கொற்றம் - வெற்றியையுடைய, வேந்தர் - அரசரது, நிலவு - விளங்குகிற, பெருகுலம் - சிறந்தசாதியிற் பிறத்தல், அரியது - அருமையானது, அஃதினும்-அதைப்பார்க்கிலும், நீரால் - நற்குணங்களால், பலர்புகழ் - யாவராலும் புகழப்படுதற்குரிய, அந்தணர் குலத்து - வேதியர் குலத்தில், தோன்றிடல் - பிறத்தல், மிக்கஅரிது - மிகவும் அருமையானது, என்று - என்று, அரு - அருமையாகிய, மறைகள் - வேதங்கள், பகரும் - சொல்லாநிற்கும். எ - று.

(பொ - ரை.) உலகத்தில் மாநுடஜன்மமே அருமையானது, (அதினும் இழிகுலப் பிறப்பொழிந்து சிறந்த சூத்திரசாதியிற் பிறத்தல் அருமையானது, அதைப்பார்க்கினும் வைசியர்குலத்திற் பிறத்தல் அருமையானது, அதைப் பார்க்கினும் வெற்றியையுடைய அரசரது விளங்குகிற சிறந்தசாதியிற் பிறத்தல் அருமையானது, அதைப்பார்க்கினும் நற்குணங்களால் யாவராலும் புகழப்படுதற்குரிய வேதியர்குலத்திற் பிறத்தல் மிகவும் அருமையானதென்று அருமையாகிய வேதங்கள்சொல்லா நிற்கும். எ - று.

(வி - ரை.) விவேகமுடையராய் அறஞ்செய்து வேண்டியவாறு நற்கதி பெறுதற்குக் காரணமான மாநுடஜன்மத்தைப் பெறுதல் முற்பிறப்பிற் செய்த மிக்க நல்வினையாலன்றிக் கூடாதாதலால் 'உலகினின் மானிடப்பிறப்பேஅரியது, எனப்பட்டது. "அரிதரிது மானிடராதலரிது" "அரும்பெறல் யாக்கையைப் பெற்றபயத்தால்" "மக்களுடம்பு பெறற்கரிது" "அரிதால்,

பெரியயோனிகள் பிழைத்திவன் மானிடப்பெறலே" எண்ணரியபிறவிக ளின் மானிடப்பிறவிதான் யாதினும்மரிதரிதுகாண்" "எறியுங்கடலினுகத் துளையில் யாமைக்கழுத்துப் புகுவதுபோல், பொறிவெம்பிறவி யநேகத் தாற்புருடன் விவேகியெனப்பிறந்து" இத்யாதிகளும் இக்கருத்தினவே யாத ல்காண்க. மானிடர்-மாநுஷர்என்னும் வடசொற்றிரிபு. மிக்கு-எச்சத்திரிபு. ஆல்-அசை. அந்தணர்என்பது அம்தண்ஆர் எனப்பிரிந்து அழகிய தண்மை யை (குளிர்ந்தஅருளை) உடையவர் என்றும், அந்தம் அணவுஆர் எனப் பிரிந்து வேதாந்தத்தை யறிபவர் என்றும் பொருள்படும். இது பிராமணர்க் கேசிறப்பாகவும் மற்றவர்க்குப் பொதுவாகவும் வழங்குதலால், காரணவிடு குறிப்பெயர். (ககஅ)

அந்தணரே யரசர்முதன் மூவருக்கு மாசிரியரருளார் தெய் வ, மந்தணரே மறைக்கிழவன் முதலாய தேவரினு மாற்றல் சா ன்றோ, ரந்தணரே யாவதற்கு மழிவதற்குங் காரணமா யமைந்த நீ ரா, ரந்தணரே தெய்வமெனக் கென் றுகண்ண னுரைக்கவுமியா மயிர்த்த லென்னே.

(ப - ரை.) அந்தணரே - பிராமணர்களே, அரசர்முதல் மூவருக்கும் - க்ஷத்திரியர் முதலிய மூன்றுசாதியார்க்கும், ஆசிரியர் - ஆசாரியர்களும், அருள் ஆர்தெய்வம் - கிருபைநிறைந்த தெய்வமுமாவர், அந்தணரே - பிராமணர் களே, மறைகிழவன் முதல்ஆய - வேதங்களுக்குரியவனாகிய பிரமன் முத லாகவுள்ள, தேவரினும் - தேவர்களைக்காட்டிலும், ஆற்றல் சான்றோர் - வன்மை மிகுந்தவர், அந்தணரே - பிராமணர்களே, ஆவதற்கும் -நன்மைக் கும், அழிவதற்கும் - தீமைக்கும், காரணம்ஆய் - ஏதுவாகி, அமைந்த நீரார் - பொருந்திய தன்மையையுடையவர், அந்தணரே - பிராமணர்களே, எனக்கு தெய்வம் - எனக்குத்தெய்வமாவர், என்று - என்று, கண்ணன் உரைக்கவும் - ஸ்ரீகண்ணபிரான் சொல்லியிருக்கவும், யாம் அயிர்த்தல் என்னே - (அவர்க ளுடைய மேன்மையைப்பற்றி) நாம் சந்தேகித்தல் யாதுக்கு. எ - று.

(பொ - ரை.) பிராமணர்களே க்ஷத்ரியர்முதலிய மூன்று சாதியார்க் கும் ஆசாரியர்களும் கிருபைநிறைந்த தெய்வமுமாவர், பிராமணர்களே வேதங்களுக்குரியவனாகிய பிரமன் முதலாகவுள்ள தேவர்களைக்காட்டிலும் வன்மைமிகுந்தவர், பிராமணர்களே நன்மைக்கும் தீமைக்கும் ஏதுவாகிப் பொருந்திய தன்மையையுடையவர், பிராமணர்களே எனக்குத் தெய்வமாவர் என்று ஸ்ரீகண்ணபிரான்சொல்லி யிருக்கவும் (அவர்களுடைய மேன்மை யைப்பற்றி) நாம் சந்தேகித்தல்யாதுக்கு. எ - று.

(வி - ரை.) அருள் - தொடர்பு நோக்காமல் இயல்பாகவே எல்லாவு யிர்களின்மேலுஞ் செல்லும் அன்பு. பிரமன் எப்பொழுதும் நான்கு முகங்க ளாலும் நான்குவேதங்களையும் பாராயணஞ்செய்து கொண்டிருத்தலால் 'மறைக்கிழவன்' எனப்பட்டான். கிழமை - உரிமை, கிழவன் - பண்படி யாகப்பிறந்தபெயர். இதன் பெண்பால் கிழத்தி, 'மறைக்கிழவன் முதலாய

தேவர், என்றது எல்லாத்தேவரையும்படைத்த தேவனான பிரமனுக்குத் தந்தையும் ஆதிதேவனுமாகிய திருமாலை நீக்குதற்கென்க. பிராமணர்களுடைய அநுக்ரஹத்தால் நன்மையும் சாபத்தால் தீமையும் உண்டாதலால் "ஆவதற்கு மழிவதற்குமமைந்த நீரார், என்றார். ஆவதற்கு மழிவதற்கும்மவர், ஏவுகிற்கும் விதியுமென்றுவினி, ஆவதெப்பொருளிம்மையுமம்மையும், தேவரைப்பரவுந்துணை சீர்த்ததே "கரியமாவினுங்கண்ணுதலானினும், உரிய தாமரை மேலுறைவானினும், விரியும்பூத மொரைந்தினு மெய்யினும், பெரியரந்தணர் பேணுதியுள்ளத்தால்" என்றார் மஹாகவியும். 'அயிர்த்தலென்னே, என்றது சந்தேகிக்கவேண்டாம் என்றபடி. (கக௫)

மறையவருக் குயர்தெய்வத் தலங்களிடத் தமர்மாடம் வகுத்துளோரு, நிறையுமுப நயனமண மகயாதி புரிதரப்பொன் னேர்ந்துளோருங், குறைவறுபாற் செருத்தலா னிலன்முதற்பல் வகைத்தானங் கொடுத்துளோரு, மறையுமறு சுவையுணவு விலாப்புடை வீங்கி டவுண்ணுமா றளித்துளோரும்.

(ப - ரை.) மறையவருக்கு - வேதியருக்கு, உயர் - உயர்ந்த, தெய்வத் தலங்களிடத்து - தெய்வஸ்தலங்களில், அமர் - வாழ்தற்குரிய, மாடம் - திருமாளிகைகளை, வகுத்துளோரும் - கட்டிவைத்தவர்களும், நிறையும் - நிறைந்த, உபநயனமணம்-உபநயநவிவாகம், மகம் - யாகம், ஆதி - முதலானவற்றை, புரிதர - செய்ய, பொன்னேர்ந்துளோரும் - பொன்கொடுத்தவர்களும், குறைவுஅறு - குறைவற்ற, பால்செருத்தல் - பால்மடியையுடைய, ஆன் - பசு, நிலன் - நிலம், முதல்-முதலாகிய, பல்வகை - பலவகைப்பட்ட, தானம்கொடுத்துளோரும் - தானஞ்செய்தவர்களும், அறையும் - சொல்லப்பட்ட, அறுசுவைஉணவு - அறுசுவையுணவை, விலாப்புடைவீங்கிட - விலாப்புடைவீங்கும்படி, உண்ணுமாறு - உண்ண, அளித்துளோரும் - கொடுத்தவர்களும். எ - று.

(பொ - ரை.) வேதியருக்கு உயர்ந்த தெய்வஸ்தலங்களில் வாழ்தற்குரிய திருமாளிகைகளைக் கட்டிவைத்தவர்களும், நிறைந்த உபநயநவிவாகம், யாகம் முதலானவற்றைச்செய்யப் பொன் கொடுத்தவர்களும், குறைவற்ற பால்மடியையுடைய பசுநிலம் முதலாகிய பலவகைப்பட்ட தானஞ்செய்தவர்களும், சொல்லப்பட்ட அறுசுவையுணவை விலாப்புடை வீங்கும்படி உண்ணக் கொடுத்தவர்களும். எ - று.

(வி - ரை.) மறையவர் - வேதாத்தியயநபரராகிய பிராமணர். உயர் தெய்வத்தலங்கள் - கோயில் திருமலைபெருமாள்கோயில் முதலாயின. உபநயநம் - பூணூற்சடங்கு. இதுத்விஜத்வத்தைப் பூர்த்தி செய்வதாதலால், 'நிறையுமுபநயநம்' என்றும், 'இது விவாகம்போற் கொண்டாடப்படுவதோர் பெருஞ்சடங்காதலால், 'உபநயநமணம்' என்றுங்கூறினர். மகமாதி- யாகாதிகள், அவையாகம் ச்ருச்ரசாந்த்ராயநவிரத முதலியவை. ஆனிலன்

முதற்பல்வகைத்தானம் என்றது கோதானபூதானமுதலிய பலவகைத்தானங்களை. தானம் - கொடுத்தல், இது வடமொழித்தொழிற்பெயர். அறுசுவை- கைப்பு, புளிப்பு, துவர்ப்பு, இனிப்பு, கார்ப்பு, உவர்ப்பு என்பன. விலாப்புடை - பழுப்புடை. வீங்குதல் - பருத்தல். (உயர்ந்து தோன்றல்.) (கக௬)

தீபபுலி முதல்விருகத் தாற்கொடுங்கோன் மன்னவராற் றீயானீரான், மேயகொடுங் கள்வரான் மற்றெனைவைகளாலுமிடர் விளைந்தபோதில், லாயவிடர்க் கந்தோவென் றுளமிரங்கி விரைந்துபொருளாதி நல்கி, நேயமுறப் பேருதவி புரிந்தின்னுங் காப்பமென நிகழ்த்துவோரும்.

(ப - ரை.) தீய - கொடிய, புலிமுதல் - புலிமுதலிய, விருகத்தால்- மிருகங்களாலும், கொடுங்கோல் மன்னவரால் - கொடுங்கோலையுடைய அரசர்களாலும், தீயால் - நெருப்பினாலும், நீரால் - நீரினாலும், மேயகொடுகள்வரால் - பொருந்திய கொடிய திருடர்களாலும், மற்றுளவைகளாலும் - வேறெவைகளாலும், இடர்விளைந்தபோதில் - துன்பமுண்டான காலத்தில், ஆயஇடர்க்கு - அவ்வாறுண்டாகிய துன்பத்துக்கு, அந்தோஎன்று - ஐயோவென்று, உள்ளம் இரங்கி - மனமிரங்கி, விரைந்து - விரைவாக, பொருள் ஆதிநல்கி - பொருள் முதலியவற்றைக்கொடுத்து, நேயம்உற-அன்புமிக, பேருதவிபுரிந்து - பேருதவிசெய்து, இன்னும் - மேலும், காப்பம்என - காப்பாற்றுவோமென்று, நிகழ்த்துவோரும் - சொல்லுவோர்களும். எ - று.

(பொ - ரை.) கொடியபுலிமுதலிய மிருகங்களாலும், கொடுங்கோலையுடைய அரசர்களாலும், நெருப்பினாலும், நீரினாலும், பொருந்திய கொடிய திருடர்களாலும், வேறெவைகளாலும் துன்பமுண்டானகாலத்தில், அவ்வாறுண்டாகிய துன்பத்துக்கு ஐயோவென்று மனமிரங்கி விரைவாகப் பொருள் முதலியவற்றைக் கொடுத்து அன்புமிகப் பேருதவிசெய்து இனிமேலும் காப்பாற்றுவோமென்று சொல்லுவோர்களும். எ - று.

(வி - ரை.) கொடுங்கோல்மன்னவர்- முறைகோடிய அரசர், நீர்-வெள்ளம். கள்வரதுவன் கண்மை கண்ணோட்டமின்மை முதலியவற்றை விளக்குதற்கு 'மேயகொடுங்கள்வர்' என்றார். விளைதல் - இவ்விடத்து முதிர்தல்மேலது (அதிகரித்தல்). அந்தோ - இரக்கவிடைச்சொல். பேருதவி - பெரியவுதவி (வேறோரிடத்துச்)சென்றிரவா திருத்தற்குரிய உதவி. உதவி - சஹாயம். (ககஎ)

இம்மையிற்பல் பெருஞ்செல்வ மிடையறு துறப்பெருக வீன்ற மைந்தர், செம்மையிற்செய் வினைநல்லோர் தமைச்சூழச் செழும்போகஞ் சிறப்பத் துய்த்திட், டம்மையிற்கற் பகநாடு களிதூங்கத் தேவரா யரம்பை மாதர், கொம்மைவரி முலைப்போகஞ் சேணுட்டுய்த் ததற்பின்முத்தி கூடு வாரால்.

(ப - ரை.) இம்மையில் - இப்பிறப்பில், பல்பெருஞ்செல்வம் - பல பெரிய செல்வங்கள், இடையறுது - இடைவிடாமல், உறபெருக - மிகப் பெருகவும், ஈன்றமைந்தர்-பெற்றபுதல்வரும், செம்மையின் செய்வினை நல்லோர் - செவ்வையாகச் செய்வினையில் நல்லோரும், தம்மைசூழ - தம்மைச் சூழவும், செழுபோகம் - செழுமையாகிய போகங்களை, சிறப்பதுய்த்திட்டு - மிகுதியாக அநுபவித்து, அம்மையில் - வருபிறப்பில், கற்பகநாடு - சுவர்க்க லோகம், களிதூங்க - மகிழ்ச்சிபொங்க, தேவர்ஆய் - தேவர்களாகப் பிறந்து, அரம்பைமாதர் - அரம்பைப்பெண்களின், சொம்மை - திரட்சியாகிய, வரி-தேமல்படர்ந்த, முலைப்போகம் - ஸ்தநசுகத்தை, சேண்நாள் துய்த்து - நெடுங்காலம் அநுபவித்து, அதன்பின் - அதன்பிறகு, முத்திகூடுவார் - முத்தியையடைவார்கள். எ - று.

(பொ - ரை.) இப்பிறப்பில் பலபெரிய செல்வங்கள் இடைவிடாமல் மிகப்பெருகவும், பெற்றபுதல்வரும் செவ்வையாகச் செய்வினையில் நல்லோரும் தம்மைச்சூழவும் செழுமையாகிய போகங்களை மிகுதியாக அநுபவித்து வருபிறப்பில் சுவர்க்கலோகம் மகிழ்ச்சிபொங்க தேவர்களாகப்பிறந்து அரம்பைப்பெண்களின் திரட்சியாகிய தேமல்படர்ந்தஸ்தநசுகத்தை நெடுங்காலம் அநுபவித்து, அதன்பிறகு முத்தியடைவார்கள். எ - று.

(வி - ரை.) செம்மையிற்செய்வினை நல்லோர்என்றது அன்புள்ளமனை மக்கள்பரிசாரகர் முதலியோரை. சிறத்தல் - மிகுதல். துய்த்தல் - அநுபவித்தல். கற்பகம் - கற்பகமரம், இதுஐந்தருவிலொன்று, கற்பகநாடு-விண்ணுலகு (இந்திரலோகம்), களிதூங்கஎன்பதற்குக் களிப்புக்கடலிலழுந்தஎன்றுரைப்பினுமாம். அரம்பை-தெய்வப்பெண் பொதுப்பெயர், தேவதாசிகளிலொருத்தியாகிய அரம்பை யெனினுமமையும். தேவதாசிகளாவார், ஊர்வசி, மேநகை, திலோத்தமை முதலியோர், வரி - சந்தநக்கோலம் எனினும் பொருந்தும், சேண் - தூரம், அது இவ்விடத்து நெடுமை குறித்தது. முத்தி - மோக்ஷம்.

இத்தகைய மறையவனை யெளியரென நினைப்பதெவனிவணிற்கின்ற, வித்தகமா மறைத்தலைவன் றன்னைமுழு ஞானியென விளம்பல் வேண்டு, மெத்தகைமை யாலெனின்மெய்ஞ் ஞானியர்தங் குணங்குறியு மிகத்தி லாசைச், சித்தமொரு வாறுழல்பொய்ஞ்ஞானியர்தங் குணங்குறியுஞ் செப்பக் கேண்மின்.

(ப - ரை.) இத்தகையமறையவனை- இத்தன்மையராகிய வேதியனை, எளியர்என - எளியரென்று, நினைப்பதுஎவன் - நினைத்தல்யாதுக்கு, இவண் நிற்கின்ற - இவ்விடத்துநிற்கிற, வித்தகம் - ஞானத்தைத்தருகிற, மா - பெரிய, மறை - வேதங்களில், தலைவன்தன்னை - சிறந்தவனாகிய இந்தபிராமணனை, முழுஞானியென - முழுஞானியென்று, விளம்பல்வேண்டும் - சொல்லவேண்டும், எத்தகைமையால் எனின் - எந்தத் தன்மையாலென்றால், மெய்ஞ்ஞானியர் - மெய்ஞ்ஞானிகளுடைய, குணம் குறியும் - குணங்குறிக

லேயும், இகத்தில்ஆசை - பிரபஞ்சவாஞ்சையில், சித்தம்ஒருவாது உழல் - மனம் இடையருமல் உழலப்பெற்ற, பொய்ஞ்ஞானியர் - பொய்ஞ்ஞானிகளுடைய, குணங்குறியும் - குணங்குறிகளையும், செப்ப - யான்சொல்ல ; கேள்மின் - கேளுங்கள். எ - று.

பொ- ரை. இத்தன்மையராகிய வேதியனைஎளியரென்று நினைத்தல் யாதுக்கு. இவ்விடத்துநிற்கிற ஞானத்தைத் தருகிறபெரிய வேதங்களில் சிறந்தவனாகிய இந்தபிராமணனை முழுஞானியென்று சொல்லல்வேண்டும், எந்தத் தன்மையாலென்றால், மெய்ஞ்ஞானிகளுடைய குணங்குறிகளையும், பிரபஞ்சவாஞ்சையில்மனம் இடையருமல் உழலப்பெற்ற பொய்ஞ்ஞானிகளுடைய குணங்குறிகளையும் யான்சொல்லக் கேளுங்கள். எ - று.

(வி - ரை.) நிற்கின்றதலைவன் எனவியையும், தலைவன்றன்னை யென்பதில் தன்சாரியை, குறி - அடையாளம். இகம் - இவ்வுலகு, உழலுதல் - சுழலுதல். இந்நயைப என்பதற்கு இப்படிப்பட்ட பெருமையுடைய எனினுமாம், வித்தகம் - ஞானம். மறைத்தலைவன் - வேதவுணர்ச்சியிற் சிறந்தவன். எத்தகைமையால் - எவ்வாற்றால். குணங்குறியும்என்ற இரண்டன்கண்ணுமுள்ளவும்மைகள் எண்ணும்மைகள். (௧௧௯)

கம்மாலுஞ் செயற்கரிய செயற்றலைநின் றொருவழிநாற் கரணஞ் செல்ல, வம்மாலு மறைப்பொருளி னிலக்குறுத்தி யயிற்கணு ராசை முன்னு, வெம்மாலுங் கடந்தார்க்கு மணியாலும் பொன்னாலு மெந்த வேந்தர், தம்மாலு மும்மாலு மெம்மாலு மாம்பயனென் சாற்று வீரே.

(ப - ரை.) கம்மாலும் - பிரமனாலும், செயற்குஅரிய - செய்தற்கரிதாகிய, செயல்தலைநின்று - செயலின்கண்ணேநின்று, நால்கரணம் - கரணங்கள் நான்கும், ஒருவழிசெல்ல - ஒருவழியில்நடக்கும்படி, அம்ஆலும் - அழகுவிளங்குகின்ற, மறைப்பொருளின்-வேதார்த்தமாகிய, இலக்குஉறுத்தி- இலக்கில் அடைவித்து, அயில்கண்ணர் - வேல்போலுங் கண்களையுடைய வராகியமாதரது, ஆசைமுன்னு - ஆசைமுதலாக, எம்மாலும் - மற்றெந்தஆசைகளையும், கடந்தார்க்கு - வென்றவர்க்கு, மணியாலும் - ரத்நங்களினாலும், பொன்னாலும் - பொன்னினாலும், எந்தவேந்தர்தம்மாலும் - எந்தஅரசராலும், உம்மாலும் - உங்களாலும், எம்மாலும் - எங்களாலும், ஆம் - உண்டாகிற, பயன் - பிரயோசநம், என் - யாது, சாற்றுவீர் - சொல்லுவீராக. எ - று.

(பொ - ரை.) பிரமனாலும் செய்தற்கரிதாகிய செயலின் கண்ணேநின்று, கரணங்கள்நான்கும் ஒருவழியில் நடக்கும்படி, அழகுவிளங்கு கின்ற வேதார்த்தமாகிய இலக்கில் அடைவித்து, வேல்போலுங்கண்களை யுடையவராகிய மாதரது ஆசைமுதலாக மற்றெந்தஆசைகளையும் வென்றவர்க்கு, ரத்நங்களினாலும், பொன்னினாலும், எந்தஅரசராலும், உங்களாலும், எங்களாலும் உண்டாகிற பிரயோசநம்யாது, சொல்லுவீராக. எ - று.

(வி - ரை.) கம் - பிரமன், செயற்கரியசெயல் - தவத்தொழில், செயற்றலை என்பதில் தலை ஏழனுருபு, தலைநின்று என்பதற்கு தலைமையாய்நின்று எனினுமாம், ஒருவழிச்செல்ல என்றது ஏகாக்ரசித்தமாய்நின்று என்றபடி, நாற்கரணம் - அந்தக்கரண சதுஷ்டயம், அவை மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன, அம் - அழகு, சதுர்த்திறப்பொருளாவது அறம்பொருள் இன்பம் வீடு எனனும் நான்கினையுங்கொடுத்தல், அறமுதலிய நான்கினையும் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்பர் வடநூலார், மறைப்பொருள் - வேதப்ரதிபாத்தியமான பிரமப்பொருள். மறைப்பொருளின் என்பதில் இன் அல்வழிச்சாரியை, மறைப்பொருளின் இலக்கு - மறைப்பொருளாகிய லக்ஷ்யம், (குறி), அயில்கண் - உவமைத்தொகை, முன்னு - முதலாக, உம்மாலும் என்றது அதனின்வேறாகிய பொன்னிலங்களினாசையை, கடத்தல் - வெல்லுதல்.

வலங்கொள்செழு முகிலுரறி யுருமேறு பலவுதிர வழங்கினும், விலங்கலைவே ரோடுபறித் தொன்றினையொன் றடரவளி வீசினும், கலங்கலையா ரெழுகடலு நிலைபெயர வுலகநிலை கலங்கினும், நலங்கிளர்தந் நிலைபெயரா ருண்ணடுங்கா ரவைகண்டு நகையா நிற்பார்.

(ப - ரை.) வலம்கொள் - வலியையுடைய, செழுமுகில் - செழுமையாகிய மேகங்கள், உரறி - கோவித்து, உருமேறுபல உதிர - உருமேறுகள் பலவுதிரும்படி, வழங்கினும் - மழையைப்பெய்தாலும், வளி - காற்றானது, விலங்கலை - மலைகளை, வேரோடுபறித்து-வேருடன்பிடுங்கி, ஒன்றினை ஒன்றுஅடர - ஒன்றையொன்றுதாக்கும்படி, வீசினும் - எறிந்தாலும், கலங்கலைஆர் - கலங்குதலைப்பொருந்திய, எழுகடலும் - கடல்களேழும், நிலைபெயர - நிலைகுலைய, உலகம் நிலைகலங்கினும் - உலகம் நிலைகுலைந்தாலும், நலம்கிளர் - நன்மைவிளங்குகின்ற, தம் நிலைபெயரார் - தமது நிலையினின்றும் கலங்கமாட்டார், உள்நடுங்கார் - மனம் சலிக்கமாட்டார், அவைகண்டு - அவற்றைநோக்கி, நகையாநிற்பர் - சிரியாநிற்பர் (மெய்ஞ்ஞானியர்). எ-று.

(பொ - ரை) வலியையுடைய செழுமையாகிய மேகங்கள் கோவித்து உருமேறுகள் பலவுதிரும்படி மழையைப்பெய்தாலும், காற்றானது மலைகளை வேருடன்பிடுங்கி ஒன்றையொன்றுதாக்கும்படி எறிந்தாலும், கலங்குதலைப் பொருந்திய கடல்களேழும் நிலைகுலைய உலகம் நிலைகுலைந்தாலும், நன்மை விளங்குகின்ற தமது நிலையினின்றும் கலங்கமாட்டார், மனம்சலிக்கமாட்டார், அவற்றைநோக்கிச் சிரியாநிற்பர் (மெய்ஞ்ஞானியர்). எ - று.

(வி - ரை.) உரறல் - கோவித்தல், முழங்கியெனினுமாம், உருமேறு பலவுதிர வழங்குதற்கேற்ப, 'வலங்கொள்செழுமுகில்' என்றார், உருமேறு - ஆணிடி, உரும் - இடி . இது உகரச்சாரியைபெற்று உருமுஎனவும் வரும், வழங்கல் - பெய்தல், "தானந்தவமிரண்டுந் தங்காவியனுலகம் - வானம்வழங்காதெனின்" என்னுந்திருக்குறளிலும் வழங்கல் இப்பொருட்டாதல்காண்க, விலங்கல்-மலை, வேர் - அடி, தம்நிலை - தமது பிரமத்தியாநநிலை, அவையென்

றது மழைபெய்தல் முதலியவற்றை. நிலைபெயரார், உண்ணடுங்கார், நகையா நிற்பர் என்பவற்றிற்கு வினைமுதலாகிய மெய்ஞ்ஞானியர் என்பது வருவித்துரைக்கப்பட்டது, முகில்வழக்குதல் முதலியவும் உருமேறுபலவுதிரவழங்குதல் முதலிய குறிப்பால் பிரளயகாலமேகம், பிரசண்டமாருதம், முதலியவற்றையுணர்த்தின, "விலங்கலைக்கால்விண்டுமேல்போவிட விண்ணு மண்ணுமெல்லாம் - கலங்கலைச்சென்ற வன்றும்" என்றார் மேலோரும். (கஉக)

புகழ்ந்து நறுவிரைக்கலவை பூசிடினும் புல்லியரைப் போல நோக்கி, யிகழ்ந்துபல பேசிடினும் விருப்புவெறுப் பென்பவவர்க் கென்று மில்லை, யகழ்ந்தமலக் கிழங்கினராய்ப் பசிவேளை கிடைத் தவற்றை யமுதாத் துய்த்துத், திகழ்ந்திடுவர் சிறிதேனு நாளைக்கு வேண்டுமெனச் சிந்தை செய்யார்.

(ப - ரை.) புகழ்ந்து - தோத்திரஞ்செய்து, நறுவிரை-நறுமணமுள்ள, கலவை - கலவைச்சந்தனத்தை, பூசிடினும் - பூசினாலும், புல்லியரைப்போல நோக்கி - அற்பரைப்போல எண்ணி, இகழ்ந்து-அவமதித்து, பலபேசிடினும், பலவற்றைப்பேசினாலும், விருப்பு வெறுப்பு என்ப - (அவ்வாறு செய்தவரிடத்து) விருப்பு வெறுப்பு என்பன, அவர்க்கு - அந்த மெய்ஞ்ஞானியர்க்கு, என்றும் இல்லை - எக்காலத்துமில்லை, அகழ்ந்த மலக்கிழங்கினர்ஆய் - மலவேரைத்தோண்டியெடுத்தவராய், பசிவேளைகிடைத்தவற்றை - பசிவேளையிற் கிடைத்தவைகளை, அமுதா துய்த்து - அமிர்தம்போலப்புசித்து, திகழ்ந்திடுவர் - விளங்குவார், நாளைக்குவேண்டும் என - நாளைக்குவேண்டுமென்று, சிறிது எனும் சிந்தைசெய்யார் - சிறிதாயினும் சிந்தியார். எ - று.

(பொ - ரை) தோத்திரஞ்செய்து நறுமணமுள்ள கலவைச்சந்தனத்தைப்பூசினாலும், அற்பரைப்போல எண்ணி அவமதித்துப்பலவற்றைப் பேசினாலும், விருப்பு வெறுப்பு என்பன அந்த மெய்ஞ்ஞானியர்க்கு எக்காலத்துமில்லை, மலவேரைத்தோண்டி யெடுத்தவராய் பசிவேளையிற்கிடைத்தவைகளை அமிர்தம்போலப்புசித்து விளங்குவார், நாளைக்குவேண்டுமென்று சிறிதாயினும் சிந்தியார். எ - று.

(வி - ரை.) 'புகழ்ந்து நறுவிரைக்கலவை பூசிடினும் புல்லியரைப் போல நோக்கி இகழ்ந்துபல பேசிடினும் விருப்பு வெறுப்பென்பவவர்க்கென்றுமில்லை, என்றமையால் ஞானியர்க்கு உபசரித்தவரிடத்து விருப்பும் அவமதித்தவரிடத்து வெறுப்பும் இல்லையென்பதும், 'அகழ்ந்தமலக்கிழங்கினராய் என்றமையால் மும்மலங்களை வேரோடுகளைந்தவர் என்பதும், பசிவேளை கிடைத்தவற்றையமுதாத்துய்த்துத்திகழ்ந்திடுவர் என்றமையால், பசிவேளையில், கம்பங்கூழ் முதலிய இழிந்தவுணவுகளையும் அமிர்தம்போலவுட்கொள்வர் என்பதும், 'சிறிதேனு நாளைக்குவேண்டுமெனச்சிந்தை செய்யார், என்றமையால், இன்று தந்ததெய்வம் நாளைக்குந்தருமென்றசலியாதிருப்பரென்பதும், இனிது விளங்கும், "சென்றது கருதார் நாளைச்சேர்வது நினையார்கண் முன்,

யின்றநுபவிப்பார் வெய்யினிலவாய் விண்ணிருதுவிருந்து, பொன்றினசவம் வாழ்ந்தாலும் புதுமையாயொன்றுமே பாரார், என்று நிதியென்றார் சாட்சி நடு வான சிவன் முத்தர்'' என்றிவ்வாறு பிறர் கூறுதலுங்காண்க, கலவை-கலப்பு, இது பச்சைக்கற்பூரம், புழுகு, சவ்வாது முதலியவாகிய திரவியங்களைக் கலந்துபெற்ற சந்தநம் எனப்பொருள்படும், கலவைபூசினவர்மீது விருப்பும் இகழ்ந்துபேசினவர்மீது வெறுப்பும் இல்லாரென்றுங்கொள்க. (கஉஉ)

விண்ணிடையே யெழுந்து மீளப் பாதலத்திற் புகந்து மீட்டிப் புவியின் மேவல், அண்ணியபல் பரகாயப் பிரவேசஞ் செய்தலுறையு மவ்விடத்தே, யெண்ணியவெல் லாம்வரச்செய் திடல்முதற்செய சித்திகளை யென்றும் வேண்டார், புண்ணியபா வங்களிலார் பெருமையிலார் சிறுமையிலார் பொய்ம்மெய் யில்லார்.

(ப - ரை.) விண் இடை எழுதல் - ஆகாயத்திற்செல்லுதல், மீள - மறுபடியும், பாதலத்திற்புகல் - பாதாளத்திற் பிரவேசித்தல், மீட்டு - மறுபடியும், புவியில்மேவல் - பூலோகத்திற்குவருதல், அண்ணிய-பொருந்திய, பல் - பலவாகிய, பரகாயப்பிரவேசம்செயல் - பரகாயப்பிரவேசஞ்செய்தல், உறையும் அவ்விடத்தே - (தாம்) வசிக்குமிடத்திற்றானே, எண்ணிய எல்லாம் - நினைத்தபொருள்களெல்லாம், வரச்செய்தல் - வரும்படிசெய்தல், முதல் - முதலாக, செய் - செய்யப்பட்ட, சித்திகளை - (பலவகைச்) சித்திகளை, என்றும் வேண்டார் - எக்காலத்தும் விரும்பார், புண்ணியபாவங்கள் இலார் - புண்யபாபங்களில்லாதவர், பெருமை இலார் - பெருமையில்லாதவர், சிறுமை இலார் - சிறுமையில்லாதவர், பொய்மெய் இல்லார் - பொய்மெய்களில்லாதவர்.

(பொ - ரை.) ஆகாயத்திற்செல்லுதல், மறுபடியும் பாதாளத்திற்பிரவேசித்தல், மறுபடியும் பூலோகத்திற்குவருதல், பொருந்திய பலவாகிய பரகாயப்பிரவேசஞ்செய்தல், தாம்வசிக்குமிடத்திற்றானே நினைத்தபொருள்களெல்லாம் வரும்படிசெய்தல் முதலாகச்செய்யப்பட்ட பலவகைச்சித்திகளை எக்காலத்தும் விரும்பார், புண்யபாபங்களில்லாதவர், பெருமையில்லாதவர், சிறுமையில்லாதவர், பொய்மெய்களில்லாதவர். எ - று.

(வி - ரை.) விண்ணிடையென்பதில் இடை ஏழனுருபு, பரகாயப்பிரவேசம்செயல் - தமதுடம்பைவிட்டு வேறோருடம்பிற்புகுதல், புண்ணியபாவங்கள் - அறமறங்கள், பொய்மெய் - அசத்யசத்யங்கள், அண்ணல் - பொருந்தல், "பங்கயற்கண்ணரியபரம்பரன்" என்புழியும் அண்ணல் இப்பொருட்டாதல் காண்க, சித்திகள் அளவில்லனவாதலால், தொகைகொடாது, சித்திகளை, என்றார். (கஉக)

ஆடுவா ருன்மத்தர் போற்றிரிவார் நகைத்திடுவா ரங்கை கொட்டிப், பாடுவா ரின்றிருந்த விடநாளை யிருக்கமனம் பற்றார் சுற்றிக், கூடுவார் தமிற்கூடார் கந்தையன்றி வேறுடுக்கை கொள்ளா ரன்னார், நீடுவார் புகழ்ப்பெருமை யிற்றென்று மதிப்பவராரி கழ்த்து வாரார்.

(ப - ரை.) ஆடுவார் - கூத்தாடுவார், உன்மத்தர்போல் திரிவார் - உன் மத்தர்போலத்திரிவார், நகைத்திடுவார் - சிரிப்பார், அங்கை கொட்டிபாடு வார்-அகங்கையைக்கொட்டிப்பாடுவார், இன்று இருந்த இடம் நாளை இருக்க- இன்றைக்கிருந்த இடத்தில் நாளைக்கிருப்பதற்கு, மனம்பற்றார் - மனம்பொ ருந்தார், சுற்றி கூடுவார் தம்மில் கூடார் - சுற்றிலும்வந்து சேர்வாரோடும் சேரார், கந்தை அன்றிவேறு உடுக்கைகொள்ளார் - கந்தைத்துணியையல் லது வேறு உயர்ந்த ஆடையைத்தரியார், அன்னார் - அப்படிப்பட்ட ஞானிக ளுடைய, நீடுவார் - மிகப்பெரிய, புகழ்பெருமை - புகழின்சிறப்பை, இற்று என்று மதிப்பவர் ஆர் - இத்தன்மைத்தென்று கணிப்பவர்யார், நிகழ்த்துவார் ஆர் - சொல்லுவோர்யார். எ - று.

(பொ - ரை.) கூத்தாடுவார், உன்மத்தர்போலத்திரிவார், சிரிப்பார், அகங்கையைக்கொட்டிப்பாடுவார், இன்றைக்கிருந்த இடத்தில் நாளைக்கிருப்ப தற்கு மனம்பொருந்தார், சுற்றிலும்வந்து சேர்வாரோடும்சேரார், கந்தைத் துணியையல்லது வேறு உயர்ந்த ஆடையைத்தரியார், அப்படிப்பட்ட ஞானி களுடைய மிகப்பெரிய புகழின்சிறப்பை இத்தன்மைத்தென்று கணிப்பவர் யார், சொல்லுவோர்யார். எ - று.

(வி - ரை.) உன்மத்தர் - சித்தப்பிரமைகொண்டவர், அங்கை - அழ கியகை எனினுமாம், மனம்பற்றுதல் - மனம்பொருந்துதல், 'கந்தையன்றி, என்றதனால், வேறுடுக்கை உயர்ந்த ஆடையைக்குறித்தது, நீடுவார் என்பன ஒருபொருள் குறித்த பலசொற்களாதலால் மிகப்பெரிய எனப்பொருள்கூற லாயிற்று, இற்று - ஒன்றன்பாற்குறிப்பு வினைமுற்று. (௩௨௪)

உற்றதலை மயிர்பறித்துப் பீலிகரத் திடைக்கொடுபா யுடைபு
னைந்து, கற்றதவம் போலவமே பெருக்குவது ஞானமன்று கந்த
மைந்தும், வற்றநெடுஞ் சீவரம்போர்த் தொளிர்வதுவு ஞானமன்று
மற்றோர் போல, நற்றவம்வேண் டிலநாமே பிரமமென நவில்
வதுவு ஞான மன்று.

(ப - ரை.) உற்ற - மிகுந்த, தலைமயிர்பறித்து - தலைமயிரைப்பிடுங்கி, கரத்துஇடை - கையின்கண், பீலிகொடு - பீலியைத்தாங்கி, பாய் உடை புனைந்து - பாயாகிய ஆடையையுடுத்து, கற்ற - கற்ற, தவம்போல் - தவத் தைப்போல, அவமேபெருக்குவது-அவத்தையேபெருக்குவது,ஞானம்அன்று- ஞானமல்ல, கந்தம்ஐந்தும்வற்ற - பஞ்சகந்தங்களும்கெட,நெடு - நீண்ட, சீவ ரம் - சீவரவஸ்திரத்தை, போர்த்து ஒளிர்வதும் - போர்த்துவிளங்குவதும், ஞானம்அன்று - ஞானமல்ல, மற்றோர்போல - மற்றவர்போல, நல்தவம் வேண்டிலம் - நல்லதவத்தைச்செய்ய விரும்பிலேம், நாமேபிரமம் என - நா மேபிரமமென்று, நவில்வதுவும் - சொல்வதும், ஞானம்அன்று - ஞானமல்ல.

(பொ - ரை.) மிகுந்த தலைமயிரைப்பிடுங்கி, கையின்கண்பீலியைத் தாங்கி, பாயாகிய ஆடையையுடுத்து, கற்றதவத்தைப்போல அவத்தையே.

பெருக்குவது ஞானமல்ல, பஞ்சகந்தங்களுங்கெட, நீண்ட சீவரவஸ்திரத்தைப் போர்த்து விளங்குவதும்ஞானமல்ல, மற்றவர்போல நல்லதவத்தைச்செய்ய விரும்பிலேம், நாமேபிரமமென்று சொல்வதும் ஞானமல்ல. எ - று.

(வி - ரை.) தலைமயிர்பறித்தல், பீலிகரத்திடைக்கோடல், பாயுடைபுனைதல்என்பன சமணர்கொள்கை. கந்தமைந்தும்கெடுதல், சீவரம்போர்த்தல் என்பன புத்தர்கொள்கை. தவம்வேண்டிலம்நாமே பிரமமென நவிலல் அத்வைதிகள்கொள்கை, பீலி - மயிற்பிச்சம். உடை - உடுக்கப்படுவது. அவம் - வீண்செயல். கந்தமைந்துஎன்றது உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் - என்பவற்றை. சீவரம்-துவராடை. நவிலல்-சொல்லல்.

ஓங்குபெரு ஞானியர்போற் பேசுவா ரவருண்மை வேடம்
போலப், பாங்குபெற வுடல்புனைவார் சற்கருமஞ் செய்வோர்தம்
பக்க மேகி, நீங்குகவென் றொழிப்பாரிந் நிலைமேலாம் பிரமத்தி
னிலையே யென்பா, ரீங்கிவர்க டாங்கெடுவ தன்றிமற்றோ ரையுங்
கெடுக்கு மெண்ணம் பூண்டோர்.

(ப - ரை.) ஓங்கு - உயர்ந்த, பெருஞானியர்போல் - பெரியஞானிகள்போல, பேசுவார் - பேசுவார்கள், அவர் உண்மைவேடம்போல - அந்தஞானியரது உண்மையாகிய வேஷம்போல, பாங்குபெற-அழகுபெற, உடல் புனைவார் - தம்முடம்பை யலங்கரித்துக்கொள்ளுவார்கள், சற்கருமம் செய்வோர்-நற்கருமம் செய்வோர்கள், தம்பக்கம் ஏகின் - தம்பக்கத்துவந்தால், நீங்குக என்று - விலகுங்களென்று, ஒழிப்பார் - அவர்களை ஒழித்துவிடுவார்கள், இ நிலை - இந்தநிலையே, மேல்ஆம் - மேன்மையாகிய, பிரமத்தின் நிலையென்பார் - பிரமப்பொருளின் நிலையாமென்பார்கள், ஈங்கு இவர்கள் - இவ்வுலகத்துள்ள இவர்கள், தாம்கெடுவது அன்றி - தாம் அழிவதேயல்லாமல், மற்றோரையும் - பிறரையும், கெடுக்கும் - அழிக்கின்ற, எண்ணம்பூண்டோர் - எண்ணமுள்ளவர்கள் ஆவார்கள். எ - று.

(பொ - ரை.) உயர்ந்தபெரியஞானிகள்போலப் பேசுவார்கள், அந்தஞானியரது உண்மையாகிய வேஷம்போல அழகுபெறத்தம்முடம்பை யலங்கரித்துக் கொள்ளுவார்கள், நற்கருமஞ்செய்வோர்கள் தம்பக்கத்துவந்தால் விலகுங்களென்று அவர்களை யொழித்துவிடுவார்கள், இந்த நிலையே மேன்மையாகிய பிரமப்பொருளினிலையா மென்பார்கள், இவ்வுலகத்துள்ள இவர்கள்தாம் அழிவதேயல்லாமல் பிறரையுமழிக்கின்ற எண்ணமுள்ளவர்களாவார்கள், எ - று.

(வி - ரை.) ஓங்குபெருஞானியர் என்றது மெய்ஞ்ஞானியரை. போல் என்னும் உவமைச்சொல் எதிர்மறைப்பொருளில் வந்தது. சற்கருமம் - நற்றொழில், (விரதாதிகள்). பக்கம் - அருகில் - ஈங்கிவர்கள் என்பதனை ஒரு சொல்லாக்கினுமாம். கெடுக்கும் எண்ணம் பூண்டோர் என்றமையால்- கெடுக்கும் எண்ணத்தையொரு சிறிதும் நீங்காதவர் என்றதாயிற்று. (கஉகூ)

பொன்முதற்பல் பொருளிடத்து மிச்சையற்றூர் போற்று றவு பூண்டு பின்னர்,வன்மைசெறி மனத்தபக்கு வர்க்குபதே சமு நவிற்றி வருவ தெல்லா, நன்மைதரு முன்னோரெண் காறொழுகப் பள்ளையென நயந்தோ ராயன், புன்மையுறப் பற்றியஃ துடனழிந் தானென்ற கதை போலு மாலோ.

(ப - ரை.) பொன்முதல் - பொன்முதலாகிய, பல்பொருளிடத்தும் - பலபொருள்களினிடத்தும், இச்சை அற்றூர்போல் - விருப்பமற்றவர்போல, துறவுபூண்டு - துறவறம்பூண்டு, பின்னர் - பிறகு, வன்மைசெறிமனத்து - வன்மைமிகுந்த மனத்தினையுடைய, அபக்குவர்க்கு - அபக்குவர்களுக்கு, உபதேசமும் நவிற்றிவருவது எல்லாம் - உபதேசத்தையும் செய்துவருவ தெல்லாம், நன்மைதரும் - நன்மையைச்செய்கின்ற, முன்னோர் - முன்னோர் கள், எண்கு - ஒருகரடியானது, ஆறுஒழுக - ஆற்றிலடித்துக்கொண்டுபோக, (அதனைக்கண்ட) ஓர்ஆயன் - ஒரு இடையன், பள்ளையெனநயந்து - ஆடென் றுநினைத்து, புன்மைஉறபற்றி-தனக்குக்கெடுதிநேரிடும்படி யதனைப்பிடித்து, அஃது உடன் - அந்தக்கரடியுடனே, அழிந்தான்-அழிந்துபோயினன், என்ற- என்றுசொன்ன, கதைபோலும் - கதையைநிகர்க்கும். எ - று.

(பொ - ரை.) பொன்முதலாகிய பல பொருள்களினிடத்தும் விருப்ப மற்றவர்போலத் துறவறம்பூண்டு, பிறகு வன்மைமிகுந்த மனத்தினையுடைய அபக்குவர்களுக்கு உபதேசத்தையுஞ் செய்துவருவதெல்லாம், நன்மையைச் செய்கின்ற முன்னோர்கள், ஒருகரடியானது ஆற்றிலடித்துக்கொண்டுபோக (அதைக்கண்ட) ஒரு இடையன் ஆடென்றுநினைத்துத் தனக்குக் கெடுதி நேரிடும்படி யதனைப்பிடித்து அந்தக்கரடியுடனே அழிந்துபோயினன் என்று சொன்னகதையை நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) பொன்முதற்பல் பொருள் என்றது பொன்நிலம் மாதர் முதலியவற்றை. துறவு - யான்என்னும் அகப்பற்றையும் எனது என்னும் புறப்பற்றையும் துறத்தல் (விடுதல்). பூண்டு - மேற்கொண்டு. அபக்குவர் - பக்குவமடையாதவர். பக்குவம் - மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிரதரம் என நான்குவகைப்படும். இத்தன்மையவாகிய பக்குவம் வாய்க்காதவர்க்கு,பொய்ஞ் ஞானியானவன்செய்யும் உபதேசம் பயன்படாதென்பது கருத்து. எண்கு- கரடி. ஒழுகுதல் - செல்லுதல். ஆயன் - இடையன். "குட்டித்திரட்கரடி யாறொழுகக்கோன்குதித்துக், கட்டிப்புதைந்த கதையாகும், துட்டமலப், பித்திலேமூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்குப், புத்திபோற் காட்டும் பொருள்" என்றூர் பிறரும்.

(கஉஎ)

மிக்கவழி வுடையாரைப் போன்றுமுடற் பற்றனைத்தும் விடுத்தார் போன்றுந், தக்கவழக் கிடத்தினுயர் திணைவினையஃ றிணை வினையாய்ச் சமையச் சொற்றுந், தொக்கபடர்க் கைப்பெயர்முன் னிலைப்பெயரா கிடவுரைத்துஞ் சுழல்வ தெல்லாம், பக்குவமின் மடவோரை மயக்கியவர் கைப்பொருளைப் பறித்தற் கன்றே.

(ப - ரை.) மிக்க அறிவுஉடையாரை போன்றும் - மேலான அறிவுடையவரை நிகர்த்தும், உடல்பற்று அனைத்தும் விடுத்தார்போன்றும் - உடம்பின்மீதுள்ள விருப்பமுழுதும் விட்டவரைநிகர்த்தும், தக்கவழக்கிடத்தில் - தகுதியாகிய வழக்கினிடத்தில், உயர்திணைவினை - உயர்திணைவினையானது, அஃறிணைவினையாய்சமைய - அஃறிணைவினையாயமையும்படி, சொற்றும் - பேசியும், தொக்க-தொகுதியாகிய, படர்க்கைப்பெயர் - படர்க்கைப்பெயரானது, முன்னிலைப்பெயர் ஆகிட - முன்னிலைப்பெயராகும்படி, சொற்றும் - பேசியும், சுழல்வது எல்லாம் - உழல்வதெல்லாம், பக்குவம் இல் - பக்குவமில்லாத, மடவோரை - அறிவிலிகளை, மயக்கி - மயங்கச்செய்து, அவர்கைப்பொருளை - அவரதுகையிலுள்ளபொருளை, பறித்தற்குஅன்றே - பறித்துக்கொள்வதற்கல்லவா. எ - று.

(பொ - ரை.) மேலானஅறிவுடையவரை நிகர்த்தும், உடம்பின்மீதுள்ள விருப்பமுழுதும் விட்டவரைநிகர்த்தும், தகுதியாகிய வழக்கினிடத்தில் உயர்திணைவினையானது அஃறிணைவினையாயமையும்படி பேசியும், தொகுதியாகிய படர்க்கைப்பெயரானது முன்னிலைப் பெயராகும்படி பேசியும், உழல்வதெல்லாம் பக்குவமில்லாத அறிவிலிகளை மயங்கச்செய்து அவரதுகையிலுள்ளபொருளைப்பறித்துக் கொள்வதற்கல்லவா. எ - று.

(வி - ரை.) உடற்பற்று - தேகாபிமானம். மடம் - அறியாமை. மயக்கல் - மனம்பிரமிக்கச்செய்தல். போன்றும் போன்றும் சொற்றும் உரைத்தும் உழல்வதெல்லாம் எனவியையும். சமைதல் - அமைதல். பறித்தல் - கவர்தல்.

சிறப்புறுமில் லறத்தினிதுண் டுடுத்துமனை மக்களொடுஞ்
செறிந்தா ரேனும், பெறப்படுமப் பற்றடையார் மெய்ஞ்ஞான
நெறியுணர்ந்த பெரிய ரிரா, ரறப்பெரிய துறவறஞ்சார்ந் தவர்க்கு
மிவ ரதிகமென வறையு நூல்கள், சிறப்புறுமஞ் ஞானியரெவ் வற
த்தினுமெவ் வகைச்சிறப்பு மேவி டாரால்.

(ப - ரை.) சிறப்புஉறும் - சிறப்புப்பொருந்திய, இல் அறத்து - இல்லறத்தில், இனிது - இனிதாக, உண்டு உடுத்து - உண்டும் உடுத்தும், மனை மக்களொடும் - மனைவிமக்களோடும், செறிந்தார்எனும் - கூடி வாழ்ந்தாராயினும், பெறப்படும் - (அவர்களால்) அடையப்படுவதாகிய, அப்பற்று அடையார் - அந்தப்பற்றையடையமாட்டார், (ஆதலால்) இவர் - இந்தமெய்ஞ்ஞானியர், அறப்பெரிய - மிகப்பெரிய, துறவறம் சார்ந்தவர்க்கும் - துறவறத்தையடைந்தவரினும், அதிகர் என - சிறந்தவரென்று, நூல்கள் அறையும் - நூல்கள் சொல்லாநின்றன, விறப்புஉறும் - பெருக்கம் பொருந்திய, அஞ்ஞானியர் - அஞ்ஞானியர், எ அறத்தினும் - எந்த அறத்திலிருந்தாலும், எவ்வகைசிறப்பும் - எவ்விதமேன்மையையும், மேவிடார் - அடையமாட்டார்.

(பொ - ரை.) மெய்ஞ்ஞானநெறியையறிந்த பெருங்குணத்தோர், சிறப்புப்பொருந்திய இல்லறத்தில் இனிதாக உண்டும் உடுத்தும் மனைவிமக்களோடும்கூடி வாழ்ந்தாராயினும் (அவர்களால்) அடையப்படுவதாகிய அந்தப் பற்

றையடையமாட்டார் (ஆதலால்) இந்த மெய்ஞ்ஞானியர் மிகப்பெரிய துற வறத்தை யடைந்தவரினும் சிறந்தவரென்று நூல்கள் சொல்லாநின்றன, பெருக்கம்பொருந்திய அஞ்ஞானியர் எந்த அறத்திலிருந்தாலும் எவ்விதமேன்மையையும் அடையமாட்டார். எ - று.

(வி - ரை.) "இல்வாழ்வானென்பானியல்புடைய மூவர்க்கும், நல்லாற்றி னின்றதுணை" "துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கு மிறந்தார்க்கும், இல்வாழ்வா னென்பான்றுணை" "அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற், போஒய்ப்பெறுவதெவன்" "இயல்பினானில்வாழ்க்கை வாழ்பவனென்பான்,முயல்வாருளெல்லாந்தலை" "ஆற்றினொழுக்கியறனிழுக்காவில்வாழ்க்கை,நோற்பாரினோன்மையுடைத்து" அறனெனப்பட்டதே யில்வாழ்க்கை யஃதும், பிறன்பழிப்பதில்லாயினன்று" வையத்துள்வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும், தெய்வத்துள் வைக்கப்படும்" இத்யாதிகளால் சிறப்பிக்கப்பட்டதாதலால் இல்லறத்தை 'சிறப்புறுமில்லறம், என்றார். மனை - இடவாகுபெயர். மனைமக்கள்பற்று உயிர்ப்பற்றெனப்படும். நீர் - குணம். பெரியநீரார் - பெருங்குணத்தார் (ஞானகுணமுள்ளவர்.) சார்ந்தவர்க்கும் என்பதில் குவ்வுருபு ஐந்தனுறழ்ச்சிப் பொருளில்வந்தது. நூல்கள் — வேதாகமாதிகள், விறப்பு- பெருக்கம், உலகில் அஞ்ஞானியர் பலராதலால், விறப்புறுமஞ்ஞானியர்'என்றார். எவ்வறத்தினும் என்றது - இல்லறத்தினும் துறவறத்தினும் என்றபடி.

இம்மறையோன் முழுஞானி யாயிருந்துஞ் சற்கரும மிழந்தா னல்லன், செம்மைபெறு மக்கருமத் தாலிளைத்த திவனுடம்பு திண்ண மீதே, மும்மையுல கிடத்துமொரு ஞானியரி யவனென்றே முழங்கு நூல்க, ளெம்மையினி தாண்டருள வெழுந்தருளி னானென்றே யெண்ணங் கோடும்.

(ப - ரை.) இ மறையோன் - இந்தவேதியன், முழுஞானியாயிருந்தும்- பூர்ணஞானியாயிருந்தும், சற்கருமம் - சற்கருமங்களை, இழந்தானல்லன்-கைவிட்டானல்லன், செம்மைபெறும் - செம்மையையுடைய, அக்கருமத்தால்- அந்தச் சற்கருமங்களைச் செய்தலால், இவன் உடம்பு இளைத்தது - இவனுடம்புமெலிந்தது, ஈது திண்ணம் - இதுசத்தியம், மும்மைஉலகு இடத்தும்- மூன்றுலகினிடத்தும், ஒருஞானி - ஒருஞானியானவன், அரியவன்என்றே - அருமையானவனென்றே, நூல்கள் முழங்கும் - நூல்கள் கோஷிக்கின்றன, (ஆதலால் இவ்வேதியன்) எம்மை - நம்மை, இனிது ஆண்டருள - இனிதாக ஆண்டருளும்பொருட்டு, எழுந்தருளினான் என்றே - எழுந்தருளினானென்றே, எண்ணம் கோடும் - எண்ணங்கொள்ளா நின்றோம். எ - று.

(பொ - ரை.) இந்தவேதியன் பூர்ணஞானியாயிருந்தும் சற்கருமங்களைக் கைவிட்டானல்லன், செம்மையயுடைய அந்தச்சற்கருமங்களைச் செய்தலால் இவனுடம்பு மெலிந்தது, இதுசத்தியம். மூன்றுலகினிடத்தும் ஒருஞானியானவன் அருமையானவனென்றே நூல்கள் கோஷிக்கின்றன

(ஆதலால் இவ்வேதியன்) நம்மை இனிதாக ஆண்டருளும்பொருட்டு எழுந்தருளினனென்றே எண்ணங்கொள்ளா நின்றோம். எ - று.

(வி - ரை.) 'செம்மைபெறுமக்கருமத்தாலிளைத்த திவனுடம்பு' என்றது செவ்வியஅந்தச் சற்கருமங்களாகிய உண்டிசுருக்கல் முதலிய விரதாதிகளால் இவனுடம்பு மெலிந்ததென்றபடி, "திரிவிதவுலகத்தரிதொருஞானி" என்றற் றொடக்கத்தான்றோர் கருத்தையடியொற்றி, 'மும்மையுலகிடத்துமொரு ஞானியரியவனென்றே முழங்குநூல்கள்' என்றார். "தெரிமாண்டமிழ்மும்மைத்தென்னம் பொருப்பன்" "இருமைவகை தெரிந்தீண்டறம் பூண்டார் - பெருமைபிறங்கிற்றுலகு" என்பவற்றுள் மும்மையிருமைகள் போல,'மும்மையுலகிடத்தும் என்பதில் மும்மைஎண்ணின்கணின்றது. இருமையென்பதில் இவ்வாறு மை விகுதிதன்மை யுணர்த்தாது தன்மையுடைய பொருளையே யுணர்த்துவதை, பகுதிப்பொருள் விகுதியென்னும் சுவார்த்த பாவதத்திதப்பிரத்தியயம் என வழங்குவர். முழுஞானியர்க்கு யாகம் தவம் விரதம் முதலியன வேண்டாவென்பது நூற்றுணிபாதலால் "முழுஞானியாயிருந்தும் சற்கருமமிழந்தானல்லன்' என்றார். இருந்தும் என்பதில் உம்மை உயர்வுசிறப்பு. திண்ணம் - அம் விகுதிபெற்ற பண்புப்பெயர். (கரு0)

ஆதியினற் கலையுணரு நாட்பழக்க மென்றுரைத்த தமைய மெய்யே
நீதியநம் மரசனைக்கண் டிடும்விருப்ப மீக்கூர நேடி வந்தா
னோதியவிவ் வன்றியிவ னரசரிடைப் பெறுங்கரும மொன்று மின்றாற்
காதியதீ வினையுடையே மாதலினால் யாமின்று காணப் பெற்றேம்.

(ப - ரை.) ஆதியில் - முற்காலத்தில், கலைஉணரும் - நூல்கள் படித்தறிந்த, நாள் - நாளின், பழக்கம் - சிநேகம், என்று உரைத்தது - என்று சொன்னது, அமையமெய்யே - நிரம்பவும் உண்மையே, நீதிய - நீதியையுடைய, நம்அரசனை - நமதுவேந்தனை, கண்டிடும்விருப்பம் - காணவேண்டுமென்கிற ஆசையானது, மீக்கூர - அதிகரித்தலால், நேடிவந்தான் - தேடிவந்தான், ஓதியஇவ்அன்றி - சொல்லப்பட்ட இவையேயன்றி, இவன் - இந்த வேதியன், அரசரிடை - வேந்தரிடத்தில், பெறும்கருமம் - பெறுதற்குரிய காரியம், ஒன்றும் இன்று - ஒன்றுமில்லை, யாம் - நாம், காதியதீவினையுடையேம் ஆதலினால் - தீவினையைவென்றவர்களாதலால், இன்று-இப்பொழுது, காணப்பெற்றேம் - (இவனை) காணப்பெற்றோம். எ - று.

(பொ - ரை.) முற்காலத்தில் நூல்கள் படித்தறிந்த நாளின்சிநேகம் என்று சொன்னது நிரம்பவும் உண்மையே, நீதியையுடைய நமது வேந்தனைக்காணவேண்டுமென்கிற ஆசையானது அதிகரித்தலால் தேடிவந்தான், சொல்லப்பட்ட இவையேயன்றி, இந்தவேதியன் வேந்தரிடத்தில் பெறுதற்குரியகாரியம் ஒன்றுமில்லை, நாம் தீவினையைவென்றவர்களாதலால் இப்பொழுது (இவனைக்) காணப்பெற்றோம். எ - று.

(வி - ரை.) கலையுணருநாள் - வித்யாப்யாசகாலம், அமைதல் - நிரம்புதல், மீக்கூர்தல் - அதிகரித்தல், நேடுதல் - தேடுதல், இவ் - இவை, அரசரிடையென்பதில் இடை ஏழனுருபு, கருமம் - காரியம், அது இங்குப்பொருளென்னும் பொருள்குறித்தது, காதியதீவினை - வென்றதீவினை, இது இங்குத்தீவினையைவென்ற என்னும் பொருள்பட்டது, இது 'கடக்கும்பவத்தர்' ஜிதேந்த்ரியன், 'கதகல்மஷன், என்பனபோல்வது, காணப்பெற்றேம் - கண்டேம் என ஒரு சொல்லாகவாயினும், காண்டற்குரிய புண்ணியமுடையேம் என இருசொல்லாகவாயினும் சொள்ளலாம், 'காதியதீவினையுடையேம் என்றது புண்ணியஞ்செய்துளேம் என்றபடி. (கருக)

ஆவாவிம் மறையோனைக் காண்டொறுமுள் ளகத்துவகையரும்பாநின்ற
தோவாது மெய்யினிடைப் புளகமெழு கின்றதுகண் ணுருகா நின்ற
நாவாரத் துதிப்பதற்குத் துடிதுடிக்கின் றதுவிரைந்துநாம்போயின்னே
தேவாதி தேவனுக்கித் தவன்வரவை விண்ணப்பஞ் செய்ய வேண்டும்.

(ப - ரை.) ஆஆ - மிகுவியப்பு, இ - இந்த, மறையோனை-வேதியனை, காண்தொறும் - பார்க்குந்தோறும், (எமக்கு) உள்அகத்து - மனத்தில், உவகைஅரும்பாநின்றது - சந்தோஷமுண்டாகா நின்றது, ஓவாது - நீங்காமல், மெய்யினிடை - உடம்பில், புளகம் எழுகின்றது-புளகம் உண்டாகின்றது, கண் உருகாநின்ற - கண்களில் ஆநந்தபாஷ்பங்கள் ஒழுகாநின்றன, ஆரதுதிப்பதற்கு - விசேஷமாகத்தோத்திரம் பண்ணுவதற்கு, நா - நாவானது, துடிதுடிக்கின்றது - பதைபதைக்கின்றது, (ஆதலால்), நாம் - யாம், விரைந்துபோய் - விரைவாகப்போய், இன்னே - இப்பொழுதே, தேவஆதிதேவனுக்கு - தேவர்யாவர்க்கும் முதற்றேவனாகிய ஸ்ரீகண்ணபிரானுக்கு, இ - இந்த, தவன் - தவத்தையுடையவனாகிய குசேலனது, வரவை - வருகையை, விண்ணப்பம் செய்யவேண்டும் - வணக்கத்தோடு சொல்லவேண்டும். எ - று.

(பொ - ரை.) மிகுவியப்பு, இந்த வேதியனைப்பார்க்குந்தோறும் (எமக்கு) மனத்தில் சந்தோஷமுண்டாகாநின்றது, நீங்காமல் உடம்பில்புளகமுண்டாகின்றது, கண்களில் ஆநந்தபாஷ்பங்கள் ஒழுகாநின்றன, விசேஷமாகத்தோத்திரம் பண்ணுவதற்கு நாவானது பதைபதைக்கின்றது, ஆதலால் யாம் விரைவாகப்போய் இப்பொழுதே, தேவர்யாவர்க்கும் முதற்றேவனாகிய ஸ்ரீகண்ணபிரானுக்கு, இந்தத்தவத்தை யுடையவனாகிய குசேலனது வருகையை வணக்கத்தோடு சொல்லல்வேண்டும். எ - று.

(வி - ரை.) ஆவா - வியப்புச்சொல்லடுக்கு, வ்-உடம்படுமெய், தொறு - இடைச்சொல், இது பெயர்ச்சொற்றன்மைப்பட்டமையால் காண் என்னும் வினைத்தொகை அதனைவிசேடித்தது, ஓவாதுஎன்பதற்குப் பகுதிஓ அல்லது ஓவு, புளகம் - வடசொல், (மயிர்ச்சிலிர்ப்பு), துடிதுடிக்கின்றது - இரட்டைக்கிளவி, தேவாதிதேவன் - தீர்க்கசந்திபெற்ற வடசொற்றொடர், விண்ணப்பம் - விஞ்ஞாபநம்என்னும் வடசொற்றிரிபு, (விநயமொழி). (கருஉ)

கலிவிருத்தம்.

என்றறி யாமையி னிகழ்ந்து கூறிய
வன்றிணி மனத்தினர் வாய டங்கிடக்
கன்றலி லுரைபல கரைந்து மாதவக்
குன்றனன் றிருமுக நோக்கிக் கூறுவார்.

(ப - ரை.) என்று - என்று, அறியாமையின் - அறியாமையால், இகழ்ந்துகூறிய - அவமதித்துப்பேசின, வல்திணிமனத்தினர் - வலியதிண்ணிய மனத்தை யுடையவராகிய அறிவிலிகளது, வாய்அடங்கிட-வாய்கள்அடங்கும்படி, கன்றல் இல் உரை பலகரைந்து-வெறுத்தற் றன்மையில்லாத பலவார்த்தைகளைச்சொல்லி, (அதன்பின்) மாதவக்குன்று அன்னான் - பெரிய தவமலையை நிகர்த்தவனாகிய குசேலமுனிவனது, திருமுகம்நோக்கி - அழகியமுகத்தைப்பார்த்து, கூறுவார் - (துவாரபாலகர்) சில வார்த்தைகளைச் சொல்லுவாராயினர். எ - று.

(பொ - ரை.) என்று அறியாமையால் அவமதித்துப்பேசின வலியதிண்ணிய மனத்தையுடையவராகிய அறிவிலிகளதுவாய்கள் அடங்கும்படிவெறுத்தற்றன்மையில்லாத பலவார்த்தை களைச்சொல்லி (அதன்பின்) பெரியதவமலையை நிகர்த்தவனாகிய குசேலமுனிவனது அழகியமுகத்தைப்பார்த்து (துவாரபாலகர்) சில வார்த்தைகளைச் சொல்லுவாராயினர். எ - று.

(வி - ரை.) அறியாமையின் என்பதில் இன்என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது, வல்திணி - ஒருபொருட் பன்மொழியாகக்கொண்டு மிகவுங்கடினமான என்றுரைப்பினுமாம், வன்றிணிமனம் - சிறிதும் இரக்கமில்லாதமனம். கூறியமனத்தினர் எனவியையும், மனத்தினர் வாய் - ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர், கன்றல் - வெறுத்தல், கன்றுபகுதி, கன்றலில் உரையென்றமையால் இன்சொல் என்றதாயிற்று, கரைதல் - சொல்லுதல், 'மாதவக்குன்றனான்' என்றார் சலித்தலற்றிருக்கையால். வாயடங்கிட-வாய்பேசாதிருக்க, அடங்கிடக்கரைந்து எனவியையும்.

மறையெலா முணர்ந்துமெய் வாய்ந்து வெம்பவச்
சிறையெலாங் கடந்தமாச் செல்வ வேதிய
தறையெலாம் புகழுநின் வருகைத் தன்மையாற்
குறையெலாந் தவிர்ந்தனங் கூர்ந்த னங்களி.

(ப - ரை.) மறைஎல்லாம் உணர்ந்து - வேதங்களெல்லாவற்றையும் அறிந்து, மெய்வாய்ந்து - உண்மைநிலையையடைந்து, வெம் - கொடுமையாகிய, பவச்சிறையெல்லாம் கடந்த - பிறவித்துன்பமென்ற சிறைமுழுதும் தாண்டின, மாசெல்வம் - (ஞானமாகிய) பெருஞ்செல்வத்தையுடைய, வேதிய - மறையவனே, தறைஎல்லாம் புகழும் - உலகமுழுதும் புகழ்கின்ற, நின்வருகைத்தன்மையால் - உன் வரவின் தன்மையால், குறை எல்லாம்

தவிர்ந்தனம் - (எமது) குறைகளெல்லாம் நீங்கினோம், களிகூர்ந்தனம் - களிப்புமிகுந்தோம். எ - று.

(பொ - ரை.) வேதங்களெல்லாவற்றையும் அறிந்து உண்மை நிலையையடைந்து கொடுமையாகிய பிறவித்துன்பமென்கிற சிறைமுழுதும் தாண்டின (ஞானமாகிய) பெருஞ்செல்வத்தையுடைய மறையவனே, உலகமுழுதும் புகழ்கின்ற உன்வரவின் தன்மையால் எமது குறைகளெல்லாம் நீங்கினோம், களிப்பு மிகுந்தோம். எ - று.

(வி - ரை.) மெய் - உண்மை, அது தத்துவஞானத்தைக் குறித்தது, தத்துவஞானம் - மெய்யுணர்வு, பவம் - பிறப்பு, (வடசொல்,) பிறவித்துன்பங்கள் உயிர்களின் முத்திநெறிக்குத் தடைகளாயிருத்தலால், 'பிறவிச்சிறை' என்றார், சிறை - காவல், "அருஞ்சிறப்பமைவருந்துறவுமவ்வழித், தெரிஞ்சுறவென மிகுந்தெளிவுமாய்வரும், பெருஞ்சிற குளவெனிற் பிறவியென்னுமிவ், விருஞ்சிறை கடத்திலினியதியாவதே" என்று கம்பராமாயணத்திலும் பிறவியைச்சிறையாகவும் தத்துவஞானத்தையும் துறவையும் அதனைக்கடத்தும் உபாயங்களாகவும் கூறுதல் காண்க, "அறிவுடையாரெல்லா முடையாரறிவிலார், என்னுடையரேனுமிலர்" ஆதலால் குசேலமுனிவர் மாச்செல்வவேதியராயினர், வேதியன் - வேதங்களை ஓதவும் ஓதுவிக்கவும் உரியவன், தரைதரா என்னும் வடசொற்றிரிபு, இது எதுகையின்ப நோக்கித் தறையென்றாயிற்று. குறையெலாம் - துன்பமுழுதும், இதுகூர்ந்தனங் களி, என்றதனாற்போந்தபொருள். (கசுச)

ஆய்ந்தநின் பெருங்கலை யருமைப் பாடுஞ்சீர்
வாய்ந்தமா தவம்வளர் மறுத செல்வமுந்
தோய்ந்தருட் டூய்மையுந் துகளி றன்மையும்
பாய்ந்தமா லுலகமோ பகுத்த றிந்திடும்.

(ப - ரை.) ஆய்ந்த - ஆராயப்பட்ட, நின் - உனது, பெருங்கலை - பெருநூல்களின், அருமைப்பாடும் - அருமைத்தன்மையையும், சீர்வாய்ந்த - சிறப்புப்பொருந்திய, மாதவம் - பெருந்தவமாகிய, வளர்மறுத செல்வமும் - மேன்மேல்விருத்தி நீங்காத செல்வத்தையும், தோய்ந்த - பொருந்திய, உள் தூய்மையும் - மனத்தூய்மையையும், துகள் இல் தன்மையும் - குற்றமற்ற இயல்பையும், மால்பாய்ந்த உலகமோ - மயக்கம்நிறைந்த வுலகமோ, பகுத்து அறிந்திடும் - பகுத்தறியும். எ - று.

(பொ - ரை.) ஆராயப்பட்ட உனது பெருநூல்களின் அருமைத்தன்மையையும், சிறப்புப்பொருந்திய பெருந்தவமாகிய மேன்மேல்விருத்தி நீங்காத செல்வத்தையும், பொருந்திய மனத்தூய்மையையும், குற்றமற்ற இயல்பையும், மயக்கம்நிறைந்த வுலகமோ பகுத்தறியும். எ - று.

(வி - ரை.) ஆய்ந்தநின் பெருங்கலையருமைப்பாடு என்றது உன்னைப் போலப் பெரிய சாத்திரங்களையெல்லாம் ஆராய்ந்து வல்லவர் உலகத்தில்

வேறுகிடைத்த லின்மையென்றபடி. பாடு - பெருமையெனினுமாம். 'வேண்டிய வேண்டியாங்கெய்து வித்தலால், 'சீர்வாய்ந்தமாதவம்' என்ருர். தவச் செல்வத்திற்குமருத என்னும் அடைகொடுத்தது அறிஞரால் வெறுக்கப் படுவதும் நிலையில்லதும் பலவகைத்துன்பங்கட் கேதுவானதுயாகியபொருட் செல்வம்போலாது அறிஞரால் விரும்பப்படுவதும் நிலையுள்ளதும் பேரின்பத் துக் கேதுவாவது மாதலாலெனன்க. தவத்தைச் செல்வமாக வுருவகப்படுத் தினது அதனது ஏற்றத்தை விளக்குதற்கு, இவ்வேதுவானே முனிவரைத்த போதநர் என்று வழங்குவர். உட்டுய்மை - மனோநைர்மல்யம். ஒன்றை வேறொன்ருயறியும் விபரீதஞானமுள்ள வுலகம் என்றற்கு, 'பாய்ந்தமாலுலகம்' என்ருர். 'உலகமோ பகுத்தறிந்திடும்' என்பதில் ஒகாரம் பகுத் தறியாதென்னும் பொருள்தருதலால் எதிர்மறை. உலகம் என்றது உலகத் துள்ள மக்கட்டொகுதியையாதலால் இடவாகுபெயர். (கூரு)

சிறியவர் மடமையிற் செறித்த வார்த்தையைக்
குறிபெற நின்றிரு வுளத்துக் கொண்டிடே
லறிதரு முளத்திடைக் கொள்ளி லம்மவோ
மறிவரும் பீழைநோய்க் கடற்கண் மாய்வரே.

(ப - ரை.) சிறியவர் - அற்பஅறிவினர்களாகிய இவர்கள், மடமையின் - அறியாமையால், செறித்த - மிகுதியாகப்பேசின, வார்த்தையை - பழிமொழிகளை, குறிபெற - ஞாபகமாக, நின்திருவுளத்தில் கொண்டிடேல் - உன் திருவுளத்திற் கொள்ளாதே, அறிதரும்உளத்து இடை -(எல்லாவற்றையும்) அறிந்தநின்திருவுளத்தில், கொள்ளில் - நீ கொண்டனையாயின், அம்மவோ - அந்தோ, (இவர்கள்) மறிவுஅரு - மீளுதலில்லாத, பீழைநோய் - வருத்தத் தைச்செய்கிற துன்பங்களாகிய, கடல்கண் - கடலில்வீழ்ந்து, மாய்வர் - அழிவார்கள். எ - று.

(பொ - ரை.) அற்ப அறிவினர்களாகிய இவர்கள் அறியாமையால் மிகு தியாகப்பேசின பழிமொழிகளை ஞாபகமாக உன் திருவுளத்திற் கொள்ளா தே, (எல்லாவற்றையும்) நின்திருவுளத்தில் நீகொண்டனையாயின், அந்தோ, (இவர்கள்) மீளுதலில்லாத வருத்தத்தைச் செய்கிற துன்பங்களாகிய கட லில்வீழ்ந்து அழிவார்கள். எ - று.

(வி - ரை.) நீகோபித்துச் சபித்தல்முதலிய தொழில்களைச் செய்யா தொழியினும் இவர்கள் மிகுதியாகப்பேசின பழிமொழிகளை நீ மனத்திஞல் நினைத்தளவில் இவர்கட்குப் பல பெருந்தீமைகள் உளவாமாதலால் அவற்றை முழுதும் மறந்தொழியவேண்டும் என்பதாம். "நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல, தன்றேமறப்பது நன்று" என்பதனுலும், "தம்மை யிகழ்ந்தமை தாம் பொறுப்பதன்றிமற், றெம்மையிகழ்ந்த வினைப்பயத்தால், உம்மை, எரிவாய் நிரயத்து வீழ்வர்கொலென்று, பரிவதூஉஞ்சான்ருேர் கடன்" என் பதனுலும், அவர்கள் துன்பத்துக்கு நீ யேதுவாகா திருத்தல் வேண்டும் என்

பதுமாம். செறிவு - மிகுதி. செறித்த - செறிந்த என்பதன் பிறவினை. செறி - தன்வினை பிறவினைகட்குப் பொதுவாகியபகுதி. குறி - ஞாபகம். அம்மவோ - இரக்கப்பொருளில் வருவதோரிடைச்சொல். அம்மஓ என்றிரண்டாகப் பிரித்து இரண்டும் இரக்கவிடைச் சொற்களெனினுமாம். பீழை - பீடா என்னும் வடசொற்றிரிபு. அச்சமும் கடத்தற்கருமையும் நோக்கி, நோயைக் கடலாகவுருவகித்தார். கடற்கண் என்பதில் கண் ஏழனுருபு. மறிவு - மறிதல், தொழிற்பெயர், மீளுதல் என்பதுபொருள். (கசுசு)

கங்கையே முதனதி களிப்பி னாடியும்
பொங்குமா தானங்கள் புரிந்து மிட்டிக
ளிங்குபற் பலசெய்து மெய்தும் பேறெலாந்
துங்கநின் றரிசன மொன்றிற் றோன்றுமே.

(ப - ரை.) இங்கு - இவ்வுலகத்தில், கங்கையேமுதல்நதி - கங்கை முதலாகிய புண்யநதிகளில், களிப்பின் ஆடியும் - மகிழ்வோடு மூழ்கியும், பொங்கும் - (பயன்தருதலிற்) சிறந்த, மாதானங்கள் புரிந்தும் - பெரியதானங்களைச்செய்தும், பல்பல இட்டிகள் செய்தும் - பற்பல யாகங்கள் செய்தும், எய்தும் - அடைகிற, பேறுஎல்லாம் - பேறுகள்யாவும், துங்கம் - சிறந்த, நின்தரிசநம் ஒன்றின் - உன்தரிசநம் ஒன்றினாலேயே, தோன்றும் - உண்டாகும். எ - று.

(பொ - ரை.) இவ்வுலகத்தில் கங்கைமுதலாகிய புண்யநதிகளில் மகிழ்வோடு மூழ்கியும், (பயன்தருதலிற்) சிறந்த பெரியதாநங்களைச்செய்தும் பற்பலயாகங்களைச் செய்தும் அடைகிறபேறுகள்யாவும் சிறந்த உன் தரிசநம் ஒன்றினாலேயே உண்டாகும். எ - று.

(வி - ரை.) ஈடுமெடுப்புமில் வீசனாகிய திருமாலின் திருவடியினின்று தோன்றித் தேவரைத் தூயராக்கிச்சகரபுத்திரரைப் புனிதராகச்செய்து உய்வித்த சிறப்புநோக்கிக், 'கங்கையேமுதனதி' எனக்கங்கையை முதற்கண் வைத்தார். ஏ - உயர்வு சிறப்பு. நதி - நதீ என்னும் வடசொற்குறுக்கம், தாநம் - சற்பாத்திரத்திற் கொடுத்தல், அதாவது தக்கார்க்குக் கொடுத்தல், அவ்வாறுகொடுத்த லின்பயன் மிகப்பெருகுமாதலால் அதனை,'பொங்குமாதாநம்' என அடைகொடுத்தோதினர். மாதாநம் என்றது கோதாநபூதாநாதிகளை. "உதவிவரைத்தன்றுதவியுதவி, செயப்பட்டார் சால்பின்வரைத்து" 'அறப்பயனும், தான் சிறிதாயினுந் தக்கார்கைப்பட்டக்கால்,வான்சிறிதாப்போர்த்துவிடும்" "ஞானமுன்னிய நான்மறையாளர்கைத், தானமென்னத் தழைத்தது நீத்தமே" "கள்ளங்கொலேகட் புலேகாமமென்றைந்து மற்றூர்க், குள்ளந்தெளிந்தோர் தருமுத்தமதானமென்னப், பள்ளந்திடர் மால்வரைகானகப்பக்கமெங்கும், வெள்ளம் பெருகிப்பரந்தோடி விரைந்ததன்றே" என்றிவ்வாறு பிறர் கூறுதலுங்காண்க. துங்கஎன்பதனை விளியாக்கிப் பரிசுத்தனேயென்றுரைப்பினுமாம். கங்கா, தாநம்,இஷ்டி, தர்ஸநம் என்னும் வடசொற்

கள் முறையே கங்கை, தானம், இட்டி, தரிசனம் எனத் திரிந்துவந்தன. பெறு - பெறப்படுவது, செயப்படுபொருள் விகுதி புணர்ந்து கெட்டு முதல் நீண்டபெயர். தரிசனம்-தரிசித்தல். இது வடமொழித்தொழிற்பெயர். (கஙஎ)

காலமூன் றையுமறி கருத்தபோற்றிநற்
சீலமார் தருமறைச் செல்வ போற்றிமெய்
வாலறி வுடையவ வரத போற்றியெம்
பாலருள் சுரந்தருள் பனவ போற்றியே.

(ப - ரை.) காலம்மூன்றையும் அறிகருத்தபோற்றி - முக்காலங்களையும் அறிகின்ற கர்த்தனே நமஸ்காரம், நல்சீலம்ஆர்தரு - நல்லொழுக்கம் நிறைந்த, மறைச்செல்வ - வேதச்செல்வனே, போற்றி - நமஸ்காரம், மெய் - உண்மையாகிய, வால் அறிவுஉடையவ - பரிசுத்தஞானத்தை யுடையவனே, வரத - வரதனே, போற்றி - நமஸ்காரம், எம்பால் - எம்மீது, அருள்சுரந்தருள் - அருள்சுரந்தருள்கின்ற, பனவ - வேதியனே, போற்றி - நமஸ்காரம்.

(பொ - ரை.) முக்காலங்களையும் அறிகின்ற கர்த்தனே நமஸ்காரம், நல்லொழுக்கம் நிறைந்தவேதச் செல்வனே நமஸ்காரம், உண்மையாகிய பரிசுத்த ஞானத்தையுடையவனே, வரதனே நமஸ்காரம், எம்மீது அருள்சுரந்தருள்கின்ற வேதியனே நமஸ்காரம். எ - று.

(வி - ரை.) காலமூன்றையும் என்றது இறப்பு எதிர்வு நிகழ்வு என்னும் முக்காலங்களை, இவற்றை பூதபவிஷயத்வர்த்தமான காலம் என்பர் வடநூலார். கருத்தஎன்பதற்கு அறிவுடையானே என்றுரைப்பினுமாம். மறைச்செல்வம் - வேதச்செல்வம். வாலறிவு - மெய்யுணர்வு. வரதன் - வரமருளத்தகுந்தவன். பனவன் - பிராமணன், "பனவரெண்ணிலர்க்குமுன் படைத்தார்" என்றார் பிறரும். ஆர்தரு ஒருசொல், பகுதி ஆர்தா. (கஙஅ)

சற்றுநீ யிவ்விட மிருக்கிற் சார்ந்தியாங்
கொற்றமார் கண்ணற்குன் வரவு கூறுபு
முற்றுவ மென்றவன் முன்வ ணங்குபு
பொற்றவவ் விடனின்றும் போயி னாரரோ.

(ப - ரை.) நீ - நீ, சற்று - சிறிதுநேரம், இ இடம் இருக்கின் - இவ்விடத்தில் உட்கார்ந்திருந்தால், யாம்-நாங்கள், சார்ந்து-சென்று, கொற்றம் ஆர் கண்ணற்கு-வெற்றிமிகுந்த ஸ்ரீகண்ணபிரானுக்கு, உன்வரவு கூறுபு - உன் வருகையைச் சொல்லி, முற்றுவம்-இங்குவருவோம், என்று-என்றுசொல்லி, அவன் முன் வணங்குபு - அவனுக்கெதிரே நின்று நமஸ்கரித்து, பொற்ற - விரைவாக, அ இடன் நின்றும் - அவ்விடத்தினின்றும், போயினார்-(உள்ளே) சென்றார்கள், (துவாரபாலகர்கள்). எ - று.

(பொ - ரை.) நீ சிறிதுநேரம் இவ்விடத்தில் உட்கார்ந்திருந்தால்நாங்கள்சென்று வெற்றிமிகுந்த ஸ்ரீகண்ணபிரானுக்கு உன் வருகையைச்சொல்லி

இங்குவருவோம் என்றுசொல்லி அவனுக்கெதிரேநின்று நமஸ்கரித்து விரை வாக அவ்விடத்தினின்றும் உள்ளே சென்றார்கள். எ - று.

(வி - ரை.) அரோ - ஈற்றசை, கூறுபு, வணங்குபு - புவ்விகுதி கா லங்காட்டும் செய்புஎன்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சங்கள். முற்று தல் - முற்படுதல். முற்றுவம் என்பதற்கு உன்கருத்தை முடிப்போம் என்று ரைப்பினுமாம். பொற்ற - பொன்என்னும் பெயர்ப்பகுதியடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சமாகக்கொண்டு, பொலிவுள்ள என்றுரைத்தலுமாம். இடன் - இறுதிப்போலி. உம் - இசைநிறை. சற்று இருக்கின்என வியையும். கூறுபு முற்றுவம் வணங்குபு போயினர் என்றியைத்துரைத்துக்கொள்க. அவ்விடனின்றும் போயினார் என்றது அந்த வாயிலினின்றும் அரண்மனையி னுள்ளே சென்றனர் என்றபடி. (கநக)

கலிநிலைத்துறை.

திரண்ட மாமணி குயிற்றுபு செம்பொன்செ யெழுபத்
திரண்டு வாயிலும் விரைவினிற் கடந்தன ரிலங்கி
முரண்ட வாமுடி மன்னவர் மொய்த்திடுஞ் செல்வ
வரண்ட வாத்திரு வோலக்க மடைந்தனர் காணார்.

(ப - ரை.) திரண்ட - கூட்டமாகத் திரண்டிருக்கிற, மாமணி-பெரிய இரத்தினங்களை, குயிற்றுபு - இழைத்து, செம்பொன்செய் - செம்பொன்னி னாற்செய்யப்பட்ட, எழுபத்திரண்டு வாயிலும் - எழுபத்திரண்டு வாசல்களை யும், விரைவினில் கடந்தனர் - விரைவாகக்கடந்துபோய், முரண்தவா - வலியழியாத, முடிமன்னவர் - முடிவேந்தர்கள், இலங்கி - விளங்கி, மொய்த் திடும் - நெருங்கியிருக்கிற, செல்வம் - சிறப்பையுடைய, அரண்தவா-காவல் நீங்காத, திரு - மேன்மையாகிய, ஓலக்கம் - கொலுமண்டபத்தை, அடைந் தனர் - சேர்ந்து, காணார் - (அங்கே ஸ்ரீகண்ணபிரானை) காணாதவர்களாய்.

(பொ - ரை.) கூட்டமாகத்திரண்டிருக்கிற பெரிய இரத்தினங்களை யிழைத்துச் செம்பொன்னினாற் செய்யப்பட்ட எழுபத்திரண்டு வாசல்களை யும் விரைவாகக்கடந்துபோய், வலியழியாத முடிவேந்தர்கள் விளங்கி நெ ருங்கியிருக்கிற சிறப்பையுடைய காவல்நீங்காத மேன்மையாகிய கொலுமண் டபத்தைச்சேர்ந்து (அங்கே ஸ்ரீகண்ணபிரானை) காணாதவர்களாய். எ - று.

(வி - ரை.) திரண்டஎன்பதற்குப் பகுதிதிரள். மாமணி - விலையுயர்ந்த சிறந்த சாதியிரத்தினங்கள். அவை மாணிக்கம்வயிரம் முதலியன. குயிற்று - குயில்என்பதன் பிறவினை. குயில் - தன்வினை. குயிலல்-பதிதல், குயிற்றல் - பதித்தல். எழுபது பண்புத்தொகை. எழுபத்திரண்டு - உம்மைத்தொகை. இலங்கி மொய்த்திடும் எனவியையும். தவாஎன்ற ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தில் தபுஎன்பதன் மரூஉவாகிய தவுபகுதி, இச்செய்யுட்கு துவாரபாலகர் என்பது தோன்றாஎழுவாய். கடந்தனர், அடைந்தனர் என் பன முற்றெச்சங்கள். காணார்என்னும் முற்றெச்சம் வருஞ்செய்யுளிலுள்ள வினவினர் என்பதைக்கொண்டு முடியும். (கசo)

அந்தி டத்தமர் வாரைநம் மரசமர் கின்ற
தெந்தி டத்தென வினவின ரிலங்கெழி றருபொற்
பந்த டுத்தகை யாரொடும் பயின்மணிச் சிகரத்
திந்த டுத்தபே ருவளகத் தெனவவ ரிறுத்தார்.

(ப - ரை.) அந்த இடத்து அமர்வாரை - அவ்விடத்து இருப்பவர்களை, (நோக்கித் துவாரபாலகர்கள்) நம் அரசு - நமது வேந்தனாகிய ஸ்ரீ கண்ணபிரான், அமர்கின்றது - எழுந்தருளியிருப்பது, எந்த இடத்து என - எந்த இடத்தில் என்று, வினவினர் - கேட்டார்கள், (அதற்கு) அவர் - அங்குள்ளவர்கள், இலங்கு - விளங்குகிற, எழில்தரு - எழுச்சியையுடைய, பொன் - அழகிய, பந்து அடுத்த - பந்துபொருந்திய, கையாரொடும் - கைகளையுடைய தேவியருடனே, பயில் - நிறைந்த, மணி-இரத்தினங்களையுடைய, சிகரத்து - மேலிடத்தில், இந்து அடுத்த - சந்திரன் தவழப்பெற்ற, பேர்உவளகத்து - பெரிதாகிய அந்தப்புரத்தில், (இருக்கிறான்) என - என்று, இறுத்தார் - விடைகூறினார்கள். எ - று.

(பொ-ரை.) அவ்விடத்து இருப்பவர்களை (நோக்கித் துவாரபாலகர்கள்) நமது வேந்தனாகிய ஸ்ரீகண்ணபிரான் எழுந்தருளியிருப்பது எந்த இடத்தில் என்று கேட்டார்கள் (அதற்கு) அங்குள்ளவர்கள் விளங்குகிற எழுச்சியையுடைய அழகிய பந்து பொருந்திய கைகளையுடைய தேவியருடனே நிறைந்த இரத்தினங்களையுடைய மேலிடத்தில் சந்திரன் தவழப்பெற்ற பெரிதாகிய அந்தப்புரத்தில் (இருக்கிறான்) என்று விடை கூறினார்கள். எ - று.

(வி - ரை.) வினவினர் என்பதை முற்றெச்சமாகக் கொண்டு இவர் வினவ அவர் இறுத்தார் என்று ஏகவாக்கியமாக்கியுரைத்தல் தகுதியாம், அந்திடம், எந்திடம், என்பவற்றுள் நிலைமொழியீற்றகரங்கள் தொகுத்தல், எழில்தரு என்ற அடைமொழி பந்தினது இயல்பை விளக்கும். எழில் - எழுச்சி, இது தொழிற்பெயர். எழு - பகுதி. இல் - விகுதி, எழில்தரு என்பதற்குப்பகுதி எழில்தா. "நுண்மாணுழை புலமில்லானெழினலம், மண்மாண் புனை பாவையற்று" என்னுந்திருக்குறளிலும் எழில் எழுச்சியெனப்பொருள்படுதல் காண்க. பந்தடுத்தகையாரென்றது - அம்மகளிரது பந்தாடலின் உரிமையைக்குறித்தது, சிகரம் - வடசொல், உச்சி என்பதுபொருள். இந்து என்னும் வடமொழிக்குற்றியலுகரம் உயிர்வர உடம்படுமெய்பெறாது சிறுபான்மை கெட்டது. உவளகம் - அந்தப்புரம் என்பதை "உவளகம் மதிலோர் பக்கம் ஊருணிபள்ளம் உள்ளில்" என்ற நிகண்டினால் அறிக. உவளகம் - மாதர் உறையிடம். உவளகத்து என்பதன்பின் அமர்கின்றனன் என்னுஞ் சொல் வருவித்துக்கொள்க. 'இந்தடுத்த பேருவளகம்' என்றமையால் அதன் உயர்வு விளங்குகின்றது. (௩௪௧)

கேட்ட காலையின் ஞெரேலெனக் கிளாருவ ளகப்பா
லோட்ட மீதெனப் படர்ந்தன ரொளிர்துதி வடிவேற்

கூட்டம் யாவையுங் குமைத்துமை தோய்ந்துபொற் குழைபாய்
நாட்ட மாதரார் காவல்செய் வாயினண் ணினரால்.

(ப - ரை.) கேட்ட காலையில் - (அங்குள்ளவர்கள் விடைகூற துவார பாலகர்கள்) கேட்டபொழுதில், ஞரேல்என - ஞரேலென்று, கிளர் - விளங்குகின்ற, உவளகப்பால் - அந்தப்புரத்தினிடத்திற்கு, ஈது ஒட்டம் என - இது ஒட்டமேயாம் என்று சொல்லும்படி, படர்ந்தனர் - நடந்தவர்களாய், ஒளிர் - பிரகாசிக்கிற, நுதி - நுனியையுடைய, வடிவேல் கூட்டம் யாவையும் - வடித்தவேலாயுதத்தின் தொகுதியை எல்லாம், குமைத்து - அழித்து, மைதோய்ந்து - அஞ்சனம் எழுதப்பெற்று, பொன் குழைபாய் - பொன்னிறுற் செய்யப்பட்ட காதணியின்மேல் பாய்கின்ற, நாட்டம் - கண்களையுடைய, மாதரார் - மாதர்கள், காவல்செய் - காவல் செய்கின்ற, வாயில் - வாசலை, நண்ணினர் - அடைந்தார்கள். எ - று.

(பொ - ரை.) (அங்குள்ளவர்கள் விடைகூற துவாரபாலகர்கள்) கேட்டபொழுதில் ஞரேலென்று விளங்குகின்ற அந்தப்புரத்தினிடத்திற்கு இது ஒட்டமேயாமென்று சொல்லும்படி நடந்தவர்களாய்! பிரகாசிக்கிற நுனியையுடைய வடித்த வேலாயுதத்தின் தொகுதியை எல்லாம் அழித்து அஞ்சனம் எழுதப்பெற்றுப்பொன்னிறுற் செய்யப்பட்ட காதணியின் மேல் பாய்கின்ற கண்களையுடைய மாதர்கள் காவல் செய்கின்றவாசலை அடைந்தார்கள். எ - று.

(வி - ரை.) ஆல் - அசை. ஞரேலென - விரைவுக்குறிப்பிடைச்சொல், கிளர் உவளகம் - வினைத்தொகை நிலைத்தொடர், படர்ந்தனர் - முற்றெச்சம், ஒளிர்நுதி, வடிவேல், என்பனவும் வினைத்தொகை நிலைத்தொடர்கள். குமைத்து என்றது - பொடியாக்கி என்றபடி, குமைத்து தோய்ந்து பாய்நாட்டம் என்றியையும் - காவல்செய் என்பதனை ஒருசொல்லாக்கிக் காக்கின்ற என்றுரைப்பினுமாம். உவளகப்பால் என்றதில் பால்ஏழனுருபு, ஒளிர்நுதி வடிவேற்கூட்டம் யாவையும் குமைத்து என்றதனுல் - கண்களின் கூர்மை கொலைத்தொழில் என்பவற்றின் மிகுதியும், மைதோய்ந்து என்றதனுல் - கருமை மிகுதியும், பொற்குழைபாய் என்றதனுல் - காதளவோடுகின்றமையும் பெறப்படும். (கசஉ)

நெடிய நீர்மையித் துவாரபா லகர்செய னிற்க
படியி லாவளம் பரந்தவவ் வுவளகப் பண்பை
முடிய யாவரே யெடுத்துரைப் பவர்நகை முளைத்துத்
துடிது டித்துநா வெழுதலிற் சிறிதுசொற் றிடுவாம்.

(ப - ரை.) நெடியநீர்மை - சிறந்த குணத்தையுடைய, இ - இந்த, துவாரபாலகர் - வாயிற்காவலாளரது, செயல் - செய்கை, நிற்க - (இவ்வாறு) நிற்கட்டும், படி இல்லா - ஒப்பில்லாத, வளம்பரந்த - மாட்சிமைமிகுந்த, அ - அந்த, உவளகம் - அந்தப்புரத்தின், பண்பை - தன்மையை, முடியஎடுத்து

உரைப்பவர் - முழுதும் எடுத்துச்சொல்ல வல்லார், யாவர் - எவர், (ஒருவரு மில்லை ஆயினும்) நசைமுளைத்து - (அதைவருணிக்க வேண்டுமென்ற) ஆசைதோன்றி, (அதனால்) நா-எம்நாவானது, துடிதுடித்து எழுதலின்-பதை பதைத்து எழுதலால், சிறிதுசொற்றிடுவோம் - கொஞ்சம் சொல்லுவோம்.

(பொ - ரை.) சிறந்த குணத்தையுடைய இந்தவாயிற் காவலாளரது செய்கை (இவ்வாறு) நிற்கட்டும், ஒப்பில்லாத மாட்சிமைமிகுந்த அந்த அந்தப்புரத்தின் தன்மையை முழுதும் எடுத்துச் சொல்லவல்லார் எவர் (ஒருவரு மில்லைஆயினும்) அதைவருணிக்க வேண்டுமென்ற) ஆசைதோன்றி (அதனால்) எம் நாவானது பதைபதைத்து எழுதலால் கொஞ்சம் சொல்லுவோம்.

(வி - ரை.) நிற்க - வியங்கோள். படிஇல்லா என்பதற்கு - நிலவுலகத்தில் வேறெங்குமில்லாத என்றுரைப்பினுமாம். முளைத்து - முளைக்க என்னும் எச்சத்திரிபு. "ஆசைவெட்கமறியாது" என்னும் பழமொழிக்கிணங்க, முடியச்சொல்லுதற் கரியதையும்,இயன்ற அளவு சொல்லுகிறோம் என்றற்கு 'முடியயாவரேயெடுத்துரைப்பவர் நசைமுளைத்துத், துடிதுடித்து நாவெழுதலிற் சிறிது சொற்றிடுவோம், என்றார். "ஆசைபற்றி யறையலுற்றேன்" என மஹாகவியும், "என்செய்கோவிதனைச் சொல்லுகேனெனுமாசை யென்னுளத்தினைத் தூண்டும்" எனப்பரஞ்சோதி முனிவரும் கூறுதல் காண்க. சொற்றிடுவோம் - தனித்தன்மைப்பன்மை. இவ்வாறு கூறுதல் கவிகளுக்கு இயல்பு. இதில் இடு துணைவினை. படி - ஒப்பு, பூமி. பண்பை என்றது அலங்காரத்தை என்றபடி. யாவரே என்றதில் ஏகாரம் எதிர்மறை. துடிதுடித்து என்பதற்கு - மிகவிரைந்து எனப்பொருள் கூறினும் பொருந்தும். எழுதலின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப் பொருளில் வந்தது. (கச௩)

பொன்னி னாற்செய்து மணிகள்கால் யாத்தவண் புரிசை
மின்னி னாற்பொலி யப்படு முகில்விராய்த் துயில்வ
வுன்னி னாற்கட லுலகுசொல் கண்ணனொண் ணிறத்தை
மன்னி னாற்பெற லாமென மதித்தன போலும்.

(ப - ரை.) பொன்னினால்செய்து - பொன்னினால் செய்யப்பட்டு, மணிகள் - இரத்தினங்களை, கால்யாத்த - அடியிற்கொட்டப்பட்ட, வள் புரிசை - வளவியமதில்களின்மீது, மின்னினாற்பொலியப்படும் - மின்னல்களால் பொலிவடையப்பெற்ற, முகில் - மேகங்கள், விராய் - வந்துகூடி, துயில்வ - தூங்குவனவற்றை, உன்னினால் - நினைத்தால், கடல்உலகு-கடல் சூழ்ந்த உலகத்தாரால், சொல் - புகழ்ந்து சொல்லப்பட்ட, கண்ணன் - ஸ்ரீகண்ணபிரானது, ஒள் நிறத்தை - அழகிய நிறத்தினை, மன்னினால்-(யாம் மதிலின்மீது) பொருந்துவோமாயின், பெறல்ஆம் என - பெறுதல் கூடும் என்று, மதித்தனபோலும் - நினைத்தனபோலும்.

(பொ - ரை.) பொன்னினாற் செய்யப்பட்டு இரத்தினங்களை அடியிற் கொட்டப்பட்ட வளலிய மதில்களின்மீது மின்னல்களால் பொலிவடையப் பெற்ற மேகங்கள் வந்து கூடித் தூங்குவனவற்றை நினைத்தால், கடல்சூழ்ந்த உலகத்தாரால் புகழ்ந்து சொல்லப்பட்ட ஸ்ரீ கண்ணபிரானது அழகிய நிறத்தினை யாம் மதிலின்மீது பொருந்துவோமாயின் பெறுதல் கூடும் என்று நினைத்தனபோலும். எ - று.

(வி - ரை.) பொன்னினால் செய்து என்பதில் ஆல் - மூன்றுவதன் கருவிப்பொருளது. செய்து என்னும் செய்வினை செயப்பாட்டு வினையாய் செய்யப்பட்டு என்னும் பொருளில் வந்தது. கால் - அடி, போலும் - ஒப்பில் போலி. மதில்களின்மேல் மேகங்கள் வந்து திரண்டு தங்கி இருத்தலை நோக்குமிடத்து மதிலின்மீது யாம் தங்கி இருப்போமாயின் இவ்வரண்மனையிலுள்ள ஸ்ரீ கண்ணபிரானது திருநிறத்தை யாமும் பெறுதல் கூடும் என மதித்து வந்து தங்கி இருப்பனவற்றை நிகர்க்கும் என்பது கருத்து. கால்யாத்தல் - அடிப்படையிற் கொட்டுதல். (கசஅ)

மண்ணா கந்தவப் பதிதர நீலமால் வரைசாய்த்
தெண்ணா கந்தபக் கொணர்ந்தகல் லடுக்கிமே லெழுப்பிக்
கண்ணா கங்கவர் வேதிசெய் திருபுறங் கதிர்ப்பப்
பண்ணா கம்பொலி வயிரயா ளிப்படி யமைத்து.

(ப - ரை.) மண் அகம் தவபதி தர - மண்ணிடமானது மிகவும் பதியும்படி, மால் நீலவரை சாய்த்து - பெரிய நீலமலையை வெட்டி, எண் அகம் தப - எண்ணுகின்ற மனமும் தளரும்படி, கொணர்ந்த - கொண்டுவந்த, கல் அடுக்கி - கற்களை யடுக்கி, மேல் எழுப்பி - மேலெழும்படிசெய்து, கண் அகம் கவர் - கண்ணினிடத்தைக் கவர்தற்குரிய, வேதி செய்து - வேதிகை செய்து, இருபுறம் கதிர்ப்ப - இரண்டு பக்கத்திலும் ஒளிசெய்யும்படி, பண் அகம் பொலி - அலங்கரிக்கப்பட்ட இடம் விளங்குகின்ற, வயிரம் - வயிரக் கற்களால், யாளிப்படி அமைத்து - யாளிகளால் தாங்கப்படுகிற படிகளை யமைத்து. எ - று.

(பொ - ரை.) மண்ணிடமானது மிகவும் பதியும்படி பெரிய நீலமலையை வெட்டி எண்ணுகின்ற மனமும் தளரும்படி கொண்டுவந்த கற்களை யடுக்கி மேலெழும்படி செய்து கண்ணினிடத்தைக் கவர்தற்குரிய வேதிகை செய்து, இரண்டு பக்கத்திலும் ஒளிசெய்யும்படி அலங்கரிக்கப்பட்ட இடம் விளங்குகின்ற வயிரக்கற்களால் யாளிகளால் தாங்கப்படுகிற படிகளை யமைத்து. எ - று.

(வி - ரை.) மண்ணகம் என்பதை ஒருசொல்லாகக்கொண்டு நிலம் எனப் பொருளுரைத்தலுமாம். பதிதர என்பதற்குப் பகுதி பதிதா. நீலமால் வரை - இந்திரநீலபருவதம். சாய்த்தல் - இவ்விடத்து வெட்டுதற்பொருளது. எண்ணகம் - எண்ணம் எனினுமமையும். கொணர்ந்த என்பதர்குப் பகுதி.

கொளு. கண்ணகம் - கண் என்றலுமாம். வேதி - திண்ணை, மேடை. பண்ணல் - அலங்கரித்தல். யாளி - சிங்கம். யாளி - யானை யெனினுமாம். படி - சோபாநம். (கசரு)

இலங்கு வெண்பொனிட் டிகைகளாற் சுவர்த்தல மெழுப்பி
நலங்கொள் பன்மணி பதித்தபொன் னிலைகளு நாட்டித்
துலங்கு மாமர கதப்பல சாளரந் தொகுத்து
வலங்கொள் வச்சிர விருநிலைக் கதவமும் வயக்கி.

(ப - ரை.) இலங்கு - விளங்குகிற, வெள்பொன் - வெள்ளியினாற் செய்யப்பட்ட, இட்டிகைகளால் - கற்களால், சுவர் தலம் எழுப்பி - சுவர்கள் எழுப்பி, நலம் கொள் - அழகைக்கொண்ட, பல் மணி பதித்த - அநேக ரத்நங்களைப்பதித்த, பொன் - பொன்னினாற் செய்யப்பட்ட, நிலைகளும் - கதவு நிலைகளையும், நாட்டி - நிலைபெறுத்தி, துலங்கும் - விளங்குகிற, மா-சிறந்த, மரகதம் - பச்சை யிரத்திநங்களாற் செய்யப்பட்ட, பல சாளரம் - அநேகம் பலகணிகளை, தொகுத்து - ஒழுங்காகவைத்து, வலம்கொள் - வலிமையைக் கொண்ட, வச்சிரம் - வயிரத்தினாற் செய்யப்பட்ட, இருநிலை கதவமும் - இரண்டு வாயிற்கால்களிலும் நாட்டப்படுகிற கதவுகளையும், வயக்கி-விளங்க வைத்து. எ - று.

(பொ - ரை.) விளங்குகிற வெள்ளியினாற் செய்யப்பட்ட கற்களால் சுவர்கள் எழுப்பி, அழகைக்கொண்ட அநேக ரத்நங்களைப்பதித்த பொன்னினாற் செய்யப்பட்ட கதவுநிலைகளையும் நிலைபெறுத்தி, விளங்குகிற சிறந்த பச்சை யிரத்திநங்களாற் செய்யப்பட்ட அநேகம் பலகணிகளை ஒழுங்காக வைத்து, வலிமையைக்கொண்ட வயிரத்தினாற் செய்யப்பட்ட இரண்டு வாயிற் கால்களிலும் நாட்டப்படுகிற கதவுகளையும் விளங்கவைத்து. எ - று.

(வி - ரை.) மணி - நீலமணி யெனினுமாம். பொன் இவ்விடத்து லோஹம் என்னு மாத்திரையாய் நின்றது. இரும்பைக் கரும்பொன் என வழங்குதலுங் காண்க. இஷ்டிகா என்னும் வடசொல் இட்டிகையெனத் திரிந்ததுவந்தது, செங்கல் என்பதுபொருள். இங்குஅவ்வடிவமுள்ளதற்கு வந்தது. மரகதம்வடசொல், இதனெழுத்துநிலைமாறி மரதகம்எனவும்வரும். இவ்வாறுவருவதனை இலக்கணப் போலிஎன்பர், வலம் - பலம்என்னும் வட சொற்றிரிபு. இருநிலைக்கதவம் - இரட்டைக்கதவு. அம்சாரியை.வயங்குதல் - விளங்குதல், வயக்கி - வயங்குவித்து எனப்பிறவினை வினையெச்சம். (கசசு)

நிறையு மேதகத் தாற்பல தூணடி நிலைவைத்
துறையு மேற்பல மணிகடை தூணங்க ளுறுத்தி
யறையு மட்பல தூணொருத் தத்துற வணிந்த
தறையு கழ்ந்திடு செந்துகிர்ப் போதியுஞ் சார்த்தி.

(ப - ரை.) நிறையும் - (நல்லிலக்கணம்) நிரம்பின, மேதகத்தால்-கோமேதகத்தினால், பலதூண்அடி நிலைவைத்து-கம்பம்வைக்கும் இடங்கள் அநே

கமாயமைத்து, மேல் - அவற்றின்மேல், உறையும் - தங்குதற்குரிய, மணிக டை-மாணிக்கத்தால் கடையப்பட்ட, பலதூண்கள்-பலதூண்களை, உறுத்தி-பதியவைத்து, அறையும் - (புகழ்ந்து) சொல்லப்படுகிற, அ - அந்த, பல தூண் - பலதூண்களின், எருத்தத்து - மேலிடத்தில், உற - பொருந்த, அணிந்த - அழகாகிய, தறைபுகழ்ந்திடு - நிலவுலகத்தாரால் புகழப்படுகிற, செம்துகிர் - சிவந்தபவளத்தால் செய்யப்பட்ட, போதியும் - போதிகைக்கட்டைகளையும், சார்த்தி - சேரவைத்து, எ - று.

(பொ ழி.) (நல்லிலக்கணம்) நிரம்பின கோமேதகத்தினல் கம்பம் வைக்கும் இடங்கள் அநேகமாயமைத்து, அவற்றின்மேல் தங்குதற்குரிய மாணிக்கத்தால் கடையப்பட்ட பலதூண்களைப் பதியவைத்து, புகழ்ந்து சொல்லப்படுகிற அந்தப்பலதூண்களின் மேலிடத்தில் பொருந்த அழகாகியநிலவுலகத்தாரால் புகழப்படுகிற, சிவந்தபவளத்தால் செய்யப்பட்ட போதிகைக்கட்டைகளையும் சேரவைத்து, எ - று.

(வி - ரை.) கோமேதகம் என்பது முதற்குறையாய் மேதகம்என்றாயிற்று. இவ்வாறே தாமரையென்பது முதற்குறையாய் மரையெனவருதல் காண்க, தூண் தூணம் என்பன ஸ்தூணஎன்னும் வடசொற்றிரிபுகள். மேல்-மேன்மையான எனப்பொருளுரைத்து மணிக்கு விசேடண மாக்கினுமாம். எருத்து - பிடரி, அத்துசாரியை, இங்கேதலைப் பக்கமென்னும் பொருளில் வந்தது, உறச்சார்த்தி எனவியையும், தராஎன்னும் வடசொல்லாகார வீறு ஐயீறாகி, அதுஎதுகைநோக்கித் தறையெனவந்தது, „அறையுமாடரங்கும் மடப்பிள்ளைகள், தறையிற்கீறிடிற்றச் சருங்காய்களோ„ என்றார் மஹாகவியும். (கசஎ)

அன்ன போதிமேல் வெண்பொனுத் தரமியைத் தடுப்ப
நன்ன ராக்கிய விடங்கமுமுறுத்திமே னயப்பப்
பன்னு பொற்றக டடுக்கிவேய்ந் ததற்குமேற் பரிதி
மன்னு மாமணிக் குடநிறீஇ யமைத்தன மாடம்.

(ப - ரை.) அன்னபோதிமேல் - அந்தப்பவளப் போதிகையின்மேல், வெள்பொன் உத்தரம் இயைத்து-வெள்ளியினலாகிய உத்திரங்களைப் பொருந்தவைத்து, அடுப்ப - (அவற்றைச்) சேர, நன்னர்ஆக்கிய விடங்கமும் உறுத்தி - அழகாகச் செய்யப்பட்ட கொடுங்கைகளையும் அமைத்து, மேல்-அவற்றின்மேல், நயப்ப - (யாவரும்) விரும்பும்படி, பன்னுபொன்தகடு-(புகழ்ந்து) சொல்லப்படுகிற பொற்றகட்டை, அடுக்கிவேய்ந்து - அடுக்கிமூடி, அதற்கு மேல் - அந்தமுகட்டின்மேல், பரிதிமன்னும் - சூரியன்போலப் பிரகாசிக்கிற, மணிகுடம் - பெரியரத்ந கலசங்களை, நிறீஇ - நிறுத்தி, அமைத்தன - (இவ்வாறு) செய்யப்பட்டன, மாடம் - (ஸ்ரீகண்ணபிரானது) அந்தப்புரத்தினிடங்கள். எ - று.

(பொ - ரை.) அந்தப்பவளப்போதிகையின்மேல் வெள்ளியினாலாகிய உத்திரங்களைப்பொருந்த வைத்து, அவற்றைச்சேர அழகாகச்செய்யப்பட்ட கொடுங்கைகளையும் அமைத்து,அவற்றின்மேல் யாவரும் விரும்பும்படி புகழ்ந்து சொல்லப்படுகிற பொற்றகட்டை அடுக்கி மூடி, அந்த முகட்டின்மேல் சூரியன்போலப்பிரகாசிக்கிற பெரியரத்ந கலசங்களை நிறுத்தி, இவ்வாறு செய்யப்பட்டன (ஸ்ரீ கண்ணபிரானது) அந்தப்புரத்தினிடங்கள். எ - று.

(வி - ரை.) உறுத்தி-உறு என்பதன் பிறவினையாகிய உறுத்து பகுதி. மன்னு - உவமவுருபு, அன்றி, பரிதிமன்னு என்பதற்கு சூரியனது தன்மை பொருந்திய என்றுரைப்பினுமாம், உயர்ச்சியால் சூரியமண்டலத்தையளாவிய என்றலுமொன்று, நிறீஇ - சொல்லிசையளபெடை. (கசஅ)

ஓங்கு சந்திர காந்தமா ளிகைகளை யுரைக்கோ
வீங்கு நாசிசோ பானவண் மையைவிரித் திடுகோ
தேங்கு சூளிகைச் சிறப்பினை யிற்றெனத் தெரிக்கோ
பாங்கி யற்றிய சித்திரத் தொகுதியைப் பணிக்கோ.

(ப - ரை.) ஓங்கு - உயர்ந்த, சந்திரகாந்தம் - சந்திரகாந்தங்ளாற்செய்யப்பட்ட, மாளிகைகளை - மாளிகைகளின் சிறப்பை, உரைக்கோ - சொல்லுவேனோ, வீங்கும் - பெரிதாகிய, நாசிசோபானம் - மேல்வாசற்படி சோபானம் என்பவற்றின், வண்மையை - வளத்தை, விரித்திடுகோ - விஸ்தரிப்பேனோ, தேங்கு சூளிகை சிறப்பினை - (வேலைப்பாடு) நிரம்பின நிலாமுற்றங்களின் மேன்மையை, இற்றென தெரிக்கோ - இத்தன்மைத்தென்று தெரிவிப்பேனோ, பாங்கு இயற்றிய - அழகாக எழுதப்பட்டிருக்கிற, சித்திரத்தொகுதியை - சித்திரக்கூட்டத்தின் சிறப்பை, பணிக்கோ - சொல்லுவேனோ.

(பொ - ரை.) உயர்ந்த சந்திரகாந்தங்களாற் செய்யப்பட்ட மாளிகைகளின் சிறப்பைச்சொல்லுவேனோ, பெரிதாகிய மேல்வாசற்படி சோபானம் என்பவற்றின் வளத்தை விஸ்தரிப்பேனோ, வேலைப்பாடு நிரம்பின நிலாமுற்றங்களின் மேன்மையை இத்தன்மைத்தென்று தெரிவிப்பேனோ, அழகாக எழுதப்பட்டிருக்கிற சித்திரக்கூட்டத்தின் சிறப்பைச்சொல்லுவேனோ.

(வி - ரை.) ஓங்குமாளிகையென வியையும், சந்திரகாந்தம்-ஓர்வகைக்கல், இது சந்திரனைக்கண்டால் தண்ணீரைக் கக்குமியல்புள்ளது, இதற்கினமாய்ச் சூரியகாந்தம் என்றொருகல் உண்டு, அது சூரியனைக்கண்டால் நெருப்பைக்கக்குமியல்புள்ளது, நாசி - மேனிலைக்குப் போகவமைக்கப்பட்ட வாசற்படி, வண்மை - வளப்பம், சூளிகை - நிலாமுற்றம், இதனை 'ஹர்ம்யம்' என்பர் வடநூலார், பாங்கு - அழகு, சித்திரம் - ஓவியம். (கசகூ)

மற்று நாற்றிய பன்மணி மாலையை வகுக்கோ
சுற்று நாற்றிய பொன்மலர்ப் பிணையலைச் சொல்கோ
சுற்றை யங்கதிர்ச் சாமரைத் தூக்கினைக் கரைகோ
விற்ற வென்றுரைத் திடவெளி யனவல யார்க்கும்.

(ப - ரை) மற்றும் - மேலும், நாற்றிய - தொங்கவிட்ட, பல்மணி மாலையை - பலரத்நமாலிகைகளின் அழகை, வகுக்கோ - சொல்லுவேனோ, சுற்றும் நாற்றிய - சுற்றிலும் தொங்கவிட்ட, பொன்மலர்பிணையலே - அழகாகிய மலர்மாலைகளின் சிறப்பை, சொல்கோ - சொல்லுவேனோ, கற்றை - திரட்சியாகிய, அம்கதிர் - அழகிய ஒளியுள்ள, சாமரைதூக்கினை - சாமரத்தொங்கலின் அழகை, கரைகோ - சொல்லுவேனோ, (இவையாவும்) இற்ற என்று உரைத்திட - இத்தன்மையவென்று சொல்லுதற்கு, யார்க்கும் - எவர்க்கும், எளியனஅல்ல - எளியவையல்ல. எ - று.

(பொ - ரை.) மேலும் தொங்கவிட்ட பலரத்நமாலிகைகளின் அழகைச் சொல்லுவேனோ, சுற்றிலும் தொங்கவிட்ட அழகாகிய மலர்மாலைகளின் சிறப்பைச்சொல்லுவேனோ, திரட்சியாகிய அழகிய ஒளியுள்ள சாமரத்தொங்கலின் அழகைச்சொல்லுவேனோ, இவையாவும் இத்தன்மையவென்று சொல்லுதற்கு எவர்க்கும் எளியவையல்ல. எ - று.

(வி - ரை.) நாற்றிய - இறந்தகாலத்தெரிநிலைப்பெயரெச்சம், இது நாற்று என்னும் பிறவினைப்பகுதி யடியாயுண்டாயிற்று, இதற்குத்தன்வினைப் பகுதிநால், பல்மணியென்றது முத்து, பவளம், மரகதம், வயிரம் முதலிய நவமணிகளே, பொன்மலர் பிணையல் என்பதற்குப் பொன்னினாலும் மலரினாலும் செய்யப்பட்டமாலையெனினுமாம். பிணையல் - மாலை, சாமரம் - கவரி, கரைதல் - சொல்லுதல். (௧௫0)

தங்கு மேனிலை மாடமேல் வெள்ளிடை தணப்ப
வெங்கும் வார்கமஞ் சூன்முகிற் குழாம் பொலி யியக்கஞ்
சிங்க லற்றவிண் ணவர்கள்கண் ணூறுசே ராமைப்
பொங்கு நீனிறக் கஞ்சுகஞ் செறித்தது போலும்.

(ப - ரை.) தங்கும் - தங்குதற்குரிய, மேல்நிலைமாடமேல் - மேனிலை மாடத்தின்மேல், வெள்இடை தணப்ப - வெற்றிடம் நீங்கலாக, எங்கும் - மற்றெவ்விடத்தும், வார்கமம் சூல் - பெரிய நிறைவாகிய சூலினையுடைய, முகில்குழாம் - மேகக்கூட்டத்தின், பொலி இயக்கம்-மிகுந்த விளக்கமானது, சிங்கல்அற்ற - அழிவில்லாத, விண்ணவர்கள் - தேவர்களுடைய, கண்ஊறு சேராமை - கண்ணூறு பொருந்தாமல், பொங்கும் - மிகுந்த, நீலம்நிறம் - நீலநிறமாகிய, கஞ்சுகம் - மேற்போர்வையை, செறித்ததுபோலும் - (அந்நகரத்து மாளிகைகளுக்கு) போர்த்திருப்பதை நிகர்க்கும். எ - று.

(பொ - ரை.) தங்குதற்குரிய மேனிலைமாடத்தின்மேல் வெற்றிடம் நீங்கலாகமற்றெவ்விடத்தும் பெரிய நிறைவாகிய சூலினையுடைய மேகக்கூட்டத்தின் மிகுந்த விளக்கமானது, அழிவில்லாததேவர்களுடைய கண்ணூறுபொருந்தாமல் மிகுந்த நீலநிறமாகிய மேற்போர்வையை (அந்நகரத்து மாளிகைகளுக்கு) போர்த்திருப்பதை நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) வெள்ளிடம் - வெற்றிடம், கமம் - நிறைவு, சூல்-கர்ப்பம். குழாம் - கூட்டம், இயக்கம் - இயங்குதல், பகுதி இயங்கு, இயக்கம்-சஞ்சாரம் எனினுமாம், சிங்கல் - அழிதல், பகுதிசிங்கு, விண்ணவர்கள் - இடமடியாகப்பிறந்த பெயர், கண்ணூறு - கண்ணெச்சில், (கண்திருஷ்டி) நீலம் என்பது நீல் எனக்கடைக்குறையாயிற்று, கஞ்சுகம்-கவசம், (உறை). தணத்தல் - நீங்குதல். (கருக)

அன்றி யுங்குடஞ் சுட்டினம் புரந்தவந் நாளின்
மன்ற வேய்ங்குழற் கோவலர் மகிழ்தரக் கொண்ட
வென்றி வார்குடை யாகிய விலங்கலங் குவட்டிற்
றுன்றி டுந்தடித் தொடுசெறிந் தமையையுந் துணையும்.

(ப - ரை.) அன்றியும் - அல்லாமலும், குடஞ்சுட்டு இனம் - பசுக்கூட்டத்தை, புரந்த - காத்தருளின, அ நாளில் - அக்காலத்தில், மன்ற - மிகுதியும், வேய்குழல் - வேய்ங்குழலையுடைய, கோவலர்-இடையர்கள், மகிழ்தர-மகிழும்படி, கொண்ட - (ஸ்ரீ கண்ணபிரான்) கொண்டருளின, வென்றி - வெற்றியையுடைய, வார்குடையாகிய - பெரியகுடையாகிய, விலங்கல் அம் குவட்டில் - மலையினது அழகியவுச்சியில், துன்றிடும் - நெருங்கிய, தடித்தொடு - மின்னலோடு, செறிந்தமையையும் - (மேகங்கள்) பொருந்தியிருந்ததையும், துணையும் - நிகர்க்கும். எ - று.

(பொ - ரை.) அல்லாமலும் பசுக்கூட்டத்தைக்காத்தருளின அக்காலத்தில் மிகுதியும் வேய்ங்குழலையுடைய இடையர்கள் மகிழும்படி (ஸ்ரீ கண்ணபிரான்)கொண்டருளின வெற்றியையுடைய பெரிய குடையாகிய மலையினது அழகியவுச்சியில் நெருங்கிய மின்னலோடு (மேகங்கள்) பொருந்தியிருந்ததையும் நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) குடஞ்சுட்டு-பசு, இது ஒருசொல். குடஞ்சுட்டினம் புரந்த அந்நாளில் என்றது ஸ்ரீ கண்ணபிரான் ஆநிரைமேய்த்த அக்காலத்தில் என்றபடி, மன்ற - மிகுதிப்பொருடருவதோரிடைச்சொல், அன்றி அசைச்சொல் எனினுமாம், வேய் - மூங்கில், வேய்ங்குழல் - மூங்கிற்குழல், (புள்ளாங்குழல்). இடையர்கட்குரிய பலபொருள்களுள்ளும் வேய்ங்குழல் சிறந்தமையான், 'வேய்ங்குழற்கோவலர்' என்றார், "கொன்றை வேய்ங்குழற்கோவலர்" என்றார் மஹாகவியும், மகிழ்தர - மகிழ, மகிழ்தாபகுதி, குடையுடையானது வெற்றியைக்குடையின் மேலேற்றி 'வென்றிவார்குடை' என்றார், குடையாகிய என்றகுறிப்பால் விலங்கல் கோவர்த்தநமலையையுணர்த்திற்று, குவடு - மலையுச்சி, தடித்து - மின்னல், இதுதடித் என்னும் வடசொற்றிரிபு. (கருஉ)

தீத்தி ரட்பொறி காரண மின்றியுஞ் சிதறக்
காத்து மேனிலை விழித்துநிற் பவர்கைவா ளொளியுங்

தூத்து ளிப்படு குயின்குழா மின்றொகு மொளியும்
பாத்த றிந்திடத் தேவர்க்கும் யாவர்க்கும் படாவால்.

(ப - ரை.) காரணம் இன்றியும் - காரணமில்லாதிருக்கவும், திரள் - திரளாகிய, தீபொறிசிதற - நெருப்புப்பொறி சிதறும்படி, மேனிலை - மேனிலைமாடத்தின்மீது, விழித்துகாத்து நிற்பவர் - விழியாநின்று காத்து நிற்பவரது, கைவாள் ஒளியும் - கையிலுள்ள வாட்படையினொளியையும், தூதுளிபடு - பரிசுத்தமாகிய மழைத்துளிகள் பொருந்திய, குயின்குழாம் - மேகக்கூட்டத்திலுள்ள, மின்தொகும் ஒளியும்-மின்னற்கொடிகளிற் பொருந்திய ஒளியையும், பாத்து அறிந்திட - பகுத்தறிய, தேவர்க்கும் யாவர்க்கும் படா - தேவர்களுக்கும் மற்றெல்லாருக்கும் இயலாது. எ - று.

(பொ - ரை.) காரணமில்லாதிருக்கவும் திரளாகிய நெருப்புப்பொறி சிதறும்படி மேனிலைமாடத்தின் மீது விழியாநின்று காத்து நிற்பவரது கையிலுள்ள வாட்படையினொளியையும், பரிசுத்தமாகிய மழைத்துளிகள் பொருந்திய மேகக்கூட்டத்திலுள்ள மின்னற்கொடிகளிற் பொருந்திய ஒளியையும் பகுத்தறிய, தேவர்களுக்கும் மற்றெல்லாருக்கும் இயலாது. எ - று.

(வி - ரை.) பொறிசிதற எனவியையும், காரணமின்றியும் என்றவும்மை இறந்தது தழீஇயது, "தொழுதெழுவாள்" என்புழிப்போலக்காத்து விழித்து நிற்பவர், என்பதும் துணைவினையாதலால் காத்துவிழித்து என்பதை விழித்துக்காத்து எனச்சொன் முன்பின்னாகமாற்றி விழியாநின்று காத்துஎனப் பொருள் கூறலாயிற்று, விழித்து - எச்சத்திரிபு, கைவாள் - ஏழனுருபும் பயனுமுடன்றொக்கதொகை நிலைத்தொடர், குயின் - மேகம், ஒளியிரண்டனீற்றும்மைகள் எண்ணும்மைகள், அறிந்திடப்படா எனவியையும், பாத்து பகுத்து என்பதன் விகாரம். "பாத்தூண்மரீ இயவனைப்பசியென்னுந் தீப்பிணி தீண்டலரிது" என்னுந்திருக்குறளிலும் பகுத்து எனற்பாலது பாத்து எனவந்தமை காண்க. (கடுரு)

சிறந்த தன்குலத் துதித்தவன் செல்வத்தி னுறையு
முறந்த பன்மணி மாளிகை தனக்குமிக் குரித்தென்
றறந்த வாதெழு மதிவிசும் பாறுசெல் வருத்தந்
துறந்தி டும்படி சற்றுறைந் தகலுநா டோறும்.

(ப - ரை.) சிறந்த - சிறப்புப்பெற்ற, தன்குலத்து உதித்தவன் - தன் வமிசத்தில் அவதரித்த ஸ்ரீ கண்ணபிரான், செல்வத்தின் உறையும் - எல்லாச்செல்வங்களோடும் வசிக்கிற, உறந்த - வெளியிட்ட, பன் - யாவராலும் புகழ்ந்து சொல்லப்பட்ட, மணி- (விசித்திரமாகிய) வேலைப்பாட்டையுடைய, மாளிகை - திருமாளிகையானது, தனக்குமிக்கு உரித்து - தனக்கு (வசிப்பதற்கு) மிகவும் உரிமையுடையது, என்று - என்று நினைத்து, அறம்தவாது - தருமநெறிதவறாமல், எழுமதி - தோன்றி விளங்குகிற சந்திரன், விசும்பு ஆறுசெல் - ஆகாயமார்க்கத்திற் செல்லுதலாலுண்டாகிய, வருத்தம் துறந்தி

மேம்படி-வருத்தம் நீங்கும்படி, நாள்தோறும் தினந்தோறும், சற்று உறைந்து-சிறிதுபொழுது (அம்மாடத்தின்மீது) தங்கி, அகலும் - அப்பாற்செல்வான்.

(பொ - ரை.) சிறப்புப்பெற்ற தன்வமிசத்தில் அவதரித்த ஸ்ரீ கண்ண பிரான் எல்லாச்செல்வங்களோடும் வசிக்கிற, வெளியிட்ட, யாவராலும் புகழ்ந்து சொல்லப்பட்ட விசித்திரமாகிய வேலைப்பாட்டையுடைய திரு மாளிகையானது தனக்கு வசிப்பதற்கு மிகவும் உரிமையுடையது என்று நினைத்து, தருமநெறிதவறாமல் தோன்றி விளங்குகிற சந்திரன் ஆகாயமார்க் கத்திற்செல்லுதலாலுண்டாகிய வருத்தம் நீங்கும்படி தினந்தோறும் சிறிது பொழுது (அம்மாடத்தின்மீது) தங்கி அப்பாற்செல்வான். எ - று.

(வி - ரை.) ஸ்ரீ கண்ணபிரான் திருமாளிகையானது சந்திரமண்டலத் தளவும் உயர்ந்திருக்கின்றதென்பது இச்செய்யுளாற் போந்தபொருள். ஸ்ரீ கண்ணபிரான் சந்திரவமிசத்தில் யதுகுலத்தில் வசுதேவபுத்திரனாய் அவதரித்த வனென்பது புராணப்ரஸித்தமாதலால் அந்தச்செய்தியையிவ்விடத்தில் விரி த்திலம், சந்திரவமிசத்தின் இயற்கைச்சிறப்பும் ஸ்ரீகண்ணபிரான் அவதரித்த தனாலுண்டாகிய செயற்கைச்சிறப்பும் தோன்ற, 'சிறந்ததன்குலம்' என்றார். பண்மணிமாளிகையென்றும் பாடம், எழுமதி - வினைத்தொகை, விசும்பாறு-பண்புத்தொகை, செல்வருத்தம் - காரணப்பொருளதாகிய வினைத்தொகை. சற்று - சிறுமையுணர்த்தும் இடைச்சொல், மதி - எல்லாராலும் மதிக்கப் படுவது, இது காரணப்பெயர். (கஙச)

திருவிற் கான்றிடு சோமகாந் தச்செழுஞ் சிகர
முருவச் சந்திர னெழுதலு முகுத்தநீர் பெருகி
மருவிக் காலென வழியரு வியுமவண் வயங்கும்
பருவக் கோவைமுத் தாரமும் பகுத்திட லரிதே.

(ப - ரை.) திருவின் கான்றிடு - அழகாக உமிழ்கின்ற, சோமகாந்தம்-சந்திரகாந்தக்கல்லினாலாகிய, செழுசிகரம் - செழுமையாகிய சிகரமானது, உருவம் - நிறத்தையுடைய, சந்திரன் எழுதலும் - சந்திரன் உதித்தலும், உகுத்தநீர்பெருகி - உமிழ்ந்த நீரானதுபெருகி, கால்எனமருவி - வாய்க்கால் போலப்பொருந்தி, வழிஅருவியும் - வழிந்தோடுகிற அருவியாற்றையும், அவண்வயங்கும் - அவ்விடத்தில் விளங்குகிற, பருவம்கோவை - பக்குவ மாய்க்கோத்தலைப்பெற்ற, முத்துஆரமும் - முத்துமாலையையும், பகுத்திடல்-பகுத்தறிதல், அரிது - (யாவர்க்கும்) அரிதாகும். எ - று.

(பொ - ரை.) அழகாகவுமிழ்கின்ற சந்திரகாந்தக் கல்லினாலாகிய செழு மையாகிய சிகரமானது, நிறத்தையுடைய சந்திரன் உதித்தலும் உமிழ்ந்த நீரானதுபெருகி வாய்க்கால்போலப்பொருந்தி வழிந்தோடுகிற அருவியாற் றையும் அவ்விடத்தில் விளங்குகிற பக்குவமாய்க்கோத்தலைப்பெற்ற முத்து மாலையையும் பகுத்தறிதல் யாவர்க்கும் அரிதாகும். எ - று.

(வி - ரை.) திரு - அழகு, கான்றிடுஒருசொல் - இதறகுப்பகுதி காமம், சோமகாந்தம் - சந்திரகாந்தக்கல், உருவம் அழகெனினுமாம், உறைத்தநீர் என்றும்பாடம், கோவை - கோத்தல், தொழிற்பெயர். பருவக்கோதை, என்றும்பாடம், வழியருவி - வினைத்தொகை, பகுத்திடல் என்பதில் பகுத்திடு பகுதி. (கடுரு)

மேய மேனிலை மாடங்கள் வெள்ளொளி விரித்துப்
பாய தாரகைக் கணத்தொடு பயிலுறு காட்சி
தூய பாற்கடல் சங்கநா டொறுந்தன் பாற் றுறந்த
நேய முத்தொடு பொங்கிமே லெழுந்தென நிலவும்.

(ப - ரை.) மேய - பொருந்திய, மேனிலைமாடங்கள் - மேனிலைமாடங்களானவை, வெள் ஒளிவிரித்து - வெள்ளொளியைவிரித்து, பாய - பரவிய, தாரகை கணத்தொடு - நக்ஷத்திரக்கூட்டத்தோடு, பயிலுறுகாட்சி - விளங்குகிற தோற்றமானது, தூய - பரிசுத்தமாகிய, பால்கடல் - பாற்கடலானது, சங்கம் - சங்குகள், நாள்தொறும் - தினந்தோறும், தன்பால் துறந்த - தன்னிடத்தீன்ற, நேயம் - (கண்டோர்யாவர்க்கும்.) விருப்பத்தைத்தருகிற, முத்தொடு - முத்துக்களோடு, பொங்கிமேல் எழுந்தால் என - பொங்கிமேலெழுந்தாற்போல, நிலவும் - விளங்கும். எ - று.

(பொ - ரை.) பொருந்திய மேனிலைமாடங்களானவை வெள்ளொளியை விரித்து பரவிய நக்ஷத்திரக்கூட்டத்தோடு விளங்குகிற தோற்றமானது, சங்குகள் தினந்தோறும் தன்னிடத்தீன்ற (கண்டோர் யாவர்க்கும்) விருப்பத்தைத்தருகிற முத்துக்களோடு பொங்கிமேலெழுந்தாற்போல விளங்கும். எ - று.

(வி - ரை.) வெள்ளொளி-சுண்ணச்சாந்து தீற்றப்பெற்றதனாலுண்டாகிய வெண்ணிறம், தாரகை - தாரகா என்னும் வடசொற்றிரிபு, கணம் - வடசொல், தூய - தூய்மையென்னும் பண்படியாகப்பிறந்த பெயரெச்சம், பாற்கடல் - பாலானியன்றகடல், துறத்தல் இவ்விடத்து ஈனுதற்பொருட்டு, எழுந்தால் எனஎன்பது எழுந்தெனவென ஈறு தொகுத்தலாயிற்று, நிலவுதல்-விளங்குதல், மேனிலைமாடங்கள் பாற்கடலுக்கும் தாரகைக்கணம் முத்துக்களுக்கும் உவமை, சங்கம் வடசொல், தன்பால் என்பதில் பால் ஏழனுருபு.

ஐய நுண்ணிடை யயிலலைத் தமர்த்திடு மரிக்கண்
மையன் மாதரார் பற்பலர் தனித்தனி மருவச்
செய்ய காற்பரி யங்கமேல் லணையொடு செறித்த
வெய்ய வற்றொடு சிகையள வில்லறை விளங்கும்.

(ப - ரை.) ஐய - அழகிய, நுண் இடை - நுண்ணிடையையும், அயில் அலைத்து - வேற்படையை வருத்தி, அமர்த்திடும் - அமர்கின்ற, அரி - செவ்வரிகளையுடைய, கண் - கண்களையுமுடைய, மையல் - (காண்பார்க்கு,) மயக்கத்தையுண்டாக்குகிற, மாதரார் பற்பலர் - மாதர் அநேகர், தனி தனி

மருவ-தனித்தனியே வசிக்க, செய்யகால்-செவந்தகால்களையுடைய, பரியங்கம் - கட்டில்கள், மெல்அணையொடு செறித்த - மெல்லிய சயனத்தோடு சேர்க்கப்பட்ட, வெய்யவன் தொடுசிகை - சூரியனைத்தீண்டுகிற சிகரங்களையுடைய, அளவுஇல் - அளவில்லாத, அறை - விடுதிகள், விளங்கும் - விளங்காநிற்கும். எ - று.

(பொ - ரை.) அழகிய நுண்ணிடையையும், வேற்படையை வருத்தி அமர்க்கின்ற செவ்வரிகளையுடைய கண்களையுமுடைய (காண்பார்க்கு) மயக்கத்தையுண்டாக்குகிற மாதர் அநேகர் தனித்தனியே வசிக்க, செவந்த கால்களையுடைய கட்டில்கள் மெல்லிய சயனத்தோடு சேர்க்கப்பட்ட, சூரியனைத் தீண்டுகிற சிகரங்களையுடைய அளவில்லாத விடுதிகள் விளங்காநிற்கும்.எ-று.

(வி - ரை.) ஐய - (உண்டோ இன்றோவென்னும்) சந்தேகத்தைத்தருகிற எனினுமாம், அலைத்தல் - வருத்துதல், அமர்த்தல் - போரிடல், செய்யகால்பரியங்கம் - செவந்த பவளக்கால்களமைந்த கட்டில், செறித்தல்-சேர்த்தல், வெய்யவன் - வெம்மையையுடையவன். (சூரியன்), இடையையும் கண்களையுமுடைய மாதரார் எனவும், பரியங்கம் செறித்த அறையெனவும் இயையும். (கடுஎ)

வருக்கை வாழைதே மாக்கமு கருப்பலத் தென்னை
முருக்கு நாரமுண் மாதுளை மொய்த்தமுந் திரிகை
பருக்கு மின்சுவைக் கனியுடை மற்றைப்பா தவங்கள்
பெருக்கி யென்றுநல் வளந்தரு சோலைகள் பிறங்கும்.

(ப-ரை.) வருக்கை-பலாமரமும், வாழை-வாழைமரமும், தேமா-தேமாமரமும், கமுகு - கமுகமரமும், அருபலம்தென்னை-இடையறுத பலத்தைத் தருகிற தென்னமரமும், முருக்கு - முருக்கமரமும், நாரம் - நாரத்தைமரமும், முள்மாதுளை-முட்களையுடைய மாதுளமரமும், மொய்த்த முந்திரிகை-நெருங்கின முந்திரிமரமும், பருக்கும் - (நாளுக்குநாள்) பருக்கின்ற, இன்சுவை-இன்சுவையுள்ள, கனிஉடை - கனிகளையுடைய, மற்றைபாதவங்கள் - வேறுமரங்களும், பெருக்கி - பெருக்கப்பட்டு, என்றும்-எந்நாளும், நல்வளம் தரு - நல்ல பயனைத்தருகிற, சோலைகள் - தோப்புகள், பிறங்கும் - (அவ்விடத்து) விளங்காநிற்கும். எ - று.

(பொ - ரை.) பலாமரமும், வாழைமரமும், தேமாமரமும், கமுகமரமும், இடையறுதபலத்தைத்தருகிற தென்னமரமும், முருக்கமரமும், நாரத்தைமரமும், முட்களையுடைய மாதுளமரமும்,நெருங்கின முந்திரிமரமும், நாளுக்குநாள் பருக்கின்ற இனியசுவையுள்ள கனிகளையுடைய வேறு மரங்களும் பெருக்கப்பட்டு, எந்நாளும் நல்லபயனைத்தருகிற தோப்புகள் (அவ்விடத்து) விளங்காநிற்கும். எ - று.

(வி - ரை.) தேமா - தித்திப்புமாமரம், கமுகு - பாக்குமரம், முருக்கு-பலாசமரம், பருக்கும் என்பதனை இன்சுவைக்காதல் கனிக்காதல் அடையாக்

கலாம், பாதவம் - பாதபம் என்னும் வடசொற்றிரிபு, பெருக்கியென்பது இவ்விடத்துச் செயப்பாட்டு வினையில் வந்தது, வளம் - செல்வம், அது இங் குப்பயன் என்னும் பொருளில் வந்தது. (கடுஅ)

கண்ண னவ்வயின் வருந்தொறுங் களிமயிற் கூட்டம்
விண்ணின் மேற்பயின் மேகமிம் மண்விர வியதென்
றெண்ணி டக்கடையிலாத்தழை கோலியின் பகவும்
பெண்ண ணங்கனை யாரைத்தம் மினமென்று பெட்கும்.

(ப - ரை.) கண்ணன் - ஸ்ரீகண்ணபிரான், அவ்வயின் வருந்தொறும் - அவ்விடத்திற்கு வருந்தோறும், களிமயில் கூட்டம் - களிக்கின்ற மயிற்றொகுதி, விண்ணின்மேல் பயில் - ஆகாயத்தில் சஞ்சரிக்கிற, மேகம் - மேகமானது, இ மண் விரவியது என்று - இந்த மண்ணுலகத்தில் வந்ததென்று எண்ணி, எண்இட - எள்ளிடுதற்கும், கடைஇல்லா - இடமில்லாமல், தழை கோலி - கலாபத்தைவிரித்து, இன்பு - இன்பமாக, அகவும் - ஆடும், (அன்றியும்) பெண்அணங்கு அனையாரை - தெய்வப்பெண்ணை நிகர்ப்பவராகிய மாதரை, தம் இனம் என்று - தம்மினமென்றெண்ணி, பெட்கும்-அவர்களை விரும்பும். எ - று.

(பொ - ரை.) ஸ்ரீகண்ணபிரான் அவ்விடத்திற்கு வருந்தோறும் களிக்கின்ற மயிற்றொகுதி, ஆகாயத்தில் சஞ்சரிக்கிறமேகமானது இந்த மண்ணுலகத்தில்வந்ததென்று எண்ணி எள்ளிடுதற்கும் இடமில்லாமல் கலாபத்தை விரித்து இன்பமாகஆடும், (அன்றியும்) தெய்வப்பெண்ணை நிகர்ப்பவராகிய மாதரை தம்மினமென்றெண்ணி அவர்களை விரும்பும். எ - று.

(வி - ரை.) வயின் - இடம், அவ்வயின் என்றசுட்டு அவ்வயின் என நீண்டது. களிமயில் - களிப்பையுடையமயில் எனினுமாம். விரவுதல் - கலத்தல், அது இவ்விடத்து வருதற்பொருளது. எண் - எள்என்பதன் திரிசொல். கோலுதல்-வளைத்தல், அது இவ்விடத்து விரித்தல் என்னும் பொருளில்வந்தது. அகவுதல் - ஆடுதல். அணங்கு - தெய்வப்பெண், சோலைகளிலுள்ள மயில்கள் ஸ்ரீகண்ணபிரானை மேகமென்றெண்ணி இனிமையாய் ஆடாநிற்கும், அவரது தேவியரைத் தம்மினமென்று எண்ணி அவர்களை விரும்பாநிற்கும் என்பது கருத்து. (கடுகூ)

குழைகி ழித்தயி றடற்றுறத் துரந்துநேர் குறுகு
முழைகி ழித்தொளிர் நோக்கின ரூசலாட் டுவப்பும்
பிழைகி ழித்தபொற் கந்துக வாடலின் பெருக்கு
மழைகி ழித்தவச் சோலையின் மருடென்றும் வயங்கும்.

(ப - ரை.) குழைகிழித்து - காதணியைத் துளைத்து, அயில் - வேலானது, தடறுஉற - உறையிற்புகும்படி, துரந்து - அதைத் துரத்தி, நேர் குறுகும் - எதிரேவருகிற, உழைகிழித்து-மானினது நோக்கத்தை வென்று, ஒளிர் - விளங்குகிற, நோக்கினர் - கண்களையுடைய மாதரது, ஊசலாட்டு

உவப்பும் - ஊசலாட்டுக்களிப்பும், பிழைகிழித்தபொன் - குற்றமற்ற பொன்னினாற்செய்யப்பட்ட, கந்துகம் ஆடலின்பெருக்கும் - பந்தாடலின் பெருக்கமும், மழைகிழித்த - மேகங்களைக் கிழித்துச் செல்லுகிற, அ சோலையில் - அந்தச் சோலையில், மருது - இடையறுமல், என்றும்-எந்நாளும், வயங்கும் - விளங்காநிற்கும். எ - று.

(பொ - ரை.) காதணியைத்துளைத்து, வேலானது உறையிற் புகும்படி அதைத்தூரத்தி, எதிரேவருகிற மானினது நோக்கத்தைவென்று விளங்குகிற கண்களையுடைய மாதரது ஊசலாட்டுக்களிப்பும், குற்றமற்ற பொன்னினாற் செய்யப்பட்ட பந்தாடலின் பெருக்கமும், மேகங்களைக் கிழித்துச் செல்லுகிற அந்தச்சோலையில் இடையறுமல் எந்நாளும் விளங்காநிற்கும்.

(வி - ரை.) தட்டு - உறை, உழை - மான், அது இங்கு அதனது பார்வைக்காயினமையால் முதலாகுபெயர், பிழைகிழித்தபொன் என்றது-களங்கமற்றவுயர்ந்தபொன் என்றபடி, கந்துகம்-பந்து, மழைகிழித்தலாவது-மேகங்களையூடுருவிச்செல்லுதல், இவ்வாறு கூறினமையால் சோலையின் உயர்வு தோன்றுகின்றது, மாறுது-நீங்காது, அதுமருது எனக்குறுக்கலாயிற்றெனினுமாம். (கசு0)

கோங்கு மாதவி பாடலங் குராவழை புன்னை
தேங்கு சண்பகங் குங்குமஞ் சந்தனஞ் செருந்தி
யோங்கு கைதைமந் தாரமா லதியொளிர் கற்பு
வீங்கு சாதிமுற் பலவுள விரைத்தவுய் யானம்.

(ப - ரை.) விரைத்த - பரிமளிக்கிற, உய்யானம் - பூந்தோட்டங்களில், கோங்கு - கோங்கும், மாதவி - மாதவியும், பாடலம் - பாதிரியும், குரா - குரவமும், வழை - சுரபுன்னையும், புன்னை - புன்னையும், தேங்குசண்பகம் - (மணம்) நிறைந்த சண்பகமும், குங்குமம் - குங்குமமரமும், சந்தனம் - சந்தனமரமும், செருந்தி - செருந்திமரமும், ஓங்குகைதை - உயர்ந்த தாழைச்செடியும், மந்தாரம் - மந்தாரமரமும், மாலதி - மாலதியும், ஒளிர்கற்பு - விளங்குகின்ற முல்லைக்கொடியும், வீங்குசாதி - மிகுந்தசாதியும், முதல் - முதலான, பலஉள - பலவும் உள்ளன. எ - று.

(பொ - ரை) பரிமளிக்கிற பூந்தோட்டங்களில், கோங்கும், மாதவியும், பாதிரியும், குரவமும், சுரபுன்னையும், புன்னையும், மணம் நிறைந்த சண்பகமும், குங்குமமரமும், சந்தனமரமும், செருந்திமரமும், உயர்ந்த தாழைச்செடியும், மந்தாரமரமும், மாலதியும், விளங்குகின்ற முல்லையும், மிகுந்த சாதியும், முதலானபலவும் உள்ளன. எ - று.

(வி - ரை.) கோங்கு - ஓர்மரவிசேடம், இதனைக்கன்னிகாரம் என்பர் வடநூலார், மாலதி - சிறுசண்பகம், அன்றி ஓர்வகை மல்லிகையெனினுமாம், கற்பு - முல்லைக்கொடி, சாதி - சாதிமரம், மாதவி - வசந்தமல்லிகைக்கொடி, அன்றி குருக்கத்தியெனினுமாம், எல்லாமலர்களிலுஞ்சென்று தேனு

ண்ணும் வண்டுகளும் அணுகவொண்ணாத மிகுமணமுள்ளதாதலால் சண்பகத்தை, 'தேங்கு சண்பகம்' என்றார். சண்பகம் வண்டுகளுமணுகவொண்ணாத மிகுமணமுள்ளதென்பது, "வேங்கையுஞ்சண்பகமும் வண்டுணாமலர்மரம்" என்பதனால் இனிது விளங்கும். (கசுக)

சால மெய்யிற்பெண் குறியின னாய்ப்பழி தழைந்தோன்
பால மர்ந்திட றகாதென நீங்கிய பண்பே
போலமன்றலங் கற்பக மாயிடைப் பொலிந்து
கோல மார்ந்தள விடற்கரு வளங்கொழித் துறையும்.

(ப-ரை.) மெய்யில்-தன்னுடம்பில், சால-மிகுதியாக, பெண்குறியினன் ஆய்-பெண்குறியையுடையவனாகி, பழிதழைந்தோன்பால்-பழிமிகுந்தவனாகிய இந்திரனிடத்தில், அமர்ந்திடல் - பொருந்தியிருத்தல், தகாதுஎன-(எமக்கு) தகாதெனக்கருதி, நீங்கிய பண்பேபோல - நீங்கின தன்மைபோலவே, மன்றல் அம்கற்பகம் - வாசனையும் அழகுமுள்ள கற்பகமரமானது, ஆயிடைபொலிந்து - அவ்விடத்தில் விளங்கி, கோலம்ஆர்ந்து - அழகுநிறைந்து, அளவிடற்குஅரு - அளவிடுதற்கரிதாகிய, வளம்கொழித்து உறையும் - வளங்களை மிகுதியாய்க்கொடுத்துக்கொண்டிருக்கும். எ - று.

(பொ - ரை.) தன்னுடம்பில் மிகுதியாகப்பெண்குறியை யுடையவனாகிப் பழிமிகுந்தவனாகிய இந்திரனிடத்தில் பொருந்தியிருத்தல் (எமக்குத்) தகாதெனக்கருதி நீங்கினதன்மைபோலவே, வாசனையும் அழகுமுள்ள கற்பகமரமானது அவ்விடத்தில் விளங்கி அழகுநிறைந்து அளவிடுதற்கரிதாகிய வளங்களை மிகுதியாய்க்கொடுத்துக் கொண்டிருக்கும். எ - று.

(வி - ரை.) சாலமெய்யிற் பெண்குறியினனாய்ப் பழிதழைந்தோன், என்றகுறிப்பால் இந்திரன் எனப்பொருளுரைக்கலாயிற்று, இவனுக்கு உடம்பிற் பெண்குறியுண்டாவதற்குக்காரணம் கௌதமபத்திநியை வஞ்சித்துப்புணர்ந்தமையேயாம். இந்தக்கதை லோகப்ரஸித்தமாதலால் விரித்திலம், மன்றலங்கற்பகம் என்பதில் அம்சாரியையெனினுமாம், அவ்விடையெனற்பாலது முதல் நீண்டு ஆயிடையென்றாயிற்று, பழிதழைந்தோன் என்பதில் தழைத்தல் மிகுதற்பொருளது, பால் - ஏழனுருபு. (கசுஉ)

அன்றி யும்பல நாள்கண்முன் னோனிடத் தமர்ந்தா
மொன்று பின்னவ னிடத்துமவ் வாறுற வுறைவா
மென்று வந்துறை கின்றமை யும்பொரூஉ மிலங்கித்
துன்று பைந்தரு வைந்துமா வயிற்பொலி தோற்றம்.

(ப - ரை.) அன்றியும் - அல்லாமலும், இலங்கி - விளங்கி, துன்று - நெருங்கின, பை - பசுமையாகிய, தருஐந்தும் - பஞ்சதருக்களும், ஆவயின் - அவ்விடத்தில், பொலிதோற்றம் - விளங்குகிற காட்சியானது, பலநாட்கள் - அநேகநாள்களாக, முன்னோன் இடத்து அமர்ந்தாம் - தமையனாகிய இந்திரனிடத்தில் அமர்ந்திருந்தோம், ஒன்று - பொருந்திய, பின்னவனிடத்தும் -

அவன் தம்பியாகிய ஸ்ரீ கண்ணபிரானிடத்திலும், அவ்வாறு உற உறைவாம் என்றுவந்து - அவ்வாறேமிகுதியாக வசிப்போமென்றெண்ணிவந்து, உறைகின்றமையும் பொரூஉம் - வசித்தலையும் நிகர்க்கும். எ - று.

(பொ - ரை.) அல்லாமலும் விளங்கி நெருங்கின பசுமையாகிய பஞ்சதருக்களும் அவ்விடத்தில் விளங்குகிற காட்சியானது, அநேகநாள்களாகத் தமையனாகிய இந்திரனிடத்தில் அமர்ந்திருந்தோம், பொருந்திய அவன் தம்பியாகிய ஸ்ரீ கண்ணபிரானிடத்திலும் அவ்வாறே மிகுதியாகவசிப்போமென்றெண்ணிவந்து வசித்தலையும் நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) காசிபருக்கும் அதிதிக்கும் பிறந்தவர்களாகிய இந்திரன் வாமனன் என்பவர்களுக்குள்ளே இந்திரன் முன்பிறந்தவனாதலால் அவனை 'முன்னோன்' என்றும், வாமனன் பின் பிறந்தவனாதலால் அவனைப்பின்னவன் என்றும் கூறினார். இந்தக்காரணம் பற்றியே ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியை உபேந்திரன் என்பர் வடநூலார். "புருகூதனுக்குத் திருத்தம்பியாகிப்புரக்கும்" என்றார் தமிழறிஞரும், பொரூஉம்-சொல்லிசையளபெடை, பொலி தோற்றம் - வினைத்தொகை. (கசுக)

ஈர்ந்தெடுத்தவெண் பளிங்கினை நிலனுற விருத்திச்
சார்ந்த நாற்புறம் வெண்பொனாற் படித்தலஞ் சமைத்துக்
கூர்ந்த முத்தவெண் மணலடிப் பரப்பிமேற் குலவ
வார்ந்த தண்புன னிரப்பிய தடங்களும் வயங்கும்.

(ப - ரை.) ஈர்ந்து எடுத்த - பிளந்தெடுத்த, வெள்பளிங்கினை - வெள்ளியபளிங்குக்கற்களை, நிலன்உற இருத்தி-நிலத்திற்பரப்பி, சார்ந்தநால்புறம்- (அதைச்சார்ந்த) நான்குபக்கத்திலும், வெண்பொன்னால் - வெள்ளியினால், படித்தலம் சமைத்து - படிகள் அமைத்து, கூர்ந்த - மிகுதியாகிய, முத்தம் வெண்மணல் - முத்துக்களாகிய வெண்மணலை, அடிபரப்பி - அடியிற்பரப்பி, மேல்குலவ - அதன்மேல் விளங்கும்படி, வார்ந்த தண்புனல் நிரப்பிய - ஒழுகுமியல்புள்ள குளிர்ந்த நீரைநிறைத்த, தடங்களும் - பலதடாகங்களும், வயங்கும் - (அவ்விடத்தில்) விளங்கும். எ - று.

(பொ - ரை.) பிளந்தெடுத்த வெள்ளிய பளிங்குக்கற்களை நிலத்திற் பரப்பி, (அதைச்) சார்ந்த நான்குபக்கத்திலும் வெள்ளியினால் படிகள் அமைத்து, மிகுதியாகிய முத்துக்களாகிய வெண்மணலை அடியிற்பரப்பி, அதன் மேல் விளங்கும்படி ஒழுகுமியல்புள்ள குளிர்ந்த நீரைநிறைத்த பலதடாகங்களும் (அவ்விடத்தில்) விளங்கும். எ - று.

(வி - ரை.) ஈர்தல் - பிளத்தல். வார்தல் - ஒழுகுதல், வெண்பளிங்கு என்பதில் வெண்மையும், தண்புனல் என்பதில் தண்மையும் சாதியடைகள் - எடுத்தபளிங்கு எனவிகுதியும், எடுத்த என்னுஞ் செய்வினை எடுக்கப்பட்ட எனச்செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது, பளிங்கினை இருத்தி என

வியையும், பளிங்கை ஸ்ப்படிகம் என்பர் வடநூலார், முத்தம் - முக்தம் என்னும் வடசொற்றிரிபு. (கஙச)

நீண்ட வாட்கருங் கண்ணிளை யாரொடு நீதி
பூண்ட மாமணி நிறத்தவ னாடல்செய் பொய்கை
வேண்டு மேற்புனல் பெருகவுஞ் சுருங்கவும் விளைக்குஞ்
சேண்டு லங்கிய தூம்புகள் பற்பல செறியும்.

(ப - ரை.) நீண்ட - நீண்டிருக்கிற, வாள் - வாள்போன்ற, கருகண் - கரியகண்களையுடைய, இளையாரொடும் - இளம்பெண்களோடுங்கூடி, நீதி பூண்ட - நீதியையே (ஆபரணமாகத்) தரித்த, மாமணிநிறத்தவன் - அழகாகிய நீலமணிபோலும் நிறத்தினையுடைய ஸ்ரீ கண்ணபிரான், ஆடல்செய் - மூழ்குதலைச்செய்கிற, பொய்கை-பொய்கைகளில், வேண்டுமேல் - வேண்டுமானால், புனல் - நீரானது, பெருகவும் சுருங்கவும் விளைக்கும் - பெருகவும் சுருங்கவும் செய்கிற, சேண்துலங்கிய தூம்புகள் - நீளமாய்விளங்குகிற தூம்புகள், பற்பலசெறியும் - அநேகங்களாய்ப் பொருந்தியிருக்கும். எ - று.

(பொ - ரை.) நீண்டிருக்கிற வாள்போன்ற கரியகண்களையுடைய இளம்பெண்களோடுங்கூடி,நீதியையே(ஆபரணமாகத்)தரித்த அழகாகிய நீலமணிபோலும் நிறத்தினையுடைய ஸ்ரீ கண்ணபிரான் மூழ்குதலைச்செய்கிற பொய்கைகளில், வேண்டுமானால் நீரானது பெருகவும் சுருங்கவும் செய்கிற நீளமாய் விளங்குகிற தூம்புகள் அநேகங்களாய்ப் பொருந்தியிருக்கும்.எ-று.

(வி - ரை.) நீண்ட வாட்கருங்கண் என்றமையால் கண்களின் சிறப்பும், அக்கண்வலையில் அகடிதகடநாசாமர்த்தியமுடைய ஸ்ரீ கண்ணபிரானும் அகப்பட்டு அம்மாதர் விருப்பப்படி நீர்குடைதல் முதலிய திருவிளையாடல்களைச் செய்கிறான் என்பதும் இனிது விளங்கும். பூண்ட என்றதற்கேற்ப நீதியை ஆபரணமென்னலாயிற்று. ஆடல் - நீர்விளையாட்டு எனினுமாம், பொய்கை - தடாகம். தூம்பு - மதகு. மாமணிநிறத்தவன் என்பதற்குத் திருமகளை மார்பிலுடையவன் என்றும், நீலமணிபோலும் நிறத்தையுடையவன் என்றும் பொருள் கூறலுமாம். (கஙரு)

செய்ய தாமரை பற்பல வாவயிற் செறிந்த
வைய செம்மணிப் படியொளி கதிர்த்தலா லல்லு
மையில் செஞ்சுடர் கண்டென மலருமற் றாங்கு
நைய லின்றியஞ் சம்பல பயிறரு நாளும்.

(ப - ரை.) ஆவயின்செறிந்த - அவ்விடத்து நெருங்கியிருக்கிற, ஐய - அழகாகிய, செம்மணிபடி-செம்மணிகளாலியன்ற படிகள், ஒளிகதிர்த்தலால்-ஒளிவீசுதலால், பற்பல செய்யதாமரை - அநேகம் செந்தாமரைமலர்கள், அல்லும் - இராக்காலத்திலும், மையில்-களங்கமில்லாத, செஞ்சுடர் - சூரியனை, கண்டால்என - கண்டாற்போல, மலரும் - மலரா நிற்கும், ஆங்கு - அவ்விட

த்தில், நையல்இன்றி - வருந்துதலில்லாமல், பலஅஞ்சம் - அநேகம் அன்னப் பறவைகள், நாளும் - எந்நாளும், பயில்தரும் - சஞ்சரிக்கும். எ - று.

(பொ - ரை.) அவ்விடத்து நெருங்கியிருக்கிற அழகாகிய செம்மணிகளாலியன்ற படிகள் ஒளிவீசுதலால் அநேகம் செந்தாமரைமலர்கள் இராக்காலத்திலும் களங்கமில்லாத சூரியனைக்கண்டாற்போல மலராநிற்கும், அவ்விடத்தில் வருந்துதலில்லாமல் அநேகம் அன்னப்பறவைகள் எந்நாளும் சஞ்சரிக்கும். எ - று.

(வி - ரை.) பற்பல - மிகப்பல. செம்மணி - மாணிக்கம். கதிர்த்தல் - வீசுதல். அல் - இராக்காலம். மை - களங்கம். செய்யதாமரை பொருளாகுபெயர், இதனை முதலாகுபெயர் என்றுங்கூறுவர். கண்டால் என என்பது கண்டென எனத்தொகுத்தலாயிற்று. அஞ்சம் - ஹம்ஸம் என்னும் வடசொற்றிரிபு. பயிறரும் ஒருசொல். பயிலும் என்பது பொருள்.

குலவு பூந்தட நடுவமர் குடுமிமா மாட
நிலவு வெள்ளொளி விரித்தலாற் றன்னரை நிரம்பச்
சுலவு பாசடை சுற்றநின் றிடுதலாற் சுடர்விட்
டுலவு வெண்பளிக் குருவநீ லுடைப்பிரா னுறழும்.

(ப - ரை.) குலவு - விளங்குகிற, தடம் - தடாகங்களின், நடு - நடுவில், அமர் - அமைந்திருக்கிற, குடுமி - சிகரங்களையுடைய, மாமாடம் - பெரிய மாடங்கள், நிலவு - நிலவுபோல, வெள்ஒளி விரித்தலால் - வெள்ளொளியை விரித்தலாலும், தன் அரைநிரம்ப - தன் அரைநிறைய, சுலவு - சூழ்ந்திருக்கிற, பாசுஅடை - பசியஇலைகள், சுற்ற நின்றிடுதலால் - சுற்றும்படி நிற்றலாலும், (அந்தமாடங்கள்)சுடர்விட்டு உலவு- ஒளிவிட்டுலவுகின்ற, வெண்பளிக்கு உருவம் - வெள்ளியபளிங்குக்கல்லை நிகர்த்த தன் உருவத்தின்மீது, நீலம்உடை - நீலநிறத்தையுடைய ஆடையைத்தரித்த, பிரான் - பலராமனை, உறழும் - நிகர்க்கும். எ - று.

(பொ - ரை.) விளங்குகிற தடாகங்களின் நடுவில் அமைந்திருக்கிற சிகரங்களையுடைய பெரியமாடங்கள் நிலவுபோல வெள்ளொளியை விரித்தலாலும், தன் அரை நிறையச்சூழ்ந்திருக்கிற பசியஇலைகள் சுற்றும்படி நிற்றலாலும், (அந்தமாடங்கள்) ஒளிவிட்டுலவுகின்ற வெள்ளியபளிங்குக்கல்லை நிகர்த்த தன் உருவத்தின்மீது நீலநிறத்தையுடைய ஆடையைத்தரித்த பலராமனை நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) குடுமி - உச்சி (சிகரம்), நிலவு - விளங்குகிற எனினுமாம். அரை - நடுவிடம், பாசடையென்றது தாமரை முதலியவற்றின் பசிய இலைகளை, பளிங்கு பளிக்கு எனவலித்தல் பெற்றது. நீலம் நீல்எனக்கடைக்குறையாயிற்று. உடை - ஆடை. பலராமனைநம்பி மூத்தபிரான் என்பர். பலராமன் வெண்ணிறமுடையனாதலாலும் அவன் அரையிலுடுத்திருப்பது நீல

ஆடையாதலாலும் பசிய இலைகளால் சுற்றப்பட்ட வெண்ணிறமாடங்களுக்கு உவமையாக்கினார், உறழ்தல் - நிகர்த்தல். (௧௬௭)

மருவி டம்புரி வலம்புரி சலஞ்சலம் வயிற்றுக்
கருவு ளைந்துசோ பானத்திற் கான்றபன் முத்தந்
திருவ னாரடிப் படுந்தொறு முறுத்துமச் செல்ல
லொருவு மாசிறி தத்தலைப் படிந்தபூ வுஞற்றும்.

(ப - ரை.) மருவு - பொருந்திய, இடம்புரி - இடம்புரிச்சங்குகளும், வலம்புரி - வலம்புரிச்சங்குகளும், சலஞ்சலம் - சலஞ்சலம் என்னும் சங்குகளும், வயிற்று - வயிற்றிலுள்ள, கருஉளைந்து - கருப்பத்தால் வருந்தி, சோபானத்தில்கான்ற - படிகளின்மேலீன்ற, பல்முத்தம் - பலமுத்தங்கள், திருஅன்னார் - இலக்குமியை நிகர்த்தவராகிய மாதரது, அடி - பாதங்களில், படுந்தொறும் - படுந்தோறும், உறுத்தும் - உறுத்துதலாலுண்டாகிற, அ - அந்த, செல்லல்-துன்பமானது, சிறிது ஒருவும்ஆறு - சற்றுநீங்கும்படி, அ தலைபடிந்தபூஉஞற்றும் - அவ்விடத்தில் உதிர்ந்து கிடக்கிற மலர்கள்செய்யும்.

(பொ - ரை.) பொருந்திய இடம்புரிச்சங்குகளும், வலம்புரிச்சங்குகளும், சலஞ்சலம் என்னும் சங்குகளும் வயிற்றிலுள்ள கருப்பத்தால் வருந்திப் படிகளின் மேலீன்ற பலமுத்தங்கள் இலக்குமியை நிகர்த்தவராகிய மாதரது பாதங்களில் படுந்தோறும் உறுத்துதலாலுண்டாகிற அந்தத்துன்பமானது சற்று நீங்கும்படி அவ்விடத்தில் உதிர்ந்து கிடக்கிறமலர்கள் செய்யும். எ-று.

(வி - ரை.) இடம்புரி - இடப்பக்கமாய்ச் சுழித்துக்கொண்டிருப்பதாகிய சங்கு. வலம்புரி - இடம்புரியினுஞ் சிறந்ததாய் வலப்பக்கமாய்ச் சுழித்துக்கொண்டிருப்பதாகிய சங்கு. சலஞ்சலம் - வலம்புரிச்சங்குகள் ஆயிரஞ் சூழ அவற்றிடையே நடுநாயகமாயிருப்பதாகிய ஓர்சங்கவிசேடம். இதினுஞ் சிறந்தசங்கு கொக்கரையென்றும், இதினுஞ்சிறந்தசங்கு பாஞ்சஜந்யம் என்றும் சொல்லப்படும். கருவுயிர்க்குங்காலத்தில் மனிதர்முதலிய எல்லாவுயிர்களுக்கும் வயிறு உளைதலியல்பாதலால், "வயிற்றுக்கருவுளைந்து சோபானத்திற்கான்றபன் முத்தம்" என்றார், "குடவளைக்குலம் வயிறுளைந்தினமணி கொழிக்கும்" என்றார் பிறரும், செல்லல் - துன்பம், தலை - இடம். ஒருவுமாறு என்பது ஒருவுமாஎன ஈறுதொகுத்தலாயிற்று. (௧௬௮)

பெருமை சேர்புகழ்க் கண்ணனொண் கயலெனப் பிறழுங்
கருமை தீட்டிய கண்ணினார் பலரொடுங் கவின
வொருமை யன்பின்வீற் றிருக்குமத் தன்மையை யுணரி
னருமை யுற்றவை குந்தமு மதற்கிணை யாமோ.

(ப - ரை.) பெருமைசேர் - பெருமைபொருந்திய, புகழ் - கீர்த்தியையுடைய, கண்ணன் - ஸ்ரீ கண்ணபிரானானவன், ஒள்கயல்என - ஒப்பமாகிய கயல்மீன்போல, பிறழும் - பிறழ்கின்ற, கரு - கரிய, மைதீட்டிய - அஞ்சனமெழுதப்பெற்ற, கண்ணினார் பலரொடும் - கண்களையுடைய மாதர்பலரோ

டும், கவின - அழகாக, ஒருமை அன்பின் - ஒப்பற்ற அன்பினோடு, வீற்றிருக்கும் - வீற்றிருக்கிற, அத்தன்மையை உணரின் - அத்தன்மையை அறியின், அருமைஉற்ற - அருமைபொருந்திய, வைகுந்தமும் - பரமபதமும், அதற்கு இணை ஆமோ - அதற்குச்சமானமாகுமோ, (ஆகாது) எ - று.

(பொ - ரை.) பெருமைபொருந்திய கீர்த்தியையுடைய ஸ்ரீ கண்ணபிரானுனவன், ஒட்பமாகிய கயல்மீன் போலப்பிறழ்கின்ற, கரியஅஞ்சனமெழுதப்பெற்ற கண்களையுடையமாதர் பலரோடும் அழகாக ஒப்பற்ற அன்பினோடு வீற்றிருக்கிற அத்தன்மையை அறியின், அருமைபொருந்திய பரமபதமும் அதற்குச் சமானமாகுமோ (ஆகாது). எ - று.

(வி - ரை.) இறைவன் புகழ் பொய்ப்புகழன்றென்றற்கு, 'பெருமை சேர்புகழ்க்கண்ணன், என்றார், 'பிறழுங்கண்ணினார்' என்றும், நீட்டியகண்ணினார், என்றும் இயைத்துரைத்துக்கொள்க. கவின - கவின் என்னும் பெயரடியாகப்பிறந்த வினையெச்சம், இது வீற்றிருக்குமென்னும் வினைகொண்டு முடிந்தது, உணரின் - ஆலோசித்துப் பார்த்தால் எனினுமாம். ஆமோ என்னும் ஓகாரம் எதிர்மறை. ஒருமை - தனிமை, (ஒப்பின்மை). (கசுகூ)

நன்ன யத்தபல் வளம்பெறு முவளக நடையி
லென்ன சொற்றனன் சிறிதும்விண் டேனல னினிமேற்
பன்ன கத்துயிற் பகவன்வீற் றிருக்குமப் பண்பிற்
றன்னம் விண்டுவிள் ளாதசீர்க் கதைசொலச் சமைந்தேன்.

(ப - ரை.) நல்நயத்த பல்வளம்பெறு - நல்ல விருப்பத்தையுண்டாக்குகிற பலவளங்களையும் கொண்டிருக்கிற, உவளகம் நடையில் - அந்தப்புரத்தின் மேன்மையில், என்ன சொற்றனன் - என்ன சொன்னேன், சிறிதும் விண்டேன் அல்லன் - சிறிதும் சொன்னேனலன், இனிமேல் - இனிமேல், பன்னகம் - பாம்பின்மீது, துயில்-துயிலுதலையுடைய, பகவன்-ஸ்ரீக்ருஷ்ண பகவான், வீற்றிருக்கும் - எழுந்தருளியிருக்கிற, அ பண்பில் - அந்தச்சிறப்பில், தன்னம்விண்டு - சிறிதுசொல்லி, விள்ளாதசீர் - சொல்லவொண்ணாத சிறப்பினையுடைய, கதைசொல்ல -(ஸ்ரீக்ருஷ்ண)சரிதத்தைச்சொல்லுதற்கு, சமைந்தேன் - ஆயத்தமாயினேன். எ - று.

(பொ - ரை.) நல்லவிருப்பத்தை யுண்டாக்குகிற பலவளங்களையும் கொண்டிருக்கிற அந்தப்புரத்தின் மேன்மையில் என்னசொன்னேன், சிறிதும் சொன்னேனலன். இனிமேல், பாம்பின்மீது துயிலுதலையுடைய ஸ்ரீக்ருஷ்ணபகவான் எழுந்தருளியிருக்கிற அந்தச்சிறப்பில் சிறிதுசொல்லி, சொல்லவொண்ணாத சிறப்பினையுடைய ஸ்ரீக்ருஷ்ண சரிதத்தைச்சொல்லுதற்கு ஆயத்தமாயினேன். எ - று.

(வி - ரை.) நயம் - விருப்பம், நடை இவ்விடத்துச் சிறப்பைக்குறித்தது. விண்டேன் என்பதற்குப் பகுதிவிள். தன்னம் - கொஞ்சம் (அற்பம்). பன்னகத்துயில் - சேஷசாயித்வம். பண்பு - சிறப்பு. பகவன் என்பதற்கு

ஆறுகுணங்களுள்ளவன் என்பதுபொருள், ஆறுகுணங்களாவன - ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்பன. (௧௭0)

துன்று சந்திர காந்தத்தி னமைத்தவொண் சுவர்க்க
ணொன்று மாறுசெஞ் சந்தனங் கருப்புர மொருவா
தென்று நாறிய மான்மதங் குங்கும மின்னு
நின்ற பல்விரை வருக்கமு நிறைதரக் கூட்டி.

(ப - ரை.) துன்று - நெருங்கிய, சந்திரகாந்தத்தின் - சந்திரகாந்தக்கற்களால், அமைத்த - பதித்துச்செய்யப்பட்ட, ஒள் - ஒட்பமாகிய, சுவர்கண் - சுவரினிடத்தில், ஒன்றும்ஆறு - பொருந்தும்படி, செம்சந்தனம் - செஞ்சந்தனத்தையும், கருப்புரம் - பச்சைக்கருப்பூரத்தையும்,ஒருவாது என்றும்நாறிய- நீங்காமல் எப்பொழுதும் மணக்குமியல்புள்ள, மான்மதம் - கஸ்தூரியையும், குங்குமம் - குங்குமப்பூவையும், இன்னும்நின்ற-இன்னமும்உள்ள, பல்விரை வருக்கமும் - பலவாசனைப்பண்டங்களின் வகைகளையும், நிறைதர - நிறைய, கூட்டி - சேர்த்து. எ - று.

(பொ - ரை.) நெருங்கிய சந்திரகாந்தக்கற்களால் பதித்துச்செய்யப்பட்ட ஒட்பமாகிய சுவரினிடத்தில் பொருந்தும்படி செஞ்சந்தனத்தையும், பச்சைக்கருப்பூரத்தையும், நீங்காது எப்பொழுதும் மணக்குமியல்புள்ள கஸ்தூரியையும், குங்குமப்பூவையும், இன்னமும்உள்ள பலவாசனைப்பண்டங்களின் வகைகளையும் நிறையச்சேர்த்து. எ - று.

(வி - ரை.) இச்செய்யுளிறுதியிலுள்ள சேர்த்து என்னும் வினையெச்சம் அடுத்தசெய்யுளில் குழைத்து என்னும் வினையைக்கொள்ளும். இவ்வாறு வருவது குளகம் எனப்படும். "குளகம் பலபாட்டொரு வினைகொள்ளும்" என்பதிலக்கணம். 'சுவர்க்கண்' 'ஒன்றுமாறு' என்பவற்றிற்கும் பூசி, என்பதே முடிக்குஞ்சொல், சுவரிலேபொருந்தப்பூசியென்க. சந்தநம், கர்ப்பூரம், மதம், குங்குமம், வர்க்கம் என்பன வடசொற்கள், மான்மதம் - கஸ்தூரிமிருகத்தின் வயிற்றிலுள்ள கொழுப்பு. இன்னும் நின்ற பல்விரை என்றது-கோட்டம், தகரம் முதலியன. வருக்கம் - வர்க்கம் என்னும் வடசொற்றிரிபு. (௧௭௧)

விரைது வன்றிய மென்பனி நீரிடைக் குழைத்துப்
புரைய கன்றிடப் பூசியொண் காரகில் புகைத்துத்
தரைசெ றிந்திட நறுமயிர்ப் படாந்தவ விரித்து
வரைவில் பன்மணிக் கம்பல மேலுற வயக்கி.

(ப - ரை.) விரைதுவன்றிய - வாசனைநிறைந்த, மெல்பனிநீர்இடை - மென்மையாகிய பனிநீரிலே, குழைத்து - ஒன்றாகக்கலந்து, புரைஅகன்றிட- வெற்றிடமில்லாதபடி, பூசி - (சுவரிலே) அப்பி, ஒள்கார்அகில் புகைத்து - சிறந்த கருநிறமுள்ள அகிற்புகையிட்டு, தரைசெறிந்திட-உலகத்தில் இடையறாது நெருங்கும்படி, நறுமயிர்படாம் - நல்ல மயிர்களாற்செய்யப்பட்ட ஆடைகளை, தவவிரித்து - மிகுதியாகப்பரப்பி, வரைவுஇல் - வரையறுக்கப்

படாத, பல்மணி - அநேகரத்நங்களின் வர்ணமான, கம்பலம் - கம்பளங்களை, மேல்உற - அந்த மயிராடைகளின்மேலே பொருந்த, வயக்கி -விளங்க வைத்து. எ - று.

(பொ - ரை.) வாசனைநிறைந்த மென்மையாகிய பனிநீரிலே ஒன்றாகக் கலந்து, வெற்றிடமில்லாதபடி சுவரிலேஅப்பி, சிறந்த கருநிறமுள்ள அகிற்புகையிட்டு, உலகத்தில் இடையறாது நெருங்கும்படி நல்ல மயிர்களாற்செய்யப்பட்ட ஆடைகளை மிகுதியாகப்பரப்பி, வரையறுக்கப்படாத அநேகரத்நங்களின் வர்ணமான கம்பளங்களை அந்த மயிராடைகளின்மேலே பொருந்த விளங்கவைத்து. எ - று.

(வி - ரை.) அமைத்தனன அடுத்தசெய்யுளோடு தொடரும். மென்மை, நாற்றமினிமை. மென்மை - ஐம்பொறிகளால் நுகரப்படும் ஐகை மென்மைக்கும் பொது. பனிநீர்-ஓர்வாசனைநீர். இடை - ஏழனுருபு. புரை - இடம், துவாரம். ஒண்மை - சிறப்பு. காழகில் என்றும்பாடம். இதற்கு வயிரம் பற்றின அகிலென்க. படாம் - படம் என்னும் வடசொற்றிரிபு. தவ - மிகுதிப்பொருளதாகிய உரிச்சொல். மணிக்கம்பளம் - ரத்நகம்பளம். கம்பலம் - வடசொல். துவன்றிய என்னும் பெயரெச்சத்திற்குப் பகுதிதுவன்று. (கஎஉ)

அமைத்த சீர்மணி மாளிகை நாப்பண்வா ளவிரச்
சமைத்த பன்மணி யழுத்திய தடப்பரி யங்கத்
திமைத்த மூவகைப் பஞ்சியன் மயிரனத் தூவி
குமைத்தி யற்றிய வைந்தணை யடுக்கிமீக் குலவ.

(ப - ரை.) அமைத்த-அவ்வாறு அலங்கரிக்கப்பட்டிருக்கிற, சீர்-சிறந்த, மணிமாளிகைநாப்பண்-ரத்நமயமான மாளிகைகளினிடையே, வாள் அவிர-ஒளிவிளங்க, சமைத்த - (பொன்னினாலே) செய்யப்பட்ட, பல்மணி அழுத்திய - பலரத்நங்கள் பதித்த, தடம்பரியங்கத்து - பெரியகட்டிலிலே, இமைத்த - விளங்குகிற, மூவகைபஞ்சு - மூவகைப்பஞ்சையும், இயல்மயிர் - தகுதியான மயிர்களையும், அன்னம்தூவி - அன்னப்பறவையின் சிறகையும், குமைத்து - பதப்படுத்தி உள்ளேயமைத்து, இயற்றிய - செய்யப்பட்ட, ஐந்து அணை - ஐவகைமெத்தைகளை, அடுக்கி - (ஒன்றின்மேலொன்றாக) அடுக்கி, மீ - அதன்மேல், குலவ - விளங்க. எ - று.

(பொ - ரை.) இவ்வாறு அலங்கரிக்கப்பட்டிருக்கிற சிறந்தரத்நமயமான மாளிகைகளினிடையே ஒளிவிளங்கப் பொன்னினாலே செய்யப்பட்ட பலரத்நங்கள்பதித்த பெரிய கட்டிலிலே, விளங்குகிற மூவகைப்பஞ்சையும் தகுதியான மயிர்களையும் அன்னப்பறவையின் சிறகையும், பதப்படுத்தி உள்ளேயமைத்துச்செய்யப்பட்ட ஐவகைமெத்தைகளை (ஒன்றின்மேலொன்றாக) அடுக்கி, அதன்மேல் விளங்க. எ - று.

(வி - ரை.) பட்டுவிரித்து இயக்கினன வருஞ்செய்யுளோடு தொடரும், மூவகைப்பஞ்சாவன - இலவம் பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு என்பன.

பரிசம் இனியசிறந்த சிலமயிர், அன்னப்பறவையின் இறகுஎன்ற பஞ்சசயநப் பொருள்களால் தனித்தனியமைக்கப்பட்ட மெத்தைகளை ஒன்றன்மேலொன்றாக மூன்று முறையடுக்கிப்படுக்கையமைத்தல் இயல்பு. இது, "பாயிருட் பிழம்பு சீத்துப்பகற்கதிருமிழும் வெய்ய, காயெரிமணியிற்செய்த கவின்றிகழ்மஞ்சமீது, தூயமென்பஞ்சி யன்னத்தூவியூறினிய செய்யும், ஆய்மயிர் முதல மூவைந்தடுக்கிய வமளிசேர்த்தார்" என்றுவைடதத்திலும், "ஐந்து மூன்றடுத்த செல்வத்தமளி" என்று சிந்தாமணியிலும், அதற்கு, "ஐந்தாய வொன்று மும்மூன்றாகப்படுத்த" ஐந்தாவன - "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம், உறுதூவிசய்யை யோரைந்து" என்ற நச்சினார்க்கினியருரையிலும் விரிவாய்க்கூறப்பட்டிருத்தல் காண்க. ஐந்தணை என்பதற்கு, அழகு, குளிர்ச்சி, மென்மை, நறுமை, வெண்மை என்னும் ஐந்து குணங்களையுடைய மெத்தை என்றுரைத்தலுமாம். நாப்பண் - நடுவிடம். வாள் - உரிச்சொல். பர்யங்கம் - வடசொல். அனம் - தொகுத்தல் விகாரம். (கள௬)

உரக மெல்லுரி பரலெனக் குழையும்வெள் ளொளிப்பட்
டிரவெ ழுஞ்சுடர்க் கதிர்தவழ்ந் தெனவிரித் தியக்கி
யரவ மேகலை யாரமைத் திட்டவப் படுக்கை
விரவு பாற்கடற் படுக்கையிற் சிறப்புற மேவி.

(ப-ரை.) உரகம்-பாம்பினது, மெல்-மென்மையாகிய, உரி-தோலும், பரல் என - (இதன்மென்மைக்குமுன்) பருக்கைக்கல்லோடொக்கு மென்னும்படி, குழையும் - மிகுமென்மையாயுள்ள, வெள்ஒளிபட்டு - வெண்ணிறப்பட்டாடையை, இரவுஎழும்சுடர் கதிர்தவழ்ந்துஎன - இராக்காலத்தில் விளங்குகிற ஒளியாகிய சந்திரகிரணம் தவழ்ந்தாற்போல, விரித்து இயக்கி - மடிப்பு விரித்துப்பொருந்தப்பரப்பி, அரவம்மேகலையார் - ஒலியுள்ளமேகலாபரணத்தையணிந்தவராகிய மாதர், அமைத்திட்ட - அமைத்துவைத்த, அ - அந்த, படுக்கை - படுக்கையானது, பால்கடல்விரவு படுக்கையின் - திருப்பாற்கடலிற்பொருந்திய (ஆதிசேஷனாகிய) சயநத்தினும், சிறப்புஉற - சிறப்படைய, மேவி - (அதில்) பொருந்தி. எ - று.

(பொ - ரை.) பாம்பினது மென்மையாகிய தோலும் (இதன்மென்மைக்குமுன்) பருக்கைக்கல்லோடொக்கு மென்னும்படி மிகுமென்மையாயுள்ள வெண்ணிறப்பட்டாடையை, இராக்காலத்தில் விளங்குகிற ஒளியாகிய சந்திரகிரணம் தவழ்ந்தாற்போல மடிப்புவிரித்துப் பொருந்தப்பரப்பி, ஒலியுள்ள மேகலாபரணத்தை யணிந்தவராகிய மாதர் அமைத்துவைத்த அந்தப்படுக்கையானது திருப்பாற்கடலிற்பொருந்திய (ஆதிசேஷனாகிய) சயநத்தினும் சிறப்படைய (அதில்) பொருந்தி. எ - று.

(வி - ரை.) கவான்மிசைதலை வைத்துஎன, கஅக - வது செய்யுளோடு தொடர்ந்து முடியும். உரகம் - வடசொல். உரம் - மார்பு. கம் - நடப்பது, (நகர்வது)மார்பினால்நகர்வதுஎன்பதுபொருள். பாம்புக்குக்காலில்லையென்பது

பிரசித்தம். உரி - உரிக்கப்படுவதென்னும் பொருளில் செயப்படுபொருள் விகுதிபுணர்ந்து கெட்டபெயர். கெடாவிடின் உரிவையெனநிற்கும். பாம்பி னுரிமிக மெல்லிதென்பது பிரசித்தம், 'இரவெழுஞ்சுடர், என்றதனால் சந்தி ரன் எனப்பொருள் கூறலாயிற்று. மேகலை - எட்டுக்கோவையுள்ள மாதரி டையணி, இது, "எண்கோவை மேகலைகாஞ்சி யொருகோவை, பண்கொள் கலாபமிருபத்தைந்து, கண்கொள், பருமம் பதினாறு முப்பத்திரண்டு, விரி சிகையென்றுணரற்பாற்று" என்பதனாலினிது விளங்கும். அரவமேகலையார் என்றது பரிசாரகப்பெண்களை, அன்றித்தேவியரை யெனினுமாம். படுக்கை- தொழிற்பெயர். படுத்தல் செய்யுமிடம் என்பது பொருள். விரவு - தனக்குப் பள்ளி கொள்ளுமிடமாகப் பொருந்திய எனினுமாம். (கஎச)

அரும்பு சீதளப் பாற்கடற் றுயிலுநா ளவிரும்
விரும்பு செந்துகி ரோடலைக் கொழுந்தெழீஇ விழல்போற்
கரும்பு போன்மெனக் கரையுமஞ் சொல்லினர் கவரி
யிரும்பொற் கால்பிடித் தெக்கழுத் தம்பெற விரட்ட.

(ப - ரை.) அரும்பு - உண்டாகிய, சீதளம் - குளிர்ச்சியையுடைய, பால்கடல், திருப்பாற்கடலிலே, துயிலும்நாள் - யோகநித்திரைசெய்கிற சம யத்தில், அவிரும் - விளங்குகிற, விரும்பு - விரும்பப்படுகிற, செந்துகிரோடு- செந்நிறமாகிய பவளக்கொடியுடனே, அலைகொழுந்து - அக்கடலலையின் நுனி, எழீஇவிழல்போல் - மேலெழுந்து விழுதல்போல, கரும்புபோலும் என - கருப்பஞ்சாற்றை நிகர்க்குமென்னும்படி, கரையும் - பேசுகிற, அம் சொல்லினர் - அழகிய சொல்லையுடையமாதர், இரு - பெரிய, பொன் - பொன்மயமான, கால்பிடித்து - காம்புகளைக்கையிற் பிடித்துக்கொண்டு, எக்கழுத்தம்பெற - உயர்ச்சிபெற, கவரிஇரட்ட - சாமரம் வீசவும். எ - று.

(பொ - ரை.) உண்டாகிய குளிர்ச்சியையுடைய திருப்பாற்கடலிலே யோகநித்திரைசெய்கிற சமயத்தில், விளங்குகிற விரும்பப்படுகிற செந்நிறமா கிய பவளக்கொடியுடனே அக்கடலலையின் நுனிமேலெழுந்து விழுதல்போ லக்கருப்பஞ்சாற்றை நிகர்க்குமென்னும்படி பேசுகிற அழகிய சொல்லையு டையமாதர், பெரியபொன்மயமான காம்புகளைக்கையிற்பிடித்துக்கொண்டு, உயர்ச்சி பெறச்சாமரம் வீசவும். எ - று.

(வி - ரை.) படுத்திருந்தனன் என, கஅக - வது செய்யுளோடு தொட ரும்,வெண்சாமரத்துக்குப்பாற்கடலினலைக் கொழுந்தும்,செம்பொற் காம்புக் குக்கடலிலுள்ள பவளக்கொடியும் உவமையாம், இது நிறம் பற்றியதாதலால் வண்ணவுவமை யெனப்படும், சீதளம் - வடசொல், எழீஇ - எழுந்து, இது சொல்லிசையளபெடை. கரும்பு அதன் சாற்றையுணர்த்தலால் முதலாகு பெயர். போலும் என்பது போன்ம் என்றாயிற்று, இதனீற்றுமகரத்துக்குக் கால் மாத்திரையாதலால் மகரக்குறுக்கம் எனப்படும். (கஎரு)

அல்லி ரிக்குமுத் தோரம்வைத் தலங்குசாந் தாற்றி
மெல்லி யற்கவி ஞெருத்திகைப் பற்றுபு வீச

வல்லி யிற்பொலி யொருமகண் மாடகந் திரித்து
நல்லி யற்படு வீணையின ரப்பொலி யெழுப்ப.

(ப - ரை.) அல் இரிக்கும் - இருளையோட்டுகிற, முத்து - முத்துக்களை, ஓரம்வைத்து - ஓரத்திலமைக்கப்பெற்று, அலங்கு - அசையாநின்ற, சாந்தாற்றி - சாந்தாற்றியை, மெல்இயல்கவின் ஒருத்தி - மெல்லியலோடு அழகையுமுடைய ஒருத்தி, கைபற்றுபுவீச - கையிற்பிடித்துக்கொண்டு வீசவும், வல்லியின்பொலி - பூங்கொடி போலப்பொலிகின்ற, ஒருமகள் - ஒரு மாது, மாடகம்திரித்து - மாடகத்தை முறுக்கி, நல்இயல்படு - நல்லிலக்கணமமைந்த, வீணையின்நரப்பு - வீணையின்நரம்புகளில், ஒலிஎழுப்ப-ஓசையையுண்டாக்கவும். எ - று.

(பொ - ரை.) இருளையோட்டுகிற முத்துக்களை ஓரத்திலமைக்கப்பெற்று அசையாநின்ற சாந்தாற்றியைமெல்லியலோடு அழகையுமுடைய ஒருத்திகையிற் பிடித்துக்கொண்டு வீசவும், பூங்கொடிபோலப் பொலிகின்ற ஒரு மாது மாடகத்தை முறுக்கி, நல்லிலக்கணமமைந்த வீணையின் நரம்புகளில் ஓசையையுண்டாக்கவும். எ - று.

(வி - ரை.) அல்லிரிக்குமுத்து, என்றது பேரொளியையுடைய முத்து என்றபடி, "விலஃஃகி வீங்கிருளோட்டுமே மாதர், இலஃஃகு முத்தினினம்" என்றார் பிறரும், சாந்தாற்றி - சிற்றாலவட்டம், இது ஓர் விசிறிவிசேடம். மெல்இயல் - ம்ருதுஸ்வபாவம், பற்றுபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம், வல்லியின் என்பதில் இன்ஐந்தனுறழ்ச்சிப் பொருளதாகக்கொண்டு பூங்கொடியினும் என்றுரைப்பினுமாம், மாடகம் - வீணையின் முறுக்காணி, வீணையினரப்பொலியெழுப்ப; என்றது வீணைவாசிக்க என்றபடி. நரம்புநரப்பு எனவலித்தல் பெற்றது. (கஎகு)

குலவு கப்புர மிலவங்க மேலமுற் கூட்டி
நிலவு வெண்ணகை யொருத்திமென் பாகடை நீட்டக்
கலவ மாமயில் வெருவுறு சாயலங் கருங்க
ணிலவி தழ்க்கொடி யொருத்திபொற் படியக மேந்த.

(ப - ரை.) குலவு - (வெண்ணிறமாய்) விளங்குகிற, கப்புரம் - பச்சைக்கர்ப்பூரமும், இலவங்கம் - லவங்கமும், ஏலம் - ஏலமும், முன் - முதலான முகவாசப்பண்டங்களை, கூட்டி - ஒருங்குசேர்த்து, பாகுமெல்அடை - பாக்கோடுகூடிய மெல்லிய வெற்றிலையை, நிலவு வெள்நகை ஒருத்தி - நிலவு போன்ற வெண்மையாகிய புன்சிரிப்பையுடைய ஒருமாது, நீட்ட - கைநீட்டிக்கொடுக்கவும், கலவம் - தோகையையுடைய, மாமயில் - சிறந்தமயிலும், வெருவுறு - (ஒப்பாகாமையால்) அஞ்சுதற்குரிய, சாயல் - சாயலையும், அம் கருகண் - அழகிய கருங்கண்களையும், இலவுஇதழ் - இலவமலர்போன்ற அதரத்தையும் உடைய, கொடி - பூங்கொடிபோல்வாளாகிய, ஒருத்தி - ஒரு மாது, பொன்படியகம் - பொற்படியகத்தை, ஏந்த - (கைகளில்) எடுத்துப் பிடிக்கவும். எ - று.

(பொ - ரை.) (வெண்ணிறமாய்) விளங்குகிற பச்சைக்கர்ப்பூரமும் லவங்கமும் ஏலமும் முதலான முகவாசப்பண்டங்களை ஒருங்கு சேர்த்து பாக் கோடுகூடிய மெல்லிய வெற்றிலையை நிலவுபோன்ற வெண்மையாகிய புன் சிரிப்பையுடைய ஒருமாது கைநீட்டிக்கொடுக்கவும், தோகையையுடைய சிறந்தமயிலும் (ஒப்பாகாமையால்) அஞ்சுதற்குரிய சாயலையும், அழகிய கருங்கண்களையும், இலவமலர்போன்ற அதரத்தையும் உடைய பூங்கொடி போல்வாளாகிய ஒருமாது பொற்படியகத்தை (கைகளில்) எடுத்துப்பிடிக்க வும். எ - று.

(வி - ரை.) கப்புரம் - கர்ப்பூரம் என்னும் வடமொழிச்சிதைவு, இது பிராக்ருதம், "கப்புரப் பசுந்திரைகதிர் செய்மாமணிச், செப்பொடு சிலதிய ரேந்த" என்ற சிந்தாமணிச்செய்யுளுரையில், கப்புரம் - பாகதம்என நச்சி னார்க்கினியர் கூறியதுங்காண்க, லவங்கம் ஏலம் வடசொற்கள். முன் என்ற தனால் சாதிக்காய் வால்மிளகு முதலியவுங்கொள்க. சிந்தாமணியில், "இன்முக வாசச்செப்பு" என்ற இடத்தில், 'இனியமுகவாசமாவன' "தக்கோலந்தீம்பூத் தகை சாலிலவங்கம், கர்ப்பூரஞ்சாதி யோடைந்து" இவற்றோடு சருக்கரை யும் தேனுங்கூட்டுப, இதுமுதலில் கவுள்கொண்டு பின்பு பாகுகவுள்கொள்ள வேண்டுதலின், என நச்சினார்க்கினியர் வரைந்திருத்தல் காண்க. நிலவு-நிலா என்பதன் விகாரம், நகை - பற்கள் எனினுமாம், அடை - இலை, இது வெற் றிலைக்கு வருதலை, 'அடைக்காய்' என்பதிற்காண்க. மெல்லடை - மெல்லு தற்குரிய இலையென்றலுமொன்று, இது காரணப்பெயர், கலவம் - கலாபம் என்னும் வடசொற்றிரிபு. (கஎஎ)

வண்டு வார்குழ லாருள மயக்குநின் னுருவங்
கண்டு பாரென வொருத்திநேர் கண்ணடி காட்ட
விண்டு மென்பனி நீருறைத் திடுமிதின் விரைமிக்
குண்டு கொண்டிடென் றொருத்திபூஞ் செண்டுகை யுதவ.

(ப - ரை.) வண்டுவார் குழலார் - வண்டுகள் மொய்க்கின்ற நீண்ட கூந் தலையுடைய மாதரது, உளம் - மனத்தை, மயக்கும் - மயங்கச்செய்கிற, நின் உருவம் - உன்வடிவழகை, கண்டுபார் - கட்புலனாக நேரேபார்த்துக்கொள், என - என்று சொல்லிக்கொண்டு, ஒருத்தி - ஒருமாது, நேர் - எதிரில், கண் ணடிகாட்ட - கண்ணாடி காண்பிக்கவும், விண்டு - விரித்து. மெல்பனிநீர் - மெல்லியபனிநீரை, உறைத்திடும் - ஏற்றியிருக்கிற, இதின் - இதனது, விரை, வாசனையை, மிக்கு - மிகுதியாக, உண்டு கொண்டிடு - மோந்துகொள்- என்று - என்றுசொல்லிக்கொண்டு, ஒருத்தி - ஒருமாது, பூசெண்டு - பூச் செண்டினை, கைஉதவ - (தன் கைகளால்) ஸ்ரீ கண்ணபிரான் கையிற் கொடுக்கவும். எ - று.

(பொ - ரை.) வண்டுகள் மொய்க்கின்ற நீண்ட கூந்தலையுடைய மாத ரது மனத்தை மயங்கச்செய்கிற உன் வடிவழகைக்கட்புலனாக நேரே பார்த்

துக்கொள் என்று சொல்லிக்கொண்டு ஒருமாது எதிரில் கண்ணாடி காண்பிக்கவும், விரித்து மெல்லிய பனிநீரை ஏற்றியிருக்கிற இதனது வாசனையை மிகுதியாகமோந்து கொள் என்று சொல்லிக்கொண்டு ஒருமாது பூச்செண்டினைத் தன்கைகளால் ஸ்ரீ கண்ணபிரான் கையிற்கொடுக்கவும். எ - று.

(வி - ரை.) கொடுக்கவும் படுத்திருந்தனன் எனவியையும். வண்டு - கூந்தலினியற்கை மணமிகுதியை மோப்பதற்கும் அதிற்சூடின மலர்த்தேனைப்பருகுதற்கும் மொய்ப்பது, வார்குழல்-வாரிமுடிக்கப்பட்ட கூந்தல் எனினுமாம். மனத்தால் நோக்குதலை விலக்கிக்கண்ணால் நோக்குதலைக்குறித்தற்கு, 'கண்டுபார்' என்றது. கண்ணடி - விகாரம், விண்டு - மலர்ந்து என்றலும் ஒன்று, உண்டு கொண்டிடல் - உட்கொள்ளுதல், உண்டு என்னும் வாயின்தொழிலை மூக்கின் மேலேற்றிக்கூறினது உபசாரவழக்கு, மிக்குஉண்டு - மிகுதியாயுள்ளது, (ஆதலால்) கொண்டிடு - இதனை வாங்கிக்கையிற்கொள்வாய் என்றுரைப்பினுமாம். (கஎஅ)

இழைபி டைக்கொடி யொருத்திபொற் சிரகநீ ரேந்தத்
தழையொ ளிச்செழும் பாதுகை யொருத்திகைத் தாங்க
வழைம லர்த்தொடை வண்டரற் றிடநற வாக்கு
மழைமு கிற்குழ லொருத்திமெல் விரைப்புகை வயக்க.

(ப - ரை.) இழை இடை - நூலிழைபோலும் இடையையுடைய, கொடி - பூங்கொடிபோல்வாளாகிய, ஒருத்தி - ஒருமாது, பொன்சிரகம் நீர் ஏந்த - பொற்கரக நீரையேந்தி நிற்கவும், தழைஒளி - பெருகின ஒளியையுடைய, செழுபாதுகை - செழியபாதுகையை, ஒருத்திகைதாங்க - ஒருமாதுகையினால் தாங்கவும், வழைமலர்தொடை - சுரபுன்னைமலர்மாலையில், வண்டு அரற்றிட - வண்டுகள் ஆரவாரிக்க, நற வாக்கும் - தேனையொழுக்குகின்ற, மழைமுகில் - கார்காலத்துமேகம்போன்ற, குழல் - கூந்தலையுடைய, ஒருத்தி - ஒருமாது, மெல் - மிருதுவாகிய, விரைபுகைவயக்க - வாசனைப்புகையையுண்டாக்கவும். எ - று.

(பொ - ரை.) நூலிழைபோலும் இடையையுடைய பூங்கொடிபோல்வாளாகிய ஒருமாது பொற்கரகநீரை யேந்திநிற்கவும், பெருகின ஒளியையுடைய செழியபாதுகையை ஒருமாதுகையினால் தாங்கவும், சுரபுன்னைமலர்மாலையில் வண்டுகள்ஆரவாரிக்கத்தேனை யொழுக்குகின்ற கார்காலத்துமேகம்போன்ற கூந்தலையுடைய ஒருமாது மிருதுவாகிய வாசனைப்புகையை யுண்டாக்கவும். எ - று.

(வி - ரை.) இழையிடை யென்றது மிகவும் நுட்பமாகிய இடையென்றபடி., தழையொளிச்செழும் பாதுகையென்றதனால் பொன்மணிப்பாதுகை யென்றதாயிற்று, வாக்குதல் - ஒழுக்குதல் (வார்த்தல்), கருமைமிகுதி தோன்ற, 'மழைமுகில்'என்றார், விரைப்புகை-வாசனைப்புகை, (அகிற்கட்டை முதலியவற்றாற் புகைக்கும் புகை), ஏந்த, தாங்க, வயக்க என்னும்

வினையெச்சங்கள் அடுத்த செய்யுளில் முடித்தலைவைத்து என்னும் வினை கொண்டு முடியும். (௧௭௯)

பிணிய விழ்ந்துமட் டேற்றிவண் டடர்தரப் பிறங்குங்
கணிவ ளைந்தவொண் கருங்குழல் வெண்ணகைக் கனிவா
யணிசி றந்தரி படர்ந்தகண் ணணங்கெனு முருக்கு
மணிவ ளங்கெழு கவான்மிசை முடித்தலை வைத்து.

(ப - ரை.) பிணி அவிழ்ந்து - (அரும்புகளின்) கட்டுநெகிழ்ந்து, மட்டு ஊற்றி - தேனைச்சொரிந்து, வண்டு அடர்தர-வண்டுகள் நெருங்கிமொய்க்க, பிறங்கும் - விளங்குகிற, கண்ணி - பூமாலையை, வளைந்த - வளையச்சூடின, ஒள்கருகுழல் - ஒள்ளியகருங்கூந்தலையும், வெள்நகை - வெள்ளிய முறுவலையும், கனிவாய் - கோவைப்பழம்போன்ற அதரத்தையும், அணிசிறந்து-அழகு மிகுந்து, அரிபடர்ந்த - செவ்வரிகள் பரவிய, கண் - கண்களையுமுடைய, அணங்கு என்னும் - திருமகளெனப்படுகிற, உருக்குமணி - ருக்மிணீ பிராட்டியின், வளம்கெழு - அழகுபொருந்திய, கவான்மிசை - மடியின்மேல், முடிதலைவைத்து - கிரீடமணிகின்ற தன்தலையை வைத்துக்கொண்டு. எ - று.

(பொ - ரை.) (அரும்புகளின்) கட்டுநெகிழ்ந்து தேனைச்சொரிந்து வண்டுகள் நெருங்கிமொய்க்க விளங்குகிற பூமாலையை வளையச்சூடின ஒள்ளிய கருங்கூந்தலையும், வெள்ளிய முறுவலையும், கோவைப்பழம்போன்ற அதரத்தையும், அழகுமிகுந்து செவ்வரிகள் பரவிய கண்களையுமுடைய திருமகளெனப்படுகிற ருக்மிணீ பிராட்டியின் அழகு பொருந்திய மடியின்மேல் கிரீடமணிகின்ற தன் தலையைவைத்துக்கொண்டு.எ - று.

(வி - ரை.) பிணி - கட்டு, கண்ணி கணியெனத் தொகுத்தலாயிற்று, ருக்மிணீ - வடசொல், ருக்மம் - பொன், பொன்னிறமுள்ளவளாதலால் ருக்மிணியென்பது காரணப்பெயர். இவள் ஸ்ரீ கண்ணபிரானுக்குப் பட்டமஹிஷீ, (மூத்தமனைவி) இவள் விதர்ப்பதேசாதிபதியாகிய பீஷ்மகனுக்குப் புதல்வி, (ப்ரத்யும் நனுக்குத்தாய்), திருமால் சக்ரவர்த்தித்திருமகனாயவதரித்தபோது திருமகள் ஜநகராஜ குமாரியாகிய ஜாநகியாகவும், ஸ்ரீ கண்ணபிரானுயவதரித்தபோது விதர்ப்பராஜ குமாரியாகிய ஸ்ரீ ருக்மிணீபிராட்டியாகவும் அவதரித்தனள் என்பது புராணப்ரஸித்தமாதலால், 'அணங்கெனுமுருக்குமணி' என்றார். கவான் - தொடையெனினுமாம், இது கவிநீஎன்னும் வடசொற்சிதைவு, இது வேதத்தில் வழங்குவது. கருங்குழல் வெண்ணகை முரண்டொடை, முறுவல் - பல், புன்சிரிப்பு எனினுமாம். கனியெனவாளா கூறினராயினும் அதரத்துக்கு உவமிக்கப்படுபொருள்களுட் சிறந்தது கோவைக்கனியாதலால் அதனையே பொருளாக்கி யுரைக்கலாயிற்று. (௧௮௦)

ஆத ரத்தினன் புளுற்றுவார்க் கருண்மல ரடிகள்
காத ரங்கொளக் கூற்றொடும் பொருங்கொலைக் கருங்கண்

மாதர் சத்திய பாமைதன் கவான்மிசை வைத்துச்
சீத ரப்பிரான் படுத்திருந் தனன்களி சிறந்தே

(ப - ரை.) காதரம்கொள - அச்சங்கொள்ளும்படி, கூற்றொடும்பொரும் - யமனோடும் போர்செய்கிற, கொலை - கொலைத்தொழிலமைந்த, கருகண் - கருங்கண்களையுடைய, மாதர் - அழகுள்ள, சத்தியபாமை - சத்தியபாமையின், கவான்மிசை - மடியின்மேல், ஆதரத்தின் - விருப்பத்தோடு, அன்பு உஞற்றுவார்க்கு - அன்பு செய்வோர்க்கு, அருள் - (மோக்ஷத்தை) அருள்செய்கிற, மலர் அடிகள் - தாமரை மலர்போலுந்திருவடிகளை, வைத்து - வைத்துக்கொண்டு, சீதரன்பிரான் - ஸ்ரீ தரனாகிய கண்ணபிரான், களிசிறந்து - களிப்புமிகுந்து, படுத்திருந்தனன் - சயநித்துக்கொண்டிருந்தான்.

(பொ - ரை.) அச்சங்கொள்ளும்படியமனோடும் போர்செய்கிற கொலைத்தொழிலமைந்த கருங்கண்களையுடைய அழகுள்ள சத்தியபாமையின் மடியின்மேல், விருப்பத்தோடு அன்பு செய்வோர்க்கு (மோக்ஷத்தை) அருள் செய்கிற தாமரைமலர் போலுந்திருவடிகளை வைத்துக்கொண்டு ஸ்ரீதரனாகிய கண்ணபிரான் களிப்புமிகுந்து சயநித்துக்கொண்டிருந்தான். எ - று.

(வி - ரை.) ஆதரம், காதரம், ஸத்யபாமா, ஸ்ரீ தரன் என்பன வடசொற்கள். ஸ்ரீதரன் - திருமகளை மார்பிலுடையவன், பிரான் - உபகாரசீலன். மகளிர் கண்கள் அழகிய பார்வையால் ஆடவர்க்கு ஆசையதிகரிக்கச்செய்து வருத்துதலியல்பாதலால், 'கூற்றொடும் பொருங்கொலைக்கருங்கண், என்றார் மாதர் - உரிச்சொல்லாதலால் அதன்முன் வலியியல்பாயிற்று, சத்தியபாமைதன் என்பதில் தன் சாரியை, சத்தியபாமை - யாதவர்களுள் வ்ருஷ்ணிவம்ஸஸ்த்தனான நிம்நன்புதல்வனாகிய ஸத்ராஜித் என்னும் அரசன்மகள், இவள் ஸ்ரீ கண்ணபிரானது அஷ்டமஹிஷிகளில் ஒருத்தி, இவள்பொருட்டு பாரிஜாத வ்ருக்ஷத்தைக் கண்ணபிரான் கொணர்ந்தனர் என்பதுலோக புராணப்ரஸித்தம், இந்தக்கதையை பாரிஜாதாபஹரணம் என்னும் நூலில் விரிவாய்க்காணலாம், அன்பு - பக்தி, உஞற்றுதல்-செய்தல், கருங்கண் மாதர் என்பதற்குக் கருங்கண்ணழகையுடைய என்றுரைத்தலுமாம், படுத்திருந்தனன் - ஒருசொல், பகுதி படுத்திரு, களக-முதல் இச்செய்யுள்வரையும் குளகமாதலால், சுவர்க்கண் ஒன்றுமாறுகூட்டிக் குழைத்துப்பூசிப்புகைத்து விரித்து வயக்கி அமைத்தமாளிகை நாப்பண் பரியங்கத்து ஐந்தணையடுக்கி மீக்குலவவெண்பட்டு விரித்து இயக்கி அமைத்திட்ட படுக்கைமேவி இரட்ட நீட்ட ஏந்த காட்ட உதவ முடித்தலைவைத்து அடிவைத்து சீதரப்பிரான் படுத்திருந்தனன் என முடித்துக்கொள்க. (கஅக)

ஆய வேலையிற் றுவாரபா லகரழ கமைந்த
வாயில் காவல்செய் மாதரார் வாண்முக நோக்கிப்
போயு ரைத்திடு மெய்வர விறைக்கெனப் புகன்றார்
நேய மாதரும் விரைந்துசென் றதுநிகழ்த் தினரால்.

(ப - ரை.) ஆயவேலையில் - இவ்வாறாகிய அந்தச் சமயத்தில், துவார பாலகர் - (குசேலன் வரவையறிவிக்கச்சென்ற) வாயிற்காவலர், அழகு அமைந்த - அழகுநிறைந்த, வாயில்காவல்செய் - (அந்தப்புரத்தின்) வாயிலைக்காக்கிற, மாதரார் - மாதரது, வாள் - ஒளிபொருந்திய, முகம்நோக்கி - முகத்தைப்பார்த்து, போய் - (நீங்கள்) சென்று, இறைக்கு - நம்அரசனுக்கு, எம் வரவு உரைத்திடும் - எமது வருகையைச் சொல்லுங்கள், என புகன்றார் - என்று சொன்னார்கள், நேயம் மாதரும் - அன்புள்ள அம்மாதரும், விரைந்து சென்று - விரைவாக உட்புகுந்து, அது நிகழ்த்தினர் - அந்தச்செய்தியை ஸ்ரீ கண்ணபிரானுக்குச் சொன்னார்கள். எ - று.

(பொ - ரை.) இவ்வாறாகிய அந்தச்சமயத்தில் (குசேலன் வரவையறிவிக்கச்சென்ற) வாயிற்காவலர் அழகுநிறைந்த (அந்தப்புரத்தின்) வாயிலைக்காக்கிறமாதரது ஒளிபொருந்திய முகத்தைப்பார்த்து (நீங்கள்) சென்றுநம் அரசனுக்கு எமது வருகையைச் சொல்லுங்கள் என்று சொன்னார்கள், அன்புள்ள அம்மாதரும் விரைவாக உட்புகுந்து அந்தச்செய்தியை ஸ்ரீ கண்ணபிரானுக்குச் சொன்னார்கள்.

(வி - ரை.) வேலா என்னும் வடசொல் வேலையென்றாயிற்று, மாதரார் என்பதற்கு விரும்பப்படுந்தன்மையுள்ளவர் என்றும், அழகிற்சிறந்தவர் என்றும் பொருள்கொள்ளலாம், இதில் ஆர் விகுதி. ராஜஸ்த்ரீகள் வசித்தற்குரிய அந்தப்புரத்தைக் காவல்செய்தற்குரியார் மாதரென்பது தோன்ற, 'வாயில்காவல் செய்மாதரார்' என்றார், வாள்முகம் நோக்கி என்றது - செய்தி சொல்லுதற்குரியசமயம் நோக்கியென்றபடி. போய் உரைத்திடும் என்றமையால் துவாரபாலகர் அந்தப்புரவாயிலிற்றானே நின்றமைபெறப்பட்டது. எம் என்பதை வரவுக்கும் இறைக்கும் முன்னே கூட்டியுரைக்க, புகன்றார் என்பதற்குப் பகுதிபுகல். (கஅஉ)

மன்ன ரேறுகேட் டெழுந்திருந் தவர்வரு கென்றா
னன்ன மாதருஞ் செலவிட நடந்தன ரடைந்தார்
மின்னு தாரகைக் குழாத்திடை விளங்கொளி மதிபோற்
றுன்னு மாதருட் டோன்றிடுந் தோன்றலைக் கண்டார்

(ப - ரை.) மன்னர்ஏறு - ராஜசிங்கமாகிய ஸ்ரீ கண்ணபிரான், கேட்டு - (அம்மாதர் சொன்னதை) கேட்டு, எழுந்திருந்து - சயநம்விட்டெழுந்து, அவர்வருக என்றான் - அந்த துவாரபாலகர் உள்ளேவருவாராகவென்று நியமித்தான், (அவ்வாறே) அன்னமாதரும் - அந்தமகளிரும், செலவிட - (உள்ளே) போகும்படி அனுப்ப, (துவாரபாலகர்) நடந்தனர் அடைந்தார் - சென்று சேர்ந்தவராய், மின்னு - மின்னுகின்ற, தாரகை குழாத்திடை - நக்ஷத்ரசமூகத்தினிடையே, விளங்கு-பிரகாசிக்கிற, ஒளிமதிபோல்-ஒளியையுடைய சந்திரன்போல, துன்னும் - நெருங்கின, மாதருள் - மகளிர்கூட்டத்தினிடையே, தோன்றிடும் - காணப்படுகிற, தோன்றலை - (பெரியோனாகிய) ஸ்ரீ கண்ணபிரானை, கண்டார் - பார்த்தார்கள். எ - று.

(பொ - ரை.) ராஜசிங்கமாகிய ஸ்ரீ கண்ணபிரான் அம்மாதர் சொன்னதைக்கேட்டு சயனம்விட்டெழுந்து அந்த துவாரபாலகர் உள்ளே வருவாராக வென்று நியமித்தான், (அவ்வாறே) அந்தமகளிரும் (உள்ளே) போகும்படி அனுப்ப, (துவாரபாலகர்) சென்று சேர்ந்தவராய் மின்னுகின்ற நக்ஷத்ரசமூகத்தினிடையே, பிரகாசிக்கிற ஒளியையுடைய சந்திரன்போல நெருங்கின மகளிர் கூட்டத்தினிடையே காணப்படுகிற (பெரியோனாகிய) ஸ்ரீ கண்ணபிரானைப்பார்த்தார்கள். எ - று.

(வி - ரை.) தாரகைக்குழாம் மகளிர் கூட்டத்துக்கும், மதி ஸ்ரீ கண்ணபிரானுக்கும் உவமை. இருபத்தேழு நக்ஷத்ரங்களும் சந்திரனொருவனுக்கே மனைவியராதலால், அக்கூட்டம் ஸ்ரீ கண்ணபிரானது தேவிமார் கூட்டத்துக்கு ஏற்றவுவமையாம். சந்திரகுலத்தினனாகிய ஸ்ரீ கண்ணபிரானுக்குச் சந்திரனை உவமித்ததும் தகுதியேயாம். மன்னர் ஏறு என்பதற்கு, பகையரசராகிய யானைகளுக்கு ஆண்சிங்கம் போல்பவன் எனினுமாம், ஏறு - உவமையாகுபெயர், தாரகை - தாரகா என்னும் வடசொற்றிரிபு, தோன்றிடல் - சேவைசாதித்தல், தோன்றல் - (இம்மைமறுமை வீடு என்பவற்றைத் தருதலில்) சிறந்தவன். (கஅரு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

*சிந்தையுண் மகிழ்ச்சி பொங்கச் சிரமிசைக் கரங்கள் கூப்பிச்*
*சந்தமார் நிலத்தில் வீழ்ந்து தாழ்ந்தெழீஇக் குடங்கம் பட்டு*
*முந்து தானையு மொடுக்கி முன்னர்நிற் பாரை நோக்கி*
*வந்தகா ரியமென் னென்றான் வகுத்துரை யாட லுற்றார்.*

(ப - ரை.) (ஸ்ரீ கண்ணபிரானைத் தரிசித்தவுடனே) சிந்தைஉள் மகிழ்ச்சிபொங்க - மனத்தினுள்ளே ஆநந்தம் அதிகரிக்க, சிரம்மிசைகரங்கள் கூப்பி - தலைமேலே கைகளைக்குவித்துக்கொண்டு, சந்தம்ஆர்-அழகுநிறைந்த, நிலத்தில் வீழ்ந்து - தரையில் விழுந்து, தாழ்ந்து எழீஇ - வணங்கியெழுந்து, குடங்கம்பட்டு - உடம்பு வணங்கிநின்று, முந்துதானையும் ஒடுக்கி - முற்படுகிற தமது ஆடையையும் ஒடுக்கிக்கொண்டு, முன்னர் நிற்பாரை - எதிரில் நிற்பவர்களாகிய துவாரபாலகர்களை, நோக்கி - பார்த்து, (ஸ்ரீ கண்ணபிரான்) வந்தகாரியம் என் என்றான் - (நீங்கள் இவ்விடத்திற்கு) வந்த காரியம் யாது என்று வினவினான், (அதற்கு அந்தத்துவாரபாலகர்கள்) வகுத்து உரையாடலுற்றார் - வகுத்துச்சொல்லத் தொடங்கினார்கள். எ - று.

(பொ - ரை.) (ஸ்ரீ கண்ணபிரானைத் தரிசித்தவுடனே மனத்தினுள்ளே ஆநந்தம் அதிகரிக்கத்தலைமேலே கைகளைக்குவித்துக்கொண்டு, அழகுநிறைந்த தரையில் விழுந்து வணங்கியெழுந்து உடம்பு வணங்கி நின்று, முற்படுகிற தமது ஆடையையும் ஒடுக்கிக்கொண்டு எதிரில் நிற்பவர்களாகிய துவாரபாலகர்களைப்பார்த்து, (ஸ்ரீகண்ணபிரான்) நீங்கள் இவ்விடத்திற்கு வந்தகாரியம் யாது என்று வினவினான், (அதற்கு அந்த துவாரபாலகர்கள்) வகுத்துச்சொல்லத் தொடங்கினார்கள். எ - று.

No. 17. PAGE No. 166.



துவாரபாலகர் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினிடம் குசேலர் வருகையையுரைத்தது.

(வி - ரை.) தலைமேற் கைகளைக்குவித்து அஞ்சலித்தல் திரியங்க நமஸ்காரம் எனப்படும். நிலத்தில் வீழ்ந்து தாழ்ந்து என்றது தமதுடம்பினுறுப்புக்கள் நிலத்திற்படும்படி சாஷ்டாங்கமாக வீழ்ந்து நமஸ்கரித்து என்றபடி, திருமுருகாற்றுப்படையில், "குடந்தம்பட்டுக் கொழுமலர்சிதறி" என்பதற்கு நச்சினார்க்கினியர், 'குடந்தம்பட்டு - வழிபட்டு, வணக்கம்பட்டு என்றும் உரைப்பர், 'குடஎன்பது தடஎன்பது போலவளைவையுணர்த்துவதோர் உரிச்சொல்லாதலின், அதனடியாகப்பிறந்த பெயருமாம்" என்றுரை செய்திருத்தல் காண்க. முந்துதானை யொடுக்குதல் அடக்கத்தின்செயல். அடக்கமென்பது உயர்ந்தோர்முன் அடங்கியொழுகும் ஒழுக்கம், அவை - பணிந்தமொழியும் தணிந்தநடையும் தானைமடக்கலும் வாய்புதைத்தலும் முதலாயின. (கஅச)

மாமறைத் தலைவ போற்றி மதிக்குல விளக்கே போற்றி
காமரிந்திரன்முன் னோர் காண்பதற் கரியாய் போற்றி
தாமரைக் கண்ணு போற்றி தரியல ரேறே போற்றி
தோமறு செல்வம் வாய்ந்த துவாரகைக் கிறைவ போற்றி.

(ப - ரை.) மாமறைதலைவபோற்றி - பெரியவேதமுதல்வனே உனக்கு நமஸ்காரம், மதிகுலம்விளக்கேபோற்றி - சந்திரகுலதீபமே உனக்கு நமஸ்காரம், காமர் இந்திரன்முன் ஆனோர் - அழகிய இந்திரன் முதலானோர், காண்பதற்கு அரியாய்போற்றி - காண்பதற்கருமையானவனே உனக்கு நமஸ்காரம், தாமரைகண்ணுபோற்றி - தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடையவனே உனக்கு நமஸ்காரம், தரியலர் ஏறேபோற்றி - பகைவராகிய யானைகளுக்கு ஆண்சிங்கம்போல் பவனே உனக்கு நமஸ்காரம், தோம் அறு செல்வம் வாய்ந்த - குற்றமற்ற செல்வம் நிரம்பப்பெற்ற, துவாரகைக்கு இறைவ போற்றி - திருத்துவாரகைக்கு அரசனே உனக்கு நமஸ்காரம். எ - று.

(பொ-ரை.) பெரிய வேதமுதல்வனே உனக்கு நமஸ்காரம், சந்திரகுலதீபமேஉனக்கு நமஸ்காரம், அழகிய இந்திரன் முதலானோர் காண்பதற்கருமையானவனே உனக்கு நமஸ்காரம், தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடையவனே உனக்கு நமஸ்காரம், பகைவராகிய யானைகளுக்கு ஆண்சிங்கம் போல்பவனே உனக்கு நமஸ்காரம், குற்றமற்ற செல்வம் நிரம்பப்பெற்ற திருத்துவாரகைக்கு அரசனே உனக்கு நமஸ்காரம். எ - று.

(வி - ரை.) மாமறை என்பதற்குச் சதுர்வித புருஷார்த்தங்களையும் தருதலாகிய அழகமைந்த வேதம் எனினுமாம். அவ்வேதத்தில் பிறதேவர்களும் கூறப்படுவோராயினும் தலைமைபற்றி மறைத்தலைவ என ஸ்ரீகண்ணபிரானை விளிக்கலாயிற்று. சந்திரவமிசம் மிகவும் விளக்கமடைந்தது ஸ்ரீகண்ணபிரானது திருவவதாரத்தாலாதலால், 'மதிக்குலவிளக்கே' என்றார். காமரிந்திரன் என்பதை காமரு இந்திரன் எனப்பிரித்து கற்பகமரநிழலில் வீற்றிருக்கிற இந்திரன் என்றுரைத்தலுமாம், மரு என்பதினீற்றுகரம் குறைந்து

வந்ததாகக்கொள்க. எறு என்றதற்கேற்ப, தரியலரையானை யென்றனைக்
லாயிற்று, இது ஏகதேசரூபகம். தோமறுசெல்வம்-நல்வழியில்வந்தசெல்வ

ஆதிநா ளைய நின்னோ டருங்கலை கற்று ளானும்
போ தவுஞ் சிறந்த நட்புப் பூண்டுகொண் டவனுங் கந்தை
மேதகக் கொண்ட நீரான் மெய்ம்மறை யவர்கு லத்தான்
கோதறு குணத்தின் மிக்கான் குசேலனென் றியம்பி னான்பேர்.

(ப - ரை.) ஐய - ஐயனே, ஆதிநாள் - முற்காலத்தில், நின்னோடு - உன்னோடுகூடி, அருகலைகற்றுளானும் - அரியநூல்களைக் கற்றவனும், போ தவும் - மிகவும், சிறந்தநட்புபூண்டு கொண்டவனும் - (உன்னோடு) அதிக சிநேகத்தை மேற்கொண்டவனும், கந்தை - கந்தைத்துணியை, மேதகக் கொண்ட நீரான் - மேன்மையாக உடுத்திருக்கிற குணவாளன், மெய்மறையவர் குலத்தான் - உண்மையையுடைய வேதியர் குலத்திலுதித்தவன், கோது அறுகுணத்தின் மிக்கான் - குற்றமற்ற குணத்தாற் சிறந்தவன், (இத்தன்மையுள்ள அவன்) பேர் - தன்பேர், குசேலன் என்று இயம்பினான் - குசேலனென்று சொன்னான். எ - று.

(பொ - ரை.) ஐயனே, முற்காலத்தில், உன்னோடுகூடி அரியநூல்களைக் கற்றவனும், மிகவும் (உன்னோடு) அதிக சிநேகத்தை மேற்கொண்டவனும், கந்தைத்துணியை மேன்மையாக வுடுத்திருக்கிற குணவாளன், உண்மையையுடைய வேதியர் குலத்திலுதித்தவன், குற்றமற்ற குணத்தாற் சிறந்தவன், (இத்தன்மையுள்ள அவன்) தன்பேர் குசேலனென்று சொன்னான்.

(வி - ரை) ஆதிநாள் என்றது சாந்திபனிடத்துக் கல்விகற்றநாள் என்றபடி, ஐயஎன்பதற்கு அழகனேயென்றுரைப்பினுமாம், அருங்கலை - கற்றற்கரிய நூல்கள், அவை வேதவேதாங்கங்கள் முதலாயின. சிறந்தநட்பு - உடம்பிரண்டு உயிரொன்று என்னலாம்படியான நட்பு. இது தலையாய நட்பு எனப்படும். நட்புப்பூண்டுகொண்டவன் என்றது நட்பையே ஆபரணமாகத் தரித்துக்கொண்டவன் என்றபடி, மானாபரணன், அமராபரணன் என்றற்றொடக்கத்தனவாகப் பிறர் கூறுதலுங்காண்க. நீர் - குணம். கோதறுகுணம் - சமதமாத்யாத்ம குணங்கள். (கஅகு)

வற்றியென் பெழுந்த யாக்கை மாதவ னின்மேல் வைத்த
பற்றினை யெம்ம னோரோ பகுத்தறிந் தளக்க வல்லா
ரிற்றைநாள் வந்து வாயி லிருக்கின்றா னெதிர்ந்த போரில்
வெற்றிகொள் கழற்கால் வேந்தே விண்ணப்ப மிதுவே யென்றார்.

(ப - ரை.) வற்றி - வற்றி, என்பு எழுந்த - எலும்புகள் புறத்தே காணப்படுகிற, யாக்கை - சரீரத்தையுடைய, மாதவன் - பெருந்தவத்தினனாகிய அந்தக்குசேலன், நின்மேல்வைத்த பற்றினை-உன்மேல்வைத்த அன்பை, பகுத்து அறிந்து - பகுத்துணர்ந்து, அளக்கவல்லார் - சொல்லவல்லார், எம் அனோரோ - எம்போல்வாரோ, (அவன்) இற்றைநாள் வந்து-இன்று வந்து,

வாயில் இருக்கின்றான் - (நமது) அரண்மனையின் தலைவாயிலிலிருக்கிறான், எதிர்ந்தபோரில்-பகைவர் எதிர்ந்த போர்க்களத்தில், வெற்றிகொள் - (அவர்களை) வெற்றிகொண்ட, கழல்கால் வேந்தே - வீரக்கழலையணிந்த பாதத்தையுடைய அரசனே, இதுவே விண்ணப்பம் என்றார்-இதுதான் எமது விண்ணப்பம் என்று சொன்னார்கள். எ - று.

(பொ - ரை.) வற்றி எலும்புகள் புறத்தே காணப்படுகிற சரீரத்தையுடைய பெருந்தவத்தினனாகிய அந்தக்குசேலன் உன்மேல்வைத்த அன்பைப் பகுத்துணர்ந்து சொல்லவல்லார் எம்போல்வாரோ, (அவன்) இன்றுவந்து (நமது அரண்மனையின்) தலைவாயிலிலிருக்கிறான், பகைவர் எதிர்ந்தபோர்க்களத்தில் அவர்களை வெற்றிகொண்ட வீரக்கழலையணிந்த பாதத்தையுடைய அரசனே, இதுதான் எமது விண்ணப்பமென்று சொன்னார்கள். எ - று.

(வி - ரை.) வற்றியென் பெழுந்தயாக்கை மாதவன் என்றது, உண்டி சுருக்கல் முதலியதவத் தொழிலான் வருந்தியிளைத்தவுடம்பினன் என்றபடி, "என்பெழுந்தியங்கும் யாக்கையர்" என்றார் பிறரும். எம்மனோரோ என்பதில் ஓகாரம் எதிர்மறை, அளத்தல் - சொல்லல். கழல் - வீரவிருது (வீரவெண்டயம்) விண்ணப்பம் - விநயமொழி. (கஅஎ)

என்றலு முவகை விம்ம வெழின்முக மலர்ச்சி காட்டப்
பொன்றலில் கருணை பொங்கிப் பொழிதர விரைவி னிற்சென்
றின்றுநம் வாயில் வந்த விருந்தவத் தலைவன் றன்னை
மன்றவிங் கழைப்பீ ரென்று வாய்மலர்ந் தருளி னானே.

(ப - ரை.) என்றலும் - என்றுசொல்லுதலும், (கேட்ட ஸ்ரீகண்ணபிரான்) உவகைவிம்ம - மகிழ்ச்சி அதிகரிக்க, எழில்முகம் - அழகியமுகமானது, மலர்ச்சிகாட்ட - விளக்கத்தைக்காட்ட, பொன்றலில் - அழிவற்ற, கருணை - அருளானது, பொங்கி பொழிதர - அதிகமாய்ப்பெருக, (துவாரபாலகர்களை நோக்கி) (நீங்கள்) விரைவினில் சென்று - விரைவாகப்போய், இன்று நம்வாயில்வந்த - இன்று நமது தலைவாசலில் வந்திருக்கிற, இருதவத் தலைவன் தன்னை - பெரியதவசிரேஷ்டனை, மன்ற இங்கு அழைப்பீர் - நிச்சயமாக இங்கு அழைத்துவாருங்கள், என்று - என்று, வாய்மலர்ந்து அருளினான் - திருவாய் மலர்ந்தருளிச் செய்தான். எ - று.

(பொ - ரை.) என்று சொல்லுதலும் (கேட்ட ஸ்ரீகண்ணபிரான்) மகிழ்ச்சி அதிகரிக்க, அழகிய முகமானது விளக்கத்தைக்காட்ட, அழிவற்ற அருளானது அதிகமாய்ப்பெருக, (துவாரபாலகர்களை நோக்கி) (நீங்கள்) விரைவாகப்போய், இன்று நமது தலைவாசலில் வந்திருக்கிற பெரிய தவசிரேஷ்டனை நிச்சயமாக இங்கு அழைத்து வாருங்களென்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தான். எ - று.

(வி - ரை.) அடுத்தது காட்டும் பளிங்குபோனெஞ்சங், கடுத்தது காட்டுமுகம்" என்றபடியே, அகத்து நிகழ்ச்சியை முகத்திற்காணலா மாதலால்,

உவகைவிம்மவெழின் முகமலர்ச்சிகாட்ட' என்றார். பொன்றவில் கருணை - அளவிலாக்கருணை. இச்செய்யுளில் 'இன்று நம்வாயில்வந்த' என்றும், மேலைச் செய்யுளில் 'இற்றைநாள்வந்து வாயிலிருக்கின்றான், என்றும் கூறியது இதுவரையில் இவன் ஒருநாளும் ஸ்ரீகண்ணபிரானிடத்திற்கு வந்திலன் என்பதை விளக்கும். மன்ற - தேற்றப்பொருளுணர்த்தும் இடைச்சொல். திருவாய்தாமரைமலர் போறலால் அதற்கு மலர்ந்து என்னும் வினைகொடுத்தார். அருளுதல் - சொல்லுதற்கு உபசாரவழக்கு. பொழிதர என்பதற்குப் பகுதி பொழிதா. (கஅஅ)

கேட்டனர் துவார பாலர் கிளர்ந்தெழுகளிப்புத்துள்ள
வாட்டமின் மனத்த ராகி வாயில்கள் பலவு நீத்து
நாட்டுதங் காவல் வாயி னண்ணின ராங்கி ருக்குங்
கோட்டமின் மனத்துச் செய்ய குசேலமா முனியைச் சார்ந்தார்.

(ப - ரை.) கேட்டனர் - (ஸ்ரீகண்ணபிரான் இப்படி சொல்ல)கேட்டு, துவாரபாலர் - துவாரபாலகர்கள், கிளர்ந்து எழு - பொங்கியெழுகின்ற, களிப்புதுள்ள - சந்தோஷம் மிக, வாட்டம்இல் - வாடுதலில்லாத, மனத்தர்ஆகி - மனத்தையுடையவர்களாகி, வாயில்கள் பலவும் நீத்து - வாசல்கள் பலவற்றையும் கடந்து, நாட்டு - நிலைபெற்ற, தம் காவல்வாயில் - தாம்காவல் செய்யும் தலைவாயிலை, நண்ணினர் - அடைந்து, ஆங்கு இருக்கும் - அவ்விடத்திலிருக்கிற, கோட்டம் இல்மனத்து - கோணுதலில்லாத மனத்தையுடைய, செய்ய - நற்குணமுள்ள, மா - பெருமையமைந்த, குசேலமுனியை- குசேலமுனிவனை, சார்ந்தார் - அடுத்தார்கள். எ - று.

(பொ - ரை.) (ஸ்ரீகண்ணபிரான் இப்படிசொல்லக்கேட்டு, துவாரபாலகர்கள், பொங்கியெழுகின்ற சந்தோஷம்மிக, வாடுதலில்லாத மனத்தையுடையவர்களாகி, வாசல்கள் பலவற்றையுங் கடந்து, நிலைபெற்ற தாம் காவல்செய்யும் தலைவாயிலையடைந்து அவ்விடத்திலிருக்கிற கோணுதலில்லாத மனத்தையுடைய நற்குணமுள்ள பெருமையமைந்த குசேலமுனிவனை அடுத்தார்கள். எ - று.

(வி - ரை.) வாட்டம், கோட்டம் என்பன தொழிற்பெயர்கள், வாடு, கோடுபகுதி, அம்விகுதி, ட் - விரித்தல். கோட்டம் - மாறுபாடு; சொற்செயல்களோடு பொருந்தாமை. செய்ய என்பதன் பகுதியாகிய செம்மை நன்மைப்பொருளது, கேட்டனர் நண்ணினர் என்பன முற்றெச்சங்கள்.

ஆதரம் பெருக நெற்றி யணிநிலந் தோயத் தாழ்ந்து
மாதவ ரேறே போற்றி மறைக்குலச் சுடரே போற்றி
காதரம் பெருக்குஞ் சன்மக் கடல்கடந் தவனே போற்றி
நாதனுக் கினிமை மிக்க நண்பிடை யவனே போற்றி.

(ப - ரை.) (குசேலமுனிவனை யடுத்த துவாரபாலர்கள்) ஆதரம்பெருக - அன்பு அதிகரிக்க, நெற்றி - நெற்றியானது, அணிநிலம் தோயதாழ்ந்து-

அழகியதரையிற்படும்படி வீழ்ந்துவணங்கி, மாதவர் ஏறேபோற்றி - பெருந்தவத்தினருள்ளே சிறந்தவனே உனக்குநமஸ்காரம், மறைக்குலச்சுடரேபோற்றி - வேதியர் குலத்துக்குத்தீபமே உனக்குநமஸ்காரம், காதரம்பெருக்கும்- அச்சத்தைப் பெருக்குகிற, சன்மக்கடல் - பிறவிக்கடலை, கடந்தவனே-தாண்டினவனே, போற்றி - உனக்குநமஸ்காரம், நாதனுக்கு - இறைவனாகிய ஸ்ரீகண்ணபிரானுக்கு, இனிமைமிக்க - இன்பமிகுந்த, நண்புஉடையவனே - நட்புள்ளவனே, போற்றி - உனக்குநமஸ்காரம். எ - று.

(பொ - ரை.) (குசேல முனிவனையடுத்த துவாரபாலகர்கள்) அன்பு அதிகரிக்க, நெற்றியானது அழகிய தரையிற்படும்படி வீழ்ந்து வணங்கி, பெருந்தவத்தினருள்ளே சிறந்தவனே உனக்கு நமஸ்காரம், வேதியர் குலத்துக்குத்தீபமே உனக்கு நமஸ்காரம், அச்சத்தைப் பெருக்குகிற பிறவிக்கடலைத் தாண்டினவனே உனக்கு நமஸ்காரம், இறைவனாகிய ஸ்ரீகண்ணபிரானுக்கு இன்பமிகுந்த நட்புள்ளவனே உனக்கு நமஸ்காரம். எ - று.

(வி - ரை.) மாதவரேறே என்பதில் ஏறு சிறந்தவன் என்னும் பொருள் குறித்தது. சன்மக்கடல் - பிறவியாகிய கடல், பெருக்குதல் - மேன்மேலும் பெருகச் செய்தல், பிறவி அச்சத்துக்கேகாரணமாதலால், 'காதரம் பெருக்குஞ்சன்மம்' என்றார். கடந்தவனே யென்றது கடந்து முத்திக்கரையிலேறினவனே என்றபடி. நெற்றிதோய எனவியையும், இன்னார்க்கு என்னாது நாதன் எனவாளாகூறினது ப்ரஹ்மருத்ரேந்த்ராதியராகிய எல்லார்க்கும் என்னும் பொருள் போதரற்கென்க. (கக௦)

என்றுபஃ றுதிமு ழக்கி யாங்கள்பல் வாயி னீந்தித்
துன்றிய கதுப்பின் மாதர் சொற்படி யுவள கம்போ
யொன்றுபல் பிடிகள் சூழ வுறுங்கடக் களிறுபோன்று
மின்றிகழ் மடவார் சூழ வீற்றிருந் தானைக்கண்டு.

(ப - ரை.) என்று பல்துதிமுழக்கி - என்றுபலதோத்திரங்களை மிகுதியாகச்செய்து, யாங்கள் - நாங்கள், பல்வாயில்நீந்தி - பலவாயில்களையுங் கடந்து, துன்றிய - நெருங்கின, கதுப்பின் - கூந்தலையுடைய, மாதர் - மாதரது, சொற்படி - சொல்லின்படியே, உவளகம்போய் - அந்தப்புரத்திற் சென்று, ஒன்று - பொருந்திய, பல்பிடிகள்சூழ - பலபெண்யானைகள் சூழ, உறும் - (அவற்றினிடையே) இருக்கிற, கடக்களிறுபோன்று - ஒருமதயானை போன்று, மின்திகழ் - மின்னற்கொடிகள்போல விளங்குகிற, மடவார் சூழ- மாதர்சூழ, வீற்றிருந்தானைகண்டு - (அவர்களுக்கிடையே) வீற்றிருந்தவனாகிய ஸ்ரீகண்ணபிரானைக்கண்டு. எ - று.

(பொ - ரை.) என்று பலதோத்திரங்களை மிகுதியாகச் செய்து, நாங்கள் பலவாயில்களையுங்கடந்து நெருங்கின கூந்தலையுடைய மாதரது சொல்லின்படியே அந்தப்புரத்திற்சென்று, பொருந்தியபலபெண்யானைகள் சூழ (அவற்றினிடையே) இருக்கிற ஒரு மதயானைபோன்று, மின்னற்கொடி

கள் போலவிளங்குகிற மாதர்சூழ (அவர்களுக்கிடையே) வீற்றிருந்தவனாகிய ஸ்ரீ கண்ணபிரானைக்கண்டு. எ - று.

(வி - ரை.) முழக்கியென்றது மிகுதியாய்ச்செய்தஎன்றபடி, கதுப்பு-பெண்மயிர் (கூந்தல்), பிடி - பெண்யானை, கடம்-மதம், களிறு-ஆண்யானை, மின்திகழ் - உவமைத் தொகை, வீற்றிருந்தான் - வினையாலணையும் பெயர்.

நின்னுடை வரவு ரைத்தே நிருபனுக் கப்போழ் துற்ற
பன்னருங் களிப்பை யாமோ பகர்ந்திட வல்ல மைய
முன்னமங் கிருந்த வின்ப முழுவது மறந்து நின்று
னன்னர்நெஞ் சுடைய நீரார் நட்பினிற் சிறந்த துண்டோ.

(ப - ரை.) நின்உடைவரவு உரைத்தேம் - உனது வருகையைச்சொல்லினேம், நிருபனுக்கு - (சொல்லக் கேட்ட) அரசனாகிய ஸ்ரீ கண்ணபிரானுக்கு, அப்போழ்துஉற்ற - அப்பொழுதுண்டான, பன்அருகளிப்பை - சொல்லுதற்கரிதாகிய சந்தோஷத்தின் தன்மையை, யாமோபகர்ந்திடவல்லம் - நாங்களோ சொல்லவல்லோம், ஐய - ஐயனே, முன்னம் - முன்னே, அங்கு இருந்த - அங்கே நுகர்ந்திருந்த, இன்பம் முழுவதும் - சுகமுழுதும், மறந்து நின்றான் - மறந்து (ஒரேநிலையாய்) நின்று விட்டான், நன்னர்நெஞ்சு உடைய நீரார் - நல்ல மனத்தையுடையவர்களாகிய நற்குணத்தினரது, நட்பினின் - நட்பினும், சிறந்ததுஉண்டோ-சிறந்ததொரு பொருள்(உலகத்தில்)உளதோ.

(பொ - ரை.) உனது வருகையைச்சொல்லினேம்,(சொல்லக்கேட்ட) அரசனாகிய ஸ்ரீ கண்ணபிரானுக்கு அப்பொழுதுண்டான சொல்லுதற்கரிதாகிய சந்தோஷத்தின் தன்மையை நாங்களோசொல்லவல்லோம், ஐயனே, முன்னே அங்கே நுகர்ந்திருந்த சுகமுழுதும் மறந்து (ஒரேநிலையாய்) நின்று விட்டான், நல்ல மனத்தையுடையவர்களாகிய நற்குணத்தினரது நட்பினும் சிறந்ததொருபொருள் (உலகத்தில்) உளதோ. எ - று.

(வி - ரை.) வரவு - தொழிற்பெயர், நிருபன் - ந்ருபன் என்னும் வடசொற்றிரிபு, பன்னுதல் - சொல்லுதல், யாமோ, உண்டோ என்பவற்றுள் ஓகாரங்கள் எதிர்மறைப்பொருள, நன்னர் - நன்மை, நட்பினின் என்பதில் இன் ஒப்புப்பொருளதெனினுமாம். (௧௧௨)

தாயது வருகை கேட்ட தனியிளங் குழவி போன்று
நேயமிக் குடைய னாகி நெஞ்சினு ளுவகை பூப்பப்
போயழைத் திடுமி னின்னே போயழைத் திடுமி னின்னே
போயழைத் திடுமி னின்னே யெனவிரை பொருளிற் சொற்றான்.

(ப - ரை.) (உன் வருகையை யாம் சென்றுதெரிவித்தமாத்திரத்தில், ஸ்ரீ கண்ணபிரான்) தாயதுவருகைகேட்ட - தாயின்வருகையைக் கேட்டறிந்த, தனிஇளகுழவிபோன்று - தனியேயிருந்த இளங்குழந்தையை நிகர்த்து, நேயம்மிக்கு உடையன் ஆகி - அன்பைமிகுதியும் உடையவனாகி, நெஞ்சி

னுள் உவகைபூப்ப - மனத்தில் மகிழ்ச்சி அதிகரிக்க, இன்னேபோய் அழைத்திடுமின் இன்னேபோய் அழைத்திடுமின் இன்னேபோய் அழைத்திடுமின்என - இப்பொழுதேபோய் அழைத்திடுங்கள் இப்பொழுதேபோய் அழைத்திடுங்கள் இப்பொழுதேபோய் அழைத்திடுங்கள் என்று, விரைபொருளின் சொற்றான் - விரைவுப்பொருளில் (மும்முறையடுக்காகக்) கூறினான்.

(பொ - ரை.) (உன்வருகையை யாம்சென்று தெரிவித்தமாத்திரத்தில், ஸ்ரீகண்ணபிரான்) தாயின் வருகையைக்கேட்டறிந்த தனியேயிருந்த இளங்குழந்தையை நிகர்த்து, அன்பைமிகவும் உடையவனாகி மனத்தில் மகிழ்ச்சி அதிகரிக்க, இப்பொழுதேபோய் அழைத்திடுங்கள் இப்பொழுதே போய் அழைத்திடுங்கள் இப்பொழுதே போய் அழைத்திடுங்கள் என்று விரைவுப்பொருளில் (மும்முறையடுக்காகக்) கூறினான். எ - று.

(வி - ரை.) தாய்-இருதிணைப்பொதுப்பெயர், தனி-தனிமை, வேறொரு துணையின்றித்தானே தனித்திருக்குந்நிலை. குழ - இளமை, (உரிச்சொல்) அதனையுடையது குழவி, இதில் இ பெயர் விகுதி,அழைத்திடுமின் என்பதில் இடு துணிவுப்பொருளது, இன்னே - காலவிரைவு காட்டும் இடைச்சொல்.

இலக்கண மின்மை நோக்கி யிதற்குமேற் சொற்றா னல்லன்
மலக்குறும் பறுத்து யர்ந்த மாதவத் தலைவ ரேறே
பலப்பல சொல்லி யென்னை பாணித்தல் கரும மன்று
நலக்கநீ விரைவி னெய்தா விடினவ னண்ணு மிங்ஙன்.

(ப - ரை.) இலக்கணம் இன்மைநோக்கி - இலக்கணமில்லாமையை நோக்கி, இதற்குமேல் - இதினும் அதிகமாக, சொற்றான் அல்லன் - சொன்னானல்லன், மலக்குறும்பு அறுத்து - மலக்குறும்பினையறுத்து, உயர்ந்த - உயர்ந்திருக்கிற, மாதவத்தலைவர் - மாதவசிரேஷ்டருக்குள்ளே, ஏறே - சிறந்தோனே, பலப்பலசொல்லி என்னை - பலப்பல சொற்களைச்சொல்லி என்னபயன், பாணித்தல்-தாமதித்தல், கருமம்அன்று - காரியமல்ல, நலக்க-நன்மையுண்டாக, நீவிரைவின் எய்தாவிடின் - நீவிரைவாகவாராயாயின், அவன் - அந்த ஸ்ரீ கண்ணபிரான், இங்ஙன் நண்ணும் - இவ்விடத்திற்கு வருவான். எ - று.

(பொ - ரை.) இலக்கணமில்லாமையை நோக்கி இதினும் அதிகமாகச் சொன்னானல்லன், மலக்குறும்பினையறுத்து உயர்ந்திருக்கிற மாதவசிரேஷ்டருக்குள்ளே சிறந்தோனே, பலப்பல சொற்களைச்சொல்லி யென்னபயன், தாமதித்தல் காரியமல்ல, நன்மையுண்டாக நீவிரைவாகவாராயாயின் அந்த ஸ்ரீ கண்ணபிரான் இவ்விடத்திற்கு வருவான். எ - று.

(வி - ரை.) இலக்கணம், விரைவினிறுதியெல்லையைக் குறித்தற்கு மும்முறையடுக்குக்கு அதிகமாகச்சொல்லா மென்னும் இலக்கணம், மலக்குறும்பு - மலப்பகைவர், நலக்க-நலம் என்னும் பெயரடியாகப்பிறந்த வினையெச்சம், நீயெய்தாவிடின் எனவியையும். (கககச)

ஆதலி னெம்பி ரானுக் ககத்துமிக் குவகை யுய்ப்ப
வேதமின் முனிவ ரேறே யெழுந்தரு ளுகவென் றங்கைப்
போதகங் கூப்பி னார்கள் பொருக்கென வெழுந்து செம்மை
வேதமுற் றுணர்ந்த வையன் விரைதர நடக்க லுற்றான்.

(ப - ரை.) ஆதலின் - ஆதலால், எம்பிரானுக்கு - எமது தலைவனாகிய ஸ்ரீ கண்ணபிரானுக்கு, அகத்து - திருவுளத்தில், மிக்க - மேலான, உவகை உய்ப்ப - மகிழ்ச்சியை யுண்டாக்கும்படி, ஏதம்இல் - குற்றமற்ற, முனிவர் ஏறே - முனிசிரேஷ்டனே, எழுந்தருளுக - நீயெழுந்தருளக்கடவை, என்று - என்றுசொல்லி, அங்கைபோது அகம்கூப்பினார்கள் - அழகியதமது கைத்தாமரை மலரினிடத்தைக்குவித்து வணங்கினார்கள், (உடனே) செம்மை வேதம் முற்று உணர்ந்த - செவ்வையாக வேதமுழுதுமறிந்த, ஐயன்-குசேல முனிவன், பொருக்கென எழுந்து - விரைவாயெழுந்து, விரைதர நடக்கல் உற்றான் - விரைவாய் நடக்கத்தொடங்கினான். எ - று.

(பொ - ரை.) ஆதலால், எமது தலைவனாகிய ஸ்ரீ கண்ணபிரானுக்குத் திருவுளத்தில் மேலானமகிழ்ச்சியை யுண்டாக்கும்படி, குற்றமற்ற முனி சிரேஷ்டனே, நீயெழுந்தருளக்கடவை யென்றுசொல்லி அழகிய தமது கைத்தாமரை மலரினிடத்தைக்குவித்து வணங்கினார்கள், (உடனே) செவ்வையாக வேதமுழுதுமறிந்த, குசேலமுனிவன் விரைவாயெழுந்து விரைவாய் நடக்கத்தொடங்கினான். எ - று.

(வி - ரை.) அங்கைகூப்புதலை வடநூலார் அஞ்சலியென்பர், பொருக்கென-விரைவுக்குறிப்பு, செம்மையுணர்ந்த என இயையும், செம்மைவேதம் என்றியைத்தால் நன்மையைத்தெரிவிக்கிற வேதம் என்றுரைத்துக்கொள்க.

அன்னது கண்டு முன்ன ரறிவிலா துரைத்த நீரா
ரென்னகா ரியஞ்செய் தேமிப் பெரியனை யெளிய னென்று
சொன்னதீங் குரைக ளெல்லாஞ் சுடுகின்ற நம்முளத்தை
மன்னவ னறிவா னாகில் வாராத தீங்கு முண்டோ.

(ப - ரை.) முன்னர் - முன்னே, அறிவுஇல்லாது உரைத்த - விவேகமில்லாமற்சொன்ன, நீரார் - தூர்க்குணமுடையோர், அன்னது கண்டு - (குசேலன்) அவ்வாறு செல்லுவதைக்கண்டு, என்னகாரியம் செய்தேம் - யாம் என்ன காரியம் செய்துவிட்டோம், இ பெரியனை - இந்தப்பெரியோனை, எளியன் என்று - எளியவனென்று (அவமதித்து), சொன்ன-யாம்சொன்ன, தீங்கு உரைகள் எல்லாம் - தீமையான சொற்களெல்லாம், எம் உள்ளத்தை - எமது மனத்தை, சுடுகின்ற - சுடாநின்றன, (இங்ஙனமாக), மன்னவன் அறிவான் ஆகில்-நமது அரசனாகிய ஸ்ரீகண்ணபிரான்(யாம்பேசின வார்த்தைகளை) அறிவானானால், வாராத - (எமக்கு) உண்டாகாத, தீங்கும் உண்டோ - தீமையும் உளதோ. எ - று.

(பொ - ரை.) முன்னே விவேகமில்லாமற்சொன்ன துர்க்குணமுடையோர் (குசேலன்) அவ்வாறு செல்லுவதைக்கண்டு, யாம் என்ன காரியம் செய்துவிட்டோம், இந்தப்பெரியோனை எளியவனென்று (அவமதித்து) யாம் சொன்ன தீமையான சொற்களெல்லாம் எமது மனத்தைச்சுடா நின்றன, (இங்ஙனமாக) நமது அரசனாகிய ஸ்ரீ கண்ணபிரான் (யாம்பேசினவார்த்தைகளை) அறிவானானால், (எமக்கு) உண்டாகாத தீமையும் உளதோ. எ-று.

(வி - ரை.) அன்னது - (குசேலன் விரைந்து அரண்மனையினுள்ளே பிரவேசிப்பதாகிய அந்தச்செய்தி, ஒன்றிரண்டல்ல, மிகப்பலவென்றற்கு, 'தீங்குரைகளெல்லாம்' என்றார். 'தீங்குரைகளெல்லாம் சுடுகின்ற நம்முளத்தை, மன்னவனறிவானாகில்வாராத தீங்கு முண்டோ' என்றது நாம்பேசின கடுஞ்சொற்கள் நமது மனத்தையே சுடுவனவாயிருக்கும்போது நமது அரசனறிந்தால் எமக்குத் தீங்குண்டாதல் திண்ணம் என்பது கருத்து, உண்டோ என்னும் ஓகாரம் எதிர்மறை. (கஙசு)

அருண்மிகப் படைத்த சிந்தை யந்தண னாத லாலே
தெருண்மிகப் படைத்த மன்னன் செவியறி வுறுப்பானல்லன்
பொருண்மிகப் படைத்த வேந்தர் போற்றிடுஞ் சிறப்புற்றானென்
றிருண்மிகப் படைத்த நெஞ்ச ரின்னவாறியப்பி நிற்க.

(ப - ரை.) (இவன்) அருள் - கிருபையை, மிகபடைத்த - மிகவும் பெற்றிருக்கிற, சிந்தை - மனத்தினையுடைய, அந்தணன் ஆதலாலே-வேதியனாதலால், தெருள்மிகபடைத்த - மனத்தெளிவை மிகவும் அடைந்திருக்கிற, மன்னன் - நமது அரசனது, செவி அறிவுறுப்பான் அல்லன் - செவிகளில் புகுவிப்பவனல்லன், (அன்றியும்) பொருள் - செல்வத்தை, மிகபடைத்த - மிகவும் பெற்றிருக்கிற, வேந்தர் - அரசர்களால், போற்றிடும் - வணங்கப்படுதற்குரிய, சிறப்பு உற்றான் என்று - சிறப்பையடைந்திருக்கிறானென்று, இருள் - அஞ்ஞானமாகிய இருளை, மிகபடைத்த - மிகவும் அடைந்திருக்கிற, நெஞ்சர் - மனத்தினையுடையவர், இன்ன ஆறு - இந்தப்பிரகாரமாக, இயம்பி நிற்க - சொல்லிக்கொண்டு நிற்க. எ - று.

(பொ - ரை.) (இவன்) கிருபையை மிகவும் பெற்றிருக்கிற மனத்தினையுடைய வேதியனாதலால், மனத்தெளிவை மிகவும் அடைந்திருக்கிற நமது அரசனது செவிகளில் புகுவிப்பானல்லன், (அன்றியும்) செல்வத்தை மிகவும் பெற்றிருக்கிற அரசர்களால் வணங்கப்படுதற்குரிய சிறப்பையடைந்திருக்கிறானென்று, அஞ்ஞானமாகிய இருளைமிகவும் அடைந்திருக்கிற மனத்தினையுடையவர் இந்தப்பிரகாரமாகச் சொல்லிக்கொண்டு நிற்க. எ - று.

(வி - ரை.) 'அருள் மிகப்படைத்த சிந்தையந்தணனாத லாலேதெருள் மிகப்படைத்த மன்னன் செவியறிவுறுப்பானல்லன், என்றது இவன் அருள் சேர்ந்த நெஞ்சனாகையால், நமக்குத்தீமை யுண்டாக்கும்படி நம்மீது கோட்சொல்லமாட்டான் என்றபடி, இவன் சொல்லினும் நமதரசன் ஏற்றுக்கொள்

ளான் என்றற்குத் 'தெருள்மிகப்படைத்த மன்னன்' என்றார், நெஞ்சர் என்ற குறிப்பால் இருள் அஞ்ஞானத்தைக்குறித்தது. (கசுஎ)

மன்னனைக் காணு மன்பும் வாயில்கா வலரு முன்னே
நன்னயத் துடன டப்ப நடப்பவ னாங்காங் குள்ள
பன்னரும் வளங்களெல்லாம் பார்த்தன னிறும்பூ தூற்றான்
பொன்னகர் சிறந்த தென்பார் புல்லிய ரெனவுட் கொண்டான்.

(ப - ரை.) மன்னனை - (எல்லாச்சீவருக்கும்) தலைவனாகிய ஸ்ரீகண்ண பிரானை, காணும் - தரிசிக்கவேண்டுமென்கிற, அன்பும் - ஆசையும், வாயில் காவலரும் - துவாரபாலகர்களும், நல்நயத்துடன்-நல்விருப்போடு, முன்னே நடப்ப - முன்னேசெல்ல, நடப்பவன் - பின்னே செல்பவனாகிய குசேலன், ஆங்குஆங்கு உள்ள - அவ்வவ்விடங்களிலுள்ள, பன்அரு - சொல்லுதற்கரிய, வளங்கள் எல்லாம் - மேன்மைகள் எல்லாவற்றையும், பார்த்தனன் - பார்த்து, இறும்பூது உற்றான் - ஆச்சரியமடைந்து, பொன்நகர் - பொன்மயமான தேவலோகம், சிறந்தது என்பார் - (இதனினும்,) சிறந்தது என்போர், புல்லியர் என - அற்ப அறிவுடையவரே என்று, உள்கொண்டான் - மனத்திற் கொண்டான். எ - று.

(பொ - ரை.) (எல்லாச்சீவருக்கும்) தலைவனாகிய ஸ்ரீ கண்ணபிரானை தரிசிக்கவேண்டுமென்கிற ஆசையும் துவாரபாலகர்களும் நல்விருப்போடு முன்னே செல்லப்பின்னே செல்பவனாகிய குசேலன், அவ்வவ்விடங்களி லுள்ள சொல்லுதற்கரிய மேன்மைகள் எல்லாவற்றையும் பார்த்து ஆச்சரிய மடைந்து, பொன்மயமான தேவலோகம் (இதனினும்) சிறந்தது என்போர் அற்ப அறிவுடையவரே யென்று மனத்திற்கொண்டான். எ - று.

(வி - ரை.) ஸ்ரீ கண்ணபிரானைக் காணவேண்டுமென்னும் ஆசை விரைவாகத்தன்னை முன்னேயிழுத்துக் கொண்டு செல்லவும், வாயிற்காவலர் உபசாரத்தோடு முன்னே வழிகாட்டி நடக்கவும் செல்பவன் என்றற்கு, 'மன்னனைக்காணுமன்பும் வாயில் காவலருமுன்னே நன்னயத்துடனடப்ப நடப்பவன், என்றார். காணும் அன்பு - பெயரெச்சம், காரியப்பொருளது, 'நோய்தீரும்மருந்து, என்பதிற்போல. புல்லியர் - புன்மையென்னும் பண்படியாகப்பிறந்த பலர் பாற்குறிப்பு வினையாலணையும் பெயர், இ - சாரியை.

பன்மணி வாயி லெல்லாம் பின்னிடும் படி கடந்து
நன்மணி மோலிவேந்தர் நயந்தபே ரவையு நீந்தி
யன்மணி விளர்க்கும் வண்ண னணங்கனொ டொடுமி ருக்கும்
பொன்மணி வாயி லந்தப் புரத்தினுக் கணிய னானான்.

(ப - ரை.) பல்மணி - அநேகரத்நமயமான, வாயில் எல்லாம் - வாசல் களெல்லாவற்றையும், பின் இடும்படிகடந்து - பிற்படும்படி தாண்டிச் சென்று, நல் - சிறந்த, மணி - ரத்நங்களழுத்தின, மோலி - கிரீடத்தையு டைய, வேந்தர் - அரசர்கள், நயந்த - விரும்பிவந்து காத்திருக்கிற, பேர்

அவையும் - பெரியசபா மண்டபத்தையும், நீந்தி - கடந்து, (குசேலன்) அல்-இருளும், மணி - நீலமணியும், விளர்க்கும் - (தனக்கெதிரில்) வெளுத்துப் போதற்குரிய, வண்ணன் - மிகுதியான கருநிறமுள்ள ஸ்ரீ கண்ணபிரான், அணங்கு அன்னாரொடும் - திருமகளை நிகர்த்ததேவியருடனே, இருக்கும் - எழுந்தருளியிருக்கிற, பொன்மணிவாயில் - பொன்னினாலும் ரத்நங்களாலும் செய்யப்பட்ட வாயிலையுடைய, அந்தப்புரத்தினுக்கு - அந்தப்புரத்துக்கு, அணியன் ஆனான் - சமீபஸ்த்தனாயினான். எ - று.

(பொ - ரை.) அநேக ரத்நமயமான வாசல்களெல்லாவற்றையும் பிற்படும்படி தாண்டிச்சென்று, சிறந்த ரத்நங்களழுத்தின கிரீடத்தையுடைய அரசர்கள் விரும்பிவந்து காத்திருக்கிற பெரியசபா மண்டபத்தையும் கடந்து (குசேலன்) இருளும் நீலமணியும் (தனக்கெதிரில்) வெளுத்துப்போதற்குரிய மிகுதியான கருநிறமுள்ள ஸ்ரீ கண்ணபிரான் திருமகளை நிகர்த்த தேவியருடனே எழுந்தருளியிருக்கிற, பொன்னினாலும் ரத்நங்களாலும் செய்யப்பட்ட வாயிலையுடைய அந்தப்புரத்துக்குச் சமீபஸ்த்தனாயினான்.

(வி - ரை.) கடத்தற்கருமைதோன்ற, 'நீந்தி' என்றார், விளர்த்தல் - வெளுத்தல், அணங்கு - தெய்வப்பெண் எனினுமாம், அந்தப்புரம் - உள்ளிடம், (ராஜஸ்த்ரீகள் உறைவிடம்,) அணியன் - அணிமையென்னும் பண்படியாகப்பிறந்த பெயர், அண்மை பகுதியாயின் இசாரியையென்க, 'வாயிலெல்லாங்கடந்து, எனவியையும். அல்மணி - உம்மைத்தொகை, அல்மணி - நீலமணியெனினுமாம், விளர்க்கும் என்னும் பெயரெச்சம் காரணப்பொருளது, விளர்த்தல் - தன்வினை பிறவினைகளுக்குப்பொது, வெளுத்தலுமது. (கககக)

ஓவியத் தொழில்வல் லாருக் கொண்பொருள் வெறுப்ப வீசி
நாவியற் கருமென் கூந்த னங்கைமா ரெழுதி வைத்த
பூவியற் படமாங் காங்குப் பொலிவது காணுந் தோறுங்
கோவியற் கண்ண னென்றுட் கொண்டுபின் றெளிவ னம்மா

(ப - ரை.) நாவி - கஸ்தூரிமணங்கமழப்பெற்ற, அல் - இருட்டுப்போன்ற, கரு - கருநிறமுள்ள, மெல்கூந்தல் - மென்மையாகிய கூந்தலையுடைய, நங்கைமார் - மாதர்கள், (ஸ்ரீ கண்ணபிரானது தேவியர்), ஓவியத்தொழில் வல்லாருக்கு - சித்திரத்தொழிலில் வல்லவருக்கு, ஒள்பொருள் - ஒட்பமாகிய பொருளை, வெறுப்ப - (அவர்கள்) வெறுக்கும்படி, வீசி - மிகுதியாய் வழங்கி, எழுதிவைத்த - எழுதுவித்துவைத்த, பூ இயல்படம் - அழகு பொருந்திய படங்கள், ஆங்கு ஆங்கு பொலிவது - அவ்வவ்விடங்களில் விளங்குவதை, காணுந்தோறும் - பார்க்கும்போதெல்லாம், கோஇயல் - அரசியலையுடைய, கண்ணன் என்று - ஸ்ரீ கண்ணபிரானென்று, உட்கொண்டு - தன்மனத்திலெண்ணி, பின் - பிறகு, தெளிவன்-(சித்திரமென்று அறிந்து) தெளிவடைவான் (குசேலன்.) எ - று.

(பொ - ரை.) கஸ்தூரிமணம் கமழப்பெற்ற இருட்டுப்போன்ற கருநிறமுள்ள மென்மையாகிய கூந்தலையுடைய மாதர்கள் (ஸ்ரீ கண்ணபிரானது

தேவியர்) சித்திரத்தொழிலில் வல்லவருக்கு ஒட்பமாகிய பொருளை (அவர்கள்) வெறுக்கும்படி மிகுதியாய் வழங்கி எழுதுவித்துவைத்த அழகு பொருந்திய படங்கள் அவ்வவ்விடங்களில் விளங்குவதைப்பார்க்கும் போதெல்லாம் அரசியலையுடைய ஸ்ரீ கண்ணபிரானென்று தன் மனத்திலெண்ணிப் பிறகு (சித்திரமென்று அறிந்து) தெளிவடைவான் (குசேலன்.) எ - று.

(வி - ரை.) வெறுப்ப என்றது, பற்றுமென்று சொல்லுமளவும் என்[illegible]படி, வீசல் - மிகவழங்கல், நாவி - மயிர்ச்சாந்து எனினுமாம், நங்கைமார் - குணபூர்த்தியுள்ளவர், எழுதுவித்த என்றும்பாடம், பூவியல்படம் - [illegible] பெருமையுமுள்ள படம் எனினுமமையும், வியல் - பெருமை, கோவியல் - அரசியல், (ராஜநீதி,) அம்மா - வியப்பிடைச்சொல், அசைச்சொல் எனினுமாம். (உ0)

ஈங்கிவ னிவ்வாறெய்த வின்னம்வந் திலனென் றையன்
பூங்கதிர் வரவு பார்க்கும் பொற்றபுண் டரிகம் போலுந்
தீங்கதிர் வரவு பார்க்குஞ் செவ்வரக் காம்பல்போலு
மோங்குமை வரவுபார்க்கு மொண்டழை மஞ்ஞை போலும்.

(ப - ரை.) ஈங்கு - இவ்விடத்தில், இவன் - இந்தக்குசேலன், இவ்வாறு எய்த - இப்படி செல்லாநிற்க, ஐயன் - ஸ்ரீ கண்ணபிரான், இன்னம் வந்திலன் என்று - (குசேலன்) இன்னமும் வந்திலனென்று, பூ கதிர் - [illegible] கிரணங்களையுடைய சூரியனது, வரவு பார்க்கும் - வருகையை எதிர் பார்க்கிற, பொற்ற - அழகிய, புண்டரீகம்போலும் - தாமரை போலவும், தீ கதிர் - இனிமையான கிரணங்களையுடைய சந்திரனது, வரவு பார்க்கும் - வருகையை எதிர்பார்க்கிற, செ அரக்கு ஆம்பல்போலும் - செவ்வரக்குப்போல மிகச் சிவந்த நிறத்தையுடைய ஆம்பல்போலவும், ஓங்கும் மை - உயர்ந்தமேகத்தினது, வரவுபார்க்கும் - வருகையை எதிர்பார்க்கிற, ஒள் தழை - ஒள்ளிய கலாபத்தையுடைய, மஞ்ஞைபோலும் - மயில்போலவும். எ - று.

(பொ - ரை.) இவ்விடத்தில் இந்தக்குசேலன் இப்படி செல்லாநிற்க, ஸ்ரீ கண்ணபிரான் (குசேலன்) இன்னமும் வந்திலனென்று அழகிய கிரணங்களையுடைய சூரியனது வருகையை எதிர்பார்க்கிற அழகிய தாமரைபோலவும், இனிமையான கிரணங்களையுடைய சந்திரனது வருகையை எதிர்பார்க்கிற செவ்வரக்குப்போல மிகச்சிவந்த நிறத்தையுடைய ஆம்பல்போலவும், உயர்ந்தமேகத்தினது வருகையை எதிர் பார்க்கிற ஒள்ளிய கலாபத்தையுடைய மயில்போலவும். எ - று.

(வி - ரை.) பூங்கதிர், தீங்கதிர் என்பன பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைகள், ஐயன் - தலைவன், அழகன். [illegible] ன்னே சூரியகிரணம் சிறந்து விளங்குதலால் 'பூங்கதிர்' என்றார். பூ - பொலிவு, பொன் - அழகு, பொற்ற - அழகையுடைய. புண்டரீகம் - வடசொல், இது வெண்டாமரையையுணர்த்துஞ் சொல்லாயினும் இவ்விடத்துப்

பொதுவாய்ச் சாமளா மாத்திரை யுணர்த்திற்று, சந்திரன் இனிய அமிர்த கிரணங்களையுடையவனாதலால் அவனை 'தீங்கதிர்' என்றார், மை - மேகம், தழை - கலாபம், (தோகை). (உ0க)

பொருந்துதாய் வரவு பார்க்கும் புனிற்றிளங் கன்று போலுந்
திருந்துதன் வரவு பார்க்குஞ் செம்மனத் தொருவன் போலு
மருந்துநீர் வரவு பார்க்கு மறலாசை யுடையான் போலுங்
கருந்துழாய்க் கண்ணி யண்ணல் கமழ்நறுஞ் சேக்கை மீதே.

(ப - ரை.) பொருந்து - பொருந்திய, தாய்வரவு பார்க்கும் - தாயின் வரவை எதிர்பார்க்கிற, புனிறு இளகன்றுபோலும் - மிகஇளமையான கன்று போலவும், திருந்துதன்வரவு பார்க்கும் - திருத்தமாகிய தனதுவரவையெதிர் பார்க்கிற, செம்மனத்து ஒருவன்போலும் - செவ்விய மனத்தினனாகிய ஒரு அன்பன்போலவும், அருந்தும் - பருகுதற்குரிய, நீர்வரவு பார்க்கும் - நீரின் வரவையெதிர்பார்க்கிற, அறலாசை உடையான்போலும் - நீர்வேட்கையுடையவன் போலவும், கரு - கருநிறமுள்ள, துழாய்கண்ணி - திருத்துழாய் மாலையை யணிந்த, அண்ணல் - ஸ்ரீகண்ணபிரான், கமழ் - பரிமளிக்கிற, நறு - சிறந்த, சேக்கைமீது - சயனத்தின்மேல். எ - று.

(பொ - ரை.) பொருந்தியதாயின் வரவையெதிர்பார்க்கிறமிகஇளமை யான கன்றுபோலவும், திருத்தமாகிய தனது வரவை யெதிர்பார்க்கிற செவ்விய மனத்தினனாகிய ஒரு அன்பன்போலவும், பருகுதற்குரிய நீரின்வரவை யெதிர்பார்க்கிற நீர்வேட்கையுடையவன் போலவும், கருநிறமுள்ள திருத் துழாய் மாலையையணிந்த, ஸ்ரீகண்ணபிரான், பரிமளிக்கிற சிறந்த சயனத் தின்மேல். எ - று.

(வி - ரை.) 'மறையுணர்ச்சி மிக்கான்வரவு பார்த்திருப்பன' என அடுத்த கவியில் தொடரும். புனிறு, இள ஒருபொருட்பன் மொழிகள், புனிறு - ஈன்றணிமை, இளமை கன்றுதிரிந்து பொருதுகழிந்தகாலம், கன்று - விலங்கின் இளமைப்பெயர். பொருந்து - எல்லாவிதத்திலும் நன்மை செய்தற்கமைந்த, தாய் - தாய்ப்பசு, இது கன்று என்றதனாற் பெறப்பட்டபொருள், திருந்து - எல்லாவகையாலும் திருத்தமான, மங்கள குணங்களால் திருத்தமடைந்திருக் கிற எனினுமாம், அருந்து - எவ்வகை யுணவிற்கும் பொதுவாயினும் இவ் விடத்துப் பருகுதலைக் குறித்தது, செம்மனத்தொருவன் - ஞானி, அறல் - நீர், நீர்வேட்கை - நீர்மேலுள்ள விருப்பம், பிபாஸைதாஹம் என்பர் வடநூலார். கரு அண்ணல் எனவும் துழாய்க்கண்ணி யண்ணல் எனவும் இயைத்துக் கொள்க. (உ0உ)

வளர்மறை யுணர்ச்சி மிக்கான் வரவுபார்த் திருப்ப வந்த
வளவிடற் கரிய பேரொ ளுடைப்பதந் தோளி னல்லார்
கிளர்தர நின்று காக்குங் கோயில்வாயிலுங் கடந்து
தளர்வில்பல் பாதர் சூழத் தனியிடத் தணுகுங் காலை.

(ப - ரை.) வளர்மறை உணர்ச்சிமிக்கான்-வளராநின்ற வேதவுணர்ச்சி மிகுந்தவனாகிய குசேலனது, வரவு - வருகையை, பார்த்து இருப்ப - எதிர்பார்த்திருக்க, அந்த - அந்த, அளவுஇடற்கு அரிய-அளவுசெய்தற்கரிதாகிய, மேலோன் - மேன்மையையுடையவனாகிய குசேலன், ஆடு அமைதோளின்-அசையாநின்ற மூங்கில்போலுந் தோள்களையுடைய, நல்லார - மாதர், கிளர்தர - விளக்கமுண்டாக, நின்று - முன்னின்று, காக்கும் - காவல்செய்கிற, கேடு இல்வாயிலும் - அழிவற்ற (அந்தப்புர) வாசலையும், கடந்து - தாண்டி, தளர்வுஇல் - தளர்ச்சியில்லாத, பல்மாதர் - பலபெண்கள், சூழும் - சூழ்ந்திருக்கப்பெற்ற, தனி - ஏகாந்தமான, இடத்து - அந்தப்புரத்தை, அணுகும் காலை - கிட்டும்பொழுது. எ - று.

(பொ - ரை.) வளராநின்ற வேதவுணர்ச்சி மிகுந்தவனாகிய குசேலனது வருகையை எதிர்பார்த்திருக்க, அந்தஅளவு செய்தற்கரிதாகிய மேன்மையையுடையவனாகிய குசேலன், அசையாநின்ற மூங்கில்போலுந் தோள்களையுடைய மாதர்விளக்கமுண்டாக முன்னின்று காவல்செய்கிற அழிவற்ற அந்தப்புரவாசலையும் தாண்டித் தளர்ச்சியில்லாத பலபெண்கள் சூழ்ந்திருக்கப்பெற்ற ஏகாந்தமான அந்தப்புரத்தைக் கிட்டும்பொழுது. எ - று.

(வி - ரை.) வேதங்கள் அநந்தமாதலாலும் அழிவற்றன வாதலாலும், 'வளர்மறை' என்றார். யாவராலும் தன்வரவை யெதிர்பார்த்திருக்கப்படுகிற ஸ்ரீகண்ணபிரானால் வரவெதிர்பார்த்திருக்கப்பட்ட அந்தக் குசேலமுனிவனது மேன்மைதோன்ற, 'அந்த அளவிடற்கரிய மேலோன்' என்றார். அந்தவளவு - முடிவினளவு, பார்த்திருப்ப வந்தஎன்றுரைத்தலுமாம். மூங்கில் - இளமை, பசுமை, மெத்தெனவு, குளிர்ச்சி, வழுவழுப்பு, உருட்சி முதலியவற்றால் மாதர்தோளுக்குவமையாமாதலால், 'அமைத்தோளினல்லார்' என்றார். நல்லார் என்பதில் நன்மை அழகையுணர்த்தும், 'கேடில்வாயில்' என்றதனால், காவலிற் குறைவில்லாததென்பதும், 'தளர்வில்மாதர்' என்றதனால் அவரது ஊக்கமிகுதியும், 'தனியிடம்' என்றதனால் இந்தக் குசேலனொருவனன்றிப் பிறர் சேர்தற்கரியதென்பதும் பெறப்படும். காலம் என்னும் உடசொல்காலை என ஈறுதிரிந்து. (உ0௬)

வருந்துமோர் மிடியன் சேம வைப்பெதிர் கண்டாற் போலு
மருந்துணவிழந்தோன் விண்ணோ ரமுதெதிர் கண்டாற் போலும்
பரிந்துவெப் புழறு வோன்கற் பகமெதிர் கண்டாற் போலுஞ்
சரிந்தபற் றினன்மெய் யாசான் றனையெதிர் கண்டாற் போலும்.

(ப - ரை.) வருந்தும் - வருந்துகின்ற, ஓர்மிடியன் - ஒப்பில்லாதவறியன், சேமம்வைப்பு - (பிறரால்புதைத்து வைக்கப்பட்ட) நிதியை, எதிர் கண்டாற்போலும் - எதிரேயிருக்கப் பார்த்தாற்போலவும், அருந்துஉணவு இழந்தோன் - உண்ணுமுணவையிழந்தவன், விண்ணோர் அமுது - தேவாமிர்தத்தை, எதிர்கண்டாற்போலும் - எதிரேயிருக்கப் பார்த்தாற்போலவும்,

பரிந்து வெப்பு உழலுவோன் - வருந்தி வெயில் வெப்பத்தில் அலைகிறவன், கற்பகம் - (குளிர்ந்தநிழலைத்தருகிற) கற்பகமரத்தை, எதிர்கண்டாற் போலும் - எதிரேயிருக்கப் பார்த்தாற்போலவும், சரிந்தபற்றினன் - நீங்கின பற்றினையுடையவனுகிய நற்சீடன், மெய் ஆசான்தன்னை - மெய்க்குருவை, எதிர் கண்டாற்போலும் - எதிரே யிருக்கப்பார்த்தாற் போலவும். எ - று.

(பொ - ரை.) வருந்துகின்ற ஒப்பில்லாதவறியன் (பிறரால் புதைத்து வைக்கப்பட்ட) நிதியை எதிரேயிருக்கப் பார்த்தாற்போலவும், உண்ணுமுணவையிழந்தவன் தேவாமிர்தத்தை எதிரே யிருக்கப்பார்த்தாற்போலவும், வருந்தி வெயில் வெப்பத்தில் அலைகிறவன் (குளிர்ந்த நிழலைத்தருகிற) கற்பகமரத்தை எதிரேயிருக்கப்பார்த்தாற்போலவும், நீங்கின பற்றினையுடையவனுகிய நற்சீடன் மெய்க்குருவை எதிரேயிருக்கப்பார்த்தாற் போலவும்.

(வி - ரை) வருந்துமோர் மிடியன் என்பதற்கு வருந்துதற்கேதுவாகிய ஒப்பற்ற தரித்திரன் என்றும், ஓர்மிடியன் என்பதற்கு ஒரு தரித்திரன் என்றும் பொருள் கூறலுமாம். ஓர் மிடியென்பதனை வினைத்தொகையாகக்கொண்டு, (யாவராலும்) மிகக்கொடியதென்று ஆராயத்தகுந்த தரித்திரம் என்றுரைப்பினுமாம். சேமவைப்பு-சேமமாக வைக்கப்பட்டபொருள். இதனை நிக்ஷேபம் என்றும் நிதியென்றுங் கூறுவர் வடநூலார். அமுது - அம்ருதம் என்னும் வடசொற்றிரிபு. இறப்பைத்தவிர்ப்பது என்று பொருள், வெயிலில் அதிகமாயலைந்து வருந்தினவனுக்குக் குளிர்ந்த நிழலைத்தருகிற எந்த மரத்தைக்கண்டாலும் மிகுமகிழ்ச்சியேயாயினும் தேவலோகத்துக் கற்பகத்தருவையுபமானமாயெடுத்தது உபமேயமாகிய ஸ்ரீ கண்ணபிரானது தரிசநம் பெறற்கரும்பேறு என்பதையும் அவனது பயனளித்தற் சிறப்பையும் விளக்குதற்கென்க. கற்பகம்-கல்பகம் என்னும் வடசொற்றிரிபு. தன்னையடைந்து நினைப்பார்க்குவேண்டியபொருள்களைக் கற்பித்துத்தருவதுஎன்பது பொருள். கற்பித்தல் - உண்டாக்கல், வெப்பு - மனஸ்தாபம், இது வெப்பம் எனவும் வெம்மை எனவும் வருதலுண்டு, பற்று - தானல்லாதவுடம்பை யான் என்றும் தனதல்லாதபொருளை எனது என்றும் கருதி அவற்றின்கண் முறையே அன்புசெய்கிற அகங்கார மமகாரங்களாகிய அகப்பற்று புறப்பற்றுக்கள், சரிந்தபற்றினன் - வடசொன்னடை, பற்றுச்சரிந்தவன் என விகுதிபிரித்துக் கூட்டுதலுமாம். சரிந்தபற்றினன் - ஸச்சிஷ்யன், மெய்யாசான் - ஸதாசாரியன், ஆசான் - ஆசாரியன் என்னும் வடசொற்றிரிபு. (உ0௬)

எண்ணனைக் கிலங்கு மார்ப மீத்தருள் பிரானை நீல
வண்ணனைத் திகிரி சங்கம் வலமிட முறக்கொண் டானை
மண்ணனைத் தும்பு ரக்கும் வாசுதே வனைம ணக்குங்
கண்ணனைத் துளவத் தாமக் கண்ணனைக் கண்ணிற் கண்டான்.

(ப - ரை.) எண் - (யாவராலும்) தியானிக்கப்படுகிற, அன்னைக்கு - லோகமாதா ஆகிய திருமகளுக்கு, இலங்கும்-விளங்குகிற, மார்பம் - (தனது)

திருமார்பை, ஈத்துஅருள் - (இடமாக) தந்தருளின, பிரானை - தலைவனும், நீலவண்ணனை - நீலநிறமுடையவனும், திகிரி - சக்கரத்தையும், சங்கம் - சங்கத்தையும், வலம் இடம்உற - (முறையே) வலக்கையிலும் இடக்கையிலும்பொருந்த, கொண்டானை - தரித்திருப்பவனும், மண் அனைத்தும் புரக்கும் - உலகங்களையெல்லாம் காத்தருளுகிற, வாசுதேவனை - வசுதேவகுமாரனும், மணக்கும் - பரிமளிக்கிற, கள்நனை - தேனினால் நனைதலையுடைய, துளவம் தாமம் - திருத்துழாய் மாலையையுடையவனுமாகிய, கண்ணனை - ஸ்ரீகண்ணபிரானை, கண்ணின் கண்டான் - (குசேலன்தன்) கண்களால் தரிசித்தான். எ - று.

(பொ - ரை.) (யாவராலும்) தியானிக்கப்படுகிற லோகமாதாவாகிய திருமகளுக்கு, விளங்குகிற (தனது) திருமார்பை (இடமாக) தந்தருளின தலைவனும், நீலநிறமுடையவனும், சக்கரத்தையும் சங்கத்தையும் (முறையே) வலக்கையிலும் இடக்கையிலும் பொருந்தத் தரித்திருப்பவனும், உலகங்களையெல்லாம் காத்தருளுகிற வசுதேவகுமாரனும், பரிமளிக்கிற தேனினால் நனைதலையுடைய திருத்துழாய் மாலையையுடையவனுமாகிய ஸ்ரீகண்ணபிரானை (குசேலன் தன்) கண்களால் தரிசித்தான். எ - று.

(வி - ரை.) திருமகள் லோகமாதாவாதலாலும், இவளைப் புருஷகாரமாகக் கொண்டல்லது எம்பெருமானை யடைந்து முத்திபெறக் கூடாதாதலாலும், 'எண் அனை, எனச்சிறப்பித்துக் கூறினர். எண் அனை - செயப்பாட்டுவினைப் பொருளில் வந்தவினைத்தொகை. 'எண் அனை' என்பதற்கு (எல்லாவுயிர்களையும் கருணையோடுகூடிய தன் திருவுள்ளத்திலே) கருதியருளுகிற அன்னையென்றுரைத்தலுமொன்று. அன்னை அனையெனத்தொகுத்தலாயிற்று. மார்பம் என்பதில் அம்சாரியை. வலம் இடம் - ஆகுபெயர்கள். மண்என்றது இவ்விடத்து எல்லாவுலகையு முணர்த்துஞ் சொல்லாய் நின்றது. வாசுதேவன் - வசுதேவபுத்ரன், இது தத்திதாந்தம். வசுதேவன் - யதுகுலத்தில் தோன்றின சூரனுககுமகன், தேவகீநாயகன், க்ருஷ்ண பலராமர்களுக்குத் தந்தை, காசிபமுனிவனது அமிசமாய்த் தோன்றினவனென்றும் சிலர் கூறுவர். இந்த வசுதேவனுக்கு ஆநகதுந்துபி என்றும் பெயர். நனைத்துளவம் - இரண்டாம்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர், வினைத்தொகையாயின், நனைதுளவம் எனவரும். தாமம் - வடசொல், கண்டான் என்னாது கண்ணிற் கண்டான் என்றது கண்ணனைக்காணப்பெற்ற அக்கண்ணினது ஏற்றத்தை விளக்குதற்கென்க. பிரானை முதலியன ஒருபொருட் பலபெயர்கள், கண்ணிற்கண்டான் என்பதில் இன்மூன்றாவதன் கருவிப்பொருளது. (உ0ரு)

காண்டலு முவகை பூத்துக் கால்விசை கொடுந டந்தா
னாண்டகை யவனுங் கண்ணுற் றணையுடைத் தெழுநீத் தப்போ
னீண்டபூம் பள்ளிநீத்து நிலவுசீப ரன்பு பொங்கப்
பூண்டமா தவன்முன் சென்று பொன்னடி வணங்கினானால்.

(ப - ரை.) காண்டலும் - (குசேலன்கண்ணனை) தரிசித்தளவிலே, உவகைபூத்து - மகிழ்ச்சிமிகுந்து, கால்விசைகொடு நடந்தான் - கால்களால்



ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் கட்டளையைத்துவாரபாலகராலறிந்தகுசேலர்நேரேசென்று ஸ்ரீ கண்ணபிரானையடைய ஸ்ரீ கண்ணபிரான்குசேலரைநமஸ்கரித்தது.

வேகங்கொண்டு நடந்து, (அருகிற்சென்றான்), ஆண்டகையவனும் - ஆண்மைக்குணமுள்ள ஸ்ரீகண்ணபிரானும், கண்ணுற்று - (அக்குசேலமுனிவனை) பார்த்து, அணை உடைத்து எழும் - கரையையுடைத்துக் கொண்டு வேகமாய்ப் பெருகிவருகிற, நீத்தம் போல் - வெள்ளம்போல, நீண்ட - பெரிதாகிய, பூபள்ளிநீத்து - புஷ்பசயநத்தைவிட்டெழுந்து, நிலவு - விளங்குகிற, பேர் அன்புபொங்க - பேரன்பானது அதிகரிக்க, பூண்ட மாதவன்முன் - பெரியதவத்தை மேற்கொண்ட அக்குசேலமுனிவனுக் கெதிரில், சென்று - போய், (அவனது) பொன்அடி - அழகிய சீர்பாதங்களை, வணங்கினான் - நமஸ்கரித்தான். எ - று.

(பொ - ரை.) (குசேலன் கண்ணனை) தரிசித்தளவிலே மகிழ்ச்சி மிகுந்து கால்களால் வேகங்கொண்டு நடந்து அருகிற்சென்றான். ஆண்மைக்குணமுள்ள ஸ்ரீகண்ணபிரானும் அக்குசேலமுனிவனைப் பார்த்து, கரையையுடைத்துக் கொண்டு வேகமாய்ப் பெருகிவருகிற வெள்ளம்போலப் பெரிதாகிய புஷ்பசயநத்தை விட்டெழுந்து, விளங்குகிற பேரன்பானது அதிகரிக்க, பெரியதவத்தை மேற்கொண்ட அக்குசேல முனிவனுக்கெதிரில் போய் (அவனது) அழகிய சீர்பாதங்களை நமஸ்கரித்தான். எ - று.

(வி - ரை.) கால் காற்றுக்கும் பெயராதலால், 'கால்விசைகொடு' என்பதற்குக் காற்றின் வேகத்தைத்தான்கொண்டு என்றுரைப்பினுமாம். அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்னும் நான்கும் ஆடூஉக்குணம் என்றும், அவற்றையுடையவன் ஆண்டகையவன் என்றும் கூறுவர். ஆண்டகைமையைப் பௌருஷம் என்பர் வடநூலார். அணை - செய்கரை. நீந்தப்படுவது நீத்தமாதலால் இது காரணப்பெயர். அணையையுடைத்தெழுகிற நீர்ப்பெருக்கு தனது பூவணையைவிட்டெழுந்து வருகிற ஸ்ரீகண்ணபிரானுக்குவமை. பேரன்பு வரையறையின்றிப் பொங்குதற்குவமை. பூம்பள்ளி - அழகிய சயநம், பூப்போல மென்மையாகிய சயநம், பூப்பரப்பப்பெற்ற சயநம். நீத்து என்பதற்குப்பகுதி நீ. ஆண்டகையவன்என்பதற்கு ஆண்டகையாகிய அக்கண்ணபிரான் என்றுரைப்பினுமாம். கண்ணுற்று என்பதற்குப் பகுதி கண்ணுறு. ஆண்டகையவனும் கண்ணுற்றுநீத்துச்சென்று வணங்கினான் என முடிக்க. ()

திலகமண் டோய வையன் றிருவடி வணங்கிப் பின்னர்
நிலவுமெய்ப் புளகம் போர்த்து நிரம்புறத் தழுவிக் கொண்டான்
குலமறைத் தலைவ னென்றுங் கூர்ந்தமெய் நட்ப னென்று
மலர்தலை யுலகங் கூறும் வாய்மைகாத் தருளி னானே.

(ப - ரை.) திலகம் - தனது நெற்றித்திலகமானது, மண்தோய - நிலத்திற்படும்படி, ஐயன் - அவ்வேதியனது, திருவடி வணங்கி - திருவடியைத்தொழுது, பின்னர் - அதன்பிறகு, நிலவும் - விளங்குகிற, மெய் - சரீரம், புளகம்போர்த்து - புளகத்தாற்போர்த்துக்கொள்ளப்பெற்று, நிரம்புற - பூர்ணமாக, தழுவிக்கொண்டான் - ஆலிங்கநஞ்செய்து கொண்டவனாய், குலம் - சிரேஷ்ட

டமான, மறைத்தலைவன் என்றும் - வேதமுதல்வனென்றும், கூர்ந்தமெய்நட்பன் என்றும் - மிகுந்த உண்மைச்சிநேகனென்றும், மலர்தலை உலகம் - விரிந்த இடத்தையுடைய உலகமானது, கூறும் - சொல்லுகிற, வாய்மை - சொல்லை, காத்தருளினன் - காத்தருளினன். எ - று.

(பொ - ரை.) தனது நெற்றித்திலகமானது நிலத்திற்படும்படி அவ் வேதியனது திருவடியைத்தொழுது, அதன் பிறகு, விளங்குகிறசரீரம் புளகத்தாற்போர்த்துக்கொள்ளப்பெற்று, பூர்ணமாக ஆலிங்கநஞ்செய்து கொண்டவனாய், சிரேஷ்டமான வேதமுதல்வனென்றும், மிகுந்த உண்மைச்சிநேகனென்றும், விரிந்த இடத்தையுடைய உலகமானது சொல்லுகிற சொல்லைக் காத்தருளினன். எ - று.

(வி - ரை.) திலகம் என்றது கஸ்தூரீதிலகத்தை, திலகம் - பொட்டு. ஐயன் - பிராமணன், புளகம்போர்த்தல் - மயிர்சிலிர்த்தல், நிரம்புறத்தழுவிக் கொண்டான் என்றது காடாலிங்கநஞ்செய்து கொண்டான் என்றபடி, குலமறை - கூட்டமாகிய வேதம் எனினுமாம், உலகம்-இடவாகுபெயராய் உலகத்திலுள்ளாரை யுணர்த்தும், வாய்மை-சொல், காத்தருளுதல்-நிலைபெறுத்தியருளல், தழுவிக்கொண்டான் - முற்றெச்சம், மலர்தலை - வினைத்தொகை நிலைத்தொடர், தலை - இடம். (௨௦௭)

பாக்கிய முற்ற திந்நாள் பாக்கிய முற்ற திந்நா
ளாக்கிய வறம்ப லித்த வாக்கிய வறம்ப லித்த
யோக்கிய மடைந்த திந்த மனையுமென் றுரைத் துரைத்துத்
தேக்கிய புகழி னன்கொண் டாடினன் சிலைவ லோயே.

(ப - ரை.) இ நாள்பாக்கியம் உற்றது இ நாள்பாக்கியம் உற்றது-இந்தத்திநம்பாக்கிய மடைந்தது இந்தத்திநம்பாக்கியமடைந்தது, ஆக்கிய அறம்பலித்த ஆக்கிய அறம்பலித்த - செய்ததர்மங்கள் பலித்தன செய்ததர்மங்கள் பலித்தன, இந்தமனையும் யோக்கியம் அடைந்தது - இந்தக்கிருஹமும் யோக்கியதையையடைந்தது, என்று உரைத்து உரைத்து - என்று சொல்லிச்சொல்லி, தேக்கியபுகழினன் - (எல்லாவுலகங்களிலும்) நிறைந்த புகழையுடையவனாகிய ஸ்ரீ கண்ணபிரான், கொண்டாடினன் - (அந்தக் குசேலமுனிவனை) கொண்டாடினன், சிலைவல்லோயே-தநுர்வித்தையில் வல்லவனாகிய பரீக்ஷித்துமகாராஜனே. எ - று.

(பொ - ரை.) இந்தத்திநம்பாக்கிய மடைந்தது இந்தத்திநம்பாக்கிய மடைந்தது, செய்ததர்மங்கள் பலித்தன செய்ததர்மங்கள் பலித்தன, இந்தக் கிருஹமும் யோக்கியதையையடைந்தது, என்று சொல்லிச்சொல்லி, (எல்லாவுலகங்களிலும்) நிறைந்த புகழையுடையவனாகிய ஸ்ரீ கண்ணபிரான் (அந்தக் குசேலமுனிவனை) கொண்டாடினன், தநுர்வித்தையில் வல்லவனாகிய பரீக்ஷித்து மகாராஜனே. எ - று.

(வி - ரை.) பாக்கியமுற்ற திங்காள் பாக்கிய முற்றதிங்நாள், ஆக்கிய வறம்பலித்த ஆக்கியவறம்பலித்த,என்பன உவமைமிகுதி தோன்றவந்த அடுக்குகள், மனையும் என்பதில் உம்மை இறந்ததுதழீஇயது, உரைத்துரைத்து என்றது பலகாற்சொல்லியென்றபடி, ஸ்ரீ கண்ணபிரானது புகழ்பரவாதவுலகமில்லையாதலால், 'தேக்கியபுகழினான்' என்பதற்கு எல்லாவுலகங்களிலும் நிறைந்த புகழையுடையவனாகிய ஸ்ரீ கண்ணபிரான் எனப்பொருள் கூறலாயிற்று, 'சிலவலோயே' என்றது சுகமுனிவர் பரீக்ஷித்து மஹாராஜனை நோக்கிவிளித்தது. (உ0அ)

அங்கொரு மாடத் துள்ளா லரதந பீடத் தும்பர்
மங்கல மறைவ லாளன் மகிழ்ந்தெழுந் தருளப் பண்ணிப்
பொங்குபொற் குடம்பூ ரித்த புதியமஞ் சனநீ ராட்டித்
திங்களங் கதிரே யென்னத் திகழ்ந்தவொற் றுடை சாத்தி.

(ப - ரை.) (ஸ்ரீ கண்ணபிரான்) அங்கு - அங்குள்ள, ஒருமாடத்து உள்ளால் - ஒருமாளிகையின் உள்ளிடத்தில், அரதநபீடத்து உம்பர் - ரத்நபீடத்தின்மீது, மங்கலம் - சுபகரமான, மறைவல்லாளன் - வேதங்களில் வல்லவனாகிய அந்தக் குசேலமுனிவன், மகிழ்ந்து எழுந்தருளப்பண்ணி - மனமகிழ்ந்தெழுந்தருளச்செய்து, பொங்கு - விளங்குகிற, பொன்குடம் - பொற்குடத்தில், பூரித்த - நிறைக்கப்பட்ட, புதிய - புதிதாகிய, மஞ்சனநீர் - திருமஞ்சநதீர்த்தத்தினால், ஆட்டி - ஸ்நாநம் செய்வித்து, திங்கள் அம்கதிரே என்ன - சந்திரனது அழகிய கிரணம்போலவே, திகழ்ந்த - (வெண்ணிறமாய்) விளங்குகிற, ஒற்றுஆடை - ஒற்றுடையை, சாத்தி - (அவனுக்கு) சாத்தி. எ - று.

(பொ - ரை.) (ஸ்ரீ கண்ணபிரான்) அங்குள்ள ஒருமாளிகையின் உள்ளிடத்தில் ரத்நபீடத்தின் மீது சுபகரமான வேதங்களில் வல்லவனாகிய அந்தக் குசேலமுனிவன் மனமகிழ்ந்தெழுந் தருளச்செய்து, விளங்குகிற பொற்குடத்தில் நிறைக்கப்பட்ட புதிதாகிய திருமஞ்சநதீர்த்தத்தினால் ஸ்நாநஞ்செய்வித்து, சந்திரனது அழகிய கிரணம்போலவே (வெண்ணிறமாய்) விளங்குகிற ஒற்றுடையை (அவனுக்குச்) சாத்தி. எ - று.

(வி - ரை.) ஒரு - ஒப்பற்ற எனினுமாம், உள்ளால் என்பதில் ஆல் உருபுமயக்கம், அசையெனினுமிழுக்காது, மாடம் - அறையெனினுமாம், அரதநபீடத்தும்பர் எழுந்தருளப்பண்ணி, நீராட்டி எனத்தவிசளித்தல், திருமஞ்சநம் செய்வித்தல்களைக் கூறினர், மற்றையுபசாரங்களை மேலேவருஞ் செய்யுட்களிற்கூறுவர், ரத்நம் என்னும் வடசொல் அரதநம் எனத்திரிந்தது, பீடம்-பலகை (தவிசு), உம்பர் - மேலிடம், இதனை, "மேக்குவலமீயும்பர் மேலாகும்" என்பதனாலறிக, மஞ்சநநீர் - ஸ்நாநத்துக் குபயோகமாக அமைத்துவைத்த பல புண்யதீர்த்தம், மஜ்ஜநம் என்னும்வடசொல் மஞ்சநம் எனத் திரிந்து வந்தது, ஒற்றுடை - ஸ்நாநந்தரம் நீர்துடைக்கும் வஸ்திரம். (உ0கூ)

கதிரெனக் கதிர்க்குஞ் செம்பொற் கவின்செய்பட் டாடை சாத்திப்
பிதிர்கருப் பூர நானம் பெய்விரைச் சாந்தஞ் சாத்தி
முதிரொளி விரிக்குந் தண்ணென் முத்தவக் கதையுஞ் சாத்தி
யதிர்தர வண்டுந் தேனு மலங்குபூந் தொடையல் சாத்தி.

(ப - ரை.) கதிர்என - சூரியன்போல, கதிர்க்கும் - ஒளிசெய்கின்ற, செம்பொன் - செம்பொன்மயமான, கவின்செய் - அழகைச்செய்கிற, பட்டு ஆடைசாத்தி - பட்டுவஸ்திரத்தையுடுத்தி, பிதிர் - பொடியாதற்குரிய, கருப்பூரம் - பச்சைக்கருப்பூரத்தையும், நானம் - கஸ்தூரியையும், பெய் - சேர்த்தமைத்த, விரை - பரிமளமுள்ள, சாந்தம் - சந்தநக்குழம்பை, சாத்தி - பூசி, முதிர்ஒளிவிரிக்கும் - பேரொளியை வீசுகிற, தண்ணென் முத்தம் - குளிர்ந்த முத்தாகிய, அக்கதையும் - அக்ஷதையையும், சாத்தி - தூவி, வண்டும் - கருவண்டுகளும், தேனும் - தேன்வண்டுகளும், அதிர்தர - ஆரவாரமுண்டாக, அலங்கு - அசைந்து மொய்க்கப்பெற்ற, பூதொடையல்-பூமாலையை, சாத்தி - தரித்து. எ - று.

(பொ-ரை.) சூரியன்போல ஒளிசெய்கின்ற செம்பொன்மயமான அழகைச்செய்கிற பட்டுவஸ்திரத்தையுடுத்தி, பொடியாதற்குரிய பச்சைக்கருப்பூரத்தையும் கஸ்தூரியையும் சேர்த்தமைத்த பரிமளமுள்ள சந்தநக்குழம்பைப்பூசி, பேரொளியை வீசுகிற குளிர்ந்த முத்தாகிய அக்ஷதையையும் தூவி, கருவண்டுகளும் தேன்வண்டுகளும் ஆரவாரமுண்டாக அசைந்து மொய்க்கப்பெற்ற பூமாலையைத்தரித்து. எ - று.

(வி - ரை.) செம்பொன் என்றகுறிப்பால் கதிர் சூரியனையுணர்த்திற்று, கதிர்- சினையாகுபெயர், பொன்னுடையைப்பீதாம்பரம் என்பர் வடநூலார், பீதம் - பொன், அம்பரம் - வஸ்திரம், பொற்பட்டாடை-பொன்வேலை செய்யப்பட்டுள்ள பட்டுவஸ்திரம், சந்தநம் என்னும் வடசொல் சாந்தம் என விகாரப்பட்டது, வண்டுதேன் என்பன சாதிபேதம், சுரும்புமிஞிறு என்பனவுமுண்டு, இவற்றுள்ளே வண்டும், தேனும் சிறந்தனவாதலாலும், இவை மொய்ப்பது நறுமலர்மாலையையே யாதலாலும், இவைமொய்த்தலால் பூமாலைக்குச் சிறப்புண்டாதல் வேண்டுமாதலாலும் "வண்டுந்தேனுமலங்கு பூந்தொடையல்" என்றார். முத்தவக்கதை - பண்புத்தொகை, முத்தமாகிய அக்கதை எனவிரியும். (௨௬௦)

விரைதரு தூமங் காட்டி மேவுநெய் விளக்கங் கோட்டி
யுரைபெறு பளித நீரா சனக்கல மொளிரச் சுற்றித்
திரைசெய்நல் லமுத மன்ன தீஞ்சுவை யுணவு நல்கிக்
கரையறு தவத்தோன் வாயுங் கையுமொள் ளறலிற்பூசி.

(ப - ரை.) விரைதருதூமங்காட்டி - வாசனையைத்தருகிற புகையை அருக்காட்டி, நெய்மேவுவிளக்கம் கோட்டி - நெய்யினமைந்த தீபத்தைச் சுழற்றி, உரைபெறுபளிதம் - சிறப்புப்பெற்ற கர்ப்பூரத்தையுடைய, நீராச



ஸ்ரீகண்ணபிரான்குசேலரை உபசரித்தல்.

நம் - மங்கள ஆலத்தியமைந்த, கலம் - பாத்திரத்தை, ஒளிரசுற்றி - விளங்கச் சுழற்றி, திரைசெய் - பாற்கடலினாலுண்டாக்கப்பட்ட, நல்அமுதம் அன்ன - சிறந்த தேவாமிர்தம்போன்ற, தீ சுவை - இன்சுவையையுடைய, உணவு நல்கி - உணவளித்து, கரைஅறுதவத்தோன் - எல்லையற்ற தவத்தையுடையோனாகிய இம்முனிவனது, வாயும் - வாயையும், கையும் - கைகளையும், ஒள்அறலின் - நன்னீரினால், பூசி - கழுவித்துடைத்து. எ - று.

(பொ - ரை.) வாசனையைத்தருகிற புகையை அருகேகாட்டி, நெய்யினாலமைந்த தீபத்தைச்சுழற்றி, சிறப்புப்பெற்ற சர்ப்பூரத்தையுடைய மங்கள ஆலத்தியமைந்த பாத்திரத்தை விளங்கச்சுழற்றி, பாற்கடலினாலுண்டாக்கப்பட்ட சிறந்ததேவாமிர்தம்போன்ற இன்சுவையையுடைய உணவளித்து, எல்லையற்ற தவத்தையுடையோனாகிய அம்முனிவனது வாயையும் கைகளையும் நன்னீரினால் கழுவித்துடைத்து. எ - று.

(வி - ரை.) விரைதருதூமம் - அகிற்கட்டை முதலியவற்றின் வாசனையைவீசுகின்ற புகை. "தூபங்கமழ" என்றார் பெரியாரும், தூமம் - வடசொல், நீராஜநம் - வடசொல், இது நீராசநம் எனத்திரிந்தது, இதனை நீராஞ்சநம் எனவும் வழங்குவர் தமிழர், இது கண்ணெச்சில் கழித்தற்குபயோகிக்கும் ஆலத்தி, திரை - சினையாகுபெயர், அமுதம் எனமேல் வந்தமையால் இது பாற்கடலையுணர்த்திற்று. (உகக)

பாகடை சிறப்ப நல்கிப் பயன்பெறு முகமன் கூறிப்
போகுயர் மாடத் திட்ட பொற்றதன் படுக்கை யேற்றி
மோகமிக் கருகி ருந்து முதுகுதை வந்து பின்னுங்
கோகன கப்பூங் கையாற் குளிர்செய்பொற் கவரி வீசி.

(ப - ரை.) பாகுஅடை - பாக்குவெற்றிலைகளை, சிறப்பநல்கி - மேன்மையாகக்கொடுத்து, பயன்பெறும் - பயன்பெற்ற, முகமன்கூறி - உபசாரவார்த்தைகளைச்சொல்லி, போகுஉயர் - மிகவுமுயர்ந்த, மாடத்து இட்ட - உபரிகையின்மேல் அமைக்கப்பட்ட, பொற்ற - பொன்மயமான, தன்படுக்கை ஏற்றி - தன்சயநத்தின்மேலேறச்செய்து, மோகம்மிக்கு - (அவனிடத்து) அன்பு மிகுந்து, அருகுஇருந்து - அருகிலிருந்து, முதுகுதைவந்து - (அவனது) முதுகைத்தடவிக்கொடுத்து, பின்னும்-மேலும், கோகநகம்பூ-தாமரைமலர்போன்ற, கையால் - தன்கைகளால், குளிர்செய் - குளிர்ச்சியைச் செய்கிற, பொன் - பொன்வேலையமைந்த, கவரிவீசி - சாமரம்வீசி. எ - று.

(பொ - ரை.) பாக்குவெற்றிலைகளை மேன்மையாகக்கொடுத்து, பயன்பெற்ற உபசாரவார்த்தைகளைச் சொல்லி, மிகவுமுயர்ந்த உபரிகையின்மேல் அமைக்கப்பட்ட பொன்மயமான தன் சயநத்தின் மேலேறச்செய்து, (அவனிடத்து) அன்புமிகுந்து, அருகிலிருந்து, (அவனது) முதுகைத்தடவிக்கொடுத்து, மேலும், தாமரை மலர்போன்ற தன் கைகளால், குளிர்ச்சியைச்செய்கிற பொன்வேலையமைந்த சாமரம் வீசி. எ - று.

(வி - ரை) பாகடைநல்குதல் - அடைக்காய்தருதல், பாகடை - பண்மைவிகுதிபெறுத அஃறிணையும்மைத்தொகை. சிறப்ப - பலவகை முகவாசப் பண்டங்களும் அமைய. இல்லாததைச் சொல்லிப்புகழ்தலை விலக்குதற்கு, 'பயன்பெறு முகமன்கூறி' என்றார், போகு - மிகுதிப்பொருள் தருவதோருரிச்சொல், யோகம் என்னும் வடசொல் விகாரப்பட்டு யோகு என நிற்றல் போல, போகம் என்றவடமொழி அம்கெட்டுப்போகு என நின்றதாகக்கொண்டு, 'போகுஉயர்மாடம்' இன்பமிகுந்தமாடம் என்றுரைப்பினுமாம், மோஹம் என்னும் வடசொல்லை உபயோகித்தது அன்பின்மிகுதி தோன்றற்கென்க, தைவந்து என்பதற்குப் பகுதி தைவா, கோகநகம். கோகநதம் என்னும் வடசொற்றிரிபு, இதற்கு, சக்ரவாகப்பறவைகள் தன்னிடத்து விளையாடப்பெற்றது என்பது பொருள். கோகம்-சக்ரவாகம், குளிர் - முதனிலைத்தொழிற்பெயர். (உகஉ)

வழிநடந் திளைத்த வேயிம் மலரடி யிரண்டு மென்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல வருடினன் கமலக் கண்ணன்
பழியில்பல் லுபசா ரங்கள் பண்ணவுந் தெரியா னாகி
யொழிவறு தவக்கு சேல னொன்றும்பே சாதிருந் தான்.

(ப - ரை.) இ - இந்த, மலர் - தாமரைமலர்போன்ற, அடி இரண்டும் - சீர்பாதங்களிரண்டும், வழிநடந்து - வழிநடந்ததனால், இளைத்தவே - மெலிந்தனவோ, என்று - என்று உபசாரவார்த்தைகூறி, கழிமகிழ்சிறப்ப - மிகுமகிழ்ச்சிபொங்க, கமலம் கண்ணன் - செந்தாமரை மலர்போலுங் கண்களையுடையவனாகிய ஸ்ரீகண்ணபிரான், மெல்லவருடினன் - ம்ருதுவாக (குசேலனது) பாதங்களைத்தடவினன், (இவ்வாறு) பழி இல் - குற்றமற்ற, பல் உபசாரங்கள் - பல உபசாரங்களை, பண்ணவும் - (ஸ்ரீக்ருஷ்ணபகவான்) செய்யவும், ஒழிவு அறு - நீங்குதலில்லாத, தவம் - தவத்தையுடைய, குசேலன் - குசேலமுனிவன், தெரியான்ஆகி - மெய்மறந்தவனாய், ஒன்றும் - ஒரு வார்த்தையாயினும், பேசாது இருந்தான் - பேசாமல் (மௌனமாய்) இருந்தான்.

(பொ - ரை.) இந்தத் தாமரைமலர்போன்ற சீர்பாதங்களிரண்டும் வழிநடந்ததனால் மெலிந்தனவோ, என்று உபசாரவார்த்தைகூறி, மிகு மகிழ்ச்சி பொங்கச் செந்தாமரை மலர்போலுங் கண்களையுடைய ஸ்ரீகண்ணபிரான் ம்ருதுவாக (குசேலனது) பாதங்களைத் தடவினன், (இவ்வாறு) குற்றமற்ற பல உபசாரங்களை (ஸ்ரீக்ருஷ்ணபகவான்) செய்யவும், நீங்குதலில்லாத தவத்தையுடைய குசேலமுனிவன் மெய்மறந்தவனாய் ஒரு வார்த்தையாயினும் பேசாமல் (மௌனமாய்) இருந்தான். எ - று.

(வி - ரை.) இளைத்த - முற்று, ஏ - வினா, கழி - உரிச்சொல். கமலம் உபசாரம் என்பன தற்சம வடசொற்கள், 'சர்வேசுவரன்' சேதநகோடியிலொருவனாகிய ஒரு ஏழை வேதியனை இவ்வாறு உபசரித்தது, அவதார லீலையையும் அந்தணர் சிறப்பையும் விளக்குதற்காதலால், உபசாரத்துக்கு,

'பழியில்' என விசேடணம் கொடுத்தார். யாவராலும் உபசரிக்கப்படுதற்குரிய சர்வேசுவரனால் உபசரிக்கப்பட்ட குசேலமுனிவனது தபோவிசேஷம் தோன்ற, 'ஒழிவறுதவக்குசேலன்' என்றார். மெய்மறத்தற்குக் காரணம் ஸ்ரீகண்ணபிரானைத் தரிசித்ததனாலுண்டாகிய உவகை மிகுதியென்க. வழிநடந்து என்பதில் நடந்து காரணப்பொருட்டாகிய வினையெச்சம்.

பித்தருன் மத்தர் பாலர் பிசாசர்தங் குணத்த ராவர்
நத்தவ ஞான யோக ரெனமறை நவிலு மாற்றாற்
சித்தம்விட் டகலா தையன் றிருவுருத் தியானஞ் செய்து
புத்தமு தூறு மின்பிற் புணர்ந்தசை வற்றி ருந்தான்.

(ப - ரை.) நத்தவம் - நல்லதவத்தையுடைய, ஞானயோகர் - ஞானயோகியர், பித்தர் - பித்தரும், உன்மத்தர் - உன்மத்தரும், பாலர் - பாலகரும், பிசாசர் - பிசாசரும் (ஆகிய இவர்களுடைய), குணத்தர் ஆவர் என - குணத்தையுடையவ ராவாரென்று, மறை - வேதங்கள், நவிலும் ஆற்றால் - சொல்லுகிற காரணத்தால், (குசேலமுனிவன்) ஐயன் - ஸ்ரீகண்ணபிரானது - திருவுரு - திவ்யமங்கள விக்ரஹமானது, சித்தம் விட்டு அகலாது - (தன்) மனத்தைவிட்டு நீங்காதிருக்கும்படி, தியானம்செய்து-(அதனையே) தியானம்செய்து, புது அமுது ஊறும் - புதிய அமிர்தம் சுரப்பதனாலுண்டாகிய, இன்பின் - இன்பம்போன்ற இன்பத்தில், புணர்ந்து - சேர்ந்து, அசைவு அற்று இருந்தான் - அசை வொழிந்திருந்தான். எ - று.

(பொ - ரை.) நல்லதவத்தையுடைய ஞானயோகியர், பித்தரும் உன்மத்தரும்பாலகரும் பிசாசரும் (ஆகிய இவர்களுடைய) குணத்தையுடையவ ராவாரென்று வேதங்கள் சொல்லுகிற காரணத்தால், (குசேலமுனிவன்) ஸ்ரீகண்ணபிரானது திவ்யமங்கள விக்ரஹமானது (தன்) மனத்தைவிட்டு நீங்காதிருக்கும்படி அதனையே தியானம்செய்து, புதிய அமிர்தம் சுரப்பதனாலுண்டாகிற இன்பம்போன்ற இன்பத்தில் சேர்ந்து, அசைவொழிந்திருந்தான்.

(வி - ரை.) பித்தர் - பிறழவுணர்ந்தவர், உன்மத்தர் - சித்தபிரமைகொண்டவர், பாலர் - சிறுகுழந்தைகள், பிசாசர் - பேயர், தம் - சாரியை, ஆறன்பொருளில் வருவது. நத்தவம் - நல்லதவம், இது நக்கீரர், நப்பாலத்தனார், நப்பின்னை என்பனபோல்வது. ஸ்ரீகண்ணபிரான் யாவர்க்கும் இறைவனாதலால், அவனை, 'ஐயன்' என்றார். தியானம் செய்தல் - மநநம் பண்ணுதல். 'புத்தமுது' "புத்துருக்கு நெய்" என்பது போல்வது. அசைவற்றிருத்தல் - சலநமற்றிருத்தல். (உகச)

வழுவில்பைங் குளவி யோசை யன்றிமற் றொன்றுந் தேராப்
புழுவென விருக்குந் தன்மை பூண்டமற் றிவனே பொங்கும்
பழுதில்கற் புடையா டன்சொற் படிவருஞ் செல்வம் வேண்டுங்
கொழுகிணங் குதட்டி யாற்றூர்க் குமைத்தெழும் வடிவேல் வேந்தே.

(ப - ரை.) வழுவு இல் - குற்றமற்ற, பை - பசிய, குளவி-குளவியின், ஓசை அன்றி - ஓசையையல்லது, மற்று ஒன்றும் தேரா - வேறொன்றையு

மறியாத, புழுஎன இருக்கும் தன்மைபூண்ட - புழுப்போல இருக்கு மியல்பையுடைய, இவனோ - இந்தக்குசேலமுனிவனோ, பொங்கும் - விளங்குகிற, பழுதுஇல் - குற்றமில்லாத, கற்புஉடையாள் - கற்புடையவளாகிய தன் மனைவியின், சொற்படி - சொல்லின்படியே, வறும்செல்வம்வேண்டும் - வறுமையாகிய செல்வத்தை விரும்புவான், (விரும்பமாட்டான்), கொழுநிணம்குதட்டி - கொழுமையாகிய நிணத்தை மென்று, மாற்றார் குமைத்து எழும் - பகைவரை யழித்து விளங்குகின்ற, வடிவேல் - வடித்தவேற்படையையுடைய, வேந்தே - அரசனே. எ - று.

(பொ - ரை.) குற்றமற்ற பசிய குளவியின் ஓசையையல்லது வேறொன்றையுமறியாத புழுப்போல இருக்குமியல்பையுடைய இந்தக் குசேலமுனிவனோ விளங்குகிற குற்றமில்லாத கற்புடையவளாகிய தன்மனைவியின் சொல்லின்படியே வறுமையாகிய செல்வத்தை விரும்புவான், (விரும்பமாட்டான்) கொழுமையாகிய நிணத்தைமென்று பகைவரையழித்து விளங்குகின்ற வடித்த வேற்படையையுடைய அரசனே. எ - று.

(வி - ரை.) பழுவில் என்பதைக் குளவிக்காதல் புழுவுக்காதல் விசேடணமாக்குக, குளவி - ஓர்வகைவண்டு, புழு - பச்சைப்புழு, என - உவமவுருபு, இவனோ என்பதில் ஓகாரம் எதிர்மறை, கற்புடையாடன் என்பதில் தன்சாரியை, வறுஞ்செல்வம் - பயனற்றசெல்வம், உளதுபோற்றோன்றியழியுமியல்புள்ள செல்வம், மற்று - அசை, வடிவேல் - வினைத்தொகை, வடி - கூர்மையுமாம், வேந்து என்றது பரீக்ஷித்து மஹாராஜனை, வேந்து - பண்பாகுபெயர். (உகரு)

உருவினைக் கண்டுங் கண்டத் தொளிர்வன மணங்க வர்ந்து
மருமைசான் முகமன் கேட்டு மமைந்தமெய்ப் பரிச முற்றும்
வெருவினற் றிருநா மங்கள் விருப்பினுட் டுதித்து மைந்தும்
பொருவிலா னந்த மெய்தப் பொலிகடத் தீபம் போன்றான்.

(ப - ரை.) உருவினை - (ஸ்ரீ கண்ணபிரானது) திருமேனியை, கண்டும் - தரிசித்தலாலும், கண்டத்து - (அப்பிரானது) கழுத்தில், ஒளிர் - விளங்குகிற, வனம் - துளவமாலையின், மணம் - வாசனையை, கவர்ந்தும் - மோத்தலாலும், அருமைசால்-அருமைமிகுந்த, முகமன் - (அவனது) உபசாரமொழிகளை, கேட்டும் - கேட்டலாலும், அமைந்த - பொருந்தின, மெய் - (அவனது) திருமேனியின், பரிசம்உற்றும் - பரிசத்தையடைதலாலும், வெருவு இல் - அச்சமில்லாத, நல் - சிறந்த, திருநாமங்கள் - (அவனது) திருநாமங்களை, விருப்பின் - விருப்பத்தோடு, உள்துதித்தும்-உள்ளே தோத்திரஞ்செய்தலாலும், ஐந்தும் - (முறையே கண் மூக்கு செவி மெய் வாய் என்னும்) ஐந்திந்திரியங்களும், பொருவுஇல் - நிகரில்லாத, ஆநந்தம்எய்த - இன்பத்தையடைய, பொலி - விளங்குகிற, கடம் - குடத்திலிட்ட, தீபம்போன்றான் - விளக்குப்போன்றான். எ - று.

(பொ - ரை.) ஸ்ரீ கண்ணபிரானது திருமேனியைத் தரிசித்தலாலும், (அப்பிரானது) கழுத்தில் விளங்குகிற துளவமாலையின் வாசனையைமோத்தலாலும், அருமை மிகுந்த (அவனது) உபசாரமொழிகளைக் கேட்டலாலும், பொருந்தின அவனது திருமேனியின் பரிசத்தை யடைதலாலும், அச்சமில்லாத சிறந்த (அவனது) திருநாமங்களை விருப்பத்தோடு உள்ளே தோத்திரஞ்செய்தலாலும், (முறையே கண் மூக்கு செவி மெய் வாய் என்னும்) ஐந்திந்திரியங்களும் நிகரில்லாத இன்பத்தையடைய, விளங்குகிற குடத்திலிட்ட விளக்குப்போன்றான். எ - று.

(வி - ரை.) கண்டம், ஸ்பர்ஸம், நாமம், ஆநந்தம், கடம், தீபம், என்பன வடசொற்கள், வநம்-துளசி, வநமாலையென்பது திருமாலுக்குரிய மாலைக்குப்பெயர் எனினுமாம், அது புஷ்பமாலையென்றும், வநஜபுஷ்பபலாதிசோபிதமான மாலையென்றும் பொருள்படும், பரிசம் - தீண்டுதல், வெருவினற்றிருநாமம், என்றது பிறவித்துன்பத்துக் கஞ்சும் அச்சமறுதற்கேதுவாகிய திருநாமம் என்றபடி, உள்துதித்தல் - ஜபித்தல், மெய் வாய் கண் மூக்குச்செவியென்பது முறையாயிருக்க, கண்ணை முற்கூறினது, அக்கண்ணிற் சிறந்தவுறுப்பில்லை யென்பதை விளக்குதற்கென்க. "கண்ணிற் சிறந்தவுறுப்பில்லையாவதுங் காட்டியதே" என்றார்*பிறரும். (உகசு)

நீருறு முப்புப் போலு நெருப்புறு பளிதம் போலு,
மேருறு வடிவத் தண்ண லிடத்துத்தன் மனங்க லப்பப்
பேருறு பவஞ்ச வாழ்க்கைப் பிணிப்பொழிந் தகலக் கஞ்சத்
தாருறு மார்பத் தையன் றன்னையு மறந்தி ருந்தான்.

(ப - ரை.) ஏர்உறு-அழகுமிகுந்த, வடிவத்து-திருவுருவத்தையுடைய, அண்ணலிடத்து - ஸ்ரீ கண்ணபிரானிடத்தில், நீர்உறும் உப்புபோலும் - நீரைச்சேர்ந்த உப்புப்போலவும், நெருப்பு உறுபளிதம்போலும் - நெருப்பைச்சேர்ந்த கர்ப்பூரம்போலவும், தன்மனம்கலப்ப - தன்மனம்கலத்தலால், கஞ்சம்தார் உறும் - தாமரை மலர்மாலையைப்பொருந்தின, மார்பத்து - மார்பினையுடைய, ஐயன் - குசேலமுனிவன், பேர்உறு - பெருமைபொருந்திய, பவஞ்சவாழ்க்கை-பிரபஞ்சவாழ்வாகிய, பிணிப்பு ஒழிந்துஅகல - கட்டுநீங்கியகல, தன்னையும் மறந்திருந்தான்-தன்னையுமறந்து (நிச்சலமாய்) இருந்தான்.

(பொ - ரை.) அழகுமிகுந்த திருவுருவத்தையுடைய ஸ்ரீ கண்ணபிரானிடத்தில் நீரைச்சேர்ந்த உப்புப்போலவும் நெருப்பைச்சேர்ந்த கர்ப்பூரம்போலவும் தன்மனம் கலத்தலால், தாமரை மலர்மாலையைப் பொருந்தின மார்பினையுடைய குசேலமுனிவன் பெருமைபொருந்திய பிரபஞ்சவாழ்வாகிய கட்டுநீங்கித்தன்னையுமறந்து (நிச்சலமாய்) இருந்தான். எ - று.

(வி - ரை.) பளிதம் - கர்ப்பூரம், ப்ரபஞ்சம் என்னும் வடசொல்பவஞ்சம் எனத்திரிந்து வந்தது, வாழ்க்கை - தொழிற்பெயர், வாழ்க்கைப்பிணிப்பு - பண்புத்தொகை, பிணிப்பு - என்பதற்குப்பகுதி பிணி, அகலுதல் -

தூரத்தேவிலகிப்போதல், வேதியர்க்குத்தாமரை மலர்மாலையுரியதென்பது தோன்ற, 'கஞ்சத்தாருறு மார்பத்தையன்' என்றார், தன்னையும் என்றவும்மை இறந்ததுதழீஇயது, பேர்உறுபவஞ்சம் என்றது பேர்மாத்திரையாகப் பொருந்தின பிரபஞ்சம் என்றபடி, ஒழிந்து மறந்திருந்தான் எனவியையும். (உசஎ)

இன்னண மிவனி ருப்ப விவன்வர வனைத்துஞ் சொல்லா
முன்னரே யுணர்ந்து கொண்ட முழுமுதற் கண்ண னென்பான்
மன்னிய வுவகை பூத்து வழிதரு மனத்த னாகி
யன்னவன் வதந நோக்கி யமையவின் னனசொல் வானால்.

(ப - ரை.) இன்னணம் - இவ்வாறு, இவன் - இந்தக்குசேலன், இருப்ப - தன்னைமறந்திருக்க, இவன்வரவு அனைத்தும் - இவன்வரவின் வரலாறு முழுதும், சொல்லாமுன்னரே உணர்ந்துகொண்ட - சொல்லாததற்கு முன்பேயறிந்துகொண்ட, முழுமுதல் - முழுமுதற்பொருளாகிய, கண்ணன் என்பான் - ஸ்ரீ க்ருஷ்ணபகவான் என்று சிறப்பித்துச்சொல்லப்படுவோன், மன்னிய - நிலைபெற்ற, உவகைபூத்து - மகிழ்ச்சிவெள்ளம்மிகுந்து, வழிதரு- வழிந்தோடுகின்ற, மனத்தன் ஆகி - மனத்தையுடையவனாகி, அன்னவன் வதநம்நோக்கி - அந்தக்குசேலனது முகத்தைப்பார்த்து, அமைய - தகுதியாக, இன்னன - இந்தவார்த்தைகளை, சொல்வான் - சொல்வானாயினன். எ - று.

(பொ - ரை.) இவ்வாறு இந்தக்குசேலன் தன்னை மறந்திருக்க, இவன் வரவின்வரலாறு முழுதும் சொல்லாததற்கு முன்பேயறிந்துகொண்ட முழுமுதற்பொருளாகிய ஸ்ரீ க்ருஷ்ணபகவான் என்று சிறப்பித்துச்சொல்லப்படுவோன், நிலைபெற்றமகிழ்ச்சி வெள்ளம்மிகுந்து வழிந்தோடுகின்ற மனத்தையுடையவனாகி அந்தக்குசேலனது முகத்தைப்பார்த்து, தகுதியாக இந்த வார்த்தைகளைச் சொல்வானாயினன். எ - று.

(வி - ரை.) முழுமுதல் - எல்லாவுயிர்களுக்கும் முதல்வரான திரிமூர்த்திகளுக்கும் முதல்வன், அன்றி எங்கும் நிறைந்தவன், அன்றி எல்லாமங்கள குணங்களாலும் பூர்ணன், என்பான் - செயப்பாட்டுவினை, வதநம் - வடசொல், ஆல் - அசை, இன்னவண்ணம் என்பது இன்னணம் எனத்தொகுத்தலாயிற்று, சொல்லாமுன்னரே என்றது துவாரபாலகர் சொல்லாததற்கு முன்பேயென்றபடி, உணர்ந்துகொண்ட - இயற்கை யறிவானேயறிந்துகொண்ட, வழிதரும் என்றதற்கேற்ப உவகையை வெள்ளமாக்கி யுரைக்கலாயிற்று, இன்னன என்றது கீழ்வருவனவற்றை யென்றபடி. (உசஅ)

கோச்சகக்கலிப்பா.

மன்னுடைய மறையனைத்தும் வகுத்துணர்ந்த மாதவனே
யுன்னுடைய தரிசனத்தா லுடம்புபூ ரித்தனன்யான்
மின்னுடைய விளங்கொளிவேல் வேந்தருளுந் தேவருளு
மென்னுடைய பெறலரும்பே றியார்பெற்றார் யார்பெறுவார்.

(ப - ரை.) மன்உடைய - நிலைபேறுடைய, மறைஆ ங்கும் - வேதங்களெல்லாவற்றையும், வகுத்து உணர்ந்த - வகுத்தறிந்த, மாதவனே - பெருந்தவத்தினனே, உன்னுடைய தரிசநத்தால் - உனதுசேவையால், யான் - நான், உடம்பு பூரித்தனன் - உடல் பூரித்தேன், மின்உடைய - மின்னலினுடைய, விளங்குஒளி - விளங்குகிற ஒளிபோன்ற ஒளியையுடைய, வேல்-வேற்படையைத்தரித்த, வேந்தர் உள்ளும்-அரசர்களிலும், தேவர் உள்ளும் - தேவர்களிலும், என்னுடைய - எனது, பெறல்அருபேறு - பெறுதற்கரிய பாக்கியத்தை, யார்பெற்றார் - (இதற்குமுன்) யார்பெற்றவர், யார்பெறுவார்- (இனிமேல்) யார்பெறுவோர். எ - று.

(பொ - ரை) நிலைபேறுடைய வேதங்களெல்லாவற்றையும் வகுத்தறிந்த பெருந்தவத்தினனே, உனதுசேவையால் நான் உடல் பூரித்தேன், மின்னலினுடைய விளங்குகிற ஒளிபோன்ற ஒளியையுடைய வேற்படையைத் தரித்த அரசர்களிலும் தேவர்களிலும் எனது பெறுதற்கரியபாக்கியத்தை இதற்கு முன்யார் பெற்றவர், இனிமேல் யார் பெறுவோர். எ - று.

(வி - ரை.) தனது பாக்கியவிசேஷத்தை வியந்தவாறு, தேவர் - விண்ணுலகில் வாழ்வோர், மன்னுடைய - பெருமையையுடைய எனினுமாம். வகுத்துணர்தல் - பொருளுமுட்பட ஆராய்ந்தறிதல். மின்னுடைய - மின்னுதலையுடைய எனினுமமையும், மின்னுடைய விளங்கு - மின்னலும் தோற்கும்படி பிரகாசிக்கிற என்றலுமொன்று. பேறு - லாபம், பெற்றார் பெறுவார் என்பவற்றிற்கேற்ப இதற்குமுன், இனிமேல் என்பன வருவித்துரைக்கப்பட்டன. (உகக)

பூன்றதயை யென்னிடத்தெப் போதுநீ வைத்தருள்க
வான்றவென துளத்தினைவிட் டகன்றிலையிந் நாள்காறுஞ்
சான்றகுணத் தாயின்னுஞ் சந்ததமு நினைந்திருப்பேன்
றோன்றவனே கம்பெறினுந் தொன்னட்பிற் சிறந்தனவோ.

(ப - ரை.) நீ - நீ, என் இடத்து - என்னிடத்தில், எப்போதும் - எக்காலத்திலும், பூன்றதயை வைத்தருள்க - பூர்ணக்ருபையை வைத்தருள வேண்டும், இந்நாள்காறும் - இந்நாள்வரைக்கும், ஆன்ற - அகன்ற, எனது உளத்தினை - என்மனத்தை, விட்டு அகன்றிலை - விட்டுநீங்கினையில்லை, சான்ற குணத்தாய் - நிறைந்த குணத்தையுடையவனே, இன்னும் - இனிமேலும், சந்ததமும் - சதாகாலமும், நினைந்திருப்பேன் - நினைத்துக்கொண்டேயிருப்பேன், அநேகம் - அநேகமான பாக்கியங்களை, தோன்றபெறினும் - உண்டாகப்பெற்றாலும், (அவையாவும்) தொல் நட்பின் - பழையநட்பினும், சிறந்தனவோ - சிறந்தனவாமோ. (ஆகா) எ - று.

(பொ - ரை.) நீ என்னிடத்தில் எக்காலத்திலும் பூர்ணக்ருபையை வைத்தருளவேண்டும், இந்நாள்வரைக்கும் அகன்ற என்மனத்தை விட்டு நீங்கினையில்லை, நிறைந்தகுணத்தை யுடையவனே, இனிமேலும் சதாகாலமும்

நினைத்துக்கொண்டேயிருப்பேன், அநேகமான பாக்கியங்களை உண்டாகப் பெற்றாலும் (அவையாவும்) பழையநட்பினும் சிறந்தனவாமோ (ஆகா)

(வி - ரை) பூன்ற - பூர்ணமான, "பூன்ற முத்தனுமாய்" என்றார் பிறரும். அநன்ற என்பது ஆன்ற என விகாரப்பட்டது. சான்ற என்பதற்குப் பகுதிசால். குணம், சந்ததம், அநேகம் என்பன வடசொற்கள். பெறினும் என்றவும்மை பெறலருமை தோன்றவந்தது, தொன்னட்பின் என்பதில் இன் ஐந்தாவதன் உறழ்ச்சிப்பொருளது, சிறந்தனவோ என்னும் ஓகாரம் எதிர்மறை. (உஉ0)

ஆயின்மறை முதற்கலைக ளனைத்துமுணர்ந் தறமறம்பாத்
தேயினிது நன்றிதுதீ தென்றுணர்த்து மவர்நட்பை
வீயினுந்தான் மறப்பர்களோ மேதையோர் மறப்பரே
ஞயினுங்கீழ்ப் பட்டவர்க ளவர்காணிந் நானிலத்தே.

(ப - ரை.) ஆயின் - ஆராயுமிடத்து, மறைமுதல் - வேதமுதலாகிய கலைகள் அனைத்தும் - கலைகளெல்லாவற்றையும், உணர்ந்து - அறிந்து, அறம் மறம்பாத்து - தருமாதருமங்களைப் பகுத்தறிந்து, இனிது - இனிதாக, இது நன்றுதீது என்று - இதுநன்மை இதுதீமையென்று, உணர்த்துமவர் - அறிவிப்பவர்களுடைய, நட்பை - சிநேகத்தை, மேதையோர் - அறிவுடையோர், வீயினும் - (தாம்) இறந்தாலும், மறப்பர்களோ - மறந்துவிடுவார்களோ, (மறவார்) மறப்பரேல்-மறப்பராயின், அவர்-அவர்கள், இ-இந்த, நானிலத்து-உலகத்தில், நாயினும் கீழ்ப்பட்டவர்கள்-நாயினும் இழிந்தவர்களாவார்கள். எ-று.

(பொ - ரை.) ஆராயுமிடத்து வேதமுதலாகிய கலைகளெல்லாவற்றையும் அறிந்து, தருமாதருமங்களைப் பகுத்தறிந்து, இனிதாக, இது நன்மை இது தீமையென்று அறிவிப்பவர்களுடைய சிநேகத்தை, அறிவுடையோர் (தாம்) இறந்தாலும் மறந்து விடுவார்களோ, (மறவார்) மறப்பராயின், அவர்கள் இந்த உலகத்தில் நாயினும் இழிந்தவர்களாவார்கள். எ - று.

(வி - ரை) இதனால் வேதசாஸ்திரங்களெல்லாவற்றையுமறிந்தஉனது நட்பையான் மறவேன் என்றவாறாயிற்று, ஆயின் மறப்பர்களோ எனவியையும், இனிதுபாத்து எனவுமியைக்கலாம், பகுத்து என்பது பாத்து எனமரூஉவாயிற்று, இது என்றது முன்னின்ற நன்றேடும் பின்னின்ற தீதோடுங் கூடிற்றுதலால் நடுநிலைத்தீவகம். மறப்பர்களோ என்பதில் ஓகாரம் எதிர்மறை. தான் - அசை. மேதாஎன்ற வடசொல், மேதையென்றாயிற்று, பாத்தேயென்பதில் ஏ அசை, நானிலம் - நான்கு நிலங்களையுடையது, இது காரணப் பெயர். பண்புத்தொகையன்மொழி, நால்வகை நிலங்களாவன குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பன, இவற்றுள் குறிஞ்சி - மலையும் மலைசார்ந்த இடமும், முல்லை-காடும் காடுசார்ந்த இடமும், மருதம்-நாடும் நாடு சார்ந்தஇடமும், நெய்தல் கடலும் கடல்சார்ந்த இடமும் ஆம். (உஉக)

நல்லார்சொல் விரும்புவது நல்லாரைக் காண்பதுவு
நல்லார்க்கொன் றுதவுவது நல்லாரைப் புகழ்வதுவு
நல்லார்நன் றென்றுரைப்ப நவிற்றியவிவ் வெலாமடங்க
நல்லார்நட் பென்றுமுற னன் றன்றே நான்மறையோய்.

(ப - ரை.) நான்மறையோய் - நான்குவேதங்களையும் உடையவனே, நல்லார்சொல் விரும்புவதும் - நல்லோர்களுடைய சொல்லை விரும்புதலும், நல்லாரைகாண்பதுவும் - நல்லோர்களைக்காண்பதுவும், நல்லார்க்கு ஒன்று உதவுவதும்-நல்லோர்களுக்கு ஒருபொருளை உதவி செய்வதும், நல்லாரை புகழ்வதுவும்-நல்லோர்களைப் புகழ்வதும்,நல்லார்-நல்லோர்கள்,நன்று என்றுந விற்றியஉரைப்ப-நன்மையென்றுசொல்லும்படிசெய்த,இவ்வெல்லாம்-இவை யாவும், அடங்க - அடங்கும்படி, நல்லார்நட்பு என்றும் உறல் - நல்லோர் களுடைய நட்பு எக்காலத்தும் பொருந்தியிருத்தல், நன்றன்றே - நன்மை யல்லவா. எ - று.

(பொ - ரை.) நான்குவேதங்களையும் உடையவனே, நல்லோர்களு டைய சொல்லை விரும்புதலும், நல்லோர்களைக்காண்பதும், நல்லோர்களுக்கு ஒருபொருளை உதவிசெய்வதும், நல்லோர்களைப் புகழ்வதும், நல்லோர்கள் நன்மையென்று சொல்லும்படி செய்த இவையாவும் அடங்கும்படி நல்லோர் களுடைய நட்பு எக்காலத்தும் பொருந்தி யிருத்தல் நன்மையல்லவா. எ-று.

(வி - ரை.) நான்மறையோய் என்பதற்கு நான்கு வேதங்களையும்அறிந் தவனே யென்றுரைப்பினுமாம். "நல்லாரைக்காண்பதுவு நன்றே நலமிக்க, நல்லார்சொற் கேட்பதுவு நன்றேயாம், நல்லார், குணங்களுரைப்பதுவு நன்றே யவரோ, டிணங்கியிருப்பதுவு நன்று" "அறனறிந்து மூத்தவறிவுடை யார்கேண்மை, திறனறிந்து தேர்ந்துகொளல்" "அரியவற்றுளெல்லா மரிதே பெரியாரைப், பேணித்தமராக்கொளல்" இத்யாதிகளில்கூறப்பட்ட பொரு ளையே இந்நூலாசிரியரும் இச்செய்யுளி லமைத்திருக்கின்றமையால், இவர்க்கு அறிஞரிடத்துப் பத்திமைமிகுதி விளங்குகின்றது. நல்லார்-கல்வி கேள்வி யறிவொழுக்கங்களிற் சிறந்த பெரியோர், விரும்புவதும் காண்பது வும் முதலியவற்றினும்மைகள் எண்ணும்மைகள். (உஉஉ)

பொன்னுள்ளான் பூமியுள்ளான் புந்தியுள்ளா னுயிடினு
மென்னுள்ளா னுவனவ னிருந்தவர் நட்பில்லானேற்
பொன்னில்லான் பூமியில்லான் புந்தியில்லா னுயிடினு
மென்னில்லா னுவனவ னிருந்தவர் நட்புள்ளானேல்.

(ப - ரை.) (ஒருவன்) பொன்உள்ளான் - பொன்னையுடையவனும், பூமி உள்ளான் - பூமியையுடையவனும், புந்திஉள்ளான் - புத்தியையுடைய வனும், ஆயிடினும்-ஆனாலும், இருதவர்நட்பு இல்லான் ஏல்-பெருந்தவத்தினை ரது நட்பில்லாதவனுயின், அவன் - அவன், என் உள்ளான் ஆவன் - எப் பொருளையுடையவனுவன், (ஒருவன்) பொன் இல்லான் - பொன்னில்லாத

வனும், பூமியில்லான் - பூமியில்லாதவனும், புந்திஇல்லான் - புத்தியில்லாதவனும், ஆயிடினும்-ஆனாலும், இருதவர் நட்பு உள்ளானெல்-பெருந்தவத்தினரது நட்புடையவனாயின், அவன் - அவன், என் இல்லான்ஆவன்-எப்பொருளில்லாதவனாவன். எ - று.

(பொ - ரை.) (ஒருவன்) பொன்னையுடையவனும், பூமியையுடையவனும், புத்தியையுடையவனும் ஆனாலும், பெருந்தவத்தினரது நட்பில்லாதவனாயின் அவன் எப்பொருளையுடையவனாவன், (ஒருவன்) பொன்னில்லாதவனும் பூமியில்லாதவனும் புத்தியில்லாதவனும் ஆனாலும், பெருந்தவத்தினரது நட்புடையவனாயின், அவன், எப்பொருளில்லாதவனாவன். எ - று.

(வி - ரை.) பூமிமுதலிய வெல்லாவற்றினுஞ் சிறந்தது பொன்னாதலால் அதனை முன்வைத்தார். புந்தி புத்திஎன்னும் வடசொல் மெலிவு. ஆயிடினும் என்னுமிரண்டன் கண்ணுமுள்ளவும்மைகளுள் முன்னது உயர்வுசிறப்பும் பின்னது இழிவுசிறப்புமாம். இல்லானேல்உள்ளானேல் என்பவற்றில் எல் எனின் என்பதன்மரூஉ, என்னுள்ளான் என்னில்லான் என்பவற்றிற்கு முறையே ஒரு பொருளுமில்லாதவனாவன் என்றும் எப்பொருளும் உடையவனாவன் என்றும் உரைத்துக்கொள்க. என் என்னும் வினாஎதிர் மறைப்பொருளில் வந்தது. இல்லானேல் ஆவன்உள்ளானேல் ஆவன் எனவியையும். புத்தி - பேரறிவு. (உஉரு)

பேயோடு பழகுறினும் பிரிவதரி தரிதென்று
தூயோர்கண் மொழிவராற் றூயோரும் புகழ்தூயோ
ராயோர்கள் பெருநட்பை யருந்தவத்தாற் பெறலன்றி
யேயோவெண் மையிற்கிடைப்பி னிகழ்வரோ விகழ்வில்லார்.

(ப - ரை.) பேயோடு பழகுறினும் - (விவேகமில்லாததும் கொடியதுமாகிய) பேயோடுபழகினாலும், பிரிவதுஅரிது அரிது - (அதன் நட்பைவிட்டுப்) பிரிவது மிகவும் பொறுத்தற்கரிய துன்பமாம், என்று - என்று, தூயோர்கள் - மனத்தூய்மையுள்ள பெரியோர்கள், மொழிவர் - கூறுவார்கள், ஆல் - ஆதலால், தூயோரும் - (அப்படிப்பட்ட) பரிசுத்தரும், புகழ் - புகழ்தற்குரிய, தூயோர் ஆயோர்கள் - பரிசுத்தரானவர்களுடைய, பெறு - பெறுதற்குரிய, நட்பை - நட்பினை, அருதவத்தால் - (முன்னேசெய்த) அரியதவப்பயனால், பெறல்அன்றி - பெறுவதேயல்லாமல், எண்மையின் கிடைப்பின் - எளிதிற்கிடைத்தால், (அந்தநட்பினை) இகழ்வு இல்லார் - இகழப்படுகிற துர்க்குணமில்லாதவர்கள், இகழ்வரோ - அவமதிப்பார்களோ.

(பொ - ரை.) (விவேகமில்லாததும் கொடியதுமாகிய) பேயோடுபழகினாலும் (அதன் நட்பைவிட்டுப்)பிரிவது மிகவும் பொறுத்தற்கரிய துன்பமாம் என்று மனத்தூய்மையுள்ள பெரியோர்கள் கூறுவார்கள். ஆதலால் (அப்படிப்பட்ட) பரிசுத்தரும் புகழ்தற்குரிய பரிசுத்தரானவர்களுடைய பெறுதற்குரிய நட்பினை (முன்னேசெய்த) அரியதவப்பயனால் பெறுவதேயல்லாமல்

எளிதிற்கிடைத்தால் (அந்தநட்பினை) இகழப்படுகிற துர்க்குணமில்லாதவர்கள் அவமதிப்பார்களோ. எ - று.

(வி - ரை.) இகழ்வரோ என்னும் ஓகாரம் எதிர்மறை, ஏ ஓ - இகழ்வின் குற்றத்தைக்காட்டும் இழிவு சிறப்பிடைச்சொற்கள். பெருநட்பு என்னும் பாடம். பழகுறினும் என்ற உம்மை இழிவு சிறப்பு. அரிது அரிது என்னும் அடுக்கு பிரிவருமையை விளக்கும், எண்மை - எளிமை, பண்புப்பெயர், "பரீஇயுயிர் செகுக்கும் பாம்பொடுமின்னு, மரீஇப்பின்னைப்பிரிவு" "பொன்னேகொடுத்தும் புணர்தற்கரியாரைக், கொன்னேதலைக்கூடப்பெற்றிருந்தும், அன்னோ, பயனில் பொழுதாகக்கழிப்பரே நல்ல, நயமிலறி வினவர்" என்று நாலடியாரிலும், "பிரிவுசெய்தாலரிதே கொள்க பேயொடுமென்னும்பெற்றி, யிருவிசெய்தாளினிருந்தின்று காட்டுமிளங்கிளியே" என்று திருக்கோவையாரிலும் கூறுதல்காண்க. (உஉச)

சமையம்வரி னிடித்துரைப்பார் தக்கவழிச் செலச்செய்வா
ரிமையவர்தமுலகுறவு மிருளுலகம் பகையுமா
யமையவறி வுறுத்துவா ரந்தோநூல் கற்றுணர்ந்த
கமையுடையார் நட்பெவர்க்குக் காண்கிடைக்கு மரிதரிது.

(ப - ரை.) சமயம்வரின் - சமயம்வந்தால், இடித்துஉரைப்பார்-இடித்துச்சொல்லுவார்கள், தக்கவழி - தகுதியாகியநல்வழியில், செல்லசெய்வார் - நடக்கும்படி செய்வார்கள், இமையவர் தம்உலகுஉறவும் - தேவருலகம்உறவும், இருள்உலகம் பகையும்ஆய்அமைய - இருள்செறிந்த இவ்வுலகம்பகையுமா யமையும்படி, அறிவுறுத்துவார் - அறிவுநூல்களைப் போதிப்பார்கள், (ஆதலால்) நூல்கற்றுஉணர்ந்த - நூல்களைக்கற்றறிந்த, கமைஉடையார்நட்பு-பொறையுடைய பெரியோரது நட்பானது, எவர்க்குகிடைக்கும் - யார்க்குக்கிடைக்கும், அரிது அரிது-(கிடைப்பது) மிகவும்அருமையாம், எ - று.

(பொ - ரை.) சமயம்வந்தால் இடித்துச்சொல்லுவார்கள், தகுதியாகிய நல்வழியில் நடக்கும்படிசெய்வார்கள், தேவருலகம்உறவும் இருள்செறிந்த இவ்வுலகம்பகையுமா யமையும்படி அறிவுநூல்களைப் போதிப்பார்கள், (ஆதலால்) நூல்களைக்கற்றறிந்த பொறையுடைய பெரியோரது நட்பானது யார்க்குக் கிடைக்கும் (கிடைப்பது)மிகவும்அருமையாம், எ - று.

(வி - ரை.) சமயம் - கெடுநிநேரிடுஞ்சமயம், இடித்துரைத்தல் - வற்புறுத்திச்சொல்லுதல்,"செவிசுடச்சென்றுங் கிடித்தறிவூட்டி,, என்றும்" நகுதற்பொருட்டன்று நட்டன்மிகுதிக்கண், மேற்சென்றிடித்தற்பொருட்டு என்றும், "இடிப்பாரையில்லாத வேமரா மன்னன், கெடுப்பாரிலானுங்கெடும்" என்றும் இவ்வாறுபலவிடங்களிலுங் கூறப்படுதல்காண்க, இமையாதவரை இமையவர்என்றதுமங்கலம், அறிவுறுத்துதல்-அறிவைப்புகட்டுதல். அந்தோ இரக்கவிடைச்சொல், கமை - க்ஷமாஎன்னும் வடசொற்றிரிபு, காண் - முன்னிலையசையிடைசசொல், நூல்என்றதுவீட்டுநூல்களை, அவைவேதவேதாந்த நூல்கள். (உஉரு)

கூடுதற்குக் கூடாத கூட்டத்துப் படுநட்பு
வீடுதற்குத் தக்கதாய் நாடோறு மெலிந்தொழியு
நீடுதற்குத் தக்கதுநன் னெறிநின்றோர் நட்பொன்றே
தேடுதற்குக் கிடையாத திரவியமுமஃதாமால்.

(ப - ரை.) கூடுதற்குகூடாத - கூடவொண்ணாத, கூட்டத்து - கூட்டத்தாரோடு, படும் - உண்டாகிற, நட்பு - சிநேகமானது, வீடுதற்குதக்கது ஆய் - அழிவதற்குத் தகுதியானதாய், நாள்தோறும் - தினந்தோறும், மெலிந்துஒழியும் - தேய்ந்தொழியும், (அவ்வாறன்றி) நீடுதற்குதக்கது - நெடுகி நிற்றற்குத் தகுதியானது, நல்நெறிநின்றோர் - நல்வழியில் நின்றோராகிய பெரியவரது, நட்புஒன்றே - நட்பொன்றேயாம், தேடுதற்குகிடையாத - தேடக்கிடைக்காத, திரவியமும் - பொருளும், அஃதுஆம் - அந்தநட்பேயாகும்.

(பொ - ரை.) கூடவொண்ணாத கூட்டத்தாரோடு உண்டாகிற சிநேகமானது அழிவதற்குத் தகுதியானதாய் தினந்தோறும் தேய்ந்தொழியும், (அவ்வாறன்றி) நெடுகிநிற்றற்குத் தகுதியானதுநல்வழியில்நின்றோராகிய பெரியோரது நட்பொன்றேயாம், தேடக்கிடைக்காத பொருளும் அந்த நட்பேயாம். எ - று.

(வி - ரை.) கூடுதற்குக் கூடாதகூட்டம் - சிற்றினம், வீடுதல் - அழிதல், நீடுதல் - நெடுங்காலம் அழியாதுநிற்றல், நன்னெறி - ஞானநெறி. ஒன்றேயென்னும் ஏகாரம்பிரிநிலை, தேற்றம்எனினுமாம். திரவியமும் என்றஉம்மை உயர்வுசிறப்பு. இறந்ததுதழீஇயதுமாம், ஆல் - அசை "நிறைநீரநீரவர் கேண்மைபிறைமதிப், பின்னீரபேதையார்நட்பு" என்பது திருக்குறள். "பெரியவர் கேண்மைபிறைபோல நாளும்,வரிசைவரிசையாநந்தும்-வரிசையால், வானூர் மதியம்போல் வைகலுந்தேயுமே, தானேசிறியார் தொடர்பு" என்பது நாலடியார். (உ௨கூ)

முத்திக்குவித்தாகு முழுதுணர்ந்தோர்பெருநட்பே
தித்திக்குநாடோறுந் தேவர்பெறற் கருந்திருவுஞ்
சித்திக்கும் படியருளுஞ் செப்பரிதா லதுநிற்க
வெத்திக்கும் புகழுநினக் கியன்மணநன் காயிற்றே.

(ப - ரை.) முழுதுஉணர்ந்தோர் - எல்லாமறிந்தபெரியோரது, பெருநட்பே - சிறந்தநட்பே, முத்திக்குவித்துஆகும் - மோக்ஷத்துக்குக்காரணமாகும், நாள்தோறும்தித்திக்கும் - தினந்தோறும் இனிமையைத்தரும், தேவர்பெறற்குஅருதிருவும் - தேவர்களும் பெறுதற்கரியசெல்வமும், சித்திக்கும்படி - பலிக்கும்படி, அருளும்-அருள்செய்யும், செப்புஅரிது-(அதன்சிறப்பு) சொல்லுதற் கருமையானது, அதுநிற்க - அதுஇருக்கட்டும், எத்திக்கும்புகழும் - எத்திசையிலுள்ளோரும் புகழ்தற்குரிய, நினக்கு - உனக்கு, இயல்மணம் - ஏற்றகலியாணம், நன்குஆயிற்றே - நன்றாகநடந்ததா. எ - று.

(பொ - ரை) எல்லாமறிந்த பெரியோரது சிறந்தநட்பே மோக்ஷத்துக்குக்காரணமாகும், தினந்தோறும் இனிமையைத்தரும், தேவர்களும்பெறுதற்கரியசெல்வமும் பலிக்கும்படி அருள்செய்யும், (அதன்சிறப்பு) சொல்லுதற்கருமையானது, அது இருக்கட்டும், எத்திசையிலுள்ளோரும் புகழ்தற்குரிய உனக்கு ஏற்றகலியாணம் நன்றாகநடந்ததா. எ - று.

(வி - ரை.) நல்லறிவுடைய பெரியோரதுநட்பு மெய்ஞ்ஞானத்தையுண்டாக்கி முத்தியைத்தருமென்பது இச்செய்யுட்கருத்து. "இம்மையடக்கத்தைச்செய்து புகழாக்கி, உம்மை யுயர்கதிக்குய்த்தலான் - மெய்ம்மையே, பட்டாங்கறமுரைக்கும் பண்புடையாளரே, நட்டாரெனப்படுவோர்" என்றும், "கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மையெஞ் ஞான்றும், குருத்திற்கரும்புதின்றற்றே" என்றும் பிறஅறிஞர் கூறுதலுங்காண்க, ஆல்-அசை, திருவும் என்றஉம்மை உயர்வுசிறப்பு. திக்கு - இடவாகுபெயர். உம்மைமுற்று ஆயிற்றேனென்னும் ஏகாரம்வினா. (உஉஎ)

நின்னுடைய மனைக்கிழத்தி நிரம்புபெரு நீர்மையளே
மன்னுடைய சொற்காத்துச் சோர்விலா மாண்பினளே
தன்னுடைய வுயிராகின் றனைப்பேணுந் தன்மையளே
யுன்னுடைய வருவாய்க்குத் தக்கசெல வுஞற்றுவளே.

(ப - ரை.) நின்னுடைய -உனது, மனைக்கிழத்தி - மனையவள், நிரம்பு' நிறைந்த, பெருநீர்மையளே - பெருங்குணமுள்ளவளா, மன்உடைய - நிலைபேறுடைய, சொல் - புகழை, காத்து - நீங்காமற்பாதுகாத்து, சோர்வு இல்லா - (நற்குணநற்செய்கைகளில்) தளர்ச்சியில்லாத, மாண்பினளே - மாட்சிமைக்குண முள்ளவளா, உன் தன்னை - நின்னை, தன்னுடைய உயிர்ஆ-தனது உயிராகப்பாவித்து, பேணும் - (அன்போடு) உபசரிக்கிற, தன்மையளே-தன்மையுள்ளவளா, உன்னுடைய வருவாய்க்கு தக்க - உனது வருமானத்துக்குத் தகுந்த, செலவுஉஞற்றுவளே - செலவுசெய்பவளா. எ - று.

(பொ - ரை.) உனதுமனையவள் நிறைந்தபெருங் குணமுள்ளவளா, நிலைபேறுடைய புகழைநீங்காமற் பாதுகாத்து,(நற்குண நற்செய்கைகளில்) தளர்ச்சியில்லாத மாட்சிமைக் குணமுள்ளவளா. உன்னைதனது உயிராகப்பாவித்து(அன்போடு) உபசரிக்கிற தன்மையுள்ளவளா, உனது வருமானத்துக்குத் தகுந்தசெலவு செய்பவளா. எ - று.

(வி - ரை.) மனைத்தக்க மாண்புடையளாகித்தற்கொண்டான், வளத்தக்காள்வாழ்க்கைத்துணை" "தற்காத்துத்தற்கொண்டாற் பேணித்தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்றதிருக்குறள்களின் பொருள் இச்செய்யுளிலமைந்திருத்தல் காண்க. "தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள்பெண்" என்பதற்கு, இருவர்மாட்டும் நன்மையமைந்த புகழ்நீங்காமற்காத்து மேற்சொல்லிய நற்குண நற்செய்கைகளினுங் கடைப்பிடியுடையாள், என்றும், 'தன்மாட்டுப்புகழாவது வாழ்மூர்கற்பால் தன்

லைப்புகழ்வது' என்றும் உரைத்தார் பரிமேலழகர், இதற்கு, தன்தலைவனை உன் சொல்லைத்தவறுமற் பாதுகாத்து அதில் தளர்ச்சியில்லாத பெருமைக் குணமுள்ளவளா என்றுரைத்தால், வருஞ்செய்யுளில் 'சொன்னகாரியமனைத் துஞ் சொன்னபடி யியற்றுவளே, எனவருவது 'கூறியது கூறல்' என்னுங் குற்றத்தின் பாற்படுமொதலால் அது உரையன்மையறிக. மனைக்கிழத்தி - இல்வாழ்க்கைக்கு உரியவள். பெருநீர்மை - இல்லறவாழ்க்கைக் கேற்றநற் குண நற்செய்கைகள், நற்குணங்களாவன - துறந்தார்ப் பேணலும் விருந் தயர்தலும் வறியார்மாட்டு அருளுடைமையும் முதலாயின. நற்செய்கைக ளாவன வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களை யறிந்து கடைப்பிடித்தலும் அட்டிற்றொழில் வன்மையும், ஒப்புரவு செயதலும் முதலாயின. (௨௨அ)

சொன்னகா ரியமனைத்துஞ் சொன்னபடி யியற்றுவளே
யென்னமிடி வரினும்வெளி யெடுத்தியம்பா வியலினளே
தன்னமுநா யகன்பழிதூற் றுதமையத் தக்கவளே
பன்னருமா மறையுணர்ந்த பளகறுநற் குணக்குன்றே.

(ப - ரை.) சொன்னகாரியம் அனைத்தும் - நீசொன்ன தொழில்களை யெல்லாம், சொன்னபடி இயற்றுவளே-சொன்னவாறேசெய்பவளா, என்ன மிடிவரினும் - எவ்வளவுவறுமை நேரிட்டாலும், வெளி எடுத்து இயம்பா - (பலரறிய) வெளியிலெடுத்துச் சொல்லாத, இயலினளே - தன்மையுடைய வளா, தன்னமும் - சிறிதும், நாயகன் பழிதூற்று து - கணவன்மேல் நிந் தை சொல்லாமல், அமையத்தக்கவளே - அடங்கியிருக்கத்தக்கவளா, பன் அரு - சொல்லுதற்கரிய, மாமறை-பெருமையுள்ள வேதங்களை, உணர்ந்த - அறிந்த,பளகு அறு-குற்றமற்ற,நல்குணம்குன்றே-நற்குணமலைபோன்றவனே.

(பொ - ரை.) நீசொன்ன தொழில்களையெல்லாம் சொன்னவாறே செய்பவளா, எவ்வளவு வறுமை நேரிட்டாலும் (பலரறிய) வெளியிலெடுத் துச் சொல்லாததன்மையுடையவளா, சிறிதும் கணவன்மேல் நிந்தை சொல் லாமல் அடங்கியிருக்கத்தகுந்தவளா, சொல்லுதற்கரிய பெருமையுள்ள வேதங்களை அறிந்த குற்றமற்ற நற்குணமலைபோன்றவனே. எ - று.

(வி - ரை.) நற்குணக்குன்று என்றது நற்குணங்களிற் சிறந்து சலிப் பில்லாதிருப்பவன். அன்றி நெடுந்தூரத்து உயர்ந்து தோன்றும் உயர்ச்சி அளவிடப்படாமை முதலியவற்றால் மலைபோன்றவன் என்றலுமொன்று, முதன் மூன்றடியிறுதிக்கண்ணுள்ள ஏகாரங்கள் வினு. வெளியெடுத்தியம் புதல் - பலரறியத்தூற்றுதல். இயலினள் - இயற்கைக்குணமுடையவள் எனினுமாம். அமைதல் - அடங்குதல். பளகு - குற்றம். குணக்குன்றே யென்றது குசேலனை நோக்கினவிளி. (௨௨௯)

பைங்குதலை வாய்மைந்தர் பலர்பிறக்க வேண்டுமே
யெங்குமரும் புகழுடையா யெத்தனைமைந் தர்கள்பிறந்தா
ரங்கவராப் பேரவயோ ரணிதரச்செய் செயலனைத்துஞ்
சிங்கலறப் புரிந்தனையோ செய்தனையோ வுபநயனம்.

(ப - ரை.) பை - பசுமையாகிய, குதலை - மழலைச்சொற்களைப் பேசுகிற, வாய் - வாயையுடைய, மைந்தர்பலர் - புதல்வர்பலர், பிறக்கவேண்டுமே - உண்டாதல் வேண்டுமே, எங்கும் - எவ்விடத்தும், அருபுகழ் உடையாய் - அருமையாகிய கீர்த்தியையுடையவனே, எத்தனை மைந்தர்கள் பிறந்தார் - எத்தனைப் புதல்வருண்டானார்கள், அங்கு - அப்படிப் பிறந்த, அவரை - அந்தப்புதல்வரை, பேர் அவையோர் - பெரிய சபையிலுள்ளவர்கள், அணிதர - ஏற்றுக்கொள்ளும்படி, செய் - (அவர்களுக்கு) செய்தற்குரிய, செயல் அனைத்தும் - காரியங்களெல்லாவற்றையும், சிங்கல்அற - குறைவில்லாதபடி, புரிந்தனையோ - செய்தாயோ, உபநயநம் செய்தனையோ-பூணூற்சடங்கு செய்தாயோ. எ - று.

(பொ - ரை.) பசுமையாகிய மழலைச்சொற்களைப் பேசுகிற வாயையுடைய புதல்வர்பலர் உண்டாதல் வேண்டுமே, எவ்விடத்தும் அருமையாகிய கீர்த்தியையுடையவனே, எத்தனைப்புதல்வருண்டானார்கள், அப்படிப்பிறந்த அந்தப்புதல்வரை,பெரிய சபையிலுள்ளவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி (அவர்களுக்கு) செய்தற்குரிய காரியங்களெல்லாவற்றையும் குறைவில்லாதபடிசெய்தாயோ, பூணூற்சடங்குசெய்தாயோ. எ - று.

(வி - ரை.) பைங்குதலையென்பதில் பசுமை இனிமைப்பொருளது. குதலை - இளஞ்சொல், நிரம்பாமென்சொல். குதலையும் மதலையும் ஒரு பொருளன என்பது ஒரு சாரார்கருத்து. பரிமேலழகர் கருத்தும் இதுவே. மற்றொருசாரார்குதலை எழுத்துவடிவு பெறாதசொன்றும், மழலை - எழுத்துவடிவுபெற்றுச் சொல்வடிவு பெறாததென்றும் வேற்றுமை கூறுவர், "மக்கண்மெய் தீண்டலுடற்கின்ப மற்றவர், சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு" என்றும், "குழலினிதியாழினி தென்பதம் மக்கள், மழலைச்சொற்கேளாதவர்" என்றும் சிறப்பித்துக் கூறப்படுதலால் குதலையென்பதற்கு இனிமைப்பொருளதாகியபை யென்னும் அடைகொடுத்தார் "தனிமரம் தோப்பாகாது தனிப்பிள்ளையும் பிள்ளையாகாது" என்பது பழமொழியாதலால், "மைந்தர் பலர் பிறக்கவேண்டுமே" என்றார். தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரும் "புதல்வரைப்பெறுதல்" என அதிகாரம் வகுத்ததும் இக்கருத்துப் பற்றியே யென்பது திண்ணம். அன்றியும் அவ்வதிகாரத்திலும், "பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த, மக்கட்பேறல்லபிற" "எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப், பண்புடைமக்கட்பெறின்" "தம்பொருளென்பதம்மக்களவர்பொருள், தந்தம் வினையான் வரும்" "அமிழ்தினுமாற்றவினிதே தம்மக்கள், சிறுகையளாவியகூழ்" "தம்மிற்றம்மக்களறிவுடைமை மாநிலத்து, மன்னுயிர்க்கெல்லாமினிது" என்னுஞ் செய்யுட்களில் "மக்கள்" எனப்பன்மையாய்க் கூறியிருத்தல் காண்க. "மங்கல மென்பமனைமாட்சிமற்றதன், நன்கல னன்மக்கட்பேறு" என்றபடியே, இல்வாழ்க்கைக்குப் பயன் மக்கட்பேறே யென்பதும் அது இன்றியமையாத தென்பதும் தோன்ற, "பிறக்கவேண்டுமே" என்றார். 'பேரவையோர் அணிதரச் செய்

செயல்' என்றது ஆடையாபரணங்களால் அலங்கரித்தலோடு, கற்றோர் அவையில் அவரினுமிக்கிருக்குமாறு கல்வியுடையனாக்குதல். இது "தந்தை மகற்காற்று நன்றியவையத்து, முந்தியிருப்பச்செயல்" என்பதனாலறிக. சிங்கல் - தொழிற்பெயர் - பகுதி சிங்கு. உபநயநம் - வடசொல். (உ௬0)

இவர்தந்தை யென்னோற்றா னென்றறிஞ ருரைக்கும்வகை
யிவர்கின்ற மனத்தினரா யிருங்கலைகற் றுணர்வரே
யுவர்கொண்ட கடலாடை புடையுடுத்த வுலகமெலா
மவர்கொண்ட குணமெவர்க்குண் டெனமொழிய வுயர்வரே.

(ப - ரை.) இவர்தந்தை - இவர்கள்பிதா, என்னோற்றான் என்று-(இப்படிப்பட்ட நன்மக்களைப் பெறுவதற்கு) என்னதவஞ்செய்தானோ என்று, அறிஞர் உரைக்கும்வகை-அறிஞர்சொல்லும்படி, இவர்கின்ற மனத்தினர்ஆய்-மிகுவிருப்பங்கொண்ட மனமுடையவர்களாய், (அந்த உன் பிள்ளைகள்) இருகலை - பெரிய சாஸ்திரங்களை, கற்று உணர்வரே - கற்றறிவார்களா, (அன்றியும்) உவர் கொண்ட - உப்புச்சுவையைக்கொண்டிருக்கிற, கடல் ஆடை - கடலாகிய ஆடையை, புடை உடுத்த-சூழத்தரித்த, உலகம்எல்லாம் - உலகத்திலுள்ளாரெல்லாரும், உவர்கொண்ட குணம் - இந்தப்பிள்ளைகள் கொண்டிருக்கிற நற்குணங்கள், எவர்க்கு உண்டு - (வேறு) யாவர்க்கிருக்கின்றன, எனமொழிய - என்று புகழ்ந்து சொல்லும்படி, உயர்வரே - (நற்குணங்களில்) சிறந்திருக்கிறார்களா. எ - று.

(பொ - ரை.) இவர்கள்பிதா (இப்படிப்பட்ட நன்மக்களைப் பெறுவதற்கு) என்னதவஞ்செய்தானோ வென்று அறிஞர்சொல்லும்படி மிகு விருப்பங்கொண்ட மனமுடையவர்களாய் (அந்த உன்பிள்ளைகள்) பெரியசாஸ்திரங்களைக் கற்றறிவார்களா, (அன்றியும்) உப்புச்சுவையைக் கொண்டிருக்கிற கடலாகிய ஆடையைச் சூழத்தரித்த உலகத்திலுள்ளாரெல்லாரும் இந்தப்பிள்ளைகள் கொண்டிருக்கிற நற்குணங்கள் (வேறு) யாவர்க்கிருக்கின்றன என்று புகழ்ந்துசொல்லும்படி (நற்குணங்களில்) சிறந்திருக்கிறார்களா. எ-று.

(வி - ரை.) "மகன்றந்தைக்காற்று முதவியிவன்றந்தை, யென்னோற்றான் கொல்லெனுஞ்சொல்" என்னும் திருக்குறளை இச்செய்யுட்கு உதாரணமாகக் கொள்ளலாம். இவர்தல் - நாளுக்குநாள் விருத்தியடையக் கருதல் எனினுமாம். உவர் என்றது பொதுமைச் சுட்டாயினும் இவ்விடத்து அண்மைச் சுட்டுப்பொருளில் வந்தது. அறிஞர் - அறிவுடையார். உலகம் இடவாகுபெயர். 'எவர்க்குண்டு' என்னும் வினா ஒருவர்க்கும் இல்லையென்னும் பொருளில்வந்தது. (உ௬௧)

நிறைகின்ற சிறுமைந்தர் நினைத்தவையெ லாங்கொடுத்துக்
குறைவின்றி நடத்திவரு கின்றனையே கொடும்பகலி
லுறைகின்ற பசிவருத்தத் துறுநர்மா லெனச்சுருதி
யறைகின்ற தாலவருக் கன்னமிடு கின்றனையே.

(ப - ரை.) நிறைகின்ற-(உன்வீட்டில்) நிறைந்திருக்கிற, சிறுமைந்தர் - சிறுபிள்ளைகள், நினைத்தவை எல்லாம் - நினைத்த பொருள்களை யெல்லாம் கொடுத்து - தந்து, குறைவு இன்றி - குறைவில்லாமல், நடத்திவருகின்றனை யே - நடத்தி வருகிறுயா, கொடும்பகலில் - உச்சிக்காலத்தில், உறைகின்ற-(தம்மிடத்தில்) தங்கின, பசி வருத்தத்து - பசித்துன்பத்தால், உறநர் - வந்தடைந்தவர், மால்என - திருமாலுருவமேயென்று, சுருதிஅறைகின்றதால்- வேதங்கள் சொல்லாநின்றன வாதலால், அவருக்கு - அவர்களுக்கு, அன்னம் இடுகின்றனையே - அன்னமிடுகிறுயா. எ - று.

(பொ - ரை.) (உன்வீட்டில்) நிறைந்திருக்கிற சிறுபிள்ளைகள் நினைத்த பொருள்களையெல்லாம் தந்துகுறைவில்லாமல் நடத்தி வருகிறுயா, உச்சிக் காலத்தில் (தம்மிடத்தில்) தங்கின பசித்துன்பத்தால் வந்தடைந்தவர் திருமாலுருவமேயென்று வேதங்கள் சொல்லாநின்றனவாதலால் அவர்களுக்கு அன்னமிடுகிறுயா. எ - று.

(வி - ரை.) இது கேட்கத்தகும் இதுகேட்கத்தகாது என்னும் விவேகமுதிக்காத பிள்ளைகள் என்பதுதோன்ற, சிறுமைந்தர் நினைத்தவையெல்லாம் என்றார். உறைகின்ற - நீங்காத எனினுமாம். சுருதி - வேதம், கேட்கப்படுவது என்பதுபொருள். ஆல் - ஆதலால் என்றலுமொன்று. அன்னமிடல் - அன்னம்பகிர்தல். கொடும்பகல்-வெம்மையாற் கொடியபகல் (உச்சிக்காலம்.)

நானமுதற் சந்திசெப நன்குநடக் கின்றனவே
யானவிவை செயமெய்தி டமாகி யிருக்கின்றதே
மானமுறு மறைப்பொருளில் வைத்தியா னஞ்சிதறு
தீனமற நிற்கின்ற தேயெவருஞ் சொலற்கரியாய்.

(ப - ரை.) எவரும் - யாவரும், சொலற்கு அரியாய் - சொல்லுதற்கரியவனே, நானம்முதல் - ஸ்நாநம்முதலாக, சந்தி - சந்தியாவந்தநமும், செபம் - ஜபமும், (ஆகிய இவைகள்) நன்கு நடக்கின்றனவே - நன்ருக நடந்து வருகின்றனவா, ஆனஇவைசெய - உண்டாகிய இவற்றைச்செய்வதற்கு, மெய் - உன்சரீரமானது, திடம்ஆகி இருக்கின்றதே - திடமாயிருக்கின்றதா, மானம்உறு-பெருமைமிகுந்த, மறைப்பொருளில் வைத்தியாநம் - வேதப்பொருளில் வைத்தியாநமானது, சிதறு - சிதறுமல், ஈனம் அற நிற்கின்றதே - குறைவறநிற்கின்றதா. எ - று.

(பொ - ரை.) யாவருஞ்சொல்லுதற்கரியவனே, ஸ்நாநம்முதலாக சந்தியாவந்தநமும் ஜபமும் (ஆகிய இவைகள்) நன்ருக நடந்து வருகின்றனவா, உண்டாகிய இவற்றைச்செய்வதற்கு உன் சரீரமானது திடமாயிருக்கின்றதா, பெருமைமிகுந்த வேதப்பொருளில் வைத்தியாநமானது சிதறுமல் குறைவறநிற்கின்றதா. எ - று.

(வி - ரை.) ஸ்நாநம், ஸந்த்யா, ஜபம், த்யாநம் என்னும் வடசொற்கள், முறையேநானம், சந்தி, செபம், தியானம் எனத்திரிந்து வந்தன, ஆன - நன்மையான எனினுமாம், திடம் - உறுதி, உறு - பொருந்திய எனினுமாம்,

மறைப்பொருள் - வேதப்ரதிபாத்யமாகியபொருள், தியாநம் - நினைப்பு, சிதருது - சலிக்காமல், ஈனம்அற - இழிவாகிய பிறவியற்றொழிய எனினுமமையும், ஈனம் - ஹீநம் என்னும்வடசொற்றிரிபு. (உருரு)

சீரார்நின் னூர்நின்று சேரவிவண் வருவாரா
னீரார்நின் றன்மையெலா நென்னல்வரைக் குந்தவறு
தாராய்ந்து கொண்டிருந்தே னகன்றபல நாள்களின்பி
னேராரின் பஞ்சிறப்ப விருவேமுங் கூடினேம்.

(ப - ரை.) சீர்ஆர் - சிறப்புமிகுந்த, நின் ஊர்நின்று - உன்ஊரிலிருந்து, இவண் - இவ்விடத்திற்கு, சேரவருவாரால் - சேரவருவோர்களால், நீர் ஆர் நின் தன்மைஎல்லாம் - நற்குணமிகுந்த உன் தன்மைமுழுதும், நென்னல் வரைக்கும் - நேற்றுவரையிலும், தவறாது - தவறாமல், ஆராய்ந்துகொண்டு இருந்தேன் - விசாரித்தறிந்துகொண்டேயிருந்தேன், அகன்றபல நாள்களின் பின் - கழிந்தபல நாட்களின்பிறகு, ஏர்ஆர் - வளர்ச்சிமிகுந்த, இன்பம் சிறப்ப - இன்பம் அதிகரிக்க, இருவேமும்கூடினேம் - (பிரிந்த) யாமிரண்டுபேரும் (ஒருவரோடு ஒருவர்) சந்தித்தோம். எ - று.

(பொ - ரை.) சிறப்புமிகுந்த உன் ஊரிலிருந்து இவ்விடத்திற்குச்சேர வருவோர்களால் நற்குணமிகுந்த உன் தன்மைமுழுதும் நேற்றுவரையிலும் தவறாமல் விசாரித்தறிந்து கொண்டேயிருந்தேன், கழிந்தபல நாட்களின் பிறகு, வளர்ச்சிமிகுந்த இன்பம் அதிகரிக்க (பிரிந்த) யாமிரண்டுபேரும் (ஒருவரோடு ஒருவர்) சந்தித்தோம். எ - று.

(வி - ரை.) நென்னல் - நேற்றுஎன்னும்பொருள் தரும்நெருநல் என்னும் இடைச்சொல்லின்மரூஉ, அகன்ற - விட்டுப்பிரிந்த எனினுமாம், சீரார் நின்னூர், என்றது நீர்வளம் நிலவளமுதலிய சிறப்போடு கூடியநின்னூர், அன்றி, நீயவதரித்ததனால் உளதாகிய சிறப்பமைந்த நின்னூர் எனினுமாம், ஊர்பலர்க்கு முரியதாயிருக்க நின்னூர் என்றது அவ்வூரார் பலரினுஞ்சிறந்து விளங்குவோர் இவராதலானென்க, சேர - ஒருமிக்க, இன்று குசேலர் நேரேவந்து விட்டனராதலால் 'நென்னல்வரைக்குந் தவறாதாராய்ந்து கொண்டிருந்தேன்' என்றார், ஆராய்தல் - விசாரித்தல், ஏர் எழுச்சி, உயர்வு.)

நள்ளார்க ளண்மைக்க ணிருந்தாலு நட்புறுத்தார்
விள்ளார்கள் சேய்மைக்க ணிருந்தாலும் விருப்பொழியார்
தள்ளாத பல்பொருள்க டனைச்சூழ விருந்தாலு
முள்ளாத வன்கதிரா யுறநோக்கு நெரிஞ்சியே.

(ப - ரை.) நள்ளார்கள் - பகைவர், அண்மைக்கண் இருந்தாலும் - சமீபத்திலிருந்தாலும், நட்புறுத்தார் - நட்புச்செய்யார், விள்ளார்கள் - சிநேகர், சேய்மைக்கண் இருந்தாலும் - தூரத்திலிருந்தாலும், விருப்பு ஒழியார் - விருப்பம் நீங்கார், தள்ளாத - தள்ளவொண்ணாத, பல்பொருள்கள் - பலபொருள்களும், தன்னை சூழ இருந்தாலும்-தன்னைச்சுற்றியிருந்தாலும், நெரிஞ்சி -

தாமரையானது, உள் - (யாவராலும்) தியானிக்கப்படுகிற, ஆதவன்கதிரை - சூரியனது கிரணத்தையே, உறநோக்கும் - பொருந்தநோக்கும். எ - று.

(பொ - ரை.) பகைவர் சமீபத்திலிருந்தாலும் நட்புச்செய்யார், சிநேகர் தூரத்திலிருந்தாலும் விருப்பம் நீங்கார், தள்ளவொண்ணாத பலபொருள்களும் தன்னைச்சுற்றியிருந்தாலும் தாமரையானது யாவராலும் தியானிக்கப்படுகிற சூரியனது கிரணத்தையே பொருந்தநோக்கும். எ - று.

(வி - ரை.) நள்ளல் - நட்புச்செய்தல், நள்ளார் - நட்புச்செய்யாதவர், (பகைவர்), நட்புறத்தார் என்பதற்குப்பகுதி நட்புறு, விள்ளல் - நீங்கல், விள்ளார் - நீங்காதவர் (சிநேகர்), நள்ளார் விள்ளார் என்பன வினையாலணையும் பெயர்கள், தள்ளல் - நீக்கல், உள்ஆதவன் - வினைத்தொகை நிலைத்தொடர், ஆதவம் - வெயில், அதனையுடையவன் ஆதவன், (சூரியன்). ஆதவன் ஆதபஃஎன்னும் வடசொற்றிரிபு, உற - மிகுதியாக எனினுமாம், நெரிஞ்சி - ஓர் வகைப்பூடு, அது இவ்விடத்து அப்பொருள்தராது தாமரையென்னும் பொருள்தந்தது. (உகரு)

மடமையா ருறுநட்பே மருவுபெருஞ் சுகங்காணுந்
திடமுறவெவ் வாறென்னிற் செப்பக்கேள் செழுமறையோ
யுடனுறைத லொருவுமிடத் தொருதுன்பு முறலின்று
படர்தலுமின் றொருவேளை பகர்தலுமின் றுருமால்.

(ப - ரை.) மடமையார் - அறியாமையுடையவர், உறுநட்பே - (ஒருவரோடொருவர்) சிநேகிக்கிற சிநேகமே, மருவு - பொருந்திய, பெருசுகம்- பெரிய இன்பத்தைத்தருவதாகும், திடம்உற - உறுதியாக, எவ்வாறு என்னின் - எப்படியென்றால், செப்பகேள் - சொல்லக்கேள், செழுமறையோய்- செழுமையாகிய வேதங்களையுடையவனே, (அவர்கள்) உடன்உறைதல்-உடன்கூடி வாழ்தலை, ஒருவுமிடத்து-விட்டுப்பிரியுமிடத்தில், ஒருதுன்பும் உறல் இன்று-ஒருதுன்பமும் அடைதலில்லை, படர்தலும் இல்லை-நினைத்தலுமில்லை, ஒருவேளை பகர்தலும் இன்று - ஒருசமயத்தில் எடுத்துப்பேசுதலுமில்லை, ஆகும் ஆல் - இவ்வாறாகுமாதலால். எ - று.

(பொ - ரை.) அறியாமையுடையவர் (ஒருவரோடொருவர்) சிநேகிக்கிற சிநேகமே பொருந்திய பெரிய இன்பத்தைத்தருவதாகும், உறுதியாக எப்படியென்றால், சொல்லக்கேள், செழுமையாகிய வேதங்களையுடையவனே, (அவர்கள்) உடன்கூடி வாழ்தலை விட்டுப்பிரியுமிடத்தில் ஒருதுன்பமும் அடைதலில்லை, நினைத்தலுமில்லை, ஒருசமயத்தில் எடுத்துப்பேசுதலுமில்லை, இவ்வாறாகுமாதலால். எ - று.

(வி - ரை.) மடமையார் உறுநட்பே - அறியாமையுடையோரது மிக்க சிநேகமே எனினுமாம், காணும் - முன்னிலையசையிடைச்சொல், சதுர்வித புருஷார்த்தங்களையும் வழங்குதலால் வேதத்தைச் செழுமறையென்றார், ஒருதுன்பு - அற்பத்துன்பம், உடனுறைதலை ஸஹவாஸம் என்பர் வடநூலார், சுகம் - இன்பம், இது வடசொல். (உகசு)

ஐயநீ குடியிருக்கு மணிநாட்டி லதிகமழை
பெய்யுமழை யின்மைகிளி விட்டின்முதற் பெருங்கேடு
வெய்யகொடுங் கள்வர்வன விருகமுதற் பலகேடு
நையவினி துயிரெலா நன்குதழைக் கின்றனவே.

(ப - ரை.) ஐய - ஐயனே, நீகுடியிருக்கும் - நீகுடியிருக்கிற, அணிநாட்டில் - அழகியநாட்டிலே, அதிகமழை - மிகுமழைபொழிதலும், பெய்யும் மழை இன்மை - பெய்தற்குரிய மழையில்லாமையும், கிளி - கிளியும், விட்டில் - விட்டிலும், முதல் - முதலியவற்றாலாகிய, பெருகேடு - பெரியகெடுதியும், வெய்யகொடு - மிக்ககொடுமையையுடைய, கள்வர்-திருடரும், வனம் - காட்டில் வாழ்கிற, விருகம் - செந்நாய்களும், முதல் - முதலியவற்றாலாகிய, பலகேடு - பலகெடுதியும், நைய - இல்லையாகும்படி, உயிர்எல்லாம் - எல்லாவுயிர்களும், இனிது-இனிதாக, நன்குதழைக்கின்றனவே - நன்றாகச்செழித்திருக்கின்றனவா. எ - று.

(பொ - ரை.) ஐயனே, நீகுடியிருக்கிற அழகியநாட்டிலே, மிகுமழைபொழிதலும், பெய்தற்குரிய மழையில்லாமையும், கிளியும் விட்டிலும் முதலியவற்றாலுண்டாகிற பெரியகெடுதியும், மிக்க கொடுமையுடைய திருடரும் காட்டில்வாழ்கிற செந்நாய்களும் முதலியவற்றாலுண்டாகிற பலகெடுதியும் இல்லையாகும்படி எல்லாவுயிர்களும் இனிதாக நன்றாகச்செழித்திருக்கின்றனவா. எ - று.

(வி - ரை.) விட்டில் முதல் என்றதனால், எலி, அரசண்மை என்பனவுங்கொள்க "அருங்கேட்டால் ஆற்றவிளைவதுநாடு" என்றதிருக்குறளையும், "அதற்கு கேடாவதுமிக்கபெயல், பெயலின்மை, எலி - விட்டில், கிளி, அரசண்மை என்றிவற்றான் வருவது, "மிக்கபெயலோடு பெயலின்மை யெலி விட்டில் கிளி, யக்கணரசண்மை யோடாறு" "இவற்றை வடநூலார் ஈதிகள் என்பர், இவற்றுள் முன்னையவற்றது இன்மை அரசனறத்தானும், பின்னையது இன்மை அவன் மறத்தானும்வரும், இவ்வின்மைகளால் மிகவிளைவதாயிற்று" என்ற பரிமேலழகர் உரையையும் காண்க, 'நச்சினார்க்கினியர் கேடு- "விட்டில் கிளி நால்வாய் வேற்றரசு தன்னரசு, நட்டம்பெரும்பெயல் காலெட்டு" என்பர், திருக்குறளில், "பாழ்செய்யுமுட்பகை" என்றவிடத்து உரைகாரர், உட்பகை - ஆறலைப்பார், கள்வர் குறளை கூறுவார் முதலியமக்களும், பன்றி புலி கரடி முதலிய விலங்குகளும், எனக்குறித்தவை இச்செய்யுளின் மூன்றுமடியிற் கூறப்பட்டன. ஐய - அண்மைவிளி, இது அன்பின் மிகுதியைக்காட்டும், அதிகமழை மழையின்மை என்பவற்றை முறையே அதிவ்ருஷ்டியென்றும் அநாவ்ருஷ்டியென்றும் கூறுவர் வடநூலார், கிளி தினை முதலியசில பயிர்களையும் விட்டில் எல்லாப்பயிர்களையும் அழிப்பன, விட்டில் - வெட்டுக்கிளி, வெய்யகொடு - ஒருபொருட்பன்மொழி, வ்ருகம் - வடசொற்றொடர். விருகம் ஓநாயென்றும் நரியென்றும் கூறுவர், கள்வர்-கள் பகுதி,அர்விகுதி,வ் பெயரிடைநிலை,கேடு இரண்டும்நஷ்டம் என்னும்பொருள்.

இருவேமு முன்னாளி லிலங்குசாந் தீபமுனி
வருகாம ரடிவணங்கி மாமறைகற் றுணர்ந்திடுநாட்
பெருகார்வத் தொடும்பேசிக் கொண்டிருந்த பேச்செல்லாந்
திருகாரா வுளத்துநினைத் திருக்கின்று யோசிறப்ப.

(ப - ரை.) இருவேமும் - நாமிருவரும், முன்நாளில் - இளமையில், இலங்கு - விளங்குகிற, சாந்தீபமுனி - சாந்தீபமுனிவருடைய, காமர்வரு - அழகுபொருந்திய, அடி - திருவடிகளை, வணங்கி - தொழுது, (அவரிடத்தில்) மாமறை - சிறந்தவேதங்களை, கற்றுஉணர்ந்திடுநாள்-ஓதியறிந்தநாளில், பெருகுஆர்வத்தொடும் - மிகுந்த ஆசையோடு, பேசிக்கொண்டிருந்த-(நாம்) பேசிக்கொண்டிருந்த, பேச்சுஎல்லாம்-வார்த்தைகளையெல்லாம், திருகுஆரா-மாறுபாடில்லாத, உளத்து - (உன்) மனத்தில், சிறப்ப - நன்றாக, நினைத்திருக்கின்றாயோ - (இப்பொழுது) மறவாதிருக்கிறாயோ. எ - று.

(பொ - ரை.) நாமிருவரும் இளமையில், விளங்குகிற சாந்தீபமுனிவருடைய அழகுபொருந்திய திருவடிகளைத்தொழுது (அவரிடத்தில்) சிறந்த வேதங்களை ஓதியறிந்தநாளில் மிகுந்த ஆசையோடு (நாம்) பேசிக்கொண்டிருந்த வார்த்தைகளையெல்லாம் மாறுபாடில்லாத உன் மனத்தில் நன்றாக (இப்பொழுது) மறவாதிருக்கிறாயோ. எ - று.

(வி - ரை.) முன்னாள் - இளமைப்பருவம், இலங்கு - (எக்காலத்தும் புகழோடு) விளங்குகிற, வருகாமர் - வளராநின்ற அழகையுடைய எனினுமாம், ஆர்வம் - அன்பு என்றலுமாம், பேச்சு - முதனிலைதிரிந்த தொழிலாகு பெயர். திருகு - வஞ்சனையுமாம், மறதியென்றலுமொன்று, ஆரா - அருமைப் பண்படியாகப்பிறந்த பெயரெச்சம், அருமை இவ்விடத்து இன்மைப்பொருள் குறித்தது, "தனக்குவமையில்லாதான்றாள் சேர்ந்தார்க்கல்லான், மனக்கவலைமாற்றலரிது" "உறற்பாலதீண்டாவிடுதலரிது" "அறவாழியந்தணன்றாள் சேர்ந்தார்க்கல்லாற், பிறவாழிநீந்தலரிது" என்பவற்றிற்போல. (உகூ அ.)

கொள்ளைமறை யுணர்ச்சிமிகு குருராயன் பத்தினியாந்
தள்ளைநமைப் பார்த்தமுது சமைப்பதற்கிந் தநமின்றின்
றெள்ளருநன் மைந்தர்காள் கொடுவாரு மெனவேவ
விள்ளருமோர் பெருங்காட்டுள் விறகொடித்துத் திரிந்தனமே.

(ப - ரை.) கொள்ளை - மிகுதியாகிய, மறைஉணர்ச்சிமிகு - வேதவுணர்ச்சியிற்சிறந்த, குருராயன் - ஆசாரியசிரேஷ்டனாகிய சாந்தீபமுனிவனது, பத்தினிஆம் - பத்நியாகிய, தள்ளை - (நமது) தாய், நம்மைபார்த்து - நம்மைநோக்கி, எள்அரு நல்மைந்தர்காள் - பழிப்பற்ற நல்லபிள்ளைகளே, இன்று - இன்றைக்கு, அமுது சமைப்பதற்கு - அன்னம் சமைப்பதற்கு, இந்தநம் இன்று - விறகுஇல்லை, (ஆதலால்) கொணோரும் என - (நீங்கள் போய்) கொண்டு வாருங்களென்று சொல்லி, ஏவ - அனுப்ப, விள் அரும் - சொல்லுதற்கரிய, ஓர் பெருகாட்டுஉள் - ஒரு பெரிய காட்டினுள்ளே, விறகு ஒடித்து திரிந்தனமே - விறகொடித்துத் திரிந்தோமே. எ - று.

(பொ - ரை.) மிகுதியாகிய வேதவுணர்ச்சியிற் சிறந்த ஆசாரிய சிரேஷ்ட்டனாகிய சாந்தீப முனிவனது பத்நியாகிய (நமது) தாய், நம்மைநோக்கி, பழிப்பற்ற நல்லபிள்ளைகளே, இன்றைக்கு அன்னம் சமைப்பதற்கு விற கில்லை (ஆதலால்) நீங்கள்போய்க்கொண்டு வாருங்களென்று சொல்லியனுப்ப, சொல்லுதற்கரிய ஒருபெருங்காட்டினுள்ளே விறகொடித்துத் திரிந்தோமே.

(வி - ரை.) "அலகில்லனவேதம்" என்றும், "ஆயிரமாமறைக்கும் மலங்காரம்" என்றும் சொல்லுகிறபடியே வேதங்கள் மிகப்பலவாதலால், 'கொள்ளைமறை' என்பதற்கு மிகப்பலவாகிய வேதங்கள் என்றுரைத்தலு மாம். குரு - என்னும் வடசொல்லுக்கு, அஜ்ஞாநாந்தகாரத்தை யொழிப்ப வன் என்பதுபொருள். ராயன் - ராஜன் என்னும் வடசொற்றிரிபு, பத்திநி - பத்நியென்னும் வடசொற்றிரிபு, தள்ளை - தாய், இது கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டனுள் ஒன்றாகிய குட்டநாட்டார் வழங்குவதோர் திசைச்சொல், இந்தநம் - விறகு, இதுவடசொல், கொடு-கொண்டு என்பதன் விகாரம். (உகூக)

## கலிவிருத்தம்.

ஆய காலைவிண் ணாறெழு வெண்முகி
னேய நெய்த னிறைவள நோக்குவான்
பாய வன்னம் பறந்தன போன்மெனத்
தோய மாக்கடற் றுன்னுபு சென்றவே.

(ப - ரை.) ஆயகாலை - அந்தச்சமயத்தில், விண்ஆறுஎழு - ஆகாசமார்க்கத்திலெழுந்துலாவுகிற, வெண்முகில்-வெண்மையாகிய மேகங்கள், நேயம் - ஆசையோடு, நெய்தல் - நெய்தனிலத்தின், நிறைவளம் நோக்குவான்-பெருவளத்தைப்பார்க்கும் பொருட்டு, பாயஅன்னம் - பரவிய அன்னப்பறவைகள், பறந்தனபோலும் என-பறந்தனவற்றை நிகர்க்குமென்று சொல்லும்படி, மா தோயம் - பெரிய நீரையுடைய, கடல் - கடலினிடத்தில், துன்னுபுசென்றவே - நெருங்கிச்சென்றனவே. எ - று.

(பொ - ரை.) அந்தச்சமயத்தில், ஆகாசமார்க்கத்தி லெழுந்துலாவுகின்ற வெண்மையாகிய மேகங்கள் ஆசையோடு நெய்தனிலத்தின் பெருவளத்தைப் பார்க்கும் பொருட்டுப்பரவிய அன்னப்பறவைகள் பறந்தனவற்றை நிகர்க்குமென்று சொல்லும்படி, பெரிய நீரையுடைய கடலினிடத்தில் நெருங்கிச் சென்றனவே. எ - று.

(வி - ரை.) காலை-காலம் என்னும் வடசொற்றிரிபு, ஆறு - வழி, நெய்தல் - கடலுங்கடல்சார்ந்த நிலமும், வளம் - செல்வம், (பொன், முத்து, பவளம்முதலிய செல்வங்கள்). நோக்குவான் என்பதில் வான் எதிர்காலவினையெச்சவிகுதி யிடைச்சொல். போன்ம் - போலும், இது மகரக்குறுக்கம். துன்னுபு-செய்புஎன்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். தோயம்-நீர், இதுவடசொல். வெண்முகில் சென்ற என முடித்துக்கொள்க. (உசுO)

நீனி றக்கடல் வற்றிட நீரம்வா
யானி ரப்பவி டப்பரு குற்றெழீஇ
வானி டைப்படர் மஞ்ஞை குழாமென
மேனி பைத்துவி னாவினின் மீண்டவே.

(ப - ரை.) (அந்த மேகங்கள்) நீலம் நிறம்கடல்வற்றிட - நீலநிறமுள்ளகடலானது வற்றிப்போம்படி, நீரம் - (அதிலுள்ள) நீரை, நிரப்பு அவிய - (தமது) வறுமையொழியும்படி, வாயால் - வாயைக்கொண்டு, பருகுற்று - குடித்து, எழீஇ - மேலெழுந்து, வான்இடை - ஆகாசத்தில், படர் - பரவிச்செல்லுகிற, மஞ்ஞைகுழாம்என - மயிற்கூட்டம்போல, மேனிபைத்து - உருப்பசந்து, வினாவினின் மீண்டவே-சீக்கிரமாகத் திரும்பினவே. எ - று.

(பொ - ரை.) (அந்த மேகங்கள்) நீலநிறமுள்ள கடலானது வற்றிப்போம்படி (அதிலுள்ள) நீரை (தமது) வறுமை யொழியும்படி வாயைக்கொண்டு குடித்து மேலெழுந்து ஆகாசத்தில் பரவிச்செல்லுகிற மயிற்கூட்டம்போல உருப்பசந்து சீக்கிரமாகத் திரும்பினவே. எ - று.

(வி - ரை.) நீலம் நீல் எனக் கடைக்குறையாயிற்று, வற்றுதல் - வடிதல், நீரம் - நீர், இதுவடசொல். நிரப்பு - வறுமை, அதாவது நீரின்மை. 'பருகுற்று - என்பதற்குப் பகுதி பருகுறு. எழீஇ - சொல்லிசையளபெடை, பைத்து - பசுமையென்னும் பண்படியாகப் பிறந்த இறந்தகால வினையெச்சம், இது மீண்ட என்னும் வினைகொண்டது, நீரம்பருகுற்று எழீஇ பைத்து மீண்ட என்பதற்கு வினைமுதல் மேலைச் செய்யுளிலுள்ள வெண்முகில் எனக் காண்க. (உகூக)

பெட்டு நீர்மழை பெய்துவ ளர்த்திடு
மட்டு நீங்குபைங் கூழ்மர மாதிகள்
பட்டு நீங்கவெப் பம்புரி கோடையை
வெட்டும் வாளென மின்னல் விதிர்த்தவே.

(ப - ரை.) மழை - மேகங்கள், பெட்டு - விரும்பி, நீர்பெய்து வளர்த்திடும் - நீர் வார்த்து வளர்க்கிற, மட்டுநீங்கு - அளவற்ற, பைங்கூழ் - பயிர்களும், மரம் ஆதிகள் - மரமுதலானவைகளும், பட்டுநீங்க - பட்டொழியும்படி, வெப்பம் புரிகோடையை - வெப்பத்தைச்செய்த கோடையை, வெட்டும்வாள் என - வெட்டுகின்றவாள்போல, மின்னல் - மின்னற் கொடிகள், விதிர்த்தவே - (அந்த மேகங்களினிடையே) அசைந்தனவே. எ - று.

(பொ - ரை.) மேகங்கள்விரும்பி நீர்வார்த்து வளர்க்கிற அளவற்ற பயிர்களும் மரமுதலானவைகளும் பட்டொழியும்படி, வெப்பத்தைச்செய்த கோடையை வெட்டுகின்றவாள்போல மின்னற்கொடிகள் (அந்தமேகங்களினிடையே) அசைந்தனவே. எ - று.

(வி - ரை.) பெட்டு என்னும் வினையெச்சம் பெய்து என்பதையும், அது வளர்த்திடும் என்பதையுங்கொண்டு முடிந்தன. வளர்த்திடும் என்னும்

பெயரெச்சம் பைங்கூழ் மரமாதிகளைக்கொண்டு முடிந்தது. மட்டு - எல்லை யெனினுமாம். வெப்பம் - வெம்மை. புரிகோடை - வினைத்தொகை. கோடை - கோடைப்பருவம். விதிர்த்தல் - அசைதல். (உசஉ)

எமரு ணற்கிட மாயவி ருங்கட
லமர்தல் கொண்டற லைச்சுவற் றுந்தழற்
சமர்த ணிப்பமின் னேயெனச் சாற்றல்போற்
றமரம் விண்ணுஞ் சலிப்பவெ ழுந்தவே.

(ப - ரை.) எமர் - எம்மவர், உணற்கு - (அமிர்தம்) உண்பதற்கு, இடம் ஆய - இடமாயிருந்த, இருகடல் - பெரியகடலில், அமர்தல்கொண்டு - அமர்ந்திருத்தலால், அறலை - நீரை, சுவற்றும் - சுவறச்செய்கிற, தழல் - (வடவைத்) தீயினது, சமர் - வேகத்தை, இன்னே - இப்பொழுதே, தணிப்பம்என - தணிவிப்போமென்று, சாற்றல்போல் - சொல்லுதல்போல, விண்ணும்சலிப்ப - விண்ணுலகும் நடுங்கும்படி, தமரம்எழுந்தவே - (அந்தமேகத்தில்) முழக்கங்கள் உண்டாயினவே. எ - று.

(பொ - ரை.) எம்மவர் (அமிர்தம்) உண்பதற்கு இடமாயிருந்த பெரியகடலில் அமர்ந்திருத்தலால் நீரைச்சுவறச்செய்கிற (வடவைத்) தீயினது வேகத்தை இப்பொழுதே தணிவிப்போமென்று சொல்லுதல்போல, விண்ணுலகும் நடுங்கும்படி (அந்தமேகத்தில்) முழக்கங்கள் உண்டாயினவே.

(வி - ரை.) எமர்என்றது தேவர்களை, இடம்ஆய - ஹேதுவாயிருந்த, கொண்டுமூன்றுவதன் சொல்லுருபு. சமர் - போர், அது இங்கு வேகத்தைக் குறித்தது. தமரம் - ஒலி. விண்ணும்என்பதில் உம்மை உயர்வுசிறப்பு, இறந்ததுதழீஇயதுமாம். எழுந்தஎன்பதற்கு அதிகரித்தன எனினுமாம். (உசங)

மேதி னிப்பகை மேலம்பு தூற்றிடச்
சாதி நன்மலர்க் கற்ப தருவினன்
காதி வாங்கிய கார்முக மென்றுல
கோதி நிற்க வொருவில்விண் டோன்றிற்றே.

(ப - ரை.) மேதினி - பூமியாகிய, பகைமேல் - பகைவன்மீது, அம்பு தூற்றிட - அம்பைத்தூவுதற்கு, சாதிநல்மலர் கற்பதருவினன் - உயர்ந்தசாதியாகிய நல்லமலர்களையுடைய கற்பகத் தருவுக்கதிபனாகிய இந்திரன், காதி வாங்கிய - கோபங்கொண்டு வளைத்த, கார்முகம்என்று - வில்லென்று, உலகு ஓதிநிற்க - உலகத்தார் சொல்லிநிற்கும்படி, ஒருவில் - ஒருவில்லானது, விண் தோன்றிற்றே - (அந்தமேகத்தில்) காணப்பட்டதே. எ - று.

(பொ - ரை.) பூமியாகிய பகைவன்மீது அம்பைத்தூவுதற்கு, உயர்ந்த சாதியாகிய நல்லமலர்களையுடைய கற்பகத்தருவுக் கதிபனாகிய இந்திரன்கோவங் கொண்டுவளைத்த வில்லென்று உலகத்தார் சொல்லிநிற்கும்படி ஒருவில்லானது (அந்தமேகத்தில்) காணப்பட்டதே. எ - று.

(வி - ரை.) மேதினி, கார்முகம், என்பனவடசொற்கள், இவற்றுள் முன்னையதாகிய மேதினியென்பதற்கு மதுகைடபர்களுடைய மூளையால் நனைக்கப்பட்டது என்றும், பின்னையதற்குக் கொலைத்தொழில் செய்தற்குரியது என்றும் பொருளுரைப்பர் வடநூலார். பகை - பண்பாகுபெயர், கல்பக தருஎன்னும் வடசொல் கற்பதருஎனத்திரிந்து வந்தது, காதுதல் - கொல்லுதல், அதுஇவ்விடத்துக் கோவங் கோடலுக்காயிற்று. வாங்குதல்-வளைத்தல்.

நம்மை யூரிறை வற்பகை நாகங்க
டம்மை யாமென்றுஞ் சாரற காதிவண்
வெம்மை தீரிட மென்றுவி ராயபோற்
கம்மை மேகமக் காட்டை வளைந்தவே.

(ப - ரை.) நம்மைஊர்-நம்மையேறிநடத்துகிற, இறைவன்பகை-இந்திரனுக்குப்பகையாகிய, நாகங்கள்தம்மை - மலைகளை, யாம் - நாம், என்றும்-எக்காலத்தும், சாரல் - பொருந்துதல், தகாது-தகாது, இவண் - இவ்விடம், வெம்மைதீர் இடம்என்று - வெப்பம் நீங்குதற்குரிய இடமென்று, விராய போல் - வந்துகூடியிருப்பனபோல, கம்மைமேகம் - நீரையுடைய கரிய மேகங்கள், அ காட்டைவளைந்தவே-அந்தக்காட்டை வளைந்துகொண்டனவே.

(பொ - ரை.) நம்மையேறிநடத்துகிற இந்திரனுக்குப் பகையாகிய மலைகளைநாம் எக்காலத்தும் பொருந்துதல்தகாது, இவ்விடம்வெப்பம் நீங்குதற்குரியஇடமென்றுவந்து கூடியிருப்பனபோல, நீரையுடைய கரியமேகங்கள் அந்தக்காட்டை வளைந்துகொண்டனவே. எ - று.

(வி - ரை.) நாகம் - மலை, ஊர்தல் - ஏறிநடத்தல், கம் - நீர், மை-கருநிறம். விரவுதல், கலத்தல், விராவிய என்பது விராய என விகாரப்பட்டது.

விரவு மின்னி னொளிக்கும் வெருவிடி
யுரவொ லிக்கு முளம்பதைத் தஞ்சபு
பரவு தம்மிறை பாற்சரண் சார்தல்போ
லரவம் யாவு மளைபுக் கொளித்தவே.

(ப - ரை.) விரவு மின்னின்ஒளிக்கும் - பொருந்தியமின்னலின் ஒளிக்கும், வெருவு இடிஉரம் ஒலிக்கும் - (யாவரும்) அஞ்சுதற்குரிய இடியினது பேரொலிக்கும், உள்ளம்பதைத்து அஞ்சபு - மனம்பதைத்து அஞ்சி, பரவு-துதித்தற்குரிய, தம் இறை பால் - தமதிறைவனிடத்து,சரண்சார்தல்போல்-சரணடைதல்போல, அரவம்யாவும் - பாம்புகளெல்லாம், அளை புக்கு ஒளித்தவே, (தமது) புற்றுக்களில் புகுந்து மறைந்தனவே. எ - று.

(பொ - ரை.) பொருந்திய மின்னலின் ஒளிக்கும், (யாவரும்) அஞ்சுதற்குரிய இடியினது பேரொலிக்கும், மனம்பதைத்து அஞ்சி, துதித்தற்குரிய தமதிறைவனிடத்துச் சரணடைதல்போலப் பாம்புகளெல்லாம் (தமது) புற்றுக்களில் புகுந்து மறைந்தனவே. எ - று.

(வி - ரை.) விரவுமின், வெருவிடீ என்பன வினைத்தொகை நிலைத்தொடர்கள், உரம் - உறுதி, அஞ்சுபு - செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம், இதுசார்தல் என்னும் வினைகொண்டு முடிந்தது, யாவும் என்பதில் உம்மை முற்றும்மை. (உசசு)

இடிமு ழக்க முழவ மியைதர
நெடிய கானவ ரங்க நிலவுற
வடிவ மஞ்ஞை யெனுமட மாதரார்
அடிபெ யர்த்திடு மாடன் மலிந்ததே.

(ப - ரை.) இடிமுழக்கம் - இடிமுழக்கமாகிய, முழவம் - மத்தளம், இயைதர - ஒலிக்கவும், நெடியகானம் - பெரியகாடாகிய, அரங்கம் - ஆடரங்கானது, நிலவுற - விளங்கவும், வடிவம் - அழகுள்ள, மஞ்ஞை என்னும் - மயில்களென்கிற, மடம்மாதரார் - இளம்பெண்கள், அடிபெயர்த்திடும் - அடிபெயர்த்தாடுகின்ற, ஆடல் மலிந்ததே - நடநம் மிகுந்ததே. எ - று.

(பொ - ரை.) இடி முழக்கமாகிய மத்தளம் ஒலிக்கவும், பெரிய காடாகிய ஆடரங்கானது விளங்கவும், அழகுள்ளமயில்களென்கிற இளம்பெண்கள் அடிபெயர்த்தாடுகின்ற நடநம்மிகுந்ததே. எ - று.

(வி - ரை.) முழக்க முழவம் - பண்புத்தொகை நிலைத்தொடர், கானவரங்கம் என்பதுமது, பெயர்த்திடுமாடல் - பெயரெச்சத்தொடர். ஆடல் - தொழிற்பெயர். இயைதர என்பதற்குப் பகுதி இயைதா, நிலவுற என்பதற்குப் பகுதி நிலவுறு, வடிவம் என்பதில் அம்சாரியை, மாதரார் - விகுதிமேல் விகுதிபெற்ற பண்படியாகப்பிறந்த பெயர். மலிதல் - அதிகரித்தல். (உசஎ)

பெட்டு நூல்பெரு கப்பயி லாதவ
ரொட்டு செய்யு ணினைத்துநி னைத்துளங்
கட்டு றுத்திக் கனைவது போன்மெனை
விட்டு விட்டுறை மென்மெல வீழ்ந்தவே.

(ப - ரை.) பெட்டு - விரும்பி, நூல் - நூல்களை, பெருக பயிலாதவர் - மிகுதியாய்க் கல்லாதவர்கள், ஒட்டுசெய்யுள் - தாம் செய்யத் தொடங்குகிற செய்யுளை, நினைத்து நினைத்து - எண்ணியெண்ணி, உள்ளம் கட்டுறுத்தி - மனத்தை யொருமிக்கச்செய்து, கனைவதுபோலும் என - உருகுவது போலும் என்னும்படி, விட்டுவிட்டு - இடையிட்டு இடையிட்டு, உறை - நீர்த்துளிகள், மெல்மெல்ல - பையப்பைய, வீழ்ந்தவே - வீழ்ந்தனவே. எ - று.

(பொ - ரை.) விரும்பிநூல்களை மிகுதியாய்க் கல்லாதவர்கள்தாம் செய்யத் தொடங்குகிற செய்யுளை எண்ணியெண்ணி மனத்தை யொருமிக்கச் செய்து உருகுவதுபோலும் என்னும்படி இடையிட்டு இடையிட்டு நீர்த்துளிகள் பையப்பைய வீழ்ந்தனவே. எ - று.

(வி - ரை.) பயிலுதல் - பழகுதல், செய்யுள் - பாட்டு, பயிலாதவர் கனைவது போன்மெனை உறைவீழ்ந்த எனமுடித்துக்கொள்க. (உசஅ)

ஆன்ற கல்வி யறிவி னிரம்பிய
சான்ற தன்மையர் சற்றுந் தடையின்றித்
தோன்ற யாப்படங் கத்தொகச் சொற்றல்போற்
கான்ற வேபெருந் தாரைக் கணமழை.

(ப - ரை.) ஆன்ற - அகன்ற (விசாலித்த), கல்வியறிவின் நிரம்பிய - கல்வியறிவினால் நிரம்பப்பெற்ற, சான்றதன்மையர் - மேலானகுணமுள்ளவர், சற்றும்தடைஇன்றி - சிறிதும் தடையில்லாமல், தோன்ற - விளங்கும்படி, யாப்புஅடங்க - யாப்புமுழுதும், தொகசொற்றல்போல் - ஒருமிக்கச் சொல்லுதல்போல, பெருந்தாரை - பெரியமழைத்தாரைகளை, கணமழை - கூட்டமாகிய மேகங்கள், கான்றவே - சொரிந்தனவே. எ - று.

(பொ - ரை.) அகன்ற (விசாலித்த) கல்வியறிவினால் நிரம்பப்பெற்ற மேலானகுணமுள்ளவர் சிறிதும்தடையில்லாமல், விளங்கும்படி, யாப்புமுழுதும் ஒருமிக்கச்சொல்லுதல் போலப்பெரிய மழைத்தாரைகளைக் கூட்டமாகிய மேகங்கள் சொரிந்தனவே. எ - று.

(வி - ரை.) ஆன்ற - அகன்ற என்பதன்விகாரம், கல்வியறிவு - கல்வியாலுண்டாகிய அறிவு, அறிவின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்ருவதன் கருவிப்பொருளில் வந்தது, சான்ற - சால்என்னும் உரியடியாகப் பிறந்த பெயரெச்சம் - யாப்பு - செய்யுள், கான்ற கால்என்னும் வினைப்பகுதியடியாகப்பிறந்த இறந்தகாலப்பலவின்பால் வினைமுற்று, கணமழை - பண்புத்தொகை. (உசக)

பாய மாவும் பறவையு மஞ்சுற
மேய காலும் பனிப்புற வெண்மைய
தாய நீறுட லார்தர வீங்கிய
காய்நி கர்ப்பக் கனோபலம் வீழ்ந்தவே.

(ப - ரை.) பாயமாவும் பறவையும்அஞ்சுற - பரவிய விலங்குகளும் பறவைகளும் அஞ்சவும், மேயகாலும் பனிப்புற - பொருந்தியகாடும் சலிக்கவும், வெண்மையது ஆயநீறுஉடல்ஆர்தர - வெண்ணீறு உடம்புமுழுதும் நிறைய, வீங்கிய - பெருத்த, காய்நிகர்ப்ப - காயைநிகர்க்கும்படி, கனோபலம் வீழ்ந்தவே - ஆலாங்கட்டிகள் வீழ்ந்தனவே. எ - று.

(பொ - ரை.) பரவியவிலங்குகளும் பறவைகளும் அஞ்சவும், பொருந்தியகாடும் சலிக்கவும், வெண்ணீறு உடம்புமுழுதும் நிறையப்பெருத்த காயைநிகர்க்கும்படி ஆலாங்கட்டிகள் வீழ்ந்தனவே. எ - று.

(வி - ரை.) மாஎன்னும் ஒரெழுத்தொருமொழி பலபொருளைத் தருவதாயினும் இவ்விடத்து விலங்கினையே குறித்தது, பறவை - தொழிலாகுபெயர், அஞ்ச பனிக்க ஆரஎன்பன முறையே அஞ்சுறபனிப்புற ஆர்தரஎன விகாரமாயின, இவற்றிற்கு முறையே அஞ்சுறு பனிப்புறு ஆர்தா என்பன பகுதிகள், பாவிய மேவிய என்பனபாயமேய என்றும், ஆகிய என்பது ஆய

என்றும் விகாரப்பட்டன, 'நீறுடலார்தரவீங்கிய காய்' என்றது கலியாணப் பூசினிக்காயை, கஞ்சபலம் - ஆலங்கட்டி, இதனை மழைக்கட்டி யென்றுங் கூறுவர். இது வடசொல், பனித்தல் - அசைதல், நடுங்கல் எனினுமாம்.

மன்ற லங்குருந் தத்தடி வைகியுங்
கொன்றை மூலங் குறுகியு மற்றுள
துன்று சிற்றிலைப் பாதவத் தூர்தொறுஞ்
சென்றுந் தெய்ய திகைத்துநின் றேமன்றே.

(ப - ரை.) மன்றல்அம் குருந்தத்து அடிவைகியும் - வாசனையும் அழகும்உள்ள குருந்தமரத்தடியில் தங்கியும், கொன்றைமூலம் குறுகியும் - கொன்றைமரத்தடியில் சேர்ந்திருந்தும், மற்றுஉள்ள - வேறுமுள்ள, துன்று சிறுஇலை - நெருங்கினசிறு இலைகளையுடைய, பாதவத்து - மரங்கள் அடர்ந்த, ஊர்தொறும் - ஊர்கள்தோறும், சென்றும் - போய்த்தங்கியும், திகைத்து நின்றேம்அன்றே - திகைத்து நின்றோமல்லவா. எ - று.

(பொ - ரை.) வாசனையும் அழகும் உள்ள குருந்தமரத்தடியில் தங்கியும், கொன்றைமரத்தடியில் சேர்ந்திருந்தும், வேறுமுள்ள நெருங்கிய சிறு இலைகளையுடைய மரங்கள் அடர்ந்த ஊர்கள்தோறும் போய்த்தங்கியும், திகைத்துநின்றோமல்லவா. எ - று.

(வி - ரை.) மூலம் - அடி, வைகுதல் - தங்குதல், குறுகுதல் - சேர்தல், சிற்றிலை - பண்புத்தொகை, சிறுமையாகிய இலையெனவிரியும், பாதவம் - பாதபம் என்னும் வடசொற்றிரிபு, திகைத்தல் - பிரமித்தல், மயங்கல். தெய்ய - இசைநிறை. (உருக)

கொய்ம லர்த்தருத் தோறுங் குறுகியு
மொய்சி கைத்தலை முன்னனைந் தானனங்
கைந னைந்திரு காலனைந் தம்பவோ
மெய்ந னைந்து விறகு நனைந்ததே.

(ப - ரை.) கொய் - பறிக்கப்படுகிற, மலர்-மலர்களையுடைய, தருதோறும் - மரங்கள்தோறும், குறுகியும் - சேர்ந்தும், மொய் - நெருங்கிய, சிகைத்தலை-சிகையோடு கூடியதலை, முன்நனைந்து-முன்னேநனையப்பெற்று,(பிறகு) ஆநநம்கைநனைந்து - முகமும்கையும் நனையப்பெற்று, இருகால் நனைந்து - இரண்டுகால்களும் நனையப்பெற்று, மெய்நனைந்து - உடம்பு நனையப்பெற்று, விறகும் நனைந்ததே-(நாம்ஒடித்துச் சுமையாகக்கட்டின) விறகும் நனைந்ததே.

(பொ - ரை.) பறிக்கப்படுகிற மலர்களையுடைய மரங்கள்தோறும் சேர்ந்தும், நெருங்கியசிகையோடு கூடியதலைமுன்னே நனையப்பெற்று, (பிறகு) முகமும்கையும் நனையப்பெற்று, இரண்டுகால்களும் நனையப்பெற்று, உடம்பு நனையப்பெற்று, (நாம் ஒடித்துச்சுமையாகக்கட்டின) விறகும் நனைந்ததே.

(வி - ரை.) கொய்மலர் - வினைத்தொகை, கொய் - செயப்பாட்டு வினைப்பொருளில்வந்தது, மலரைக்கண்டால் பறியாதாரொருவருமிலரா

தலால், 'கொய்மலர்' என்றார், சிகை - சிகாஎன்னும் வடமொழித்திரிபு, தரு ஆநநம், என்பன வடசொற்கள், அம்ம, ஓ, அசைச்சொற்கள், விறகும் என்ற வும்மை இறந்ததுதழீஇயது. (உருஉ)

மேலு மேலும் விடாமழை யாகலாற்
சாலு நீர்புறந் தாளள வாய்க்கணைக்
காலு மாய்முழங் காலள வாய்ப்பினு
மாலு நீத்த மரையள வாயிற்றே.

(ப - ரை.) மேலும்மேலும் - மேன்மேலும், விடாமழை ஆகலால் - விடாமழை பெய்தலாலே, சாலும்நீர் - மிகுந்தநீரானது, புறந்தாள் அளவு ஆய் - (முன்னே) புறங்காலளவாகி, (பிறகு) கணைக்காலும்ஆய் - கணைக்காலளவுமாகி, (பிறகு) முழங்கால் அளவுஆய் - முழங்காலளவாகி, பின்னும் - மேலும், ஆலும் நீத்தம்-அசையாநின்ற நீர்ப்பெருக்கு, அரைஅளவு ஆயிற்றே- இடையளவாயிற்றே. எ - று.

(பொ - ரை.) மேன்மேலும் விடாமழைபெய்தலாலே மிகுந்தநீரானது (முன்னே) புறங்காலளவாகி, பிறகு கணைக்காலளவுமாகி, பிறகு முழங்காலளவாகி, மேலும், அசையாநின்ற நீர்ப்பெருக்கு இடையளவாயிற்றே. எ - று.

(வி - ரை.) விடாமழை - ஓயாமழை, ஆலுதல் - அசைதல், ஒலித்தல் எனினுமாம், நீத்தம் - பெருவெள்ளம், விடாமழை - பெயரெச்சத்தொடர். அளவாய் என்பதைக் கணைக்காலுக்குங் கூட்டியுரைக்கப்பட்டது, காலும் என்றவும்மை இறந்ததுதழீஇயது. (உருக)

வானி லாவு மதிமுடி யண்ணல்போற்
றேனி லாவு கடுக்கை திகழ்தர
மானி லாவுற வேந்தி வயங்கொடு
கானி யாறு கலித்து நடந்ததே.

(ப - ரை.) வான்நிலாவும் - ஆகாயத்தில் விளங்குகிற, மதி - பிறைச் சந்திரனை, முடி - திருச்சடையில்தரித்த, அண்ணல்போல் - சிவபெருமான் போல, தேன்நிலாவு - தேன்பொருந்திய, கடுக்கைதிகழ்தர - கொன்றைமலர் கள் (தன்மீது) விளங்கவும், மான்நிலாவுறஏந்தி-மானைவிளங்கும்படி தாங்கி, வயம்கொடு - நீரைக்கொண்டு, கான்யாறு - கானாறானது, கலித்துநடந்ததே- ஆரவாரித்துக்கொண்டு சென்றதே. எ - று

(பொ - ரை.) ஆகாயத்தில் விளங்குகிற பிறைச்சந்திரனைத் திருச்சடை யில் தரித்தசிவபெருமான்போலத் தேன்பொருந்திய கொன்றைமலர்கள் (தன்மீது) விளங்கவும், மானைவிளங்கும்படிதாங்கி, நீரைக்கொண்டு, கானாறு னது ஆரவாரித்துக்கொண்டு சென்றதே. எ - று.

(வி - ரை.) வானிலாவு என்பதைவால்நிலாவு எனப்பிரித்துவெண்மை நிறம் விளங்குகிற என்றுரைத்தலுமாம். மதிமுடி - பிறைச்சந்திரனையணிந்த சடைமுடியையுடைய எனினுமாம், அண்ணல் - பெரியோன், இச்செய்யுள்

சிவபெருமானுக்கும் கானாற்றுக்கும் சிலேடையாகப் பாடப்பட்டது, சிவ பெருமான் கொன்றைமலர்மாலையைத் தரித்திருக்கிறான், மானை யிடக்கையில் தாங்கியிருக்கிறான், கங்கையாகிய நீரைத்தன்னிடத்திற் கொண்டிருக்கிறான், அதுபோலக்கானாறு கொன்றைமலர்களையும் மான்களையும் நீரையும்கொண்டு வருகின்றது என்று பொருளுரைத்துக்கொள்க, மயம் - ஆடு குதிரை பறவை யென்பவைகளையும் உணர்த்துஞ் சொல்லாதலால் கானாறு இவைகளையும் அடித்துக்கொண்டு வருகின்றது என்றுரைத்தலுமாம், கலித்தல் - ஒலித்தல் எனினுமமையும். (உ௬௪)

ஊற்று மாரி யொழிதலின் றெனினி
யாற்ற லென்றிரு வேமுமுள் ளாய்தர
லேற்ற காலை யெழுந்தோர் கொடுங்குளிர்க்
காற்று வந்து கடுகிச் சுழன்றதே.

(ப-ரை.) ஊற்றுமாரி-(மேகத்தால்) ஊற்றப்படுகிற மழையானது, ஒழிதல் இன்று - விடுதலில்லை, இனி - இனி, ஆற்றல் என் - நாம் செய்தலாகிய காரியம்யாது, என்று-என்று, இருவேமும் - நாமிருவரும், உள் - மனத்தில், ஆய்தரல் ஏற்றகாலை - ஆராய்தலைப் பொருந்தின சமயத்தில், ஓர் - ஒரு, கொடுகுளிர்காற்று - கொடியகுளிர்க்காற்றானது, எழுந்துவந்து - உண்டாகி வந்து, கடுகிசுழன்றதே - விரைந்து சுழன்றதே. எ - று.

(பொ - ரை.) (மேகத்தால்)ஊற்றப்படுகிற மழையானது விடுதலில்லை, இனி நாம் செய்தவாகிய காரியம் யாது என்று நாமிருவரும் மனத்தில் ஆராய்தலைப் பொருந்தின சமயத்தில் ஒருகொடிய குளிர்க்காற்றானது உண்டாகிவந்து விரைந்து சுழன்றதே. எ - று.

(வி - ரை.) ஊற்றுமாரி - வினைத்தொகை. என் என்னும் வினா ஒன்று மில்லையென எதிர்மறைப் பொருளில்வந்தது. உள் - மனம். ஆய்தரல் என்பதற்குப்பகுதி ஆய்தா. குளிர்க்காற்று. இரண்டாம் வேற்றுமையுருபும் பயனுமுடன்றொக்க தொகைநிலைத்தொடர். குளிர்காற்று என்று பாடமாயின் வினைத்தொகை நிலைத்தொடர் என்க. சுழலுதல் - சுற்றுதல். கடுகியென்பதற்குப் பகுதி கடுகு. (உ௬௫)

மோது காற்றின் முளிசினை மாமரத்
தோது சாகையு லோலித் தொலித்திடன்
மீது கையமைத் தவ்வனம் விண்மழை
போது நில்லெனல் போல விருந்ததே.

(ப - ரை.) மோதுகாற்றின் - மோதுகின்ற காற்றினால், முளிசினை மாமரத்து - கரடுகளையும் கிளைகளையுமுடைய பெரிய மரங்களின், ஓது சாகை - சொல்லப்பட்ட சிறகிளைகள், உலோலித்து ஒலித்திடல் - அசைந்து ஒலித்தலானது, அவ்வனம் - அந்தக்காடு, மீதுகை அமைத்து - மேலே கையமைத்து, விண்மழை - மேகத்தினின்றும் வருகிற மழையே, போதும் -

(இதுவரைக்கும் நீபெய்தது) போதும், நில்லெனல்போல இருந்ததே -(இனி) நிற்கக்கடவாயென்று சொல்லுவது போன்றிருந்ததே. எ - று.

(பொ - ரை.) மோதுகின்ற காற்றினால் கரடுகளையும் கிளைகளையுமுடைய பெரிய மரங்களின் சொல்லப்பட்ட சிறுகிளைகள் அசைந்து ஒலித்தலானது, அந்தக்காடு மேலே கையமைத்து, மேகத்தினின்றும் வருகிற மழையே (இதுவரைக்கும்) நீ பெய்ததுபோதும்(இனி) நிற்க கடவாயென்று சொல்லுவது போன்றிருந்ததே. எ - று.

(வி - ரை.) மோதுகாற்று - வினைத்தொகை. முளிசினை - உம்மைத்தொகை. முளி - கரடு. சினை - பெருங்கிளை, சாகை - சிறுகிளை. உலோவித்தல் - அசைதல். கையமைத்தல் - கையெடுத்தல். விண் - மேகம். மழை - அண்மைவிளியாதலால் இயல்பு. (உ௫௬)

அன்ன காலை யிடியொலி யார்முகி
னென்னல் காறு நிரம்பிய வெப்பெலா
மின்ன றீர விரிந்தன வோவென
மன்னக் கேட்பது மான விருந்ததே.

(ப - ரை.) அன்னகாலை - அந்தவேளையில், இடிஒலி - இடியோசையானது (எப்படி யிருந்ததென்றால்), ஆர் முகில்-நிறைந்த மேகங்கள், நென்னல்காறும் - நேற்றுவரைக்கும், நிரம்பிய - பூமியில் நிறைந்திருந்த, வெப்பு எல்லாம் - வெப்பமுழுதும், இன்னல்தீர - துன்பம் நீங்கும்படி, இரிந்தனவோ என - நீங்கினவோவென்று, மன்ன - நிலைபெற, கேட்பதுமான இருந்ததே - கேட்பது போலிருந்ததே. எ - று.

(பொ - ரை) அந்தவேளையில் இடியோசையானது (எப்படியிருந்ததென்றால்) நிறைந்த மேகங்கள் நேற்றுவரைக்கும் பூமியில் நிறைந்திருந்த வெப்பமுழுதும் துன்பம் நீங்கும்படி நீங்கினவோவென்று நிலைபெறக் கேட்பது போலிருந்ததே. எ - று.

(வி - ரை.) அன்ன - அப்படிப்பட்ட, இடியொலி - இடிமுழக்கம். ஆர்முகில் - ஒலிக்கின்ற மேகம் எனினுமாம். இன்னல் - துன்பம். இரிதல் - ஓடுதல், மானல் - நிகர்த்தல். (உ௫எ)

காலுமின்னு விளக்கமிக் காட்டினுக்
கேலு மாமழை யின்னமும் வேண்டுங்கொல்
சாலு மீதிற் றழைந்தகொ லென்றுமை
யாலுந் தீபங்கொண் டாய்வதை யொத்ததே.

(ப - ரை.) காலும் - (மேகத்தினால்) வெளிப்படுத்தப்படுகிற, மின்னு விளக்கம் - மின்னலின் ஒளியானது (எப்படியிருந்ததென்றால்), இ - இந்த, காட்டினுக்கு - காட்டுக்கு, ஏலும் - தகுதியான, மாமழை-பெரியமழை, இன்னமும் வேண்டுங்கொல் - இன்னமும் வேண்டுமோ, சாலும் - நிரயபினை, ஈதின் - இந்தமழையினால், தழைந்தகொல் - செழித்தனவோ,என்று-என்று

மை - மேகங்கள், ஆலும் தீபம்கொண்டு - அசையாநின்ற தீபங்களைக் கொண்டு, ஆய்வதை ஒத்ததே - ஆராய்வதை நிகர்த்திருந்ததே. எ - று.

(பொ - ரை.) மேகத்தினால் வெளிப்படுத்தப்படுகிற மின்னலின் ஒளியானது (எப்படியிருந்த தென்றால்) இந்தக் காட்டுக்குத் தகுதியான பெரிய மழை இன்னமும் வேண்டுமோ, நிரம்பின இந்த மழையினால் செழித்தனவோ என்று, மேகங்கள் அசையாநின்ற தீபங்களைக்கொண்டு ஆராய்வதை நிகர்த்திருந்ததே. எ - று.

(வி - ரை.) காலுதல்-உமிழ்தல். மின்னென்பது உகரச்சாரியை பெற்று மின்னு என்றாயிற்று, கொல் - இரண்டும் ஐயவிடைச்சொற்கள். மை - மேகம், ஆலல் - அசைதல். (உடுஅ)

உள்ள யாவு முதவிப் புகழ்ப்படாங்
கொள்ளு நற்கொடை யாரிற் குயின்குழா
மள்ள னீர்முழு தும்மளித் தாம்புகழ்
விள்ள லின்றிக்கொண் டென்ன விளர்த்தவே.

(ப - ரை.) உள்ளயாவும் உதவி - (தம்மிடத்தில்) உள்ளயாவையும் கொடுத்து, புகழ்படாம்கொள்ளும்-புகழாகிய ஆடையையுடுத்துக்கொண்ட, நல்கொடையாரின் - நல்லகொடையாளிகள் போல, குயின் குழாம் - மேகக் கூட்டங்கள், அள்ளல் நீர் முழுதும் அளித்து - (தாம் கடலினின்றும்) அள்ளிக் கொள்ளுதலையுடைய நீர்முழுதும் கொடுத்து, ஆம் - (அதனால்) உண்டாகிய, புகழ் - கீர்த்தியை, விள்ளல் இன்றி - நீங்குதலில்லாமல், கொண்டென்ன-கொண்டாற்போல, விளர்த்தவே-வெளுத்துப் போயினவே. எ-று.

(பொ - ரை.) (தம்மிடத்திலுள்ள) யாவையும் கொடுத்துப் புகழாகிய ஆடையையுடுத்துக்கொண்ட நல்ல கொடையாளிகள்போல மேகக் கூட்டங்கள் (தாம் கடலினின்றும்) அள்ளிக் கொள்ளுதலையுடைய நீர்முழுதும் கொடுத்து (அதனால்) உண்டாகிய கீர்த்தியை நீங்குதலில்லாமற் கொண்டாற்போல வெளுத்துப் போயினவே. எ - று.

(வி - ரை.) யாவும் - எல்லாப் பொருள்களும், புகழ்ப்படாம் - புகழ்க் கொடியெனினுமமையும். கொடையார் - ஔதார்யமுடையவர். இன் - ஐந்தனுருபு, ஒப்புப்பொருளது. குயின் - மேகம், குழாம் - கூட்டம். புகழ் கொண்டென்ன விளர்த்தவே என்றமையால் கீர்த்திக்கு நிறம்வெண்மையென்பது பெறப்பட்டது. (உடுகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மாற்றுவித மில்பறவை யெல்லாம்வாய் தாழ்க்கொண்டு மரந்தோறும், போற்று குடம்பைப் பூக்கொளிப்பப் பொருமா வனைத்தும் போங்தொளிப்பக், காற்று குளிருக் காற்றுன்போற் கரங்கள் யாவுந் தொகமுடக்கிப், பாற்றி யிருளைப் பகல்செய்யும் பரிதி மேல்பான் மறைந்தனனே.

(ப - ரை.) மாற்றுவிதம் இல் - (காற்று குளிர்களின் துன்பத்தை) நீக்கும் வகையில்லாத, பறவை எல்லாம் - பக்ஷிகளெல்லாம், வாய் - (தமது) வாயை, தாழ்கொண்டு - தாழிட்டு, மரம் தோறும் - மரங்களிலெல்லாம், போற்றுகுடம்பை - (தம்மால்) காப்பாற்றப்படுகிற கூட்டினுள்ளே, புக்கு ஒளிப்ப - புகுந்தொளிக்கவும், பொரும் - (ஒன்றோடொன்று) போர் செய்கிற, மாஅனைத்தும் - மிருகங்களெல்லாம், போந்து ஒளிப்ப- (தத்தம் இடங்களில்) போயொளிக்கவும், இருளைபாற்றி - இருளையோட்டி, பகல் செய்யும் - பகலையுண்டாக்குகிற, பரிதி - சூரியனானவன், காற்று குளிருக்கு ஆற்றான்போல் - காற்றுக்கும் குளிருக்கும் சகிக்காதவன்போல, கரங்கள்யாவும்- (தன் கிரணங்களாகிய) கைகளையெல்லாம், தொகமுடக்கி - ஒருசேரச்சுருக்கிக்கொண்டு, மேல்பால் மறைந்தனனே - மேற்குத்திக்கில் மறைந்தானே.

(பொ - ரை.) (காற்று குளிர்களின் துன்பத்தை) நீக்கும் வகையில்லாதபக்ஷிகளெல்லாம் (தமது) வாயைத்தாழிட்டு, மரங்களிலெல்லாம் (தம்மால்) காப்பாற்றப்படுகிற கூட்டினுள்ளே புகுந்தொளிக்கவும், (ஒன்றோடொன்று) போர்செய்கிற மிருகங்களெல்லாம் (தத்தம் இடங்களில்) போயொளிக்கவும், இருளையோட்டிப் பகலையுண்டாக்குகிற சூரியனானவன் காற்றுக்கும் குளிருக்கும் சகிக்காதவன் போல (தன் கிரணங்களாகிய) கைகளையெல்லாம் ஒருசேரச்சுருக்கிக்கொண்டு மேற்குத்திக்கில் மறைந்தானே. எ-று.

(வி - ரை.) தாழ்க்கொண்டு என்றது மூடிக்கொண்டு என்றபடி. மா - மிருகம். இது ஓரெழுத்தொருமொழி. மா - யானை யெனினுமாம். ஆற்றல் - சகித்தல். ஒளிப்ப இரண்டனிடத்திலும் எண்ணும்மைகள் தொக்கன. குளிருக்கு என்பதில் நான்கனுருபு காற்றுக்கும் கூட்டப்பட்டது. பாற்றி என்பதற்குப் பகுதிபாற்று. கரம், பரிதி என்பன வடசொற்கள். (உகo)

ஒருவா வன்பிற் றணந்தார்க ளுற்று நோக்கி வெய்துயிர்த்து,வெருவா நின்று கண்பனிப்ப விளங்கு நெடியோன் றிருமார்பிற், பொருவா விரைக்குங் குமங்குழைத்துப் பூசி வைத்தாற் போற்றோன்றுங், கருவா னெழுந்த செவ்வானங் கடல்சூ ழுலகு வளைந்ததே.

(ப - ரை.) ஒருவா - நீங்காத, அன்பின் - அன்பையுடைய, தணந்தார்கள் - (தம் கணவரை) விட்டுப்பிரிந்தவர்களாகிய நாயகிகள், உற்றுநோக்கி - உற்றுப்பார்த்து, வெய்துஉயிர்த்து - வெப்பமாகப்பெரு மூச்சுவிட்டு, வெருவாநின்று - அஞ்சாநின்று, கண்பனிப்ப - (தம்) கண்களில் நீர் துளிக்கும்படி, விளங்கும் - விளங்குகின்ற, நெடியோன் - நெடுமாலின், திருமார்பில் - அழகிய மார்பினிடத்தில், பொருவா - சமானமில்லாத, விரை-வாசனை பொருந்திய, குங்குமம் குழைத்து-குங்குமத்தைக் குழைத்து, பூசிவைத்தாற்போல் - பூசிவைத்தாற்போல, தோன்றும் - காணப்படுகிற, கருவான் எழுந்த செவ்வானம் - கரியமேகத்தில் எழுந்த செவ்வானமானது, கடல்சூழ் உலகுவளைந்ததே - கடலாற் சூழப்பட்ட இவ்வுலகத்தை வளைந்து கொண்டதே. எ - று.

(பொ - ரை.) நீங்காத அன்பையுடைய தம் கணவரை விட்டுப்பிரிந்தவர்களாகிய நாயகிகள், உற்றுப்பார்த்து, வெப்பமாகப்பெருமூச்சுவிட்டு அஞ்சாநின்று தம் கண்களில் நீர் துளிக்கும்படி, விளங்குகின்ற நெடுமாலின் அழகிய மார்பினிடத்தில், சமானமில்லாத வாசனை பொருந்திய குங்குமத்தைக் குழைத்துப் பூசிவைத்தாற்போலக் காணப்படுகிற கரியமேகத்திலெழுந்த செவ்வானமானது கடலாற் சூழப்பட்ட இவ்வுலகத்தைவளைந்துகொண்டதே.

(வி - ரை.) ஒருவா என்பதற்குப் பகுதி ஒருவு. தணந்தார்கள் - வினையாலணையும் பெயர், தணத்தல் - பிரிதல், பகுதி - தண, உயிர்த்தல் - மூச்சுவிடுதல், அது இங்குப்பெருமூச்சுவிடுதலைக் குறித்தது. வெருவாநின்று என்பதற்கு வெருவிநின்று என்றுரைப்பினுமாம், பனித்தல் - துளித்தல், நீர் வருவித்துரைக்கலாயிற்று, நெடியோன் - திரிவிக்கிரமன், கருவான் - கரிய ஆகாயம் எனினுமாம், கருவான் செவ்வானம் என்றது முரண்டொடை, வானம் என்பதில் அம் சாரியை, செவ்வானம் நாயகரைப்பிரிந்த நாயகிகளுக்கு விரகவேதனை அதிகரிக்கச் செய்யுமாதலால், 'தணந்தார்கள் உற்றுநோக்கி வெய்துயிர்த்து வெருவாநின்று கண்பனிப்ப' என்றார். "வேள்சோற்குச்சிவந்த விறலாளனின்னுங்குறுகிலனிம், மேற்குச்சிவந்த தறியேனிவட்குவிளைவதுவே", என்றார் பிறரும். (உக)

நிலைசேர் வான மகள்கூந்த னீள விரித்து விட்டாற் போற்
கலையா ருணர்ச்சி யொடுகேள்வி கழித்து நிற்பா ருள்ளம்போ
னுலையா துலகிற் பரக்குமா றூற்று கருமைக் குழம்பேபோற்
கொலைசூழ் நர்தந் தீவினைபோற் குருட்டுக் கங்குல் செறிந்ததே.

(ப - ரை.) குருட்டுகங்குல் - (கண்ணுள்ளார்க்கும்) குருட்டுத்தன்மையை யுண்டாக்குகிற இருளானது, நிலைசேர் - நிலைபொருந்திய, வானம் மகள் - ஆகாயமாகிய மாது, கூந்தல் - (தனது) கூந்தலை, நீளவிரித்து விட்டாற்போல் - நெடுகவிரித்து விட்டாற்போலவும், கலை - நூல்களின், ஆர் உணர்ச்சியொடு - அரியவுணர்வோடு, கேள்வி - கேள்வியையும், கழித்து நிற்பார் - விட்டு நிற்பவர்களுடைய, உள்ளம்போல்-மனம்போலவும், உலையாது-கெடாமல், உலகில் - உலகத்தில், பரக்கும் ஆறு - பரவும்படி, ஊற்று - ஊற்றப்பட்ட, கருமை குழம்பேபோல் - கருமையாகிய அஞ்சனக்குழம்பே போலவும், கொலைசூழ்நர் - கொலைத்தொழிலையே விரும்புவோரது, தீவினை போல் - தீவினைப்பயன்போலவும், செறிந்ததே - (எங்கும்) நெருங்கிற்றே.

(பொ - ரை.) (கண்ணுள்ளார்க்கும்) குருட்டுத் தன்மையையுண்டாக்குகிற இருளானது, நிலை பொருந்திய ஆகாயமாகிய மாது (தனது கூந்தலை) நெடுக விரித்து விட்டாற்போலவும், நூல்களின் அரியவுணர்வோடு கேள்வியையும் விட்டு நிற்பவர்களுடைய மனம்போலவும், கெடாமல் உலகத்தில் பரவும்படி ஊற்றப்பட்ட கருமையாகிய அஞ்சனக்குழம்பே போலவும், கொலைத்தொழிலையே விரும்புவோரது தீவினைப்பயன் போலவும் (எங்கும்) நெருங்கிற்றே. எ - று.

(வி - ரை.) வானமகள் - பண்புத்தொகை, வானமாகிய மகள் என விரியும், கலையாருணர்ச்சி - நூலுணர்ச்சி, இதனை சாஸ்த்ரஜ் ஞானம் என்பர் வடநூலார், கேள்வியை சிரவணம் என்பர், மை - அஞ்சநம், சூழுநர் - நினைத்திருப்பவர் எனினுமாம், போல் நான்கனீற்றிலும் எண்ணும்மைகள் தொக்கன, ஞானவொளியில்லாமையால் மூடர்மனம் அஞ்ஞாநாந்தகாரத்தால் மூடப்பட்டிருக்குமென்பது இதனால் பெறப்பட்டது, தீவினைப்பயன் - பாவம், இதன் நிறம் கருமை, செறிந்தது - நிறைந்தது எனினுமாம். (உசுஉ)

ஒருவர் கரமற் றொருவர்பிடித் துறுமே டவலென் றுணராமன்
மருவுங் குளிர்காற் றானடுங்கி மயங்கிக் காலால் வழிதடவி
யிருள்போ மளவு மிவணுறைவோ மென்றோ ரிடமுற் றிருந்தனமே
குருமா முல்லை நமைக்கண்டு கொண்ட நகைபோன் மலர்ந்தவே.

(ப - ரை.) (நாமிருவரும்) ஒருவர் கரம்மற்று ஒருவர் பிடித்து - ஒருவர் கையைமற்றொருவர் பிடித்துக்கொண்டு, உறும் - (எதிரே) பொருந்திய, மேடு அவல் என்று உணராமல் - மேடு பள்ளமென்றறியாமல், மருவும் - பொருந்தின, குளிர்காற்றால் நடுங்கி - குளிர்காற்றினால் நடுக்கமடைந்து, மயங்கி - மயக்கங்கொண்டு, காலால் வழிதடவி - காலினால் வழிதடவிக்கொண்டு, இருள்போம் அளவும்-இருள் நீங்கும் வரைக்கும், இவண் உறைவோம் என்று - இங்கே தங்கியிருப்போமென்று, ஓர் இடம் உற்று இருந்தனமே - ஓரிடத்தை யடைந்திருந்தோமே, குருமா முல்லை - நிறமுள்ள பெருமை யமைந்த முல்லைக்கொடிகள், நம்மைகண்டு - நம்மைப்பார்த்து, கொண்ட நகைபோல் - நகைத்த நகைபோல, மலர்ந்தவே - மலர்ந்தனவே. எ - று.

(பொ - ரை.) (நாமிருவரும்) ஒருவர் கையை மற்றொருவர் பிடித்துக் கொண்டு எதிரே பொருந்திய மேடு பள்ளமென் றறியாமல் பொருந்தின குளிர் காற்றினால் நடுக்கமடைந்து மயக்கங்கொண்டு காலினால் வழிதடவிக் கொண்டு, இருள் நீங்கும் வரைக்கும் இங்கே தங்கியிருப்போமென்று ஓரிடத்தையடைந் திருந்தோமே, நிறமுள்ள பெருமையமைந்த முல்லைக்கொடிகள் நம்மைப்பார்த்து நகைத்த நகைபோல மலர்ந்தனவே. எ - று.

(வி - ரை.) அவல் - பள்ளம், மயங்குதல் - அறிவழிதல், நகை - சிரிப்பு, பல் எனினுமாம், குளிர்காற்று - ஊதைக்காற்று. (உசுரு)

மாட்டும் விறகு தேடப்போய் மயங்கி யிருந்த நமக்கிரங்கிக்
காட்டு மரங்க ளல்லாது கண்ணீ ருகுப்பா ராங்கில்லை
வாட்டு மீரப் பதமன்றி வயிற்றிற் செறிக்கும் பதமில்லைப்
பாட்டு முழக்கு மூமனன்றிப் பார்ப்பார் களுமற் றில்லையே.

(ப - ரை.) காட்டுமரங்கள் அல்லது - காட்டுமரங்களேயன்றி, மாட்டும் - மாட்டுகின்ற, விறகு தேடபோய் மயங்கிஇருந்த - விறகு தேடப்போய் மயங்கியிருந்த, நமக்கு - நம்பொருட்டு, இரங்கி - இரக்கங்கொண்டு, கண்ணீர் உகுப்பார் - கண்ணீர் சிந்துவோர், ஆங்கு இல்லை-அவ்விடத்தில் இல்லை,

வாட்டும் - (நம்மை) வாட்டுகின்ற, ஈரப்பதம் அன்றி - ஈரப்பதமேயல்லது, வயிற்றில் செறிக்கும் - வயிற்றிற்போய்ச் செறிக்கிற, பதம் இல்லை, பத மில்லை, பாட்டு முழக்கும் - பாட்டை முழக்குகிற, ஊமன் அன்றி - கூகையே யன்றி, மற்று பார்ப்பார்களும்-வேறு பார்ப்பவர்களும், இல்லையே-இல்லையே.

(பொ - ரை.) காட்டு மரங்களேயன்றி மாட்டுகின்ற விறகு தேடப் போய் மயங்கியிருந்த நம்பொருட்டு இரக்கங்கொண்டு கண்ணீர் சிந்துவோர் அவ்விடத்திலில்லை, நம்மை வாட்டுகின்ற ஈரப்பதமே யல்லது வயிற்றிற் போய்ச் செறிக்கிற பதமில்லை, பாட்டை முழக்குகிற கூகையேயன்றி வேறே பார்ப்பவர்களும் இல்லையே. எ - று.

(வி - ரை.) மாட்டுதல் - மூட்டுதல், கண்ணீர் என்பதை கண்நீர் என்றும் கள்நீர் என்றும் பிரித்து, முறையே கண்ணினின்றும் ஒழுகுகிற நீர் என்றும் தேனாகிய நீர் என்றும் கண்ணுக்கும் மரத்துக்கும் ஏற்ப உரைத்துக் கொள்க, ஈரப்பதம் - ஈரவழி, செறிக்கும் பதம் - செறிக்கும்சோறு, செறித்தல் - ஜீர்ணித்தல், ஊமன் - கூகை, கண்ணீர் உகுப்பார் - கண்ணீர் உதிர்ப்பார் எனினுமாம். (உகச)

இந்த வாறு தவமயங்கி யிருக்குங் காலை நங்குலத்து
வந்த மைந்த னட்போடும் வருந்த வருத்து மிவ்விருள்போய்ச்
சிந்தச் சிதைப்ப லெனச்சினந்து செழுவான் முகட்டி லெழுவான்
சந்தக் கதிர்க ளுறப்பரப்பித் தண்ணங் கதிரோ னுதித்தனனே.[போற்

(ப-ரை.) இந்தவாறு-இந்தப்பிரகாரம், தவமயங்கி இருக்கும் காலை-மிகவும்மயங்கியிருக்கும் பொழுதில், நங்குலத்து வந்தமைந்தன்-நமது குலத்தில் தோன்றின மைந்தனாகிய கண்ணன், நட்போடு - (தனது) சிநேகனாகிய குசேலனுடனே, வருந்த - வருந்தும்படி, வருத்தும்-வருத்துகிற, இ - இந்த, இருள் - இருளானது, போய்சிந்த - போய்ச்சிதறுண்ணும்படி, சிதைப்பல் என - அழிப்பேனென்று, சினந்து - கோவித்து, செழுவான் முகட்டில் - செழுமையாகிய ஆகாய முகட்டில், எழுவான்போல் - தோன்றுவோன் போல, சந்தம் - அழகாகிய, கதிர்கள் - (தன்) கிரணங்களை, உறபரப்பி - மிகுதியாகப் பரவச்செய்து, தண் அம் கதிரோன் உதித்தனனே - குளிர்ச்சியும் அழகுமுள்ள கிரணங்களையுடையவனாகிய சந்திரன் உதயஞ்செய்தானே.

(பொ - ரை) இந்தப் பிரகாரம் மிகவும் மயங்கியிருக்கும் பொழுதில், நமது குலத்தில் தோன்றினமைந்தனாகிய கண்ணன் தனது சிநேகனாகிய குசேலனுடனே வருந்தும்படி வருத்துகிற இந்த இருளானது போய்ச்சிதறுண்ணும்படி அழிப்பேனென்று கோவித்துச் செழுமையாகிய ஆகாய முகட்டில் தோன்றுவோன்போல, அழகாகிய தன் கிரணங்களை மிகுதியாகப் பரவச்செய்து, குளிர்ச்சியும் அழகுமுள்ள கிரணங்களை யுடையவனாகிய சந்திரன் உதயஞ் செய்தானே. எ - று.

(வி - ரை.) தவ - உரிச்சொல், சந்திரன் 'நம்குலத்து வந்தமைந்தன் நட்போடும் வருந்த வருத்துமிவ் விருள்போய்ச், சிந்தச்சிதைப்ப லெனச்

சினந்து செழுவான் முகட்டிலெழுவான்போல், சந்தக் கதிர்களுறப்பரப்பித் தண்ணங்கதிரோ னுதித்தனனே' என்ற குறிப்பால் மைந்தன் என்பது ஸ்ரீ கண்ணபிரானையும் நட்பு என்பது குசேலனையுங்குறித்தன, சந்தம் - அழகு, உற - உறு என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம். (உசுரு)

வானி லெழுந்த செழுமதியம் வயங்கப் பொழிவெண் கதிராலக்
கானின் மிடைகார்க் களிறெல்லாங் காம ரயிரா வதமெனவு
மான களவின் கனியெல்லா மமைவெண் ணாவற் கனியெனவு
மான முறுபுல் லினமெல்லா மடங்க லெனவும் விளங்கியவே.

(ப - ரை.) வானில் எழுந்த - ஆகாயத்தில் உதித்த, செழுமதியம் - செழுமையாகிய சந்திரன், வயங்க - விளங்க, பொழி - பொழிகின்ற, வெண் கதிரால் - வெண்மையாகிய கிரணங்களால், அ - அந்த, கானில் - காட்டில், மிடை - நெருங்கின, கார் - கருமையாகிய, களிறு எல்லாம் - யானைகளெல் லாம், காமர் - அழகாகிய, அயிராவதம் எனவும் - ஐராவதம் என்று சொல் லும்படியாகவும், களவின் கனி எல்லாம் - (கருமையாகிய) களாப்பழங்க ளெல்லாம், அமை - பொருந்திய, வெள்நாவல்கனி எனவும் - வெண்ணாவற் பழங்கள் என்று சொல்லும்படியாகவும், மானம் உறு-வலிமிகுந்த, புல் இனம் எல்லாம் - புலிக்கூட்டங்களெல்லாம், மடங்கல் எனவும் - சிங்கங்களென்று சொல்லும்படியாகவும், விளங்கியவே - விளங்கினவே. எ - று.

(பொ - ரை.) ஆகாயத்திலுதித்த செழுமையாகிய சந்திரன், விளங் கப் பொழிகின்ற வெண்மையாகிய கிரணங்களால் அந்தக்காட்டில் நெருங் கின கருமையாகிய யானைகளெல்லாம் அழகாகிய ஐராவதமென்று சொல் லும்படியாகவும், கருமையாகிய களாப்பழங்களெல்லாம் பொருந்திய வெண் ணாவற் பழங்களென்று சொல்லும்படியாகவும், வலிமிகுந்த புலிக்கூட்டங்க ளெல்லாம் சிங்கங்களென்று சொல்லும்படியாகவும் விளங்கினவே. எ - று.

(வி - ரை.) மதியம் என்பதில் அம்சாரியை, செழுமை - அமிர்தத்தின் செழுமை. வெண்கதிர் என்றது வெள்ளிய நிலவை. மிடைகளிறு என வியையும். ஐராவதம் என்னும் வடசொல் அயிராவதம் எனத்திரிந்து வந் தது, இரா - நீர், நீரையுடைய கடலிற் பிறந்தமையால் இதற்கு இப்பெயர் உண்டாயிற்று. மானம் - பெருமையுமாம். வெண்ணிலவுபடுதலால் யானை முதலியவை வெண்ணிறமடைந்தன வென்பதுகருத்து. (உசுசு)

திருவ மொருவற் குறறெரியச் சிற்சில் குறிமுன் றோன்றுதல்போன்
மருவு முலகுக் கிருளொதுக்கி வயங்கு கதிரோன் வரறெரியப்
பருவச் சிலபுள் ளெழுப்பொலியும் பாய கீழைத் திசைவிளர்ப்புங்
குருவிட் டொழிதா ராகணமுங் குறியாய் முன்னர்த் தோன்றினவே.

(ப - ரை.) ஒருவற்கு - ஒருவனுக்கு, திருவம் உறல்தெரிய - (இனி) செல்வமுண்டாதலைத் தெரிந்து கொள்ளும்படி, சிற்சில்குறி - சிற்சில அடை யாளங்கள், முன் - முன்னமே, தோன்றுதல்போல் - காணப்படுவதுபோல

மருவும் உலகுக்கு - பொருந்திய உலகிலுள்ள, இருள் ஒதுக்கி - இருட்டைவிலக்கி, வயங்குகதிரோன் - விளங்குகின்ற சூரியன், வரல்தெரிய-உதித்தலை (முன்னே) தெரிந்துகொள்ளும்படி, பருவம் - பருவத்தையுடைய, சில புள் - சிலபறவைகள், எழுப்பு ஒலியும் - எழுப்புகின்ற ஒலியும், பாய - பரவிய, கீழை திசை - கீழ்த்திசையினது, விளர்ப்பும்-வெளுப்பும், குருவிட்டு ஒழி - ஒளியைவிட்டு நீங்கின, தாராகணமும் - நக்ஷத்திரத்தொகுதியும்,குறியாய்-அடையாளங்களாய், முன்னர் - முன்னமே, தோன்றினவே - காணப்பட்டனவே. எ - று.

(பொ - ரை.) ஒருவனுக்கு (இனி) செல்வமுண்டாதலைத் தெரிந்துகொள்ளும்படி, சிற்சில அடையாளங்கள் முன்னமே காணப்படுவதுபோல, பொருந்திய உலகிலுள்ள இருட்டை விலக்கி விளங்குகின்ற சூரியன் உதித்தலை (முன்னே) தெரிந்துகொள்ளும்படி, பருவத்தையுடைய சில பறவைகள் எழுப்புகின்ற ஒலியும், பரவிய கீழத்திசையினது வெளுப்பும், ஒளியைவிட்டு நீங்கின நக்ஷத்திரத் தொகுதியும் அடையாளங்களாய் முன்னமே காணப்பட்டனவே. எ - று.

(வி - ரை.) திருவம் என்பதில் அம்சாரியை, பருவம் - விடியற்கால மெனினுமமையும். சிலபுள் என்றது கோழிமுதலியவற்றை, திசை - திசா என்னும் வடசொற்றிரிபு. தாராகணம் - வடசொற்றொடர். பாவிய என்பது பாய எனத்தொகுத்தலாயிற்று. (௨௬௭)

இருவர் சிறுவர் மழையினனைந் திளைத்திச் சாடு கோட்பட்டார்
மருவுமவரென் னுற்றாரென் றெட்டிப் பார்க்க வருவான்போற்
பருவ மரைகண் முகமலரப் பற்றற் றிருளும் போயொளிப்ப
வெருவு நாமுங் களிதூங்க வெய்யோன் குணபா லெழுந்தனனே.

(ப - ரை.) இருவர் சிறுவர் - இரண்டு சிறுவர்கள், மழையில் நனைந்து இளைத்து - மழையில் நனைந்து மெலிந்து, இ காடு கோட்பட்டார் - இந்தக் காட்டினால் கொள்ளப்பட்டார்கள், மருவும் அவர்-பொருந்திய அவர்கள்,என் உற்றார் என்று - என்னதுன்பமடைந்தார்களோ வென்று, எட்டிபார்க்க வருவான்போல் - எட்டிப்பார்க்கும் பொருட்டு வருகிறவன்போல, பருவம் - (மலரும்) பருவமுள்ள, மரைகள் - தாமரைகள், முகம்மலர - முகமலரவும், இருளும் - இருட்டும், பற்றுஅற்று - ஆதாரமில்லாமல், போய்ஒளிப்ப - போய் மறையவும், வெருவும்நாமும் - அஞ்சியிருந்தநாமும், களிதூங்க - களிப்பு மிகவும், வெய்யோன் - சூரியன், குணபால்-கீழ்த்திசையில், எழுந்தனனே- உதித்தனனே. எ - று.

(பொ - ரை.) இரண்டுசிறுவர்கள் மழையில்நனைந்து மெலிந்துஇந்தக் காட்டினால் கொள்ளப்பட்டார்கள், பொருந்திய அவர்கள் என்னதுன்பமடைந்தார்களோவென்று எட்டிப்பார்க்கும்பொருட்டு வருகிறவன்போல (மலரும்) பருவமுள்ள தாமரைகள் முகமலரவும், இருட்டும் ஆதாரமில்லாமல் போய்

மறையவும், அஞ்சியிருந்தநாமும் களிப்புமிகவும் சூரியன் கீழ்த்திசையில் உதித்தனனே. எ - று.

(வி - ரை.) மழையினனைந்து என்பதற்கு மழையினால் நனைந்து எனினுமாம்: கோட்பட்டார் - கொள்ளப்பட்டவர், அதாவது மறைக்கப்பட்டவர்-காட்டில் மறைந்தனராதலால் என்னுற்றார் என்பதற்கு என்னதுன்பமடைந்தார் என்றுரை கூறலாயிற்று, பருவம் - பேரரும்பாயிருக்குஞ்சமயம். மனா-தாமரை யென்பதன் முதற்குறை விகாரம். மனாகண் முகமலர என்பதற்கு மாதர் கண்ணுமுகமும்போல மலரஎன்றுரைத்தலுமொன்று. பற்று - நிற்றற்குரிய ஆதரவு. வெய்யோன்-வெம்மையையுடையோன். (உகஅ)

கல்வி யறிவு மேலிடலுங் கரிசில் பல்லோ ரியற்றியநூற்
சொல்லும் பொருளும் வெளிப்படையாய்த் தோன்ற விளங்கு வன [போல
வல்லை யனுக்கு மிரவியெழ வாங்காங் கமரு மரும்பொருள்க
ளொல்லை யின்ன வின்னவென வுணரு மாறு விளங்கினவே.

(ப - ரை.) கல்வி அறிவுமேலிடலும் - கல்வியறிவானது அதிகரித்தலும், கரிசுஇல் - குற்றமில்லாத, பல்லோர் - பலசான்றோர், இயற்றிய - செய்த, நூல் - நூல்களிலுள்ள, சொல்லும்பொருளும் - சொற்களும் அவற்றின் பொருள்களும், வெளிப்படையாய் தோன்றவிளங்குவனபோல - வெளிப்படையாய்க் காணும்படி விளங்குவனபோல, அல்லை அனுக்கும் - இருட்டை வருத்துகிற, இரவிஎழ - சூரியன் உதித்தலும், ஆங்கு ஆங்கு - அவ்வவ்விடங்களில், அமரும் - அமைந்திருக்கிற, அரும்பொருள்கள் - அருமையாகிய பொருள்கள்யாவும், ஒல்லை - விரைவாக, இன்னஇன்ன என - இன்னின்ன பொருள்களென்று, உணருமாறு - அறியும்படியாக, விளங்கினவே - காணப்பட்டனவே. எ - று.

(பொ - ரை.) கல்வியறிவானது அதிகரித்தலும், குற்றமில்லாத பல சான்றோர் செய்த நூல்களிலுள்ள சொற்களும் அவற்றின் பொருள்களும் வெளிப்படையாய்க்காணும்படி விளங்குவனபோல இருட்டை வருத்துகிற சூரியன் உதித்தலும் அவ்வவ்விடங்களில் அமைந்திருக்கிற அருமையாகிய பொருள்கள்யாவும் விரைவாக இன்னின்ன பொருள்களென்று அறியும்படியாகக் காணப்பட்டனவே. எ - று.

(வி - ரை.) கல்வியறிவு - கல்வியினாலுண்டாகிய அறிவு. இது உருபும்பயனுமுடன் றொக்கதொகை, கரிசு - ஐயம்திரிபு என்னுங்குற்றம். சொல்லும்பொருளும் என்னும் உம்மைகள் எண்ணும்மைகள். வெளிப்படையாய்- எளிதாக. அனுக்கும் - பிறவினை, தன்வினையில் அனுங்கும் எனவரும். ரவி என்னும் வடசொல் முதலில் இகரம்பெற்று இரவியென வந்தது. (உகக)

வெய்யோ னெழுந்த வப்பொழுதே விமல வாசா ரியனனை
செய்யோன் மறைச்சாந் தீபமுனி தேடி நம்மை முகம்புலரா
வையோ பிரம சாரிகளெங் கடைந்தா ரென்னுற் றனர்கொலெனா
நையோ கையின்வந் தக்காட்டு ணண்ண நாமுங் கண்டனமே.

(ப - ரை.) வெய்யோன் - சூரியன், எழுந்த - உதித்த, அப்பொழுதே - அப்போதே, விமலம் ஆசாரியன்ஆன - பரிசுத்தத்தன்மையுள்ள ஆசாரியனாகிய, செய்யோன்-செம்மைக்குணமுள்ளவனாய், மறை-வேதங்களில் வல்லவனாகிய, சாந்தீபமுனி - சாந்தீபமுனிவன், நம்மைதேடி - நம்மிருவரையும் தேடிக்கொண்டு, முகம்புலரா - முகம்வாடி, ஐயோ - அந்தோ, பிரமசாரிகள் - (நமதுசீடர்களாகிய) பிரமசாரிகள், எங்கு அடைந்தார்கொல் - எங்கேபோயினார்களோ, என் உற்றனர்கொல் - என்ன துன்பமடைந்தார்களோ, என்று - என்று, நைஒகையின்வந்து - அழிந்த சந்தோஷத்தோடு வந்து, அ காட்டுள் நண்ண - அந்தக்காட்டில் பிரவேசிக்க, நாமும் கண்டனமே - நாமும் பார்த்தோமே. எ - று.

(பொ - ரை.) சூரியன் உதித்த அப்போதே பரிசுத்தத்தன்மையுள்ள ஆசாரியனாகிய செம்மைக்குணமுள்ளவனாய் வேதங்களில் வல்லவனாகிய சாந்தீபமுனிவன் நம்மிருவரையும் தேடிக்கொண்டு முகம்வாடி, அந்தோ, (நமது சீடர்களாகிய) பிரமசாரிகள் எங்கே போயினார்களோ, என்ன துன்பமடைந்தார்களோவென்று அழிந்த சந்தோஷத்தோடு வந்து அந்தக்காட்டில் பிரவேசிக்க நாமும்பார்த்தோமே. எ - று.

(வி - ரை.) புலரா - செய்யா என்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம். கொல் அடைந்தார் என்பதனோடுஞ் சேர்க்கப்பட்டது. நைஒகையின் - நைந்தசந்தோஷத்தோடு - விசனத்தோடு என்றபடி. நண்ணக்கண்டனமே எனவியையும். விமலம், ஆசாரியன், சாந்தீபன், முனி என்பன வடசொற்கள். பிரமசாரி-ப்ரஹ்மசாரி என்னும் வடசொற்றிரிபு. இதற்கு ப்ரஹ்மசர்யவ்ரதத்தோடிருந்து வேதம்படிக்கும் மாணுக்கன் என்பது பொருள்.

கண்டு வணக்கஞ் செய்துநின்ற காலை யளவில் கருணையனாய்த்
தொண்டு புரிமா ணுக்கர்களிற் றூயீர் நும்மைப் போல்பவரார்
மண்டு மறைசொ லென்னிமித்த மழையி னனைந்தீர் வருத்தமிகக்
கொண்டு நின்றீர் கற்றகடன் கொடுத்தீர் விடுத்தீர் கோதனைத்தும்.

(ப - ரை.) கண்டு - பார்த்து, வணக்கம்செய்து நின்றகாலை - நமஸ்காரம் பண்ணிநின்ற சமயத்தில், அளவுஇல் - அளவற்ற, கருணையன்ஆய் - கருணையுள்ளவனாகி, (நம்மைநோக்கி) தொண்டுபுரி - (எனக்கு) தொண்டு செய்கிற, மாணுக்கர்களில் - மாணுக்கர்களுள்ளே, தூயீர் - பரிசுத்தர்களே, நும்மை போல்பவர் - உங்களை யொத்தவர்கள், ஆர் - யாரிருக்கிறார்கள், மண்டு-மிகுதியாகிய, மறை - வேதங்களை, சொல் - (உங்களுக்கு) கற்பிக்கிற, என் நிமித்தம் - என்பொருட்டு, மழையில் நனைந்தீர் - மழையில் நனைந்தீர்கள், (அப்படி நனைந்ததனால்) மிக - மிகுதியாக, வருத்தம்கொண்டு நின்றீர்-துன்பமடைந்து நின்றீர்கள், கற்றகடன் கொடுத்தீர் - (என்னிடத்தில்) கற்றகடனைச்செலுத்தி விட்டீர்கள், கோது அனைத்தும் விடுத்தீர்-குற்றங்களெல்லாவற்றையும் ஒழித்து விட்டீர்கள். எ - று.

(பொ - ரை.) பார்த்து நமஸ்காரம் பண்ணிநின்ற சமயத்தில் அளவற்ற கருணையுள்ளவனாகி (நம்மை நோக்கி எனக்கு) தொண்டு செய்கிற மாணாக்கர்களுள்ளே பரிசுத்தர்களே, உங்களை யொத்தவர்கள் யாரிருக்கிறார்கள், மிகுதியாகிய வேதங்களை (உங்களுக்கு) கற்பிக்கிற என்பொருட்டு மழையில் நனைந்தீர்கள், (அப்படி நனைந்ததனால்) மிகுதியாகத் துன்பமடைந்து நின்றீர்கள், (என்னிடத்தில் கற்றகடனைச் செலுத்திவிட்டீர்கள், குற்றங்களெல்லாவற்றையும் ஒழித்துவிட்டீர்கள். எ - று.

(வி - ரை.) தூயீர்நும்மை-பரிசுத்தர்களாகிய உங்களை யெனினுமாம். ஆர்என்னும் வினா ஒருவருமில்லை யென எதிர்மறைப்பொருள் குறித்தது. மண்டு - சிறந்த எனினுமாம். (௨எக)

சீரார் நுமக்குக் கல்விபோற் செல்வப் பொருளுஞ் செழுந்தொடையற்
காரார் கூந்தன் மனைவியருங் கனிவாய் மழலை மைந்தர்களு
நாரார் தருசுற் றமும்வாழு நாளு மதிக மாகுகவென்
றேரார் தருநல் லாசிபகர்ந் தில்லி னமைக்கொண் டேகினனே.

(ப - ரை.) சீர்ஆர் நுமக்கு - சிறப்புப்பொருந்திய வுங்களுக்கு, கல்வி போல் - கல்விப்பொருளைப்போலவே, செல்வப்பொருளும் - செல்வப்பொருளும், செழுதொடையல் - செழுமையாகிய பூமாலையணிந்த, கார்ஆர் கூந்தல் - கருமைமிகுந்த கூந்தலையுடைய,மனைவியரும் - மனைவிமார்களும்,வாய்கனிமழலை மைந்தர்களும்-வாயில்கனியோல மதுரமாகிய மழலைச்சொற்களையுடைய புதல்வரும், நார் ஆர்தரு சுற்றமும் - அன்புமிகுந்த சுற்றத்தாரும், வாழும் நாளும் - வாழ்நாளும், அதிகம் ஆகுகஎன்று - அதிகமாகுகவென்று, ஏர் ஆர்தரு - அழகுபொருந்திய, நல்ஆசிபகர்ந்து - நல்ல ஆசிகூறி, நம்மை - நம்மை, கொண்டு -அழைத்துக்கொண்டு,இல்லில் ஏகினனே - வீட்டுக்குப் போனானே. எ - று.

(பொ - ரை.) சிறப்புப்பொருந்திய வுங்களுக்குக் கல்விப்பொருளைப் போலவே செல்வப்பொருளும், செழுமையாகிய பூமாலையணிந்த கருமை மிகுந்த கூந்தலையுடைய மனைவிமார்களும், வாயில் கனிபோல மதுரமாகிய மழலைச் சொற்களையுடைய புதல்வரும், அன்புமிகுந்த சுற்றத்தாரும், வாழ்நாளும் அதிகமாகுகவென்று அழகுபொருந்திய நல்லஆசி கூறி, நம்மையழைத்துக்கொண்டு வீட்டுக்குப் போனானே. எ - று.

(வி - ரை.) செல்வப்பொருள் என மேல்வருதலால் கல்விபோல் என்பதற்குக் கல்விப்பொருளைப்போல என்றுரை கூறலாயிற்று. செல்வப்பொருளும் மனைவியரும் மைந்தர்களும் சுற்றமும் வாழ்நாளும் என்பவற்றும்மைகள் எண்ணும்மைகள். தொடையல்காரார் என்பதற்கு, பூமாலையணிந்த இருட்டைப்போன்ற கருமைமிகுந்த என்றுரைத்தலுமாம. கனி - கனிந்த எனினுமாம். வாழுநாள் - ஆயுள். (௨எ௨)

இன்ன வெல்லா முளத்துநினைந் திருக்கின் றாயோ நீயென்னப்
பன்ன வரிய மறைகதறும் பகவ னுண்மை தோற்றாம

னுன்ன வரிய கைதவனு யொருமா னிடவன் றனைப்போல
நன்னர் வினவிப் பின்னுமிது நயந்து கூறத் தொடங்கினனால்.

(ப - ரை.) இன்னஎல்லாம் - இவையாவும், நீஉள்ளத்துநினைந்திருக்கின்றாயோஎன்ன-நீஉன்மனத்தில்நினைத்துக் கொண்டிருக்கிறாயோவென்று, பன்னஅரிய - சொல்லுதற்கரிய, மறைகதறும்பகவன் - வேதங்கள் முழங்குகின்ற ஸ்ரீக்ருஷ்ண பகவானானவன், உண்மைதோற்றாமல் - (தனது) உண்மை நிலைவெளிப்படாமல், உன்னஅரிய - நினைத்தற்கரிய, கைதவன்ஆய் - வஞ்சகனாய், ஒருமானிடவன் தன்னைப்போல - ஒருமனிதன்போல, நன்னர் வினவி - நன்றாகவினவி, பின்னும் - மேலும், இது - இதனை, நயந்துகூற தொடங்கினன் - விரும்பிச்சொல்லத் தொடங்கினான். எ - று.

(பொ - ரை.) இவையாவும் நீஉன்மனத்தில் நினைத்துக் கொண்டிருக்கிறாயோவென்று, சொல்லுதற்கரிய வேதங்கள் முழங்குகின்றஸ்ரீக்ருஷ்ண பகவானானவன் (தனது) உண்மைநிலை வெளிப்படாமல், நினைத்தற் கரியவஞ்சகனாய் ஒருமனிதன்போல நன்றாகவினாவி, மேலும் இதனைவிரும்பிச் சொல்லத்தொடங்கினான். எ - று.

(வி - ரை.) இன்னவெல்லாம் என்றது இந்தச்செய்திகளை யெல்லாம் என்றபடி. நினைந்திருக்கின்றாயோ என்றது மறவாதிருக்கிறாயோ என்றபடி. மறைகதறுதலாவது எல்லா விடங்களிலும் கண்ணபிரானது ஸ்வரூபரூப குணவிபூதிகளையே உத்கோஷித்தல். கைதவம் - வஞ்சனை, கைதவன் - வஞ்சனையுள்ளவன். இதுஎன்றது அடியில் வருவதாகிய இந்தச்செய்தி யென்றபடி. (உஎ௩)

மேற்படி - வேறு.

பந்தனை யகன்ற மேலோய் பற்பல நாட்குப் பின்பு
வந்தனை யெனக்கென் கொண்டு வந்தனை யதனை யின்னே
தந்தனை யாயி னன்று தருசுவைப் பக்க ணத்தென்
சிந்தனைநின்றதென்றான்றெரிவரும்வஞ்சக்கள்வன்.

(ப - ரை.) பந்தனை அகன்றமேலோய் - ஆசாபந்தம் நீங்கினமேலோனே, பற்பல நாட்குபின்பு - பலப்பல நாள்களுக்குப்பிறகு; வந்தனை - (என்னிடத்திற்கு) வந்தாய், (வந்தநீ எனக்கு - என்பொருட்டு, என்கொண்டுவந்தனை - என்னபொருள் கொண்டுவந்தாய், அதனை - அந்தப்பொருளை, இன்னே - இப்பொழுதே, தந்தனை ஆயின் - கொடுத்தாயானால், நன்று - நன்மையாகும், தரு - (உன்னால்) கொடுக்கப்படுகிற, சுவை - உருசியுள்ள, பக்கணத்து - சிற்றுண்டியினிடத்தில், என்சிந்தனைநின்றது - என்மனம்பொருந்தியிருக்கின்றது, என்றான் - என்றுசொன்னான், (அவன்யாரெனின்) தெரிவு அரு-அறிதற்கருமையாகிய, வஞ்சம்-வஞ்சனையுள்ள, கள்வன், மாயோனாகிய ஸ்ரீகண்ணபிரான். எ - று.

(பொ - ரை.) ஆசாபந்தம் நீங்கினமேலோனே, பலப்பலநாள்களுக்குப் பிறகு (என்னிடத்திற்கு) வந்தாய், (வந்தநீ) என்பொருட்டு என்னபொருள்

கொண்டுவந்தாய், அந்தப்பொருளை இப்பொழுதே கொடுத்தாயானால் நன்மையாகும், (உன்னால்) கொடுக்கப்படுகிற உருசியுள்ள சிற்றுண்டியினிடத்தில் என்மனம்பொருந்தி யிருக்கின்றது என்றுசொன்னான், (அவன்யாரெனின்) அறிதற் கருமையாகிய வஞ்சனையுள்ள மாயோனாகிய ஸ்ரீகண்ணபிரான். எ - று.

(வி - ரை.) பந்தனை - பிணிப்பு, (கட்டு). பக்கணம் - பக்ஷணம் என்னும் வடசொற்றிரிபு. ஆச்சர்யகுண சேஷ்டிதங்களை யுடையவன் என்பது தோன்ற, 'தெரிவருவஞ்சகக்கள்வன்' என்றார். (உஎச)

இனியசிற் றுணவே தேனு மின்றிநீ வருவாய் கொல்லோ
வினியநின் னுள்ள மின்றே யெண்ணியா னறிதல் வேண்டு
மினியநின் மனைவி வாளா வேகிவா வென்ப ளோமற்
றினியவெற் கன்றி யார்க்குக் கொண்டுவந் திருக்கின் றாயே.

(ப - ரை.) இனிய - இனிதாகிய, சிற்றுணவு - சிற்றுண்டி, ஏதுஎனும் இன்றி - யாதாயினுமில்லாமல். நீவருவாய்கொல்லோ -நீவருவாயோ, இனிய- இனிதாகிய, நின்உள்ளம் - உன்மனத்தை, இன்றே-இன்றுதானே,எண்ணி- ஆலோசித்து, யான்அறிதல்வேண்டும் - நான் அறியவேண்டும், இனியநின் மனைவி - (உனக்கு) இனிமையாகிய உன்மனைவியானவள், வாளா - சும்மா, ஏகிவாஎன்பளோ - போய்வாவென்று சொல்லுவளோ, (யாதேனும் கொடுத்தனுப்பியிருப்பாள், அதனை) இனியஎன்குஅன்றி - (உனக்கு) இனியநண்பனாகிய எனக்கல்லாமல், மற்றுயார்க்கு கொண்டுவந் திருக்கின்றாய் - வேறு யார்பொருட்டுக் கொண்டுவந்திருக்கிறாய். எ - று.

(பொ - ரை.) இனிதாகிய சிற்றுண்டி யாதாயினுமில்லாமல் நீவருவாயோ, இனிதாகியஉன் மனத்தை இன்றுதானே ஆலோசித்து நான்அறியவேண்டும், (உனக்கு) இனிமையாகிய உன்மனைவியானவள் சும்மாபோய் வாவென்று சொல்லுவளோ, (யாதேனும் கொடுத்தனுப்பியிருப்பாள்,அதனை) (உனக்கு) இனியநண்பனாகிய எனக்கல்லாமல்வேறுயார் பொருட்டுக்கொண்டுவந்திருக்கிறாய். எ - று.

(வி - ரை.) வருவாய்கொல்லோ என்பளோ என்பவற்றில் ஓகாரங்கள் எதிர்மறை,இன்றேயென்பதில் ஏகாரமும்அது, இளமையிற்றானே அறிவேன் என்றதாயிற்று. மற்றுபிறிதென்னும் பொருளில்வந்தது. உள்ளம் என்பதில் அம்சாரியை. இனியசிற்றுணவேதேனுமின்றி நீவருவாய் கொல்லோ என்றதுவெறுங்கை யோடே நீவரமாட்டாய் என்றபடி. (உஎரு)

திருந்தவிங் களித்தி யென்று செங்கரமலர்த்தி நீட்டப்
பொருந்தவின் பாலுண் பான்பாற் புளித்தகா டியைக்கொ டுத்திட்
டருந்திடென் றுரைத்தல் போலிவ் வவற்கொடை யென்று வாளா
விருந்தனன் குசேல மேலோ னிவனுள மறிந்த கண்ணன்.

(ப - ரை.) திருந்த - திருத்தமாக, இங்கு - இப்பொழுது, அளித்தி என்ன - (நீகொண்டுவந்த வுணவைஎனக்கு)கொடுப்பாயாகவென்றுசொல்லி, செம்கரம் - (ஸ்ரீகண்ணபிரான் தனது) சிவந்தகையை, மலர்த்திநீட்ட-விரித்துநீட்ட, குசேலன்மேலோன் - குசேலனாகிய பெரியோன், இ - இந்த, (நான்கொண்டுவந்த)அவல் - அவலை, கொடை - (ஸ்ரீகண்ணபிரானுக்குநான்) கொடுத்தல், பொருந்த - (சுவை பொருந்த, இன் - இனிய, பால் உண்பான் பால் - பாலைப்பருகு வோனிடத்தில், புளித்தகாடியை கொடுத்திட்டு-புளித்திருக்கிறகாடிநீரைக்கொடுத்து, அருந்திடுஎன்று உரைத்தல்போல்-(நீஇதனை) குடியென்று சொல்லுதல்போலும், என்று - என்றுநினைத்து, வாளாஇருந்தனன் - சும்மாஇருந்தான், (அப்பொழுது) இவன்உள்ளம் அறிந்த - இந்தக் குசேலனது மனத்தையறிந்த, கண்ணன் - ஸ்ரீகண்ணபிரான். எ - று.

(பொ - ரை) திருத்தமாக இப்பொழுது (நீகொண்டுவந்த வுணவை எனக்கு) கொடுப்பாயாகவென்று சொல்லி (ஸ்ரீகண்ணபிரான்தனது) சிவந்தகையை விரித்துநீட்ட, குசேலனாகிய பெரியோன், இந்த (நான்கொண்டுவந்த) அவலை, (ஸ்ரீகண்ண பிரானுக்குநான்) கொடுத்தல், சுவைபொருந்த இனியபாலைப் பருகுவோனிடத்தில் புளித்திருக்கிற காடிநீரைக்கொடுத்து, (நீஇதனை) குடியென்று சொல்லுதல்போலும் என்றுநினைத்துச் சும்மாஇருந்தான், (அப்பொழுது) இந்தக்குசேலனது மனத்தையறிந்த ஸ்ரீகண்ணபிரான். எ - று.

(வி - ரை.) வாங்கிஆய்ந்து கண்டுகொண்டான் எனஅடுத்தகவியில் முடியும் உண் - பொதுவினை, இதுநால்வகை யுணவுக்கும்உபயோகப்படும், போல்என்னும் பகுதியே முற்றுப் பொருளில்வந்தது. கொடை - தொழிற்பெயர். (௨எ௯)

நடலைதீர்ந் தவன்மெய்ப் போர்த்தநாள்பல கண்ட கந்தைப்
படர்தலைச் சுருக்கி வாங்கிப் பாங்குவைத் தினிதி னாய்ந்து
விடலருங் கற்பு வாய்த்த மின்னனார் வணங்குந் தெய்வந்
திடமுற முடிந்து வைத்த சிறுபொதி கண்டு கொண்டான்.

(ப - ரை.) நடலைதீர்ந்தவன் - வஞ்சனை நீங்கினவனாகிய அந்தக் குசேலமுனிவன், மெய்போர்த்த - (தனது) உடம்பின்மேல் போர்த்துக் கொண்டிருந்த, பலநாள்கண்ட - பலநாள்கழியப் பெற்ற, கந்தை - கந்தைத்துணியின், படர்தலை - பரப்பை, சுருக்கிவாங்கி - (ஸ்ரீகண்ணபிரான் தன்கைகளால்) சுருக்கியெடுத்து, பாங்குவைத்து - பக்கத்தில் வைத்துக்கொண்டு, இனிதின்ஆய்ந்து - நன்றாகஆராய்ந்து, (அதில்) விடல்அரு - நீங்குதலில்லாத, கற்புவாய்த்த - கற்புப்பொருந்திய, மின்அன்னார்வணங்கும்-மின்னற்கொடியை நிகர்த்தமாதரெல்லாரும் வணங்குதற்குரிய, தெய்வம் -தெய்வம்போல் பவளாகிய குசேலன்மனைவி, திடம்உறமுடிந்துவைத்த - உறுதியாக முடிந்துவைத்த, சிறுபொதி - சிறியமுடிப்பை, கண்டுகொண்டான் - பார்த்துவிட்டான். எ - று.



குசேலர்வைத்திருந்த அவல்முடிப்பைக், ஸ்ரீகண்ணபிரான் எடுத்து அவிழ்த்து ஒருபிடி உட்கொண்டது.

(பொ - ழி.) வஞ்சனை நீங்கினவனாகிய அந்தக்குசேல முனிவன் (தனது) உடம்பின்மேல் போர்த்துக் கொண்டிருந்த பலநாள் கழியப்பெற்ற கந்தைத்துணியின் பரப்பை (ஸ்ரீகண்ணபிரான் தன்கைகளால்) சுருக்கியெடுத்துப் பக்கத்தில் வைத்துக்கொண்டு நன்றாகஆராய்ந்து (அதில்)நீங்குதலில்லாத கற்புப்பொருந்திய, மின்னற்கொடியை நிகர்த்தமாதரெல்லாரும்வணங்குதற்குரியதெய்வம்போல்பவளாகிய குசேலன்மனைவி உறுதியாக முடிந்து வைத்தசிறிய முடிப்பைப்பார்த்துவிட்டான். எ - று.

(வி - ழி.) நடலை - கபடம், பொய், மாறுபாடு. படர்தல் - தொழிலாகுபெயர். கம்பநாட்டாழ்வார், "உமையாளொக்கும் மங்கையருச்சிக்கரம்வைக்கும் கமையாள்" என்றதை அடியொற்றி 'விடலருங்கற்பு வாய்த்தமின்னனார் வணங்குந்தெய்வம்' என்றார். நாள்பலகண்டகந்தை - பழங்கந்தை. (உஎஎ)

மலிதரு மன்பின் வந்த வண்பொதி யவிழ்த்து நோக்கி
வலிதரு மவற்று ளன்று வாய்த்தது நமக்கி தென்று
வொலிதரு கழற்கா லைய னொருபிடி யவலைக் காதல்
பொலிதர வெடுத்து வாயிற் போகட்டுக் கொண்டான் மாதோ.

(ப - ழி.) ஒலிதரு - ஒலிக்கின்ற, கழல் - வீரக்கழலைத்தரித்த, கால் - ஸ்ரீபாதத்தையுடைய, ஐயன் - இறைவனாகிய ஸ்ரீகண்ணபிரான், மலிதரும் - மிகுந்த, அன்பின்வந்த - அன்பினால் கொண்டுவரப்பெற்ற, வண்பொதி-அழகிய அந்தமுடிப்பை, அவிழ்த்துநோக்கி-அவிழ்த்துப்பார்த்து, வலிதரும்அவற்றுள் - வலிய எடுக்கப்பட்ட அந்தமுடிப்பிலுள்ளஅவல்களுள், ஒருபிடிஅவலை-ஒருபிடி யளவாகியஅவலை, நமக்குஇதுநன்று வாய்த்ததுஎன்று - நமக்கு இது நல்லதாகக் கிடைத்த தென்றெண்ணி, காதல் பொலிதரஎடுத்து - ஆசை அதிகரிக்கஎடுத்து, வாயில் போகட்டுக் கொண்டான் - வாயில் போட்டுக் கொண்டான். எ - று.

(பொ - ழி.) ஒலிக்கின்ற வீரக்கழலைத்தரித்த ஸ்ரீபாதத்தையுடைய இறைவனாகிய ஸ்ரீகண்ணபிரான் மிகுந்தஅன்பினால் கொண்டுவரப்பெற்ற அழகியஅந்த முடிப்பை அவிழ்த்துப்பார்த்து வலியஎடுக்கப்பட்ட அந்தமுடிப்பிலுள்ளஅவல்களுள்ஒருபிடியளவாகிய அவலைநமக்கு இதுநல்லதாகக்கிடைத்ததென்றெண்ணி ஆசையதிகரிக்க எடுத்து வாயில்போட்டுக்கொண்டான்.

(வி - ழி.) மலிதருமன்பின் அவிழ்த்துநோக்கி என்றியைப்பினுமமையும். போகட்டு என்பதற்குப் போகடுபெகுதி,இதுவேபோடு எனவிகாரப்பட்டு வழங்கும். புகவிடுஎன்னும் பகுதியேபோகடு எனவிகாரப்பட்டது என்பாருமுளர். என்று - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம்,இது எடுத்துஎன்னும் வினைகொண்டது. ஐஅழகாதலால் ஐயன்என்பதற்குஅழகன் எனினுமாம். மாதுஓஇரண்டும் அசைகள். இச்செய்யுளால், எம்பெருமானுக்கு அடியாரது அன்புபிரதானமேயன்றி அவரால் சமர்ப்பிக்கப்படுகிற பொருள் பிரதானமன்றென்பது இனிதுவிளங்கும். (உஎஅ)

செறிதரு சுவைத்தீ தென்றுந் தேவர்க்கு மரிய தாகு
மறிதரு விருப்பி னில்லி னமைத்ததே பழைது மன்று
குறிதரு விலைப்பாற் சென்றுகோ டலிவ் வளத்த தோவென்
றுறியளை வாரி யுண்டோ னொருபிடி யவறின் றானே.

(ப - ரை.) ஈது - இந்த அவல், செறிதருசுவைத்து-மிகுந்த சுவையை யுடையது, என்றும் - எக்காலத்தும், தேவர்க்கும் அரியது ஆகும் - தேவர் களுக்கும் கிடைப்பது அரிதாகும், அறிதருவிருப்பின் - அறியப்பட்ட விருப் பத்தோடு, இல்லத்து அமைத்ததே - வீட்டிற்செய்ததே, பழைதும் அன்று - பழையதுமல்ல, குறிதருவிலைப்பால்சென்று - குறிக்கப்பட்ட விலையிடத் திற்சென்று, கோடல் - வாங்கும் அவல், இ வளத்ததோ - இவ்வளவு உள முள்ளதோ, என்று - என்று சொல்லிக்கொண்டே, உறிஅளைவாரி உண் டோன்-உறியில் வைக்கப்பட்டிருந்த வெண்ணெயை அள்ளியுண்டோனாகிய ஸ்ரீ கண்ணபிரான், ஒருபிடி அவல்தின்றான்-ஒருபிடி அவலையுண்டருளினான்.

(பொ - ரை.) இந்த அவல் மிகுந்த சுவையையுடையது, எக்காலத் தும் தேவர்களுக்கும் கிடைப்பது அரிதாகும், அறியப்பட்ட விருப்பத்தோடு வீட்டிற்செய்ததே, பழையதுமல்ல, குறிக்கப்பட்ட விலையிடத்திற் சென்று வாங்கும் அவல் இவ்வளவுவளமுள்ளதோ என்று சொல்லிக்கொண்டே, உறி யில் வைக்கப்பட்டிருந்த வெண்ணெயை அள்ளியுண்டோனாகிய ஸ்ரீ கண்ண பிரான் ஒருபிடி அவலையுண்டருளினான். எ - று.

(வி - ரை.) சுவைத்து - குறிப்புவினைமுற்று, தேவர்க்கும் என்ற உம்மை உயர்வு சிறப்பு, அறிதருவிருப்பு - பலராலுமறியப்பட்ட விருப்பம், குறிதருவிலைப்பால் - குறிக்கப்பட்ட விலைக்கு விற்கிற இடமாகிய கடை, உறியளையென்றது திருவாய்ப்பாடியில் ஆய்ச்சியர் தத்தம் வீடுகளிலுள்ள உறிகளின்மீது வைத்திருந்த வெண்ணெயை, அளை-தயிர் எனினுமாம். வாரி யுண்டது அச்சத்தாலென்க. (உ௭௧)

முன்னுமிவ் வவலொன் றேனு முளைமுறிந் ததுவு மின்று
பன்னுமுட் டையுமின் றாகும் பட்டவங் கையுமணக்குங்
கொன்னும்வாய் செறிப்பி னம்ம குளமும்வேண் டுவதின் றென்னு
வுன்னுபல் லுலகு முண்டோ னொருபிடி யவறின் றானே.

(ப - ரை.) முன்னும் - நினைக்கத்தகுந்த, இஅவல் - இந்தஅவல்களில், ஒன்றுஎனும் - ஒருஅவலாயினும், முளை முறிந்ததுவும் இன்று - முளைமுறிந் ததுவும் இல்லை, பன்னும் முட்டையும் இன்றுஆகும் - சொல்லப்பட்ட முட் டையுமில்லையாகும், பட்ட அங்கையும் மணக்கும் - பட்டகையும் மணக்கும், கொன்னும்வாய் செறிப்பின் - கொன்னுகின்ற வாயிலிட்டால், குளமும் வேண்டுவது இன்று - வெல்லமும் வேண்டுவதில்லை, என்னு - என்று சொல் லிக்கொண்டே, உன்னுபல் உலகும் உண்டோன் - நினைத்தற்குரிய எல்லா வுலகங்களையும் உண்டவனாகிய ஸ்ரீகண்ணபிரான், ஒருபிடி அவல்தின்றான் - ஒருபிடியவலை உண்டருளினான். எ - று.

(பொ - ரை.) நினைக்கத்தகுந்த இந்த அவல்களில் ஒரு அவலாயினும் மூனைமுறிந்ததுவுமில்லை, சொல்லப்பட்ட முட்டையுமில்லையாகும், பட்டைகையும் மணக்கும், கொன்னுகின்ற வாயிலிட்டால் வெல்லமும் வேண்டுவதில்லை, என்று சொல்லிக்கொண்டே, நினைத்தற்குரிய எல்லாவுலகங்களையும் உண்டவனாகிய ஸ்ரீ கண்ணபிரான் ஒருபிடி அவலை உண்டருளினான்.

(வி - ரை.) மூனைமுறிதல் - மூனையொடிதல், முட்டை - பக்குவப்படாத அவல், அங்கை கையென்னுமாத்திரையாய் நின்றது. கொன்னுதல் - கொன்னித்தல், (குழறுதல்), அவல் சிறுவர்க்கே பெரும்பாலும் உபயோகப்படுவதென்பதுதோன்ற, 'கொன்னும்வாய் செறிப்பின்' என்றார். அம்ம - வியப்பிடைச்சொல், குளம் குடஃ என்னும் வடசொற்றிரிபு. (உஅ0)

பாங்கிரு கொடிற்றொ துக்கிப் பதமுறச் சற்றி ருத்தித்
தேங்குற மென்று மென்று சிரம்பல தரம சைத்துக்
கோங்கிள முலைப்பூங் கோதை குமுதவாய்ப் பைந்தே னூற
லோங்குமின் சுவைகொள் வாயா னொருபிடி யவறின் றானே.

(ப - ரை.) கோங்கு - கோங்கரும்புபோன்ற, இளமுலை - இளமுலையையுடைய. பூகோதை - திருமகளது, குமுதம் - செவ்வல்லி மலர்போன்ற, வாய்-வாயிலூறுகின்ற, பைதேன்-பசுந்தேனை நிகர்த்து மதுரிக்கிற, ஊறல் - அமிர்தத்தை, ஓங்கும் - மிகுந்த, இன்சுவைகொள் - இனிய சுவையுள்ளதாகக்கொண்டருளுகிற, வாயான்-திருப்பவளத்தையுடைய ஸ்ரீ கண்ணபிரான், பாங்கு - பக்கத்திலுள்ள, இருகொடிறு ஒதுக்கி - இரண்டு கதுப்பிலும் அடக்கி, பதம்உற - பதப்படும்படி, சற்று இருத்தி - சற்றுநேரம்வைத்து, தேங்கு உறமென்று மென்று - (வாய்) நிறையமென்று மென்று, பலதரம் சிரம்அசைத்து - பலதரமும் தலையையசைத்து, ஒருபிடி அவல் தின்றான் - ஒருபிடியவலையுண்டருளினான். எ - று.

(பொ - ரை.) கோங்கரும்புபோன்ற இளமுலையையுடைய திருமகளது செவ்வல்லி மலர்போன்ற வாயிலூறுகின்ற பசுந்தேனை நிகர்த்து மதுரிக்கிற அமிர்தத்தை மிகுந்த இனிய சுவையுள்ளதாகக் கொண்டருளுகிற, திருப்பவளத்தையுடைய ஸ்ரீ கண்ணபிரான் பக்கத்திலுள்ள இரண்டு கதுப்பிலும் அடக்கிப்பதப்படும்படி சற்று நேரம்வைத்து வாய்நிறைய மென்றுமென்று பலதரமும் தலையையசைத்து ஒருபிடி யவலையுண்டருளினான். எ - று.

(வி - ரை.) கொடிறு - கதுப்பு, (கன்னம்). பதம் - ஈரம், (பக்குவம்), தேங்குறல் - நிறைதல், கோங்கிள முலைப்பூங்கோதை என்பதற்கு, கோங்கரும்பு போலும் இளமுலையையும் மலராயணிந்த கூந்தலையுமுடையவளாகிய ஸ்ரீ ருக்மிணிபிராட்டி யென்றுரைப்பினுமாம், குமுதவாய்ப் பைந்தேனூறல் என்றது அதராம்ருதத்தை, சிரம், குமுதம் வடசொற்கள். (உஅக)

நாட்டுமிவ் வவல்வி ருப்ப நமக்குமிக் குள்ள தென்று
கேட்டுளாய் சொல்லோ முன்னுங் கிளந்திருப் பதுமன் றேயென்

ஏட்டுமென் மலர்ப்பூந் தொங்க லிமையவர்க் கமிர்த முன்னா
ளூட்டிய புகழின் மேலோ னொருபிடி யவறின் றானே.

(ப - ரை.) நாட்டும் - பொருந்திய, இ அவல்விருப்பம் - இந்த அவல் விருப்பம், நமக்குமிக்கு உள்ளது என்று - நமக்கு மிகுந்திருக்கின்றதென்று, கேட்டுளாய் கொல் ஓ - (நீ) கேள்விப்பட்டிருக்கிறாயோ, முன்னும் கிளந்திருப்பதும் அன்றே - முன்பும் (நாம் இது) சொல்லியிருப்பதும் அல்லவே, என்று - என்றுசொல்லி, ஏடு - இதழ்களையுடைய, மெல் - மென்மையாகிய, மலர் - மலர்களால் தொடுக்கப்பட்ட, பூ தொங்கல் - அழகிய மாலையையணிந்த, இமையவர்க்கு - தேவர்களுக்கு, அமிர்தம் - அமிர்தத்தை, முன்நாள் - முற்காலத்தில், ஊட்டிய - உண்பித்த, புகழின் மேலோன் - கீர்த்தியினால் உயர்ந்தவனாகிய ஸ்ரீ கண்ணபிரான், ஒருபிடி அவல்தின்றான் - (வாயிற்போட்டுக்கொண்ட) ஒருபிடியவலை யுண்டருளினான். எ - று.

(பொ - ரை.) பொருந்திய இந்த அவல் விருப்பம் நமக்குமிகுந்திருக்கின்றதென்று (நீ) கேள்விப்பட்டிருக்கிறாயோ, முன்பும் (நாம் இது) சொல்லியிருப்பதும் அல்லவே, என்றுசொல்லி, இதழ்களையுடைய மென்மையாகிய மலர்களால் தொடுக்கப்பட்ட அழகிய மாலையையணிந்த தேவர்களுக்கு அமிர்தத்தை முற்காலத்தில் உண்பித்த கீர்த்தியினால் உயர்ந்தவனாகிய ஸ்ரீ கண்ணபிரான் (வாயிற்போட்டுக்கொண்ட) ஒருபிடியவலை யுண்டருளினான்.

(வி - ரை.) அவல் விருப்பம் - அவல்மேலுள்ள ஆசை, நமக்கு - தனித்தன்மைப்பன்மை, கொல் ஓ இரண்டனுள் ஒன்று அசை, மற்றொன்று வினா, கிளத்தல் - சொல்லுதல், முன்னாள் என்றது திருப்பாற்கடல் கடைந்த காலத்தைக்குறித்தது, தொங்கல் - தொங்குவதாகிய மாலைக்காதலால் தொழிலாகு பெயர், இமையவர் - கண்ணிமையாதவர், இமையினிடத்தில் மூடாமையாகிய விசேடமுடையவர், இமையமலையில் வாழ்பவர். ஊட்டு என்னும் பிறவினைக்குத் தன்வினை உண், தின்னல் - மென்றுட்கொள்ளல். (உஅஉ)

அரியவன் பினிற்கொ டுத்த விழிந்ததா யினுஞ் சிறந்த
திரியுமன் பினிற்கொ டுத்த விழிந்ததே சிறந்த தேனும்
பெரியவர் புகழப் பட்ட பெருந்தவக் குசேல மேலோ
னுரியவன் பினையுங் கூட்டி யொருபிடி யவறின் றானே.

(ப - ரை) அரிய - அருமையாகிய, அன்பினில் கொடுத்தது - அன்பினால் கொடுக்கப்பட்டபொருள், இழிந்தது ஆயினும் - இழிந்ததானாலும், சிறந்தது - (அது) சிறந்த பொருளேயாகும், இரியும் அன்பினில் - நீங்கின அன்பினால், கொடுத்தது - கொடுக்கப்பட்ட பொருள், சிறந்தது எனும் - சிறந்ததானாலும், இழிந்ததே - (அது) இழிந்த பொருளேயாகும், (இதற்கு உதாரணமாக ஸ்ரீ கண்ணபிரான்) பெரியவர் புகழப்பட்ட - பெரியோர்களால் புகழப்பட்ட, பெருதவம் - மிக்க தவத்தினையுடைய, குசேலன் மேலோன்-குசேலனாகிய பெரியோனது, உரிய அன்பினையும் கூட்டி - உரிமை

யாகிய அன்பையும் சேர்த்து, ஒருபிடி அவல் தின்றான் - ஒருபிடி அவலை உண்டருளினன். எ - று.

(பொ - ரை.) அருமையாகிய அன்பினால் கொடுக்கப்பட்ட பொருள் இழிந்ததானாலும் (அது) சிறந்த பொருளேயாகும், நீங்கின அன்பினால் கொடுக்கப்பட்ட பொருள் சிறந்ததானாலும், (அது) இழிந்த பொருளேயாகும், (இதற்கு உதாரணமாக ஸ்ரீ கண்ணபிரான்) பெரியோர்களால் புகழப்பட்ட மிக்க தவத்தினையுடைய குசேலனாகிய பெரியோனது உரிமையாகிய அன்பையும் சேர்த்து ஒருபிடி அவலை உண்டருளினான். எ - று.

(வி - ரை.) குசேலன் மிகுந்த அன்போடு கொடுத்த அவலை இழிந்ததாக நினையாமல் சிறந்ததாக நினைத்து ஸ்ரீ கண்ணபிரான் அமுது செய்தருளினன் என்னும் சிறப்புப்பொருளை, 'அரிய அன்பினிற் கொடுத்ததிழிந்ததாயினுஞ் சிறந்தது' என்னும் பொதுப்பொருளால் விளக்கினார், இது வேற்றுப்பொருள் வைப்பணி, இரண்டாமடி, முதலடியிற்கூறிய பொதுப்பொருளை எதிர்மறை முகத்தால் விளக்கிகின்றது கீழ்ப்பாட்டில் 'ஒருபிடியவல் தின்றான்' எனத்தன்மை நவிற்சியணியாகக் கூறியதையே இந்தப்பாட்டில் வேறு அணியாக விவரித்து அநுவதித்தார் ஆதலால் இது கூறியது கூறல் என்னுங்குற்றமாகாது, இதற்கு இரண்டாவது ஒருபிடி யவலெடுத்துத்தின்றான் என்றுரைக்க இடமில்லை, 'மற்றொரு பிடியெடுத்து வாயிடப்போகுங் காலை உருக்குமணி தடுத்திட்டாள்' என மேல்வருதல்காண்க. இரியுமன்பு - அன்பில்லாமல், குசேலமேலோன் - பண்புத்தொகை. (உஅரு)

மற்றொரு பிடியெ டுத்து வாயிடப் போகுங் காலை
முற்றிழைத் திருவு ருக்கு மணியெனு முத்த மூரற்
பொற்றொடிப் பூங்கொம் பன்னாள் பொருக்கென வோடி வந்து
கற்றவர் புகழ்தன் கேள்வன் கரத்தினைப் பிடித்துக் கொண்டாள்.

(ப-ரை.) (ஸ்ரீ கண்ணபிரான் இப்படி யொருபிடியவலுண்டபிறகு) மற்று ஒருபிடி எடுத்து - வேறொருபிடி யவலையெடுத்து, வாய் இடபோகும் காலை - வாயிற்போட்டுக்கொள்ளப் போகுஞ்சமயத்தில், முற்றுஇழை - (தொழில்) முற்றின ஆபரணங்களையணிந்த, திரு - சிறந்த, உருக்குமணி என்னும் - ருக்மிணியென்று சொல்லப்பட்ட, முத்தம் மூரல் - முத்துப்போன்ற பற்களையும், பொன்தொடி - பொன்வளையலையுமுடைய, பூகொம்பு அன்னாள் - பூங்கொடிபோல்பவளாகிய மனைவி, பொருக்கென ஓடிவந்து - விரைவாயோடிவந்து, கற்றவர்புகழ் - கற்றோரால் புகழப்படுகிற, தன் கேள்வன் - தனது நாயகனாகிய ஸ்ரீ கண்ணபிரானது, கரத்தினை-கையை, பிடித்துக்கொண்டாள் - (அவலை வாயிற்போட்டுக் கொள்ளாதபடி தன் கையினால்) பிடித்துக்கொண்டாள். எ - று.

(பொ - ரை.) (ஸ்ரீகண்ணபிரான் இப்படியொருபிடியவலுண்டபிறகு) வேறொரு பிடியவலையெடுத்து வாயிற்போட்டுக் கொள்ளப்போகுஞ் சமயத்

தில் (தொழில்) முற்றின ஆபரணங்களையணிந்த சிறந்த ருக்மணியென்று சொல்லப்பட்ட, முத்துப்போன்ற பற்களையும் பொன்வளையலையுமுடைய பூங்கொடி போல்பவளாகிய மனைவி விரைவாயோடி வந்து கற்றோரால் புகழப்படுகிற தனது நாயகனாகிய ஸ்ரீ கண்ணபிரானது கையை (அவலைவாயிற் போட்டுக்கொள்ளாதபடி தன் கையினால்) பிடித்துக்கொண்டாள். எ - று.

(வி - ரை.) பிடி-அவலுக்கு முகத்தலளவையாகுபெயர். முத்து வெண்மை ஒளி அழகுகளால் பல்லுக்கு உவமையாயிற்று, முத்தமூரல் என்றதனால் அவள் முகம் எப்பொழுதும் புன்சிரிப்போடு கூடியிருக்கும் என்பது பெறப்பட்டது, தொடி - ஒருவகைக்கைவளை யெனினுமாம், பூங்கொம்பு என்பதில், பூ - கண் கை கால் முகம் வாய் முதலிய அவயவங்களுக்கும், கொம்பு மென்மையாகிய வடிவத்துக்கும் உவமையாகக்கொள்க, பொருக்கென, விரைவுக்குறிப்பு, கேள்வன் - கேண்மையையுடையவன், கேண்மை - கேளாந் தன்மை, (நண்பு, அன்பு,) கேள்வன் என்பதில் வ் பெயரிடைநிலை. (உஅச)

நெய்யடை கவளங் கொள்ளு நெடுங்கடக் களிற்றின் கையைத்
தெய்யவார்த் தோடி வந்தோர் சிறுபிடி பிடித்தல் போன்ற
தையநுண் ணிடைக்க லாப மடிச்சிலம் பலம்ப வோடிப்
பொய்யிலான் கையைத் தேவி பொருக்கெனப் பிடித்த தோற்றம்.

(ப - ரை.) ஐயம் - சந்தேகத்துக்கிடமாகிய, நுண் இடை - நுண்ணிய இடையிலணிந்த, கலாபம் - அரைப்பட்டிகையும், அடி சிலம்பு - பாதங்களிலணிந்த சிலம்புகளும், அலம்ப - சத்திக்கும்படி, ஓடி - ஓடிவந்து, தேவி-ருக்மிணீதேவியானவள், பொய் இலான் - அழிவில்லாதவனாகிய ஸ்ரீகண்ணபிரானது, கையை - திருக்கரத்தை, பொருக்கென - விரைவாக, பிடித்த தோற்றம் - பிடித்துக்கொண்ட காட்சியானது, ஓர் சிறு பிடி - ஒரு சிறிய பெண்யானை, ஆர்த்து ஓடிவந்து - ஆரவாரித்து ஓடிவந்து, நெய் அடை கவளம் கொள்ளும் - நெய்யோடுகூடிய கவளத்தைக்கொள்ளுகிற, நெடு - நெடுமையாகிய, கடம் களிற்றின் கையை - (ஒரு) மதயானையின் கையை, பிடித்தல் போன்றது - பிடித்துக்கொள்ளுதலை நிகர்த்திருந்தது. எ - று.

(பொ - ரை.) சந்தேகத்துக்கிடமாகிய நுண்ணிய இடையிலணிந்த அரைப்பட்டிகையும் பாதங்களிலணிந்த சிலம்புகளும் சத்திக்கும்படி ஓடிவந்து, ருக்மிணீதேவியானவள் அழிவில்லாதவனாகிய ஸ்ரீ கண்ணபிரானது திருக்கரத்தை விரைவாகப் பிடித்துக்கொண்ட காட்சியானது, ஒரு சிறிய பெண்யானை ஆரவாரித்து ஓடிவந்து நெய்யோடுகூடிய கவளத்தைக்கொள்ளுகிற நெடுமையாகிய ஒரு மதயானையின் கையைப்பிடித்துக்கொள்ளுதலை நிகர்த்திருந்தது. எ - று.

(வி-ரை.) நெய் அடை கவளம் - நெய்சேர்ந்த சோற்றுத்திரளை. கடம்-மதம். களிறு - ஆண்யானை. தெய்ய - இசைநிறை. ஐயம் - உண்டோ இன்றோ என்னும் சந்தேகம். ஐய நுண்ணிடை - அழகிய நுண்ணிடை

யெனினுமாம். கலாபம் - பதினாறுகோவையுள்ள அரைப்பட்டிகை. சிலம்பு-முதனிலைத்தொழிலாகுபெயர். சிலம்புதலையுடையது என்பது பொருள். சிலம்புதல் - ஒலித்தல். ஸ்ரீ கண்ணபிரான் ' மூவர்காரியமுந்திருத்துமுதல்வன்'' ஆதலால் 'பொய்யிலான்' என்றார். (உஅரு)

கலிவிருத்தம்.

இருங்கி ளிப்பெய ரிருடி யின்னவா
றொருங்கு கூறலு முவந்து தாழ்ந்தெழீஇப்
பருங்கை மால்வரைப் படையு ழக்குபு
பொருங்கை வேலினன் புகறன் மேயினன்.

(ப - ரை.) இரு - பெருமைவாய்ந்த, கிளிப்பெயர் - கிளியின் பெயரையுடைய, இருடி - சுகரிஷியானவன், இன்னவாறு - இந்தப்பிரகாரம், ஒருங்குகூறலும் - முற்றுஞ் சொல்லுதலும், (பகையரசரது) பருகை - பெரிய துதிக்கையினையுடைய, மால் வரை படை - பெரிய மலைபோன்ற யானைப்படையை, உழக்குபு - கலக்கி, பொரும் - போர்செய்கிற, கை வேலினன் - கையில் வேற்படையை யுடையவனாகிய பரீக்ஷித்துமகாராஜன், உவந்து தாழ்ந்து எழீஇ - மனமகிழ்ந்து வணங்கி யெழுந்துநின்று, புகல்தல் மேயினன் - சொல்லத்தொடங்கினன். எ - று.

(பொ - ரை.) பெருமைவாய்ந்த கிளியின் பெயரையுடைய சுகரிஷியானவன் இந்தப்பிரகாரம் முற்றுஞ் சொல்லுதலும், (பகையரசரது) பெரிய துதிக்கையினையுடைய பெரிய மலைபோன்ற யானைப்படையைக் கலக்கிப் போர்செய்கிற, கையில் வேற்படையையுடையவனாகிய பரீக்ஷித்துமகாராஜன் மனமகிழ்ந்து வணங்கி யெழுந்துநின்று, சொல்லத்தொடங்கினன். எ - று.

(வி - ரை.) சுகம் - கிளி. 'கிளிப்பெயரிருடி' என்றமையால் சுகரிஷியெனப் பொருளுரைக்கலாயிற்று. இரு என்ற விசேடணம் இருடியை விசேடித்தது. உவந்து என்னும் இறந்தகாலவினையெச்சத்திற்குப் பகுதி உவ. எழீஇ - சொல்லிசை யளபெடை. மால் பரு கை வரை என நிறுத்தி, மதமயக்கம் வாய்ந்த பெரிய கைம்மலையென்றுரைப்பினுமாம். கைம்மலை-யானை. நால்வகைப்படைகளுள் சிறந்தது யானைப்படையாதலாலும், அதனை உழக்குபு பொரும் என்றமையாலும், ஏனைய படைகளை உழக்குதல் சொல்லாமே யமையும். உழக்குபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம், இது பொரும் என்னும் வினைகொண்டது. புகறல் - சொல்லல். (உஅசு)

என்ன வற்புத மெடுத்து ரைத்தனை
பன்னு நாயகன் பரிவிற் றுய்த்திட
றன்னை யூறுறத் தடுக்கு மாதரார்
நன்னர் நீரரோ நவையில் கேள்வியாய்.

(ப - ரை.) நவை இல் கேள்வியாய் - குற்றமற்ற நூற்கேள்வியையுடையவனே, என்ன அற்புதம் எடுத்து உரைத்தனை - என்ன ஆச்சரிய

மான செய்தியை எடுத்துச்சொல்லினை, டன்னும் நாயகன் - புகழ்தற்குரிய கணவன், பரிவின் - ஆசையோடு, துய்த்திடல் தன்னை - உண்பதை, ஊறு உறதடுக்கும் - இடையூறுண்டாகத்தடுக்கிற, மாதரார் - மாதர், நன்னர் நீரரோ - நற்குணமுடையரோ. எ - று.

(பொ - ரை) குற்றமற்ற நூற்கேள்வியையுடையவனே, என்ன ஆச்சரியமான செய்தியை எடுத்துச்சொல்லினை, புகழ்தற்குரிய கணவன் ஆசையோடு உண்பதைஇடையூறுண்டாகத்தடுக்கிறமாதர்கள்நற்குணமுடையரோ.

(வி - ரை.) அத்புதம் என்னும் வடசொல் அற்புதம் எனத்திரிந்து வந்தது, பரிவின் என்பதில் ஐந்தனுருபாகிய இன் மூன்றுவதன் பொருளில் வந்தது, துய்த்திடல் துய்த்தல் என்னும் ஒரு சொன்னீர்மைத்து, துய்த்திடல் என்பதற்குப்பகுதி துய்த்திடு, துய்த்தல் என்பதற்குப் பகுதி துய், துய்த்திடறன்னை என்பதில் தன் சாரியை, ஊறு - தடை, இதனைவிக்நம் என்பர் வடநூலார், நன்னர் - நன்மை, நீர் - குணம், 'நவையில் கேள்வியாய்' சுகமுனிவனை நோக்கினவிளி. (உஅஎ)

கடுத்த கார்விடங் கயிலைக் கண்ணுத
லெடுத்துண் காலையு மிடத்து மேவிய
தொடுத்த பூங்குழற் றோகை மாமயி
றடுத்த தில்லையே சாற்று மேன்மையோய்.

(ப - ரை.) சாற்றும் - (யாவரும் புகழ்ந்து) சொல்லுதற்குரிய, மேன்மையோய் - மேன்மையை யுடையவனே, கயிலை - கயிலாயமலையில் எழுந்தருளியிருக்கிற, கண்ணுதல்-நெற்றிக் கண்ணனுகிய சிவபெருமான், கடுத்த- வேகத்தையுடைய, கார்விடம் - கரியநஞ்சத்தை, எடுத்து உண் காலையும் - எடுத்துண்ணுஞ் சமயத்திலும், இடத்துமேவிய - (அவனது) இடப்பாகத்தில் தங்கிய, தொடுத்தபூ - மாலையாகத்தொடுத்த மலரையணிந்த, குழல் - கூந்தலையுடைய, தோகை - கலாபத்தோடு கூடிய, மயில் - அழகிய மயில்போல் வாளாகிய உமாதேவியானவள், தடுத்தது இல்லையே-தடைசெய்ததில்லையே.

(பொ - ரை.) (யாவரும் புகழ்ந்து) சொல்லுதற்குரிய மேன்மையை யுடையவனே, கயிலாய மலையில் எழுந்தருளியிருக்கிற நெற்றிக் கண்ணனுகிய சிவபெருமான் வேகத்தையுடைய கரியநஞ்சத்தை எடுத்துண்ணுஞ் சமயத்திலும் (அவனது) இடப்பாகத்தில் தங்கிய, மாலையாகத்தொடுத்த மலரையணிந்த கூந்தலையுடைய கலாபத்தோடு கூடிய அழகிய மயில் போல்வாளாகிய உமாதேவியானவள் தடைசெய்ததில்லையே. எ - று.

(வி - ரை.) கடுத்தல் - வேகமுடைத்தாதல், விருவிருத்தல் எனினுமாம், இது விறுவிறுத்தல் எனவும் வழங்கும், நஞ்சுக்கு நிறம் கருமை யாதலால் 'கார்விடம்' என்றார், கண்ணுதல் - அன்மொழித்தொகை, எடுத்து - கையினால் அள்ளி, உண் - பொதுவினை, காலையும் என்றவும்மை இழிவு சிறப்பு, மயில்-உவமையாகு பெயர். சாற்று - சொல்வாயாக எனினுமாம். இல்லையே என்னும் ஏகாரம் இரக்கப்பொருளது, கடுத்தவிடம் கார்விடம் என்றியைக்க, இடத்துமேவிய மயில் எனவியையும். சாற்று என்பதற்கு நீ யென்னும் எழுவாய் வருவித்துரைத்துக்கொள்க. (உஅஅ)

கணவன் றுய்த்திடக் கருதே வற்றையு
மிணர்மென் கூந்தலா ரெடுத்தெ டுத்தளித்
தணவ நின்றுப சரிப்ப தல்லது
குணமி லாரெனத் தடுத்தல் கொள்கையே.

(ப - ரை.) கணவன் - நாயகன், துய்த்திட - உண்ணும்படி, கருது எவற்றையும் - (அவன்) விரும்புகிற எல்லாவுணவுகளையும், இணர்மெல் கூந்தலார் - பூங்கொத்துக்களையணிந்த கூந்தலையுடையவராகிய மாதர், எடுத்து எடுத்து அளித்து - எடுத்தெடுத்துக்கொடுத்து, அணவ நின்று - கிட்டநின்று, உபசரிப்பது அல்லது - உபசரித்தலேயன்றி, குணம் இலார்என - நற்குண மில்லாதவர்போல, தடுத்தல் - தடைசெய்தல், கொள்கையே - (அவரது) கொள்கையோ. எ - று.

(பொ - ரை.) நாயகன் உண்ணும்படி (அவன்) விரும்புகிற எல்லாவுணவுகளையும், பூங்கொத்துக் களையணிந்த கூந்தலையுடையவராகிய மாதர் எடுத்தெடுத்துக் கொடுத்துக் கிட்ட நின்று உபசரித்தலேயன்றி, நற்குணமில்லாதவர்போலத் தடைசெய்தல் (அவரது) கொள்கையோ. எ - று.

(வி - ரை.) துய்த்திட - ஒருசொல்லாய்த் துய்க்க வெனப்பொருள் பட்டு நின்றது, துய் - பகுதி, கருது எவற்றையும் - வினைத்தொகை நிலைத் தொடர், எவற்றையும் என வாளாகூறினும் துய்த்திட என்றகுறிப்பால் எவற்றையும் என்பதற்கு எல்லாவுணவுகளையும் எனப்பொருளுரைக்கலாயிற்று, எடுத்தெடுத்து என்னும் அடுக்கு கேட்குந்தோறும் என்னும் பொருள் குறித்தது, அணவல் - கிட்டல், அணவு - பகுதி, உபசரித்தல் - வழிபடுதல், தடுத்தல் என்னுங்குறிப்பால் குணமிலார் என்பது நற்குணமிலாதவர் எனப்பொருள்பட்டது, (தீக்குணமுடையார் என்றபடி) என - உவமவுருபு, கொள்கையே என்னும் ஏகாரம் வினா, இது எதிர்மறையுமாம். (உ௮௯)

வாயு முன்பிணி வருத்த றிந்திடு
மாயுள் வேதிய ரகற்று மொன்றனை
நாய கன்கொள நயந்து நிற்பனேற்
றீய தென்பர்பின் சிந்தை நோவரே.

(ப - ரை.) வாயுமுன்பிணி - வாயுமுதலிய நோய்களை, வருத்து அறிந்திடும் - வகுத்துணர்கின்ற, ஆயுள்வேதியர் - வைத்தியர்கள், அகற்றும் ஒன்றனை - (ஆகாதென்று) விலக்குகின்ற ஒரு பதார்த்தத்தை, நாயகன்கொள்ள - கணவன் உண்ண, நயந்து நிற்பன் எல் - விரும்பி நிற்பானாயின், (மனைவிமார்) தீயது என்பர் - (அப்படி விரும்புதல்) தீது என்று சொல்லுவர், (அந்தச்சொல்லைக்கேளாமல் உண்டு யாதாயினும் ஒரு தீங்கு நேரிட்டால்) பின் சிந்தை நோவர் - பிறகு மனம் வருந்துவர்கள். எ - று.

(பொ - ரை.) வாயுமுதலிய நோய்களை வகுத்துணர்கின்ற வைத்தியர்கள் (ஆகாதென்று) விலக்குகின்ற ஒரு பதார்த்தத்தைக் கணவன் உண்ண

விரும்பி நிற்பானாயின் (மனைவிமார்) (அப்படி விரும்புதல்) தீதென்று சொல்லுவர், (அந்தச்சொல்லைக் கேளாமல் உண்டு யாதாயினும் ஒரு தீங்கு நேரிட்டால்) பிறகு மனம் வருந்துவார்கள். எ - று.

(வி - ரை.) வாயு - வாதம், வகுத்தறிதல் - விவரித்து அறிதல், (ஆராய்ந்தறிதல்), ஆயுள்வேதம் - வைத்திய சாஸ்திரம், அதனையுடையார் ஆயுள் வேதியர், அகற்றுதல் -விலக்குதல், அகற்று பகுதி, கொள்ள என்பது கொள எனத்தொகுத்தலாயிற்று, கொள என்பது உண்ண என்னும் பொருளில் வந்தது, நயத்தல் - விரும்புதல், நய - பகுதி, நிற்பனேல் - என்பதில் நிற்றல் சொல்லினுங்கேளாது நிற்பனாயின் எனப்பொருள்பட்டு நின்றது, பின் சிந்தைநோவர் என்றமையால் சொல்லினுங்கேளாமை பெறப்பட்டது, ஆயுள் வேதத்தை ஆயுர்வேதம் என்பர் வடநூலார், எல் - எனின் என்பதன்மரூஉ.

கண்டன் வேறொரு கரும நெஞ்சகங்
கொண்டு மற்றைய குறைத்தி ருப்பினு
மண்டு மன்பின்யா தானும் வைத்துக்கொண்
டுண்டு பாரெனா வூட்டு நீரரே.

(ப - ரை.) கண்டன் - நாயகன், வேறு ஒருகருமம் - மற்றொரு காரியத்தை, நெஞ்சு அகம்கொண்டு - மனத்தினுட்கொண்டு, மற்றைய - மற்றையவாகிய உணவு முதலியவற்றை, குறைத்து இருப்பினும் - குறைத்திருந்தாலும், (மனைவியர்) மண்டும் அன்பின் - மிகுதியாகிய அன்பினால், யாதானும் வைத்துக்கொண்டு - ஏதாகிலும் சேகரித்து வைத்துக்கொண்டு, உண்டு பார் என்று - (இதனை) உண்டுபார் என்று, ஊட்டும் நீரரே - உண்பிக்குங்குணமுடையவரே யாவர். எ - று.

(பொ - ரை.) நாயகன் மற்றொருகாரியத்தை மனத்தினுட்கொண்டு, மற்றையவாகிய உணவு முதலியவற்றைக் குறைத்திருந்தாலும் (மனைவியர்) மிகுதியாகிய அன்பினால் ஏதாகிலும் சேகரித்து வைத்துக்கொண்டு (இதனை) உண்டுபார் என்று உண்பிக்கும் குணமுடையவரேயாவர். எ - று.

(வி - ரை.) கண்டன் - திசைச்சொல், கருமம் - காரியம் (தொழில்) இது வடசொல், நெஞ்சு - இடவாகுபெயர், நெஞ்சகம் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மற்றைய என்றது உணவு முதலியவற்றை, குறைத்திருப்பினும் என்றது குறைத்திருத்தலருமை தோன்றநின்றது, மண்டுமன்பு-பெயரெச்சத்தொடர், அன்பின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது, ஆனும்-ஆயினும் என்பதன்மரூஉ, அன்றித்தொகுத்தல் எனினுமாம், யாதானும் என்றது யாதாயினும் சிற்றுணவுகளையென்றபடி, ஊட்டும் - பிறவினை, தன் வினையில் உண்ணும் எனவரும். ஊட்டும் என்பதனால் தான் உண்ணுதற்கும் அவகாசமில்லாத காரியத்திற் பிரவேசித்திருக்கிறான் என்பது விளங்கும். (உகூ)

ஆர மைச்சுநேர் மதிய மைந்துமிக்
கோர டிச்சியாய்ப் பணியி லூணிடச்
சாரி லன்னையாய்ச் சமைவர் கற்புடை
நாரி மாரென நவில்வர் நல்லவர்.

(ப - ரை.) கற்புஉடை நாரிமார் - கற்பையுடைய மாதர்கள், ஆர் - அரிய, அமைச்சுநேர் - அமைச்சனை நிகர்த்த, மதி அமைந்து - விவேகம் அமையப்பெற்று, மிக்கு - (அவ்விவேகத்தால்) மாதர்களுள்ளே மேன்மையடைந்து, பணியில் - குடும்பத்தொழில் செய்வதில், ஓர் அடிச்சி ஆய் - ஒரு அடிமைப்பெண்போல்பவளாகியும், ஊண் இடசாரில் - அன்னம் பரிமாறப் புகுந்தால், அன்னைஆய் - தாய்போல்பவளாகியும், சமைவர்என - அமைந்திருப்பார்களென்று, நல்லவர் நவில்வர் - நல்லோர் சொல்லுவர். எ - று.

(பொ - ரை.) கற்பையுடைய மாதர்கள் அரிய அமைச்சனை நிகர்த்த விவேகம் அமையப்பெற்று, (அவ்விவேகத்தால்) மாதர்களுள்ளே மேன்மையடைந்து, குடும்பத்தொழில் செய்வதில் ஒரு அடிமைப்பெண்போல்பவளாகியும், அன்னம் பரிமாறப்புகுந்தால் தாய்போல்பவளாகியும் அமைந்திருப்பார்களென்று நல்லோர் சொல்லுவர். எ - று.

(வி - ரை.) அரசியல் அமைச்சனின்றி இனிது நடவாதாதலால் அவனை ஆரமைச்சு, என்றார், அமைச்சுநேர் மதி என்றது அமைச்சனது மதியை நிகர்த்த மதியென்றபடி, அமைச்சு - பண்பாகு பெயர், அமைச்சுநேர் ஆர்மதி என நிறுத்தி அமைச்சனது மதியை நிகர்த்த அரியமதியென்றுரைப்பினுமாம், ஆர்மதி - நிரம்பின அறிவு என்றலுமொன்று, நிரம்புதலாவது - அமைச்சியலுக்குரிய குணங்கள் யாவும் நிறைந்திருத்தல், அது, "கருவியுங்காலமுஞ் செய்கையுஞ் செய்யும் - அருவினையுமாண்ட தமைச்சு" "வன்கண்குடிகாத்தல் கற்றறிதலாள் வினையோ - டைந்துடன் மாண்டதமைச்சு" பிரித்தலும் பேணிக்கொளலும் பிரிந்தார்ப் - பொருத்தலும் வல்லதமைச்சு" "தெரிதலுந் தேர்ந்து செயலுமொருதலையாச்-சொல்லலும் வல்லதமைச்சு" என்றற்றொடக்கத்தனவற்றால் விளங்கும், அமைதல் - நிறைதல், அடிச்சி - அடியவள், அடியாள், (கைங்கர்யஞ் செய்பவள்,) ஊண் - உண்ணப்படுவது இது முதனிலை திரிந்த தொழிலாகுபெயர். நாரி - வடசொல் - நல்லவர் என்றது அறநூல் வல்ல அறிஞரை. (உகஉ)

கோற்றொ டிக்கருங் கூந்தன் மாதராள்
மாற்ற லார்கெட மாட்டும் வைந்நுதிக்
கூற்ற மன்னவாட் குரிசி லெண்டப
மாற்றி நின்றதென் வழங்கு வாயென்றான்.

(ப - ரை.) கோல்தொடி - கோற்றொடியையும், கருகூந்தல் - கரிய கூந்தலையுமுடைய, மாதராள்-ஸ்ரீருக்மிணீ தேவியானவள், மாற்றலார்கெட - பகைவர் அழியும்படி, மாட்டும் - (அவர்களை) மாட்டுகின்ற, வைநுதி - கூரிய

நுனியினால், கூற்றம் அன்ன - யமனை நிகர்த்த, வாள் - வாளாயுதத்தையுடைய, குரிசில் - ஸ்ரீக்ருஷ்ணபகவானது, எண்தப - எண்ணம் கெடும்படி, மாற்றி நின்றது - தடுத்து நின்றது, என் - யாதுகாரணத்தால், வழங்குவாய் - (அதனை) சொல்லுவாயாக, என்றான் - என்று வினவினான் (பரீக்ஷித்து மகாராஜன்.) எ - று.

(பொ - ரை.) கோற்றொடியையும் கரியகூந்தலையுமுடைய ஸ்ரீ ருக்மிணீ தேவியானவள் பகைவர் அழியும்படி (அவர்களை) மாட்டுகின்ற, கூரிய நுனியினால் யமனை நிகர்த்த வாளாயுதத்தையுடைய ஸ்ரீ க்ருஷ்ணபகவானது எண்ணம் கெடும்படி தடுத்து நின்றது யாதுகாரணத்தால், (அதனை) சொல்லுவாயாகவென்று வினவினான் (பரீக்ஷித்து மகாராஜன்.) எ - று.

(வி - ரை) கோல்தொடி என்பதற்கு - புள்ளிகளையுடைய வளையல் என்றும், வளைவாகிய வளையல் என்றும், திரட்சியாகிய வளையல் என்றும் பொருள்கூறுவர், இன்னும், கோலம் என்பது அம்முச்குறைந்து கோல்என வந்ததெனக்கொண்டு அழகு எனவும் பொருள்கூறுவர், மாதராள் - அழகுள்ளவள், மாதர் - அழகு. மாட்டுதல் - மாள்வித்தல், அடித்தல் எனினுமாம், தப என்பதற்குப்பகுதி தபு, மாற்றுதல் - (அவலை புண்ணற்கவெனத்) தடுத்தல், வழங்குதல் - விஸ்தரித்துச் சொல்லுதல், வை - கூர்மை, குரிசில் - பெருமையிற் சிறந்தோன், என்றான் என்பதற்கு எழுவாய் பரீக்ஷித்து மகாராஜன் எனக்கொள்க, கூற்றம் - சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையுமாகிய பெயர். (உகக)

சேர லார்முடி தேய்க்கு மொண்கழல்
வீர னிங்ஙனம் வினவி டக்குறு
மூரல் கொண்டருண் முகத்த னாகிய
வீர மாதவ னிறைகொ டுக்குமே.

(ப - ரை.) சேரலார் - பகையரசரது, முடி - மகுடங்களை, தேய்க்கும் - தேய்க்கின்ற, ஒள் - ஒட்பமாகிய, கழல் - வீரக்கழலையணிந்த, வீரன் - வீரனாகிய பரீக்ஷித்து மகாராஜன், இங்ஙனம் - இந்தப்பிரகாரமாக, வினவிட - வினவுதலும், குறுமூரல்கொண்டருள் - குறுநகை கொண்டருளின, முகத்தன் ஆகிய - முகத்தையுடையவனாகிய, ஈரம் - அன்புள்ள, மாதவன் - பெருந்தவத்தோனாகிய சுகமுனிவன், இறைகொடுக்கும் - மறுமொழி சொல்லத் தொடங்கினான். எ - று.

(பொ - ரை.) பகையரசரது மகுடங்களைத் தேய்க்கின்ற ஒட்பமாகிய வீரக்கழலையணிந்த வீரனாகிய பரீக்ஷித்து மகாராஜன் இந்தப்பிரகாரமாக வினவுதலும், குறுநகை கொண்டருளின முகத்தையுடையவனாகிய அன்புள்ள பெருந்தவத்தோனாகிய சுகமுனிவன் மறுமொழி சொல்லத்தொடங்கினான். எ - று.

(வி - ரை.) சேரலார் முடிதேய்த்தலாவது - அவர்கள் வந்து அடியில் வீழ்ந்து வணங்குந்தோறும் அவர்களுடைய மகுடங்களில் இவனது வீரக்

கழல் பட்டுத்தேய்த்தல், தேய்த்தல் - தேயச்செய்தல், (தேய்வித்தல்), ஒட்பம் - அழகு, சேரலார் முடிதேய்க்குமொண் கழலணிந்தோனுதலால், 'வீரன் என்றார். வினவிட - என்பதற்குப்பகுதி வினவிடு, குறமூரல் - புன்சிரிப்பு, ஈரம் - அன்பு, இது தவத்தோர்க்கு இன்றியமையாப்பெருஞ் சிறப்பிற்றாதலால், 'ஈரமாதவன்' என்றார். இறை - விடை, இறை கொடுத்தல் - விடை கொடுத்தல், இதனை விடை விடுத்தலெனவும் கூறுவர். (உசச)

மேற்படி - வேறு.

சொற்பி றங்கிய நற்குலத் தோற்றத்தாள்
கற்பி னுக்கர சாய கனங்குழை
விற்பி றங்கிய வாணுதன் மெல்லியல்
பொற்பி னுக்கொரு பொற்பெனுந் தன்மையாள்.

(ப - ரை.) சொல் பிறங்கிய - புகழால் விளங்குகின்ற, நல்குலம் தோற்றத்தாள் - சிறந்த குலத்தில் தோன்றினவள், கற்பினுக்கு அரசு ஆய - கற்புக்கரசியாகிய, கனங்குழை - கனக்குழை, வில்பிறங்கிய - வில்லைப்போலப்பிரகாசிக்கிற, வாள்நுதல் - ஒளி பொருந்திய நெற்றியையுடையவள், மெல்இயல் - மெல்லியலையுடையவள், பொற்பினுக்கு - அழகுக்கு, ஒரு பொற்பு என்னும் தன்மையாள் - ஓர் அழகென்று சொல்லத்தகுந்தன்மையையுடையவள். எ - று.

(பொ - ரை.) புகழால் விளங்குகின்ற சிறந்த குலத்தில் தோன்றினவள், கற்புக்கரசியாகிய கனங்குழை, வில்லைப்போலப் பிரகாசிக்கிற ஒளி பொருந்திய நெற்றியையுடையவள், மெல்லியலையுடையவள், அழகுக்கு ஓர் அழகென்று சொல்லத் தகுந்தன்மையையுடையவள். எ - று.

(வி - ரை.) சொல் - புகழ், இது "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித்தகைசான்ற - சொற்காத்துச் சோர்விலாள்பெண்" என்னுந்திருக்குறளால் இனிது விளங்கும், நற்குலத்தோற்றத்தாள் - உயர் குடிப்பிறப்பினள் எனினுமாம், அரசு - பண்பாகு பெயர். கனங்குழை - ஆகுபெயர், கனவிய குழையையுடையாள் என்பது பொருள், மெல்லியல் - மென்மையாகிய இயலையுடையவள், (ம்ருது ஸ்வபாவை), தன்மையென்பது இவ்விடத்து அழகைக்குறித்தது. (உசரு)

நிலவு வெண்டிரைப் பாற்கட னின்றெழு
கலவ மாமயி லன்ன கருங்குழற்
குலவு மாமகள் கூற்றினிற் றோன்றினா
ளலகி னற்குணங் கட்கெல்லை யாயினாள்.

(ப - ரை.) நிலவு - விளங்குகிற, வெண்திரை - வெள்ளிய அலைகளையுடைய, பால்கடல் நின்று எழு - திருப்பாற்கடலினின்றுந் தோன்றின, கலவம் மாமயில் அன்ன - கலாபத்தையுடைய அழகிய மயில்போன்ற, கருகுழல் - கருங்கூந்தலையுடைய, குலவும்-விளங்குகின்ற, மாமகள் கூற்றினில்-

திருமகளது அமிசத்தில், தோன்றினள் - அவதரித்தவள், அலகுஇல் - அளவில்லாத, நல்குணங்கட்கு - நல்ல குணங்களுக்கு, எல்லை ஆயினள் - எல்லையாயிருப்பவள். எ - று.

(பொ - ரை.) விளங்குகிற வெள்ளிய அலைகளையுடைய திருப்பாற்கடலினின்றுந் தோன்றின கலாபத்தையுடைய அழகிய மயில்போன்ற கருங்கூந்தலையுடைய விளங்குகின்ற திருமகளது அமிசத்தில் அவதரித்தவள், அளவில்லாத நல்ல குணங்களுக்கு எல்லையாயிருப்பவள். எ - று.

(வி - ரை.) வெண்டிரை - தகுதியடை, பாற்கடனின்று என்பதில் நின்று ஐந்தாவதன் சொல்லுருபு. எழுதல் - தோன்றுதல். கலவம் - கலாபம் என்னும் வடசொற்றிரிபு. மா - அழகு, மாமகள் - திருமகள், கூறு-அமிசம். அலகினற் குணங்கட் கெல்லையாதலாவது - அளவற்ற மங்களகுணங்களில், இவட்கு நிகராவார் ஒருவருமில்லையென்னும்படி விளங்குதல். எல்லை - வரம்பு. ஸ்ரீ ருக்மிணீபிராட்டி திருமகளமிசமாதலால், 'மாமகள் கூற்றினிற் றோன்றினள்' என்றார். (உ௬௬)

இலக்க ணங்கணி ரம்பிய வேற்றத்தாள்
விலக்க ரும்புகழ் வாய்ந்தவி ளங்கிழை
நலக்கு மன்பற்கு நன்மையல் லாதொன்று
கலக்கச் செய்குவ ளோபுவி காவலோய்.

(ப - ரை.) இலக்கணங்கள் நிரம்பிய - மாதர்க்குரிய இலக்கணங்கள் யாவும் நிரம்பப்பெற்ற, ஏற்றத்தாள் - சிறப்பையுடையவள், விலக்கு அரு - நீக்குதற்கரிய, புகழ்வாய்ந்த - புகழமைந்த, விளங்கிழை - பிரகாசிக்கிற ஆபரணங்களை யணிந்தவள், (இத்தன்மையள்) நலக்கும் அன்பற்கு - நன்மையைச்செய்கிற தன் கணவனுக்கு, நன்மை அல்லாது - நன்மையேயன்றி, ஒன்று - வேறொன்றை, கலக்கச்செய்குவளோ - பொருந்தச்செய்வாளோ, (செய்யாள்) புவிகாவலோய் - பூபாலகனாகிய பரீக்ஷித்துமகாராஜனே. எ-று.

(பொ - ரை.) மாதர்க்குரிய இலக்கணங்கள்யாவும் நிரம்பப்பெற்ற சிறப்பையுடையவள், நீக்குதற்கரிய புகழமைந்த பிரகாசிக்கிற ஆபரணங்களை யணிந்தவள், (இத்தன்மையள்) நன்மையைச்செய்கிற தன் கணவனுக்கு நன்மையேயன்றி வேறொன்றைப் பொருந்தச்செய்வளோ" (செய்யாள்) பூபாலகனாகிய பரீக்ஷித்துமகாராஜனே. எ - று.

(வி - ரை.) இலக்கணங்கள் என்றது ஸ்த்ரீ சாமுத்திரிக நல்விலக்கணங்களும் "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித்தகை சான்ற - சொற்காத்துச் சோர்விலாளாதல்முதலிய நற்குண நற்செய்கைகளுமாகிய இவற்றை. ஏற்றம்- உயர்ச்சி. விழங்கிழை - வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக்காரணப் பெயர். நன்மையல்லாதொன்று என்றது தீமையை, அத்தீமையென்னுஞ் சொல்லை வாயினாற் சொல்லுதற்கஞ்சி, ஒன்று என்றொழிந்தார். லக்ஷணம் என்னும் வடசொல் இலக்கணம் எனத் திரிந்துவந்தது, செய்குவ

ளோ என்பதில் ஒகாரம் எதிர்மறை. புவிகாவலோய் - பூமியைக் காத்தற் றொழிலில் வல்லவனே. (உகள)

மேவு மன்பன் மனக்கு விரோதமா
யாவுஞ் செய்யகி லாளயர்ந் தாவது
நாவி னானுந விற்றுகி லாளுளம்
பாவு மாறுப டர்தலுஞ் செய்கிலாள்.

(ப - ரை.) மேவும் - பொருந்திய, அன்பன் - கணவனது, மனக்கு-மனதுக்கு, விரோதமாய் - மாறாக, யாவும் - எந்தக்காரியத்தையும், அயர்ந்தாவது - மறந்தாயினும், செய்யகிலாள்-செய்யமாட்டாள், நாவினானும் நவிற்றுகிலாள் - நாவினாலும் சொல்லமாட்டாள், உள்ளம் பாவுமாறு - மனம் (விடயங்களில்) வியாபிக்கும்படி, படர்தலும் செய்கிலாள் - நடக்கவும் மாட்டாள்.

(பொ - ரை.) பொருந்திய கணவனது மனத்துக்கு மாறாக எந்தக்காரியத்தையும் மறந்தாயினும் செய்யமாட்டாள், நாவினாலும் சொல்லமாட்டாள், மனம் (விடயங்களில்) வியாபிக்கும்படி நடக்கவும்மாட்டாள். எ - று.

(வி - ரை.) மேவு மன்பன்-தன் மனத்துக்கு இசைந்த அன்புள்ளவன் (கணவன்). மனத்துக்கு எனற்பாலது அத்துச்சாரியை தொகுத்தலாய் மனக்கு என வந்தது. அயர்தல் - மறத்தல். இதனை நாவினானு நவிற்றுகிலாள், உளம்பாவுமாறு படர்தலுஞ் செய்கிலாள், என்பவற்றோடுங் கூட்டி யுரைத்துக்கொள்க. உளம் - தொகுத்தல். யாவும் என்பதில் உம்மை முற்று. படர்தலும் என்பதில் உம்மை இறந்தது தழீஇயது. படர்தலும் செய்கிலாள் என்பதற்கு நினைக்கவுமாட்டாள் எனினுமாம். (உகஅ)

## கோச்சகக்கலிப்பா.

பலகலைகண் முற்றுணர்ந்த பளகிலாத் தவமறையோற்
குலகமிறும் பூதடைய வொழியாத பெருஞ்செல்வ
நிலமிசையுண் டாகவென நினைந்தவலோர் பிடியெடுத்து
நலமுறத்தின் றனனென்று மறிந்தாளந் நன்னுதலே.

(ப - ரை.) பலகலைகள் - பல கலைகளையும், முற்று உணர்ந்த - முழுதுமறிந்த, பளகு இல்லா தவம்-குற்றமற்ற தவத்தினையுடைய, மறையோற்கு-வேதியனாகிய குசேலனுக்கு, உலகம் இறும்பூது அடைய - உலகத்தார் வியப்பை யடையும்படி, ஒழியாத பெரு செல்வம்-நீங்காத பெருஞ்செல்வமானது, நிலமிசை-இந்த மண்ணுலகத்தில், உண்டாக என-உண்டாகக்கடவதென்று, நினைந்து - (ஸ்ரீகண்ணபிரான் தன் திருவுளத்தில்) சங்கற்பித்துக்கொண்டு, ஓர் பிடி அவல் எடுத்து - ஒரு பிடி யவலை யெடுத்து, நலம் உற தின்றனன் என்றும் - இனிதாக அமுதுசெய்தருளினானென்றும், அ - அந்த, நல் நுதல் - அழகாகிய நெற்றியையுடையவளாகிய ஸ்ரீருக்மிணிபிராட்டியானவள், அறிந்தாள் - அறிந்துகொண்டாள். எ - று.

(பொ - ரை.) பல கலைகளையும் முழுதுமறிந்த குற்றமற்ற தவத்தினையுடைய வேதியனாகிய குசேலனுக்கு உலகத்தார் வியப்பையடையும்படி

நீங்காத பெருஞ்செல்வமானது இந்த மண்ணுலகத்தில் உண்டாகக்கடவதென்று (ஸ்ரீ கண்ணபிரான் தன் திருவுளத்தில்) சங்கற்பித்துக்கொண்டு ஒருபிடி யவலை யெடுத்து இனிதாக அமுதுசெய்தருளினனென்றும் அந்த அழகாகிய நெற்றியையுடையவளாகிய ஸ்ரீ ருக்மிணிபிராட்டியானவள் அறிந்துகொண்டாள். எ - று.

(வி - ரை.) வேதாகம புராணேதிஹாஸாதிகளெல்லா மடங்க, 'பலகலைகள்' என்றும், அவற்றில் சிற்றுணர்ச்சி உணர்ச்சியன்றென்பார் 'முற்றுணர்ந்த' என்றும், "வலியினிலைமையான் வல்லுருவம் பெற்றம், புலியின்றோல் போர்த்து மேய்ந்தற்று'' "தவமறைந்தல்லவை செய்தல்புதன் மறைந்து, வேட்டுவன் புட்சிமிழ்த்தற்று'' இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே கூடாவொழுக்க முதலியவை யொழித்துச் செய்யுந்தவமே தவமென்பார் 'பளகிலாத்தவம்' என்றும், நெடுங்காலம் வரையாது வழங்கினும் தொலையாதசெல்வமென்பார் 'ஒழியாத பெருஞ்செல்வம்' என்றும் கூறினர். இறும்பூது - வியப்பு. (ஆச்சரியம்). நன்னுதல் - பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. (உ௯௯)

தகத்தின்ற பிடியவற்கே சகங்கொள்ளாப் பெருஞ்செல்வ
மிகத்துன்று மஃதன்றி மீட்டுமொரு பிடியெடுத்து
நகத்தின்று விடுவானே னாள்பலவு மன்னவற்குத்
தொகத்துன்று மடிமையாய்ச் சொற்பணிகள் கடவானாய்.

(ப - ரை.) தக - தகுதியாக, தின்ற - (ஸ்ரீகண்ணபிரான்) அமுதுசெய்தருளின, பிடி அவற்கே - ஒருபிடி யவலுக்கே, சகம் கொள்ளா - உலகம்கொள்ளாத, பெரு செல்வம் - பெருஞ்செல்வமானது, மிக துன்றும் - (குசேலனுக்கு) மிகுதியாகவுண்டாகும், அஃது அன்றி-அதுவல்லாமல், மீட்டும்-மறுபடியும்,ஒரு பிடி எடுத்து-ஒரு பிடி யவலை யெடுத்து,நக தின்றுவிடுவானேல்-மகிழ்ச்சியுண்டாக உண்டருளுவனானல், (அதற்காக) நாள்பலவும் - நெடுங்காலம், அன்னவற்கு - அந்தக்குசேலனுக்கு, தொகதுன்றும் அடிமை ஆய்-கூடவேயிருக்கிற அடியவனாய், சொல் பணிகள் - (அவன்) சொல்லுகிற கட்டளைச்சொற்களை, கடவான் ஆய் - கடக்கமாட்டாதவனாய். எ - று.

(பொ - ரை.) தகுதியாக (ஸ்ரீகண்ணபிரான்) அமுதுசெய்தருளின ஒருபிடி யவலுக்கே உலகம் கொள்ளாத பெருஞ்செல்வமானது (குசேலனுக்கு) மிகுதியாகவுண்டாகும், அதுவல்லாமல் மறுபடியும் ஒருபிடியவலை யெடுத்து மகிழ்ச்சியுண்டாக வுண்டருளுவனானல், (அதற்காக) நெடுங்காலம் அந்தக்குசேலனுக்குக் கூடவேயிருக்கிற அடியவனாய் (அவன்) சொல்லுகிற கட்டளைச் சொற்களைக் கடக்கமாட்டாதவனாய். எ - று.

(வி - ரை.) தானமரவேண்டும் என வருஞ் செய்யுளோடு குளகமாய் முடியும். அவற்கே - அவலின்பொருட்டே. சகங்கொள்ளா - உலகம் பிடிக்காத, அடிமை - பண்பாகுபெயர். சொற்பணிகள் கடவானாய் என்றது ஏவற்பணிவிடைகளைச் சிரசாவகிப்பவனாய் என்றபடி. ஜகம் என்னும் வடசொல் சகம் எனத்திரிந்துவந்தது. இதற்கு தோன்றியழியு மியல்புள்ளது என்பது பொருள். தின்ற அவல், கொள்ளாச்செல்வம், செல்வம் துன்றும், எடுத்துத்தின்று, அன்னவற்கு அடிமையாய் எனவியையும். (௩௦௦)

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி ஒருபிடி அவலுண்டு குசேலருக்குச் செல்வமுண்டாக்கி மீண்டும் ஒருபிடி உண்ணப் புகுகையில், உருக்குமணி தேவி ஸ்ரீ கண்ணபிரான் திருக்கரத்தைப் பிடித்துத் தடுத்தது.

தானமர வேண்டுமெனுந் தக்ககருத் துளத்தமரக்
கானமருங் கருங்கூந்தற் கதிரமரு மதிவதனக்
கூனமரும் விற்புருவக் குயிலமரு மென்மொழியா
டேனமருந் தார்மார்பன் செங்கைபிடித் துத்தடுத்தாள்.

(ப - ரை:) தான் - (இந்த ஸ்ரீகண்ணபிரான்) தான், அமரவேண்டும் - அமைந்திருக்க வேண்டும், என்னும் - என்கிற, தக்க - தகுதியான, கருத்து - எண்ணமானது, உள்ளத்து அமர-தன்மனத்திற் பொருந்துதலால், கான் அமரும் - வாசனையமைந்த, கருகூந்தல் கரியகூந்தலையும், கதிர் அமரும் - ஒளியமைந்த, மதி - (பூர்ண) சந்திரனை நிகர்த்த, வதநம் - முகத்தையும், கூன் அமரும் - வளைவுபொருந்திய, வில் - வில்லைநிகர்த்த, புருவம் - புருவங்களையும், குயில் அமரும் - குயிற்குரல் போன்ற, மெல்மொழியாள் - மிருதுவசநங்களையு முடையவளாகிய ஸ்ரீருக்மிணிபிராட்டி, தேன் அமரும் - தேன் பொருந்திய, தார் - பூமாலையைத்தரித்த, மார்பன் - திருமார்பையுடையனாகிய ஸ்ரீகண்ணபிரானது, செங்கைபிடித்து தடுத்தாள் - செவந்த கையைப்பிடித்துத் தடுத்தாள், எ - று.

(பொ - ரை.) (இந்த ஸ்ரீகண்ணபிரான்) தான் அமைந்திருக்கவேண்டும் என்கிற தகுதியான எண்ணமானது தன்மனத்திற்பொருந்துதலால், வாசனை யமைந்த கரிய கூந்தலையும் ஒளியமைந்த பூர்ணசந்திரனை நிகர்த்த முகத்தையும் வளைவு பொருந்திய வில்லை நிகர்த்த புருவங்களையும் குயிற்குரல்போன்ற மிருதுவசநங்களையு முடையவளாகிய ஸ்ரீ ருக்மிணிபிராட்டி தேன்பொருந்திய பூமாலையைத்தரித்த திருமார்பையுடையனாகிய ஸ்ரீகண்ணபிரானது செவந்த கையைப்பிடித்துத் தடுத்தாள். எ - று.

(வி - ரை.) இவையிரண்டு செய்யுட்கருத்தின்படியே, ஸ்ரீபாகவதத்திலும், ''ஊர்ந்தகாதலிஒருமுறை யருந்திய திறத்தால், ஏந்தலிந்திரனெனக் கருஞ்செல்வமெய்தினனால், மாந்தல் மற்றினியென்று செம்மலர்க் கரம் பிடித்தாள், பூந்துழாய்வரை மார்பக மகன்றிலாப்பூவை'' என்றும், ''பின்னருங் கரவிரவிடையள்ளலும் பிடியா, அன்னமென்னடையுருப்பிணிமாயனுடறைவாள், முன்ன நீநுகர்தருப்பணமுடிவிலாதளித்த, தின்னநீ நுகர்ந்தா லிருணத்தனுமென்றாள்'' என்று சொல்லப்பட்டிருத்தல் காண்க. அழகு, ஒளி, குளிர்ச்சி, மகிழ்வுண்டாக்கல் என்பவற்றால் சந்திரன் முகத்திற்குவமையாகவும், வளைவு, ஆடவரை வருத்தல் என்பவற்றால் வில் புருவத்திற்குவமையாகவும், கேட்டற்கினிமையாதலால் குயிற்குரல் மொழிக்குவமையாகவும், கொள்ளப்பட்டன. குயில் - பொருளாகுபெயர், தேன்மருந்தார் என்பதில் தேன்வண்டு எனினுமாம், அமர்தல் - விரும்புதல் எனினுமாம். தேனமருந் தார் என்றதனால் தார்பூமாலையைக் குறித்தது, கான்-இயற்கைச் செயற்கை மணங்கள், வதநம் - வடசொல். இதற்கு, பேசுதற்குபயோகமானது என்பதுபொருள். (கூ0க)

அன்றியுமத் தொழுகுலத்தா னணிமனைக்கு வேண்டுவது
துன்றியசீர்ச் செல்வமே துன்னலார் முடியுரிஞ்சும்
வென்றியமர் கருங்கழற்கால் வெள்ளொளிய வேல்வேந்தே
மின்றிகழு மணிமார்பன் பணிசெயல்வேண் டுவதின்றே.

(ப - ரை.) அன்றியும் - அல்லாமலும், அ - அந்த, தொழுகுலத்தான் - குசேலனது, அணிமனைக்கு - அழகிய இல்வாழ்க்கைக்கு, வேண்டுவது - வேண்டப்படுவது, துன்றிய சீர் செல்வமே - மிக்கசிறப்பையுடைய செல்வமேயாம், துன்னலார் முடி உரிஞ்சும் - பகையரசரது மகுடங்களைத் தேய்க்கின்ற, வென்றி அமர் - வெற்றியமைந்த, கருகழல் - பெரியவீரக்கழலைத் தரித்த, கால் - பாதத்தையும், வெள் ஒளியவேல் - வெள்ளொளியையுடைய வேற்படையையும் உடைய, வேந்தே - அரசனே, மின் திகழும் - மின்னலைப் போல விளங்குகிற, மணி - கௌஸ்துப மணியைத்தரித்த, மார்பன் - திருமார்பையுடையவனாகிய ஸ்ரீகண்ணபிரான், பணிசெயல் - பணிவிடைசெய்தல், வேண்டுவது இன்றே - வேண்டப்படுவதில்லையே. எ - று.

(பொ - ரை.) அல்லாமலும் அந்தக் குசேலனது அழகிய இல்வாழ்க்கைக்கு வேண்டப்படுவது மிக்க சிறப்பையுடைய செல்வமேயாம், பகையரசரது மகுடங்களைத் தேய்க்கின்ற வெற்றியமைந்த பெரிய வீரக்கழலைத்தரித்தபாதத்தையும் வெள்ளொளியையுடையவேற்படையையும் உடைய அரசனே, மின்னலைப்போல விளங்குகிற கௌஸ்துபமணியைத் தரித்த திருமார்பையுடையவனாகிய ஸ்ரீகண்ணபிரான் பணிவிடை செய்தல் வேண்டப்படுவதில்லையே. எ - று.

(வி - ரை.) தொழுகுலத்தான் - யாவராலுந் தொழப்படுதற்குரியஉயர் குலத்தான். செல்வமே யென்பதில் ஏகாரம் பிரிநிலை. கருமை - பெருமை.

ஆதலிற்றன் னாயகனுக் கமைந்தவித மாகும்விதங்
காதமர்பொற் குழைகிழித்துக் கருங்குவளைக் குலஞ்சவட்டி
மோதடுகூற் றெடும்பொருத முடங்கல்விடுந் தடங்கருங்கண்
மாதர்புரிந் ததையன்றி மற்றொன்று புரிந்திலளே.

(ப - ரை.) ஆதலின் - ஆதலால், தன் நாயகனுக்கு - தன் கணவனுக்கு, அமைந்த - பொருந்திய, இதம் ஆகும்விதம் - நன்மையுண்டாகும் வண்ணம், காது அமர் - காதிலணியப்பெற்ற, பொன்குழை கிழித்து - பொற்குழையைக் கிழித்து, கருகுவளை குலம்சவட்டி - கருங்குவளை மலர்த்தொகுதியை வாட்டப்படுத்தி, மோது - யாவரையுஞ்சென்று தாக்குகின்ற, அடு - கொல்லுந் தொழிலையுடைய, கூற்றொடும் பொருத-யமனோடு போர்புரியும்பொருட்டு, முடங்கல்விடும் - ஓலையனுப்புகின்ற, தடம் - விசாலமான, கருகண் - கரிய கண்களையுடைய, மாதர் - ஸ்ரீருக்மிணிபிராட்டியார், புரிந்ததை அன்றி - செய்ததேயன்றி, மற்றொன்று புரிந்திலளே - வேறொன்றுஞ் செய்திலளே.

(பொ - ரை.) ஆதலால் தன் கணவனுக்குப் பொருந்திய நன்மையுண்டாகும் வண்ணம் காதிலணியப்பெற்ற பொற்குழையைக் கிழித்து கருங்குவ

ளை மலர்த்தொகுதியை வாட்டப்படுத்தி யாவரையுஞ் சென்று தாக்குகின்ற கொல்லுந் தொழிலையுடைய யமனோடு போர்புரியும்பொருட்டு ஓலை யனுப்புகின்ற விசாலமான கரியகண்களையுடைய ஸ்ரீருக்மிணிபிராட்டியார் செய்ததேயன்றி வேறொன்றுஞ் செய்திலளே. எ - று.

(வி - ரை.) பொற்குழை - பொன்னாலாகிய காதணி. சவட்டுதல் - வாட்டுதல். முடங்கல் - ஓலைச்சுருள். (௫0௬)

வன்புடைமாற் றலர்நெய்த்தோர் வாய்மடுத்துத் தசைகுதட்டி
யின்புடையீ ருளுஞ்சுவைத்திட் டெழுங்கதிர்வாட் கண்ணபிரா
னன்புடையார்க் கிதுகொடுத்த லாகுமிதா காதென்று
தன்புடையா யினுமெண்ணத் தக்கவனோ தார்வேந்தே.

(ப - ரை.) வன்புஉடை - வலிமையுள்ள, மாற்றலர் - பகைவரது, நெய்த்தோர்வாய்மடுத்து - உதிரத்தில் மூழ்கி, தசைகுதட்டி - தசையை மென்று, இன்புஉடை - இனிதாகிய, ஈருளும் சுவைத்திட்டு - ஈரலையுஞ் சுவைத்து, எழும் - எழுகின்ற, கதிர் - ஒளியுள்ள, வாள் - வாட்படையையுடைய, கண்ணபிரான் - ஸ்ரீகண்ணபிரான், அன்பு உடையார்க்கு - தன்னிடத்தன்புள்ளவர்க்கு, இது கொடுத்தல் ஆகும் - இது கொடுக்கலாகும், இது ஆகாது என்று - இதுகொடுக்கலாகாதென்று, தன்புடை ஆயினும் - தன்னிடத்தாயினும், எண்ணத்தக்கவனோ-நினைக்கத்தகுந்தவனோ,தார்வேந்தே-பூமாலையைத் தரித்த பரீக்ஷித்து மகாராஜனே. எ - று.

(பொ - ரை) வலிமையுள்ள பகைவரது உதிரத்தில் மூழ்கித் தசையை மென்று இனிதாகிய ஈரலையுஞ்சுவைத்து எழுகின்ற ஒலியுள்ளவாட்படையையுடைய ஸ்ரீகண்ணபிரான் தன்னிடத் தன்புள்ளவர்க்கு இது கொடுக்கலாகும் இது கொடுக்கலாகாதென்று தன்னிடத்தாயினும் நினைக்கத் தகுந்தவனோ, பூமாலையைத் தரித்த பரீக்ஷித்து மகாராஜனே. எ - று.

(வி - ரை.) நெய்த்தோர் - உதிரம். குதட்டுதல் - மெல்லுதல், ஈருள் - ஈரல், தக்கவனோ என்னும் ஓகாரம் எதிர்மறை. (௫0௭)

வாரிதிசூ ழுலகிலொரு மானிடவ னறியாது
சீரியலச் செய்தவறஞ் சிறிதேனு மப்பயனாற்
பேரியலுஞ் சுவர்க்கத்திற் பெரிதின்பந் துய்ப்பனெனிற்
கூரியலும் வடிவேலாய் குசேலமுனிக் கிஃதரிதோ.

(ப - ரை.) கூர் இயலும் - கூர்மைபொருந்திய, வடிவேலாய் - வடிவேலையுடையனே, வாரிதிசூழ் - கடல்சூழ்ந்த, உலகில் - உலகத்தில், ஒரு மானிடவன் - ஒருமனிதன், அறியாது - அறியாமல்,சீர் இயலசெய்த அறம்- சிறப்புண்டாகச்செய்த தர்மமானது, சிறிது எனும் - சிறிதாயினும், அப்பயனால் - அந்தத் தர்மப்பயனால், பேர்இயலும் - பெருமைபொருந்திய, சுவர்க்கத்தில் - சுவர்க்கலோகத்தில், பெரிது - மிகுதியாகிய, இன்பம் துய்ப்பன்

எனின் - இன்பம் அனுபவிப்பானாயின், குசேலமுனிக்கு - குசேலமுனிவனுக்கு, இஃது அரிதோ - இது அருமையாமோ. எ - று.

(பொ - ரை.) கூர்மைபொருந்திய வடிவேலை யுடையவனே, கடல் சூழ்ந்த உலகத்தில் ஒரு மனிதன்,அறியாமல் சிறப்புண்டாகச்செய்த தர்மமானது சிறிதாயினும் அந்தத் தர்மப்பயனால் பெருமை பொருந்திய சுவர்க்கலோகத்தில் மிகுதியாகிய இன்பம் அனுபவிப்பானாயின் குசேலமுனிவனுக்கு இது அருமையாமோ. எ - று.

(வி - ரை.) அறியாதுசெய்த எனவியையும். இஃது அரிதோ என்றது இந்தச் செல்வத்தைப் பெறுதல் அரிதாமோ என்றபடி. அரிதோ என்னும் ஓகாரம் எதிர்மறை, எளிது என்றபடி "கூரியவும் வடிவேலாய்" என்றது பரீக்ஷித்து மகாராஜனை நோக்கினவிளி. (கூ0ரு)

நீடுபுகழ்ப் பகவனடி நீங்காது வளருளத்தா
னோடுபொறிச் சேட்டையெலா மொடுக்கியமா தவனன்றே
யேடுசெறி மலர்மார்பா விம்மறையோ னெனப்புகன்றிட்
டாடுபுகழ்ப் பெருந்தவத்தோ னப்பாலுஞ் சொலப்புக்கான்.

(ப - ரை.) ஏடுசெறி - இதழ்கள் நெருங்கிய, மலர்மார்பா - மலர்மாலையைத்தரித்த மார்பையுடையவனாகிய பரீக்ஷித்து மகாராஜனே, இ மறையோன் - இந்த வேதியனாகிய குசேலன், நீடு புகழ் - பெரும்புகழையுடைய, பகவன் - ஸ்ரீகண்ணபிரானது, அடி-திருவடிகள், நீங்காது - இடையறாமல், வளர் - வளர்கின்ற, உளத்தான் - மனத்தையுடையவனும், ஓடு - (விடயங்களின் மேல்) விரைந்து செல்லுகின்ற, பொறிசேட்டை எல்லாம்-இந்திரியச் சேட்டை முழுதும், ஒடுக்கிய - அடக்கின, மாதவன் - பெருந்தவத்தையுடையவனும், அன்றே - அல்லவா, என புகன்றிட்டு - என்றுசொல்லி, ஆடு - (உலகமுழுதும்) பரவின, பெருதவத்தோன் - பெருந்தவத்தோனாகிய சுகமுனிவன், அப்பாலும்-அதன்மேலும், சொல்ல புக்கான் - சொல்லத் தொடங்கினான். எ - று.

(பொ - ரை.) இதழ்கள் நெருங்கிய மலர்மாலையைத்தரித்த மார்பையுடையவனாகிய பரீக்ஷித்து மகாராஜனே, இந்த வேதியனாகிய குசேலன் பெரும்புகழையுடைய ஸ்ரீகண்ணபிரானது திருவடிகள் இடையறாமல் வளர்கின்ற மனத்தையுடையவனும் (விடயங்களின்மேல்)விரைந்து செல்லுகின்ற இந்திரியச் சேட்டை முழுதும் அடக்கின பெருந்தவத்தையுடையவனும் அல்லவா, என்றுசொல்லி, (உலகமுழுதும்) பரவின பெருந்தவத்தோனாகிய சுகமுனிவன் அதன்மேலும் சொல்லத்தொடங்கினான். எ - று.

(வி - ரை.) வளர்தல் - தங்குதல். பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் பஞ்சேந்திரியங்கள். சேட்டை - தொழில். விடயங்கள் - சத்தபரிச ரூபரசகந்தங்கள். ஒடுக்கிய - வென்ற எனினுமாம். ஆடுபுகழ் - மேம்பட்ட புகழ் எனினுமமையும். (கூ0சு)

தேவியாற் றடைபட்டுச் செறிதரக்கைக் கொளுமவலைப்
பாவியவண் புகழானப் பழங்கந்தை தனின்முடிந்து
மேவியவோர் பிடியவலின் மிகுமகிழ்ச்சி யுடையானாய்
நாவியலுந் துதிமுழக்கி நன்முகமன் பலசொற்றான்.

(ப - ரை.) பாவிய - பரவிய, வண்புகழான் - மிகுந்த கீர்த்தியையுடைய ஸ்ரீகண்ணபிரான், தேவியால் தடைபட்டு - (இப்படி) ஸ்ரீருக்மிணீபிராட்டியால் தடுக்கப்பட்டு, செறிதர - நிறைய, கைக்கொள்ளும் அவலை - கையிலெடுத்த அவலை, அ - அந்த, பழகந்தைதனில் முடிந்து - பழங்கந்தைத் துணியில் முடிந்து, மேவிய ஓர்பிடி அவலில் - விரும்பியுண்ட ஒருபிடி அவலிலே, மிகுமகிழ்ச்சி உடையான்ஆய் - மிகுந்த மகிழ்ச்சியுடையவனாய், நாஇயலும் துதி முழக்கி - நாவினால் தகுதியான துதிச்சொற்களை வெளிப்படச்சொல்லி, நல்முகமன்பல சொற்றான் - நல்ல உபசாரவார்த்தைகள் பலவற்றைச் சொல்லினான். எ - று.

(பொ - ரை.) பரவிய மிகுந்த கீர்த்தியையுடைய ஸ்ரீகண்ணபிரான் (இப்படி) ஸ்ரீருக்மிணீபிராட்டியால் தடுக்கப்பட்டு நிறையக்கையிலெடுத்த அவலை அந்தப் பழங்கந்தைத் துணியில் முடிந்து, விரும்பியுண்ட ஒருபிடி அவலிலே மிகுந்த மகிழ்ச்சியுடையவனாய் நாவினால் தகுதியான துதிச்சொற்களை வெளிப்படச்சொல்லி, நல்ல உபசாரவார்த்தைகள் பலவற்றைச் சொல்லினான். எ - று.

(வி - ரை.) செறிதர என்பதற்குப் பகுதிசெறிதா. கந்தை-ஜீர்ணவஸ்த்ரம்.

அன்றிரவோர் மென்படுக்கை யணிந்துதவ வதின்மேவி
மன்றிகழவ் வுவளகத்து வளப்பலவுங் கண்டதனாற்
றுன்றியபே ரானந்த மொழியாது தோன்றியெழக்
கன்றியதீப் பொறியவித்தோன் கண்படைகொண் டருளினான்.

(ப - ரை.) அன்று இரவு - அன்றிராத்திரி, ஓர் மெல்படுக்கை - ஒரு மெல்லியசயநத்தை, அணிந்து உதவ - (ஸ்ரீகண்ணபிரான்) அலங்கரித்துக் கொடுக்க, கன்றிய தீபொறி அவித்தோன் - வருத்துகிற கொடிய பஞ்சேந்திரியங்களை அடக்கினவனாகிய குசேலன், அதில்மேவி - அந்தப்படுக்கையிற் பொருந்தி, மன்திகழ் - பெருமையோடு விளங்குகிற, அ உவளகத்து - அந்த அந்தப்புரத்தின், வளம்பலவும் - மேன்மைகள் பலவற்றையும், கண்டதனால் - (அன்றைக்கு பகலில்) பார்த்ததனால், துன்றிய - (தனக்கு) உண்டான, பேர் ஆநந்தம் - பெருங்களிப்பு, ஒழியாது - நீங்காமல், தோன்றி எழ - மனத்திலுண்டாகி வளர, கண்படை கொண்டருளினான் - நித்திரை செய்தருளினான்.

(பொ - ரை.) அன்றிராத்திரி ஒரு மெல்லிய சயநத்தை (ஸ்ரீகண்ணபிரான்) அலங்கரித்துக் கொடுக்க வருத்துகிற கொடிய பஞ்சேந்திரியங்களை அடக்கினவனாகிய குசேலன் அந்தப் படுக்கையில் பொருந்திப் பெருமையோடுவிளங்குகிற அந்த அந்தப்புரத்தின் மேன்மைகள் பலவற்றையும் (அன்றைக்

குப் பகலில்) பார்த்தனுல் (தனக்கு உண்டான பெருங்களிப்பு நீங்காமல் மனத்திலுண்டாகி வளரநித்திரை செய்தருளினன். எ - று.

(வி - ரை.) அணிதல் - அலங்கரித்தல், அவித்தல் - அடக்குதல், அவித்தல் இப்பொருட்டாதல், "ஐந்த வித்தானற்றலகல் விசும்புளார் கோமான், இந்திரனே சாலுங்கரி" என்னுந்திருக்குற ளொயினுங்காண்க, கண்படை - கண்படுதல், (கண் மூடியுறங்குதல்), "அன்னங்கண் படுதண் பணை நிடதநாடு" "கண்படைபெருது கங்குனேதல்" இத்யாதிகளினும் கண்படுதல் தூங்குதற்பொருள்படுதல் காண்க. (கூ௦அ,

கதிருதிக்குங் காலையெழீஇக் கடன்பலவு முற்றியடர்
முதிர்புலன்செற் றருஞான முயன்றடைந்தோ னதலினன்
மதிகுலத்து மன்னவன்பால் வாய்திறந்தொன் றுங்கேளா
னிதியமிகப் பெற்றவனுய் நினைந்தூர்க்கு வழிக்கொண்டான்.

(ப - ரை.) (குசேலன்) கதிர் உதிக்குங்காலை - சூரியன் உதிக்கும்பொழுதில், எழீஇ - (துயிலொழிந்து) எழுந்து, கடன்பலவும் முற்றி - நித்தியகர்மங்களாகிய கடன்களெல்லாவற்றையும் முடித்து, அடர்-நெருங்கிய, முதிர் - வலிமை மிகுந்த, புலன் - ஐம்புலவாசைகளை, செற்று - வென்றடக்கி, அருஞானம் - கிடைத்தற்கரிய தத்துவஞானத்தை, முயன்று, முயற்சிசெய்து, அடைந்தோன் ஆதலினல் - பெற்றவனுதலால், மதிகுலத்து மன்னவன்பால் - சந்திரகுலத்தரசனுகிய ஸ்ரீ கண்ணபிரானிடத்தில், வாய்திறந்து ஒன்றும்கேளான் - தன் வாயைத்திறந்து ஒரு பொருளையும் கேட்காமலே, நிதியம் - செல்வத்தை, மிகபெற்றவன் ஆய்நினைந்து - மிகுதியாக அடைந்தவன் போலத் (தன்னை) பாவித்துக்கொண்டு, ஊர்க்குவழிக்கொண்டான் - (தன்) ஊருக்குப் பிரயாணப்பட்டான். எ - று.

(பொ - ரை.) (குசேலன்) சூரியன் உதிக்கும்பொழுதில் (துயிலொழிந்து) எழுந்து நித்தியகர்மங்களாகிய கடன்களெல்லாவற்றையும் முடித்து, நெருங்கிய வலிமைமிகுந்த ஐம்புலவாசைகளை வென்றடக்கி, கிடைத்தற்கரிய தத்துவஞானத்தை முயற்சிசெய்து பெற்றவனுதலால், சந்திரகுலத்தரசனுகிய ஸ்ரீ கண்ணபிரானிடத்தில் தன் வாயைத்திறந்து ஒரு பொருளையும் கேட்காமலே, செல்வத்தை மிகுதியாக அடைந்தவன்போலத் (தன்னை) பாவித்துக்கொண்டு தன் ஊருக்குப்பிரயாணப்பட்டான். எ - று.

(வி - ரை.) எழீஇ - சொல்லிசையளபெடை, உதிக்கும் என எதிர்காலப்பெயரெச்சத்தாற் கூறினமையால், சூரியனுதித்தற்கு முன்பேவைகறையில் துயிலெழுந்தானென்பது பெறப்பட்டது, கடன்பல என்றது சந்தியாவந்த நாதிநித்தியகர்மங்களை, வேதியன் இவற்றைச் செய்தேதீரவேண்டுதலால், இவற்றைக்கடன் என்ருர். முதிர் என்றது ஐம்புலவாசையின் அடக்குதற்கருமை தோன்றவந்தது, புலன்செறுதலாவது ஐம்பொறிகள் தத்தம் விடயங்களிற் செல்லவொட்டாது தடுத்தல், ஞானம் முயன்றடைதலாவது



குசேலர் தந்நகர்க்குப்புறப்படக்கிருஷ்ணமூர்த்தி கோபுரவாயல்வரைவந்து வழிவிட்டுவணங்கித்திரும்பியது.

கேள்வி விமரிசம்பாவனை என்னுமூவகையுபாயங்களால் மெய்யுணர்வைப் பெறுதல், நிதி - வடசொல், இதில் அம்சாரிவை. (௯௦௯)

அக்காலைக் கண்ணனுந்தன் னணிவாயில் வரைவந்து
மிக்கார்வத் தொடுமடியில் வீழ்ந்துவணங் கிடமகிழ்ந்து
தொக்காசி பலகூறித் துவாரபா லகர்வாயி
லெக்காலு மின்பமறுன் கடந்தப்பா லேகிடுங்கால்.

(ப - ரை.) அக்காலை - அப்பொழுது, கண்ணனும் - ஸ்ரீ கண்ணபிரானும், தன் - தனது, அணி - அழகாகிய, வாயில்வரைவந்து - வாயில்வரையும் வந்து, மிக்கஆர்வத் தொடும் - மிகுந்த அன்போடும், அடியில் வீழ்ந்து வணங்கிட - (தன்) திருவடியில் விழுந்துவணங்க, மகிழ்ந்து - மனமகிழ்ந்து, தொக்கஆசி பலகூறி - தொகுதியாகிய ஆசிகள் பலவற்றைச்சொல்லி, எக்காலும் - எக்காலத்தும், இன்பம்அறுன்-இன்பம் நீங்காதவனாகிய குசேலன், துவாரபாலகர் - துவாரப்பாலகர் காவல்செய்கிற, வாயில்கடந்து - வாயில்களைத்தாண்டி, அப்பால் ஏகிடுங்கால் - அப்பால்போகும்போது. எ - று.

(பொ - ரை.) அப்பொழுது ஸ்ரீ கண்ணபிரானும் தனது அழகாகிய வாயில்வரையும் வந்து மிகுந்த அன்போடும் தன் திருவடியில் விழுந்துவணங்க, மனமகிழ்ந்து தொகுதியாகிய ஆசிகள் பலவற்றைச்சொல்லி, எக்காலத்தும் இன்பம் நீங்காதவனாகிய குசேலன், துவாரபாலகர்காவல் செய்கிறவாயில்களைத்தாண்டி அப்பால் போகும்போது. எ - று.

(வி - ரை.) மிக்கஆர்வம் தொக்கஆசி என்பன மிக்கார்வம் தொக்காசி எனத்தொகுத்தல் பெற்றது, ஆசி - வாழ்த்து, எப்போதும் கடவுளைத்தியானித்துக்கொண்டிருப்பவர்க்கு உளதாவது இன்பமேயாதலால், 'எக்காலுமின்ப மறுன்' என்றார். (௯௧௦)

விண்டார்தம் மணிமௌலி மிதித்துழக்குங் கருங்கழற்கால்
வண்டாடு நறுந்துளப மாலைதுயல் வருதடந்தோட்
கொண்டாடும் புகழ்க்கண்ணன் களிகூர்ந்து கோயில்புகக்
கண்டார்க ளாங்கிருக்குங் கார்க்குழன்மின் னார்பலரும்.

(ப - ரை.) விண்டார் - பகைவரது, மணிமௌலி - ரத்நகிரீடத்தை, மிதித்து உழக்கும் - மிதித்துத்துவைக்கிற, கருகழல்கால் - பெரிய வீரக்கழலணிந்த பாதத்தையும், வண்டுஆடு - வண்டுகள் மொய்க்கப்பெற்ற, நறு - மணமுள்ள, துளபமாலை - துளசிமாலையானது, துயல்வரு - அசையாநின்ற, தடம்தோள் - பெரியதோள்களையும், கொண்டாடும் - (யாவராலும்) கொண்டாடப்படுகிற, புகழ் - புகழையுமுடைய, கண்ணன் - ஸ்ரீ கண்ணபிரான், களிகூர்ந்து - களிப்புமிகுந்து, கோயில்புக - தன் அரண்மனையில் பிரவேசிக்க, ஆங்கு இருக்கும் - அவ்விடத்திலிருக்கிற, கார்குழல் - கருமையாகிய கூந்தலையுடைய, மின்னார்பலரும் - மாதர்கள்பலரும், கண்டார்கள் - பார்த்தார்கள். எ - று.

(பொ - ரை.) பகைவரது ரத்நகிரீடத்தை மிதித்துத் துவைக்கிற பெரிய வீரக்கழலணிந்த பாதத்தையும், வண்டுகள் மொய்க்கப்பெற்ற மணமுள்ள துளசிமாலையானது அசையாநின்ற பெரியதோள்களையும், (யாவராலும்) கொண்டாடப்படுகிற புகழையும் உடைய ஸ்ரீ கண்ணபிரான் களிப்பு மிகுந்து தன் அரண்மனையில் பிரவேசிக்க அவ்விடத்திலிருக்கிற கருமையாகிய கூந்தலையுடைய மாதர்கள்பலரும் பார்த்தார்கள். எ - று.

(வி - ரை.) விண்டார் தம் என்பதில் தம் சாரியை, மணி, மௌலி, இரண்டும் வடசொற்கள், கருங்கழல் என்புழிகருமை பெருமை, துயல்வரு என்பதற்குப் பகுதி துயல்வா. இன்னாரால் என்னுமையால் கொண்டாடும் என்பதற்கு யாவராலும் கொண்டாடப்படுகிற எனப்பொருளுரைக்கலாயிற்று. கூர்ந்து உரிச்சொல்லடியாகப் பிறந்த இறந்தகாலத்தெரிநிலைவினையெச்சம், கார்க்குழல் - மேகம்போலும் கூந்தல் எனினுமாம், மின்னார் - மின்கொடி போல்வார். (கூகக)

மலர்வதனஞ் சாய்க்குநரு மணியதரம் பிதுக்குநருஞ்
சிலதியரைச் சினக்குநருந் திருமிநடப் பவருமாய்க்
குலவுமறைய வற்கொன்றுங் கொடுத்திலன்போ வென்றானென்
றிலவவிதழ்ச் செய்யவா யியன்றனவெ லாமுரைப்பார்.

(ப - ரை.) (இவ்வாறு கண்டமாதர் பலருள்ளே) மலர்வதநம் சாய்க்குநரும் - தாமரை மலர்போலும் முகத்தை வளைப்பவரும், மணிஅதரம்பிதுக்குநரும் - அழகிய உதட்டைப் பிதுக்குவோரும், சிலதியரை சினக்குநரும் - சேடியரைக் கோவிப்போரும், திருமிநடப்பவரும் ஆய் - திரும்பி நடப்பவருமாகி, குலவு - விளங்குகிற, மறையவற்கு - வேதங்களில் வல்லவனாகிய குசேலனுக்கு, ஒன்றும் கொடுத்திலன் - ஒரு பொருளுங்கொடாதவனாய், போ என்றான் என்று - போவென்று சொன்னானென்று, இலவம்இதழ் - இலவம்பூ விதழ்போன்ற, செய்யவாய் - செவந்த வாயினிடத்தில், இயன்றன எல்லாம் உரைப்பார் - உண்டாகிய வார்த்தைகளெல்லாவற்றையும் சொல்லுவாராயினர். எ - று.

(பொ - ரை.) (இவ்வாறுகண்ட மாதர்பலருள்ளே) தாமரை மலர்போலும் முகத்தை வளைப்பவரும், அழகிய உதட்டைப் பிதுக்குவோரும், சேடியரைக்கோவிப்போரும், திரும்பி நடப்பவருமாகி, விளங்குகிற வேதங்களில் வல்லவனாகிய குசேலனுக்கு ஒரு பொருளுங்கொடாதவனாய்ப் போவென்று சொன்னானென்று இலவம்பூ விதழ்போன்ற செவந்த வாயினிடத்தில், உண்டாகிய வார்த்தைகளெல்லாவற்றையும் சொல்லுவாராயினர். எ - று.

(வி - ரை.) மணிஅதரம் - நவமணிகளு ளொன்றாகிய பவளம்போலும் அதரம் எனினுமமையும், இலவம்-முருக்கம்பூவாய் இயன்றன வெலாமுரைப்பார் என்றது வாயில்வந்தபடி யெல்லாம் பேசத்தொடங்கினர் என்றபடி.

கலிநிலைத்துறை.

தாயெதிர் வுற்ற சேயென வுள்ளந் தழைவுற்றான்
போயெதிர் கொண்டான் காலில் விழுந்தான் புனைவித்தா

னேயமு ளானென் றூரறி வித்தா னீங்கென்றான்
சேய்மைய னொத்தா னன்றிது வென்றார் சிலமாதர்.

(ப - ரை.) தாய்எதிர்வுஉற்ற சேய்என-தாயையெதிர்ப்பட்ட குழந்தை போல, உள்ளம் தழைவு உற்றான் - மனங்களித்தான், போய் எதிர்கொண்டான் - போய் எதிர்கொண்டழைத்தான், காலில் விழுந்தான் - காலில் விழுந்து வணங்கினான், புனைவித்தான் - அலங்கரிப்பித்தான், நேயம் உள்ளான் என்று - அன்புள்ளவனென்று, ஊர் அறிவித்தான் - ஊரார்க்குத்தெரிவித்தான், நீங்குஎன்றான் - போய்வாவென்றான், சேய்மையன் ஒத்தான் - தூரஸ்தனை நிகர்த்திருந்தான், இது நன்று என்றார் - இது நல்லகாரிய மென்றார்கள், சிலமாதர் - சில மாதர்கள். எ - று.

(பொ - ரை.) தாயையெதிர்ப்பட்ட குழந்தைபோல மனங்களித்தான், போய் எதிர்கொண்டழைத்தான், காலில்விழுந்து வணங்கினான், அலங்கரிப்பித்தான், அன்புள்ளவனென்று ஊரார்க்குத்தெரிவித்தான், போய்வாவென்றான், தூரஸ்த்தனை நிகர்த்திருந்தான், இது நல்ல காரியமென்றார்கள் சில மாதர்கள். எ - று.

(வி - ரை.) உள்ளம் தழைத்தல் - மனம் வாட்டமின்றிக்களித்தல், புனைவித்தல் - கந்தைத்துணி முதலியவற்றை யொழித்து நல்லாடை முதலியவற்றால் அலங்கரிப்பித்தல், நீங்கென்றான் என்றது ஒரு பொருளுங்கொடாது போய்வாவென்றான் என்றபடி, சேய்மையன்-தூரஸ்த்தன்,(அயலான்.)

பார்த்திபர் பல்லோர் காத்தனர் நிற்கப் பாரானாய்க்
கூர்த்தம திப்பூ சுரனெதிர் கொண்டான் கொண்டாடிப்
பூர்த்திமி குந்தா னந்தோ வாளா போகென்றான்
சீர்த்திமி குந்தா னன்றே யென்றார் சிலமாதர்.

(ப - ரை.) சீர்த்திமிகுந்தான்-கீர்த்தியில் மிகுந்தவனாகிய ஸ்ரீக்ருஷ்ண பகவான், பார்த்திபர்பல்லோர் - அரசர் பலரும், காத்தனர்நிற்க - காத்து நிற்க, பாரான்ஆய் - (அவர்களையெல்லாம்) பாராதவனாகி, கூர்த்தமதி-கூர்ந்த அறிவினையுடைய, பூசுரன் எதிர்கொண்டான் - வேதியனை யெதிர்கொண்டு, கொண்டாடி - அன்புபாராட்டி, பூர்த்திமிகுந்தான் - நிறைமனத்தையுடையவனானன், (இப்படியெல்லாம் செய்த இந்த க்ருஷ்ணபகவான்,) அந்தோ - ஐயோ, வாளாபோக என்றான் - (ஒன்றுங்கொடாமல்) சும்மா போவென்று சொன்னான், நன்றே - (இப்படி சொன்னது) நன்றோ, என்றார் - என்று சொன்னார்கள், சிலமாதர் - சில மாதர்கள். எ - று.

(பொ - ரை.) கீர்த்தியில் மிகுந்தவனாகிய ஸ்ரீ க்ருஷ்ணபகவான் அரசர் பலரும் காத்துநிற்க(அவர்களையெல்லாம்)பாராதவனாகி, கூர்ந்த அறிவினையுடைய வேதியனை யெதிர்கொண்டு அன்புபாராட்டி நிறைமனத்தையுடையவனானன், (இப்படி யெல்லாம் செய்த இந்த க்ருஷ்ணபகவான்) ஐயோ, (ஒன்றுங்கொடாமல்,சும்மா போவென்று சொன்னான், (இப்படி சொன்னது) நன்றோ என்று சொன்னார்கள் சிலமாதர்கள். எ - று.

(வி - ரை.) காத்தனர், எதிர்கொண்டான், என்பன முற்றெச்சங்கள், பூசுரன் - பூதேவன், (நிலவுலகத்துத்தேவன்), அந்தோ - இரக்கக்குறிப்பு, போகென்றான் - தொகுத்தல், நன்றே என்பதில் ஏகாரவினா எதிர்மறைப் பொருட்டு. (௲௧௪)

துன்றிய வன்பிற் கட்டிய ணைத்தான் றொழுதிட்டான்
பொன்றிகழ் பள்ளி மீதமர் வித்தான் புகழ்ந்திட்டா
னொன்றும ளித்திட் டானல னுதயத் துன்னூர்க்குச்
சென்றிடு கென்றா னன்றிது வென்றார் சிலமாதர்.

(ப - ரை.) துன்றிய அன்பின் - மிகுந்த அன்பினால், கட்டி அணைத்தான் - கட்டித்தழுவிக்கொண்டான், தொழுதிட்டான் - வணங்கினான், பொன்திகழ் - பொன்னாற் செய்யப்பட்டு விளங்குகிற, பள்ளிமீது - சயநத்தின்மேல், அமர்வித்தான் - எழுந்தருளப் பண்ணினான், புகழ்ந்திட்டான் - தோத்திரம் பண்ணினான், ஒன்றும் அளித்திட்டான் அலன் - ஒரு பொருளுங்கொடுத்தானல்லன், உதயத்து - சூரியோதய காலத்தில், உன் ஊர்க்கு சென்றிடுக என்றான் - உன் ஊர்க்குப்போகக் கடவாயென்றான், இது நன்று என்றார் - இது நல்ல செய்தியென்றார்கள், சிலமாதர்-சிலமாதர்கள். எ-று.

(பொ - ரை.) மிகுந்த அன்பினால் கட்டித்தழுவிக்கொண்டான், வணங்கினான், பொன்னாற் செய்யப்பட்டு விளங்குகிற சயநத்தின்மேல் எழுந்தருளப்பண்ணினான், தோத்திரம் பண்ணினான், ஒரு பொருளுங்கொடுத்தானல்லன், சூரியோதயகாலத்தில் உன் ஊர்க்குப்போகக் கடவாயென்றான், இது நல்ல செய்தியென்றார்கள் சிலமாதர்கள். எ - று.

(வி - ரை.) அன்பின் - இதில் இன் மூன்றாவதன் கருவிப்பொருளது, உதயம் - சூரியோதயம், சென்றிடு கென்றான் - தொகுத்தல். (௲௧௫)

எளியோன் பாவ மித்தனை தூர மேன்வந்தா
னளியார் தேனே பாலே யெனவினி தாப்பேசிக்
களியா நின்றோர் காசும் மீயான் கழிகென்றான்
றெளியார் நல்லோ ரிவனுரை யென்றார் சிலமாதர்.

(ப - ரை.) எளியோன் - ஏழைப்பார்ப்பான், இத்தனை தூரம் ஏன் வந்தான் - இவ்வளவுதூரம் என்னபயன் அடையவந்தான், பாவம் - (இவ்வாறு இவன் வந்ததற்குக்காரணம் இவனது) பாவமேயாம், அளி ஆர் - இனிமை மிகுந்த, தேனே பாலே என - தேனும் பாலும்போல, இனிது ஆ பேசி - இனிமையாகப்பேசி, களியாநின்று - களிப்படைந்து, ஓர் காசும் ஈயான் - ஓர் காசும் கொடாதவனாய், கழிக என்றான் - போவென்று சொன்னான், (ஆதலால்) இவன் உரை - இந்தக்கண்ணனது வார்த்தையை, நல்லோர் - பெரியோர், தெளியார் - நம்பமாட்டார்கள், என்றார் - என்று சொன்னார்கள், சிலமாதர் - சில மாதர்கள். எ - று.

(பொ - ரை.) ஏழைப்பார்ப்பான் இவ்வளவு தூரம் என்ன பயனடைய வந்தான்; (இவ்வாறு இவன் வந்ததற்குக்காரணம் இவனது) பாவமேயாம், இனிமை மிகுந்த தேனும்பாலும்போல இனிமையாகப்பேசிக் களிப்படைந்து ஓர் காசும் கொடாதவனைப் போவென்று சொன்னான், (ஆதலால்) இந்தக் கண்ணனது வார்த்தையைப் பெரியோர் நம்பமாட்டார்கள் என்று சொன்னார்கள் சிலமாதர்கள். எ - று.

(வி - ரை.) பாவம் - இரக்கக்குறிப்பிடைச் சொல் எனினுமாம், என் என்றவினா ஒருபயனும் இல்லாமல் எனப்பொருள்பட்டு நின்றது, இனிதா என் மேல் வருதலானும் என என்னும் உவமவுருபானும் அளி யென்பதற்கு இனிமையெனப் பொருள்கூறலாயிற்று, களியாநின்று என்பதற்குக் களித்து நின்று என்றுரைப்பினுமாம், காசும் என்னும் உம்மை இழிவுசிறப்பு, ஈயான் முற்றெச்சம், கழிகென்றான் - தொகுத்தல். தேனேபாலே என்னும் ஏகாரங்கள் எண்ணுப்பொருளன. (௬௧௬)

காடுங் நாடுங் நீந்தின னாகிக் கழியன்பி
னீடு நிரப்பு நீங்கிடு மென்னு நினைவுள்ளஞ்
சூடுபு வந்தா னிங்கொரு வேளைச் சோற்றுக்கே
தேடுவர் சான்றோ ரிவன்புக ழென்றார் சிலமாதர்.

(ப - ரை.) காடும் நாடும் நீந்தினன் ஆகி - காட்டையும் நாட்டையும் கடந்தவனாகி, கழி அன்பின் - மிக்க அன்பினால், நீடும் நிரப்பு - பெரிதாகிய வறுமை, நீங்கிடும் என்னும் - ஒழிந்துபோம் என்கின்ற, நினைவு - எண்ணத்தை, உள்ளம் சூடுபு-மனத்துட்கொண்டு, இங்கு ஒருவேளை சோற்றுக்கே - இவ்விடத்தில் ஒருவேளைச் சோற்றின்பொருட்டே, வந்தான் - இந்தக்குசேலன் வந்தனன், (ஆதலால்) இவன்புகழ் - இந்தக்கண்ணனது புகழை, சான்றோர் - பெரியோர்கள், தேடுவர் - தேடுவார்கள், என்றார் - என்று சொன்னார்கள், சிலமாதர் - சிலமாதர்கள். எ - று.

(பொ - ரை.) காட்டையும் நாட்டையும் கடந்தவனாகி, மிக்க அன்பினால் பெரிதாகிய வறுமை ஒழிந்துபோம் என்கின்ற எண்ணத்தை மனத்துட்கொண்டு, இவ்விடத்தில் ஒரு வேளைச்சோற்றின் பொருட்டே இந்தக்குசேலன் வந்தனன்; (ஆதலால்) இந்தக்கண்ணனது புகழைப்பெரியோர்கள் தேடுவார்கள். என்று சொன்னார்கள் சில மாதர்கள். எ - று.

(வி - ரை.) காடும் நாடும் என்பவற்றில் இரண்டனுருபுகள் தொக்கன, கழி - உரிச்சொல், கழியன்பு என்பது வினைத்தொகை நிலைத்தொடர் எனினுமாம், நிரம்பாமையாகிய வறுமையை நிரப்பென்றது மங்கலவழக்கு. சூடுபு - செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம், இங்கு - இந்தத்துவாரகைக்கு, சோற்றுக்கு என்ற குவ்வுருபு பொருட்டுப்பொருட்டு. தேடுவர் என்றது தேடார் என்னும் இழிவுப்பொருள் குறித்து வந்தது. சோற்றுக்கே என்னும் ஏகாரம் வேறொருபயன் அடைதற்கன்று எனப்பொருள் படலால் பிரிநிலை, தேற்றம் எனினுமாம். (௬௧எ)

குன்று லன்று மாரி தடுத்த கோமான்மற்
றொன்று நண்ப னென்றிவண் வந்தா னுறவுள்ள
மன்று னையன் னன்கொடு வந்த தையும்வாரித்
தின்று னென்று மீந்தில னென்றார் சிலமாதர்.

(ப - ரை.) அன்று - அக்காலத்தில், குன்றால்-கோவர்த்தனமலையால், மாரிதடுத்த - கல்மழையைத்தடுத்த, கோமான் - இறைவனாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான், ஒன்று - (நமக்குக்) கிடைக்கத்தகாத, நண்பன் என்று - சிநேக னென்று எண்ணி, இவண் வந்தான் - குசேலன் இவ்விடத்திற்கு வந்தான், (அங்ஙனமாக இந்தக்கண்ணபிரான்) உறவு-அந்தக்குசேலனது சிநேகத்தை, உள்ளம் - தன் மனத்தில், அன்றான் ஆய் - கொள்ளாதவனாகி, அன்னான் - அந்தக்குசேலன், கொடுவந்ததையும் - கொண்டுவந்த அவலையும், வாரித்தின் றான் - அள்ளித்தின்று விட்டான், ஒன்றும் ஈந்திலன் - ஒரு பொருளும் (அவனுக்குக்) கொடுத்தானில்லை, என்றார்-என்று சொன்னார்கள், சிலமாதர் - சிலமாதர்கள். எ - று.

(பொ - ரை.) அக்காலத்தில் கோவர்த்தன மலையால் கல்மழையைத் தடுத்த இறைவனாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான்(நமக்குக்)கிடைக்கத்தகாத சிநே கனென்று எண்ணிக்குசேலன் இவ்விடத்திற்கு வந்தான். (அங்ஙனமாக, இந் தக்கண்ணபிரான்) அந்தக்குசேலனது சிநேகத்தைத் தன் மனத்தில் கொள் ளாதவனாகி அந்தக்குசேலன் கொண்டுவந்த அவலையும் அள்ளித்தின்று விட் டான். ஒரு பொருளும் (அவனுக்குக்) கொடுத்தானில்லையென்று சொன்னார் கள் சிலமாதர்கள். எ - று.

(வி - ரை.) மாரிதடுத்த என்றகுறிப்பால் குன்று கோவர்த்தன கிரி யைக்குறித்தது, கோமான் என்பதற்குப் பசுக்களையுடைய பெரியோன் எனி னுமாம். ஒன்று நண்பன் என்பதனை ஒன்றுஆம் நண்பன் எனப்பிரித்து ஒப்பற் றதாகிய நட்பையுடையவன் என்றுரைப்பினுமமையும், அன்றல்-பொருந்தல்.

ஒழுங்குறு முற்றவ மில்லவர் யார்நட் புற்றாலென்
விழுங்குமி டித்துயர் தீரரு நீரினர் மெய்யீதா
லழுங்கலி லாதுல காள்பவர் தேவிய ரானாலுஞ்
செழுங்கைத ரிப்பது மண்வளை யென்றார் சிலமாதர்.

(ப - ரை.) ஒழுங்குஉறும் - முறையாகப்பொருந்திய, முன் தவம் இல் லவர் - முற்காலத்துச் செய்ததவம் இல்லாதவர்கள், யார் நட்பு உற்றால் என்- எவரது சிநேகத்தை யடைந்தாலும் என்ன பயனுண்டாகும், விழுங்கும் - (தம்மை) விழுங்கின, மிடித்துயர் - வறுமைத்துன்பத்தை, தீர் அரு-நீக்கிக் கொள்ளுதற்கரிதாகிய, நீரினர் - தன்மையுடையவரேயாவர், ஈது - இந்தச் செய்தி, மெய் - உண்மையேயாகும், அழுங்கல் இல்லாது - வருந்துதல் இல் லாமல், உலகு ஆள்பவர் - இவ்வுலகமுழுதும் ஆள்பவராகிய அரசரது, தேவி யர் ஆனாலும் - மனைவியர் ஆயினும், செழு கை தரிப்பது - செழுமையாகிய

அவரது கைகளில் அணிவது, மண்வளை - மண்வளையலேயாம், என்றார் - என்று சொன்னார்கள், சிலமாதர் - சிலமாதர்கள். எ - று.

(பொ - ரை.) முறையாகப் பொருந்திய முற்காலத்துச் செய்ததவம் இல்லாதவர்கள் எவரது சிநேகத்தையடைந்தாலும் என்ன பயனுண்டாகும்; (தம்மை)விழுங்கின வறுமைத்துன்பத்தை நீக்கிக்கொள்ளுதற்கரிதாகிய தன்மையுடையவரே யாவர், இந்தச்செய்தி உண்மையேயாகும், வருந்துதலில்லாமல் இவ்வுலகமுழுதும் ஆள்பவராகிய அரசரது மனைவியராயினும் செழுமையாகிய அவரது கைகளில் அணிவது மண்வளையலேயாம் என்று சொன்னார்கள் சிலமாதர்கள். எ - று.

(வி - ரை.) ஒழுங்குறுதவம் என இயையும், ஒழுங்குறுதவம் என்றது கூடாவொழுக்கமுதலியவற்றை யொழித்துச்செய்த தவத்தை. இல்லவர் - எதிர்மறைக்குறிப்பு வினையாலணையும்பெயர். என் என்றவினா ஒரு பயனும் இல்லை என்னும் பொருள்பட்டு நின்றது. விழுங்குதல் - இலக்கணை. மிடித்துயர் - மூன்றனுருபும் பயனுமுடன்றொக்க தொகைநிலைத்தொடர். நீர் - தன்மை, (குணம்), அழுங்கலிலாது என்றது-இன்பத்தோடுகூடி என்றபடி, உலகாள்பவர் தேவியரானாலும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. அவரது கையின் ஈகைச்சிறப்புத்தோன்ற, 'செழுங்கை' என்றார். (௩௧௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இங்கிவனம் மறையோன்பால் வைத்ததயை யெலாமறிந்தோ மென்
னே யென்னே, கங்கணங்கண் ணுறுவதற்குக் கண்ணடியும் வேண்டுங்
கொல் கருங்கண் ணீர்கா, டுங்கமுட னொருவேளைச் சோறுண்ட துயர்ந்
தவனை துளைத்துப் போகி, யங்குவரு சிகரியொன்று பிடித்ததுபோ
லாயிற்றென் றறைந்தார் சில்லோர்.

(ப - ரை.) கருகண்ணீர்காள் - கருங்கண்களையுடைய பெண்களே, இங்கு இவன் - இப்பொழுது இந்தக் க்ருஷ்ணபகவான், அ மறையோன் பால் - அவ்வேதியனாகிய குசேலனிடத்து, வைத்ததயை எல்லாம் - வைத்த கிருபைமுழுதும், அறிந்தோம் - அறிந்துகொண்டோம், என்னே என்னே - என்னை என்னை, கங்கணம் - கங்கணத்தை, கண்ணுறுவதற்கு - பார்ப்பதற்கு, கண்ணடியும் வேண்டுங்கொல் - கண்ணாடியும் வேண்டுமோ, துங்கமுடன் - பரிசுத்தமாக, ஒருவேளைச் சோறுஉண்டது - ஒருவேளைச்சோற்றை இவ்வேதியன் புசித்ததை, (நோக்குமிடத்து) உயர்ந்தவனை-உயர்ந்த மலையை, துளைத்துப்போகி - துளைத்துக்கொண்டுபோய், அங்குவரு - அவ்விடத்தில் நின்றும்வந்த, சிகரி ஒன்று - ஒரு எலியை, பிடித்ததுபோல் ஆயிற்று - பிடித்ததைப் போலாயிற்று, என்று அறைந்தார் - என்று சொன்னார்கள், சில்லோர் - சிலமாதர்கள். எ - று.

(பொ - ரை.) கருங்கண்களையுடைய பெண்களே, இப்பொழுது இந்த க்ருஷ்ணபகவான் அந்த வேதியனாகிய குசேலனிடத்து வைத்த கிருபை

முழுதும் அறிந்துகொண்டோம், என்னை என்னை,கங்கணத்தைப் பார்ப்பதற்குக்கண்ணாடியும் வேண்டுமோ, பரிசுத்தமாக ஒரு வேளைச்சோற்றை யிவ்வேதியன் புசித்ததை(நோக்குமிடத்து,)உயர்ந்த மலையைத் தோண்டிக்கொண்டு போய், அவ்விடத்தில் நின்றும் வந்த ஒரு எலியைப் பிடித்ததைப்போலாயிற்று என்று சொன்னார்கள் சிலமாதர்கள். எ - று.

(வி - ரை.) 'இங்கிவனம் மறையோன்பால் வைத்த தயை யெலாமறிந்தோம்' என்றது தயை சிறிதுமில்லையென இகழ்ந்து கூறியவாறு, கங்கணம்- கையிலணிவதோர் ஆபரணவிசேடம், கருங்கண் என்பதில் கருமை - இயற்கையும் அஞ்சனத்தாலாகிய செயற்கையும் ஆகிய கருநிறம், சிகரி - எலி.

நரபதிபால் வேண்டுவன பெற்றுவருந் தலைவனென நடவை பார்த்துப்,பரவுபுகழ் மனையிருக்கு மந்தோநன் மைந்தருமப் பரிசே நிற்பர், விரவிலிவ னென்செய்வான் சிந்துபழங் கந்தையன்றி வேறொன் றில்லான், புரவுடையா னென்பனொரு கலையுமளித் திலனென்று புகன்றார் சில்லோர்.

(ப - ரை.) பரவு புகழ்மனை - யாவருந்துதித்தற்குரிய புகழமைந்த (இவ்வேதியன்) மனைவியானவள், தலைவன் - நம்கணவன், வேண்டுவன - நமக்குவேண்டும் பொருள்களெல்லாம், நரபதிபால் - நரேந்திரனாகிய ஸ்ரீ க்ருஷ்ணபகவானிடத்தில், பெற்றுவரும் என - பெற்றுவருவானென்று, நடவைபார்த்து இருக்கும் - வழிபார்த்துக்கொண்டிருப்பாள், அந்தோ - ஐயோ, நல்மைந்தரும் - நல்ல புதல்வரும், அப்பரிசேநிற்பர் - அத்தன்மையராகவேயிருப்பார்கள், விரவில் - (அந்த மனைமக்கள்) வந்து சூழ்ந்துகொண்டால், இவன் - இந்தவேதியன், என் செய்வான் - யாதுசெய்வான், சிந்து - கிழிந்த, பழ கந்தை அன்றி - பழங்கந்தைத் துணியேயன்றி, வேறு ஒன்று இல்லான் - வேறொரு புதுத் துணியுமில்லாதவனா யிருக்கின்றான், புரவு உடையான் என்பன் - காவற்றொழிலை யுடையவனென்று சொல்லப்பட்டவனாகிய ஸ்ரீ கண்ணபிரான், ஒருகலையும் அளித்திலன் என்று - ஒரு ஆடையையும் தந்திலனென்று, புகன்றார்-சொன்னார்கள், சில்லோர்-சிலமாதர்கள்.

(பொ - ரை.) யாவரும் துதித்தற்குரிய புகழமைந்த (இவ்வேதியன்) மனைவியானவள், நம்கணவன் நமக்குவேண்டும் பொருள்களெல்லாம் நரேந்திரனாகிய ஸ்ரீ க்ருஷ்ணபகவானிடத்தில் பெற்றுவருவானென்று வழிபார்த்துக்கொண்டிருப்பாள், ஐயோ, நல்ல புதல்வரும் அத்தன்மையராகவேயிருப்பார்கள் (அந்த மனைமக்கள்) வந்து சூழ்ந்து கொண்டால் இந்த வேதியன் யாது செய்வான், கிழிந்த பழங்கந்தைத்துணியேயன்றி வேறொரு புதுத் துணியுமில்லாதவனாயிருக்கிறான், காவற்றொழிலை யுடையவனென்று சொல்லப்பட்டவனாகிய ஸ்ரீ கண்ணபிரான் ஒரு ஆடையையும் தந்திலனென்று சொன்னார்கள் சிலமாதர்கள். எ - று.

(வி - ரை.) நடவை - தொழிலாகுபெயர், மனை - இடவாகுபெயர், புரவு - தொழிற்பெயர், புரவுடையான் - காவலன் (அரசன்.) (கூஉக)

எத்துணைய செல்வமிகுத் திருந்தாலு மீத்துவத்த லிவன்பா லில்லை, மெத்துநய மொழிகளான் மயங்கியொன்றுங் கேளாளுய் விரைந்து போனான், பித்துறுமா மறையவனு மிவனுமகிழ்ந் தாறனுப்பிப் பெயர்ந்து வந்தான், கொத்துறுமிந் நட்பிருந்தென் னிராதொழிந்தா லென்னென்று குயின்றார் சில்லோர்.

(ப - ரை.) எத்துணைய செல்வம் - எவ்வளவாகிய செல்வம், மிகுத்து இருந்தாலும் - அதிகரித்திருந்தாலும், ஈத்து உவத்தல் - (இரவலர்க்கு) கொடுத்துச் சந்தோஷிக்குங்குணம், இவன்பால் இல்லை - இந்தக் கண்ணனிடத்திலில்லை, மெத்து - மெத்தென்ற, நயம்மொழிகளால் - இதவார்த்தைகளால், பித்துஉறு மாமறையவனும் - பித்தம்பிடித்த பெரியவேதியனும், மயங்கி - மயக்கமடைந்து, ஒன்றும்கேளாளுய் - ஒருபொருளுங்கேட்காமல், விரைந்துபோனான்-விரைந்துசென்றான், இவனும்-இந்தக்கண்ணனும், மகிழ்ந்து - சந்தோஷித்து, ஆறு அனுப்பி - வழியனுப்பி, பெயர்ந்து வந்தான் - மீண்டுவந்தான், கொத்துஉறும் - மிகுதியாகப்பொருந்திய, இ நட்பு - இந்த நட்பானது, இருந்து என் - இருந்தால் என்னபயன், இராது ஒழிந்தால்என் - இராதொழிந்தால் என்ன நஷ்டம், என்று குயின்றார்-என்று சொன்னார்கள், சில்லோர் - சிலமாதர்கள். எ - று.

(பொ - ரை.) எவ்வளவாகிய செல்வம் அதிகரித்திருந்தாலும் (இரவலர்க்குக்) கொடுத்துச் சந்தோஷிக்குங்குணம் இந்தக் கண்ணனிடத்திலில்லை, மெத்தென்ற இதவார்த்தைகளால் பித்தம்பிடித்த பெரியவேதியனும் மயக்கமடைந்து ஒருபொருளுங் கேட்காமல் விரைந்துசென்றான, இந்தக் கண்ணனும் சந்தோஷித்து வழியனுப்பி மீண்டுவந்தான், மிகுதியாகப்பொருந்திய இந்த நட்பானது இருந்தால் என்னபயன், இராதொழிந்தால் என்ன நஷ்டம், என்று சொன்னார்கள் சிலமாதர்கள். எ - று.

(வி - ரை.) "ஈத்துவக்கு மின்ப மறியார்கொ லுமுடைமை - வைத்திழக்கும் வன்கணவர்" என் புழிப்போல ஈந்துவக்கும் எனற்பாலது ஈத்துவக்கும் எனவலித்தல் பெற்றது, எத்துணைச் செல்வமுடையாரும் ஈத்துவத்தற்குணமில்வழி அவர் செல்வப்பயனடைந்திலர் என்பதுதோன்ற, 'எத்துணைய செல்வமிகுத்திருந்தாலு மீத்துவத்தலிவன் பாலில்லை' என்றார், நயமொழி - விநயவார்த்தை, ஆறனுப்பி - வழிவிட்டு, பெயர்தல்-மீளல், குயின்றார் என்பதற்குப்பகுதி குயில். (௬௨௨)

அம்மறையோ னொருபொருளுங் கேளாளுய்ச் சென்றதையா மறிந்தோ மன்ற, மம்மர்தபுத் தீத்துவப்பார்க் கானிலன்றோ கேட்பவர்க்கு வாயுண் டாகும், விம்மலுறு நசையினரு மிவனிடத்துக் கேட்பதற்கு மேவா ரென்றாற், றம்மையுணர்ந் துயர்ந்தவரோ கேட்கத்தக்கவரென்றார் தடங்கட் சில்லோர்.

(ப - ரை.) அ - அந்த, மறையோன் - வேதியன், ஒருபொருளும் கேளான்ஆய் - ஒருபொருளையும் இரவாதவனுகி, சென்றதை - போனதை,

யாம் அறிந்தோம் - நாம் அறிந்துகொண்டோம், மம்மர்தபுத்து - (இரவலரது) துன்பத்தையொழித்து, ஈத்து உவப்பார் - ஈந்துவப்போனை, காணில் அன்றே - கண்டாலல்லவா, கேட்பவர்க்கு - இரப்பவர்க்கு, வாய்உண்டாகும் - (கேட்க) வாய்வரும், விம்மல்உறும் நசையினரும் - மிகுதியாகிய ஆசையுள்ளவரும், இவனிடத்து - இந்தக் கண்ணனிடத்தில், கேட்பதற்கு - யாசிப்பதற்கு, மேவார் என்றால் - வரமாட்டார்களென்றால், தம்மை உணர்ந்து - தம்மைத்தாம் அறிந்து, உயர்ந்தவரோ - உயர்ந்த ஞானியரோ, கேட்கத்தக்கவர் - கேட்கத்தகுந்தவர், என்றார் - என்று சொன்னார்கள், தடம்கண் சில்லோர் - விசாலமான கண்களையுடைய சிலமாதர்கள். எ - று.

(பொ - ரை) அந்த வேதியன் ஒருபொருளையும் இரவாதவனாகிப் போனதை நாம் அறிந்துகொண்டோம், (இரவலரது) துன்பத்தையொழித்து ஈந்துவப்போனைக் கண்டாலல்லவா, இரப்பவர்க்கு (கேட்க) வாய்வரும், மிகுதியாகிய ஆசையுள்ளவரும் இந்தக் கண்ணனிடத்தில் யாசிப்பதற்கு வரமாட்டார்களென்றால், தம்மைத்தாம் அறிந்து உயர்ந்தஞானியரோ கேட்கத் தகுந்தவர் என்று சொன்னார்கள், விசாலமான கண்களையுடையசிலமாதர்கள்.

(வி - ரை.) மன்ற - அசையிடைச்சொல், காணிலன்றே கேட்பவர்க்கு வாயுண்டாகும் என்றதனால் காணுவிடத்து வாயுண்டாகா தென்றதாயிற்று. நசையினரும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. நசையினரும் மேவார் என்றதனால் நசையற்றவனாகிய குசேலன் மேவான் என்பது சொல்லாமேயமைந்தது, தம்மை யுணர்தலாவது - தம்மை வேறு பொருளாயுணராது தம்மைத்தாமாகவே யுணர்தல். "உன்னை நீயுணர்ந்தாயாகிலுனக்கொரு கேடுமில்லை" என்றார் பிறரும். (கூஉகூ)

என்னினைத்து வந்தானோ வவனிவனும் யாதுநினைத் திருக்கின் றானோ
பன்னரிய விவன்செய்யு மாயையெவ ராலறியப் படும்வாய் வந்த
வின்னனவெ லாம்பேச லறிவன்று நமக்கெனவண் டிரங்குங் கூந்தன்
மின்னனைய நுண்ணிடைப்பே ரமர்க்கண்மட மாதர்சிலர்விளம்பினாரே.

(ப - ரை.) அவன் - அந்தவேதியன், என் நினைத்து வந்தானோ - யாது நினைத்துவந்தானோ, இவனும் - இந்தக் கண்ணனும், யாது நினைத்து இருக்கின்றானோ - யாது நினைத்திருக்கின்றானோ, பன்அரிய - சொல்லுதற்கரிய, இவன் செய்யும்மாயை - இந்தக்கண்ணன் செய்கிறமாயையானது, எவரால் அறியப்படும் - யாவராலறியப்படும், வாய்வந்த - வாயில்வந்தனவாகிய, இன்னன எல்லாம்பேசல் - இவை போல்வன யாவையும்பேசுதல், நமக்கு அறிவு அன்றுஎன - நமக்கு அறிவல்லவென்று, வண்டு - வண்டுகள், இரங்கும் - ஒலித்தற்கிடமாகிய, கூந்தல்-கூந்தலையும், மின் அனைய - மின்னற்கொடியை நிகர்த்த, நுண் இடை - நுட்பமாகிய இடையையும், பேர்அமர்கண் - பெரும் போர் செய்கிற கண்களையும் உடைய, மடமாதர்சிலர்-இளம்பெண்கள் சிலர், விளம்பினார் - சொன்னார்கள். எ - று.

(பொ-ரை.) அந்தவேதியன் யாதுநினைத்துவந்தானோ, இந்தக்கண்ணனும் யாதுநினைத்திருக்கிறானோ, சொல்லுதற்கரியஇந்தக்கண்ணன்செய்கிற மாயை யானது யாவரால் அறியப்படும், வாயில் வந்தனவாகிய இவைபோல்வன யாவையும்பேசுதல்நமக்குஅறிவல்லவென்று, வண்டுகள் ஒலித்தற்கிடமாகிய கூந்தலையும் மின்னற்கொடியை நிகர்த்தநுட்பமாகிய இடையையும் பெரும்போர் செய்கிற கண்களையும் உடைய இளம்பெண்கள்சிலர் சொன்னார்கள். எ-று.

(வி - ரை.) வந்தானோ, இருக்கின்றானோ என்னும் ஓகாரங்கள் ஐயப் பொருளன, பன் - முதனிலைத்தொழிற்பெயர், ஸ்ரீ கண்ணபிரான் அகடித கடனா சமர்த்தனாதலால் 'பன்னரியவிவன் செய்யுமாயையெவராலறியப்படும்' என்றார், வண்டிரங்குதல் கூந்தலில் அணிந்தமலர்த்தேன் பொருட்டென்க.

சிற்றிடைப்பே ரமர்க்கண்மட மாதர்பல ரிவைமுதலாச் செப்பி நிற்கக்
கற்றவரேத் தெடுக்குமுனி துவரைநெடுந் தெருப்பலவுங் கடந்து போகி
வற்றுதலில் பெருங்கடனு நீங்குபுதன் னூர்க்கேகும் வழியைக் கூடி
நற்றவமாந் தன்னிலக்கிற் சிந்தையுற மிகமகிழ்ந்து நடக்குங் காலை.

(ப - ரை.) சிறு இடை - சிற்றிடையையும், பேர் அமர் கண் - பெரிய போர் செய்தலையுடைய கண்களையும், மடம் - இளமையையுமுடைய, மாதர் பலர் - பலமாதர்கள், இவை முதலா - இவை முதலாகிய வார்த்தைகளை, செப்பி நிற்க - சொல்லிக்கொண்டே நிற்க, கற்றவர் - வீட்டு நூலைக்கற்றவர்கள், ஏத்தெடுக்கும் - புகழ்கின்ற, முனி - குசேலமுனிவன், துவரை - துவாரகாபுரியின், நெடு தெரு பலவும் - நெடுந்தெருக்கள் பலவற்றையும், கடந்து போகி-கடந்து சென்று, வற்றுதல் இல் - வடிதல் இல்லாத, பெரு கடலும்- பெரிய கடலினையும், நீங்குபு - கடந்து, தன் ஊர்க்கு ஏகும் வழியை கூடி - தன்னூருக்குச் செல்லுதற்குரிய வழியையும் அடைந்து, நல்தவம் ஆம் - நல்ல தவமாகிய, தன் இலக்கில் - தனது இலக்ஷியத்தில், சிந்தை உற - தன் மனம் பொருந்த, மிக மகிழ்ந்து - மிகவும் சந்தோஷித்து, நடக்குங்காலை - நடக்கும்போது. எ - று.

(பொ - ரை.) சிற்றிடையையும் பெரிய போர் செய்தலையுடைய கண்களையும் இளமையையுமுடைய பலமாதர்கள் இவை முதலாகிய வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டேநிற்க, வீட்டு நூலைக்கற்றவர்கள் புகழ்கின்ற குசேலமுனிவன் துவாரகா புரியின் நெடுந்தெருக்கள் பலவற்றையும் கடந்துசென்று வடிதலில்லாத பெரிய கடலினையும் கடந்து தன்னூருக்குச் செல்லுதற்குரிய வழியையும் அடைந்து நல்ல தவமாகிய தனது இலக்ஷியத்தில் தன்மனம் பொருந்த மிகவும் சந்தோஷித்து நடக்கும்போது. எ - று.

(வி - ரை.) குசேலமுனிவனைப் புகழ்ந்துரைப்போர் வீட்டு நூல்களைக்கற்றறிந்த அறிஞர் ஆதல் வேண்டுமாதலால் கற்றவர் என்பதற்கு வீட்டு நூல்களைக் கற்றவர் என்று உரை கூறலாயிற்று, துவரை - த்வாரகா என்னும் வடசொற்றிரிபு, துவரைத்தெருவென இயையும், போகி யென்பதற்

குப்பகுதி - போகு, நீங்குபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம், இது கூடி யென்னும் வினைகொண்டது, இலக்கு - குறி. (கூஉ0)

அருந்தவர்கள் புகழ்சீர்த்தி யமைந்ததிருக் கண்ணபிரா னருளி னாலே
பொருந்துவிர தாதிகளான் மிக்கிளைத்த தன்னுடம்பு பூரிப் புற்ற
திருந்தபழங் கந்தைசெழும் பொன்னாடை யாயிற்று விலங்குங் கண்டப்
பெருந்துளப மணியாரம் பெருவிலைமுத் தாரமாப் பிறங்கிற் றாலோ.

(ப - ரை.) அருதவர்கள்புகழ்-அருமையாகியதவத்தினர் புகழ்தற்குரிய, கீர்த்தி அமைந்த-கீர்த்தி நிரம்பிய, திருகண்ணபிரான்-ஸ்ரீகண்ணபிரானது, அருளினாலே-கிருபா விசேஷத்தால், பொருந்து விரதாதிகளால்- (குசேலன் தான்) அனுஷ்டித்த விரதம் முதலியவைகளால், மிக்கு இளைத்த-மிகுதியாக மெலிந்த, தன்உடம்பு-தன் சரீரமானது, பூரிப்பு உற்றது - பூரித்தலையடைந்தது, இருந்த பழங்கந்தை - இவனுக்குரிமையாய் இருந்த பழங்கந்தைத்துணியானது, செழு பொன் ஆடை ஆயிற்று - செழுமையாகிய சுவர்ணவஸ்திரமாயிற்று, இலங்கும்-விளங்குகின்ற, கண்டம்-திருக்கழுத்திலணிந்த, பெரு-பெரிதாகிய, துளப மணி ஆரம் - துளசிமணிமாலிகை, பெருவிலை-உயர்ந்த விலையுள்ள, முத்து ஆரம் ஆ - முத்து மாலையாக, பிறங்கிற்று - விளங்கிற்று.

(பொ - ரை.) அருமையாகிய தவத்தினர் புகழ்தற்குரிய கீர்த்திநிரம்பிய ஸ்ரீகண்ணபிரானது கிருபாவிசேஷத்தால் (குசேலன் தான்) அனுஷ்டித்த விரதம் முதலியவைகளால் மிகுதியாகமெலிந்த தன்சரீரமானது பூரித்தலையடைந்தது, இவனுக்குரிமையாய் இருந்த பழங்கந்தைத்துணியானது செழுமையாகிய சுவர்ண வஸ்திரமாயிற்று, விளங்குகின்ற திருக்கழுத்திலணிந்த பெரிதாகிய துளசிமணி மாலிகை உயர்ந்த விலையுள்ள முத்துமாலையாகவிளங்கிற்று.

(வி - ரை.) அருந்தவர்கள் என்பதில் அருமை செய்தற்கருமை, ஸ்ரீகண்ணபிரான் பற்றற்றார் வாழ்த்தும் பரமபுருடனாதலால் 'அருந்தவர்கள் புகழ் கீர்த்தியமைந்த திருக்கண்ணபிரான்' என்றும், அவனருள் உண்டாயின் பலிக்காத காரியங்களும் பலிக்கும் என்பதுதோன்ற "அருளினாலே, பொருந்து விரதாதிகளான் மிக்கிளைத்த தன்னுடம்பு பூரிப்புற்ற திருந்த பழங்கந்தை செழும்பொன்னாடையாயிற்று விலங்குங்கண்டப், பெருந்துளப மணியாரம் பெருவிலை முத்தாரமாப் பிறங்கிற்றாலோ" என்றுங்கூறினார், இருந்த என்றது தற்கிழமைப்பொருள் போலிருந்த என்றபடி, ஆல் இரண்டும் அசைகள், ஒகாரமும் அது. பொன்னாடையை பீதாம்பரம் என்பர் வடநூலார். கண்டம் - வடசொல். (கூஉக)

செவியணிபுல் லியபொருள்க ளரதநகுண் டலமாகித் திகழ்ந்த வான்ற
சவியணிகைவிரற்றருப்பைப்பவித்திரம்பொன்னாழியாய்த் தயங்கத்தோ
புவியணியுங் கட்டழகு காமனுங்கா முறுசிறப்பிறபொலிந்ததப் பாங்கும்
கவியணியு மதகளிற்றுக் கதிகமாம் வலியுமுடற் கலந்த தன்றே.

(ப - ரை.) செவிஅணி - காதில்தரித்த, புல்லியபொருள்கள் - அற்பமான பொருள்கள், அரத நகுண்டலம் ஆகிதிகழ்ந்த - ரத்ந குண்டலங்களாய்

விளங்கின, ஆன்றசவி அணி - மிகுந்த ஒளியுள்ள, கைவிரல் தருப்பை பவித்திரம் - கைவிரலிலணிந்த தருப்பைப் பவித்திரமானது, பொன்ஆழி ஆய்ததைந்தது - பொன்மோதிரமாய் விளங்கிற்று, ஓங்கும் - உயர்ந்த, புவி அணியும் கட்டழகு - உலகத்தை யலங்கரிக்கத்தகுந்த பேரழகானது, காமனும் - மன்மதனும், காமுறு - விரும்பத்தகுந்த, சிறப்பின் - சிறப்போடு, பொலிந்தது - பிரகாசித்தது, கவி அணியும் - கவிகளால் அலங்கரித்துச் சொல்லப்படுகிற, மதகளிற்றுக்கு - மதயானையினும், அதிகம் ஆம் - அதிகமாகிய, வலியும் - பலமும், உடல் கலந்தது - உடம்பிற்பொருந்திற்று. எ - று.

(பொ - ரை.) காதில்தரித்த அற்பமான பொருள்கள் ரத்ந குண்டலங்களாய் விளங்கின, மிகுந்த ஒளியுள்ள கைவிரலிலணிந்த தருப்பைப்பவித்திரமானது பொன்மோதிரமாய் விளங்கிற்று, உயர்ந்த உலகத்தை யலங்கரிக்கத்தகுந்த பேரழகானதுமன்மதனும் விரும்பத்தகுந்த சிறப்போடுபிரகாசித்தது, கவிகளால் அலங்கரித்துச் சொல்லப்படுகிற மதயானையினும் அதிகமாகிய பலமும் உடம்பிற்பொருந்திற்று. எ - று.

(வி - ரை.) குசேலன் இயற்கை யழகிற்சிறந்தவன் என்பது தோன்ற 'புவியணியுங்கட்டழகு' என்றார். காமுறல் - விரும்பல், காமம்உறு எனப்பிரித்து விருப்ப மிகுதற்குரிய எனினுமாம், சிறப்பின் என்பதில் இன்மூன்றுவதன் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது, களிற்றுக்கு என்பதில் குவ்வுருபு ஐந்தாவதன் உறழ்ச்சிப்பொருளில் வந்தது, அம்ம - உரையசை. (கூஉஎ)

பாயபெரு மிடிமுன்னே தனக்கொழிந்த வவித்தையெனப் பாறி மாய்
தேயவழி நடையிளைப்பு முதலியவெ லாஞ்சாற்று மின்றாய் விட்ட [ந்த
காயவெயில் குளிர்ந்ததுபா லையுநீரூ றிற்றிளமென் காலும் வீசிற்
றாயவிவை யனைத்துமுணர்ந் திறும்பூது மிகக்கொண்டா னன்ன காலை.

(ப - ரை.) பாய - பரவியிருந்த, பெருமிடி - மிகுந்தவறுமையானது, முன்னே - முன்னமே, தனக்கு ஒழிந்த - (தத்துவஞானத்தால்) தனக்கு நீங்கின, அவித்தை என - அவித்தையைப்போல, பாறிமாய்ந்தது - அழிந்தொழிந்தது, ஏய - (முன்னே) பொருந்தின, வழிநடை இளைப்பு முதலிய எல்லாம் - வழிநடத்தலாலுண்டாகிய களைப்பு முதலியயாவும், சற்றும் - சிறிதும், இன்று ஆய்விட்ட - இல்லையாய் விட்டன, காயவெயில் - காய்ந்தவெயிலானது, குளிர்ந்தது - குளிர்ச்சியடைந்தது, பாலையும் - (வழியிலுள்ள) பாலைநிலமும், நீர் ஊறிற்று - நீர் சுரக்கப்பெற்றது, இளமென்காலும் வீசிற்று - இளமையாகிய குளிர் காற்றும் வீசிற்று, ஆய இவை அனைத்தும் - ஆகிய இவையெல்லாம், உணர்ந்து - அறிந்து, மிகஇறும்பூதுகொண்டான் - (குசேலன்) மிகுதியாக ஆச்சரியமடைந்தான், அன்னகாலை - அந்தச்சமயத்தில்.

(பொ - ரை.) பரவியிருந்த மிகுந்த வறுமையானது, முன்னமே (தத்துவஞானத்தால்) தனக்கு நீங்கின அவித்தையைப்போல அழிந்தொழிந்தது, (முன்னே) பொருந்தின வழிநடத்தலாலுண்டாகிய களைப்பு முதலிய யாவும் சிறிதும் இல்லையாய் விட்டன, காய்ந்த வெயிலானது குளிர்ச்சியடைந்தது, (வழியிலுள்ள) பாலைநிலமும் நீர் சுரக்கப்பெற்றது, இளமையாகிய குளிர்

காற்றும் வீசிற்று, ஆகிய இவை யெல்லாம் அறிந்து, (குசேலன்) மிகுதியாக ஆச்சரியமடைந்தான், அந்தச் சமயத்தில். எ - று.

(வி - ரை.) பாய - பரவிய என்பதன்மரூஉ. பரவு என்னும் பகுதி ஈறு தொக்கு பா என நின்று யகரவிடைநிலை பெற்றதெனினுமாம், அவித்தை - அவித்யா என்னும் வடசொற்றிரிபு, அது மெய்ப்பொருள் அல்லவற்றை மெய்ப்பொருள் என்று உணரும் விபரீதஞானம். அதாவது மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் இல்லையெனவும் மற்றும் இத்தன்மையனவும், சொல்லும் மயக்கநூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத்துணிதல், குற்றியை மகனென்றும் இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் அது, மருள், மயக்கம், விபரீதவுணர்வு, அவிச்சை என்பன ஒரு பொருட்கிளவி, பாறுதல்-ஓடல், மாய்தல் - இருந்தவிடமும் தெரியாமற் போதல். (௬௨அ)

### கலிவிருத்தம்.

ஒழுகுங்கட வரையுங்கதி ருறழ்செம்பொனி ரதமு
மெழுவெங்கதி யுளைபொங்கிய வியறங்கிய பரியுங்
கொழுநின்றவை யயில்கொண்டவர் குழுவும்பல குழுமப்
பழுதென்பதி லவர்மன்னவர் பலர்வந்தெதிர் கொண்டார்.

(ப - ரை.) ஒழுகும் - ஒழுகாநின்ற, கடம் - மதநீரையுடைய, வரையும் - மலைபோன்ற யானைகளும், கதிர் உறழ் - சூரியனை நிகர்த்து விளங்குகின்ற, செம்பொன் - சிவந்த பொன்மயமான, இரதமும் - தேர்களும், எழு வெம்கதி - எழுந்து செல்லுகின்ற வேகமான நடையையுடைய, உளைபொங்கிய - பிடரிமயிர் மிக்கு விளங்கப்பெற்ற, இயல் தங்கிய - நல்லிலக்கணம் அமைந்த, பரியும்-குதிரைகளும், கொழுநின்ற - முனையிற்பொருந்திய, வை - கூர்மையையுடைய, அயில் - வேலாயுதத்தை, கொண்டவர் - ஏந்தினவர்களாகிய வீரர்களுடைய, குழுவும் - கூட்டமும், (ஆகச் சதுரங்க சேனைகளும்) பல குழும - அநேகம் திரண்டு உடன்வர, பழுது என்பது - குற்றமென்பது, இல்லவர் - இல்லாதவராகிய, மன்னவர் பலர் - அரசர்கள் பலர், வந்து எதிர் கொண்டார் - முன் வந்து (குசேலனை) எதிர் கொண்டார்கள்.

(பொ - ரை.) ஒழுகாநின்ற மதநீரையுடைய மலைபோன்ற யானைகளும் சூரியனை நிகர்த்துவிளங்குகின்ற சிவந்த பொன்மயமான தேர்களும் எழுந்து செல்லுகின்ற வேகமான நடையையுடைய பிடரிமயிர் மிக்குவிளங்கப்பெற்ற நல்லிலக்கணம் அமைந்த குதிரைகளும் முனையிற் பொருந்திய கூர்மையையுடைய வேலாயுதத்தை ஏந்தினவர்களாகிய வீரர்களுடைய கூட்டமும் (ஆகச் சதுரங்க சேனைகளும்) அநேகம் திரண்டு உடன்வர, குற்றமென்பது இல்லாதவராகிய அரசர்கள் பலர்முன்வந்து (குசேலனை) எதிர்கொண்டார்கள்.

(வி - ரை.) இவ்வரசர்கள் இடைவழியிலுள்ள நாட்டினரென்க, ஒழுகுங்கடவரை - பிறகுறிப்பு, வரை - உவமையாகு பெயர். இது இங்கே மும்மடியாகு பெயராதல் காண்க, நால்வகைச் சேனைகளுள்ளும் கதத்சிறந்த மதயானை போரிற்சிறந்த தாதலால் அதனை முற்கூறினார், கதி - "விக்கிதம் வற்கிதம் வெல்லும் உபகண்டம் - மத்திமம் சாரியோடைந்து" வை - உரிச்சொல், அயில் - மற்றை ஆயுதங்களுக்கும் உபலக்ஷணம், குழு என்பதை வரை இரதம்பரி என்பவற்றோடும் கூட்டுக. கொழு-நுனையுமாம், குழும என்பதற்குப்பகுதி குழுமு, குற்றம் - காமக்ரோதாதிகள், கொடுங்கோன்மை

முதலியவும் இவற்றின் காரியமாயடங்கும், என்பது - முதல்வேற்றுமைச் சொல்லுருபு ; சாதியொருமை. (௬உக)

மணிவார்முடி மண்டோய்தர மறைமாமுனி தாளிற்
பணிவார்சிலர் துதிப்பார்சிலர் படரன்பினில் வழிபட்
டணிவார்சிலர் பார்ப்பார்சில ரார்ப்பார்சில ராகிக்
கணிவார்புய விறல்வேந்தர்கள் கழலாக்களிப் புற்றார்.

(ப - ரை.) கண்ணி - பூமாலையணிந்த, வார் - நீண்ட, புயம் - தோள்களையுடைய, விறல்வேந்தர்கள் - வெற்றிவேந்தர் பலருள்ளே, சிலர் - சில வேந்தர்கள், மணி - ரத்நமயமான, வார் - நீண்ட, முடி - கிரீடம், மண்தோய்தர - மண்ணிற்படும்படி, மறை - வேதங்களில் வல்லவனுன, மா-பெருமையுள்ள, முனி - குசேலமுனிவனது, தாளில் - பாதங்களில், பணிவார் - வீழ்ந்து வணங்குவார்கள், சிலர் துதிப்பார் - சிலர் தோத்திரம் பண்ணுவார்கள், சிலர் - சிலபேர், படர் அன்பினில் - விஸ்தாரமான அன்பினுல், வழிபட்டு - வழிபாடுசெய்து, அணிவார் - அலங்கரிப்பார்கள், சிலர் பார்ப்பார்கள்- சிலர் நோக்குவார்கள், சிலர் ஆர்ப்பார் - சிலர் ஆரவாரிப்பார்கள், ஆகி - இவ்வாறுகி, கழலா - நீங்காத, களிப்பு உற்றார் - களிப்பையடைந்தார்கள். எ-று.

(பொ - ரை.) பூமாலையணிந்த நீண்ட தோள்களையுடைய வெற்றிவேந்தர் பலருள்ளே சிலவேந்தர்கள் ரத்நமயமான நீண்டகிரீடம் மண்ணிற்படும்படி வேதங்களில் வல்லவனுன பெருமையுள்ள குசேலமுனிவனது பாதங்களில் வீழ்ந்து வணங்குவார்கள், சிலர் தோத்திரம் பண்ணுவார்கள், சிலபேர் விஸ்தாரமான அன்பினுல் வழிபாடுசெய்து அலங்கரிப்பார்கள், சிலர் நோக்குவார்கள், சிலர்ஆரவாரிப்பார்கள், இவ்வாறுகி நீங்காதகளிப்பையடைந்தார்கள்.

(வி - ரை.) தோய்தர - என்பதற்குப் பகுதி தோய்தா, படர் அன்பு - வினைத்தொகை நிலைத்தொடர், அன்பினில் என்புழி இல் மூன்ருவதன் கருவிப்பொருளில்வந்தது, அணிதல்-ஆடையாபரணுதிகளால் அலங்கரித்தல் - பார்த்தல் - வேடிக்கைபார்த்தல், கணி - தொகுததல், வார்புயம் என்பதனை ஆஜாநுபாஹு-என்பர்வடநூலார், விறல்-வெற்றி,கழலாக்களிப்பு-பேரின்பம்.

பொன்னூர்வட வரைமேற்கதிர்ப் புத்தேளெனப் பொலிய
மின்னூர்கதி ருமிழும்மொரு வியன்மாமணித் தேர்மேன்
முன்னூர்மறை யோனைப்பல முகமன்புகன் றேற்றி
நன்னூரொடு பெருவேந்தர்கள் சூழாநடந் தனரால்.

(ப - ரை.) பொன் ஆர் - பொன்மயமாய் நிறைந்து அமைந்த, வட வரைமேல் - வடக்கிலுள்ள மேருமலையின் மீது, கதிர் புத்தேள் என - சூரியதேவன்போல, பொலிய - விளங்கும்படி, மின் ஆர் - மின்னலைநிகர்த்த, கதிர் உமிழும் - ஒளியை வீசுகிற, மா - பெரிய, மணி - ரத்நமயமான, ஒரு வியன் தேர்மேல் - ஒரு பெரிய பொன் இரதத்தின் மீது, முன் ஆர்-எதிரேயிருக்கிற, மறையோனை - அந்தணனுகிய குசேலனை, பல முகமன் புகன்று ஏற்றி - பல உபசாரவார்த்தைகள் சொல்லி ஏற்றி, பெருவேந்தர்கள் - அந்தப் பெரிய அரசர்கள், நல் நாரொடு - சிறந்த அன்புடனே, சூழா - அவனைச் சுற்றிக்கொண்டு, நடந்தனர் - நடந்தார்கள். எ - று.

(பொ-ரை.) பொன்மயமாய்நிறைந்து அமைந்தவடக்கிலுள்ளமேருமலையின்மீது சூரியதேவன்போலவிளங்கும்படி மின்னலைநிகர்த்த ஒளியைவீசுகிற

பெரிய ரத்நமயமான ஒரு பெரிய பொன் இரதத்தின் மீது, எதிரேயிருக்கிற அந்தணனாகிய குசேலனைப்பல உபசார வார்த்தைகள் சொல்லி ஏற்றி அந்தப் பெரிய அரசர்கள் சிறந்த அன்புடனேஅவனைச்சுற்றிக்கொண்டுநடந்தார்கள்.

(வி - ரை.) பொன்வரை தேருக்கும், கதிர்ப்புத்தேள் திவ்வியப் பிரகாசமுள்ள மறையோனுக்கும் உவமை, பொன்வரை என்ற உபமானத் தால் உபமேயமாகிய தேர் பொன்னால் அமைந்ததென விளங்குகின்றது, புத் தேள் - தேவன், உமிழும் மொரு என்பதில் ம் விரித்தல் விகாரம், வியன் - உரிச்சொல், மணித்தேர் - மணிகள் கட்டிய தேர் எனினுமாம், சூழா - செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால உடன்பாட்டு வினையெச்சம், கதிர்ப்புத்தேள் - பண்புத்தொகை நிலைத்தொடர். (கககக)

மண்ணென்பது தெரியாவகை வானத்திடை யமரர்
கண்ணென்பது நுழையாவகை கற்பத்தரு மலரை
யெண்ணென்பது மின்றாம்வகை யிறைத்தார்களித் தார்த்தார்
புண்ணென்பது பொலிவேலவர் பூத்தாரிறும் பூது.

(ப - ரை.) (அப்பொழுது) வானத்திடை - ஆகாயத்திலே, (வந்து) அமரர் - தேவர்கள், மண் என்பது தெரியாவகை - வெறுந்தரை யென்பதுந் தெரியாதபடியும், கண் என்பது நுழையாவகை - கண்ணும் நுழைய இடமில் லாதபடியும், எண் என்பதும் இன்று ஆம் வகை - கணக்கில்லாதபடியும், கற்பந்தரு மலரை - கற்பகமரத்தின் மலர்களை, இறைத்தார் - குசேலன் மீது சொரிந்து, களித்து-மகிழ்ச்சிகொண்டு, ஆர்த்தார் - ஆரவாரித்தார்கள், (அது கண்டு) புண் என்பது - (பகைவரது) மாமிசமானது, பொலி - விளங் கப்பெற்ற, வேலவர் - வேற்படையையுடைய அவ்வரசர்கள், இறும்பூது பூத் தார் - ஆச்சரியமிருந்தார்கள். எ - று.

(பொ - ரை.) (அப்பொழுது) ஆகாயத்திலே (வந்து) தேவர்கள் வெறு ந்தரை யென்பதுந் தெரியாதபடியும்,கண்ணும் நுழைய இடமில்லாதபடியும், கணக்கில்லாதபடியும், கற்பகமரத்தின் மலர்களைக் குசேலன்மீது சொரிந்து மகிழ்ச்சிகொண்டு ஆரவாரித்தார்கள்(அது கண்டு)(பகைவரது)மாமிசமானது விளங்கப்பெற்ற வேற்படையையுடைய அவ்வரசர்கள்ஆச்சரியமிருந்தார்கள்.

(வி - ரை.) என்பது நான்கும் எழுவாய் வேற்றுமைச் சொல்லுருபு- வகைமூன்றன் ஈற்றிலும் எண்ணும்மைகள் தொக்கன, வானத்திடை என்ப தில் இடை ஏழனுருபு, அமரர் - வடசொல், அதற்கு இறவாதவர் என்பது பொருள், இது மங்கலம், கற்பகத்தரு-என்பது கற்பத்தருவெனத் தொகுத் தலாயிற்று, வேலவர் - என்றது குசேலனை எதிர்கொண்டு சூழ்ந்து நடந்த அரசரை, புண்+என்பு+அது+பொலிவேலவர் எனப்பிரித்து(முன்பு பகை வர் உடலில்பாய் கையில் அவரது) மாமிசமும் எலும்பும் பொருந்தப்பெற்ற வேற்படையையுடையவர் என்றுரைத்தலுமாம். (ககஉ)

கடன்மேலெழுந் தார்த்தாலெனக் கடனீருறப் பருகி
யுடன்மேகங்க ளார்த்தாலென வுயர்வான்முக டதிர
மடன்மேலெழு தார்வானவர் வண்டுந்துபி யைந்தும்
விடன்மேலுள தாகாவகை மேலும்பெரி தார்த்த.

(ப - ரை.) கடல் - கடல்கள், மேல் எழுந்து - மேலே பொங்கி, ஆர்த் தால் என - ஆரவாரித்தாற் போலவும், கடல்நீர் - கடலின்நீரை, உறபருகி -

மிகுதியாகக்குடித்து, உடன் - ஒருசேர, மேகங்கள் - மேகங்களானவை, ஆர்த்தாலென - ஆரவாரித்தாற் போலவும், மடல் மேல் எழு - பூவிதழ் மேலே விளங்கப்பெற்ற, தார் - மாலையையுடைய, வானவர் - தேவர்கள், (முழக்குகின்ற) வள் தந்துபி ஐந்தும் - சிறந்த ஐந்து வகை வாத்தியங்களும், உயர் - உயர்ந்த, வான் முகடு - அண்டகோளத்தின் மேலிடம், அதிர - அதிர்ச்சியடையும்படி, விடல் - இடைவிடுதல், மேல் - பின்பு, உளது ஆகா வகை - உண்டாகாதபடி, (இடைவிடாமல்) மேலும்-மேன்மேலும், பெரிது ஆர்த்த - மிகுதியாக ஒலித்தன. எ - று.

(பொ - ரை.) கடல்கள் மேலே பொங்கி ஆரவாரித்தாற் போலவும், கடலினீரை மிகுதியாகக்குடித்து ஒருசேர மேகங்களானவை ஆரவாரித்தாற் போலவும் பூவிதழ் மேலே விளங்கப்பெற்ற மாலையையுடைய தேவர்கள் (முழக்குகின்ற) சிறந்த ஐந்து வகைவாத்தியங்களும் உயர்ந்த அண்ட கோளத்தின் மேலிடம் அதிர்ச்சியடையும்படி இடைவிடுதல் பின்பு உண்டாகாத படி (இடைவிடாமல்) மேன்மேலும் மிகுதியாக ஒலித்தன. எ - று.

(வி - ரை.) ஆர்த்த - முற்று, உயர்வான் முகடு அதிர மேகங்கள் உடனே ஆரவாரித்தாற்போல என இயைத்துரைப்பினும் அமையும், பூலோகத்தில் ஏதேனும் ஒரு விசேஷம் நடக்கும்போது மேல் உலகத்திலுள்ள தேவர்கள் துந்துபி முழக்கியும், பூமழை பொழிந்தும், அதனைச் சிறப்பித்துக் கொண்டாடுதல் இயல்பு. (கூகூகூ)

கலிநிலைத்துறை.

அளவி லாமகிழ் தலைசிறந் தோங்கிட வவிர்ந்து
பளகி லாதுயர் தருப்படர் கொடியசைந் தென்ன
வளநி லாவிய மின்னுக ணடித்தென மணிவாய்த்
தளவ மூரல்விண் மடந்தையர் நடித்தனர் தயங்க.

(ப - ரை.) அளவு இல்லா - அளவற்ற, மகிழ் - மகிழ்ச்சியானது, தலை சிறந்து ஓங்கிட - மிகுத்தோங்க, அவிர்ந்து - பிரகாசித்து, பளகு இல்லாது - குற்றமில்லாமல், உயர் - சிறந்த, தரு - கற்பகத்தருவின்மேல், படர் - படர்கின்ற, கொடி - கொடியானது, அசைந்தென்ன - அசைந்தாற்போலவும், வளம்நிலாவிய - வளம்பொருந்திய, மின்னுகள் - மின்னற்கொடிகள், நடித்தென - நடனஞ்செய்தாற்போலவும், மணிவாய் - பவளம் போலும் வாயையும், தளவம் மூரல் - முல்லையரும்புபோலும் பற்களையுமுடைய, விண் மடந்தையர் - தெய்வப்பெண்கள், தயங்க - விளங்கும்படி, நடித்தனர் - நடனஞ்செய்தார்கள். எ - று.

(பொ - ரை.) அளவற்ற மகிழ்ச்சியானது மிகுத்தோங்கப் பிரகாசித்துக் குற்றமில்லாமல் சிறந்த கற்பகத்தருவின்மேல்படர்கின்றகொடியானது அசைந்தாற்போலவும், வளம்பொருந்திய மின்னற்கொடிகள் நடனஞ்செய்தாற்போலவும் பவளம்போலும் வாயையும் முல்லையரும்புபோலும் பற்களையுமுடைய தெய்வப்பெண்கள் விளங்கும்படி நடனஞ் செய்தார்கள். எ - று.

(வி - ரை.) தலைசிறத்தல் - மிகுதல், இது ஒருசொல். தரு - கற்பகத்தரு, கொடியென்றது அந்தக் கற்பகத்தருவின்மேல் படர்கின்ற காமவல்லியென்னுங் கொடியை. மின்என்பது உகரச்சாரியை பெற்று மின்னு என வந்தது. வாய்க்கு உவமையாய் வந்ததையால் மணி நவமணிகளு ளொன்றாகிய பவளத்தைக்குறித்தது. தளவம் - முதலாகுபெயர். விண்மடந்தையர்

எனவாளா கூறினுரேனும் நடித்தனர் என்ற குறிப்பால் அரம்பை முதலிய நாடகப்பெண்களெனக் கொள்க. தயங்க - கண்டோர் திகைக்க எனினுமாம்.

பிரக லாதநன் பராசரன் பெருஞ்சவு நகன்சீர்
வரவி யாதனம் பரீடன்புண் டரீகன்முன் மற்றோர்
கரவி லாதவுள் ளத்தராய்க் கழிமகிழ் சிறப்ப
விரவி நின்றுதோத் திரமெடுத் தியம்பினர் மேன்மேல்.

(ப - ரை.) பிரகலாதநன் - பிரகலாதனும், பராசரன் - பராசரனும், பெருசவுநகன் - பெருமையுள்ள சவுநகனும், சீர்வரம் வியாதன் - சிறப்பு மேன்மையுமுள்ள வியாசனும், அம்பரீடன் - அம்பரீஷனும், புண்டரீகன் - புண்டரீகனும், முன்-முதலான, மற்றோர்-மற்றைமுனிவரும், கரவு இல்லா, உள்ளத்தர் ஆய்-களங்கமற்ற மனமுள்ளவர்களாகி, கழிமகிழ் சிறப்ப-மிகுந்த மகிழ்ச்சி அதிகரிக்க, விரவிநின்று - கூடிநின்று, மேன்மேல்-மேலுமேலும் தோத்திரம் எடுத்து இயம்பினர் - துதிமொழிகளை எடுத்துச்சொன்னார்கள்.

(பொ - ரை.) பிரகலாதனும், பராசரனும், பெருமையுள்ள சவுநகனும் சிறப்பும் மேன்மையுமுள்ள வியாசனும், அம்பரீஷனும், புண்டரீகனும் முதலான மற்றை முனிவரும் களங்கமற்ற மனமுள்ளவராகி, மிகுந்தமகிழ்ச்சி அதிகரிக்கக்கூடிநின்றுமேலுமேலும்துதிமொழிகளை எடுத்துச்சொன்னார்கள்.

(வி - ரை.) பிரகலாதநன் என்பது ப்ரஹ்லாதன் என்னும் வடசொற் றிரிபு. வரம் - மேன்மை. விரவுதல் - ஒருங்குகூடுதல். கரவிலாதவுள்ளம் - நிர்மலஹ்ருதயம். (௲௯௫)

இன்ன பல்வகை யதிசய மெதிருறக் கண்டு
நன்னர் மாமறைக் குலத்தவ னாயகன் பாதத்
துன்னு நெஞ்சகம் பெயர்த்தில னுறுவன வெல்லாம்
பன்னு மெம்பிரா னருளென நினைந்தனன் படர்வான்.

(ப - ரை.) இன்ன-இப்படிப்பட்ட, பல்வகை - பலவகையாகிய, அதிசயம்-ஆச்சரியச்செய்கைகள், எதிர்உற-எதிரே நிகழ, கண்டு-பார்த்து, நன்னர்-சிறந்த, மா-பெரிய, மறைகுலத்தவன் - வேதக்கூட்டத்தையுடைய குசேலன், உன்னும் நெஞ்சகம் - தியானிக்கிற தன் மனத்தை, நாயகன் - இறைவனாகிய ஸ்ரீகண்ணபிரானது, பாதத்து-திருவடியினின்றும், பெயர்த்திலன் - நிலைபெயர்க்காதவனாகி, உறுவன எல்லாம் - நடக்கின்றவையாவும், பன்னும் - சிறப்பித்துச் சொல்லப்படுகிற, எம்பிரான்-நம் தலைவனாகிய ஸ்ரீ கண்ணபிரானது, அருள் - திருவருளேயாகும், என - என்று, நினைத்தனன் - எண்ணி, படர்வான் - அப்பாற்செல்வானாயினன். எ - று.

(பொ - ரை.) இப்படிப்பட்ட பலவகையாகிய ஆச்சரியச்செய்கைகள் எதிரே நிகழப்பார்த்து, சிறந்த பெரிய வேதக்கூட்டத்தையுடைய குசேலன், தியானிக்கிற தன் மனத்தை இறைவனாகிய ஸ்ரீ கண்ணபிரானது திருவடியினின்றும் நிலைபெயர்க்காதவனாகி,நடக்கின்றவை யாவும் சிறப்பித்துச் சொல்லப்படுகிற நம் தலைவனாகிய ஸ்ரீ கண்ணபிரானது திருவருளே யாகுமென்று எண்ணி அப்பாற் செல்வானாயினன். எ - று.

(வி - ரை.) மறைக்குலத்தவன் - வேதாதிகாரமுள்ள பார்ப்பனச்சாதியான் எனினுமாம், பெயர்த்திலன் நினைத்தனன் முற்றெச்சங்கள். பாதத்துப் பெயர்த்திலன் எனவியையும். (௲௯௬)

அரச ரேமுத லாயின ரனைவரு மடுத்துப்
பரசி யேவலர் போற்பிரி யார்பின்பு படரப்
புரசை மால்கரி பரிமுதற் படைகளும் பொலியத்
தரைசெய் பேறென விளங்குதன் னூர்ப்புறஞ் சார்ந்தான்.

(ப - ரை.) அரசர் முதல் ஆயினோர் அனைவரும் - அரசர் முதலானவரெல்லாரும், அடுத்து - (தன்னை) அடுத்து, பரசி - துதித்து, ஏவலர்போல் - குற்றேவல் செய்பவர்போல, பிரியார் - (தன்னைவிட்டு) நீங்காதவராய், பின்பு படர - பின்னேதொடர்ந்து செல்லவும், புரசை-கழுத்திடுகயிற்றையுடைய, மால் - பெரிய, கரி - யானைகளும், பரி - குதிரைகளும், முதல் - முதலிய, படைகளும் - சேனைகளும், பொலிய - (உடன் சூழ்ந்து) விளங்கவும், தரை செய் பேறு என-இந்தப் பூமியிலுள்ளார் செய்த பாக்கியம்போல, விளங்கு - பிரகாசிக்கிற, தன் - தனது, ஊர்புறம் - ஊர்ப்புறத்தை, சார்ந்தான் - அடைந்தான். எ - று.

(பொ - ரை.) அரசர் முதலானவரெல்லாரும்(தன்னை) அடுத்துத்துதித்துக்குற்றேவல் செய்பவர்போலத் (தன்னைவிட்டு) நீங்காதவராய்ப்பின்னே தொடர்ந்து செல்லவும்,கழுத்திடு கயிற்றையுடைய பெரிய யானைகளும் குதிரைகளும் முதலிய சேனைகளும் (உடன்சூழ்ந்து) விளங்கவும் இந்தப் பூமியிலுள்ளார் செய்த பாக்கியம்போலப் பிரகாசிக்கிற தனது ஊர்ப்புறத்தை அடைந்தான். எ - று.

(வி - ரை.) அரசரே என்பதில் ஏ - அசை, பரசி என்பதற்குப்பகுதி-பரசு. பாகன் பிடித்தேறுவதற்காக யானை கழுத்தில் கயிறுகட்டி வைத்தல் மரபு ஆதலால்-'புரசைமால்களிறு' என்றார், மால்கரி என்பதற்கு மதத்தான் மயங்குகின்ற யானை என வினைத்தொகை நிலைத்தொடராக்கி யுரைப்பினுமாம், மதமயக்கத்தையுடைய யானை என இரண்டாம் வேற்றுமைத்தொகை நிலைத்தொடராகக்கொள்ளின் மாற்கரிஎனவரும், ஸ்ரீ கண்ணபிரானுக்கு ஒரு சாலை மாணாக்கனும் நண்பனும் பத்தனுமாய் அவனருளை மிகுதியாகப்பெற்று உயர்ந்த குசேலனுக்கு உறையிடமாயிருக்கிற பெருமையைத்தரை செய்பேறென விளங்கு என்னும் விசேடணத்தால் விளக்கினார்.பிரியார்-முற்றெச்சம்.

பரியு நீள்பழங் கந்தைகொ ளுடையனிப் பரிசு
பெரிய மாதவர் வேந்தர்கண் முதலியோர் பெரிதுந்
தெரியு மாபுகழ்ந் தேத்திடச் சிறந்தன னென்னி
லுரிய தாகிய தவத்தினி லுயர்ந்ததொன் றுண்டோ.

(ப - ரை.) பரியும் - (கண்டோர்) இரங்குதற்குரிய, நீள் - பெரிய, பழங்கந்தை - பழங்கந்தைத்துணியை, கொள் - கொண்ட, உடையன் - ஆடையாகவுடையவனாகிய குசேலன், இப்பரிசு - இந்தப்பிரகாரம், பெரிய மாதவர் - பெருமையுள்ள பெருந்தவத்தினர், வேந்தர்கள் - அரசர்கள், முதலியோர் - முதலானவர்கள், பெரிதும் - மிகவும், தெரியுமாறு-(உலகமெங்கும்) விளங்கும்படி, புகழ்ந்து ஏத்திட - புகழ்ந்து துதிக்கும்படி, சிறந்தனன் என்னில் - சிறந்திருந்தானென்றால், உரியது ஆகிய - (மக்களுயிர்க்கு) உரியதாகிய, தவத்தினில் - தவத்தைப்பார்க்கிலும், உயர்ந்தது - உயர்ந்ததொழில், ஒன்று உண்டோ - வேறொன்றுளதோ. எ - று.

(பொ - ரை.) (கண்டோர்) இரங்குதற்குரியபெரிய பழங்கந்தைத்துணியைக்கொண்ட ஆடையாக உடையவனாகிய குசேலன் இந்தப்பிரகாரம் பெருமையுள்ள பெருந்தவத்தினர் அரசர்கள் முதலானவர்கள் மிகவும் (உலகமெங்கும்) விளங்கும்படி புகழ்ந்து துதிக்கும்படி சிறந்திருந்தானென்றால் (மக்களுயிர்க்கு) உரியதாகிய தவத்தைப்பார்க்கிலும் உயர்ந்ததொழில் வேறொன்றுளதோ. எ - று.

(வி - ரை.) தெரியுமாறு எனற்பாலது தெரியுமாஎன ஈறுதொகுத்தல் பெற்றது, புகழ்ந்தேத்திட என்றது அதிகமாகத்தோத்திரஞ்செய்ய என்றபடி, தவம்செய்தற்குரியார் மக்களேயாதலின் உரியதாகிய தவத்தினில் என்பதற்கு மக்களுயிர்க்குரியதாகிய தவத்தைப்பார்க்கிலும் எனப்பொருள் கூறலாயிற்று. (௬௬அ)

என்று ரைத்தமா முனிவர னிணையடி யிறைஞ்சி
நன்று சொற்றனை மற்றது நடத்துகென் றடையார்க்
கொன்றி ரத்தம்வாய் மடுத்திடும் வாட்படைக் குரிசி
றுன்று மற்பொடு கேட்டலுஞ் சுகமுனி சொல்வான்.

(ப - ரை.) என்று உரைத்த - என்று சொன்ன, மா - பெரிய, முனிவரன் - முனிசிரேஷ்டனாகிய சுகமுனிவனது, இணை அடி - இரண்டு ஸ்ரீபாதங்களையும், இறைஞ்சி - வணங்கி, நன்று சொற்றனை - (இந்தக்குசேலனது புண்ணிய சரித்திரத்தை) விரிவாகச்சொல்லியருளினாய், மற்றதும்-அதற்குமேல் நடந்த மற்றைச் சரித்திரத்தையும், நடத்துக என்று - சொல்லியருளக்கடவையென்று, அடையார்கொன்று-பகைவரைக்கொன்று, இரத்தம்-(அவரது) உதிரத்தை, வாய்மடுத்திடும் - வாயினாற்பருகுகின்ற, வாள்படை-வாளாயுதத்தை யேந்திய, குரிசில் - பரிக்ஷித்து மகாராஜன், துன்றும் - மிகுதியாகிய, அற்பொடு - அன்புடனே, கேட்டலும் - வினவுதலும், சுகமுனி-சுகமுனிவன், சொல்வான்-(மேல்நடந்தகதையைச்) சொல்வானாயினன்.

(பொ - ரை.) என்று சொன்னபெரிய முனிசிரேஷ்டனாகிய சுகமுனிவனது இரண்டு ஸ்ரீ பாதங்களை வணங்கி (இந்தக்குசேலனது புண்ணியசரித்திரத்தை) விரிவாகச்சொல்லியருளினாய், அதற்குமேல் நடந்தமற்றைச் சரித்திரத்தையும் சொல்லியருளக்கடவையென்று பகைவரைக்கொன்று (அவரது) உதிரத்தைவாயினாற்பருகுகின்ற வாளாயுதத்தையேந்திய பரிக்ஷித்து மகாராஜன் மிகுதியாகிய அன்புடனே வினவுதலும் சுகமுனிவன் மேல்நடந்தகதையைச்சொல்வானாயினன். எ - று.

(வி - ரை.) நடத்துகஎன்று என்பது நடத்துகென்று என நிலைமொழியீற்று அகரம் தொகுத்தலாய்வந்தது. வாய்மடுத்திடும் என்றது இலக்கணை. வாட்படை - பண்புத்தொகைநிலைத்தொடர். வாளாகிய படையெனவிரியும், குரிசில் - பெருமையிற்சிறந்தோன். அன்பு என்பது அற்பு என வலித்தல் பெற்றது. (௬௬௯)

இரண்டாவது
குசேலர் துவாரகைகண்டு
தந்நகர்ப்புறமடைந்த வத்தியாயம் முற்றிற்று.
குசேலமுனிவர் திருவடிகளேசரணம்.

---

# பாட்டு முதற்குறிப்பகராதி.

## இரண்டாம் அத்தியாயம்.

குசேலர் தந்நகர்ப்புறமடைந்தவத்தியாயம்.

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

மூன்றுவது

# குசேலர் செல்வநுகர்ந்து வைகுந்தமடைந்தவத்தியாயம்.

அதாவது குசேலமுனிவர் தம் நகரத்தை யடைந்து ஸ்ரீகண்ண பிரானல் தந்தருளப்பட்ட இம்மையின்பத்துக்குரிய சகல பாக்கியங் களேயும் குறைவற நுகர்ந்து இறுதியில் அவனது வாசஸ்தானமாகிய ஸ்ரீபரமபதத்தை யடைந்த சரித்திரத்தைச் சொல்லும் பாகம்.

இன்னிசைவெண்பா.

ஒருதிடந் தான்கதிக்க ணுய்க்குமெனச் சொல்ப
கருதிடந் தானவன் காமர் குலத்தான்
பொருதிடந் தானவர் பொன்ற வமர்த்தான்
மருதிடந் தானடிய வா.

(ப - ரை.) கருது - யாவரும் பிறக்கவிரும்புகிற, இடம் - இடமாகிய, காமர் - அழகிய, தானவன் குலத்தான் - சந்திரகுலத்தில் அவதரித்தவனும், பொரு - போர்செய்தற்குரிய, திடம் - மனவுறுதியுள்ள, தானவர் - அசுரர், பொன்ற - மடியும்படி, அமர்த்தான் - போர்செய்தவனும், மருது - மருதமரத்தை, இடந்தான் - பிளந்தவனும், (ஆகிய அந்தக்கண்ணபிரானது,) அடி - திருவடிமீது செய்கின்ற, அவா - அன்பானது, கதிக்கண் - நற்கதியாகிய மோக்ஷபதவியில், உய்க்கும் - செலுத்தும், எனச்சொல்ப - என்று சொல்லுவர் அறிஞர் (இந்தச்சொல்) ஒருதிடம்தான் - ஒப்பற்ற உறுதிச்சொல்லேயாம்.

(பொ - ரை.) யாவரும் பிறக்க விரும்புகிற இடமாகிய அழகிய சந்திர குலத்தில் அவதரித்தவனும், போர்செய்தற்குரிய மனவுறுதியுள்ள அசுரர் மடியும்படி போர்செய்தவனும், மருதமரத்தைப்பிளந்தவனும், (ஆகிய அந்தக் கண்ணபிரானது)திருவடிமீது செய்கின்ற அன்பானது நற்கதியாகியமோக்ஷ பதவியில் செலுத்தும் என்று சொல்லுவர் அறிஞர் (இந்தச்சொல்) ஒப்பற்ற உறுதிச்சொல்லேயாம். எ - று.

(வி - ரை.) அவா உய்க்கும் எனமுடித்துக்கொள்க. கதி என வாளா கூறினரேனும் மருதிடந்தானடியவா என்றகுறிப்பால் மோக்ஷபதவியைக் குறித்தது. தானவன் - சந்திரன், சொல்பஎன்னும் வினைக்கு எழுவாயாகிய அறிஞர் என்பது வருவிக்கப்பட்டது, முதலடியிலுள்ள தான் தேற்றப்பொரு ளில் வந்தது, திடத்தானவர் எனற்பாலது எதுகையின்பநோக்கித்திடந்தான

வர் எனமெலிந்து நின்றது, அமர்த்தல் - போர்செய்தல், தானவர் - தனு என்பவனுடைய மக்களும் அவர் சந்ததியாரும், இவள் காசிபன்மனைவி, இந் தத்தானவர்களில் பிரதானமானவர்கள் அயோமுகன், ஏகசக்ரன், புலோமன், கபிலன், அந்தகன், அரிஷ்டன், அருணி, முதலாயினோர். (க)

வேற்றொலிவெண்டுறை.

கருங்கடலி னடுவணெழு கதிரெனக்கார் நிறத்துமணி கதிர்ப்பக்காமர்
பெருங்கனகவரையெனசசெம் பொன்னுடைநான்றபுயம்பிறங்கப்பாய [ல்
வென்றிவா ளரவமுந் தொடரமென் றாமரைத்
துன்றுமா மங்கையுந் தொடரவாய் விட்டெழீஇ
மன்றவே தங்களுந் தொடரவான் சுவையமிர்
தொன்றுசெந் தமிழ்தொட ரொருவர்பின் தொடர்தரச்
சென்றவன் றிருவடி தேருவார் யாருமே.

(ப-ரை.) கருகடலின் நடுவண்-கரிய கடலினடுவில், எழு-உதிக்கிற, கதிர் என-சூரியன்போல, கார்நிறத்து - கரியதிருமார்பின் கண், மணி-கௌஸ்துப மணியானது, கதிர்ப்ப - ஒளி செய்யவும், காமர் - அழகிய, பெரு - பெரிய, கனகவரைஎன - பொன்மலைபோல, செம்பொன் ஆடை-செம்பொன்னுடை யானது, நான்ற - தொங்குகின்ற, புயம் - திருத்தோள், பிறங்க - பிரகாசிக் கவும், பாயல் - சயநமாகிய, வென்றி - வெற்றியையுடைய, வாள் - ஒளிபொ ருந்திய, அரவமும் - ஆதிசேஷனும், தொடர - பின்றொடரவும், மெல் - மெல்லிய, தாமரை - தாமரைமலரில், துன்றும் - வாழ்கின்ற, மாமங்கையும்- திருமகளும், தொடர - தொடரவும், மன்ற - மிகுதியான, வேதங்களும் - மறைகளும், வாய்விட்டெழீஇ-முழங்கிக்கொண்டெழுந்து, தொடர-தொடர வும், வான் - விண்ணுலகத்துள்ள, சுவை - இன்சுவையுள்ள, அமிர்து - அமிர் தத்தின்இனிமை, ஒன்று - பொருந்திய, செந்தமிழ்தொடர் ஒருவர்பின் - செந்தமிழ்தொடர்ந்த ஒருவர் பின்னே, தொடர்தர சென்றவன் - தொடர்ந்து சென்றவனாகிய திருமாலின், திருவடி - திருவடியை, யாரும் - எல்லாரும், தேருவார் - நாடுவோர்கள். எ - று.

(பொ - ரை.) கரியகடலினடுவில் உதிக்கிற சூரியன்போலக்கரிய திரு மார்பின்கண் கௌஸ்துபமணியானது ஒளிசெய்யவும், அழகியபெரிய பொன் மலைபோலச்செம்பொன்னுடையானது தொங்குகின்ற திருத்தோள்பிரகாசிக் கவும், சயநமாகிய வெற்றியையுடைய ஒளிபொருந்திய ஆதிசேஷனும் பின் றொடரவும், மெல்லியதாமரைமலரில் வாழ்கின்ற திருமகளும் தொடரவும், மிகுதியான மறைகளும் முழங்கிக்கொண்டெழுந்து தொடரவும் விண்ணுல கத்திலுள்ள இன்சுவையுள்ள அமிர்தத்தின் இனிமைபொருந்திய செந்தமிழ் தொடர்ந்த ஒருவர் பின்னே தொடர்ந்து சென்றவனாகிய திருமாலின் திரு வடியை எல்லாரும் நாடுவோர்கள். எ - று.

(வி - ரை.) கருங்கடல் இறைவனது திருமேனிக்கும் கதிர் மணிக்கும் உவமையாகக்கொள்க, கதிர்ப்ப - கதிர்என்னும் பெயரடியாகப்பிறந்த வினை

யெச்சம், கனகவளைபுயத்துக்குவமை-பாயல் என்றகுறிப்பால் அரவம் ஆதி சேஷனைக்குறித்தது, தாமரைத்துன்றும் என்றகுறிப்பால் மங்கைதிருமகளை யுணர்த்திற்று, வாய்விடுதல் - முழங்குதல், வாய்விட்டு ஒருசொல், முழங்கி யென்றபடி, செந்தமிழ்தொடரொருவர் என்றது செந்நாப்புலவரை, மேலே குறிக்கப்பட்ட கதிர்ப்ப, பிறங்க, தொடரமுதலிய குறிப்பால் சென்றவன் திருமாலுக்காயிற்று, யாரும் என்றது தேவர்முனிவர் முதலிய எல்லாரும் என்றபடி, சென்றவன் திருவடியாருந்தேருவார் என முடித்துக்கொள்க. (௨)

## கலித்தாழிசை.

காமர்நறு விரைத்துளபக் கண்ணியனைப் புண்ணியனை
மாமகடன் கொழுநனை வழுத்துவீர் மானிடர்காண்
மாமகடன் கொழுநனை வழுத்துவீ ராமாகிற்
றாமரைப் பெருமுதலுஞ் சாரற் கரியகதி சார்வீரே.

(ப - ரை.) காமர் - அழகிய, நறவிரை - நறுமணத்தையுடைய, துளபம் கண்ணியனை - துளசிமாலையையணிந்தவனை, புண்ணியனை-தர்மஸ்வருபனை, மாமகள் கொழுநனை - திருமகளுக்கு நாயகனை, மானிடர்காள் - மானுடரே, வழுத்துவீர் - தோத்திரம்பண்ணுங்கள், மாமகள் கொழுநனை - திருமகளுக்கு நாயகனை, வழுத்துவீர் ஆமாயின்-தோத்திரம்பண்ணுவீர்களாயின், தாமரை - தாமரைமலரில் வாழ்கின்ற, பெரு - பெரிய, முதலும் - முதல்வனாகிய பிரமனும், சாரற்கு அரிய - அடைதற்கரிய; கதி - மோக்ஷபதவியை, சார்வீர் - (நீங்கள்) அடைவீர்கள். எ - று.

(பொ - ரை.) அழகிய நறுமணத்தையுடைய துளசிமாலையை யணிந்தவனை, தர்மஸ்வருபனை, திருமகளுக்கு நாயகனை, மானுடரே, தோத்திரம்பண்ணுங்கள், திருமகளுக்கு நாயகனைத்தோத்திரம் பண்ணுவீர்களாயின், தாமரை மலரில் வாழ்கின்றபெரிய முதல்வனாகிய பிரமனும் அடைதற்கரிய மோக்ஷ பதவியை (நீங்கள்) அடைவீர்கள். எ - று.

(வி - ரை.) மாமகள் - திருபெயரொட்டு,தன் இரண்டுஞ்சாரியைகள். முதல் - பண்பாகுபெயராய்ப்பிரமனைக்குறித்தது, பிரமன் லோகஸ்ருஷ்டி கர்த்தாவாதலால் 'தாமரைப்பெருமுதல்' என்றார், தாமரை என்பது பிரமனைக்குறிக்கவந்த விசேஷணம், தாமரை முதலாகுபெயர், இதனைப்பொருளாகு பெயரெனவுங்கூறுவர், கண்ணி - மாலை, மானிடர் - மனுவமிசத்தார்.

ஒருபொருண்மேல் மூன்றடுக்கிவந்த

## வஞ்சித்தாழிசை.

மாதர்களின் வருந்தாமே, போதமுறப் புரிந்திடுவீர்
சீதமலர்த் திருமார்பன், கோதறுசீர் குறிப்பீரே.
மங்கையரின் வருந்தாமே, பொங்கமுறப் புரிந்திடுவீர்
செங்கமலத் திருமார்பன், கொங்கலர்சீர் குறிப்பீரே,

வனிதையரின் வருந்தாமே, புனிதமுறப் புரிந்திடுவீர்
கனிமொழிச்செந் திருமார்ப, னினியசீர் குறிப்பீரே.

(ப - ரை.) மாதர்களின் வருந்தாமே - மாதர்களால் வருந்தாமல், போதம்உற - ஞானத்தையடைய, புரிந்திடுவீர் - விரும்புவோர்களே, சீதம் - குளிர்ச்சிபொருந்திய, மலர் - தாமரைமலரில்வாழ்கின்ற, திரு - திருமகளை, மார்பன் - திருமார்பிலேயுடையவனுகிய ஸ்ரீகண்ணபிரானது, கோது அறு - குற்றமற்ற, சீர் - புகழை, குறிப்பீர் - நினையுங்கள், மங்கையரின்வருந்தாமே- மங்கையரால் வருந்தாமல், பொங்கம்உற - பொலிவையடைய, புரிந்திடுவீர்- விரும்புவோர்களே, செங்கமலம் - செந்தாமரை மலரில்வாழ்கின்ற, திரு - திருமகளை, மார்பன் - திருமார்பிலேயுடைய ஸ்ரீ கண்ணபிரானது, அலர் - எங்கும் வியாபித்த, கொங்கு - தேன்போலினிமையாகிய, சீர் - புகழை, குறிப்பீர் - நினையுங்கள், வனிதையரின் வருந்தாமே - வனிதையரால் வருந்தாமல், புனிதம்உற - பரிசுத்தமடைய, புரிந்திடுவீர்-விரும்புவோர்களே, கனிமொழி - கனிபோலும் இன்சொற்களையுடைய, செந்திரு - செந்திருவை, மார்பன் - திருமார்பிலேயுடைய ஸ்ரீகண்ணபிரானது, இனிய - இனிதாகிய, சீர் - புகழை, குறியீர் - நினையுங்கள். எ - று.

(பொ - ரை.) மாதர்களால் வருந்தாமல், ஞானத்தையடைய விரும்புவோர்களே,குளிர்ச்சிபொருந்திய தாமரைமலரில் வாழ்கின்றதிருமகளைத்திருமார்பிலேயுடையவனுகிய ஸ்ரீ கண்ணபிரானது குற்றமற்றபுகழை நினையுங்கள். மங்கையரால் வருந்தாமல்,பொலிவையடைய விரும்புவோர்களே, செந்தாமரை மலரில்வாழ்கின்ற திருமகளைத்திருமார்பிலேயுடைய ஸ்ரீ கண்ணபிரானது எங்கும் வியாபித்த தேன்போலினிமையாகிய புகழைநினையுங்கள், வனிதையரால் வருந்தாமல், பரிசுத்தமடைய விரும்புவோர்களே, கனிபோலும் இன்சொற்களையுடைய செந்திருவைத்திருமார்பிலேயுடைய ஸ்ரீ கண்ணபிரானது இனிதாகிய புகழை நினையுங்கள். எ - று.

(வி - ரை.) போதம் - ஞானம், புரிதல் - விரும்புதல், கோதறுசீர் - மெய்ப்புகழ், குறித்தல் - நினைத்தல், கனி - வாழைமாபலா என்னும் முக்கனிகள், கனி - கனிந்த எனினுமாம், வனிதை-வநிதாஎன்னும் வடசொற்றிரிபு.

ஒப்புமைபற்றிவந்த ஆறடித்தரவு

கோச்சகக்கலிப்பா.

வண்டாடு பூந்துளப மாலையனை வானேர்கள்
கொண்டாடுஞ் சீர்த்தியனைக் கோவலர்பா டித்தயிர்நெ
யுண்டாடு சீதரனை யொப்பிலா வற்புதனைக்
கண்டாடு மன்பருளங் காதலிக்கும் புண்ணியனைத்
தொண்டாடு வன்றியெனச் சொல்லித் துதிமுழக்கி
யொண்டா டிணைக்கொண் டுயர்வீ ருலகீரே.

(ப - ரை.) வண்டு ஆடு - வண்டுகள் (மொய்த்து) விளையாடுகிற, பூ - அழகாகிய, துளபமாலையனை - துளசிமாலையையணிந்தவனை, வானோர்கள் கொண்டாடும் - தேவர்களுங் கொண்டாடுதற்குரிய, சீர்த்தியனை - புகழையுடையவனை, கோவலர்பாடி - திருவாய்ப்பாடியில், தயிர் நெய் உண்டு - தயிர் நெய்களையமுதுசெய்து, ஆடு - ஆடின, சீதரனை - ஸ்ரீதரனை, ஒப்பு இல்லா அற்புதனை - ஒப்பற்ற ஆச்சர்யபூதனை, கண்டு - (தன்னைத்)தரிசித்து, ஆடும் - (ஆநந்தக்) கூத்தாடுகிற, அன்பர் உள்ளம் - அன்பரது மனத்தை, காதலிக்கும் - விரும்புகிற, புண்ணியனை - புண்ணியவடிவனை, துவன்றி - கிட்டி, தொண்டு ஆள் எனசொல்லி - தொண்டனாகிய அடியேனையாள்கவென்று சொல்லி, துதி முழக்கி - மிகுதியாய்த்துதிசெய்து, ஒள்தாள் துணைகொண்டு - (அவனது) ஒட்பமாகிய திருவடியைத்துணையாகக்கொண்டு, உயர்வீர் - மேன்மையடையுங்கள், உலகீரே - உலகத்திலுள்ளவர்களே. எ - று.

(பொ - ரை.) வண்டுகள் (மொய்த்து) விளையாடுகிற அழகாகிய துளசிமாலையையணிந்தவனை, தேவர்களுங் கொண்டாடுதற்குரிய புகழையுடையவனை, திருவாய்ப்பாடியில் தயிர் நெய்களையமுதுசெய்து ஆடின ஸ்ரீதரனை, ஒப்பற்ற ஆச்சர்யபூதனை, (தன்னைத்) தரிசித்து (ஆநந்தக்) கூத்தாடுகிற அன்பரது மனத்தைவிரும்புகிற புண்ணியவடிவனைக் கிட்டித்தொண்டனாகிய அடியேனையாள்கவென்றுசொல்லி, மிகுதியாய்த்துதிசெய்து(அவனது)ஒட்பமாகிய திருவடியைத்துணையாகக்கொண்டு மேன்மையடையுங்கள், உலகத்திலுள்ளவர்களே. எ - று.

(வி - ரை.) கோவலர் - இடையர், சீதரன் - திருமகளைத்திருமார்பில் தரித்தவன், கண்டாடுமன்பர் என்பதில் ஆடுதல் கண்டதனாலுண்டான ஆநந்த மேலீட்டாலாடுதல், "ஆடியாடியகங்கரைந்து" என்றார் பெரியாரும், 'அன்பருளங்காதலிக்கும் என்பதற்கு அன்பரது மனமானது விரும்புதற்குரிய என்றுரைப்பினுமாம், துவன்றல் - நெருங்கல், பிறவிப்பெருங்கடல் கடத்தற்குத்துணையாதலால் இறைவனடியை' ஒண்டாள், என்றார். (௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மின்றிகழ் பிறழ்பற் கூற்றம் விலாப்புடை வீங்க வுண்ண
வென்றிகொள் செறுநர்ச் சாய்த்து விருந்திடும் வெள்வேல் வேந்தே
யொன்றிய புகழ்க்கு சேல னூர்ப்புறஞ் சார்ந்த காலை
நன்றிமிக் குறுமச் சீறூர் நலப்பெரு நகரா யிற்றே.

(ப - ரை.) மின் திகழ் - மின்னலைப்போல விளங்குகிற, பிறழ் - ஒன்றற்கொன்றுமாறுபட்ட, பல் - பற்களையுடைய, கூற்றம் - யமனனவன், விலாப்புடைவீங்க உண்ண - விலாப்புடைபருக்கவுண்ணும்படி, வென்றிகொள் - வெற்றியைக்கொண்ட, செறுநர் - பகைவரை, சாய்த்து - கொன்று, விருந்திடும் - (அந்த யமனுக்கு) விருந்துசெய்கிற, வெள்வேல் - வெள்ளியவேற்படையைத்தாங்கின, வேந்தே - பரீக்ஷித்துமஹாராஜனே, ஒன்றியபுகழ் -

புகழையுடைய, குசேலன் - குசேலமுனிவன், ஊர்ப்புறம்சார்ந்தகாலை - தன்னகர்ப்புறத்தையடைந்த காலத்தில், நன்றிமிக்குறும் - நன்மைமிகுதியாய்ப் பொருந்திய, அ - அந்த, சீறூர் - சிற்றூரானது, நலம் - எல்லாநன்மைகளை யுந்தருகிற, பெருநகர் ஆயிற்று - பெரியபட்டணமாய் விட்டது. எ - று.

(பொ - ரை.) மின்னலைப்போல விளங்குகிற ஒன்றற்கொன்றுமாறுபட்ட பற்களையுடையயமனுனவன் விலாப்புடைபருக்கவுண்ணும்படி, வெற்றியைக்கொண்ட பகைவரைக்கொன்று, (அந்தயமனுக்கு) விருந்துசெய்கிற வெள்ளிய வேற்படையைத்தாங்கின பரீக்ஷித்துமஹாராஜனே, புகழையுடைய குசேலமுனிவன் தன்னகர்ப்புறத்தை யடைந்தகாலத்தில், நன்மைமிகுதியாய்ப்பொருந்திய அந்தச்சிற்றூரானது, எல்லாநன்மைகளையுந்தருகிற பெரியபட்டணமாய் விட்டது. எ - று.

(வி - ரை.) மின்றிகழ்பல் எனவினையயும், கூற்றம் - சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையுமாகிய பெயர், மிகுதியாயுண்டால் விலாப்புடைவீங்கல் இயல்பாதலால் 'விலாப்புடைவீங்கவுண்ண, என்றூர். கூற்றம் வெள்வேலிட்ட விருந்தினை மிகுதியாயுண்டமையால் விலாப்புடைவீங்கினு னென்பது பெறப்பட்டது. விலாப்புடை - விலாப்பக்கம். (௬)

மற்படு கான மெல்லா மாடமா ளிகையே யாகிச்
சொற்படு புலவ ராலுஞ் சொலற்கருஞ் சிறப்பு வாய்ந்து
விற்படு மமரர் நாடு வீழ்ந்துமண் ணிறைகொண் டாற்போ
லற்படுத் தொளிர்ந்த தைய னருளினிற் சிறந்த துண்டோ.

(ப - ரை.) மல்படு - வளம் பொருந்திய, கானம் எல்லாம் - காட்டிடமெல்லாம், மாடமாளிகையே ஆகி - மாடமாளிகைகளேயாகி, சொல்படு - புகழ்பொருந்திய, புலவராலும்-வித்வான்களாலும், சொல்லற்கு அரு-சொல்லுதற்கரிதாகிய, சிறப்புவாய்ந்து - சிறப்புப்பெற்று, வில்படும் - ஒளிபொருந்திய, அமரர்நாடு - தேவலோகமானது, வீழ்ந்து - விழுந்து, மண் - நிலவுலகத்தில், இறைகொண்டாற்போல் - தங்கினாற்போல, அல்படுத்து - இருளையழித்து, ஒளிர்ந்தது-(அந்தக்குசேலனது சிற்றூரானது)பிரகாசித்தது,' ஆதலால்), ஐயன் - இறைவனுகிய ஸ்ரீ கண்ணபிரானது, அருளினின் - அருளினும், சிறந்தது - மேலானபொருள், உண்டோ - உளதோ, (இல்லை.) எ - று.

(பொ - ரை.) வளம்பொருந்திய காட்டிடமெல்லாம் மாடமாளிகைகளேயாகி, புகழ்பொருந்திய வித்வான்களாலும் சொல்லுதற்கரிதாகிய சிறப்புப்பெற்று, ஒளிபொருந்திய தேவலோகமானது விழுந்து நிலவுலகத்தில் தங்கினாற்போல இருளையழித்து (அந்தக்குசேலனது சிற்றூரானது) பிரகாசித்தது. (ஆதலால்) இறைவனுகிய ஸ்ரீ கண்ணபிரானது அருளினும் மேலான பொருள் உளதோ, (இல்லை.) எ - று.

(வி - ரை.) மல் - வளம், சொல்படு - சொல்லிலக்கணத்தேர்ச்சிபொருந்திய எனினுமாம், புலவராலும் என்றவும்மை உயர்வுசிறப்பு, வில் - ஒளி,

இறைகொள்ளல் - தங்குதல், அல் - இருள், படுத்தல் - கெடுத்தல், உண்டோ வென்னுமோகாரம் எதிர்மறை, வினவுமாம், ஐ அழகாதலால் ஐயன் என்பத தற்கு அழகன் என்றுரைத்தலுமாம். தேவலோகம் பொன்னுலகாதலால், 'விற்படுமமரர்நாடு' என்றார். (எ)

இமைக்கு மந்நகரங் காணூஉ வெறுழ்வலிக் காதி மைந்தன்
சமைத்த வேற்றுச் சிருட்டி தனிற்றயித் தியரைச் சாயக்
குமைத்தரும் போகந் துய்த்துக் குலவுநந் நகர்க்கு மாறா
வமைத்தபொன் னகரோ வென்ன வமரருண் மயங்கி னாரே.

(ப - ரை.) இமைக்கும் - பிரகாசிக்கிற, அ நகரம் - அந்த நகரத்தை, அமரர் காணூஉ - தேவர்கள் கண்டு, எறுழ்வலி - மிகுந்த தவவலியையுடைய, காதிமைந்தன் - விசுவாமித்திரன், சமைத்த-செய்த, வேற்று சிருட்டிதனின்- வேறாகிய படைப்புப்போல, தயித்தியரை-அசுரரை, சாயகுமைத்து - அழியக் கொன்று, அருபோகம் துய்த்துக்குலவும் - அருமையாகிய போகங்களை யநு பவித்து விளங்குகிற, நம் நகர்க்கு மாறுஆ-நமது நகரத்துக்கு மாறாக, அமை த்த - (வேறு சிலரால்) படைக்கப்பட்ட, பொன் நகரோ என்ன-பொன்னுல கோவென்று, உள் மயங்கினார் - மனமயங்கினார்கள். எ - று.

(பொ - ரை.) பிரகாசிக்கிற அந்த நகரத்தை தேவர்கள்கண்டு மிகுந்த தவவலியையுடைய விசுவாமித்திரன் செய்தவேறாகிய படைப்புப்போல, அசுரரை அழியக்கொன்று அருமையாகிய போகங்களை யநுபவித்து விளங்கு கிறநமது நகரத்துக்குமாறாக (வேறு சிலரால்) படைக்கப்பட்ட பொன்னுல கோவென்று மனமயங்கினார்கள். எ - று.

(வி - ரை.) காதி - குசாம்பன்மகன், காதிமைந்தன் சமைத்தவேற்றுச் சிருட்டியாவது - சத்தியவிரதன் என்னும் பூர்வநாமத்தையுடையவனும் சூரி யாரணிக்குப் புதல்வனும் அரிச்சந்திரனுக்குத்தந்தையுமாகிய திரிசங்கு என் பவன் சரீரத்தோடு சுவர்க்கத்துக்குப்போக வேண்டுமென்னுந்தன் விருப்ப த்தை வசிஷ்டருக்குத்தெரிவித்து, அவர் அது இசையாதென்றுமறுத்தபோது அவர் புதல்வர்களிடத்திற்சென்று நிர்ப்பந்திக்க, அவர்கள், தமது தந்தை சொன்னதை இவன் மீறினதற்காகச் சண்டாளத்துவத்தையடையும்படி சபி த்தார்கள், அதன் பிறகு விசுவாமித்திரனை ஆசிரயித்து, அவன் தன் தவவலி யால் சரீரத்தோடே தேவலோகத்துக்கனுப்ப, அங்குள்ள தேவர்களால் தலை கீழாகப்பூமியில் தள்ளப்பட்டபோது, நிலைப்பூமியில் விழவொட்டாமல் விசுவாமித்திரன் நிறுத்தி, திரிசங்குஸ்வர்க்கம் என்று வேறொரு சுவர்க்கத்தை யும் இந்திரனையும் தன் தவவலியாற்படைக்கவுந்தொடங்க, தேவர்கள் பிரார் த்திக்க, தன் உத்தேசத்தை விட்டான், திரிசங்கு அந்தரத்திலேதானே நின்று விட்டான் - அதுவே இப்பொழுது திரிசங்குமண்டலமென்று சொல்லப்படுகி றது, திரிசங்கு - குருவின் கட்டளையைக் கடந்தது, சண்டாளத்வம், நிஷித்த வஸ்துபோஜநம் என்னும் மூன்று தோஷங்களுள்ளவன். சிருட்டிதனின் என்ப தில் இன்ஐந்தாவதன் ஒப்புப் பொருளது, மாறு - பிறழ். (அ)

அறன்கடை நயக்கும் வெஞ்சூ ராருயிர் சவட்டி வாங்கித்
திறன்படு சுரர்கால் யாப்புச் செறிகழல் வித்துச் சீர்த்தி
திறங்கிளர் வெள்வே லைய னிறைகுடி யேற்று நாளிற்
பிறங்கிய துறக்க நாட்டின் பெற்றியந் நகரின் பெற்றி.

(ப - ரை.) அ - அந்த, நகரின்பெற்றி - நகரத்தின்தன்மை (நோக்குமிடத்து), அறன்கடை நயக்கும் - பாவச்செய்கையையே விரும்பின, வெம் சூர் - கொடிய சூரபன்மனது, ஆர் உயிர் - அரியவுயிரை, சவட்டி - வருத்தி, வாங்கி - உடம்பினின்றும் பிரித்து, திறன்படு - உறுதியாகிய, சுரர் - தேவர்களுடைய, கால்யாப்பு செறிகழல்வித்து - காற்கட்டாகிய விலங்கையவிழ்வித்து, சீர்த்திதிறம் கிளர் - புகழினது நிறம் விளங்குகிற, வெள்வேல் - வெள்ளிய வேற்படையையுடைய, ஐயன் - முருகக்கடவுள், நிறைகுடி ஏற்றும்நாளில் - நிறைந்த குடியேற்றுங்காலத்தில், பிறங்கிய - விளங்கிய, துறக்க நாட்டின்பெற்றி - சுவர்க்கலோகத்தின் தன்மையாகவேயிருந்தது. எ - று.

(பொ - ரை.) அந்த நகரத்தின் தன்மை (நோக்குமிடத்து) பாவச்செய்கையையே விரும்பின கொடிய சூரபன் மனது அரியவுயிரைவருத்தி உடம்பினின்றும் பிரித்து உறுதியாகிய தேவர்களுடைய காற்கட்டாகிய விலங்கையவிழ்த்து, புகழினது நிறம் விளங்குகிற வெள்ளிய வேற்படையையுடைய முருகக்கடவுள நிறைந்தகுடியேற்றுங்காலத்தில் விளங்கிய சுவர்க்கலோகத்தின் தன்மையாகவேயிருந்தது. எ - று.

(வி - ரை.) அறத்தினீக்கப்பட்டமையின் பாவத்தை 'அறன் கடை என்றார். "அறன்கடை நின்றாருளெல்லாம் பிறன்கடை - நின்றாரிற்பேதையாரில்" என்ற திருக்குறளினும் அறன்கடை பாவமெனப்பொருள் படுதல் காண்க, கீர்த்திக்கு நிறம்வெண்மையாதலால் 'சீர்த்தி திறங்கிளர் வெள்வேல்' என்றார், சுரர்கால்யாப்புச்செறி கழல்வித்துக்குடியேற்ற நாளில் எனவியையும், வெள்வேல் என்றதனாலும் சுரர்காயாப்புச் செறிகழல்வித்து என்றதனாலும் ஐயன் முருகக்கடவுளைக்குறித்தது. (கூ)

அருநிதி தவமென் றாராய்ந் தமைதர வீட்டி யீட்டித்
தருநிதி யனைய கண்ணன் றன்னருள் பெற்ற மேலோன்
பெருநிதி நகர நோக்கிற் பிறங்கிய செல்வம் வாய்ந்த
விருநிதிக் கிழவன் வாழ்க்கை யெழினகர் சிற்றா ராமால்.

(ப - ரை.) அருநிதி - அருமையாகிய செல்வமானது, தவம் என்று - தவமேயாமென்று, ஆராய்ந்து-ஆராய்ந்து தெளிந்து, அமைதர ஈட்டி ஈட்டி- (அந்தத்தவச்செல்வத்தை) நிரம்பச்சம்பாதித்துச் சம்பாதித்து, தருநிதிஅனைய கண்ணன் - தருநிதிபோன்ற ஸ்ரீ கண்ணபிரானது, அருள்பெற்ற - கிருபையைப்பெற்றிருக்கிற, மேலோன் - மேலோனாகிய குசேலமுனிவனது, பெருநிதிநகரம் - பெருஞ்செல்வம் வாய்ந்த நகரத்தை, நோக்கின் - நோக்குமிடத்து, பிறங்கிய செல்வம்வாய்ந்த - விளங்குகிற மிகுசெல்வம்வாய்ந்த, இரு -

பெருமையுள்ள, நிதிக்கிழவன் - குபேரன், வாழ்க்கை - வாழ்தற்குரிய, எழில்நகர் - அழகிய நகரமானது, சிற்றூர் ஆம் - சிறியவூரென்று சொல்லுதற்குரியதாகும். எ - று.

(பொ - ரை.) அருமையாகிய செல்வமானது தவமேயாமென்று ஆராய்ந்துதெளிந்து, (அந்தத்தவச்செல்வத்தை)நிரம்பச்சம்பாதித்துச் சம்பாதித்து, தருநிதிபோன்ற ஸ்ரீ கண்ணபிரானது கிருபையைப்பெற்றிருக்கிற மேலோனாகிய குசேலமுனிவனது பெருஞ்செல்வம்வாய்ந்த நகரத்தை நோக்குமிடத்து, விளங்குகிற மிகுசெல்வம்வாய்ந்த பெருமையுள்ள குபேரன்வாழ்தற்குரிய அழகிய நகரமானது சிறியவூரென்று சொல்லுதற்குரியதாகும். எ-று.

(வி - ரை.) பிறசெல்வங்கள் போலாது உயிர்க்குறுதிபயத்தல் பற்றித் தவத்தை 'அருநிதி' என்றும், இத்தவத்தினதருமை ஆராய்ந்தாலன்றி யறியப்படாமையான் 'ஆராய்ந்து' என்றும் கூறினார், ஈட்டி ஈட்டியென்ற அடுக்கு மிகுதியாய்ச்சம்பாதித்து என்னும் பொருளைத்தந்தது. தருநிதி அனைய என்பதற்கு அன்பர்க்குப்பஞ்சதருவையும் இருநிதியையும்நிகர்த்த எனப்பொருள் கொள்க. இருநிதி - சங்கநிதி, பதுமநிதி. (௬0)

நயந்தரு நடுவுள் ளானை நல்லறஞ் சூழ்ந்தாற் போலப்
பயங்கெழு நகரஞ் சூழ்ந்து பாசநீத் தறிவின் மேலா
யுயர்ந்தவர்க் கினிது செய்த வுதவிபோ லுயர்ந்து மிக்க
வயங்கொளப் பொலிந்தன் றெஞ்சா மஞ்சுசூ ழிஞ்சி மாதோ.

(ப - ரை.) எஞ்சாமஞ்சுசூழ் இஞ்சி - மிகுதியாகிய மேகஞ்சூழ்ந்த (அந்நகரத்து) மதிலானது, நயம்தரு நடுவுள்ளானை - நன்மையைத்தருகிற நடுவுநிலைமையுள்ளவனை, நல்அறம் சூழ்ந்தாற்போல - நல்ல அறக்கடவுள் சூழ்ந்து நின்றாற்போல, பயம்கெழுநகரம் சூழ்ந்து - எல்லாப்பயன்களும் நிறைந்த நகரத்தைச்சூழ்ந்து, பாசம்நீத்து-பாசத்தைச்சேதித்து, அறிவின் - ஞானத்தால், மேலாய் உயர்ந்தவர்க்கு - மேன்மையடைந்து உயர்ந்தவர்களுக்கு, இனிது செய்தஉதவிபோல் உயர்ந்து-இனிதாகச்செய்தவுதவிப்பயன் போலுயர்ந்து, மிக்கவயம் கொளபொலிந்தது - மிகுவெற்றிகொள்ளப் பிரகாசித்தது. எ-று.

(பொ - ரை.) மிகுதியாகிய மேகஞ்சூழ்ந்த (அந்நகரத்து) மதிலானது, நன்மையைத்தருகிற நடுவு நிலைமையுள்ளவனை, நல்ல அறக்கடவுள் சூழ்ந்து நின்றாற்போல,எல்லாப்பயன்களும் நிறைந்த நகரத்தைச்சூழ்ந்து, பாசத்தைச் சேதித்து ஞானத்தால் மேன்மையடைந்து உயர்ந்தவர்களுக்கு இனிதாகச் செய்தவுதவிப்பயன் போலுயர்ந்து மிகுவெற்றி கொள்ளப்பிரகாசித்தது.

(வி - ரை.) நடு - நடுவுநிலைமை, அறம் - அறக்கடவுள், பயம் - பயன், பாசம் - கயிறு, அது ஆசைக்கயிறு எனப்பொருள்படும், கயிறு என்றதற்கேற்பநீத்து என்பதற்குச்சேதித்து எனப்பொருள் கூறப்பட்டது, பாசநீத்தறிவின் மேலாயுயர்ந்தவர் - ஞானிகள், உதவி - முதலாகுபெயர். ''என்பிலதனை வெயில்போலக்காயுமே யன்பிலதனையறம்'' என்புழிப்போல ஈண்டும் அறம் என்றது அறக்கடவுளை யுணர்த்திற்று, மாது - ஓ அசைகள். (௬௧)

கோன்பெறு மமிர்தங் கொள்ளை கொண்டுளார் நகரா மோதென்
றின்புறு கிர வாழி யினியநீர்க் கடலை யேவ
வன்புறு மதுவி தேவா னவர்நக ரென்னச் சூழ்ந்து
மன்பெறப் பொருதல் போன்ற தகழிநீர் மதிலை மோதல்.

(ப - ரை.) அகழிநீர் - (அந்த நகரைச்சூழ்ந்த) அகழிநீரானது, மதிலை மோதல் - மதிலைத்தாக்குதல், (நோக்குமிடத்து. (என்னிடத்திருந்த) கோன் பெறும் - பெருமைபெற்ற, அமிர்தம் - அமிர்தத்தை, கொள்ளைகொண்டுளார்- கொள்ளை கொண்டவராகிய தேவர்களுடைய, நகரை - நகரமாகிய சுவர்க்க லோகத்தை, மோதுஎன்று - (நீ சென்று) மோதியழிக்கக்கடவாயென்று, இன்புஉறு கிரம்ஆழி - இன்சுவையுள்ள பாற்கடலானது, இனிய நீர்க்கடலை ஏவ - இனிய நன்னீர்க்கடலையேவ, வன்புஉறும் அது - வலிமையுள்ள அந்த நன்னீர்க்கடலானது, வானவர்நகர் இதே என்ன - தேவர்களுடைய நகர மிதுவேயென்று பிரமித்து, சூழ்ந்து - வளைந்து கொண்டு, மன்பெறபொருதல் போன்றது - மிகுதியாகமோது தலை நிகர்த்திருந்தது. எ - று.

(பொ - ரை.) (அந்த நகரைச்சூழ்ந்த) அகழிநீரானது மதிலைத்தாக்குதல் (நோக்குமிடத்து) (என்னிடத்திருந்த) பெருமைபெற்ற அமிர்தத்தைக் கொள்ளை கொண்டவராகிய தேவர்களுடைய நகரமாகிய சுவர்க்கலோகத்தை (நீ சென்று) மோதியழிக்கக்கடவாயென்று, இன்சுவையுள்ள பாற்கடலானது இனிய நன்னீர்க்கடலையேவ, வலிமையுள்ள அந்த நன்னீர்க்கடலானது தேவர்களுடைய நகரமிதுவேயென்று பிரமித்து வளைந்துகொண்டு மிகுதியாக மோதுதலை நிகர்த்திருந்தது. எ - று.

(வி - ரை.) அமிர்தங்கொள்ளை கொண்டது என்றது திருப்பாற்கடலைக் கடைந்த செய்தியைக்குறித்தது. மோதல்போன்றது என முடித்துக் கொள்க. இதேயென்னவென வியையும். இதனால் குசேலனது நகர் தேவலோகம்போலத் தோற்றுகின்றதென்பது இனிது விளங்கும். (௧௨)

பற்பல வடுக்கு மாடம் பரந்தவிண் டாங்க னோக்கி
யற்புறு நந்தம் பொன்னா டந்தர நிற்ற லாலே
விற்பட நிலத்தெவ் வேலை வீழுமோ வென்றுட் கொண்ட
கற்பக மாலைத் தேவர் காதர மொழிந்த தன்றே.

(ப - ரை.) பற்பல அடுக்குமாடம் - (அந்நகரத்திலுள்ள) பற்பல அடுக்குகளையுடைய மாளிகைகள், பரந்தவிண்தாங்கல் - பரவிய விண்ணுலகத்தைத்தாங்குதலை, நோக்கி - பார்த்து, அற்புஉறும் - விருப்பமிருந்த, நந்தம் பொன்நாடு - நமது பொன்னுலகம், அந்தரம் நிற்றலாலே - வெளியில் நிற்கையாலே, வில்பட - ஒளிபொருந்த, நிலத்து - நிலத்தில், எவேலை - எந்தச்சமயத்தில், வீழுமோ என்று - விழுமோவென்று, உட்கொண்ட-மனத்தில் நினைத்துக்கொண்டிருக்கிற, கற்பகமாலைதேவர் - கற்பக மலர்மாலையையணிந்ததேவர்களுடைய, காதரம் ஒழிந்தது - அச்சம் நீங்கிவிட்டது. எ-று.

(பொ - ரை.) (அந்நகரத்திலுள்ள) பற்பல அடுக்குகளையுடைய மாளிகைகள், பரவிய விண்ணுலகத்தைத்தாங்குதலைப் பார்த்து, விருப்பமிகுந்த நமது பொன்னுலகம் வெளியில் நிற்கையாலே, ஒளிபொருந்த நிலத்தில் எந்தச்சமயத்தில் விழுமோவென்று மனத்தில் நினைத்துக்கொண்டிருக்கிற கற்பகமலர்மாலையையணிந்த தேவர்களுடைய அச்சம் நீங்கி விட்டது. எ - று.

(வி - ரை.) அடுக்கு - நிலை, மாடம் - உபரிகையெனினுமாம், விண் - இடவாகுபெயர், தாங்கல் - சுமத்தல், நந்தம் - என்பதில் தம் சாரியை, அந்தரம் - ஆதரவின்மையாகியவெளி, நோக்கி காரணப்பொருட்டாகிய இறந்தகாலவினையெச்சம், இது ஒழிந்தது என்னும் வினைகொண்டுமுடிந்தது, தேவர் காதரம் - ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர், அன்று ஏ அசைகள், மாடம் தாங்கல் எனவியையும், உட்கொண்ட என்னும் பெயரெச்சம் தேவர் என்னும் பெயர்கொண்டது. (கரு)

பற்றையார்ந் துயர்ந்த வோங்கற் பரிசன்ன பைம்பொன் மாடத்
தெற்றையான் புனைவல் வானாற் றிருபுற நெருங்கி நிற்குங்
கற்றையார்ந் தெழுந்த மாடங் கவிழ்தர வொட்டா வென்றோ
வொற்றையா ருருளைத் தேரா நடத்துவோ னுவகை பூத்தான்.

(ப - ரை.) பற்றை ஆர்ந்து - சிறுதூறுகள் அடரப்பெற்று, உயர்ந்த - உயர்ந்திருக்கிற, ஓங்கல் பரிசுஅன்ன-மலையின் தன்மைபோன்ற, பைபொன் - பசும்பொன்னாற் செய்யப்பட்ட, மாடத்து - மாளிகைகளின், எற்றை - எத்தன்மைத்தாகிய அலங்காரத்தை, யான்புனைவல் - நான்புனைந்துரைப்பேன், (அதுநிற்க) ஒற்றை உருளைஆர் - ஒற்றைச்சக்கரத்தையுடைய, தேரை - இரதத்தை, நடத்துவோன் - நடத்துவோனாகிய சூரியன், வான் ஆறு - ஆகாயகங்கையாற்றின், இருபுறம் - இரண்டுபக்கங்களிலும், நெருங்கி நிற்கும் - நெருங்கிநிற்கிற, கற்றை ஆர்ந்து எழுந்தமாடம்-திரளாகப்பொருந்தி மேலோங்கினமாடங்கள், கவிழ்தர ஒட்டா என்றோ - (நமது தேரை) கவிழவொட்டாவென்றுமனத்திலெண்ணி, உவகைபூத்தான் - களிப்பு மிகுந்தான். எ - று.

(பொ - ரை.) சிறு தூறுகள் அடரப்பெற்று உயர்ந்திருக்கிற மலையின் தன்மைபோன்ற, பசும்பொன்னாற் செய்யப்பட்ட மாளிகைகளின் எத்தன்மைத்தாகிய அலங்காரத்தை நான் புனைந்துரைப்பேன், (அதுநிற்க) ஒற்றைச் சக்கரத்தையுடைய இரதத்தை நடத்துவோனாகிய சூரியன், ஆகாயகங்கையாற்றின் இரண்டு பக்கங்களிலும் நெருங்கி நிற்கிற, திரளாகப்பொருந்தி மேலோங்கின மாடங்கள் (நமது தேரை) கவிழவொட்டாவென்று மனத்திலெண்ணிக்களிப்பு மிகுந்தான். எ - று.

(வி - ரை.) பற்றை - சிறுசெடி அல்லது சிறுகாடு எனினுமாம், ஓங்கல் - தொழிலாகுபெயர், எற்று - எத்தன்மைத்து, என்றோ - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம், இது உவகைபூத்தான் என்னும் வினைகொண்டது, உவகைபூத்தான்-ஒருசொல், உருளை - தொழிலாகுபெயர். (கசு)

இந்திர நீல மேடை யெழுங்கதிர்க் கற்றை மீப்போய்க்
கந்தடு வெண்க ளிற்றைக் கருங்களி றுக்க னோக்கி
முந்தைநாட் சாப மீட்டு முளைத்தது கொல்லென் றஞ்சிச்
சிந்தையு ளாய்ந்து பின்ன ரிதுவெனத் தெளியு மாலோ.

(ப - ரை.) இந்திரநீலம்-இந்திரநீலமணியாற் செய்யப்பட்ட, மேடை-மாடத்தினின்றும், எழும் - எழுந்த, கதிர் கற்றை - கிரணக்கற்றையானது, மீபோய் - மேலேசென்று, கந்துஅடு - கட்டுத்தறியை முறிக்கிற, வெண்களிற்றை - வெள்ளையானையாகிய ஐராவதத்தை, கருகளிறு ஆக்கல்-கரிய யானையாகச்செய்தலை, நோக்கி, பார்த்து, முந்தைநாள் சாபம்-முன்னைநாளின் சாபமானது, மீட்டும் - மறுபடியும், முளைத்தது கொல்என்று - முளைத்ததோவென்று, அஞ்சி - பயந்து, சிந்தையுள்ஆய்ந்து - மனத்திலாராய்ந்து, பின்னர் - பிறகு, இதுஎன - இதுவென்று, தெளியும் - யாவராலுந்தெளியப்படும்.

(பொ - ரை.) இந்திரநீலமணியாற் செய்யப்பட்ட மாடத்தினின்றும் எழுந்த கிரணக்கற்றையானது மேலேசென்று கட்டுத்தறியை முறிக்கிற வெள்ளையானையாகிய ஐராவதத்தைக்கரிய யானையாகச் செய்தலைப்பார்த்து, முன்னைநாளின் சாபமானது மறுபடியும் முளைத்ததோவென்று பயந்து மனத்திலாராய்ந்து பிறகு இதுவென்று யாவராலும் தெளியப்படும். எ - று.

(வி - ரை.) இந்திரநீலம் - நவமணிகளுளொன்று, கதிர்-ஒளி யெனினுமாம், முந்தைநாட்சாபம் என்றது முற்காலத்தில் துருவாசமுனிவரிட்ட சாபத்தை, கொல் - ஐயப்பொருட்டு, இதுவென - சாபமன்று இந்திரநீலகாந்தியாலுளதாகிய கருமை, தெளியும் - செயப்பாட்டுவினை, இதற்குயாவரும் என்னும்வினை முதல்வருவிக்கப்பட்டது, ஆல் ஓ - அசைகள், அஞ்சித்தெளியும் எனவியையும். (கரு)

வஞ்சிநுண் ணிடையி னார்மேன் மாடமே டையி லிருந்து
வெஞ்சினப் புலவி மூள மணிவடம் வெறுத்த தோளி
லஞ்சுமூ டலின்விண் மாத ரெறிந்தமுத் தாரம் வீழ
விஞ்சைவல் லவனங் கேள்வ னெனவுளம் வியந்து கொள்வார்.

(ப - ரை.) வஞ்சி - கொடிபோன்ற, நுண்இடையினார் - நுட்பமாகிய இடையையுடையவராகிய மாதர்கள், மேல்மாடமேடையில் இருந்து - மேல் மாடத்தின் உபரிகையிலிருந்து, வெம்சினம்-வெவ்வியகோவத்தோடுகூடிய, புலவிமூள - ஊடல்மூளுதலால், மணிவடம்வெறுத்த-முத்துவடத்தைவெறுத்தெறிந்து வறிதாயிருக்கிற, தோளில் - தோளின்மேல், அஞ்சும் - (தம்கணவர்) அஞ்சுதற்குரிய, ஊடலின் - ஊடலால், விண்மாதர் - சுவர்க்கலோகத்து மாதர்கள், எறிந்த - (வெறுத்து) வீசின, முத்து ஆரம்வீழ-முத்துமாலை வந்து விழுதலும், நம்கேள்வன் - நமது நாயகன், விஞ்சைவல்லவன்என - மந்திர வித்தையில் வல்லவனென்று, உளம் - தமதுமனத்தில், வியந்துகொள்வார் - ஆச்சரியமடைவார்கள். எ - று.

(பொ - ரை.) கொடிபோன்ற நுட்பமாகிய இடையையுடையவர்ாகிய மாதர்கள்மேல்மாடத்தின் உபரிகையிலிருந்து வெவ்வியகோவத்தோடுகூடிய ஊடல்மூளுதலால் முத்துவடத்தை வெறுத்தெறிந்து வறிதாயிருக்கிறதோளின்மேல் (தம்கணவர்) அஞ்சுதற்குரிய ஊடலால் சுவர்க்கலோகத்து மாதர்கள் வெறுத்துவீசின முத்துமாலைவந்து விழுதலும், நமது நாயகன் மந்திரவித்தையில்வல்லவனென்று தமது மனத்தில் ஆச்சரியமடைவார்கள். எ - று.

(வி - ரை.) வஞ்சி - வஞ்சிக்கொடியென்னும் ஓர் கொடி விசேடம் எனினுமாம், முத்தாரம் எனமேல்வருதலால் மணிவடம் என்றது முத்தாரத்தையெனக்கொள்க. ஊடல் - கலவிக்காலத்துண்டாவதாகிய சிறுகோவம், கேள்வன் - கேளாந்தன்மையுடையவன், வியந்துகொள்வார் - ஒருசொல்; வியப்பார் என்றபடி. (கசு)

சுதைபயின் மாடந் தோறுஞ் சுடர்மதி தவழுந் தோற்றங்
குதைவரிச் சிலையை வாட்டுங் கோடிய புருவ நுண்கூர்ப்
புதையிகல் கண்ணி ளுரம் போருக முகத்தை நேரத்
ததையுடற் களங்கந் தேய்த்துக் கழிப்பது தகையு மன்றே.

(ப - ரை.) சுதைபயில் - சுண்ணச்சாந்து தீற்றப்பெற்ற, மாடம்தோறும் - மாடங்கள்தோறும், சுடர் - ஒளியுள்ள, மதி - சந்திரன், தவழும் தோற்றம் - தவழ்கின்ற காட்சியானது, குதைவரிசிலையை வாட்டும் - குதையையும் நீட்சியையுமுடையவில்லை வருத்துகிற, கோடிய-வளைந்த, புருவம்-புருவத்தையும், நுண்கூர் - நுண்ணிய கூர்மையையுடைய, புதை - அம்போடு, இகல் - பகைக்கின்ற, கண்ணினர் - கண்களையுமுடைய மாதரது, அம்போருகம் - தாமரைமலர்போன்ற, முகத்தைநேர - முகத்தை நிகர்க்கும் பொருட்டு, ததை - நெருங்கிய, உடல் - (தனது) உடம்பிலுள்ள, களங்கம் - களங்கத்தை, தேய்த்து - உராய்ந்து, கழிப்பது - நீக்கிக்கொள்வதை, தகையும் - நிகர்க்கும். எ - று.

(பொ - ரை.) சுண்ணச்சாந்து தீற்றப்பெற்ற மாடங்கள்தோறும் ஒளியுள்ள சந்திரன் தவழ்கின்ற காட்சியானது, குதையையும் நீட்சியையுமுடைய வில்லை வருத்துகிற வளைந்த புருவத்தையும், நுண்ணிய கூர்மையையுடைய அம்போடு பகைக்கின்ற கண்களையுமுடைய மாதரது தாமரைமலர்போன்ற முகத்தை நிகர்க்கும் பொருட்டு நெருங்கிய (தனது) உடம்பினுள்ள களங்கத்தை உராய்ந்து நீக்கிக் கொள்வதை நிகர்க்கும். எ - று.

(வி - ரை) தோற்றம் தகையும் என முடித்துக்கொள்க. வரி-கட்டு எனினுமாம். தகைதல் - நிகர்த்தல். களங்கம் - கறை, (கல்மஷம) அம்போருகம் வடசொல், நீரிற்பிறப்பது என்பதிதன்பொருள். அன்று ஏ அசைகள்.

மணிநிலா முற்ற மேவி மாதரார் வயங்கு கண்கட்
கணிநிலா வுறுமை தீட்ட வதிகமை யுகிரிற் கோத்துத்
துணிநிலா விசும்பிற் றுள்ளத் தெறித்திடு தோறு மாங்குத்
தணிநிலா மெய்யிற் சார்ந்து தயங்கிடுங் களங்க மென்ன.

(ப - ரை.) மாதரார் - மாதர்கள், மணி - ரத்நங்களிழைத்த, நிலாமுற்றம்மேவி - நிலாமுற்றத்தையடைந்து, வயங்கு - விளங்குகின்ற, கண்கட்கு - கண்களுக்கு, அணிநிலாவுறும் - அழகு விளங்குகிற, மைதீட்ட - அஞ்சனமெழுதுதற்கு, அதிகம்மை - மிகுதியாகியமையை, உகிரில்கோத்து - நகத்திற் கோத்துக்கொண்டு, துணி-ஒளியுள்ள, நிலா - சந்திரன் தவழ்கின்ற, விசும்பில் - ஆகாயத்தில், துள்ள தெறித்திடுதோறும் - துள்ளும்படி தெறிக்குந்தோறும், ஆங்கு - ஆகாயத்தில், தணி-குளிர்ந்த, நிலாமெய்யில் சார்ந்து - சந்திரனது உடம்பிற்பட்டு, களங்கம்என்ன - களங்கமென்று (உலகத்தார்) சொல்லும்படி, தயங்கிடும் - விளங்கும். எ - று.

(பொ - ரை.) மாதர்கள், ரத்நங்களிழைத்த நிலாமுற்றத்தையடைந்து விளங்குகின்ற கண்களுக்கு அழகு விளங்குகிற அஞ்சனமெழுதுதற்கு மிகுதியாகியமையை நகத்திற்கோத்துக்கொண்டு ஒளியுள்ள சந்திரன் தவழ்கின்ற ஆகாயத்தில் துள்ளும்படிதெறிக்குந்தோறும் அந்த ஆகாயத்தில் குளிர்ந்த சந்திரனது உடம்பிற்பட்டு, களங்கமென்று உலகத்தார்சொல்லும்படிவிளங்கும்.

(வி - ரை.) நிலாமுற்றத்தை ஹர்ம்யம் என்பர் வடநூலார், மணி - நவமணிகள், கண்களுக்கஞ்சனத்தால் பேரழகுண்டாமாதலால் 'கண்கட்கணி நிலாவுறுமைதீட்ட' என்றார். கண்கட்குமைதீட்ட எனவும், மைகோத்துஎனவும், விசும்பில்தெறித்திடுதோறும் எனவும் இயையும், துள்ளத்தெறித்தல் - எழுந்துபடத்தெறித்தல். (கஅ)

வெள்ளிய மாடந் தோறும் விளங்கெழின் மணிப்பூ ணல்லா
ரள்ளொளிக் கற்றை வீச வணிந்துநிற் கின்ற தோற்றந்
தெள்ளுவெண் டிரைசு ருட்டுஞ் சிறந்தபாற் கடலி னூப்ப
ணெள்ளலில் பவள வல்லி யெழுந்துநின் றிடுதல் லேய்க்கும்.

(ப-ரை.)வெள்ளியமாடம்தோறும்-வெண்மையாகிய மாடங்கள்தோறும், விளங்குஎழில்-பிரகாசிக்கிற அழகையுடைய மணிபூண் - ரத்நாபரணங்களையணிந்த, நல்லார்-மாதர்கள், அள்-அள்ளிக்கொள்ளலாம்படியான, ஒளிகற்றை வீச - ஒளித்திரள் வீசும்படி, அணிந்து நிற்கின்ற - அலங்கரித்துக்கொண்டு நிற்கிற, தோற்றம் - காட்சியானது, தெள்ளு - தெளிந்த, வெண்திரைசுருட்டும் - வெள்ளிய அலைகளை மடக்குகின்ற, சிறந்த - மேன்மையான, பாற்கடலின்நாப்பண் - பாற்கடலினடுவே, எள்ளல் இல் - பழிப்பற்ற, பவளவல்லி - பவளக்கொடிகள், எழுந்துநின்றிடுதல்-எழுந்துநிற்பதை, ஏய்க்கும்-நிகர்க்கும்.

(பொ - ரை.) வெண்மையாகிய மாடங்கள்தோறும் பிரகாசிக்கிற அழகையுடைய ரத்நாபரணங்களையணிந்த மாதர்கள் அள்ளிக்கொள்ளலாம்படியான ஒளித்திரள் வீசும்படி அலங்கரித்துக்கொண்டு நிற்கிறகாட்சியானது தெளிந்த வெள்ளிய அலைகளை மடக்குகின்ற மேன்மையான பாற்கடலினடுவே பழிப்பற்றபவளக்கொடிகள் எழுந்து நிற்பதை நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) வெள்ளியமாடம் பாற்கடலுக்கும் மாதர்பவளக்கொடிக்கும் உவமையாகக்கொள்க. 'அள்ளொளி' என்றமையால் ஒளிமிகுதி பெறப்பட்டது, மாடந்தோறும் நிற்கின்ற எனவும், திரைசுருட்டும் பாற்கடல் எனவும் இயைக்க, தோற்றம் ஏய்க்கும் எனமுடித்துக்கொள்க. திரை முந்நீரைத் தொழிலாகு பெயர்.

(க௯)

இரசிதத் தமைத்த மாட மெறிசெறி திரைப்பா லாழி
வரவதன் மீது துஞ்சு மஞ்சுமா றடித்து மாவாம்
விரவுசெம் மேகக் கற்றை விளங்கிடு செம்பொ னுடை
யுரவுவெண் பிறைவெண் சங்க முடுக்களச் சங்கீன் முத்தம்.

(ப - ரை.) இரசிதத்து அமைத்தமாடம் - வெள்ளியினற் செய்யப்பட்டமாடம், எறிசெறிதிரை - வீசுதல் நெருங்கின அலைகளையுடைய, பால் ஆழி - திருப்பாற்கடலையும், வரம் - மேன்மையாக, அதன் மீது துஞ்சும் - அதன்மீது படிந்த, மஞ்சு - மேகமானது, மால் - திருமாலையும், தடித்து - மின்னலானது, மா - திருமகளையும், விரவு - கூடின, செம்மேகக்கற்றை - செம்மேகத்திரள், விளங்கிடு - விளங்குகின்ற, செம்பொன் ஆடை - செம்பொன்னுடையையும், உரவு வெண்பிறை - மிக்கவெண்மையாகிய பிறையானது, வெண்சங்கம் - வெள்ளிய சங்கினையும், உடுக்கள் - நட்சத்திரங்கள், அ சங்கு ஈன் முத்தம்-அந்தச்சங்குகள் ஈன்ற முத்தினையும், ஆம் - நிகர்க்கும்.

(பொ - ரை.) வெள்ளியினற் செய்யப்பட்டமாடம் வீசுதல் நெருங்கின அலைகளையுடைய திருப்பாற்கடலையும், மேன்மையாக அதன்மீதுபடிந்த மேகமானது திருமாலையும், மின்னலானது திருமகளையும், கூடின செம்மேகத்திரள் விளங்குகின்ற செம்பொன்னுடையையும், மிக்க வெண்மையாகிய பிறையானது வெள்ளிய சங்கினையும், நட்சத்திரங்கள் அந்தச்சங்குகள் ஈன்ற முத்தினையும் நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) இரசிதம், தடித்து, என்பன முறையேரஜிதம், தடித் என்னும் வடசொற்றிரிபுகள், ஆம் என்பதனை பாலாழி முதலியவற்றிறுதிக்கட் கூட்டுக. ஆம் என்பது இவ்விடத்து நிகர்க்கும் என்னும்பொருளது, வரம் - மேன்மை, அதன்மீது என்றது அந்த மாடத்தின்மீது என்றபடி. மாலுக்குக் கொள்ளுங்கால் துஞ்சுதல்-யோகநித்திரை செய்தல் எனப்பொருள்கொள்க. பாலாழி - மூன்றும்வேற்றுமையுருபும் பயனுமுடன்றொக்க தொகைநிலைத் தொடர், பாலானியன்றவாழி எனவிரியும். (உ௦).

விலங்கல்விண் ணுயர்ந்த மாடம் வியன்கொடி முடங்க லாங்க
ணிலங்குறு மதிய மந்தேத் திறன்மட மாதர் மஞ்ஞை
நலங்கொளம் மதியங் கண்டு நகைநிலா மணிபெய் தெண்ணீர்
கலங்கலி லருவி யீட்டங் கார்கடக் களிநல் யானை.

(ப - ரை.) விண் உயர்ந்தமாடம் - ஆகாயத்தளவு முயர்ந்த மாடமானது, விலங்கல் - மலையையும், வியன்கொடி - பெரிய கொடிகள், முடங்கல் - (அதன் மீதுள்ள) மூங்கில்களையும், ஆங்கண் - அவ்விடத்து, இலங்குறும் மதியம் - விளங்குகின்ற பூர்ணசந்திரன், அம்தேத்து இறல் - அழகிய தேன் கூட்டையும், மடமாதர் - இளமை பொருந்திய பெண்கள், மஞ்ஞை - மயில்களையும், நலம் கொள் - அழகைக்கொண்ட, அ மதியம் கண்டு - அந்தச் சந்திரனைக்கண்டு, நகை நிலாமணி - ஒளிபொருந்திய சந்திர காந்தங்கள், பெய் - பொழிகின்ற, தெள்நீர் - தெளிந்த நீரானது, கலங்கல் இல் -

கலங்குதல் இல்லாத, அருவி ஈட்டம் - அருவித்திரளேயும், சார் - மேகமானது, களி - களிப்புள்ள, கடம் - மதநீரைச் சொரிகின்ற, நல் யானை - சிறந்த யானைகளேயும் (நிகர்க்கும்) எ - று.

(பொ - ரை.) ஆகாயத்தளவுமுயர்ந்த மாடமானது மலையையும், பெரிய கொடிகள் (அதன் மீதுள்ள) மூங்கில்களேயும், அவ்விடத்து விளங்குகின்ற பூர்ணசந்திரன் அழகிய தேன் கூட்டையும், இளமை பொருந்திய பெண்கள் மயில்களேயும், அழகைக்கொண்ட அந்தச் சந்திரனைக் கண்டு ஒளி பொருந்திய சந்திர காந்தங்கள் பொழிகின்ற தெளிந்த நீரானது கலங்குதலில்லாத அருவித்திரளேயும், மேகமானது களிப்புள்ள மதநீரைச் சொரிகின்ற சிறந்த யானைகளேயும் (நிகர்க்கும்.) எ - று.

(வி - ரை.) விலங்கல் - முதலியவற்றின் இறுதிக்கண் நிகர்க்கும் என்னுஞ்சொல் வருவித்துரைக்கப்பட்டது. விண் - விண்ணளவும். கொடி - துவசம். தேத்திறல் என்பதனை ஒரு சொல்லாக்காது தேனையுடைய இறால் எனினுமாம். முது பெண்டிர் மஞ்ஞைக்கு நிகராகாமையின் 'மடமாதர் மஞ்ஞை என்றார்' மதியம் என்பதில் அம்சாரியை. தேம் - தேன். நிலாமணி - சந்திரகாந்தக்கல். கார் - உலகுக்கு இதநீர் பெய்வதனால் மதநீர் பெய்யும் யானையை அதற்கு உவமையாக்கினர். (உக)

அண்ணலங் களிநல் யானை யார்ப்பும் வாம்பரி முழக்கு
மொண்ணலங் கொடிஞ்சித் திண்டே ரோதையும் வயவ ரார்ப்பும்
பண்ணலங் கனிந்த தீஞ்சொற் பாவையர் கலன்க ளார்ப்பு
மண்ணலம் புனைந்த வாடை வாரிவா யடைக்கு மாதோ.

(ப - ரை.) அண்ணல்-பெருமையும், அம்-அழகும், களி-களிப்புமுள்ள, நல் - சிறந்த, யானை - யானைகளின், ஆர்ப்பும் - ஓசையும், வாம் - தாவிச் செல்லுகின்ற, பரி - குதிரைகளின், முழக்கும் - ஓசையும், ஒள் - ஒட்பமாகிய, நலம் - அழகிய, கொடிஞ்சி - மேல் மொட்டினையுடைய, திண் - உறுதியாகிய, தேர் - தேர்களின், ஓதையும் - ஓசையும், வயவர் - காலாட்களின், ஆர்ப்பும் - ஓசையும், பண் - பண்களின், நலம் கனிந்த - இனிமையினுமுதிர்ந்த, தீ சொல் - மதுரவசநங்களேயுடைய, பாவையர் - மாதர்களணிந்த, கலன்கள் - ஆபரணங்களின், ஆர்ப்பும் - ஓசையும், மண் - பூதேவியானவள், நலம்புனைந்த - அழகாகத்தரித்த, ஆடை - ஆடையாகிய, வாரி - கடலின், வாய்அடைக்கும் - வாயினையடைக்கும். எ - று.

(பொ - ரை.) பெருமையும் அழகும் களிப்புமுள்ள சிறந்த யானைகளின் ஓசையும், தாவிச் செல்லுகின்ற குதிரைகளின் ஓசையும் ஒட்பமாகிய அழகிய மேல் மொட்டினையுடைய உறுதியாகிய தேர்களின் ஓசையும்,காலாட்களின் ஓசையும், பண்களின் இனிமையினுமுதிர்ந்த மதுரவசநங்களேயுடைய மாதர்களணிந்த ஆபரணங்களின் ஓசையும், பூதேவியானவள் அழகாகத்தரித்த ஆடையாகிய கடலின்வாயினையடைக்கும். எ - று.

(வி-ரை.) கல்யாணை-உத்தமசாதியானையெனினுமாம், வாவும் என்பதுவாம் எனத்தொகுத்தலாயிற்று. பண்-இராகம் என்றலுமாம், பாவையர்-பாவைபோலு முருவுடையவர், கலன்களாப்பு என்றது ஆபரணங்கள் ஒன்றோடொன்று தாக்குண்டொலிக்கு மோசையை, நிலமகட்கு ஆடையாவது கடலேயாதலால் 'மண்ணலம் புனைந்தவாடைவாரி' என்றார் 'வாயடைக்கும்' என்றது கடலினுமிக்கொலிக்கும் என்றபடி. யானைமுதலிய நான்கனோசையாவன-முறையே பூத்காரவோசையும், கனைப்பொலியும், அதிரொலியும், ஆரவாரமும் என்பன.

மறைபயில் சிறார்தங் கூட்டம் வயங்கிய கிடையு மற்றைக்
கறையறு கல்வி கற்குங் காமர்சா லையுங்கார்க் கூந்த
னறையொழு கலங்கன் மாதர் நடநவில் சாலை யும்பொன்
னிறைபல வறமு மோங்கு நெடியசா லைகளும் பல்ல.

(ப - ரை.) மறைபயில் - வேதங்களை அப்பியசிக்கிற, சிறார் கூட்டம் - பார்ப்பனச்சிறுவர் கூட்டம், வயங்கிய கிடையும் - தங்கியவேதபாட சாலைகளும், கறைஅறு - குற்றமற்ற, மற்றை கல்விகற்கும் - வேறுகல்விகளைக்கற்கிற, காமர்சாலையும் - அழகியபாடசாலைகளும், கார்கூந்தல் - கரியகூந்தலில் நறை ஒழுகு - தேனொழுகுகின்ற, அலங்கல் - பூமாலையையணிந்த, மாதர் - கணிகைமாதர், நடம் நவில்சாலையும் - நடனஞ்செய்கிற நாட்டியச்சாலைகளும், பொன்நிறை - பொன்னிறைந்த, பல அறமும் ஓங்கும் - பல தர்மங்களும் மிகுதியாக நடத்தப்படுகிற, நெடியசாலைகளும் - பெரிய அறச்சாலைகளும், பல்ல அநேகங் களாயிராநின்றன (அந்நகரத்தில்,) எ - று.

(பொ - ரை.) வேதங்களை அப்பியசிக்கிற பார்ப்பனச்சிறுவர் கூட்டம் தங்கிய வேதபாடசாலைகளும், குற்றமற்ற வேறுகல்விகளைக்கற்கிற அழகிய பாடசாலைகளும், கரியகூந்தலில் தேனொழுகுகின்ற பூமாலையையணிந்த கணிகைமாதர் நடனஞ்செய்கிற நாட்டியச்சாலைகளும், பொன்னிறைந்த பல தர்மங்களும் மிகுதியாக நடத்தப்படுகிற பெரிய அறச்சாலைகளும் அநேகங் களாயிராநின்றன (அந்நகரத்தில்.) எ - று.

(வி - ரை.) 'மறைபயில் சிறார்தங்கூட்டம் வயங்கிய' என்னும்விசேடணத்தால், கிடை வேதபாடசாலையைக்குறித்தது, சிறார்தம் என்பதில் தம்சாரியை, கார்க்கூந்தல்-மேகம்போலுங்கூந்தல் எனினுமாம், நடநவில் என்னும் விசேடணத்தால் சாலை நாட்டியச்சாலைக்காயிற்று, பலவறமுமோங்குதற்குப்பொன் முதற்காரணமாதலால் 'பொன்னிறை பலவறமு மோங்குநெடிய சாலைகள்' என்றார். (உஉ)

பரிநிரை சென்டு போகும் பைம்பொன்வார் மறுகு நீள்கைக்
கரிநிரை கடம்பெய் தேகுங் காமரு மறுகுஞ் செம்பொன்
விரிமணி யுருளைத் திண்டேர் விரைந்துசென் மறுகும் வீர
ரரியின மஞ்ச வாளாட் டாடிடு மறுகும் பல்ல.

(ப - ரை.) பரிநிரை - குதிரைக்கூட்டம், சென்டுபோகும் - வையாளி போகின்ற, பைபொன்வார்மறுகும் - பசும்பொன்மயமான நெடிய வீதிகளும்,

நீள்கை - நீண்டதுதிக்கையினையுடைய, கரிநிரை - யானைக்கூட்டம், கடம் பெய்து ஏகும் - மதநீரைச்சொரிந்துகொண்டு போகின்ற, காமருமறுகும் - அழகிய வீதிகளும், செம்பொன்விரிமணி - செம்பொன்மீது விஸ்தாரமான மணிகள் பதித்துச்செய்யப்பட்ட, உருளை - உருள்கோத்த, திண்டேர் - உறுதியான தேர்கள், விரைந்துசெல்மறுகும் - விரைந்தோடுகின்ற வீதிகளும், வீரர் - வீரர்கள், அரி இனம் அஞ்ச - பகைவர் கூட்டம் அஞ்சும்படி, வாளாட்டு ஆடிடும்மறுகும் - வாளாட்டாடுகின்ற வீதிகளும், பல்ல - அநேகங்களாயிராநின்றன (அந்நகரத்தில்.) எ - று.

(பொ - ரை.) குதிரைக்கூட்டம் வையாளிபோகின்ற பசும்பொன் மயமான நெடிய வீதிகளும், நீண்டதுதிக்கையினையுடைய யானைக்கூட்டம் மதநீரைச்சொரிந்துகொண்டு போகின்ற அழகிய வீதிகளும், செம்பொன்மீது விஸ்தாரமான மணிகள் பதித்துச்செய்யப்பட்ட உருள்கோத்த உறுதியான தேர்கள்விரைந்தோடுகின்ற வீதிகளும்,வீரர்கள்பகைவர் கூட்டம்அஞ்சும்படி வாளாட்டாடுகின்ற வீதிகளும், அநேகங்களாயிராநின்றன (அந்நகரத்தில்.)

(வி - ரை.) செண்டு - குதிரைவையாளி வீதி, வையாளி - குதிரையின் வேககதி,கரியெனமேலே வருதலால் கைதுதிக்கையையுணர்த்திற்று, காமரு என்பதில் உகரம் சாரியை, உருள் - சக்கரம், வாளாட்டாடுதல் - வாள் விளையாட்டினைச்செய்தல் - அதாவது வாட்போர் பயிலுதல், பகைவர் அஞ்சுதல் ஏற்றுக்கெனின், இந்நகரத்து ஆடவரெல்லாரும் வாள்வித்தையில் வல்லவரெனக்கருதியென்க. (உச)

கழிந்தகா முகர்த நெஞ்சங் கனிந்தசீ ரணங்க னூர்பா
லெழுந்துசெல் கதியுந் தோற்பத் துனைவினி னேகும் பாய்மா
வழிந்திடு நீர்மை முட்ட வாவுவ விண்ணும் வாயு
வழுந்துறச் செல்வ மென்று வறிதரத் தெருட்டல் போன்ற.

(ப - ரை.) கழிந்த - விட்டுப்பிரிந்த, காமுகர்நெஞ்சம் - காமுகரது மனமானது, கனிந்தசீர் - மிகுந்த அழகையுடைய, அணங்கு அன்னூர்பால் - தெய்வப்பெண்களை நிகர்த்தமாதரிடத்தில், எழுந்து செல்கதியும் - எழுந்து செல்லுகின்ற வேகமும், தோற்ப - தோல்வியடையும்படி, துனைவினின் ஏகும் - விரைவாகச்செல்லுகிற, பாய்மா - குதிரைகள், வழிந்திடும் நீர் - ஒழுகுகின்ற நீரைத்தன்னிடத்திலேயுடைய, மைமுட்ட - மேகத்தைமுட்டும்படி, வாவுவ - தாவிச்செல்லுவனவற்றை (நோக்குமிடத்து), விண்ணும் - ஆகாயத்திலும், வாயு அழுந்துற - வாயுதாழும்படி, செல்வம் என்று - யாம் செல்லுவோமென்று, அறிதர - யாவருமறியும்படி, தெருட்டல்போன்ற - தெளிவித்தல் போலிருந்தன. எ - று.

(பொ - ரை.) விட்டுப்பிரிந்த காமுகரது மனமானதுமிகுந்த அழகையுடைய தெய்வப்பெண்களை நிகர்த்த மாதரிடத்தில் எழுந்துசெல்லுகின்ற வேகமும் தோல்வியடையும்படி விரைவாகச்செல்லுகிற குதிரைகள், ஒழுகுகின்ற நீரைத்தன்னிடத்திலேயுடைய மேகத்தை முட்டும்படி தாவிச்செல்லு

வணவற்றை (நோக்குமிடத்து) ஆகாயத்திலும் வாயுதாழும்படி, யாம் செல்லு வோமென்றுயாவருமறியும்படி தெளிவித்தல் போலிருந்தன. எ - று.

(வி - ரை.) காமுகர்-விடர், தம்-சாரியை, கனிதல்-முதிர்தல், அது இங்கு மிகுதற்பொருளது, கதி - நடையுமாம், துனைவு - விரைவு, மை - மேகம்.

விற்றவழ் சூழி யானை மிகப்பொழி தானம் பாய்ந்து
முற்றவும் வழுக்க லுற்ற வீதியின் முனியு மூடற்
பொற்றொடி யவரெ றிந்த மணிக்கலன் பொலித லாலே
யுற்றகால் வழுக்கி வீழ்த லொழிந்தனர் நடப்பார் யாரும்.

(ப - ரை.) வில்தவழ் - ஒளிதவழ்கின்ற, சூழி - முகபடாத்தையணிந்த, யானை - யானைகள், மிகபொழி - மிகுதியாய்ச்சொரிகின்ற, தானம்பாய்ந்து - மதநீர்பாய்ந்து, முற்றவும் - முழுதும், வழுக்கலுற்ற - வழுக்குதலையுடைய, வீதியில் - தெருக்களில், முனியும் - (கணவரை) கோவிக்கிற, ஊடல் - பிணக்கத்தையுடைய, பொன்தொடியவர்-பொன்னாலியன்ற வளையலையணிந்தமாதர்கள், எறிந்த - வீசியெறிந்த, மணிக்கலன்பொலிதலாலே - ரத்நாபரணங்கள் மிகுதியாய்க்கிடத்தலால், நடப்பார் யாரும் - அத்தெருக்களில் நடப்பவரெல்லாரும், உற்றகால்வழுக்கி வீழ்தல் - வைத்தகால்வழுக்கி விழுதலை, ஒழிந்தனர் - நீங்கினார்கள். எ - று.

(பொ-ரை) ஒளிதவழ்கின்ற முகபடாத்தையணிந்தயானைகள் மிகுதியாய்ச்சொரிகின்றமதநீர்பாய்ந்துமுழுதும்வழுக்குதலையுடையதெருக்களில்(கணவரை)கோவிக்கிறபிணக்கத்தையுடைய பொன்னாலியன்ற வளையலையணிந்த மாதர்கள் வீசியெறிந்த ரத்நாபரணங்கள் மிகுதியாய்க்கிடத்தலால் அத்தெருக்களில் நடப்பவரெல்லாரும் வைத்தகால் வழுக்கி விழுதலை நீங்கினார்கள்.

(வி - ரை.) வில்தவழ் சூழியென்றது பொன்னினாலும் மணிகளாலும் செய்யப்பட்ட முகபடாம் என்றபடி, பாய்ந்து - காரணப்பொருட்டாகிய வினையெச்சம், பாய்ந்து வழுக்கலுற்ற எனவும், வீதியில் எறிந்த எனவும், நடப்பார்யாரும் ஒழிந்தனர் எனவும் இயையும். (உகூ)

கொன்னுனை மருப்பி யானைக் குழாம்பொழி தானம் வாவுந்
துன்னுளைப் பரிவி லாழி துலங்குமந் நகர நின்றும்
பன்னுமண் ணுலக மெங்கும் பரத்தலால் வழுக்கு மென்று
நன்னிலங் காறே யாம நடக்கின்றார் துறக்க வாணர்.

(ப - ரை.) கொல் - (பகைவரைக்) கொல்லுகிற, நுனை - முனையுள்ள, மருப்பு - கொம்புகளையுடைய, யானைகுழாம்பொழிதானம் - யானைக்கூட்டம் பொழிகிற மதநீரும், வாவும் - தாவிச்செல்லுகின்ற, துன் - நெருங்கிய, உளை - புறமயிரையுடைய, பரி - குதிரைகளின், விலாழி - வாயுமிழ்நீரும், துலங்கும் - விளங்குகின்ற, அ நகரம் நின்றும் - அந்தநகரத்திலிருந்து, பன்னும் - சொல்லப்பட்ட, மண் உலகம் எங்கும் - மண்ணுலகமுழுதும், பரத்தலால் - பரவியிருத்தலால், வழுக்குமென்று - வழுக்குமென் றெண்ணியே,

துறக்கவாணர் - தேவர்கள், நல்நிலம் கால்தோயாமல் - நல்ல மண்ணில் தத் கால்படாமல், நடக்கின்றார் - (அந்தரத்தில்) நடக்கிறார்கள் . எ - று.

(பொ - ரை.) பகைவரைக் கொல்லுகிற முனையுள்ள கொம்புகளை யுடைய யானைக்கூட்டம் பொழிகிற மதநீரும், தாவிச் செல்லுகின்ற நெருங் கிய புறமயிரையுடைய குதிரைகளின் வாயுமிழ்நீரும், விளங்குகின்ற அந்த நகரத்திலிருந்து, சொல்லப்பட்ட மண்ணுலக முழுதும் பரவி யிருத்தலால் வழுக்குமென்றெண்ணியே, தேவர்கள் நல்ல மண்ணில் தம் கால்படாமல் (அந்தரத்தில்) நடக்கிறார்கள். எ - று.

(வி - ரை.) நுனை - நுனி, உளை - பிடர்மயிர் எனினுமாம். நின்றும் ஐந்தாவதன் சொல்லுருபு. முத்திப்பேற்றிற்குரியதாதலால் பூமியை - நன் னிலம் என்றார். வாணர் - வாழ்நர் (வாழ்வோர்). துறக்கவாணர் - சுவர்க்க லோகத்தில் வாழ்தலையுடையோர். (உஎ)

நயக்குமா தர்கடங் கூந்தற் கிடுநறும் புகைவிண் மாதர்
வயக்குமெய் சூழ்த னோக்கார் மணமவர்க் கியற்கை யென்ப
ரியற்கையைச் செயற்கை யாகச் செயற்கையை யியற்கையாக
மயக்குமற் றவரைக் கேட்கி னிலக்கணை வகையா மென்பார்.

(ப - ரை.) நயக்கும் - விரும்பப்படுகிற, மாதர்கள் கூந்தற்கு இடும் - மாதர்களுடைய கூந்தலுக்கு ஊட்டுகிற, நறுபுகை - நறுமணமுள்ள புகை யானது, விண்மாதர் - விண்ணுலகத்துப் பெண்களுடைய, வயக்கும்மெய் சூழ்தல் நோக்கார் - விளங்குகின்ற சரீரத்தைப் பொருந்துவதை நோக்காதவ ராய், மணம் - மணமானது, அவர்க்கு இயற்கை என்பர் - அவர்களுக்கு இயற்கையேயா மென்பார்கள், இயற்கையைச் செயற்கையாகச்செயற்கையை யியற்கையாக-இயற்கையைச் செயற்கையாகவும் செயற்கையையியற்கையாக வும்,மயக்கும் அவரை-மயக்குவோரை, கேட்கின்-கேட்டால், இலக்கணவகை ஆம் என்பார் - (அப்படிச் சொல்லுதல்) இலக்கணவகையாகுமென்பார்கள்.

(பொ - ரை.) விரும்பப்படுகிற மாதர்களுடைய கூந்தலுக்கு ஊட்டு கிற நறுமணமுள்ள புகையானது விண்ணுலகத்துப் பெண்களுடைய விளங் குகின்ற சரீரத்தைப் பொருந்துவதை நோக்காதவராய்,மணமானது அவர்களு க்கு இயற்கையேயா மென்பார்கள். இயற்கையைச்செயற்கையாகவும் செயற் கையை யியற்கையாகவும் மயக்குவோரைக்கேட்டால் (அப்படிச்சொல்லுதல்) இலக்கணவகையாகுமென்பார்கள். எ - று.

(வி - ரை.) நயக்கு மாதர்கள்என்றது - அந்நகரத்துமாதர்களை. மாதர் கள் தம் என்பதில் தம் சாரியை, மாதர்கள் தம் கூந்தற்கு இடும் என்பதற்கு- மாதர்கள் தமது கூந்தலுக்கு ஊட்டுகிற எனினுமாம். மற்று - அசை. இலக்கணை - உரிய பொருளைவிட்டு அப்பொருளின் சம்பந்தியை யுணர்த்து வது, அது விட்ட விலக்கணை, விடாத விலக்கணை, விட்டு விடாத விலக்கணை என மூவகைப்படும். இவற்றை முறையே ஜஹற்லக்ஷணை, அஜஹற்லக்ஷணை, ஜஹதஜஹற்லக்ஷணை என்பர் வடநூலார். (உஅ)

மங்கலப் பொலிவு மிக்க மாடமா ளிகையும் வாசத்
தொங்கலங் கூந்த னல்லார் தொகுதியும் விருந்தை யூட்டும்
பொங்கிய களிப்பு மீகைப் புகழ்ச்சியு நல்லோர் வாழ்த்தும்
பங்கமின் மக்கட் பேறும் பண்புமிக் கஃதம் மூதூர்.

(ப - ரை.) அ - அந்த, மூதூர் - பழைய நகரமானது, மங்கலப் பொலிவுமிக்க - மங்கலப்பெருக்க மிகுந்த, மாடமாளிகையும் - மாடமாளிகைகளும், வாசம் - பரிமளமுள்ள, தொங்கல் - பூமாலையணிந்த, அம் - அழகாகிய, கூந்தல் - கூந்தலையுடைய, நல்லார் தொகுதியும் - மாதர் கூட்டமும், விருந்தை ஊட்டும் - விருந்தினரை யுண்பிக்கிற, பொங்கிய களிப்பும் - மிகுந்த களிப்பும், ஈகை புகழ்ச்சியும் - கொடைப் புகழ்ச்சியும், நல்லோர் வாழ்த்தும் - நல்லோர்களுடைய ஆசீர்வாதமும், பங்கம் இல்மக்கட்பேறும் - குற்றமற்ற மக்களைப் பெறுதலும், பண்பும் - நற்குணமும், மிக்கது - மிகுதியாயுடையது.

(பொ - ரை.) அந்தப்பழைய நகரமானது மங்கலப் பெருக்க மிகுந்த மாடமாளிகைகளும், பரிமளமுள்ள பூமாலையணிந்த அழகாகிய கூந்தலையுடைய மாதர் கூட்டமும், விருந்தினரை யுண்பிக்கிற மிகுந்த களிப்பும், கொடைப் புகழ்ச்சியும், நல்லோர்களுடைய ஆசீர்வாதமும், குற்றமற்ற மக்களைப் பெறுதலும், நற்குணமும் மிகுதியாயுடையது. எ - று.

(வி-ரை.) மங்கலம்-கலியாணமுதலியசுபகாரியங்கள். ஈகைப்புகழ்ச்சி-கொடைப் பெருமையை யிரவலர் புகழ்தல். நல்லோர்-முனிவர் அந்தணர் முதலியோர். பங்கமில்மக்கள் - நன்மக்கள். பண்பு - சமதமாத்யாத்ம குணங்கள்.

பணைபுகை மிகுதி யாலே படர்தழன் மிகுதி தானித்
துணையதென் றுணர்வார் போலச் சொற்றவிச் சிறப்பி னாலே
மணமலி புகழ்க்கு சேலன் மனைச்சிறப் பினையு மோர்தி
யணவுறும கஃதெற் றென்று வினவற்க வரச ரேறே.

(ப - ரை.) பணை - அதிகரித்த, புகை மிகுதியாலே - புகையின் மிகுதியால், படர் - பரவுகின்ற, தழல் மிகுதி - நெருப்பின் மிகுதி, இத்துணையது என்று - இவ்வளவினதென்று, உணர்வார்போல - அறிபவர்போல, சொற்ற - (இதுவரையும் யாம்) சொன்ன, இ சிறப்பினாலே - இந்த நகரச்சிறப்புக்களால், மணம் மலிபுகழ் - மகிழ்ச்சிமிகுந்த புகழையுடைய, குசேலன் - குசேலமுனிவனது, மனைசிறப்பினையும் - திருமாளிகையின் சிறப்பையும், ஓர்தி - நீ யறிந்து கொள்வாயாக, அணவுறும் அஃது - பொருந்திய அச்சிறப்பு, எற்று என்று - எத்தன்மைத்தென்று, வினவற்க - வினவாதே, அரசர்ஏறே - அரசர்களிற் சிறந்த பரீக்ஷித்து மஹாராஜனே. எ - று.

(பொ - ரை.) அதிகரித்த புகையின் மிகுதியால் பரவுகின்ற நெருப்பின் மிகுதி இவ்வளவினதென்று அறிபவர்போல (இதுவரையும் யாம்) சொன்ன இந்த நகரச்சிறப்புக்களால், மகிழ்ச்சி மிகுந்த புகழையுடைய குசேல முனிவனது திருமாளிகையின் சிறப்பையும் நீயறிந்து கொள்வாயாக, பொருந்

திய அச்சிறப்பு எத்தன்மைத் தென்று வினவாதே, அரசர்களிற் சிறந்த பரீக்ஷித்து மஹாராஜனே. எ - று.

(வி - ரை.) பணைபுகை - வினைத்தொகை நிலைத்தொடர், நெருப்புக்குப் பரவுங் குணமுண்மையால் 'படர்தழல்' என்றார். தான் - அசை. துணை - அளவு. போல ஓர்தியெனவியையும். அணவுதல் - பொருந்துதல்.

ஊர்ப்புற மரசர் முன்னோ ருடங்குற விறுத்த வேதச்
சீர்ப்புகழ்க் குசேல னென்பான் சேய்மையே நகர நோக்கித்
தார்ப்பொலி மார்பக் கண்ணன் றன்னருள் வலியா லின்னும்
பார்ப்பன பலவுண் டென்னாப் படர்ந்தன னாகிச் சென்று.

(ப - ரை.) ஊர்ப்புறம் - நகர்ப்புறத்தில், அரசர் முன்னோர் - அரசர் முதலானோர், உடங்கு உற-(தன்னைச்) சூழ்ந்துநிற்க, இறுத்த-தங்கியிருந்த, வேதச்சீர்-வேதாத்யயநச்சிறப்போடு, புகழ் - புகழினையுமுடைய, குசேலன் என்பான் - குசேலன் என்று சொல்லப்படுவோன், சேய்மையே - தூரத்திலிருந்தே, நகரம் நோக்கி - (தனது) நகரத்தைப் பார்த்து-தார்பொலி மார்பம்-(துளவ) மாலையோடுகூடி விளங்குகின்ற திருமார்பினையுடைய, கண்ணன்-ஸ்ரீகண்ணபிரானது, அருள்வலியால்-க்ருபா விசேஷத்தால், இன்னும் - இன்னமும், பார்ப்பன-(நம்மால்) பார்க்கப்படுவனவாகிய சிறப்புக்கள், பலவுண்டு என்னா - பலவுளவென்று நிச்சயித்து, படர்ந்தனனாகி சென்று-நடந்துபோய்.

(பொ - ரை.) நகர்ப்புறத்தில் அரசர் முதலானோர் (தன்னைச்) சூழ்ந்து நிற்கத் தங்கியிருந்த, வேதாத்யயநச்சிறப்போடு புகழினையுமுடைய குசேலனென்று சொல்லப்படுவோன், தூரத்திலிருந்தே (தனது) நகரத்தைப்பார்த்து, (துளவ) மாலையோடுகூடி விளங்குகின்ற திருமார்பினையுடைய ஸ்ரீகண்ணபிரானது க்ருபாவிசேஷத்தால் இன்னமும் (நம்மால்) பார்க்கப்படுவனவாகிய சிறப்புக்கள் பலவுளவென்று நிச்சயித்து நடந்துபோய். எ - று.

(வி - ரை.) உடங்குற-ஒருசேரக்கூடி நிற்க எனினுமாம். இறுத்தல்(தங்குதல். ஸ்ரீகண்ணபிரானுக்குரியது துளவமாலையாதலால் தார் என்பதற்குத் துளவமாலையெனப் பொருள் கூறலாயிற்று. பார்ப்பன - செயப்பாட்டுவினை

பெருமதில் வாயி லெய்தப் பிறங்குமந் நகரத் துள்ளா
ரருமைசால் களிப்புப் பொங்க வமைந்தகை யுறைக ளோடுந்
திருமலி மங்க லங்கள் சிறப்புற வேந்திக் காரும்
வெருவுபல் லியமி யம்ப விரைந்தெதிர் கொள்ள வந்தார்.

(ப - ரை.) பெருமதில் வாயில் எய்த - பெரியமதில் வாயிலையடைதலும், பிறங்கும் - விளங்குகின்ற, அ நகரத்து உள்ளார்-அந்த நகரத்திலுள்ளவர்கள், அருமைசால் களிப்புபொங்க - அருமை மிகுந்த களிப்பு அதிகரிக்க, அமைந்த - தத்தமக்கமைந்த, கையுறைகளோடும் - காணிக்கைகளோடும்-திருமலி - அழகுமிகுந்த, மங்கலங்கள் - மங்கல திரவியங்களை, சிறப்புஉறா சிறப்புப்பொருந்த, ஏந்தி - தாங்கி, காரும்வெருவு - மேக முழக்கமும் அஞ்சும்படியான, பல்லியம் இயம்ப - வாத்தியங்கள் முழங்க, விரைந்து - விரைவாக, எதிர்கொள்ள வந்தார் - குசேலனை) எதிர்கொள்ள வந்தார்கள். எ - று.

No. 25



குசேலரைத்தந்நகரினின்று எதிர்கொள்ளவந்தவர்கள் நமஸ்கரித்துச்சிவிகையிலேற்றிக்கொண்டு வாத்திய

(பொ - ரை.) பெரியமதில் வாயிலையடைதலும், விளங்குகின்ற அந்த நகரத்திலுள்ளவர்கள், அருமைமிகுந்த களிப்பு அதிகரிக்கத் தத்தமக்கமைந்த காணிக்கைகளோடும் அழகுமிகுந்த மங்கல திரவியங்களைச் சிறப்புப் பொருந்தத் தாங்கி மேக முழக்கமும் அஞ்சும்படியான வாத்தியங்கள்முழங்க விரைவாகக் (குசேலனை) எதிர்கொள்ள வந்தார்கள். எ - று.

(வி - ரை.) அருமைசால்களிப்பு என்பதில் அருமை இன்மைப்பொருளில் வந்தது. இதுவரையில் இல்லாத களிப்புஎன்றபடி. அமைந்த-தத்தமக்கியன்ற, மங்கலங்கள் என்றது அட்டமங்கலங்களை, அவையாவன - சாமரம், நிறைகுடம், கண்ணடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக்கயல் என்பன. பல்லியம் என்பதனை பல் இயம் எனப்பிரித்து பலவகையானவாத்தியம் எனினுமாம். காரும் வெருவும் பல்லியம் என்றதனல் மேகமுழக்கத்தினும் வாத்திய முழக்கம் மிக்கது என்பது விளங்கும். கார் - இடவாகு பெயர். மங்கலம் என்றது மங்கலதிரவியங்களை. (கூஉ)

வாழ்ந்தனம் வாழ்ந்தே மென்று மலர்முகங் கொடுமண் டோயத்
தாழ்ந்தனர் தேர்மேல் வந்த சாந்தனை யந்த காரம்
போழ்ந்தொளிர் சிவிகை யேற்றிப் பொலங்குடை நீழல் செய்ய
வாழ்ந்தவன் புடைய ராகி யமைதரக்கொண்டு செல்வார்.

(ப - ரை.) (அப்படி எதிர்கொள்ளவந்தவர்கள்) வாழ்ந்தனம் வாழ்ந்தேம் என்று - வாழ்ந்தோம் வாழ்ந்தோமென்று, மலர்முகம் கொடு - மலர்ச்சியான முகங்களை யுடையவராய், மண்தோய - (அட்டாங்கங்களும்) மண்ணிற்படும்படி, தாழ்ந்தனர்-வணங்கினவர்களாய், தேர்மேல்வந்த-இரதத்தின்மீது ஏறிவந்த, சாந்தனை - சாந்தகுணத்தையுடைய குசேலமுனிவனை, அந்தகாரம் போழ்ந்து ஒளிர் - இருளைச்சேதித்துப் பிரகாசிக்கிற, சிவிகை ஏற்றி - பல்லக்கிலேற்றி, பொலம் குடை - பொற்குடையானது, நீழல் செய்ய - நிழலைச்செய்ய, ஆழ்ந்த அன்பு உடையர் ஆகி - மிகுந்த அன்புடையவர்களாய், அமைதர-அமைவாக, கொண்டுசெல்வார்-கொண்டுசெல்வாராயினர். (எ-று.)

(பொ-ரை.) (அப்படிஎதிர்கொள்ளவந்தவர்கள்)வாழ்ந்தோம் வாழ்ந்தோமென்று மலர்ச்சியான முகங்களையுடையவராய் (அட்டாங்கங்களும்) மண்ணிற்படும்படி வணங்கினவர்களாய் இரதத்தின் மீது ஏறிவந்த சாந்தகுணத்தையுடைய குசேலமுனிவனை, இருளைச்சேதித்துப் பிரகாசிக்கிற பல்லக்கிலேற்றி, பொற்குடையானது நிழலைச்செய்ய, மிகுந்த அன்புடையவர்களாய் அமைவாகக்கொண்டு செல்வாராயினர் (எ - று.)

(வி - ரை.) வாழ்ந்தனம் வாழ்ந்தேம் என்பன துணிவுபற்றிவந்த காலவழுவமைதி. மண் தோய்தற்கு ஏதுவாயாகிய அட்டாங்கங்கள் வருவிக்கப்பட்டன. அட்டாங்கங்களாவன. கையிரண்டு, காலிரண்டு, தோளிரண்டு, மார்பொன்று; நெற்றியொன்று. தாழ்ந்தனர் - முற்றெச்சம். அந்தகாரப்போழ்ந்தொளிர் சிவிகையென்றமையால் அது பொன்னினாலும் மணிகளாலும்

செய்யப்பட்டது என்பது இனிது விளங்கும். அமைதர என்பதற்கு மெல்ல என்பது பொருள். (கக)

பல்லிய மியம்பச் சில்லோர் பைம்பொற்காற் கவரி வீசச்
சில்லியந் தடந்தேர் முற்பல் சேனையு மிடைந்து சூழ
நல்லியன்மங்க லங்க ணான்மறை யவர்கள் பாட
வல்லியங் கமலக் கண்ணற் கன்புளான் வீதி சார்ந்தான்.

(ப - ரை.) பல் இயம் இயம்ப - பலவாத்தியங்களும் முழங்கவும், பை பொன் கால் - பசும்பொன்னினாற் செய்த காம்பினையுடைய, கவரி - சாமரத்தை, சில்லோர்வீச - சிலர் வீசவும், சில்லி அம் தடம் தேர் முன் - உருள்களையும் அழகையும் பெருமையையும் உடைய தேர்முதலாகிய, பல் சேனையும் - நால்வகைச் சேனைகளும், மிடைந்து சூழ - நெருங்கிச் சூழவும், நால் மறையவர்கள் - நான்கு வேதங்களையு முடைய அந்தணர்கள், நல் இயல் மங்கலங்கள்பாட-நல்லியலையுடைய மங்கலவாழ்த்துக்கள் பாடவும், அல்லி அம் கமலம் கண்ணற்கு அன்பு உள்ளான்-அகவிதழ்களையுடைய அழகாகிய செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய ஸ்ரீ கண்ணபிரானிடத்தில் பத்திமையுள்ளவனாகிய குசேலமுனிவன்; வீதி சார்ந்தான் - (அந்நகரத்து) வீதியையடைந்தான். (எ-று.)

(பொ-ரை.) பலவாத்தியங்களும் முழங்கவும், பசும்பொன்னாற்செய்த காம்பினையுடைய சாமரத்தைச் சிலர் வீசவும், உருள்களையும் அழகையும் பெருமையையும் உடைய தேர்முதலாகியநால்வகைச் சேனைகளும்நெருங்கிச் சூழவும், நான்கு வேதங்களையுடைய அந்தணர்கள் நல்லியலையுடைய மங்கல வாழ்த்துக்கள் பாடவும், அகவிதழ்களையுடைய அழகாகிய செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய ஸ்ரீ கண்ணபிரானிடத்தில் பத்திமையுள்ளவனாகிய குசேலமுனிவன் அந்நகரத்து வீதியையடைந்தான் - எ - று.

(வி-ரை.) பல்லியம் என்று ஒரு சொல்லாகக்கொண்டு வாத்தியம் எனப் பொருள்கூறினு மமையும். காம்பு - கைப்பிடி. நல்லியல் மங்கலங்கள்-நன்மையைத் தருகின்ற மங்கல வாழ்த்துக்கள். கமலம் என்பதற்குச் செந்தாமரைமலர் எனப் பொருளுரைக்கலாயிற்று, ஸ்ரீ கண்ணபிரானது திருக்கண்களுக்கு உவமிக்கப்படுபொருள் அதுவேயாதலால். இயம்ப, வீச, சூழ, பாட, சார்ந்தான் என முடித்துக்கொள்க. (கச)

இருபுறத் துள்ள மாடத்தி லங்குசா ளரங்க டோறு
மருவுற வதனம் வைத்து மங்கைமார் மகிழ்ந்து நோக்கிப்
பொருவிலிம் மறையோன் செய்த புண்ணிய மெற்றோ விந்த
விருமைசால் சிறப்பை யுற்றா னென்றுபற் பலசொல் வாரால்.

(ப - ரை ) இருபுறத்து உள்ள-இரண்டு பக்கங்களிலுமுள்ள, மாடத்து-மாளிகைகளின், இலங்கு - விளங்குகின்ற, சாளரங்கள் தோறும் - பல்கணிகள் தோறும், மங்கைமார் - மாதர்கள், வதனம் - தமது முகங்களை, மருவுற

வைத்து - பொருந்தவைத்து, மகிழ்ந்து நோக்கி - (குசேலமுனிவனை) மன மகிழ்ந்துபார்த்து, இந்த - இப்படிப்பட்ட, இருமைசால் - இருமையின்பங் களுமிக்க, சிறப்பை - மேன்மையை, உற்றான் - அடைந்தான், (ஆதலால்) பொருவு இல் - ஒப்பு இல்லாத, இ மறையோன் செய்த - இந்தவேதியன் செய்த, புண்ணியம்-புண்ணியமானது, எற்றோ என்று - எத்தன்மைத்தோ என்று, பற்பல சொல்வார் - பலப்பல வார்த்தைகளைச் சொல்வாராயினர்.

(பொ - ரை) இரண்டு பக்கங்களிலுமுள்ள மாளிகைகளின் விளங்கு கின்ற பல்கணிகள் தோறும் மாதர்கள் தமது முகங்களைப் பொருந்தவைத்து (குசேலமுனிவனை) மனமகிழ்ந்து பார்த்து இப்படிப்பட்ட இருமை யின்பங் களுமிக்க மேன்மையை அடைந்தான் (ஆதலால்) ஒப்பில்லாத இந்த வேதி யன் செய்த புண்ணியமானது எத்தன்மைத்தோ என்று பலப்பல வார்த்தை களைச் சொல்வாராயினர். (எ-று.)

(வி - ரை ) மாடம் - உப்பரிகை எனினுமாம். பல்கணி-சன்னல். தோ றும்-எஞ்சாமைப் பொருட்டாகிய இடைச்சொல், இது இவ்விடத்து வினை யெச்சப் பொருட்டாகிவைத்து என்னும் வினைகொண்டது. இருமை சால் சிறப்பு என்பதற்கு மிகுதியாகிய பெருமை என்றுரைப்பினுமாம். இலங்கு சாளரம் - வினைத்தொகை நிலைத்தொடர். நோக்கி என்னும் வினையெச்சம் சொல்வார் என்னும் வினைகொண்டது. பொருவு-ஒப்பு. வதநம்-வடசொல்.

கிள்ளுபு பற்று தற்குங் கெழுமுறு தசையி லாமெய்
யெள்ளுபு கழிக்குங் கீற லிமையபழங் கந்தை யென்றுங்
கொள்ளுபு திரிவோ னம்மா குனிசிலை மார னொப்புந்
தள்ளுபு பழிக்கு மெய்யன் சார்ந்தனன் பாரீ ரென்பார்.

(ப - ரை.) கிள்ளுபு பற்றுதற்கும் - கிள்ளி யெடுத்தற்கும், கெழுமுறு- பொருந்திய, தசையிலா - மாமிசமில்லாத, மெய் - உடம்பின்மீது, எள்ளு புகழிக்கும் - இகழ்ந்து கழித்து விடுதற்குரிய, கீறல் இமை - கிழிச்சல்கள் பொருந்திய, பழங்கந்தை - பழைய கந்தைத்துணியை, என்றும் - எந்நாளும், கொள்ளுபு திரிவோன் - போர்த்துக் கொண்டு திரிவோனாகிய இம்மறை யோன், குனிசிலை - வளைந்த கருப்புச் சிலையையுடைய, மாரன் ஒப்பும் - மன்மதனை யொப்புச் சொல்லுதலையும், பழிக்கும் - இகழ்கின்ற, மெய்யன்- சரீரத்தை யுடையவனாய், சார்ந்தனன் - வந்தான், பாரீர் என்பார் - பாருங் கள் என்பார்கள். (எ-று.)

(பொ-ரை.) கிள்ளி யெடுத்தற்கும் பொருந்திய மாமிசமில்லாத உடம் பின் மீது இகழ்ந்து கழித்து விடுதற்குரிய கிழிச்சல்கள் பொருந்திய பழைய கந்தைத் துணியை எந்நாளும் போர்த்துக்கொண்டு திரிவோனாகிய இம்மறை யோன் வளைந்த கருப்புச் சிலையையுடைய மன்மதனை யொப்புச் சொல்லுத லையும் இகழ்கின்ற சரீரத்தை யுடையவனாய் வந்தான் பாருங்கள் என்பார்கள்.

(வி - ரை.) இன்னூபு, என்னூபு, கொள்ளூபு, தள்ளூபு என்பன செய்பு என்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சங்கள். இவை முறையே பற்றுதல், சுழித்தல், திரிசல், பழித்தல் என்னும் வினைகளைக்கொண்டு முடிந்தன. கெழுமுறு - ஒருசொல். மெய் - மங்கலம், அம்மா - வியப்பிடைச்சொல். சிலை எனவாளா கூறினும் மாரன் எனமேல் வருதலால் கருப்புவில் எனப் பொருள் கூறலாயிற்று. மாரன்-வடசொல். இதற்கு விரகிகளைக் கொல்லுவோன் என்பது பொருள். மெய்யன் - முற்றெச்சம். (௬௬)

கந்தமூ லம்பு சித்துங் கான்முத லிடம்வ திந்தும்
பந்தம தொழித்துஞ் சாலப் பண்ணுவர் தவம்பல் லோர்கள்
டந்துநே ரொசிம ருங்குற் றூமவார் கருங் குழாலே
யிந்தமா மறையோன் றன்பே றியாவரே பெற்றா ரென்பார்.

(ப - ரை.) கந்த மூலம் புசித்தும் - கந்தமூலங்களை யுண்டும், கான் முதல் இடம் வதிந்தும்-காடுமுதலாகிய இடங்களில் தங்கியும், பந்தம் ஒழித்தும் - (இல்வாழ்க்கையாகிய) பந்தத்தை நீக்கியும், பல்லோர்கள் - அநேகர்கள், சாலதவம் பண்ணுவர் - மிகவும் தவத்தைச் செய்வார்கள், (அவ்வாறு இருக்க) இந்த மாமறையோன் - இந்தப் பெருமைபொருந்திய வேதியன், (அவையொன்றுஞ் செய்யாமலே) பேறு-பெற்ற பேற்றை, யாவர் பெற்றார்- எவர்கள் பெற்றார்கள், என்பார் - என்று சொல்லுவார்கள். (எ-று.)

(பொ - ரை.) கந்தமூலங்களையுண்டும் காடு முதலாகிய இடங்களில் தங்கியும் (இல்வாழ்க்கையாகிய) பந்தத்தை நீக்கியும் அநேகர்கள் மிகவும் தவத்தைச் செய்வார்கள் (அவ்வாறு இருக்க) இந்தப் பெருமைபொருந்திய வேதியன் (அவை யொன்றுஞ் செய்யாமலே) பெற்ற பேற்றை எவர்கள் பெற்றார்கள் என்று சொல்லுவார்கள். (எ-று.)

(வி-ரை.) கந்தமூலம் - கிழங்கு. இது இருபெயரொட்டு. கான் முதல் இடம் என்றது மலை, மலைக்குகை, நதிதீரம், முதலிய இடங்களை. புசித்தும், வதிந்தும், ஒழித்தும் தவம்பண்ணுவர் என இயையும். இவற்றுள்ள உம்மைகள் எண்ணும்மைகள். தந்து நேரொசி மருங்குற்றூம வார்கருங் குழாலே என்பது விளி. இது ஒருத்தி மற்றொருத்தியை நோக்கி விளித்தது. இதற்குநூலிழைபோன்ற துவளுகின்ற இடையினையும் பூமாலையையணிந்த நீண்ட கருங் கூந்தலையு முடையவளே என்பது பொருள். பந்தம்-கட்டு. கந்தமூலம், பந்தம், தந்து, தாமம் என்பன வடசொற்கள். தவம் - தபம் என்னும் வடசொற்றிரிபு. (௬௭)

அருமைசா லறம்விருத்தி யாகுக வென்று மென்று
பெருமறை முழங்கு மன்றே பேரறம் பற்ப லொரு
மொருமையன் பினிலு ளூற்றி வந்தன னுகன் விருத்தி
யிருமையிச் செல்வங் கண்டீ ரின்னுமென் பெறுமோ வென்பார்.

(ப - ரை.) அருமை சால் - அருமை மிகுந்த, அறம் - தருமமானது, என்றும் - எக்காலத்தும், விருத்தியாகுக என்று-விருத்தி யடைகவென்று, பெரு

மறை முழங்கும் அன்றே - பெரிய வேதங்கள் முழங்கா நின்றனவல்லவா (இவன்) பேர் அறம் - பெரிதாகிய தருமத்தை, பற்பல்நாளும் - பலப்பலநாள் களும், ஒருமை அன்பினில் - ஒப்பற்ற அன்போடு, உஞற்றினன்தனன்-செய்து வந்தான். உதன் - அதன்து, விருத்தி-அபிவிருத்தியானது,இருமை இ செல்வம் - இருமைக்கு முரிய இந்தச் செல்வமே, இன்னும் - இன்னமும், என் பெறுமோ - எந்தச் செல்வத்தைப் பெறுவாரோ, என்பார்-என்பார்கள். எ-று

(பொ - ரை.) அருமை மிகுந்த தருமமானது எக்காலத்தும் விருத்தி யடைகவென்று பெரிய வேதங்கள் முழங்கா நின்றன. வல்லவா(இவன்)பெரி தாகிய தருமத்தை பலப்பல நாள்களும் ஒப்பற்ற அன்போடு செய்துவந்தான் அதனது அபிவிருத்தியானது இருமைக்கு முரிய இந்தச்செல்வமே, இன்ன மும் எந்தச்செல்வத்தைப் பெறுவாரோ என்பார்கள். எ-று.

(வி-ரை.) அறஞ்செய்த லருமையென்பது தோன்ற 'அருமைசாலறம்' என்றார். உது - பொதுமைச்சுட்டு. கண்டீர் - முன்னிலை யசையிடைச் சொல். 'இருமையிச் செல்வம், என்றது இம்மைக்குரிய பொருட்செல்வத் தையும் மறுமைக்குரிய முத்திச் செல்வத்தையும். (கூ அ)

ஏவரெவ் வுயிரி டத்து மிலங்கருள் செலுத்தி நிற்போர்
தேவரி னுயர்ந்தோ ரன்னோ ரெனமறை செப்பு மாற்றால்
மூவரும் புகழ்க்கு சேலன் மூதரு ளுடைமைக் கிந்தப்
பூவரு முயர்வோ வின்னும் பொலிவுவே றுண்டாலென்பார்.

(ப-ரை.) எவ்வுயிரிடத்தும் - எல்லா வுயிர்களின் மேலும், இலங்கு - விளங்குகின்ற, அருள் செலுத்தி நிற்போர்-அருள்செய்து நிற்பவர்கள் ஏவர்-எவர்களோ, அன்னோர் - அவர்கள், தேவரில் உயர்ந்தோர் என-தேவரினும் உயர்ந்தவர்களென்று, மறை - வேதங்கள், செப்பும் ஆற்றால்-சொல்லுகின்ற படியால், மூவரும் புகழ் - பெரிய அரிய புகழையுடைய, குசேலன் - குசேல னென்னும் இவ்வேதியனது, மூதருள் உடைமைக்கு-பேரருளுடைமைக்கு, (பயனுவது) இந்த பூவரும் உயர்வோ - இந்தப் பூலோகத்திலுண்டாவதாகிய இந்தச் சிறப்புத்தானோ. இன்னும் - இன்னமும், வேறு பொலிவு உண்டு என் பார் - வேறு சிறப்புண்டென்பார்கள். (எ-று.)

(பொ - ரை.) எல்லா வுயிர்களின்மேலும் விளங்குகின்ற அருள்செய்து நிற்பவர்கள் எவர்களோ, அவர்கள் தேவரினும்உயர்ந்தவர்களென்றுவேதங்கள் சொல்லுகின்றபடியால், பெரிய அரியபுகழையுடைய குசேலனென்னும்இவ் வேதியனது பேரருளுடைமைக்கு(பயனுவது) இந்தப் பூலோகத்திலுண்டாவ தாகிய இந்தச் சிறப்புத்தானோ, இன்னமும் வேறு சிறப்புண்டென்பார்கள்.

(வி - ரை.) ஏவர் என்பதனீற்றில் ஓகாரவினு தொக்கு நின்றது. தேவ ரில் என்பதில் இல் ஐந்தாவத னுறழ்ச்சிப்பொருளது. மூவரும் என்பதனை மூ அரும் எனப் பிரித்துக்கொள்க. பூ - பூலோகம். ஆல் - அசை. (கூகூ)

மனமொழி காய மென்ன வகுத்திடு கரண மூன்றுங்
கனம்விளர்ப் பெனக்க றுத்த கண்ணன்ற னடிக்கே யாக்கித்
தினமுநன் னெறியி னிற்குஞ் செயிரிலாச் சீர்த்தி யானிப்
பனவனுக் கிதுவோ செல்வம் பகரரி தினுமுண் டென்பார்.

(ப-ரை.) மனம் மொழிகாயம் என்ன வகுத்திடு - மனோவாக் காயங்களென்று வகுக்கப்பட்ட, கரண மூன்றும் - திரிகரணங்களையும், கனம்-மேகமானது, விளர்ப்பு என - வெண்மையென்று சொல்லும்படி, கறுத்த - கறுத்திருக்கிற, கண்ணன் - ஸ்ரீ கண்ணபிரானது, அடிக்கே ஆக்கி - திருவடிக்கேயாக்கி, தினமும் - நாள்தோறும், நல் நெறியில் நிற்கும் - சந்மார்க்கத்திலே நிற்கிற, செயிர் இல்லா - குற்றமில்லாத, சீர்த்தியான் - புகழையுடையவனாகிய, இ பனவனுக்கு, இந்த வேதியனுக்கு, இதுவோ-இதுதானோ, செல்வம் செல்வமாவது, இன்னும் - இன்னமும், பகர் அரிது - சொல்லுதற்கரிதாகிய செல்வம், உண்டு என்பார் - உண்டென்பார்கள், எ-று,

(பொ - ரை.) மனோவாக் காயங்களென்று வகுக்கப்பட்ட திரிகரணங்களையும், மேகமானது வெண்மையென்று சொல்லும்படி கறுத்திருக்கிற ஸ்ரீ கண்ணபிரானது திருவடிக்கேயாக்கி, நாள்தோறும் சந்மார்க்கத்திலே நிற்கிற குற்றமில்லாத புகழையுடையவனாகிய இந்த வேதியனுக்கு இதுதானோசெல்வமாவது, இன்னமும் சொல்லுதற்கரிதாகிய செல்வம் உண்டென்பார்கள்.

(வி - ரை.) மனமொழி காயமென்ன வகுத்திடு கரண மூன்றும் கனம் விளர்ப்பெனக் கறுத்த கண்ணன்றனடிக்கே யாக்கலாவது, மனம் ஸ்ரீ கண்ணபிரானது திருவடியையே இடையறாது நினைத்துக்கொண்டிருக்கவும், மொழி அவனது திருவடியையே துதித்துக்கொண்டிருக்கவும், காயம் அவனது திருவடியையே வணங்கிக்கொண்டிருக்கவும் அவற்றைச சிக்ஷித்தல். நன்னெறி-மோக்ஷமார்க்கம். மூன்றும் ஆக்கி நிற்குஞ் சீர்த்தியான் எனவியையும். இதுவோ என்னுமோகாரம் எதிர்மறை. (௬௦)

புயனிகர் வண்ணத் தண்ணல் பொருவிலம் போருகக்க
ணயனுறச் செல்லு மாறே நற்றிரு மகளுஞ் செல்வாள்
பயனுறிப் பனவன் மேலப் பார்வைமிக் காயிற் றந்தச்
செயலினுக் கேற்கு மாறத் திருவும்வந் துற்றா ளென்பார்.

(ப - ரை.) புயல்நிகர்வண்ணத்து - (நீல) மேகத்தை நிகர்த்த நிறத்தையுடைய, அண்ணல்-பெரியோனாகிய ஸ்ரீ கண்ணபிரானது, பொருவுஇல் - ஒப்பில்லாத, அம்போருகம்கண் - செந்தாமரை மலர்போலுந் திருக்கண்களது பார்வை, நயன்உற - (பார்க்கப்பட்டோர்) நற்பயனையடையும்படி, செல்லும் ஆறே - செல்லும்வழியே, நல் - நன்மையைத்தருகிற, திருமகளும் செல்வாள் - திருமகளும் செல்லாநிற்பள், பயன் உறு - (மோக்ஷ) லாபத்தையடைதற்குரிய, இ - இந்த, பனவன்மேல் - வேதியன்மீது, அப்பார்வை - அந்தக் கண்ணபிரானதுபார்வையானது, மிக்குஆயிற்று - மிகுதியாயிற்று, அந்த செ

யலினுக்கு ஏற்குமாறு-அந்தச்செய்கைக்கேற்றபடி, அ திருவும் - அந்தத்திரு மகளும், வந்து உற்றாள் என்பார் - வந்து இவ் வேதியனிடத்திற்சேர்ந்தாள் என்பார்கள் எ - று.

(பொ - ரை.) நீலமேகத்தை நிகர்த்த நிறத்தையுடைய பெரியோனாகிய ஸ்ரீ கண்ணபிரானது ஒப்பில்லாத செந்தாமரை மலர்போலுந் திருக்கண்களது பார்வை (பார்க்கப்பட்டோர்) நற்பயனையடையும்படி செல்லும்வழியே நன்மையைத் தருகிற திருமகளும் செல்லாநிற்பள். (மோக்ஷ லாபத்தையடைதற்குரிய இந்த வேதியன்மீது அந்தக்கண்ணபிரானது பார்வையானது மிகுதியாயிற்று. அந்தச்செய்கைக்கேற்றபடி அந்தத்திருமகளும் வந்து இவ் வேதியனிடத்திற் சேர்ந்தாள் என்பார்கள் எ - று.

(வி - ரை.) புயல் என்றது நீலமேகத்தைக்குறித்தது ஸ்ரீ கண்ணபிரானது வண்ணத்துக்கு உவமிக்கப்படுபொருள் அதுவேயாதலான். அம்போருகம் என்னும் வடசொல்லுக்கு நீரிற்பிறப்பது என்பதுபொருள். திருமகள் இருபெயரொட்டுப்பண்புத்தொகை. பார்வை - அருணோக்கம். (சஎ)

பைத்தகா னகம்வ திந்தும் பருப்பதக் குகைவ திந்து
மெத்துணை நற்ற வங்க ளியற்றிநன் குயர்ந்தா ரேனுந்
தத்துநீ ருடைமண் ணாளுந் தன்மைவந் துற்ற தாகின்
மெத்திய மனத்த ராகி விரும்பிடார் யாவ ரென்பார்.

(ப - ரை.) பைத்தகானகம் வதிந்தும் - பசுமையாகிய காட்டில் தங்கியும், பருப்பதம் குகைவதிந்தும் - மலைக்குகையில் தங்கியும், எத்துணை நல் தவங்கள் இயற்றி - எவ்வளவு நல்லதவங்களைச்செய்து, நன்கு உயர்ந்தார் ஏனும் - மிகச்சிறந்தோராயினும், தத்தும் -(கரைமேல்வந்து) தவழ்கின்ற, நீர்-கடலாற் சூழப்பட்ட, மண் - பூமியை, ஆளும்தன்மை - ஆளும்படியான தன்மை, வந்து உற்றது ஆகின் - வந்து பொருந்திற்றாயின், (அதனை) மெத்திய மனத்தர் ஆகி விரும்பிடார் - கொண்டாடுகிற மனத்தினையுடையவராய் விரும்பாதவர்கள், யாவர் என்பார் - யாரிருக்கிறார்கள் என்பார்கள், எ - று.

(பொ - ரை.) பசுமையாகிய காட்டில் தங்கியும் மலைக்குகையில் தங்கியும் எவ்வளவு நல்ல தவங்களைச்செய்து மிகச்சிறந்தோராயினும் (கரைமேல் வந்து) தவழ்கின்ற கடலாற்சூழப்பட்ட பூமியையாளும்படியானதன்மைவந்து பொருந்திற்றாயின், (அதனை) கொண்டாடுகிறமனத்தினையுடையவராய் விரும்பாதவர்கள் யாரிருக்கிறார்கள் என்பார்கள், எ - று.

(வி - ரை.) பைத்தபசுமையென்னும் பண்படியாகப்பிறந்த பெயரெச்சம். கான் அகம் எனப்பிரித்து காட்டின்கண் என்றுரைப்பினுமாம். பருப்பதம் பர்வதம் என்னும் வடசொற்றிரிபு. நீர்-சினையாகுபெயர். மண்ணாளுந் தன்மை-ராஜரிகம். யாவர் என்றவினா ஒருவருமில்லையென்னும் பொருளில் வந்தது. தத்துநீர் - வினைத்தொகை நிலைத்தொடர். (சஉ)

குமைத்தபற் றிகந்தா ரேனுங் கடவுளாற் கொடுக்கப் பட்ட
தமைத்திடு நன்றே யாக வல்லது தீங்கே யாக
விமைத்திடு மளவே யாக வெக்காலு மாக வின்றேன்
சமைத்தமென் மொழியீர் சற்றுந் தள்ளுவா ருளரோ வென்பார்.

(ப - ரை.) குமைத்த - தம்மைவருத்தின, பற்று - (இருவகைப்) பற்றினையும், இகந்தாரேனும் - கடந்தாராயினும், கடவுளால் கொடுக்கப்பட்டது - கடவுளால் தரப்பட்டது, அமைத்திடும் நன்றே ஆக - அமைக்கப்பட்ட நன்மையே யாகட்டும், அல்லது தீங்கே ஆக - அன்றித்தீமையே யாகட்டும், இமைத்திடும் அளவேஆக - இமைக்குமளவே யாகட்டும், எக்காலும்ஆக - எந்தக்காலத்துமாகட்டும், சற்றும் - சிறிதும், தள்ளுவார் - தள்ளிவிடுவோர், உளரோ என்பார் - இருக்கிறார்களோ என்பார்கள், எ - று.

(பொ - ரை.) தம்மைவருத்தின இருவகைப்பற்றினையும் கடந்தாராயினும் கடவுளால் தரப்பட்டது அமைக்கப்பட்ட நன்மையே யாகட்டும்அன்றித்தீமையேயாகட்டும் இமைக்குமளவேயாகட்டும் எந்தக்காலத்துமாகட்டும் சிறிதும் தள்ளிவிடுவோர் இருக்கிறார்களோ என்பார்கள். எ-று.

(வி - ரை.) இன்றேன் சமைத்தமென்மொழியீர் என்றதுவிளி. இதற்கு இனிமையாகிய தேனினாற் சமைக்கப்பட்ட மிருதுவசனங்களையுடையவர்களே யென்பது பொருள் இருவகைப்பற்று அகப்பற்று புறப்பற்று என்பன, இவைஉயிர்களை வருத்துமியல்பினவாதலால், குமைத்தபற்று என்றார். கடவுள்தத்துவங்களெல்லாவற்றையுங் கடந்தவன், இதுதொழிலாகுபெயர்.

கரிசறு மனைவி பல்கால் வேண்டிடக் கண்ணன் பாற்சென்
றுரியவன் போடுந் தன்னா லுதவிய தளித்துக் கண்டு
வரிசைகண் மிதப்பப் பெற்று வளர்பெருந் திருவும் பெற்றிப்
பரிசுவந் தனனம் போல்வார் பாக்கிய மனையா னென்பார்.

(ப - ரை.) நம்போல்வார் பாக்கியம் அனையான்-நம்போல்வாரது செல்வம்போல்வானாகிய இந்த வேதியன், கரிசு அறு - குற்றமற்ற, மனைவி - (தன்) மனையாள், பல்கால் வேண்டிட - பலதரம் பிரார்த்திக்க, (மனமிரங்கி) கண்ணன்பால் சென்று - ஸ்ரீ கண்ணபிரானிடத்திற்போய், உரிய அன்போடும் - தனக்குரிய அன்போடும், தன்னால் உதவியது அளித்து - தன்னாலியன்றதைச் சமர்ப்பித்து, கண்டு - தரிசித்து, மிதப்ப - மிகுதியாக, வரிசைகள் பெற்று - சிறப்புக்களைப் பெற்று, வளர்பெரு திருவும் பெற்று - விருத்தியடைதற்குரிய பெருஞ்செல்வத்தையும் பெற்று, இப்பரிசு வந்தனன் - இவ்வாறு வந்தான், என்பார் - என்பார்கள, எ - று.

(பொ - ரை.) நம்போல்வாரது செல்வம்போல்வானாகிய இந்த வேதியன், குற்றமற்ற (தன்) மனையாள் பலதரம் பிரார்த்திக்க (மனமிரங்கி) ஸ்ரீ கண்ணபிரானிடத்திற்போய் தனக்குரிய அன்போடும் தன்னா லியன்றதைச் சமர்ப்பித்து தரிசித்து மிகுதியாகச் சிறப்புக்களைப் பெற்று, விருத்தியடைதற்குரிய பெருஞ்செல்வத்தையும் பெற்று இவ்வாறு வந்தான் என்பாரகள்.

(வி - ரை.) கரிசறு மனைவியென்றது கற்புள்ள மனைவியென்றபடி, தன்னுலுதவியது - அவல். வரிசைகள் - சிவிகை விருது கொடி குடை முதலாயின. சென்று அளித்து கண்டு பெற்று வந்தனன் எனவியையும். (சச)

சான்றவர் திருவுற் ருலுந் தகுதியின் மிடியுற் ருலு
மான்றதந் நீர்மை குன்ரு ரடல்வலிச் சனக னென்பா
னேன்றசெந் தண்மை வெம்மை யிடைச்சமங் கொண்டாற் போலத்
தோன்றுவர் மயக்கம் பூணுர் துடியிடை மடவீ ரென்பார்.

(ப - ரை.) சான்றவர் - பெரியோர், திருஉற்ருலும் - செல்வத்தையடைந்தாலும், தகுதி இல் - தகுதியில்லாத, மிடி உற்ருலும் - வறுமையையடைந்தாலும், ஆன்ற - பெரிதாகிய, தம் நீர்மைகுன்ருர் - தமது குணத்திற்குறையார்கள், அடல்வலி - மிக்கவலியையுடைய, சனகன் என்பான் - சனகனென்று சொல்லப்படுவோன், ஏன்ற - பொருந்தின, செம்தண்மைவெம்மை இடை - செவ்விய குளிர்ச்சி வெப்பம் என்பவற்றில், சமம் கொண்டாற்போல - சமதிருஷ்டியைக் கொண்டிருந்தாற்போல, தோன்றுவர் - காணப்படுவார், மயக்கம்பூணுர் (பிரபஞ்ச) மயக்கத்தையடையமாட்டார், என்பார்- என்பார்கள். எ - று.

(பொ - ரை.) பெரியோர் செல்வத்தையடைந்தாலும் தகுதியில்லாத வறுமையையடைந்தாலும் பெரிதாகிய தமது குணத்திற்குறையார்கள், மிக்க வலியையுடைய சனகனென்று சொல்லப்படுவோன், பொருந்தின செவ்விய குளிர்ச்சிவெப்பம் என்பவற்றில் சமதிருஷ்டியைக்கொண்டிருந்தாற்போலக் காணப்படுவார், (பிரபஞ்ச)மயக்கத்தையடைய மாட்டார், என்பார்கள்.

(வி - ரை.) நீர்மை - சமதிருஷ்டியாகிய குணம், துடியிடைமடவீர் என்றதுவிளி, இதற்கு, உடுக்கைபோலும் இடையையுடைய பெண்களே யென்பதுபொருள், ஆன்ற - அகன்ற என்பதன்மரூஉ, என்பான் - செயப்பாட்டுவினை, "இல்வாழ்வானென்பான்" என்புழிப்போல. ஏன்ற என்பதற்குப்பகுதி ஏல். (சரு)

பற்றறத் துறந்தோ னுக்கிப் படர்பெருந் திருவு மற்றை
முற்றிழை யவர்மு யக்கு நன்றுகொ லென்பார் முன்னர்
நற்றவச் சிவன னென்பா னயந்தரு மிளமை வாய்த்துப்
பொற்றொடிப் போகம் பன்னுட் புரிந்திருந் திலனே வென்பார்.

(ப - ரை.) பற்று - இருவகைப்பற்றுக்களையும், அறதுறந்தோனுக்கு- முழுதும் விட்டவனுக்கு, இ - இந்த, படர்-விரிந்த, பெருதிருவும் - பெருஞ் செல்வமும், மற்றை - மற்றையதாகிய, முற்று-(தொழில்) முற்றிய, இழையவர் - ஆபரணங்களை யணிந்தவர்களாகிய மாதரது, முயக்கும் - கலவியும், நன்றுகொல் என்பார் - நன்ருேவென்பார்கள், முன்னர் - முற்காலத்தில், நல்தவம் - நல்ல தவத்தையுடைய, சிவநன் என்பான் - சிவநனென்பவன், நயம்தரும் இளமைவாய்த்து - நன்மையைத்தருகிற இளமைப்பருவம் வாய்க்

கப்பெற்று, பொன்தொடி - பொற்றொடியையணிந்தபெண்ணின், போகம்- போகத்தை, பல்நாள் - நெடுங்காலம், புரிந்து - விரும்பியநுபவித்து, இருந் திலனே என்பார் - இருந்திலனே என்பார்கள். எ - று.

(பொ - ரை.) இருவகைப்பற்றுக்களையும் முழுதும் விட்டவனுக்கு இந்த விரிந்தபெருஞ்செல்வமும், மற்றையதாகிய (தொழில்) முற்றிய ஆபர ணங்களையணிந்தவர்களாகிய மாதரது கலவியும் நன்றோவென்பார்கள், மூற் காலத்தில் நல்ல தவத்தையுடைய சிவநனென்பவன் நன்மையைத்தருகிற இளமைப்பருவம் வாய்க்கப்பெற்று, பொற்றொடியையணிந்த பெண்ணின் போகத்தை நெடுங்காலம் விரும்பியநுபவித்திருந்திலனே வென்பார்கள்.

(வி - ரை.) சிவநன் - பிருகுவுக்குப்புலோமை யென்பவளிடத்துப்பிற ந்த புதல்வன், இவனது சரித்திரம், இனிவருஞ்செய்யுட்களாலறிக. (௬௬)

கோச்சகக்கலிப்பா.

என்றுரைத்த சுகமுனிவ னிணையடித்தா மரைவணங்கித்
துன்றலர்த்தார் துயல்வருதிண் டோள்வேந்தன் சிவனனெனு
மின்றவத்தன் யாரிளமை யெங்ஙனடைந் தான்மடவாண்
மன்றலுற்ற தெவ்வாறு வகுத்துரைத்தி யெனவுரைப்பான்.

(ப - ரை.) என்று உரைத்த - என்றிவ்வாறுசொன்ன, சுகமுனிவன் - சுகமுனிவனது, இணை - இரண்டாகிய, அடிதாமரைவணங்கி - பாததாமரை யைவணங்கி, துன்று - நெருங்கின, அலர்தார் - பூமாலையானது, துயல்வரு - அசையாநின்ற, திண்தோள் - உறுதியாகிய புயங்களையுடைய, வேந்தன் - பரீக்ஷித்துமஹாராஜன், சிவநன் என்னும் - சிவநனென்கிற, இன்தவத்தன் யார் - இனியதபோதநன்யார், இளமை எங்ஙன் அடைந்தான் - இளமைப்பரு வத்தையெவ்வாறடைந்தான், மடவாள்மன்றல் உற்றது எவ்வாறு - பெண்ணை மணம்புணர்ந்தது எவ்வாறு, (இவையாவும்) வகுத்து உரைத்தி என - வகுத் துச்சொல்லுவாயாகவென்று பிரார்த்திக்க, உரைப்பான் - (சுகமுனிவன்) சொல்வானாயினன். எ - று.

(பொ - ரை.) என்றிவ்வாறு சொன்ன சுகமுனிவனது இரண்டாகிய பாததாமரையை வணங்கி, நெருங்கின பூமாலையானது அசையாநின்ற உறுதி யாகிய புயங்களையுடைய பரீக்ஷித்து மஹாராஜன், சிவநனென்கிற இனியத போதநன்யார், இளமைப்பருவத்தை யெவ்வாறடைந்தான், பெண்ணைமணம் புணர்ந்தது எவ்வாறு, (இவையாவும்) வகுத்துச் சொல்லுவாயாகவென்று பிரார்த்திக்க, (சுகமுனிவன்) சொல்வானாயினன். எ - று.

(வி - ரை.) தாமரை - முதலாகுபெயர், துயல்வரு என்பதற்குப்பகுதி துயல்வா, தவம் எல்லாநன்மைகளையுந் தரவல்லதாதலால் 'இன்தவம்' எனப் பட்டது, மன்றல் - மணம், வேந்தன்வணங்கி உரைத்தியெனவுரைப்பான் என முடித்துக்கொள்க. வகுத்துரைத்தல் - விவரித்துச்சொல்லுதல். (௬௭)

பேருலகு கொண்டாடும் பிருகுவெனும் பெருந்தவத்தோன்
சீருறுநற் றிருமைந்தன் சிவனனெனும் பெயருடையான்
றாருருவப் பூண்மார்பா தயங்கிமய கிரிப்பாலோர்
வாருலவைப் பூங்கானம் வதிந்துதவம் புரிந்தனனே.

(ப - ரை.) பேர்உலகுகொண்டாடும் - பெரிதாகிய இவ்வுலகத்திலுள்ளார் கொண்டாடுகின்ற, பிருகு என்னும் - பிருகு என்று சொல்லப்படுகிற, பெருதவத்தோன் - பெரியதபோதனனது, சீர் உறு - சிறப்புப்பொருந்திய, நல் - சிறந்த, திருமைந்தன் - அழகாகிய புதல்வனும், சிவனன் என்னும்பெயர் உடையான் - சிவனன் என்னும் பெயரையுடையவனும் ஆகிய ஒருவன், தார் - பூமாலையையும், உருவம் - அழகாகிய, பூண் - ஆபரணங்களையும் அணிந்த, மார்பா - மார்பினையுடைய பரீக்ஷித்து மஹாராஜனே, தயங்கு - விளங்குகின்ற, இமயகிரிபால் - இமயமலைப்பக்கத்தில், ஓர் - ஒரு, வார்உலவை - நெடியமரங்களடர்ந்த, பூகானம் - பூங்காவனத்தில், வதிந்து - தங்கி, தவம் புரிந்தனன் - தவஞ்செய்துகொண்டிருந்தான். எ - று.

(பொ - ரை.) பெரிதாகிய இவ்வுலகத்திலுள்ளார் கொண்டாடுகின்ற பிருகு என்று சொல்லப்படுகிற பெரியதபோதனனது சிறப்புப்பொருந்திய சிறந்த அழகாகிய புதல்வனும், சிவனன் என்னும் பெயரையுடையவனும் ஆகிய ஒருவன், பூமாலையையும் அழகாகிய ஆபரணங்களையும் அணிந்த மார்பினையுடைய பரீக்ஷித்து மஹாராஜனே, விளங்குகின்ற இமயமலைப்பக்கத்தில் ஒரு நெடியமரங்களடர்ந்த பூங்காவனத்தில் தங்கித்தவஞ்செய்து கொண்டிருந்தான். எ - று.

(வி - ரை.) தவத்தோன்மைந்தன் எனவியையும், தவத்தோன்மைந்தன் நான்காம்வேற்றுமைத்தொகை நிலைத்தொடராகக்கோடலுமாம், சிவனன் ச்யவநன் என்னும் வடமொழித்திரிபு. (௪அ)

பற்பலநா ளிருக்கையெழாப் பரிசிருந்து தவம்புரியும்
பொற்புறுமா தவனுடம்பைப் புற்றுமூ டியததன்மேற்
கற்புமுதற் கொடிபடர்ந்து காமருபல் லரும்பீன்று
சொற்பெறுமா மலர்பரப்பித் துதைந்தனவா லந்நாளில்.

(ப - ரை.) பற்பலநாள் - நெடுநாளாக, இருக்கை - இருக்கையினின்றும், எழாபரிசு இருந்து - எழாதபடியிருந்து, தவம்புரியும் - தவஞ்செய்கின்ற, பொற்புஉறு - அழகு மிகுந்த, மாதவன் உடம்பை - பெருந்தவத்தோனாகிய அந்தச்சிவனனது உடம்பை, புற்றுமூடியது - புற்றுமூடிக்கொண்டது, அதன் மேல் - அந்தப்புற்றின்மீது, கற்புமுதல்கொடிபடர்ந்து - முல்லை முதலிய கொடிகள் படர்ந்து, காமர் - அழகாகிய, பல் அரும்பு ஈன்று - பல அரும்புகளரும்பி, சொல்பெறு - புகழ்ந்து சொல்லுதற்குரிய, மாமலர்பரப்பி - அழகிய மலர்களைப்பரப்பி, துதைந்தன - நெருங்கியிருந்தன, அந்நாளில் - அப்படியிருக்குங்காலத்தில். எ - று.

(பொ - ரை.) நெடுநாளாக இருக்கையினின்றும் எழாதபடியிருந்து தவஞ்செய்கின்ற அழகு மிகுந்த பெருந்தவத்தோனாகிய அந்தச் சிவனது உடம்பைப்புற்று மூடிக்கொண்டது, அந்தப்புற்றின்மீது முல்லை முதலியகொடிகள் படர்ந்து அழகாகிய பல அரும்புகளரும்பி, புகழ்ந்துசொல்லுதற்குரிய அழகிய மலர்களைப்பரப்பி நெருங்கியிருந்தன, அப்படி யிருக்குங்காலத்தில்.

(வி-ரை.) இருக்கை - இருப்பிடம், பொற்புறு உடம்பையென வியையும். கற்பு - முல்லைக்கொடி, காமர் - உகரச்சாரியை பெற்றுக்காமரு என்றாயிற்று. துதைதல் - நெருங்குதல், ஆல் அசை. (௪௧)

நையாதிவ் வுலகுயிர்க்க ணாடோறு மருள்சுரப்போன்
பொய்யாதி கடிந்ததவப் புனிதரடி முடிக்கொள்வோன்
மெய்யாதி நற்குணங்கள் விரும்பியடை தரப்பொலிவோன்
சையாதி யெனுநாமந் தரித்தவொரு தார்வேந்தன்.

(ப - ரை.) நையாது - வருந்தாமல், இவ்வுலகு - இவ்வுலகிலுள்ள, உயிர்க்கண் - உயிர்களினிடத்து, நாள்தோறும் - தினந்தோறும், அருள்சுரப்போன் - அருளைமிகுதியாகச்செய்பவனும், பொய் ஆதிகடிந்த - பொய் முதலியவற்றையொழித்த, தவம் - தவத்தையுடைய, புனிதர் - பரிசுத்தரது, அடி - திருவடிகளை, முடிகொள்வோன் - (தன்) சிரசிலேற்றுக்கொள்பவனும், மெய் ஆதிநல்குணங்கள் - மெய்முதலிய சிறந்தகுணங்கள், விரும்பி அடைதர - (தாமே) விரும்பிவந்தடையாநிற்க, பொலிவோன் - விளங்குவோனுமாகி, சையாதியென்னும் - சையாதியென்கிற, நாமம்தரித்த - பெயரைக்கொண்ட, தார்-பூமாலையையணிந்த, ஒரு வேந்தன் - ஒரு அரசனிருந்தான்.

(பொ - ரை.) வருந்தாமல் இவ்வுலகிலுள்ள உயிர்களினிடத்து தினந்தோறும் அருளைமிகுதியாகச் செய்பவனும், பொய்முதலியவற்றையொழித்த தவத்தையுடைய பரிசுத்தரது திருவடிகளைத் (தன்) சிரசிலேற்றுக்கொள்பவனும், மெய்முதலிய சிறந்தகுணங்கள் (தாமே) விரும்பிவந்தடையாநிற்க விளங்குவோனுமாகிச்சையாதி யென்கிற பெயரைக்கொண்ட, பூமாலையை யணிந்த ஒரு அரசனிருந்தான். எ - று.

(வி - ரை.) முடிக்கொள்வோன் என்பதற்கு முடியாகக்கொள்வோனென்றுரைப்பினுமாம், சையாதி-வைவஸ்வதமநுவின் புதல்வருள் ஒருவன், இவன் இக்ஷ்வாகுவுக்குத்தம்பி, இவனுக்கு உத்தாநபர்ஹி, ஆநர்த்தன், பூரிஸேநன் என்னும் மூன்றுபுதல்வரும், ஸுகந்யையென்னும் ஒரு புதல்வியும்உண்டு.

அன்னவன்றன் மகள்வானத் தணங்கினர்க்கு மணங்கனையாள்
கொன்னவில்வேல் விழியினாள் கோதறுதே மொழியினா
டுன்னுநறுங் குழலினாள் சுகன்னியெனும் பெயருடையாள்
மன்னுசில தியரொடும்பூக் கொய்வானவ் வனம்வந்தாள்.

(ப - ரை.) அன்னவன் மகள் - அவனுக்கு மகளானவள், வானத்து அணங்கினர்க்கும் அணங்கு அனையாள் - விண்ணுலகத்திலுள்ள தெய்வப்

பெண்களுக்கும் தெய்வப்பெண் போல்பவள், கொல்நவில்வேல் விழியினுள் - கொலைத்தொழில்பயின்ற வேல்போலுங் கண்களையுடையவள், கோது அறு தேம்மொழியினுள் - குற்றமற்ற தேன்போலும் இன்சொல்லையுடையவள், துன்னும் - நெருங்கிய, நறு - பரிமளமுள்ள, குழலினுள் - கூந்தலையுடையவள், சுகந்தியெனும் பெயர் உடையாள் - சுகந்தியென்கிற பெயரையுடையவள், (அவள்) மன்னு - தன்னை விட்டுப்பிரியாத, சிலதியரொடும் - தோழிமாரோடும், பூ கொய்வான் - மலர்களைப் பறிக்கும்பொருட்டு, அவ்வனம் வந்தாள் - அந்தப் பூங்காவனத்துக்கு வந்தாள். எ-று.

(பொ - ரை.) அவனுக்கு மகளானவள், விண்ணுலகத்திலுள்ள தெய்வப்பெண்களுக்கும் தெயவப்பெண் போல்பவள், கொலைத்தொழில் பயின்ற வேல்போலுங் கண்களையுடையவள், குற்றமற்ற தேன்போலும் இன்சொல்லையுடையவள், நெருங்கிய பரிமளமுள்ள கூந்தலையுடையவள், சுகந்தியென்னும் பெயரையுடையவள், (அவள்) தன்னை விட்டுப்பிரியாத தோழிமாரோடும் மலர்களைப் பறிக்கும்பொருட்டு அந்தப்பூங்காவனத்துக்கு வந்தாள், எ-று.

(வி - ரை.) அன்னவன்றன்மகள் என்பதில் தன் சாரியை, கொல் - முதனிலைத்தொழிற்பெயர், குற்றமற்ற தேன் - கோற்றேன், நறுமை-இயற்கைமணம், கொய்வான்-வான் என்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம், மன்னுதல் - நிலை பெறுதல், அது இவ்விடத்து விட்டுப்பிரியாமைமேற்று.

பாங்கியர்க டற்சூழப் பாங்கெங்குந் தவமலர்ந்த
பூங்கொம்பர் போனடந்து பொலிவிரைப்பன் மலர்கொய்வா
டேங்குறவெள் ளெனப்பூத்துத் திகழ்முல்லை சூழப்பட்
டாங்குயர்வன் மீகங்கண் டார்வத்தின் வந்தடுத்தாள்.

(ப - ரை.) பாங்கியர்கள் - தோழியர், தற்சூழ - தன்னைச்சூழ்ந்துவர, பாங்கு எங்கும் - பக்கங்களிலெல்லாம், தவ - மிகுதியாக, மலர்ந்த - புஷ்பித்த, பூ கொம்பர்போல் நடந்து - பூங்கொடிகள்போல நடந்து, பொலி - மிகுந்த, விரை - வாசனையுள்ள, பல் மலர் கொய்வாள் - பலவகையாகிய மலர்களைக் கொய்பவள், தேங்குற - நிறைய, வெள்ளெனபூத்து திகழ் - வெண்மையாக மலர்ந்து விளங்குகிற, முல்லை சூழப்பட்டு - முல்லைக்கொடிகளால் மூடப்பட்டு, ஆங்கு - அவ்விடத்தில், உயர் - உயர்ந்து தோன்றுகிற, வன்மீகம்கண்டு - புற்றைப்பார்த்து, ஆர்வத்தின் - ஆசையோடு, வந்து அடுத்தாள் - வந்து (அந்தப்புற்றை) சமீபித்தாள், எ-று.

(பொ - ரை.) தோழியர் தன்னைச்சூழ்ந்துவரப் பக்கங்களிலெல்லாம் மிகுதியாகப் புஷ்பித்த பூங்கொடிகள்போல நடந்து மிகுந்த வாசனையுள்ள பலவகையாகிய மலர்களைக்கொய்பவள், நிறைய வெண்மையாக மலர்ந்து விளங்குகிற முல்லைக்கொடிகளால் மூடப்பட்டு அவ்விடத்தில் உயர்ந்துதோன்றுகிற புற்றைப்பார்த்து ஆசையோடு வந்து (அந்தப்புற்றைச்) சமீபித்தாள்.

(வி - ரை.) பாங்கியர் கடற்சூழ என்பதற்கு பாங்கியர் கடல்போலச் சூழ என்றுரைத்தலுமாம். பூங்கொம்பர்போனடந்து - பூங்கொடி நடந்தாற்

போல நடந்து. கொம்பு கொம்பர் எனப்போலியாயிற்று. குழநடந்து கொய்வாள் எனவும், கண்டு வந்து அடுத்தாள் எனவும் இயையும். வன்மீகம் வல்மீகம் என்னும் வடசொற்றிரிபு. (௫௨)

மாதர்நறுங் கொடிபடர்வன் மீகத்துள் ளிருப்பதுதான்
யாததனை யறிவாமென் றில்லிவழி நோக்குதலுந்
தீதகனற் றவப்பெரியோன் செய்யவிழி தோன்றவிறும்
பூதுடைய ளாகியிது பொன்வண்டோ வெனநினைந்து.

(ப - ரை.) மாதர் - அழகிய, நறு - மணமுள்ள, கொடிபடர் -(முல்லைக்) கொடிபடர்ந்த, வன்மீகத்துள் இருப்பதுயாது - புற்றுக்குள்ளே யிருப்பது யாது, அதனை அறிவாம் என்று - அதனையறிவோமென்று, இல்லிவழி நோக்குதலும் - துளைவழியாகப் பார்த்தலும், தீது அகல் - தீமையை நீக்குதற்குரிய, நல்தவம் - சிறந்த தவத்தையுடைய, பெரியோன் - மஹானாகிய சிவனனது, செய்ய விழிதோன்ற - செவந்தகண் காணப்பட, இறும்பூது உடையள்ஆகி-ஆச்சரியமுடையவளாகி, இது பொன்வண்டோஎன நினைந்து- இது பொன்வண்டு தானோவென்றெண்ணி. எ-று,

(பொ - ரை.) அழகிய மணமுள்ள (முல்லைக்) கொடிபடர்ந்த புற்றுக்குள்ளே யிருப்பதுயாது, அதனையறிவோமென்று துளைவழியாகப் பார்த்தலும், தீமையை நீக்குதற்குரிய சிறந்த தவத்தையுடைய மஹானாகிய சிவனனது செவந்தகண் காணப்பட,ஆச்சரியமுடையவளாகி, இது பொன்வண்டு தானோவென்றெண்ணி, எ-று,

(வி - ரை.) தீது என்றது பிறவித்துன்பத்தை. அகல் என்பது இங்குப் பிறவினையாகக் கொள்ளப்பட்டது, தவத்தைச் செய்யத்தொடங்கின், தீது தானேயகன்று போமாதலால் தன் வினையாகக்கொள்ளுதலும் பொருந்தும், கூடாவொழுக்க முதலியவற்றோடுகூடிய பொய்த்தவம்போலாது, அருளுடைமை மெய்யுணர்வு முதலியவற்றோடுகூடிய மெய்த்தவம் என்றற்கு, நற்றவம், என்றார். (௫௩)

ஒருசிறிய திரணமெடுத் துறச்சுலவிச் சூன்றிடலு
மருவுபெருந் தவயோகங் கழிதரவிம் மணிப்புற்றி
னருகுறவந் தியாரிதுசெய் தாரறிவ லெனப்பார்த்தான்
கருநறுமென் குழலாளைக் கண்ணுற்றான் மாதவனே.

(ப - ரை.) ஒரு சிறிய திரணம் எடுத்து - ஒருசிறு துரும்பையெடுத்து, உறசுலவி - மிகுதியாகச்சுழற்றி, சூன்றிடலும் - தோண்டுதலும், மாதவன் - பெருந்தவத்தோனாகிய சிவநன், மருவு - (யாம்) பொருந்தியிருந்த, பெருதவம் யோகம் - பெருந்தவமாகிய யோகநிலையானது, கழிதர - குலையும்படி, இ - இந்த, மணிபுற்றின்-அழகிய புற்றினது, அருகு உறவந்து - சமீபத்திற் கிட்டிவந்து, இது செய்தார் யார் - இதனைச்செய்தவர் யாவர், அறிவல் என - யான் அறிந்துகொள்வேன் என்றெண்ணி, பார்த்தான்-பார்த்து, 'கருநறுமெல்

குழலாளை - கருமையாகிய மணமமைந்த மெல்லிய கூந்தலையுடையவளாகிய சுகன்னியை, கண்ணுற்றான் - கண்டான். எ-று.

(பொ-ரை.) ஒரு சிறு துரும்பையெடுத்து மிகுதியாகச் சுழற்றித் தோண்டுதலும், பெருந்தவத்தோனாகிய சிவநன் (யாம்) பொருந்தியிருந்த பெருந்தவமாகிய யோக நிலையானது குலையும்படி இந்த அழகிய புற்றினது சமீபத்திற்கிட்டிவந்து இதனைச்செய்தவர் யாவர், யான் அறிந்துகொள்வே னென்றெண்ணிப் பார்த்து, கருமையாகிய மணமமைந்த மெல்லிய கூந்தலை யுடையவளாகிய சுகன்னியைக் கண்டான். எ-று.

(வி - ரை.) சூன்றிடல் என்பதற்குப் பகுதி சூல், சூன்றிடல் ஒரு சொல், கழிதர என்பதற்குப்பகுதி கழிதா, கருமை நறுமை மென்மைகள் குழலுக்கு விசேடணங்களாதலால் குழலழகின் பெருமை விளங்குகின்றது. கண்ணுற்றான் என்பதற்குப்பகுதி கண்ணுறு, பார்த்தான் முற்றெச்சம்,இது கண்ணுற்றான் என்னும் வினைகொண்டது. (௫௪)

தாமரையில் வாழுமொரு தையலோ வயிராணி
மாமகளோ விரதியோ மற்றிவளென் றுளநினைந்தான்
காமனுமாங் கஃதறிந்து கழைகுழைத்து நாண்பூட்டித்
தேமலர்வா ளிகள்பலவுஞ் சிந்தினான் மேன்மேலும்.

(ப - ரை.) தாமரையில் வாழும் - தாமரை மலரில் வாழ்கின்ற, ஒரு - ஒப்பற்ற, தையலோ - பெண்ணாகிய இலக்குமியோ, அயிராணி - அயிராணி யென்கிற, மாமகளோ - அழகியமாதோ, இரதியோ - ரதிதேவியோ, இவள் என்று - (இங்கே நிற்பவளாகிய) இவளென்று, உள்ளம் நினைந்தான் - மனத்தில் நினைத்தான், (நினைத்தலும்) காமனும் - மன்மதனும், ஆங்கு அஃது அறிந்து-அப்பொழுதே அதனையறிந்து, கழை-(கரும்பு) வில்லை, குழைத்து- வளைத்து, நாண்பூட்டி - (வண்டு) நாணேற்றி, தேம் - தேன்பொருந்திய, மலர்வாளிகள் யாவும் - புஷ்ப பாணங்கள் பலவற்றையும், மேன்மேலும் சிந்தினான் - மேலுமேலும் தொடுத்தெய்தான். எ-று.

(பொ - ரை.) தாமரை மலரில் வாழ்கின்ற ஒப்பற்ற பெண்ணாகிய இலக்குமியோ, அயிராணியென்கிற அழகியமாதோ, ரதிதேவியோ (இங்கே நிற்பவளாகிய)இவளென்று மனத்தில் நினைத்தான், (நினைத்தலும்) மன்மதனும் அப்பொழுதே அதனையறிந்து(கரும்பு)வில்லைவளைத்து, (வண்டு)நாணேற்றி, தேன்பொருந்திய புஷ்ப பாணங்கள் பலவற்றையும் மேலுமேலும் தொடுத் தெய்தான். எ-று.

(வி - ரை.) தாமரையில் வாழும் என்ற விசேடணத்தால் தையல் இலக்குமிக்காயிற்று. தாமரையில்வாழும் என்பதற்கு - தாமரையாகிய வீட்டில் வாழும் என்றுரைப்பினுமாம். தேமலர் வாளிகள் என்றதற்கேற்ப, கழையென்பதனோடுவில்லும், நாண்என்பதனோடுவண்டும்கூட்டியுரைக்கப்பட்டன.தேமலர்-வாசனையுள்ள மலர் எனினுமாம். ஓகாரங்கள் மூன்றும் ஐயம்.

பொங்கியெழு பெருங்காமப் புலிங்கத்தீக் கொழுந்தோடி
மங்குதலி லாதழற்ற வாற்ருனுய் மாதவத்தோன்
றங்கியபுற் றுச்சிதர்ந்து தரைவீழக் கரநீட்டிக்
கொங்கலர்மென் குழன்மடவாள் கோற்ருெடிக்கை பற்றினுன்.

(ப - ரை.) பொங்கி எழு - பொங்கியெழுகின்ற, பெருகாமம் - பெருங் காமமாகிய, புலிங்கம் - பொறியையுடைய, தீகொழுந்துஓடி-நெருப்புச்சுவாலையோடி, மங்குதல்இல்லாது அழற்ற-மிகுதியாகச்சுடுதலால், மாதவத்தோன்-பெரியதவத்தினையுடையோனுகிய சிவநன், ஆற்ருனுய் - சகியாதவனுகி, தங்கிய - (தான்) தங்கியிருந்த, புற்று - புற்றுனது, சிதர்ந்து - தகர்ந்து, தரை வீழ-நிலத்தில்விழும்படி, கரம்நீட்டி - (தன்)கையைநீட்டி, கொங்கு-வாசனையுள்ள, அலர் - மலர்களையணிந்த, மெல்குழல் - மெல்லியகூந்தலையுடைய, மடவாள் - (அந்தச்சுகன்னி யென்னும்) பெண்ணினது, கோல்தொடிகை பற்றினுன் - புள்ளிகளையுடைய வளையலையணிந்த கையைப்பிடித்தான்.

(பொ - ரை.) பொங்கி யெழுகின்ற பெருங்காமமாகிய பொறியையுடைய நெருப்புச்சுவாலையோடி மிகுதியாகச்சுடுதலால் பெரிய தவத்தினையுடையோனுகிய சிவநன் சகியாதவனுகி, (தான்) தங்கியிருந்த புற்றுனது தகர்ந்து நிலத்தில் விழும்படி (தன்) கையைநீட்டி, வாசனையுள்ள மலர்களையணிந்த மெல்லிய கூந்தலையுடைய (அந்தச்சுகன்னியென்னும்) பெண்ணினது புள்ளிகளையுடைய வளையலையணிந்த கையைப்பிடித்தான். எ - று.

(வி - ரை.) பொங்குதல் - கொதித்தல், புலிங்கம் - அனற்பொறி. மங்குதலிலாது - குறையாமல், (மிகுதியாக) அழற்ற - காரணப் பொருட்டாகிய செயவென் வாய்பாட்டு நிகழ்கால வினையெச்சம்.இதற்குப்பகுதிஅழற்று,மாதவத்தோன் ஆற்ருனுய் கரநீட்டி கோற்ருெடிக் கைபற்றினுன் எனமுடித்துக் கொள்க. மடவாள் - மடப்பத்தையுடையாள், மடவாள்கை எனவியையும்.

வெருக்கொண்டு பதைபதைத்து விதிர்த்துதறிக் கரம்பறித்துக்
குருக்கொண்ட சிலம்பலம்பக் கோலவளை யுமபுலம்பத்
தருக்கென்று மவிந்தவிடைத் தயங்குமே கலையரற்றப்
பொருக்கென்று பாங்கியர்பாற் போய்விழுந்தாள் பொற்கொடியே.

(ப - ரை.) (பிடித்தலும்) பொற்கொடி - பொற்கொடிபோல் வாளாகிய சுகன்னியானவள், வெருக்கொண்டு - அச்சங்கொண்டு, பதை பதைத்து - துடி துடித்து, விதிர்த்து - நடுங்கி, உதறிகரம்பறித்து - உதறித்தன் கையைப்பறித்துக்கொண்டு, குருகொண்ட சிலம்பு அலம்ப-நிறத்தைக்கொண்ட காற்சிலம்பு சத்திக்கவும், கோலம் வளையும் புலம்ப - அழகிய வளையல்களும் ஒலிக்கவும், என்றும் - எப்பொழுதும், தருக்கு அவிந்த - தருக்கொழிந்த. இடை - இடையிலணியப்பெற்ற, தயங்கும்-விளங்குகிற, மேகலை - மேகலையானது, அரற்ற - சத்திக்கவும், பொருக்கென்ற - விரைவாக,பாங்கியர்பால் தோழியரிடத்தில், போய் விழுந்தாள் - போய் வீழ்ந்தனள். எ-று.

(பொ - ரை.) (பிடித்தலும்)பொற்கொடிபோல்வாளாகியசுகன்னியான வள் அச்சங்கொண்டு துடிதுடித்து நடுங்கி உதறித்தன் கையைப்பறித்துக் கொண்டு,நிறத்தைக்கொண்டகாற்சிலம்பு சத்திக்கவும்,அழகியவளையல்களும் ஒலிக்கவும்,எப்பொழுதும் தருக்கொழிந்தஇடையிலணியப்பெற்ற, விளங்குகி றமேகலையானது சத்திக்கவும்விரைவாகத்தோழியரிடத்திற் போய்வீழ்ந்தாள்.

(வி - ரை.) வெருக்கொண்டு என்பதனை ஒரு சொல்லாக்கி அஞ்சி யென்றுரைப்பினுமாம், இதற்குப்பகுதி வெருக்கொள். கோல - புள்ளிகளை யுடையனவாகிய என்றலுமொன்று. தருக்கென்று மலிந்த விடை என்றது துவளாநின்ற இடையென்றபடி,மேகலை - மாதரிடை யணியிலொன்று.பொற் கொடி-மூன்றும்வேற்றுத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

வாய்புலர்ந்து கண்சாம்பி மயங்கினாள் செயனோக்கிப்
பாயவனத் தென்கண்டோ பயந்தாண்மற் றிவளென்று
தேயுமிடைப் பாங்கியர்கள் சிவிறியால் வீசியுடற்
றோய்புழுதி துடைத்துமிக வுபசரிப்பத் துயர்தீர்ந்தாள்.

(ப-ரை.) வாய்புலர்ந்து - வாயுலர்ந்து, கண்சாம்பி - கண்செருகி, மயங்கினாள் - மயங்கினவளாகிய சுகன்னியின், செயல்நோக்கி - செய்கையைப் பார்த்து, பாயவனத்து - விஸ்தாரமான காட்டில், என் கண்டோ - எதனைக் கண்டோ, இவள் பயந்தாள் என்று - இவள் பயந்தனளென்று, தேயும் இடை பாங்கியர்கள் - தேய்ந்த இடையையுடைய தோழியர்கள், சிவிறியால் வீசி - விசிறியால்வீசி, உடல்தோய் புழுதிதுடைத்து - உடம்பிற்படிந்திருந்த புழு தியைத்துடைத்து, மிக உபசரிப்ப - மிகவும் உபசாரஞ்செய்ய, துயர் தீர்ந் தாள் - துன்பம் நீங்கினாள். எ - று.

(பொ - ரை.) வாயுலர்ந்து கண்செருகி மயங்கினவளாகிய சுகன்னியின் செய்கையைப்பார்த்து, விஸ்தாரமான காட்டில் எதனைக்கண்டோ இவள் பயந்தனளென்று, தேய்ந்த இடையையுடைய தோழியர்கள் விசிறியால் வீசி உடம்பிற் படிந்திருந்த புழுதியைத்துடைத்து மிகவும் உபசாரஞ்செய்யத் துன்பம் நீங்கினாள். எ - று.

(வி - ரை.) மயங்கினாள் செயல் - ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத் தொடர். ஒன்றைக்கண்டு அஞ்சினார்க்கு வாய்புலர்தல் முதலிய வுளவாதலி யல்பாதலால், 'வாய்புலர்ந்து கண் சாம்பி மயங்கினாள்' என்றார். தேயுமிடை- நுண்ணிய இடை, உபசரிப்ப - காரணப்பொருட்டாகிய செயவென் வாய் பாட்டு வினையெச்சம். (௯௮)

அன்னபொழு தடற்பரியூர்ந்தரசன்சை யாதியென்பான்
பொன்னனைய மனைவியர்நா லாயிரவர்புடைசூழ
மின்னவிரப் பூஞ்சோலை வினோதநிமித் தமதாகத்
துன்னினான் பரியிழிந்து சூழும்வளம் பார்த்துவப்பான்.

(ப - ரை.) அன்னபொழுது - அப்படிப்பட்ட சமயத்தில், அரசன் - அரசனாகிய, சையாதி என்பான் - சையாதி யென்பவன், அடல் - வலியுள்ள. பரிஊர்ந்து - குதிரையேறி, பொன் அனைய - திருமகளை நிகர்த்த, நாலாயிரவர் மனைவியர் - நாலாயிரவராகிய மனைவியர், புடைசூழ - பக்கத்திற்சூழ்ந்து வர, மின்அவிர் - மின்போல விளங்குகிற, அ - அந்த, பூசோலை - பூங்காவனத்தின், விநோதம் நிமித்தமாக - விநோதங்களைப்பார்ப்பது காரணமாக, துன்னினன் - வந்து, பரி இழிந்து - குதிரை மேலிருந்திறங்கி, சூழும் வளம் பார்த்து உவப்பான் -(அங்கே) சூழ்ந்திருக்கிற பல வளங்களையும் பார்த்து மகிழாநின்றவன். எ - று.

(பொ-ரை.) அப்படிப்பட்ட சமயத்தில் அரசனாகிய சையாதி யென்பவன் வலியுள்ள குதிரையேறி, திருமகளை நிகர்த்த நாலாயிரவராகிய மனைவியர் பக்கத்திற்சூழ்ந்துவர, மின்போல விளங்குகிற அந்தப்பூங்காவனத்தின் விநோதங்களைப்பார்ப்பதுகாரணமாகவந்துகுதிரை மேலிருந்திறங்கி (அங்கே சூழ்ந்திருக்கிற பல வளங்களையும் பார்த்து மகிழாநின்றவன். எ - று.

(வி - ரை.) அடல் - வெற்றி யெனினுமாம். நாகரத்நங்களால்ஒளிசெய்வதாதலால்'மின்னவிரப் பூஞ்சோலை' என்றார். 'நந்தாமணி விளக்குற்றுதிர் பூவணை நன்கமைந்த' என்றார் பிறரும். விநோதம் - அற்புதங்கள். நிமித்தமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. துன்னினன் முற்றெச்சம், உவப்பான் - வினையாலணையும் பெயர். (௫௧)

மன்புற்றி னின்றுவெளி வந்துநின் றானனைக்காணூஉ
வன்புற்றுக் கொண்டாடி யடிபணிந்தா னுருநோக்கி
யின்புற்ற விழியிடைநீர் வாரவிது செய்தவரெவ்
வன்புற்ற மனத்தரென வனமுழுது மாராய்வான்.

(ப - ரை.) மன் - (அங்கே) நிலைபெற்றிருக்கிற, புற்றினின்று - புற்றுக்குள்ளேயிருந்து, வெளிவந்து நின்றானை காணூஉ-வெளியேவந்து நின்றவனாகிய சிவநனைக்கண்டு, அன்பு உற்று கொண்டாடி - அன்புமிகுந்து கொண்டாடி, அடிபணிந்தான் - (அவனது) அடியை வணங்கி, உருநோக்கி - சரீரமுழுதும் நோக்கி, இன்பு உற்றவிழியிடை - இன்பமிகுந்த கண்களில், நீர் வார - நீரொழுகும்படி, இது செய்தவர் - இந்தத்தீமையைச் செய்தவர், எ- எப்படிப்பட்ட, வன்பு உற்றமனத்தர்என-வன்மைமிகுந்த நெஞ்சினரென்று, வனம் முழுதும் ஆராய்வான் - (அந்த) வனமுழுதும் ஆராய்பவன். எ-று.

(பொ - ரை.) (அங்கே)நிலைபெற்றிருக்கிறபுற்றுக்குள்ளேயிருந்து வெளியேவந்து நின்றவனாகிய சிவநனைக்கண்டு அன்புமிகுந்து கொண்டாடி (அவனது) அடியைவணங்கி, சரீரமுழுதும் நோக்கி, இன்பமிகுந்த கண்களில் நீரொழுகும்படி இந்தத் தீமையைச்செய்தவர் எப்படிப்பட்ட வன்மைமிகுந்த நெஞ்சினரென்று (அந்த) வனமுழுதும் ஆராய்பவன். எ - று.

(வி - ரை.) மன்புற்று - பெரும்புற்று எனினுமாம். காணூஉ-செய்யூ

வென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம். இது அன்புற்று என்னும் வினைகொண்டது. பணிந்தான் - முற்றெச்சம். சரீரமுழுதினுஞ்சிறந்தது முகமும் அதிலுள்ள மற்ற அவயவங்களினுஞ்சிறந்தது கண்ணுமாதலால், 'இன்புற்றவிழி' என்றார். "இளஞ்சேவிற்பிறழு நெடுங்கண்ணேடிருக்கு முகம் போல்வது!" என்றார் பிறரும். ஆராய்வான் வினையாலணையும்பெயர். (௬௦)

இலகுபெரும் பாங்கியரோ டிருந்தமக டனைக்கண்டா
னலகிறவ முனிக்கிடுக்க ணார்செய்தீ ரெனக்கேட்டான்
சிலதியர்யாஞ் செய்திலோ மென்றொழிந்தார் செய்தமக
ணிலவுறவந் தடிவணங்கி நிகழ்ந்தனவெலா முரைப்ப.

(ப - ரை.) இலகு - விளங்குகின்ற, பெருபாங்கியரோடு - பல பாங்கிமாரோடு, இருந்த - (அவ்வனத்தில்) இருந்த, மகளை கண்டான் - (தன்) மகளைப்பார்த்து, அலகு இல்தவம் - அளவற்ற தவத்தினையுடைய, முனிக்கு - (சிவந) முனிவனுக்கு, ஆர் - (உங்களுக்குள்ளே) யார், இடுக்கண் செய்தீர் - துன்பஞ்செய்தீர்கள், என கேட்டான் - என்று கேட்டான், (அதுகேட்ட) சிலதியர் - பாங்கியர், யாம் செய்திலோம் என்று ஒழிந்தார் - யாம் செய்திலேமென்றுசொல்லிவிட்டார்கள், செய்த மகள் - (தீமையை)செய்தமகளானவள், நிலவுறவந்து - (ஆபரணங்கள்) ஒளிசெய்யும்படி வந்து, அடிவணங்கி - பாதங்களை வணங்கி, நிகழ்ந்தன எல்லாம் உரைப்ப - நடந்தவையாவுஞ்சொல்ல.

(பொ-ரை.) விளங்குகின்ற பல பாங்கிமாரோடு (அவ்வனத்தில்) இருந்த (தன்) மகளைப்பார்த்து, அளவற்ற தவத்தினையுடைய (சிவந) முனிவனுக்கு (உங்களுக்குள்ளே) யார் துன்பஞ்செய்தீர்கள், என்று கேட்டான், (அதுகேட்ட) பாங்கியர் யாம்செய்திலேமென்று சொல்லிவிட்டார்கள், (தீமையைச்செய்த) மகளானவள் (ஆபரணங்கள்) ஒளிசெய்யும்படி வந்து பாதங்களை வணங்கி நடந்தவை யாவுஞ்சொல்ல. எ - று.

(வி - ரை.) மகடனை என்பதில் தன் சாரியை, கண்டான் - முற்றெச்சம், பெரும்பாங்கியர் என்பதில் பெருமை பல வென்னும்பொருளது. நிலவுதல் - விளங்குதல், நிகழ்ந்தனவெலாம் என்றது புற்றினுள்ளேயிருந்த முனிவனது கண்களைப் பொன் வண்டென்று நினைத்துத் துரும்பினாற்றோண்டினது முதலாகிய செய்தியை. (௬௧)

என்செய்தாய் பேதாயென் றிரங்கிவிரைந் தாங்கெய்தி
மன்செய்த முனிவனடி வணங்கியடி யேன்புதல்வி
புன்செய்கை தனைப்பொறுக்க வேண்டுமெனப் புகன்றிரப்ப
நன்செய்கை யுன்செய்கை யென்றுநவில் வான்முனிவன்.

(ப - ரை.) பேதாய் - பேதைப்பெண்ணே, என் செய்தாய் என்று - என்ன காரியஞ்செய்தாயென்று, இரங்கி - இரக்கமடைந்து, விரைந்து - விரைவாக, ஆங்கு எய்தி - அந்தப்புற்றினருகேசென்று, மன்செய்த - பெரு

மையைக்கொண்ட, முனிவன் அடிவணங்கி - முனிவனது பாதங்களை வணங்கி, அடியேன் புதல்வி - அடியேனது புதல்வியின், புன்செய்கையை - புன்செயலை, பொறுக்கவேண்டும் எனப்புகன்று - பொறுக்க வேண்டுமென்றுசொல்லி, இரப்ப - பிரார்த்திக்க, முனிவன் - சிவநமுனிவன், உன்செய்கை - உன் செய்கையானது ,நன்செய்கை-நற்செய்கையாயிருந்தது, என்று நவில்வான் - என்று சொல்லுவானாயினன். எ - று.

(பொ - ரை.) பேதைப்பெண்ணே; என்ன காரியஞ்செய்தாயென்று இரக்கமடைந்து, விரைவாக அந்தப்புற்றினருகே சென்று, பெருமையைக் கொண்ட முனிவனது பாதங்களை வணங்கி, அடியேனது புதல்வியின் புன்செயலைப்பொறுக்க வேண்டுமென்று சொல்லிப்பிரார்த்திக்க, சிவநமுனிவன், உன் செய்கையானது நற்செய்கையாயிருந்ததென்று சொல்லுவானாயினன்.

(வி - ரை.) பேதாய் என்றது பருவநோக்கியன்று அவளது அறியாமையை நோக்கியென்க. இரங்கினது தன் மகள் செய்த தீமையின்பொருட்டு முனிவன் வெகுண்டு சபிப்பனென்பது பற்றியென்க. விரைந்து என்றது அவன் சபிப்பதற்கு முன்னே யென்றபடி. (கஉ)

இப்பொழுதே யுன்மகளை யெழின்மன்றன் முடித்தெனக்குத்
தப்பறநீ தருவாயேற் பொறுத்திடுவன் றாராயேல்
வெப்புறுமென் சாபத்தால் வீடுநின் குலமென்று
னொப்பில்புகழ் மன்னவனு முடன்பட்டான் மகட்கொடைக்கு.

(ப - ரை.) இப்பொழுதே - இந்தக்ஷணமே, உன்மகளை - உன் புதல்வியை, தப்புஅற-தவறாமல், எழில்மன்றல் முடித்து-அழகியமணமுடித்து, எனக்கு தருவாயேல் - எனக்குத்தருவாயாயின், பொறுத்திடுவன் - பொறுத்துக்கொள்வேன், தாராயேல் - தாராயாயின், வெப்புஉறும் என் சாபத்தால், கொடுமை பொருந்திய எனது சாபத்தால், நின்குலம் - உன்குலமுழுதும், வீடும் என்றான் - அழிந்துபோம் என்றான், (அதுகேட்ட) ஒப்பு இல்புகழ் மன்னவனும் - ஒப்பற்ற புகழையுடைய அரசனும், மகட்கொடைக்கு உடன்பட்டான் - மகளைக்கொடுத்தற்குச் சம்மதித்தான். எ-று.

(பொ - ரை.) இந்தக்ஷணமே உன் புதல்வியைத்தவறாமல் அழகிய மணமுடித்து எனக்குத் தருவாயாயின், பொறுத்துக்கொள்வேன், தாராயாயின், கொடுமை பொருந்திய எனது சாபத்தால் உன்குலமுழுதும் அழிந்துபோம் என்றான் (அதுகேட்ட) ஒப்பற்ற புகழையுடைய அரசனும் மகளைக்கொடுத்தற்குச் சம்மதித்தான். எ - று.

(வி - ரை.) தப்பற - என் சொல்லைத்தடுக்காமல் எனினுமாம். வெப்புறுசாபம் - அதிவேகமுள்ள சாபம். வீடும் ஒருசொல். இதற்குப்பகுதி வீடு. கொடை - கொடுத்தல். (தொழிற்பெயர்.) மகளைத்தருவாயேல் எனவியையும்.பொறுத்திடுவேன் - ஒருசொல்,இதற்குப்பகுதி பொறுத்திடு. (கங)

அணிமுடங்க றிசைதிசையுய்த் தியாவரையும்வரவழைத்துத்
தணிவின்மகிழ் தலைசிறப்பத் தழன்முன்னர் விதிப்படியே
கணிதமில்வண் புகழ்மன்னன் கலியாண வினைமுடித்து
மணிநகைவாய்ப் பசுங்கொடியை மாதவன்கைக் கொடுத்தனனே.

(ப - ரை.) (அவ்வாறு உடன்பட) கணிதம் இல் - அளவிடப்படாத, வள்புகழ் - பெரும்புகழையுடைய, மன்னன் - அரசன், அணிமுடங்கல்-அழகிய மணவோலைச்சுருளை, திசைதிசை உய்த்து - திக்குகள்தோறும் அனுப்பி, யாவரையும் வரவழைத்து - எல்லாரையும் வரவழைத்து, தணிவு இல் மகிழ்-குறைதலில்லாத மகிழ்ச்சியானது, தலைசிறப்ப - அதிகரிக்க, தழல்முன்னர் - அக்கினிக்கெதிரில், விதிப்படியே - வேதவிதிப்படியே, கலியாண வினை முடித்து - மணவினையைமுடித்து, மணிநகைவாய் - முத்துப்போலும் பல்லமைந்த வாயினையுடைய, பசுங்கொடியை - பசுங்கொடி போல்வாளாகிய தன் மகளை, மாதவன் கைகொடுத்தனன் - பெருந்தவத்தோனாகிய சிவநமுனிவனது கையிற்கொடுத்தான். எ - று.

(பொ - ரை.) (அவ்வாறு உடன்பட்ட) அளவிடப்படாத பெரும்புகழையுடைய அரசன், அழகிய மணவோலைச்சுருளைத் திக்குகள்தோறும் அனுப்பி எல்லாரையும் வரவழைத்து, குறைதலில்லாத மகிழ்ச்சியானது அதிகரிக்க, அக்கினிக்கெதிரில் வேதவிதிப்படியே மணவினையைமுடித்து, முத்துப்போலும் பல்லமைந்த வாயினையுடைய பசுங்கொடி போல்வாளாகிய தன்மகளைப் பெருந்தவத்தோனாகிய சிவநமுனிவனது கையிற்கொடுத்தான். எ-று.

(வி - ரை.) முடங்கல்-ஓலைச்சுருள். திசை திசையென்ற அடுக்கு எஞ்சாமைப்பொருட்டு, தலைசிறப்ப-ஒருசொல், இதற்குப்பகுதி தலைசிற. தழல்என்றது ஓமாக்கினியை, நகையென மேல் வருதலால்மணி முத்தைக்குறித்தது.

சீலமிகு சிவனனெனுந் திருமுனிவன் சுகனியெனுங்
கோலமட வரற்கூடிக் கொடுந்துயர்நீத் துளங்களித்தா
னேலநறுங் குழன்மாது மிருங்கற்பிற் சிறந்தனளாய்ச்
சாலவுமெய்ப் பணியெவையுந் தலைக்கொண்டு வாழ்ந்திடுநாள்.

(ப - ரை.) சீலம்மிகு-ஒழுக்கமிகுந்த, சிவநன் என்னும் - சிவநனென்று சொல்லப்படுகிற, திருமுனிவன் - சிறந்த முனிவனானவன், சுகன்னி என்னும் - சுகன்னியென்று சொல்லப்படுகிற, கோலம் - அழகிய, மடவரல்கூடி-மாதைப்புணர்ந்து, கொடுதுயர்நீத்து - கொடிய விரகத்துன்பத்தை நீங்கி, உள்ளம் களித்தான் - மனமகிழ்ந்திருந்தான், ஏலம் - மயிர்ச்சாந்தணிந்த, நறுகுழல் - மணமுள்ள கூந்தலையுடைய, மாதும் - சுகன்னியென்னும் பெண்ணும், இருகற்பின் சிறந்தனளாய் - மிகுந்த கற்பினாற் சிறந்தவளாகி, சாலவும் - மிகவும், மெய்பணி எவையும் - உண்மையாகிய தன் வாழ்க்கைக்குரிய வேலைகளெல்லாவற்றையும், தலைக்கொண்டு - மேற்கொண்டு, வாழ்ந்திடும் நாள் - வாழுங்காலத்தில், எ-று.

(பொ - ரை.) ஒழுக்கமிகுந்த சிவநனென்று சொல்லப்படுகிற சிறந்த முனிவனானவன் சுகன்னியென்று சொல்லப்படுகிற அழகிய மாதைப்புணர்ந்து கொடிய விரகத்துன்பத்தை நீங்கி மனமகிழ்ந்திருந்தான். மயிர்ச்சாந்தணிந்த மணமுள்ள கூந்தலையுடைய சுகன்னியென்னும் பெண்ணும் மிகுந்த கற்பினாற் சிறந்தவளாகி, மிகவும் உண்மையாகிய தன் வாழ்க்கைக்குரிய வேலைகளெல்லாவற்றையும் மேற்கொண்டு வாழுங்காலத்தில். எ - று.

(வி - ரை.) சீலம் - தவவொழுக்கம். "சுந்தரஞானியர்தீரர் சூரரையெல்லாமிமைப்பிற்றுரும்பு செய்யு"மியல்பினதாதலால் விரகத்துன்பத்தை "கொடுந்துயர்" என்றார். ஏலம்-மயிர்ச்சாந்து, அது மயிர்ச்செழுமைப்பொருட்டுப் பூசப்படுவதோர் வாசனைப்பண்டம். மெய்ப்பணி - அவசியஞ் செய்யவேண்டிய வேலைகள். (சுரு)

ஆன்றசிறப் பவ்வனத்தி லசுவினிதே வர்களொருநாட்
டோன்றினர்க ளெதிர்நிற்குஞ் சுகனிதிரு வுருக்கண்டு
மான்றவுளத் தினராகி மாரவேள் கணைக்கிலக்கா
யூன்றுபெருங் காமத்தி னுள்ளுடைந்து மொழிவாரால்.

(ப - ரை.) ஆன்ற சிறப்பு - பெருஞ்சிறப்பினையுடைய, அ வனத்தில் - அந்தவனத்தில், ஒருநாள் - ஒருதினம், அசுவினிதேவர்கள் - அசுவினிதேவர்கள், தோன்றினர்கள் - வந்து, எதிர்நிற்கும் - எதிரேநிற்கிற, சுகன்னி - சுகன்னியின், திரு உருகண்டு - திருவுருவைப்பார்த்து, மான்ற உள்ளத்தினர் ஆகி - மயங்கின மனத்தையுடையவர்களாகி, மாரவேள் கணைக்கு-மன்மத பாணத்துக்கு, இலக்கு ஆய் - லக்ஷ்யமாகி, ஊன்று - (தம்மிடத்து) நிலைபெற்ற, பெருகாமத்தின் - பெரியகாமத்தினால், உள் உடைந்து - மனங்கலங்கி, மொழிவார் - சொல்லுவார்கள். எ-று.

(பொ - ரை.) பெருஞ்சிறப்பினையுடைய அந்த வனத்தில்ஒருதினம் அசுவினி தேவர்கள்வந்து, எதிரே நிற்கிற சுகன்னியின் திருவுருவைப்பார்த்துமயங்கின மனத்தையுடையவர்களாகி,மன்மத பாணத்துக்கு லக்ஷ்யமாகி(தம்மிடத்து) நிலைபெற்ற பெரிய காமத்தினால் மனங்கலங்கிச் சொல்லுவார்கள்.

(வி - ரை.) ஆன்ற - அகன்ற என்பதன் மரூஉ. தோன்றினர்கள் - முற்றெச்சம். மான்ற என்பதற்குப்பகுதி மால், மாரவேள் - இருபெயரொட்டு, லக்ஷ்யம், குறி, உள் - மனம், இது இடவாகுபெயர், அசுவினி தேவர்கள் - சூரியன்மகளாகி வடவையுருவத்தையுடைய ஸம்ஞாதேவியின் நாசியில் பிறந்த இரட்டையர், இவர்கள் தேவவைத்தியர்களென்றும் மிகுந்த அழகுள்ளவர்களென்றும் பிரசித்தி, வடவை - பெண்குதிரை. (சுசு)

கற்பகத்தின் பூங்கொம்பே காமருபூம் பசுங்கொடியே
பொற்பவிரு மதிக்கொழுந்தே பொலிபிரசச் செங்கரும்பே

சொற்பெறுநிற் பெறுதந்தை யாவன்மணித் தூமுறுவல்
விற்புருவப் பைங்கிளிநின் பெயர்யாது விளம்புவையால்.

(ப - ரை.) கற்பகத்தின் பூகொம்பே - கற்பகமரத்தின் மேற்படர்கின்ற காமர்வல்லிக்கொடியே, காமரு - அழகிய, பூ - மலர்களோடுகூடிய, பசுகொடியே - பைங்கொடியே, பொற்பு அவிரும்மதிகொழுந்தே-அழகோடு விளங்குகிற சந்திரப் பிரபையே, பொலி இரதம் செங்கரும்பே - மிக்க சுவையையுடைய செங்கரும்பே, சொல்பெறு - புகழ்பெற்ற, நின்பெறுதந்தையாவன் - உன்னைப்பெற்ற தந்தையானவன் எவன், மணி - முத்துப்போன்ற, தூமுறுவல் - வெள்ளியபற்களையும், வில்புருவம்-வில்லைநிகர்த்த புருவத்தையுமுடைய, பைங்கிளி - பசுங்கிளியே, நின்பெயர்யாது - உன்பெயர்யாது, விளம்புவை - சொல்லுவாயாக. எ-று.

(பொ - ரை.) கற்பக மரத்தின்மேற்படர்கின்ற காமர்வல்லிக்கொடியே, அழகிய மலர்களோடுகூடிய பைங்கொடியே, அழகோடு விளங்குகிற சந்திரப்பிரபையே, மிக்க சுவையையுடைய செங்கரும்பே, புகழ்பெற்ற உன்னைப்பெற்ற தந்தையானவன் எவன். முத்துப்போன்ற வெள்ளிய பற்களையும் வில்லை நிகர்த்த புருவத்தையுமுடைய பசுங்கிளியே, உன்பெயர்யாது, சொல்லுவாயாக. எ-று.

(வி - ரை.) காமர்வல்லி - கற்பகத்திற்படர்கொடி, இரதம் - ரஸம் என்னும் வடசொற்றிரிபு. முறுவலென மேல்வருதலால் மணிமுத்தையுணர்த்திற்று. பைங்கிளி - அண்மை விளியாதலால் இயல்பாயிற்று. (௬௭)

அமரருடற் பிணிதவிர்க்கு மசுவினிதே வர்கள்யாங்கள்
சமரமிகு வேளாற்ற றவிர்த்தெமையா ளென்றிரப்பத்
தமரமிகு கருங்கழற்காற் றரியலர்கூற் றெனப்பொலிவேற்
பமரமிகு தார்ப்பெருமான் பாராள்சை யாதிமகள்.

(ப - ரை.) யாங்கள் - நாங்கள், அமரர் - தேவர்களுடைய, உடல் - சரீரத்திலுண்டாகிற, பிணி - நோயை, தவிர்க்கும் - ஒழிக்கின்ற, அசுவினிதேவர்கள் - அசுவினிதேவர்கள், சமரம்மிகு - யுத்தத்திற்சிறந்த, வேள்ஆற்றல்- மன்மதனதுவலியை, தவிர்த்து - ஒழித்து, எம்மை - எங்களை, ஆள்என்று - ஆளக்கடவையென்று, இரப்ப - பிரார்த்திக்க, தமரம்மிகு-சத்தமிகுந்த, கருகழல்கால் - பெரிய வீரக்கழலணிந்த பாதத்தையும், தரியலர் - பகைவருக்கு, கூற்றுஎன - யமனென்று சொல்லும்படி, பொலி - விளங்குகிற, வேல்- வேற்படையையும், பமரம் மிகுதார் - வண்டுகள் மிகுதியாய் மொய்க்கப்பெற்ற பூமாலையையுமுடைய, பெருமான் - அரசனும்,பார்ஆள் - உலகத்தை யாளுகின்ற, சையாதிமகள் - சையாதிக்கு மகளாகிய சுகன்னி யென்பவள் (சொல்லுகிறாள்) எ-று.

(பொ - ரை.) நாங்கள் தேவர்களுடைய சரீரத்திலுண்டாகிற நோயை ஒழிக்கின்ற அசுவினி தேவர்கள், யுத்தத்திற்சிறந்த மன்மதனது வலியை யொழித்து எங்களை ஆளக்கடவையென்று பிரார்த்திக்க, சத்தமிருந்த பெரிய வீரக்கழலணிந்த பாதத்தையும், பகைவருக்கு யமனென்று சொல்லும்படி விளங்குகிற வேற்படையையும், வண்டுகள் மிகுதியாய் மொய்க்கப்பெற்ற பூமாலையையுமுடைய அரசனும், உலகத்தையாளுகின்ற சையாதிக்கு மகளா. கிய சுகன்னி யென்பவள் (சொல்லுகிறாள்.) எ-று.

(வி - ரை.) அமரர் - இறவாதவர். இறப்பவர்களாகிய தேவர்களை அமரர் என்றது மங்கலம். வேளாற்றல் - மன்மதனது வலியாலுண்டாகிற விரகத்துன்பம் - இது கருவியாகுபெயர், கருமை - பெருமை. பகைவரைக் கொல்லுதலால் வேலை, 'தரியலர் கூற்றெனப்பொலிவேல்'என்றார். பமரம் - ப்ரமரம் என்னும் வடசொற்றிரிபு. பமரமிகு என்ற விசேடணத்தால் தார் பூமாலையை யுணர்த்திற்று. (சுஅ)

என்பெயர்யா தெனிற்சுகனி யிருந்தவத்து மேலானுய்
மன்பெறுமா முனிசிவநன் மனைக்கிழத்தி யாதலினாற்
கொன்பெறுநும் முளத்தெண்ணங் கூடாதிவ் வாறுநினைந்
தென்பெறவல் லீர்போமென் றெடுத்தெறிந்து பேசினளால்.

(ப - ரை.) என்பெயர் யாது எனின் - என்பெயர் யாதென்று கேட்பீராயின், சுகன்னி - சுகன்னியென்பதாம், (நான்) இருதவத்து மேலானுய் மன்பெறு - பெரியதவத்தினாற் சிறந்தவனாய் நிலைபெற்றிருக்கிற, மாமுனி - பெருமைபொருந்திய முனிவனாகிய, சிவநன் - சிவநனது, மனைக்கிழத்தி ஆதலினால் - மனையாட்டியாகையால், கொன்பெறும் - பயனின்மையைக் கொண்ட, நும்உள்ளத்து எண்ணம்கூடாது - உங்கள் மனக்கருத்து நிறைவேறாது, இவ்வாறு நினைந்து - இப்படி யெண்ணி, என்பெறவல்லீர் - என்னபயனை யடையவல்லீர், போம் என்று - போங்களென்று, எடுத்தெறிந்து பேசினள் - எடுத்தெறிந்து பேசினாள். எ - று.

(பொ - ரை.) என்பெயர் யாதென்று கேட்பீராயின், சுகன்னியென்பதாம், (நான்) பெரியதவத்தினாற் சிறந்தவனாய் நிலைபெற்றிருக்கிற பெருமை பொருந்திய முனிவனாகிய சிவநனது மனையாட்டியாகையால், பயனின்மையைக்கொண்ட உங்கள் மனக்கருத்து நிறைவேறாது. இப்படி யெண்ணி யென்னபயனை யடையவல்லீர், போங்களென்று எடுத்தெறிந்து பேசினாள்.

(வி - ரை) சுகனி - தொகுத்தல். கிழத்தி - உரியவள். என்பெறவல்லீர் என்றது யாதும் பெறவல்லீரல்லீர் என்றபடி. எடுத்தெறிந்து பேசுதல் - திரஸ்கரித்துப் பேசுதல், (அலக்ஷியமாய்ப் பேசுதல்.) ஆல் - அசை. போம் என்றதனால் எடுத்தெறிந்து பேசினாளென்பதினிது விளங்கும்.

புறவடிநோக் குபுமொழிந்த பொன்னனையாள் சொற்கேளா
விறவுளதன் மையராகி யெழிற்பொலிவு மிகவாய்த்த
வறவடிவத் தெம்போகம் போலநரை திரையமைந்த
துறவிதரும் போகமோ சுகன்னிக்குத் தக்கதே.

(ப - ரை.) புறவடிநோக்குபு மொழிந்த - தன் புறவடியைப்பார்த்துச் சொன்ன, பொன் அனையாள் சொல்-திருமகளை நிகர்த்தவளாகியசுகன்னியின் சொல்லை, கேளா - கேட்டு, இறவு உள்ளதன்மையர் ஆகி-மரணகாலத்துள்ள துன்பத்தையுடையவராகி,' (சுகன்னியை நோக்கி) எழில்பொலிவுமிகவாய்த்த - அழகின் பொலிவைமிகுதியாகப்பெற்ற, அறவடிவத்து-தருமரூபத்தையுடைய, எம்போகம்போல - எங்கள் போகம்போல, நரைதிரை அமைந்த - நரைதிரைகள் பொருந்திய, துறவிதரும்போகமோ - துறவியானவன் தருகின்றபோகமோ, சுகன்னிக்குதக்கது - சுகன்னியாகியவுனக்குத்தகுதியானது,

(பொ - ரை) தன்புறவடியைப்பார்த்துச்சொன்ன திருமகளை நிகர்த்தவளாகிய சுகன்னியின் சொல்லைக்கேட்டு, மரணகாலத்துள்ள துன்பத்தையுடையவராகி, (சுகன்னியை நோக்கி) அழகின் பொலிவை மிகுதியாகப்பெற்ற தருமரூபத்தையுடைய எங்கள் போகம்போலநரைதிரைகள் பொருந்திய துறவியானவன் தருகின்ற போகமோ சுகன்னியாகிய வுனக்குத்தகுதியானது.

(வி - ரை.) நோக்குபு - செய்புஎன்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம், புறவடிநோக்குபுமொழிந்த என்றதனால் தன் கற்புநிலைமையும் அசுவினிதேவ திரஸ்காரமுந்தோன்றுகின்றது, கேளா - செய்யா என்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம், இது ஆகியென்னும் வினைகொண்டது, தேவர்கள் புண்ணிய மிகுதியால் தோன்றினவர்கள் என்பதுதோன்ற, 'அறவடித்தெம்போகம்' என்றார், போகம் - போகவின்பம், இறவு - தொழிற்பெயர். இதில் உ - தொழிற்பெயர் விகுதி. (எ௦.)

மலர்பொதுளித் தீர்த்தத்துன் மகிழ்நனும்யா மும்படியிற்
குலவுவனப் புறவாய்த்துக் குலையாத விளமையொடு
நிலவுவமவ்வுருமூன்றினினக்கியைந்தசீருருவைத்
திலதநுதன் மடமாதே சேர்ந்துதழு விக்கோடி.

(ப - ரை.) மலர்பொதுள்-மலர்கள் நெருங்கின, இ தீர்த்தத்து-இந்தத் தீர்த்தத்தில்,உன் மகிழ்நனும்யாமும் - உன் கணவனும் நாங்களும், படியின்-மூழ்கினால், குலவு - விளங்குகின்ற, வனப்பு - அழகை, உறவாய்த்து,மிகவும் பெற்று, குலையாத இளமையொடு-கெடாத இளமையோடு கூடி-நிலவுவம்-விளங்குவோம், அ உருமூன்றில் - அந்த உருக்கள் மூன்றனுள்ளே, நினக்கு இயைந்த - உனக்குத்தகுந்த, சீர் உருவை - சிறந்தவுருவை,சேர்ந்து தழுவிக்கோடி - கூடித்தழுவிக்கொள்வாயாக, திலதம் - பொட்டணிந்த, நுதல்-நெற்றியையுடைய, மடம் மாதே - மடப்பத்தையுடையபெண்ணே. எ - று.

(பொ - ரை.) மலர்கள் நெருங்கின இந்தத்தீர்த்தத்தில் உன் கணவனும் நாங்களும் மூழ்கினால், விளங்குகின்ற அழகைமிகவும் பெற்றுக்கெடாத இளமையோடு கூடி விளங்குவோம், அந்த வுருக்கள் மூன்றனுள்ளே உனக்குத்தகுந்த சிறந்தவுருவைக்கூடித் தழுவிக்கொள்வாயாக. பொட்டணிந்த நெற்றியையுடைய மடப்பத்தையுடைய பெண்ணே. எ - று.

(வி - ரை.) இத்தீர்த்தம் என்றது எதிரேயிருந்த வொருதீர்த்தத்தை. குலையாத இளமை - முதிராத இளமை யெனினுமாம், குலவுதல் - விளங்குதல், நிலவுதலும் அது, திலதம் - திலகம் என்னும் வடசொற்றிரிபு, கோடி - கொள்ளுதி. (எக)

என்றுரைத்த வார்த்தைதனக் கிலவவாய் நெகிழாளாய்ச்
சென்றுமகிழ் நனுக்குரைப்பத் திரைநரைமூப் பிவையாலே
துன்றியெழு வருத்தமிறத் தொலையாத விளமைபெற
னன்றியலுங் காரியமென் றுளத்தோர்ந்தா னற்றவனும்.

(ப - ரை.) என்று உரைத்த - என்று சொன்ன, வார்த்தைக்கு - (அசுவினி தேவர்களுடைய) சொல்லுக்கு, (சுகன்னியானவள்) இலவம்வாய் நெகிழாள் ஆய் - முருக்கம் பூப்போன்ற (தன்) வாயைத்திறவாதவளாய், சென்று - போய், மகிழ்நனுக்கு உரைப்ப - (தன்) கணவனுக்கு (நிகழ்ந்த செய்தியைச்) சொல்ல, (கேட்ட) நல்தவனும் - நல்ல தவத்தையுடையவனாகிய சிவநமுனிவனும், திரைநரை மூப்பு இவையாலே - திரைநரை மூப்பு என்னும் இவற்றாலே, துன்றி எழுவருத்தம் இற - மிகுந்து உண்டாகிற துன்பம் நீங்கும்படி, தொலையாத - அழியாத, இளமைபெறல் - இளமைப்பருவமடைதல், நன்று இயலும் காரியம் என்று - நன்மைபொருந்திய காரியமென்று, உள்ளத்து ஓர்ந்தான் - (தன்) மனத்தில் ஆலோசித்து. எ - று.

(பொ - ரை.) என்றுசொன்ன (அசுவினிதேவர்களுடைய) சொல்லுக்கு (சுகன்னியானவள்) முருக்கம் பூப்போன்ற (தன்) வாயைத்திறவாதவளாய்ப்போய் (தன்) கணவனுக்கு (நிகழ்ந்த செய்தியைச்) சொல்ல, (கேட்ட) நல்ல தவத்தையுடையவனாகிய சிவநமுனிவனும், திரைநரை மூப்பு என்னும் இவற்றாலே மிகுந்து உண்டாகிறதுன்பம் நீங்கும்படி அழியாத இளமைப்பருவமடைதல் நன்மைபொருந்திய காரியமென்று (தன்)மனத்தில் ஆலோசித்து.

(வி - ரை.) வார்த்தை தனக்கு என்பதில் தன் அசாரியைகள், இலவவாய் - உவமைத்தொகை, திரை - தோற்சுருக்கம், நரை - மயிர் வெளுப்பு. மூப்பு - முதுமைப்பருவம், நற்றவம் - மெய்த்தவம், ஓர்ந்தான் - முற்றெச்சம், இதுவரும்பாட்டிலுள்ள நோக்கியென்பதனைக்கொண்டு முடியும். (எஉ)

மங்கைதிரு முகநோக்கி மற்றிவர்சொற் றுடம்படெனப்
பங்கமறு தவன்மனையை முன்போக்கிப் பின்படர்ந்தா
னங்கவரு மகிழ்ந்துமுனி வரனொடுமத் தடம்படிந்து
பொங்குமிள மையும்வனப்பும் பொலிவுற்றார் வெளிவந்தார்.

(ப - ரை) மங்கைதிருமுகம்நோக்கி - (தன்) மனைவியின் அழகிய முகத்தைப்பார்த்து, அவர்சொற்கு - அந்த அசுவினிதேவர்களுடைய வார்த்தைக்கு, உடம்படு என - உடன்படுவாயாகவென்று சொல்லி, பங்கம் அறுதவன்- அழிவற்றதவத்தினையுடையவனாகிய சிவநமுனிவன், மனையை-(தன்)மனையாளாகிய சுகன்னியை, முன்போக்கி - முன்னே நடத்தி, பின்படர்ந்தான்-(தானும்) பின்னே நடந்தான், அங்கு அவரும்-அங்கிருந்த அந்த அசுவினிதேவர்களும், மகிழ்ந்து - சந்தோஷித்து;முனிவரனொடும்-முனிசிரேஷ்டனாகிய சிவநனோடும், அ - அந்த, தடம்படிந்து - தடாகத்தில்மூழ்கி, பொங்கும் - அதிகரித்த, இளமையும் வனப்பும் பொலிவுற்றார்-இளமைப்பருவத்தாலும் அழகினாலும் விளக்கமடைந்தவர்களாய், வெளிவந்தார்-வெளியில்வந்தார்கள்.

(பொ - ரை.) (தன்) மனைவியின் அழகிய முகத்தைப்பார்த்து, அந்த அசுவினிதேவர்களுடைய வார்த்தைக்கு உடன்படுவாயாக வென்றுசொல்லி, அழிவற்ற தவத்தினையுடையவனாகிய சிவநமுனிவன்(தன்)மனையாளாகியசுகன்னியை முன்னே நடத்தி, (தானும்) பின்னே நடந்தான், அங்கிருந்தஅந்த அசுவினிதேவர்களும் சந்தோஷித்து, முனிசிரேஷ்டனாகிய சிவநனோடும், அந்தத்தடாகத்தில் மூழ்கி, அதிகரித்த இளமைப்பருவத்தாலும் அழகினாலும் விளக்கமடைந்தவர்களாய் வெளியில் வந்தார்கள். எ - று.

(வி - ரை.) மற்று - அசை, அவர் என்ற சுட்டு அசுவினிதேவர்களைக் குறித்தது, மேலே அவர்கள் செய்திநிகழ்ந்திருத்தலால். உடம்படுதல் - சம்மதித்தல், மனை - இடவாகுபெயர், படர்தல் - நடத்தல், அங்கு என்றது அந்தத்தடத்தருகில் என்றபடி, பொலிவுற்றார் - முற்றெச்சம், இது வெளிவந்தார் என்னும் வினைகொண்டது, வெளிவந்தார் என்றது கரையேறினார்கள் என்றபடி. (எசு)

செங்கதிரோ னுதயமெனத் திகழ்மூவ ருருநோக்கி
மங்கையர்சூ ளாமணிதான் வடுவுறு தொழிதரவென்
பொங்கியல்கற் பினுக்கென்னப் பொருக்கெனத்தன் மகிழ்நனுரங்
கொங்கையெனுமுங் குறத்தழுவிக் கொண்டுமகிழ் கூர்ந்தனளே.

(ப - ரை.) (அப்போது) மங்கையர் சூளாமணி - மாதுசிகாமணியாகிய சுகன்னியானவள், செங்கதிரோன் உதயம்என - சூரியோதயம்போல, திகழ்- விளங்குகின்ற, மூவர் - மூவருடைய,உருநோக்கி - உருவங்களையும் பார்த்து, என்பொங்கு இயல்கற்பினுக்கு - எனது மேன்மையாகிய கற்பினுக்கு, வடு உறுதுஒழிதர என்ன - பழுது உண்டாகாதொழிய வேண்டுமென்று, பொருக்கென - விரைவாக, தன்மகிழ்நன் உரம் - தன் கணவனது மார்பை, கொங்கை - (தன்) தனங்கள், அழுங்குற - அழுந்தும்படி, தழுவிக்கொண்டு- அணைத்துக்கொண்டு, மகிழ் கூர்ந்தனள் - மகிழ்ச்சி மிகுந்தாள். எ - று.

(பொ - ரை.) அப்போது) மாது சிகாமணியாகிய சுகன்னியானவள் சூரியோதயம்போல விளங்குகிற மூவருடைய உருவங்களையும் பார்த்து

எனது மேன்மையாகிய கற்பினுக்குப்பழுதுண்டாகா தொழியவேண்டுமெ ன்று விரைவாகத் தன் கணவனது மார்பைத் (தன்) தனங்கள் அழுந்தும்படி யணைத்துக்கொண்டு மகிழ்ச்சி மிகுந்தாள். எ - று.

(வி - ரை.) மங்கையர் சூளாமணி என்றது - கற்பு அழகு அறிவு முத லியவற்றிற் சிறந்தவள் என்றபடி, ஒழிதர என்பது ஒருசொல், இதற்குப்ப குதி ஒழிதா, என்னு - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச் சம், இது தழுவிக்கொண்டு என்னும் வினைகொண்டது, தான் - அசை, என்னு என்பதற்கு என்று கடவுளைத் தியானித்துக்கொண்டு எனப்பொருள் கொள்க. உதயம், சூளாமணி என்பன வடசொற்கள். (எச)

மாதவனுங் களிகூர்ந்து மனஞ்சமழ்ப்ப முகஞ்சாம்பிப்
போதவனுர்க் கடலழுந்தும் புலவரிருவரை நோக்கி
மேதகையீ ர்மூப்பகன்று விரும்பிளமை பெறப்புரிந்த
வேதமினல்லுதவியைநானென்றுமறவேனென்றான்.

(ப - ரை.) (அப்பொழுது) மாதவனும் - பெருந்தவத்தோனாகிய சிவந முனிவனும், களிகூர்ந்து - களிப்பு மிகுந்து . மனம்சமழ்ப்ப - மனம்நாண, முகம்சாம்பி - முகம்வாடி, போத - மிகவும், அனர்கடல் அழுந்தும் - துக்க சாகரத்திலழுந்தா நின்ற, புலவர் இருவரை நோக்கி - அசுவினி தேவர்களா கிய இருவரையும்பார்த்து, மேதகையீர் - மேன்மையுள்ளவர்களே, மூப்பு அகன்று - முதுமைநீங்கி, விரும்பு - (யாவரும்) விரும்புதற்குரிய, இளமை - இளமைப்பருவத்தை, பெறபுரிந்த - அடையச்செய்த, எதம் இல் - குற்ற மில்லாத, நல்உதவியை - சிறந்தவுபகாரத்தை, நான் - யான், என்றும் - எக் காலத்தும், மறவேன் என்றான் - மறவேனென்று சொல்லினான். எ - று.

(பொ - ரை.) (அப்பொழுது) பெருந்தவத்தோனாகிய சிவநமுனிவ னும் களிப்புமிகுந்து, மனம் நாணமுகம்வாடி மிகவும் துக்கசாகரத்திலழுந் தாநின்ற அசுவினிதேவர்களாகிய இருவரையும்பார்த்து, மேன்மையுள்ளவர் களே, முதுமைநீங்கி (யாவரும்) விரும்புதற்குரிய இளமைப்பருவத்தைய டையச்செய்த குற்றமில்லாத சிறந்தவுபகாரத்தை யான் எக்காலத்தும் மற வேனென்று சொல்லினான். எ - று.

(வி - ரை.) மாதவனும் என்பதிலும்மை இறந்ததுதழீஇயது, அனர்- துன்பம், புலவர் - தேவர்கள், விரும்பு எனவாளாகூறினமையான் யாவரும் விரும்புதற்குரிய எனப்பொருள் கூறலாயிற்று, இளமையை விரும்புதலும் முதுமையை வெறுத்தலும் யாவர்க்கு மியற்கையாதல் காண்க. கைம்மாறு வேண்டாதவுதவி யென்றற்கு, ஏதமினல்லுதவி, என்றார். (எரு)

அருள்செய்மக மொன்றியற்றி யவிப்பாகம் பகிர்ந்தளித்துப்
பொருள்செயவர் மனமகிழப் பொலிவித்துப் போக்கியபின்
றெருள்செயுள முனிவேந்தன் சீர்வேந்தன் பயந்தவிருண்
மருள்செய்குழ லொடுகூடி வாழ்ந்திருந்தா னதுநிற்க.

(ப - ரை.) (அதன் பிறகு,)அருள்செய் - (வேண்டியவற்றையெல்லாம்) தருகிற, மகம் ஒன்று இயற்றி - யாகமொன்றைச்செய்து, அவிபாகம்-அவிர்ப் பாகத்தை, பகிர்ந்து அளித்து - பாகித்துக்கொடுத்து, செய்! அவர் - (அந்த யாகத்தை) செய்த அவர்களெல்லாம், மனம்மகிழ - மனங்களிக்கும்படி, பொருள் பொலிவித்து - பொருளினால் மிகுவித்து, போக்கியபின் - அனுப் பினபிறகு, தெருள்செய் உள்ளம் - தெளிவையடைந்த மனத்தையுடைய, முனிவேந்தன் - முனிசிரேஷ்டனாகியசிவநன், சீர்வேந்தன் பயந்த - ராஜ சிரேஷ்டன்பெற்ற, இருள்மருள்செய் - இருட்டைமருளும்படி செய்யுமியல் புள்ளி, குழலொடு கூடி - கூந்தலையுடைய சுகன்னியோடு கூடி, வாழ்ந்திருந் தான் - வாழ்ந்துகொண்டிருந்தான், அதுநிற்க - அது அப்படியிருக்க. எ-று.

(பொ - ரை.) (அதன்பிறகு) வேண்டியவற்றை யெல்லாந்தருகிற யாக மொன்றைச்செய்து, அவிர்ப்பாகத்தைப் பாகித்துக்கொடுத்து, அந்த யாகத் தைச்செய்த அவர்களெல்லாம் மனம் களிக்கும்படி பொருளினால் மிகுவி த்து அனுப்பின பிறகு, தெளிவையடைந்த மனத்தையுடைய முனிசிரேஷ் டனாகிய சிவநன், ராஜசிரேஷ்டன்பெற்ற, இருட்டை மருளும்படி செய்யு மியல்புள்ள கூந்தலையுடைய சுகன்னியோடு கூடிவாழ்ந்து கொண்டிருந் தான், அது அப்படியிருக்க. எ - று.

(வி - ரை.) அவர் மனமகிழ என்பதற்கு அந்த அசுவிநிதேவர்கள் மன ங்களிக்க எனினுமாம், இருள்மருள் செய்குழல் என்றது மிகக்கரிய கூந் தல் என்றபடி, வாழ்ந்திருந்தான் ஒருசொல், அது நிற்க - அந்தச்செய்திநிற்க.

மாதர்பல ரிவ்வாறு வகுத்துரைப்ப மணிச்சிவிகை
மீதுபுரந் தரனுலவும் விழவுமிகச் சமழ்ப்படைய
வாதரவிற் பல்லோரு மகமகிழ்ச்சி யுறச்சென்று
தாதவிழ்தா மரைமார்பன் றன்மனைவா யிலையடைந்தான்.

(ப - ரை.) மாதர் பலர் - பல மாதர்கள், இவ்வாறு வகுத்து உரைப்ப - இப்படி வகுத்துச்சொல்ல, புரந்தரன் உலவும் - இந்திரனுலாவுகிற,விழவும்- விழாவும், மிக சமழ்ப்பு அடைய - மிகவும் நாணமடையவும், பல்லோரும் - பலரும், ஆதரவின் - ஆசையோடு, அகம் மகிழ்ச்சி உற - மனமகிழ்ச்சியடை யவும், மணிச்சிவிகைமீதுசென்று - ரத்நமயமான சிவிகைமேலேறிப்போய், தாது அவிழ் - தேனோடு மலர்கிற, தாமரை மார்பன் - தாமரைமலர் மாலை யையணிந்த மார்பையுடையவனாகிய குசேலன், தன் மனைவாயிலை அடைந் தான் - தன் வீட்டு வாயிலைச்சேர்ந்தான். எ - று.

(பொ - ரை.) பல மாதர்கள் இப்படி வகுத்துச்சொல்லஇந்திரனுலாவு கிற விழாவும் மிகவும் நாணமடையவும் பலரும் ஆசையோடு மனமகிழ்ச்சி யடையவும் ரத்நமயமான சிவிகை மேலேறிப்போய், தேனோடு மலர்கிறதா மரை மலர் மாலையையணிந்த குசேலன் தன் வீட்டு வாயிலைச் சேர்ந்தான்.

(வி - ரை.) சிவிகை பொன் முதலியவற்றாற் செய்யப்பட்டிருப்பி னும் மிகுதிபற்றி மணிச்சிவிகையென்றார். மணிச்சிவிகை முத்துச்சிவிகை

யென்றலுமொன்று. மணிச்சிவிகைமீது சென்று என வியையும். வேதியர்க்கு மாலை தாமரையாதலால், தாமரைமார்பன் என்றார். விழவும் என்னும் உம்மை உயர்வு சிறப்பு, அடைய, உற, என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன. சிவிகை பல்லக்கு. தாது - மகரந்தமெனினும் அமையும். புரந்தரன் - வடசொல். இதற்குப் பகைவருடலைப் பிளப்பவன் என்பது பொருள்.

## எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வாயிலை யடைந்த மறைக்குலத் தலைவன்மாமணி யானநின் றிழிந்து
மேயதன் முன்னர்க் கந்தைபோற் றுவார மிக்கசிற் றிலைக்குடிதிரிந்து
தூயசெம் பொன்னா லமைத்திடப்பட்ட சுடர்ப்பெரு மாளிகையாகிப்
பாயபல் வளனு நிறைதரப் பொலியும் பண்பினை நோக்கின னின்றான்

(ப - ரை.) வாயிலை அடைந்த - வாயிலைச்சேர்ந்த, மறைகுலம் தலைவன் - வேதியர்குலத் தலைவனாகிய குசேலன், மணியானம் நின்று இழிந்து - அழகிய மணிச்சிவிகையினின்று இறங்கி, மேயதன் முன்னர் - பொருந்திய தனக்கெதிரே, கந்தைபோல் - கந்தைத்துணிபோல, துவாரம் மிக்க - தொளைகள் மிகுந்த, சிறு இலைகுடில் - சிறிய இலைகளால் வேய்ந்த குடிலானது, மாறி - மாறுபட்டு, தூய - பரிசுத்தமாகிய, செம்பொன்னால் அமைத்திடப்பட்ட - செம்பொன்னினாற் செய்யப்பட்ட, சுடர் - ஒளியுள்ள, பெருமாளிகை ஆகி - பெரிய மாளிகை ஆகி, பாய - பரவிய, பல்வளனும் - பல்வளங்களும், நிறைதர பொலியும் - நிறைய விளங்குகின்ற, பண்பினை - அழகை, நோக்கினன் நின்றான் - பார்த்து நின்றான்.

(பொ - ரை.) வாயிலைச்சேர்ந்த வேதியர்குலத்தலைவனாகியகுசேலன் அழகிய மணிச்சிவிகையினின்று இறங்கிப்பொருந்திய தனக்கெதிரே கந்தைத்துணிபோல தொளைகள் மிகுந்த சிறிய இலைகளால் வேய்ந்த குடிலானது மாறுபட்டுப் பரிசுத்தமாகிய செம்பொன்னினாற் செய்யப்பட்ட ஒளியுள்ள பெரிய மாளிகையாகிப் பரவிய பல்வளங்களும் நிறைய விளங்குகின்ற அழகைப்பார்த்து நின்றான். எ - று.

(வி - ரை.) யானம் - பல்லக்கு, இது வடசொல் - மேயதன் முன்னர் கந்தைபோல் என்பதற்குப்பொருந்திய தனது முன்னுடுத்திருந்ததாகிய கந்தைத் துணிபோல என்றுரைப்பினும் ஆம். சிற்றிலைக்குடில் - சிறியகூடைவீடு. தூய செம்பொன் என்றது ஜாம்பூநதமென்னும் பொன்னை, நிறைதர ஒரு சொல். நோக்கினன் முற்றெச்சம். இது நின்றான் என்னும் வினை கொண்டது.

(அஎ)

மனைக்குரி மரபிற் றனக்கிணையில்லா மடநடைக்கற்புடையாட்டி
கனைக்குமொண் முகிலைக் கிழித்தெழு செங்கேழ்க்கதிரெனக் கவின் குடியிருந்த, நனைக்குழ லணிசெம் மணித்த கட்டணியு நாடுமிந் திரவிலம மங்கு, றனைக்குழு முற்றுச் சூழ்ந்தெனப் பலவீத் தண்ணறுந் தொடையலும் பொலிய.



குசேலர்தம்பிருப்பிட முற்றுச்சிவிகையினின்றிறங்கிப்பழையகுடிசையில்லாது பெரியமாளிகையா
யிருக்கக்கண்டது.

(ப - ரை.) மனைக்கு உரிய மரபின் - மனைமாட்சிக்குரிய மரபினால், தனக்கு இணை இல்லாமடம் நடை - தனக்கு ஒப்பில்லாத மடநடையினையும், கற்பு உடையாட்டி - கற்பினையும் உடையவளாகிய குசேலன் மனைவியானவள், கனைக்கும் - முழங்குகின்ற, ஒன்முகிலை - ஒப்பமாகிய மேகத்தை, கிழித்து எழு - கிழித்துக்கொண்டெழுகின்ற, செங்கேழ் - செந்நிறமுள்ள, கதிர் என - சூரியன்போல, கவின்குடி இருந்த - அழகு குடியிருந்த, நனை - பூவரும்புகளையுடைய குழல் அணி - கூந்தலில் அணிந்த, செம்மணி - செவந்த ரத்நங்களாற் செய்யப்பட்ட, தகட்டு அணியும் - தகட்டணியென்னும் ஆபரணமும், நாடும் - பார்க்கப்படுகிற, இந்திரவில் - இந்திரதநுசானது, அம்மங்குலை - அழகிய மேகத்தை, குழுமுற்று சூழ்ந்தென - சேர்ந்துவளைந்தாற்போல, பல - பலவகையாகிய, வீ - மலர்களாற்றொடுக்கப்பட்ட, தண்நறுதொடையலும் - குளிர்ந்த மணமுள்ள மாலைகளும், பொலிய - விளங்காநிற்கவும்.

(பொ - ரை.) மனைமாட்சிக்குரிய மரபினால் தனக்கு ஒப்பில்லாத மடநடையினையும் கற்பினையும் உடையவளாகிய குசேலன் மனைவியானவள், முழங்குகின்ற ஒப்பமாகிய மேகத்தைக்கிழித்துக் கொண்டெழுகின்ற செந்நிறமுள்ள சூரியன்போல அழகு குடியிருந்த பூவரும்புகளையுடைய கூந்தலிலணிந்த செவந்த ரத்நங்களாற் செய்யப்பட்ட தகட்டணி யென்னும் ஆபரணமும், பார்க்கப்படுகிற இந்திரதநுசானது அழகிய மேகத்தைச்சேர்ந்து வளைந்தாற்போலப் பலவகையாகிய மலர்களாற்றொடுக்கப்பட்ட குளிர்ந்த மணமுள்ளமாலைகளும் விளங்காநிற்கவும். எ - று.

(வி - ரை.) மனைமாட்சி - இல்லறத்திற்குத்தக்க நற்குண நற்செய்கைகள், இது, "மனைத்தக்க மாண்புடையளாகித் தற்கொண்டான் - வளத்தக்காள் வாழ்க்கைத்துணை" மனை மாட்சியில்லாள் கணில்லாயின் வாழ்க்கை, யெனைமாட் சித்தாயினுமில் "இல்லதெனில்லவண் மாண்பானுலுள்ளதெனில்லவண் மாணக்கடை" "மங்கலமென்ப மனைமாட்சிமற்றத,னன்கலனன் மக்கட்பேறு" என்னுந்திருக் குறள்களின் உரையாலினிது விளங்கும். மடம் - மடப்பம், நனை - பூவரும்பு, செம்மணி - மாணிக்கம், தகட்டணி - சடைப்பில்லை. உரிய - உரியெனநின்றது. (எகூ)

அம்முகி னின்று வழுக்கியோர் மின்ன லவிர்பிறை மேற்கிடந் தாங்குத், தெம்முனை மழுங்க வளையும்விற் புருவச் செம்பொன்செய் பட்டமுங் கதிர்கள், விம்மும்ப் பிறையி னுரோகணி யுள்வாய் வீற்றிருந் தெனவியன் கற்றை, பம்முமொள் வயிரப் பொட்டுமற் றணிந்த பல்கதிர்ப் பணிகளும் விளங்க.

(ப - ரை.) அ முகில் நின்று - அந்த மேகத்தினின்று, ஓர் மின்னல் - ஒருமின் கொடியானது, வழுக்கி - வழுக்கி, அவிர் - பிரகாசிக்கிற, பிறைமேல் - பிறையின்மீது, கிடந்தாங்கு - கிடந்தாற்போல, தெவ் - பகைவர், முனை - யுத்தமுகத்தில், மழுங்க - தோல்வியடைய, வளையும் - வளைகின்ற,

வில் - வில்லை நிகர்த்த, புருவம் - புருவத்தின் மீதணிந்த, செம்பொன் செய் பட்டமும் - செம்பொன்னினுற் செய்யப்பட்ட பட்டமும், கதிர்கள் விம்மும்- கிரணங்கள் மிகுந்த, அ பிறையின் - அந்தப்பிறையினது, உள்வாய் - உள்ளிடத்தில், உரோகணி - உரோகணி நக்ஷத்திரம், வீற்றிருந்தால் என - வீற்றிருந்தாற்போல, வியன் கற்றைபம்மும்-பெரிய கிரணக்கற்றைகள் நிறைந்த, ஒள்வயிரப்பொட்டும்-ஒட்பமாகிய வயிரப்பொட்டும், மற்று அணிந்த-இன்னமும் அணிந்த, பல்கதிர் பணிகளும்-பலவாகிய ஒளியுள்ள ஆபரணங்களும், விளங்க - பிரகாசியா நிற்கவும். எ - று.

(பொ - ரை.) அந்த மேகத்தினின்று ஒருமின் கொடியானது வழுக்கிப்பிரகாசிக்கிற பிறையின்மீது கிடந்தாற்போல, பகைவர் யுத்த முகத்தில் தோல்வியடைய வளைகின்றவில்லை நிகர்த்த புருவத்தின் மீதணிந்த செம்பொன்னினுற் செய்யப்பட்ட பட்டமும், கிரணங்கள் மிகுந்த அந்தப்பிறையினது உள்ளிடத்தில் உரோகணி நக்ஷத்திரம் வீற்றிருந்தாற்போல, பெரிய கிரணக்கற்றைகள் நிறைந்த ஒட்பமாகிய வயிரப்பொட்டும் இன்னமும் அணிந்த பலவாகிய ஒளியுள்ள ஆபரணங்களும் பிரகாசியாநிற்கவும். (எ-று)

(வி - ரை.) பட்டம் - நெற்றிப்பட்டம், பொட்டு - திலகம், கிடந்தால் ஆங்கு என்பது கிடந்தாங்கு எனவும், வீற்றிருந்தால் என என்பது வீற்றிருந்தென எனவும் விகாரப்பட்டன. கற்றை . தொகுதி. (௮௦)

இலவிதழ் முள்வாய்க் கற்பின தரும்பை யிணைத்தென வாயகத் திணைந்து, நிலவுபல் லழகைக் காணநிற் பதுபோ னிற்குமூக் கணிப் பருமுத்து, மலரிதழ்ச் செந்தா மரைகொலிம் முகமென் றறிதரக் கதிரிரண் டிருபாற், குலவவுற் றிருந்தா லெனச்செவி யணிந்த குருமணி யோலையும் பொலிய.

(ப - ரை.) இலவு இதழ் உள்வாய் - முருக்கம் பூவிதழின் உள்ளிடத்தில், கற்பினது அரும்பை - முல்லையரும்பை, இணைத்தென - இணைத்து வைத்தாற்போல, வாய் அகத்து - வாயினுள்ளிடத்தில், இணைந்து - பொருந்தி நிலவு - விளங்குகிற, பல் அழகை - பல்லினது அழகை, காண - காணும் பொருட்டு, நிற்பதுபோல் - நிற்பதுபோல, நிற்கும் - (அணியப்பட்டு) இருக்கிற, மூக்கு அணி - மூக்குத்தியின், பருமுத்தும் - பெரிய முத்தும், அலர் இதழ் - மலர்ந்த இதழ்களையுடைய, செந்தாமரை கொல் - செந்தாமரைமலரோ, இ முகம் என்று அறிதர - இந்த முகமென்றறியும்பொருட்டு, இரண்டு கதிர் - இரண்டு சூரியர்கள், இருபால் - இருபக்கத்திலும், குலவ - விளங்கும்படி, உற்று இருந்தால் என - பொருந்தி யிருந்தாற்போல, செவி அணிந்த- காதுகளிலணிந்த, குரு - நிறம்பொருந்திய, மணிஓலையும் - ரத்னக்குழையும், பொலிய - விளங்கா நிற்கவும். எ - று.

(பொ - ரை.) முருக்கம் பூவிதழின் உள்ளிடத்தில் முல்லை யரும்பை யிணைத்து வைத்தாற்போல; வாயினுள்ளிடத்தில் பொருந்தி விளங்குகிற பல்

வினது அழகைக் காணும்பொருட்டு நிற்பதுபோல, (அணியப்பட்டு) இருக்கிற மூச்குத்தியின் பெரிய முத்தும், மலர்ந்த இதழ்களையுடைய செந்தாமரை மலரோ இந்த முகமென்றறியும்பொருட்டு இரண்டு சூரியர்கள் இருபக்கத்திலும் விளங்கும்படி பொருந்தி யிருந்தாற்போலக் காதுகளிலணிந்த நிறம் பொருந்திய இரத்தினக்குழையும் விளங்கா நிற்கவும். எ - று.

(வி - ரை.) இலவு - முதலாகுபெயர், வாய் - இடம், கற்பு - முல்லை. மலரிதழ் எனவும் பிரிக்கலாம். கொல் - ஐயப்பொருளது, அறிதர - ஒருசொல், இதற்குப்பகுதி அறிதா, ஓலையென்றது காதணியை, இதனைக்கம்மலென்றுங்கூறுவர். இருபெருங்குழையிட்ட பொன்னோலையின் வாசியே'' என்றார் பிறரும்.

(அக)

வலம்புரிக் கழுத்தைக் கண்டமென் றடுத்த மாதருஞ் சொலாவகை மறைத்த,நலம்புரி பதக்கங் கோத்தபன் மணிச்சின் னல்லணி களுமெழில் வாய்த்த, பொலங்கெழு குவட்டிற் பன்னிற வருவி பொலிந்தெனக் கொங்கைமேற் றதும்பு,மிலங்குவெண் டரளம் பவளமா ணிக்க மெரிபொன்மா லையுநனி யொளிர.

(ப - ரை.) வலம்புரி - வலம்புரிச் சங்குபோன்ற, கழுத்தை - கழுத்தினை, கண்டம் என்று - கண்டமென்று, அடுத்த மாதரும் - அடுத்திருக்கிற பெண்களும், சொலாவகை - சொல்லாதபடி, மறைத்த - மூடிக்கொண்ட, நலம்புரி பதக்கம் கோத்த - அழகாகச்செய்யப்பட்ட பதக்கங்கோத்த, பல்மணி - பலவகைமணிகளாற் செய்யப்பட்ட, சில்நல் அணிகளும் - சில சிறந்த ஆபரணங்களும், எழில்வாய்த்த - அழகு பொருந்திய, பொலம் கெழு குவட்டில் - பொன்மலைமேல், பல் நிறம் அருவி பொலிந்தென - பல நிறங்களையுடைய அருவி யாறுகள் விளங்கினாற்போல, கொங்கைமேல் ததும்பும் - தனங்களின்மீது அசையாநின்ற, இலங்கு - பிரகாசிக்கிற, வெள் தரளம் பவளம் மாணிக்கம் எரி பொன்மாலையும் - வெண்மையாகிய முத்துபவளம் மாணிக்கம் ஒளி செய்கிற பொன் என்பவற்றாற் செய்யப்பட்ட மாலைகளும் நனி ஒளிர - மிகுதியாய்ப் பிரகாசிக்கவும். எ - று.

(பொ - ரை.) வலம் புரிச்சங்குபோன்ற கழுத்தினைக்கண்டமென்று அடுத்திருக்கிற பெண்களும் சொல்லாதபடி மூடிக்கொண்ட அழகாகச்செய்யப்பட்ட பதக்கங்கோத்த பலவகை மணிகளாற்செய்யப்பட்ட சில சிறந்த ஆபரணங்களும்,அழகு பொருந்திய பொன்மலைமேல் பல நிறங்களையுடைய அருவியாறுகள் விளங்கினாற்போலத் தனங்களின்மீது அசையாநின்ற பிரகாசிக்கிற வெண்மையாகிய முத்துபவளம் மாணிக்கம் ஒளிசெய்கிற பொன் என்பவற்றாற் செய்யப்பட்ட மாலைகளும் மிகுதியாய்ப் பிரகாசிக்கவும். எ - று.

(வி - ரை.) கண்டமென்று என்பதற்குக் கண்டோமென்று என வேறொருபொருள் தோன்றுமாறறிக. பொலம் கெழுகுவடென்பதற்குப்பொன்னைத்தன் மேற்கொண்டிருக்கிற மலையெனப் பொருள்கொண்டு, தேயல்படர்ந்த தனத்துக்குவமையாக்கினுமமையும்.

(அஉ)

தோளடி நிலையி லரதநத் தொடியுஞ் சுடர்தரு முன்கைவெள் வளையும், வாளவிர் வயிர கடகமுஞ் செம்பொ னிடைக்கிடை வைத்த செந் துப்பு, நீள்சுடர்த் தொடரு மமைந்தசூ டகமு நிரைவிர றொறு மெழு கதிரா, டாள்சுடர் மணிவைத் திழைத்தவா ழிகளு மந்தகா ரங் குடியோட்ட.

(ப - ரை.) தோள்அடிநிலையில் - தோளடிநிலையிலே தரித்திருக்கிற, அரதநம் தொடியும் - இரத்திநத்தொடிகளும், சுடர்தரு-ஒளிசெய்கிற, முன்கை-முன்கையிலணியப்பெற்ற, வெள்வளையும் - வெள்ளியவளையலும், வாள் அவிர் - ஒளிவிளங்குகிற, வயிர கடகமும் - வயிரக்கடகமும், செம்பொன் இடைக்கிடைவைத்த - செம்பொன்னுக் கிடையிடையேயமைத்த, செந்துப்பு - செவந்த பவளத்தின், நீள் சுடர்தொடரும் - நீண்ட ஒளித்திரளும், அமைந்தசூடகமும் - பொருத்தமான சூடகமும், நிரை - வரிசையாகிய, விரல்தொறும் - விரல்கள்தோறும், எழுகதிரா - உதிக்கின்ற சூரியனை, ஆள் - ஆளுதற்குரிய, சுடர்மணி வைத்து இழைத்த-ஒளியுள்ள மணிகளை வைத்திழைத்த, ஆழிகளும்-மோதிரங்களும், அந்தகாரம் - இருட்டை, குடிஓட்ட - குடியோடும்படிசெய்யவும். எ - று.

(பொ - ரை.) தோளடி நிலையிலே தரித்திருக்கிற இரத்திநத் தொடிகளும், ஒளிசெய்கிறமுன்கையிலணியப்பெற்ற வெள்ளியவளையலும், ஒளி விளங்குகிற வயிரக்கடகமும், செம்பொன்னுக்கிடையிடையேயமைத்த செவந்தபவளத்தின் நீண்ட ஒளித்திரளும், பொருத்தமான சூடகமும், வரிசையாகிய விரல்கள்தோறும் உதிக்கின்ற சூரியனையாளுதற்குரிய ஒளியுள்ள மணிகளைவைத்திழைத்த மோதிரங்களும் இருட்டைக்குடியோடும்படிசெய்யவும்

(வி - ரை.) தோளடி நிலையை பாஹுமூலம்என்பர் வடநூலார் தொடி - கைவளை, வயிரம் வஜ்ரம் என்னும் வடசொற்றிரிபு. சூடகம் - ஓர்வகைக் கைவளை, எழுசுடர் - பாலசூரியன். (அரு)

பெருவிலைச் செம்பட் டுடுத்திய விடையிற் கவ்விய வொட்டியாணமும்பே, ருருவவெண் கோவைக் காஞ்சியுஞ் செங்கேழுமி ழெழுகோ வைமே கலையும், பொருவறு மீரெட் டிரட்டிய கோவை புரிகலாபமும்விரி சிகையு, மருவுசெம் பரிதி மின்மினியாக வழங்கொளி திசையெலாம் போர்ப்ப.

(ப - ரை.) பெருவிலை-அதிகவிலையுள்ள, செம்பட்டு-செம்பட்டாடையை, உடுத்திய இடையில் - தரித்த இடையில், கவ்விய - கவ்விக்கொண்டிருக்கிற, ஒட்டியாணமும் - ஒட்டியாணமும், பேர்உருவம் - பேரொளியுள்ள, எண்கோவை - எட்டுக்கோவைகளையுடைய, காஞ்சியும் - காஞ்சியும், செங்கேழ் உமிழ் - செந்நிறத்தைக்கக்குகிற, எழுகோவை மேகலையும் - எழுகோவைகளையுடைய மேகலையும், பொருவுஅறும் - ஒப்பற்ற, ஈரெட்டு இரட்டியகோவைபுரி - (முறையே) பதினாறுகோவைகளாலும் முப்பத்திரண்டு கோவைக

ளாலும் செய்யப்பட்ட, கலாபமும்விரிசிகையும் - கலாபமும் விரிசிகையும், மருவு செம்பரிதிமின்மினிஆக-பொருந்திய சூரியனும் மின்மினிபோல ஒளி மழுங்கும்படி, வழங்குஒளி - விரிக்கின்ற ஒளியானது, திசைஎல்லாம் போர்ப்ப - திக்குகளெல்லாவற்றையும் மூடிக்கொள்ளவும். எ - று.

(பொ-ரை.) அதிக விலையுள்ள செம்பட்டாடையைத்தரித்த இடையில் கவ்விக்கொண்டிருக்கிற ஒட்டியாணமும், பேரொளியுள்ள எட்டுக்கோவைக ளையுடைய காஞ்சியும், செந்நிறத்தைக்கக்குகிற ஏழுகோவைகளையுடைய மே கலையும், ஒப்பற்ற (முறையே) பதினாறுகோவைகளாலும், முப்பத்திரண்டு கோவைகளாலும் செய்யப்பட்ட கலாபமும் விரிசிகையும், பொருந்திய சூரி யனும் மின்மினிபோல ஒளிமழுங்கும்படி விரிக்கின்ற ஒளியானது திக்குக ளெல்லாவற்றையும் மூடிக்கொள்ளவும். எ - று.

(வி - ரை.) ஒட்டியாணம் - ஓராபரணவிசேஷம், இதுமாதரிடையணி களுளொன்று,காஞ்சி, மேகலை, கலாபம், விரிசிகை என்பனமுறையே எட்டும் ஏழும் பதினாறும் முப்பத்திரண்டும் ஆகிய கோவைகளையுடைய மாதரிடை யணிகள். (௪௯)

காலணி செம்பொற் சதங்கையந் தொடருங் கதிர்மணித் தண் டையுஞ் சிலம்புஞ், சாலவு மொளிர்ந்து கலின்கலி னென்னத் தகை மூந் தபூங் கற்பகக் கொம்ப, ராலென நடந்து மங்கல மேந்தி யளவறு பாங் கிய ராய, கோலமா மடவார் சூழ்ந்தனர் நடப்பக் கொழுநனை யெதிர் கொள்வான் வந்தாள்.

(ப - ரை.) கால்அணி - காலில்அணிந்த, செம்பொன் - செம்பொன்னி னாற்செய்யப்பட்ட, அம் - அழகிய, சதங்கைதொடரும் - சதங்கைத்தொடர்க ளும், கதிர் - ஒளியுள்ள, மணி - ரத்நங்களிழைத்த, தண்டையும் - தண்டை களும், சிலம்பும் - சிலம்புகளும், சாலவும் - மிகவும், ஒளிர்ந்து-ஒளிசெய்து, கலின் கலின் என்ன - கலின் கலினென்று ஒலிக்க, தகைமூந்த - செழித்த, பூ- மலர்களையுடைய, கற்பகக்கொம்பர் என நடந்து - கற்பகக்கொம்புபோல நட ந்து, அளவுஅறு - கணக்கில்லாத, பாங்கியர்ஆய - தோழியராகிய, கோலம் மா மடவார் - அழகும் பெருமையுமுள்ளமாதர்கள், மங்கலம் ஏந்தி - மங்களதிர வியங்களைத்தாங்கி, சூழ்ந்தனாநடப்ப - (தன்னைச்) சூழ்ந்துகொண்டு நடவா நிற்க, கொழுநனை - (தன்) கணவனாகிய குசேலமுனிவனை, எதிர்கொள்வான் வந்தாள் - எதிர்கொள்ள வந்தாள். எ - று.

(பொ - ரை.) காலிலணிந்த செம்பொன்னினாற் செய்யப்பட்ட அழ கியசதங்கைத்தொடர்களும், ஒளியுள்ள ரத்நங்களிழைத்ததண்டைகளும், சில ம்புகளும்மிகவும் ஒளிசெய்துகலின் கலினென்று ஒலிக்க, செழித்த மலர்களை யுடையகற்பகக் கொம்புபோல நடந்து, கணக்கில்லாத தோழியராகிய அழ கும்பெருமையுமுள்ள மாதர்கள் மங்களதிரவியங்களைத்தாங்கித் (தன்னைச்) சூழ்ந்துகொண்டு நடவாநிற்கத் (தன்) கணவனாகியகுசேலமுனிவனை எதிர் கொள்ளவந்தாள். எ - று.

(வி - ரை.) சதங்கை தண்டைசிலம்புஎன்பன மாதர்காலிலணியப்படுகிற ஆபரணவிசேஷங்கள், காலணிகளையெல்லாம் பாதஜாலம் என்பர்வடநூலார். தொடரும் தண்டையும் சிலம்பும் என்பவற்றீற்றும்மைகள் எண்ணும்பொருளன. கற்பகக்கொம்பர் என-கற்பகக்கொம்பர்நடந்தாற்போல, கொம்புகொம்பர் எனப்போலியாயிற்று, ஆல்-ஆஶ்சர்ய ஸூசகம், அசையெனினுமாம், மங்களதிரவியங்கள் - கவரி, நிறைகுடம், தீபம், கண்ணாடி முதலியன. சூழ்ந்தனர் முற்றெச்சம்.கொள்வான் என்பதில் வான் எதிர்கால வினையெச்சவிகுதி.

வந்தனை புரிந்து பைம்பொனா தனத்தின் மகிழ்நனை நிறுத்தியுண் மகிழ்ந்து, சந்தமென் மடவார் செம்மணிச் சிரகத் தண்புனல் வார்க்கிடத் தன்பொற், செந்தளிர்க் கரத்தாற் றிருவடி விளக்கிச் சிறந்தவெண் பட்டினு லொற்றிக், கந்தநல் வருக்கம் பூசிமென் மலராற் கட்டிய மாலையுஞ் சாத்தி.

(ப - ரை.) வந்தனைபுரிந்து - வணக்கஞ்செய்து, பைம்பொன் ஆதநத்தில் - பசும்பொன்னாற் செய்யப்பட்ட ஆசநத்தின்மேல், மகிழ்நனை - தன் கணவனை, நிறுத்தி - நிற்கச்செய்து, உள்மகிழ்ந்து - மனமகிழ்ந்து, சந்தம் - அழகாகிய, மெல் - மெல்லிய, மடவார் - மாதர்கள், செம்மணி - மாணிக்கத்தாற் செய்யப்பட்ட, சிரகம் - கரகத்திலுள்ள, தண்புனல்வாக்கிட - குளிர்ந்த நீரைவார்க்க, பொன் - அழகிய, தன் - தனது, செந்தளிர்கரத்தால் - செந்தளிர்போன்ற கைகளால், திருவடிவிளக்கி - ஸ்ரீ பாதங்களைச்சுத்திசெய்து, சிறந்த - உயர்ந்த, வெண்பட்டினல் ஒற்றி - வெள்ளிய பட்டாடையால் ஒற்றி, நல் - சிறந்த, கந்தவருக்கம்பூசி - பரிமளவர்க்கத்தைப்பூசி, மெல்மலரால் - மெல்லியமலர்களால், கட்டிய - தொடுத்த, மாலையும்சாத்தி - மாலைகளையும் சமர்ப்பித்து. எ - று

(பொ - ரை.) வணக்கஞ்செய்து பசும்பொன்னாற் செய்யப்பட்ட ஆசநத்தின்மேல் தன் கணவனை நிற்கச்செய்து மனமகிழ்ந்து அழகாகியமெல்லியமாதர்கள் மாணிக்கத்தாற்செய்யப்பட்ட கரகத்திலுள்ள குளிர்ந்த நீரைவார்க்க, அழகியதனது செந்தளிர்போன்ற கைகளால் ஸ்ரீ பாதங்களைச்சுத்திசெய்து உயர்ந்தவெள்ளிய பட்டாடையால் ஒற்றிச்சிறந்த பரிமளவர்க்கத்தைப்பூசிமெல்லிய மலர்களால் தொடுத்தமாலைகளையும் சமர்ப்பித்து. எ - று.

(வி - ரை.) மகிழ்நன் - போகபோக்யாதிகளால் மகிழ்விப்பவன், கரகத்தைக் கெண்டிகையெனவும் வழங்குவர். வாக்கிட என்பதற்குப்பகுதிவாக்கிடு, செந்தளிர் என்றது மாந்தளிரை. (அகூ)

விரைகெழு தூமந் தவழ்தரக் கோட்டி மிளிர்தரு விளக்கமுங் காட்டிக், கரைபிலபன் மணிநீ ராஞ்சனம் வளைத்துக் கடிதிரு பாலினுமெறிந்து, புரையில்கற் புடையாள் வணங்கின ளிற்பப் புடலெனப் பல்லியங் குளிற, வரையெனப் பனைத்துக் கதிரொளி மழுக்கு மாளிகைக் கெழுந்தரு ளிவனே.

(ப - ரை.) விரைகெழுதூமம் - பரிமளப்புகையானது, தவழ்தரசோட்டி - எங்கும்மணக்கும்படிபரவச்செய்து, மிளிர்தருவிளக்கமும்காட்டி - பிரகாசிக்கிறதீபத்தையுங்காட்டி, கரைஇல் - அளவற்ற, பல் - பலவாகிய, மணிநீராஞ்சநம்வளைத்து - ரத்ந ஆலாத்திகள்சுழற்றி, கடிது - விரைவாக, இருபாலினும்எறிந்து - இரண்டுபக்கங்களிலும்வீசி, புரைஇல் - பழுதில்லாத, கற்புஉடையாள் - கற்புடையவளாகிய குசேலன்மனைவியானவள், வணங்கினள்நிற்ப - வணங்கிநிற்க, பல்இயம் - பலவகையானவாத்தியங்களும், புயல்என - மேகமுழக்கம்போல, குளிற-முழங்க, வரைஎனப்பணைத்து - மலைபோலப்பெருத்து,கதிர்ஒளிமழுக்கும் - சூரியகாந்தியையும் மழுங்கப்பண்ணுகிற, மாளிகைக்கு எழுந்தருளினன் - (தன்) திருமாளிகைக்கெழுந்தருளினன் (குசேலன்.) எ - று.

(பொ - ரை.) பரிமளப்புகையானது எங்கும்மணக்கும்படி பரவச்செய்து பிரகாசிக்கிற தீபத்தையுங்காட்டி,அளவற்றபலவாகிய ரத்நஆலாத்திகள் சுழற்றி விரைவாக இரண்டுபக்கங்களிலும் வீசி, பழுதில்லாத கற்புடையவளாகிய குசேலன் மனைவியானவள் வணங்கிநிற்க, பலவகையானவாத்தியங்களும் மேகமுழக்கம்போலமுழங்க, மலைபோலப்பெருத்துச்சூரிய காந்தியையும்மழுங்கப்பண்ணுகிற (தன்) திருமாளிகைக்கெழுந்தருளினன் (குசேலன்.)

(வி - ரை.) விரைகெழுதூமம் என்றது அகில்சந்தந முதலியவற்றின் புகையை, "அகிலின்புகைவிம்மி" என்றார் பிறரும். தவழ்தல் - எங்கும்வியாபித்தல், நீராஞ்சநம் நீராஜநம் என்னும்வடசொற்றிரிபு, மணிநீராஞ்சநம் - முத்துஆலாத்தியெனினுமாம், வணங்கினள் - முற்றெச்சம்.பல்லியம் ஒருசொல்லாகக்கோடலுமமையும் (அஎ)

இரசிதக் குவையுங் காஞ்சனக் குவையு மிலகுறு செம்மணிக்குவையுந், தரளவெண் குவையும் வச்சிரக் குவையுஞ் சாற்றரு மரகதக் குவையும், பரவிய கிரணச் செந்துகிர்க் குவையும் பாயமே தகப்பெருங் குவையு, மரதந வகையின் மற்றுள குவையு மறைதொறுங் கிடப்பன கண்டான்.

(ப - ரை.) இரசிதக்குவையும் - வெள்ளிக்குவியலும், காஞ்சநக்குவையும் - சுவர்ணக்குவியலும்,இலகுறுசெம்மணிக்குவையும் - விளங்குகிறமாணிக்கக்குவியலும், வெள் தரளக்குவையும் - வெள்ளியமுத்துக்குவியலும், வச்சிரக்குவையும் - வயிரக்குவியலும், சாற்றுஅருமரகதக்குவையும் - சொல்லுதற்கரிதாகிய மரகதக்குவியலும், பரவியகிரணம் செந்துகிர்குவையும் - பரவியகிரணங்களை யுடையசெம்பவளக்குவியலும், பாயமேதகம்பெருகுவையும்-பரவியகோமேதகத்தின்பெருங்குவியலும் அரதநவகையில்மற்று உள்ளகுவையும் - ரத்நவகைகளில் மற்றுமுள்ளகுவியல்களும்,அறைதொறும் கிடப்பன - வீடுதோறும் கிடப்பனவற்றை,கண்டான் - குசேலன்) பார்த்தான்.

(பொ - ரை.) வெள்ளிக்குவியலும் சுவர்ணக்குவியலும் விளங்குகிற மாணிக்கக்குவியலும் வெள்ளிய முத்துக்குவியலும் வயிரக்குவியலும் சொல்

லுதற்கரிதாகியமரகதக்குவியலும் பரவியகிரணங்களையுடைய செம்பவளக்குவியலும் பரவியகோமேதகத்தின் பெருங்குவியலும் ரத்நவகைகளில் மற்றுமுள்ளகுவியல்களும் வீடுதோறும் கிடப்பனவற்றை (குசேலன்) பார்த்தான்.

(வி - ரை.) ரஜதம், காஞ்சநம், தரளம், வஜ்ரம், மரகதம், கிரணம். என்பன வடசொற்கள், மரகதம் என்பதை மரதகம் எனவுங்கூறுவர். (அ௯)

பொற்கலப் பேழை மணிக்கலப் பேழை புரையில்வெண் பொற்கலப் பேழை, விற்படு விசேடக் கலனிறை பேழை மேவிய விருபத்தேழ் மகாரு, மற்புற வணியத் தனித்தனி வகுத்த வணிகலப் பேழை பன் னிறத்த, சொறபெறு விலைப்பட் டடுக்கிய பேழை தொகையிலா திருப்பன கண்டான்.

(ப - ரை.) பொன்கலம்பேழை - பொன்னுபரணப் பெட்டியும், மணிக்கலப்பேழை - ரத்நாபரணப்பெட்டியும், புரைஇல் - குற்றமில்லாத, வெண்பொன்கலம்பேழை - வெள்ளிப்பெட்டியும், வில்படு - ஒளிநிறைந்த, விசேடக்கலன்நிறைபேழை - விசேஷாபரணங்கள் நிறைந்தபெட்டியும், மேவிய - பொருந்திய, இருபத்தேழ்மகாரும் - இருபத்தேழுபிள்ளைகளும், அற்புஉற அணிய - அன்போடு அலங்கரித்துக்கொள்ளும்பொருட்டு, தனிதனிவகுத்த - வெவ்வேறாகவகுக்கப்பட்ட, அணிகலப்பேழை - ஆபரணப்பெட்டிகளும், பல்நிறத்த - பலநிறத்தையுடையனவாய், சொல்பெறு - புகழ்பெற்ற, விலைபட்டு - விலையுயர்ந்த பட்டாடைகள், அடுக்கியபேழை - அடுக்கியபெட்டிகளும், தொகைஇல்லாது இருப்பனகண்டான் - அளவற்றனவாயிருப்பனவற்றைப் பார்த்தான். எ - று.

(பொ - ரை.) பொன்னுபரணப்பெட்டியும், ரத்நாபரணப்பெட்டியும், குற்றமில்லாதவெள்ளிப்பெட்டியும் ஒளிநிறைந்த விஷேஷாபரணங்கள் நிறைந்தபெட்டியும், பொருந்திய இருபத்தேழுபிள்ளைகளும் அன்போடு அலங்கரித்துக்கொள்ளும்பொருட்டு வெவ்வேறாகவகுக்கப்பட்ட ஆபரணப்பெட்டிகளும், பலநிறத்தையுடையனவாய்புகழ்பெற்ற விலையுயர்ந்தபட்டாடைகள் அடுக்கியபெட்டிகளும் அளவற்றனவாயிருப்பன வற்றைப்பார்த்தான். எ - று.

(வி - ரை.) வெண்பொன்-வெள்ளி, விசேடக்கலன்-மேலான ஆபரணம்.

குருமலர் செம்பொற் கலமெதிர் வைத்துக் கோதறு வெள்ளிய மூரல், பருகுதற் கமைந்த வின்சுவைக் குழம்புப் பால்விரா யுபசரித்தூட்டத், திருகுபு வேண்டா வென்மரு மதனைத் திருப்பிப்பா ராதுசெல்குநரு, மருகிய பசியு மில்லையென் மருமா யணிபகார் செருக்குதல் கண்டான்.

(ப - ரை.) குருமலர் - ஒளிவிரிந்த, செம்பொன்கலம் - செம்பொன்னுற்செய்யப்பட்ட உண்கலத்தை, எதிர்வைத்து - எதிரேவைத்து, கோதுஅறு - குற்றமற்ற, வெள்ளியமூரல் - வெண்சோறும், பருகுதற்கு அமைந்த - உண்ணத்தகுந்த, இன்சுவை - இனியசுவையையுடைய, குழம்புபவிராய் - குழால்

ம்பாகிய பால்சேர்த்து, உபசரித்துஊட்ட - உபசரித்து உண்பிக்க, திருகுட வேண்டா என்மரும் - கையைத்திருகிக்கொண்டு வேண்டாவென்போரும் அதனை - அந்தப்பாற்சோற்றை, திருமிபாராது செல்குநரும்-திரும்பிப்பாரா மற்போவோரும், அருகியபசியும் இல்லை என்மரும்ஆய் - சொற்பமாகிய பசியுமில்லையென்போருமாகி, அணிமகார் - அழகியமக்கள், செருக்குதல் கண்டான் - செருக்குதலைப்பார்த்தான். எ - று.

(பொ - ரை.) ஒளிவிரிந்த செம்பொன்னாற்செய்யப்பட்ட உண்கலத்தை எதிரேவைத்து, குற்றமற்ற வெண்சோறும் உண்ணத்தகுந்த இனிய சுவையையுடைய குழம்பாகிய பால்சேர்த்து,உபசரித்து உண்பிக்கக்கையைத்திருகிக்கொண்டு வேண்டாவென்போரும், அந்தப்பாற்சோற்றைத் திரும்பிப்பாராமற்போவோரும், சொற்பமாகிய பசியுமில்லை யென்போருமாகி அழகியமக்கள செருக்குதலைப்பார்த்தான் எ - று.

(வி - ரை.) குழம்புப்பால் என்றது நீர் கலவாதபாலை, திருகுபு-செய்பு என்னும்வாய்பாட்டிறந்த காலவினையெச்சம்,திருமிஎன்பதற்குப்பகுதிதிரும்.

வயிரவொண் சுட்டி நுதன்மிசைப் பொலிய மார்பிடை யைம்படை விளங்கக், கயில்செறி தொடருங் கடகமுங் கரத்திற் காதிலம் பொற்குழை தயங்கச், செயிரறு பொன்னு ணரைமிசைக் கதிர்ப்பச் சிறுசிலம் படிகளிற் கவினப், பயிறரு மைந்தர் கலகல கலெனப் பண்பினின் றாடுதல் கண்டான்.

(ப - ரை.) ஒள் - ஒட்பமாகிய, வயிரம் - வயிரத்தாற்செய்த, சுட்டி - சுட்டியானது, நுதல்மிசைபொலிய-நெற்றியின்மேல்விளங்கவும்,ஐம்படை-பஞ்சாயுதங்களும், மார்பிடைவிளங்க - மார்பில்விளங்கவும், கரத்தில் - கைகளில், கயில்செறிதொடரும் கடகமும் - கயிலையுடையதொடரும் கடகமும், (தயங்க-விளங்கவும்,) காதில் - செவிகளில், அம் - அழகாகிய பொன்குழை தயங்க-பொற்குழைவிளங்கவும், அரைமிசை - இடையில், செயிர்அறு-களங்கமற்ற, பொன்நாண் - பொன்னரைநாண், கதிர்ப்ப - ஒளியைச்செய்யவும், அடிகளில் - கால்களில், சிறுசிலம்பு-சிறுசிலம்புகள், கவின - அழகுசெய்யவும், பயில்தரும்மைந்தர் - நெருங்கினமக்கள், கலகலகலென - கலகலகலவென்றுசத்தித்து, பண்பின்நின்று - அன்போடுநின்று, ஆடுதல்கண்டான் - விளையாடுதலைப்பார்த்தான். எ - று.

(பொ - ரை.) ஒட்பமாகிய வயிரத்தாற்செய்த சுட்டியானது நெற்றியின் மேல்விளங்கவும்,பஞ்சாயுதங்களும மார்பில் விளங்கவும்,கைகளில் கயிலையுடைய தொடரும் கடகமும் விளங்கவும் செவிகளில், அழகாகிய பொற்குழை விளங்கவும்,இடையில் களங்கமற்றபொன்னரைநாண் ஒளியைச்செய்யவும், கால்களிற்சிறு சிலம்புகள் அழகு செய்யவும், நெருங்கினமக்கள் கலகலகலவென்று சத்தித்து அன்போடுநின்று விளையாடுதலைப்பார்த்தான்.

(வி - ரை.) ஐம்படை—திருமாலின் பஞ்சாயுதங்கள், அவை சங்கசக்ரகதாகட்க கோதண்டங்கள், "தாலியைம்படை தழுவுமார்பிடை" என்றார் ம

ஹாரவியும், அயில்-ஆயரணக்கடைப்புணர்வு, பொலிய விளங்கதயங்க கதிர்ப்பவின்மைந்தர் ஆடுதலேகண்டான் என முடித்துக்கொள்க. (கூக)

தளவரும் பனைய கரிசில்வா லரியுந் தயங்குசெம் பொன்னிறப் பருப்பும், வளமிகு குறையாக் கறிகளுங் குறைத்த மாண்கறிக் குப்பையு மற்றைக், கிளர்தரு மூபக ரணங்களு மூலோக மேழினுங் செழுமுறச் செய்த, பளகறு கலங்கள் பல்லவு மடுமிற் பரப்பெலாம் பொலிவன கண்டான்.

(ப - ரை.) தளவு அரும்பு அனைய - முல்லையரும்பைநிகர்த்த, கரிசுஇல் - பழுதில்லாத, வால் அரியும் - வெள்ளியஅரிசியும், தயங்கு - விளங்குகிற, செம்பொன்நிறம்பருப்பும் - செம்பொன்னிறத்தையுடையபருப்பும், வளம்மிகு குறையாகறிகளும் - வளமிகுந்த குறையாக்கறிகளும், குறைத்த - குறைத்துவைத்த, மாண்கறிகுப்பையும் - சிறந்த கறிக்குவியலும், மற்றை - வேறாகிய, கிளர்தரும் - விளங்குகிற, உபகரணங்களும் - சாமக்கிரிகளும், உலோகம் எழினும் - ஏழுலோகங்களாலும், செழுமுறசெய்த - பொருந்தச்செய்த, பளகு அறுகலங்கள் பல்லவும் - குற்றமற்ற பாத்திரங்கள் பலவும், அடும் இல்பரப்பு எல்லாம் - சமையல் வீட்டுப்பரப்புமுழுதும், பொலிவன - விளங்குவனவற்றை, கண்டான் - பார்த்தான். எ - று.

(பொ-ரை.) முல்லையரும்பை நிகர்த்த பழுதில்லாத வெள்ளியஅரிசியும், விளங்குகிற செம்பொன்னிறத்தையுடைய பருப்பும் வளமிகுந்தகுறையாக்கறிகளும், குறைதனுவைத்த சிறந்த கறிக்குவியலும், வேறாகிய விளங்குகிறசாமக்கிரிகளும், ஏழுலோகங்களாலும்பொருந்தச்செய்த குற்றமற்ற பாத்திரங்கள் பலவும் சமையல் வீட்டுப்பரப்புமுழுதும் விளங்குவனவற்றைப்பார்த்தான்.

(வி - ரை.) கரிசு - உமிதவிடுமுதலிய குற்றங்கள், குறையாக்கறி - திருத்தாதகறி, குறைத்தகறி - திருத்தினகறி, உலோகம்ஏழ் - பொன்வெள்ளி செம்பு பித்தளை முதலியவை, அடுதல் - சமைத்தல், அடுமில்-சமையல்வீடு.

கலிநிலைத்துறை.

கரையில் பல்வளஞ் சென்றுலாய் நோக்குமக் காலைப்
புரையில் கற்புடை மனைவியார் விரையமுன் போந்து
விரைந றுஞ்செழுந் தயிலக்காப் பிடுபெனுள் விரும்ப
வுரைசி றந்திடுநானஞ்செய் தருளுமென் றுரைப்ப.

(ப - ரை) கரைஇல் - அளவற்ற, பல்வளம் - பலவளங்களையும், சென்று உலாய்நோக்கும் அக்காலை - போயுலாவிப்பார்க்கின்ற அந்தச்சமயத்தில், புரைஇல் - குற்றமில்லாத, கற்புஉடை - கற்பினையுடைய, மனைவியார் - (குசேலன்) மனைவியார், விரைய - சீக்கிரமாக, முன்போந்து - எதிரேவந்து, விரைநறு - மிக்கபரிமளமுள்ள, செழு-செழுமையாகிய, தயிலக்காப்புஇடுபு-தைலக்காப்பிட்டுக்கொண்டு, என்உள்விரும்ப-என்மனங்களிக்கும்படி, உரைசிறந்திடும் - புகழ்ச்சியிற்சிறந்த, நானம்செய்தருளும் என்றுஉரைப்ப - ஸ்நானம்செய்தருளுமென்றுசொல்ல எ - று.

NO. 27. PAGE. No. 63.



குசேலரைபீடத்திலிருத்தி அவர்மனைவி எண்ணெயிடுதல்

(பொ - ரை.) அளவற்ற பலவளங்களையும் போயுலாவிப்பார்க்கின்ற அந்தச்சமயத்தில், குற்றமில்லாத கற்பினையுடைய (குசேலன்) மனைவியார் சீக்கிரமாக எதிரேவந்து மிக்கபரிமளமுள்ளசெழுமையாகிய தைலக்காப்பிட்டுக்கொண்டு, என்மனம் களிக்கும்படி புகழ்ச்சியிற்சிறந்த ஸ்நாநம் செய்தருளுமென்றுசொல்ல. எ - று.

(வி - ரை.) தயிலக்காப்பிடுதல்-எண்ணெயிட்டுக்கொள்ளுதல், இடுபு - செய்புஎன்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம், இது நானஞ்செய்தருளும் என்னும் வினைகொண்டது, நானம் - ஸ்நாநம்என்னும் வடசொற்றிரிபு.

அங்கொ ராதன மிட்டன ளொருத்திவந் ததன்மேற்
றுங்க மாமறைத் தலைமையோ னிருந்தனன் றுனைந்தோர்
மங்கை பொன்செய்த வள்ளத்துத் தைலமுன் வைத்தாள்
செங்கை பற்றியோர் நங்கைபொன் சிவிறியை வீச.

(ப - ரை.) அங்கு - அவ்விடத்தில், ஒருத்தி - ஒருமாது, ஒருஆதநம்இட்டனள் - ஒருஆசநமிட்டனள், துங்கம்-பரிசுத்தமாகிய, மாமறைதலைமையோன் - பெரியவேதங்களிற்சிறந்தவனாகிய குசேலன், வந்துஅதன்மேல் இருந்தனன் - வந்து அந்தஆசநத்தின்மேலிருந்தான், ஓர்மங்கை - ஒருமாதானவள், துனைந்து - விரைந்து, பொன்செய்தவள்ளத்து - பொன்னினாற்செய்யப்பட்ட கிண்ணத்தில், தைலம் - தைலத்தைவார்த்து, முன்வைத்தாள் - எதிரேவைத்தாள், ஓர்நங்கை - ஒருமாதானவள், பொன்சிவிறியை-பொன்விசிறியை, செங்கைபற்றிவீச - செங்கையிற்பிடித்துவீசாநிற்க. எ - று.

(பொ - ரை.) அவ்விடத்தில்ஒருமாது ஒரு ஆசநமிட்டனள்,பரிசுத்தமாகிய பெரிய வேதங்களிற்சிறந்தவனாகிய குசேலன்வந்து அந்த ஆசநத்தின்மேலிருந்தான், ஒருமாதானவள்விரைந்து பொன்னினாற்செய்யப்பட்ட கிண்ணத்தில் தைலத்தைவார்த்து எதிரே வைத்தாள், ஒரு மாதானவள் பொன்விசிறியைச்செங்கையிற்பிடித்து வீசாநிற்க. எ - று.

(வி - ரை.) ஆதனம் - ஆஸநம்என்னும் வடசொற்றிரிபு, தைலம் - திலத்தினின்றெடுக்கப்பட்டது அதாவது எண்ணெய், துனைதல் - விரைதல். வள்ளம் - கிண்ணம். (கூச)

மாந்த ளிர்க்கரத் தாநறுந் தயிலத்தை வாக்கிப்
பூந்த டங்கணோர் மடக்கொடி சென்னியிற் பூசி
வாய்ந்த வங்கத்து மப்பினள் வயங்குபா சனங்க
ளாய்ந்த நீர்நிறை யாடிடம் புகுந்தன னம்மா.

(ப - ரை.) பூதடம்கண் - தாமரைமலர்போன்ற விசாலமானகண்களையுடைய, ஓர்மடக்கொடி - ஒருஇளங்கொடிபோல்வாள், மாதளிர்கரத்து - மாந்தளிர்போலுந்தன்கைகளால், அ - அந்த, நறுதயிலத்தைவாக்கி - பரிமளதைலத்தைவார்த்து, சென்னியில்பூசி - சிரசில்தடவி, வாய்ந்தஅங்கத்தும் அப்பினள் - பொருந்தியவுடம்பின்மேலும் பூசிவிட்டாள், (அப்பொழுது குசேலன்)

வயங்குபாசநங்கள் - விளங்குகின்ற பாத்திரங்களில், ஆய்ந்தநீர்நிறை - ஆராய்ந்துவருவித்தநீர் நிறைக்கப்பட்டிருக்கிற, ஆடிடம்புகுந்தனன் - நீராடுமிடத்திற்பிரவேசித்தான். எ - று.

(பொ - ரை.) தாமரைமலர்போன்ற விசாலமான கண்களையுடைய ஒரு இளங்கொடிபோல்வாள் மாந்தளிர்போலுந்தன்கைகளால் அந்தப்பரிமளதைலத்தைவார்த்துச் சிரசில்தடவி பொருந்தியவுடம்பின்மேலும் பூசிவிட்டாள், (அப்பொழுது குசேலன்) விளங்குகின்ற பாத்திரங்களில் ஆராய்ந்து வருவித்தநீர் நிறைக்கப்பட்டிருக்கிற நீராடுமிடத்திற்பிரவேசித்தான். எ - று.

(வி - ரை.) மாந்தளிர்க்கரம் - உவமைத்தொகை நிலைத்தொடர், மடக்கொடி - உவமையாகுபெயர், ஆய்ந்த நீர்நிறை யாடிடம்என்றது திருமஞ்சநசாலையை. அம்மா - அசைச்சொல். (கரு)

ஆங்கு மாதர்கள் குழுமிநெய் யகற்றிவெப் படுநீர்
பாங்கின் வாக்கிட மூழ்கிமெய் யீரமும் பாற்றி
யோங்கு வேறுடை யுடீஇநி யதிக்கட னுவகை
தேங்கு மாமுடித் தனன்புகுந் தனனுணுந் தேஎத்து.

(ப - ரை.) ஆங்கு - அவ்விடத்து, மாதர்கள்குழுமி - மாதர்கள்சேர்ந்து, நெய்அகற்றி - எண்ணெயைப்போக்கி, வெப்புஅடுநீர்-வெப்பமாகக்காய்ச்சினநீரை, பாங்கின்வாக்கிடமூழ்கி - இதமாகவார்க்கமுழுகி, மெய் - உடம்பிலுள்ள, ஈரமும்பாற்றி - ஈரத்தையும்போக்கி, ஓங்கு - உயர்ந்த, வேறுஉடைஉடீஇ - வேறுடையுடுத்து, உவகைதேங்குமாறு - களிப்புமிகும்படி, நியதிக்கடன் முடித்தனன் - நியதிக்கடன்களைமுடித்தவனாய், உண்ணும்தேத்துபுகுந்தனன் - உண்ணுமிடத்திற்பிரவேசித்தான். எ - று.

(பொ - ரை.) அவ்விடத்து மாதர்கள்சேர்ந்து எண்ணெயைப்போக்கி வெப்பமாகக்காய்ச்சினநீரை இதமாகவார்க்கமுழுகி, உடம்பிலுள்ள ஈரத்தையும்போக்கி, உயர்ந்த வேறுடையுடுத்து, களிப்புமிகும்படி நியதிக்கடன்களை முடித்தவனாய், உண்ணுமிடத்திற் பிரவேசித்தான். எ - று.

(வி - ரை.) நியதிக்கடன் - நித்யகர்மாநுஷ்டாநங்கள், தேங்குமாறு என்பது தேங்குமாஎன ஈறுதொகுத்தலாயிற்று. முடித்தனன் முற்றெச்சம். தேம் - இடம், உண்ணுந்தேம் - போஜநசாலை. (கசு)

இந்தி ரன்றிசை நோக்கின னுவந் திருந்தா
னந்த ரம்பையம் பேரிரு பாசிலை நயக்க
முந்த ரிந்தவாய் வலம்பட முன்புபோ கட்டார்
சிந்தை யன்பொடு கரகநீர் புரோக்கித்துத் திருத்தி.

(ப - ரை.) இந்திரன்திசைநோக்கினனாய் - இந்திர திசையைநோக்கிக்கொண்டு,உவந்திருந்தான்-களித்திருந்தான்,(அப்பொழுது அங்குள்ள பரிசாரகப்பெண்கள்) நந்து - செழித்த, அரம்பை - அரம்பையென்கிற, அம் - அழகிய,பேர் - பெயரையுடைய,இருபாசிலை - பெரியபசியஇலையை, நயக்க -

விரும்பும்படி, முந்துஅரிந்தவாய்வலம்பட - முன்னேயரிந்தவாய் வலத்தி லிருக்கும்படி, சிந்தைஅன்பொடு - மனத்தன்போடு, கரகநீர் புரோக்கித்துதி ருத்தி - கரகநீரைப்புரோக்ஷித்துத்திருத்தி, முன்புபோகட்டார் - (குசேலனு க்கு) எதிரே போட்டார்கள். எ - று.

(பொ - ரை.) இந்திரதிசையை நோக்கிக்கொண்டு களித்திருந்தான், (அப்பொழுது அங்குள்ள பரிசாரகப்பெண்கள்) செழித்த அரம்பையென்கிற அழகாகியபெயரையுடைய பெரியபசியஇலையை விரும்பும்படி, முன்னேயரிந் தவாய்வலத்திலிருக்கும்படி மனத்தன்போடு கரகநீரைப்புரோக்ஷித்துத்திருத் தி (குசேலனுக்கு) எதிரே போட்டார்கள். எ - று.

(வி - ரை.) இந்திரன்திசை - கிழக்கு, அரம்பை - வாழை, புரோக்ஷித் தல் - தெளித்தல். (கஎ)

நிலவு மெய்ப்பணி மாதரா ரெடுத்துக்கை நீட்டக்
கலவ மாமயிற் சாயலங் கற்புடை மனையாள்
குலவு தன்கையாற் குய்கமழ் கருணைநல் வறையல்
பலவு மின்புளி விரவிடாப் பாயதிங் கறியும்.

(ப - ரை.) நிலவு - விளங்குகின்ற, மெய் - உண்மையையுடைய, பணி மாதரார் - பரிசாரகப்பெண்கள், எடுத்துகைநீட்ட - எடுத்துக்கையினால் நீட் டாநிற்க, கலவம் - கலாபத்தையுடைய, மா - அழகிய, மயில்சாயல் - மயிற்சா யலையும், அம்கற்புஉடை - சிறந்தகற்பினையுமுடைய,மனையாள் - (குசேலன்) மனைவியானவள், குலவுதன்கையால் - விளங்காநின்ற தன்கையினால், குய்க மழ்கருணை - தாளிப்புமணக்கின்ற பொரிக்கறி,நல்வறையல் - நல்லவறையல் ஆகிய, பலவும் - பலவும், இன்புளிவிரவிடா - இனியபுளிகலவாத, பாயதிக றியும் - விஸ்தாரமான தித்திப்புக்கறிகளும். எ - று.

(பொ - ரை.) விளங்குகின்ற வுண்மையையுடைய பரிசாரகப்பெண்கள் எடுத்துக்கையினால் நீட்டாநிற்க, கலாபத்தையுடைய அழகியமயிற்சாயலையும் சிறந்த கற்பினையுமுடைய (குசேலன்) மனைவியானவள் விளங்காநின்ற தன் கையினால் தாளிப்புமணக்கின்ற பொரிக்கறி நல்லவறையல்ஆகிய பலவும் இ னியபுளிகலவாத விஸ்தாரமான தித்திப்புக்கறிகளும். எ - று.

(வி - ரை.) மெய்ப்பணி மாதரார் என்றதனால் அவரது அன்புடைமை தோன்றுகின்றது. கலவம் கலாபம்என்னும் வடசொற்றிரிபு, கலவமாமயிற்சா யலங்கற்புடை மனையாள் என்றது, மாதர்க்கு அழகினுங்கற்புச்சிறந்ததென்ப தை வலியுறுத்தற்கென்க. வறையல்-வறுத்தகறி. (கஅ)

அறையை நேர்ததி யையவி யளாவிய கறியு
முறையின் முற்றவே வாதடு முதிர்சுவைக் கறியுங்
குறைவில் புன்னிலப் பயறொடு கூட்டிய கறியு
நிறையு நெய்ப்பசை யுறுசிக ரறுபுளிங் கறியும்.

(ப - ரை.) அறையைநேர் - கற்பாறையையொத்த, ததி - தயிரும், ஐ யவி - கடுகும், அளாவிய - கலந்த, கறியும் - கறிகளும், முறையின் - கிரம

மாக, முற்றவேவாது-முழுதும்வேவவொட்டாமல், அடும் - சமைக்கின்ற, மு திர்சுவை - மிக்கசுவையுள்ள, கறியும் - கறிகளும், குறைவுஇல் - குறைவில் லாத, புல்நிலம்பயறொடு - புன்செய்யில்விளைகின்றபயறொடு, கூட்டியகறி யும் - சேர்த்தகறிகளும், நிறையும் - நிறைந்த, நெய்ப்பசைஅறு - நெய்ப்பசை நீங்காத, நிகர்அறு - நிகரற்ற, புளிங்கறியும் - புளிங்கறிகளும். எ - று.

(பொ - ரை.) கற்பாறையைநிகர்த்ததயிரும்கடுகும்கலந்தகறிகளும், கி ரமமாகமுழுதும் வேவவொட்டாமல் சமைக்கின்றமிக்கசுவையுள்ள கறிளும் குறைவில்லாதபுன்செய்யில் விளைகின்ற பயறொடுசேர்த்தகறிகளும் நிறைந்த நெய்ப்பசைநீங்காத நிகரற்ற புளிங்கறிகளும். எ று.

(வி - ரை.) அறையைநேர்ததி என்றது கற்பாறைபோலவுறைந்துதோ ய்ந்ததயிரை, முறையின்முற்றவேவாதடு முதிர்சுவைக்கறியும் என்றது அரை வேக்காட்டிலிறக்கியுப யோகிக்கத்தகுந்த சிலகறிகளை, புன்னிலம் - புன் செய், (செந்நெல்லொழிய மற்றைப்பருப்பு முதலிய விளையும்நிலம்.) (கூகூ)

கதிக்கு மற்றைய கறிகளு மூறிய காயு
முதிக்கு நோலையு மடையுமற் றுள்ளசிற் றுணவும்
விதிக்குஞ் சித்திர வனங்களு மேவுபா னிதமும்
பதிக்கு மன்பொடு பேரிலை புதைபடப் படைத்து.

(ப - ரை.) கதிக்கும் - மிகுந்த, மற்றையகறிகளும் - மற்றுமுள்ளகறி களையும், ஊறியகாயும் - ஊறுகாய்களையும், உதிக்கும்நோலையும் - உதிக்கின்ற நோலையையும், அடையும் - அடையையும், மற்றுள்ள சிற்றுணவும் - மற்று முள்ள சிற்றுணவுகளையும், விதிக்கும் சித்திரஅன்னங்களும் - விதிக்கப்பட்ட சித்ராந்நங்களையும், மேவுபானிதமும் - பொருந்திய பாற்சோற்றையும், பதி க்கும் அன்பொடு - மிகுந்த அன்போடு, பேரிலைபுதைபடபடைத்து - பெரி யஇலையானது மறையும்படி படைத்து எ - று.

(பொ - ரை.) மிகுந்தமற்றுமுள்ள கறிகளையும் ஊறுகாய்களையும் உதி க்கின்ற நோலையையும் அடையையும் மற்றுமுள்ள சிற்றுணவுகளையும் விதிக் கப்பட்ட சித்ராந்நங்களையும் பொருந்தியபாற்சோற்றையும் மிகுந்த அன்போ டுபெரிய இலையானது மறையும்படி படைத்து. எ - று.

(வி - ரை.) நோலை - ஓர்வகைச்சிற்றுணவு, அடை - அப்பம், சித்ராந் நங்கள், பொங்கல், சர்க்கரைப்பொங்கல், தத்யோதநம், புளியோரை, கதம் பம் முதலியன. (சOO)

முல்லை வீயினை நிகர்தரு மூரலும் படைத்து
வல்ல பொன்னிறப் பருப்படு திரளையும் வைத்து
நல்ல வானநெய்க் குடங்கவிழ்த் திவ்வகை நயப்ப
வெல்லை யின்மறை யவர்க்குமைந் தருக்கும்பாங் கியற்றி.

(ப - ரை.) முல்லைவீயினை நிகர்தரு - முல்லையரும்பை நிகர்த்த, மூர லும்படைத்து - சோற்றையும்படைத்து, வல்லபொன்னிறம் - உயர்ந்தபொ

ன்னிறத்தையுடைய, பருப்பு அடுதிரளையும் வைத்து, பருப்பினுற்சமைத்த திரளையையும்வைத்து, நல்ல - சிறந்த, ஆன நெய்குடம் கவிழ்த்து - பசு நெய்க்குடத்தைக்கவிழ்த்து; இவ்வகை - இப்படியே, நயப்ப - விரும்பும்படி, எல்லே இல்மறையவர்க்கும் - அளவற்றவேதியருக்கும், மைந்தருக்கும் - மக்களுக்கும், பாங்கு இயற்றி - நன்ருகச்செய்து. எ - று.

(பொ - ரை.) முல்லையரும்பை நிகர்த்தசோற்றையும்படைத்து உயர்ந்த பொன்னிறத்தையுடைய பருப்பினுற்சமைத்த திரளையையும்வைத்து, சிறந்தபசு நெய்க்குடத்தைக்கவிழ்த்து, இப்படியே விரும்பும்படி அளவற்றவேதியருக்கும் மக்களுக்கும் நன்ருகச்செய்து. எ - று.

(வி - ரை.) வீ - மலர். அது இவ்விடத்து அரும்புக்காயிற்று, அூரல் - சோறு, நிகர்தருஎன்பதற்குப்பகுதி நிகர்தா, வல்லபொன்னிறம் என்பதில் வன்மை சிறப்பின்மேற்று, திரளை - திரள், (உருண்டை), ஆன் - பசு, ஆன - பசுக்களினின்றுங் கொள்ளப்பட்டனவாகிய, கவிழ்த்தல் - சாய்த்தல். (௪0௧)

உவந்து முன்னர்நின் றுண்கமா வென்றுப சரிப்பத்
தவந்த ழைத்தமா மறையவன் றகுவன வுண்ணு
விவர்ந்த வாசையின் விலாப்புடை வீங்கவுண் டெழுந்த
நிவந்த வேதியர் குழாத்தொடு மெழுந்தவ ணீந்தி.

(ப - ரை.) உவந்து - மனமகிழ்ந்து, முன்னர்நின்று - எதிரேநின்று, உண்கவென்று உபசரிப்ப - உண்ணுகவென்றுபசரிக்க, தவம்தழைத்த - தவத்தாற்சிறந்த, மாமறையவன் - பெருமையுள்ள வேதியனுகிய குசேலன்; தகுவனஉண்ணு - தகுதியானவுணவுகளையுண்டு, இவர்ந்த ஆசையின் - மிகுந்த ஆசையோடு, விலாப்புடைவீங்க - விலாப்புடை வீங்கும்படி, உண்டுஎழுந்த- உண்டெழுந்த, நிவந்தவேதியர் குழாத்தொடும் - உயர்ந்தவேதியர் கூட்டத்தோடும், எழுந்து - எழுந்து, அவண்நீந்தி - அவ்விடத்தைவிட்டு நீங்கி.

(பொ - ரை.) மனமகிழ்ந்து எதிரேநின்று உண்ணுகவென்று உபசரிக்க, தவத்தாற்சிறந்த பெருமையுள்ள வேதியனுகிய குசேலன் தகுதியான வுணவுகளையுண்டு மிகுந்த ஆசையோடு விலாப்புடை வீங்கும்படி உண்டெழுந்த உயர்ந்தவேதியர் கூட்டத்தோடும் எழுந்து அவ்விடத்தை விட்டுநீங்கி.

(வி - ரை.) உண்கமாஎன்பதில் மாவியங்கோளொடுவந்த அசைச்சொல், இது இவ்வாறு வியங்கோளோடு கூடிவருதலே பெருவழக்கு, தவத்திற்கேற்பவற்றையேயன்றி யேனையவற்றையுண்டிலனென்பது, 'தவந்தழைத்தமாமறையவன்றகுவனவுண்ணு, என்ருர். விலாப்புடை - விலாப்பக்கம், வீங்குதல் - பருத்தல், 'நீந்தி' என்றது உண்டிப்பொறை சுமக்கலாற்ருமை விளக்கற்கென்க.

(௪0௨)

வளங்கொ ணீரில்வாய் பூசின னியதியின் வகையுங்
களங்க மின்மறை யவரொடு மியற்றினன் கந்தந்
துளங்கொள் பூந்தொடை விரைகெழு பாகடை தாங்கி
விளங்கு மன்னர்முன் யாவர்க்கு மிவ்வகை விரும்பி.

(ப - ரை.) வளம்கொள் நீரில்வாய்பூசினன்-வளங்கொண்டநீரினால்வாய் பூசினவனாய், களங்கம் இல்மறையவரோடும் - களங்கமில்லாதவேதியரோடு ம், நியதியின்வகையும் இயற்றினன் - மற்றையநியதியின்வகைகளையும் செய் துமுடித்தான், கந்தம் - சந்தனம், தளம்கொள்பூதொடை - இதழ்களையுடைய பூமாலை, விரைகெழு - வாசனைபொருந்திய, பாகு அடை - பாக்குவெற்றிலை, (இவையாவும்) தாங்கி - ஏந்தி, விளங்கும் மன்னர்முன்யாவர்க்கும் - பிரகாசி க்கிற அரசர்முதலாகிய யாவருக்கும், இவ்வகை - இவ்விதமாகவே, விரும்பி - விரும்பி. எ - று.

(பொ - ரை.) வளங்கொண்ட நீரினால் வாய்பூசினவனாய் களங்கமில் லாத வேதியரோடும் மற்றையநியதியின்வகைகளையும் செய்துமுடித்தான், சந்தனம், இதழ்களையுடைய பூமாலை, வாசனைபொருந்திய பாக்குவெற்றிலை (இவையாவும) ஏந்தி பிரகாசிக்கிற அரசர் முதலாகிய யாவருக்கும் இவ்வித மாகவே விரும்பி. எ - று.

(வி - ரை.) வாய்பூசல் - வாய்கழுவல்,இது இடக்கரடக்கல், பூசினன்- முற்றெச்சம், நியதியின்வகை-நித்யாநுஷ்டாநவகை, பாகடை-தாம்பூலம்.

விருந்து செய்தனன் சாந்தம்பூப் பாகுவெள் ளிலையுந்
திருந்த நல்கின னவரவ ரிடம்புகச் செலுத்திப்
பொருந்து மிவ்வகைப் போகத்திற் சிற்சினாள் போகக்
கருந்து ழாய்கமழ் சேவடிக மழ்தரு முளத்தான்.

(ப - ரை.) விருந்துசெய்தனன் - விருந்துசெய்து, சாந்தம் - சந்தனம், பூ - புஷ்பம், பாகுவெள்ளிலையும் - பாக்குவெற்றிலையும், திருந்தநல்கினன் - நன்றாகக்கொடுத்து, அவரவர் இடம்புகசெலுத்தி - அவரவரிடங்களுக்குப் போம்படியனுப்பிவிட்டு, பொருந்தும் - பொருந்திய, இவ்வகைபோகத்தில் - இவ்வகையாகிய போகங்களில், சிற்சில்நாள்போக - சிற்சிலநாள்கழிய, கரு துழாய்கமழ்சேவடி - கரியதுளவமாலைபரிமளிக்கிற(ஸ்ரீ கண்ணபிரானது)திரு வடியானது, கமழ்தரும் - பரிமளிக்கிற, உள்ளத்தான் - மனத்தையுடையவனா கியகுசேலன். எ - று.

(பொ - ரை.) விருந்துசெய்து சந்தனம் புஷ்பம் பாக்கு வெற்றிலையும் நன்றாகக்கொடுத்து அவரவரிடங்களுக்குப்போம்படி யனுப்பிவிட்டு பொருந் திய இவ்வகையாகிய போகங்களில் சிற்சிலநாள்கழிய கரியதுளவமாலைபரிம ளிக்கிற (ஸ்ரீ கண்ணபிரானது) திருவடியானது பரிமளிக்கிறமனத்தையுடை யவனாகிய குசேலன். எ - று.

(வி - ரை.) செய்தனன் நல்கினன் என்னும் முற்றெச்சங்கள் செலுத் தியென்னும் வினைகொண்டன. கருந்துழாய்கமழ்சேவடியென்பதில் கருமை பெருமை யென்றுரைத்தலுமாம். ஸ்ரீ கண்ணபிரானது திருவடியையிடைய றாது தியானித்துக்கொண்டிருப்பவன் என்பதுதோன்ற, 'கருந்துழாய்கமழ் சேவடிகமழ்தரு முளத்தான்' என்றார் (௧௦௯)

ஒருதி னத்தினி லுவளக வளைப்பினை யுற்றுக்
கருது மக்களு மனைவியு முருவகை கழிப்பி
யிருக வாடத்தை நூக்குபு தாழக்கோ லிறுக்கி
மருவொ ருத்தனு யிருந்தன னின்னன வலிப்பான்.

(ப - ரை.) ஒரு தினத்தினில் - ஒருதினத்தில், உவளகவளைப்பினை உற்று - (தனது) அந்தப்புரத்தையடைந்து, கருதும்-விரும்புகிற, மக்களும் - புதல்வரும், மனைவியும் - மனையாளும், உருவகை - (அங்கே) இராதபடி, கழிப்பி - அனுப்பிவிட்டு, இருகவாடத்தை - இரண்டுகதவுகளையும், நூக்குபு - தள்ளிமூடி, தாழக்கோல் இறுக்கி - தாழக்கோலையிறுக்கி, மருவு - பொருந்திய, ஒருத்தனாய் இருந்தனன் - ஒருவனாயிருந்துகொண்டு, இன்னனவலிப்பான் - இவைபோல்வனவற்றை நினைப்பவனானான். எ - று.

(பொ - ரை.) ஒருதினத்தில் (தனது) அந்தப்புரத்தையடைந்து, விரும்புகிற புதல்வரும் மனையாளும் (அங்கே) இராதபடி அனுப்பிவிட்டு, இரண்டு கதவுகளையும் தள்ளிமூடி தாழக்கோலையிறுக்கி, பொருந்திய ஒருவனாயிருந்துகொண்டு இவைபோல்வனவற்றை நினைப்பவனானான். எ - று.

(வி - ரை.) ஒருத்தனாய் - தனியனாய். இருந்தனன் - முற்றெச்சம், வலித்தல் - நினைத்தல். (௧0௫)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இம்மை தனின்மற் றிரும்பொருளை யீட்டல் காத்த லிழத்தலென
வெம்மை புரிமூ வகைத்துயரும் விளையா நிற்கும் பாவத்தா
லம்மை நிரயத் துயருமுறு மந்தோ சீசீ யிப்பொருளைச்
செம்மை யுடையோர் வேண்டுமெனச் சிந்தித் திடுவ ரோமறந்தும்.

(ப - ரை.) இம்மைதனில் - இம்மையில், இருபொருளை - பெரும்பொருளை, ஈட்டல்காத்தல் இழத்தல்என - சம்பாதித்தல் காத்தல் இழத்தல்என்று, வெம்மைபுரி - வெப்பத்தைச்செய்கிற, மூவகைத்துயரும் - மூவகைத்துன்பங்களும், விளையாநிற்கும் - உண்டாகாநிற்கும், பாவத்தால் - பாவச்செய்கையால், அம்மை - அவ்வுலகில், நிரயத்துன்பம்உறும் - நரகத்துன்பமும்உண்டாகும், அந்தோ - ஐயோ, சீசீ - சைசை, இ பொருளை - இந்தப்பொருளை, செம்மையுடையோர் - செவ்விய அறிவினையுடையோர், மறந்தும் - மறந்தாயினும், வேண்டும்என சிந்தித்திடுவரோ - வேண்டுமென்று நினைப்பார்களோ. எ-று

(பொ - ரை.) இம்மையில் பெரும்பொருளைச் சம்பாதித்தல் காத்தல் இழத்தல் என்று வெப்பத்தைச்செய்கிற மூவகைத்துன்பங்களும் உண்டாகாநிற்கும், பாவச்செய்கையால்அவ்வுலகில் நரகத்துன்பமுமுண்டாகும், ஐயோ, சைசை, இந்தப்பொருளைச்செவ்விய அறிவினையுடையோர் மறந்தாயினும் வேண்டுமென்று நினைப்பார்களோ. எ - று.

(வி - ரை.) மற்று - அசை, "இன்னறரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே". பின்னதனைப் பேணுதலுந்துன்பமே, அன்ன, தளித்தலுந்துன்பமே

யந்தோபிறர்பா, விழத்தலுந்துன்பமேயாம்'; என்றார் பிறரும். (கOசு)

ஊழின் வலியாற் பெருஞ்செல்வ முறினுங் கால முண்டாக
வாழுங் கருத்த ராய்த்துணிவுற் றடங்கத் துறப்ப ரறிவுடையோர்
தாழு மளர்போ யொழிதலன்றித் தகுமிம் மையிற்க ரணமூன்றும்
வாழ்பி யிலக்கிற் சிதறுமை மருவப் பெறும்பே ரின்பத்தால்.

(ப - ரை.) ஊழின்வலியால் - ஊழ்வலியினால், பெருசெல்வம் உறினும் - பெருஞ்செல்வங்கிடைத்தாலும், அறிவுடையோர் - விவேகிகள், காலமுண்டாகவாழும் கருத்தராய் - காலமுண்டாக வாழவேண்டுமென்னுங்கருத்துடையவர்களாய், துணிவுற்று - துணிந்து, அடங்கதுறப்பர் - முற்றத்துறப்பார்கள் (அவர்களுக்கு) தாழும் - தங்கிய, அளர்போய் ஒழிதல் அன்றி - துன்பம்போயொழிதலன்றி, தகும் இம்மையில் - தகுதியாகிய இம்மையிற்றானே, கரணமூன்றும் - முக்கரணங்களும், பேரின்பத்தால்-பேரின்பத்தோடு, இலக்கில்சிதறுமைமருவப்பெறும் - இலக்கிற்பிழையாமற் பொருந்தப்பெறும்.

(பொ - ரை.) ஊழ்வலியினால் பெருஞ்செல்வங்கிடைத்தாலும் விவேகிகள் காலமுண்டாக வாழவேண்டுமென்னுங் கருத்துடையவர்களாய்த் துணிந்து முற்றத்துறப்பார்கள் (அவர்களுக்கு) தங்கியதுன்பம் போயொழிதலன்றித்தகுதியாகிய இம்மையிற்றானே முக்கரணங்களும் பேரின்பத்தோடுஇலக்கிற்பிழையாமற்பொருந்தப்பெறும். எ - று.

(வி - ரை.) காலமுண்டாக என்றது சுகானுபவத்துக்குக்காலமதிகமாயிருக்கவென்றபடி, "வேண்டினுண்டாகத் துறக்கதுறந்தபினீண்டியற்பாலபல" என்பது திருக்குறள், இலக்கு-குறி, (லக்ஷ்யம்.)ஆழும்-ஆழ்ந்த எனினுமாம்.

உடன்முற் பொறிக டமக்குரிய வூறு முதலைம் புலங்களையு
மடனற் றொழிலப் புலனிமித்த மாகப் படைத்த வனைத்தினையும்
விடன்மிக் கதுவா லெவற்றினுக்கும் விருப்பிற் சிலவுள்ளன வேனும்
படரு மனமற் றவ்வழியே பயக்கு மளவில் பவத்தொடர்ச்சி.

(ப - ரை.) உடல்முன்பொறிகள் தமக்குஉரிய - உடம்புமுதலிய பொறிகளுக்குரிய, ஊறுமுதல் ஐம்புலங்களையும் - ஊறுமுதலிய ஐம்புலன்களையும், அடல் - வெல்லுதல்,நல்தொழில் - நல்லதொழிலாகும், அ புலன்நிமித்தமாக - அப்புலன்கள் நிமித்தமாக, படைத்த-படைக்கப்பட்ட, அனைத்தினையும் - எல்லாவற்றையும், விடல் - விடுதல், மிக்கது - மேலானது, எவற்றினுக்கும் - எல்லாவற்றிற்கும், விருப்பில் - விரும்புகிற விடயங்களுள், சில உள்ளனஎனும் - சிலவுள்ளனவாயினும், மனம்படரும் - மனம்பற்றிமுகமாகச்செல்லும், அவ்வழியே - அதுவாயிலாகவே, அளவுஇல் - எல்லையற்ற, பவத்தொடர்ச்சிபயக்கும் - பிறவித்தொடர்ச்சி யுண்டாகும். எ - று.

(பொ - ரை.) உடம்பு முதலியபொறிகளுக்குரிய ஊறுமுதலிய ஐம்புலன்களையும் வெல்லுதல் நல்லதொழிலாகும், அப்புலன்கள் நிமித்தமாகப் படைக்கப்பட்ட எல்லாவற்றையும் விடுதல் மேலானது, எல்லாவற்றிற்கும்

விரும்புகிறவிடயங்களுள் சிலவுள்ளனவாயினும் மனம்பஹிர் முகமாகச்செல்லும், அதுவாயிலாகவே எல்லையற்றபிறவித்தொடர்ச்சியுண்டாகும். எ-று.

(வி - ரை.) ஊறு - பரிசம், உடன்மூற் பொறிகளாவன மெய்வாய் கண் மூக்கு செவி யென்பன, ஊறுமுதலைம்புலங்களாவன பரிசம்ரசம் ரூபம் கந்தம் சத்தம் என்பன, படர்தல் - செல்லுதல். பஹிர்முகம் - வெளிமுகம். தொடர்ச்சி-தொடர்பு (சம்பந்தம்) வாயில் ஏது. (கoஅ)

பருவந் திடச்செய் பவத்தொடர்ச்சி பாற்றத் துணிந்த பண்பினர்க்கு
மருவிந் திரிய வுணர்வினொடும் வழங்கும் பிராணவா யுவொடு
மொருவில் காம வினைவினைவி னோடுங் கூடு மனவுடம்பு
முருவ வுடம்பு மிகையாலுற் றொடர்ப்பா டின்னு முளவேகொல்.

(ப - ரை.) பருவந்திடச்செய் - துன்புறச்செய்கிற, பவத்தொடர்ச்சி - பிறவித்தொடர்பை, பாற்றத்துணிந்த - போக்கிக்கொள்ளத்துணிந்த, பண்பினர்க்கு - நற்குணமுள்ளவர்க்கு, மருவு - பொருந்திய, இந்திரியஉணர்வினொடும் - இந்திரியவுணர்ச்சியோடும், வழங்கும் - சஞ்சரிக்கிற, பிராணவாயுவொடும் - பிராணவாயுவினோடும், ஒருவுஇல் - நீங்குதலில்லாத, காமவினைவினைவினோடும் - காமவினைவிளைவுகளோடும், கூடும் - சேர்கின்ற, மனவுடம்பும் - சூக்குமசரீரமும், உருவவுடம்பும் - தூலசரீரமும், மிகைஆனல் - மிகையாயின், தொடர்ப்பாடு - தொடர்புகள், இன்னும் உளவேகொல் - மற்றுமுளவோ. எ-று.

(பொ - ரை.) துன்புறச்செய்கிற பிறவித்தொடர்பைப் போக்கிக்கொள்ளத்துணிந்த நற்குணமுள்ளவர்க்கு, பொருந்திய இந்திரியவுணர்ச்சியோடும் சஞ்சரிக்கிற பிராணவாயுவினோடும் நீங்குதலில்லாத காமவினைவிளைவுகளோடும் சேர்கின்ற சூக்குமசரீரமும் தூலசரீரமும் மிகையாயின், தொடர்புகள் மற்றுமுளவோ. எ - று.

(வி - ரை.) பண்பு - குணம், அது பருவந்திடச்செய்பவத்தொடர்ச்சிபாற்றத்துணிந்த பண்பினர்க்கு என்றமையால் நற்குணத்தைக்குறித்தது, நற்குணம் - அறிவு (ஞானம்,) மிகை - துன்பம், தொடர்ப்பாடு - இயைபில்லனவாகிய சிலதொடர்புகள், இந்தச்செய்யுளில் "மற்றுந்தொடர்ப்பாடெவன்கொல் பிறப்பறுக்க-லுற்றார்க்குடம்புமிகை" என்ற திருக்குறளின் பொருளமைந்திருத்தல் காண்க. (கoக)

தானல் லுடலை யானென்றுந் தன்னோ டுரிமை யல்லாமை
யின முறுபல் பொருளனைத்து மென்ன தென்று முறநினைத்து
மான வயர்பற் றினுக்கேது மயக்க மதனை மாய்ப்பவனே
வான வருஞ்செல் லருமுலகம் புகுவா னென்று மறைநூல்கள்.

(ப - ரை.) தான்அல்உடலை - தானல்லாதவுடம்பை, யான்என்றும்-நான் என்றும், தன்னோடு உரிமையல்லாமை - தன்னோடுரிமையல்லாதனவாய், ஈனம்உறு - தாழ்வுபொருந்திய, பலபொருள்அனைத்தும் - எல்லாப்பொருள்களும், என்னதுஎன்றும் - எனதென்றும், உறநினைத்து - மிகுதியாயெண்ணி,

மானஅயர்பற்றினுக்கு - பெரிதும் அயர்தற்குரியபற்றுக்களுக்கு, ஏது - நிமித்தமாவது, மயக்கம் - மயக்கமே, அதனைமடிப்பவனே - அதனைக்கெடுப்பவனே, வானவரும் - தேவர்களும், செல்அருப்உலகம் - செல்லுதற்கரியமுத்தியுலகத்தில், புகுவான்-செல்லுவான், என்னும் - என்றுசொல்லாநிற்கும், மறைநூல்கள் - வேதநூல்கள். எ - று.

(பொ - ரை.) தானல்லாதவுடம்பை நான்என்றும், தன்னோடுரிமையல்லாதனவாய் தாழ்வுபொருந்திய எல்லாப்பொருள்களும் எனதென்றும் மிகுதியாயெண்ணிப்பெரிதும் அயர்தற்குரிய பற்றுக்களுக்கு நிமித்தமாவது மயக்கமே, அதனைக்கெடுப்பவனே தேவர்களும் செல்லுதற்கரியமுத்தியுலகத்திற்செல்லுவானென்று சொல்லாநிற்கும் வேதநூல்கள். எ - று.

(வி - ரை.) பற்று - அகப்பற்று புறப்பற்று, இவற்றுள் தானல்லாதவுடம்பையானென்பதுஅகப்பற்று, தன்னோடியைபில்லாதபொருளை எனதென்பது புறப்பற்று, மயக்கம்-அறியாமை, அதனைக்கெடுத்தலாவது தேசிகர்பாற்பெற்ற உறுதிமொழிகளானும் யோகப்பயிற்சியானும் அவையானெனது தன்மைதெளிந்து அவற்றின்கட்பற்றைறவிடுதல், மறைநூல்கள்-வேதமாகியநூல்கள், வேதமும் அதையடியொற்றினநூல்களும் எனப்பொருள்கொள்ளினுமாம். இந்தச்செய்யுளில் "யானெனதென்னுஞ்செருக்கறுப்பான்வானோர்க்-குயர்ந்த வுலகம்புகும்" என்ற திருக்குறளின் பொருளமைந்திருத்தல் காண்க. (கக0)

பற்ற லாகா விருவேறு பற்றை யிறுகப் பற்றினரைப்
பற்ற லாகா தெனவனுர்கள் பரிந்து கண்ணோட் டஞ்செயுமே
பற்ற லெல்லா மறத்துறந்த பண்பி னோரோ தலைப்பட்டார்
பற்ற லுடையா ரெஞ்ஞான்றுங் காண்பார் நிலையில் பல்லவையும்.

(ப - ரை.) பற்றலாகா - பற்றக்கூடாத, இருவேறுபற்றை - இருவேறு பற்றுக்களையும், இறுகப்பற்றினரை-இறுகப்பற்றினவரை, அனுர்கள் - துன்பங்கள், பற்றலாகாதுஎன-பற்றலாகாதென்று, பரிந்து-அன்புசெய்து, கண்ணோட்டம்செயுமே - தாக்ஷிண்யம்செய்யுமோ, பற்றல்எல்லாம்-பற்றுக்களெல்லாவற்றையும், அறத்துறந்தபண்பினோரோ - அறத்துறந்தஞானியரோ, தலைப்பட்டார் - (வீட்டினை) தலைப்பட்டார், பற்றல்உடையார்-பற்றுதற்றொழிலையுடையார், எஞ்ஞான்றும் - எக்காலத்தும், நிலைஇல் - நிலையில்லாத, பல்லவையும் - பலபொருள்களையும், காண்பார் - காண்பார்கள். எ - று.

(பொ - ரை.) பற்றக்கூடாத இருவேறு பற்றுக்களையும் இறுகப்பற்றினவரை, துன்பங்கள் பற்றலாகாதென்று அன்புசெய்து தாக்ஷிண்யம்செய்யுமோ, பற்றுக்களெல்லாவற்றையும் அறத்துறந்த ஞானியரோ (வீட்டினை) தலைப்பட்டார், பற்றுதற்றொழிலையுடையார் எக்காலத்தும் நிலையில்லாத பலபொருள்களையும் காண்பார்கள். எ - று.

(வி - ரை.) செயுமேஎன்னும் ஏகாரவினா எதிர்மறைப்பொருள் தந்தது, இந்தச்செய்யுளில், "பற்றிவிடா அவிடும்பைகள் பற்றினைப் - பற்றிவிடாஅதவர்க்கு" "தலைப்பட்டார் தீரத்துறந்தார்மயங்கி - வலைப்பட்டார் மற்றையவர்"

என்னும் திருக்குறள்களின் பொருளமைந்திருந்தல்காண்க, தலைப்படுதல் - கூடுதல்.

(௧௧௧)

பொருவி றேவுமி ருபயனும் பொய்யா தணுகு மறுபிறப்பு
மருவு முயலின் கோடாமை மயிர்க்கம் பலம்விண் மலரெனுநூ
லொருவு மதியற் றுறப்பற்ற லுறுமஞ் ஞானம் விபரீத
மிருவும் பிறப்பி லென்ஞான்று மதனு லொழிதல் லின்பமே.

(ப - ரை.) பொருவுஇல்தேவும்-ஒப்பில்லாததெய்வமும், இருபயனும் - இருபயன்களும், பொய்யாது அணுகும்-பிழையாமல்வந்துசேர்கிற, மறுபிறப்பும் - மறுபிறவியும், மருவும்-பொருந்திய, முயலின்கோடு - முயற்கொம்பும், ஆமைமயிர்கம்பலம் - ஆமைமயிரினாற்செய்யப்பட்டகம்பலமும், விண்மலர்-ஆகாயதாமரைமலரும் போலப்பொய்யாம், என்னும்நூல் - என்றுசொல்லுகிறநூல்களை, ஒருவும் - நீக்குகிற, மதிஅற்று - அறிவற்று, உறபற்றல் - மிகுதியாகப் பற்றுதல், உறும்அஞ்ஞானம்விபரீதம் - பொருந்தியஅஞ்ஞானம்விபரீதம் என்றுசொல்லப்படும், (இவை) எஞ்ஞான்றும் - எக்காலத்தும், பிறப்பில் - பிறவியில், இருவும் - இருத்தும், அதனால் - ஆதலால், ஒழிதல் - (அஞ்ஞானவிபரீதங்களை) ஒழிதல், இன்பம் - இன்பமாம். எ - று.

(பொ - ரை.) ஒப்பில்லாத தெய்வமும் இருபயன்களும் பிழையாமல்வந்துசேர்கிற மறுபிறவியும், பொருந்தியமுயற்கொம்பும் ஆமைமயிரினாற்செய்யப்பட்டகம்பலமும் ஆகாயதாமரைமலரும் போலப்பொய்யாம், என்றுசொல்லுகிற நூல்களை நீக்குகிற அறிவற்று மிகுதியாகப்பற்றுதல் பொருந்திய அஞ்ஞானம் விபரீதம் என்றுசொல்லப்படும், (இவை) எக்காலத்தும் பிறவியில் இருத்தும் ஆதலால் (அஞ்ஞான விபரீதங்களை) ஒழிதல் இன்பமாம். எ - று.

(வி - ரை.) இருபயன் - இருவினைப்பயன், கடவுளும்இருவினைப்பயனும் மறுபிறப்பும் இல்லையென்னும் நூல்களை மயக்கநூல்கள் என்பர் பெரியோர், முயற்கோடு ஆமைமயிர்க்கம்பலம் விண்மலர் என்பன முக்காலத்துமில்லாத பொருள்கள்.

(௧௧௨)

பகருந் தெய்வ மம்மைவினைப் பயனுண் டோவின் றேவென்னும்
புகர்கொண் டிடுசங் கையினீங்கிப் பொலியு ஞான வனுபவத்தா
னிகரி லுண்மை யறிந்திடுத னீளுந் தொறுமவ் வனுபவமற்
றிகவில் பழைய வுலகவா சார ஞான மிரிந்திடுமே.

(ப - ரை.) பகரும்தெய்வம் - சொல்லப்படுகிறகடவுளும், அம்மை-மறுபிறப்பும், வினைப்பயன் - இருவினைப்பயன்களும், உண்டோஇன்றோஎன்னும்-உண்டோஇல்லையோவென்கிற, புகர்கொண்டிடுசங்கையின்நீங்கி-குற்றத்தைக்கொண்டஆசங்கையினின்றுநீங்கி, பொலியும் - விளங்குகிற, ஞானஅனுபவத்தால் - ஞானனுபவத்தால், நிகர்இல் - சமானமில்லாத, உண்மை - உண்மையை, அறிந்திடுதல் - அறிதற்றொழில், நீளுந்தொறும் - மிகுந்தோறும், அ அனுபவம்அற்று - அவ்வநுபவமொழிந்து, இகவுஇல்-நீங்குதலில்லாத, பழைய-பழமையாகிய,உலகஆசாரஞானம்இரிந்திடும்-லோகாசாரஞானம்நீங்கிப்போம்.

(பொ - ரை.) சொல்லப்படுகிறகடவுளும் மறுபிறப்பும் இருவினைப்பயன்களும் உண்டோ இல்லையோவென்கிற குற்றத்தைக்கொண்ட ஆசங்கையினின்றுநீங்கி விளங்குகிற ஞானானுபவத்தால் சமானமில்லாத உண்மையை அறிதற்றொழில் மிகுந்தோறும் அவ்வநுபவமொழிந்து நீங்குதலில்லாத பழமையாகிய லோகாசாரஞானம் நீங்கிப்போம். எ - று.

(வி - ரை.) தெய்வம் அம்மை வினைப்பயன் என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன. என்னும் சங்கையெனவிரியும், உண்மை-உண்மைநிலை, இகவு - தொழிற்பெயர், சங்கை, ஆசங்கை என்பனஐயம் என்னும் ஒருபொருட்சொற்கள். (கசரு)

முதல்வெம் பவத்துக் கெனுமடமை முற்று மொழியச் செம்பொருளை
சுதமென் பதற நினைத்தலே தூய சமாதி யென்பாரவ் [ச்
விதநின் றிடிற்பன் னாளுடலை விடுங்கால் வேறெண் கலவாது
மதமொன் றறவே றெண்கலப்பின் வருமே யதற்குத் தகுபிறப்பு.

(ப - ரை.) வெம்பவத்துக்கு - கொடியபிறப்புக்கு, முதல்என்னும் - முதலென்றுசொல்லப்படுகிற, மடமை - அவிச்சையானது, முற்றும்ஒழிய - முழுதும்நீங்க, செம்பொருளை - செவ்வியபொருளை, சுதம்என்பது அறநினைத்தலே - இடையறாதுநினைத்தலே, தூயசமாதிஎன்பார் - பரிசுத்தமான சமாதியென்பார்கள், பல்நாள்-நெடுநாள், அவ்விதம் நின்றிடின் - அவ்வாறுநின்றால், உடலைவிடுங்கால் - சரீரத்தைவிடுங்காலத்தில், வேறு எண் கலவாது - வேறு எண்ணமுண்டாகாது, மதம்ஒன்ற - மதம்பொருந்த, வேறுஎண்கலப்பின்- வேறு எண்ணங்கலந்தால், அதற்கு - அவ்வெண்ணத்துக்கு, தகுபிறப்பு-தகுந்தபிறவி, வரும் - உண்டாகும். எ - று.

(பொ - ரை.) கொடியபிறப்புக்கு முதலென்று சொல்லப்படுகிற அவிச்சையானதுமுழுதும் நீங்கச்செவ்வியபொருளை இடையறாதுநினைத்தலே பரிசுத்தமான சமாதியென்பார்கள். நெடுநாள் அவ்வாறுநின்றால், சரீரத்தைவிடுங்காலத்தில் வேறு எண்ணமுண்டாகாது. மதம்பொருந்த வேறு எண்ணங்கலந்தால் அவ்வெண்ணத்துக்குத்தகுந்த பிறவியுண்டாகும். எ - று.

வி - ரை.) முதல் - காரணம், செம்பொருள், பிரமப்பொருள், தோற்றக்கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையாற்றன்னையொன்றுங் கலத்தலின்மையிற்றூய்தாய், தானெல்லாவற்றையுங்கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மைத்தாதல்பற்றிச் செம்பொருள் எனப்பட்டது. சுதம் - அழிவு. (கசசு)

அன்றே யுள்ள வவித்தையென லஞ்ஞா னம்பல் விதமதித்தியா
னென்றே யெழுத லகங்கார மிதுவேண் டுவதென் றெழுதலவா
சென்றே யதுபற் றுதலாசை மறுப்பிற் சேறல் சினமைந்து
நின்றே கிடநோ யொழியுமென நிகழ்த்தா நிற்கு நிரம்பியநூல்.

(ப - ரை.) அன்றேஉள்ள அவித்தைஎனல்-அநாதியாகவேயுள்ள அவித்தையென்று சொல்லப்படுதல், அஞ்ஞானம் - அஞ்ஞானமாகும், பல்விதம்

மதித்து - பலவகையாய் மதித்து, யானென்று எழுதல்-நானென்றெழுதல், அகங்காரம் - அகங்காரமாகும், இது வேண்டுவது என்று எழுதல் அவா - இந்தப்பொருள் வேண்டுவதென்றெழுவது அவாவாகும், அது சென்றுபற்றுதல் ஆசை-அதனைப்போய்ப்பற்றுதல் ஆசையாகும், மறுப்பின் சேறல்சினம் - (அது) மறுக்கப்பட்டால் அதனிடத்திற்செல்லுதல் சினமாகும், ஐந்தும்- இவ்வைந்தும், நின்றுஎகிட - நின்றொழிய, நோய்ஒழியுமென-(பிறவி) நோய் ஒழியுமென்று, நிரம்பியநூல்-வேதமானது, நிகழ்த்தாநிற்கும்-சொல்லாநிற்கும்.

(பொ - ரை.) அநாதியாகவேயுள்ள அவித்தையென்று சொல்லப்படுதல் அஞ்ஞானமாகும், பலவகையாய்மதித்து நானென்றெழுதல் அகங்காரமாகும், இந்தப்பொருள்வேண்டுவதென்றெழுவது அவாவாகும், அதனைப் போய்ப்பற்றுதல் ஆசையாகும் (அது) மறுக்கப்பட்டால் அதனிடத்திற் செல்லுதல் சினமாகும், இவ்வைந்தும் நின்றொழியப்(பிறவி) நோயொழியுமென்று வேதமானது சொல்லாநிற்கும். எ - று.

(வி - ரை.) அவித்தைமுதலிய ஐந்துமொழியவே பிறவிநோயொழியுமென்பதிதன் கருத்து, இவ்வைந்தனொழிவுக்குக்காரணம் ஞானயோகங்கள், இச்செய்யுட்கருத்தினை, "காமம் வெகுளிமயக்கமிவைமூன்ற - னாமங்கெடக்கெடுநோய்" என்னுந்திருக்குறளுரையில் விரிவாய்க்காணலாம். (கசரு)

எல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்று மெழுமைப் பவமு மீன்றிடும்வித்
தொல்லா வவாவே யப்பவத்தி னுறுதுன் பறிந்தோ னுதியாமை
யல்லான் மற்றும் வேண்டுமோ வேண்டா னவ்வு தியாமை [ரும்
சொல்லார்ந் திலங்கும் வேண்டாமை தன்னை வேண்டத் துனைவின் வ

(ப - ரை.) எல்லா உயிர்க்கும் - எல்லாச்சீவர்களுக்கும், எஞ்ஞான்றும் - எக்காலத்தும், எழுமைபவமும் - எழுபிறப்பினையும், ஈன்றிடும்வித்து - உண்டாக்குகிறவித்தானது, ஒல்லாஅவாவே - கூடாத அவாவேயாகும், அப்பவத்தின் - அந்தப்பிறப்பின், உறுதுன்பு - மிக்கதுன்பத்தை, அறிந்தோன் - அறிந்தவன், உதியாமை அல்லால் - பிறவாமையையன்றி, மற்றும்வேண்டுமோ - வேறொன்றையும் விரும்புவனோ, வேண்டான் - விரும்பான், அவ்வுதியாமை - அந்தப்பிறவாமை, சொல்ஆர்ந்து இலங்கும் - புகழோடு கூடி விளங்குகிற, வேண்டாமை தன்னைவேண்ட - விரும்பாமையைவிரும்பவே, துனைவின்வரும் - விரைவிலுண்டாகும். எ - று.

(பொ - ரை.) எல்லாச்சீவர்களுக்கும் எக்காலத்தும் எழுபிறப்பினையும் உண்டாக்குகிற வித்தானது கூடாத அவாவேயாகும், அந்தப்பிறப்பின் மிக்க துன்பத்தை அறிந்தவன் பிறவாமையையன்றி வேறொன்றையும் விரும்புவனோ, விரும்பான், அந்தப்பிறவாமை புகழோடுகூடி விளங்குகிற விரும்பாமையை விரும்பவேவிரைவிலுண்டாகும். எ - று.

(வி - ரை.) எழுமைப்பவமும் என்பதில் எழுமை எண்ணின்மேல் நின்றது, ஒல்லாஎன்றது தகாத என்றபடி, வேண்டாமை - நிராசை. "அவாவெ

ன்பவெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றும், தவாப்பிறப்பீனும்வித்து'' என்னுந் திருக்குறளுரையில் இச்செய்யுட்கருத்தை விரிவாய்க்காணலாம். (கககரு)

அன்றோ வன்றோ வேண்டாமை யன்ன மேன்மைப் பெருஞ்செல்வ
மென்றோ காணப் படுமீண்டு மின்று கேட்கப் படுஞ்சிறப்பின்
மின்னு ராண்டு மஃதொப்ப தின்று லெனினவ் விழுச்செல்வந்
தன்னு தரவிற் பெறுவாற்குச் சாற்று முவமை யுளதேகொல்.

(ப - ரை.) அன்றோஅன்றோ-அந்தோஅந்தோ, வேண்டாமை அன்ன-விரும்பாமையைநிகர்த்த, மேன்மைபெருசெல்வம்-மேன்மையாகிய பெருஞ்செல்வமானது, காணப்படும் ஈண்டும்-காணப்படுகிற இவ்வுலகத்தும், என் - யாதுளது, இன்று-இல்லை, கேட்கப்படும்-கேட்கப்படுகிற, சிறப்பின்-சிறப்பினையுடைய,மின்ஆர்ஆண்டும்-ஒளியுள்ள அவ்வுலகத்தும்,என்-யாதுளது,அஃது ஒப்பது இன்றுஎனின் - அதனை நிகர்ப்பது இல்லையென்றால், அ - அந்த, விழுச்செல்வம் - பெருஞ்செல்வத்தை, ஆதரவின்பெறுவாற்கு - அன்போடு பெறுவோனுக்கு, சாற்றும் உவமை - சொல்லுதற்குரியவுவமையானது, உள்ளதே - உளதோ. எ - று.

(பொ - ரை.) அந்தோ அந்தோ, விரும்பாமையை நிகர்த்த மேன்மையாகிய பெருஞ்செல்வமானது காணப்படுகிற இவ்வுலகத்தும் யாதுளது, இல்லை, கேட்கப்படுகிற சிறப்பினையுடைய ஒளியுள்ள அவ்வுலகத்தும் யாதுளது, அதனை நிர்ப்பது இல்லையென்றால், அந்தப்பெருஞ்செல்வத்தை அன்போடு பெறுவோனுக்குச் சொல்லுதற்குரிய வுவமையானது உளதோ.

(வி - ரை.) ஆல் - கொல் அசைகள், அன்றோ அன்றோ என்ற அடுக்கு பெருவியப்புக்குறிப்பு, உளதே என்னுமேகாரம் இல்லையெனப்பொருள் படலால் வினாவோடெதிர்மறைப்பொருளில் வந்தது, "வேண்டாமையன்ன விழுச்செல்வமீண்டில்லை - யாண்டுமஃதொப்பதில்'' என்னுந்திருக்குறளின் கருத்து இச்செய்யுளிலடங்கியிருத்தல் காண்க. (ககஎ)

அற்று னென்று சொலப்படுவா ராசை யற்று னொருவனே
மற்று தரவி னஃதொன்றும் வைத்துப் பிறவே துக்களெலாஞ்
செற்று னெனினு மவையார்க்குஞ் செயிர்த்துன் பகன்று னேயன்றி
யுற்றார் வணங்கு மவன்போல வொழிந்தான் கொல்லோ வுறுபிறவி.

(ப - ரை.) அற்றான் என்று சொலப்படுவான் - அற்றானென்று சொல்லப்படுவோன், ஆசை அற்றான் ஒருவனே-ஆசையற்றவனொருவனே, அஃது ஒன்றும் ஆதரவின்வைத்து - அதுவொன்றனையும் அன்போடுவைத்து, பிற ஏதுக்கள் எல்லாம் - பிறகாரணங்கள்யாவும், செற்றான் எனினும் - கடந்தானாயினும், அவை ஆக்கும் - அவையுண்டாக்குகின்ற, செயிர்துன்பு அகன்றானே அன்றி - குற்றத்தையுடைய துன்பத்தை நீங்கினானேயன்றி, உற்றார் வணங்குமவன்போல, (தத்துவஞானத்தை) அடைந்தவர்களால் வணங்கப்படுவோன்போல, உறுபிறவி ஒழிந்தான்கொல் - மிக்கபிறவிகளையொழிந்தானோ

(பொ - ரை.) அற்றானென்று சொல்லப்படுவோனை ஆசையற்றவனொருவனே, அதுவொன்றனையும் அன்போடுவைத்து, பிறகாரணங்கள் யாவும் கடந்தானாயினும் அவையுண்டாக்குகின்ற குற்றத்தையுடைய துன்பத்தை நீங்கினானேயன்றி (தத்துவஞானத்தை) அடைந்தவர்களால் வணங்கப்படுவோன் போல மிக்கபிறவிகளை யொழிந்தானோ. எ - று.

(வி - ரை.) "அற்றவரென்பாரவாவற்றார் மற்றையார், அற்றாகவற்றதிலர்" என்னுந்திருக்குறளின்பொருள் இச்செய்யுளிலடங்கியிருத்தல் காண்க. ஒருவனேயென்னு மேகாரம்பிரிநிலை, தேற்றமெனினுமாம், சென்றான் என்றது விடுத்தானென்னும் பொருளது, அவாவற்றானொருவனே பிறவித்துன்பத்தை யொழிப்பான் ஏனையவற்றையொழித்தவன்அதனையொழிக்கமாட்டான் என்பது கருத்து. (சகஅ)

மெய்யை யுணர்தன் முடிவாக வேண்டுங் கருவி யெலாம்பெற்றுச்
செய்ய முத்தி யடைவதற்குச் சிறந்து ளோனை மறவிவழிப்
பைய நுழைந்து பவமீட்டும் பாய்த்திக் கெடுக்க வல்லதவா
வைய வதனுக் குளநடுங்கி யஞ்சிக் காத்த லறிஞர்தொழில்.

(ப - ரை.) மெய்யை உணர்தல் முடிவாக - மெய்யுணர்தலீறாக, வேண்டுங்கருவி எல்லாம்பெற்று - வேண்டியசாதநங்களெல்லாவற்றையும் பெற்று, செய்யமுத்தி அடைவதற்கு - செவ்விய முத்தியைப்பெறுவதற்கு, சிறந்துளோனை - உயர்ந்திருப்பவனையும், மறவிவழி - மறப்புவாயிலாக, பையநுழைந்து - மெல்லநுழைந்து, மீட்டும் - மறுபடியும், பவம் பாய்த்தி - பிறவியிற் செலுத்தி, கெடுக்கவல்லது - அழிக்கவல்லது, அவா - அவாவேயாம், (ஆதலால்) ஐய அதனுக்கு - தலைமைப்பாடுடைய அந்த அவாவுக்கு, உள்ளம் நடுங்கி - மனம்நடுங்கி, அஞ்சி - பயந்து, காத்தல் - காத்துக்கொள்ளுதல், அறிஞர்தொழில் - அறிவுடையாரது தொழிலாகும். எ - று.

(பொ - ரை) மெய்யுணர்தலீறாக வேண்டியசாதநங்களெல்லாவற்றையும்பெற்று செவ்வியமுத்தியைப் பெறுவதற்கு உயர்ந்திருப்பவனையும், மறப்புவாயிலாக மெல்லநுழைந்து மறுபடியும் பிறவியிற்செலுத்தி அழிக்கவல்லது அவாவேயாம் (ஆதலால்) தலைமைப்பாடுடைய அந்த அவாவுக்கு மனம் நடுங்கிபயந்துகாத்துக்கொள்ளுதல் அறிவுடையாரது தொழிலாகும்.

(வி - ரை.) சிறந்துளோனை என்பதனீற்றில் உயர்வு சிறப்பும்மை தொக்கது, ஐ - தலைமை, காத்தல் - மனத்தை அவாவின்வழியே செல்லாது தடுத்தல், "அஞ்சுவதோருமறனே யொருவனை, வஞ்சிப்பதோருமவா" என்னுந்திருக்குறளின் கருத்துஇச்செய்யுளிலமைந்திருத்தல் காண்க. (சசக)

ஆத லாலிம் மனைவாழ்க்கை யகத்தே யிருந்து முத்திதனைப்
போத வடையத் துணிவதுதான் புணையா மஞ்சு துயில்பொருப்பைக்
காதன் மிகுதி யாற்பெயர்த்துக் கத்துந் தரங்கக் கடலிடையிட்
டேத மகல வதுபற்றி யொருவன் கரையே றுதல்போலும்.

(ப - ரை.) ஆதலால் - ஆகையால், இ - இந்த, மனைவாழ்க்கை அகத்தே இருந்து - இல்வாழ்க்கையின் கண்ணேயிருந்து, முத்திதனை - முத்தியை,

போதஅடைய துணிவது - மிகுதியாய் அடையத்துணிதல், மஞ்சுதுயில் பொருப்பை - மேகங்கள் தூங்குகிறமலையை, காதல்மிகுதியால் பெயர்த்து - ஆசைமிகுதியாலசைத்தெடுத்து, புணையா - புணையாகக்கொண்டு, கத்தும் - ஒலிக்கின்ற, தரங்கம் - அலைகளையுடைய, கடலிடையிட்டு - கடலிலேயிட்டு, ஏதம்அகல - துன்பம்நீங்க, அதுபற்றி-அந்தமலைப்புணையைப்பற்றிக்கொண்டு, ஒருவன் - ஒருத்தன், கரை ஏறுதல்போலும் - கரையேறுவதை நிகர்க்கும்.

(பொ - ரை.) ஆகையால் இந்த இல்வாழ்க்கையின் கண்ணேயிருந்து முத்தியைமிகுதியா யடையத்துணிதல், மேகங்கள் தூங்குகிறமலையை ஆசை மிகுதியாலசைத்தெடுத்துப் புணையாகக்கொண்டு ஒலிக்கின்ற அலைகளையு டைய கடலிலேயிட்டு துன்பம்நீங்க அந்தமலைப்புணையைப்பற்றிக்கொண்டு ஒருத்தன்கரையேறுவதை நிகர்க்கும். எ - று.

(வி - ரை.) பற்றி - துணையாகப்பற்றி, மஞ்சுதுயில் பொருப்பு என்ற தனல் மலையினுயர்வு தோன்றுகின்றது, கரையேறுதல் - கடற்கரையைக் காண்டல். (கஉ0)

மனையிற் பெருஞ்செல் வத்துறைவோன் மருவு தியான முறச்சிறிது
நினையிற் காண வருவாரை நேர்சென் றழைத்துத் தழுவிடவும்
வினையத் திலும்வி ளைத்திலும் விரும்பிப் பேசி டவுமவர்க
ணினையப் பட்ட தளித்திடவும் பொழுது கழியு நினைப்பழியும்.

(ப - ரை.) மனையில்-இல்வாழ்க்கையில்,பெருசெல்வத்துஉறைவோன். பெருஞ்செல்வத்தோடு கூடியிருப்பவன், மருவுதியாநம் உற-பொருந்தியகட வுளைத்தியாநிக்க,சிறிதுநினையின்-சற்றுநினைத்தால்,காணவருவாரை-(தன்னை) காணவருவோரை, நேர்சென்று அழைத்துதழுவிடவும்-நேரேபோயழைத்துத் தழுவிக்கொள்ளவும், வினயத்திலும்-விநயமாகவும், விளைத்திலும் - விளை யாட்டாகவும், விரும்பிபேசிடவும்-விரும்பிப்பேசவும், அவர்கள் நினையப்பட் டது அளித்திடவும்-அவர்களால் விரும்பப்பட்டதைக்கொடுக்கவும், பொழுது கழியும் - காலங்கழிந்துபோம், நினைப்புஅழியும் - தியாநமும் அழியும்.எ - று

(பொ - ரை.) இல்வாழ்க்கையில் பெருஞ்செல்வத்தோடு கூடியிருப்ப வன் பொருந்தியகடவுளைத் தியாநிக்கச்சற்று நினைத்தால், (தன்னை) காண வருவோரை நேரேபோயழைத்துத் தழுவிக்கொள்ளவும், விநயமாகவும் விளை யாட்டாகவும் விரும்பிப்பேசவும், அவர்களால் விரும்பப்பட்டதைக்கொடுக்க வும் காலங்கழிந்துபோம், தியாநமும் அழியும். எ - று.

(வி - ரை.) இல்வாழ்க்கையிற் பெருஞ்செல்வத்தோடு கூடிவாழ்பவன் கடவுளைத்தியாநித்து உஜ்ஜீவிப்பது அருமையாமென்பது கருத்து. (கஉக)

ஒன்றும் பெறுத லில்லெனினு முற்ற பெருஞ்செல் வத்தினர்பாற்
சென்று கொளுநட் புடையரெனத் தேயஞ் சொலற்கே சிலர்சூழ்வார்
மன்ற வென்று யினுமொர்பயன் வழங்க லாரு மெனஅமட
றுன்று நறுநெய்க் குடத்தெறும்பு சூழ்தல் போலுஞ் சிலர்சூழ்வார்.

(ப - ரை.) ஒன்றும்-ஒருபொருளையாயினும், பெறுதல்இலர்எனினும்-பெற்றவிலராயினும்,உற்ற பெருசெல்வத்திரைர்பால் - பெருஞ்செல்வத்தைய டைந்திருப்பவரிடத்தில், சென்றுகொள்ளும்-போய்ச்செய்துகொண்ட, நட்பு உடையர் என-நட்புடையவரென்று, தேயச்சொலற்கே -ஊரார்சொல்வதற் கே, சிலர்சூழ்வார் - சிலர் சூழ்ந்து திரிவார்கள், மன்ற - நிச்சயமாக, என்றுமயி னும்-எக்காலத்தாயினும், ஓர் பயன்வழங்கல் ஆகும்என- ஒருபயனைத்தருதல் கூடுமென்று,மூடல்துன்றும்-மூடப்பட்டிருக்கிற, நறுநெய்க்குடத்தை-நறுவிய நெய்க்குடத்தின்புறத்தே, எறும்புசூழ்தல்போலும் - எறும்பு சுற்றிக்கொண் டிருத்தல்போலவும், சிலர் சூழ்வார் - சிலர் சுற்றிக்கொண்டு திரிவார்கள்.

(பொ - ரை.) ஒருபொருளையாயினும் பெறுதலிலராயினும் பெருஞ் செல்வத்தை யடைந்திருப்பவரிடத்தில் போய்ச்செய்துகொண்ட நட்புடைய வரென்று ஊரார்சொல்வதற்கே சிலர் சூழ்ந்து திரிவார்கள், நிச்சயமாக எக்கா லத்தாயினும் ஒருபயனைத்தருதல் கூடுமென்று மூடப்பட்டிருக்கிற நறுவிய நெய்க்குடத்தின் புறத்தே எறும்பு சுற்றிக்கொண்டிருத்தல் போலவும் சிலர் சுற்றிக்கொண்டு திரிவார்கள். எ - று.

(வி - ரை.) "ஆகாதெனினு மகத்துநெய்யுண்டாகிற் - போகாதெறு ம்புபுறஞ்சுற்றும், ஓகோ, கொடாஅரெனினுமுடையாரைப்பற்றி, விடா அரு லகத்தவர்" என்னும் நாலடியார்கருத்து இச்செய்யுளிலமைந்திருத்தல்காண்க, நறுநெய் - நறுமணமுள்ள நெய்.

(கஉஉ)

பொறையின் றேனும் பொறையுடையாய் புகழின் றேனும் புக ழுடையாய், நிறையின் றேனு நிறையுடையாய் நீதியுடையாயின்றேனு நற், றுறையின் றெனுநற் றுறையுடையா யென்றுசூழ்வர்கேட்டவர்க, ளறைகின் றனர்பல் லோருநமக் கமைந்தவெலாமென் றகங்களிப்பர்.

(ப - ரை.) பொறைஇன்றுஎனும் - பொறுமையில்லையாயினும், பொ றைஉடையாய் - பொறுமையுடையவனே, புகழ்இன்றஎனும் - புகழில்லையா யினும், புகழ்உடையாய் - புகழுடையவனே, நிறைஇன்றஎனும் - நிறையில் லையாயினும், நிறையுடையாய் - நிறையுடையவனே, நீதிஇன்றஎனும் - நீதி யில்லையாயினும், நீதிஉடையாய்-நீதியுடையவனே, நல்துறைஇன்றஎனும் - நன்னெறியில்லையாயினும், நல்துறைஉடையாய்என்று - நன்னெறியுடையவ னேயென்று, சூழ்வர் - சுற்றித்திரிவார்கள், கேட்டவர்கள் - கேட்டவர்களா கியசெல்வர்கள், பல்லோரும் - பலரும், நமக்குஅமைந்தஎல்லாம் - நமக்கமைந் திருப்பனவெல்லாவற்றையும், அறைகின்றனர்என்று - சொல்லுகிறார்களெ ன்று, அகம்களிப்பர் - மனமகிழ்வார்கள். எ - று.

(பொ - ரை.) பொறுமையில்லையாயினும் பொறுமையுடையவனே, புக ழில்லையாயினும் புகழுடையவனே, நிறையில்லையாயினும் நிறையுடையவ னே, நீதியில்லையாயினும் நீதியுடையவனே, நன்னெறியில்லையாயினும் நன் னெறியுடையவனேயென்று சுற்றித்திரிவார்கள், கேட்டவர்களாகிய செல்வர்

கள், பலரும் நமக்கமைந்திருப்பனவாகிய எல்லாவற்றையும் சொல்லுகிறார்க ளென்று மனமகிழ்வார்கள். எ - று.

(வி - ரை.) நிறை-கலங்காமை, அறைதல் - எடுத்துச்சொல்லுதல். செல்வர்க்கில்லாத நற்குணங்கள் யாவுமுள்ளனவாகவெடுத்துக்கூறிப்புகழ்வர் உலகத்தாரென்பது கருத்து. (கஉஙு)

களியிற் றெய்வ சிந்தனையுங் கழிந்தே நிற்கு மதுகழிய
வளியிற் சிறந்த நல்லறமு மகன்றே நிற்கு மஃதகல
வொளியிற் றிடவந் திருளடைந்தாங் குடற்றும் பாவம் வந்தடையும்
விளியிற் கொடிய நிரயமெலாம் புகுந்து கிடக்கும் வேலைமிகும்.

(ப - ரை.) களியில் - களித்திருக்குங்காலத்தில், தெய்வசிந்தனையும் - தெய்வத்தியாநமும், கழிந்தேநிற்கும் - ஒழிந்தேநிற்கும், அதுகழிய - அது வொழிய, அளியில்சிறந்தநல்அறமும் - கிருபையிற்சிறந்தநல்லறமும், அகன்றேநிற்கும் - விலகியேயிருக்கும், அஃது அகல-அது விலகிநிற்க, ஒளி இற்றிட- ஒளிநீங்க, இருள் வந்து அடைந்தாங்கு - இருள் வந்து அடைந்தாற்போல, உடற்றும்பாவம்வந்து அடையும் - வருத்துகிறபாவம்வந்தடையும், விளியின் - இறந்தால், கொடியநிரயமெல்லாம் - கொடுமையாகிய நரகங்களெல்லாவற்றிலும், புகுந்துகிடக்கும்வேலைமிகும் - புகுந்துகிடந்துழல்கின்றவேலை அதிகரிக்கும்.

(பொ - ரை.) களித்திருக்குங்காலத்தில் தெய்வத்தியாநமும் ஒழிந்தே நிற்கும், அதுவொழிய, கிருபையிற்சிறந்தநல்லறமும் விலகியேயிருக்கும், அது விலகிநிற்க, ஒளிநீங்க இருள்வந்தடைந்தாற்போல வருத்துகிறபாவம்வந்தடையும், இறந்தால் கொடுமையாகிய நரகங்களெல்லாவற்றிலும் புகுந்துகிடந்துழல்கின்றவேலை அதிகரிக்கும். எ - று.

(வி - ரை.) அளி - அருள்எனினுமாம், உடற்றல் - வருத்தல், விளிதல்- சாதல், வேலை - தொழில். (கஉச)

அந்த நிரயக் கொடுந்துன்ப மாரோ படுவார் நினைத்திடினும்
வெந்து புழுங்கா நின்றதுள மேவு மிவைக்குக் காரணமிப்
பந்த முறுக்குஞ் செல்வமெனப் பயந்தானு யின்னன நினைந்தா
னிந்த வருத்த மிறத்துதிப்பே னெம்பிரானை யெனத் துதிப்பான்.

(ப - ரை.) அந்தநிரயக்கொடுந்துன்பம் - அந்தநரகத்தின் கொடியதுன்பத்தை, படுவார்ஆரோ - அநுபவிப்பாரெவரோ, நினைத்திடினும் - நினைத்தாலும், உள்ளம் - மனமானது, வெந்துபுழுங்காநின்றது - வெந்துபுழுங்குகின்றது, மேவும் - பொருந்திய, இவைக்கு - இந்தத்துன்பங்களுக்கு, காரணம் - காரணமாவது, இ - இந்த, பந்தம்உறுக்கும்செல்வம்என - இல்வாழ்க்கைப்பிணிப்பையடைவிக்கிறசெல்வமேயென்று, பயந்தானாய்-அஞ்சினவனாய், இன்னனநினைந்தான் - இவைபோல்வனவற்றைநினைந்து, இந்தவருத்தம்இற-இந்தத்துன்பமற்றொழியும்படி, எம்பிரானை துதிப்பேன் என-எம்பிரானைத்துதிப்பேனென்றுமனவுறுதிகொண்டு, துதிப்பான் - துதிப்பானாயினன். எ - று.

(பொ - ரை.) அந்நரகத்தின் கொடியதுன்பத்தை அநுபவிப்பாரெவரோ, நினைத்தாலும் மனமானதுவெந்து புழுங்குகின்றது, பொருந்திய இந்தத் துன்பங்களுக்குக் காரணமாவது இந்த இல்வாழ்க்கைப் பிணிப்பையடைவிக்கிற செல்வமேயென்று அஞ்சினவனாய் இவைபோல்வனவற்றைநினைந்து இந்தத்துன்பமற்றொழியும்படி எம்பிரானைத்துதிப்பேனென்று மனவுறுதிகொண்டு துதிப்பானாயினன். எ - று.

(வி - ரை.) ஆரோபடுவாரென்றது ஒருவரும் படமாட்டார் என்றபடி, நினைந்தான் முற்றெச்சம் (கஉரு)

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

எழுதரு மறையைக் கவர்ந்தன னாகி யெறிதிரைக் கடல்புகுந் தொளித்த, முழுவலிச் சோம காசுர னுயிரை முனைகெழு மீனமாய்ச் சவட்டிப்,பழுதிலம் மறையை யுலகிடை விரித்துப் பளகறுத் துயிரெலாம் புரந்தாய்,கொழுதிவண் டுழக்கு நறுந்துழாய்ப் படலைக் கொற்றவ நின்னடி போற்றி.

(ப - ரை.) எழுதுஅருமறையை - எழுதுதலில்லாதவேதங்களை, கவர்ந்தனன்ஆகி - கவர்ந்துகொண்டவனாய், எறிதிரை-வீசுகின்றஅலைகளையுடைய, கடல்புகுந்துஒளித்த - கடலிற்புகுந்துமறைந்திருந்த, முழுவலி - மிக்கவலிமையையுடைய, சோமகாசுரன் - சோமகாசுரனது, உயிரை - பிராணனை, முனைகெழு - போர்த்தொழிலையுடைய, மீனம்ஆய் - மச்சாவதாரமெடுத்து, சவட்டி - அழித்து, பழுதுஇல் - குற்றமில்லாத, அ மறையை-அந்த வேதங்களை, உலகுஇடைவிரித்து - உலகத்தில் பரவச்செய்து, பளகுஅறுத்து - குற்றங்களையொழித்து, உயிர்எல்லாம் - சீவர்களையெல்லாம், புரந்தாய் - காத்தருளினவனே, வண்டு - வண்டுகள், கொழுதிஉழக்கும்-கிண்டித்துவைக்கிற, நறு - நறுமணமுள்ள, துழாய்ப்படலை - திருத்துழாய் மாலையையணிந்த, கொற்றவ- இறைவனே, நின்அடி - உன்திருவடிகளுக்கு, போற்றி - நமஸ்காரம். எ-று.

(பொ - ரை.) எழுதுதலில்லாத வேதங்களைக்கவர்ந்துகொண்டவனாய், வீசுகின்ற அலைகளையுடைய கடலிற்புகுந்து மறைந்திருந்த மிக்கவலிமையையுடைய சோமகாசுரனது பிராணனை, போர்த்தொழிலையுடைய மச்சாவதாரமெடுத்து அழித்து, குற்றமில்லாத அந்தவேதங்களை உலகத்தில் பரவச்செய்து குற்றங்களையொழித்துச் சீவர்களையெல்லாம் காத்தருளினவனே, வண்டுகள் கிண்டித்துவைக்கிற நறுமணமுள்ள திருத்துழாய்மாலையையணிந்த இறைவனே, உன்திருவடிகளுக்கு நமஸ்காரம். எ - று.

(வி - ரை.) வேதங்கள் எழுதாக்கிளவியாதலால் எழுதருமறை, என்றார், சோமகன் - ஓர்அசுரன், இவன் பிரமதேவன் தூங்குகிற சமயத்தில் வேதங்களை யெடுத்துக்கொண்டுபோய்க்கடலில் ஒளித்திருந்தான், அப்பொழுது திருமால் மச்சாவதாரமெடுத்துச்சென்று அவ்வசுரனைக்கொன்று அந்தவேதங்களை எடுத்துக்கொண்டுவந்து பிரமதேவனுக்குக்கொடுத்தருளினார் என்பது

புராணகதை. சவட்டிவிரித்து புரந்தாய்எனமுடியும், புரந்தாய் கொற்றவனென்பனவிரண்டும் விளிகள். (க௨௬)

எறிசெறி தரங்கப் பாற்கட னடுவ ணெறுழ்வரை மத்தெனக் கூட்டிக், தறியென மதியை நாட்டிவெண் பிறைப்பற் றழல்விழி யரவநாண் பூட்டி, மறிதொழின் மறியச் சுரர்கடை காலம் மந்தரங் கடலழுந் தாது முறிவின்மோட் டாமை யுருக்கொடு பரித்த முன்னவ நின்னடி போற்றி.

(ப - ரை.) எறி - வீசாநின்ற, செறி - நெருங்கின, தரங்கம் - அலைகளையுடைய, பாற்கடல்நடுவண் - பாற்கடலினடுவில், எறுழ்வரை - உறுதியாகிய மலையை, மத்துஎனகூட்டி - மத்தாகநட்டு, மதியைதறிஎனநாட்டி - சந்திரனைத்தூணாகநிறுத்தி, வெண்பிறைபல் - வெண்பிறைபோலும் பல்லினையும், தழல்விழி - நெருப்புப்போலும் கண்களையுமுடைய, அரவம்-பாம்பை, நாண்பூட்டி - கயிறாகக்கட்டி, மறிதொழில்மறிய-தடைபடுதற்றொழில்நீங்க, சுரர்கடைகால் - தேவர்கள்கடைகிறகாலத்தில், அமந்தரம் - அந்த மந்தரமலையானது, கடல்அழுந்தாது - கடலிலழுந்திப்போகாமல், முறிவுஇல் - அழிவற்ற, மோடு - பெருமையுள்ள, ஆமைஉருகொடு - கூர்மாவதாரமெடுத்து, பரித்த- சுமந்த, முன்னவ - முதல்வனே, நின்அடி - உன்திருவடிகளுக்கு, போற்றி - நமஸ்காரம். எ - று.

(பொ - ரை.) வீசாநின்ற நெருங்கின அலைகளையுடைய பாற்கடலினடுவில் உறுதியாகியமலையை மத்தாகநட்டுச்சந்திரனைத்தூணாகநிறுத்தி, வெண்பிறைபோலும் பல்லினையும் நெருப்புப்போலுங் கண்களையுமுடைய பாம்பைக்கயிறாகக்கட்டித் தடைபடுதற்றொழில் நீங்கத்தேவர்கள் கடைகிறகாலத்தில் அந்த மந்தரமலையானது கடலிலழுந்திப்போகாமல், அழிவற்ற பெருமையுள்ள கூர்மாவதாரமெடுத்திச்சுமந்த முதல்வனே, உன் திருவடிகளுக்கு நமஸ்காரம். எ - று.

(வி - ரை.) அரவம்என்றது வாசுகியை, மறிதொழின்மறிய என்றது தடைப்படாமல் என்றபடி. க்ருதயுகத்தில் தேவர்களும் அசுரர்களுங்கூடி மந்தரமலையை மத்தாயமைத்து அதைத்தாங்கத்திருமாலைப்பிரார்த்தித்து அவரை ஆமையுருவெடுக்கச்செய்து வாசுகியைக்கடை கயிறாகப்பூட்டிக் கடைந்தார்கள், கடையப்பட்ட அந்தப்பாற்கடலில்முதலில் விஷம்பிறந்து எல்லாத்திசைகளிலும் நெருப்புப்போலப்படரும்போது, அதை உருத்திரமூர்த்தியானவர் உட்கொண்டு தமது திருக்கழுத்திலிருத்திக்கொண்டார், அதன் பிறகு அந்தக் கடலில் இலக்ஷ்மி, சந்திரன், உச்சைசிரவம், கௌஸ்துபமணி, பாரிஜாதம், கல்பகவ்ருக்ஷம், காமதேநு, தேவவைத்யராகிய தந்வந்தரி முதலானபொருள்கள் உண்டாயின, இதற்குமுன் ஒருகாலத்தில் துர்வாசமுனிவர்சாபத்தால் கடலிற்போயொளித்துக்கிடந்த கல்பவ்ருக்ஷமுதலியவற்றை வெளிப்படுத்தவும் அம்ருதத்தையெடுத்துத் தேவர்களுக்குக்கொடுக்கவும் திருமால் கூர்மாவதாரமெடுத்தார் என்பது புராணகதை. (க௨எ)

மலர்தலைப் புவியைப் பாயலாச் சுருட்டி மயங்குபா தலத்திடைக் கரந்த, விலகுபொற் கண்ணனுயிர்குடிப் பதற்கு மிமைப்பினைப் புவிவி ரிப் பதற்கு, நிலவுவெண் பிறைக்கோட் டடல்வலிக் கேழ னிமிருருக் கொண்டவெம் பெரும, வலர்மகள் குடிகொண் டுறைமறு மார்பத் தச் சுத நின்னடிபோற்றி.

(ப - ரை.) மலர்தலை - விரிந்தஇடத்தையுடைய, புவியை-பூமியை, பாயல்ஆசுருட்டி - பாயலாகச்சுருட்டிக்கொண்டு, மயங்குபாதலத்து இடைகரந்த- யாவரும்மயங்குதற்குரிய பாதாளத்திற்போயொளித்த, இலகு - விளங்குகின்ற, பொன்கண்ணன் - இரணியாக்ஷனது, உயிர்குடிப்பதற்கும் - உயிரைவாங் கும்பொருட்டும், இமைப்பின்-இமைப்பொழுதில், அ புவிவிரிப்பதற்கும்-அந் தப்பூமியைவிரிக்கும்பொருட்டும், நிலவு-விளங்குகின்ற, வெண்பிறைகோடு - வெண்பிறைபோலுங்கொம்பினையும், அடல்வலி - மிக்கவலியினையுமுடைய, கேழல் - வராகத்தின், நிமிர்உருக்கொண்ட-பெரியவுருவத்தைக்கொண்ட, எம் பெரும - எம்பெருமானே, அலர்மகள்-திருமகள், குடிகொண்டுஉறை - குடி கொண்டுவாழ்கின்ற, மறு - மறுவமைந்த, மார்பத்து - திருமார்பினையுடைய, அச்சுத - அச்சுதனே, நின்அடி-உன்திருவடிகளுக்கு, போற்றி-நமஸ்காரம்.

(பொ - ரை.) விரிந்த இடத்தையுடைய பூமியைப்பாயலாகச்சுருட்டிக் கொண்டு யாவரும் மயங்குதற்குரிய பாதாளத்திற்போயொளித்த விளங்குகிற இரணியாக்ஷனது உயிரைவாங்கும்பொருட்டும் இமைப்பொழுதில் அந்தப்பூ மியை விரிக்கும்பொருட்டும் விளங்குகின்றவெண்பிறைபோலுங்கொம்பினை யும் மிக்கவலியினையுமுடையவராகத்தின் பெரியவுருவத்தைக்கொண்ட எம் பெருமானே, திருமகள் குடிகொண்டுவாழ்கின்ற மறுவமைந்த திருமார்பினை யுடைய அச்சுதனே, உன்திருவடிகளுக்கு நமஸ்காரம். எ - று.

(வி - ரை.) ஹிரண்யம் - பொன், அக்ஷன் - கண்களையுடையவன், ஆத லால் ஹிரண்யாக்ஷன் என்பதற்கு, பொற்கண்ணன் என்றார், மறு - இறைவ னது திருமார்பிலுள்ள ஓர்மறு, இதனை ஸ்ரீவத்ஸம் என்பர்வடநூலார். பூமி யைப்பாயலாகச்சுருட்டிக்கொண்டுபோய் பாதாளத்திலொளித்திருந்தஹிரண் யாக்ஷனைக்கொன்று பூமியை முன்போலவே விரித்தற்பொருட்டுத்திருமால்வ ராஹாவதாரமெடுத்தார் என்பதும், கற்பமுடிவில் எல்லாம் ஜலமயமாய் எங் கும் இருள்மூடிக்கொள்ள, சர்வேசுவரன் அந்த ஜலார்ணவத்தில் வடபத்ரசா யியாகியோக நித்திரையோடு மிதந்துகொண்டிருந்து, மஹர்லோகநிவாசிகளா கிய சில மஹாத்மாக்களது வேண்டுகோளுக்கிரங்கி ஜலார்ணவத்திலமுந்திக் கிடந்தபூமியை மிதப்பிக்கும்பொருட்டு சுவேதவராஹாவதாரமெடுத்தார் என் பதும் புராணகதைகள். (கஉஅ)

மலைத்தட நிறத்து முன்னவனுயிரை மாட்டிய பழிகொளக்கருதி யலைத்தட றலைத்துச் சுரர்முதல் யார்க்கு மச்சுறுத்திட்டது மன்றிப் புலைத்தொழி லுணர்வாற் றன்பெயர் வழுத்திப் போற்றவும் புரிந்த

பொல்லானைக், கொலைத் தொழில்புரியத் தூண்கிழித்தெழுந்த கோளரிநின்னடி போற்றி.

(ப - ரை.) மலைத்தடம் - மலைத்தடம்போன்ற, நிறத்து - மார்பினையுடைய, முன்னவன் உயிரை - தன் தமையனது உயிரை, மாட்டிய-வாங்கின பழிகொள்ளகருதி - பழிவாங்கநினைத்து, அலைத்து - வருத்தி, அடல்தொலைத்து - வலிதொலைத்து, சுரர்முதல்யார்க்கும் - தேவர்முதலிய எல்லார்க்கும், அச்சுறுத்திட்டதும்அன்றி - பயமுறுத்தினதேயன்றி, புலைத்தொழில் உணர்வால் - நீசத்தொழிலைச்செய்கிற அறிவினால், தன்பெயர் - தன்பெயரை, வழுத்தி போற்றவும் புரிந்த - வாழ்த்திவணங்கவுஞ்செய்த, பொல்லானை-கொடியோனாகிய ஹிரண்யகசிபனை, கொலைத்தொழில்புரிய - கொல்லும் பொருட்டு, தூண்கிழித்து எழுந்த - தூணைப்பிளந்து கொண்டெழுந்த, கோளரி - நரசிங்கனே, நின் அடி - உன் திருவடிகளுக்கு, போற்றி - நமஸ்காரம். எ - று.

(பொ - ரை.) மலைத்தடம்போன்ற மார்பினையுடைய தன்தமையனது உயிரைவாங்கினபழிவாங்க நினைத்து, வருத்திவலிதொலைத்து தேவர்முதலிய எல்லார்க்கும் பயமுறுத்தினதேயன்றிநீசத்தொழிலைச்செய்கிற அறிவினால்தன் பெயரைவாழ்த்தி வணங்கவுஞ்செய்த கொடியோனாகிய ஹிரண்யகசிபனைக் கொல்லும்பொருட்டுத் தூணைப்பிளந்து கொண்டெழுந்த நரசிங்கனே, உன் திருவடிகளுக்கு நமஸ்காரம். எ - று.

(வி - ரை.) நிறம் - மார்பு. முன்னவன்என்றது ஹிரண்யாக்ஷனை, பிரகலாதன் தந்தையாகிய ஹிரண்யகசிபன் தன் தமையனைத் திருமால்கொன்ற பழிக்குப்பழிவாங்க வேண்டுமென்னும் பெருஞ்சினங்கொண்டு சர்வதேவதாவந்தநத்தைவிலக்கி, எல்லாரும் தன்பெயரையே வாழ்த்தி வணங்கச்செய்து கொண்டிருந்தான். இந்த வரம்பிலடங்காமல் தன்புதல்வனாகிய பிரகலாதன் திருமால் பெயரையேயுச்சரிப்பதைக்கண்டு அவன்மேல் பெருங்கோபங்கொண்டு, அடா உன்னால் துதிக்கப்படுகிற திருமால் எங்கேயிருக்கிறான் என்று கேட்க, அவன் எவ்விடத்துமிருக்கிறானென்று விடைசொல்ல, சபாமண்டபத்திலுள்ள பொற்றூணொன்றைக்காட்டி இதிலிருக்கிறானாவென்று அதட்டிக் கேட்க, இருக்கிறானென்று மறுமொழிசொல்ல, அந்தத்தூணையறைதலும் அதினின்றும் திருமாலானவர் நரசிங்கரூபமாகி வெளிப்பட்டு அவனைக்கொன்று பிரகலாதனைக் காத்தருளினாரென்பது புராணகதை. (கஉகூ)

பெருகிய தவத்துக் காசிபனதிதி பிறங்குறு தந்தைதா யாகத்
திருகறத் தோன்றி மமதையிற் படிந்த திறல்கெழு மாவலிபாற்சென்
றுருகியமனத்தின் மூவடி மண்கொண்டோரடிக்கிடம்பெறும்பையினான்
மருவவன் சிரத்தில்வைத்துயிர் புரந்தவாமன நின்னடிபோற்றி.

(ப - ரை.) பெருகியதவத்து - அதிகரித்ததவத்தினையுடைய, காசிபன் அதிதி - காசிபனும் அதிதியும், பிறங்கிய தந்தைதாய்ஆக - விளங்கிய தந்தை தாயராயிருக்க, திருகுஅற தோன்றி - மாறுபாடில்லாமல் அவதரித்து, மமதை

யில்படிந்த - மமதையிலழுந்தியிருந்த, திறல்செழு - வலிபொருந்திய, மாவலி பால்சென்று - மாவலியினிடத்திற்சென்று, உருகிய மனத்தின் - உருக்கமுள்ளமனத்தினால், மூவடி மண்கொண்டு - மூன்றடிமண்ணைப்பெற்று, ஓர் அடிக்கு இடம்பெறுமையினால் - ஒருஅடிக்கு இடம்பற்றாமையால், மருவு - பொருந்திய, அவன்சிரத்தில்வைத்து - அவன் தலைமேல்வைத்து, உயிர்புரந்த - உயிரைக்காத்தருளின, வாமன - வாமநனே, நின்அடி - உன்திருவடிகளுக்கு, போற்றி - நமஸ்காரம். எ - று.

(பொ - ரை.) அதிகரித்தநவத்தினையுடையகாசிபனும் அதிதியும்விளங்கிய தந்தைதாயராயிருக்க, மாறுபாடில்லாமல் அவதரித்து, மமதையில் அழுந்தியிருந்த வலிபொருந்திய மாவலியிடத்திற் சென்று உருக்கமுள்ள மனத்தினால் மூன்றடிமண்ணைப்பெற்று ஒருஅடிக்கு இடம்பற்றாமையால் பொருந்திய அவன் தலைமேல்வைத்து உயிரைக்காத்தருளின வாமநனே, உன்திருவடிகளுக்கு நமஸ்காரம். எ - று.

(வி - ரை.) காசிபன் அதிதிஎன்பவற்றிற்றில் எண்ணும்மைகள்தொக்கன, திருகறத்தோன்றியென்றது கண்ணனவதாரம் போலல்லாதென்றபடி. திருமாலானவர் தம்மைப்புதல்வராகப் பெறவேண்டுமென்றவிரும்பித் தவஞ்செய்திருந்த காசிபனுக்கும் அதிதிக்கும் புதல்வராய் வாமநாவதாரஞ்செய்து, அக்காலத்து மிகவும் மமதைகொண்டிருந்த மாவலியினிடத்திற்போய் மூவடி மண்யாசித்துப்பெற்று, இரண்டடிகளால்பூமியந்தரிக்ஷங்களையளந்துகொண்டு மற்றோரடிக்கிடம் பெறாமையால் அவ்வடியை அவன் தலைமேல்வைத்துப் பாதலத்திலழுத்திவிட்டாரென்பது புராணகதை, மண்பெற்றபோது இருந்தது வாமநாவதாரம், அளந்தபோதெடுத்தது திரிவிக்கிரமாவதாரம். (௧௩௦)

மாணுடைச் சமதக் கினியிரே ணுகைக்கு மகனெனத் தோன்றி மா மறையோர்ப், பேணுடைத் தலைக நடைநெறி யிகந்து பெயர்ப்பருஞ் செருக்கினின் மூழ்கும், கோணுடைக் குரிசிற் குலமறச் சவட்டிக் குலவுமம் மறையவர்ப் புரந்த, வேணுடைப் பரசி ராமவைம் படைக்கை யிறையவ நின்னடி போற்றி.

(ப - ரை.) மாண்உடை - மாட்சிமையையுடைய, சமதக்கிநி இரேணுகைக்கு - சமதக்கினிக்கும் இரேணுகைக்கும், மகன்எனதோன்றி - புதல்வனாயவதரித்து, மாமறையோர் - பெருமைபொருந்திய வேதியரை, பேண்உடைத்து - போற்றுதலைத்தவறி, உலகநடைநெறி இகந்து - உலகநடையாகிய வழியைக்கடந்து, பெயர்ப்புஅரு - நீக்குதற்கரிய, செருக்கினில்மூழ்கும் - செருக்கிலழுந்தாநின்ற, கோண்உடை - வலியையுடைய, குரிசில்குலம் அறசவட்டி - க்ஷத்ரியவமிசத்தை முழுதுமழித்து, குலவும் - விளங்குகிற, அ - அந்த, மறையவர் புரந்த - வேதியரைக்காத்த, ஏண்உடை - பெருமையையுடைய, பரசிராம - பரசுராமனே, ஐம்படை - பஞ்சாயுதங்களையேந்தின, கை - திருக்கைகளையுடைய, இறையவ - இறைவனே, நின் அடி - உன்திருவடிகளுக்கு, போற்றி - நமஸ்காரம்.

(பொ - ரை.) மாட்சிமையையுடைய சமதக்கினிக்கும் இரேணுகைக்கும் புதல்வனாயவதரித்து, பெருமைபொருந்திய வேதியரைப்போற்ற உலகத் தவறிஉலகநடையாகிய வழியைக்கடந்து நீக்குதற்கரியசெருக்கெழுந்தாநின்ற வலிமையையுடைய க்ஷத்ரியவமிசத்தை முழுதுமழித்து விளங்குகிற அந்த வேதியரைக்காத்த பெருமையையுடைய பரசுராமனே, பஞ்சாயுதங்களை யேந்தின திருக்கைகளையுடைய இறைவனே, உன் திருவடிகளுக்கு நமஸ்காரம்.

(வி - ரை.) பேண்முதனிலைத்தொழிற்பெயர். உலகநடை-உயர்ந்தோர நடையெனினுமாம். கோண் - மாறுபாடெனினுமமையும். சமதக்கினி - ஒருமஹர்ஷி, இவன்தந்தை ருசிகன். தாய்காதிரராஜன் மகளாகிய சத்தியவதி (கௌசிகி), இவனுக்கு உருமதி,உத்ஸாஹன், விசுவாவசு, பரசுராமன் என நான்கு புதல்வருண்டு, இந்நால்வருள்பரசுராமன் முக்கியன. சமதக்கினியின் தந்தையாகிய ருசிகன் சத்தியவதியை மணஞ்செய்துகொண்டு கர்யாகுப்ஜத்திலிருந்து சந்தானத்தைவிரும்பி, தனக்கென்று ஒருசருவையும் (சருவு - ஹோமத்துக்குத்தகுந்த பக்வாந்நம்) தன்மாமனுக்கென்று ஒருசருவையும் கற்பித்து, அவ்விரண்டையும் தன்மனைவிக்கெதிரேவைத்து, அரசர்களால் வெல்லவொண்ணாதவனும் அரசரெல்லாரையும்நாசஞ்செய்பவனுமாகிய மகன் இதனால் பிறப்பான், இந்தச்சருவை உன்தாய்க்குக்கொடு, தபஸ்ஸம்பத்தியும் சமமுமுள்ள சுபுத்ரன் இதனால் பிறப்பான். இதனை நீகைக்கொள்ளக்கடவையென்று விவரித்துச்சொல்லி, அவன் ஸ்நாநஞ்செய்வதற்கு நதிக்குச்சென்றான், அவ்வளவில் தீர்த்தயாத்திரை செய்ய-போனகாதிதன் மனைவியோடு அவ்விடத்திற்குவந்தான். சத்யவதியானவள் தன் தாய்தந்தையரைப்பார்த்து மனமகிழ்ந்து தன்கணவன் செய்த இரண்டு சருவுகளையும் தாய்க்குக்காட்டி அவற்றின் பிரபாவத்தைச் சொன்னாள். அதைக்கேட்ட தாயானவள் மனமகிழ்ந்து, தன் மகளுடன் தானும் ஸ்நாநம்செய்து சுசியுள்ளவளாய், இதுதனதென்றும்இது தன்மகளதென்றும் வேற்றுமை தெரியாமல் தன்பாகத்தை மகளுக்குக்கொடுத்து மகள்பாகத்தைத் தான்உபயோகித்துக்கொண்டாள் சத்யவதியும் தாய் கொடுத்ததையே உட்கொண்டாள். அவ்வளவில் ருசிகன்வந்து மனைவியைப் பார்த்து, தன் திவ்யஞானத்தால் சருவுகள் மாறுபட்டதை யறிந்துகொண்டு, நீ க்ஷத்ரியநாசத்துக்குரிய கருப்பத்தைத்தரித்தாய் என்றுசொல்ல,அவள்பயந்து தேவரீர் இப்படி சொல்லலாமோவென்றாள், அவர் அவளைநோக்கி, இதுஉன் தாயினால் உண்டான பிழையாதலால், உனக்குக்ரூரகர்மனாகிய மகனும், உன் தாய்க்கு ப்ரஹ்மஞானத்தையுடைய சற்புத்திரனும் பிறப்பார்கள் என்று சொல்லி, அதற்கவள் துக்கிக்க, இந்தச் சருவின்மகிமை உன் மகனிடத்தில் பொருந்தாமல், பேரனிடத்தில் பொருந்தக்கடவதென்று அநுக்ரஹித்தார், அது காரணமாகப் பரசுராமர் பிருகுவமிசத்திற்பிறந்த ஜமதக்நிமஹாமுனிக்குப் புதல்வராயவதரித்தும் க்ரூரகர்மனும் க்ஷத்ரியவமிசத்தையெல்லாம் நாசஞ்செய்தான்.ஜமதக்நி,தன்மனைவியாகியரேணுகைஅங்கதேசத்தரசனாகிய சித்ரஸேநனோடு வியபிசரித்ததைப்பற்றிக்கோவித்து,தன்மகனாகிய பரசுராமனால்

அவளைச்சொல்வித்து அவன்வேண்டுகோளின்படியே மறுபடியும் பிழைப்பித்தார். இந்தப் பரசுராமன் தன்தந்தையைக் கார்த்தவீரியார்ஜுனன் புதல்வர்கள் ஹோமபசுவாகக் கொன்றதனால் அவர்களை இருபத்தொருதலை முறையுங்கொன்று அவர்களுதிரத்தால் பிதிரருக்குத் தர்ப்பணஞ்செய்தான். அந்த வுதிரத்தால் ஐந்து மடுக்களுண்டாயின அவற்றிற்குச் சமந்தபஞ்சகம் என்னும் பெயருண்டாயிற்று. இவன் உருத்திரமூர்த்தியின் அநுக்ரஹத்தால் அநேகமான திவ்யாஸ்திரங்களைப் பெற்றவன், வில்வித்தையிற் சிறந்தவன், அன்றியும் சிரஞ்சீவிகளுள் ஒருவன் என்பது புராணகதை. (௧௬௧)

தடநெடு மாட மாளிகை யயோத்தித் தசரதன் கோசலை மகவா
வடல்கெழு பாயல் சங்குசக் கரமுந் தம்பிய ராயடி பரவத்
திடனுறத் தோன்றிக் கடுந்தொழி லரக்கி சேயொடு மிறச்சிலை வாங்கி
மடனிகு முனிவன் மகத்தினைக் காத்தோர் மா துகல் லுருவினை யகற்றி.

(ப - ரை.) தடம்-மலைபோன்ற, நெடு-நீண்ட, மாடமாளிகை-மாடமாளிகைகளையுடைய, அயோத்தி-திருவயோத்யைக்கரசனாகிய, தசரதன்கௌசலை-தசரதன் கௌசலையென்னுந்தந்தைதாயருக்கு, மகவுஆ-புதல்வனாயவதரித்து, அடல்கெழுபாயல் சங்குசக்கரமும் - வலிபொருந்திய சயநமும் (ஆயுதங்களாகிய) சங்கசக்ரங்களும், தம்பியராய் - தம்பியராயவதரித்து, அடிபரவ - தன் திருவடியைவழிபடாநிற்க, திடன்உறத்தோன்றி - வலியவுருவோடு காணப்பட்டு, கடுதொழில் அரக்கி - கொடுந்தொழிலையுடைய அரக்கியானவள், சேயொடும்இற - தன்மகனோடுமிறக்க, சிலைவாங்கி - வில்லைவளைத்து, மடன் இகு - அறியாமையைக்கொன்ற, முனிவன்-முனிவனது, மகத்தைக்காத்து - யாகத்தைக்காத்து, ஓர்மாது - ஒருபெண்ணின், கல்உருவினை அகற்றி - கல் லுருவத்தை நீக்கி. எ - று.

(பொ - ரை.) மலைபோன்ற நீண்டமாடமாளிகைகளையுடைய திருவயோத்யைக்கரசனாகிய தசரதன் கௌசலை யென்னுந்தந்தைதாயருக்குப்புதல்வனாயவதரித்து, வலிபொருந்திய சயநமும் (ஆயுதங்களாகிய) சங்கசக்ரங்களும் தம்பியராயவதரித்துத் தன்திருவடியைவழிபடாநிற்க, வலியவுருவோடு காணப்பட்டுக் கொடுந்தொழிலையுடைய அரக்கியானவள் தன்மகனோடுமிறக்கவில்லைவளைத்து, அறியாமையைக்கொன்ற முனிவனது யாகத்தைக்காத்து ஒருபெண்ணின் கல்லுருவத்தை நீக்கி. எ - று.

(வி - ரை.) 'பாயல்சங்கு சக்கரமுந்தம்பியராய், என்றது சயநமாகிய ஆதிசேஷன் இளையபெருமாளாகவும் சங்கு சக்ரங்கள் பரதசத்ருக்நர்களாகவும் அவதரித்து என்றபடி, அரக்கியென்றது தாடகையை, சேய் என்றது சுபாகுவை, முனிவன் என்றது விசுவாமித்திரனை, ஓர்மாது என்றது அகலிகையை, கல்லுருஎன்றது கௌதமசாபத்தாற்கல்லாய்க்கிடந்ததை, இது முதல் ராமாவதாரத்தின் வைபவமாதலால், மகவாத்தோன்றிவாங்கி காத்து அகற்றி முதலிய எச்சங்கள், ௧௬௮ - வது செய்யுளினிறுதியிலுள்ள அரசளித்த என்னும் வினைகொண்டு முடியும். (௧௬௨)

பெருவள மிதிலை நகரகம் புகுந்து பெயர்க்கருங் கார்முக மிறுத்
துக், குருமலர் நிறையப் பூத்தகொம் பன்ன கோதையை மணந்துமீட்
டயோத்தித், திருநக ரடைந்து தாயுரை தாங்கித் தேவியுந் தம்பியுந்
தொடர, மருவிய களிப்பி னந்நகர் நீங்கி மாண்பினோர் கிராதனை நட்டு.

(ப - ரை.) பெருவளம் - மிக்கவளத்தினையுடைய, மிதிலைநகர் அகம்பு
குந்து - மிதிலாநகரினுள்ளே பிரவேசித்து, பெயர்க்கஅரு - நிலைபெயர்த்தற்
கரிய, கார்முகம் இறுத்து, வில்லையொடித்து, குருமலர் - நிறமுள்ள மலர்
களை, நிறையபூத்த - நிரம்பப்பூத்த, கொம்புஅன்ன - பூங்கொம்புபோன்ற,
கோதையை - சீதாபிராட்டியை, மணந்து-மணமுடித்துக்கொண்டு, மீட்டும் -
மறுபடியும், திருஅயோத்தி நகர் அடைந்து - அழகிய அயோத்யாநகரத்தை
யடைந்து, தாய் உரைதாங்கி - சிற்றன்னையின் சொல்லைச்சிரசாவகித்து,
தேவியும் தம்பியும்தொடர - தேவியாகிய சீதாபிராட்டியும் தம்பியாகிய
இளையபெருமாளுந்தன்னைத் தொடர்ந்துவர, மருவியகளிப்பின் - பொருந்
திய மனமகிழ்ச்சியோடு, அ - அந்த, நகர்நீங்கி-அயோத்யாநகரத்தை விட்டு,
மாண்பின் - மாட்சிமைக்குணத்தையுடைய, ஓர் கிராதனைநட்டு - ஒருகிராத
னாகிய குகனைநட்புக்கொண்டு. எ - று.

(பொ-ரை.) மிக்க வளத்தினையுடைய மிதிலாநகரினுள்ளேபிரவேசித்து
நிலைபெயர்த்தற்கரிய வில்லையொடித்து நிறமுள்ளமலர்களை நிரம்பப்பூத்த பூங்
கொம்புபோன்றசீதாபிராட்டியை மணமுடித்துக்கொண்டுமறுபடியும் அழகிய
அயோத்யாநகரத்தையடைந்து சிற்றன்னையின் சொல்லைச் சிரசாவகித்து தே
வியாகிய சீதாபிராட்டியும் தம்பியாகிய இளையபெருமாளும் தன்னைத்தொடர்
ந்துவரப்பொருந்திய மனமகிழ்ச்சியோடு அந்த அயோத்யாநகரத்தை விட்டு
மாட்சிமைக்குணத்தையுடையஒருகிராதனாகியகுகனை நட்புக்கொண்டு எ-று.

(வி - ரை.) பெயர்க்கருங்கார்முகம் - அசைத்தற்கரியவில், மிதிலை - மி
திலன் என்னும் அரசனாலுண்டாக்கப்பட்டதோர் பட்டணம், இந்த மிதிலன்
நிமியென்பவனுக்குமகன், இந்த மிதிலனுக்கு விதேஹன் ஜநகன் என்னும்
வேறுபெயர்களுமுண்டு, இந்த மிதிலையென்னும் பட்டணம்கண்ட - கௌ
சிகிஎன்னும் இரண்டு நதிகளுக்கிடையேயுள்ளது, அன்றியும் பஞ்சகௌட
தேசங்களுள்ளுமொன்று, கிராதன்என்றது சிருங்கிபேரபுரத்துக்கு அரசனா
கிய ஒருகிராதப்பிரபு, இவன் பெருமாளைக்கங்கை கடத்தினவன், கிராதன் -
வேடருளோர் சாதியான், "ஆழிநீர்க்கங்கையம்பிகடாவிய-ஏழைவேடனுக்கு"
என்றார் மஹாகவியும். (கஙக)

தவப்பெரு முனிவர் குடிகொளும் பன்ன சாலைகள் கடந்துமின்
னிட்டவ, சிவப்புறு குடுமிச் சித்திர கூட மடைந்தவ ணையத்தி னிருந்து,
கலற்சியிற் குடைய பரதனுக் கினிய கமுறிப்பா துகைகொடுத் தனுப்
பி, யுவப்புற வெவருந் தண்டகம் புகுந்தங் குடன்றெழு விராதனை
யட்டு.

(ப - ரை.) தவம் - தவத்தையுடைய, பெருமுனிவர் - பெரியமுனிவர்கள், குடிகொளும் - வாசம்பண்ணுகிற, பன்னசாலைகள்கடந்து - பர்ணசாலைகளைக்கடந்து, விண்தடவ - ஆகாயத்தைத்தீண்டும்படி, நிவப்புஉறுகுடுமி-உயர்ந்தசிகரங்களையுடைய, சித்திரகூடம்அடைந்து - சித்திரகூடபர்வதத்தையடைந்து, அவண் - அவ்விடத்தில், நேயத்தின்இறுத்த - அன்போடுவந்துதங்கின, கவற்சிமிக்குடைய - துன்பத்தைமிகுதியாகவுடைய, பரதனுக்கு - ஸ்ரீபரதாழ்வானுக்கு, இனியகழறி - இன்சொற்களைச்சொல்லி, பாதுகை - தனதுதிருப்பாதுகையை, கொடுத்துஅனுப்பி - (அவனுக்கு) கொடுத்தனுப்பி, எவரும்உவப்புற - யாவருஞ்சந்தோஷிக்கும்படி, தண்டகம்புகுந்து - தண்டகவனத்திற்பிரவேசித்து, அங்கு - அவ்விடத்தில், உடன்றுஎழு - கோவித்தெழுந்த, விராதனைமாட்டி - விராதனைக்கொன்று. எ - று.

(பொ-ரை.) தவத்தையுடைய பெரியமுனிவர்கள்வாசம்பண்ணுகிறபர்ணசாலைகளைக்கடந்து, ஆகாயத்தைத்தீண்டும்படிஉயர்ந்தசிகரங்களையுடையசித்திரகூட பர்வதத்தையடைந்து, அவ்விடத்தில் அன்போடுவந்துதங்கின துன்பத்தை மிகுதியாகவுடைய ஸ்ரீபரதாழ்வானுக்கு இன்சொற்களைச்சொல்லிதனது திருப்பாதுகையை (அவனுக்கு)கொடுத்தனுப்பி, யாவருஞ்சந்தோஷிக்கும்படி தண்டகவனத்திற்பிரவேசித்து அவ்விடத்தில் கோவித்தெழுந்த விராதனைக் கொன்று. எ - று.

(வி - ரை.) பர்ணசாலை - இலைக்குடில், (பர்ணம்-இலை,) சித்திரகூடம் - ஒருபர்வதம், பெருமாள் அரண்யவாசத்துக்கு எழுந்தருளும்போது இவ்விடத்திற்சில மாதங்கள் தங்கியிருந்தார். இந்தப்பர்வதம் சிருங்கிபேரபுரத்துக்கு நிருதித்திசையிலிருக்கும், இதில் ஸ்ரீவால்மீகிபகவானது ஆசிரமமும் இருந்தது. பரதன் - தசரதனுக்குக் கைகேசியினிடத்திற்பிறந்த மகன், இவன் மனைவி குசத்வஜன் மகளாகிய மாண்டவி. தண்டகம் - ஓர்வனம், இது தண்டகன் என்பவன் சுக்ரசாபத்தால் மண்மாரியிலகப்பட்டிறந்தஇடம், விராதன் - பூர்வத்தில் தும்புருஎன்னும் கந்தர்வனாயிருந்தவன், இவன் குபேரசாபத்தால் ராக்ஷஸத்வமடைந்து, பெருமாள் தண்டகாரண்யத்திற்பிரவேசித்தபோது அவரைத்தடுத்து அவரால் கொல்லப்பட்டுச்சாபவிமுக்தனானன். (கஙச)

திகழ்சர பங்கன் கருத்தினை முடித்துச் செந்தமிழ் மணங்கமழ் செவ்வாய்ப், புகழ்முனி யிருக்கை யடைந்தவ ணொருவிப் பொலிபஞ்ச வடித்தல மடையா, விகழ்வறு மெருவை யிறைக்குள மகிழ்வித் திராவணற் கிளையவள் கலங்கண், டகழ்தரப்போந்த கரன்முத லோரையடுதொழிற் கூற்றுண நல்கி.

(ப - ரை.) திகழ் - விளங்குகிற, சரபங்கன்கருத்தினைமுடித்து - சரபங்கனது கருத்தைமுற்றுவித்து, செந்தமிழ்மணம் கமழ்செவ்வாய்-செந்தமிழின் மணம்வீசுகிற செவந்தவாயினையுடைய, புகழ் - (யாவராலும்) புகழப்படுகிற, முனி - அகத்தியமுனிவனது, இருக்கை - இருப்பிடத்தை, அடைந்து - சேர்ந்து, அவண்ஒருவி - அவ்விடம்விட்டுநீங்கி, பொலி - விளங்குகிற, பஞ்சவ

டித்தலம் அடையா - பஞ்சவடியென்னுந்தலத்தைச்சேர்ந்து, இகழ்வு அறு - இகழ்ச்சியற்ற, எருவை இறைக்கு - கழுகரசனாகியசடாயுவுக்கு, உள்ளம் மகிழ்வித்து - மனமகிழச்செய்து, இராவணற்கு இளையவள் - ராவணசஹோதரியாகிய சூர்ப்பணகியின், கலாம்கண்டு - கொடுமையைக்கண்டு, அகழ்தர செவிமூக்குகளையறுக்க, போந்த - (அதைக்கேட்டு) வந்த, கரன்முதலோரை - கரன்முதலானோரை, அடுதொழில் - கொல்லுதற்றொழிலையுடைய, கூற்றுஉண்ண - யமனுண்ணும்படி, நல்கி - கொடுத்து. எ - று.

(பொ - ரை.) விளங்குகிறசரபங்கனது கருத்தைமுற்றுவித்து, செந்தமிழின் மணம்வீசுகிற செவந்தவாயிதழையுடைய (யாவராலும்) புகழப்படுகிற அகத்தியமுனிவனது இருப்பிடத்தைச்சேர்ந்து, அவ்விடம்விட்டுநீங்கி, விளங்குகிற பஞ்சவடியென்னுந்தலத்தைச்சேர்ந்து, இகழ்ச்சியற்ற கழுகரசனாகிய சடாயுவுக்கு மனமகிழச்செய்து, ராவணசஹோதரியாகிய சூர்ப்பணகியின் கொடுமையைக்கண்டு செவிமூக்குகளையறுக்க (அதைக்கேட்டு) வந்த கரன்முதலானோரைக்கொல்லுதற்றொழிலையுடைய யமனுண்ணும்படி கொடுத்து எ - று.

(வி - ரை.) சரபங்கன் - தண்டகாரண்யத்திலிருந்த ஒருமுனிவன், இவனைச்சுவர்க்கத்துக்கழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று இந்திராதிதேவர்கள் இவனது ஆசிரமத்துக்கு வந்தும்போகாதிருந்து, பெருமாள் எழுந்தருளினபின்பு அவனைத்தரிசித்துக்கொண்டு சுவர்க்கலோகத்துக்குப்போயினர், இவரது ஆசிரமம் கங்காநதிக்குச்சமீபத்திலுள்ளது, பஞ்சவடி - பெருமாள் அரண்யவாசகாலத்தில் தண்டகாரண்யத்தில் ஆசிரமமுண்டாக்கிக்கொண்டிருந்தஇடம், ஐந்துஆலமரத்தோப்புஎன்பது சப்தார்த்தம், இதுகோதாவிரி உத்பத்தியாகிற இடத்துக்குச்சமீபத்திலுள்ளது, சடாயு - அருணனின் இரண்டாவதுமகன், இவன்தாய்சேநி, பாட்டன்காசிபன், பாட்டிவிநதை, தமையன் சம்பாதி, இவன் பஞ்சவடியில் பெருமாள் ஆசிரமத்திலிருந்து சீதாபிராட்டியை ராவணன் எடுத்துக்கொண்டுபோகும்போது தடுத்து அவனாற் கொல்லப்பட்டான், இவனைப்பெரியவுடையார் என்பர். கரன் - விச்ரவசுவுக்கு ராகையினிடத்திற்பிறந்த புதல்வருள் மூத்தவன், இவன் தம்பிமார் தூஷணன் திரிசிரசு என்பவர். (ககரு)

மாயையி னடைந்த வுழையுயிர் போக்கி மாதினைக் கவர்ந்தெழு மரக்கன், பாயவொள் வாளாற் சிறையறப் புண்ட படர்புகழ்த் தாதையைக் கண்டு, மேயபல் கடனும் விதியுளி முடித்து விளைக்குநர் கொடுந்தொழிற் கவந்த, னுயவற் றொலைத்துச் சவரிபூ சனைகொண் டகன்று போய் மதங்கவெற் படைந்து.

(ப - ரை.) மாயையின் அடைந்த - மாயாரூபத்தோடுவந்த, உழை - மானினது, உயிர்போக்கி - உயிரைநீக்கி, மாதினை - சீதாபிராட்டியை, கவர்ந்து எழும் - கவர்ந்துகொண்டெழுந்த, அரக்கன் - அரக்கனாகியராவணனது, பாயஒள்வாளால் - (ஒளி) பரவியதிட்பமாகியவாளினால், சிறைஅறப்புண்ட - சிறையறுபட்ட, படர்புகழ் - படர்ந்தபுகழையுடைய, தாதையைக்கண்டு - தந்தை

யாகிய பெரியவுடையாரைக்கண்டு, மேயபல்கடனும் - பொருந்தியபலகடன்களையும், விதியுளிமுடித்து - வேதவிதிப்படிமுடித்து, விலக்குஅரு - விலக்குதற்கரிய, கொடுந்தொழில் - கொடுந்தொழிலையுடைய, கவந்தன் ஆயவன்சோலைத்து - கவந்தனென்பவனைக்கொன்று, சவரிபூசனைகொண்டு - சவரியின் பூஜையையேற்று, அகன்றுபோய் - அவ்விடம்விட்டுநீங்கி, மதங்கவெற்புஅடைந்து - மதங்கபர்வதத்தைச்சேர்ந்து. எ - று.

(பொ-ரை.) மாயாரூபத்தோடுவந்த மானினதுஉயிரைநீக்கி சீதாபிராட்டியைக்கவர்ந்துகொண்டெழுந்த அரக்கனாகியராவணனது ஒளி பரவியவொட்பமாகியவாளினால் சிறைபறுபட்ட படர்ந்தபுகழையுடையதந்தையாகியபெரியவுடையாரைக்கண்டுபொருந்தியபலகடன்களையும் வேதவிதிப்படி முடித்து விலக்குதற்கரிய கொடுந்தொழிலையுடைய கவந்தனென்பவனைக்கொன்று சவரியின் பூஜையையேற்று அவ்விடம்விட்டுநீங்கி, மதங்கபர்வதத்தைச்சேர்ந்து.

(வி - ரை.) மாயையினடைந்தவுழை - மாரீசன், சிறையறுப்புண்டதாதை - சடாயு, பல்கடன் - சரமகைங்கர்யங்கள், கவந்தன் - ஒருராக்ஷஸன், இவன்யோசனை நீளமுள்ளதோள்களும் வயிற்றிலமுழுந்தின முகமுமுடையவனாய் தண்டகாரண்யத்திலிருந்தான், பெருமாளும் இளையபெருமாளும் பிராட்டியைத்தேடிக்கொண்டு அவ்வனத்தில்வரும்போது அவர்களையெடுத்து விழுங்கப்போய் அவர்களால் இவன் தோள்கள் அறுபட்டு ஒருகந்தர்வரூபமானான், முற்காலத்தில் தநுஎன்கிற கந்தர்வன் தன்தபோபலத்தால் சிரஜீவித்வமும் காமரூபித்வமும்அடைந்து கொடியவனாயிருக்கும்போது ஸ்தூலகேசன் என்னும் ருஷிசாபத்தால் இந்தராக்ஷஸரூபத்தையடைந்தான், இந்திரனது வஜ்ராயுதத்தின் அடியினால் இவனதுகழுத்தும் தலையும் கால்களும் வயிற்றிலடங்கிப்போயின, இதனால் இவன்கவந்தன் என்று சொல்லப்பட்டான், சவரி-பம்பாதீரத்தில் மதங்காசிரமத்திலிருந்த ஸ்ரீராமபக்தியுள்ள ஒரு வேடிச்சி, மதங்கன் மாணாக்கர்களுள் ஒருத்தி, ஸ்ரீராமாநுக்ரஹத்தால் மோக்ஷமடைந்தவள்.

கதிரவன் பயந்த மதலையை நட்டுக் கனந்தவழ் மராமரந் துளைத்து, முதிரொளிக் குலிசப் படையினன் மகனை முனிந்தடல் புரிந்துலகடங்க, வதிர்தரத் திரியுஞ் சேனைதற் சூழ வனுமனு மறிவதை யறிந்திட், டெதிரறு கடற்க ணொருசரம் புகுத்தி யியங்குற நடவையுண்டாக்கி.

(ப - ரை.) கதிரவன்பயந்த - சூரியன்பெற்ற, மதலையை - புதல்வனாகிய சுக்ரீவனை, நட்டு - சிநேகித்து, கனம்தவழ் - மேகங்கள் தவழ்தற்குரிய, மராமரம் துளைத்து - மராமரங்களைத்தொளைத்து, முதிர்ஒளி - மிகுந்தவொளியையுடைய, குலிசப்படையினன் - வஜ்ராயுதத்தையுடையவனாகிய இந்திரனது, மகனை - மகனாகியவாலியை, முனிந்து அடல்புரிந்து - கோபித்துக் கொலைசெய்து, உலகு அடங்க அதிர்தரத்திரியும் - உலகமுழுதும் அதிரும்படி திரியாநின்ற, சேனை - சேனையானது, தற்சூழ - தன்னைச்சூழ்ந்துவர, அநுமனும் - அநுமானால், அறிவதை அறிந்திட்டு - அறியவேண்டியதை யறிந்துகொண்டு,

எதிர் அறு கடற்கண் - நிகரற்ற கடலின்மீது, ஒருசரம் புகுத்தி-ஒரு பாணத்தைச்செலுத்தி, இயங்குற-சஞ்சரிக்க, நடவை உண்டாக்கி-வழியுண்டாக்கி.

(பொ - ரை.) சூரியன்பெற்ற புதல்வனாகியசுக்ரீவனைச்சிநேகித்து,மேகங்கள் தவழ்தற்குரியமராமரங்களைத்தொளைத்து,மிகுந்தவொளியையுடைய வஜ்ராயுதத்தையுடையவனாகிய இந்திரனது மகனாகிய வாலியைக் கோவித்துக் கொலைசெய்து, உலகமுழுதும் அதிரும்படி திரியாநின்ற சேனையானது தன்னைச்சூழ்ந்துவர, அநுமானால் அறியவேண்டியதை யறிந்துகொண்டு நிகரற்ற கடலின்மீது ஒருபாணத்தைச் செலுத்திச் சஞ்சரிக்க வழியுண்டாக்கி.

(வி - ரை.) கனந்தவழ் என்ற விசேஷணத்தால் மராமரங்களின் உயர்வு தோன்றுகின்றது. சேனை-வாநரசேனை,கடற்கண் என்றது சமுத்ரராஜன் மேல் என்றபடி. அநுமன்-ஒருவாநரன். இவன் சுக்ரீவனுக்கு மந்திரி. ஸ்ரீராம தூதன். இவன் அஞ்சனையென்னும் வாநரஸ்த்ரீயாயிருந்த ஒரு அப்ஸரசு வயிற்றில் வாயுதேவனது அநுக்ரஹத்தாற்பிறந்தவன், இவன் பிறந்தவுடனே பாலசூரியனைக்கண்டு இதுஒருகனியென்று நினைத்து உண்ணத்தாவும்போது இந்திரன் தன் வஜ்ராயுதத்தினால் இவனது இடதுகன்னத்தில் அடித்தான், அதனால் இவனுக்கு அநுமான் என்னும் பெயருண்டாயிற்று. (கஅள)

இலங்கையுட் புகுந்து தசமுக னவனுக் கிளவல்விண் ணிறைய வன் பகைமுற், பொலங்கழன் மைந்தர் மற்றையோ ரையும் வெம் போர்க்களத் தவித்துவீ டணற்கு, நலங்கெழு முரிமை யரசளித் துலகி னாட்டுகற் பரசியை மீட்டு, நிலம்புக ழயோத்தியடைந்தர சளித்த விராகவ நின்னடி போற்றி.

(ப - ரை.) இலங்கையுள்புகுந்து - இலங்கையினுள்ளே பிரவேசித்து, தசமுகன் - பத்து முகங்களையுடையவனாகிய ராவணன், அவனுக்கு இளவல்- அவனுக்குத் தம்பியாகிய கும்பகர்ணன், விண் இறையவன் பகை - சுவர்க்க லோகாதிபதியாகிய இந்திரனுக்குப்பகைவன் (இந்திரசித்து), முன் - முதலாகிய, பொலம்கழல் மைந்தர்-பொற்கழலணிந்த புதல்வர், மற்றையோரையும்- மற்றுமுள்ளவர்களையும், வெம்போர்க்களத்து அவித்து - வெவ்விய யுத்தகளத்திற்கொன்று, வீடணற்கு - விபீஷணாழ்வானுக்கு, நலம் கெழும்-நன்மைபொருந்திய, உரிமை-உரிமையாகிய, அரசு அளித்து - அரசாட்சியைக்கொடுத்து, உலகில் - உலகத்தில், நாட்டு - நிலைநிறுத்தப்பட்ட, கற்பு அரசியை மீட்டு - கற்புக்கரசியாகிய சீதாபிராட்டியைச் சிறையினின்றும் மீட்டு, நிலம் புகழ் - எல்லா நிலத்தாராலும் புகழப்பெற்ற, அயோத்தி அடைந்து - அயோத்யா நகரத்தையடைந்து, அரசு அளித்த - அரசாட்சிசெய்த, இராகவ-ஸ்ரீராகவனே, நின் அடி - உன் திருவடிக்கு, போற்றி - நமஸ்காரம். எ - று.

(பொ-ரை.) இலங்கையினுள்ளேபிரவேசித்து, பத்துமுகங்களையுடையவனாகிய ராவணன்,அவனுக்குத் தம்பியாகிய கும்பகர்ணன் சுவர்க்கலோகாதிபதியாகிய இந்திரனுக்குப்பகைவன்(இந்திரசித்து)முதலாகிய பொற்கழலணி

ந்த புதல்வர் மற்றுள்ளவர்களையும் வெவ்விய யுத்தகளத்திற்கொன்று,விபீஷ ணாழ்வானுக்கு நன்மைபொருந்தியஉரிமையாகிய அரசாட்சியைக்கொடுத்து, உலகத்தில் நிலைநிறுத்தப்பட்டகற்புக்கரசியாகிய சீதாபிராட்டியைச் சிறையி னின்றும் மீட்டு, எல்லா நிலத்தாராலும் புகழப்பெற்ற அயோத்யாநகரத்தை யடைந்து அரசாட்சிசெய்த ஸ்ரீராகவனே,உன் திருவடிக்குநமஸ்காரம். எ-று.

(வி - ரை.) வீடணன் - விபீஷணன், (ராவணனுக்குத்தம்பி) இராக வன் - ரகுவமிசத்தில் அவதரித்தவன். (கஙஅ)

மல்லலம் புவனம் புகழ்வசு தேவன் மயிலியற் றேவகி பிறருக், கொல்லரும் வனப்பி னுரோகணி யிவர்கட் கொருமக வாவவ தரித்துக், கொல்லுமா குறித்த பிரலம்பன் முதலோர்க் கூற்றுணக் கொடுத்துயிர் புரக்குஞ், சொல்லருஞ் சீர்த்திப் பளிக்குரு வமைந்த தூயவ நின்னடி போற்றி.

(ப - ரை.) மல்லல்-வளம்பொருந்திய, அம்-அழகாகிய, புவனம் புகழ்-உலகத்தாரால் புகழப்பட்ட, வசுதேவன் - வசுதேவன், மயில் இயல் - மயிற் சாயலையுடைய, தேவகி - தேவகிதேவி, பிறருக்கு - அந்நியருக்கு, ஒல் அரும் வனப்பின் - அமைதற்கரிய அழகினையுடைய, உரோகணி-ரோஹிணீதேவி, (என்னும்) இவர்கட்கு - இவர்களுக்கு, ஒருமகவு ஆ அவதரித்து-ஒரு புதல்வ னாயவதரித்து, கொல்லும் ஆ குறித்த - கொல்லநினைத்த, பிரலம்பன் முத லோர்-பிரலம்பன் முதலானோரை, கூற்று உண்ண கொடுத்து-யமனுண்ணும் படி கொடுத்து, உயிர் புரக்கும்-உயிர்களைக்காக்கின்ற, சொல் அரு சீர்த்தி - சொல்லுதற்கரிதாகிய கீர்த்தியையுடைய, பளிங்கு உரு அமைந்த - ஸ்படிக ரூபம் அமையப்பெற்ற, தூயவ-பரிசுத்தனே,நின் அடி-உன் திருவடிகளுக்கு, போற்றி - நமஸ்காரம். எ - று.

(பொ - ரை.) வளம்பொருந்திய அழகாகிய உலகத்தாரால் புகழப்பட்ட வசுதேவன், மயிற்சாயலையுடைய தேவகிதேவி, அந்நியருக்கு அமைதற்கரிய அழகினையுடைய ரோஹிணீதேவி (என்னும்) இவர்களுக்கு ஒரு புதல்வனா யவதரித்து, கொல்லநினைத்த பிரலம்பன் முதலானோரை யமனுண்ணும்படி கொடுத்து உயிர்களைக்காக்கின்ற சொல்லுதற்கரிதாகிய கீர்த்தியையுடைய ஸ்படிகரூபமமையப்பெற்ற பரிசுத்தனே, உன் திருவடிகளுக்கு நமஸ்காரம்.

(வி - ரை.) வசுதேவன் - ஆநகதுந்துபி. இவன் சூரனுக்கு மகன். க்ரு ஷ்ண பலராமர்களுக்குத்தந்தை. தேவகி-வசுதேவன் மனைவி, ஸ்ரீ க்ருஷ்ண னுக்குத்தாய். இவளுக்குப் பெரியதந்தையின் மகன் கம்ஸன். இவளது எட் டாவது மகனாகிய க்ருஷ்ணன் தன்னைக் கொல்லுவானென்று ஆகாசவாணி சொல்லக்கேட்டு, இவளைக்கணவனோடு நெடுங்காலம் சிறைவைத்திருந்தான். அப்பொழுது இவளுக்கு ஆறு புதல்வர்கள் பிறந்தார்கள். கம்ஸன் சிறிதும் இரக்கமில்லாதவனாய் அந்தப்பிள்ளைகளை பிறந்தவுடனே அவர்களைக்கொன் றான். ஏழாவது கர்ப்பத்தை திருமாலின் கட்டளைப்படியே யோகநித்திரையா கிய மாயாதேவி சங்கர்ஷித்து ரோஹிணீதேவியின் கர்ப்பத்திற் சேர்த்தது.

அப்பொழுது கர்ப்பம் சிதைந்துபோயிற்றென்றெண்ணிக் கம்ஸன் சும்மா இருந்துவிட்டான். அதன்பிறகு தேவகிதேவி எட்டாவது கர்ப்பம் வாய்த்து ஸ்ரீக்ருஷ்ணமூர்த்தியைப்பெற்றாள் தேவகிதேவி அதிதியின் அவதாரமென்றும் சொல்லுவார்கள். ரோஹிணி-வசுதேவன் மனைவி. பலராமனுக்குத்தாய், பிரலம்பன்-ஒரு அசுரன். இவன் பலராமனைக்கொல்லவேண்டுமென்று நினைத்துக் கோபாலரூபமாய் அவனோடு விளையாடவந்து அவனாலேயே கொல்லப்பட்டான். பலராமன்வெண்ணிறமாதலால் 'பளிக்குருவமைந்தாயவ' என்றார்.

பாவடிக் களிற்றுப் படையுடைக் கஞ்சன் பரித்துறை மதுரா மா நகரி, லாவணித் திங்க ளள்ளிருட் பக்கத் தட்டமி தனிலருங் கற்பின், மாவகிர்க் கருங்கட் டேவகி வயிறு வாய்த்திடக் கால்செறி கழுன்று, மேவுறப் பணிந்த புகழ்வசு தேவன் மென்மலர்த் தடங்கர மடைந்து.

(ப - ரை.) பாவுஅடி - பரவிய அடியையுடைய, களிறபடைஉடை-யானைப்படையையுடைய, கஞ்சன் -கம்ஸனது, பரித்துறை-குதிரைப்பந்தியில், மதுராமாநகரில் - மதுராமாநகரத்தில், ஆவணிதிங்கள் - ஆவணிமாசம், அள் இருள்பக்கத்து - அள்ளிக்கொள்ளத்தகுந்த இருளையுடைய க்ருஷ்ணபக்ஷத்தின், அட்டமிதனில் - அஷ்டமியில், அருகற்பின் - அரியகற்பினையும், மாவகிர்கருகண் - மாவடுவகிர்போன்ற கரியகண்களையுமுடைய, தேவகிவயிறுவாய்த்திட - தேவகிதேவியின் வயிற்றில்பிறக்க, கால்செறிகழன்று - கால்விலங்குகழன்று, மேவுறபணிந்த - பொருந்திப்பணிந்த, புகழ் - புகழையுடைய, வசுதேவன் - வசுதேவனது, மெல்மலர் - மெல்லியமலர்போன்ற, தடம் - பெரிய, கரம்அடைந்து - கையினைச்சேர்ந்து. எ - று.

(பொ - ரை.) பரவிய அடியையுடைய யானைப்படையையுடைய கம்ஸனது குதிரைப்பந்தியில், மதுராமாநகரத்தில் ஆவணிமாசம், அள்ளிக்கொள்ளத்தகுந்த இருளையுடைய க்ருஷ்ணபக்ஷத்தின் அஷ்டமியில், அரியகற்பினையும் மாவடுவகிர்போன்றகரிய கண்களையுமுடைய தேவகிதேவியின் வயிற்றில் பிறக்க, கால்விலங்குகழன்று பொருந்தப்பணிந்தபுகழையுடையவசுதேவனது மெல்லியமலர்போன்ற பெரியகையினைச்சேர்ந்த. எ - று.

(வி - ரை.) இச்செய்யுள்முதல், ககூ௭ - வது செய்யுளளவையும் ஸ்ரீக்ருஷ்ணவதாரவைபவமாதலால், இச்செய்யுள் முதலியவற்றிலுள்ள அடைந்து முதலிய வினையெச்சங்கள் ககூ௭ - வது செய்யுளிறுதியிலுள்ள அளித்த என்னும் வினைகொண்டன, க்ருஷ்ணபக்ஷத்தை அபரபக்ஷம் என்றும் கூறுவர். செறி - விலங்கு, மதுரா - வடமதுரா.        (கசூ௦)

காவல்செய் புதவும் யமுனையு நடைவை கடிந்தினி திருவிளையாடுருவக், கோவலர் பாடி நந்தகோன் மனையிற் கோதில்சற் பகோமாதாயின் றெடுத்த, மாவலர் கதுப்பின் மாயையதான் பிறந்த மனையுறப் போக்குபு புகுந்து, தாவரு மகிழ்ச்சி யாவரு மடையத் நடையுற வளர்தரு நாளில்.

(ப - ரை.) காவல்செய்புதவும்-காவலைச்செய்கிறகதவும், யமுனையும்-கடவுமரமும், நடவை - வழியாக, கடிது - விரைவில், இனிது-இனிதாக, இருளிடைஉதவ - இருட்டில்உதவிசெய்ய, கோவலர்பாடி - திருவாய்ப்பாடியில், நந்தகோன்மனையில் - நந்தகோபாலனதுவீட்டில், கோதுஇல்-குற்றமில்லாத, கற்பு - கற்பினையுடைய, அசோதைஈன்றெடுத்த - யசோதையானவள்பெற்றெடுத்த, மாஅலர்கதுப்பின் - வண்டுகள்மொய்க்கின்ற கூந்தலையுடைய, மாயை - மாயை, தான்பிறந்தமனை - தான்பிறந்தவீட்டில், உறபோக்குபு - புகச்செலுத்தப்பட்டு, புகுந்து - பிரவேசித்து, யாவரும் - எல்லாரும், தாஅருமகிழ்ச்சிஅடைய - கெடாதமகிழ்ச்சியையடைய, தடைஅற - தடையில்லாமல், வளர்தரும்நாளில் - வளராநின்றகாலத்தில். எ - று.

(பொ - ரை.) காவலைச்செய்கிறகதவும் கடவுமரமும்வழியாக விரைவில் இனிதாக இருட்டில் உதவிசெய்ய திருவாய்ப்பாடியில்நந்தகோபாலனதுவீட்டில் குற்றமில்லாத கற்பினையுடைய யசோதையானவள் பெற்றெடுத்த வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடையமாயை தான்பிறந்தவீட்டில் புகச்செலுத்தப்பட்டு பிரவேசித்து எல்லாரும் கெடாதமகிழ்ச்சியையடையத் தடையில்லாமல் வளராநின்றகாலத்தில். எ - று.

(வி - ரை.) மா - வண்டு, கதுப்பு - கூந்தல், புதவு - கதவு, யமுனை - கடவுமரம், கோவலர் - ஆயர், தா - கெடுதல். முதனிலைத்தொழிற்பெயர், நடவை-வழி, ஈன்றெடுத்த-ஒருசொல்பெற்றவென்னும்பொருளது, போக்குபு-செய்பு என்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம், இது செயப்பாட்டுவினைப்பொருளில்வந்தது. (கசச)

மாயையி னறிந்த மாதுலன் விடுக்க வந்தபூ தனையுயிர் சவட்டிப், பாயமென் சுவைய பண்ணிகா ரம்பெய் பண்டிநுண் டுகள்பட வுதைத்து, வாயுவிற் சுழன்று கொண்டுசெ லரக்கன் மாய்தர நிலத்திடை வீழ்த்தி, யாய்தொடிப் புகழ்த்தாய் காணியுன் றடங்கலுங் காட்டிபு மறைந்து.

(ப - ரை.) மாயையின் அறிந்த - மாயையினாலுணர்ந்த, மாதுலன் - மாமனாகிய கம்ஸன், விடுக்க - அனுப்ப, வந்தபூதனை - வந்தபூதனையின், உயிர்சவட்டி - உயிரைவாட்டி, பாயமெல்சுவைய - மிருதியாகிய சுவையுள்ள, பண்ணிகாரம்பெய்பண்டி - பண்ணிகாரம் நிறைக்கப்பெற்றவண்டில், நுண்துகள்பட உதைத்து - நுண்ணிய பொடியாகவுதைத்து, வாயுவின் - காற்றுப்போல, சுழன்றுகொண்டுசெல் - சுழன்றுகொண்டுபோகிற, அரக்கன் - அரக்கனானவன், மாய்தர - மடியும்படி, நிலத்திடைவீழ்த்தி - பூமியில் விழச்செய்து, ஆய்தொடி - ஆராய்ந்தெடுத்தவளையலையும், புகழ் - புகழையுமுடைய, தாய்காணிய - தாயானவள் காணும்படி, தன்உள் - தனக்குள்ளே, அடங்கலும் - எல்லாவுலகங்களையும், காட்டிபு - காட்டி, மறைந்து-ஒளித்து.

(பொ - ரை.) மாயையினாலுணர்ந்த மாமனாகிய கம்ஸன் அனுப்பவந்த பூதனையின் உயிரைவாட்டி, மிருதியாகிய சுவையுள்ள பண்ணிகாரம் நிறைக்

கப்பெற்றவண்டில் நுண்ணிய பொடியாகவுதைத்து, காற்றைப்போலச்சுழன்று கொண்டுபோகிற அரக்கனானவன் மடியும்படி பூமியில் விழச்செய்து ஆராய்ந் தெடுத்தவளையலையும் புகழையுமுடைய தாயானவள் காணும்படி தனக்கு ள்ளே எல்லாவுலகங்களையும் காட்டியொளித்து. எ - று.

(வி - ரை.) பூதனை - கம்ஸனேவலால் ஸ்ரீகிருஷ்ணனை நச்சுமுலையூட்டிக்கொல்ல வந்த ஓரரக்கி. பண்ணிசாரம் பெய்பண்டி - பலவகையான அப்பவர்க்கம் பெய்தசகடரூபமாய் வந்த ஓரசுரன், இவனும் கம்ஸனேவலால் வந்தவன், இவன்பேர் சகடாசுரன். வாயுவிற்சுழன்றுகொண்டு செலரக்கன் என்றது த்ருணாவர்த்தனை, இவன் சுழற்காற்றாய் வந்து கண்ணனையெடுத்துக் கொண்டு ஆகாயத்திற்சென்று அவரால் கொல்லப்பட்டுநிலத்தில் விழுந்தவன். ஆய்தொடிப்புகழ்த்தாய் என்றது யசோதைப் பிராட்டியை, தன்னுளடங்கலுங்காட்டுமறைத்தது யசோதை நீராட்டுங்காலத்தில். "வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுளே" என்றார் பெரியாரும்.

(கசஉ)

நந்தகோன் றடக்கை பற்றுபு குறுத்தாள் பெயர்த்துமென் மெல நடந் துலவிச், சந்தபார் தாதை சொற்படி வந்த வேதியன் றருபெயர் பெற்றுச், செந்துவர்க் கனிவா யன்னைபா லருந்துஞ் சேர்த்துபு வெண்டயி ருடைக்கு, மந்தவே லையிற்பால் பொங்குபு வழிதல் லாற்றுவா னகன்றமை நோக்கி.

(ப - ரை.) நந்தகோன் - நந்தகோபனது, தடக்கைபற்றுபு - பெரிய கையினைப்பற்றிக்கொண்டு, குறுதாள்பெயர்த்து - சிற்றடியைப்பெயர்த்து, மெல்மெல நடந்து உலவி - பையப்பையநடந்துலாவி, சந்தம் ஆர்தாதை சொற்படிவந்த - அழகுபொருந்திய தந்தையின் சொற்படியேவந்த, வேதியன் தருபெயர்பெற்று - பிராமணன்தந்த பெயரைப்பெற்று, செந்துவர் - செவந்தபவளம்போன்ற, கனிவாய் - கொவ்வைக்கனிபோலும் அதரத்தையுடைய தன்னை - தாயாகியயசோதை, பால்அருந்த சேர்த்துபு - பாலுண்ணச்சேர்ந்து, வெண்தயிர் உடைக்கும் - வெள்ளிய தயிரையுடைத்துக்கடைகின்ற, அந்த வேலையில் - அந்தச்சமயத்தில், பால்பொங்குபுவழிதல் - பால்பொங்கி வழிதலை, ஆற்றுவான் - தணிக்கும்பொருட்டு, அகன்றமைநோக்கி - நீங்கினதைப்பார்த்து. எ - று.

(பொ - ரை.) நந்தகோபனது பெரியகையினைப்பற்றிக்கொண்டு சிற்றடியைப்பெயர்த்து பையப்பையநடந்துலாவி, அழகு பொருந்திய தந்தையின் சொற்படியேவந்த பிராமணன் தந்தபெயரைப்பெற்று, செவந்தபவளம்போன்ற கொவ்வைக்கனிபோலும் அதரத்தையுடையதாயாகிய யசோதையாலுண்ணச்சேர்ந்து வெள்ளிய தயிரையுடைத்துக்கடைகின்ற அந்தச்சமயத்தில் பால்பொங்கி வழிதலைத்தணிக்கும்பொருட்டு நீங்கினதைப்பார்த்து. எ - று.

(வி - ரை.) உடைத்தல் - கடைதலெனினுமாம், பொங்குபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம், ஆற்றுவான் என்பதில் வான் எதிர்காலவினையெச்ச விகுதி.

(கசகூ)

அவ்விடத் திருந்த வெண்டயிர்க் குழிசி யனைத்தையு மத்தினு லுடைத்துச், செவ்விய வளையைத் திரட்டியுண் டடுத்தசெழுமனைப் புகுந்துறி வெண்ணெய், வவ்வுதற் குரன்மே னின்றுகன் மோதி வாய்ப் பெய்து பூசைக்குங் கொடுத்துக், கொவ்வையங் கனிவா யன்னைமென் றாம்பாற் குழிசெறி கறையொடு பிணிப்ப.

(ப-ரை.) அவ்விடத்து இருந்த - அவ்விடத்திலிருந்த, வெள்தயிர் குழிசி அனைத்தையும் - வெண்மையாகிய தயிரிருந்த மிடாக்களெல்லாவற்றையும், மத்தினுல் உடைத்து - மத்தைக்கொண்டு உடைத்து, செவ்விய அளையை - செவ்வியவெண்ணெயை, திரட்டிஉண்டு - திரட்டிவிழுங்கி, அடுத்தசெழுமனைபுகுந்து - அடுத்தவளவியவீட்டிற் பிரவேசித்து, உறிவெண்ணெய்வவ்வுதற்கு - உறியின்மேல் வைக்கப்பட்டிருந்த வெண்ணெயைக்கவர்தற்கு, உரல்மேல்நின்று - உரலின்மீதேறிநின்று, கல்மோதி - கல்லினுல் (வெண்ணெய்த்தாழியை) மோதியுடைத்து, வாய்பெய்து - வாயிலிட்டுக்கொண்டு, பூசைக்கும் கொடுத்து- (அங்கிருந்த) பூனைக்குங்கொடுத்து, கொவ்வை அம் கனிவாய் - கொவ்வையின் அழகியகனிபோலும் அதரத்தினையுடைய, அன்னை-தாயாகியயசோதை, தாம்பால்-தாம்புக்கயிற்றுல், குழிசெறி - குழியுள்ள, கறையொடுபிணிப்ப - உரலோடு கட்ட. எ - று.

(பொ - ரை.) அவ்விடத்திலிருந்தவெண்மையாகியதயிரிருந்தமிடாக்களெல்லாவற்றையும் மத்தைக்கொண்டுஉடைத்து,செவ்விய வெண்ணெயைத் திரட்டிவிழுங்கி,அடுத்தவளவியவீட்டிற் பிரவேசித்து உறியின்மேல்வைக்கப்பட்டிருந்தவெண்ணெயைக்கவர்தற்குஉரலின்மீதேறிநின்று,கல்லினுல் (வெண்ணெய்த்தாழியை) மோதியுடைத்து, வாயிலிட்டுக்கொண்டு, (அங்கிருந்த) பூனைக்குங்கொடுத்து,கொவ்வையின் அழகியகனிபோலும்அதரத்தினையுடைய தாயாகிய யசோதை தாம்புக்கயிற்றுல் குழியுள்ள உரலோடு கட்ட. எ-று.

(வி-ரை.) குழிசி-மிடா, செவ்விய-செவந்த, சிறந்த. உறிவெண்ணெய் வவ்வுதற்குரன்மேனின்றுஎன்றமையால்உறி எட்டாதவுயரத்திலிருந்ததென்பது பெறப்பட்டது, பூசை-பூனை, கறை-உரல், பிணித்தல்-கட்டுதல்.

மருதிரண் டொருவ யீர்த்திடைத் தவழ்ந்து மற்றவை மாற்றிய பின்னர்க், கருதுதற் கரிதா வனமடைந் தகனுங் கற்றினா மேய்த்திடு நாளி, லொருகருங் கன்று கொடுவிள வெறிந்தன் றருந்தயர் வாய்கிழித் தரவப், பொருவிய காயந் தொலைத்திடச் செருக்கள் பெட்டுற வாற்றுரை யன்றே.

(ப-ரை.) மருது இரண்டு ஒருவ-இரண்டு மருதமரங்களையும்,ஈர்த்து இடைதவழ்ந்து - இழுத்துக்கொண்டு அவற்றினிடையே தவழ்ந்து சென்று, அவைமாற்றியபின்னர்-அவற்றைமுறித்தபிறகு, கருதுதற்கரிதாவனம் அடைந்து - யாவரும் நினைத்தற்குரிய பிருந்தாவனத்தையடைந்து, அகனும் - நன்றாகிய, கன்றினம்-கன்றினங்களை, மேய்த்திடும் நாளில் - மேய்க்குங்காலத்தில், ஒருகருகன்றுகொடு-ஒருகருங்கன்றைக்கொண்டு, விளவு எறிந்து - விளா

ங்கனிவிழுவீசி, அங்குஉற்ற - அவ்விடத்துவந்த, புள்வாய்கிழித்து - பறவையின் வாயைக்கிழித்து, அரவம் - பாம்பினது, பெருகிய சாபம்தொலைத்து - மிகுதியாகிய சாபத்தை விமோசநம்செய்து, இடைச்சிறார்கள் - இடைச்சிறுவர்கள், பெட்புற - விரும்ப, ஆற்றஉண்டு - சுட்டுச்சோற்றையுண்டு. எ-று.

(பொ - ரை.) இரண்டுமருத மரங்களொடியும்படி இழுத்துக்கொண்டு அவற்றிடையேதவழ்ந்து சென்று அவற்றைமுறித்த பிறகு, யாவரும் நினைத்தற்குரிய பிருந்தாவனத்தையடைந்து, துள்ளுகிறகற்றினங்களை மேய்க்கிற காலத்தில், ஒருகருங்கன்றைக்கொண்டுவிளாங்கனிவிழுவீசி, அவ்விடத்துவந்த பறவையின் வாயைக்கிழித்து, பாம்பினது மிகுதியாகிய சாபத்தை விமோசநம்செய்து, இடைச்சிறுவர்கள் விரும்பக்கட்டுச்சோற்றையுண்டு. எ - று.

(வி - ரை.) பிருந்தாவநம்-யமுநாநதிதீரத்தில் வடமதுரைக்குச் சமீபத்திலுள்ள ஓர்வநம், கன்று என்றது வத்ஸாஸுரனை, புள் என்றது, பகாசுரனை.

மலர்மகன் கவர்ந்த கற்றினஞ் சிறுவர் மாயையிற் பண்டுபோலாக்கிக், கலவிய விடநீ ருண்டுட றுறந்த வுயிர்களுய்ந் திடக்கடைக் கண் பார்த், தலகிறிக் கொடுமைக் கட்செவிப் பணத்தி லடித்தல நிறுத்துபு நடித்துக், குலவுறு தந்தை யாய்ச்சிறார் தம்மை வளைவனக் கொழுந்தழ லயின்று.

(ப - ரை.) மலர்மகன்கவர்ந்த - பிரமதேவன் கவர்ந்துகொண்டுபோன, கற்றினம் சிறுவர் - கற்றினத்தையும் சிறுவரையும், மாயையின் - மாயையினால், பண்டுபோல் ஆக்கி - முன்போலச்செய்து, கலவிய - கலந்த, விடநீர் உண்டு - விஷநீரைக்குடித்து, உடல்துறந்த - உடம்பைநீங்கின, உயிர்கள் உய்ந்திட - உயிர்கள் பிழைக்கும்படி, கடைக்கண்பார்த்து - கடைக்கண்ணால் நோக்கி, அலகுஇல் - அளவில்லாத, தீ கொடுமை - தீக்கொடுமையையுடைய, கட்செவி - பாம்பின், பணத்தில் - படத்தின்மேல், அடித்தலம் நிறுத்துபு - திருவடியைநிறுத்தி, நடித்து - நடனஞ்செய்து, குலவுறு - விளங்குகின்ற, தந்தை ஆய்ச்சிறார்தம்மை - தந்தையையும் இடைச்சிறுவரையும், வளை - சூழ்ந்துகொண்ட, கொழு - கொழுவிய, வனத்தழல் - தாவாக்கினியை, அயின்று - குடித்து.

(பொ - ரை.) பிரமதேவன் கவர்ந்து கொண்டுபோன கற்றினத்தையும் சிறுவரையும் மாயையினால் முன்போலச்செய்து, கலந்த விஷநீரைக்குடித்து உடம்பைநீங்கின உயிர்கள் பிழைக்கும்படி கடைக்கண்ணால் நோக்கி, அளவில்லாத தீக்கொடுமையையுடைய பாம்பின்படத்தின்மேல் திருவடியை நிறுத்தி நடனஞ்செய்து விளங்குகின்ற தந்தையையும் இடைச்சிறுவரையும் சூழ்ந்துகொண்ட கொழுவியதாவாக்கினியைக்குடித்து, எ - று.

(வி - ரை.) திருமாலினது திருவுந்திக்கமலத்தில் தோன்றினமையால் பிரமனை மலர்மகன் என்றார், கலவியவிடநீர்-விஷங்கலந்த நீர், தீக்கொடுமை-விஷாக்கினியின் கொடுமை, கட்செவியென்றது காளியனென்னும் பாம்பை. தாவாக்கினி - காட்டுத்தீ.

(கசை)

பனிநிலா முறுவ லாய்ச்சியர் மயங்கப் பவளவாய் வேய்ங்குழல் வைத்துக், கனிநலத் தவர்நீ ராட்டயர் காலைக் கலையெலாங் கவர்ந்திணர்க் குருந்தி, லினிதுற வேறிக் கரைமிசை யிவர்ந்தோர்க் கெடுத்தெடுத் தந்துகி லீந்து, நனிமலர்ச் சோலையகம்புற முருவம் பலகொடன் னவர்நல முண்டு.

(ப - ரை.) பனிநிலாமுறுவல்-குளிர்ச்சியாகியநிலவுபோன்ற தந்தபந்தியையுடைய, ஆய்ச்சியர் - கோபிகைகள், மயங்க-மயங்கும்படி, வேய்குழல்-வேய்ங்குழலை, பவளம்வாய்வைத்து - பவளம்போலும் செவ்வாயில்வைத்து, கனிநலத்து - மிகுந்த அழகையுடைய, அவர்-அந்தக்கோபிகைகள், நீராட்டு அயர்காலை - நீராடலைச்செய்யுங்காலத்தில், கலை எல்லாம் கவர்ந்து - (அவர்களுடைய) ஆடைகளெல்லாவற்றையும் வாரிக்கொண்டு, இணர்-மலர்க்கொத்துக்களையுடைய, குருந்தில்-குருந்தமரத்தின்மேல், இனிது உற ஏறி-இனிதாக ஏறி, கரைமிசை இவர்ந்தோர்க்கு - கரைமேல்வந்து நின்றவர்களுக்கு, அம் துகில்-அழகிய ஆடைகளை, எடுத்து எடுத்து ஈந்து - எடுத்தெடுத்துக்கொடுத்து, நனிமலர்சோலை - மிகுதியாகிய மலர்களையுடைய சோலையின், அகம் புறம் - அகத்திலும் புறத்திலும், பல உருவம்கொடு-அநேகரூபங்களெடுத்து, அன்னவர்நலம் உண்டு - அந்தக்கோபிகைகளின் சுகத்தையநுபவித்து. எ-று.

(பொ - ரை.) குளிர்ச்சியாகிய நிலவுபோன்ற தந்தபந்தியையுடைய கோபிகைகள் மயங்கும்படி வேய்ங்குழலைப்பவளம்போலும் செவ்வாயில் வைத்துமிகுந்த அழகையுடைய அந்தக்கோபிகைகள் நீராடலைச்செய்யுங்காலத்தில் (அவர்களுடைய) ஆடைகளெல்லாவற்றையும் வாரிக்கொண்டு மலர்க்கொத்துக்களையுடைய குருந்தமரத்தின்மேல் இனிதாகஏறி, கரைமேல்வந்து நின்றவர்களுக்கு அழகிய ஆடைகளையெடுத்தெடுத்துக்கொடுத்து, மிகுதியாகிய மலர்களையுடைய சோலையின் அகத்திலும் புறத்திலும் அநேகரூபங்களெடுத்து அந்தக்கோபிகைகளின் சுகத்தையநுபவித்து. எ - று.

(வி - ரை.) இவர்தல் - ஏறுதல், முறுவல் - பல், நலம் - அழகு, போகசுகம். இணர் - பூங்கொத்து. (௩௬௭)

தவம்பயின் முனிவர் பன்னிய ரளித்த சமைந்தவின் சுவையுறுப் பினையுண்டு, [illegible] வாசவ னுவந்துகொள் பூசனை [illegible] கொண்டு [illegible] மழை [illegible] கொடுத் ததற்குச், சிவந்தகண் ணரக்கன் [illegible] [illegible] நிகழுற [illegible], [illegible] காணமலை குக் தங் காட்டிய நெடுமாலை மறந்து.

(ப - ரை.) தவம்பயில் - தவஞ்செய்கிற, முனிவர்பன்னியர் அளித்த - முனிபத்னிகள் கொடுத்த, சமைந்த - சமைக்கப்பட்ட, இன்சுவை - இனிய சுவையுள்ள, உறுப்பினை உண்டு - உணவையுண்டு, வாசவன் - இந்திரன், உவந்துகொள் - விரும்பி யேற்றுக்கொள்ளுகிற, பூசனை - பூசையினை, கொண்டு - ஏற்றுக்கொண்டு, கடு மழை - மிகுந்தமழையை, வரக்கொடுத்து - [illegible], சிவந்தகண் - சிவந்த கண்களையுடைய,

அசுரன்-அசுரனானவன், கொடுசெல்லும்-கொண்டுபோகிற, தந்தை-தந்தையானவன், திருமுறமீட்டு-திரும்பும்படிமீட்டு, அவனும்-அவனும், விலங்கஅண்டர்களும் - உயர்ந்த ஆயர்களும், காண-காணும்படி, வைகுந்தம்-வைகுண்டத்தை, காட்டுபு-காட்டி, ஞெரேலெனமறைத்து-விரைவாகமறைத்து. எ - று.

(பொ - ரை.) தவஞ்செய்கிற முனிபத்நிகள்கொடுத்த சமைக்கப்பட்ட இனியசுவையுள்ள உணவையுண்டு, இந்திரன் விரும்பியேற்றுக்கொள்ளுகிற பூசையினையேற்றுக்கொண்டு, மிகுந்த மழையை மலையைக்கொண்டு தடுத்து, செவந்த கண்களையுடைய அசுரனானவன் கொண்டுபோகிற தந்தையானவன் திரும்பும்படிமீட்டு, அவனும் உயர்ந்த ஆயர்களும் காணும்படி வைகுண்டத்தைக்காட்டி விரைவாகமறைத்து. எ - று.

(வி - ரை.) மழை - கல்மழை, வரை - கோவர்த்தநமலை, அண்டர்கள்- இடையர்கள். தான் - அசை. (௧௪௮)

இரும்பசுக் காவல் செய்யுமா வயினல் லிராதைதன் னெழினலங் கவர்ந்து, விரும்புபன் மாதர் குழாத்தொடும் பாடி மேவுபு தந்தையைக் கவரு, மரும்புபல் லரவைக் கான்மிதித் தகற்றியமைதரு கானமீட் டடைந்து, வரும்பெருஞ் சங்க சூடனைமாய்த்து மணியினை முன்னவற் களித்து.

(ப - ரை) இருபசுக்காவல்செய்யும் - பெரிய பசுக்காவல் செய்கிற, ஆவயின் - அவ்விடத்தில், நல் - நன்மைபொருந்திய, இராதை - ராதையின், எழில்நலம் கவர்ந்து - அழகினது நலத்தைக்கவர்ந்து, விரும்பு - விரும்புகிற, பல்மாதர்குழாத்தொடும் - பலமாதர் கூட்டத்தோடு, பாடிமேவுபு - திருவாய்ப்பாடியையடைந்து, தந்தையைகவரும் - தந்தையைக்கவர்கின்ற, அரும்பு பல்அரவை - அரும்புகிறபற்களையுடைய பாம்பை, கால்மிதித்து அகற்றி - காலால்மிதித்துநீக்கி, அமைதருகானம் மீட்டு அடைந்து - பொருந்திய காட்டைமறுபடியுஞ்சேர்ந்து, வரும் - அங்குவந்த, பெரு - பெரிய, சங்கசூடனை மாய்த்து - சங்கசூடனைக்கொன்று, மணியினை - ரத்நத்தை, முன்னவற்கு அளித்து - தமையனுக்குக்கொடுத்து. எ - று.

(பொ - ரை.) பெரிய பசுக்காவல்செய்கிற அவ்விடத்தில், நன்மை பொருந்திய ராதையின் அழகினது நலத்தைக்கவர்ந்து, விரும்புகிற பலமாதர் கூட்டத்தோடு திருவாய்ப்பாடியை யடைந்து, தந்தையைக்கவர்கின்ற அரும்புகிறபற்களையுடைய பாம்பைக்காலால் மிதித்துநீக்கி, பொருந்தியகாட்டை மறுபடியுஞ்சேர்ந்து அங்குவந்த பெரியசங்கசூடனைக்கொன்று ரத்நத்தைத் தமையனுக்குக்கொடுத்து. எ - று.

(வி-ரை) சங்கசூடன்-ஒருகுஹ்யகன், இவன்ப்ருந்தாவநத்திலிருந்தகோபிகைகளை ஒருகாலத்தில் வடதிசைக்குக்கொண்டுபோய் ஸ்ரீகண்ணபிரானால் மடிந்தவன், இவன்குபேரபடர்களிலொருவன், முன்னவன் என்றது பலராமனை.

நாரத முனிவன் சொற்கொடு கஞ்சன் செலுத்திட நண்ணிய கேசி, யார்தரு மற்றோ ருயிர்குடித் தன்னா னமர்தரு மதுரையை யுடைந்து, சார்தரு மீரங் கொல்லியைத் தடியா வெழில்கலன் றந்தவற் குதவி, யீர்மதுக் கண்ணி யன்புட னளித்தாற் கினிய த னின்பவீ டளித்து

(ப - ரை.) நாரதமுனிவன் சொற்கொடு - நாரதமுனிவனது சொல்லைக்கொண்டு. கஞ்சன்செலுத்திட - கஞ்சன் அனுப்ப, நண்ணிய - வந்த, கேசி கேசி, ஆர்தருமற்றோர் - அவனோடுசேர்ந்த மற்றையர், (இவர்களுடைய) உயிர்குடித்து - உயிரைக்கவர்ந்து, அன்னான் அமர்தரு - அவன்வாழ்கிற, மதுரையை அடைந்து - வடமதுரையைச்சேர்ந்து, சார்தரும் - அங்கேவந்த, ஈரங்கொல்லியை - வண்ணானை, தடியா - கொன்று, எழில் - அழகை, கலன்தந்தார்க்கு உதவி - ஆபரணங்கள் கொடுத்தவனுக்குத்தந்து, ஈர்மதுகண்ணி - குளிர்ச்சியும் தேனுமுள்ள பூமாலையை, அன்புடன் அளித்தாற்கு - அன்போடு சமர்ப்பித்தவனுக்கு, இனிய - இனிதாகிய, தன் - தனது, இன்பவீடு அளித்து - பேரின்பத்தையுடைய முத்தியைக்கொடுத்து. எ - று.

(பொ - ரை.) நாரதமுனிவனது சொல்லைக்கொண்டு கஞ்சன் அனுப்ப வந்தகேசி, அவனோடுசேர்ந்த மற்றையர் (இவர்களுடைய) உயிரைக்கவர்ந்து, அவன் வாழ்கிற வடமதுரையைச்சேர்ந்து, அங்கேவந்த வண்ணானைக்கொன்று அழகை ஆபரணங்கள் கொடுத்தவனுக்குத்தந்து, குளிர்ச்சியும் தேனுமுள்ள பூமாலையை அன்போடு சமர்ப்பித்தவனுக்கு இனிதாகிய தனது பேரின்பத்தையுடைய முத்தியைக்கொடுத்து. எ - று.

(வி-ரை.) கேசி-குதிரையுருவாய்வந்து ஸ்ரீகண்ணபிரானோடுபோரிட்டு மடிந்த ஒரு அசுரன், ஈர்மதுக்கண்ணி யன்புடனளித்தவன் - மாலாகாரன்.

சாந்தநன் களித்த கூனியை யணங்காச் சமைத்துடன் வேத்தவை புகுந்து, காந்தெரி கவிழ்க்குங் கட்கடைக் களிறு கல்லடு திணிபுய மல்லர், நாந்தக வாண்மைக் கஞ்சனை முன்னோர் நடுங்கியுள் ளுயிர்விடக் கடிந்து, வாய்ந்தநன் பெருஞ்சீ ருக்கிரசேனற் கரசுரி மைத்திறம் வகுத்து.

(ப - ரை.) சாந்தம் - சந்தனத்தை, நன்கு அளித்த - நன்றாகக்கொண்டுவந்துசமர்ப்பித்த, கூனியை - கூனியை, அணங்கு ஆ சமைத்து - தெய்வப்பெண்போல அழகுடையவளாகச்செய்து, உடன் - உடனே, வேத்து அவை புகுந்து - ராஜசபையையடைந்து, காந்து எரிகவிழ்க்கும் - எரிகின்ற நெருப்பைக்கொட்டுகிற, கண்கடை - கடைக்கண்ணையுடைய, களிறு - யானை, கல்அடு - மலையைவென்ற, திணிபுயம் - வலியதோள்களையுடைய, மல்லர் - மல்லர்கள், நாந்தகம் - வாளாயுதத்தை, ஆண்மை-ஆளுந்தன்மையையுடைய, கஞ்சனை முன்னோர்-கஞ்சனை முதலானோர், உள்நடுங்கி - மனம்நடுங்கி, உயிர்விட - உயிர்விடும்படி, கடிந்து - கொன்று, வாய்ந்த-பொருந்திய, நல்-நல்ல, பெருசீர் - பெருஞ்சிறப்பையுடைய, உக்கிரசேனற்கு-உக்ரசேனனுக்கு, அரசுஉரிமை திறம்வகுத்து - அரசுரிமையையேற்படுத்தி. எ - று.

(பொ - ரை.) சந்தநத்தை நன்றாகக்கொண்டு வந்துசமர்ப்பித்த கூனியைத்தெய்வப்பெண்போல அழகுடையவளாகச்செய்து, உடனே ராஜசபையையடைந்து, எரிகின்ற நெருப்பைக்கொட்டுகிற கடைக்கண்ணையுடைய யானை, மலையைவென்றவலிய தோள்களையுடைய மல்லர்கள், வாளாயுதத்தையாளுந்தன்மையையுடைய கஞ்சனை முதலானோர் மனம் நடுங்கி உயிர்விடும்படிகொன்று, பொருந்திய நல்ல பெருஞ்சிறப்பையுடைய உக்ரசேநனுக்கு அரசுரிமையை யேற்படுத்தி. எ - று.

(வி - ரை.) கூனி - குப்ஜை, இவள் கம்ஸனுக்குச்சந்தந முதலிய பரிமளவர்க்கம் கொண்டுவந்து கொடுக்கும் தாசி, களிறு என்றது குவலயாபீடமென்னும் யானையை, மல்லர் என்றது சாணூரன் முஷ்டிகன் என்றும் இரண்டுமல்லரை, நாந்தகவாண்மை என்பதற்கு வாட்போரினும் ஆண்மையினுஞ்சிறந்த என்றுரைப்பினுமாம், உக்ரசேநன் - வடமதுராநகரரசன், கம்ஸனுக்குத்தந்தை, தேவகனுக்குத்தமையன். (௬௰௧)

தந்தையுண் மகிழ்ந்து நூற்கடி முதலாஞ் சடங்குக ளியற்றுவித்திடலும், மைந்துடை யுணர்ச்சிச் சாந்திபற் சார்ந்து மறைமுதற் கலையெலா முணர்ந்து, வெந்திற லவுணன் வரைதிறங் கிழித்து விரிகதிர்ச் சங்கமொன் றெடுத்து, முந்தைநா ளிறந்த மதலையை மீட்டா சாரியன் தேவிமுன் வைத்து.

(ப - ரை.) தந்தை - தந்தையானவன், உள் மகிழ்ந்து - மனமகிழ்ந்து, நூற்கடிமுதலாம் சடங்குகள் இயற்றுவித்திடலும் - பூணூற்கலியாண முதலியசடங்குகளைச் செய்வித்தவுடனே, மைந்துடை உணர்ச்சி - சிறந்த நூலறிவினையுடைய, சாந்திபன் சார்ந்து - சாந்தீபனையடைந்து, மறைமுதல் - வேதமுதலாகிய, கலை எல்லாம் உணர்ந்து - நூல்களெல்லாவற்றையுமறிந்து, வெம்திறல் அவுணன் - வெவ்வியவெற்றியையுடைய அவுணனது, வரைதிறம் கிழித்து - மலைபோன்ற மார்பைப்பிளந்து, விரிகதிர்சங்கம் ஒன்று எடுத்து - பரந்த ஒளியையுடைய சங்கமொன்றையெடுத்து, முந்தைநாள் இறந்த - பூர்வகாலத்திலிறந்த, மதலையைமீட்டு - புதல்வனைமீட்டு, ஆசாரியன் தேவி முன்வைத்து - குருபத்நியினெதிரேவைத்து. எ - று.

(பொ - ரை.) தந்தையானவன் மனமகிழ்ந்து பூணூற்கலியாண முதலிய சடங்குகளைச்செய்வித்தவுடனே, சிறந்தநூலறிவினையுடைய சாந்தீபனையடைந்து வேதமுதலாகிய நூல்களெல்லாவற்றையுமறிந்து, வெவ்விய வெற்றியையுடைய அவுணனதுமலைபோன்ற மார்பைப்பிளந்து, பரந்த ஒளியையுடைய சங்கமொன்றையெடுத்து பூர்வகாலத்திலிறந்த புதல்வனைமீட்டு, குருபத்நியினெதிரேவைத்து. எ - று.

(வி - ரை.) கடி - மணம், நூல் - பூணூல், மைந்து - வலி, சாந்தீபன் - ஸ்ரீகண்ணபிரானுக்குவித்யாகுருவாகியஒர் வைதியன், வெந்திறலவுணன் என்றது பஞ்சஜநனென்னும்ராக்ஷஸனை, இவன்சாந்தீபன்மகனைப்பிரபாச தீர்த்தத்திற்குக்கொண்டுபோனதை ஸ்ரீகண்ணபிரான்கேட்டறிந்து இவனைக்கொன்று

இவனெலும்பைத் தனக்குச்சங்காயுதமாக்கிக்கொண்டு, குருபுத்ரனைக்கொண்டு வந்து குருபத்நிக்கெதிரேவைத்தனர், பஞ்சஜநனைதலாலும் பாற்செய்யப் பட்டதாதலால் ஸ்ரீ கண்ணபிரானது சங்கத்துக்குப்பாஞ்சஜந்யம்என்னும்பெயருண்டாயிற்று. (கருஉ)

கோவியர்த் தேற்ற வுத்தவற் போக்கிக் கூனிதன் னிளநலநுகர்ந்திட்
டேவியல் சாபத் திரிதராட் டிரன்பா லிலகுமக் குரூரனைப் போக்கி
மாவியற் றானைச் சராசந்த னோட மண்டமர் பதினெழு முறைசெய்
தோவியப் புரிசை மதுரையை முனிவ னுந்துகா லயவனன் வளைப்ப.

(ப - ரை.) கோவியர்தேற்ற-கோபியரைத்தேற்றும்பொருட்டு, உத்தவன்போக்கி - உத்தவனையனுப்பி, கூனிதன் இளநலம் நுகர்ந்திட்டு - கூனியின் இளமைச்சுகத்தையநுபவித்து, ஏவு இயல்சாபம் - ஏவப்பட்ட சாபத்தையுடைய, திருதராட்டிரன்பால் - திருதராஷ்டிரனிடத்தில், இலகும்-பிரகாசிக்கிற, அக்குரூரனைபோக்கி - அக்ரூரனையனுப்பி, மா இயல்தானை - பெருமைபொருந்திய சேனைகளையுடைய, சராசந்தன் ஓட - ஜராசந்தனதோற்று ஓடும்படி, மண்டு அமர் - மிகுதியாகிய போரை,பதினெழுமுறைசெய்து - பதினேழுதரம்செய்து, ஓவியம்புரிசை - சிற்பத்தொழிலினையுடைய மதில் சூழ்ந்த, மதுரையை - வடமதுரையை, முனிவன்உந்து - முனிவன்செலுத்தின, காலயவநன்வளைப்ப - காலயவநன்வளைத்துக்கொள்ள. எ - று.

(பொ - ரை.) கோபியரைத்தேற்றும் பொருட்டு உத்தவனையனுப்பி, கூனியின் இளமைச்சுகத்தையநுபவித்து, ஏவப்பட்ட சாபத்தையுடைய திருதராஷ்டிரனிடத்தில் பிரகாசிக்கிற அக்ரூரனையனுப்பி, பெருமைபொருந்திய சேனைகளையுடைய ஜராசந்தன்தோற்று ஓடும்படிமிகுதியாகிய போரைப் பதினேழுதரம்செய்து, சிற்பத்தொழிலினையுடைய மதில்சூழ்ந்த வடமதுரையை முனிவன் செலுத்தின காலயவநன்வளைத்துக்கொள்ள. எ - று.

(வி - ரை.) உத்தவன் - ப்ருஹஸ்பதிக்குச்சீடன், வசுதேவன் தம்பியாகிய தேவபாகனுக்கு மகன். அக்ரூரன் - ஸ்வபல்கனது மூத்தமகன், சாத்யகிக்குப்பாட்டன் மகன். சராசந்தன் - மகததேசத்தரசன். (கருங)

ஆர்திரைப் புணரி நடுவண்வள் துவரை யணிநக ரொன்றுள தாக்கிப், போரினுக் காற்றுன் போல்விரைந் தோடிப் பொங்குசீர் முசுகுந் தனுறங்கு, போர்வரைக் குகைபுட் புகுந்தவ னுற்றெவ் வுடல்பொடிப் பித்தமுன் னவனே, போர்கொடு மதுரை நின்றுவன் நிலைக் கேகுழிச் சராசந்தன் வளைப்ப.

(ப - ரை.) ஆர்திரை - நிரம்பிய அலைகளையுடைய, புணரிநடுவண் - கடலினடுவே, வள்துவரை - வளவியதுவாரகையென்கிற, அணிநகர் ஒன்று உளதாக்கி - அழகிய நகரமொன்றையுண்டாக்கி,போரினுக்கு-ஆற்றுன்போல்-போர்த்தொழிலுக்கு ஆற்றாதவன்போல, விரைந்து ஓடி - விரைவாயோடி, பொங்குசீர் - மிகுந்தசிறப்பினையுடைய, முசுகுந்தன் உறங்கும் - முசுகுந்தன்

தூங்குகிற, ஓர்வரைகுகையுள் - ஒருமலைக்குகையினுள்ளே, புகுந்து, நுழைந்து, அவனால் - அவனைக்கொண்டு, செவ் - பகைவனது, உடல்பொடிப்பித்து - உடலைப்பொடியாகச் செய்வித்து, முன்னவனோடு - தமையனோடு, ஏர்கெழுமதுரைநின்று - அழகுபொருந்திய மதுரையிலிருந்து, வள்துவரைக்கு ஏகுழி - வளவியதுவாரகைக்குப் போகும்போது, சராசந்தன்வளைப்ப - சராசந்தன் வளைத்துக்கொள்ள. எ - று.

(பொ - ரை.) நிரம்பிய அலைகளையுடைய கடலினடுவே வளவியதுவாரகையென்கிற அழகிய நகரமொன்றையுண்டாக்கி, போர்த்தொழிலுக்கு ஆற்றாதவன்போல விரைவாயோடி, மிகுந்தசிறப்பினையுடைய முசுகுந்தன் தூங்குகிற ஒருமலைக்குகையினுள்ளே நுழைந்து, அவனைக்கொண்டு பகைவனது உடலைப்பொடியாகச் செய்வித்து, தமையனோடு அழகு பொருந்திய மதுரையிலிருந்து வளவியதுவாரகைக்குப்போகும்போது, சராசந்தன்வளைத்துக்கொள்ள. எ - று.

(வி - ரை.) முசுகுந்தன் - மாந்தாதாவின் இளையமகன், இவன்தேவஹிதார்த்தம் நெடுநாள் விழித்திருந்து இளைத்து ஒருமலைக்குகையில் படுத்துக்கொண்டு இந்திரிய சஞ்சாரமில்லாமல் தூங்கிக்கொண்டிருந்தான், ஸ்ரீ கண்ணபிரான் அதையறிந்து தன்னைக்காலயவநன் துரத்திக்கொண்டு வந்தபோது அந்தமலைக்குகையில் நுழைந்தான், அந்தக்காலயவநனும் கூடவேநுழைந்து, அங்கேபடுத்துத்தூங்குகிற இவனைக்கண்ணனென்றெண்ணிக் காலினாலுதைத்தெழுப்பி இவனது கோவப்பார்வையால் நீறாயினன், பிறகு கண்ணபிரான் இவனுக்குத்தரிசநங்கொடுக்க, அவரை நமஸ்கரித்து நிற்கும்போது, கண்ணபிரான் இவனைநோக்கி, நீ, கந்தமாதநபர்வதத்திலுள்ள பதரிகாசிரமத்தையடைந்து தவஞ்செய்துகொண்டிருக்கக் கடவையென்று இவனுக்கு உபதேசித்தருளினன் என்பது புராணகதை. (கநிஈ)

அவற்குமஞ் சினன்போன் முன்னொடு மாங்கோ ரணிவரை யிவர்ந்தழல் சூழக், கவற்சியின் றாகி விரைந்துகுப் புற்றுக் கடிமதிற் றுவரையை யடைந்து, நவத்தளிர்ப் பொழில்சூழ் விதர்ப்பநாட்டரச னங்கைமுன் னோனுரைக் கஞ்சி, நிவப்புற விடுத்தது தகண்டாங்கு ஞெரேலெனத் தேர்மிசைச் சென்று.

(ப - ரை.) அவற்கும் - அவனுக்கும், அஞ்சினன்போல் - பயந்தவன் போல, முன்னொடு - தமையனொடும், ஆங்கு - அங்குள்ள, ஓர் அணிவரை இவர்ந்து - ஒரு அழகிய மலைமீதேறி, அழல்சூழ - நெருப்புவளைத்துக்கொள்ள, கவற்சி இன்று ஆகி - கவலையில்லாதவனாகி, விரைந்து குப்புற்று - விரைந்து குதித்து, கடிமதில் - காவலையுடைய மதில் சூழ்ந்த, துவரையை அடைந்து - துவாரகையை யடைந்து, நவம்-புதிய, தளிர்-தளிர்களையுடைய, பொழில்சூழ் - சோலைசூழ்ந்த, விதர்ப்பநாட்டு அரசன் - விதர்ப்பதேசத்தரசனது, நங்கை - பெண்ணானவள், முன்னோன் உரைக்கு அஞ்சி-தன்தமையன் சொல்லுக்குப்பயந்து, நிவப்புறவிடுத்த-மேன்மையாயனுப்பின, தூதுகண்டு -

னாதைப்பார்த்து, ஆங்கு - அப்பொழுதே, ஞெரேலென - விரைவாக, தேர்மிசைசென்று - தேர்மேலேறிச்சென்று. எ - று.

(பொ - ரை.) அவனுக்கும் பயந்தவன்போலத் தமையனோடும் அங்குள்ள ஒரு அழகிய மலைமீதேறி, நெருப்புவளைத்துக்கொள்ளக்கவலையில்லாதவனாகி விரைந்து குதித்து, காவலையுடையமதில் சூழ்ந்த துவாரகையையடைந்து, புதியதளிர்களையுடைய சோலைசூழ்ந்த விதர்ப்பதேசத்தரசனது பெண்ணானவள், தன் தமையன்சொல்லுக்குபயந்து மேன்மையாயனுப்பின தூதைப்பார்த்து அப்பொழுதே விரைவாகத்தேர்மேலேறிச்சென்று. எ - று.

(வி - ரை.) விதர்ப்ப நாட்டரசன் நங்கை - விதர்ப்ப தேசத்தரசனாகிய பீஷ்மகனுக்கு மகளாகியருக்மிணி, முன்னோன் - ருக்மி, தூது - தூதாக அனுப்பப்பட்ட ஒருபிராமணன். (கருரு)

வரந்தரு கவுரி திருவடி வணங்கி மாமலர்ச் சோலையி னின்ற, பரந்தபே ருண்கட் கன்னியைக் கவர்ந்து பகைத்தமன் னவர்களை யோட்டி, யரந்தடி நெடுவே லுருக்குமன் குடுமி யரிந்துவண் டுவரையை யடைந்து, சுரந்தரு ளுருக்கு மணிபெறு மைந்தன் றொடுகடன் மீன்வயி றடைந்து.

(ப - ரை.) வரம்தரு - (பக்தர்வேண்டிய) வரங்களைத்தருகிற, கவுரி - துர்க்கையின், திருவடிவணங்கி - திருவடியைத்தொழுது, மாமலர் சோலையில்நின்ற - பெரியபூஞ்சோலையில் நின்ற, பரந்த - விசாலமான, பேர் - பெரிய, உண் - மையுண்ட, கண் - கண்களையுடைய, கன்னியை - ருக்மிணீதேவியை, கவர்ந்து - கவர்ந்துகொண்டு, பகைத்தமன்னவர்களை ஒட்டி - சத்ருராஜாக்களைத்துரத்தி, அரம் தடிநெடுவேல் - அரத்தினால் அராவிச்செய்யப்பட்ட நெடியவேற்படையையுடைய, உருக்குமன்குடுமி அரிந்து - உருக்குமனதுசிகையையறுத்து, வள்துவரையை அடைந்து - வளவிய துவாரகையையடைந்து, சுரந்தஅருள் - அருள் சுரக்கின்ற, உருக்குமணிபெறுமைந்தன் - ருக்மிணீதேவிபெற்ற புதல்வன், தொடுகடல் - தோண்டப்பட்ட கடலிலுள்ள, மீன்வயிறு அடைந்து - மீனினது கருப்பத்தைச்சேர்ந்து: எ - று.

(பொ - ரை.) (பக்தர்வேண்டிய) வரங்களைத்தருகிற துர்க்கையின் திருவடியைத்தொழுது, பெரியபூஞ்சோலையில் நின்றவிசாலமான பெரியமையுண்ட கண்களையுடைய ருக்மிணீ தேவியைக்கவர்ந்துகொண்டு சத்ருராஜாக்களைத்துரத்தி, அரத்தினால் அராவிச்செய்யப்பட்ட நெடியவேற்படையையுடைய உருக்குமனது சிகையையறுத்து வளவிய துவாரகையையடைந்து, அருள் சுரக்கின்ற ருக்மிணீதேவிபெற்ற புதல்வன், தோண்டப்பட்ட கடலிலுள்ள மீனினது கருப்பத்தைச்சேர்ந்து. எ - று.

(வி - ரை.) உருக்குமன் - ருக்மிணீதேவிக்குத் தமையன், உருக்குமணி பெறுமைந்தன் - ப்ரத்யும்னன் - சகரரால் தோண்டப்பட்டமையால் கடல்தொடுகடல் எனப்பட்டது. (கருசு)

இரதியைச் சார்ந்து வளர்ந்தவ னலனுண் டேற்றிகற் சம்பரற் றொலைத்துக், குரவலர் குழலி யொடுதுவா ரகையிற் புகுந்திடப் பெரு மகிழ் கூர்ந்து, பரவுசத் திராசித் திரவிபாற் பெறுபொன் பயந்திடு மணிபிர சேனன், கரமல ரளிப்பக் கோளரிகவரப் பின்னரோர் கரடிகைக் கவர்ந்து.

(ப - ரை.) இரதியை சார்ந்து வளர்ந்து - ரதிதேவியையடைந்து வளர்ந்து, அவள்நலன் உண்டு - அவளது சுகத்தையநுபவித்து, ஏற்ற - எதிர்த்த, இகல் - வலியுள்ள, சம்பரன்தொலைத்து - சம்பரனைக்கொன்று, குரவு அலர் குழலியொடு - குராமலரையணிந்த கூந்தலையுடையவளோடு, துவாரகையில் புகுந்திட - துவாரகையிற்பிரவேசிக்க, பெருமகிழ்கூர்ந்து - பெருமகிழ்ச்சியடைந்து, பரவு - புகழப்படுகிற, சத்திராசித்து - சத்ராஜித்தானவன், இரவிபால்பெறு-சூரியனிடத்துப்பெற்ற, பொன்பயந்திடுமணி - பொன்னைத்தருகிறமணியை, பிரசேநன்கரமலர் அளிப்ப - பிரசேநனது தாமரைமலர்போலுங்கையிற்கொடுக்க, கோளரிகவர - (அதனை) ஒரு சிங்கம் கவர, பின்னர் ஓர் கரடிகைகவர்ந்து - பிறகு ஒரு கரடிகையினாற் கவர்ந்து. எ - று.

(பொ - ரை.) ரதிதேவியையடைந்து வளர்ந்து அவளது சுகத்தையநுபவித்து, எதிர்த்தவலியுள்ள சம்பரனைக்கொன்று, குராமலரையணிந்த கூந்தலையுடையவளோடு துவாரகையிற்பிரவேசிக்கப் பெருமகிழ்ச்சியடைந்து, புகழப்படுகிற சத்ராஜித்தானவன் சூரியனிடத்துப்பெற்ற பொன்னைத்தருகிற மணியைப்பிரசேநனது தாமரைமலர்போலுங்கையிற்கொடுக்க (அதனை) ஒரு சிங்கம் கவர, பிறகு ஒருகரடி கையினாற்கவர்ந்து. எ - று.

(வி - ரை.) சம்பரன் - ப்ரத்யும்நன்பிறந்தவுடனே சூதிகாக்ருஹத்திற் புகுந்து அந்தச்சிசுவைக் கொண்டுபோய்க் கடலிற்போட்ட ஓரசுரன், இவன் ப்ரத்யும்நனாலேயே கொல்லப்பட்டான், சத்திராசித்து - சத்தியபாமைக்குத்தந்தை, பிரசேநன் - சத்திராஜித்துவுக்குத்தம்பி, கரடியென்றது சாம்பவந்தனை. (கஙிஎ)

பிலத்திடை யடைந்து மகடுயி லிடத்து வைத்திடப் பெரும்பழி தனக்கு, நிலத்திடை வருத னோக்கியப் பிலத்தை நேர்ந்து சாம்பவ னொடு பொருது, வெலத்தகு வாகை யொடுமவன் மகளை மணியினைக் கைக்கொடு மீண்டு, வலத்தவ னுய சத்திராசித்துக் கம்மணி நல்கிட மகிழ்ந்து.

(ப - ரை.) பிலத்திடை அடைந்து - குகையினிடத்தையடைந்து, மகள் - தன்மகளானவள், துயிலிடத்துவைத்திட - தூங்குகிற இடத்தில் வைக்க, நிலத்திடை - உலகத்தில், பெரும்பழி - பெரியபழியானது, தனக்கு வருதல்நோக்கி - தனக்கு வருவதைப்பார்த்து, அ பிலத்தைநேர்ந்து - அந்தக்குகையையடைந்து, சாம்பவனொடுபொருது - சாம்பவனோடு போர்செய்து, வெலத்தகுவாகையொடும் - வெல்லத்தகுந்த வாகையோடும், அவன் மகளை மணியினைகைக்கொடு - அவன் மகளையும் மணியையும் கைக்கொண்டு,

மீண்டு - திரும்பிவந்து, வலத்தவன் ஆயசத்திராசித்துக்கு - வலியனாகிய சத்திராசித்தவுக்கு, அ - அந்த, மணி - மணியை, நல்கிடமகிழ்ந்து - கொடுக்க மனமகிழ்ந்து. எ - று.

(பொ - ரை.) குகையினிடத்தையடைந்து, தன் மகளானவள் தூங்குகிற இடத்தில்வைக்க, உலகத்தில் பெரியபழியானது தனக்கு வருவதைப் பார்த்து அந்தக்குகையையடைந்து, சாம்பவனோடு போர்செய்து வெல்லத்தகுந்தவாகையோடும் அவன் மகளையும் மணியையும் கைக்கொண்டு திரும்பி வந்து வலியனாகியசத்திராஜித்துவுக்கு அந்தமணியைக்கொடுக்க மனமகிழ்ந்து.

(வி - ரை.) மகள் - சாம்பவதி, மணி - சமந்தகமணி, இது தினந்தோறும் எட்டுப்பாரம் பொன்னைத்தரவல்லது. (கடுரு)

எழினலங் கனிந்த சத்திய பாமை தனைமணி யொடுமுவந்தீயக், கழிமகிழ் சிறந்து மணியையம் மாமன் கையளித் தறன்மகன் முதலோ ரொழிவுறத் துயர மன்னவர் பாற்சென் றுறையுநாண் மாமனைக் கடிந்தாங், கழிவிலம் மணிகைக் கொள்சத தநுவா வாருயி ரிறத்தொலைத் தகற்றி.

(ப - ரை.) எழில் நலங்கனிந்த - அழகினது நலமுதிர்ந்த, சத்தியபாமை தன்னை - சத்தியபாமையை, மணியொடும் உவந்துஈய - மணியோடு மனமகிழ்ந்துகொடுக்க, கழிமகிழ்சிறந்து - மிகுமகிழ்ச்சி கூர்ந்து, மணியை - மணியினை, அ - அந்த, மாமன்கை அளித்து - மாமன்கையிற்கொடுத்து, அறன்மகன் முதலோர் - தருமபுத்திரன் முதலானோர், துயரம் ஒழிவுற - துன்பம் நீங்கும்படி, அன்னவர்பால் சென்றுஉறையும் நாள் - அவர்களிடத்திற்போய் வாழுங்காலத்தில், மாமனைக்கடிந்து - மாமனைக்கொன்று, ஆங்கு - அப்பொழுதே, அழிவுஇல் - அழிவற்ற, அ - அந்த, மணி - மணியை, கைக்கொள் - கைக்கொண்ட, சததநுவா - சததந்வாவின், ஆர் உயிர் இற - அரிய வுயிரானது நீங்கும்படி, தொலைத்து அகற்றி - கொன்றொழித்து. எ - று.

(பொ - ரை.) அழகினது நலமுதிர்ந்த சத்தியபாமையை மணியோடு மனமகிழ்ந்துகொடுக்க மிகுமகிழ்ச்சிகூர்ந்து, மணியினை அந்தமாமன்கையிற் கொடுத்து, தருமபுத்திரன் முதலானோர் துன்பம் நீங்கும்படி அவர்களிடத்திற்போய் வாழுங்காலத்தில், மாமனைக்கொன்று, அப்பொழுதே அழிவற்ற அந்த மணியைக்கைக்கொண்ட சததந்வாவின் அரியவுயிரானது நீங்கும்படி கொன்றொழித்து. எ - று.

(வி - ரை.) சததந்வா - ஹ்ருதிகன் மகன், தேவமீடன் தம்பி, இவன் சத்தியபாமையைத்தனக்குக் கொடாமையைப்பற்றி, சத்ராசித்து உறங்குங் காலத்தில் அவனைக்கொன்றான், அது காரணமாக ஸ்ரீ கண்ணபிரான் இவனைக்கொன்றான் என்பது புராணகதை. (கடுசு)

மறைபுகழனந் தரப்ப வக்ரூரன்செம் மணியொடு வந்துகண்டிடலுந், தமையனாகிய் இறந்தம் மணியினை மனத்திகே தருசெழும் பொற்

றிர னெல்லா, முறைமுறை யயநச் சத்திய பாமைக் குதவுக வென்றினி தளித்து, விழைகள்வார் கூந்தற் சுபத்திரை தன்னை மேகவா கநன்ம கற் கீந்து.

(ப - ரை.) மழைவளம்சுரப்ப - மேகங்கள் எல்லாவளங்களையும் சுரக்கும்படி, அக்குரூரன் - அக்ரூரனானவன், செம்மணியொடு - செவந்தமணியுடன், வந்துகண்டிடலும் - வந்துகண்டவுடனே, தழை - செழித்த, மகிழ்சிறந்து - மகிழ்ச்சிமிகுந்து, அ - அந்த, மணியினை - மணியை, தரு - (அது) தருகின்ற, செழுபொன்திரள் எல்லாம் - செழுமையாகியபொற்குவியல் முழுதும், உழை - மான்கள், மருள் - (கண்டு) மயங்கும்படியான, நயநம் - கண்களையுடைய, சத்தியபாமைக்கு - சத்யபாமைக்கு, உதவுகவென்று - தருக வென்றுசொல்லி, அவற்கே இனிது அளித்து - அவனுக்கேயினிதாகக்கொடுத்து, விழை - (கண்டார்) விரும்புதற்குரிய, கள்வார் கூந்தல் - மலர்ந்தேன் ஒழுகாநின்ற கூந்தலையுடைய, சுபத்திரைதன்னை - சுபத்திரையை, மேகவாகநன் - மேகவாகநனாகிய இந்திரனது, மகற்கு - மகனாகிய அருச்சுனனுக்கு, ஈந்து - கொடுத்து. எ - று.

(பொ - ரை.) மேகங்கள் எல்லாவளங்களையும் சுரக்கும்படி அக்ரூரனானவன் செவந்தமணியுடன் வந்துகண்டவுடனே, செழித்தமகிழ்ச்சிமிகுந்து, அந்தமணியை (அது) தருகின்ற செழுமையாகிய பொற்குவியல் முழுதும் மான்கள் (கண்டு) மயங்கும்படியான கண்களையுடைய சத்யபாமைக்குத் தருகவென்றுசொல்லி, அவனுக்கேயினிதாகக்கொடுத்து, (கண்டார்) விரும்புதற்குரிய மலர்த்தேன் ஒழுகாநின்ற கூந்தலையுடைய சுபத்திரையை மேகவாகநனாகிய இந்திரனதுமகனாகிய அருச்சுநனுக்குக்கொடுத்து. எ - று.

(வி - ரை.) சுபத்திரை - ஸ்ரீ கண்ணபிரானுக்குத்தங்கை. அபிமந்யுவுக்குத்தாய். (கஙO)

எரிமணி மாட விந்திரப் பிரத்த மெய்துபு தனஞ்சய னோடு
மரில்படு கானில் வேட்டமா டிடுங்கா லமிழ்தென வின்னிசைபாடும்
வரிநெடுந் தடங்கட் காளிந்தி யின்ப மருவிவள் டுவரையை யடைந்து
விரிபெரும் புகழ்சா லவந்திம னளித்த மித்திர விந்தையைக் கவர்ந்து.

(ப - ரை.) எரிமணிமாடம் - பிரகாசிக்கிற மணிகளாற்செய்யப்பட்ட மாளிகைகளையுடைய, இந்திரப்பிரத்தத்து எய்துபு - இந்த்ர ப்ரஸ்தத்தையடைந்து, அரில்படுகானில் - மூங்கில் அடர்ந்தகாட்டில், தநஞ்சயனோடும் வேட்டமாடிடுங்கால் - அர்ஜுநனோடு கூடிவேட்டையாடுங்காலத்தில், அமிழ்துஎன - அமிர்தமென்று சொல்லும்படி, இன்இசை பாடும் - இனிய இசை பாடுகிற, வரிநெடுதடம்கண் - செவ்வரிநெடுமை விசாலம் என்பவற்றோடு கூடிய கண்களையுடைய, காளிந்தி - காளிந்தியின், இன்பம்மருவி - சுகத்தை யநுபவித்து, வள்துவரையை அடைந்து - வளவிய துவாரகையையடைந்து, விரிபெருபுகழ்சால் - விஸ்தாரமான பெரும்புகழிற்சிறந்த, அவந்திமன் அளி

த்த - அவந்திதேசத்தரசன்பெற்ற, மித்திரவிந்தையைகவர்ந்து - மித்ரவிந்தையைக்கைக்கொண்டு. எ - று.

(பொ - ரை.) பிரகாசிக்கிற மணிகளாற்செய்யப்பட்ட மாளிகைகளையுடைய இந்த்ரப்ரஸ்தத்தையடைந்து, மூங்கில் அடர்ந்தகாட்டில் அர்ஜுநனோடு கூடிவேட்டையாடுங்காலத்தில், அமிர்தமென்றுசொல்லும்படி இனிய இசைபாடுகிற செவ்வரிநெடுமை விசாலம் என்பவற்றோடு கூடியகண்களையுடைய காளிந்தியின் சுகத்தையநுபவித்து வளவியது ராகைஎயயடைந்து விஸ்தாரமான பெரும்புகழிற்சிறந்த அவந்திதேசத்தரசன் பெற்ற மித்ரவிந்தையைக்கைக்கொண்டு. எ - று.

(வி - ரை.) இந்திரப்பிரத்தம் - பாண்டவர்களுக்கு ராஜதாநி, காளிந்தி - சூரியன்மகள், ஸ்ரீ கண்ணபிரானது அஷ்டமஹிஷிகளிலொருத்தி.

அரவுயர் கொடியோ னாதியோ ருள்ள மச்சுற வில்வளைத் தமர்த்துப்
புரவுபூண் டுயருங் கோசலத் தரசன் போர்விடை யேழுயுந் தழுவிக்
குரவுவார் கூந்தற் சத்தியை மணந்து குலவுறு கேகயத் தரச
னுரவுளத் தவனும் மன்றல்செய் தளிப்பவுற்றபத் திரைநல நுகர்ந்து.

(ப - ரை.) அரவுயர் கொடியோன் ஆதியோர்-பாம்பைக்கொடியாகவுயர்த்தினவனாகிய துரியோதநன் முதலானோர், உள்ளம் அச்சுற - மனமஞ்சும்படி, வில்வளைத்து அமர்த்து - வில்வளைத்துப்போர்செய்து, புரவுபூண்டு உயரும் - காத்தற்றொழிலை மேற்கொண்டுயர்ந்த, கோசலத்து அரசன் - கோசலதேசத்தரசன் விட்ட, போர்விடை ஏழையுந்தழுவி - போர்த்தொழிலிற்சிறந்த ஏழு எருதுகளையும் அணைத்து, குரவுவார் கூந்தல் - குராமலரையணிந்த நீண்டகூந்தலையுடைய, சத்தியைமணந்து - சத்தியைமணம்புரிந்து, குலவுறு - விளங்குகிற, கேகயத்து அரசன் - கேகயநாட்டரசன், உரம் உளத்தவனும் - திடமானமனமுடையவனும், மன்றல்செய்து அளிப்ப-மணஞ்செய்துகொடுக்க, உற்ற - பொருந்திய, பத்திரைநலம் நுகர்ந்து - பத்திரையின் சுகத்தையநுபவித்து. எ - று.

(பொ - ரை.) பாம்பைக்கொடியாக வயர்த்தினவனாகிய துரியோதநன் முதலானோர் மனமஞ்சும்படி வில்வளைத்துப் போர்செய்து, காத்தற்றொழிலை மேற்கொண்டுயர்ந்த கோசலதேசத்தரசன் விட்டபோர்த்தொழிலிற்சிறந்த ஏழு எருதுகளையும் அணைத்து, குராமலரையணிந்த நீண்ட கூந்தலையுடைய சத்தியைமணம்புரிந்து, விளங்குகிறகேகயநாட்டரசன் திடமான மனமுடையவனும் மணஞ்செய்துகொடுக்கப்பொருந்தியபத்திரையின்சுகத்தையநுபவித்து

(வி - ரை.) அரவுயர்கொடியோன் என்பதற்கு பாம்பையுயர்த்தகொடியவன் என்றுரைப்பினுமாம், சத்தி - நப்பின்னைப்பிராட்டி, புரவு - தொழிற்பெயர். (கசுஉ)

இலங்குமாத் திரத்திற் கயந்துறி நப்பா தெய்திலக் கணைமணம்
புணர்ந்து, மலங்கொளு நாகற் கொன்றுமவச் சிறந்தோன் மனக்குறை

முடித்தினி தருளிப், பிலங்கொளாங் கிருந்த வொருபதி னாறா யிரமட வார்பெரும் போகந், துலங்குற விரும்பிச்சத்திய பாமை தொழுதிட வைந்தரு நல்கி.

(ப - ரை.) இலங்கும் - விளங்குகின்ற, மத்திரத்தில் - மத்திரதேசத்தில், கயல்குறி - மச்சயந்திரத்தை, தப்பாது எய்து - தப்பாமல் அம்பினால் எய்து, இலக்கணை மணம்புணர்ந்து - இலக்கணையை மணஞ்செய்து, வலம்கொள்ளும் - வலிமையைக்கொண்ட, நரகன்கொன்று - நரகாசுரனைக்கொன்று, வச்சிரத்தோன் - வஜ்ராயுதத்தையுடையவனாகிய இந்திரனது, மனக்குறைமுடித்து - மனக்குறையைநீக்கி, இனிது அருளி - இனிதாக அருள் செய்து, பிலம்கொள்ஆங்கு இருந்த-அவ்விடத்து நிலவறையிற்சிறையிருந்த, ஒருபதினாறாயிரம்மடவார்-ஒருபதினாறாயிரமாதரது, பெரும்போகம்-பெரிய சுகாநுபவத்தை, துலங்குறவிரும்பி - விளங்கும்படி விரும்பி, சத்தியபாமை தொழுதிட - சத்தியபாமைவணங்க, (அவளுக்கு) ஐந்தருநல்கி - பஞ்சதருவைக்கொணர்ந்து கொடுத்து. எ - று.

(பொ - ரை.) விளங்குகின்ற மத்திரதேசத்தில் மச்சயந்திரத்தைத்தப்பாமல் அம்பினாலெய்து இலக்கணையைமணஞ்செய்து, வலிமையைக்கொண்ட நரகாசுரனைக்கொன்று வஜ்ராயுதத்தையுடையவனாகிய இந்திரனது மனக்குறையைநீக்கி இனிதாக அருள்செய்து, அவ்விடத்து நிலவறையிற் சிறையிருந்த ஒருபதினாறாயிரமாதரது பெரியசுகாநுபவத்தை விளங்கும்படி விரும்பி, சத்தியபாமைவணங்க (அவளுக்கு) பஞ்சதருவைக்கொணர்ந்து கொடுத்து. எ - று.

(வி - ரை.) நரகன் - வராஹஸ்வரூபனான திருமாலுக்கு பூமிதேவியினிடத்திற்பிறந்த ஓரசுரன், இவனது ராஜதானி ப்ராக்ஜோதிஷபுரம். வாஹநம் ஸுப்ரதீகம் என்னும்யானை, மகன்பகதத்தன், இந்த நரகாசுரனால் அதிதியின் கர்ணகுண்டலங்களும், வருணனதுகுடையும், மணிபர்வதம் என்னும் அமராத்ரிஸ்த்தாநமும் கொள்ளைபோய், இந்திரன் திருமாலுக்கு விண்ணப்பஞ்செய்ய, அவர் சத்யபாமையோடு கருடாரூடராய்ச்சென்று, நரகாசுரன் தமையனாகிய முராசுரனையும் அவன் புத்திரர்களையுங்கொன்று, பிறகுநரகாசுரனையும் வதைத்து, அவனால்சிறை செய்யப்பட்டிருந்த பதினாறாயிரம் மாதர்களை மணம்புணர்ந்து, வரும்போது ஸ்வர்க்கத்துக்குப்போய், சத்தியபாமைவேண்டுகோளால் இந்திரனது நந்தநவனத்திலிருந்த பாரிஜாதவ்ருக்ஷத்தைப்பூமிக்குக்கொண்டு வந்தாரென்பது புராணகதை. (கஅரு)

ஆம்பலங் குதலை வாய்மொழி மைந்த ரனவிலர் தோன்றிடக் களித்துத், தேம்பலின் மைந்தன் மகற்சிறை புரிந்த நிறவினன் கைத்தலஞ் சிதைத்துக், கோம்பியாய்க் கிடந்தோன் பாதகந்தவிர்த்துக் குலவிய காசிமன் னனையும், பாம்பணைப் பரன்யானேயெனத் தோன்றும் பவுண்டர வாசுதே வனையும்.

(ப - ரை.) அம் - அழகிய, ஆம்பல்வாய் - செவ்வல்லிமலர்போலும் வாயினையும், குதலைமொழி - மழலைச்சொல்லையுமுடைய, மைந்தர் அளவு இவர் தோன்றிட - அளவற்றவர்களான புதல்வர்கள் உண்டாக, களித்து - மனமகிழ்ந்து, தேம்பல் இல் - வாட்டமில்லாத, மைந்தன்மகன் - பேரனை, சிறைபுரிந்த - சிறைசெய்த, திறலினன் - வலியனாகிய பாணாசுரனது, கைத்தலம் சிதைத்து - கைகளையறுத்து, கோம்பியாய் கிடந்தோன் - பச்சோந்தியாய்க்கிடந்தவனது, பாதகம்தவிர்த்து - பாவத்தொலைத்து, குலவிய - விளக்கமடைந்திருந்த, காசிமன்னனையும் - காசிராஜனையும், பாம்புஅணை - சர்ப்பசயநத்தையுடைய,பரன்-மேலானதிருமால்,யானேஎனதோன்றும்-நானேயென்றுவெளிப்பட்ட, பவுண்டரவாசுதேவனையும்-பவுண்டரவாசுதேவனையும்.

(பொ - ரை.) அழகிய செவ்வல்லிமலர்போலும் வாயினையும் மழலைச்சொல்லையுமுடைய அளவற்றவர்களான புதல்வர்கள் உண்டாக,மனமகிழ்ந்து வாட்டமில்லாத பேரனைச்சிறைசெய்த வலியனாகிய பாணாசுரனது கைகளையறுத்து, பச்சோந்தியாய்க்கிடந்தவனது பாவத்தொலைத்து, விளக்கமடைந்திருந்த காசிராஜனையும், சர்ப்பசயநத்தையுடைய மேலான திருமால் நானேயென்று வெளிப்பட்ட பவுண்டரவாசுதேவனையும். எ - று.

(வி - ரை.) மைந்தன் மகன் என்றது அநிருத்தனை, கோம்பியாய்க்கிடந்தோன் என்றது ந்ருகமஹாராஜனை, இவன் வைவஸ்வதமநுவின் இரண்டாவதுமகன், இக்ஷ்வாகுவுக்குத்தம்பி, இவன் ஒரு காலத்தில் அறியாமையால் ஒருவேதியனுக்குத்தானஞ்செய்த பசுவை வேறொருவேதியனுக்கு த்தானஞ்செய்த பாவத்தால் பச்சோந்தியாய்ப்பிறந்து, ஸ்ரீகண்ணபிரானது தர்ஸநஸ்பர்ஸநத்தால் அந்தவுருவம் நீங்கித்திவ்யரூபியாய் ஸ்வர்க்கததுக்குப்போனான் என்பது புராணகதை. (கசுச)

உயிர்குடித் தந்த வாரணா வாசி யொன்னலன் மகன்விடு பூதஞ், செயிருறத் துரந்து சுயோதனன் கன்னி செழுநல நுகர்ந்திருட் கவர்ந்த, வயிரவாட் சாம்பன் சிறையை முன் னேன்போய் மீட்டுவந் திடமகிழ் சிறந்து, பயிலும்யாழ் முனிவன் கண்டிடப் பதினா றுயிரந் திருவுருக் காட்டி.

(ப - ரை.) உயிர்குடித்து - உயிருண்டு, அந்தவாரணவாசி - அந்தவாரணவாசியில், ஒன்னலன்மகன் விடுபூதம் - பகைவன்மகனனுப்பின பூதமானது, செயிர்உற துரந்து - துன்பமடையத்துரத்தி, சுயோதனன்கன்னி - துரியோதனன்மகளது, செழுநலம் நுகர்ந்து - நல்ல சுகத்தையநுபவித்து, இருள் கவர்ந்தவயிரவாள் - இருளையழித்தவயிரவாளையேந்திய, சாம்பன் சிறையை - சாம்பனது சிறையை, முன்னோன்போய் மீட்டுவந்திட - தமையன்போய் மீட்டுவர, மகிழ்சிறந்து - மகிழ்ச்சிமிகுந்து, பயிலும்யாழ் முனிவன் கண்டிட - பழகுகிறயாழினையுடைய நாரதமுனிவன் தரிசிக்கும்படி, பதினாறுயிரம்திருவுருகாட்டி - பதினாறுயிரம் திருவுருவங்களைக்காட்டி. எ - று.

(பொ - ரை.) உயிருண்டு அந்தவாரணவாசியில் பகைவன் மகனனுப்பினபூதமானது துன்பமடையத்துரத்தி, துரியோதனன்மகளது நல்ல சுகத்

தையநுபவித்து, இருளையழித்த வயிரவாளையேந்திய சாம்பனது சிறையைத் தமையன்போய் மீட்டுவர, மகிழ்ச்சிமிகுந்து, பழகுகிறயாழினையுடைய நாரத முனிவன் தரிசிக்கும்படி பதினாறாயிரம் திருவுருவங்களைக்காட்டி., எ - று.

(வி - ரை.) வாரணவாசி - காசி, இருள்கவர்ந்த வயிரவாள் என்றது வாளினது ஒளிமிகுதியை விளக்கிற்று, முன்னோன் என்றதுபலராமனை, பயிலும்யாழ் என்றவிசேடணத்தால் முனிவன் என்றது நாரதமுனியையுணர்த்திற்று, பதினாறாயிரம் திருவுருக்காட்டி யென்றது, நாரதமுனிவன் சோதிக்க நினைத்துவந்தபோது பதினாறாயிரம் கோபிகைகள் வீட்டிலும் ஒருத்திக்கொரு திருவுருவோடமர்ந்திருந்தனன் என்பதையறிவித்தற்கெனக. (௯௫)

மல்லுயர் திணிதோட் சராசந்த னுடலம் வகிர்ந்திடு கான்மக னறியப்
புல்லினைக் கிழித்துப் பற்பனாள் வருந்து புரவலர் சிறைவிடு வித்து
நல்லற மைந்த னிராசசூ யத்தி னடைபிறழ் சேதிபற் றடிந்து [று.
வல்லசா லுவனைத் தந்தவக் கிரனை வலங்கெழு படையொடுஞ் செகுத்

(ப - ரை.) மல்உயர் - மற்போரிற்சிறந்த, திணிதோள் - திடமான தோள்களையுடைய, சராசந்தன் - சராசந்தனது, உடலம்வகிர்ந்திடு - உடம்பைப்பிளந்த,கால்மகன்அறிய-வாயுபுத்திரனாகியவீமன்அறிந்துகொள்ளும்படி, புல்லினைகிழித்து - புல்லைவகிர்ந்து, பல்பல்நாள்வருந்து - நெடுநாளாக வருந்திக்கொண்டிருந்த, புரவலர்சிறைவிடுவித்து - அரசரது சிறைவிடுவித்து, நல்அறமைந்தன் - நன்மையையுடைய தருமபுத்திரன்செய்த, இராசசூயத்தில் - ராஜசூயயாகத்தில், நடைபிறழ் - நன்னடையிற்றவறின, சேதிபன்தடிந்து - சேதிபனைக்கொன்று, வல்லசாலுவனை - வல்லவனாகிய சாலுவனையும், தந்தவக்கிரனை - தந்தவக்கிரனையும், வலம்கெழுபடையொடும் செகுத்து - பலம்பொருந்திய சேனைகளோடுங்கொன்று. எ - று.

(பொ - ரை.) மற்போரிற்சிறந்த திடமான தோள்களையுடைய சராசந்தனது உடம்பைப்பிளந்த வாயுபுத்திரனாகிய வீமன் அறிந்துகொள்ளும்படி புல்லைவகிர்ந்து, நெடுநாளாக வருந்திக்கொண்டிருந்த அரசரது சிறைவிடுவித்து, நன்மையையுடைய தருமபுத்திரன்செய்த ராஜசூயயாகத்தில் நன்னடையிற்றவறின சேதிபனைக்கொன்று, வல்லவனாகிய சாலுவனையும் தந்தவக்கிரனையும் பலம்பொருந்திய சேனைகளோடுங்கொன்று. எ - று.

(வி - ரை.) கால் - காற்று, புல்லினைக்கிழித்தது இப்படியே அவனுடம்பைக்கிழிக்கக் கடவையென்று குறிப்பித்தற்கு. சேதிபன் - சிசுபாலன்.

விறன்மிகு விசயன் வாவுமான் றடந்தேர்ப் பாகனாய் நடத்திவீடு
மன்முற், றிறன்மிகு வேந்த னாவரான் மடியச் செய்து பூ பாரமுங் க
ழிப்பி, யறன்மகற் கரசு நல்கியென் சுந்தை யகப்பொதி யவனுந்தின்
றளித்த, திறன்மிகு கடலைக் கண்ணுடைக் கண்ணை நின்பல நின்னடி
போற்றி.

(ப - ரை.) விறல்மிகு - வெற்றிமிகுந்த, விசயன் - அருச்சுனனது, வாவும் - தாவுகிற, மான் - குதிரைகள் பூண்ட, தடம்தேர் - பெரியதேருக்கு,

பாகனாய்நடத்தி - பாகனாயிருந்துசெலுத்தி, வீமென்முன் - பீஷ்மன்முதலாகிய, திறல்மிகுவேந்தர் - வலிமிகுந்த அரசர், ஐவரால்மடியச்செய்து - பாண்டவரைவரால் மாளச்செய்து, பூபாரமும்கழிப்பி - பூபாரத்தையும் நீக்கி, அறன்மகற்கு - தருமபுத்திரனுக்கு, அரசுநல்கி - அரசாட்சியைக்கொடுத்து, என்கந்தையகம் - என்கந்தைத்துணியில், பொதி - முடிந்திருந்த, அவலும் தின்று - அவலினையும் அமுதுசெய்து, அளித்த - (எனக்கு சகல பாக்யங்களையும்) தந்தருளின, திறன்மிகு - ஒளிமிகுந்த, கமலம்கண் உடை - தாமரைமலர்போலுங்கண்களையுடைய, கண்ண - ஸ்ரீ கண்ணபிரானே, நின்மல - நிர்மலனே, நின்அடி - உன் திருவடிகளுக்கு, போற்றி - நமஸ்காரம். எ - று.

(பொ - ரை.) வெற்றிமிகுந்த அருச்சுனனது தாவுகிறகுதிரைகள் பூண்ட பெரிய தேருக்குப்பாகனாயிருந்து செலுத்தி, பீஷ்மன்முதலாகிய வலிமிகுந்த அரசர் பாண்டவரைவரால் மாளச்செய்து, பூபாரத்தையும் நீக்கி, தருமபுத்திரனுக்கு அரசாட்சியைக்கொடுத்து, என் கந்தைத்துணியில் முடிந்திருந்த அவலினையும் அமுதுசெய்து (எனக்கு சகல பாக்கியங்களையும்) தந்தருளின, ஒளிமிகுந்த தாமரை மலர்போலும் கண்களையுடைய ஸ்ரீ கண்ணபிரானே, நிர்மலனே, உன் திருவடிகளுக்கு நமஸ்காரம். எ - று.

(வி - ரை.) விறன்மிகுவிசயன் வாவுமான்றடந்தேர்ப்பாகனாய் நடத்தி, என்றதனால் அந்தத்தேரைச்செலுத்து மாற்றலுள்ளார் வேறொருவரிலர் என்பது பெறப்பட்டது, வீமென் - பீஷ்மன் என்னும் வடசொற்றிரிபு, ஐவர் - தொகைக்குறிப்பு. (ககஎ)

இமையவர் துதிக்கப் படியிடைப் பரியா யினிவரு மெம்பிரான் போற்றி, யமைதரு மறையுங் காணொணாப் பொருளா யகிலமு மாயவ போற்றி,யிமையளவினிற்கைக வரைமுறை யிடச்சென் றினிதருள் சுரந்தவ போற்றி, கமைதரு மன்ப ரெண்ணியாங் களிக்குங் கமலைநா யக வடி போற்றி.

(ப - ரை.) இமையவர் துதிக்க - தேவர்கள் தோத்திரஞ்செய்ய, படியிடை - பூமியின்மேல், பரிஆய் - குதிரையுருவாகி, இனிவரும் - இனியவதரிக்கப்போகிற, எம்பிரான் - எம்பிரானே, போற்றி - நமஸ்காரம், அமைதரும்மறையும் - அமைக்கப்பட்டிருக்கிற வேதங்களும், காண்ஒண்ணு - காணவொண்ணாத, பொருள்ஆய் - பொருளாகி, அகிலமும்ஆயவ - எல்லாப்பிரபஞ்சங்களுமாயிருப்பவனே, போற்றி - நமஸ்காரம், கைவரை - கைம்மலையானது, முறையிட - முறையிட, இமையளவினில்சென்று - இமைப்பொழுதிற்சென்று, இனிது - இனிதாக, அருள்சுரந்தவ - (அதன்மீது) அருள்சுரந்தவனே, போற்றி - நமஸ்காரம், கமைதரும்அன்பர் - பொறுமையுள்ள அன்பர், எண்ணியாங்கு - கருதினபடியே, அளிக்கும்-(அவர்கள் விரும்புகிற எல்லாவற்றையும்) கொடுத்தருளுகிற, கமலைநாயக - லக்ஷ்மீநாதனே,அடி - உன் திருவடிகளுக்கு, போற்றி - நமஸ்காரம். எ - று.

(பொ - ரை.) தேவர்கள் தோத்திரஞ்செய்ய, பூமியின்மேல் குதிரையுருவாகி இனியவதரிக்கப்போகிற எம்பிரானே நமஸ்காரம், அமைக்கப்பட்டிருக்கிற வேதங்களும் காணவொண்ணுதபொருளாகி எல்லாப்பிரபஞ்சங்களுமாயிருப்பவனே நமஸ்காரம், கைம்மலையானது முறையிட இப்பொழுதிற்சென்று இனிதாக (அதன்மீது) அருள்சுரந்தவனே நமஸ்காரம், பொறுமையுள்ள அன்பர் கருதினபடியே (அவர்கள் விரும்புகிற எல்லாவற்றையும்) கொடுத்தருளுகிற லக்ஷ்மீநாதனே, உன் திருவடிகளுக்கு நமஸ்காரம். எ-று.

(வி - ரை.) 'பரிபாயினிவரும' என்றது கல்க்யவதாரத்தை, கைவரை - கைம்மலை, (துதிக்கையையுடைய மலைபோன்றயானை, (கஜேந்திராழ்வான்.)

எனத்துதி முழக்கிக் கண்கணீ ரரும்ப விருகரஞ் சென்னிமேற் குவியக், கனத்திரு மறைநூ லுணர்ச்சிமிக் குடைய காமரு குசேலமா முனிவ, னுனற்கரி யவனெனன் றனக்கினி தருளவுறுங்கொலோ வென்றுநெக் குருகி, மனக்கசி வுறுங்கால் மனத்தினுங் கடுகி மாமறைப் பிரான்வெளி வருமால்.

(ப - ரை.) எனதுதிமுழக்கி - என்றிவ்வாறு மிகுதியாகத்தோத்திரஞ் செய்து, கண்கள் - கண்களில், நீர்அரும்ப - நீர்ததும்ப, இருகரம் - இரண்டு கைகளும், சென்னிமேல்குவிய - சிரசின்மீதுகுவிய, கனம் - பெருமைபொருந்திய, திருமறைநூல் - அழகியவேதநூல்களின், உணர்ச்சி - அறிவு, மிக்குஉடைய - மிகுதியாகவுடைய, காமர் - அழகிய, குசேலமாமுனிவன் - குசேலமஹாமுனிவன், உன்னற்கு அரியவன் - (மனத்தால்) நினைத்தற்குமரியவனாகிய இறைவன், எனக்கு இனிது அருள - எனக்கினிதாயருள்செய்யும் பொருட்டு, உறும்கொலோவென்று - (ப்ரத்யக்ஷமாய்) எழுந்தருளுவனோ வென்று, நெக்குஉருகி - நெகிழ்ந்துருகி, மனக்கசிவு உறுங்கால் - மனக்கசிவையடையுங்காலத்தில், மாமறைபிரான் - பெரியவேதமுதல்வன், மனத்தினும் கடுகி - மனத்தினும்விரைந்து, வெளிவரும் - வெளிப்பட்டு வருகிறான் (எப்படியெனின்) எ - று.

(பொ - ரை.) என்றிவ்வாறு மிகுதியாகத்தோத்திரஞ் செய்து கண்களில் நீர்ததும்பஇரண்டு கைகளும் சிரசின்மீதுகுவிய, பெருமைபொருந்திய அழகியவேதநூல்களின் அறிவுமிகுதியாகவுடைய அழகியகுசேலமஹாமுனிவன், (மனத்தால்) நினைத்தற்குமரியவனாகிய இறைவன் எனக்கினிதாயருள் செய்யும்பொருட்டு (ப்ரத்யக்ஷமாய்) எழுந்தருளுவனோவென்று நெகிழ்ந்துருகிமனக்கசிவையடையுங்காலத்தில் பெரியவேதமுதல்வன் மனத்தினும் விரைந்துவெளிப்பட்டு வருகிறான், (எப்படியெனின்) எ - று.

(வி - ரை.) முழக்கியென்றது மிகுதியைக்குறித்தது, மறைநூல் என்பதற்கு வேதமாகிய நூல்என்றுதல் வேதமும் சாத்திரமும்என்றுதல்உரைத்துக்கொள்க. காமருஎன்பதில் உகரம்சாரியை,மனத்தினும்-மனோவேகத்தினும்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொன்னுரு மணிமகுடம் பசியவளா முகட்டெழுசெம் பொன்னை யேட்ப, மின்னுரு மிருசெவியின் மணிமகர குண்டலம்வில் வீசி

யாட, வொன்னார்த முயிர்குடிக்கு மெறூழ்வலித்தோ ளங்கதச்செவ் வொளிமே லோங்கத், தென்னாரக் கதிர்கீழும் பாய்ந்தமெனை வுத்தரியந் திகழா நிற்க.

(ப - ரை.) பொன்ஆரும்மணிமகுடம் - பொன்னும் நிறைந்தமணிக ளும் ஆகிய இவற்றாற்செய்யப்பட்ட மகுடமானது, பசியவரை முகட்டு எழு-பச்சைமலையினுச்சியிலெழுந்த,செழுமபொன்னை எய்ப்ப-செழுமையாகிய சூரியனை நிகர்க்கவும், மின்ஆரும் - மின்னுதலையுடைய, இருசெவியில் - இர ண்டுகாதுகளிலுமணிந்த, மணி - ரத்நமயமாகிய, மகரகுண்டலம் - மகரகுண் டலமானது, வில்வீசிஆட - ஒளியைவீசியசையாநிற்கவும், ஒன்னார் உயிர் குடிக்கும்-பகைவருயிரையுண்ணுகின்ற, எறூழ்வலி - மிக்கவலியுள்ள,தோள் - தோள்களிலணிந்த, அங்கதம் - பாஹுவலயத்தின், செவ்வொளி - செவ்விய ஒளியானது, மேல்ஓங்க - மேலெழாநிற்கவும், தென்ஆர் - அழகுபொருந்திய, அ - அந்த, கதிர் - ஒளியானது, கீழும்பாய்ந்ததுஎன - கீழிலும் பரந்தாற் போல, உத்தரியம் திகழாநிற்க - உத்தரியம்பிரகாசியா நிற்கவும். எ - று.

(பொ - ரை.) பொன்னும் நிறைந்தமணிகளுமாகிய இவற்றாற்செய்யப் பட்ட மகுடமானது பச்சைமலையினுச்சியிலெழுந்த செழுமையாகிய சூரி யனை நிகர்க்கவும், மின்னுதலையுடைய இரண்டுகாதுகளிலுமணிந்த ரத்நமய மாகிய மகரகுண்டலமானது ஒளியைவீசியசையாநிற்கவும், பகைவருயிரை யுண்ணுகிற மிக்கவலியுள்ள தோள்களிலணிந்த பாஹுவலயத்தின்செவ்விய வொளியானது மேலெழாநிற்கவும், அழகுபொருந்திய அந்த வொளியானது கீழிலும் பரந்தாற்போல உத்தரியம்பிரகாசியா நிற்கவும். எ - று.

(வி - ரை.) பொன் - அழகுஎனினுமாம், பொன் - சூரியன், மகரகுண் டலம் - காதணி, அங்கதம் - தோளணி, பொன்னாருமணிமகுடம் சூரியனுக் கும், இறைவனது திருமேனி பச்சைமலைக்கும் உவமையாகக்கொள்க. (கஎ0)

காமருநன் னெறிநடப்ப வறந்தழைப்ப வெவ்வுயிருங் களிப்பின் மேவ, மாமறையை வடித்துவிரித் தினிதுரைத்த திருமலர்ச்செவ் வா ய்க்குண் டாய, தோமறுவண் பெரும்புகழிற் சிறிதுவெளிப் பட்டுலவு தோற்ற மேய்ப்ப, வேமுறு குறுமூரல் வெள்ளென்று சிறிதரும்பி யிலகா நிற்க.

(ப - ரை.) காமர் - அழகிய, நல்நெறிநடப்ப-நன்னெறிகள் நடக்கவும், அறம்தழைப்ப-தருமம்செழிக்கவும், எவ்வுயிரும் களிப்பின்மேவ-எல்லாவுயிர் களும் மகிழ்ச்சியிற்பொருந்தவும், மாமறையைவடித்து - பெரிய வேதங்களை வடித்து, விரித்து - விஸ்தாரமாக்கி, இனிது உரைத்த-இனிதாக அருளிச்செ ய்த, திருமலர் - அழகுள்ளதாமரைமலர்போலும், செவ்வாய்க்கு உண்டாய - செவத்தவாய்க்குண்டாகிய, தோம்அறு - குற்றமற்ற, வண்பெருபுகழில் - வள வியபெரும்புகழில், சிறிதுவெளிப்பட்டுலவு-சிறிது வெளிப்பட்டுலாவுகின்ற, தோற்றம்எய்ப்ப - காட்சியைநிகர்க்க, ஏமம்உறு - (கண்டார்க்கு) இன்பந்

செய்தலையுடைய, குறுமூரல் - புன்சிரிப்பானது, வெள்ளென்று - வெளேலென்று, சிறிது அரும்பி இலகாநிற்க-சிறிதுதோன்றிப்பிரகாசிக்கவும் எ-று.

(பொ-ரை) அழகிய நன்னெறிகள் நடக்கவும், தருமஞ்செழிக்கவும், எல்லாவுயிர்களும் மகிழ்ச்சியிற்பொருந்தவும், பெரியவேதங்களைவடித்து விஸ்தாரமாக்கி இனிதாக அருளிச்செய்த அழகுள்ளதாமரைமலர்போலும் செவந்தவாய்க்குண்டாகிய குற்றமற்றவொளிய பெரும்புகழ்போல் சிறிது வெளிப்பட்டுலாவுகின்ற காட்சியைநோக்க (கண்டார்க்கு) இன்பஞ்செய்தலையுடைய புன்சிரிப்பானது வெள்ளெலென்று சிறிதுதோன்றிப்பிரகாசிக்கவும். எ - று.

(வி - ரை.) நடப்ப தழைப்பவே எவுளாத்த வனவியையும், 'சேர்மறுவண்பெரும்புகழிற்சிறிது வெளிப்பட்டுலவு தோற்றமேய்ப்பவே மழுறகுறுமூரல் வெள்ளென்று சிறிதரும்பியிலகாநிற்க, என்றதனால், புகழிற்கு நிறம் வெண்மையென்பது பெறப்பட்டது, ஏமம்-இன்பம், வடித்தல்-தெளிவித்தல்.

கொங்கவிழு நறுமலர்கொண் டருச்சித்து முளநினைந்துங் குடந்தம் பட்டுப், பங்கமறு பஃறுதிகண் முழக்கியுமிவ் வாறுவழி படலோவாது, கங்குல்பக னிற்போர்க ணனிமூழ்கி யின்படையக் கமலக் கண்கள், பொங்குமருட் பெருவெள்ளத் திரையெறிந்து கரைபுரளப் பொழியா நிற்க.

(ப - ரை) கொங்கு அவிழும்-தேனொழுகுவிரிகின்ற, நறுமலர்கொண்டு-நறுவிய மலர்களால், அருச்சித்தும் - அருச்சனைசெய்தும், உள்ளம் நினைந்தும் - மனத்தால் நினைந்தும் குடந்தம்பட்டு பங்கம் அறுபல்துதிகள் முழக்கியும் - குடந்தம் பட்டுப்பழுதற்ற பலதோத்திரங்களை மிகுதியாகச்செய்தும், இவ்வாறு வழிபடல் ஓவாது - இப்படி வழிபடுதல் நீங்காமல், கங்குல்பகல் நிற்போர்கள் - இரவும்பகலும் நிற்பவர்கள், நனிமூழ்கி - மிகவுமுழுகி, இன்பு அடைய - இன்பமடையும்படி, கமலம்கண்கள் - தாமரைமலர்போலும் திருக்கண்கள், பொங்கும்-பெருகுகின்ற, அருள்பெருவெள்ளம்-அருளாகிய பெருவெள்ளமானது, திரைஎறிந்துகரைபுரள - அலைவீசிக்கரைபுரளும்படி, பொழியாநிற்க - பொழியாநிற்கவும். எ - று.

(பொ - ரை.) தேனொழுகுவிரிகின்ற நறுவியமலர்களால் அருச்சனைசெய்தும், மனத்தால் நினைந்தும், குடந்தம்பட்டுப்பழுதற்ற பலதோத்திரங்களை மிகுதியாகச்செய்தும், இப்படிவழிபடுதல் நீங்காமல் இரவும் பகலும் நிற்பவர்கள் மிகவுமுழுகியின்பமடையும்படி தாமரைமலர்போலுந் திருக்கண்கள், பெருகுகின்ற அருளாகிய பெருவெள்ளமானது அலைவீசிக்கரைபுரளும்படி பொழியாநிற்கவும். எ - று.

(வி - ரை.) கொங்கு-வாசனையெனினும் மகரந்தம் எனினும்பொருந்தும், குடந்தம்பட்டு - நால்விரல்முடக்கிப் பெருவிரனிறுத்தி நெஞ்சிடைவைத்துநிற்றல். பங்கமறுதுதி - மனத்தூய்மையோடு கூடியதுதி, கங்குல்பகல் என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன, இன்பு - பேரின்பம்,

கமலக்கண்கள் பொங்குமருட்பெருவெள்ளந்திரையெறிந்து கரைபுரளப்பொழியாநிற்க, என்றதனால் இறைவனது திருக்கண்களில் அருட்பெருக்கத்தளவின்மை பெறப்பட்டது, "அருள்பெருகியலை யெறியுமரவிந்தலோசநன்" என்றார் பிறரும். (கஎஉ)

தங்கள்குலம் விளக்கியபே ரிருங்கருணை தெரிந்துவகை தழைப்ப நாளு, மங்குதலி லிவன்பாலே யுறைவமெனப் பகலிரவு மருவத் தோன்றுஞ், செங்கதிரும் வெண்கதிரும் வலத்துமிடத் திலுமமர்ந்த செவ்வி யேய்ப்பப், பொங்குகதிர்த் திகிரியுஞ்சங்க முமிருகைத் தலத்துநனி பொலியா நிற்க.

(ப - ரை.) தங்கள் குலம்விளக்கிய - தமது குலத்தை விளங்கச்செய்த, பேர் இருகருணைதெரிந்து - மிகப்பெரியகருணையையறிந்து, உவகைதழைப்ப - மகிழ்ச்சிபொங்க, நாளும் - எந்நாளும், மங்குதல் இல் இவன்பாலே - ஒளிமழுங்குதலில்லாத இவனிடத்திற்றானே, உறைவம் என - வசிப்போமென்று, பகல் இரவுமருவதோன்றும் - பகலும்இரவும் உண்டாகத்தோன்றுகிற, செங்கதிரும் வெண்கதிரும் சூரியனும் சந்திரனும், வலத்தும் இடத்திலும் - வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும், அமர்ந்த - அமைந்திருந்த, செவ்வி எய்ப்ப - அழகைநிகர்க்க, பொங்குகதிர் - மிகுந்தவொளியுள்ள, திகிரியும்சங்கமும் - சக்கரமும் சங்கும், இருகைத்தலத்தும் - இரண்டு திருக்கரத்தினிடத்தும், நனிபொலியாநிற்க - மிகுதியாகவிளங்கா நிற்கவும். எ - று.

(பொ - ரை.) தமது குலத்தைவிளங்கச்செய்த மிகப்பெரிய கருணையையறிந்து, மகிழ்ச்சிபொங்க, எந்நாளும் ஒளிமழுங்குதலில்லாத இவனிடத்திற்றானே வசிப்போமென்று பகலும் இரவும் உண்டாகத்தோன்றுகிற சூரியனும் சந்திரனும் வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும் அமைந்திருந்த அழகைநிகர்க்க மிகுந்த வொளியுள்ள சக்கரமும் சங்கும் இரண்டு திருக்கரத்தினிடத்தும் மிகுதியாக விளங்கா நிற்கவும். எ - று.

(வி - ரை.) தங்குலம் என்றது சூரியகுலத்தையும் சந்திரகுலத்தையும், அந்தக்குலங்களுக்கு இவனுடைய [illegible] தங்குலம் விளக்கிய, என்றும், அங்ஙனம் [illegible] பெருங்கருணையாதலால் "பேரிருங்கருணை, என்றும் [illegible] பெருமையிருமைகள் மிகப்பெரிய [illegible] மங்குதலில், என்றமையால் தமது மங்குதலும் பெறப்பட்டது, பகல் இரவு - பகற்காலமும் இராக்காலமும். (கஎங)

மன்பதைகள் முறையிடா தஞ்சலென வெடுத்தபயம் வழங்குங் கையுங் கொம்பரவு முலைமலர் முன்னடியோர் புறத்துறமின் குளிர்பூந் தாளி லன்புறுக வெனவரதங் காட்டுமொரு திருக்கையுமப் போதுபூத்த தென்பரவு நன்பவள வட்டியுமுஞ் சமழ்ப்பவெழில் சிறவா நிற்க.

(ப - ரை.) மன்பதைகள் முறையிடாது - மக்கட்டொகுதிகள் முறையிடாவண்ணம், அஞ்சல் எனஎடுத்து - அஞ்சலென்றுமேலெடுத்து, அபயம்

வழங்கும்கையும் - அபயந்தருகிற திருக்கரமும், கொன்பரவும் உலகம் எல்
லாம் - பெருமைபொருந்திய வுலகமுழுதும், உள்ளடி - உள்ளடியின், ஓர்
புறத்துஉற - ஒருபக்கத்திலடங்கும்படி, நீள் - நீண்ட, குளிர்பூதாளில்-குளிர்
ந்த தாமரைமலர்போன்ற திருவடியில், அன்பு உறுகஎன - அன்பு செய்யப்
பெறுகவென்று, வரதம்காட்டும் ஒருதிருக்கையும் - வரதத்தைத்தருகிற ஒரு
திருக்கரமும், அப்போதுபூத்த - அப்பொழுதலர்ந்த, தென்பரவும்-அழகுபர
ந்த, நன்பவளம் அம்புயமும் - நல்லசெந்தாமரைமலரும், சமழ்ப்ப - நாணும்
படி, எழில்சிறவாநிற்ப - அழகுமிகாநிற்கவும். எ - று.

(பொ - ரை.) மக்கட்டொகுதிகள் முறையிடாவண்ணம் அஞ்சலெ
ன்று மேலெடுத்து அபயந்தருகிற திருக்கரமும், பெருமைபொருந்திய வுலக
முழுதும் உள்ளடியின் ஒருபக்கத்திலடங்கும்படி நீண்ட குளிர்ந்த தாமரை
மலர்போன்ற திருவடியில் அன்பு செய்யப்பெறுகவென்று வரதத்தைத்தரு
கிற ஒருதிருக்கரமும், அப்பொழுதலர்ந்த அழகுபரந்த நல்ல செந்தாமரை
மலரும் நாணும்படி, அழகுமிகாநிற்கவும். எ - று.

(வி - ரை.) மன்பதை ஒருசொல், மக்கட்டொகுதியென்பது பொருள்,
அஞ்சல் - அஞ்சற்க, அபயம் - நிர்ப்பயம், (பயவொழிவு). கொன்பரவுமுலக
மெலா முள்ளடியோர்புறத்துற நீள்குளிர்ந்ததாள், என்றது திரிவிக்கிரமாவ
தாரத்தில் உலகளந்த திருவடியை, வரதம் - காத்தல், பவளம் - செந்நிறம்,
அம்புயம் - அம்புஜம் என்னும் வடசொற்றிரிபு - நீரிற்றோன்றுவது என்
பதுபொருள், அம்புயமும் என்றவும்மை உயர்வுசிறப்பு. (கஎச)

அரியதவங் குயின்றுநெடுங் காலம்வயி றுளைந்தீன்ற வணங்கை
யீந்து, விரியதிர்வெண் டிரைத்திருப்பாற் கடலளித்த வரிசையைப்பா
ல்விலகா ராலுந், தெரியவருஞ் சிற்றிடையத் திருவுறையு ளமைத்தல்
பெருஞ் சீர்த்தி யென்று, கரியநிறத் திடையமைத்த கவுத்துவமா மணி
க்கற்றை கஞலா நிற்க.

(ப - ரை.) நெடுங்காலம் - நெடுநாள், அரியதவம் குயின்று - அரிய
தவத்தைச்செய்து, வயிறுஉளைந்துஈன்ற-வயிறுநொந்துபெற்ற, அணங்கை -
பெண்ணை, ஈந்து - கொடுத்து, விரி - பரந்த, அதிர் - ஒலிக்கின்ற, வெள்
திரை - வெள்ளிய அலைகளையுடைய, திருப்பாற்கடல் அளித்த - திருப்பாற்
கடல்தந்த, வரிசையை - வரிசைப்பொருளை, பால்விலகாராலும் - பக்கத்தி
னின்றும் விலகாதவர்களாலும், தெரியஅரு - தெரிதற்கருமையாகிய, சிறு
இடை - சிற்றிடையையுடைய, அ - அந்த, திருவுறையுள் - திருமகள்வாழி
டத்திற்றானே, அமைத்தல் - அமைத்துவிடல், பெருசீர்த்திஎன்று - பெருஞ்
சீர்த்தியென்று, கரியநிறத்திடை அமைத்த - கரியதிருமார்பிலமைத்துக்கொ
ண்ட, கவுத்துவம் - கௌஸ்துபம் என்கிற, மாமணி - பெரியரத்நத்தின்,
கற்றை - (கிரணத்) தொகுதி, கஞலாநிற்க - ஒளிவீசாநிற்கவும். எ - று.

(பொ-ரை.) நெடுநாள் அரியதவத்தைச்செய்துவயிறுநொந்துபெற்ற பெ
ண்ணைக்கொடுத்து,பரந்த ஒலிக்கின்ற வெள்ளிய அலைகளையுடைய திருப்பாற்

கடல் தந்தவரிசைப்பொருளை, பக்கத்தினின்றும் விலகாதவர்களாலும் தெரி தற்கருமையாகிய சிற்றிடையையுடைய அந்தத்திருமகள் வாழிடத்திற்றானே யமைத்துவிடல் பெருங்கீர்த்தியென்று கரியதிருமார்பி லமைத்துக்கொண்ட கௌஸ்துபமென்கிற பெரியரத்நத்தின் (கிரணத்) தொகுதிஒளிவீசாநிற்கவும்.

(வி - ரை.) அணங்கு என்றது திருமகளை, வரிசை - சீதனம், நிறம் - மார்பு, கவுத்துவம் - கௌஸ்துபம் என்னும் வடசொற்றிரிபு, இந்தக்கௌஸ்துபமணி திருப்பாற்கடல் கடையப்பட்டபோது அதில்தோன்றினது. (௧௭௫)

ஆடமைத்தோட் செங்கனிவாய்க் கருங்கூந்தலயிலனுக்கி யம்பலை க்கு, மோடரிக்கட் டிருமடந்தை மணிகாலும் வெயில்வருத்த முரு தொதுங்க, நீடமைத்த விளஞ்சோலை யெனத்தழைந்து மணங்கான்று நிலவு மென்பூந், தோடமைத்த பசுந்துளபத் தொடையலளிக் குலமு ணத்தேன் றுளியா நிற்க.

(ப - ரை.) ஆடு - அசையாநின்ற, அமை - மூங்கில்போன்ற, தோள் - தோள்களையும், செம்கனிவாய்-செவந்தகோவைக்கனிபோலும் வாயினையும், கருகூந்தல் - கரியகூந்தலையும், அயில்அனுக்கி-வேற்படையைவருத்தி, அம்பு அலைக்கும் - அம்பைவருத்துகிற, ஒடு அரி - செவ்வரிகளோடப்பெற்ற, கண் - கண்களையுமுடைய, திருமடந்தை-திருமகளானவள், மணிகாலும்-கௌஸ்துப மணி உமிழ்கின்ற, வெயில்வருத்தம் - வெயிலினாலுண்டாகுந்துன்பத்தை, உரு தொதுங்க - அடையாதொதுங்கும்படி, நீடுஅமைத்த இளஞ்சோலையென - பெரிதாயமைத்த இளஞ்சோலைபோல, தழைந்து-செழித்து, மணம்கான்று - மணம்வீசி, நிலவும்-விளங்குகின்ற, மெல்-மெல்லிய, பூதோடு அமைத்த-பூவி தழ்களமையப்பெற்ற, பசு - பசுமையாகிய, துளபம் தொடையல்-துளவமாலை யானது, அளிகுலம்உண்ண-வண்டுக்கூட்டங்களுண்ணும்படி, தேன்துளியா நிற்க - தேனைத்துளித்துக்கொண்டிருக்கவும். எ - று.

(பொ - ரை.) அசையாநின்ற மூங்கில்போன்ற தோள்களையும், செவந்த கோவைக்கனிபோலும் வாயினையும், கரியகூந்தலையும், வேற்படையை வருத்தி அம்பைவருத்துகிற செவ்வரிகளோடப்பெற்ற கண்களையுமுடைய திருமகளானவள்கௌஸ்துபமணியுமிழ்கின்றவெயிலினாலுண்டாகுந் துன்பத் தையடையாதொதுங்கும்படி பெரிதாயமைத்த இளஞ்சோலைபோலச்செழித் து மணம்வீசி விளங்குகின்றமெல்லிய பூவிதழ்களமையப்பெற்றபசுமையாகிய துளவமாலையானது வண்டுக்கூட்டங்களுண்ணும்படி தேனைத்துளித்துக்கொ ண்டிருக்கவும் எ - று.

(வி - ரை.) தோள்வாய் கூந்தல்கண் திருமடந்தையென வினையும், அனுக்கலும் அலைத்தலும் தோற்றுதற்பொருளை, ஒதுங்கல் - மறைந்திருத் தல், கான்று என்பதற்குக்கால் பகுதி, தொடையல் தேன்றுளியாநிற்கவென் றியையும்.

(௧௭௬)

நிலங்காவ லொழிந்தவன்மி கனிர்களைத் தோட்டு மன்றுவீற்று மொ ண்மணி, ... 

ங்கார மணிந்துபணைத் திறுகியண்ணார் தெழுந்தமுலையிருங்கோட் டிற் குங், கலங்காத நிறப்பிரதா பம்போலச் செஞ்சாந்து கஞலா நிற்க.

(ப - ரை.) நிலம்காவல் ஒருவன்விடு-நிலங்காவல்பூண்டஒருஅரசன்விட்ட,களியானைகோட்டினுக்கும்-களித்தலையுடைய யானைக்கொம்பினுக்கும்,நிதமும் எண் இல் அலங்காரம் - நாள்தோறும் அளவற்ற அலங்காரத்தையுடைய, மடமாதர் - இளமாதரது, உழுதுஉழக்கிகலக்கி - தைத்துமிகவுங்கலக்கி, அமராடஉய்க்கும்-போர்செய்யச்செலுத்தப்படுகிற, இலங்கு ஆரம்அணிந்து-விளங்குகிற முத்துமாலையையணிந்து, பணைத்து-பருத்து, இறுகிஅண்ணாந்துஎழுந்த - இறுகித்தலை நிமிர்ந்தெழுந்த, முலை-தனங்களாகிய, இருகோட்டிற்கும் - பெருங்கொம்புகளுக்கும், கலங்காத - கலக்கமடையாத,நிறம் - நெஞ்சினது, பிரதாபம்போல - வீரம்போல, செஞ்சாந்துகஞலாநிற்க-செஞ்சந்தனம் பொலியாநிற்கவும். எ - று.

(பொ - ரை.) நிலங்காவல்பூண்ட ஒருஅரசன்விட்ட களித்தலையுடைய யானைக்கொம்பினுக்கும்,நாள்தோறும் அளவற்ற அலங்காரத்தையுடைய இளமாதரது தைத்துமிகவுங்கலக்கிப்போர்செய்யச்செலுத்தப்படுகிற விளங்குகிற முத்துமாலையையணிந்து பருத்து இறுகித்தலைநிமிர்ந்தெழுந்த தனங்களாகிய பெருங்கொம்புகளுக்கும் கலக்கமடையாத நெஞ்சினது வீரம்போலச்செஞ்சந்தனம் பொலியாநிற்கவும் எ - று.

(வி - ரை.) நிலங்காவல்பூண்ட - நிலத்தைக்காத்தற்றொழிலை மேற்கொண்ட, ஆரம் - முத்து, மடமாதர் முலையெனுவியையும், சாந்து - சந்தனக்குழம்பு, அமராடல் - ஒருசொல், பகுதி- அமராடு - களியானைக்கோட்டினுக்கும் முலையிருங்கோட்டிற்குங்கலங்காத வென்றியைத்துக்கொள்க, நிறம் - மார்பு, (நெஞ்சு). (கஎஎ)

திருவரையிற் கொய்துவிரித் தலங்காரம் பெறவுடுத்த செம்பொ ன்னாடை, யுருகெழுசெங் கதிருதர பந்தனம்பொன் னிரட்டைநா ணொளிரா நிற்க, விருபுடையுங் கருங்குழல்வெண் ணகைச்செவ்வாய்த் தேவியரெண் மர்களுஞ் சூழக், கருமுகிலொன் றொளிர்மின்னற் காடுவளா யெதிர்காட்சி கதியா நிற்க.

(ப - ரை.) திருஅரையில் - அழகிய இடையில், கொய்துவிரித்து-சுருக்கிவிரித்து, அலங்காரம்பெற உடுத்த - அழகுபெறவுடுத்த, செம்பொன் ஆடை - செம்பொன்னாடையும், உருகெழு - அழகுபொருந்திய, செங்கதிர் - செவ்வொளியையுடைய, உதரபந்தனம் - உதரபந்தனமும், பொன்இரட்டை நாண் - பொன்னிரட்டை அரைநாணும், ஒளிரா நிற்க - பிரகாசியாநிற்கவும், இருபுடையும் - இரண்டுபக்கங்களிலும், கருகுழல் - கரியகூந்தலையும், வெள்நகை - வெள்ளியநகையினையும், செவ்வாய் - சேவந்தவாயினையும் உடைய, தேவியர் எண்மர்களும்சூழ - அஷ்டமஹிஷிகளும் சூழ்ந்திருக்க, கருமுகில் ஒன்று - ஒருகரியமேகமானது, ஒளிர்மின்னல் காடுவளாய் - பிரகாசிக்கிற

மின்னற்காட்டோடுகலந்து, எதிர் - எதிர்ந்த, காட்சி - காட்சியானது, கதியா நிற்க - சிறவாநிற்கவும். எ - று.

(பொ - ரை.) அழகிய இடையில் சுருக்கிவிரித்து அழகுபெறவுடுத்த செம்பொன்னாடையும் அழகுபொருந்திய செவ்வொளியையுடைய உதரபந்தநமும் பொன்னிரட்டையனா நாணும் பிரகாசியாநிற்கவும், இரண்டுபக்கங்களிலும் கரியகூந்தலையும் வெள்ளியநகையினையும் செவந்தவாயினையும் உடைய அஷ்டமஹிஷிகளும் சூழ்ந்திருக்க ஒருகரியமேகமானது பிரகாசிக்கிற மின்னற்காட்டோடுகலந்து எதிர்ந்த காட்சியானது சிறவாநிற்கவும். எ - று.

(வி - ரை.) கொய்தல் - சுருக்குதல், செம்பொன்னுடை - பீதாம்பரம், உதரபந்தநம் - ஆடைமுதலியவை நழுவாதபடியிடையிற் கட்டப்படுவதோர் அரைப்பட்டிகை, கருங்குழல் வெண்ணகை செவ்வாய் என்பன முரண்டொடைகள், தேவியர் எண்மர் - ருக்மிணீசத்யபாமை முதலாயினர், கருமுகில் இறைவனுக்கும் மின்னற்காடு தேவியரெண்மருக்கும் உவமை, மிகுதிபற்றி 'காடு' என்றார். மின்னல், மின்கொடி, எதிர் - வினைத்தொகை. (கஎஅ)

வயங்கெழுதுந் துபியையந்துங் காருநெடுங் கடலும்பென வாய்விட்டார்ப்ப, நயங்கெழுபூ மழையமரர் பொழிதரவிண் ணரமகளிர் நடியாநிற்ப, மயங்கெழுநல் லறந்தழைப்ப வுலகுகுது கலிப்பவெளி வந்து நின்றான், பயங்கெழுமா மறைப்பொருளா யம்மறைக்கு மெட்டாத படிவத் தண்ணல்.

(ப - ரை.) வயம்கெழுதுந்துபிஐந்தும் - வெற்றிபொருந்திய பஞ்சதுந்துபிகளும், காரும்நெடுகடலும்என - மேகமும்நெடியகடலும்போல, வாய்விட்டுஆர்ப்ப - பேரொலிசெய்யவும், அமரர் - தேவர்கள், நயம்கெழு - நன்மையாகிய, பூமழைபொழிதர - பூமழைபொழியவும், விண் - சுவர்க்கலோகத்திலுள்ள, அரமகளிர் - தெய்வப்பெண்கள், நடியாநிற்க - நடனம்செய்யாநிற்கவும், மயம்கெழுநல் அறம்தழைப்ப - [illegible]துபொருந்திய சிறந்ததருமமார்க்கங்கள் செழிக்கவும், உலகு குதுகலிப்ப - [illegible]லகம் மனமகிழவும், வெளிவந்து நின்றான் - வெளிப்பட்டுவந்து நின்றான், (யாரெனின்) பயம்கெழு - பயன் நிறைந்த, மா - பெருமையுள்ள, மறைபொருள் ஆய் - வேதப்பொருளாகி, அ - அந்த, மறைக்கும் - வேதங்களுக்கும், [illegible]ட்டாத - எட்டவொண்ணாத, படிவத்து - உருவத்தையுடைய, அண்ணல் - பெரியோனாகிய இறைவன்.

(பொ - ரை.) வெற்றிபொருந்திய பஞ்சதுந்துபிகளும் மேகமும்நெடிய கடலும்போலப் பேரொலிசெய்யவும், தேவர்கள் நன்மையாகிய பூமழைபொழியவும், சுவர்க்கலோகத்திலுள்ள தெய்வப்பெண்கள்நடனம்செய்யாநிற்கவும், அழகுபொருந்திய சிறந்ததருமமார்க்கங்கள்செழிக்கவும்,உலகம் மனமகிழவும் வெளிப்பட்டுவந்து நின்றான் (யாரெனின்,) பயன் நிறைந்தபெருமையுள்ள வேதப்பொருளாகி, அந்தவேதங்களுக்கும்எட்டவொண்ணாதஉருவத்தையுடைய பெரியோனாகிய இறைவன். எ - று.

(வி - ரை.) வாய்விட்டார்த்தல் ஒருசொல், அன்றிவாய் திறந்தொலித்தல் எனினுமாம், பயம் - பயன், (அறம்பொருள் இன்பம்வீடு என்னும் நாற்பயன்,) படிவம் - உருவம். (கஎகூ)

மேற்படி - வேறு.

காண்டலும் விரைந்தெழுந்து கரையுடைத் தெழுநீத் தம்போன்
மாண்டதாய் வரவு கண்ட மழவிளங் கோத னம்போற்
றாண்டுதன் மனமும் பிந்தத் துணைவினி னோடி யன்பு
பூண்டவர்க் குரிய தாள்மேற் பொள்ளென வீழ்ந்தெ ழுந்து.

(ப - ரை.) காண்டலும் - கண்டவுடனே, விரைந்து எழுந்து - விரைவாயெழுந்து, கரைஉடைத்து எழும்நீத்தம்போல் - கரையையுடைத்துக்கொண்டெழுகின்ற வெள்ளம்போலவும், மாண்டதாய் வரவுகண்ட - மாட்சிமைப்பட்டதாயின் வரவைப்பார்த்த, மழஇளகோதநம்போல் - ஈன்றணிமையையுடைய கன்றுபோலவும், தாண்டு - தாண்டுகிற, தன்மனமும்பிந்த - தன்மனமும்பிறகிடும்படி, துணைவினின்ஓடி - விரைவாயோடி, அன்பு பூண்டவர்க்கு உரிய - அன்புசெய்வோர்க்குரிய, தாள்மேல் - திருவடியின்மீது, பொள்ளெனவீழ்ந்து எழுந்து - பொருக்கெனவிழுந்தெழுந்து. எ - று.

(பொ - ரை.) கண்டவுடனே விரைவாயெழுந்து கரையையுடைத்துக் கொண்டெழுகின்றவெள்ளம்போலவும், மாட்சிமைப்பட்டதாயின்வரவைப்பார்த்தஈன்றணிமையையுடையகன்றுபோலவும், தாண்டுகிறதன்மனமும் பிறகிடும்படி விரைவாயோடி அன்புசெய்வோர்க்குரிய திருவடியின்மீது பொருக்கென விழுந்தெழுந்து. எ - று.

(வி - ரை.) நீத்தம் - வெள்ளம், இதனைப்ரவாஹம் என்பர் வடநூலார், தாய் - தாய்ப்பசு, ஈன்றணிமை - மிக்கஇளமை, கோதநம் - பசுவின்கன்று, துணைவு - விரைவு, அன்பு பூண்டவர்க்குரியதாள், என்றதனால் அன்பு செய்யாதார்க்குரியதல்லாததாள் என்பது பெறப்பட்டது, பொள்ளென - விரைவுக்குறிப்பு. (கஅ0)

முடிமிசைக் கரங்கூப் பாமும் முறைபிர தக்க ணஞ்செய்
தடிமிசை யன்பு பொங்க வானந்தக் கண்ணீர் வாரப்
படிமிசைக் கிடந்துந் தண்டின் பரிசென மீட்டும் வீழ்ந்து
நொடிமிசை யெழுந்து துள்ளி நோற்றுளோம் யாமே யென்று.

(ப - ரை.) முடிமிசை - தலையின்மேல், கரம்கூப்பா - கைகளைக்குவித்து, மும்முறைபிரதக்கணஞ்செய்து - மூன்றுதரம் பிரதக்ஷிணஞ்செய்து, அடிமிசை - திருவடியின்மீது, அன்புபொங்க - அன்பு அதிகரிக்கவும், ஆநந்தக்கண்ணீர்வார - ஆநந்தக்கண்ணீர் ஒழுகவும், படிமிசைகிடந்தும் - பூமியின்மேல் கிடந்தும், தண்டின்பரிசென - தண்டின்தன்மையைப்போல, மீட்டும் வீழ்ந்து - மறுபடியும்விழுந்து, நொடி - நொடிப்பொழுதில், மிசைஎழுந்து துள்ளி - மேலேயெழுந்துதுள்ளி, யாமே - நாமே, நோற்றுஉள்ளோம் என்று - நோற்றிருக்கிறோமென்று. எ - று.

(பொ - ரை.) தலையின்மேல் கைகளைக்குவித்து மூன்றுதரம் பிரதக்ஷிணஞ்செய்து திருவடியின்மீது அன்பு அதிகரிக்கவும், ஆநந்தக்கண்ணீர் ஒழுகவும் பூமியின்மேல் கிடந்தினதண்டின் தன்மைபோல மறுபடியும் விழுந்து, நொடிப்பொழுதில் மேலேயெழுந்துநுள்ளி,நாமேநோற்றிருக்கிறேமென்று.

(வி - ரை.) முதன் மூன்றடியிலுள்ள மிசை எழனுருபு, நான்காமடியிலுள்ள மிசைபண்பு. கூப்பா - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம், பிரதக்ஷிணஞ்செய்தல் - வலம்வருதல், ஆநந்தக்கண்ணீர் - ஆநந்தத்தாலுண்டாகிறகண்ணீர், இதனை ஆநந்தாஸ்ருவென்பர் வடநூலார், வார்தல் - ஒழுகுதல், தண்டு - தடி, நோற்றல் - தவஞ்செய்தல். (கஅக)

பூசனை சிறப்பிற் செய்து பொருந்துபாத் தியமு னீந்து
நேசமிக் கூறிப் பொங்க நேர்நின்று குடந்தம் பட்டு
வாசநன் கங்கை பங்கன் வதிவிடம் வந்த தொத்த
தாசறு நினது காட்சி யையவென் றினைய சொல்வான்.

(ப - ரை.) பூசனை சிறப்பின்செய்து - பூசையைச்சிறப்பாகச்செய்து, முன் - முன்னே, பொருந்துபாத்தியம் ஈந்து - பொருந்திய பாத்தியங்கொடுத்து, நேசமிக்கு ஊறிப்பொங்க - அன்புமிகுதியாய்ச்சுரந்து பொங்க, நேர்நின்று குடந்தம்பட்டு - எதிரேநின்று வழிபட்டு, ஐய - ஐயனே, ஆசு அறு நினதுகாட்சி - குற்றமற்றவுன்காட்சியானது, வாசம் நன்கங்கை - பரிமளமுள்ள கங்காநதியானது, பங்கன்வதிவிடம் - முடவனிருக்குமிடத்திற்கு, வந்தது ஒத்தது - வந்ததை நிகர்த்திருந்தது, என்று - என்று, இனையசொல்வான் - இவற்றைச்சொல்வானாயினன். எ - று.

(பொ - ரை.) பூசையைச்சிறப் பாகச்செய்து, முன்னே பொருந்திய பாத்தியங்கொடுத்து, அன்பு மிகுதியாய்ச்சுரந்து பொங்க எதிரேநின்று வழிபட்டு, ஐயனே, குற்றமற்றவுன் காட்சியானது பரிமளமுள்ள கங்காநதியானது முடவனிருக்குமிடத்திற்கு வந்ததை நிகர்த்திருந்தது என்று இவற்றைச் சொல்வானாயினன். எ - று.

(வி - ரை.) பாத்தியம் - கால்கழுநீர், குடந்தம்பட்டு என்பது, மேலே விவரிக்கப்பட்டிருக்கின்றது, கங்கை [illegible] நவர் ஒருபாத்திரத்திலடைத்து வைப்பிறாம் [illegible] கொடுப்[illegible]ரென்ற, வாசநன்கங்கை, என்[illegible], காட்சி - [illegible]. (கஅஉ)

[illegible]
[illegible]
[illegible]
[illegible] காட்சி.

(ப - ரை.) [illegible] - [illegible], தலங்கள் சார்ந்தும் - தலங்களையடைந்தும், [illegible] - [illegible]. [illegible]
[illegible]

லாமல், நெடியநாள் இருந்து-நெடுநாளிருந்து, மறம்மிகு-பாவத்தொழில்மிகுந்த, பொறியைவாட்டி-ஐம்பொறிகளைவென்று,வளர்தவம்புரிவார்க்கு அன்றி-வளர்கின்ற தவத்தைச்செய்வோர்களுக்கேயல்லாமல்,புகழ்சால்காட்சி-புகழ்மிகுந்த உன்காட்சியானது, புறம்மிகும்-புறத்தொழில்மிகுந்த, பாவியேற்கும் - பாவியாகிய எனக்கும், கிடைத்தது - வாய்த்தது, ஏ-இதென்னவியப்பு. எ-று.

(பொ - ரை.) புண்ணியமிகுந்த தலங்களையடைந்தும், காடுகளையடைந்தும்,ஒளிமிகுந்தமலைகளையடைந்தும், உணவில்லாமல் நெடுநாளிருந்து பாவத்தொழில்மிகுந்த ஐம்பொறிகளைவென்றுவளர்கின்ற தவத்தைச்செய்வோர்களுக்கேயல்லாமல், புகழ்மிகுந்தவுன்காட்சியானது புறத்தொழில் மிகுந்த பாவியாகிய எனக்கும் வாய்த்தது, இதென்னவியப்பு. எ - று.

(வி - ரை.) அறமிகுதலங்கள் - காசிமுதலிய புண்யக்ஷேத்ரங்கள், ஆரணியங்கள் - நைமிசாரணியமுதலாயின, நிறமிகுவரைகள் - பொன்மலைமுதலாயின, பொறி - இந்திரியங்கள், புறம் - புறத்தொழில், அதாவது பகவத்கைங்கர்யமொழிந்த மற்றைத்தொழில். (கஅ௩)

இலகுநான் மறைக ளோல மோலமென் றெண்ணி லாள்க
ளலறிவா யிளைத்துங் காண்டற் கரியநின் னணிகூர் காட்சி
கலகமார் வினைக்கோட் பட்டுக் கலங்குபு மருளின் மூழ்கும்
புலனிலா யானுங் காணக் கிடைத்தது புதுமை யைய.

(ப - ரை.) ஐய-ஐயனே, இலகும்-விளங்குகிற, நால்மறைகள்-நான்கு வேதங்களும், ஓலம்ஓலம்என்று - அபயம்அபயம்என்று, எண்இல்நாள்கள் - அளவற்றநாள்கள், அலறி - கதறி, வாய்இளைத்தும் - வாயோய்ந்தும், காண்டற்குஅரிய-காண்பதற்கருமையாகிய,நின்அணிகூர்காட்சி-உனதுஅழகுமிகுந்த காட்சியானது, கலகம்ஆர் - கலகம்நிறைந்த, வினை - வினைகளால், கோட்பட்டு - கவரப்பட்டு, கலங்குபு - கலங்கி, மருளில்மூழ்கும் - மயக்கத்தில் முழுகுகின்ற, புலன்இல்லாயானும் - அறிவில்லாதநானும், காணகிடைத்தது-தரிசிக்கவாய்த்தது, புதுமை - புதுமையேயாம். எ - று.

(பொ - ரை.) ஐயனே, விளங்குகிற நான்குவேதங்களும் அபயம் அபயம் என்று அளவற்றநாள்கள் கதறிவாயோய்ந்தும் காண்பதற்கருமையாகிய உனது அழகுமிகுந்த காட்சியானது கலகம்நிறைந்த வினைகளால் கவரப்பட்டுக்கலங்கி மயக்கத்தில் முழுகுகின்ற அறிவில்லாதநானும் தரிசிக்கவாய்த்தது புதுமையேயாம். எ - று.

(வி - ரை.) வேதங்கள் அளவில்லனவாயினும் மிக்குவிளங்குவன இருக்குமுதலிய நான்கேயாதலின், 'இலகுநான்மறைகள்' என்றார், வாயிளைத்தும் என்றது இலக்கணை, வினை - நல்வினைதீவினைகள், கலங்குபு - செய்புஎன்னும் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம், புலன்-அறிவு,யானும்என்றவும்மை இறந்ததுதழீஇயது, இழிவுசிறப்புமாம். (கஅ௪)

என்றினி தருளிச் செய்ய வெழுந்தருள் வான்கொ லென்று
பொன்றலி றவத்தின் மேலாய்ப் புண்ணியம் பழுத்த மேலோர்

துன்றிநிற் கின்று ரெல்லா நிற்கவுள் ளகத்தூய் தன்மை
கொன்றிலேற் பொருளாக் கொண்ட கருணையைக் குறிக்கொ ணாதே.

(ப - ரை.) இனிது அருளிச்செய்ய - இனிதாகஅருளிச்செய்யும்பொருட்டு, என்று எழுந்தருள்வான்கொல்என்று-என்றுஎழுந்தருளுவனோவென்று, பொன்றலில் - அழிவில்லாத, தவத்தின் - தவத்தினால், மேலாய் - மேற்பட்டவர்களாய், புண்ணியம்பழுத்தமேலோர் - புண்ணியமுதிர்ந்தமேலோர்கள், துன்றிநிற்கின்றுரெல்லாம்நிற்க - நெருங்கிநிற்பவர்களெல்லாம் நிற்க, உள் அகம் - மனத்தினிடத்தில்உள்ள, தூய்துஅன்மைகொன்றிலேன் - களங்கத்தையறுக்காதஎன்னை, பொருளாக்கொண்ட-ஒருபொருளாகக்கொண்ட, கருணையை - அருளை, குறிக்கஒண்ணாது - நினைத்தளவிடவொண்ணாது. எ - று.

(பொ - ரை.) இனிதாக அருளிச்செய்யும்பொருட்டு என்று எழுந்தருளுவனோவென்று, அழிவில்லாததவத்தினால் மேற்பட்டவர்களாய்ப்புண்ணியமுதிர்ந்தமேலோர்கள் நெருங்கிநிற்பவர்களெல்லாம்நிற்க, மனத்தினிடத்திலுள்ள களங்கத்தையறுக்காதஎன்னை ஒருபொருளாகக்கொண்ட அருளைநினைத்தளவிடவொண்ணாது. எ - று.

(வி - ரை.) கொல் - ஐயப்பொருட்டு, பழுத்தல் - முதிர்தல் (மிகுதல்) தூய்தன்மை - பரிசுத்தமல்லாமை, எனவே களங்கமாயிற்று, கருணை - நிர்ஹேதுகக்ருபை, ஏ - ஈற்றசை. குறிக்க ஒண்ணாது என்பது குறிக்கொணாது எனத்தொகுத்தலாயிற்று. (கஅ௫)

பழையநான் மறையு மோர்ந்த பங்கயத் தவனுங் காணாத்
தழையுமிக் காட்சி காணப் பெற்றுளத் தண்மை பூண்டோர்
விழையுமோ ரின்பம் பெற்றேன் விருப்பினீ பெறலென் பாலென்
மழைபெறும் பொருளு முண்டோ வையத்து வாழ்வார் மாட்டு.

(ப - ரை.) பழைய - பழமையாகிய, நான்மறையும்ஓர்ந்த-நான்குவேதங்களையுமறிந்த, பங்கயத்தவனும்காணா - தாமரைமலரையிடமாகவுடையவனாகிய பிரமனும்காணாத, தழையும் - செழித்த, இ காட்சி - இந்தக்காட்சியை, காணப்பெற்று - தரிசிக்கப்பெற்று, உள்ளம் தண்மைபூண்டோர் - மனங்குளிரப்பெற்றவர்கள், விழையும் - விரும்புகிற, ஓர்இன்பம் பெற்றேன் - ஒப்பற்ற இன்பத்தையடைந்தேன், நீ - நீ, என்பால் - என்னிடத்தில், விருப்பின் - விருப்பத்தோடு, பெறல் - பெறுதற்குரியபொருள், என் - யாது, வையத்து வாழ்வார்மாட்டு - உலகத்தில்வாழ்வோரிடத்தில், மழை-மேகமானது, பெறும் பொருளும் உண்டோ - பெறுதற்குரியபொருளுமுளதோ. எ - று.

(பொ - ரை.) பழமையாகிய நான்குவேதங்களையுமறிந்த தாமரைமலரையிடமாகவுடையவனாகிய பிரமனும்காணாத,செழித்தஇந்தக்காட்சியைத்தரிசிக்கப்பெற்று மனங்குளிரப்பெற்றவர்கள் விரும்புகிற ஒப்பற்ற இன்பத்தையடைந்தேன்,நீஎன்னிடத்தில்விருப்பத்தோடுபெறுதற்குரியபொருள்யாது,உலகத்தில் வாழ்வோரிடத்தில் மேகமானது பெறுதற்குரிய பொருளுமுளதோ.

(வி - ரை.) வேதங்கள் - அநாதி அபௌருஷேயநித்திய நிர்த்தோஷங்களாதலால் 'பழைய நான்மறையும்' என்றும், அவற்றைமுற்றும் இறைவன் அநுக்ரஹிக்க உணர்ந்தவன் பிரமனாதலால் 'பழையநான்மறையுமோர்ந்த பங்கயத்தவனும்' என்றும் கூறினார். உளத்தண்மை-மனோவிப்ராந்தி, "கைம்மாறு வேண்டாகடப்பாடு மாரிமாட்-டென்னாற்றுங்கொல்லோவுலகு" என்னும் திருக்குறளின் கருத்துக்கிணங்க 'நீ பெறலென்பாலென்-மழைபெறும் பொருளுமுண்டோவையத்து வாழ்வார் மாட்டு' என்றார். (கஅசு)

தழலரா தலையில் வைத்து நடித்தும்வெஞ் சகடு தைத்து
நிழலில்கா னடந்து முன்னம் பழக்கினை நின்பொற் றாளை
யழல்செயு மடியே னெஞ்சத் தமைத்திடு நிமித்தங் கொல்லோ
கழறரா வினையி னேனின் றறிந்தனன் கடவு ளேறே.

(ப - ரை.) கடவுள்ஏறே - தெய்வங்களிற்சிறந்த தெய்வமே, அழல்செய்யும் - வெப்பத்தைச்செய்கின்ற, அடியேன் நெஞ்சத்து-அடியேனது மனத்தில், அமைத்திடும் நிமித்தம் - அமைக்கும் பொருட்டே, நின்பொன்தாளை - நினது அழகியதிருவடியை, தழல் - சுடுகின்ற, அரா - சர்ப்பத்தின், தலையில் வைத்து நடித்தும்-சிரத்தின்மீது இருத்தி நடனஞ்செய்தும், வெம்சகடுஉதைத்தும் - வெவ்விய சகடத்தை உதைத்தும், நிழல்இல்-நிழலில்லாத, கான்நடந்தும் - காட்டில் நடந்தும், முன்னம்பழக்கினை - முன்னமேபழக்கிவைத்திருக்கின்றனை, (இச்செய்தியை) கழல்தரா - கழலாத, வினையினேன்-வினையையுடையேனாகிய அடியேன், இன்று அறிந்தனன்-இன்றுஅறிந்துகொண்டேன்.

(பொ - ரை.) தெய்வங்களிற்சிறந்த தெய்வமே, வெப்பத்தைச்செய்கின்ற அடியேனது மனத்தில் அமைக்கும்பொருட்டே நினது அழகிய திருவடியை, சுடுகின்ற சர்ப்பத்தின் சிரத்தின்மீதுஇருத்தி நடனஞ்செய்தும், வெவ்விய சகடத்தையுதைத்தும்,நிழலில்லாதகாட்டில் நடந்தும் முன்னமே பழக்கிவைத்திருக்கின்றனை, (இச்செய்தியை) கழலாதவினையை யுடையேனாகிய அடியேன் இன்று அறிந்துகொண்டேன். எ - று.

(வி - ரை.) தழல்என்பதற்கு விஷாக்னியையுடைய எனினும் ஆம். தழலரா என்றது காளிங்கனென்னுஞ் சர்ப்பத்தை,வெம்சகடுஎன்றதுகொடிய சகடாசுரனை, நிழலில்கான் என்றது தண்டகாரணிய முதலியவற்றை, அழல் செய்தல் - தாபத்திரயாக்கினியினால் கொதித்துக்கொண்டிருத்தல், கழல்தரா ஒருசொல்,நீங்காத என்பதுபொருள்,ஏறுஎன்றதுசிறப்புக்குறிக்க வந்ததோர் சொல், கொல், ஓ - அசைகள். (கஅஎ)

புன்றொழி லடியே னுள்ளம் போருகப் பாதம் வைப்பிற்
கன்றுத லின்றி முன்னைப் பழக்கத்தாற் கலங்கா தாற்று
மென்றளிர் மேனிப் பூமேல் விளங்கிழைத் தாயர் கைகட்
கொன்றுமப் பாத வெப்ப முறுமென வஞ்சு கின்றேன்.

(ப - ரை.) புல்தொழில் - இழிதொழிலையுடைய, அடியேன்உள்-அடியேனதுமனத்தில், அம்போருகம்-தாமரைமலர்போன்ற, பாதம்-திருவடியை,

வைப்பின் - வைத்தால், கன்றுதல்இன்றி-கன்றுதலில்லாமல், முன்னைப்பழக்கத்தால்-முன்னையபழக்கத்தினாலே, கலங்காது ஆற்றும் - கலங்காமல்சகிக்கும், மெல்தளிர்மேனி - மெல்லியதளிர்போலும் நிறத்தினையுடைய,பூமேல் - தாமரைமலர்மீதுவாழ்கின்ற, விளங்குஇழை - பிரகாசிக்கிற ஆபரணங்களையணிந்த, தாயர் - என்தாய்மாரது, கைகட்கு - கைகளில், ஒன்றும் - பொருந்திய, அ - அந்த, பாதவெப்பம் - திருவடியின்வெப்பமானது, உறும்என-உறுத்துமென்று, அஞ்சுகின்றேன் - அஞ்சாநின்றேன். எ - று.

(பொ-ரை.) இழிதொழிலையுடைய அடியேனது மனத்தில்தாமரைமலர்போன்றதிருவடியைவைத்தால்,கன்றுதலில்லாமல் முன்னையபழக்கத்தினாலேகலங்காமல்சகிக்கும்,மெல்லியதளிர்போலும் நிறத்தினையுடைய தாமரைமலர்மீது வாழ்கின்ற பிரகாசிக்கிறஆபரணங்களையணிந்தஎன்தாய்மாரதுகைகளில் பொருந்திய அந்தத்திருவடியின்வெப்பமானது உறுத்துமென்று அஞ்சாநின்றேன்.

(வி - ரை.) இழிதொழில் - ஐம்பொறிவழியே சென்றுவிடயங்களில் அழுந்திப்பிறவிக்காளாகுந்தொழில், உள் - இடவாகுபெயர், அம்போருகம் - வடசொல், நீரிற்பிறப்பது என்பதுபொருள், முன்னைப்பழக்கம் - கல்லாய்க்கிடந்த அகலிகையை மிதித்தபழக்கம், தாயர்என்றது நிலமகள் மலர்மகள் என்பாரை. கைகட்கு - உருபுமயக்கம், உறுத்தும் என்பது உறும் எனத்தொகுத்தலாயிற்று. (கஅஅ)

என்றுபற் பலவும் பேசி யிருந்தழ லிட்ட வெண்ணெ
யொன்றிய கருங்க லென்ன வுள்ளநெக் குருக நேரே
நின்றவந் தணனை நோக்கி நெடியமால் கருணை பூத்து
வென்றிமா தவத்த ரேறே வேட்டதென் னுவறி யென்றான்.

(ப - ரை.) என்று பல்பலவும்பேசி - என்று பலபலவகையாய்த் துதித்து, இருதழல்இட்ட வெண்ணெய் - பெருந்தீயிலிட்டவெண்ணெயானது, ஒன்றியகருங்கல் என்ன - பொருந்திய கருங்கல்லென்று சொல்லும்படி,உள்ளம்நெக்கு உருக - மனமானது நெகிழ்ந்துருகாநிற்க, நேரேநின்ற - எதிரேநின்ற, அந்தணனை நோக்கி - வேதியனாகிய குசேலனைநோக்கி, நெடியமால் - நெடுமாலானவன், கருணைபூத்து-அருள்சுரந்து,வென்றி-வெற்றியையுடைய, மாதவத்தர் - பெருந்தவத்தினர்க்குள்ளே, ஏறே - சிறந்தவனே, வேட்டது என் - நீவிரும்பினதுயாது, நுவறிஎன்றான் - சொல்லுதியென்றான். எ- று.

(பொ - ரை.) என்று பலபலவகையாய்த்துதித்துப் பெருந்தீயிலிட்ட வெண்ணெயானது பொருந்திய கருங்கல்லென்று சொல்லும்படிமனமானது நெகிழ்ந்துருகாநிற்க, எதிரேநின்ற வேதியனாகிய குசேலனைநோக்கி நெடுமாலானவன் அருள்சுரந்து வெற்றியையுடைய பெருந்தவத்தினர்க்குள்ளே சிறந்தவனே, நீ விரும்பினதுயாது சொல்லுதியென்றான். எ - று.

(வி - ரை.) மாதவத்தோர்க்கு வெற்றியாவது இந்திரியங்களை வெல்லுதலாதலால் 'வென்றி மாதவத்தர்' என்றார். மனவுருக்கத்தின் முன்னர் இருந்தழலிட்ட வெண்ணெயுருக்கம் கருங்கல்லென்று சொல்லும்படியாம் என்

பதுதோன்ற 'இருந்தழலிட்ட வெண்ணெயொன்றிய கருங்கலென்னவுள்ள நெக்குருக' என்றார். இதனால் இருந்தழலிட்ட வெண்ணெயினும் உள்ளம் மிகுதியாயுருகிற்று என்பது பெறப்பட்டது, இதற்கினமாகப் பிறஆன்றோரும் "அப்புக்கரக்குஞ்சடை மருதூரரொன்னாரை மண்மே, லப்புக்கரக்குமணியணிவோர் வெற்பிலண்ணலெய்த, வப்புக்கரக்குஞ் சரங்கண்டிங்கிவ்வாறதரந்தின, யப்புக்கரக்குங்கறுக்குங் கொடிநின்றதாவிகொண்டே" "சாரங் கஞ்சங்கரிகட்கிச் சித்தேய்ந்தகைச்சங்கரனார், சாரங்கஞ் சங்கரிதாஞ் சக்கரங் கையிற்றாங்கினன்சேய், சாரங்கஞ்சங்கரியாநண்ணினர்க்கந்தத்தந்திரத்தா, சாரங்கஞ் சங்கரிதேயெனக்செய்நின்சரண்டந்ததே" இவ்வாறு கூறுதல்காண்க.

அடியனே னுய்ந்தே னென்று வங்கைக ளிரண்டுங் கூப்பி
முடிமிசை யேற்றி நின்று மூதறி வுடையோர் கொள்ளாக்
கொடியவிச் செல்வ மொன்றே குணிப்பறும் பவத்திற் கேது
படியற வாயி னின்பம் பயப்பதெட் டுணையு மின்றால்.

(ப - ரை.) அடியனேன் - அடியேன், உய்ந்தேன் என்று - உய்ந்தேனென்று, அங்கைகள் இரண்டும்கூப்பி - அகங்கைகள்இரண்டையும்குவித்து, முடிமிசை ஏற்றிநின்று-சிரத்தின்மீது ஏறச்செய்துநின்று, மூது அறிவுடையோர் - பேரறிவினையுடைய ஞானியர், கொள்ளா - மதிக்காத, கொடிய இச் செல்வம் ஒன்றே - கொடிதாகிய இந்தச்செல்வம் ஒன்றுமே,குணிப்புஅரு - அளவிடற்கரிய, பவத்திற்கேது - பிறவிகளுக்குக் காரணமாகும், படி அற ஆயின் - ஒப்பறஆராயின், எள்துணையும் - எள்அளவும், இன்பம் பயப்பது இன்று - இன்பந்தருதல் இல்லையாம். எ - று.

(பொ - ரை) அடியேன் உய்ந்தேனென்று அகங்கைகள்இரண்டையும் குவித்துச் சிரத்தின்மீது ஏறச்செய்துநின்று, பேரறிவினையுடைய ஞானியர் மதிக்காதகொடிதாகியஇந்தச் செல்வமொன்றுமேஅளவிடற்கரியபிறவிகளுக்குக் காரணமாகும்,ஒப்பற ஆராயின் எள்அளவும் இன்பந்தருதல் இல்லையாம்.

(வி - ரை.) உய்ந்தேன் எனத்துணிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறினார். என்று - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம். அங்கைகளிரண்டும் கூப்பி முடிமிசையேற்றலாவது கைகளிரண்டையும் குவித்துத் தலைமேல்வைத்து வணங்குதல். குணிப்பரும்பவம் என்றதனால் பிறவிகள் அளவில்லன என்பது பெறப்பட்டது. ஆல் - அசை. (கக0)

மனமொழி யுடல மென்ன வகுத்திடு கரண மூன்றுந்
தினமுநின் றிருவ டிக்கே செலுத்துநா யடியே னிந்தக்
கனவெனுஞ் செல்வத் தாழ்ந்தோ களித்துநாள் கழியா நிற்ப
னுனதடி யவர்பூந் தாளி லுறப்பணிந் துய்த னீங்கி.

(ப - ரை.) மனம்மொழிஉடலம்என்ன - மனம்வாக்குகாயம் என்று, வகுத்திடு - வகுக்கப்பட்ட, கரணம்மூன்றும் - மூக்கரணங்களையும்,தினமும்- நாள்தோறும், நின்திருவடிக்கே - உன்திருவடியின் கண்ணே, செலுத்தும் - செலுத்துகின்ற, நாயடியேன் - நாயடியேன், உனதுஅடியார் - உன்னடியா

ரது, பூ - தாமரைமலர்போன்ற, தாளில் - திருவடியில், உறபணிந்து-மிருதியாய்வணங்கி, உய்தல்நீங்கி - உஜ்ஜீவித்தலையொழிந்து, இந்த - இந்த,கனவு என்னும் - கனவென்று சொல்லலாம்படியான, செல்வத்து-செல்வப்பெருக்கில், ஆழ்ந்தோ - அழுந்தியோ, களித்து - களிப்படைந்து, நாள்கழியாநிற்பன் - நாள்கழிப்பேன். எ - று.

(பொ - ரை.) மனம்வாக்குகாயம் என்று வகுக்கப்பட்ட முக்கரணங்களையும் நாள்தோறும் உன்திருவடியின்கண்ணே செலுத்துகின்றநாயடியேன் உன்னடியாரது தாமரைமலர்போன்ற திருவடியில் மிருதியாய் வணங்கி உஜ்ஜீவித்தலையொழிந்து, இந்தக்கனவென்று சொல்லலாம்படியான செல்வப்பெருக்கில் அழுந்தியோகளிப்படைந்து நாள்கழிப்பேன். எ - று.

(வி - ரை.) மனமொழியுடலங்களை த்ரிகரணமென்றும் கரணத்ரயமென்றும் கூறுவர் வடநூலார். நாயடியேன் - நாய்போலும் அடியேன். நாள்-வாழ்நாள். (கககக)

முன்னரோ வெறுத்து வேண்டா விதுவென முனிந்து செல்வம்
பின்னர்கைக் கொள்வே னாகிற் பேரறி வுடைய னன்றே
யன்னது மன்றிக் கொண்ட விரதமு மழித்தா னானே
னன்னர்நெஞ் சுடைய நீரார் நகைக்குநா ணுது நின்றேன்.

(ப - ரை.) முன்னரே - முன்னமே, வெறுத்து - வெறுப்படைந்து, இதுவேண்டா என - இதுவேண்டாவென்று, முனிந்து - கோவித்து, செல்வம் - (அந்த) செல்வத்தை, பின்னர் - பிறகு, கைக்கொள்வேனாகில் - கைப்பற்றுவேனாயின், பேர்அறிவுடையன் அன்றே - (நான்) பேரறிவுடையேனன்றோ, அன்னதும்அன்றி - அதுவுமல்லாமல், கொண்டவிரதமும் அழித்தான் ஆனேன் - கொண்டவிரதத்தையும் அழித்தவனானேன், நன்னர் நெஞ்சு உடையநீரார் - நல்லமனமுடைய ஞானவான்களது, நகைக்கும் - சிரிப்புக்கும், நாணுதுநின்றேன் - நாணமலிருக்கிறேன். எ - று.

(பொ - ரை.) முன்னமே வெறுப்படைந்து இதுவேண்டாவென்று, கோவித்து (அந்த) செல்வத்தைப்பிறகு கைப்பற்றுவேனாயின், (நான்) பேரறிவுடையேனன்றோ, அதுவுமல்லாமல் கொண்டவிரதத்தையும் அழித்தவனானேன்,நல்லமனமுடைய ஞானவான்களதுசிரிப்புக்கும் நாணமலிருக்கிறேன்.

(வி - ரை) பேரறிவுடையனன்றே யென்றவினா பேரறிவுடையனல்லேன் என்னும் பொருளது. நீர் - ஞானகுணம். நகைக்குக்காரணம் முன்னேவேண்டாவென்று வெறுத்த செல்வத்தையிப்போது கைக்கொண்டமை.

உடலழுக் ககற்றத் தூநீ ருற்றவ னள்ளல் வாரி
யிடனுறப் பூசிக் கொள்வான் கொல்லிரு காலும் யாத்த
தொடர்செய்பொன் னிகளஞ் சிக்கத் துணிந்தவ னிரும்பாற் செய்யப்
படுபெரு நிகளம் பூண்டு கொள்வனோ பாரி டத்து.

(ப - ரை.) உடல்அழுக்கு அகற்ற - உடம்பிலுள்ள அழுக்கைப்போக்கிக்கொள்ள, தூநீர்உற்றவன் - பரிசுத்தமான நீரையடைந்தவன், (அதுசெய்

யாது) அள்ளல் - சேற்றை, வாரி - அள்ளி, இடனுற - எல்லாவிடங்களி லும்படும்படி, பூசிக்கொள்வான்கொல் - பூசிக்கொள்வானே, இருகாலும் யாத்த - இரண்டுகால்களையும்பிணித்த, தொடர்செய் - தொடராகச்செய்யப் பட்ட, பொன்நிகளம் - பொன்விலங்கை, சிக்கத்துணிந்தவன் - அறுத்துக் கொள்ளத்துணிந்தவன், இரும்பால்செய்யப்படு-இரும்பினாற் செய்யப்பட்ட, பெருநிகளம் - பெரியவிலங்கை, பூண்டுகொள்வனே - பூண்டுகொள்வானே, பாரிடத்து - உலகத்தில். எ - று.

(பொ - ரை.) உடம்பிலுள்ள அழுக்கைப்போக்கிக் கொள்ளப்பரிசுத்த மான நீரையடைந்தவன் (அதுசெய்யாது) சேற்றையள்ளி எல்லாவிடங்களி லும்படும்படி பூசிக்கொள்வானே, இரண்டுகால்களையும் பிணித்த தொடரா கச்செய்யப்பட்ட பொன்விலங்கை யறுத்துக்கொள்ளத் துணிந்தவன் இரும் பினாற் செய்யப்பட்ட பெரியவிலங்கைப்பூண்டு கொள்வானே உலகத்தில்.

(வி - ரை.) இடம் - இடனெனப்போலியாயிற்று. இடம் - உடம்பி னெல்லாவிடங்களிலும், கொல் - என்றது இவ்விடத்து எதிர்மறைப்பொரு ளது. யாத்தல் - பிணித்தல். நிகளம் - விலங்கு. (கககூ)

ஆதலா லைய விந்த வநித்தியச் செல்வம் வேண்டேன்
மேதக முன்னி ருந்த மிடியதே யின்னும் வேண்டுங்
காதலி னடியார் வேண்டுங் காரிய மளித்துக் காக்கு
நீதயை புரிந்தென் னுள்ளக் கருத்தினை நிரப்பு கென்றான்.

(ப - ரை.) ஆதலால் - ஆகையால், ஐய - ஐயனே, இந்த அநித்தியச்செ ல்வம் - இந்தப் பொய்யாகிய செல்வத்தை, வேண்டேன் - விரும்பேன், மே தக - மேன்மைபொருந்த, முன்இருந்த - முன்னேயிருந்த, மிடியே - வறு மையே, இன்னும்வேண்டும் - இன்னமும்வேண்டும், காதலின் - அன்பினையு டைய, அடியார் - அடியவர், வேண்டும் - விரும்புகிற, காரியம் - காரியங் களை, அளித்து - கொடுத்து, காக்கும் - காக்கின்ற, நீ - நீ, தயைபுரிந்து-கிரு பைசெய்து, என் உள்ளக்கருத்தினை-என்மனக்கருத்தை, நிரப்புகென்றான் - நிறைவேற்றுகவென்று சொல்லினான். எ - று.

(பொ - ரை.) ஆகையால், ஐயனே, இந்தப்பொய்யாகிய செல்வத்தை விரும்பேன், மேன்மைபொருந்த முன்னேயிருந்த வறுமையே இன்னமும் வேண்டும், அன்பினையுடைய அடியவர் விரும்புகிற காரியங்களைக் கொடுத் துக்காக்கின்ற நீ கிருபைசெய்து என்மனக்கருத்தை நிறைவேற்றுகவென்று சொல்லினான். எ - று.

(வி - ரை.) மிடியதேஎன்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. காதலின்- அன்பினால் எனினும் ஆம், நிரப்புகஎன்றான் என்பது நிரப்புகென்றான் என நிலைமொழியீறு தொகுத்தலாயிற்று. (கஉச)

அஃகலி லன்பன் வார்த்தை யனைத்தையுஞ் செவி மடுத்து
மஃகுபா மறைகட் கெட்டா மாயவன் முறுவல் பூத்துப்

பல்குநன் பொருள்வேண் டாது பயனின்றிக் கழிந்த தீய
நல்குர வளித்தி யென்ற காரண நவிற்று கென்றான்.

(ப - ரை.) அல்கல்இல் - சுருங்குதல் இல்லாத, அன்பன் - அன்பினை யுடையவனாகிய குசேலனது, வார்த்தை அனைத்தையும் - சொற்கள் முழுதும், செவிமடுத்து - திருச்செவியில் ஏற்று, மல்கும் - பயன்நிரம்பின, மா - பெருமைபொருந்தின, மறைகட்கு - வேதங்கட்கு, எட்டா-எட்டவொண்ணாத, மாயவன் - திருமால், முறுவல்பூத்து - புன்னகைசெய்து, பல்கும் - விருத்தியடைதற்குரிய, நன்பொருள்வேண்டாது - நல்லபொருளை விரும்பாமல், பயன்இன்றிகழிந்த - பயன்இல்லாது கழிந்த, நல்குரவு - வறுமையை, அளித்திஎன்ற - தரவேண்டுமென்று நீ சொன்ன, காரணம் - ஏதுவை, நவிற்றுக என்றான் - சொல்லக்கடவை யென்றான் எ - று.

(பொ - ரை.) சுருங்குதலில்லாத அன்பினையுடையவனாகிய குசேலனது சொற்கள் முழுதும் திருச்செவியில் ஏற்றுப் பயன்நிரம்பின பெருமை பொருந்தின வேதங்கட்குஎட்டவொண்ணாததிருமால்புன்னகைசெய்து,விருத்தியடைதற்குரியநல்லபொருளை விரும்பாமல்பயனில்லாது கழிந்தவறுமையைத் தரவேண்டுமென்றுநீசொன்ன ஏதுவைச்சொல்லக்கடவையென்றான்.

(வி - ரை.) அல்கலில் அன்பன் என்றமையால்பேரன்பினையுடையான் என்றதாயிற்று. மல்குதல் - நிறைதல் (அறமுதலிய நான்குபயன்களும் நிறைந்திருத்தல்) இசனானன்றே வேதங்கள் மாமறைகள் எனப்பட்டன. மாயவன் - ஆச்சரியகுணசேஷ்டிதங்களையுடையவன். முறுவல்பூத்தல் - ஒரு சொல். நவிற்றுகஎன்றான் என்பது நவிற்றுகென்றான் எனநிலைமொழியீறு தொகுத்தலாயிற்று. (கசுரு)

தெள்ளுகா ரணந்தான் முன்னர்ச் செய்தவிண் ணப்பத் தாலே
வெள்ளிடை விலங்கல் போல விளங்குபு கிடந்த தைய
வுள்ளுதன் முதல யாவு மியல்பினி னுணரா நிற்கும்
வள்ளனீ யறியான் போல வினவுதன் மாட்சித் தேயோ.

(ப - ரை.) தெள்ளுகாரணம் - தெளிவாகியகாரணம், முன்னர் செய்தவிண்ணப்பத்தாலே - முன்னே அடியேன் செய்த விண்ணப்பத்தினால், வெள்ளிடை விலங்கல்போல - வெள்ளிடைமலைபோல - விளங்குபு கிடந்தது - விளங்கிக்கிடந்தது, (அப்படியிருக்க) ஐய - ஐயனே, உள்ளுதல் முதலயாவும் - நினைத்தல் முதலியஎல்லாம், இயல்பினின் உணராநிற்கும் - இயற்கையாகவேயறிகின்ற, வள்ளல்நீ - சர்வஜ்ஞனாகியநீ, அறியான்போல - அறியாதவன்போல,வினவுதல்-வினவுதல்,மாட்சித்தேயோ-மாட்சிமையுடையதோ.

(பொ - ரை.) தெளிவாகிய காரணம்முன்னே அடியேன் செய்தவிண்ணப்பத்தினால் வெள்ளிடைமலைபோல விளங்கிக்கிடந்தது, (அப்படியிருக்க) ஐயனே, நினைத்தல் முதலிய எல்லாம் இயற்கையாகவே யறிகின்ற சர்வஜ்ஞனாகிய நீ அறியாதவன் போலவினவுதல் மாட்சிமையுடையதோ. எ - று.

(வி - ரை.) தான் - அசை. வெள்ளிடைமலை-வெளியிடத்துள்ளமலை, விளங்குபு-செய்புஎன்னும் வாய்பாட்டிறந்த காலவினை யெச்சம், இது கிடந்தது என்னும் வினைகொண்டது. கிடந்தது என்னும் பயனிலைக்கு எழுவாய் காரணம். சர்வஜ்ஞன் - எல்லாவற்றையும் அறிந்தவன். (கககரு)

செய்யநின் னடித்தி யானஞ் செய்துநாள் கழியா நிற்பேற்
கையவீ திடையூ றாகி யடைந்ததிங் கிதனைப் போற்றிப்
பொய்ப்படு பவஞ்ச வாழ்க்கைப் புலைத்தொழிற் பாரம் பூண்டு
நைபடு முள்ளத் தேனாய் நாடொறுங் கழித னன்றே.

(ப - ரை.) செய்ய - செவ்விய, நின் அடித்தியானம் செய்து - உன் திருவடி தியாநத்தைச் செய்யாநின்று, நாள்கழியா நிற்பேற்கு - நாள்கழிக்கின்ற எனக்கு, ஐய - ஐயனே, ஈது - இந்தச்செல்வம், இடையூறாகிஅடைந்தது-தடையாய்வந்து சேர்ந்தது, இங்கு இதனைபோற்றி - இவ்விடத்தில் இதைக் காப்பாற்றி, பொய்ப்படு-பொய்யாகிய, பவஞ்சவாழ்க்கை - பிரபஞ்சவாழ்வாகிய, புலைத்தொழில் - இழிதொழிலின், பாரம்பூண்டு - பாரத்தைமேற்கொண்டு, நைபடும்உள்ளத்தேன் ஆய் - நைந்தமனத்தையுடையேனாகி, நாள்தொறும் கழிதல்நன்றே - தினங்களெல்லாம் கழிந்துபோதல் நன்மையோ. எ - று.

(பொ - ரை.) செவ்விய உன் திருவடிதியாநத்தைச் செய்யாநின்றுநாள் கழிக்கின்ற எனக்கு, ஐயனே, இந்தச்செல்வம் தடையாய்வந்து சேர்ந்தது, இவ்விடத்தில் இதைக்காப்பாற்றி, பொய்யாகிய பிரபஞ்சவாழ்வாகிய இழிதொழிலின் பாரத்தைமேற்கொண்டு, நைந்தமனத்தையுடையேனாகி தினங்களெல்லாம் கழிந்துபோதல் நன்மையோ. எ - று.

(வி - ரை.) செய்யஎன்பதை விளியாக்கிச் செவ்வியனேயெனப் பொருள்கூறினுமாம். பவஞ்சம் ப்ரபஞ்சம் என்னும் வடசொற்றிரிபு. நைபடும் ஒருசொல்லாய் நைந்தஎனப்பொருள்பட்டது. பிரபஞ்சம் - உலகம். (கககஎ)

எம்பிரான் கருணை செய்க வென்றிரந் தடியில் வீழ்ந்தான்
வெம்புறேல் கவலை யெல்லாம் விடுதியென் றுடலந் தைவந்
தும்பரார்க் கரிய வின்ப முறுவையென் றுரைக்க லுற்றான்
றும்பிகா லுழக்க மட்டுத் துளித்திடுந் துளபத் தாரான்.

(ப - ரை.) எம்பிரான் - எம்பிரானே, கருணைசெய்கஎன்று - கிருபை செய்யக்கடவையென்று, இரந்து-பிரார்த்தித்து, அடியில்வீழ்ந்தான்-திருவடியில் விழுந்தான்,(அப்பொழுது) தும்பி-வண்டுகள், கால்உழக்க - கால்களால் கிண்ட, மட்டுதுளித்திடும் - தேன்துளிக்கின்ற, துளபம்தாரான் - துளவமாலை யணிந்த திருமாலானவன், (குசேலனை நோக்கி) வெம்புறேல் - மனம்வருந்த வேண்டா, கவலையெல்லாம் விடுதியென்று - துன்பமெல்லாம் விடக்கடவை யென்று, உடலம்தைவந்து - உடம்பைத்தடவி, உம்பரார்க்குஅரிய - தேவர் களுக்கும் கிடைத்தற் கருமையாகிய, இன்பம்-பேரின்பத்தை, உறுவையென்று, அடைவாயென்று, உரைக்கலுற்றான்-சொல்லலாயினன். எ - று.

№ 28. PAGE. № 132.



குசேலர் தமக்குத் தரிசனமளித்த திருமாலைப்பணிந்து வரமேற்றது

(பொ - ரை.) எம்பிரானே, கிருபைசெய்யக்கடவையென்று பிரார்த்தித்து திருவடியில் விழுந்தான் (அப்பொழுது) வண்டுகள் கால்களால் கிண்ட தேன் துளிக்கின்ற துளவமாலையணிந்த திருமாலானவன் (குசேலனை நோக்கி) மனம்வருந்தவேண்டா, துன்பமெல்லாம் விடக்கடவையென்று உடம்பைத் தடவி, தேவர்களுக்கும் கிடைத்தற்கருமையாகிய பேரின்பத்தை அடைவாயென்று சொல்லலாயினன். எ - று.

(வி - ரை.) எம்பிரான் அண்மைவிளியாதலால் இயல்பாயிற்று. செய்க - வியங்கோள். தைவந்து என்பதற்குப்பகுதி தைவா. (ககூஅ)

திருவநன் களித்த துன்னைச் சேர்ந்தவர் நிமித்தங் கண்டா
யொருவிலின் னுளம்போ லன்னா ருள்ளமுந் துறவிற் றேயோ
மருவிநிற் சார்ந்தார் துன்பின் வயங்குத லழகி தாமோ
பொருவிலா முனிவ ரேறே யஃதெண்ணிப் புந்தி மாழ்கேல்.

(ப - ரை.) திருவம் - செல்வத்தை, நன்குஅளித்தது - மிகுதியாகத் தந்தது, உன்னைசேர்ந்தவர் நிமித்தம் - உன்னைச்சார்ந்தவர்கள் பொருட்டேயாகும், ஒருவுஇல் - நீங்குதலில்லாத, நின்உள்ளம்போல் - உன்மனம்போல, அன்னார் உள்ளமும் - அவர்களுடைய மனமும், துறவிற்றேயே - துறவினையுடையதோ, மருவி - பொருந்தி, நினசார்ந்தார் - உன்னைச்சேர்ந்தவர்கள், துன்பின் வயங்குதல் - துன்பமிக்கிருத்தல், அழகிதுஆமோ - அழகியதாகுமோ, பொருவுஇலா - ஒப்பில்லாத, முனிவர் ஏறே - முனிசிரேஷ்டனே, அஃது எண்ணி - அதைநினைத்து, புந்திமாழ்கேல் - மனமயங்காதே. எ - று.

(பொ - ரை.) செல்வத்தை மிகுதியாகத்தந்தது உன்னைச்சார்ந்தவர்கள் பொருட்டேயாகும். நீங்குதலில்லாத உன்மனம்போல அவர்களுடைய மனமும் துறவினையுடையதோ, பொருந்தி உன்னைச்சேர்ந்தவர்கள் துன்பமிக்கிருத்தல் அழகியதாகுமோ, ஒப்பில்லாத முனிசிரேஷ்டனே, அதை நினைத்து மனமயங்காதே. எ - று.

(வி - ரை.) திருவம் என்பதில் அம் சாரியை. சேர்ந்தவர் என்றது மனைவி மக்கள் முதலியோரை. கண்டாய் - முன்னிலையசை. ஒருவில் - (என்னிடத்தினின்றும்) நீங்காத. துறவிற்று - துறத்தலையுடையது, (எல்லாவற்றையும் விட்டது). மாழ்கேல் என்பதற்குப் பகுதி மாழ்கு. (ககூகூ)

மெய்ப்பொரு ளுணர்ந்த தூயோர் மேவியெங் குறைவ ரேனும்
பொய்ப்பொருள் பற்று வாரோ பொய்ப்பொரு ளேனும் வந்து
கைப்படப் பற்றுங் கொல்லோ வவரையஃ தசத்தாக் கண்டாய்
வைப்பென நமது பூசை வாஞ்சித்து வயங்கு மேலோய்.

(ப - ரை.) நமதுபூசை - எமது பூசனையை, வைப்பு என - நிக்ஷேபமென்று, வாஞ்சித்து - விரும்பி, வயங்குமேலோய் - விளங்குகின்றமேலோனே, மெய்பொருள் உணர்ந்த - உண்மைப்பொருளையறிந்த, தூயோர் - பரிசுத்தர்கள், எங்குமேவி உறைவர்எனும் - எவ்விடத்திற்பொருந்தி வாழ்வார்களாயினும், பொய்பொருள் பற்றுவாரோ - பொய்ப்பொருளை விரும்புவார்களோ, அவரை - அவர்களை, பொய்பொருள் எனும் - (அந்தப் பொய்ப்பொருளாயினும், வந்து - வந்து, கைப்படப் பற்றுங்கொல் - கையகப்படப் பற்றுமோ, அஃது அசத்து - அது அசத்தாகும். எ - று.

(பொ - ரை.) எமது பூசனையை நிக்ஷேபமென்று விரும்பி விளங்குகின்றமேலோனே, உண்மைப்பொருளை யறிந்தபரிசுத்தர்கள் எவ்விடத்திற்பொருந்திவாழ்வார்களாயினும் பொய்ப்பொருளை விரும்புவார்களோ, அவர்களை அந்தப்பொய்ப்பொருளாயினும்வந்து கையகப்படப்பற்றுமோ, அது அசத்தாகும்.

(வி - ரை.) மெய்ப்பொருள் - பிரமப்பொருள் (கடவுள்). அசத்து - சாரமில்லாதது. நிக்ஷேபம்-புதையல். வாஞ்சித்து என்பதற்குப்பகுதி வாஞ்சி.

நின்னையச் செல்வ மென்னே செய்யுநே ரதகத் தோடு
பன்னுமந் திரமுள் ளாரைப் பாம்பின்வாய் விடமென் செய்யு
மன்னுசெங் கதிரோன் றன்னை மயங்கிருட் குழாமென் செய்யு
முன்னிலை தவறா தென்று மொருபடித் தாய்நிற் பாயால்.

(ப - ரை.) அச்செல்வம் - அந்தச்செல்வமானது, நின்னை என்செய்யும் - உன்னை யென்னசெய்யும், நேர் - நேரே, அதகத்தோடு - அவுஷதத்தோடு, பன்னும் - சொல்லப்பட்ட, மந்திரம்உள்ளாரை - மந்திரத்தையுமுடையாரை, பாம்பின்வாய்விடம் - பாம்பின்வாயிலுள்ள விஷமானது, என்செய்யும்-யாது செய்யும், மன்னும் - நிலைபெற்ற, செங்கதிரோன்தன்னை-சூரியனை, மயங்கு - யாவரும் மயங்குதற்குரிய, இருள்குழாம்-இருட்கூட்டமானது, என்செய்யும்-யாதுசெய்யும், உன்நிலைதவறாது - உன நிலையினின்றும் தவறாமல், என்றும்-எக்காலத்தும், ஒருபடித்தாய்-ஒருதன்மையயாய், நிற்பாய்-நிற்கக்கடவை. எ-று.

(பொ - ரை.) அந்தச்செல்வமானது உன்னையென்னசெய்யும், நேரே அவுஷதத்தோடு சொல்லப்பட்ட மந்திரத்தையுமுடையாரைப் பாம்பின்வாயிலுள்ள விஷமானது யாதுசெய்யும். நிலைபெற்ற சூரியனை யாவரும் மயங்குதற்குரிய இருட்கூட்டமானது யாதுசெய்யும், உன்நிலையினின்றும் தவறாமல் எக்காலத்தும் ஒருதன்மையாய் நிற்கக்கடவை. எ - று.

(வி - ரை.) என்செய்யும், என்செய்யும், என்செய்யும் என்னும் வினாக்கள் மூன்றும் ஒன்றுஞ்செய்யமாட்டா என்னும் பொருள் தந்துநின்றன. அதகம் - விஷத்தைமுறிக்கும் மருந்து. சூரியன் சிவந்த கிரணங்களையுடையவனாதலால் செங்கதிரோன் என்றார். ஆல் - அசை. (௨0௪)

சாற்றுமெய் யறிவி னோர்க டகுதொழி லியற்றுங் காலை
மாற்றுத லின்றாய்த் தாந்தா மரையிலை நீர்போ னிற்பர்
போற்றுநின் றனக்கிப் பந்தம் பொருந்தாது பன்னாள் வாழ்வுற்
றீற்றுநம் முலகஞ் சார்ந்தின் பெய்திட வரந்தந் தேமால்.

(ப - ரை.) சாற்றும் - சொல்லப்பட்ட, மெய்அறிவினோர்கள் - மெய்யுணர்வுடையோர்கள், தகுதொழில் - தமக்கேற்ற தொழிலை, இயற்றுங்காலை - செய்யுங்காலத்தில், மாற்றுதல்இன்றுஆய்-மாற்றப்படுதல் இல்லையாகி, தாம் - தாங்கள், தாமரைஇலைநீர்போல் - தாமரையிலையின்மேலுள்ள நீரைப்போல, நிற்பர் - (பற்றின்றி) நிற்பார்கள், போற்றும்-என்னை வழிபடுகின்ற, நின் தனக்கு - உன்னை, இ பந்தம்-இந்தச் செல்வப்பிணிப்பு, பொருந்தாது-பற்றாது, பல்நாள் வாழ்வுற்று - நெடுநாள் (இவ்வுலகில்) வாழ்ந்திருந்து, ஈற்று-இறுதியில், நம்உலகம்சார்ந்து-எமது உலகமாகிய வைகுந்தத்தையடைந்து, இன்பு எய்திட - பேரின்பத்தையடையும்படி, வரம் தந்தேம் - வரம்கொடுத்தோம்.

(பொ - ரை.) சொல்லப்பட்ட மெய்யுணர்வுடையோர்கள் தமக்கேற்ற தொழிலைச் செய்யுங்காலத்தில் மாற்றப்படுதல் இல்லையாகி, தாங்கள் தாமரையிலையின்மேலுள்ள நீரைப்போலப் பற்றின்றி நிற்பார்கள். என்னை வழிபடுகின்ற உன்னை இந்தச் செல்வப்பிணிப்புப்பற்றாது, நெடுநாள் (இவ்வுலகில்) வாழ்ந்திருந்து இறுதியில் எமது உலகமாகிய வைகுந்தத்தையடைந்து பேரின்பத்தை யடையும்படி வரம் கொடுத்தோம். எ - று.

(வி - ரை.) மெய்யுணர்விஞேர் - மெய்ப்பொருளாகிய கடவுளுண்மையுணர்ந்தவர்கள். 'தாமரையிலைநீர்போனிற்பர்' என்றது பற்றின்றி நிற்பார்க்கெடுத்துக்காட்டுவதோருவமை. பந்தம் - குடும்பப்பிணிப்பு. எனினுமாம்.

திகழ்தர விருத்தி மீட்டுஞ் செல்வம்வேண் டுவதின் றென்னிற்
புகழ்தரு நந்தங் காதற் பொன்னைநீ யிகழ்ந்தோ னுனை
யிகழ்வினுக் கஞ்சி யன்னு ளிரிதர விரிவம் யாமு
மகழ்வினைத் தவத்தின் மேலோ யழுத்திடிவ் வுரையை யுள்ளம்.

(ப - ரை.) திகழ்தரஇருத்தி - விளங்கும்படி வாழ்ந்திருப்பாயாக, மீட்டும் - மறுபடியும், செல்வம்வேண்டுவது இன்றெனின் - செல்வம்வேண்டுவதில்லையென்ருல், புகழ்தரும் - யாவரும்புகழ்கின்ற, நந்தம் - நமது, காதல் - அன்புள்ள, பொன்னை - திருமகளை, இகழ்ந்தோன் ஆனுய் - இகழ்ந்தவனுனுய், இகழ்வினுக்குஅஞ்சி - உன்இகழ்ச்சிக்குஅஞ்சி, அன்னுள் இரிதர - அந்தத்திருமகள்நீங்கவே, யாமும்இரிவம் - யாமும் (உன்னைவிட்டு) நீங்குவோம், அகழ்வினை - வினையைநிர்மூலமாக்கின, தவத்தின்மேலோய் - தவத்தினுல்மேற்பட்டவனே, இவ்வுரையை - இந்தவார்த்தையை, உள்ளம்அழுத்திடு - உன் மனத்திற்பதித்துக்கொள்வாயாக. எ - று.

(பொ - ரை.) விளங்கும்படி வாழ்ந்திருப்பாயாக, மறுபடியும் செல்வம் வேண்டுவதில்லையென்ருல், யாவரும்புகழ்கின்ற நமதுஅன்புள்ள திருமகளை இகழ்ந்தவனுனுய், உன்இகழ்ச்சிக்குஅஞ்சி அந்தத்திருமகள்நீங்கவே யாமும் (உன்னைவிட்டு) நீங்குவோம், வினையைநிர்மூலமாக்கினதவத்தினுல் மேற்பட்டவனே, இந்தவார்த்தையை உன்மனத்திற்பதித்துக்கொள்வாயாக. எ - று.

(வி - ரை.) பொன் - திருமகள், இகழ்ச்சி - அவமதிப்பு, இரிதல் - நீங்குதல், அகழ்தல் - நிர்மூலமாக்குதல் (வேரறக்கல்லுதல்,) இரிதர என்பதற்குப்பகுதி இரிதா. (உ0௬)

என்றவன் மறுத வண்ண மினையபல் வார்த்தை கூறி
யொன்றரும் பேறு நல்கி மறைந்தன னுவணப் பாகன்
வென்றியங் கழற்கால் வேந்தே மேதினி யிடத்தியார்க் கேனு
மன்றவுண் டாகுந் தெய்வ வலிக்கெதிர் வலியு முண்டோ.

(ப - ரை.) என்று - என்று, அவன் - அந்தக்குசேலன், மறுதவண்ணம் - மறுக்காதபடி, இனைய - இவைபோல்வனவாகிய, பல்வார்த்தைகூறி - பலவார்த்தைகளைச்சொல்லி, ஒன்றுஅரு - அடைதற்கரிய, பேறுநல்கி - முத்திப்பேற்றையருள்செய்து, உவணப்பாகன் - கருடவாஹநனுகியதிருமால், மறைந்தனன் - மறைந்தான், அம்வென்றிகழல்கால் - அழகியவெற்றிக்கழலையணிந்தகாலினையுடைய, வேந்தே - பரீக்ஷித்துமஹாராஜனே, மேதினியிடத்து - இவ்வுலகத்தில், யார்க்குஎனும் - யாருக்காயினும், மன்றஉண்டாகும் - மிகுதியாகவுண்டாகிற, தெய்வவலிக்குஎதிர் - தெய்வபலத்துக்குச்சமானமான, வலியும்உண்டோ - பலமும்உளதோ. எ - று.

77½

(பொ - ரை.) என்று அந்தக்குசேலன் மறுக்காதபடி இவைபோல்வன வாகிய பலவார்த்தைகளைச்சொல்லி, அடைதற்கரிய முத்திப்பேற்றையருள் செய்துகருடவாஹநனுகிய திருமால்மறைந்தான், அழகியவெற்றிக்கழலை யணிந்த காலிணையுடைய பரீக்ஷித்துமஹாராஜனே, இவ்வுலகத்தில் யாருக்காயினும் மிகுதியாகவுண்டாகிற தெய்வபலத்துக்குச்சமாநமானபலமுமுளதோ.

(வி - ரை.) பேறு - இஹபரபாக்யங்கள், உவணம் - கருடன், பாகன், செலுத்துவோன் (வாஹநமாகவுடையவன்.) (உ௦௪)

பாம்பணைப் பள்ளி மேவும் பண்ணவன் மறைத லோடுந்
தேம்பலிற் றவிர்ந்த சிந்தைத் தெய்வமா முனிவர் கோமா
னோம்படைப் பெருமா னுள்ள முற்றதிவ் வாறே வென்று
கூம்பலிற் பெயராக் கைய னாய்க்களி கூர்ந்தி ருந்தான்.

(ப - ரை.) பாம்புஅணை - சர்ப்பசயநத்தில், பள்ளிமேவும் - நித்திரை செய்கிற, பண்ணவன் - திருமால், மறைதலோடும் - மறைந்தவுடனே, தேம்பலின்தவிர்ந்தசிந்தை - வாட்டத்தினின்றுநீங்கின மனத்தையுடைய, தெய்வம் - கடவுட்டன்மையமைந்த, மாமுனிவர்கோமான் - பெரியமுனிவர்பிரானுகியகுசேலன், ஓம்படைபெருமான் - (நமது) உயிர்க்காவலாகிய எம்பெருமானது, உள்ளம் - திருவுள்ளத்தில், உற்றது இவ்வாறே என்று - சங்கற்பித்தது இப்படியோவென்று, கூம்பலின்பெயரா - குவிதலினின்றும் நீங்காத, கையன்ஆய் - கைகளையுடையவனுகி, களிகூர்ந்து இருந்தான் - களிப்புமிகுந்திருந்தான். எ - று.

(பொ - ரை.) சர்ப்பசயநத்தில் நித்திரைசெய்கிறதிருமால் மறைந்தவுடனே, வாட்டத்தினின்றுநீங்கின மனத்தையுடைய கடவுட்டன்மை யமைந்தபெரியமுனிவர் பிரானுகியகுசேலன் (நமது) உயிர்க்காவலாகிய எம்பெருமானது திருவுள்ளத்தில் சங்கற்பித்தது இப்படியோவென்று, குவிதலினின்றும் நீங்காதகைகளையுடையவனுகிக்களிப்பு மிகுந்திருந்தான். எ - று.

(வி - ரை.) பண்ணவன் - பொதுவாகியதெய்வப்பெயராயினும் இங்குப்பாம்பணைப்பள்ளிமேவும் என்னும் விசேஷணத்தால் திருமாலைக்குறித்தது, ஓம்படை - காவல், கூம்பலிற்பெயராக்கையன்-குவிந்தகையிணையுடையவன்.

நீருறப் பயின்று முள்ளந் நீருருக் கிடையே போலப்
பாருற வுற்றுஞ் சற்றும் பற்றிலா னுகி யன்பர்க்
கேருற வாய கண்ண னிணையடிக் குறவு பூண்டு
தாருறு வுற்ற தோளாய் சாலநாள் கழிய வாழ்ந்தான்.

(ப - ரை.) நீர்உறபயின்றும் - நீரில்மிகப்பழகியும், உள் - உள்ளே, நீர் உருஉ - நீர்ஏருத, இடையேபோல - சடையேபோல, பார்உறவுஉற்றும் - பிரபஞ்சத்தொடர்பையடைந்திருந்தும், சற்றும்பற்றுஇலான்ஆகி-சிறிதும் (அதனிடத்து) பற்றில்லாதவனுகி, அன்பர்க்கு - (தனது) அன்பருக்கு, ஏர்உறவு ஆய - அழகியவுறவாகிய, கண்ணன் - ஸ்ரீகண்ணபிரானது, இணைஅடிக்கு - திருவடியிணைக்கு, உறவுபூண்டு-உறவைமேற்கொண்டு, சாலநாள்கழியவாழ்ந்தான்- நெடுநாள்கழிய வாழ்ந்திருந்தான், தார்உறஉற்றதோளாய்-பூமாலையை மிகுதியாய்த்தரித்த தோள்களையுடைய பரீக்ஷித்துமஹாராஜனே. எ - று.

(பொ - ரை.) நீரில்மிகப்பழகியும் உள்ளே நீரேருத சடையேபோல பிரபஞ்சத்தொடர்பையடைந்திருந்தும் சிறிதும் (அதனிடத்து) பற்றில்லாத

வணங்கி (தனது) அன்பருக்கு அழகியவுறவாகிய ஸ்ரீகண்ணபிரானது திருவடியிணைக்கு உறவைமேற்கொண்டுநெடுநாள்சழியவாழ்ந்திருந்தான்; பூமாலையை மிருதியாய்த்தரித்த தோள்களையுடைய பரீக்ஷித்துமஹாராஜனே. எ - று.

(வி - ரை.) சடை - செட்டி (தக்கை), உறவுபூண்டு என்றது அன்பு பூண்டு என்றபடி. (உ0சு)

ஒப்பிலா முனிவன் பின்ன ரொருதினம் வான நாடர்
வெப்பிலாக் கற்ப கப்பூ விரைகெழு மாரி பெய்ய
வைப்பின்மெய் யடியார்க் காய வைகுந்த வுலகஞ் சார்ந்து
திப்பிய வுருவ மாயன் சேவைசெய் தின்புற் றானே.

(ப - ரை.) ஒப்புஇல்லா-சமானமில்லாத, முனிவன்-குசேலமுனிவன், பின்னர் - பிறகு, ஒருதினம் - ஒருநாள், வானநாடர்-விண்ணுலகத்தாராகிய தேவர்கள், வெப்புஇல்லா-வெம்புதலில்லாத, கற்பகப்பூ-கற்பகமலர்களால், விரைகெழுமாரிபெய்ய-மணம்பொருந்திய மழையைச்சொரிய, மெய்அடியார்க்கு - மெய்யன்பர்க்கு, வைப்பின்ஆய - நிக்ஷேபம்போன்றிருக்கிற, வைகுந்தம் உலகம்சார்ந்து-வைகுந்தம் என்கிறவுலகத்தையடைந்து,திப்பியவுருவம்-திவ்யரூபத்தையுடைய, மாயன் - மாயோனது, சேவைசெய்து-தரிசனஞ்செய்து, இன்புஉற்றான் - பேரின்பத்தையடைந்தான். எ - று.

(பொ - ரை.) சமானமில்லாத குசேலமுனிவன்பிறகுஒருநாள்விண்ணுலகத்தாராகிய தேவர்கள் வெம்புதலில்லாத கற்பகமலர்களால்மணம்பொருந்தியமழையைச்சொரிய, மெய்யன்பர்க்கு நிக்ஷேபம்போன்றிருக்கிற வைகுந்தமென்கிறவுலகத்தையடைந்து, திவ்யரூபத்தையுடையமாயோனது தரிசனம் செய்து பேரின்பத்தையடைந்தான். எ - று.

(வி - ரை.) வெப்பிலாஎன்பதற்கு குளிர்ந்த என்றுரைப்பினுமாம், கற்பகம் - ஐந்தருவிலொன்று, வைகுந்தவுலகம் - பரமபதம், பௌதிகரூபமன்றென்பார், 'திப்பியவுருவம்' என்றார் சேவைசெய்து என்பதனை ஒருசொல்லாகக்கொண்டு தரிசித்து எனினுமாம். (உ0எ)

எதிர்பொரு மரச ரேறே யிக்கதை யெழுதி வைப்போர்
பொதிதரு மன்பிற் கேட்போர் பூசிப்போர் படிப்போர் யாருங்
கதிர்தரு செல்வம் பெற்றுக் கான்முளை பல்க வாழ்ந்து
மதிநலம் படைத்துப் பின்னர் வான்கதி யடைந்து வாழ்வார்.

(ப - ரை.) எதிர்பொரும் - பகைவரோடெதிர்ந்து போர்செய்கிற, அரசர்ஏறே-அரசரிற்சிறந்தவனே, இ கதை-இந்தக்கதையை,எழுதிவைப்போர்-எழுதிவைப்பவரும், பொதிதரும்அன்பின் கேட்போர்-பொருந்தின அன்போடு கேட்பவரும், பூசிப்போர் - பூசிப்பவரும், படிப்போர்-படிப்பவரும் (ஆகிய,) யாரும் - எல்லாரும், கதிர்தருசெல்வம்பெற்று - ஒளியைத்தருகிற செல்வத்தைப்பெற்று, கான்முளைபல்கவாழ்ந்து - மக்கள்பெருகவாழ்ந்து, மதிநலம்படைத்து - அறிவினது நலத்தைப்பெற்று, பின்னர்-பின்னே, வான்கதிஅடைந்து வாழ்வார் - மேலானகதியையடைந்து வாழ்ந்திருப்பார்கள். எ - று.

(பொ - ரை.) பகைவரோடெதிர்ந்து போர்செய்கிற அரசரிற்சிறந்தவனே, இந்தக்கதையை எழுதிவைப்பவரும், பொருந்தினஅன்போடு கேட்பவரும், பூசிப்பவரும், படிப்பவரும் (ஆகிய) எல்லாரும் ஒளியைத்தருகிற செல்வத்தைப்பெற்று மக்கள்பெருகவாழ்ந்து அறிவினது நலத்தைப்பெற்று, பின்னேமேலான கதியையடைந்து வாழ்ந்திருப்பார்கள். எ - று.

(வி - ரை.) கதிர்-ஒளி, அது இவ்விடத்துப்புகழின்மேலது. காலுழ்ளை-பிள்ளை, பல்குதல் - பெருகுதல், (பலவாதல்) மதிநலம் - அறிவினதுநலம், (ஞானம்,) மேலானகதி - மோக்ஷம். (உ0அ)

## கலிவிருத்தம்.

என்று ரைத்த முனிவ னிணையடி
யொன்று மன்பின் வணங்கி யுவந்தெழீஇத்
துன்று மிக்கதை கேட்டின்பந் தோய்ந்தனன்
மன்ற வென்றுரைத் தான்புவி மன்னவன்.

(ப - ரை.) என்றுஉரைத்த - என்றுசொன்ன, முனிவன் இணைஅடி - சுகமுனிவனது இரண்டு திருவடிகளையும், புவிமன்னவன் - பூமிக்கரசனாகிய பரீக்ஷித்துவானவன், ஒன்றும்அன்பின்வணங்கி-பொருந்தின அன்பினால்தொழுது, உவந்து - மனமகிழ்ந்து, எழீஇ - எழுந்து, துன்றும் இக்கதைகேட்டு - மிகுதியாகிய இந்தக்கதையைக்கேட்டு, இன்பம் தோய்ந்தனன்-இன்பமடைந்தேன், என்று உரைத்தான் - என்று சொன்னான். எ - று.

(வி - ரை.) எழீஇ - சொல்லிசையளபெடை, இதுசெயற்கையளபெடையெனவும்படும், இன்பம்தோய்ந்தனன் - இன்பமாகியகடலிற்படிந்தேன் எனினுமாம், மன்ற - அசைச்சொல். (உ0கூ)

மன்னு மாமறை வாழி மறையவர்
பன்னு மான்முகில் வாழி நற்பார்த்திபர்
மின்னு நீதியும் வாழி மிகுநல
மென்னு மிக்கதை யின்றமிழ் வாழியே.

(ப - ரை.) மன்னும் - நிலைபெற்ற, மாமறை - பெருமையுள்ள வேதங்கள், வாழி - வாழ்க, மறையவர் - வேதியரும். பன்னும் - புகழ்ந்துசொல்லப்பட்ட, மால்முகில் - பெரியமேகங்களும், வாழி - வாழ்க, நல்பார்த்திபர்-நல்லஅரசரது, மின்னும்நீதியும் - விளங்குகிறநீதியும், வாழி - வாழ்க, மிகுநலம்என்னும் - மிக்கநன்மையைத்தருவதென்று சொல்லப்படுகிற, இக்கதை இன்தமிழ் - இந்தக்கதையின் இனியதமிழும், வாழி - வாழ்க. எ - று.

(வி - ரை.) மறையவர்முகில் என்பவற்றீற்றில்எண்ணும்மைகள் தொக்கன, பார்த்திபர்நீதி எனவியையும், பார்த்திபர்மின்னுநீதியும்வாழி என்பதற்கு அரசரும்அவர்களது ஒளிசெய்கிறநீதியும்வாழ்க என்றுரைப்பினுமமையும், இக்கதையின்றமிழ்-இந்தக்கதையைச்சொன்ன இனியதமிழ்மொழி எனினுமாம். ஏ - ஈற்றசை, வேதங்கள்நித்தியமாதலால் 'மன்னுமாமறை'என்றார்.

மூன்றாவது
குசேலர் செல்வநுகர்ந்து
வைகுந்தமடைந்தவத்தியாயம் முற்றிற்று.



குசேலமுனிவர் திருவடிகளேசரணம்.



ஸ்ரீ

# பாட்டு முதற்குறிப்பகராதி.

## மூன்றும் அத்தியாயம்.

